கழக வெளியீடு : ௧௨௦௯

# நீலகேசி

## விளக்கவுரை



உரையாசிரியர் :
பெருமழைப் புலவர்
திரு பொ வே சோமசுந்தரனார்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1
1973

# பதிப்புரை

உலகிடைப் பிறந்து ஒழுக்கங் குன்றா நல்லற வாழ்க்கையினை நயனுற நடத்தி ஒற்றுமை கொண்டு உய்தற்குத் துணை செய்வன அறநூல்கள். அந்நூல்கள் காப்பிய வடிவாக அமையின் யாவரும் எளிதின் இனிமையுறக் கற்று நற்பயன் எய்துவர். அறங்கள் ஆட்சிச் சட்டமாக மட்டும் இருப்பின் கற்று அவ்வழி நிற்பார் அரியராவர். அங்ஙனமின்றி அவ்வறங்களைக் கைக்கொண்டொழு கினோர் இம்மையினும் மறுமையினும் எய்தியுள்ள நற்பயன்களை வரலாற்றின் வழியாக உணரின் ஊக்கமும் உரனுங் கொண்டு ஆக்கமுற முயன்று அப்பயனை எய்த முன்வந்தொழுகுவர். அது போல் தீமை செய்தோர் இம்மையிலும் மறுமையிலும் எய்தும் துன்பங்களை யுணரின் நனிமிக அஞ்சி நல்வழிப்படுவர்.

இம்முறைகளைச் சுவைபட வகுத்து வரைசெய்து தண்டமிழ்ச் செய்யுட்களால் ஆக்கிய புனை பெறு நூல்கள் காப்பியங்கள் என்ப. அவை முறையே பெருங்காப்பியங்களென்றும் சிறு காப்பியங்க ளென்றும் பேசப்படும். காப்பிய முறைகளையும், பெயர்களையும் இந்நூற்குச் சிறந்த அகல வுரைகண்ட ஆசிரியர் இதன்கண் வரைந்துள்ள ஆராய்ச்சி முன்னுரைக்கண் காண்க.

உடலொடு கூடிய உயிர்கள் படிப்படியாக முன்னேற்ற மெய்தி அரிய மானுடப்பிறப்பினை எய்துகின்றன. ஏனைய பிறப்புப் போன்று அப்பிறப்பும் அமையாமல் நல்லாறு தெரிந்துணரும் நற்பிறப்பாய்த் திகழ்கின்றது. இப்பிறப்பின் பெரும் பயன், இனிப் பிறவாப் பெருநெறி பிடித்தொழுகிச் சிறப்பினை உறப்பெற்றுப் பேரின்பம் எய்துவதேயாம். அதனை வகுத்துக் கூறும் நூல்கள் பொருள் நூல்கள் எனப்படும். பொருள் நூல் எனினும் சமய நூலெனினும் ஒன்றே. அம்முறையில் தோன்றி விளங்குவது "நீலகேசி" என்னும் இச் சிறந்த நூல். இந்நூல் சைனசமயத்தைச் சார்ந்தது. அச்சமய வொழுக்கங்களை முற்றுக உலகுணரத் துணை புரிவது. "குண்டலகேசி" என்னும் புத்த சமய அரிய நூல் முற்றுகக் கிடைக்கப்பெறாப் பெருங் குறையினை இந்நூல் நீக்கு கின்றது. அந் நுணுக்கங்களெல்லாம் இந்நூலின் விளக்கவுரைக் கண் காணலாம்.

இந்நூலுக்குச் "சமயதிவாகரர்" என்னும் பேராசிரியரால் பழைய உரை யொன்றுண்டு. அவ்வுரை செய்யுட்கள் தோறும் பொருளும் விளக்கமும் பெருக அமையாமலும், ஒரோரிடங்களில்

கலப்பு நடையாகிய மணிப் பிரவாளமாகவும் அமைந்துள்ளது. அப்பழைய வுரை நூலை 1936 ஆம் ஆண்டு பேராசிரியர் அ. சக்கரவர்த்தி நயினர் எம்.ஏ. அவர்கள் தாம் எழுதிய விரிவான ஆங்கில ஆராய்ச்சி முன்னுரையுடன் வெளியிட்டுள்ளார்கள். கழகம் வேற்றுமையின்றி எல்லாத் தமிழ் நூல்களையும் இறவாமற் காத்து நல்ல முறையாகச் சிறந்த விளக்கவுரையுடன் என்றும் வெளியிடுங் கொள்கையினை மேற்கொண்டு இடையறாது செய்து வருகின்றது.

அம்முறையில் இந்நூலினையும் வெளியிட நோக்கங் கொண்டது. கொண்டு தக்க வுரை வகுக்கும் தனிப்பெரும் பேராசிரியராய்ச் சங்க நூல்களுக்குப் பேருரை கண்டு கழகத்தின் வழியாக அவ்வந் நூல்கள் வெளிவரத் துணைபுரிந்த பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனர் அவர்களைக் கொண்டு இந்நூற்கும் விளக்கவுரை யெழுதச் செய்தது. அவ்வுரையுடன் இது வெளிவருகின்றது. எங்கள் வேண்டுகோளுக் கியைந்து எழுதித் தந்த அப் பெரும் புலவர் அவர்கட்குக் கழகத்தார் நன்றி உரித்தாகுக.

இந்நூல் வெளியீட்டுச் செலவுத் தொகையில் ஒரு பகுதி மத்திய அரசின் அறிவியலாராய்ச்சி, பண்பாடு செய்தித் துறை அமைச்சரால் நன்கொடையாக வழங்கப் பெற்றிருக்கின்ற தென்பதை நன்றியறிதலுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

சமய நூல்களைக் கற்பார்க்குச் சமய வுண்மைகள் மட்டுமன்றி அக்கால மொழிவளம், மக்கட் பண்பு, அரசியல் மாண்பு, தெய்வ வழிபாட்டுத் திறம், சீரிய கடமை, நாட்டு வரலாறு, வரலாற்றுக்குத் துணைபுரியும் கால வரைமுறைகள், வெளிநாட்டுத் தொடர்பு, வாணிக முறை, நாட்டுவளம் முதலிய பல நலன்களும் நன்குணர வாய்ப்புண்டாகும். அம் முறையின் அமைந்த இந்நூலைத் தமிழ் ஆர்வமிக்க செல்வரும், ஆசிரியர் மாணவரும் வாங்கிக் கற்று மெய்ப்பயன் எய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# ஆராய்ச்சி முன்னுரை

நமது செந்தமிழ் மொழியின்கண் சீரிய பெருங்காப்பியங்களும் சிறுகாப்பியங்களும் பற்பல உள. 'அறம் பொருள் இன்பம் வீடு' என்னும் உறுதிப் பொருள் நான்கனையும் தன்னகத்துக்கொண்டு ஞாயிறு திங்கள் கடல் காடு நாடு உயிரினங்கள் இவற்றின் வருணனைகளோடு அரசியல் போர் நிகழ்ச்சி திருமணவிழவு திருமுடிசூட்டல் இன்னோரன்ன நிகழ்ச்சிகளையும் விரிவாகக் கூறுவதாய் நகை முதலிய எண் வகைச் சுவைகளையும் தன்னகத்துக்கொண்டுள்ள தொடர் நிலைச்செய்யுள்களே பெருங்காப்பியம் என்றும், முற்கூறிய அற முதலியவற்றில் ஒரு சிலவே கொண்டு இயலுகின்ற நூல் சிறுகாப்பியம் என்றும் கொள்வர்.

இனி, சீரிய இலக்கியங்கள் ஐந்தனை மட்டும் வரைந்து கொண்டு அவற்றைமட்டுமே ஐம்பெருங்காப்பியங்கள் என்று வழங்கும் வழக்கொன்றும் நந்தமிழகத்தே நிலவிவருகின்றது. பழைய நூல்களுள் வைத்து நன்னூலுக்கு மயிலைநாதர் வகுத்த வுரையில் மட்டுமே சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் இவ்வைந்து நூல்களும் ஐம்பெருங்காப்பியங்கள் என்னும் குறிப்புக் காணப்படுகின்றது. இனி, இங்ஙனமே, சூளாமணி, யசோதரகாவியம், உதயண குமார காவியம், நாக குமாரகாவியம், நீலகேசி என்னும் இவ்வைந்திலக்கியங்களையும் ஒரு சேர எண்ணி இவை ஐஞ்சிறுகாப்பியங்கள் என்று வழங்குமொரு வழக்கும் இக்காலத்தே பயில வழங்கி வருகின்றது. இவ்வழக்கிற்குப் பழைய நூற்சான்று ஏதும் இருப்பதாகவும் தெரிந்திலது. 'கடிசொல் இல்லை காலத்துப் படினே' எனும் பொன்மொழிக்கிணங்க யாமும் அவற்றை அவ்வாறே வழங்குவேமாக.

மேலே கூறியவாற்ருல் இந்நீலகேசி என்னும் சீரிய இலக்கியம் ஐஞ்சிறுகாப்பியங்களுள் ஒன்று என்பதுணரலாம். இந்த நீலகேசியைப் பற்றிய குறிப்புக்கள் யாப்பருங்கல விருத்தியிற் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று இந் நீலகேசியை 'நீலம்' என்று குறிப்பிடுகின்றது. அது வருமாறு - 'தருக்கமாவன - ஏகாந்த வாதமும் அநேகாந்த வாதமும் என்பன. அவை, நீலம், பிங்களம், அஞ்சனம், தத்துவ தரிசனம், காலகேசி முதலிய செய்யுட்களுள்ளும் சாங்கிய முதலிய ஆறு தரிசனங்களுள்ளும் காண்க' எனவரும்.

இதனுல் நீலகேசி என்னும் இந்நூல் அடைமொழி யாது மின்றி நீலம் என்று மட்டும் வழங்கவும் பட்டதென்பதும், பிங்கலகேசி அஞ்சனகேசி காலகேசி குண்டலகேசி நீலகேசி

எனக் கேசி என்னும் இறுதியோடு முடிகின்ற இவையெல்லாம் தருக்க நூல்கள் என்றும் யாமறிந்துள்ள குண்டலகேசி நீலகேசி என்னுமிவையேயன்றிப் பிங்கலகேசி முதலிய வேறு சில தருக்க நூல்களும் இருந்தன என்பதும் அறியப்படும்.

இன்னும், யாப்பருங்கல விருத்தியிலேயே "சிந்தாமணி சூளாமணி குண்டலகேசி நீலகேசி அமிருதபதி என்பவற்றின் முதற்பாட்டு வண்ணத்தான் வருவன" என வருகின்ற குறிப்பினால் நீலம், நீலகேசி என்னும் இருவகைப் பெயர்களும் அந் நூலாசிரியர் காலத்திலேயே வழங்கப்பட்டன என்பதும் ஈண்டுக் கூறப்பட்ட நூல்கள் எல்லாம் யாப்பு வகையால் ஒரு வகைப்பட்டன என்பதும் உணரப்படும்.

இனி, சமய திவாகரர் வகுத்த இந்த நீலகேசியின் பழைய உரை நூலின்கண் சருக்கந்தோறும் இறுதியில் நீலகேசித் திரட்டு என்று இந்நூல் குறிப்பிடப்படுகின்றமையால் இந்நூல் நீலகேசித் திரட்டு என்றும் வழங்கப்பட்டதென்றுணரலாம். இனி, இந் நூற்றலைவியாகிய நீலகேசியை நோக்கி அவள் ஆசிரியராகிய முனிச்சந்திர பட்டாரகர் "நங்காய்! இனி நீ கடல் நாட்டிற் சினவரன் நெறியே தெருட்டு" என்று பணிப்ப நீலகேசியும் அப்பணி தலைமேற் கொண்டு பல நாட்டினும் சென்று அச் சினவரன் நெறியே தெருட்டுகின்றாள் ஆதலின் இந்நூல் தொடக்கத்தில் 'நீலகேசித் தெருட்டு' என வழங்கப் பட்டு நாளடைவில் தெருட்டு என்னும் சொல்லே திரட்டு என்று திரிந்து வழங்குவதாயிற்று என்று நினைத்தற்கும் இடமுண்டு.

## இந்நூலின் தோற்றத்திற்குரிய காரணம்

குண்டலகேசி என்னும் தருக்க நூல் ஐம்பெருங்காப் பியத்துள் ஒன்றென்று முன்னர்க் கூறினும். அப் பெருங்காப் பியத்தில் ஒரு சில செய்யுள் நிற்க எஞ்சியவெல்லாம் இறந் தொழிந்தன. பெரும்பாலும் அழிந்தொழிந்த குண்டலகேசி யைப்பற்றிய செய்திகள் பல இந் நீலகேசியால் நமக்குத் தெரிய வருகின்றன. மேலும் அக் குண்டலகேசி என்னும் பெருங்காப்பியமே இந் நீலகேசி என்னுஞ் சிறுகாப்பியம் தோன்றுதற்குக் காரணமாயிருந்தது என்பதும் இந் நீலகேசி யால் தெரிய வருகின்றது.

குண்டலகேசியின் ஆசிரியர் பௌத்த சமயத்தைச் சார்ந்தவராவார் என்பதும், அவர் தமது சமயச் சிறப்பை உலகினர்க்குணர்த்தற் பொருட்டேயுமின்றி அக் காலத்தே ஆருகதர் தம் பௌத்த சமயத்தோடு இகலித் தமது சமயத்தைப் பரப்புவதில் பெரிதும் முனைந்திருந்தமையால்

அவ் வாருகத சமயச் சான்றோர் கொள்கைகளைக் குற்றங்கூறி அச் சமயத்தை வீழ்த்துவதனையே சிறப்பான குறிக்கோளாகக் கொண்டிருந்தனர் என்பதும் இந் நீலகேசியால் தெரிய வருகின்றது. குண்டலகேசி ஆசிரியர் தமது பெருங்காப் பியத்தில் குண்டலகேசி ஆவண நகரத்து அரசவையில் நாதகுப்தனார் என்னுமோர் ஆருகத சமயக்கணக்கரோடு சொற்போர் புரிந்து அவ்வாருகதர் கொள்கைகளைப் பெரிதும் பழித்துக் குற்றங்கள் பல காட்டிப் பௌத்த சமயத்துப் பெருமையை நிலைநாட்டியதாக ஒருபகுதி அமைத்திருந்தனர் என்பதும், அப் பகுதியில் வருகின்ற குண்டலகேசியின் கூற்றுக்கள் ஆருகத சமயக்கணக்கர்கள் உளத்தைப் புண்படுத்துமளவு ஆற்றல் பெற்றிருந்தவென்பதும், இவ் வாற்றால் மனம் புண்பட்ட இந் நீலகேசியின் ஆசிரியர் தாம் குண்டலகேசியின்கண் தமது ஆருகத சமயத்திற்குக் கூறப் பட்டிருந்த குற்றங்கட்கெல்லாம் தீர்வு காட்டுவதோடன்றி அப் பௌத்த சமயத்துக் கொள்கைகள் பெரிதும் குற்ற முடையன என்று உலகினர்க்கு அம்பலப்படுத்தி, மேலும் தமது ஆருகத சமயமே சாலச் சிறந்த மெய்ச்சமயமாம் ஆதலால் இதன்கண், சேர வாரும் செகத்தீரே என்று அழைத்துத், தமது சமயத்தைப் பரப்பவேண்டும் என்று கருதியவராய் நெடுநாள் நினைந்து அக் கருத்தை யெல்லாம் இந் நீலகேசி என்னும் நூல் வாயிலாய்ப் பெரிதும் திறம்படவே செய்து நிறைவேற்றினர் என்பதும் தெரிய வருகின்றன. இவ்வாற்றால் இந்நூல்,

> ''பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
> திறன்தெரிந்து கூறப் படும்'' (குறள் - கஅசு)

எனவரும் திருக்குறட்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ் கின்றது என்னலாம்.

இனி, தெய்வப் புலவர் திருவள்ளுவனார்,

> ''கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
> வேட்ப மொழிவதாம் சொல்'' (குறள் - கசுக)

எனச் சொல்லிற்கு இலக்கணம் கூறிப் போந்தார். இதன்கண் 'கேளார்' என்பதற்குப் 'பகைவர்' என்பது பொருளாம். பகை வரும் கேட்க விரும்பும் பெற்றிமையுடையனவாகச் சொற்கள் அமைதல் வேண்டும் என்பது திருவள்ளுவர் கருத்தாகும். இந் நீலகேசி யாசிரியரின் சொல்வன்மை அத்தகையதே என்பது மிகையன்று. மேலும் இவர் செய்யுள் செய்வதினும் பேராற்றல் வாய்ந்தவர் என்பதனை இந்நூலிற் றிகழும் அவர் தம் செய்யுள்கள் நன்கு புலப்படுத்துகின்றன. தத்துவ நூல்

பெரும்பாலும் சுவையற்றனவாகவே இருப்பதுதான் இயல்பு. இப் புலவர் பெருமான் இத்தத்துவ நூலைப் பெருங்காப்பியத் திற்குரிய நகை முதலிய சுவையெல்லாம் கெழுமச் செய்திருக் கின்ற செயற்கைத் திறம் பெரிதும் போற்றற் பாலதாம். இவர் இந் நூலின்கண் தொடக்கத்திலேயே தமது ஆருகத சமயத்து அறங்களையெல்லாம் மிகவும் அழகாகவும் சுருக்க மாகவும் தெளிவாகவும் அமைத்திருக்கின்றனர். பின்னர்ப் புத்தசமயம், ஆசீவக சமயம், சாங்கிய சமயம், வைசேடிக சமயம், வைதிக சமயம், உலோகாயத சமயம் என்னும் ஆறு சமயங்களை ஆராய்ந்து அவற்றிற்கெல்லாம் மிகவும் நுணுக்க மாகக் குற்றங்கூறி மறுக்கின்றனர். இந்த ஆறு சமயங்களுள் வைத்துப் பௌத்த சமயத்திற்கு மட்டும் இவர் நான்கு சருக்கங்கள் வகுத்துள்ளனர். ஏனைய ஐந்து சமயங்களுக்கும் ஐந்து சருக்கங்களே வகுத்துள்ளனர். ஏன் ?

பௌத்த சமயம் மட்டுமே அக்காலத்தே தமது ஆருகத சமயத்திற்குச் சமமான எதிர்ச்சமயமாக நிலவியது. மேலும் அச் சமயத்தார் ஆருகத சமயத்தை வீழ்த்தவும் பெரிதும் முயன்றனர். ஆதலால் அதனைச் சிறப்பாகத் தாக்கி அழித் தொழியாவிடின் ஒரோவழி இத் தமிழகத்தைப் புத்த சமயமே முழுதும் கவர்ந்து கொள்ளக் கூடும் என்னும் அச்சமும் ஆருகத சமயத்தவர்க்கிருந்தது. எஞ்சிய ஆசீவக சமய முதலிய சமயங்கள் ஆங்காங்குப் பெயரளவிலே இருந்தனவே யன்றி அவற்றைப் பரப்புவாரும் பேணுவாரும் இலர்; ஆகவே அவ்வொரு மதத்தையே இந் நூலாசிரியர் தமது முழுவலிமை யோடு எதிர்த்துத் தாக்குவது இன்றியமையாததாயிற்று. எஞ்சிய சமயங்கள் ''மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின் மொழியா ததனையும் முட்டின்று முடித்தல்'' என்னும் உத்திவகை யான் மட்டும் மறுக்கப்பட்டன என்க.

எனவே, நூலின் ஒரு பாதி சருக்கமாகவும் எஞ்சிய பாதியைப் பல சருக்கங்களாகவும் வகுத்தல் நூல் மரபுக்கு ஒவ்வாமையால், குண்டலகேசியை மறுக்கப் புகுந்த இந் நூலாசிரியர் அவள் சமயமாகிய புத்த சமயத்தை அவள் ஆசிரியனாகிய அருக்க சந்திரனையும், அவனுடைய ஆசிரிய னாகிய மொக்கலனையும், அவனுக்கு ஆசிரியனாகிய புத்தனையுமே வலிந்திழுத்துக் கொணர்ந்து தம் காப்பியத் தலைவியாகிய நீலகேசிக்கு முன்னிறுத்திச் சொற்போர் புரிவிக்கின்றனர். இச்சிறு சூழ்ச்சி வாயிலாய் இப்புலவர் பௌத்த சமயத்தைப் பல கோணங்களினின்றும் தாக்கும் வாய்ப்பினைப் படைத்துக் கொள்கின்றனர். மேலும் பயில்வோர் அறிவு சலிப்படையா

மைக்கும் இச் சூழ்ச்சி ஒருபாயமாதலும் உணர்க. இத்னுலும் இந் நூலாசிரியர் மாண்பு புலப்படுதலுணர்க.

## நூலாசிரியர்

இனி, இத்தகைய சிறந்த நூலை இயற்றியருளிய நல்லிசைப் புலவர் யாவர் ? அவர் பெயர் யாது ? அவர் எந்த நாட்டில் ? எவ்வூரிற் பிறந்தார் ? எக்காலத்தினர் ? என்னும் இவ் வினுக்களுக்கெல்லாம் விடை கூறுதலரிதாம். இந் நூலுக்கு அகலவுரை வரைந்த சமயதிவாகர வாமனமுனிவருடைய உரை அகலவுரையாயிருந்தும் மேற்கண்ட வினுக்கட்கு அவ்வுரையினும் விடையேதும் கிடைத்திலது. ஆயினும் இந் நூலாசிரியரின் காலத்தை மட்டும் நாம் ஒருவாறு ஆராய்ந்து காணல் இன்றியமையாததாம். வைதிக சமய முதலாகக் கிறித்துவ சமய மீருகவுள்ள எல்லாச் சமயங்களுமே பிற நாட்டினின்றும் இந் நாட்டில் வந்து புகுந்த சமயங்களே என்பது வரலாறறிந்ததோ ருண்மையாம். ஆயின் இச் சமயங்கள் இத்தமிழகம் புகுமுன்னர் இங்கு வாழ்ந்துவந்த பண்டைத் தமிழர் மேற்கொண்டிருந்த சமயம் யாது ? அல்லது பண்டைத் தமிழர் தமக்கெனச் சமயநெறி யாதும் இலராயினரோ ? என்னும் வினுக்கள் எழலாம்.

பண்டைத் தமிழகத்துச் சான்ருேர் மேற்கொண்டிருந்த வாழ்க்கைப் பண்பாடே சீரிய சமய நெறியாகும் சால்புடையதாம். இப் பண்பாட்டினைச் சமயம் என்று கூறப்படுவதில்லையாயினும் அதற்கு நிகரான சமய நெறிகளை யாண்டும் காண்டலரிது. **பண்டைத் தமிழருடைய பொருணெறி மரபே அவர் தம் சமயக் கோட்பாடாம்.** அகம் புறம் என்னும் இருகூற்றினமைந்த பண்டைத் தமிழர் தம் தனிச் சமயநெறியின் இலக்கணமே தொல்காப்பியத்திற் காணப்படுகின்ற பொருணெறி மரபுகளாம். பண்டைத் தமிழ்ச் சான்ருேரின் சமயக் கொள்கைகளை ஒரு சேரத் தொகுத்துத் தந்தவர் தெய்வப் புலமைத் திருவள்ளுவனுரே யாவர். திருவள்ளுவனுர் திருவாய் மலர்ந்தருளிய திருக்குறளிற் காட்டிற் சிறந்த சமய நூல்தான் யாண்டுளது? திருக்குறளிற் காணப்படாத சமய நுணுக்கங்களை யாம் வேறெந்தச் சமய நூல்களிலும் கண்டதுமில்லை கேட்டதுமில்லை. ஆனுல் இச்சீரிய தெய்வ நூலை வடவர் பகவத் கீதையைப் போற்றுமளவிற்குக்கூட யாம் போற்றுகின்ருேமில்லை. கடாம், படாம் என்றுருட்டுகின்ற வெறுஞ் சொற் சலசலப்பே பெரும்பாலும் சமய நூல்களிலே காணப்படுகின்றன. தமக்குப் புரியாத சொல்லாரவாரங்களையுடைமையாற்ருன் மாந்தர் அவற்றைப் பெரிதும் மதிக்கின்றனர்

போலும்! நாம் பேசுகின்ற மொழியிலே எல்லோருக்கும் விளங்குகின்ற எண்மையான சொற்களாலே எளிதாக இயற்றப்பட்டிருத்தலாலே போலும் திருக்குறள் சமய நூல்கள் பலவற்றுள்ளும் தலைசிறந்த தனிப் பெருமையுடையதா யிருந்தும் அதனை மதித்துப் பயில்வோர் தமிழினத்தினுங்கூட அரியராயினர்!

இனி, இது நிற்க, வந்தேறிகளாகிய சமயங்களுள் மிகப் பழைய காலத்திலேயே பிற நாட்டினின்றும் நந்தமிழகத்து முந்து வந்து புகுந்த சமயம் வைதிக சமயமேயாகும். வைதிக சமயம் வடநாட்டிலிருந்து ஈண்டு வந்து பண்டைத் தமிழருடைய மெய்க்காட்சிகளையும் ஏற்றுக்கொண்டு தமிழருடைய வாழ்க்கை நெறியில் ஊடுருவிக் கலந்துவிட்டது. இடைச் சங்ககாலத்திற்கு முன்பே இவ்வைதிக சமயம் தமிழர் பண்பாட்டிற் கலந்துவிட்டது என்னலாம். தமிழருடைய பொருளிலக்கண நெறியில் அவர்தம் நானிலங்களில் சில நிலங்கட்கு வைதிக சமயத்துத் தெய்வங்கள் தெய்வங்களாய்க் கொள்ளப்பட்டன. பண்டைத் தமிழருடைய அகப்புற வொழுக்கங்களையும் இவ்வைதிக சமயம் ஆர்வத்துடன் ஏற்றுக் கொண்டன. இவ்வாற்றால் வைதிக சமயம் சங்க நூல்களில் இடம் பெற்றுத் தமிழர் சமயமே என்னும்படி ஒன்றியது. நமது சைவசமயமும் வைணவ சமயமும் வைதிக சமயத்தின் கிளைகளே. இத் தெய்வங்கள் பத்துப்பாட்டினும் தொகை நூல்களினும் நன்கிடம் பெற்றன. பண்டைத் தமிழர் வாழ்க்கை நெறியாகிய அகப்புறப் பொருணெறி மரபுகள் இவ்வைதிக சமயங்களினூடு புகுந்து அவற்றின் உயிராகவே அமைந்து விட்டன. இவ்வைதிக சமயங்கள் தமது பிறப்பிடமாகிய வடநாட்டின்கண் இன்னும் பல்வேறு இழுக்குகளுக்கிடனாகவே உள்ளன. ஆனால் தமிழகம் புக்க பின்னர் அவை தமிழர் பண்பாட்டினை முழுதும் ஏற்றுக் கொண்டமையால் பெரிதும் சிறப்புடையனவாகத் திகழலாயின.

இனி, கடைச்சங்க காலத்திலேதான் வடதிசையி னின்றும் பௌத்த சமயமும் சமண சமயமும் தமிழ் நாட்டில் வந்து புகுந்தன. இவையிரண்டும் ஒரே குறிக்கோளுடையன. இந்த இரண்டு சமயங்களும் அருளறத்தையே முதன்மையாகக் கொண்டவைகளேயாம். அந்த அருளறத்தையே உலக முழுதும் பரப்பவேண்டும் என்னும் ஆர்வமுடைய சமயங்களே இவையிரண்டும். அங்ஙனமிருந்தும் இச் சமயங்கள் தம்முள் ஒன்றை ஒன்று பெரிதும் பகைக்கின்றது; ஏன்?

பௌத்த சமயமும் சமண சமயமும் முதன்முதலாகத் தமிழகத்துட் புகுந்தபோது தமது புதுமை காரணமாகத்

தமிழகத்து மக்களால் விரும்பி வரவேற்கப்பட்டன. மண் தோன்றிக் கல்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்துப் போன பண்டைத் தமிழர் பொருணெறி மரபுகளும் பண்டே வந்து புகுந்த வைதிக சமயங்களும் தமது பழைமை காரண மாகச் சுவைகுன்றிக் கிடந்த காலத்தே புதுமையாக வந்து புகுந்த இந்தச் சமயங்களை மக்கள் விரும்பி வரவேற்றது இயற்கையேயாம். புதுமையை வரவேற்பதும் பழைமையை வெறுப்பதும் மக்களுக்கு இயல்பாயமைந்த பண்புகளேயாம். கடைச்சங்க காலத்திலேயே இப்புதிய சமயங்கள் வந்தன வேனும் இவை சங்க நூல்களுள் தத்தமக்குரிய தத்துவங்களை அமைக்கு மளவிற்குச் செல்வாக்குப் பெறவில்லை. ஆயினும் சங்க நூல்களில் சமண சமயத்துச் சான்றோர்கள் செய்த தனிச் செய்யுள்களும் நூல்களும் உளவெனினும் அவை பழைய தமிழருடைய நூனெறி மரபுகளைப் பெரிதும் தழுவியே நடக்கின்றன. இச் சமயங்களிரண்டையுமே வரவேற்றோரும் பரப்பியவரும் தமிழ்ச் சான்றோர்களேயன்றிப் பிற நாட்டினர் அல்லர் என்பதனையும் யாம் குறிக்கொள்ளல் வேண்டும். அக் காலத்தே மக்களுள் சமயப் பகை ஒரு சிறிதும் இல்லை. அறிவு எத்திசையினின்று வந்தாலும் யாவர் கூறினும் வரவேற்றுக் கொள்ளுதற்குரிய சுதந்திரம் அறிவுத் துறையி லிருந்தது. ஒரே குடும்பத்துள்ள உடன்பிறந்தாருள் ஒருவ னுக்குச் சமண சமயம் பிடித்தால் அவன் சமணன் ஆயினன் ; ஒருவனுக்குப் பௌத்த சமயம் பிடித்தால் பௌத்தனாயினன். இரண்டுமே பிடிக்காதவன் பழைய வைதிக சமயத்தையே மேற்கொண்டொழுகினான். ஆயினும் இவருள் சமயங் காரணமாகப் பகை சிறிதும் தோன்றவில்லை. மன்னர்களும் சமயங் காரணமாக விருப்பும் வெறுப்புமற்ற சமநிலையைக் கைக் கொண்டிருந்தனர். இப்படியொரு காலம் இத் தமிழகத்தே நிகழ்ந்தது என்பதுணர்ந்து யாம் மிகவும் பெருமைப்படுகின்றோம். அத்தகையதொரு காலம் மீண்டும் வரவேண்டும் என்று யாம் அவாவுடன் எதிர்பார்க்கின்றோம். சீத்தலைச் சாத்தனாரும் இளங்கோவடிகளாரும் வேறு வேறு சமயத்தைச் சார்ந்தவர்கள். ஆயினும் தம்முள் உயிர்த் தோழர்கள். இன்னும், மாங்குடி மருதனார் தாமியற்றிய மதுரைக் காஞ்சியில் மதுரைமா நகரத்தில் இருந்த புத்தப் பள்ளியினையும் அமண் பள்ளியினையும் கூறும் பொழுது,

"திண்கதிர் மதாணி ஒண்குறு மாக்களை
ஓம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமு மவரும் ஓராங்கு விளங்கக்

காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்து புறங்காக்குங் கடவுட் பள்ளியும்''

எனப் புத்தப் பள்ளியின்கண் சென்று புத்தர் பெருமானை வழிபாடு செய்தற் பொருட்டுப் பேரிளம் பெண்டிர்கள் தம் மிளஞ்சிருர் அவர்கள் கூட்டத்தினுள் தம்மைப் பிரிந்து போகாதபடி அவரைத் தம் கைகளால் அணைத்துப் பாது காப்பவராய், மேலும் அவர்பாற் கொண்டுள்ள அன்பு காரண மாகத் தாமரை மலர் தாமரை மொட்டினைக் கதுவியிருப்பது போல அவர் தம் கையைத் தம் கையிற் பிடித்துக்கொண்டு புத்தர் பெருமானைத் தொழ வேண்டிய மலர் நறும்புகைப் பொருள் முதலியவற்ருேடு சென்று அப் பெருமானை வாழ்த்தி வணங்கினர் என்றும், அங்ஙனமே ஆருகதப் பள்ளியினையும்,

''வண்டுபடப் பழுநிய தேனர் தோற்றத்துப்
பூவும் புகையும் சாவகர் பழிச்சச்
சென்ற காலமும் வருஉ மமயமும்
இன்றிவண் தோன்றிய வொழுக்கமொடு நன்குணர்ந்து
வானமு நிலனுந் தாமுழு துணருஞ்
சான்ற கொள்கைச் சாயா யாக்கை
ஆன்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார்
கல்பொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப்
பல்புரிச் சிமிலி நாற்றி நல்குவரக்
கயங்கண் டன்ன வயங்குடை நகரத்துச்
செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து
நோக்குவிசை தவிர்ப்ப மேக்குயர்ந் தோங்கி
இறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையும்''

என, வண்டுகள் மொய்க்கும்படி பருவம் முதிர்ந்த தேனிருந்த அழகிய பூக்களோடே புகையினையும் பலியாக ஏந்திச் 'சாவக நோன்பிகள்' அருகக் கடவுளை வழிபடுகின்ற இடனும், இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்கால நிகழ்ச்சிகளையும் தம்முடைய ஓதி ஞானத்தா லுணர்ந்து கொள்பவரும் மேனிலையுலகங் களின் இயல்பினை நன்குணர்ந்தவரும் தமக்கமைந்த நோன்பு களையும் அந்நோன்பா லிளையாத மெய்யினையும் கல்வியெல்லாம் கடைபோகக் கற்றுணர்ந்த மெய்யறிவுடையவரும் ஆகிய ஆருகத சமயத்துச் சான்ருேர் குழுமியிருந்து தம் நோன்பினை முட்டின்றி ஆற்றுதற்கு வேண்டிய குண்டிகைகளை நூலுறி யிலே இட்டுத் தூக்கப்பட்டதும் குளம் போன்ற குளிர்ச்சி யுடையதும் செம்பாலியற்றினுற் போன்ற செஞ்சுவர் அமைந் ததும் அச்சுவர்களிலே ஓவியம் தீட்டப்பட்டதுமாகிய மிகவும் வளர்ந்தோங்கிய நறிய பூஞ்சோலைகளாற் சூழப்பட்டதுமாகிய அமண் பள்ளியும் எனச் சமநிலை நின்று ஓதியிருத்தல் காண் கின்ருேம்.

இங்ஙனம் சோழர் தலைநகரமாகிய காவிரிப்பூம்பட்டினத்தினும் இவ்விரண்டு சமயத்தார்க்கும் சிறப்பான பள்ளிகள் இருந்தமையைச் சிலப்பதிகாரத்தினும் மணிமேகலையினும் பரக்கக் காணலாம். இக்காலத்தே தமிழகத்திலே சமயப் பூசல்கள் இருந்தில. கடைச் சங்ககாலத் திறுதியாகிய காப்பியக் காலத்தில் அஃதாவது சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய பெருங்காப்பியங்கள் தோன்றிய காலத்திலே பௌத்தரும் சமணரும் நாடெங்கணுஞ் சென்று தத்தம் சமயத்தைப்பற்றிச் சொற்பொழிவுகள் ஆற்றித் தத்தம் சமயத்திற்கு ஆக்கந் தேடினர் என்பதும், நாட்டு மக்கள் இச்சமயச் சொற்பொழிவாளர் அறிவுரைகளைக் கேட்டற்கு ஆர்வத்துடன் குழுமினர் என்பதும் பெரிய நகரங்களிலே இச்சமயச் சொற்பொழிவாளர் வந்து சொற்பொழிவாற்றுதற் பொருட்டுப் பொதுமக்கள் மேடை முதலியன அமைத்திருந்தனர் என்பதும் இச் சமயச் சொற்பொழிவாளர் அத்தொண்டுக்கெனவே தம் வாழ்க்கையைத் துறந்து தத்தம் சமயவொழுக்கங்கட்குத் தாமே சான்றாகவுமிருந்து ஊர்தோறுஞ் சென்று திருவிழாக் காலங்களினும் பிற காலங்களினும் சிறந்த சொற்பொழிவுகள் செய்து வந்தனர் என்பதும் இவர்களுடைய சொற்பொழிவுகளைக் காட்டினும் இவர் தம் ஒழுக்கமே பொதுமக்கள் நெஞ்சத்தைப் பெரிதும் கவர்ந்தன என்பதும் பழைய இலக்கியச் சான்றுகளாலே நன்குணரலாம்.

மணிமேகலையில், விழாவறை காதையில் முரச வள்ளுவன்:-

*"தண்மணற் பந்தரும் தாழ்தரு பொதியிலும்*
*புண்ணிய நல்லுரை அறிவீர் பொருந்துமின் !*
*ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்*
*பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின் !"*

என முரசறைந்து அறிவித்தலைக் காண்கின்றோம்.

இனிச் சிலப்பதிகாரத்தினும்,

*"பணையைந் தோங்கிய பாசிலைப் போதி*
*அணிதிகழ் அறவோன் திருமொழி*
*அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்*
*இந்திர விகாரம் ஏழுடன் போகி"*

எனவும்,

*"புலவூண் துறந்து பொய்யா விரதத்*
*தவல நீத்தறிந் தடங்கிய கொள்கை*
*மெய்வகை யுணர்ந்த விழுமியோர் குழீஇய*
*ஐவகை நின்ற அருகத் தானத்துச்*
*சந்தி யைந்துந் தம்முடன் கூடி*
*வந்துதலை மயங்கிய வான்பெரு மன்றத்துப்*

பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழல்
நீரணி விழவினும் நெடுந்தேர் விழவினும்
சாரணர் வருஉந் தகுதியுண் டாமென
உலக நோன்பிகள் ஒருங்குடனிட்ட
இலகொளிச் சிலாதலம் தொழுது'' (சிலப். ௧௦:- ௧௧ - ௨௫)

எனவும் வரும் இப்பகுதிகள், மேற்கூறிய உண்மையை வலியுறுத்துகின்றன.

இதன்கண் புத்த சமயச் சொற்பொழிவாளர் ''அந்தர சாரிகள்'' என்றும், சமண சமயத்துச் சொற்பொழிவாளர்கள் 'சாரணர்' என்றும் குறிப்பிடப்படுகின்றனர். இதன்கண் இளங்கோவடிகளார் புத்தனைக் கூறுங்கால், ''பணை நிலை ஐந்தோங்கிய பாசிலைப் போதி அணிதிகழ் நீழல் அறவோன்'' என்றும், அவன் மொழியைத் 'திருமொழி' என்றும் அங்ஙனமே சமண சமயத்துச் சான்றோரைக் கூறுங்கால் ''புலவூண் துறந்து பொய்யாவிரதத் தவலநீத்து அறிந்து அடங்கிய கொள்கை மெய்வகை யுணர்ந்த விழுமியோர்'' என்றும், சமன் செய்து சீர்தூக்குங் கோல் போல் நடுநின்று கூறுகின்ற அப்புலவர் பெருமானுடைய சான்றாண்மை நம் நெஞ்சத்தை அள்ளுகின்றது. இக்காலத்தே சமயப் பகை சிறிதும் காணப்பட்டிலது.

இன்னும் கவுந்தியடிகளார், கோவலனை நோக்கி,

''மறவுரை நீத்த மாசறு கேள்வியர்
அறவுரை கேட்டாங்கு அறிவனை யேத்தத்
தென்றமிழ் நாட்டுத் தீதுதீர் மதுரைக்
கொன்றிய வுள்ள முடையேன் ஆகலின்
போதுவல் யானும்'' (௧௦ :—௫௯ - ௬௦)

என்று கூறுவதும் அக்காலத்தே யாண்டும் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்ந்ததனையே வலியுறுத்துகின்றது. மேலும் சமண சமயத்துத் தவமுதாட்டியாகிய கவுந்தியடிகளார் சமண சமயத்தவராகிய கண்ணகியையும் கோவலனையும் வைணவ சமயத்தில் ஆழ்ந்த பற்றுடைய இடைக்குல மூதாட்டியாகிய மாதரி மனைக்கு அழைத்துச் சென்று கண்ணகியை அவள்பால் அடைக்கலங் கொடுத்தலும், அம்மாதரி தானும் இவர் தாம் வேறு சமயத்தவர் என்று வேற்றுமை சிறிதும் காணுதவளாய்க் கண்ணகியையும் கோவலனையும் கண்டு,

''ஆயர் பாடியின் அசோதைபெற் றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்லமு துண்ணு நம்பி யீங்குப்
பல்வளைத் தோளியும் பண்டுநங் குலத்துத்
தொழுனை யாற்றினுட் டூமணி வண்ணனை
விழுமந் தீர்த்த விளக்குக் கொல்லென''

தன் வழிபடு தெய்வமாகவே கண்டு போற்றுதலும் அக் காலத்தே பொதுமக்கள்பால் எட்டுணையும் சமய வெறி இருந் திலது என்பதற்குச் சான்றுதலுணர்க.

இனி, மணிமேகலை என்னும் பெருங்காப்பியம் புத்தசமயத் தைச் சார்ந்த நூலாகும். இந்நூலில் கதைத் தலைவியாகிய மணிமேகலை பல்வேறு சமயக்கணக்கர்களையும் கண்டு அவர் தம் சமயக்கொள்கைகளைக் கேட்பதாக ஒரு காதை அமைந் துள்ளது. வேறு சமயத்தாரோடு மணிமேகலை சொற்போர் புரிந்திலள். ஆயினும் ஆசிரியர் சீத்தலைச் சாத்தனுருடைய அப்பெருங்காப்பியத்திலேயே புத்த சமயத்தார்க்கும் சமண சமயத்தார்க்கும் உட்பகைமை அரும்பியிருப்பதனை ஒரு சில இடங்களிலே காணலாம். சமண சமயத்துத் துறவோர் அருளறம் பேசுகின்றுரேனும் கண்ணேட்டம் சிறிதுமில்லா வன்கண்ணராயிருந்தனர் என்பதனையும் புத்த சமயத்துத் துறவோர் தாம் மேற்கொண்டுள்ள அருளறத்திற் கிணங்கக் கண்ணேட்டம் மிக்கவராகத் திகழ்ந்தனர் என்பதனையும் அத் தண்டமிழாசான் சாத்தனுர் தமது நூலில் குறிப்பாக வுணர்த்து கின்றனர். இக் குற்றத்தை வெளிப்படுத்துவதற்காகவே இவர் ஒரு சூழ்நிலையை வித்தகமாகப் படைத்துக் கொள் கின்றனர். நுண்ணறிவுடையோர்க்கன்றி ஆசிரியரின் உளத்தே ஆழ்ந்திருக்கும் இக்கருத்துத் தெற்றெனப் புலப் படாது. வறிய கதைப் போக்குமட்டுமே புலப்படுவதாம். அச்சூழ்ச்சி வருமாறு :—

புதுமலர் கொணரச் சுதமதியோடு மணிமேகலை உவவனம் புகுவாளாயினள்; அச்செய்தியறிந்த உதயகுமரன் அவளைப் பின்தொடர்ந்து அவ்வனத்திலே புகுகின்றுன். அவன் வரவுணர்ந்த மணிமேகலை அங்குள்ள பளிக்கறையிற் புகுந்து தப்பித்துக் கொள்கின்றுள். உயர்குடித் தோன்றலாகிய உதயகுமரன் பளிக்கறையினின்றும் அவளை வெளிப்படுத்த வியலாதவனுய் ஒருபுறம் திரும்புபவன் அங்கு நிற்கின்ற சுதமதியைக் கண்டு "ஆயிழையே! நீ முன்பு சமணப் பள்ளியிற் சேர்ந்திருக்கின்றனை என்று யான் கேள்விப்பட்டதுண்டு. புத்தப் பள்ளியிற் சேர்ந்துள்ள இம் மணிமேகலையோடு நீ எவ்வாறு கேண்மை கொண்டனை?" என்று வினவுகின்றுன். அதுகேட்ட சுதமதி, "இளவரசே! அவ்வரலாற்றினைக் கூறுவேன் செவியேற் றருள்க! அடிச்சியேன்! கூடாவொழுக்கமுடையளாய் ஒரு விஞ்சையன் வயப்பட்டு அவனுல் இந்நகரத்துள்ள சமணப் பள்ளியிற் சேர்ப்பிக்கப் பட்டிருந்தேனல்லனே? என்னை என் தந்தை யாண்டுந் தேடி யான் இந்நகரத்திருந்ததனைக்

கண்டனர். அவர் பேரன்பினராதலின் என்னைப் பிரிந்துபோக மாட்டாராய் இரந்தூண் மேற்கொண்டு இந்நகரத்திலேயே தங்கிவிட்டனர். ஒருநாள் அவர் இரத்தற்குத் தெருவிற் செல்லும்பொழுது ஒரு புனிற்றுப் பாய்ந்தமையாலே அவர் வயிறு கிழிந்து குடல் சரிந்தது. சரிந்த குடலைக் கையிற் றுங் கியவராய்த் தம் மகளாகிய யானிருந்த அச் சமணப்பள்ளியை எய்தி,

‘........ துன்பந் தாங்காது புகுந்து
சமணீர் காள் நுஞ்சரண் என்றேனை
இவணீ ரல்லவென் றென்னொடும் வெகுண்டு
மையறு படிவத்து மாதவர் புறத்தெனைக்
கையுதிர்க் கோடலின் கண்ணிறை நீரேம்
அறவோ குளிரோ? ஆருமி லோம்! எனப்
புறவோர் வீதியிற் புலம்பொடு சாற்ற
மங்குல்தோய் மாடம் மனைதொறும் புகூஉம்
அங்கையிற் கொண்ட பாத்திர முடையோன்
கதிர்சுடும் அமயத்துப் பனிமதி முகத்தோன்
பொன்னிற் றிகழும் பொலம்பூ வாடையன்
என்னுற் றனிரோ? என்றெனை நோக்கி
அன்புடன் அளைஇய அருண்மொழி யதனால்
அஞ்செவி நிறைத்து நெஞ்சகங் குளிர்ப்பித்துத்
தன்கைப் பாத்திர மென்கைத் தந்தாங்கு
எந்தைக் குற்ற இடும்பை நீங்க
எடுத்தனன் தழீஇக் கடுப்பத் தலையேற்றி
மாதவர் உறைவிடங் காட்டிய மறையோன்
சங்க தருமன் தான்’ (மணி - ௫ : ௬௦ - ௭௦)

எமக்கருளிய அற்றைநாள் தொடங்கி அடிச்சியும் புத்தர் அறங் கொண்டு புத்தபிக்குணி ஆயினேன்'' என்று கூறுகின்றனள்.

இச்சுதமதியின் வாயிலாய் நூலாசிரியர் அமணத்துற வோரைக் கண்ணோட்டமில்லாதவர் என்று பழித்துப் புத்தத் துறவோரின் பேரருள் மாண்பினை இனிதின் உணர்த்து கின்ற சூழ்ச்சியை உணர்க. இவ்வாறு சமணரைப் பழித்தற்கே இவ்வுரையாட்டத்தை ஆசிரியர் படைத்துக்கொண்டனர் என்பது தேற்றம்.

இந்த மணிமேகலைக்கும் சீவகசிந்தாமணிக்கும் பின்னர்த் தோன்றியதே ‘குண்டலகேசி’ என்னும் பெருங்காப்பியம். குண்டலகேசி இவ்விரு சமயத்தார்க்கும் பகை முதிர்ந்து காழ்க்கொண்ட காலத்திலே தோன்றிய நூலேயாகும். சீவக சிந்தாமணியிற் புத்த சமயத்தை இழித்துக் கூறும் சொற் றொடர்களை ஆங்காங்குக் காணலாம். தமிழகத்திலே இச்சமண சமயப் புத்த சமயப் பூசல்கள் தொடர்ந்து ஒரு சில நூற்றாண்டு களேனும் நிகழ்ந்திருத்தல் வேண்டும். இச்சமயப் போரை

எண்ணுங்கால் நாடுபிடிக்கும் அவாவினாலே மேலைநாட்டிலிருந்து இப் பாரத நாட்டிற் புகுந்து இந்நாடு உனக்கா? எனக்கா? எனத் தம்முட் பகைத்துப் போரிட்டுக் கொண்டிருந்த ஆங்கிலேயர் பிரஞ்சுக்காரர்கள் பூசல்கள் நம் நினைவிற்கு வருகின்றன.

இனி, காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு கோலோச்சிய பல்லவ மன்னனாகிய மகேந்திரவர்மன் சமண சமயத்தைத் தழுவியவனாய்ப் புத்த சமயத்துத் துறவோர் கூடாவொழுக்கத்தைப் பொருளாகக் கொண்டு சிறு நாடக நூலொன்று வடமொழியில் வரைந்துள்ளனன். அந் நாடக நூலிற் கூறப்படும் புத்த சமயத்துத் துறவோர் கூடாவொழுக்கங்கட்கும் இந் நீலகேசியின்கண் நீலகேசியாற் கூறப்படும் புத்த சமயத்துத் துறவோர் கூடாவொழுக்கமும் ஏறத்தாழ ஒத்துக் காணப்படுகின்றன. எனவே, இந்நீலகேசி கி. பி. ஆறும் நூற்றாண்டினனாகிய மகேந்திரவர்மன் காலத்திற்கு அணித்தாக முந்திய ஐந்தாம் நூற்றாண்டிற் றோன்றி யிருத்தல் கூடும் என்று ஒருவாறு ஊகிக்கலாம்.

## திருவள்ளுவரும் நீலகேசி யாசிரியரும்

இனி, இந்நீலகேசி யாசிரியர் ஏனைய புலவர் பெருமக்களைப்போலவே திருக்குறள் பலவற்றைப் பொன்னேபோற் போற்றி இந்நூலில் எடுத்தாளுகின்றனர். ஆனால், திருவள்ளுவர் ஆருகத சமயத்தைச் சார்ந்தவர் என்று யாண்டும் குறிப்பிடவில்லை. ஆயினும் நீலகேசியின் பழைய உரையாசிரியராகிய சமய திவாகர வாமன முனிவர் மட்டும் பற்பல இடங்களிலே தமதுரையில் திருக்குறளை மேற்கோளாக எடுத்தாளும்பொழுது (திருக்குறளைக் காட்டி) **"என்பது எம்மோத்தாகலின்"** என்று கூறிப்போகின்றார். எனவே, அவ்வுரையாசிரியர் ஆசிரியர் திருவள்ளுவனாரை ஆருகதர் என்றே கொண்டனர் என்று தெரிகின்றது. இங்ஙனம் கொள்வதில் வியப்பொன்றுமில்லை. என்னை? ஆசிரியர் திருவள்ளுவனாரைப் பெரும்பாலும் எல்லாச் சமயக் கணக்கர்களும் தத்தம் சமயத்தைச் சார்ந்தவராகவே காட்ட முயல்கின்றனர் அல்லரோ? அங்ஙனமே, இவரும் முயன்றுள்ளார். ஆனால், வாய்மையில் ஆசிரியர் திருவள்ளுவனாரோ சமயக் கணக்கர் மதிவழிச் செல்லாச் சால்புடைய ஒரு பெருந்தகைமையாளர் என்பது தேற்றம்.

இனி, நீலகேசியின் முதற் பதிப்பாசிரியர் இந்நீலகேசி யாசிரியர் இந்நூலின் அவையடக்கத்தில்,

''தேவன் உரைப்பத் தெளிந்தேன்
பின் தெளிந்த வெல்லாம்
மாவென்று கொண்டேன்
மடனே வழியாக நின்று
நாவல் புலவர் அவைநாப்
பண்ணி நாட்ட லுற்றேன்
பாவின்ன வென்று
பழிப்பார் இனிஇல்லை யன்றே'' (௬)

என்று கூறுமிதன்கண், ''தேவன் என்னுஞ் சொல் ஆசிரியர் திருவள்ளுவரைக் குறிக்கும் ஆதலால், இந் நூலாசிரியர் திருவள்ளுவனாரிடத்தே பயின்ற மாணவர் என்று கருத இடனுளது. இக்கருத்தை ஏற்றுக் கொள்ளின் நீலகேசி ஆசிரியர் திருவள்ளுவர் காலத்தவர் என்று கொள்ளலாம்'' என்று கூறுகின்றார். நீலகேசி ஆசிரியர் அவையடக்கத்தே 'தேவன்' என்று குறிப்பிடுஞ் சொல், மேற்காட்டிய பதிப்பாசிரியர் கூறுமாறு திருவள்ளுவரைக் குறிப்பதன்று, என்பதனை இந்நூலில் அவையடக்கத்திற்கு யாம் கூறிய உரையினை ஓதியுணர்வோர் தெற்றெனத் தெளிந்து கொள்ளலாம். மேலும் திருவள்ளுவர் காலத்தோடு இந்நீலகேசி யாசிரியர் காலத்தை இணைப்பது ஒரு சிறிதும் பொருத்தமில்லை என்பதற்குச் சான்றுகள் பற்பல காட்டுதல் கூடும். அங்ஙனம் காட்டுதல் மிகையென்று கருதுகின்றோம். புழைய பதிப்பாசிரியர் அவையடக்கத்தே ''ஆய் நீலவுண்கண்'' என்னும் செய்யுளும் அடுத்து வருகின்ற ''தேவன் உரைப்பத் தெளிந்தேன்'' என்னும் செய்யுளும் குளகமாய்த் தொடர்ந்து வருவதனைக் கூர்ந்து நோக்காமையாலும் அவற்றின் பொருளை ஆழ்ந்து நோக்காமையாலும் நேர்ந்த பிழையே ஆகும் திருவள்ளுவரின் மாணவர் நீலகேசி யாசிரியர் என்னும் இக் கருத்தென்க.

## ஆசிரியரின் கனவு

நீலகேசி ஆசிரியர் தாம் இந்நூல் செய்தற்குரிய காரணம் இன்னது என்பதனை அவையடக்கத்தில் கூறுகின்றார்; அது வருமாறு :—

''நீலகேசியின் வரலாறு பண்டு சைன நூல்களுள் இல்லாததொரு புதிய வரலாறேயாகும். உண்மையில் நீலகேசி என்று ஒருத்தி இருந்ததே இல்லை. யான் ஒருநாள் தண்டாமரைமேல் நடந்த அருகக் கடவுளின் திருவடிகளை வணங்கிவிட்டு என்னுறையுளிற் சென்று துயில் கொண்டிருந்தேன். அங்ஙனம் துயிலும் பொழுது ஒரு கனவு கண்டேன். அந்தக் கனவிலே என்முன் ஒரு தெய்வந் தோன்றி இந்நூலிற் கூறப்படுகின்ற நீலகேசியின் வரலாற்றினைக் கூறி மறைந்தது. தெளிவாகக் கண்ட

அக்கனவில் அத்தெய்வங் கூறிய நீலகேசி வரலாறு ஒரு நூல் செய்தற்குரிய சிறப்புடையதாக எனக்குத் தோன்றியது. அவ்வரலாற்றினை நூலாக வடித்தால் அந்த நூல் மக்கட்கு உறுதி பயக்கும் ஒரு நூலாக அமையும் என்னும் கருத்தினால் யான் இந்நூலை இயற்றினேன்'' என்பதேயாம்.

இனி, உலகிலே நின்று நிலவுகின்ற இலக்கியங்கள் எல்லாமே புலவர்கண்ட கனவுகளேயாகும். "**பட்டப்பகலிலே பாவலர்க்குத் தோன்றுவதாம் நெட்டைக் கனவின் நிகழ்ச்சியிலே கண்டேன் யான்**'' என்று தொடங்கிப் புதுமைப் புலவர் சுப்பிரமணிய பாரதியார் தமது '**குயிற் பாட்டு**' என்னும் அழகிய இனிய கற்பனை நூலை இயற்றியருளினர். இங்ஙனம் கூறியதனால் அவர் கனவு கண்டு குயிற்பாட்டைப் பாடினர் என்பது பேதைமையாம். புலவர்க்கு இயல்பாகத் தோன்று கின்ற கற்பனையையே அவர் புனைந்துரை வகையாலே கனவு என்று கூறியதன்றிப் பிறிதில்லை. நீலகேசி யாசிரியர் கண்ட கனவும் அத்தகைய கனவே என்பது தேற்றம். நீலகேசி யாசிரியர் இங்ஙனம் புனைந்துரை வகையாற் கூறுமிதனை யாம் உலகியன் முறையால் உணருமிடத்து அவ்வாசிரியர் குண்டல கேசியில் சமண சமயத்திற்குக் கூறப்பட்ட குற்றங்கட்குத் தீர்வு கூறுதற் பொருட்டும் குண்டலகேசியின் சமயமாகிய புத்த சமயத்தின் பொய்மைகளை உலகினர்க் குணர்த்தற் பொருட்டும் ஒருநூல் செய்யவேண்டும் என்று ஒருநாள் நினைத்தனர். அந் நினைவின் முதிர்வினாலே நீலகேசி என்னும் கதைத் தலைவியைத் தாமே படைத்துக் கொண்டு அவள் வரலாறாக இந்நூலை இனிதினியற்றினர் என்றே உணர்தல் வேண்டும். இந்நூலில் வருகின்ற இந்த அவையடக்கச் செய்யுள்களே அவருடைய புலமைச் சிறப்பினை நம்மனோர்க்கு உணர்த்து கின்றன.

## நீலகேசி

குண்டலகேசி என்னும் பெருங்காப்பியத் தலைவியும் ஒரு பிக்குணியே ஆதலால் அவள் கூற்றை மறுத்தற்குத் தமது சமயத்தைச் சார்ந்த ஓர் ஆர்யாங்கனை (தவப்பெண்) வேண்டும் என்று அப்புலவர் பெருமான் கருதியது பொருத் தமேயாம். ஆயினும் அத் துறவிப்பெண் ஒரு பேய்ப் பெண்ணாகவும் இருக்கவேண்டும் என்று ஏன் கருதினர்? நீலகேசி என்பவள் நமது தமிழ்நாட்டிலுள்ள ஒரு வலிய பெண் பேயே ஆவள். இந் நீலகேசியை இவ்வாசிரியர் "**தென்றிசை நீலகேசி மாதெய்வம்**'' என்றே குறிப்பிடுகின்றனர். ஈண்டு '**மாதெய்வம்**' என்றது **பெரும்பேய் என்றவாறும்**,

'தென்றிசை நீலகேசி' என்பதற்குப் பழைய உரையாசிரியர் "பழையனூர் நீலகேசி" என்று குறிப்புரை வரைந்துள்ளனர். இவள் யார்?

## பழையனூர் நீலகேசி

பழையனூர் நீலி என்பதொரு பேய் ஆகும். இப்பேயைப் பற்றிய வரலாறென்று முளது. பழையனூர் என்பது சிவ பெருமான் எழுந்தருளியுள்ள திருமலி மூதூருள் ஒன்றாகும். இவ்வூர் திருவாலங்காடு என்றும் கூறப்படும். இத் திருவூரில் இறைவன் இறைவியோடு கூத்தாடி இறைவியைத் தோற் பித்தனன் என்றும் கூறுப. இறைவியின் ஒரு வடிவமாகிய காளியின் திருக்கோயிலும் இவ்வூரில் உளது. இப் பதியைப் பாடவந்த திருஞானசம்பந்தர் தாமும் மேற்கூறிய பேயின் வரலாற்றை நினைந்து தம் பதிகத்துள்ளும் சுருக்கமாக அதனைக் குறிப்பிட்டுள்ளார்; அது வருமாறு :— "முனை நட்பாய் வஞ்சப் **படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்டு அஞ்சும் பழையனூர்"** என்பதாம் (திருமுறை. க. திருவாலங்காடு). இங்குக் குறிப் பிடப்பட்ட பழையனூர் நீலி வரலாற்றினைச் சேக்கிழாரடி களாரும் தம் நூலில் விரிவாகக் கூறியுள்ளார். அதன் சுருக்கம் வருமாறு :—

'ஒரு பார்ப்பனன் தன் மனைவியோடு இனிதே வாழ்ந்து வருகின்ற நாளில் பரத்தையர் கேண்மை கொண்டு தீயொழுக்க முடையவனாயினன். அவ்வொழுக்கத்தால் அவன் பொருளெலாம் இழந்து வறிஞன் ஆயினன். அவன் மனைவி யாகிய நீலி என்பவள் தன் பெற்றோர் இல்லத்திற் சென்று வயிறோம்பி வந்தாள். அப்பார்ப்பனன் அவள் அணிகலன் களைக் கைப்பற்று மெண்ணத்தால் அவள்பாற் சென்று நயம் படப்பேசி இனி அவளோடு நல்லொழுக்க முடையவனாய் வாழ்க்கை நடத்தப் போவதாகக் கூறி அவளைத் தன்னோடு அழைத்துச் செல்பவன், மக்கள் வழக்கற்ற நடுவழியிலே அவளுடைய அணிகலன்களையெல்லாம் பறித்துக்கொண்டு ஆங்கிருந்த பாழ்ங்கிணற்றில் அவளை அவளுடைய குழந்தை யோடு தள்ளிக் கொன்றுவிட்டுப் போயினன்.'

'இனி, அப் பார்ப்பனன்றானே மறுபிறப்பின்கண் செல்வ மிக்க வணிகன் மகனாய்ப் பிறந்து தன் குலத் தொழிலைச் செய்து நிரம்பப் பொருளு மீட்டினன். அவ்வணிகன் ஊழ் வினை யுந்துதலாலே வணிகத் தொழிலின் பொருட்டுப் பழையனூரை எய்தினன். அங்கு வழியிலே அவன் வரவினை எதிர்பார்த்திருந்த நீலியாகிய அப் பேய் தனது பழைய வடிவத்தோடு மகவையுங் கைக்கொண்டு அவனைத் தொடர்வ

வதாயிற்று. அவ்வணிகன் தனக்கொரு காலத்தே பேயினுல் தீங்கு நேரும் என்று கேள்விப்பட்டிருந்தாளுகலின், தன்னைத் தொடர்ந்து வருவது பேயே என்று அஞ்சினன். பேயாகிய நீலி அப் பழையனூர் அறவோர்பால் தன் கணவன் தன்னைக் கைவிட்டுப்போக முயல்கின்ருன், அவனைத் தடுத்து எனக்கு வாழ்வளியுங்கள் என்று வேண்டினள். அவ்வூர் வேளாண் மாந்தர் ஒருங்கு கூடி இவ் வழக்கை ஆராய்ந்தனர். வணிகன் நீலி கூற்றை மறுத்து அவள் பெண்ணல்லள்! பேயே! அதன் பிடியிலிருந்து என்னைக் காப்பாற்றுங்கள் என்று வேண்டினன். அப்பேய் தானும் தன் வழக்கினை அவ்வவையோர் நம்பும்படி கூறி அழுதிரந்தமையால் அவையோர் வணிகன் கூற்றை நம்பாமல் நீலி கூற்றையே மெய்யென்றெண்ணி அவளோடு வாழும்படி அவ்வணிகனை வற்புறுத்தினர். அவ்வணிகன் அவரைநோக்கி யான் இவளுடன் (இப்பேயுடன்) இருப்பேனு யின் இன்றிரவே இவள் (இது) என்னைக் கொன்றுவிடும் என்ருன். அதுகேட்ட அச்சான்ருேர் இவளால் உன்னு யிர்க்குக் கேடு நிகழுமாயின், இவ்வவையிலுள்ள எழுபது வேளாண்மாந்தரும் உயிர் விடுவேங்காண்! நீ அஞ்சாது இவளை ஏற்றுக் கொள்க! என்று தேற்றினர். அற்றை நாளிரவே அப்பேய் அவ் வணிகனைக் கொன்றுவிட்டு மறைந் தொழிந்தது. வழிநாட்காலையில் இச்செய்தி அறிந்த அவ் வேளாண் பெருமக்கள் எழுபதின்மரும் தம் வாய்மை காத்தற் பொருட்டுத் தீயிற் பாய்ந்து உயிர் நீத்தனர்' என்பதே அந் நீலி வரலாருகும்.

இனி இந்தப் பேயின் வரலாறும் அவ்வேளாண் மாந்தர் பெருந்தகைமையும் அக்காலத்திலே நாடெங்கும் பேசப்பட் டிருத்தல் வேண்டும். இற்றை நாளினும் கொடுமைக் குண முடைய பெண்ணை 'ஆ! அவள் நீலி' என்று கூறி இகழும் வழக்க மிருக்கின்றது.

இந்த நீலியையே இந்நீலகேசி ஆசிரியர் தம் நூலின் தலைவியாகத் தேர்ந்து கொண்டனர். சிறந்த ஆர்யாங்களை ஒருத்தியையே இந் நூலுக்குத் தலைவியாகக் கொள்ளலாமே, இப்பேயை அவர் தேர்ந்து கொள்வானேன்? என்னும் வினு சிலர்க்கு எழலாம். அதற்கும் ஒரு காரணம் இருத்தல் கூடும். அஃதாவது :—

ஆருகத சமயத்து நல்லறங்களை எஞ்சாது மேற்கொண் டொழுகிய சிறந்த துறவி யொருவரை இவ்வாசிரியர் நூலின் தொடக்கத்தே படைத்துக்கொள்கின்றனர். 'முனிச்சந்திர பட்டார கன்' என்னும் பெயரையுடைய அப் பெரியார் சினவரன் திரு

மொழியாகிய பரமாகமங்களை ஐயந்திரிபற வுணர்ந்தவராவார்.
அவர் தாம் இக்காப்பியத் தலைவியாகிய நீலகேசியின் ஞானா
சிரியராவார். தமக்கு எல்லையற்ற இன்னலை விளைப்
போரிடத்தும் இனியவே செய்யும் இயல்புடைய விவர் தம்மைக்
கொல்லப் பெரிதும் முயலுகின்ற இந்நீலகேசி என்னும் பேயினை
ஒரு சிறிதும் வெறுக்கின்றிலர். இழிதகவுடைய பேயென்று
அவளை இகழ்தலும் இலர். மேலும் அவள்பால் எல்லையற்ற
அருளுடையராகவும் திகழ்கின்றனர். அறியாமையால் இழி
நிலை எய்திய இப்பேயையும் தமது அருளுடைமை காரணமாக
நல்லறம் கூறி உயர்நிலையில் நிறுத்துகின்றனர். இவ்வாறு
செய்வது ஆருகதர் அறங்களுட் டலைசிறந்த அறமாகும்.
என்னை? இம் முனிச்சந்திர பட்டாரகர்,

*“ஐயுறதல் வேட்கை உவர்ப்பே மயக்கியாது மின்மை*
*செய்குற்ற நீக்கல் திரிந்தாரை நிறுத்தலின்றிப்*
*பொய்யற்ற காதற் பொருவில் அறங்காட்டல் எட்டும்*
*கையுற்ற வாயில் அதுகாட்சியின் மாட்சியாமே”*

என நற்காட்சிக்கு விளக்கம் இவ்வொழுக்கங்களாம் என்று
தாமே கூறும் இலக்கணத்திற்கு இம் முனிவர் பெருமானே
இலக்கியமாகவுந் திகழ்கின்றனர். ஆதலால் இவற்றுள்
செய்குற்றம் நீக்கல், திரிந்தாரை நிறுத்தல், அறங்காட்டல் என்னும்
இவற்றிற்கு ஏற்ற பாத்திரம் ஒன்றைப் படைத்துக் கொள்ளக்
கருதிய இந் நூலாசிரியர் இழிதகைமையுடைய பேயாகிய இந்
நீலகேசியைத் தேர்ந்தெடுத்துத் தம் அருளுக்குப் பாத்திர
மாக்குகின்றனர் என்று கோடல் பொருந்தும் என்று கருது
கின்றேன். மேலும் தமிழ்ப் புலவராகிய இந் நூலாசிரியர்
தமது தமிழகத்தினின்றே தமது காப்பியத் தலைவியைப்
படைத்துக் கோடல் அவர் தம் மொழிப்பற்றிற்கும் நாட்டுப்
பற்றிற்கும் சான்றாகவும் திகழ்கின்றது.

## நூல் நுணுக்கம்

தத்துவநூல் ஓரளவுக்கு அறிவுக்கு விருந்தாக அமைந்
தாலும் இலக்கியங்கள் போன்று சுவையுணர்ச்சி அளித்தல்
அரிதேயாம். தத்துவநூலைப் பெருங்காப்பியமாக நகைமுதலிய
சுவைகள் ததும்ப வியற்று மொருமுறை நம் தமிழ் நூல்களில்
காணப்படுகின்றது. இந்த முறையில் ஒப்பற்ற வெற்றியைக்
கண்டவர் மணிமேகலை ஆசிரியராகிய தண்டமிழ் ஆசான் சாத்த
னாரே யென்னலாம். வாய்மையில் சாத்தனாரின் குறிக்கோள்
பௌத்த சமயத்தத்துவங்களை உலகினர்க்கு உணர்த்த
வேண்டும் என்பதேயாம். இக் குறிக்கோளுடன் அப்புலவர்
பெருமான் இயற்றித் தந்த மணிமேகலை என்னும் பெருங்காப்

பியம் எண்வகைச் சுவையும் பொதுளிப் பயில்வோர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பண்புடையதாகத் திகழ்கின்றது. அந்நூலின் குறிக்கோளாகிய பௌத்த சித்தாந்தம் நந்தமிழகத்தினின்றும் மறைந்தே போயிற்று. அங்ஙனமாகவும் அக்காப்பியமட்டும் தமிழ்மக்களால் நன்கு பயிலப்பட்டுவருகின்றது. அதற்குக் காரணம் அது வறுந்தத்துவ நூலாக மட்டுமிராமல் சுவை கெழுமிய பெருங்காப்பியமாக அமைந்திருப்பதேயாகும். தண்டமிழாசான் சாத்தனார் வழியைப் பின்பற்றியே குண்டலகேசி என்னும் பெருங்காப்பியமும் இயற்றப்பட்டதுபோலும். அக்காவியம் நம்மனோர்க்குக் கிடைக்கப்பெறாமை நமது தவக்குறைவேயாகும். மற்று இந்த நீலகேசிதானும் வறிய தத்துவநூலாக விராமற் காப்பிய நூலாகவே இயற்றப்பட்டிருக்கின்றது. இந்நூலாசிரியர் நாடக வழக்கத்தாலே அரங்கும் அவைக்களமும் வகுத்துக்கொண்டு அவ்வரங்கிலே நீலகேசியையும் அவள் மாற்றுரையும் எதிர் எதிர் நிறுத்திச் சொற்போர் புரிவிக்கின்றார். மேலும், அவ்வுறுப்பினர்கள் மொழி யாண்டும் நகைச்சுவை முதலிய பல்வேறு சுவைகளும் பயந்து கற்போரைப் பெரிதும் மகிழ்விக்கின்றன. இக்காரணத்தால் இந்நூல் ஆருகதரல்லாத ஏனைய சமயத்தவரும் ஆர்வத்துடன் பயிலுதற்குரிய பண்புடையதாகத் திகழ்கின்றது. மேலும் பழைய காலத்து நிகழ்ச்சிகளையும் சமயக் கொள்கைகளையும் யாம் அறியும்போது நமக்குண்டாகின்ற மகிழ்ச்சியும் மிகப் பெரிதாம். நுணுக்கமான உரையாட்டங்களையுடைய இந் நீலகேசி தன்னைப் பயில்வோருடைய புலனை (உணர்ச்சியை) நுண்மாணுழை புலனாக்கி விடுகின்றது.

## நூனுதலிய பொருள்

நமது பாரத நாட்டின்கண் பண்டைக் காலத்தே வழங்கி வந்த பல்வேறு சமயங்களின் திறனாய்வே இந்நீலகேசி மேற்கொண்ட பொருளாகும். இந்நூலாசிரியர் ஆருகத சமயத்தைச் சார்ந்தவரேனும் அவர் காலத்தே வழங்கிய சமய நூல் பலவற்றையும் பயின்று அறிவுக்கடலெனவே திகழ்கின்றார். இவர் தம் அறிவுப் பெருமையை எண்ணுங்கால் எத்தகைய பேரறிஞரும் எற்றோ இவர்க்கு நாம் ? என்று வியவாதிரார்.

இந்நீலகேசி ஆசிரியர் காலத்தே சமயங்கள் கொண்டிருந்த இடத்தை இக்காலத்தே பூதநூலறிவாகிற விஞ்ஞானம் கவர்ந்து கொண்டிருக்கின்றது. பண்டைநாட் சமயக் கணக்கரும் தத்தம் சமயச் சார்பாகப் பூதங்களைப் பற்றிய அறிவும் ஆராய்ச்சியும் உடையவராகவே இருந்தனர். ஆயினும் நமக்குப் புறத்தே விரிந்துகிடக்கின்ற ஐம்பெரும் பூதங்களைப்

பற்றிய அறிவினும் ஆராய்ச்சியினும் யாம் நம்முடைய முன்னோர் களைக் காட்டினும் பலபடி முன்னேறியிருக்கின்றோம் என்பதற்கு சிறிதும் ஐயமில்லை. புறப்பொருளாகிய ஐம்பெரும் பூதங்களைப் பற்றிய அறிவில் நாம் முன்னேறியிருக்குமளவிற்கு நமது பழம் பெருஞ் செல்வமாகிய மெய்ஞ்ஞானச் செல்வத்தை யாம் இழந்து வருகின்றோம். அல்லது புறக்கணித்து வருகிறோம். அஃதாவது, புறத்தே விரிந்து கிடக்கின்ற உயிரில் பொரு ளோடு மிகையாகப் பழகிப் பழகி நாமும் அந்த உயிரில் பொருள் களில் ஒரு பொருளாகப் பரிணமித்து வருகின்றோம். மக்கள் மனதிற்கு இருவகையான போக்குள்ளன. ஒன்று புறவுலகத் திலே விரிந்து பரவுவது ; மற்றொன்று தனக்குள்ளேயே புகுந்து ஊடுருவிச் சென்று ஒடுங்குவது. மக்கள் மனம் தனக்குள் ளேயே மடங்கி ஊடுருவிச் செல்லுங்கால் அஃது எல்லாப் பொருளுக்கும் முதலாயிருக்கின்ற கடவுளையே கண்டு அதனருளில் மூழ்கிப் பேரமைதி பெறுகின்றது. மக்கட் பிறப் பின் பயன் என்று கூறப்படுகின்ற வீடுபேறு என்பதுவும் இப் பேறேயாகும். இனிப் புறத்திலே விரிந்து செல்கின்ற மனமோ செறிந்த இருளிலிருந்து பின்னும் திணிந்த இருளினூடேயே சென்று பேரிருளையே கண்டு திகைக்கின்றது. மனிதனுக் குள்ளேதான் அவனுக்குரிய பேரின்பம் அல்லது, கடவுள் இருக்கின்றது. அவனுக்குப் புறத்தே இருப்பதெல்லாம் வறிய மாயையும் அது தருகின்ற துன்பங்களுமட்டுமேயாம்.

மேலே கூறிய வுண்மைகள் மெய்க்காட்சியாளர்களால் தருக்க முறைப்படி ஆராய்ந்து கண்ட பேருண்மைகளேயாம். இவற்றை யாராலும் மறுக்கவும் இயலாது. இக் காலத்தே வளர்ந்துவருகின்ற இவ்விஞ்ஞான அறிவு மக்கட் குலத்தின் பேரழிவினை மிகமிக அணித்தாகக் கொண்டுவந்துவிட்ட தென்றும், இவ்வழிவிற் படாமல் மக்கள் உய்யவேண்டுமாயின் யாம் மீண்டும் நமது பழைய மெய்ஞ்ஞானத்தை நன்கு மதித்துக் கொணர்ந்து மீண்டும் மக்கள்பால் பரப்பவேண்டும் என்றும் இக்காலத்துப் பேரறிஞர் கூறுவதனையும் கேட்கின் றோம் அல்லமோ ?

மக்களாய்ப் பிறந்த யாமெல்லோருமே இன்புற்றமர்ந்து வாழ்வதையே விரும்புகின்றோம். இன்பமெய்தி இனிது வாழ் வதற்குச் சமயநெறிகளைப் புறக்கணித்த பின்னர்ப் பிறிதொரு வழியுமில்லை. எனவே, இக்காலத்திலே நம் கல்லூரிகளிலே விஞ்ஞானத்திற்குக் கொடுக்குமிடத்தினும் மெய்ஞ்ஞானத் திற்கே சிறப்பிடம் கொடுப்பது இன்றியமையாதாகின்றது. இங்ஙனம் செய்தால் நாடொறும் யாம் இழந்து வருகின்ற

நமது மக்கட் பண்பினையும், இழவாமற் பாதுகாப்பவராவோம் இம் மண்ணுலகத்தையே விண்ணுலகமாக மாற்றி அமைப்ப வரும் ஆவோம். இல்லையேல் யாம் மிகவும் அண்மையிலேயே இந் நிலவுலகத்திலே வெவ்விய நரகவுலகினையே கொணர்ந்து நிலை நாட்டியவராகிவிடுவோம்.

சமய நெறிபற்றி வாழும் மனிதன் மெல்ல மெல்லத் தெய்வமாகப் பரிணமிக்கின்றான். சமய நெறியைப் புறக் கணித்து வாழும் மனிதனே மெல்ல மெல்ல அரக்கனாய் அலகையாய்ப் பரிணமித்து வருதல் ஒருதலை.

இனி, இது நிற்க; மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத பல்வேறு சமயநெறிகளையும் நங்கண்முன் கொணர்ந்து நுணுகி ஆராய்கின்ற இந்நீலகேசி இக்காலத்திற்கு இன்றியமையாத ஒரு சிறப்பு நூலாகும் என்பதில் ஐயமில்லை. ஆதலால், இந் நூலினை உயரிய கல்விகற்கும் மாணவர்கட்குப் பாடமாக்கிப் பயில்விப்பது நாட்டிற்கே நலம் பயக்கும் ஒரு நற்செயலாகும் என்பதில் ஐயமில்லை. இனி இந்நூல் வழிநூலன்று; முதனூலே என்பதனை ஆசிரியர் கூற்றாலேயே யாம் உணர்ந்து கொள் கின்றோம். இந்நூலிற் கூறப்படும் சமயங்கட்கெல்லாம் பிறப் பிடம் வடநாடே யாதல் பற்றிப் போலும் இந் நூலாசிரியர் நீலகேசி சொற்போர் புரியும் அரங்குகளையெல்லாம் வட நாட்டின் கண்ணேயே அமைத்திருக்கின்றனர்.

## கதை நிகழுமிடம்

"மாஞ்சோலை பொங்கி மருதங்கிளிப்பிள்ளைகள் வாய்த் தீஞ்சாறு ஒழுகும் திணையின் அணிதங்கிய 'பாஞ்சாலம்'" என்னும் பலர் புகழ் நாட்டின் தலைநகரம் 'புண்டரவருத்தனம்' என்னும் புகழ்மிக்க நகரத்திருந்தே இக்கதை தொடங்குகின்றது. "அந் நகரத்திருந்து செங்கோல் செலுத்து மன்னவன் சமுத்திர காரன் என்னும் பெயரினன். அவன்றானும் ஆற்றலால் அரிமாவனையான்; ஆணையால் கூற்றமே அனையவன்; குடி போற்றுதலில் தாயேயன்ன பேரன்புடையோன்; பகைவர் திறத்திலே ஊழித் தீயையே ஒப்பான். இவன் ஆட்சிக் காலத்தே நாட்டில் தீயன எல்லாந் தீர்ந்தன. திருமகள் களிநடம்புரியும் ஆடலரங்கேபோற் றிகழ்ந்தது அத்திருநாடு. அம் மன்னவன் கைகள் வறியவர்க்கு வேண்டுவன வழங்குதற் பொருட்டுத் தன்னாட்டைச் சூழ்ந்துள்ள நாற்றிசை நாட்டினும் தனி நீண்டன," என்று இங்ஙனம் இனிதாக இந்நூலைத் தோற்றுவாய் செய்கின்றனர் இப்புலவர்பெருமான். இந் நாட்டில் மருதநிலத்து மாஞ்சோலையில் வாழும் கிளிப் பிள்ளை களின் வாயில் தேமாங்கனியின் தீஞ்சாறு ஒழுகும் என்கின்றார்

ஆசிரியர்; அவர்தம் செய்யுள்களை ஓதுவார் வாயினும் செந்தமிழ்த் தீஞ்சாறு ஒழுகுகின்றது. அத்துணை இனிய செய்யுள்கள் இவர் தம் செய்யுள்கள்.

நாட்டின் வளம், நகரச் சிறப்பு, செங்கோல் வேந்தன் மாண்பு இவற்றையெல்லாம் சுருக்கமாகவே கூறிவருகின்ற புலவர் அப் புண்டரவருத்தனம் என்னும் மாநகரத்தின் சுடுகாட்டிற்கே நம்மை விரைந்து அழைத்துச் செல்கின்றார். பிணம்படும் அப்பெருங்காட்டின் பெயர் 'பலாலையம்' என்பதாம். மக்கள் வாழ்க்கையின் நிலையாமை உணர்ந்தாலன்றி அவருள்ளத்தே மெய்யுணர்வு தோன்றமாட்டாது. மெய்யுணர்வு தோற்றுவிக்க எழுந்த இந்நூலும் அந்நிலையாமையுணர்ச்சியைத் தோற்றுவித்தற் பொருட்டே பயிலுவோர் உளத்தே அவலச் சுவை கெழுமச் சுடுகாட்டினை நன்கு புனைந்துரைப்பதாயிற்று.

## பாலாலையம் என்னும் சுடுகாடு

விண்டு நீண்ட வேய்களும் வாகையும் விரவி, கோளியாலமும் கோழரை மரங்களும் குழுமி நிற்கும் அப்பெருஞ் சுடுகாட்டினூடே தோன்றுகின்றது ஒரு கோவில். பேய்க் கணஞ்சூழ இறைவியாகிய பிடாரியே அங்கு எழுந்தருளியிருக்கின்றாள். இத் திருக்கோயிலின் மருங்கே அச்சமும் ஆர்வமும் துவர நீத்த தூயோனாகிய துறவியொருவன் தன்னந் தனியனாய்த் தவவொழுக்கந் தாங்கி உறைகின்றனன். அவன்றானும் பொறையும் ஆற்றலும் பூமியும் மேருவுமனையான்; சிறைசெய் சிந்தையன்; அந்தமில் பொருள்களைத் தெரிந்தான்; மேலும்,

> "அத்திகாயங்கள் அளவைகளால் அறிவான்
> குத்தியாதிய குணங்களிற் பெரியவன் அரிய
> பத்தின்மேலிரு தவத்தினிற் பவத்தொடர் அறுக்கும்
> முத்தியான்முனிச் சந்திரன் எனும்பெயர் முனிவன்" (கஈ)

என இத்துறவியை ஆசிரியர் நமக்கு அறிவுறுத்துகின்றார்.

ஒரு நாள் அப் பலாலையத்துள்ள கோயிலின்கண் அந்நகர மாந்தர் சிலர் தமது பராவுக்கடன் தீர்த்தற் பொருட்டு அங்கு உயிர்ப்பலியிட வேண்டிப் பலி ஆடுகளுடனே வந்து அத் தெய்வத்திற்குத் திருவிழாத் தொடங்குவாராயினர். அருணிரம்பிய அத்துறவி இக்கொடிய காட்சியைக் கண்டு உளந்துடித்தார். தாமே வலிய அம்மாந்தர்பாற் சென்று, மக்காள்! இவ்வெளிய ஆடுகளை ஈண்டு ஏன் கொணர்ந்துள்ளீர்? என்று வினவினர். அதுகேட்ட அம் மாந்தர் "பெரியீர்! உதோ நிற்கின்ற இவ்விளமடந்தை மகப்பேறு இலளாயினள். யாங்கள் அக்குறையை இத்தெய்வத்தின்பாற் கூறி இவளுக்கு

மகப்பேறளிக்க வேண்டும் என்று வேண்டினோம். அங்ஙனமே அவள் ஒரு குழவியையும் ஈன்றெடுத்தாள். யாம் வேண்டியாங்கு இத்தெய்வம் எமக்கு அருள் கூர்ந்த தன்றோ? ஆகவே யாங்கள் அத்தெய்வத்திற்கு இறுக்கவேண்டிய பராவுக்கடனை இறுத்தற்கே இந்த ஆடுகளை இங்குக் கொணர்ந்துள்ளோம்'' என்று அவலம் சிறிதுமின்றி உரைத்தனர். அதுகேட்ட அம் முனிவர் பெருமான் ஆற்றல் மிக்க தமது அருளுரையாலே ''தெய்வங்களுக்கு உயிர்ப் பலியிடுதல் மிகவுந் தீவினையாகும். தீவினை செய்தார் கெடுதல் திண்ணம். நீங்கள் பலியிட்டே தீர வேண்டின் மண்ணால் ஆட்டுருவஞ் செய்து கொணர்ந்து அதனைப் பலியிடுமின். அச் செயலால் இத்தெய்வந்தானும் பெரிதும் மகிழும். நீங்களும் பாவமும் பழியும் எய்த மாட்டீர்'' என்று இன்னோரன்ன அறிவுரை பல கூறிப் பின்னரும்;

**''கோறல் பொய்த்தல் கொடுங்களவு நீக்கிப் பிறர்மனைகண் மேற் சேறலின்றிச் செழும் பொருண் மேற் சென்ற சிந்தை வேட்கையினை ஆறுகிற்பின் அமருலகம் நுங்கட்கு அடியதாம்''** என்று நீறும் ஓடும் **நிழன் மணியும் பொன்னும் நிகராநோக்கும்** அம் முனிவர் பெருமான் ஆகூழ் தலைப்பட்ட அம்மாந்தர்க்கு அறவுரையும் கூறி அந்த ஆடுகளையும் அம்மாந்தரையும் உய்வித்துப் போக்கினன்.

வடவாரியர் வேள்விக் களத்திலே தெய்வங்கட்கு உயிர்ப் பலியீயும் புன்மையைப் பொறுமல் அவர் தம் வைதிக நெறியை எதிர்த்துத் தோன்றிய சமயங்களே புத்த சமயமும் சமண சமயமுமாம். நந்தமிழகத்திலும் ஆசிரியர் திருவள்ளுவனாரும்,

*''அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்*
*உயிர்செகுத் துண்ணாமை நன்று''* (உ௫௯)

என்னுந் திருக்குறளால் அம் முறையினை மறுத்தமையும் உணர்க.

முனிச்சந்திர பட்டாரகன் அறவுரைகேட்டு ஆடுகளைப் பலியிடாமல் அந்நகரமாந்தர் சென்றவுடன் அப் பெருங்காட்டிலுறைகின்ற பேய்கள் எல்லாம் ஓரிடத்தே குழுமின; இத் துறவியின் செயல் அடாச் செயலேயாகும். நமக்கெல்லாம் இனி ஊன் உணவு இல்லையாம்படி பெருங்கேடு சூழ்ந்து விட்டான். இனி ஒரு நொடியும் இத்துறவியை இக்காட்டில் இருக்கவிடக் கூடாது. ஆனால் அவனோ மிகப் பெரிய தவவாற்றல் உடையவனாய்க் காணப்படுகின்றான். யாம் அவனை அணுகின் அவனுடைய தவத் தீயே நம்மைச் சுட்டுச் சாம்பலாக்கி விடும்; பின் என் செய்தும்......?

எனப் பேய்கள் தம்முள் நீளநினைந்து ஒரு முடிவுக்கு வந்தன. அஃதாவது:—யாம் நாடெங்கணுஞ் சென்று வன்பேய்

ஒன்றினைக் கண்டுபிடித்து அப் பேயைக் கொணர்ந்தே இத் துறவியைத் தொலைக்கவேண்டும் என்று துணிந்தன. துணிந் தவாறே அப்பேய்கள் நாற்றிசை நாடுகளினும் அத்தகைய வன்பேயைத் தேடித் திரிந்தன. யாண்டும் காணப்படாமை யால் தென்றிசையினும் புகுந்து தேடின. தொண்டை மண்டலத்தில் பழையனூர்த் திருவாலங்காட்டினுள் உறைந்த நீலி என்னும் நீலகேசியாகிய மாபெரும் பேயைத் தலைப்பட்டு முனிச்சந்திர பட்டாரகன் தமக்கிழைத்த கேட்டினை விரிவாகக் கூறிக் கோவென்று கதறி அழுதன.

பேயினங்கட்கு அஞ்சாமல் அவற்றிற்கே உரிய சுடுகாட்டிற் புகுந்திருந்து ஒரு பேதைத் துறவி அவற்றிற்குங் கேடு சூழ்ந் தான் எனக்கேட்ட அப்பெரும்பேய் பெரிதும் சீற்றமடைந்து "பேயீரே! பேதையர் போன்று இனி அழுவதால் யாதுபயன்! இப்பொழுதே புறப்படுமின்! அவ்வெளிய துறவியையே பலியிட்டு அவன்றசையைக் கழுகுண்ணச் செய்குவல். என் னோடு வம்மின்!'' எனப் புறப்பட்டுப் பலாலையத்தை எய்தியது.

பலாலையம் புகுந்து அம் மாபெருந்துறவியை அணுகிய பொழுது அவனை அணுகின் அவன் தவநெருப்புத் தன்னையும் எரித்தொழிக்கும் என்று அந் நீலகேசியும் அஞ்சுவாளாயினள். புறத்தே நின்று எண்ணிறந்த மாய வன்செயல்களாலே அவனை அச்சுறுத்தத் தொடங்கினள். உன்னைப் பிய்த்தெறிவேன் என்று உரப்பினள். அச்சந்தரும் பல்வேறு உருவங்கொண்டு எதிர் சென்றாள். இந்நெடிய மலையுச்சியினின்றும் ஏடா நின்னை இப்போதே உருட்டுவேன் பார்! என்றாள்.

இச் செயலெல்லாம் இழிதகவுடைய நீலகேசி என்னும் பேய்மகள் செயலே என்று அம்முனிவர் பெருமான் தன் ஓதி ஞானத்தால் உணர்ந்தனன். மிகுதியால் மிக்கவை செய்யும் இப்பேயைத் தன் தகுதியாலே வென்றிடவெண்ணி வாளா அமைந்திருந்தனன். அம் முனிவனுடைய அமைதியே தன்னைத் தோற்பித்தமையுணர்ந்த நீலகேசி அவன் தவப் பெருமையைத் தானே வியந்தவளாய், இவ்வச்சந் தருகின்ற வெவ்வினைகட்கு இவன் அஞ்சுவானலன். இனி இன்னோரன்ன செயல்களை விடுத்துப் பேரழகுடைய பெண்ணுருக் கொண்டு இவன் எதிர் சென்று இவனைக் காமுறப் புரியின் ஒரோவழி இவன்றவநிலை குலைதலுங் கூடும் என்று எண்ணினாள்.

புண்டரவருத்தனத்துப் புரவலனாகிய சமுத்திரசாரன் என்னும் முடிவேந்தனுக்கு ஒரு மகள் உளள். அழகிற்கு அவளுக்கு நிகரானவர் மூவுலகினும் இல்லை. கன்னிகையாகிய அவள் பெயர் காமலேகை என்பதாம். அந்தக் காமலேகையின்

உருவங்கொண்டாள் நீலகேசி, பேய்களைத் தோழிமுதலிய பரிசனங்களாகவும் உருவங்கொள்வித்தனள். அக்காட்டிலுறையும் இறைவிக்குப் பராவுக்கடன் செலுத்த மலர்மாலையும் சாந்தமும் புகைப்பொருளும் பிறவும் பேயாகிய அத்தோழிமார் கையிலேந்தித் தன்னைத் தொடர்ந்துவர அக்காமலேகை வருமாறுபோல நீலகேசி அம்முனிவரன் முன்பெய்தினள், அவனடிகளில் வீழ்ந்து வணங்கினள். இம் மாயமெல்லாம் அறிவானேனும் அறியாதான் போன்று, "நங்காய்! நீயார்? இந்நள்ளிரவில் மக்கள் வழக்கற்ற இப்பேய் வனத்தில் ஏன் வந்தனை?" என்று வினவினன். அதுகேட்ட அவ்வணங்கு தன் கண்களிற் காமப் பண்பு கனிந்தொழுக நாணியும் கோணியும் நின்று கிளிமிழற்றினாற்போல மழலைமென்மொழிகளால். "பெரியீர்! அடியேன் இந்நாட்டு மன்னன் மகள், காமலேகை. என்றந்தைமேல் பகைவர் போரிடுதற்கு வாரற்க! என்று இங்குறையும் இறைவியை வேண்டியிருந்தேன். அத்தெய்வத்திற்குப் பராவுக்கடன் செலுத்தவே இங்குற்றேன்; நல்வினைப்பயனாக அடிகளையும் கண்டேன்!" என்று கூறி வலம் வந்து வணங்கினள். தோழிமாரையெல்லாம் கண்ணாற்கூறி அகலப் போக்கித் தமியளாய் நின்று அவன் நோக்குங்கால் தான் நிலனோக்கியும் நோக்காக்கால் தானோக்கியும்,

"தோடுகொண் டொருசெவி விளங்கத் துளங்குவ மகரமொன்றுடப்
பாடுவண் டொடுகரும் பரந்தப் பல்கலம் வயிரவில் வீச
ஆடுகொம் பனையவள் உரைக்கும் அச்சமோ பெரிதுடைத்தடிகள்
காடுகண் டாற் பிறர்க்கறியேன் கவற்றுவ தொக்குமீ தெனக்கே"

என மாயக் காமலேகை அம்முனிவன்பால் பேசத் தொடங்குகின்றாள்.

சுவையற்ற தத்துவ ஆராய்ச்சியே செய்யப் புகுந்த இந்நூலாசிரியர் அதனை விடுத்து முதற் சருக்கத்திலே இவ்வாறு காமச்சுவை பொதுளப் பாடி இந்நூலைப் பயில்வோர் உள்ளத்திலே சுவை நிரப்பும்படி செய்து விடுகின்றார்.

இப் பகுதியைப் படிக்கும் பொழுது இப் புலவர் பெருமான் சிந்தாமணியும் சூளாமணியும் போன்ற காப்பிய நூல் ஒன்று இயற்றியிருப்பின் அந்நூல் எத்துணைச் சுவையுடையதாக இருக்கும் என்று எண்ணி ஏங்குகின்றோம். இது நிற்க; முனிவரோடு பேசுதற்குப் பிறிதொன்றில்லாமையால் "அடிகளே! இத்தகைய காட்டினைக் கண்டாற் பிறர்க்கெல்லாம் எவ்வாறிருக்குமோ யான் அறிகின்றிலேன் யானோ மிகமிக அஞ்சுகின்றேன்" என்று ஏதோவொன்றைப் பற்றிப் பேசுகின்றாள். முனிவனும் அவளைக் காமலேகையாகவே நினைப்பவன் போன்று "நங்காய்! வாய்மையே நீ கூறுவது. நீயோ மன்னன் மகள் என்கின்றனை

அங்ஙனமாயின் நீ அணிநகை ஆயமொடு ஆடி அரண்மனையில் அரும் பெறற் சுற்றமோடிருப்பதே நன்றும். இதுவோ பிணி மிகு பேய்வனம். இதனுட்புகுந்த மாந்தர் பேதுறுதல் ஒரு தலை. துணிவொடு துறந்தவர்க்கல்லால் பிறர் இதன்கண் துன்னுதல் அரிதேகாண் !''

இவ்வாறு துறவி அவளுக்கு மறுமொழி கூறும் பொழுதே அவள் தனது காமநோய் அத்துறவிக்குப் புலப்படும்படி பற்பல இங்கிதங்கள் செய்தவளாய் அஞ்சினுள் போன்று கண்ணீருகுத்து அதனையும் பூந்துகிலாற்றுடைத்து "அடிகாள்! இப்பிறப்பு வேதனை பெரிதுடைத்து. இஃதொழிவதாக!'' என்று வாழ்க்கையையே வெறுத்து உயிர்விடத் துணிந்தவள் போன்று நடிப்பாளாயினள்.

அந்த மாயக் காமலேகை காமக் குறிப்புக்கள் பல காட்டி "அடிகாள்! இப்பிறப்பு வேதனை பெரிதுடைத்து'' என்று கூறியதன் பொருளை அம் முனிவன் நம்மினும் நன்குணர்வான். உணர்வானேனும் அவள் கருத்தினை உணராதான் போன்று அவள் கூற்றிற்கே தனது பெருந்தகைமைக் கேற்ப மற்றொரு பொருள் கற்பித்துக்கொண்டு அவளை நன்னெறிப்படுத்தவே முயல்கின்றனன். அஃதாவது - பிறப்பு வேதனை பெரிதுடைத்து என்னும் அவள் கூற்றிற்குப் பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம் ஆதலால் யான் இனிப் பிறவாமையை வேண்டுகின்றேன் என்று கூறினுள் எனப் பொருள் உணர்ந்தான்போல், அவள் கூற்றையே தலைக்கீடாகக் கொண்டு மெல்ல மெல்ல அப் பேய்ப் பெண்ணிற்கு நல்லறம் பல அறிவுறுத்தத் தொடங்குகின்றுன். அப்பெண் காமலேகையல்லள் என்பதும் நீலகேசி என்னும் பேய்ப் பெண்ணே என்பதும், அவள் தானும் ஆகூழ் வயப்பட்டு உய்ந்து கரையேறும் தகுதியுடையாள் என்பதும் அம் முனிவன் ஓதிஞானத்தாலுணர்ந்துளான் ஆகலின் அவன் அறங் கூறத்தொடங்கல் மிகையன்றென்க.

## சமண சமயத்தோர் நல்லறங்கள்

பல்வேறு சமயங்களை மறுக்கப்புகுந்த இவ்வாசிரியர் தாம் மேற்கொண்டொழுகுகின்ற சமண சமயத்து நல்லறங்களையெல்லாம் தெளிவாகவும் சுருக்கமாகவும் தருமவுரைச் சருக்கம் என்னும் முதற் சருக்கத்திலேயே நம்மனோர்க்கு அறிவுறுத்திவிடுகின்றனர். இச்சருக்கத்தால் யாம் சமணர் தம் அறக்கோட்பாடுகள் இவை இவை என்று ஐயந்திரிபற உணர்ந்து கொள்கின்றோம்.

*"பிறப்பின்றை தெள்ளுணரும் பேரறிவினாரை*
*உறப்புணர்க எம் நெஞ்சு''*

என்று வேண்டினர் ஒரு சமணப் பெரியார். பிறப்பின்னு தென்றுணர்வார்க்கன்றி ஏனையோர்க்கு மெய்யுணர்வின்கண் மனஞ் செல்லாது. இக்காரணத்தால் சமணப்பெரியார் நூல்கள் பலவும் பிறப்பின்னுமையையே பாரித்துப் பேசுகின்றன. சீவக சிந்தாமணியினும் சூளாமணியினும் இன்னோரன்ன பிற நூல்களினும் இந்த முறை மேற்கொள்ளப்பட்டிருத்தலைக் காணலாம். இந் நூலாசிரியரும் அந்த முறைப்படியே உயிர்கள் இருள்சேர் இருவினை வழிப்பட்டு மக்கள் தேவர் நரகர் விலங்கு என்னும் நால் வகைப் பிறப்புக்களினும் வீழ்ந்து படுகின்ற துன்பங்களையெல்லாம் பயில்வோரும் வெருவுமளவிற்கு விரித்து விளம்புகின்றார்.

இங்கு நமது ஆராய்ச்சிக்குரிய செய்தி யொன்றுளது, அஃதாவது சமண புத்த சமயங்கள் தமிழகத்திற் புகுவதற்குப் பல நூற்றாண்டுகட்கு முன்பே (இடைச் சங்க காலத்திலேயே) தோன்றியதென்று கூறப்படுகின்ற தொல்காப்பியத்தில் எண்ணிறந்த உயிரினங்களையும் அறிவு வகையால் ஆறு கூறு படுத்திக் கூறக் காண்கின்றோம். அவை ஒன்றறிவுயிராகிய புல்லும் மரமும் முதலாக ஆறறிவுயிராகிய மக்கள் ஈறாக வுள்ளவைகளாம். இந்த முறையை ஆருகதர் தமது சமய சித்தாந்தம் போலவும் கூறுகின்றனர். இக் கொள்கையின் சிறப்பினைக் கருதி அச்சமயச் சான்றோர் இம் முறையைத் தம் முறையாகத் தழுவிக் கொள்கின்றனர் என்றே கருதுதல் வேண்டும். இந் நூலாசிரியர் தாமும் நந்து முரள் முதலியன இரண்டறிவினவே எனத் தொல்காப்பியர் சொல்லைப்பொன்னே போற் போற்றிக்கொள்ளுதலும் காண்க. தொல்காப்பியர் ஆருகதர் அல்லர் என்பதற்கு அவர் நூலிலேயே அகச் சான்றுகள் பற்பல காட்டலாம். ஆயினும் இந் நூலுரையாசிரியர் தொல்காப்பியரை ஆருகதர் என்றே கருதும் கருத்துடையர் என்பதனை அவர் உரையில் காணலாம். இது வரலாற்று நூலோரால் ஆராய்தற்குரிய தொன்றாகும்.

தீவினைசெய்த உயிர்கள் நரகத்திற்கிடந்துழலும், நல்வினை செய்த உயிர்கள் துறக்கத்திற் புகுந்து இன்புறும் என்னுமிக் கொள்கை பெரும்பாலும் எல்லாச் சமயத்தாராலும் மேற் கொள்ளப்பட்ட கொள்கையேயாகும். ஆயினும் இத்துறக்க நரகவுழற்சிகள் பெரிதும் கற்பனை வகையாற் கூறப்பட்டனவே என்று கோடலே பொருத்தமாகத் தோன்றுகின்றது. அச்சமே கீழ்களது ஆசாரம் என்பது பற்றி மாந்தரை அச்சுறுத்தியேனும் நன்னெறியிற் செலுத்தவேண்டும் என்று கருதியே பண்டை நாட் சான்றோர் இவ்வாறு மிகையாக இவற்றினியல்புகளைப் புனைந்து கூறினர் போலும்.

## திரியோக மருந்து

இந் நூலாசிரியரும் ஏனைய ஆசிரியர்போலவே இவற்றை அச்சச் சுவைகெழும விரிவாக ஓதுகின்றனர். காமலேகை "அடிகாள்! பிறப்பு வேதனை பெரிதும் உடைத்து" என்றதனையே தோற்றுவாயாகக் கொண்டு நால்வேறுவகைப் பிறப்புக்களையும் அவற்றில் உயிர்கள் படுகின்ற துன்பங்களையும் எடுத்துக் காட்டி, "நங்காய்! உயிர்கள் அறியாமை காரணமாக உறுகின்ற பிணிகளையெல்லாம் ஒருசேரத் தீர்த்தற்குரிய மருந்து முளது; அஃதொரு கூட்டுமருந்து காண்!" என்று தொடங்கிச் சைன சமய சித்தாந்தமாகிய **நன்ஞானம் நற்காட்சி நல்லொழுக்கம்** என்னும் இவற்றினியல்புகளையெல்லாம் நீலகேசிக்கு மிகவும் விளக்கமாக விரித்துரைக்கின்றனர்.

## நன்ஞானமும், பொருள்களும், அளவைகளும்

"நங்காய் கேள்! உயிர் முதலிய உள்பொருள்களின் இயல்புகளையெல்லாம் ஐயந்திரிபற உள்ளவாறே அறிந்துகொள்ளலே நன்ஞானம் எனப்படும். இவ் வுள்பொருள்களின் இயல்பை உள்ளவாறே உணர்தற்குக் 'காண்டலும்' 'அல்லதும்' என இருவகை அளவைகள் உள்ளன. அவற்றுள் காண்டல் என்பது, மனத்தாற் காண்டலும் பொறிகளாற் காண்டலும் என இருகூற் றறுவகைப்படும். இனி அல்லதும் என்ற அளவைதானும், நினைவு மீட்டுணர்வு ஊகம் கருத்து நூல் என ஐந்து வகைப்படும். மேலும் வைப்பு நயன் அளவை புகுவாயில் என வேறுசில அளவைகளும் உள; இவையிற்றை வியாபி அளவை என்று கூறுவர். ஈண்டுக் கூறப்பட்ட அளவைகளாலே திரிபின்றிப் பொருளியல்புணர்தலே நன்ஞானமாம்.

## நற்காட்சியும் அதனுறுப்புக்களும்

"மன்னவன் மகளே! இனி நற்காட்சியினியல்பும் அதன் உறுப்பும் கூறுவேம் கேள்! நன்ஞானத்தால் உயிர் முதலிய எண்வகைப் பொருள்களையும் மேற்கூறிய அளவைகளால் ஐயந்திரிபற வுணர்ந்து அப் பொருள்களின் மேற் பரந்து சென்ற இன்பமயமான காட்சியே நற்காட்சி எனப்படும்.

நற் காட்சியை 'உலகமூடம், பாசண்டிமூடம், தெய்வமூடம்' என்னும் மும்மூடங்களும் அழித்துவிடு மியல்புடையன. இம் மூடங்கள் மூன்றிற்குந் தப்பி, **காமம் அச்சம் அவா உலகியல் பிற சமயக் கணக்கர் போலித்தலைவர்** என்னுமிவற்றினும் தப்பி, **ஞானம் பூசை குலம் சாதி பலம் இருத்தி தவம் உடல்** என்னும் இவற்றுற் தருன்றும் எட்டுவகைச் செருக்கினும் நீங்கி நிலைத்தல் நேற்காட்சிக்கு இலக்கணம் என அறிவாயாக!

## நற்காட்சியின் மாட்சி

இன்னும் இந் நற்காட்சியின் உறுப்புக்களையும் ஓதுவேம் கேள்! இறைவன் திருவாய் மலர்ந்தருளிய பரமாகமத்திற் கூறப் பட்ட பொருள்களை ஐயுருமையும், இம்மை வாழ்வில் வேட்கை யுருமையும் மெய்த்துறவோர் உடம்பினைக்கண்டு வெறுப் புருமையும் நட்பு, புகழ் முதலியவற்றால் மயங்காமையும் பிறர் குற்றங்களை அகற்றலும் அறத்திற்றிரிந்தாரை அறிவுறுத்தி திறுத்துதலும், யாவர் மாட்டும் மெய்யன்பு கோடலும், மாந்தர் அறியாமையைப் போக்கி நல்லறங்களை அறிவுறுத்தலும் ஆகிய இவையெல்லாம் நற்காட்சிக்கு மாட்சி தரும் உறுப்புக்கள் என்றுணர்க!

## நல்லொழுக்கமும் அதன் மாட்சியும்

காமலேகாய்! முன் கூறிய நன் ஞானத்தோடும் நற் காட்சியோடும் இரண்டறக் கலந்து தீதொரீஇ நன்றின்பாற் செல்வதே நல்லொழுக்கம் எனப்படும்.

"போற்றல் செறிவே பொறையாதிய நல்லறமும் ஏற்ற நினைப்போடு இருசார் விழுத்தவமும் ஆற்றல் பரிசை முதலாகிய அன்னவெல்லாம் மாற்ற மறுக்கும் ஒழுக்கத்தின் மாட்சியாம்."

(குறிப்பு:-இவற்றின் விளக்கம் உரைக்கிடையிற் காண்க.)

பெருந்தகைப் பெண்ணே! இம் மூன்றும் ஒருசேரக் கூடிய கூட்டமே முக்கூட்டு மருந்தென்று கூறப்படும். இக் கூட்டு மருந்தினை உட்கொண்ட உயிர்கள் மேனிலை உலகிற் றேவராயும், நிலவுலகில் மன்னர் முதலியோராயும், நல்லின்பங் களை நுகர்ந்து தீவினையைச் சேர்தலின்றி, இறுதியில் ஒப்பற்ற கடையில்லாத பேரின்பப் பெருவாழ்வில் நிலைபெறுவர் காண்! என்று நல்லறம் பலவும் அறிவுறுத்து அந் நீலகேசியைத் தூய்மை சான்ற துறவிப் பெண்ணாகவும் செய்துவிட்டனர், அம் முனிச்சந்திர பட்டாரகன் என்னும் பெரியோர்.

## நீலகேசியின் நன்றியுணர்வு

காமலேகையாய்க் கட்டழகியாகி வந்து காமக் குறிப்புக்கள் பல காட்டினாளேனும் நீலகேசி தீவினைப்பயனாகிய பேய்ப் பிறப் புற்று நீண்டகாலம் பிறப்பின் துயரத்தை நுகர்ந்து அவற்றை நன்குணர்ந்த உள்ளமுடையவளே ஆவள். ஆகவேதான் முனிவர் பெருமான் இவள் பிறப்பின்னுமை யுணர்ந்த பெற்றியளாய் மெய்யுணரும் தகுதியுமுடையவள் என்பதனைத் தமது ஓதிஞானத்தால் உணர்ந்தே இந் நல்லறங்களை அவளுக்குச் செவியறிவுறுத் தருளினர் என்றுணர்தல்

வேண்டும். முனிவர் செயல் பயனில் செயலாகவில்லை. முழுப் பயனும் உடைய நற்செயலே ஆயிற்று.

> ''இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
> யொழுக்க முடையார்வாய்ச் சொல்'' (சகரு)

என்னும் வள்ளுவர் பொன்மொழிக் கிணங்க அவ்வறமெல்லாம் நீலகேசியின் நெஞ்சத்தே பசுமரத்தாணிபோலப் பதிந்து அவட்கு அப்பொழுதே அமைதி தருவனவாயின. அவை அங்கணத்துக்க அமிழ்தமாகாமல் அவள் நெஞ்சத்தே பெரும் பயன் விளைத்தன.

> ''உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
> பாத்தியு ணீர்சொரிந் தற்று'' (குறள் - எகஅ)

என்னும் பொன்மொழிக் கிணங்க நீலகேசி நெஞ்சத்தே மெய் யுணர்வென்னும் பைங்கூழ் தழைப்பதாயிற்று. அம் முனி வனுக்குத் தான் தொடக்கத்தே இயற்றிய இன்னலை நினைந்து பெரிதும் கழிவிரக்கங்கொண்டாள். நெஞ்சார அத்தூயோனை வாழ்த்தி வணங்கினள். அவனுடைய சான்றாண்மைக்கு எல்லையே இல்லை என்றுணர்ந்தாள். அவனடிகளில் வீழ்ந்து பிழை பொறுக்க வேண்டுகின்றாள் :

> காய்வ செயினுங் குழவிக் கட்கவன்று
> கழிகண் ணோட்டத்தாற்
> றாய்தன் முலையி லமுதூட்டுந் தகையன்
> அறவோன் றனென்று
> மாயவுருவ மாறித்தன் மற்றை
> யுருவ மேற்கொண்டு
> பேயேன் செய்த பிழையெல்லாம் பெரும
> பொறுவென் றிறைஞ்சினள். (கஉஎ)

இவ்வாறு வேண்டிநின்ற அந்நீலகேசி எய்திய உயர்நிலையை இப்புலவர் பெருமான் மிகமிக அழகாக விளம்புகின்றார்; அது வருமாறு :—

> ''மெழுகுருகு மண்பாவை மேதையான் காய்த்தி
> யொழுகுருகு செம்பொன்னால் உண்ணிறைந்த தேபோற்
> புழுகுருக மெய்காட்டிப் பொல்லாத போக்கி
> அழகுருவு கொண்டாள் அறவமிர்த முண்டாள்''

என்பது அவர் தம் பொன்மொழி. ''சிற்பப் புலமையுடையா னொருவன் மெழுகாலியன்று மண்பூசப்பட்ட உருவத்தைக் காய்ச்சிய பொற்குழம்பா னிரப்பிப் பொற்பாவை யுருவரச் செய் தாற் போன்று அம் முனிவன் நீலகேசியின் பழம் பிறப்பை அகற்றிப் புதுப் பிறவி நல்கினான்,'' என்னும் இவ்வுவமை எண்ணுந்தோறும் இன்ப நல்கும் சிறப்புடைத்தாதல் உணர்க.

இவ்வாறு மேனிலை யெய்திய அந்நீலகேசி அம்முனிவனைப் பாராட்டிப் பேசுகின்ற மொழிகள் உள்ளமுருக்கும் பண்புடையனவாகும். இறுதியாக அவள் அவ்வாசிரியப் பெருந்தகையைப் பணிந்து, "பெரியோய்! தீவினையாட்டியாகிய அடிச்சி உய்தற்குரிய வழியெல்லாம்,' உரைத்தருளினை. அதன் மேலும் உயிருள்ளிட்ட பல பொருளும் உணர்த்தினை; நைதல் இல்லாத் தெளிவோடு நன்ஞானம் நானுங் கொண்டேன். நற்குணமெல்லாம் பெய்துதந்தாய்; ஆயினும் அடிச்சி நெஞ்சிலொரு குறைகிடந்து உறுத்துகின்றது. நினக்கு யான் தொடக்கத்தே செய்த பிழை என்னைப் பெரிதும் துன்புறுத்துகின்றது. அதற்கொரு தீர்வும் கூறியருள வேண்டும்," என்றிரந்து நின்றாள். அதுகேட்ட அம்முனிவன், "ஆயின் அதற்கொரு தீர்வு கூறுவேன் கேள்! நீ செய்த அத்தீமை கெடுதற் பொருட்டுக் கடல்சூழ்ந்த இந்த நாடெங்கணுஞ் சென்று மக்கட்கெல்லாம் யாம் நினக்குரைத்த அருகன் திருவறத்தை அறிவுறுத்தி இவ்வுலகினை உய்யக் கொள்ளுதி! இதுவே அதற்குத் தீர்வாகும்," என்று பணித்தான்.

அதுகேட்ட நீலகேசி பெரிதும் அகமகிழ்ந்து அடிகள் பணித்தவாறே செய்குவன்! என்று கூறி அவ்வாசிரியன்பால் விடைகொண்டு வெள்ளிப்பெருமலைமேல் விளங்குகின்ற 'சித்த கூட சைத்தியாலயம்' என்னும் அருகன் திருக்கோயிலை எய்தி வலம் வந்து அவ்விறைவன் புகழ்பாடி ஏத்தி இறைஞ்சினள்.

இங்கு நீலகேசி அருகனை வாழ்த்துவதாக வருகின்ற செய்யுள்கள் மிகவும் பேரின்பம் நல்கும் பண்புடையனவாகும். அவற்றையெல்லாம் நூலிற் கண்டோதி இன்புறுக.

இறைவனை ஏத்தி இறைஞ்சிய பின்னர் அப்பேராசிரியை உலகின்கண் நிலவும் புன்னெறிதாம் பற்பலவாம். அவற்றுள் யான் முற்படச் சொற்போரிட்டு அடர்க்கப் பாலதாகிய சமயம் யாது? என்று நெடிது சிந்தித்து, உயிர்கட்கு அருள் மிகவுடையேம் என்று வாய் கிழிய அறங் கூறிக்கொண்டே அவ்வுயிர்களின் ஊனைத் தின்னல் குற்றமன்று என்று கூறுகின்றவரும், வீட்டின்பம் உளதென்று கூறிக்கொண்டே அவ்வின்பம் எய்துதற்குரிய உயிரை இல் பொருளென்று கூறுகின்றவரும் கணிகையர் போன்று வஞ்சம் பலபேசி மக்களைக் கெடுக்கின்றவரும் ஆகிய பௌத்தருடைய சமயமே யாம் முற்பட வென்றழித்தற்குரிய சமயமாகும் என்று துணிந்தனள். துணிந்த பின்னர்த் தனது அவதி ஞானத்தால் உலகெலாம் நோக்கினள். நோக்கியவள், 'காம்பிலி' என்னும் நாட்டின்கண் அரசன் அரண்மனை முன்றிலிலே தன்னோடு வாதிடவல்லாரை அறைகூவி அழைத்தற்கு அறிகுறியாக நாவற் கிளையை நட்டுவைத்தும் தன்னோடு

வாதிட வருவாரில்லாமையால் செருக்கோடு நிற்கின்ற 'குண்டலகேசி'யைக் கண்டனள். நன்று நன்று இவளோடு யான் சென்று போர் புரிவல் என்று கருதி ஒரு தவப்பெண் வடிவங்கொண்டு வான் வழியாகச் சென்று காம்பிலி நாட்டரண்மனை முன்றிலை யடைந்தனள்.

இங்கு நீலகேசியின் உட்கோளாக வருகின்ற இக்கருத்தே ஆசிரியர் கருத்தென்பதை அறிதல் வேண்டும். புத்த சமயத்தின் பொல்லாங்கினை இவ்வாசிரியர் ஈண்டுத் திறம்படச் சுருக்கிக் கூறியிருக்கின்றனர்.

## குண்டலகேசியும், நீலகேசியும்

சொற்போர் புரிபவர் தம்மோடெதிர்வாரை வலிந்தழைத்தற்கு அறிகுறியாக அரண்மனை முன்றிலில் நாவற் கொம்பினை நட்டு அவர் வரவினை எதிர்பார்த்திருப்பர் என்பதும், இவ்வாறு நாவற் கொம்பு நட்டவழி அவரைச் சொற்போர் புரிந்து வெல்வார் வருந்துணையும் அரண்மனையும் கதவுகள் திறக்கப் படா என்பதும் பகைமன்னரோடு போர் புரியும் அரசர்கள் தம் நால்வேறு படைகளையும் நிரனிரலாக அணிவகுத்துப் போர் தொடுக்குமாறு போன்றே சொற்போர் புரிவோரும் தாம் மேற்கொண்டுள்ள சமயத்தின் 'தலைவரும்' அவர் செய்த 'நூலும்' அந்நூல் நுதலிய 'பொருளும்' அப்பொருள்களின் 'நிகழ்ச்சியும்' என நால்வகையாகக் கூறுபடுத்திக்கொண்டு அவற்றுள் சொற்போர்க்குப் பொருளாக நிரலே ஒவ்வொன்றையே எடுத்துக்கொண்டு அதுபற்றியே போர்புரிய வேண்டும் என்பதும், இத்தகைய போர் நிகழ்ச்சிகளை மன்னர்கள் தம்மரசவையின் கண்ணேயே இடமளித்துக் கண்டு களிப்பர் என்பதும் சொற்போரிற் றோற்றவர் இகழப்படுவர் என்பதும், வென்றவர் சிறப்புச் செய்யப்படுவர் என்பதும் மாந்தர் வென்றோருடைய சமயத்தைத் தழுவுவர் என்பதும், இன்னோரன்ன பண்டைக் காலத்துச் சொற்போர் மரபுகளை, குண்டலகேசி வாத சருக்கத்தால் உணர்கின்றோம்.

நீலகேசி ஞானக் கண்ணால் நோக்கிக் காம்பிலி நாட்டரசன் அரண்மனை முன்றிலில் நாவற்கொம்பு நட்டு நின்ற குண்டலகேசியைக்கண்டு அவளை நாவல் நடுதற்குக்காரணம் என்னென வினவ, அவளும் காரணம் கூறி "நீ உன் காரியத்தின் மேற் செல்லக்கடவை; வல்லையேல் சொற்போர் புரிக!" என்றனள்.

இச் செய்தியை மன்னன் அறிந்து மகிழ்ந்து அவர்க்கு வரவேற்பளித்துத் தனது அவையிலேயே சொற்போர்புரிக! என்று அதற்கு ஆவனவும் செய்கின்றான். குண்டலகேசி அரசனை நோக்கி "மன்னவனே, நன்றாகவுரைத்தனை நீ! உன்

அவையில் யாங்கள் சொற்போர் புரிந்துழி நீ வென்றார்க்குச் சிறப்பும் தோற்றார்க்கு ஒறுப்பும் செய்தல்வேண்டும்" என்று கூற அரசனும் அங்ஙனமே செய்வதாக உடம்படுகின்றனன். உடன்பாடு பெற்ற பின்னர்க் குண்டலகேசியும் நீலகேசியும் அரசவையிலே சொற்போர் தொடங்கலாயினர். குண்டலகேசி சொற்போர் மரபுப்படி தான் மேற்கொண்டுள்ள சமயத்துத் தலைவன் முதலிய நாற்பொருளையும் நிரலே கூறுபவள், "ஏடி நீலகேசி எந்தலைவன் இயல்பு கேள்! அவன்றான் முன்பே பெருமைக்கண் நிலைபெற்று நின்றான்; தான் வீடுபேறெய்துமளவும் பிறர்க்கு நன்மையையே நினைந்தான்; எல்லோருக்கும் நல்லறங்களையே அறிவுறுத்தினான்; தனக்கென யாதொரு நலனையும் விரும்பிலன்; பிறர் நலங்கருதியே துன்புற்றான். தன்னை வந்தடைந்தாரையெல்லாம் பாதுகாத்தருளினன். இத்தகைய குணக்கடலாகிய புத்தனே எமக்குத் தலைவன் என்றறிக.

"எங்கள் தலைவன் திருவாய் மலர்ந்தருளிய நூல்கள்-விநய பிடகம், சூத்திரபிடகம், அபிதர்மபிடகம் என்னும் முப்பிடக நூல்களுமேயாம்.

"இனி, அந்நூலால் முடிபொருள்கள் உருவக்கந்தம், நுகர்ச்சிக் கந்தம், அறிவுக்கந்தம், குறிக்கந்தம், செயற்கந்தம் என்னும் ஐங்கந்தங்களுமேயாம்.

"இனி அவற்றின் நிகழ்ச்சிகள் தோன்றுதலும் அழிதலுமேயாம். அவை நிலையுதலுடையனவல்ல; உவமை வேண்டின் விளக்கின் நுனி போல் என்று கொள்வாயாக!"

இவ்வாறு குண்டலகேசி கூறியவுடன் நீலகேசி அவற்றை மறுக்கத் தொடங்கினாள்; "ஏடி! நீ இறைவன் முதலாகச் சொல்லிய நான்கு பொருட்கும் இனி யான் சொல்லுக்குச் சொல் குற்றங்காட்டுவன் காண்!" என்று தொடங்கி, ஏடி! நின்றலைவன் முன்பே பெருமைக்கண்ணின்றான் என்றனை. முன் என்றது அவனுடையபற்றுடைய காலத்தைத்தானே? அக்காலத்திலேயே அவன் பெரியவன் ஆயின் பின்னர் அவனறவொழுக்கம் அவமாம். அறத்தில் ஒழுகிய பின்பே பெரியன் ஆயினன் என்பாயாயின் முன்றான் பெருமைக்கணின்றான் என்றது பிழையாம். இந்த இரண்டு வழியானன்றி இவன் பெரியவனாதற்குப் பிறிதொரு வழியுமில்லையன்றோ!

இன்னும் அவன் முன்பே பெரியவனாயின் அவன் வீடு பெற்றிருத்தல் வேண்டுமே! அவ்வீடு பேறடையாமல் இங்கு அவன் செய்து முடிக்கும் காரியந்தான் யாது? கைவந்த வீட்டினை விட்டுப் பிறர்க்கே உழைத்தானெனின், அடிமைகளும் தலைவராய் விடுவர்.

உன்றலைவன் ஊன் உண்ணல் தகும் என்றுணுதலின். பிறர் நன்மையையே நினைத்தான் என்றதும் பிழையாயிற்று. என்னை ? இவன் சொற் கேட்டு ஊனுண்ட பிறர் எல்லாம் நிரையம் புகுதல் தேற்றமாகலின்.

இவன் தன் மொழி கேட்போர்க்கெல்லாம் பொன்றக்கேடே வீடென்றுணுதலின் (சூனியமாய் முடிதல்) இவன் கூறியவெல்லாம் அறமாகாமையும் அறிதி. என்னை ? தன்னையடைந்தவ ரெல்லாம் வெறும் பாழாய் முடிவர் என்பதுதான் தத்துவம் கூறலோ ? கூறுய் !

இனி! எண்ணிறந்த பிறவிகள் பிறந்து புத்தன் பிறர்க் குழன்றுன் ? என்கின்றனை ஆயின் அத்துணைப்பெரிய தீவினை யாளன் நின்றலைவன் என்பதே உண்மையாயிற்று.

இனி, அருள் காரணமாகவே பிறர்க்குழன்றுன் என்பா யாயின் இன்னும் பிறர் பலருளராகவும் அவர்க்கெல்லாம் அருள்கூராது விட்டு. இவன் வீடு பெற்றது ஏன் ? ஏடி குண்டலகேசி நின் தலைவன்,

> "முன்கொன்றுன் தன்தாயை முழுமெய்யும் போர்த்திருந்து
> தின்கின்றுன் பிணம் வீடு பெற்றுட்டுங்காற் சூனியமே
> என்கின்றுன் இவன் போல்வார் இறைவர் இல் என்பாய் !
> தன்கன்று சாக்கறப்பான் தயாப் பிறிதிற் குடையவனே ?"

பேதையே !

இனி, நின்தலைவனுகிய புத்தன் பொருளியல்பை நன்கு அறியும் தன்மையும் உடையனல்லன் ; என்னை ? இவன் அறிவுகள் கணந்தோறும் பிறந்து பிறந்து சாகின்றன ஆதலால், இங்ஙனம் நிலையில்லாச் சிற்றறிவுகள் பொரு ளியல்புகளை நிலைத்து நின்று எவ்வாறு முழுதுணரும் ? கூறுதி!

"இனி நீ, ஐங்கந்தங்கள் என்று கூறுவதும் பிழையே யாம். அறிவுக் கந்தத்திலேயே குறிக்கந்தமும், நுகர்ச்சிக் கந்தமும், செயற்கந்தமும் அடங்குதலின் அவையும் பிழைபட்டன. இனி, குறிக்கந்தமும் நுகர்ச்சிக் கந்தமும், செயற்கந்தமும் வேறு வேருகலின் அவற்றை யின்றியமையா அறிவுக் கந்தமும் இல்லையாய்ப் பிழை யாயிற்று. இனி இவற்றை உருவக் கந்தமும் அருவக் கந்தமும் என இரண்டாகவே கொள்ளிற் பொருந்தும் ; ஐங்கந்தம் என்றது மடமையினும் மடமை காண்.

"ஏடி ! குண்டலகேசி ! நின் புத்தன் கூறுகின்ற பொரு ணிகழ்ச்சியாகிய கணபங்கமோ முழுப்பொய். என்னை ? முன் கணத்திலிருந்த புத்தன் கையறக் கெட்டானுக; அடுத்த கணத்திற் பிறந்த புத்தன் அப்புத்தனினும் வேருகிய புத்தனே ஆவன். ஆயின் ஒரு புத்தன் மற்றொரு புத்தனை விட்டுவிட்டு

மறைந்து போனான் என்று உங்கள் புத்தன் கூறுவது 'நேற்றிரா வந்த கள்வன் அவனை விட்டு வைத்து என்னைக் களவாடிப் போயினன்' என்பது போன்றதொரு மருளுரையே ஆதல் வேண்டும்.

"இனி, முற்கணத்தே தோன்றிய அறிவால் அறிந்த தொன்று முழுவதும் வேருய்ப் பிற்கணத்தே தோன்றிய அறிவிற்குப் புலப்படுவதெப்படி?"

குண்டலகேசி : வாசனையால் புலப்படுங்காண் !

நீலகேசி : நன்று ! நன்று ! அங்ஙனமாயின் அந்த வாசனைதான் கணபங்கத்திற்றப்பியதெப்படியோ கூருய் ! இன்னும் அந்த வாசனை என்பது ஐங்கந்தத்துள் அடங்குமோ? அல்லது அஃதொருகந்தமோ ? என்று நகைத்தனள்.

இவ்வாறு குண்டலகேசி கூறியவற்றையெல்லாம் நீலகேசி குற்றங்கூறி மறுக்கவே குண்டலகேசி வேறு போக்கின்றிப் புத்தனுடைய வள்ளற்றன்மையைப் பாரித்துரைக்கலானாள்.

"ஏடி நீலகேசி! எங்கள் புத்தன் போன்ற வள்ளன்மை படைத்தவர் மூன்றுலகத்தும் முக்காலத்தும் இல்லையடி, அவன்றான்,

"கண்கொடுத்தான் தடிகொடுத்தான் கயப்புலிக்குத் தற்கொடுத்தான்
பெண்கொடுத்தான் உடர்பினையும் பிளந்திட்டுப் பிறர்க் கீந்தான்
மண்கொடுத்தான் மகக்கொடுத்தான் மன்னுந்தூற் சேர்ந்தார்க்கு
விண்கொடுத்தான் அவன்கொடுத்த விரித்துரைப்பன் கேள்" (௨௦௬)

என்று குண்டலகேசி தான் சொற்போர்க்கு எடுத்துக்கொண்ட பொருளை விட்டு விட்டு மற்றொன்று விரித்தலாக ஏதேதோ தன் வாய்தந்தன விளம்பலானாள். அதுகேட்ட நீலகேசி "நீ இப்பொழுது ஈண்டைக்குப் பொருந்தாத நின் புத்த சாதகக் கதைகளை வீணே எடுத்து விரிக்கின்றனை. அந்தப் புத்த சாதகக் கதைகள் தாமும் அறிவிற்குப் பொருந்தவில்லையே! என்னை?

"பேதாய்! உலகில் உண்டி உடை முதலியன இரப்போரையே யாம் யாண்டும் காண்கின்றோம். இவற்றையன்றி உன் கண்களைக் கொடு! உன் உடம்பிற் பாதியைப் பிளந்து கொடு! உன் தலையைக் கொடு! உன் தசையைக் கொடு! என்று இரந்து வருவாரை யார் தாம் கண்டுள்ளார்? இக் கதையெல்லாம் வறிய கட்டுக்கதைகளே ஆதல் தேற்றம். அவற்றை ஏன் நீ எடுத்துரைக்கின்றனை !

"ஒருவன் உடலிற் பாதியைப் பிளந்து மற்றொருவன் உடம்பின் பாதியோடு ஒட்டினால் அவ் விரண்டும் பிணங்களாய் விழுமேயன்றி ஒன்றாகி உயிர்வாழ வியலுமோ ? உடம்பினைப் பிளந்து கொடுப்பதாற் பயனின்மை யறிந்தும் அவமாகச் சாவதுதான் உங்கள் புத்தனுடைய பெருமை போலும்"

என்று இவ்வாறே குண்டலகேசி புத்தருக்குப் பெருமை காட்டப் பேசிய வரலாறுகளையெல்லாம் நீலகேசி எண்மையாகவே அவையோர் நகைக்கும்படி ஒவ்வொன்றாக மறுத்துக் குற்றங்காட்டினள்.

இப் புத்தசாதகக் கதைகளைக் கேட்டிருந்த அரசன் முதலிய அவையோரெல்லாம் நகைத்தனர். அரசன் குண்டலகேசியை நோக்கி, "நீ ஏன் எவரோ ஒரு மடவோன் கூறிய இப் பொய்க் கதைகளை ஈண்டுக் கூறவேண்டும்? நீ தோற்றொழிந்தனை; நின் வறுமொழிகளை இனி விடுக!" என்றனன்.

பின்னர் நீலகேசி குண்டலகேசியை அன்னையே! என்று அன்போடு அழைத்து "நினக்கு இப்புன்னெறியை அறிவுறுத்த ஆசிரியன் யார்?" என வினவினள். அவளும் நாணத்தோடு "நங்காய்! உஞ்சை நகரத்தே உறைவான் அருக்க சந்திரன் என்னும் பெயருடைய ஒரு பௌத்தத் துறவியே எனக்கு இதனை அறிவுறுத்தினன்" என்றாள். பின்னர் அரசன் குண்டலகேசியின் தோல்வியை ஊரறியப் பறைசாற்றி அவளை அனைவரும் காணும்படி தெருவழியே செலுத்தி ஊருக்கு வெளியே விடுத்து வருமாறு பணித்தான். நீலகேசிக்குச் சிறப்புப் பல செய்தனன். பின்னர் அவ்வரசன் முதலியோர் நீலகேசி தெருட்டிய ஆருகத நெறிபற்றி வாழ்வாருமாயினர்.

## அருக்க சந்திரனும் நீலகேசியும்

குண்டலகேசி வாதச் சருக்கத்தை நூலாசிரியர் பொதுவாகப் புத்தருடைய சித்தாந்தத்தையும் சிறப்பாகப் புத்தருடைய பெருமை பேசுகின்ற அவர் தம் வரலாறு போல்வனவாகிய புத்த சாதகக் கதைகளின் பொருந்தாமையையும் குற்றங் கூறுமளவிலேயே சுருக்கமாக முடிவுக்குக் கொணர்ந்து விடுகின்றார். குண்டலகேசி என்னும் பெருங்காப்பியத்தில், குண்டலகேசி ஆருகத சமயத்திற்குக் கூறிய குற்றங்களை அவளை முன்னிலையில் வைத்து அவளையே ஈண்டுங் கூறவைத்து மறுப்பது பயில்வோர்க்குச் சுவை பயவாது என்று கருதியே போலும் மற்றோர் உபாயத்தால் அவற்றிற்கெல்லாம் விடை கூறுவிக்கின்றார். மற்று இந்த அருக்க சந்திரவாதச் சருக்கத்தை ஏதுவாகக் கொண்டு அவர் காலத்தே புத்தத் துறவிகள் மேற்கொண்டிருந்த கூடாவொழுக்கங்களையே அம்பலப்படுத்துகின்றார். இச் சருக்கத்தில் பௌத்தத் துறவிகள் பொதுமக்களை ஏமாற்றி ஆடம்பரவாழ்வு மேற்கொண்டிருந்தமையை மிகவும் அழகாக ஆசிரியர் நங்கண்முன் கொணர்ந்து நிறுத்துகின்றனர். இனி அதனை ஆராய்வாம்.

## அருக்க சந்திரன்

இச் சருக்கத்தைத் தோற்றுவாய் செய்யும் பொழுதே பௌத்தத் துறவியாகிய அருக்க சந்திரன் உறைகின்ற பள்ளியினது ஆரவார நீர்மையை அழகுறக் காட்டுகின்றனர். துறவியாகிய இவ்வருக்கசந்திரன் வாழ்க்கையை இவர் கூறும்பொழுது நமக்கு "அறம் நிரம்பிய அருளுடை அருந்தவர்க்கேனும் பெறலருந் திருப்பெற்றபின் சிந்தனை பிறிதாம்'' என வரும் கம்ப நாடருடைய அழகிய சொற்றொடர் நினைவிற்கு வருகின்றது. கம்பநாடர் காவியத்தில் இது கூனியின் கூற்றாக வருகின்றதாயினும் இது மேலான உண்மையைக் கொண்டு மிளிர்கின்றது என்பதில் ஐயமில்லை. பொருளோ மாயையின் கூறு. இந்தப் பொருளாசை உடம்பும் மிகையென்று துறந்து போனவர்களையும் மயக்கித் தன் வயப்படுத்தி விடுகின்றதனையும், பொருள் தான் கையுற்றுழி அத்துறவோர் மனம் இழிதகைமையடைந்து விடுவதனையும், அப்பொருளின் துணைகொண்டு அத்துறவோர் எத்தகைய தீவினையையும் நயந்து திறம்படச் செய்து வருதலையும் எக்காலத்திலும் எந்த நாட்டினுங் காணல் கூடும்.

உஞ்சைமா நகரத்தின்கண் பௌத்தத் துறவியாயிருக்கின்ற இவ்வருக்கசந்திரனை மாநிலமாளும் முடிமன்னரும் வணங்கி வரவேற்றுச் சிறப்புச் செய்வராம். அங்ஙனம் சிறப்புச் செய்வதற்குக் காரணம் அவனுடைய துறவொழுக்கமன்று. அவனுடைய செல்வமிக்க ஆடம்பர வாழ்வே காரணமாயிருக்கின்றது. அவன் பெற்றிருக்கின்ற செல்வத்திற்கியல்பான செருக்கும் இவன்பால் மிக்குத் திகழ்வதனை ஆசிரியர் குறிப்பாக நமக்கு உணர்த்தி விடுகின்றார். "பருக்கை மால்களி யானைப்பல் வேந்தரும் இருக்க! போதக! என்னும் பெருமையா''னாகிய இவ்வருக்க சந்திரனுடைய தவப் பள்ளியை ஆசிரியரே கூறிக் காட்டுகின்றனர்; அதனைக் கேட்போம்.

"போதி சத்துவர் புத்தர் எனப்படு
நீதி யிற்பெரி யாரன நீர்மையான்
ஓதி நூன்மும்மை ஒப்ப வுணர்ந்தவன்
வாதி கட்கோர் வயப்புலி ஏறனான்'' (உகச)

என அத்துறவியை நமக் கறிமுகப்படுத்திய பின்னர்,

"மாட மோங்கி மழைநுழைந் தின்குயில்
பாடு பூம்பொழிற் பாங்கர்ஓர் பள்ளியுட்
பீட மேறிப் பெருந்தகை யார்க்கெலாம்
வீடு பேறும் வினையும்'

இப் பேராசிரியன் அறிவுறுத்துகின்றான், என்கின்றனர்.

அருக்கசந்திரனுடைய ஆடம்பரவாழ்க்கையில் மதிமயங்கிய பெருங்குடி மக்களெல்லாம் அவன் முன்னர் அடங்கியிருந்து அவன் அறிவுரைகளைக் கேட்டுப் பெரிதும் வியக்கின்றனர் எனவும் கூறுகின்றார். "யாவரராயினும் நால்வரைப் பின்னிடின் தேவரேன்பது தேரும் இவ்வையகம்" என்பர் திருத்தக்க முனிவர். இத்தகைய ஆடம்பர வாழ்க்கையையுடைய அருக்க சந்திரனைப் பொதுமக்கள் தேவனாகவே மதிப்பது இயல்பேயன்றோ !

நீலகேசி மெல்ல அப் பள்ளியுள் அப் பேராசிரியன் அறியாதபடி புகுந்து ஒரு தூண் மறைவினின்று அவனறிவினை அளத்தற் பொருட்டு அவன் அறிவுரைகளைக் கேட்கின்றனள். அப்பேராசிரியன் விநயபிடக நூலினின்றும் புத்த சமயத்தார்க்குரிய ஒழுக்க முறைகளை எடுத்துத் தன் பெருந்தகை மாணவர்க்கெல்லாம் அறிவுறுத்துகின்றனன். அவன் அறிவுறுத்தும் அறங்கள் தாம் எத்தகையன ? என்பதை நகைச்சுவை ததும்ப நூலாசிரியர் இதோ நம்மனோர்க்குக் கூறுகின்றனர் கேண்மின் !

"கொள்ளு மாறுதன் கோரகை யுட்கஞ்சி
மொள்ளு மாறும் முதுகுநெளித் துண்டுவன்
அள்ளு மாறும் அணைஎடுத் திட்டுஅவை
மெள்ள மெள்ள விழுங்கும் அவைகளும்" (உகஎ)

"வழிக்கு மாறுந்தம் மண்டையில் உண்டுமன்
ஒழிக்க மாறும் அஃதூட்டும் அவைகளும்
மழிக்க மாறுந் தலைகளை மையிட்டு
விழிக்கு மாறும் வினைய வீதியினுல்" (உகஅ)

இன்னோரன்னவற்றையே அவ்வாசிரியன் விநய பிடகத்தினின்றும் எடுத்துப் பாரித்துக் கூறுகின்றான், என்கின்றனர் நூலாசிரியர்.

இத்தகைய எளியவற்றையே அவன் கூறுவானாகவும், அவற்றைக் கேட்கின்ற அப்பேதை மாணவரோ சொல்லுக்குச் சொல் தலைவணங்கி என்னே ! இவ் விநய பிடகநூலின் சிறப்பிருந்த வாறென்று பெரிதும் வியப்பெய்துகின்றார்களாம். "ஏழைமை உடைத்துமாதோ இஞ்ஞாலம்! அவ்வாசிரியன் கூற்றில் அப்படி வியத்தற்கு என்ன இருக்கின்றது" என்று குறிப்பாக நமக்குணர்த்துகின்றார் நூலாசிரியர்.

இவ்வாறு மாணவர் அடங்கியிருந்து வியக்கும் பொழுது ஒரு குரல் "இத்தகையதுதானோ நுங்கள் அறநெறி" என்றெழுவதாயிற்று. மறைந்து நின்ற நீலகேசியின் குரலே அது. அக்குரல் அவ்வவையின் அமைதியைக் குலைத்ததோடன்றி அருக்க சந்திரனுடைய செருக்கினையும் நன்கு கிள்ளி விடுகின்றது.

உயரிய மேடையில் அமர்ந்திருந்த அருக்க சந்திரன் தன்னை எள்ளி எழுந்த நீலகேசியின் குரல் கேட்டுச் சினத்தால் திமிர்ந்து நோக்கினன். "இவ்விடத்திலே எழுந்த இக்குரல் யாருடையது !" என்று உரப்பினன். அச்சம் சிறிதுமில்லாத் தெளிவுடைய நீலகேசி அவன் முன்வந்து "ஐய ! இதற்கோ இத்துணைச் சீற்றம்! நீ வீரஞ் செய்து விழித்திடேல்! இதுதான் உன்னுடைய விநயபிடகத்தின் அறவுரையோ? ஆயின் நன்று! நன்று ! தீவினைகளை உண்டாக்குதலாலே வினைய பிடகம் என்னும் பெயர் அதற்கு மிகவும் பொருத்தமே காண் ! யான் நின்னோடு சொற்போர் தொடுக்கவே ஈண்டு வந்துள்ளேன். நீ வல்லையாகின் அவ் விநய பிடக விதி சிலவற்றை எனக்குக் கூறிக்காண் ;" என்றனள். சினமிக்க அருக்க சந்திரனும் விநய பிடகத்தினின்றும் சில அறங்களை எடுத்துக் கூறினன். அதுகேட்ட நீலகேசி அவற்றை மறுக்கின்றாள்.

**நீலகேசி :** ஐய! உங்கள் புத்தனார் தம்மையும் தம்மனைவியையும் பிறர்க்கு வழங்கினர்; அத்துணை வள்ளற்பெரியார் அவர் என்று வானளாவப் புகழ்கின்றனை ; பௌத்தராயினோர் அவற்றைஅறமெனக்கொள்வாராயின் தத்தம் மனைவிமாரையும் காமுகர்க்கு வழங்கவேண்டுமே ! அவ்வாறு வழங்காமைக்குக் காரணம் என்னை ?

ஐயனே! உன் விநய பிடகம் வகுத்துரைக்கும் விதியொன்றனை ஆராய்வாம். "பௌத்தத் துறவியொருவன் தனக்குக் காமம் காழ்கொண்ட விடத்துத் தனது சீவர ஆடையைக் களைந்து பள்ளியுள் இட்டுவைத்து உலகமாந்தர்போல்வேறோர் ஆடையுடுத்துப் பிறர் அறியாதபடி சென்று கணிகையரைத் தழுவி அதனைத் தீர்த்துக்கொள்ளக்கடவன்" என்னுமிதுவிநய பிடகவிதியுள் ஒன்றன்றோ ? இவ்வொழுக்கம் அறமாமோ கூறாய் !

இன்னும் அவ்விநய பிடகத்தில் "சிங்கதத்தன் என்னும் தேரன் ஒருவன் சங்கத்திற் சேர்ந்திருந்த பிக்குணியொருத்தியைக் காமுற்றுப் பள்ளியிலேயே அவளைத்தழுவ, அவள் அஞ்சிப் பெரியீர்! நம்புத்தபெருமான் படிவத்தருகே இங்ஙனம் செய்தல் தகுமோ? என்ன, அதுகேட்ட அச்சிங்கதத்தனார் ஏடி! துறவிகட்கு எவ்விடத்தும் காம நுகர்ச்சி செய்தல் பொருந்துவதாம்; துறவி அரிதிற் பெறுதலால், என்பது தமது விநய பிடகத்தின் விதி" என்று கூறினர் என்பதும் உங்கள் கதையன்றோ ?

இன்னும் ஐய ! காமங் காழ்கொண்ட துறவி யொருவன் ஆதரவற் றிறந்துகிடந்த ஒரு பெண் பிணத்தைத் தழுவினான், என்றும், அது கண்ட ஏனைத் துறவோர் இது பிணமன்றோ ?

என அக்காமுகன் 'உயிர் என்ருெரு பொருளில்லை' என்னும் பௌத்தர்கட்கு எல்லாப் பெண்டிரும் பிணமல்லரோ ? இதனைமட்டும் பிணம் என்பானேன் ? என்று அறிவுறுத்தினன் என்பதும் நுங்கள் விநய பிடகத்து வரும் கதையன்ருே? இன்னும், புத்த சமயத் துறவி காமங் காழ் கொள்ளின் பிக்குணியோடு கூடுக ! என்பதும் விநய பிடக விதியே அன்ருே ?

ஐய ! நீயிர் எல்லாம் துறந்துவிட்டேம் என்கின்றீர். துறவியாகிய நுமக்கோ எட்டுச் சீவர ஆடைகள் வேண்டும் ; அன்றியும், கிளிக்கத்தி, கத்தரிகை, சுண்ணும்புச் செப்பு, வெற்றிலைப் பெட்டி, பாக்குப்பை, பல்லுத் துடைக்கும்பாளை, தலைமழிக்கக் கத்தி, தீட்டுக்கல், குடை, செருப்பு, மண்டை (பிச்சைப் பாத்திரம்), கெண்டி, சுழற்றி, தோல் தண்ணீர்க் கொப்பு, இன்னேரன்ன எத்துணையும் பலவாகிய பொருள்கள் வேண்டும். பின்னர் நீயிர் எவற்றைத்தாம் துறந்து விட்டீர்? கூறுமின்! பேதையீர் நீர்.

''உரைப்ப பேரருள் உண்பன மீனெடு ஊன்
திரைப்ப மெல்லணை செய்ப விழுத் தவம்
கரைப்ப தீவினை கண்டது சூனியம்
புரைப்பில் மார்க்கம் பொருத்த முடைத்தரோ'' (உ௬௧)

[அருளுடையோமென்று சொல்வீர்! ஊன்தின்பீர்! தவம் செய்கின்ருேமென்பீர்! பஞ்சணையிற் படுத்துறங்குவீர்! தீவினையைக் கெடுக்கின்ருேம் என்றும் சொல்வீர்! வினைகெட்டவழி நீயிர் எய்தும் வீடும் வெறும் பாழே என்கின்றீர். மிகவும் பொருத்தமான சமயம்காண் நுங்கள் சமயம் !]

இனி, அருக்கசந்திர முனிவரே ! இவை நிற்க ; எல்லாப் பொருளும் அசுசி என்பீர் ஆயின் புத்தனுக்கு மலரிட்டு வணங்குவானேன் ? மலமிட்டு வணங்கலாமே! எல்லாம் துக்கம் என்பீர் ! புத்தனைத் துக்கன் என்னுமல் சுகதன் என்பீர்! இது பேதைமையன்ருே ?

எல்லாம் நிலையாப் பொருள் என்கின்றீர் ! மலைபோன்ற மாட மாளிகை எடுக்கின்றீர் ! இவைமட்டும் நிலையுதலுடையவோ ? உயிர் இல்லை என்கின்றீர். யான் முற்பிறப்பில் முயலானேன் என நுங்கள் புத்தன் கூறுங்கால் யான் என்று உயிரையே சுட்டுதல் என்னையோ ?

மைத்திரி பாவனை செய்கின்றீர்; உயிரினங்களின் ஊனைத் தின்கின்றீர்; கல்லாலாகிய புத்தப் படிவத்தைக் கண்டுழி அன்புடையீர் போல் தலையை முட்டிக்கொண்டு அழுகின்றீர். நன்று ! நும் மைத்திரி பாவனை !

இவ்வாறு நீலகேசி பல்லாரவையுள் அருக்க சந்திரனையும் அவன் சமய நூலையும் அவன்றன் ஒழுக்கத்தையும் நகைச்சுவை படக்குற்றங்கூறிமறுப்பவே, அருக்கசந்திரன் அந்நீலகேசியின் கூற்றிற்கு மாற்றமுரைக்க மாட்டாளுகி மேலும் அவள்பால் நல்லறங் கேட்டுப் புத்தசமயத்தை ஒழித்து ஆருகத சமயம் தழுவி அவள் மாணவனுகி விடுகின்றுன்.

பின்னர் நீலகேசி அருக்கசந்திரனுக்கு அறங்கூறிய ஆசிரியன் மொக்கலன் என்பதனை அவன் வாயிலாகவே அறிந்து அருக்க சந்திரனை அந்நகரத்திலேயே இருந்து அருகன் நல்லறங்களை மக்கட்கு அறிவுறுத்துமாறு பணித்து அந் நகரத்தினின்றும் மொக்கலன் இருக்கும் பதுமபுரத்திற்குச் சென்ருள்.

## மொக்கலனும் நீலகேசியும்

பதுமபுரத்தின்கண் உறைகின்ற மொக்கலன் என்பான் புத்த பெருமானுடைய முதன் மாணவன் என்று கூறப்படுகின்றுன். இவனுடைய தவப்பள்ளி அருக்க சந்திரன் பள்ளியினும் மிகப்பெரிய ஆரவார நீர்மையுடையதாய்த் திகழ்கின்றது. நிலம் ஆளும் முடிவேந்தன் அரண்மனை போன்று தோன்றுகின்றது. மதில்களிலே பெரிய எழுத்துக்களாலே புத்தர் கூறிய அறவுரைகள் வரையப்பட்டிருக்கின்றன. இச் செயல் இக் காலத்து நாகரிகத்தை ஒத்திருக்கின்றது. பள்ளியினூடே போதுகளும் பொன் மணலும் பரப்பி அழகு செய்யப்பட்டிருக்கின்றது. இப் பள்ளியைப் பார்த்துச் செல்கின்ற நீலகேசி தன்னுள் ஆ! இப் பள்ளி எத்தனை பெரியவளத்தோடு திகழ்கின்றது! துறவோர்க்கு இத்துணை வளம் எங்ஙனம் கிடைத்தது? என்னும் வினு அவள் உளத்திற் ருேன்றவே அதற்கு அவளே விடையும் கூறிக் கொள்கின்ருள். அவ்விடையாவது :—

''இவையெல்லாம் கடிமகரக் கடல்கடந்து கலந்தந்த நலம்'' என்பதேயாம். நீலகேசி தனக்குத்தானே விடுத்துக் கொண்ட இவ் விடை வாயிலாய் இந்நூலாசிரியர் நம்மனோர்க்குணர்த்துவதும் ஒன்றுண்டு. அஃதாவது அந்தக் காலத்தே பௌத்தத்துறவோர் கடல் கடந்துபோய்ப் பர்மா சீன முதலிய பிறநாட்டினும் தமது சமயத்தைப் பரப்பிப் பெரும்பொருளீட்டிக் கொணர்ந்து ஈண்டு அரண்மனை போன்ற ஆரவாரத்தோடு தம் தவப்பள்ளிகளை அமைத்துக்கொண்டு இனிதே வாழ்ந்து வந்தனர் என்பதேயாம். கடல்கடந்தும் அவர்தம் சமயம் செல்வாக்குற்றிருந்தமைக்கு அறிகுறியாக அவர் தவப்பள்ளிகள் மகரமீன் வடிவினவாக அமைக்கப்பட்டிருந்தன என்பதனை, ஆசிரியர் ''மகரப் படிமையது அப்பள்ளி'' என்பதனுல் அறிவிக்கின்ருர்.

பின்னும் செல்வச் செழிப்பு மிக்க அப் பௌத்தத் துறவி களின் துவராடையின் பெருமையை ஆசிரியரே கூறக் கேளுங்கள்.

"துன்னஞ் செய்து ஆடையைத் துவர்தோய்த்துக் கொட்டியும்
பொன்னஞ் செய் பத்தங்கப் புகையூட்டிக் கைசெய்து
தன்னமு மளித்தரய தலைசொறியு மிடை யிலையால்"

உலகினைத் துறந்த துறவோர்க்கு இத்தகைய ஆடம்பர ஆடை எற்றிற்கு ? என்று நீலகேசி ஐயுறுகின்றாள். அங்கிருந்த துறவோரை நோக்கி "அடிகாள் ! இத்துணை ஆரவாரமுடைய ஆடையாலே தலைசொறியவும் இடமில்லாதவாறு நீங்கள் ஏன் முழு மெய்யும் போர்த்தல் வேண்டும்?" என்று வினவினள். அவர்கள் விடைகூறவறியாமல் ஒருவரை ஒருவர் நோக்கி விழிக்கலாயினர். நீலகேசி பெருந்தகைத் தோற்ற முடைமையாலே அப் பள்ளித்தலைவனாகிய மொக்கலனை அறிந்துகொண்டாள். அணுகி "ஐய ! நீயிரேனும் என்வினாவிற்கு விடைதருக !" என்றாள்.

மொக்கலன் : மடந்தாய் அங்ஙனம் யாங்கள் சீவரவாடையாலே முழு மெய்யும் போர்ப்பதற்கும் பயனில்லாமலில்லை ; உண்டுகாண்! யாங்கள் துறவோர் என்று உலகத்தார் அறிந்து கொண்டு எம்மைப் போற்றி உண்டி முதலியன வழங்குவர் ; இதுவே அப்பயன்.

நீலகேசி : பெரியீர் ! நுமதுரை ஒக்கும்; ஆயின் அதற்கு இவ்வாறு துன்னஞ் செய்தலும் பத்தங்கப் புகையூட்டலும் வேண்டுமோ ? இங்ஙனம் ஆரவாரமுடைய இவ்வாடையைச் செய்து கோடற்கு எத்துணை முயற்சி வேண்டும். நுங்களைத் துறவோர் என்று அறிதற்கு எளிதிற்கிடைக்கும் தோலாடையே அமையுமே? இது பெறுவதும் எளிது; கள்வர் கவரார் அன்றோ?

மொக்கலன் : நங்காய் ! தோல் கொண்டு முழு உடலும் மறைத்தல் எளிதன்றே? அழகிய எந் திருமேனியைக் கண்டுழிப் பெண்பாலர் பேதுறுவர் அல்லரோ ? அவர் பேதுற்று வருந்தாமைப்பொருட்டே இப்பேராடையாற்போர்க்கின்றேம்காண்!

நீலகேசி : ஐய ! நின்னைக் கண்டு பெண்பாலார் பேதுறின் நின்றவமழியுமாயின், உலகிற் பெண்பாலார் உள்ளதுணையும் நினக்கும் தவம்கைகூடாது காண்! இது நிற்க; நீ இரந்துண்ணும் இப்பலிக்கலத்திற்கு இத்துணைச் சித்திரவேலைப்பாடுகள் எற்றிற்கு? அந்தோ மனைவாழ்க்கை துன்பமுடைத்தென்றன்றோ நீ அதனைத் துறந்து இங்குற்றனை? இங்கும் நீ இவ்வாரவாரமுடையை! ஆடை சமைத்தற்கும் பலிப்பாண்டம் சமைத்தற்கும் எத்தனைத் துன்பப் படவேண்டும், பேதாய் !

''வண்ணாரந் துன்னாரம் மச்சிகமே கச்சாரம்
சண்ணாரம் எனப்பிறவுந் தவத்துன்நீ கற்றனவால்

[வண்ணாரத் தொழில், தையற் றொழில், சிரைத்தற் றொழில், கச்சுக்குத்துந் தொழில், குடைகுத்துந் தொழில், குயத் தொழில், சக்கிலியத் தொழில்] இவ்வாறு.

''எண்ணார்ந்த காரங்கள் இல்லகத்தே பயின்றாயேல்
உண்ணாயே? வயிறார ஓர்ப்பொன்றும் இலையே காண்!''

மேலும் துறந்தோர்க்கு இன்றியமையாதது உணவு மட்டுமே. வேண்டியதுணவேயாயின் மற்றிவை யெல்லாம் வீண்! வீண்! இவற்றை விட்டொழிக்கக் கடவை.''

நீலகேசி மெல்ல மெல்ல இவ்வாறு தொடர்ந்து பேசி எள்ளவே அப்பேராசிரியன் தன் பொருளுடைமைத் தருக்காலும் புன்ஞானச் செருக்காலும் சினந்து அவளுக்குத் தக்க மறுமொழி கூற நினைத்தவனாய்! ஏடி அறிவிலி! நீ யார்? என்னை யார்? என்று அறியாதே பேசுகின்றாய்! இங்ஙனமே என் ஆற்றலறியாமல் இரணியன் என்னும் ஒரு புறச்சமயக் கணக்கன் என்னோடு சொற்போர் தொடுக்கவந்து பெருந்தோல்வியுற்று ஓடிப்போயினன். நீயும் அவனைப் போன்றே ஈண்டு இடர்ப்பட வந்துள்ளாய் போலும் என்றான். அது கேட்ட நீலகேசி! ''ஐய தற்புகழவேண்டா! அஃது அறிவுடைமையன்று. நீ ஒருவனை வென்றேன் என்கின்றனை! யானோ இரண்டுசமயக் கணக்கரைப் புறமிட்டோடச் செய்தேன் காண். வீறு பேசற்க!'' என்றாள்.

அது கேட்ட மொக்கலன் ''ஏடி நீ வென்ற அவ்விருவர் தாம் யாவர்?'' கூறுதி.

**நீலகேசி :** கூறுவேன் கேள்! குண்டலகேசி என்பாள் ஒருத்தியையும் அருக்க சந்திரன் என்பான் ஒருவனையும் யான் வென்று வாயடக்கினேன் காண்!

**மொக்கலன் :** பொய்! பொய்! முழுப் பொய்! பேராற்றல் படைத்த குண்டலகேசி உலகிலுள்ள பிற சமயக் கணக்கரை யெல்லாம் சொற்போரில் வென்று வாகை சூடியவள் என்பதறியாய் போலும்! அறியாமையால் அவளை வென்றேன் எனப் பொய் கூறினை!

**நீலகேசி :** ஐய! அப்படி அவள் யார் யாரை வென்றாள் கூறுக!

**மொக்கலன் :** ஏன்? வைதிக சமயத்தாருள்ளிட்ட எத்தனையோ சமயக்கணக்கரை அவள் வென்றனள். மேலும்

ஆவண நகரத்தே ஆருகத சமயத்து நாதகுப்தனுரை அவள் வென்றது உலகறியுமே? நீயறிந்திலை போலும்!

நீலகேசி : மொக்கல! நாதகுப்தனுரைக் குண்டலகேசி வென்றனள் என்கின்றனே. அவள் எப்பொருள்பற்றி வாதிட்டு அப்பெரியாரை வென்றாள். அவற்றை நீ இப்போது என் முன்னர் எடுத்துக் கூறுதி! யான் அவள் கூற்றிற்கெல்லாம் குற்றங்காட்டி நின்னையும் வெல்வேன். வன்மையுடையை யாயின் கூறுதி!

இவ்வாறு இந்நூலாசிரியர் சூழ்நிலையை நூலின் நடுவிடத்தே உருவாக்கிக் கொண்டு குண்டலகேசி என்னும் பெருங்காப்பியத்தில் குண்டலகேசியின் கூற்றாக ஆருகதசமயக் கொள்கைகளுக்குக் கூறப்பட்டிருந்த குற்றங்களுக்கெல்லாம் மிகவும் நுணுக்கமாகத் தீர்வுகூறி மேலும் புத்த சமயக் கொள் கைகட்கும் நகைச்சுவைபடக் குற்றங் கூறித் தாம் கருதியதனை மிகவும் திறம்பட முடித்துக் காட்டுகின்றார். கண்டசரத்தின் நடுவிடத்தே தலைசிறந்த மணியைப் பதிப்பார் போன்று தங் குறிக்கோளை இந்நூலின் நடுவிடத்தே திறம்பட அமைத்து வைக்கும் இவ்வாசிரியர் திறம் பெரிதும் போற்றற் பாலதாம்.

நீலகேசி விரும்பியவாறே மொக்கலன் குண்டலகேசி கூற்றை ஒவ்வொன்றாகவெடுத்து வழிமொழியலானான். அவற்றிற்கெல்லாம் தக்க விடையிறுத்து அமைதிகாட்டி வருகின்றாள் நீலகேசி. இந்நூலின்கண் பெரிதும் சுவை பயக்கும் பகுதி இம்மொக்கலவாதச் சருக்கமே யாகும்.

நீலகேசியும் மொக்கலனும் தொடுக்கும் சொற்போரில் எடுத்துக் காட்டாக ஒரு சில மட்டுமே இவ்வணிந்துரையில் எடுத்துக் காட்டுவேம்; அவற்றின் சிறப்பெல்லாம் நூலை ஓதி உணர்ந்துகொள்க.

குண்டலகேசியின் கூற்றை வழிமொழிகின்ற மொக்கலன் ஆருகத நூலார் கூறும் முறைப்படி கூறாமல் தலைதடுமாறக் கூறுகின்றான். அது கேட்ட நீலகேசி நகைத்து, "மொக்கல! நீ எமது மேற்கோள் கூறத்தொடங்கிஎம்மிறைவனை இந்திரர்கள் தொழப்படுவான் என்று குறிக்கின்றாய். இந்திரர்கள் புலவிப் பொழுதில் அவரவர் மனைவிமாரைத்தானும் தொழுவாரல் லரோ? இந்திரர் தொழப்படுவதே எம்மிறைவன் சிறப்பன்று காண். இதுகிடக்க நின்குண்டலகேசி பிறசமயத்தார் தலைவர்க் கெல்லாம் குற்றங் கூறியவள் மறந்தும் எம்மிறைவனாகிய அரு கனுக்கு ஒருசிறிதும் குற்றங் கூறினாளில்லை. எனவே எம் மிறைவன் நல்லிலக்கண மமைந்த சிறந்த தலைவன் என்பது

அவளுக்கும் உடன்பாடென்பது சொல்லாமலே அமையும்; அமையவே ஒப்பற்ற முதல்வன் கூறிய அறங்கட்குமட்டும் குற்றம் கூறப்புக்கது அவள் பேதமையையே காட்டுகின்றது.

இனி, யாங்கள் தருமாத்திகாயம் இல்லையானால் பொருள்களுக்கு இயக்கமில்லை என்றே கூறுவேம். இக் கருத்துணர மாட்டாமல் நாங்கள் தருமாத்திகாயம் பொருள்களை இயக்கும் என்று கூறினேமாகப் பிறழவுணர்ந்து குற்றங் கூறுகின்றனை இதுவும் நின்குற்றமே காண்.

இது நிற்க; நீயோ வானம் என்னும் பூதமொன்றுளதாகக் கூறுவதில்லை. அங்ஙன மிருந்தும் மேனிலையுலகம் கீழுலகம் என்னும் இவற்றிற் கெல்லாம் அந்த வானமே இடமாகவும் கூறுகின்றாய்.

இன்னும் ஐங்கந்தங்களையல்லால் காலம் என்னும் பொருளையும் நீ கொள்கின்றிலை. அங்ஙனமிருந்தும் கணம் என்றும் கற்பம் என்றும் காலங்களைப் பற்றியும் பேசுகின்றனை. இங்ஙனம் கூறுவதற்கு நீ பித்தேறினாய் போலும்.

பேதாய்! இன்னும் நீ யாங்கள் எந்த அளவையால் உயிருண்மை கண்டேம் என்று வினவி நூலளவையால் பெற்றேமெனின் அது கொள்ளப்படாதென்கின்றனை. அறியாது கூறினை! நீ நினது அறிவுக்கந்தத்திற்கு எந்த அளவை கொண்டாயோ அவ்வளவையே உயிருண்மை காண்டற்கும் சாலும். நீ நூலளவை கொள்ளாயாகவும் துறக்கம் நரகம் தேவர் என்னும் இவற்றின் உண்மையை அந்நூலளவையானன்றி எவ்வாறு காணவல்லை? கூறுதி.

மொக்கலன்: நங்கையே! அஃதொக்கும்; நீ உடலின் அளவிற்று உயிர் என்கின்றனை! அஃதெங்ஙனம் பொருந்தும்? ஒரே அளவுள்ள இரண்டு குடம் ஒன்றனுள் ஒன்று புக்கடங்குமோ? கூறுக.

நீலகேசி: ஆயின் உடலளவிற்றாகிய ஊற்றுணர்வு அவ்வுடலிலே அடங்கு மென்பாய். அங்ஙனமே இதனையுங் கொள்ளக் கடவாய்.

மொக்கலன்: நன்று ஏடி! நீ அறிவுபடும் துயரத்தை உயிரே நுகரும் என்கின்றனை இஃதெவ்வாறு பொருந்தும்?

நீலகேசி: ஏடா! யாங்கள் உயிரையும் அறிவையும் குணியும் குணமுமாகக் கொள்வோமாகலின் நன்கு பொருந்துவதே. நீயோ அவற்றை வேறுவேறாகக் கொள்கின்றாய் ஆதலின் இவ்வுண்மை உனக்கு விளங்காது காண்!

இவ்வாறு மொக்கலன் குண்டலகேசியின் கூற்றை வழி மொழிந்து அவள் நாதகுப்தனுக்குக் கூறிய குற்றங்களை நிரலே எடுத்துக் கூறுந்தோறும் நீலகேசி அவற்றிற்கெல்லாம் அமைதி காட்டித் தீர்வு கூறுகின்றாள்.

ஈண்டுப்பழையவுரையாசிரியர் சமயதிவாகர வாமன முனிவர் மொக்கலன் கூற்று ஒவ்வொன்றற்கும் குண்டலகேசி என்னும் பெருங்காப்பியச் செய்யுள் ஒவ்வொன்றின் முதலை எடுத்துக் காட்டி இது இன்னசெய்யுளின் கருத்தைத் தழுவிக் கூறியது என்று குறித்துப் போகின்றார். இவ்வாறு இச்சருக்கத்தில் நூற்றுக்கு மேற்பட்ட செய்யுள் முதல்கள் இவரால் குறிக்கப் பட்டுள்ளன. இவையெல்லாம் குண்டலகேசி என்னும் பெருங் காப்பியத்துள்ள செய்யுள்களே என்பதில் சிறிதும் ஐயமில்லை.

மேலும் அவர் எடுத்துக்காட்டும் செய்யுள்கள் தம்மகத்துக் கொண்டிருந்த கருத்துக்கள் தாமும் இன்னின்னவை என்ப தனையும் அவர் உரையால் யாம் நன்குணர்கின்றோம். மற்றும் குண்டலகேசியின் வரலாற்றினையும் இந்தச் சருக்கத்தில் உரை யாசிரியர் சுருக்கமாகக் கூறியுள்ளனர். இவர் கூற்றாலன்றி யாம் குண்டலகேசியின் வரலாற்றை அறிதற்குப் பிறிதொரு வழியுமில்லை. அவ்வுரையாசிரியர், கூறும் குண்டலகேசியின் வரலாறு வருமாறு :

"குண்டலகேசி யென்பாளொரு வைசிய கன்னிகை. இவ ளொரு நாள் பிரசாதஸ்தலத்து, விளையாடுகின்றாளாக ஒரு கிதவப வைசிய புத்ரன் காளனென்பான். இவன் பௌத்தர் சனங் கொண்டு பலவழியுஞ்சோர விருத்திபண்ணிச் செல்வானை அரசன் வதிக்கவென்றேவச் சிறைப்பட்டுப் போகின்றானை, முன் சொன்ன குண்டலகேசி கண்டு காமப்பரவசையாக; அதனை யறிந்து அவளுடைய பிதா ராசாவைக் கண்டு யாதானுமோ ருபாயத்தால் மீட்டு இவனுக்குக் குண்டலகேசி என்னுங் கன்னிகையினை விவாக விதியாற் கொடுத்து இனிது செல்கின்ற காலத்தொருநாள் ப்ரணய கலகத்து நர்மோகதி முகத்தால் நீ கள்வனன்றோ? என்று குண்டலகேசி சொல்லக் காளனுந் தன்னுள்ளத்தே சினங்கொண்டுபின்பு ஒருநாள் வித்யாசாதன வ்யாசத்தால் இவளைத் தனிக்கொண்டு ஒரு பர்வதத்தேறி, நீ என்னை இவ்வாறு சொல்லுதலில் யானுன்னைக் கொல்லத் துணிந்தேன் என்னக் குண்டலகேசியும், 'தற்கொல்லியை முற் கொல்லிய' வென்பதன்றே இவனை யான் கொல்வேனென நினைந்து, 'யான் சாகிறேனாகில் உம்மை வலங்கொண்டு சாவல்' என அதற்கியைந்த காளனை வலங்கொள்கின்றாள், வரையி னின்றும் விழநூக்கினள். நூக்கக் காளனும் புத்தஸ்மரணத்தி

ளுல் மோக்ஷித்தனன். குண்டலகேசியும் பர்த்ரு விரக துக்கிதை யாகித் துறப்பனென நினைந்து பரசமயங்களெல்லாம் நாவல் நட்டுச் சயித்துப் பௌத்த தர்சனங் கொண்டு முத்தி பெற்றனள்'' என்பது இந் நூலாசிரியர் குறிப்பாகும்.

இனி இச்சருக்கத்தில் நீலகேசி உயிரில்லை என்னும் பௌத்த சமயக் கொள்கையை மறுத்து உயிருண்மையை நிலை நாட்டும் பகுதியும்,

ஊனுண்டும் உயிர்கட்கு அருளுடையேம் என்னும் பௌத்தர் கொள்கையை நகைச்சுவைபட மறுத்துக் கூறும் பகுதியும்,

ஆருகதருடைய காயக்கிலேசத்தைப் பழிக்கின்ற மொக்கல னுக்கு அவள் காட்டும் அமைதியும்,

புல்மரம் முதலியன உயிருடையனவல்ல. அவை கொடிப் புற்றும் மயிரும் உகிரும் உயிரில்லனவாகியும் வளருமாறு போல வளர்வன என்னும் பௌத்தர் கொள்கையை, மறுத்து அவை உயிருடையனவே என்று நிலைநாட்டுகின்ற பகுதியும், வியத்தகு நுணுக்கமுடைய பகுதிகளாம்.

இனி, இச்சருக்கத்து முடிவினும் ஈண்டு மொக்கலன் கூற்றாக வருவன வெல்லாம் குண்டலகேசி என்னும் பெருங் காப்பியத்தில் வருகின்ற குண்டலகேசி கூற்றுக்களே என்று நம்மனோர்க்கு நினைவூட்டுவார் போன்று,

> ''கோதியீட் டுள்ள தெல்லாங் குண்டலகேசி யென்பாள்
> ஆதிசால் ஆவணத்து ளார்கதர் தம்மை வென்ற
> வீதியீ தென்று சொல்லி வீழ்ந்தனை நீயும்''

எனவரும் நீலகேசி கூற்றாலுணர்த்துதலும் உணர்க.

நீலகேசியின்பால் தோல்வியுற்ற மொக்கலனும் அவளுடைய சான்றாண்மையால் அவள்பாற்பேரன்பு கொண்டு அவளையே ஞானசிரியையாகக் கொண்டு ஆருகத சமயத் தத்துவங்களைக்கேட்டு அச்சமயத்தையேசார்ந்து உய்கின்றான். பின்னர் அவன் கூறிய புத்தன்பால் சொற்போர் புரிவதற்கு அந்நகரத்தினின்றும் புத்தன் இருந்து அறங்கூறுகின்ற கபில புரத்திற்குச் செல்வாளாயினள்.

## புத்ததேவனும் நீலகேசியும்

அருளறத்தையே தலைசிறந்த அறமென்றும் அருள்வழி நின்றே வீடுபேறெய்த வேண்டும் என்றும் அறிவுறுத்த புத்த தேவன் ஊன் உண்ணவும் கூறினான் என்னுமிது நம்மனோர்க்கு வியப்பையே அளிப்பதாயினும் இந்த இழுக்குப் பௌத்த சமயத்தில் இக்காலத்தினும் நிலைபெற்றிருத்தலைக் காணலாம்.

அருணிரம்பிய திருவுள்ளமுடைய புத்தர் பிரான் ஊனுண்ணவும் உடன்பட்டமைக்குக்காரணந்தான் யாது? பண்டைக்காலத்தில் நந்தமிழகத்தில் பௌத்த சமயத்தைத் தழுவிய தமிழ்ச்சான்ரேர் ஊன் தின்ருர் என்பதற்குச் சான்றில்லை. இதற்கு மாருகத் தமிழகத்துப் பௌத்தர் புலாலுணவு நீத்துத் தூயராகவே இருந்தனர் என்பதற்குஞ் சான்றுளது. மேலும் புத்தசமயத்தில் இவ்விழுக்கு நேர்ந்தமைக்குக் காரணம் இன்னதென்பதனையும் ஈண்டு யாம் சிறிது கூறவேண்டி வருகின்றது.

நந்தமிழகத்துள் நிலவிய பௌத்த சமயத்தார் நிலைமைக்குத் தீராத சான்ருக இன்றும் நின்று நிலவுவது மணிமேகலை என்னும் மாபெருங் காப்பியமே யாகும். அக்காப்பியத்தில் ஆதிரை பிச்சையிட்ட காதையைத் திறந்து நோக்குமின். அக்காதையில் ஆதிரை கணவனுகிய சாதுவன் ஒரு பௌத்தன். இவன் மரக்கலத்தேறிப் பொருளீட்டப் போங்கால் மரக்கலம் கேடுற நன்மரம் பற்றி நக்க சாரணர் நாகர்வாழ் மலைப்பக்கம் சார்ந்தனன். நாகர் தலைவன் அவன்பாலன்புற்று அவனுக்கு உணவாக ஊன் கொடுக்கக் கட்டளையிடுகின்றனன். சாதுவன் இல்லறத்தான் என்பதும் நினைக. ஆயினும் அவன் ஊன் உணவை வன்மையாக மறுக்கின்ருன். இவன் தமிழகத்தே பௌத்தராயினேர் ஊன் உண்டிலர் என்பதற்குச் சான்று.

இனி புத்தர் ஊன் உண்ணலாம் என்று ஏன் கூறினர் என்பதற்கும் சான்று இச்சாதுவனே ஆகின்ருன். எவ்வாறெனிற் கூறுதும். அந்நாகர் தலைவனுக்கு அறங்கூறும் சாதுவன், அவன் ஊன் உண்ணுவிடின் யாம்உயிர் வாழ்கில்லேம் ஆதலின் எமக்காம் அறங் கூறுக! என்புழி "அடுதொழில் ஒழிந்தவர் ஆருயிர் ஓம்பி மூத்துவிளி மாவொழித்து எவ்வுயிர் மாட்டும் தீத்திறம் ஒழிக, என்று அறிவுறுத்துகின்ருன் அல்லனே? ஈண்டு ஊன் உண்ணலாம் என்பது சாதுவன் கருத்தன்று, ஊனுணவே கொண்டு உயிரோம்பு மியல்புடையோர்க்கு அறிவுறுத்தியதொரு புறனடை விதியே இஃதென்றுணரலாம். இப்புறனடை விதியையே புத்தர் அறிவுறுத்த ஓர் அறம்போன்று கொண்டு பிற நாடுகளில் பௌத்தத் துறவோரும் ஊன் உண்ணல் பேதைமையேயன்றிப் பிறிதொன்றில்லை.

இனி, ஆருகத சமயத்தார் புத்தர் சமயத்தாரைக் கூறுகின்ற குற்றங்களிற் றலைசிறந்த குற்றமும் இஃதேயாம். இப் புத்தவாதச் சருக்கத்தில் பௌத்தர் மேற்கொண்டுள்ள இப் புலைவினை பயில்வோர் உளத்தே நன்கு பதியவேண்டும் என்று கருதிய இந் நீலகேசி யாசிரியர் புத்தர் உறையுமிடத்தை மீனும் ஊனும் அங்காடிகளிலே மிக்குக்குவித்து வைத்திருக்குமொரு பட்டினமாகவே வருணிக்கின்றனர்.

"நெடு வெண்டிரைமேல் நிமிருந்திமிலும் கடுவெஞ் செலவின் உலவும் கலனும் உடைத்தாய" நெய்தனிலப் பரப்பின் கண்ணதாகிய 'கபிலபுரம்' என்னும் அப் பட்டினம் ஊனும் மீனும் மிக்குக் குவிக்கப்பட்டிருத்தலால்,

> "கழுகின் இனமும் கழுதின் இனமும்
> முழுதும் அறுவை பலமூ டினரும்
> கொழுதின் நிணனும் பிணனுங் குலவி
> யிழுதென் எலும்பார் இடுகாடு" (௪௩௮)

எனவே இருப்பதாயிற்று.

இவ்வருவருப்பு மிக்க பட்டினத்திலே புத்தபெருமான் தம் பள்ளியில் அணிசெய் கோழரை அரைமரத்து நீழலிலே அமர்ந்திருக்கின்றார். நீலகேசி அப் பெரியார்பா லணுகி அவர் தம் மாணவர்க்கு அறமுரைப்பதனை ஒருசார் நின்று கேட்டனள். புத்தனார் தம் மாணவர்க்குத் தஞ்சமய தத்துவங்களை அறிவுறுத்து இவையே நம் தத்துவம் என்று முடிப்புழி நீலகேசி அவர் முன் சென்று "பெரியீர்! நீயிர் பித்தர் போன்று ஈண்டுப் பிதற்றியவைதாம் நும்முடைய தத்துவங் களோ? ஆயின் அவைதாமும் எவ்வாற்றானும் அறிவொடு பொருந்தா அவலவுரைகளே ஆம் என்பதனை யான் கூறிக் காட்டுவல் எனத் தொடங்கி ஐய! நீயிர் ஐங்கந்தங்களே பொருள் என்று வரையறை செய்து கூறிய பின்னர், மற்றவை பொருளல்ல என்பது கூறாமலே அமைவதாகவும் வேறு சிலவும் கூறி இவையும் பொருளே என்கின்றீர்! அங்ஙனம் கூறுவது பேதைமையாம்.

புத்தர்: பெண்ணே! பேதைமையாகாது. என்னை? நீ யான் கூறிய ஐங்கந்தங்களைப் பொருள் என்று ஒப்புகின்றனை யல்லையோ, ஒப்பவே ஏனையவும் பொருளேயாம்; எற்றா லெனின் அவற்றையும் யானே கூறினேன் ஆதலால்;

நீலகேசி: (நகைத்து) நன்று! நன்று! பெரியீர் நும் ஏதுவும் எடுத்துக்காட்டும் மிகவும் அழகே. ஒரு தொழு நோயாளன் என் உடம்பு பிணியற்றது, எற்றாலெனில் என் உடம்பாதலால் என் குடுமி மயிர்போல என்று ஏதுவும் எடுத்துக்காட்டும் கூறினான். நும்முடைய ஏதுவும் எடுத்துக் காட்டும் அவன் கூறியவற்றையே ஒக்கின்றனவல்லவோ? அது நிற்க, உம்முடைய கந்தமைந்தையும் முற்படக் கூறுக! அவை பொருந்தாமையை யான் கூறுவேன்!

இவ்வாறு நீலகேசி கூறப் புத்தரும் கந்த முதலிய வற்றைத் தொகை வகையானும் விரிவகையானும் நீல கேசிக்குக் கூறலாயினர். அதுகேட்ட நீலகேசி அவற்றை யெல்லாம் குற்றங்கூறி மறுக்கின்றனள். இவ்வாறு தொடங்கு கின்றது இப் புத்தவாதச் சருக்கம். இதன்கண் புத்தருடைய கணிக சித்தாந்தம் நீலகேசியால் மிகவும் நுணுக்கமாக ஆராய்ந்து காட்டி மறுக்கப்படுகின்றது. பௌத்தர்கள், உயிர் என்பது உண்மையில் இல்பொருளேயாம் ஆயினும் வழக்கு வகையால் உயிர் என்று ஒன்றுளதுபோற் கூறப்படும் என்னும் இக்கொள்கையையும் நன்கு வாதிட்டு உயிருண்மை யைத் திறம்பட நிலைநாட்டுகின்றனள்.

இனி, பௌத்த சமயத்தினர், நல்வினையும் தீவினையும் மனம் மொழி உடம்பு என்னும் மூன்றிடத்தும் தோன்றுவன என்றும், அவற்றுள் மனத்திற் றோன்றுவன இன்னின்னவை, மொழியிற் றோன்றுவன இன்னின்னவை, உடம்பிற்றோன்று வன இன்னின்னவை என்று வரையறை செய்துரைப்பர். இவ்வாறு அவற்றை வரையறை செய்தல் பெரும்பேதை மையேயாம் எனக் கூறி அவ் வரையறை குற்றமாதலை மிகவும் நுணுக்கமாக எடுத்துக் காட்டுகின்றனள். பௌத்தர் அவ்வாறு அவற்றை வரையறுத் தோதுதலை,

> ''தீவினை யென்ப தியாதென வினவின்
> ஆய்தொடி நல்லாய் ஆங்கது கேளாய்
> கொலையே களவே காமத் தீவிழைவு
> உலையா உடம்பிற் றோன்றுவ மூன்றும்''

எனவும்,

> ''பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
> சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்''

எனவும்,

> ''வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்று
> உள்ளந் தன்னில் உருப்பன மூன்றும்''

எனவும்,

> ''நல்வினை என்பது யாதென வினவில்
> சொல்லிய பத்தின் தொகுதியி னீங்கிச்
> சீலந் தாங்கித் தானம் தலைநின்று'' (உ௪ : ௬௨௨ - ௩௭)

எனவும் வரும் மணிமேகலையினும் காணலாம்.

இவற்றை நீலகேசி மறுத்துரைக்கும் பகுதியைச் சிறிது காண்பாம்.

நீலகேசி புத்தரை நோக்கி, ஐய! நீயிர் தீவினை பத்தென்று வரையறை செய்துவிட்டீர். ஆயின், கள்ளுண்ணுதலும் பிறர் பொருளைப் பறித்துக் கோடலும் நும்மால் தீவினை யென்று கொள்ளப்படாவாயின.

இனி 'வெஃகல்' என்று கூறிய சொல்லின் பொருள் 'விரும்புதல் என்பதே எனல் தேற்றம். துறவியாகிய நீயிர் போர்த்துள்ள இச்சீவர ஆடைகளும் குடையும் செருப்பும் பலிக்கலனும் அடைப்பையும் யாக்குப்பையும் சுண்ணம்புக் கொப்பும் ஊசியும் கத்தியும் பஞ்சணையும் இன்னோரன்ன பொருள் எல்லாம் நீயிர் விரும்பியே தொகுத்துக் கொண்டிருக்கின்றீர். இவற்றையெல்லாம் வெஃகும் நீவிரும் தீவினையாளரே என்பதில் ஐயமென்னை ?

இனி, வெகுளி தீவினை என்றீர். அவ் வெகுளியையே ஒப்பனவாகிய மாயமும் மானமும் உலோபமும் இன்னோரன்ன மனத்திற்றோன்றுவன சாலப்பலவாம். அவையெல்லாம் நல்வினையோ? நவிலுதிர் !

இனி மொழியில் பொய்யும் குறளையும் கடுஞ்சொல்லும் பயனில் சொல்லும் என இந்த நான்கு தீவினைகளே தோன்றும் என வரையறை செய்தீரல்லிரோ? செய்யவே இவையல்லாதன வெல்லாம் நல்வினையே ஆயின. ஆகவே, பெரியீர்! நீயிர் அறங் கூறுமவையத்து ஒருவன் வந்து அவையோரை நோக்கி இப் பேராசிரியராகிய புத்தர் ஈண்டு அறங்கூறுகின்றாரேனும் இவர் செய்தி கேண்மின் ! இவர் சிந்தாமாணவை என்பாளையும் பரிவிராசிகை (தவப்பெண்) ஒருத்தியையும் கொன்றனர். இப் புத்தர் ஒரு கம்மாளப் பெண்ணுக்கும் செக்கானுக்கும் பிறந்தவர் கண்டீர். கபிலபுரத்து முன்பொருநாள் நீலகேசியார்க்குத் தோற்றனர். என்றின்னோரன்ன நும்முடைய பழிகளைத் தூற்றுவானையவிடத்து இவன் மொழிகள் நிகழ்ந்தன கூறப்பட்டனவாதலால் பொய்யல்ல உண்மையேயாம். நும்மெதிர் நின்று கூறலின் குறளைச் சொல் எனலுமாகாது. மெல்லெனச் சொல்லலின் கடுமொழி என்னலும் கூடாது. நுமக்குக் குற்றங்கூறி அவையோரை உய்யக் கோடலின் பயனிலாச் சொல்லுமன்று. இன்னோரன்னவெல்லாம் நல்வினையோ கூறுதிர் !

இனிக், குற்றமென்ற குறளைச்சொல்லை ஒப்பன பலவும் உள்ளனவே அவையெல்லாம் நல்வினையே ஆதல் வேண்டும்.

பிறரைக் கொலை செய்விப்பான் மெத்தெனக் கூறிக் கொலை செய்விப்பின் அம்மொழி நல்லறமொழியோ?

இனித், தீவினையெல்லாம் மனத்தால் நினைந்து செய்யப் படுவனவே ஆகவும் அவற்றுட் சிலவற்றை மொழிக்குரியன என்றும் உடம்பிற்றோன்றுவன என்றும் வகுப்பதனாற் போந்த பயன் யாது?

ஐய! நீயிர் தூய்மையுடையீர் என்கின்றீர்; நும் நூல்கள் தூய்மையுடையன என்கின்றீர். நுமதுணவு தூயன என் கின்றீர். பின்னரும் எல்லாப் பொருளும் 'அசுசி' என்பதன் பொருள்தான் யாதோ? எல்லாம் அசுசி என்னும் நீயிர் உணவுண்பானேன்! மலந்தின்னலாமே!

இன்னும் நல்வினை செய்தார் தேவராவர் என்கின்றீர். நல்வினை செய்தான் அக்கணத்தே அழிந்து விடுதலால் பின் தேவனாய்ப் பிறக்குமாறெங்ஙனம்? உயிரின் இறப்பிற்கும் மறு பிறப்பிற்கும் காலத்தானும் இடத்தானும் இடையீடு பெரி தாகலின் அறஞ் செய்தான் இறந்து தேவனாங்காறும் இடை யிட்ட காலத்திற்றொடர்ந்து நிற்பது யாது? நீயிர் கணந் தொறும் பொருள் கெடும் என்பதனால் இறந்தவன் தேவனாதல் பொருந்தாமையறிமின்!

இங்ஙனமே நீலகேசி புத்தருடைய கூற்றையெல்லாம் நுண்ணிதின் மறுத்துக் கூறக்கேட்ட புத்தர் தாமும் அவள் மொழியா லீர்ப்புண்டு அவளை நன்கு மதிப்பராகின்றனர். அவர்க்கும் நீலகேசி ஆருகதசமய வறங்களை அறிவுறுத்திப் "பெரியீர்! நீயிர் மறைவாகவேனும் யான் கூறிய தத்துவங்களை மெய்யென்று கொண்டு அவ்வறமே மேற்கொண்டு உய்க" என அறிவுறுத்து அக் கபிலபுரத்தை விட்டு அப்பாற் செல்வா ளாயினள்.

புத்தரை அறிவுறுத்துஅப்பாற் போகின்ற நீலகேசி தமிழ் நாட்டில் உறையூரை எய்தி ஆங்கு அருகக்கடவுளை அழகிய செய்யுட்களாலே உள்ளமுருகப் பாடிப் பரவிச் செல்வதாக நூலாசிரியர் கூறுவது தாய்நாட்டின்பாற் கொண்டுள்ள பேரன்பின் விளைவு போலும். உறையூரில் எழுந்தருளிய அருக பரமனடிகளை வணங்கி அவ்வாயிழையாள் பின்னும் அவ்வருகன் நல்லறமே தெருட்டும் பணியே மேற்கொண்டு வடநாட்டின் கண்ணுள்ள 'சமதண்டம்' என்னும் நகரத்தை அடைந் தனள்.

## பூரணனும் நீலகேசியும்

சமதண்டமா நகரத்துள் நீலகேசி ஆசீவகசமயத்துத் தலைமைத் துறவியாகிய பூரணன் என்பானைக் கண்டு அவன் சமயத்துத் தலைவன் நூல் பொருள் நிகழ்ச்சி என்னும் நான்கனையும் வினவுகின்றாள். ஆசீவகர் காரணத்தாற் காரியம் நிகழ்கின்றன என்னும் கொள்கையை ஏற்பதில்லை. இதனால் இத் துறவோர் குழுவினைக் "காரணம் வேண்டாக் கடவுள் குழாஅம்" என்று நூலாசிரியர் நமக்கறிவுறுத்துகின்றார். ஆசீவகர் என்போர் சமண சமயத்தில் உள்ள (நிகண்டர் ஆசீவகர் என்னும்) இருவகையினருள் ஒருவகையினர் ஆவார். அதனால் நீலகேசி அப் பள்ளி யாருடையது? என்று வினவும்பொழுது ஒரு துறவி இங்குறைவோர் 'அயலிய ரல்லர் ஆசீவகரே' என்று விடை கூறுகின்றான். ஆசீவகத் துறவோர் தலைவனாகிய பூரணன் தன்சமயத்து நாற்பொருளையும் இங்ஙனம் கூறுகின்றான் :

"நங்காய் கேள்! எமது தத்துவம் நுண்மாணுழை புலனுடையார்க்கன்றி ஏனையோர் அறிதற்கரிய நுணுக்க முடையது காண்! எம் தலைவன் 'மற்கலி' எனப்படுவான். எம் நூல் 'நவகதிர்' என்னும் ஒன்பது கதிர்நூலாகும். எம்பொருள் மிகவும் நுண்ணியனவாகிய நிலவணு, நீரணு, தீயணு, காற்றணு, உயிரணு என்னும் இவ்வைந்து அணுக்களேயாம். உள்ளது கெடாது, இல்லது தோன்றாது, என்பது எங்கொள்கை. பொருள் நிகழ்ச்சியாவன - ஆழ்தலும் மிதத்தலுமேயாம்" என்று முற்படத் தொகை வகையாற் கூறிப் பின்னர், இவை யிற்றை விரிவகையானும் விளக்கினன். அவற்றைக் கூர்ந்து கேட்ட நீலகேசி மறுத்துக் குற்றங் கூறுகின்றாள்:

பெரியீர்! நுந்தலைவன் வானிடும் வில்லனையன் எனக் காரணமின்றியே தோன்றியவன் என்கின்றீர். வானிடுவில் காரணம் இன்றித் தோன்றியதன்று. ஞாயிற்றொளி முகிற் படலத்தின்மேல் விழும்போது வானவில் தோன்றுகின்றது. அங்ஙனமே நின்றலைவனும் தாய் தந்தையராகிய காரணத்தாற் றோன்றியவனே ஆதல் வேண்டும்.

இனி, மற்கலியாகிய நும்மிறைவன் முற்றறிவுடையன் ஆகலின் பேசாதடங்கிய பெருமையோன் என்றும், யாதொன்றும் செய்வதுமிலன் என்றும் கூறுகின்றாய். ஆயின் அவன் நூல் கூறினன் என்பது பேதைமையேயாகின்றது.

இங்ஙனம் கூறவே பூரணன் இடைமறித்துப் பெண்பாவாய் மற்கலி நூல் செய்யானெனினும் ஒக்கலி, ஒகலி எனப் பின்னும்

இரண்டு தெய்வம் எமக்குளவாகலின் அவற்ருல் நூல் செய்யப் பட்டன, என்ருன்.

நீலகேசி: அவை முற்றறிவுடையனவோ? சிற்றறிவுடையனவோ? முற்றறிவுடையனவாயின் மற்கலிபோல்பேசாதடங்குவனவாம். சிற்றறிவுடையனவாயின் அவை செய்தன மெய்ந் நூலாகமாட்டா? ஆகவே நீயிர் நூல்பெற்றவாறென் பேசுதிர்?

மேலும் மற்கலி முற்றறிவனுயினும் வாளாவிருப்பின் அவனுற் பயன்தான் யாதோ? அவனை முற்றறிவன் என்று நீயிர் அறிந்தவாறு தான் எப்படி? பேதையீர்! இங்ஙனம் நீயிர் முற் கூறியவை பிற்கூறியவற்றை அழித்துவிடுகின்றனவே என்ருள்.

பின்னர் ஆசீவகர் குணகுணிகள் இல்லை என்பராதலின் அதனையும் அழகாக மறுத்து அவர்க்குப் பேதைமை யூட்டுகின்ருள்.

இனி உள்ளது கெடாது இல்லது தோன்ருதென்னும் அவர்தம் மேற்கோளையும் நகைச்சுவைபட மறுக்கின்றனள்.

ஐய! நீயிர் எல்லாவகையானும் உள்ளது கெடாது இல்லது தோன்ருதென்கின்றீர். அங்ஙனமாயின் நீயிருண்ணும் சோற்றிலே பின்னர்த் தோன்றுவதாகிய மலமும் கிடத்தல்வேண்டும். இங்ஙனம் கூறும் நுமது பேதைமையை என்னென்பது என்று நகைக்கின்ருள்.

இன்னும் ஆசீவகர் கொள்கையாகிய நான்குவகை நியதங்களும் நகைச்சுவைபட மறுக்கப்படுகின்றன. அந்நியதமாவன– க - ஆவது ஆகும். உ – ஆகுமாறேயாகும். ௩ - ஆகுமளவே ஆகும். ௪-ஆகுங்காலத்தே ஆகும் என்னுமிந் நான்குமேயாம். இவற்றிற்கு எடுத்துக்காட்டு வருமாறு—அரிவைப் பருவத்தையடைந்த பெண்குழவி ஆவது ஆகும் என்பதற்கும், அதனை வளர்க்குமாற்றில் வளர்த்தால் அவ்வாறரிவையாவது ஆமாறு ஆகும் என்பதற்கும், அரிவை நான்கு முழு உயரமே பெறுதல் இஃது ஆமளவு ஆகும் என்பதற்கும், அரிவையாதற்குப் பன்னீராண்டு வேண்டுதலின் இஃது ஆகுங்காலத்து ஆகும் என்பதற்கும் எடுத்துக்காட்டுக்களாம். இந்நியதங்களே அவர்தம் உள்ளது கெடாது இல்லது தோன்ருதென்னும் கொள்கைக்கு முரணுதலை நீலகேசி மிகவும் அழகாக எடுத்துக் காட்டுகின்ருள். இவ்வாறே ஆசீவகனுகிய பூரணன் கூற்றையெல்லாம் பயில்வோர் உள்ளம் விம்மிதமடையும் வகையில் நீலகேசி திறம்பட மறுப்பவற்றையெல்லாம் நூலின்கண் விரிவாகக் கண்டு மகிழ்க!

இறுதியில் ஆசீவகராகிய நுங்கள் கொள்கை அவல முடையன ஆதலின் நுங்கள் மற்கலி தேவனைக் கைவிட்டு அருக பரமனுடைய அடிமலர் வணங்கி அவன் கூறிய பரமாகம நெறி நின்றுய்ம்மின்! என அறிவுறுத்து அவரையெல்லாம் ஆருகத நெறிப்படுத்தி அப்பாற் செல்கின்றாள்.

## பராசரனும் நீலகேசியும்

சமதண்ட நகரத்தினின்றும் புறப்பட்டு பூரணன் வேண்டு கோளிற்கிணங்கி அத்தினபுரத்திருந்து பிற சமயத்தாரோடு சொற்போர் தொடுத்து வெல்வதையே காரியமாகக் கொண்டு பிற சமயக்கணக்கரை அறைகூறியிருக்கின்ற 'பராசரன்' என்னும் சாங்கிய சமயப் பேராசிரியன்பாற் சென்று சேர்ந்தனள்.

சாங்கிய தத்துவங்களை, பல்வேறு சமயத்தவரும் மேற் கொண்டுள்ளனர். தத்துவங்களை முதன் முதல் வகுத்தவர் சாங்கியரே என்றும் கூறுப. இத்தகைய சிறப்புடைய சாங்கிய முனிவனைக் கண்டு நீலகேசி வழக்கம்போல, ஐயனே! நுங்கள் அரிய தத்துவங்களை அடிச்சிக்கும் அறிவுறுத்துக! என்று விநயத்துடன் வினவிநின்றாள். அவள் வேண்டுகோட்கிணங்கி நங்காய்! நன்று நன்று, கூறுவேன் கூர்ந்து கேள் என்று பராசரன் கூறத் தொடங்கினன்.

நங்காய்! பரமாத்துமாவும், பிரகிருதியும், மகானும், அகங் காரமும் ஞானேந்திரியம் ஐந்தும், கருமேந்திரியம் ஐந்தும் மனமும், தன்மாத்திரை ஐந்தும் பூதங்கள் ஐந்தும் என இவ் விருபத்தைந்துமே எமக்குத் தத்துவங்களாம்.

பரமாத்துமா எவ்வாற்றானும் செயலற்றவனும் குணமற்ற வனும் உள்பொருளாயுள்ளவனும் வேற்றுமையில்லாதவனும், பற்றில்லாதவனும் அழிவற்றவனும் காண்பானும் நுகர்வானும் ஆவன், இவனே எமக்குத் தலைவன் காண்!

இனி. பிரகிருதியாவது—புடைபெயர் வில்லாமல் நிலையே றுடையதும், யாண்டும் நிறைந்ததும், உருவமற்றதும், பொறி களுக்குப் புலனாகாததும் ஒன்றேயாய்ச் செயலற்றதும் பிரி வற்றதுமாகும் காண்.

இந்தப் பிரகிருதியினின்றும் மகான் பிறக்கும்; மகானில் அகங்காரம் பிறக்கும்; அகங்காரத்தினின்றும் மனமும் தன்மாத் திரை ஐந்தும். ஞானேந்திரியம் ஐந்தும் கருமேந்திரியம் ஐந்து மாக இப்பதினாறு தத்துவமும் பிறக்கும்; தன்மாத்ரை ஐந்தி னின்றும் பூதங்கள் ஐந்தும் தோன்றும்; இவையேயன்றி வேறு

தத்துவம் இல்லை என்று அறிவாயாக! என்று இனிதின் அறிவுறுத்தினன்.

அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த நீலகேசி இறுதியில், பெரியீர்! நும் தத்துவங்கள் மையல் உடையார்க்கன்றி மற்றையோர்க்கு வறும் பொய்யேயாம் என்று இகழ்ந்துரைத்தாள். இவ்விகழ்ச்சி பராசரன் சினத்தைப் பெரிதும் தூண்டிற்று. கதக்களியானைமுன் கல்லெறிந்தாற் போன்ற அக் காரிகையின் எள்ளலைப்பொருதவனாய் அம்முனிவன் ஏடி? பொய்யோ இவை? பேதாய்! அங்ஙனமாயின் இவற்றிற்குக் குற்றம் கூறுதி என்று உளங்கொதித்துக் கூறினன். அதுகேட்ட நீலகேசி! ஐய! சினவேல்! நின்னுடைய ஆத்துமன் செய்கையில்லான் என்று கூறினையல்லையோ? இது வாய்மையாயின் நீயே ஆத்துமாவற்றவன் என்றவாறாயிற்று; என்னை? நின் ஆத்துமன் செய்யானாகவும் நீயோ அருஞ்செயலாகிய தத்துவம் கூறுகின்றனை ஆதலாற் காண்! என்றாள்.

பராசரன் : பேதாய்! ஆத்துமன் பரமாத்துமன் அந்தராத்துமன் கருமாத்துமன் என மூன்று ஆத்துமன் உண்டாகலின் பரமாத்துமனே செய்யான் என்றேன்; இதன்கண் யாது குற்றம் உளது? கூறாய்.

நீலகேசி : ஐய! நீர் இப்போது ஒரு குற்றத்தை மறைத்தற்கு மீண்டும் ஒரு குற்றஞ் செய்துவிட்டீர்!

பராசரன் : என்னை! என்னை! அக்குற்றம் யாது?

நீலகேசி : முன்னர்ப் பரமாத்மன் முதலாகப் பூதமீறாக எமக்குத் தத்துவம் இருபத்தைந்தே என்று அறுதியிட்டுரைத்தீர். ஈண்டுப் பின்னும் இரண்டு குட்டி ஆத்துமாக்களும் உண்டென்கின்றீர். இவற்றையும் கூட்டித் தத்துவம் இருபத்தேழு என்னுமை குற்றமன்றோ?

ஐய! மேலும் நின் பரமாத்துமன் சோம்பன் குணமிலன், உண்ணான் என்கின்றீர். இந்தப் பரமாத்துமன் இல்லையாயின் யாது கெடும்? இங்ஙனம் ஒரு தத்துவங் கோடல் பயனில் செயலன்றோ?

இன்னும் புடைபெயர்ச்சியுடையதற் கல்லது பிரகிருதி முதலியவற்றோடு கூடுதலுங் கூடாது. யான் எனது என்னும் செருக்கே உருவமாகிய நின்னுடைய அகங்காரதத்துவம் அறிவுப் பொருள். இஃது அறிவில் பொருளிற் பிறக்கும் என்றது பேதைமையேயாம். இது கூடாமையால், ஏனைய தத்துவங்

களும் தோன்றுதல் கூடாது காண்! இவ்வாற்றால் உன் தத்துவமனைத்துமே பொய்யாதலுணர்க.

இனி, இவை இவ்வாருக,

"புத்தேக் திரியமும் கம்மேக் திரியமும்
பத்தேக் திரியத்தோ டொன்ருப் படைத்தனே
பித்தேக் திரியமும் பேயேக் திரியமும்
குத்தேக் திரியமும் கொண்டிலே யன்றே" (எடுசு)

அதற்கென் சொல்லுதி ? என்று அசதியாடி நகைத்தனள்.

பராசரன் : ஏடி ! ஒரு குருடனும் முடவனும் தம்முட் கூடி முடவன் குருடன் தோளிலேறி வழி கூறக் குருடன் அவனைச் சுமந்து சென்று ஒரு நகரத்தை எய்தினாற்போல ஆத்துமனும் பிரகிருதியும் தம்முட்கூடி ஏனைய தத்துவங்களைத் தோற்றுவிக்குங் காண் !

நீலகேசி : நன்று நன்று; குருடன் நடப்பான் முடவன் வழி கூறுவான் இருவரும் அறிவுடையர் ஆதலின் அவர் செயல் நிகழ்தல் கூடும். உன்னுடைய ஆத்துமன் மட்டுமே அறிவுடையது பிரகிருதியோ அறிவில் பொருள் இவ்விரண்டும் கூடுதலும் பிறப்பித்தலும் எங்ஙனம்? பேதாய் ! உன் எடுத்துக்காட்டே போலியாதலுணர்க !

இவ்வாறு நீலகேசி நகைச்சுவை கெழும அவன் கூறிய தத்துவமனைத்துமே வெறும் பிதற்றல் என்றபின்னர், பராசரன் அனைத்தும் பரமாத்துமனின் செயலே காண் என்று கூறியவழி அவள் பெரிதும் விலாவிற நகைத்துப் பேதாய் ! உன்னைப் போலவே உன்பரமாத்துமனும் பெரும்பேதையே ஆதல் வேண்டும், என்னை ? அவ்வாத்துமனே,

"நாயாய்க் கடிக்கும்! நரியாய்ப் பலகொல்லும்
பேயாய்ப் புடைத்துண்ணும் பெற்றமுமாய்க் குத்தும்
ஈயாய் நலியும் எறும்பாய்த் தெறும்" (எஎசு)

என்கின்றனையல்லையோ? நன்று நன்று நின் பரமாத்தும தத்துவம் இருந்தவாறு ! என்று எள்ளினள்.

இவ்வாறு நீலகேசி அச் சாங்கிய சமயாசிரியனைச் சொல்லுக்குச் சொல் நகைச்சுவை ததும்ப மறுத்தொழிக்கின்ருள். அவன்ருனும் நீலகேசிக்கு மறுமொழி ஒன்றேனும் கூறமாட்டாஞய் அவளையே தஞ்சம் புகுந்தாஞக! அவனையும் நீலகேசி அன்போடு ஏற்றுக்கொண்டு சினவரன் திருமொழியாகிய

பரமாகமத்தைச் செவியறிவுறுத்தியருள அவன்றானும் ஆருகத நெறியிலே நடந்துய்வானாயினன்.

## உலகசித்தும் நீலகேசியும்

பராசரனை ஆருகதனாக்கிய பின்னர் அச்சேயிழை வைசேடிக சமயாசிரியனாகிய உலகசித்து என்பானுடைய தவப்பள்ளியை எய்தினள். அவனும் இவள் சொற்போர் புரியவே ஈங்குற்றனள் என்று குறிப்பாலுணர்ந்தவனாய் அவளை வெல்லவேண்டும் என்று கருதிச் சொற்போர்க் குடன்படுவானாயினன்.

வைசேடிக சமயம் என்பது தார்க்கிகர் சமயங்கள் இரண்டனுள் ஒன்று. அவையாவன : வைசேடிகமும் நையாயிகமுமாம். இவற்றுள் வைசேடிக நூலிற் கூறப்படும் பொருளாவன: திரவியம், குணம், தொழில், பொது, சிறப்பு, கூட்டம் என்னும் இந்த ஆறுமாம்.

இவற்றுள் திரவியமாவது: நிலம் நீர் தீ வளி வெளி காலம் திசை ஆன்மா மனமென ஒன்பது வகைப்படும். அவற்றுள் நில முதலிய நான்கும் அநித்தப் பொருள்கள். அவற்றின் காரணங்களாகிய நால்வகைப் பரமாணுக்களும் வெளியும் ஆகிய ஐந்தும் நித்தப் பொருள்கள். வெளி காலம் திசை என்னும் மூன்றும் தனித்தனி ஒரோவொன்றாய் யாண்டும் நிறைந்துள்ளன. ஆன்மாக்களும் எண்ணிறந்தனவாய்த் தனித்தனி யாண்டும் நிறைந்துள்ளன. மனம் அணுவளவிற்றாய் ஆன்மாக்கடோறும் வெவ்வேறாயிருக்கும். ஆன்மா பரமான்மா சீவான்மா என இருவகைப்படும் பரமான்மா முற்றுணர்வுடையவன். எல்லாம் வல்லவன். அவன் விரும்பியவாறு உலகந் தோன்றி ஒடுங்கும். அவனாற் செய்யப்பட்டதே வேதம். இனிச் சீவான்மாக்கள் வினைக்கீடாகப் பிறந்திறந்து இன்பதுன்பங்களை நுகர்வனவாம். ஆன்மாக்களுக்கு மனத்தோடு கூடாதவழி அறிவில்லை என்ப.

இனி, குணமாவன :—உருவம் முதலியனவாக இருபத்து நான்கு வகைப்படும் என்க.

தொழில் : எழுதல் முதலியன.

பொது : பலபொருட்குப் பொதுவாகிய தன்மை.

சிறப்பு : ஒவ்வொரு பொருட்கே சிறந்துரிமையுடைய தன்மை.

கூட்டம் : உறுப்பு முதலியவற்றிற்கு உறுப்பு முதலியவற்றோடு உளதாகிய இயைபு.

நீலகேசி உலோகசித்துக் கூறிய இத்தத்துவங்களையும் வழக்கம்போல் மறுத்து உலோகசித்தின் வாயை அடக்கு கின்றாள்.

நீலகேசி ஈண்டுத் திசை என்னுந் தத்துவத்தையும் சிறப்பு பொது கூட்டம் என்னும் தத்துவங்களையும் மறுக்கும் பகுதி மிகவும் நுணுக்கம் வாய்ந்ததாம். அவற்றையெல்லாம் நூலிற் கண்டு மகிழ்க. நீலகேசி உலோகசித்தையும் சொற்போரிற் றோற்பித்து அவனையும் ஆருகத நெறிபற்றி ஒழுகுமாறு செவியறிவுறுத்துப் பின்னாப் பலகாவதங் கடந்துபோய்க் 'காகந்தி' என்னும் நகரத்தை எய்தி அந்நகரத்தின்கண் வேதங்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்தவனும் வேதவழிப்பட்ட சமயங்களை மாந்தர்க்கு அறிவுறுத்தும் பேராசிரியனுமாகிய பூதிகன் என்னும் அந்தணன் உறையும் வேத பாடசாலையை அடைந்து அப் பேராசிரியனுடைய தத்துவங்கள் என்ன என வினவுகின்றாள்.

## பூதிகனும் நீலகேசியும்

பூதிகன் என்னும் அவ் வேதியன் நீலகேசி பிற சமய சித்தாந்தம் ஆராய்தற்கே இவண் வந்ததுபோலும் என்று கருதியவளுய்த் தன் மாணவர்க்கு நமது வேதம் அநாதி. அவற்றை மாந்தர் செய்ததில்லை என்றும், இவ் வேதத்தினடி யாகவே உலகில் சாங்கியமும் வைணவமும் மாகேசுவரமும் பாசுபதமும் பாஞ்சராத்திரமும் பரிவிராசகமும் அவற்றின் விகற்பங்களும் தோன்றின என்றும் அவ் வேதத்தின் மாண்பு களைக் கூறிக் கொண்டிருந்தான். நீலகேசியை நோக்கி ஏடி! நீ சூத்திரப் பெண்போல்கின்றாய். அங்ஙனமாயின் நீ வேதத்தைக் கேட்கும் தகுதியுடையையல்லை! வெளியே போகக் கடவை என்று சினந்துரைத்தான்.

நீலகேசி : வேதியரே! நுங்கள் வேத மரபில் சிறந்தவ ராகிய வதிட்டன் அகத்தியன் சத்தி பராசரன் வியாசன் சுகன் முதலியோர் கீழ்வகுப்பினரேயல்லரோ? அவர்கட்குள்ள தகுதி எனக்கில்லாமை எப்படி? வதிட்டனும் அகத்தியனும் பிரமன் தேவ கணிகையாகிய திலோத்தமையைக் கண்ட காலத்தே கலசத்திற் பிறந்தனர் என்ப. வதிட்டனுக்குச் சண்டாளி வயிற்றிற் பிறந்தான் சத்தி என்பவன் என்ப. சத்திக்கு மடைத்தொழிலாட்டிபாற் பிறந்தான் பராசரன் என்ப. பரா சரனுக்கு வலைச்சிபாற் பிறந்தான் வியாசன். வியாசனுக்குத் தேவ கணிகைபாற் பிறந்தவன் சுகன் என்ப. இக் கீழ்மக்கட்

கெல்லாம் உரிமையுடைய நும்வேதம் எனக்குரிமை யற்றது என்கின்றீர் !

பூதிகன் : ஏடி! அவர்கிடக்க? நீ எம் வேதத்திற்குக் குற்றங் கூறவல்லையோ, வேதம் ஆதியும் அந்தமும் இல்லாத சுயம்பு வல்லவோ ? வல்லையாகில் இவ் வுண்மையை மறுத்திடுக !

நீலகேசி : ஐய ! உன்னுடைய வேதம் சுயம்பு என்பது மடமையினும் மடமை. மனிதர் பேசுதற்கியன்ற சொற்களாலே இயன்றிருத்தலின் அது மனிதராற் செய்யப்பட்டதே என்பது தேற்றமாம். மனிதரினும் வேதத்தைச் செய்தவர் மடவோர் என்பதற்கு அவ் வேதமே சான்றாகவும் இருக்கின்றன வன்றோ ?

பூதிகன் : அடி பாவி! அச்சான்றுகள் தாம் யாவை ?

நீலகேசி : வேதம் கூறுவன பெரும்பாலும் பொய்யா யிருத்தலும், பயில்வோர்க்குப் பொருள் வேட்கையை உண்டாக்குதலும், அறியாமையையும் மயக்கத்தையும் செய் தலும், தடுமாறு பொருண்மையுடைத்தாதலும், கொலை செய் விக்கும்படி அறிவுறுத்தலும் இன்னோரன்ன எண்ணிறந்த பிழைகளே வேதம் மடவோராற் செய்யப்பட்ட பொய்ந்நூல் என்றற்குப் போதிய சான்றுகளாம் அல்லவோ ?

இவ்வாறு நீலகேசி வேதத்திற்கு இழுக்குகள் பல கூறி அவற்றிற்கெல்லாம் வேதத்திலிருந்தே எடுத்துக்காட்டுகள் பல காட்டித் தன் கூற்றை நிலைநிறுத்துகின்றாள். அப்பொழுது பூதிகன் இடைமறித்து ஏடி! நீ வேதம் செயற்கை என்கின்றனை. அங்ஙனமாயின் செய்தவர் தாம் யார் ? நீ அறிவதுண்டாயிற் கூறிக்காண் ! என்றான். அதுகேட்ட நீலகேசி நகைத்து வேதியரே ! ஆசிரியர் பெயர் தெரியாத் நூல்கள் உலகில் பல இருக்கின்றன. அவற்றையெல்லாம் சுயம்பென்று யாரே கூறுவர் ? அவற்றுள் ஒரு சிலவே உம்முடைய வேதம். ஒன்று கூறுவேன் கேண்மின் ! ஒருவன் ஊர் நடுவே நள்ளிரவில் மலங்கழித்துப் போயினன். பிற்றைநாள் அதுகண்ட எல் லாரும் இது செய்தவன் ஒரு மனிதன் என்று நினைப்பதன்றி அவனுடைய பேரும் ஊரும் தெரியாமையால் அம்மலம் சுயம்பு என்று அதனை வழிபடுவாரும் உண்டோ கூறுதிர் ?

இன்னும் கேண்மின், அந்த மலத்தை மருத்துவர் ஆராய்ந்து இது பிணியாளனுடையது என்றுதல் அல்லது தூய உடலுடையோனது என்றுதல் கூறக்கூடும் அன்றோ ? அங்ஙனமே உம்முடைய வேதத்தை உட்புகுந்து ஆராய்கின்ற

அறிவுடையோர் அவ்வேதம் அறிவொடு பொருந்தாமை கண்டு இஃது அறிவிலோரின் பிதற்றுரை என்று உணர்தல் ஒருதலை.

பெரியீர்! உம்முடைய வேதம் ஓரிடத்துக் கொலை தீவினை என்று கூறிவைத்து மற்றோரிடத்தே வேள்வியிற் கொல்வது புண்ணியம் என்றும் கூறுகின்றது. இதனால் நுங்கள் வேள்வியில் நீங்கள் கொன்றொழிக்கும் உயிரினங்கட்கு எல்லையுண்டோ கூறீர்.

இன்னும் பிரமன் தலைமுதலிய உறுப்புக்களில் பார்ப்பனர் முதலியவர் பிறந்தனர் என்றும் அங்ஙனம் பிறந்தமையாலே தலையிற் பிறந்த பார்ப்பனன் உயர்ந்தவன் என்றும் தாளிற் பிறந்த சூத்திரன் தாழ்ந்தவன் என்றும் கூறுகின்ற உங்கள் வேதம் அறிவிற்குச் சிறிதும் பொருந்தாது காண்! நுங்கள் வேதம் கடவுள் ஒன்றே எனவும் பல எனவும் பலவிடங்களிற் கூறுதலும் காண்மின்!

ஐய! உயர்ந்த சாதிப்பிராமணரே நீயிர் வேள்விகளில் பசு முதலியவற்றைக் கொன்று அவற்றின் ஊனைத் தேவர்களை ஊட்டுவீர்போல ஏமாற்றி நீயிரே தின்கின்றீர். இங்ஙனம் இழி தகவு செய்யும் நீங்கள் உயர்ந்தவராவதும் கொல்லாமை மேற்கொண்டொழுகும் எம்மனோர் இழிந்தவராதலும் எங்ஙனம் கூறுவீர்! ஆதலால் பொய்த்துரையே நும் வேதங்கள். இவற்றால் தீமையேயன்றி யார்க்கும் நன்மையுண்டாகாது என்று இவ்வாறு நீலகேசி வேதங்கட்குக் குற்றம் கூறும் பகுதி பெரிதும் நுணுக்கமுடைத்து. அவற்றையெல்லாம் நூலின்கண் ஓதியுணர்க. வேதவாதச் சருக்கத்தில் எட்டுச் செய்யுள்கள் காலக் கூற்றன் வாய்ப்பட்டழிந்தன.

## பிசாசிகனும் நீலகேசியும்

கடவுளும் மறுபிறப்பும் இருவினைப் பயனும் உண்டென்று கூறும் சான்றோர் உளராய காலந் தொடங்கி இற்றைநாள் காறும் அவையிற்றை இல்லை என்று மறுப்போரும் இவ்வுலகத்தில் இருந்தே வந்துள்ளனர். இவர் கடவுள் முதலாயின வற்றை இல்லை என்பாராயினும் மக்கள் வாழ்க்கைக்கு ஒழுக்கம் இன்றியமையாதென வற்புறுத்தியே வந்துள்ளனர். இக் காரணத்தால் இத்தகையோர் கொள்கையினையும் ஒரு சமயம் என்றே சான்றோர் கூறுவாராயினர். இவரை உலோகாயதர் என்றும் சாருவாகர் என்றும் பூதவாதியர் என்றும் கூறுப.

இம்மூவகையினருள்ளும் சிறிது சிறிது கொள்கை வேறுபாடும் உளது என்பாரும் உளர். எடுத்துக்காட்டாக :—

"பூதங்களில் உணர்வுடையனவும் இல்லனவுமென இருகூறுளவென்றும், உணர்வுடைய வுயிரும் அஃதில்லாத வுடம்பும் அவ்வப் பூதங்களின் கூட்டத்தால் உண்டாமென்றும் கொள்வதனுல் பூதவாதி உலகாயதரில் வேறுபடுகின்ருன்" என்றும் கூறுவர். இதற்கு, மணிமேகலையிற் கூறப்படுகின்ற பூதவாதி கூற்றினையும் இந்நீலகேசியில் வருகின்ற பூதவாதி கூற்றினையும் எடுத்து அவற்றுள் வேற்றுமையுண்மை காட்டா நிற்பர்.

இனி, இப் பூதவாத சமயத்தைச் செய்தவன் 'பிருகற்பதி' என்பர் மாதவச் சிவஞானயோகியார். மணிமேகலையினுதல் நீலகேசியினுதல் பூதவாதிகட்கு ஒரு சமய முதல்வன் உளன் என்ருதல் அவர்க்குச் சிறந்துரிமையுடைய சமய நூல்கள் இருந்தன என்ருதல் குறிப்பிடப்படாமை கூர்ந்துணரற்பாலன. மேலும் ஏனைய சமயங்களை மக்கள் வழிவழியாகப் பின்பற்றி வருமாறு போல இப் பூதவாதத்தை மக்கள் பின்பற்றி வழிவழியொழுகிவந்திலர் என்றும் தெரியவருகின்றது. இப்பூதவாதம் என்பது அவ்வக்காலத்தே மாந்தரினத்தில் தோன்றித் தோன்றி மறைகின்றது என்றே கொள்ளல் வேண்டும். இப் பூதவாதிகள் ஏனைய சமயங்களிற் ருேன்ரு நின்ற இழுக்குகள் காரணமாகவே சிற்சில செவ்விகளில் செல்வாக்கும் பெற்று விடுகின்றனர். இப் பூதவாதிகள் தோற்றரவு காரணமாகவே உண்மையான சமயங்களில் புத்துணர்வும் புதிய விழிப்பும் தோன்றி மறுமலர்ச்சியும் தோன்றுகின்றது என்னலாம்.

இனி, இந்நீலகேசி ஆசிரியர் இங்கு நீலகேசியோடு சொற்போர் புரிய வருகின்ற பூதவாதியின் பெயர் 'பிசாசிகன்' என்று குறிப்பிடுகின்றனர். இப் பெயர் நூலாசிரியர் படைத்துக் கொண்டதேயாகும். இப் பெயரை இவர் படைத்துக்கோடற்குக் காரணம் ஒரு திருக்குறள் அவர் நினைவில் அப்பொழுது முகிழ்த்தமையே ஆதல்வேண்டும். அக் குறள் வருமாறு :—

*"உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்*
*தலகையா வைக்கப் படும்"* (அ௫௦)

என்பதாம். என்னை? உலகத்தார் உண்டென்பதனை இல்லை என்பவன் மக்கட் பிறப்பினனேயாயினும் பேய் என்றே சான்ருேராற் கருதப்படுவான் என்னும் வள்ளுவர் கருத்தினைப் பொன்போற் போற்றியே இந்நூலாசிரியர் இப் பெயரைப் படைத்திருத்தல் வேண்டும். பேயன் என்னுந் தமிழ்ச் சொல்லின் பொருட்டாய வடசொல்லே 'பிசாசிகன்' என்பதாம்.

நீலகேசி தன் அருகநெறியைப் பரப்பிச் செல்கின்ற வழியிலே பூதவாதமே பேசித் திரிகின்ற பிசாசிகனைக் கண்டு "நில்லப்பா! இனி, நீ கண்ட தத்துவம் சொல்லற்பாலை!" என்று தடுத்து நிறுத்துகின்றனள். நாத்திகம் பேசி நாத் தழும்பேறிய அப் பிசாசிகனும் செருக்குடையவனாய் நீல கேசியை அரசவைக்கு அழைத்துப் போய் ஆங்கு ஆரவாரத் தோடு தன் சொற்போரைத் தொடங்குகின்றான்.

பிசாசிகன்: பேதைப் பெண்ணே! யான் நின்னைப்போலக் குணம் என்றும் குணி என்றும் இன்னோரன்ன வறுஞ் சொற் களைப் பிதற்றித் திரிவேனல்லேன். எனக்கு ஐம்பெரும் பூதங்கள் மட்டுமே பொருளாகும். மேலும் இவற்றின் தொழில் களும் எம்மாற் கொள்ளப்படும் காண்! நங்காய்! இன்னுங் கேள். தீ முதலிய பூதங்களாற் கண் முதலிய ஐம்பொறிகளும் உண்டாகும்; நென் முதலியவற்றின் மா முதலிய ஐந்து பொருள்களைக் கூட்டிச் சமைத்தவழித் தோன்றுகின்ற கள்ளில் களிப்புத் தோன்றினாற்போல, ஐம்பெரும் பூதங்களின் கூட்டர வால் அறிவு இன்பம் முதலியன தோன்றும். அப் பூதங்கள் பிரிந்துழி அறிவு முதலியன அழிந்தொழியுங்காண்!

இங்ஙனம் உண்மை கூறாமல் வஞ்சகர் சிலர் உயிர் உண் டென்றும் கடவுள் மறுபிறப்பு முதலியன உண்டென்றும் பொய்ம்மையே புகன்று மாந்தரை ஏமாற்றிப் பிழைக்கின்றனர் காண். அவரெல்லாம் அறிவிலிகளே! என்று கூறிமுடித்தான். அதுகேட்ட நீலகேசி நகைத்து, ஐய! உயிர் என்றொரு பொருளில்லை என்கின்றனை! நன்று! அங்ஙனமாயின் இப் பொழுது என்னோடு சொற்போர் புரிவது அந்த ஐம்பெரும் பூதக் கூட்டமேயோ? அல்லது அவற்றுள் காற்றுப்பூதம் மட்டுமோ? கழறாய்! இனி, அது நிற்க—

ஐம்பெரும்பூதமும் கூடும் என்கின்றனை! அவற்றுள் வளி உருவில்லது, ஏனைய உருவமுடையன. ஆகவே அவை கூடுதல் அரிதாம். மேலும் தம்முள் முரண்பட்ட தீயும் நீரும் கூடுவதெங்ஙனம்?

ஏடா! பேய்மகனே! சோறு சமைக்கும்பொழுது ஐம்பூதங் களும் பானையின்கண் ஒருங்கே கூடக் காண்கின்றோமல்லமோ? அச் சோற்றுப் பானையில் மாந்தருடம்பும் அதன்கண் அறிவும் பிறவும் தோன்றாமை என்னையோ?

இனி, மா முதலியவற்றால் கள்ளடுங்காலத்தே தோன்றிய கள்தானே களித்தறியாது அதனைப் பருகினான் பிறனொருவ

னன்றோ களிப்புறுகின்றான்? அங்ஙனமே ஐம்பூதக் கூட்டரவிற் றோன்றும் அறிவு நுகர்ந்தறிதலும் கூடாது பிறனொருவன் அவ்வறிவினால் நுகர்ந்தறிதல் வேண்டும் அன்றோ?

**நீலகேசி :** இன்னும், நீ உயிர் உண்மையை ஒப்புக் கொள்ளாமைக்குக் காரணந்தான் என்னையோ?

**பிசாசிகன் :** ஏடி பேதாய்! யாங்கள் காட்சியளவையே கொள்வோம். கருதலளவை கொள்ளேம். ஆகலின் காட்சியளவைக் கெய்தாத உயிர் இல்லை என்கின்றோம் காண்!

**நீலகேசி :** ஏடா! அறிவிலி! நீ ஒரு தாயின் வயிற்றில் ஐம்பூதங்களும் கூடி உடம்பும் அதன்கண் அறிவு முதலியனவும் தோன்றும் என்கின்றனையல்லையோ? தாயின் வயிற்றில் ஐம்பூதங்களும் கூடுதலும் உடம்பாதலும் யாவரே கண்டுள்ளார்? இவ்வாறு நீ கூறுவது கருத்தளவையாலன்றோ? அக்கருத்தளவையாலே உயிருண்மையும் கொண்டால் உனக்குறும் கேடு தான் என்னையோ? இன்னும்,

> "வையு மண்ணு மயிரும் மலமு மோர்
> பையுள் வைக்கப் பளிங்குத் தோன்றுமோ
> பொய்யைம் பூதம் புணர்ந்துணர் வோடின்பம்
> செய்யும் என்பது சிந்திக்கற் பாலதோ?" (அகூஅ)

[வைக்கோலும் மண்ணும் மயிரும் மலமூத்திர முதலியனவும் ஒரு தோற்பையுள் இட்டுவைத்துழி இவற்றின் கூட்டரவால் ஒரு பளிங்குப் பாவைதானுந் தோன்றுவதுண்டோ? பேதாய்! அறிவில் பொருளாகிய ஐம்பூதக் கூட்டரவில் அறிவுப்பொருள் தோன்றுதல் கூடுமோ?]

நீலகேசி இவ்வாறு பின்னும் மிகவும் நுணுக்கமாக அப்பூதவாதியின் கூற்றை அலசி ஆராய்ந்து அவையெல்லாம் பொருந்தாமையை அவ்வரசவையோர் நன்குணர எடுத்துக்காட்டினள்.

பின்னர் நீலகேசி அப்பூதவாதியை நோக்கி ஏடா! நீதான் கடவுள் இல்லை என்பதோடன்றிப் பேயும் இல்லை இறந்தவர் பிறப்பதுமில்லை என்றும் பேசுகின்றாய். யான் நினக்கிப் பொழுது இப் பேரவையிலே பேயுண்மையைக் கண்கூடாகக் காட்டுவேன். அங்ஙனம் காட்டிய வழி நீ நின் அறிவிலாப் புன் சமயமாகிய இப்பூதவாதத்தை விடுத்து யான் கூறுகின்ற ஆருகதர் நல்லறத்தை மேற்கொண்டு உய்தற்கு உடன்படுதல் வேண்டும் என்றாள்! அதுகேட்ட பிசாசிகனும் அங்ஙனம் நீ பேயைக் கண்கூடாகக் காட்டுதியாயின் நீ கூறியாங்கு யான்

என் சமயத்தைவிட்டு நின் சமயத்தை மேற்கொள்ளுவேன் காண்! என்றனன்.

ஈண்டு யாம் கருதற்பால தொன்றுண்டு. உலகின்கண் பேய்களின் செயல்கள் எக்காலத்தும் நிகழ்ந்துகொண்டேயிருக்கின்றன. இப் பேயின் செயல்களுக்குப் பகுத்தறிவாளராதல் இக்காலத்து விஞ்ஞானியராதல் காரணம் கண்டு கூறுவாரல்லர். ஆகவே, பேயுண்மை வலியுறுவதானல் கடவுள் உண்மையையும் ஐயமறத் தெளிதல்கூடும் என்னும், கருத்துடையளாய் நீலகேசி பேய் உண்மை காட்டி அவனைத் தெளிவிக்க முற்படுதல் பெரிதும் நுணுக்கமான செயலாதலை யாம் உணர்ந்து மகிழ்தல் வேண்டும்.

இனிப், பிசாசிகனுடைய உடம்பாடு பெற்றபின் வாய்மையிற் பேயேயாகிய அந்நீலகேசி அவனை நோக்கி,

"உணர்வில்லா முட்டையே! உதோ உங்கே பார்!" எனக் கூறி அவன் கண்முன்னே தன் விரலொன்றனைச் சுழற்றிச் செவ்வனே நிறுத்தி உதோ பேயின் தோற்றம் பார்! என்று தானே உருவமாறிப் பேயாகக் காட்சி தந்தனள்.

அந்தோ! பண்டொரு காலத்தும் பேயுருவம் கண்டிலாத அப் பிசாசிகன் அப்பேயினது பகுவாயும் வளைபல்லும் கண்ட துணையானே அச்சத்தால் நடுங்கிக் கண்புதைத்துக் கதறி நிலத்திற் சாய்ந்து மயக்கமுற்றனன். அதுகண்ட நீலகேசி அவன் அறியாமைக்குப் பெரிதும் இரங்கி அவனுடைய மயக்கத்தைத் தெளிவித்து இன்னுரை பலவும் கூறி எடுத்து நிறுத்தினள்.

நிறுத்திய நீலகேசி ஏடா! நீபேயைக் கண்டனையல்லையோ? நீ கண்டவாறே இப் பேரவையோர் அறியுமாறு அப்பேயின் உருவம் இருந்தபடியே இயம்புவாயாக! என்று பணித்தாள். அதுகேட்ட பிசாசிகன் பின்னும் நடுங்கி அம்மவோ! யான் அப் பேயை முழுவதுங் கண்டிலேன்; அதன் வாயை மட்டுமே கண்டேன். அத்துணைக்கே யான் இனி உயிர் வாழேன் போலும். ஐயகோ! நான் சாகப்போகின்றேன். இனிப் பிழையேன் காண்! என்று அழுதனன். நீலகேசி அவன் நெஞ்சைத் தடவி மகனே! அஞ்சற்க! நீ கண்ட அப்பேயும் நினக்கொரு தாயே காண். அவள் நினக்குக் கேடு சூழ்வளோ காண்! பிசாசிகன் என்பதன் பொருளே பேய்மகன் என்பதுதானே! என்று சொல்லி நகைத்தனள்.

நீலகேசியின் அருளுடைமை கண்டு பிசாசிகன் அவளைப் பெரிதும் மதித்தவனாகி அவள்பால் தஞ்சம் புகுவானாயினன். அன்னாய்! அறியாமையால் இதுகாறும் பூதவாதம் பேசி வாளா வாழ்நாளை வறிதே போக்கினேன். இனி, எளியேனுக்கு நல்லறம் செவியறிவுறுத்தி உய்யக் கொண்டருளுதி! என வேண்டினன். நீலகேசியும் அவன் வேண்டுகோட்கிணங்கி அவனுக்கும் அவ்வரசவையோர்க்கும் அருகபரமன் திருவாய் மலர்ந்தருளிய நல்லறங்களை நனி செவியறிவுறுத்தினள். நீலகேசியின் அளக்கலாகா அறிவின் பெருமைகண்டு அரசனை யுள்ளிட்ட அப்பேரவையோரும் நீலகேசிக்குச் சிறப்புக்கள் பலவியற்றிப் பாராட்டுவாராய் அருகநெறி பற்றி வாழ்வா ராயினர். அந்நாள் தொடங்கி நீலகேசி யாண்டும் சென்று மக்கட்கு நல்லறம் செவியறிவுறுத்து யாங்கணும் நலம் பெருகச் செய்வாளாயினள்; என்று இந்நூலாசிரியர் நீலகேசியின் வரலாற்றை முடித்தருளுகின்றனர்.

பல்வேறு சமயங்களைப் பற்றி ஆராய்கின்ற இந்நீலகேசி என்னும் சிறந்த இலக்கியம் தன்னைப் பயிலுகின்ற நன் மாணவர் அறிவினை நுண்மாணுழைபுலனாக்கிச் சாலவும் நயம் பயக்கும் என்பதில் ஐயமில்லை.

## உரை வரலாறு

இனி, இந்நீலகேசியின் பழைய வுரையைப் பற்றியும் ஈண்டுச் சிறிது கூறுதல் இன்றியமையாதாம். இப் பழைய வுரையின் சிறப்பினை,

> "மெய்ந்நூல் நெறியை விளக்கி விளங்காப் பிடகமுதற்
> பொய்ந்நூல் இருள்களைப் போகத் துரந்தது பூதலத்தில்
> எந்நாளும் வல்லவ ரேத்தச் சமயத் திறைவன்கண்ட
> செந்நீல கேசி விருத்திச் சமய திவாகரமே"

எனவும்,

> "அருகன் றிருவறத் தன்புசெய் வாரும் அழிவழக்காற்
> பெருகுந் துருநெறிப் பீடழிப் பாருமிப் பேருலகிற்
> பொருவின்றி நின்ற தமிழ் நீலகேசிப் பொருளையெல்லாம்
> திரிவின்றிக் காட்டுஞ் சமய திவாகரம் சேவிக்கவே"

எனவும் வருகின்ற உரைச் சிறப்புப்பாயிரச் செய்யுள்கள் மிகவும் நுணுக்கமாக அறிவிக்கின்றன.

ஒப்புயர்வற்ற இந்நீலகேசி உரையினை எழுதிய பேரா சிரியர் திருப்பெயர் '**சமயதிவாகர வாமன முனிவர்**' என்று கூறப்

படுகின்றது. இச்சான்ருேருடைய வரலாறு ஒருசிறிதும் தெரிந்திலது. விசும்பென விரிந்த இவர்தம் அறிவுப் பெருமைக்கு இவர்தம் பேருரையே அழியாத சான்ருக நின்று திகழ்கின்றது. இப்பெரியார் வடமொழிப் புலமைக்கும் தென்றமிழ்ப் புலமைக்கும் வரம்பாக விளங்குகின்ருர். 'சமயதிவாகரர்' என்னும் இவர் பெயர் இவருடைய இயற்பெயரன்று, அக்காலத்துச் சான்ருேர் வழங்கிய சிறப்புப் பெயரே என்பதில் ஐயமில்லை. இந் நூலாசிரியர் போலவே இப் பேராசிரியரும் அக்காலத்தே வழங்கிய சமயங்கள் பலவற்றையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்தவர் என்பதனை இவர்தம் உரையே நமக்கு விளக்குகின்றது. நான்மறை முதலிய வடமொழி நூல்களையும் தொல்காப்பியம் முதலிய தென்றமிழ் நூல்களையும் இவர் நன்கு பயின்று சிறந்தவர். முனிவர் என்பதனுல் இவர் ஆருகத சமயஞ் சார்ந்த துறவோர் என்பதும் தெரியவருகின்றது.

இவர் இந்நூலில் பல செய்யுட்கு உரை வரையாது வாளாவிட்டுச் செல்கின்ருர். அவற்றிற் கெல்லாம் பொருள் யாவர்க்கும் எளிதின் விளங்கும் என்பது இவர் கருத்தாதல் வேண்டும். நகைச்சுவைபட உரை வகுப்பதில் இவர்க்கு நிகராக வேறு யாரும் இலர் என்று துணிந்து கூறலாம்.

இவர் துணை வடமொழியையும் தமிழ் மொழியையும் விரவி உரை வகுத்தாரும் ஒருவருமிலர் என்றே கூறலாம். இவர் உரை வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லார்க்கன்றி ஏனையோர் ஓதி உணர்தல் அரிதேயாகும். இக்காரணத்தாலேயே இந்நூல் பயில்வோர் பெரிதும் அருகிவரலாயினர் என்னலாம். உரை நுணுக்கத்தில் இவருரையளவு நுணுக்கமான உரை வகுத்தவர் வேறுயாரும் இலரென்று கூறுதல் மிகையாகாது. அத்துணை அழகும் ஆழமும் உடையது இப்பேராசிரியர் வகுத்த நல்லுரை.

இனி இந்நூலினது அருமை பெருமைகளையும் அங்ஙனமே இப் பழைய உரையாசிரியரின் நுண்ணுரையின் அருமை பெருமைகளையும் ஒருங்கே உணர்ந்த தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் இச்சிறந்த நூலைத் தமிழ் பயிலும் மாணவர்களும் பிறரும் எளிதிற் பொருளுணர்ந்து பயிலுமாறு செய்யவேண்டும் என்று வேணவாக் கொள்வாராயினர். இந்நூலில் பழையவுரையாசிரியரால் உரை எழுதாமல் விடப்பட்ட செய்யுள் உட்பட எல்லாச் செய்யுள்களுக்குமே சொற்பொருள் உரை வகுத்தும் பழைய உரையா

சிரியர் உரையிற் கண்ட நுணுக்கங்களைச் சிறிதும் எஞ்சாது தழுவிய விளக்கவுரை வகுத்தும் கழக வாயிலாய்க் கண்கவர் வனப்புடன் வெளியிடல் வேண்டும் என்று துணிந்தார்கள். இம்மாபெரும் பணியை என்பால் ஒப்புவித்தனர். உரையெழுத வேண்டிய பிற கருவி நூல்களையும் ஒருசேரத் தொகுத்தளித்தனர். நல்குரவால் யான் நலிவுறாவண்ணம் பொருளுதவியும் செய்து ஊக்குவித்தனர். இவ்வாற்றால் இப்பெரு நூலுக்கு யான் இக்காலத்து மாணவரும் பிறரும் எளிதிலுணரும்படி பழைய வுரையைப் பெரிதும் தழுவி என் சிற்றறிவிற் கெட்டிய வரையில் இவ்வுரையினை வரைந்து முடிக்கலானேன். இப் பணியை என்பால் வழங்கி ஆவனவும் செய்துதவிய திரு. வ. சு. பிள்ளையவர்கள் அன்பு என்றால் எழுமையும் நினைக்கத்தகும். இப் பணியில் எளியேனை ஈடுபடுத்தி இதனை நிறைவேற்றிக் கொண்ட எஞ்செந்தமிழன்னையின் திருவடி மலர்கள் என்றென்றும் என்னெஞ்சில் நிலைபெற்றிருக்கவென்று அத்தெய்வத் திருவருளை வழுத்துகின்றேன்.

மேலைப்பெருமழை,
திருவள்ளுவர் யாண்டு கககச.
ஐப்பசித் திங்கள் கஅ ஆம் நாள்.

இங்ஙனம்
உரையாசிரியன்
பொ. வே. சோமசுந்தரன்.

# நீலகேசி

## சொற்பொருளுரையும் விளக்கவுரையும்

—:o:—

## கடவுள் வாழ்த்து

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்

க. நல்லார் வணங்கப் படுவான்பிறப் பாதி நான்கு
மில்லா னுயிர்கட் கிடர்தீர்த்துய ரின்ப மாக்குஞ்
சொல்லான் றருமச் சுடரானெனுந் தொன்மை யினு
னெல்லா முணர்ந்தா னவனேயிறை யாக வேத்தி.

(இதன் பொருள்.) நல்லார் வணங்கப்படுவான் - நீத்தார் முதலிய சான்றோரால் எக்காலத்தும் தொழப்படுபவனும்; பிறப்பு ஆதி நான்கும் இல்லான் - பிறப்பு முதலிய நான்கு துன்பங்களையும் கெடுத்து அவற்றி னீங்கியவனும்; உயிர்கட்கு இடர் தீர்த்து உயர் இன்பம் ஆக்கும் சொல்லான் - தகுதி பெற்ற உயிர்களுக்குத் துன்பங்களை யெல்லாம் போக்கிப் பேரின்பத்தை வழங்குமியல் புடைய திருமொழியை யுடையவனும்; தருமச்சுடரான் எனும் தொன்மையினன் - அறவொளி பரப்பும் ஞாயிறு என்று போற்றப் படுபவனும் அநாதி நித்தியனும், எல்லாம் உணர்ந்தான் - முழுதும் உணர்ந்தவனும் ஆகிய; அவனே இறை ஆக ஏத்தி - அந்த அருகனையே இறைவனாகக் கருதி வாழ்த்தி என்க.

(விளக்கம்.) நல்லார் என்றது நோற்றுத் தூயோராய சான்றோரும், அமரரும் இல்லற நெறி பிறழா தொழுகுவோரும் முதலாயினோரை என்க.

வணங்கப்படுவான் என்றது உலகிற்கொரு பெருங் கடவுள் நீயே என்று தொழப்படுவான் என்பதுபட நின்றது.

பிறப்பாதி நான்காவன-பிறப்புப் பிணி மூப்புச் சாக்காடு என்பன. இவையில்லான் எனவே, இவற்றிற்குக் காரணமாகிய காதிவினைகளைத் துவர நீக்கி அவற்றினின்றும் நீங்கினுன் என்ருராயிற்று. இனி, காதி வினைகளாவன-ஞானவரணீயம், தரிசனவரணீயம், வேதநீயம், மோக நீயம், ஆயுஷியம், நாமம், கோத்திரம், அந்தராயம் என்னும் எட்டுமாம்.

உயிர்கட்கு இடர் தீர்த்து உயரின்பமாக்குஞ் சொல்லான் என்புழி, உயிர் என்றது சிறந்த மக்களைக் குறித்து நின்றது. இடராவன - பொருள் இடம் காலம் பிறப்பு பாவனை என்னுமிவ்வைந்தானு முண்டாகுந் துயரங்கள். இவற்றைப் பஞ்ச பரிவர்த்தனம் என்ப.

உயரின்பம் என்றது வீட்டின்பத்தை. சொல் என்றது ஆகமங்களை.

உலகின் நிகழும் தீவினையாதிய இருளைக் கடிந்து யாண்டும் நல்வினையே நிகழ்விக்கும் அறத்தைப் பரப்புதலான் அறவொளி ஞாயி றனையான் என்பார் தருமச்சுடரான் என்ருர். தொன்மையினுன் என்றது, ஆதியும் அந்தமும் இன்றி என்றும் நிலையுதலுடையோன் என்றவாறு.

எல்லாம் உணர்ந்தான் என்றது - தானும் பிறவுமாகிய பொருளும் அவற்றினியல்பும் ஆக்கமும் ஆகிய எல்லாவற்றையும் கண்கூடாகக் கண்டவன் என்றவாறு. எனவே அங்ஙன முணர்தற்குக் காரணமான கடையிலா அறிவும், கடையிலாக் காட்சியும், கடையிலாவாற்றலும், கடையிலாவின்பமும் உடையான் என்பது போந்தது.

அவனே இறையாக ஏத்தி, என்புழி ஏகாரம் ஏனைக் கடவுளரைப் பிரித்தலின் பிரிநிலையா மென்க.

இச் செய்யுளால் குணங்களின் வரிசை முறைமையாலே அருகக் கடவுளுக்கு மங்கல வாழ்த்துக் கூறினுர்.

இனி இது நல்லார் வணங்கப்படுதன் முதலாயின புத்தன் முத லாப் பிறகடவுளர்க்கு எய்தாதாயினன்றே? அருகக் கடவுளுக்கு மங்கல மாவது; அஃதென்னை பெற்றவாறெனின், குற்றமில்லாதாரையன்றே நல்லார் வணங்குவது; பிறவுயிர்க்கின்னு செய்தலும், பொய்யுரைத்த லும், களவு காண்டலும், அவாவுதலும் முதலாகிய குற்றங்கள் புத்தன் முதலாயினுர்க்கு உளவாகலின், அவர் நல்லாரான் வணங்கப்படா ரென்க.

இனி, புத்தனுக்கு இன்னுசெய்தல் முதலிய இக்குற்றங்கள் உளவாமாறென்னை? எனின், புத்தன் தற்கொலை செய்து கோடலா னும், ஊன் உண்ணலானும் கொலையுண்டென்க. என்னை? உயிரை யுடம்பினின்றும் நீக்குதலானும், சாதற்றுன்பம் எல்லாம் எய்துதலா னும் தற்கொலையும் கொலையே யாமென்பது.

இனி, தற்கொலை செய்து கொள்வோன் விரும்பியே செய்து கோடலின் அது கொலையாகாதாம் பிறவெனின், நன்று சொன்னுய்! அதுவும் கொலையேயாம்; அது கொலையன்றெனின், பகைவனைக் கொல்வானும் விரும்பியே கொலை செய்தலின் அதுவும் கொலையன் ருதல் வேண்டும். இனி, பிறரைக் காப்பாற்றுதற்காகவும் பிறர்க்கு உதவியாகவும் தற்கொலை செய்துகோடல் கொலையன்றெனின், இவ்

வாற்முன் ஏகமும் பிற கொலைகளும் கொலையன்ருதல் வேண்டும்; ஆதலின் தற்கொலையும் கொலைத் தீவினையேயா மென்க.

இனி, ஊன் உண்பார்க்கும் கொலையுண்டென்பது மேலே சொல்லுவாம்; இனி விலைக்கு ஊன் கொண்டுண்ணல் காரணத்தால் வருந் தீவினை மாத்திரையேயாம். அதுவும் கொலைத் தீவினையாக் கொள்ளப்படுமோ? எனின், அதுவும் கொலையேயாம்; என்னை? காரணத்தால் வரும் நல்வினையை நல்வினையாக நும்மாற் கொள்ளப் படுதலான் என்க. படாதேல், ஓர் அரசன் பள்ளிக்கு இறையிலியாக நிலம் விட்டாருகை, அதனுல் வந்த பொருளால் கடவுள் வழிபாடு செய்தவழி அவ்வரசனுக்கு நல்வினை யில்லையாம்; ஆதலின், காரணத் தால் வரும் நல்வினை கோடலின், காரணத் தீவினையும் கொள்ளல் வேண்டும்.

இனி, ஊனினை விலைக்குக் கொண்டுண்பார்க்கும் கொலைத் தீவினை வரும். என்னை? தினற்பொருட்டால் ஊன் கொள்வாருள்வழியே அக் கொலையுமுண்டாய், அவரில் வழி இல்லையாகலின், என்னை? குயவன் உள்வழிக் குடம் உண்டாய், அவனில் வழி இல்லையாய்க் குடம் வினை யும் தொழில் குயவனுடையதாறுற் போல வென்க. அல்லதூஉம்,

"நஸ கச்சிது ப்ருதிவியாதே: அம்சோ யத்ர நஜந்தவ:
ஸம் ஸ்வதே ஜாத்யா ஜாயந்தே ஸர்வம் பீஜாத்மகம்தத:"

[மண் முதலியவற்றில் உயிரில்லாத பகுதி யாண்டுமில்லை. வியர்வை யினும் உயிர்கள் உண்டாகின்றன. ஆதலால் யாண்டும் உயிருண்டு.] எனவும்,

"என தெனச் சிந்தித்த லான்மற்
றிவ்வுட லின்பத்துக் காமேற்
றினைபெய்த புன்கத்தைப் போலச்
சிறியவு மூத்தவு மாகி
அனைய புழுக்குலந் தம்மா
னுகரவும் வாழவும் பட்ட
இனைய வுடம்பினைப் பாவி
யானென தென்னலு மாமோ" (குண்டலகேசி.)

எனவும் வருமிவற்ருல் உயிர் யாண்டுமுள வென்பதும், ஊனின்கண் உயிர் உண்டென்பதும் சொல்லி வைத்து ஊன் உண்டல் கொலையே யாம் என்பது தேற்றம்.

இனி, ஊன் உண்பேன் என்னும் உள்ளமல்லது உயிர் கொல்வேன் என்னும் உள்ளம் இன்மையின், கொலையில்லையெனின், அரிமா முதலிய விலங்குகளுக்கும் உண்பேன் என்னும் உள்ளம் அல்லது கொல்வேன் என்னும் உள்ளம் இன்மையின் கொலையில்லை யென்பதாம்; அன்றியும் ஊரிலுள்ளாரைக் கொல்வேனென்னும் உள்ள மின்றி ஊர் சுடுவேன் என்னும் உள்ளத்தாற் சுட்டாற்கும் கொலையில்லையாம். சுட்டால் ஊரி லுள்ளார் இறப்பரென் றறிந்து சுடுதலிற் கொலையுண்டெனின், தின்ருன் ஊனுடையவுயிர் இறக்குமென் றறிந்து தின்றலின் கொலையுண்டென்ப தாம்; அன்றியும்,

*"வீதல் வீவ துயிராத லக்குறி
காய்தல் கோறல் கொலையேவ லென்றிவை
யோய்த வின்றி யுடனாத லால்வருஞ்
சேதனைக் குக்கொலை யாமெனச் செப்பினான்"

என்பதனால் வீதல் முதலிய ஐந்துறுப்புங்கூடிற் கொலையாம்; அன்றெனில் ஆகாதென் றறிவுறுத்தலால் புத்தனுக்குக் கொலையுண்டென்க.

இனி, பொய்பேசுதலும் புத்தனுக்குண்டு, என்னை? புத்தன், நல்வினை தீவினை செய்தவன் செய்த அக் கணத்திலேயே அழிந் தொழிதலின் அவ்வினைப் பயனை அவன் பெறா னென்ப தறிந்திருந்தேயும், இன்ன அறஞ் செய்தான் இன்ன பயனைப் பெறும்; இன்ன மறஞ் செய்தான் இன்ன பயனைப் பெறும் என்று சொல்கின்றா னாதலால் என்க. அன்றியும்,

"அற்றன் றாத லதுதா னறஞ் செய்தல்
சொற்றன் மாட்டு நிகழ்த்தல்பின் னோர்த்தல்
மற்றித் தன்மைப் படுமாயின் மாண்பிலார்க்
குற்றப் பொய்யென் றுரைப்பர் குணமிக்கார்"

(குண்டலகேசி)

என்பதனால் இத்தன்மையிற் குறைந்தது பொய்யன்றென்றும் அறிவுறுத்தலானும் இவனுக்குப் பொய்யுண்டென்க.

இனி, புத்தனுக்குக் களவுமுண்டு; என்னை? புத்தன் குடையும் செருப்பும் முதலாயின ஒரு காலத்துத் தானம் பெற்றுப் பிறிதொரு காலத்தும் அவற்றை என னுடையனவென்று பற்றும் ஆதலான்; இது களவாமாறென்னை? எனின், தானம் பெற்றானும் குடையும் செருப்பும் அக்கணத்தே அழிந்தொழிந்தன வல்லவோ? இவை அவை போல்வன பிறவல்லவோ? அவற்றை என்னுடையன வென்று பற்றினன் ஆதலால் களவேயாம், என்பது.

இனி, இவை பிறவேயாயினும் முன்பு தானம் பெற்ற குடை முதலாயினவற்றின் வழித் தோன்றியவையே ஆதலின், அவற்றின் தொடர்புடையனவேயாம். ஆகவே அவற்றை எனதென்று பற்றுதல் களவன்றாம் பிறவெனின் இவை அவற்றின் வழியனவென்பதுஅறிந்து கைக்கொள்ளுமோ? அறியாதே கொள்ளுமோ? அறியாதே கொள்ளு மெனிற் கள்வனும். அறிந்துகொள்ளும் எனின் ஒருவகையால் புத்தன் அழியாது நிலையுதலுடையனும். அன்றியும், ஒன்றன் வழி ஒன்று தோன்றுதலாவது, அதன் காரியமாய்த் தோன்றுதலோ? அதன்பின்பு தோன்றுதல் மாத்திரையோ? அதன் பின்பு தோன்றுதன் மாத்திரை யெனின், இதன் வழித்தோன்றிய திதுவெனப்படாது. படின், புத்தன் பொன்றக்கெட்ட பின்பே வேறொரு சித்தனைத் தோன்றின் அவன் சித்தம் அஃதாகல் வேண்டும். இனி அதன் காரியமாய்த் தோன்று மெனின், காரணம் தோன்றும்பொழுதே காரியந் தோன்றுமோ?

* இச்செய்யுள் இந்நூல் புத்தவாதச் சருக்கத்துரையினும் எடுத்துக்காட்டப்பட்டுளது. இதன் பொருளையும் விளக்கங்களையும் ஆண்டுப் பரக்கக் காணலாம்.

பிற்கணத்தே தோன்றுமோ? காரணம் தோன்றும் பொழுதே காரிய முந் தோன்றுமெனின், ஒக்கத் தோன்றுவன ஒன்றற் கொன்று காரண மாகா.

அன்றியும், காரணந் தோன்றும் பொழுதே காரியந் தோன்றும் பொழுதுமாயின் அக்காரியத்தினுடைய காரியம் முதலாகிய எல்லாக் காரியத் தோற்றமும் அந்தக் காரணந் தோன்றும் பொழுதே தோன்றல் வேண்டும்.

இனி, பிற்கணத்திலே காரியந் தோன்றுமெனின், முற்கணத்திலே தோன்றிய காரணம் அந்தக் கணத்திலேயே அழிந்தொழிதலால் காரணம் இல்லையாய்க் காரியமும் இல்லையாம். காரணம் முழுதும் அழிந்தே காரியம் செய்யும் எனின் முழுதுமழிந்த புத்தன் காரியஞ் செய்தல் வேண்டும். அங்ஙனம் செய்தற்கண் அவன் பிறப்பிற் பட்டா னும். இனி, காரணம் கெடுங்கால் புத்தத்தன்மை முழுதுங் கெட்ட தில்லையெனின், அவ்வழி கெடுதலும் கெடாமையுமாம். ஆதலால் ஒன்றன் வழி ஒன்று தோன்றுமிடத்துக் காரியம் ஆதல் கூடாதாம். ஆதலின் புத்தனுக்குக் களவுண்டென்பது.

அன்றியும்,

*"உடைப்பண் பில்ல தொருகாற் பெறுவது
கொடுக்க லின்றிக் கொளலுற்றுக் கொண்டபின்
இடத்திலெண் மாத்திரை நீத்திநீ யஃதரோ
கடுத்த தீமை யுடைய களவுதான்"

என்பதனுல், இவ்வாறு வாராதது களவன்றென்று அறிவுறுத்தலானும் அவனுக்குக் களவுண்டு என்க.

இனி, புத்தனுக்குக் காமநுகர்ச்சியுமுண்டு; என்னை?

"தடிகடவழ் குருதிதன திருகவெருரு தலைதனதோர்
புடைபுதல்வர் புனையிழையர் பொருகளிறு புனைநிதிய
முடிகளர சிவைமுறையி னருளியவன் முரல்கொள்கழ
லடிகளடை பவர்துயர்க ளடைதலும தரிதே"

என்பதனுல் இவனுக்கு மனைவியும் மக்களுமுண்மை பெறப்படுதலி னென்பது.

இனி, புத்தனுதற்குரிய காரண நிலையினல்லது காரியப்பட்டுப் புத்தத் தன்மை பெற்ற பின்னர் அவனுக்குக் காமநுகர்ச்சியில்லை யெனின், காரண நிலையில் அவன் பிறப்புமுற்சியுடையனே? அல்லனே? பிறப்புமுற்சி யுண்டெனின் இவனுக்குத் தலையரிதன் முதலாயின பழவினைப்பயனுய் வந்தனவாம்; அன்றியும்,

"என்றுதா னுலகுயக்கோ ளெண்ணினு னதுமுதலாச்
சென்றிரந்தார்க் கீந்தனன் பொருளுடம் புறுப்புக்க
டுன்றினன் பிறக்குந னுளனுயின் மாமேருக்
குன்றியின் றுணையாகக் கொடுத்திட்டா னல்லனே"

எனவும்,

---

* இதன் விளக்கத்தைப் புத்தவாதச் சருக்கம், அஅ ஆம் செய்யுள் உரையிற் காண்க.

''எண்ணிகந்த காலங்க ளெம்பொருட்டான் மிகையுழந்
தெண்ணிகந்த வுலோகங்க ளிருடீர வொருங்குணர்ந்
தெண்ணிகந்த தானமுஞ் சீலமு மிதையாக்கி
யெண்ணிகந்த குணத்தினு னெம்பெருமா னல்லனோ?''

எனவும் வருவனவற்றால், கைவந்த முத்தியை விட்டு உலகுய்யக் கொள்வான் வேண்டிப் பற்பல பிறப்புக்களினும் பிறந்தானென்று, அவனைப் புகழ்தல் அமையாதுமாம்.

இனி, இவன் முயலாய்ப் பிறந்துழி, ஒரு பார்ப்பனன் வந்து பசித்தேன் என, ஊன் தின்பையோ? என அவனைக் கேட்டு நெருப்பெரிய மூட்டி விட்டு அதனுட் பாய்தல் முதலாயினவும் பிறவும் பற்றுடைய வுயிர்க்குக் கூடாவாம்.

இனி, பற்றுடையனல்ல னெனின், இருவகை நிலை படைத்து மொழிதற்குப் பயனில்லையாம். ஆதலாற் புத்தனுக்குக் காமநுகர்ச்சியு முண்டென்பது. அன்றியும்,

''மக்க டெய்வம் விலங்குபெண் ணுணலி
யொக்க நின்ற விவற்றன மூப்பது
பக்க வாற்றி னுறுப்பொரெண்டமாத்திரை
வைக்கு மாயி னிதுகாம வாழ்க்கையே''

என்பதனால் இவ்வாறன்றி வருகின்ற காமநுகர்ச்சிக் குடன்பட்டானு தலினானும், இவனுக்குக் காமநுகர்ச்சி யுண்டென்பது.

இனி, புத்தனுக்கு அவாவுமுண்டு; என்னை? ஊன் தின்றலும், வெள்ளடைமெல்லலும், பல்லுத்துடைத்தலும், நீராடுதலும், பருகுதலும், குடை செருப்பு முதலாயின கைக் கோடலும் அவா வொழியக் கூடாமையானென்பது. இனி, இவன் அவாவின்றியே இவையும் உடையனெனின் பற்றுடைய ரெல்லாரும் அவாவின்றியே இவையெல்லாம் உடையர் ஆவர்.

இனி, புத்தன் காமத்தால் தன்னை மறந்தவனு மாவான். என்னை? உறக்கத்தான் மயங்குதலும், பசியால் வருந்தி நாடோறும் பிச்சை புகுதலும் உண்மையான் என்பது.

இனி, இவன் பொருளியல்பு மறியானும்; என்னை? பொருள்கள் எச்சஞ் சிறிது மின்றிக் கணப்பொழுதிற் கெடும் என்று சொன்னவன்றானே முன்பு நான் முயலாய்ப் பிறந்து அறமறிவுறுத்தேன்; இப்பொழுது புத்தனாயினேன் என்று நூலறிவுறுத்தா னுதலின் முயலானவன்று தொட்டுப் புத்தனானவளவுந் தான் நின்றானைச் சொல்லுதல் **''யான்கண்டீர் நோன்பிகாண் முன்னையோர் பிறப்பினுண்டலானேன்''** என்பதாகலின். அன்றியும் இக்குற்றங்கள் இவனுக்குண்மை,

''நிலைபெற வெல்லாரு நீத்தனக ளென்றெனவுந்
தலைவரு மிழுக்கெனத் தவிர்ந்தனவு மேனு
ணிலைபெற வெல்லாரு நீத்தன யாவென்றான்
கொலைகளவு கட்காமம் பொய்யெனக் கூறினன்.''

(குண்டலகேசி)

என்பதனால், இக்கொலை முதலாயின இழுக்குத் தலைவருமென்று தவிர்ந்தானல்லன்; உலகந் தவிர்ந்தமையிற் றவிர்ந்தானென்றமை யானும், பெறுதும். ஆதலாற் புத்தன் நல்லார் வணங்கப்படா னென்பது. இப்படியே ஒழிந்தார்க்கும் இக்குற்றமுண்மையான் அவரும் நல்லார் வணங்கப்படா ரென்பது.

இனி, ஏனைய கடவுளர்க்குக் குற்றமுண்மை அவரவர் நூல்களி னும் அவர்தம் வேடங்களானும் அவரைப் பின்பற்றிய மாந்தர் மொழிக ளானும் அறிந்துகொள்க. அன்றியும்,

"ஸித்த : ஹிம்ஸாந்ருத ஸ்தேயா பிரும்மசர்ய ப்ரவர்த்தித :
ஸப்ரத் யஸ்தமிதோ சேஷதோஷோ நேதி ப்ரதீயதே."

[கொலை பொய் களவு காமம் இவற்றில் நடப்போன் எல்லாக் குற்றங்களினும் நீங்கினவன் என்று கொள்ளப்படான் ]

எனவரும் சமந்தபத்திர வடிகளார் மொழியானும், அவர்கள் குற்றமுடையோர் என்பது பெறுது மாதலால், அருகக் கடவுள் ஒருவனே நல்லார் வணங்கப் படுவானென்றவாறு.

இனி, அருகக் கடவுளுக்கும் அறங்கூறல் முதலிய தொழில் உண்மையால் விருப்பு வெறுப்புத் தன்மைகள் உண்டென்பது பெறப் படுமாலோ வெனின், பெறப்படா; என்னை? விருப்பு வெறுப்புக்களா லல்லது கூற்று நிகழ்தல் இல்லையாயினன்றே அங்ஙனமாவது. விருப்பு வெறுப்புத் தன்மைகளே கூற்றிற்குக் காரணமெனின், நெருப்பினு லாவதான புகையும், மழையினு லாவதான வெள்ளமும், நெருப்பும் மழையும் பெருகின வழிப் பெருகி, அவை சுருங்கின வழிச் சுருங்கு மாறுபோல விருப்பு முதலியன மிகவுடையார்பால் கூற்று மிக்கு நிகழ்தலும் குறைய வுடையார்பால் குறைந்து நிகழ்தலும் வேண்டும். அங்ஙனமாகுமிடத்து, வியாதன் சாலிபுத்திரன் முதலியோர் ஊமைய ராதலும், கயவரும் விடரும் தூர்த்தரும் முதலியோர் எல்லா நூல்களு முணர்ந்து விரிவுரை செய்வோராதலும் வேண்டும். ஆதலால் விருப்பு வெறுப்பு முதலியன கூற்று நிகழ்ச்சிக்குக் காரணமல்லவென்பது.

இனி அவை காரணமல்லவெனினும், யான் இது சொல்வேன் என்னும் அவாவொழியச் சொன்னிகழ்ச்சி கூடாமையின், அருகக்கடவு ளுக்கு அவாவுண்டெனின், சொல்லுவேன் என்னும் அவாவின்றியும் காலிடறி வீழ்தல் முதலிய நிகழ்ச்சியின்கண் சொன்னிகழ்வும், விடரும் தூர்த்தரும் முதலிய கயமாக்கட்கு எல்லா நூல்கட்கும் பொருள் கூறுவேம் என்னும் அவாவுண்டாய பொழுதும் அவர்பால் சொன் னிகழ்தலின்மையும் காண்டலிற் சொல்லுவேன் என்னும் அவாவொழி யவும் சொன்னிகழ்ச்சி கூடுமென்பது.

இனி, கவரியிரட்டன் முதலிய சிறப்புக்களும் அருகக்கடவுள் அவாவியவாற்றாற் செய்யப்படுவன அல்ல. என்னை? அவற்றாற் கொள்ளப்படும் பயன் யாதொன்றும் அவனுக்கின்மையானென்க. அவை தேவர்கள் அவன்பாற் கொள்ளும் அன்பு காரணமாகச் செய்யப் படும் திருச் சிறப்புக்களேயாம்; மலர்ப்பலீ முதலியனபோல வென்பது; ஆதலால் அருகக் கடவுள் ஒருவனே நல்லார் வணங்கப்படும் தன்மை யுடையன் என்பது.

இனி, பிறப்பு முதலிய நான்குமின்மையும் அருகக்கடவுளுக்கே யன்றிப் பிற கடவுளர்க்கில்லை, அவர்கட்கு அவையுண்மை அவர்கள் நூல்களே வெளிப்படையாகக் கூறும். என்னை? புத்தன் ஊழ்வகையா னன்றித் தன் அருளுடைமை காரணமாக, கைவந்த வீடுபேற்றினையும் விட்டு மெய்யறிவோடு பல விலங்குப் பிறப்பிற் பிறந்தும் இறந்தும் பிணிப்பட்டும் மூத்தும் நல்லறங்கூறி ஒழியாமல் உலகுய்யக் கொண் டானென்று சொல்லுதலால். அன்றியும் ஊழ்வகையாற் பிறந்தா னெனின், விலங்காய்ப் பிறந்து பேசுதலும் யானையாய் மருப்பீதலும், முயலாய் ஊனீதலும், மான் ஆகித் தன்னை அம்பாலெய்யத் தொடர்ந்து வந்த அரசன் குழியுள் விழத் தானுங் குழியுள் புக்கு, அவனைத் தன் பின்னங்காற் றொடையைக் கட்டிக் கிடக்கச் சொல்லிக் குழிமேலேறப் பாய்ந்து அவனுக்கு அறமுரைத்தலும், மயிலாய்ப் பிறந்து மோரிப் பரித்தம் பாடலும், காடையாய்ப் பிறந்து, குஞ்சாயிருந்து காட்டுத் தீத் தன்னை வளைத்துக் கொண்டபொழுது,

"ஸந்திபம்கா அபதநா, ஸந்திபாதா அவம்சநா
மாதா பிதா சநிம்கந்தா ஜாதவேத படிக்கமா."

[" (நான் குஞ்சு ஆதலால்) என் சிறகுகள் பறக்கின்றில; கால்கள் நடக்கின்றில; தாய் தந்தையரும் கைவிட்டுப் போயினர் தீயே! என்னை விட்டுச் செல்லுதி!"]

என்று பரித்தம் கூறலும் சிறப்பாற்றலில்வழிக் கூடாதாம்.

மோரி – மயூரம் என்பதன் திரிபு. பரித்தம் – குறையிரத்தல்.

இனி,

"மத்ய : கூர்மோ வராகச்ச நாரசிம்ஹோத வாமந
ராமோ ராமச்ச ராமச்ச க்ருஷ்ண கல்கிதிதேதச."

[மீன், ஆமை, பன்றி, நரசிம்மம், வாமனம், தசரதராமன், பலராமன், பரசுராமன், கிருட்டிணன், கல்கி என அவர்கள் பதின்மர்.]

எனவும்,

"சம்பவாமி யுகேயுகே" (பகவத்கீதை)

எனவும்,

"ஆதிரையா னாதிரையா னென்றென் றயர்வுறுமீ
யூர்திரைநீர் வேலி யுலகு" (முத்தொள்ளாயிரம்)

என்வும்,

"விதியால் வருவதல்லால் மேதக்கோர் தங்கண்
மதியினால் வாழ்வதொன் றுண்டோ பதிதொறுஞ்
சங்கரனு மையமேற் றுண்டான் றடங்கடல்சூழ்
மங்கையுடன் காடுறைந்தான் மால்" (ஒரு பழைய செய்யுள்)

எனவும் வருதலானும், அவர்க்குப் பிறப்பாதி நான்மையும் உண் டென்பதறிக.

அஃதொக்கும்! இனி, அருகக் கடவுளுக்கும் பிறப்புண்டென்பது முதன் மறையின்கண் (பிரதமாநு யோகத்து) பெறப்படுமாலோ வெனின்; அற்றன்று; வினை நீங்கிய வழியன்றோ அருகத் தன்மை பெறுவது. அது பெறின் பிறவியில்லை என்பது தேற்றமாதலின் அருகக் கடவுளுக்கே பிறப்பில்லை யென்பதாம்.

இனி, உயிர்கட் கிடர்தீர்த்து உயரின்பமாக்குஞ் சொல்லுடைமையும் பிறர்க்கில்லை. அவரெல்லாம் உயிர்கட் கிடராக்குஞ் சொல்லினரே ஆதலால்; என்னை? யெனின், புத்தன் நல்வினை தீவினைகளைச் செய்தார் அவற்றின் பயனை நுகர்தல் இல்லை என்பதறிந்தும், நல்வினை செய்ம்மின்! தீவினை ஒழிமின்! என்று அறிவுறுத்து உயிர்களை வாளாவருத்துகின்றா னாதலாலும், வீதல் முதலிய ஐந்துறுப்பிற் குறையக் கொன்றார்க்குக் கொலையில்லை யென்றும் ஊனுகர்வார்க்குக் கொலையில்லை யென்றும் கூறுமாற்றால் கொலைமேற் செலுத்தியும், காற்பொன்னிற் றாழ்ந்தது களவன்றென்று கூறுமாற்றால் களவின்கட் செலுத்தியும், எள்மாத்திரை வைக்கின் காமமன்றென்று கூறுமாற்றால் காமத்திற் செலுத்தியும்; கள்ளென்னு முள்ள மின்றிக் கட்குடித்தார்க்குக் குற்றமில்லை யென்று கூறுமாற்றாற் கட்குடிப்பித்தும் மகாயானம் மந்திரயானங்கள் கூறுமாற்றானும் கட்குடிப்பித்தும், பிறன் பொய்யென்றறியா வகையிற் பேசும் பொய் பொய்யன்று என்று கூறுமாற்றாற் பொய் கூறுவித்தும் இன்னோரன்ன பல்வேறு வகைகளாலும் எல்லா வுயிர்களையும் இம்மையினும் மறுமையினும் இடருறச் செய்கின்றா னாதலாலும், மகௌடத பண்டிதனென சாதகத்து (பிறப்பில்)த் தான் ஓரரசனுக்கு அமைச்சனாகி வேற்றரசரை யெல்லாம் வஞ்சித்தும், தன் மனைவியையும் மக்களையும் பிறர்க்கு வழங்கி வருத்துவித்தும், பிறவாற்றானும் உயிர்களைத் துன்பறுவிக்கின்றமையின் "புத்தன் உயிர்கட்கிடராக்குஞ் சொல்லான் என்பது பெறுதும்."

இனி, திருமால் முதலிய ஏனைய கடவுளர் சொற்களும் உயிர்கட் கிடராக்குஞ் சொற்களே யாதல் கண்ணன் அருச்சுனனைக் கொலைமேற் செலுத்தக் கூறிய பகவத்கீதை முதலியவற்றாலுணர்க. இனி, கண்ணன் முதலியோர் பிறரைக் காத்தற் பொருட்டுப் பிறர்க்குத் துன்பஞ் செய்தார் எனின் ஆறலை கள்வரும் பிறரைக் காத்தற் பொருட்டே ஆறலைப்பாராகலின் அதுவும் நல்வினை யெனப்படுமென்க.

இனி, துன்பக்காரணங்களாகிய இன்னா செய்தல், கொல்லல் முதலிய செயல்களை எவ்வாற்றானுந் தவிர்த்தலாலே அருகக் கடவுள் சொல்லே உயிர்கட் கிடர்தீர்க்குஞ் சொல்லாவதாம்.

இனி, துன்பக்காரணமாகிய உண்ணாமை முதலிய நோன்புகளும் அருகக் கடவுளால் அருளிச் செய்யப்படுமன்றோ? எனின், அவை பொறிகளால் வரும் துயர் நீங்குதற்குச் சொல்லப்பட்டன. அந்த நோன்பும், "சக்தியாக தபஸி," என்னும் 1 ஆம் தத்துவார்த்த சூத்திரத்து, உண்ணாமை முதலிய நோன்பு மேற்கொள்வோன் தன் ஆற்றற் கேற்ப நோற்றல் வேண்டும், ஆற்றற்கியையாது துன்புற்று நோற்றல் கூடாதென்றன்றே பலப்பல நிலைகளும் (ஆச்சிரமங்கள்) அருளிச் செய்யப்பட்டன. ஆதலால் அருகக் கடவுளே 'உயிர்கட்கிடர் தீர்க்குஞ் சொல்லான்' என்றுணர்க.

இனி, "தருமச்சுடரான் எனுந் தொன்மையினன்" என்பதூஉம் அருகக் கடவுளுக்கே சிறந்துரிமையுடையதாம். என்னை? அறமறிவுறுத்

தலின்கண் விருப்பு வெறுப்பின்றி ஞாயிறு பொருள்களை அறிவுறுத்து மாறு போலே அறிவுறுத்தலான் என்க.

இனி, எல்லா முணர்தலும் புத்தன் முதலியோர்க்குக் கூடாதாம். என்னை? புத்தன் (தன்மேற்கோட்கிணங்க) கணந்தோறுங் கெடுகின்ற ஒதலால் தானுளனாகிய ஒருகணப் பொழுதிலுள்ள ஒன்றை அறிவ தல்லது பிறவற்றை அறியானும் என்க. ஒரு கணத்துள்ள ஒன்றை யறிவனென்ற தென்னையோ? அந்த ஒரு கணத்துளவாகிய எல்லாப் பொருள்களையும் உணரானோ? எனின், உணரான்; என்னை? உணரின் சுடுவதாகிய நெருப்பை அறிவதோரியல்பும், குளிர்வதாகிய நீரை அறிவதோரியல்பும், இயங்குவதாகிய காற்றை அறிவதோரியல்பும் நிலையியற் பொருளாகிய மலை முதலியவற்றை அறிவதோரியல்பும் முதலாக எண்ணிறந்த இயல்புகளும் ஒன்றிற் குண்டாதல் வேண்டும்; அங்ஙனம் ஆதற்கண் கூறுபடாமை என்பது கெடும். பொருள்கள் பல்வேறு பண்பு களுடையவாகி மேற்கோள் மலைவாம். உண்மையில் ஓரியல்புடையதே யெனினும், வழக்கின்கண் பல்வேறியல்பு முண் டெனின், வழக்கென்பது பொய்யென்றவாறோ? மெய்யென்றவாறோ? பொய்யென்றவாறெனின், பொய்யாகிய பல்வேறியல்புகளால் பல் வேறுகாரியங்கள் தோன்றுவாம்;பொய்யாகிய கழுதைக்கொம்பினாலே சிமிழும் மூடியும் தோன்றமாட்டாமை போல; மெய்யெனின், பொருள் களும் வாய்மையாக பலவேறு பண்புகளையுடையனவாம். ஓரறிவு ஒரு பொருளையறியும்; பிறிதோர் அறிவு பிறி தொரு பொருளையறியும்; இவ்வாறு பலவேறறிவுகளும் பல வேறு பொருள்களையும் அறியு மெனினும் ஓரறிவு பலவேறு பொருள்களையும் அறியாதாம். ஓரறிவு அறியாதே யெனினும் அவன்றானறியு மெனின், அறிவுகளில் வேறா காததோர் உயிர் உண்டாதல் வேண்டும். உண்டாதற்கண்—

"நாஸ்த்யாத் மேதிவயம் பௌத்தா: ப்ரஇம"

எனவும்,

"தும் கமம்தி ணஹிகோஹி தும்கிதோ காரகோண க்ரியா அவித்யதே, அம்தி ணிம்விதிண்ணிம் விகோபுமா மம்கமம் திகமகோ நஅவித்யதே."

[அஃதாவது - பௌத்தராகிய யாங்கள் உயிரில்லை யென்போம்]

[அஃதாவது—துன்பமுண்டு; துன்பத்தைச் செய்வோனும் செயலு மில்லை; அவை அறியாமையே, வீடுண்டு, வீடெய்தும் உயிரில்லை; நெறி யுண்டு; நடப்போனில்லை. அவை அறியாமையே.]

எனவும் வருவனவற்றோடு மலையும். அவ்வாறு உயிரும் கணிகமே யாதலின், ஒருயிர் பலவேறு பொருள்களையும் அறியாதாம். அன்றியும் புத்தன் முற்றறிவுடையோனல்லன் என்பதும் பௌத்தராலேயே கூறப்பட்டது; அது வருமாறு—

"ஹேயோ பாதேய தத்வஸ்ய ஸாப்யுபாயஸ்ய வேதக:
யா:ப்ரமாண மஸாவிஷ்டோ நது ஸர்வஸ்ய வேதக
ஸர்வம் பச்யது வாமாவா தத்வ மிஷ்டந்து பச்யது
ப்ரமாணந் தூரதர்சி சேது அத்ரக்ருத்ராநு பாஸ்மஹே
கீடஸம்யா பரிஞாநம் தஸ்யநக்வோப யுஜ்யதே."

[பொருள்களில் நீக்குவன எவை? கொள்வன எவை? அவற்றுன் உபாயமென்னே? இவற்றை அறிந்தவனே எம்மால் விரும்பப்பட்ட அளவையான எந்தலைவன்; அவன் எல்லாவற்றையும் அறிந்தவனல்லன். அவன் எல்லாவற்றையும் காண்பனே? அல்லனே? எங்களுக்கு இன்றியமையாதவற்றை யெல்லாம் காண்கின்றான். தொலை நோக்கியே அளவை யாமெனின் கருடனை வழிபடவே அமையும். உலகிலுள்ள புழுவினங்களின் கணக்கறிந்திருக்கலாம், அவ்வறிவினால் எமக்காம் பயன் யாது?]

எனவரும். (தருமகீர்த்தி நியாயபிந்து)

அன்றியும், எந்தலைவன் யாதொரு பொருளை ஒருவன் வினவும், அப்பொருளை அப்போதறிந்துரைக்கும். பின்னும் பிறிதொன்றை வினவின் அதனையு மப்போதறிந்துரைக்கும்; இவ்வாறே வினவுந் தோறும் வினவிய பொருளை யெல்லாம் அறிந்துரைத்தலின் அவன் முற்றுணர்வுடையனாதல் மிகையாம் பிறவெனின், ஒருவன் எல்லாப் பொருளும் எவ்வகையவென்று ஒருங்கே வினையவிடத்து எல்லாப் பொருளும் அறிந்துரைத்தல் வேண்டும். அறிதற்கண் முற்றறிவின்மை இடையூறு செய்யும். இனி நுந்தலைவன் வினையினீங்கி விளங்கிய அறிவாலறிந்தானே? நீங்காது நின்றே யறிந்தானே? நீங்காதறிந்தானெனின் எல்லோரும் முற்றறிவுடையராதல் வேண்டும். வினையினீங்கியே அறிந்தானெனின், நீங்கியவினை மீட்டும் வந்தெய்தாமையால் அவன் எப்பொழுதும் முற்றறிவுடையனாகல் வேண்டும். என்னை? ஒரு காலம் முற்றறிவுடையனாயின் மற்றொரு காலத்துச் சிற்றறிவுடையோனாதற்குக் காரணம் இன்மையானென்க அன்றியும், ஒருகாலத்து முற்றறிவுடையோனுமிடத்தும் பல்வேறியல்புடையனும். ஆதலால் புத்தனுக்கு முற்றறிவுண்மை கூடாதாம் என்பது.

இனி, பிற கடவுளரும் நிலையாமையுடையராதலின் முற்றறிவுடைய ரல்லர். குளிர்ப்பண்புடைய நீரை யறிந்தவன் பிறிதொன்றை அறிதல் கூடாமையானும், வித்தினை அறிந்தவன் முளையை அறிதல் கூடாமை யானும் அவர்க்கு முற்றறிவு கூடாதென்பது. வித்தினையும் முளையினையும் அறியின் அவர்தம் நிலையுதற்றன்மை கெடும். ஆதலால் அவர்க்கு முற்றறிவுண்மை கூடாதென்பது.

அன்றியும் தமக்குப் பின்பு துன்பம் வருமென்பதறியாது அசுரர் முதலாயினரைப் படைத்துப் பின் அவர்களைக் கொல்ல முயலலும், தம்மை வழிபட்டுப் போதும் அன்பர் உள்ளத்தினியல்பறியாது அவரை ஆராய்தலும் முதலாயின சொல்லும் வேத முதலிய நூல்களுள்ளும் அவர் முற்றறிவுடையராகாமை கண்டு கொள்க.

இனி, முற்றறிவுடையானொருவன் உண்டாயினன்றே இவ்வாராய்ச்சி வேண்டுவது; அவனில்லையெனின், முற்றறிவுடையானின்மை எற்றாலறிந்தனை? காண்டலளவையாலறிந்தாயேல், இக்காலத்திவ்விடத்தில்லை யென்றறிந்தாயோ? எல்லாக்காலத்தும் எவ்விடத்தும் இல்லை யென்றறிந்தாயோ? இக்காலத்திவ்விடத்தில்லையெனின் அதற்கு மறுப்பில்லை. இனி எல்லாக்காலத்தும் எவ்விடத்தும் முற்றறிவுடையோனில்லை என்று காட்சியளவையான் அறிந்தாயேல், நீ முற்றறிவுடையனாகுதி. என்னை? எல்லாக் காலமும் எல்லாவிடமும் மக்கள் அறிவும் ஒருசேர அறிகின்றாயாதலின்.

"விவக்ஷுத: புருஷோ ஸர்வக்ஞோ நபவதி வக்த்ரத் வாதே
வீதிபுருஷ வது;"

என்னும் கருத்தளவையாலறிவாயெனின்,

"சைமினிரங்யோவா கச்சித் வேதார்த்க் ஞாநோபவதி
வக்த்ரத் வாதே: வீதிபுருஷ வது;"

என்னும் கருத்தளவையாலே சைமினி முதலாயினார்க்கும் வேதப் பொருளுணருந் தன்மை இல்லை என்பது பெறவேண்டும். பெறேமேல் முன் சொன்ன கருத்தளவையாலும் முற்றறிவன் இல்லை யென்பது பெறப்படாது என்க.

இனி, வேதத்தாலும் முற்றறிவனின்மை அறியலாகாது. என்னை?

"ஸவேத்தி வேத்யம் நஹிதஸ்ய வேத்தாதமா ஹுரக்ரியம்
புருஷம் மஹாந்தம்"
(சுவேதாசுவதர உபநிடதம் III ௧௧. சுலோகம்)

[அவன் எல்லாமறிவான், அவனை யறிபவன் யாருமில்லை; அவனே முதல்வன்; அவனே பெரியோன்]

எனவும்,

"ஹிரண்ய கர்ப்பஸ் ஸர்வக்ஞ;"

எனவும் இன்னோரன்ன பிறவற்றாலும் வேதம் முற்றறிவனைச் சொல்லு தலான் என்க.

இனி, அருத்தாபத்தி யென்னும் பொருளளவையானும் முற்றறிவ னின்மை அறியலாகாது. என்னை? அதற்கும் கருத்தளவைக்குக் கூறிய குற்றம் வருதலான். இனி, உவமையளவையாலும் முற்றறிவன் இல்லை யென்பது அறியலாகாது. என்னை? உவமையும் பொருளுமாகிய எல்லா மாந்தரையும் அவ்வறிவுகளையும் நீ கண்கூடாகக் காண்டல் வேண்டு மாகலான், அங்ஙனம் வேண்டுதற்கண் நீயே முற்றறிவனாகுதி. இனி அபாவம் என்னும் இன்மையளவையான் முற்றறிவனின்மை அறிவா யெனின் - இன்மையளவையாவது - மேற்கூறிய ஐந்தளவையானும் அறியப்படாமையன்றே. அதனால் முற்றறிவன் இல்லையென்பதறிய லாகாது. என்னை? பரசேதோவிருத்தி விசேடமும் இவ்வைந்து அளவைகளானும் அறியப்படாமையின் அஃது இல்லையாதல் வேண்டு தலின் என்பது. ஆதலால் முற்றறிவன் இல்லையென்பது எந்த அளவையானும் அறியலாகாது.

இனி, முற்றறிவனுண்மைக்கு அளவை யாதெனின்,

"அஸ்தி ஸர்வக்ஞ: ஜ்யோதிர்க்ஞாநாத் யுபதேச காரணா
ஸ்யாந்யதா நுப பத்தே;"

வேதம்போல ஒளி நூலும் தான்றோன்றியெனின், வேதம் தான்றோன்றி (சுயம்பு) என்பதெனை பெற்றவாறென்றார்க்கு,

"அநாதி: கால: ப்ரக்ருத வேதவ்யா பாராங்ய
காலத்வாது அதுநாதந காலவது, வேதாத்யயநம்
புருஷாத்யயந பூர்வகம் வேதாத்யயந சப்த வாச்யத்
வாது, இதாநீந்தந வேதாத்யயனவது,"

எனவரும் கருத்தளவைகளாற் பெறப்பட்டதெனின், இவ்வாறு கொள்ளின் முப்பிடகம் முதலாயினவற்றிற்கும் தான்றோன்றித் தன்மை வரும். பௌத்தர் முதலியோர் முப்பிடகம் முதலாயினவற்றைச் செயற்கை நூல்கள் என்பவாலோவெனின், அவர் வேதத்தையும் செயற்கை என்பவாகலின் அதுவுஞ் செயற்கையேயாம்.

அன்றியும் வேதத்தைத் தான்றோன்றி என நிலைநாட்ட வருகின்ற அளவைகளெல்லாம் முப்பிடகத்தும் சொல்லுதலின், அவையும் தாந்தோன்றிகளேயாதல் வேண்டும்; ஆதலால் வேதம் செயற்கையேயாமென்பது. இன்னும்—

"மகதோ பூதஸ்ய நிச்வஸித மேதத் யத்ரக்வேதோ
யசுர்வேதஸ் ஸாமவேதோ தர்வாங்கிரஸ இதிகாச
புராணம் வித்யாது." (பிருகதாரண்யக உபநிடதம்)

[வேதங்களும் இதிகாச புராணங்களும் இறைவனாற் கூறப்பட்டன.] எனவரும் வேதமொழிகளானும் வேதம் செயற்கை நூலென்பது பெறுதும்.

அன்றியும், வேதம் இப்பொழுதுள்ள மக்களாற் செய்யப்பட்ட நூல்களை ஒத்திருத்தலானும் செயற்கையே. இனி வேதம் பொறிகளால் அறியப்படாத பொருள்களையும் கூறுதலின் மக்கள் நூலை ஒத்ததன்றெனின், அறியப்படாத பொருள்களைக் கூறுதல் பிடக நூல்களுக்குமுண்மையின் இங்ஙனம் கூறுதல் பொருந்தாது. ஆகவே வேதம் செயற்கை நூலே என்பது. ஆதலால் ஒளிநூல் முதலியனவும் செயற்கையேயாதலின் அவற்றை யாக்கியோர் முற்றறிவுடையோரே என்பது. சிற்றறிவினர் செய்யின் எல்லாராலும் அறியப்படுதல் வேண்டும். அன்றியும், இதனை,

"பரோக்ஷாப்ய விநாபாவா வஸர்வபம் தைகுண
தோஷயோ: சாஸ்த்ரைர் நிமித்ததை: சாஸரகாரவது
ஸம்பிரதியதே,"

என்பதனாலும் பெறுதும். இந்த முற்றறிவுடைமை பிறர்க்குக் கூடாமையின் அருகக்கடவுளுக்கே கூடுமென்பது; ஆதலின் இஃது அருகக் கடவுளுக்கே சிறந்துரிமையுடைய மங்கலவாழ்த்தாயிற்றென்க. (க)

## இதுவுமது

உ. அன்னான் பயந்த வறவாரமிர் துண்டு நின்றார்
இன்னா நிலைய ரெனவேண்டுவ தில்லை யார்க்கும்
பன்னாந் துணையும் பணிந்தாகிய பத்தி யினா
னென்னா லுரைக்கப் படுகின்றதோன் றீங்கு ளதே.

(இ - ள்.) அன்னான் பயந்த அற ஆர் அமிர்து உண்டு நின்றார் - அத்தகைய பெருமையுடைய அவ்வருகக் கடவுளாகிய திருப்பாற் கடலீன்ற நல்லறமென்னும் பெறலரிய அமிழ்தத்தைப் பருகி அவன்பா லன்புற்று நின்ற சித்தரும் ஆசாரியரும் ஆசிரியரு மாதிய சான்றோர்கள்; இன்னார் இனையர் என வேண்டுவது இல்லை-அவர் தாமும் இன்ன வகுப்பினர் இன்ன நிலையினர் என்று ஆராய்தலின்றி; யார்க்கும் - அவர் யாவரே யாயினும், பன் ஆங்கு துணையும் பணிந்து - வழிபாட்டிற்கு வகுத்தோதிய அத்துணைப் பாகுபாட்டானும் வழிபாடு செய்யுமாற்றால்; ஆகிய பத்தியினால் - எம்முள்ளத்தே பெருகிய அன்புடைமை காரணமாக; ஈங்கு என்னால் உரைக்கப்படுகின்றது ஒன்று உளது-இத் தமிழகத்தின் கண் எம்மாற் கூறப்படும் செய்தி ஒன்றுளது என்க.

(வி-ம்.) அறவாரமிர்து என்றமையால் அருகக்கடவுளாகிய திருப் பாற்கடல் என்னப்பட்டது. அறவாரமிர்துண்டார் என்றது சித்தர் ஆசாரியர் ஆசிரியர் என்னும் சான்றோரை. எனவே இவ்விரண்டு செய்யுளானும் அருகசரணம் சித்தசரணம் ஆசாரியசரணம் ஆசிரியசரணம் என்னும் நால்வகை வழிபாடுங் கூறப்பட்டமையுணர்க. பன் – பன்னுதல் – அஃதாவது – வகுத்தல். எனவே 'நமக்கார பாகுடங்' என்னும் வழிபாட்டு நூலின்கண் வகுத்தோதப்பட்ட எல்லா முறைகளானும் என்றாயிற்று. ஈங்கு என்றது - வடவேங்கடந் தென்குமரி ஆயிடைக் கிடந்த இத் தமிழகத்தின்கண் என்றவாறு. உரைக்கப்படுகின்ற தொன்று என்றது நீலகேசியின் வரலாற்றினை. (உ)

கடவுள் வாழ்த்து முற்றும்.

௩. பண்டாக மத்துட் பயிலாவுரை யென்று மிக்கார்
விண்டீங் கிதனை வெகுளார்விடல் வேண்டு வன்யான்
தண்டா மரைமே னடந்தான்றடந் தாளவ ணங்கிக்
கண்டேன் கிடந்தேன் கனவின்னிது கண்ட வாறே.

(இ - ள்.) *யான்-எளியேனாகிய யான் ஒரு நாள்; தண் தாமரை மேல் நடந்தான் தடம் தாள் வணங்கிக் கிடந்தேன் - குளிர்ந்த தாமரை மலரின்மேல் நடந்தவனாகிய அருகக் கடவுளினது, பெரிய திருவடிகளை வணங்கி உறங்கிக் கிடந்தேனாக; இது கனவில் கண்ட வாறு - இந்நூலகத்து நிகழ்ச்சிகளை அப்பொழுது கனவின்கட் கண்டேன். ஆதலால், மிக்கார் - கல்வி கேள்விகளில் மிகுந்த சான்றோர்; பண்டு ஆகமத்துள் பயிலா உரை என்று - இந்நூல் மூன்னர் நம் பரமாகமத்துள் பயின்றிலாத கருத்துடையது என்று கருதி; விண்டு - மனம் வேறுபட்டு; இதனை வெகுளார் விடல் வேண்டுவன் - இந்நூலினைச் சினவாது விடல் வேண்டுவேன்; என்க.*

(வி - ம்.) *பண்டாகமம் என்றதனை பண்டையதாகிய ஆகமம் எனினு மாம். ஆகமம் - வேதம். மிக்கார் என்றது கல்வி கேள்விகளில் மிக்க சான்றோர் என்றவாறு. தாமரைமேனடந்தான்-அருகக்கடவுள். வணங் கிக் கிடந்தேன் கண்டேன் என மாறுக ஆகமத்தில் பயின் றிலாவுரை யெனினுமாம். அவன்றாள் வணங்கி உறங்கிக் கிடந்த பொழுது அவனருளால் நிகழ்ந்த கனவினுள் கண்ட நிகழ்ச்சியாகலின் இதுவும் சான்றோரால் போற்றப்படும் தகுதியுடைத்து ஆதலால் வெகுளாது ஏற்றுக் கொள்க! என்று வேண்டியபடியாம்.*

*விண்டு - வேறுபட்டு. வெகுளார்விடல் என்றது வெகுளற்க என்னும் ஒரு சொன்னீர்மைத்து.* (௩)

௪. ஆய்நீல வுண்க ணவளாயடங் காமை செய்யும்
பேய்நீல கேசி பெரியோனறங் கொண்ட பின்னைத்
தீநீல வுள்ளந் திரிந்தேய திருவத் தளாய்
மாஞால மெல்லா மறமாற்றிய மாட்சி யளா.

(இ - ள்.) *ஆய் நீல உண்கண் அவளாய்-அழகிய கருங்குவளை மலரை ஒத்த கண்டோர் நெஞ்சத்தை யுண்ணும் கண்ணையுடைய வளாய்த் தோன்றி; அடங்காமை செய்யும்-மிகையான செயல்களைச் செய்யாநின்ற; பேய் நீலகேசி - பேயாகிய நீலகேசி என்பவள்; பெரியோன் அறங் கொண்ட பின்னை - தவத்தினால் பெரியோனாகிய முனிச்சந்திர பட்டாரகன் என்னும் துறவி திருவாய் மலர்ந்தருளிய அறவுரைகளைக் கேட்டபின்பு; தீ நீல உள்ளம் திரிந்து-தனக்கியல்*

பான நீல நிறமுள்ள இலேசியையோடு கூடிய நெஞ்சம் மாறுபட்டு; ஏறு திருவத்தளாய் - மேன்மேலுமுயருகின்ற மெய்யறிவுச் செல்வம் உடையவளாய்; மாஞாலம் எல்லாம் மறம் மாற்றிய மாட்சியளா - பெரிய உலகத்தின்கண் வாழும் மாந்தர்கள் செய்யும் தீவினைகளை யெல்லாம் மாற்றி நல்லாற்றுப்படுத்திய மாண்புடையவளாக; என்க.

(வி - ம்.) ஆய் - அழகு. நீலம் - கருங் குவளை மலர்; உண்கண் — கண்டோர் நெஞ்சினை உண்ணும் கண் என்க; மையுண்ட கண் எனினுமாம். கண்ணவளாய் எனல் வேண்டியதன்கண், ணகரம் கெட்டது. நீலகேசி என்னும் பேய் அடங்காமை செய்யுங்கால் அழகிய பெண்ணுருவங் கொண்டு செய்தாள் என்பது கருத்து. இனி, உண்கண் அவளாய் எனக் கண்ணழித்துக் கொண்டு "அவளாய் என்பது — பண்டறிசுட்டு. பழையனூர் நீலகேசி என்றவாறு" எனக் கூறுவர் பழைய உரையாசிரியர். பேய் நீலகேசி; இரு பெயரொட்டு; பெரியோன் - முனிச்சந்திர பட்டாரகன். தீ நீல உள்ளம் என்றது நீல நிறமுடைய இலேசியையோடு கூடிய நெஞ்சம் என்றவாறு; இலேசியை என்பது உயிரின் நுண்ணுடலின்கண் உண்டாகும் வருண பேதம் குண பேதங்களால் ஏற்படுமொரு விகாரம். இஃது ஆறு வகைப்படும். அவை, கிருட்டின லேசியை, நீலலேசியை, கபோத லேசியை, பீத லேசியை, பதும லேசியை, சுக்கில லேசியை என்பனவாம். இவற்றுள் முதல் மூன்றும் தீக்குணத்தாலாவன; பின் மூன்றும் நற்குணத்தாலாவன. எனவே நீலகேசி தீமை செய்தற்குக் காரணமான நெஞ்சம் மாறுபட்டு என்முராயிற்று. திரு அம் சாரியை பெற்றுத் திருவம் என நின்றது. ஞாலம்: ஆகுபெயர்; மறம்-தீவினை. மாட்சியளாக என்பது ஈறு கெட்டது. ஏறு திருவத்தளாய்–என்பது தர்மானு பந்தி புண்ணியத்திற்கு அதிட்டானம் செய்தாளென்றவாறு," என்பது பழைய வுரை. (உ)

ங. தேவன் னுரைப்பத் தெளிந்தேன்பிற் றெளிந்த வெல்லாம்
மாவென் றுகொண்டேன் மடனேவலி யாக நின்று
நாவல் புலவ ரவைநாப்பண் நாட்ட லுற்றேன்
பாவின் னவென்று பழிப்பாரினி யில்லை யன்றே.

(இ - ள்.) தேவன் உரைப்பத் தெளிந்தேன் - அக்கனவின்கண் அவள் வரலாற்றினை ஒரு தேவன் எனக்குக் கூறக் கேட்டறிந்தேன்; பின் தெளிந்த எல்லாம் மா என்று கொண்டேன் - பின்னர் யான் அறிந்து கொண்ட பொருள்களெல்லாம் சிறப்புடையன என்று துணிந்தேன்; மடனே வலி ஆக நின்று - துணிந்தபின்னர் என்னுடைய அறியாமையே எனக்கு வன்மை தருவதாக அதன் வழி நின்று; நாவல் புலவர் அவை நாப்பண்ணின் - நாவன்மையுடைய நல்லிசைப்புலவர் குழுமிய அவை நடுவில் அப்பொருள்களை ஒரு நூலாகச் செய்து; நாட்டல் உற்றேன் - ஓதி நிலை நாட்டத் தொடங்கினேன்; ஆதலால், பா இன்ன என்று பழிப்பார்

இனி இல்லை - இந்நூலின்கண் அமைந்த செய்யுள்கள் இத்தகைய குற்றமுடையன என்று கூறி என்னைப் பழிப்பவர் இலராவர் என்க.

(வி – ம்.) தேவன் என்பது யாரோ ஒரு தேவன் என்பதுபட நின்றது. நீலகேசி மாட்சியளாக அவள் வரலாற்றினை உறங்கிக் கிடந்தேனுகிய என் கனவில் ஒரு தேவன் தோன்றி உரைப்பத் தெளிந்தேன் என்றவாறு. தெளிந்த : பல வறிசொல். மா - சிறப்பு. குருட்டுக்கண் இருட்டுக் கஞ்சாது என்னும் பழமொழிக் கேற்ப யான் என் அறியாமையே துணையாகக் கொண்டு இந்நூலைச் செய்தேன் என்றவாறு. நாட்டுதல்-நிறுவுதல். இங்ஙனமாதலின் இனி என் செய்யுளுக்குக் குறை கூறிப் பழித்தற்கு ஒருவரும் இரார் என்றவாறு. அன்றும் ஏயும் அசைகள். (க)

உ. கண்டிங்கு நாளுங் கடல்வையகங் காதல் செய்யும்
வெண்டிங்க டானும் விமலந்தனக் கில்ல தன்றே
கொண்டேன்சொ லெல்லாங் குணனேயெனக் கூற வேன்னே
னுண்டிங்கோர் குற்ற மெனில்யானுமோட் டாமை யுண்டே.

(இ – ள்.) கடல் வையகம் இங்கு நாளும் கண்டு காதல் செய்யும் - கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் வாழும் மாந்தர்கள் இங்கு நின்றே நாள்தோறும் பார்த்துப் பார்த்துப் பெரிதும் விரும்பா நின்ற; வெண் திங்கள் தானும் - வெள்ளிய திங்கள் மண்டிலந் தானும்; தனக்கு விமலம் இல்லது அன்றே - தனக்குக் களங்கமின்மையை உடையதன்று அல்லவா? அங்ஙனமே; என் சொல் எல்லாம் கொண்டு - என்னுடைய மொழிகளையெல்லாம் ஏற்றுக் கொண்டு; குணனே எனக் கூறுக என்னேன் - முழுதும் நல்லனவே என்று கூறிப் பாராட்டுவீராக என்று யான் வேண்டு வேனல்லேன்; இங்கு ஓர் குற்றம் உண்டு எனில் - இந்நூலினை ஓதுவோர் இதன்கண் இவ்விடத்தில் ஒரு குற்றம் உளது எனக் கூறுவாராயின்; யானும் ஒட்டாமை உண்டோ - அவ்வழி யானும் அக் குற்றத்தை உணர்ந்து (திருத்திக் கோடலன்றி அக் குற்றத்தை) ஒத்துக் கொள்ளுதலின்றி ஒவ்வாதிருத்தலும் உண்டு கொல்; என்க.

(வி – ம்.) கடல் வையகம் இங்கு நாளுங் கண்டு காதல் செய்யும் என மாறுக. வையகம்-உலகில் வாழும் மாந்தர்க்கு ஆகுபெயர். இங்கு என்றது இங்கு நின்றே என்பதுபட நின்றது. காதல் - விருப்பம். விமலம் - அழுக்கின்மை; களங்கமின்மை. விமலம் தனக்கு இல்லது எனவே மலமுடைத்து என்பதாயிற்று. மலம் ஈண்டுக் களங்கம் என்க. உலகத்தார், திங்களைக் களங்க முண்மை அறிந்தேயும் காதல் செய்வார். அங்ஙனமே நல்லோர் இந்நூலின்கண் குற்றமிருக்கவேயும் குணங் கொண்டு பாராட்டுவர் என்பது கருத்து. என் சொல்லெல்லாம் கொண்டு என மாறுக. கொண்டு என்பது ஏற்றுக்கொண்டு என்றவாறு. குணம்,

நீ.—2

குணன் என நின்றது போலி. என் சொல் எல்லாம் ஏற்றுக்கொண்டு குணனே எனக் கூறுக என்னேன் எனவே குற்றமாயவற்றை விடுத்துக் குணங்களைப் பாராட்ட வேண்டும் என்பது என் வேண்டுகோள் என்றவாறு. ஒட்டுதல் - உடன்படல்; இதன்கண் கண்டு கூறுங்குற்றங்களை யான் மகிழ்வுடன் ஏற்றுக் கொண்டு திருத்திக் கொள்வேன் என்பார் ஓர்குற்றம் உண்டு எனில் ஒட்டாமை உண்டோ? என்றார். (௬)

௭. தெள்ளி நரைத்துத் தெருளாதுறு தீமை செய்யும்
புள்ளி னுரையும் பொருளாமெனக் கோட லினா
லெள்ளுந் திறத்தஃ துரையென்றிது நீக்க லின்றாய்க்
கொள்ளு முலகங் குணமாணறம் வேண்டு மென்றால்.

(இ - ள்.) உலகம் உறு தீமை செய்யும் புள்ளின் உரையும் தெருளாது பொருள் ஆம் எனக் கோடலினால் - உலகத்தார்கள் மிக்க தீமையைச் செய்கின்ற காக்கை முதலிய பறவைகளின் மொழிகளையும் ஆராயாமல் இவை நிமித்தம் ஆதலின் நமக்கு உறுதிப் பொருளே ஆகும் என்று கருதி ஏற்றுக் கொள்ளுதலால்; அஃது - அந்நூலின்; உரை - மொழிகளை; தெள்ளி - ஆராய்ந்து; நரைத்து எள்ளும் திறத்த - வெளிறி இகழும் தன்மையுடையன; என்று கருதி, குணம் மாண் அறம் வேண்டும் என்றால் - நலம் மிக்க அறங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்று கருதினால்; (உலகம்) இது நீக்கல் இன்றாய்க் கொள்ளும் - (உலகத்தார்) அறங் கூறும் இந்நூலினையும் விலக்குதலின்றி ஏற்றுக் கொள்ளுவர் என்க.

(வி - ம்.) உறுதீமை - மிக்க தீமை; எதிர் காலத்தில் வந்தெய்தும் தீமை எனினுமாம். புள், காக்கை கோட்டான் கரிக்குருவி முதலியன. உரை என்றது அவற்றின் ஒலிகளை. உலகத்தார் காக்கை முதலியவற்றின் உரைகளை அவை உணர்த்தும் நிமித்தங்களைக் கருதி ஏற்றுக் கொள்ளுதல் போல இந்நூலின் குற்றங்களை ஆராயாமல் இதன்கண் ஓதப்படும் அறங்களை உணர்தல் வேண்டும் என்பது கருதியேனும் உலகத்தார் இதனை ஓதத் தகும் என்றவாறு. தெள்ளி நரைத்து எள்ளும் திறத்த என இயைத்துக் கொள்க. நரைத்தல் வெளிறுடைத்தாதல். உலகம் என்பதனை முன்னும் கூட்டுக. குணம் மாண் அறம் நற்குணத்தால் மாட்சிமை பெற்ற அறம் என்க. (௭)

அவையடக்கம் முற்றிற்று.

---

## பதிகம்

அ. நாடும் மநாடா ளரசுந்நக ருந்ந கர்சூழ்
காடுங் கடவுள் புகனீக்குதல் கார ணம்மாத்
தேதேஞ் சிறுபேய் பெரும்பேய்த்தியைச் சென்று பற்றும்
பாடும் மவடான் பகைகோண்டுபல் காலவே ருட்டி.

(இ - ள்.) நாடும் - நாட்டுச் சிறப்பும்; நாடு ஆள் அரசும் - அந் நாட்டினை ஆளும் அரசனுடைய சிறப்பும்; நகரும் - அவ் வரசனுடைய தலை நகரச் சிறப்பும்; நகர் சூழ் காடும் - அந் நகரத்தைச் சூழ்ந்துள்ள நன் காட்டின் இயல்பும்; கடவுள் புகல் நீக்குதல் காரணம் மா - அக் காட்டின்கண் முனி சந்திர பட்டாரகன் என்னும் துறவோன் புகுந்து தங்குதலை விலக்குதல் காரணமாக; தேடும் சிறு பேய் - தமக்குப் புகலாவாரைத் தேடித்திரிகின்ற சிறிய பேய்கள்; பெரும் பேய்த்தியைச் சென்று பற்றும் பாடும் - பெரும் பேய்த் தலைவியாகிய நீலகேசியை அடைந்து அவளைப் பற்றுகின்ற பகுதியும்; அவள் தான் பகை கொண்டு - அந்நீலகேசி தானும் அத் துறவோன்பால் பகைமை கொண்டு; பல் கால் வெருட்டி - பன்முறையும் அச்சுறுத்தி என்க.

(வி - ம்.) நாடு-நாட்டுச் சிறப்பு. அரசு-அரசன் சிறப்பு. காடு-நன்காடு - (சுடுகாடு). கடவுள் - துறவோன்; ஈண்டு முனி சந்திர பட்டாரகன்; காரணம்மா என்புழி மகரம் விரித்தல் விகாரம்; ஈறு கெட்டது. பெரும் பேய்த்தி என்றது நீலகேசியை. பற்றும் பாடும்-பற்றுகின்ற பகுதியும் என்க. அவள்-நீலகேசியை. துறவோன் பால் பகை கொண்டு என்க. வெருட்டுதல் - அச்சுறுத்துதல். (க)

௬. தான்கண்ட வன்சேய் தவந்தன்னைக் கலக்க கில்லா
மான்கோண்ட நோக்கின் னவளாய்மற மாற்றி யபின்
ஹூன்கோண்ட காட்சி முதலாக வுடைத்த தேல்லாம்
யான்கண்ட வாறே யுரைப்பன்னவை யார்க்கி தனை.

(இ - ள்.) தான் கண்டவன் செய்தவம் தன்னைக் கலக்க கில்லா - தன்னால் காணப்பட்ட அத் துறவோன் செய்கின்ற தவ நிலையினைக் குலைக்க மாட்டாமல்; மான் கொண்ட நோக்கின் அவளாய் - மானினது விழிபோன்ற விழிகளை உடைய காமவேலைகை யாய் வந்து; மறம் மாற்றிய பின் - அம் முனிவன் கூறிய அறவுரைகளால் தனது அறியாமையை நீக்கிய பின்னர்; ஊன் கொண்ட காட்சி முதலாக உடைத்து - ஊனக் கண்ணால் காணும் நற்காட்சி முதலாகவுடைய; அது எல்லாம் - அப் பொருள்களை யெல்லாம்; அவையார்க்கு - இந் நல்லவையிலுள்ள சான்றோர்களுக்கு; இதனை

யான் கண்டவாறு உரைப்பன் - இந் நூலின்கண் யான் கண்ட முறைப்படியே கூறுவேன்; என்க.

(வி - ம்.) தான் கண்டவன் தன்னால் காணப்பட்டவன் என்க. செய்தவம் : வினைத்தொகை. கலக்க கில்லாது எனல் வேண்டிய வினையெச்சத்து ஈறு கெட்டது. இனி, கலக்ககில்லா நோக்கினவள் எனப் பெயரெச்சமாகக் கொள்ளினுமாம். மான்கொண்ட நோக்கினள் என்றது நீலகேசி மேற்கொண்டு வந்த '**காமலேகை**' உருவத்தை. மறம் - ஈண்டு அறியாமை (மித்தியா தரிசனம்). இதனை : உருபு மயக்கம். (உ)

**பதிகம் முற்றிற்று.**

---

முதலாவது

# தருமவுரைச் சருக்கம்

## நாட்டுச் சிறப்பு

௧௦. மாஞ்சோலை போங்கி மருதங்கிளிப் பிள்ளை கள்வாய்த்
தீஞ்சா றொழுகுந் திணையின்னணி தங்கி யேங்குந்
தாஞ்சால வாழ்நா ளளிரீனுந் தகைய துண்டு
பாஞ்சால மென்று பலரும்புகழ் பார்த்தி நாடே.

*(இ - ள்.) திணையின் அணி தங்கி - குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல் என்னும் நால்வகை நிலங்களின் அழகுகளெல்லாந் தன்பால் தங்கப்பெற்று; மருதம் மாஞ்சோலை பொங்கி - அவற்றுள் மருதநிலத்தின்கண் யாண்டும் மாஞ்சோலைகள் மிகுந்து; கிளிப் பிள்ளைகள் வாய் - அங்குள்ள கிளிப் பிள்ளைகளின் வாயின்கண்; தீம்சாறு ஒழுகும் - இனிய மாம்பழத்தின் சாறுகள் ஒழுகுவதற்கு இடனாய்; ஏங்கும் தாம் சால வாழ்நாள் - தன்கண் வாழ்வோர் ஏங்குதற்குக் காரணமான தம்முடைய மிக்க வாழ்நாளையுடைய மூப்புப் பருவந்தானும்; தளிர் ஈனும் தகையது - இளமையைத் தோற்றுவிக்கும் தன்மையுடையது; உண்டு - ஒரு நாடு உளது; அஃது யாதெனின்; பாஞ்சாலம் என்று பலரும் புகழ் பார்த்தி நாடு - பாஞ்சாலம் பஞ்சாலம் என்று உலகத்தார் பலரும் புகழா நின்ற பாத்திய நாடே ஆகும்; என்க.*

(வி - ம்.) மருதம் மாஞ்சோலை பொங்கி என மாறுக. மாஞ்சோலைகள் பொங்கிக் கிளிப்பிள்ளைகளின் வாயில் தீஞ்சாறு ஒழுகும் நாடு; திணையின் அணி தங்கி தளிரீனும் நாடு என்க; ஏங்கும் சால வாழ்நாள் என இயைத்து ஏங்குதற்குக் காரணமான மிக வாழ்ந்த வாழ்நாள் ஆகிய மூப்பு என்க; தன்கண் வாழ்வார் என வருவித்தோதுக. தளிர் - ஈண்டு இளமை. முதியோர்க்கும் இளமை தரும் சிறப்புடைய நாடு என்று புகழ்ந்த படியாம். தகையது ஒரு நாடு உண்டு அஃது யாதெனில் பார்த்தி நாடு எனச் சில சொல் பெய்து கொள்க. பார்த்தி நாடு- பாத்திய நாடு; இது கோசல நாட்டின் மேல்பால் உளது என்க. பாஞ்சால நாடு எனினும் பாத்திய நாடு எனினும் ஒக்கும். (௧)

௧௧. வாடா வளத்தான் மலர்ஞால மதிப்பின் மிக்க
காடாவ தி∴தா மதனன்னலஞ் சொன்ன லத்தாற்
கூடா தெனினுஞ் சிலகூறலும் வேண்டு மன்றே
பாடா விருந்தார் பிரிவஞ்சும் படிய தன்றே.

(இ - ள்.) வாடா வளத்தால் மலர் ஞாலம் மதிப்பின் - கெடாத வளமுடைமை காரணமாக விரிந்த உலகத்தின்கண் வாழ்வோர் நன்மதிப்பின்கண்; இஃது மிக்க நாடாவது ஆம் - இது மிகவும் சிறந்த நாடு ஆகும்; அதன் நலம் சொல் நலத்தால் கூடாது - அந் நாட்டினது நன்மை சொல்வன்மையால் சொல்லிக் காட்ட வியலாதாம்; எனினும் சில கூறலும் வேண்டும் அன்றே - அங்ஙனமிருப்பினும் அந்நாடு பற்றிப் பேச வந்த யான் ஒரு சில வேனும் கூறுதல் வேண்டுமன்றோ; ஆகவே சிறிது கூறுவன் கேண்மின்; பாடா விருந்தார் பரிவு அஞ்சும் படியது - அந் நாடு தானும் தன்னைப் புகழத் தொடங்கினோர் முற்றும் புகழமாட்டாமையின் வருந்தி அஞ்சுதற்குக் காரணமான தன்மையுடையதாகும்; என்க.

(வி - ம்.) வாடா வளம் - வாடாத வளம்: பெயரெச்சத் தீறு தொக்கது. மலர் ஞாலம்: ஆகுபெயர். மதிப்பின்கண் மிக்க நாடு என்க; சொன்னலம் - சொல்வன்மை; அந் நாட்டின் புகழினைத் தொகுப்பின் எஞ்சும், விரிப்பிற் பெருகும் ஆதலின் சொன்னலத்தால் கூடாது என்றவாறு. கூடாதாயினும் அந்நாட்டின் நிகழ்ந்த வரலாறு கூறவந்த யான் அதுபற்றி ஒரு சிலவேனும் கூறுதல் இன்றியமையாதாயிற்று. ஆதலின் ஒருசில கூறுவன் கேண்மின்! என்பார் சொன்னலத்தாற் கூடாதெனினும் சில கூறுதல் வேண்டுமன்றே என்றார். பாடாவிருந்தார் என்பது பாடுவோர் என்னும் ஒருசொல் நீர்மைத்து. படியது - தன்மையது. (௨)

(வருகின்ற இரண்டு செய்யுளும் குளகம்)

மருதநில வருணனை

வேறு

௧௨. வருபுனலன வளவயலிடை மறிவனவின வாளை
மருவினியன மகிழ்தகையன மலர்சிறையன நாரை
கருவரியன கடுநடையன கனைகுரலன கம்புள்
திருவுருவின தெரிகதிரின திசைதிசைதொறு செந்நெல்.

(இ - ள்.) வருபுனலன வளவயலிடை - அப்பாஞ்சாலநாட்டின்கண்ணமைந்த மருத நிலத்தின்கண் இடையறாது வருகின்ற நீர் வருவாயையுடைய வளங்கெழுமிய கழனிகளிடையே; இன வாளை மறிவன - எப்பொழுதும் கூட்டமான வாளைமீன்கள் புரளாநிற்கும்; நாரை - நாரைகள்; மருவு இனியன - சேவலும் பேடுமாய்க் கூடி இன்பமெய்துவனவும்; மகிழ்தகையன - காண்போர் மகிழும் அழகுடையனவும்; மலர் சிறையன - விரிந்த சிறகுகளோடே பறப்பனவுமாம்; கம்புள் - சம்பங்கோழிகள்; கரு வரியன கடு நடையன கனை குரலன - கரிய வரிகளையுடையவாய் அங்குமிங்கும் விரைந்துநடப்பனவும் கனைக்கின்ற ஒலியை உடையனவுமாம்; செந்நெல் - சிறந்த செந்

நெற்பயிர்கள்; திசை திசைதொறும் - பார்க்கும் திசைகளிலெல்லாம்; திருஉருவின - அழகிய தோற்றமுடையனவும்; தெரிகதிரின - வெளியே தெரிகின்ற கதிர்களையுடையனவுமாம் என்க.

(வி - ம்.) வருபுனலன என்றது இடையறாது வருகின்ற நீர் வருவாயையுடையன என்றவாறு. இனம் - கூட்டம். மருவு - மருவுதல். மகிழ்தகையன: வினைத்தொகை; கண்டோர் மகிழும் அழகுடையன என்க. மலர் சிறையன: வினைத்தொகை: கம்புள் - சம்பங் கோழி. திருவுருவின என்பதற்குப் பொன் நிறத்தனவாகிய கதிரின எனக் கோடலுமாம். (௯)

௧௰. பணைநிலையன கமுகொடுபடு பழமுதிர்வன தெங்க
மிணைநிலையன சுளைகனியிவை யினியனபல வாழை
மணனயர்வன மனையயலன மதுவிரிமணி நீலந்
திணிநிலையன திரளரையன தெரிமலரன மருதம்.

(இ - ள்.) கமுகொடு தெங்கம் - கமுகுகளும், தென்னைகளும்; பணைநிலையன - பருத்து நிற்கும் நிலையை யுடையனவும்; படுபழம் உதிர்வன - தம்பாற் றோன்றி முதிர்ந்த பழங்கள் உதிரப் பெறுவனவுமாம்; சுளை கனி இவை இனியன - நிரலே சுளையும் கனியும் என்னும் இவற்றால் பெரிதும் இனிமை யுடையனவாகிய; பல வாழை-பலாமரமும், வாழையும்; இணை நிலையன - யாண்டும் சேர்ந்து நிற்கும் நிலையை யுடையனவாய்; மது விரி மணி நீலம் - தேனோடு மலர்கின்ற நீல மணிபோலும் நிறமுடைய கருங்குவளை மலர்கள்; மணன் அயர்வன மனை அயலன - திருமணம் நிகழ்த்தாநின்ற இல்லங்களின் பக்கங்களிலே மலர்வனவாம்; மருதம் - மருத மரங்கள்; திணி நிலையன - யாண்டும் செறிந்து நிற்கும் நிலையை யுடையனவாய்; திரள் அரையன - திரண்ட அடிப் பகுதியை யுடையனவாய்; தெரி மலரன — விளங்குகின்ற மலர்களையும் உடையனவாம் என்க.

(வி - ம்.) பணை நிலை—பணைத்து நிற்கும் நிலை. சுளையால் இனியனவாகிய பலாவும், கனியால் இனியனவாகிய வாழையும் என்றவாறு. பல — பலா: குறியதன் கீழ் ஆகாரம் குறுகிற்று. மணன் - மணம்; திருமணம். மனை — இல்லம். மணி - நீலமணி. திணிநிலை — செறிந்து நிற்கும் நிலை; திண்ணிதாக நிற்கும் நிலையுமாம். மருதம் - ஒருவகை மரம். மருத நிலம் என்பது இம்மர முடைமையாற் பெற்ற பெயர். (௰)

நெய்தனில வருணனை

௧௧. கரைதழுவிய கழிமடலின கடிகமழ்வன கைதை
புரைதழுவிய போதியவிழ்வன பொன்மலர்வன புன்னை
விரைதழுவிய விழைதகையன வெறிமலர்விரி ஞாழல்
நிரைதழுவிய நெறிகழியிடை நிகரலரன நெய்தல்.

(இ - ள்.) கரை தழுவிய கைதை - இனி, அந்நாட்டின்கண் நெய்தனிலப் பரப்பின்கண் கடற்கரையைத் தழுவியுள்ள தாழை கள்; கழிமடலின கடிகமழ்வன - எண்ணிறந்த மலர்களை யுடையன வாய் யாண்டும் நறுமணம் கமழ்வனவாம்; புன்னை - புன்னை மரங் கள்; புரை தழுவிய பொதியவிழ்வன - உட்டுளை பொருந்திய நாள ரும்புகளை மலர்வனவாய்; பொன் மலர்வன - பொன்னிறமான பூந்துகள்களை விரிப்பனவாம்; வெறிமலர் விரி ஞாழல்-தேனுடைய மலர்கள் மலர்கின்ற ஞாழல் மரங்களோவெனில்; விரை தழுவிய விழை தகையன - பெரிதும் மணமுடையனவாய்க் காண்போர் விரும்பும் அழகுடையனவாம்; நெய்தல் - நெய்தல்கள்; நெறிகழி யிடை - செறிந்த கழிகளிலே; நிரை தழுவிய நிகர் அலரன - நிரல் நிரலாக வமைந்த ஒளிமலர்களை யுடையனவாம் என்க.

(வி - ம்.) கரை - கடற்கரை. கழி - மிகுதிப் பொருள் தரும் ஓர் இடைச்சொல். மடல் - ஈண்டு மலர். கடி - மணம். கைதை - தாழை. புரை - துளை; உயர்வுமாம். பொதி - நாளரும்பு. பொன் - பொன்னிற மான பூந்துகள். விரை-நறுமணம். விழைதகையன : வினைத்தொகை. தகை - அழகு. வெறி - தேன். கழி - நீரோடை. நிகர் - ஒளி. (௯)

முல்லைநில வருணனை

௧0. குருவுடையன கோடிமிடைவொடு குலைவிரிவன கோடல்
தருசுடரன தளவயலின தகைமலரன தோன்றி
யருகுடையன வணியுருவின வயலணவலர் காயா
முருகுடையன முகைவிரிவன முறியலர்வன முல்லை.

(இ - ள்.) முல்லை - இனி முல்லை நிலப்பரப்பு; குருவுடையன கொடி மிடைவொடு கோடல் - நிறமுடையனவாகிய கொடிகளின் செறிவினோடே வெண்காந்தள்கள்; குலைவிரிவன - பூங்குலைகள் மலராநிற்பனவாம்; அயலின தளவு - அக்காந்தளின் பக்கலிலே யுள்ள முல்லைக் கொடிகள்; தருசுடரன தகைமலரன - வீசுகின்ற ஒளியை யுடையனவாகிய அழகிய மலர்களை யுடையனவாம்; அருகு உடையன அணி உருவின தோன்றி - அவற்றின் அருகில் உள்ளனவாகிய செங்காந்தள் மலர்கள் அழகிய தோற்ற முடையன வாம்; அயலன - அவற்றின் பக்கலிலே உள்ளனவாகிய; அலர் காயா - மலர்கின்ற காயாஞ் செடிகள்; முருகு உடையன முகை விரிவன முறி அலர்வன - மண முடையனவாகிய அரும்புகள் மலர்வனவும் தளிர்கள் விரிவனவும் ஆம் என்க.

(வி - ம்.) குரு-நிறம். கோடி மிடைவு-கொடிகளின் நெருக்கம். குலை - பூங்குலை. கோடல் - வெண்காந்தள். தளவு - முல்லை. தகை - அழகு. தோன்றி - செங்காந்தள் முருகு - மணம். முகை - அரும்பு. முறி - தளிர். முல்லை - முல்லை நிலம். (௧0)

குறிஞ்சிநில வருணனை

௧௬. நனைசினையன நகுவிரையன நலனுடையன நாகம்
வினையுடையன பொழுதிவையென விரிவனகணி வேங் [கை
கனைசுடர்விடு கதிர்மணியறை களனயர்வன காந்த
ளினியனபல சுனையயலன விறுவரையன குறிஞ்சி.

(இ - ள்.) நாகம் - குறிஞ்சி நிலப் பரப்பின்கண் யாண்டும் நாக மரங்கள்; நனைசினையன நகுவிரையன நலனுடையன - தளிர்க்கின்ற கிளைகளை உடையனவும், விளங்குகின்ற மணமலர்களை உடையனவுமாகி அழகுடையனவாம்; கணிவேங்கை - காலங் கணிக்கின்ற வேங்கை மரங்கள்; இவை வினையுடையன பொழுது என விரிவன - இக்காலம் குறவர்களுக்குத் தினை யரிதல் முதலிய தொழில்கள் உடையனவாகிய பொழுதுகள் என்று அறிவித்து மலர்வனவாம்; கனை சுடர் விடு கதிர்மணி அறை - மிக்க ஒளிவிடுகின்ற கதிர்களை உடைய மாணிக்கப் பாறையின் மேல்; காந்தள் களன் அயர்வன - காந்தள் மலர்கள் வேன்மகளுல் வெறியாட்டுக் களம் இழைக்கப் படுவனவாம்; குறிஞ்சி இனியன பலசுனை அயலன இறுவரையன - குறிஞ்சிச் செடிகள் காண்பதற்கு இனியனவாய்ப் பலவாகிய சுனைகளின் பக்கத்தனவும், பெரிய மலையின் பக்கத்தனவும் ஆகும்.

(வி - ம்.) நனை – தளிர். சினை – கிளை. விரை – மலர்களுக்கு ஆகுபெயர். நலன்–அழகு. நாகம்–குறிஞ்சி நிலத்திற்குரிய ஒருவகை மரம். வேங்கை – வேங்கை மரம்; வேங்கை மரம் மலரும் காலமே குறவர் தினையரிதற் காலம் ஆதலின் அவற்றைக் கணி வேங்கை வினையுடையன பொழுது இவையென விரிவன என்றார். மணிஅறை-மாணிக்கப்பாறை. களன்-வெறியாடற் களம். குறிஞ்சி-குறிஞ்சி நிலத்திற் குரியதொரு செடி; மரம் என்பாரும் உளர். இறுவரை – பெரிய மலை. (எ)

(வருகின்ற நான்கு செய்யுளும் ஒரு தொடர்.)

வேறு

௧௭. ஆடலொடு பாடலவை தாமறுத லின்றிக்
கேடில்புக ழாரவைகள் கண்டுமிசை கேட்டு
மூடலொடு கூடலுணர் வார்கள்புணர் வாசாய்ச்
சேடரொடு சேடியரூஞ் செல்வமிக நல்கி.

(இ - ள்.) ஆடலொடு பாடல் அவை தாம் அறுதல் இன்றி- தன்பால் கூத்தும் இசையும் ஆகிய அக்கலைகள் தாம் ஒரு பொழுதும் ஒழிதலின்றி; கேடு இல் புகழ் ஆர் அவைகள் கண்டும்-கெடுதலில்லாத புகழ் பொருந்திய கல்லவை பல தோற்றுவித்தும்; இசை கேட்டும்-இசையைக் கேட் டின்புற்றும்; மேலும் ஊடலொடு

கூடல் உணர்வார்கள் - மகளிரும் மைந்தரும் ஊடலின் தன்மையையும் கூடலின் தன்மையையும் உணர்வார்களாய்; புணர்வாராய் - தம்முட் காதற் புணர்ச்சி யுடையவராய்; சேடரொடு சேடியரும் செல்வமும் மிக நல்கி - தமக்கு ஏவல் கேட்கும் தோழரொடு தோழியரும் செல்வங்களும் மிகா நிற்றலாலே அச்செல்வங்களை வருந்தி வந்தோர்க்கு ஈந்தும் என்க.

(வி - ம்.) ஆடல் – கூத்து. பாடல் - இசை. அவை – நல்லோர் அவை; காணுதல் – அவைகளை உண்டாக்குதல். சேடர் – ஏவலர்; சேடியர் - ஏவன் மகளிர்; செல்வம் மிகுதலால் அவற்றை நல்கி என்க. (அ)

௯. தானமோடு சீலமவை தாங்கிநல மோங்கி
மானமோடு மாயமில ராயமனை யாருங்
கானமோடு கல்லடரு ளில்லிடரு நீங்கி
ஞானமொடு செய்வினைக ளையமுயல் வாரும்.

(இ - ள்.) தானமொடு சீலம் அவை தாங்கி - நற்றானமும், நல்லொழுக்கமும் ஆகிய அவற்றை மேற்கொண்டு; நலம் ஓங்கி - நன்மைகள் எல்லாம உயரப் பெற்று; மானமொடு - மானக் குணமுடையராய்; மாய மிலராய மனையாரும் - பொய்மையில்லாதவர்களாகிய இல்லறத்தார்களும்; கானமொடு கல் அடருள் - காட்டினும், மலைக் குகையினூடும் சென்று தங்கி; இல் இடரும் நீங்கி - இல் வாழ்க்கையினால் வரும் துன்பங்களினும் விலகி; ஞானமொடு செய்வினைகள் மைய முயல்வாரும் - மெய்யறிவினோடு முன்பு செய்த இருவகை வினைகளும் அறும்படி துறவு நெறியில் நின்று முயலும் சான்றோர்களும் என்க.

(வி - ம்.) தானம்-ஐம் பொறியையும் வென்றார்க்கு உவந்து கொடுத்தல். சீலம் - தேன், கள், ஊன் முதலிய தீய உணவுகளைத் துறத்தல் இதனை,

> "படநாகந் தோலுரித்தாற் போற்றுறந்து
> கண்டவர்மெய் பனிப்ப நோற்றிட்
> டடனாக வைம்பொறியும் வென்றார்க்
> குவந்தீத றான மாகும்,
> இடனாகத் தீங்தேனுந் தெண்மட்டு
> முயிர்க்குமா மீண்டி நிற்றற்
> கிடனாகு மூனுமிவை துறத்தலே
> சீலமென் றுரைத்தார் மிக்கார்"

எனவருஞ் சிந்தாமணியினு முணர்க; மாயம்–பொய். மனையார்-இல்லறத்தார்; இல் இடர் – இல்லறத்தார்க்கு வரும் துன்பம். ஞானம்–மெய்யறிவுடைமை. செய்வினை – பழவினை. வினைகள் மைய முயல்வோர் என்றது துறவோரை. (௯)

௧௯. அந்தணரு மல்லவரு மாகியுட னாய
மந்தமறு நால்வருண மாட்சியின ராகித்
தந்தநெறி யிற்றிரித றானுமில ராகி
நந்திமிசை சேறலுடை நன்மையது நாடே.

(இ-ள்.) அந்தணரும் அல்லவரும் ஆகி-பார்ப்பனர்களும், ஏனையோருமாகி; உடன் ஆய மந்தம் அறும - ஒன்றோடொன்று தொடர்புடையனவாகிய தந்தொழிலில் மடியற்ற; நால் வருண மாட்சியினர் ஆகி - நான்கு வகைப்பட்ட குல மாண்பினை உடையவராகி; தம்தம் நெறியில் திரிதல் தானும இலர் ஆகி - தங்கள் தங்கள் நெறியில் நின்றும் பிறழாதவர்களாய்; நந்தி மிசை சேறல் உடை நன்மையது அ நாடு - வளர்ச்சியுற்று மேற்சேறலையுடைய நலன்களையுடையது அப் பாஞ்சால நாடு என்க.

(வி-ம்.) அந்தணர் - பார்ப்பனர்; அல்லவரும் என்றது ஏனை அரசர், வணிகர், வேளாளர் என்னும் மூன்று குலத்தார்களையும் என்க. நால்வகை வருணத்தாரும் ஒருவருக்கொருவர் உதவி யுடையராதலின் உடன் ஆய நால்வருணம் என்றார். மந்தம்-மடி. தம்தம் நெறி என்றது அந்தணர் முதலிய நால்வர்க்கும் தனித்தனியே சிறந்துரிமையுடைய செயல்களையும் ஒழுக்கங்களையும் என்க. நந்துதல்-வளர்தல்; மிசை சேறல் - பேன்மேல் உயர்தல். அ+நாடு=அந்நாடு என மிக வேண்டியது சந்தம் நோக்கி அநாடு என நின்றது. இது தொகுத்தல் விகாரம். ஏ : அசை. அந்நாடு நன்மையது என முடிவு கொள்க. (௧௯)

௨௰. ஞாலமறி நன்மையுடை நாடதென லானு
மாலுமழை மூன்றுமுடை மாதமென லானுங்
காலமவை தாங்கடுமை காண்பருமை யாலும்
பாலைநில மொன்றுமவ ணின்மை பழுதன்றே.

(இ-ள்.) அது ஞாலம் அறி நன்மை உடை நாடு எனலானும் - அப்பாஞ்சால நாடு உலகெலாம் உணர்ந்த நலன்களையுடைய நாடு என்று எல்லோராலும் புகழப்படுதலானும்; மாதம் ஆலும் மழை மூன்றும் உடை எனலானும் - ஒவ்வொரு திங்களும் தனித்தனியே ஆரவாரிக்கின்ற மூன்று மழைகளை உடையது என்று கூறப்படுதலானும்; காலம் அவைதாம் கடுமை காண்பு அருமையாலும் - கடுமைக்குரிய இளவேனிலும், முதுவேனிலுமாகிய பருவங்களிலும் வெப்பத்தின் கடுமை காண்டல் அருமையாய் இருத்தலானும்; அவண் - அந் நாட்டின்கண்; பாலைநிலம் ஒன்றும் - முற்கூறப்பட்ட மருதம் முதலிய நானிலங்களும் அமைந்திருத்தலே அன்றிப் பாலைநிலம் மட்டும்; இன்மை பழுது அன்று - இல்லாமை அந்நாட்டிற்கு ஒரு குற்றம் ஆகாது என்க.

(வி - ம்.) ஞாலம் - உலகம்; ஆகுபெயர். ஆலும் மழை - ஆரவாரிக்கும் மழை; காலம் என்றது வெப்பத்திற்குரிய இருவகை வேனிலையும் குறித்து நின்றது. முல்லையும் குறிஞ்சியும் மழை இன்மையால் நல்லியல் பழிந்து பாலை என்னும் ஓர் படிவம் கொள்ளும் ஆகவின் திங்கள் மும்மாரி பெய்யும் அந்நாட்டில் பாலை நிலம் இலதாயிற்று என்றவாறு. இன்மை பழுதன்றே என்றது இல்லாதிருத்தல் புகழே யன்றிப் பழியன்று என்பதுபட நின்றது. (கக)

(நாட்டுச் சிறப்பு முற்றிற்று)

## அரசன் சிறப்பு

### வேறு

உக. இன்ன தன்மையி ஞடினி தாளுமம்
மன்ன வன்னவன் யாரெனில் வானிடை
சொன்ன நீர்மைச் சுரேந்திரன் போன்றிவட்
டன்ன ஞரில் சமுத்திர சாரனே.

(இ - ள்.) இன்ன தன்மையின் நாடு இனிது ஆளும் அம் மன்னவன் அவன் யாரெனில் - இத்தகைய சிறப்பினையுடைய பாஞ்சால நாட்டினை இனிதாக ஆளுகின்ற அந்த அரசன் யாரோ வென வினவில்; வானிடை - வான் உலகத்தின்கண்; சொன்ன நீர்மை சுரேந்திரன் போன்று - நூல்களால் சொன்ன சிறப்பினையுடைய அமரர் கோமானாகிய இந்திரனைப் போன்று; இவண்-இந் நிலவுலகத்தின்கண்; தன் அனார் இல்-தன்னை ஒத்த அரசர்கள் இல்லாத; சமுத்திர சாரன்-சமுத்திர சாரன் என்னும் சக்கரவர்த்தியே என்க.

(வி - ம்.) பாஞ்சால நாட்டை ஆளும் அரசன் அமரர் கோமானைப் போல் தனக் கிணையில்லாத சமுத்திர சாரன் என்றவாறு. 'மன்ன வன்னவன்' என்புழி னகரம் சந்த வின்பம் நோக்கி விரிந்தது. அவன் : பகுதிப் பொருளது. வான் - வானுலகம். வானுலகத்தின்கண் சுரேந்திரன் தன்னேரிலாது இருந்தாற் போலச் சமுத்திரசாரனும் இந் நிலவுலகத்தில் தன்னேரிலாத அரசனா யிருந்தான் என்பது கருத்து; நூல்களில் சொன்ன நீர்மையை யுடைய சுரேந்திரன் என்க. இவண் - இந் நிலவுலகத்தின்கண்.

உஉ. ஆற்ற லாலரி மாவவ ஞணையாற்
கூற்ற மேயெனக் கூறலு மாங்குடி
போற்ற லுயனை யான்போகுந் தார்கண்மேற்
சீற்றத் தாற்றெறு தீத்திர ளேயனன்.

(இ - ள்.) அவன் - அச்சமுத்திர சாரன் என்னும் அரசனானும், ஆற்றலால் அரிமா-வலிமையால் சிங்கவேற்றினை ஒப்பான்; ஆணையால் கூற்றமே எனக் கூறலும் ஆம்-ஆணை செலுத்துதலில் இவன் கூற்றுவனையே ஒப்பான் என்று கூறுதலும் பொருந்தும்;

குடி போற்றல் - குடிமக்களைப் பாதுகாத்தலிலே; தாய் அனையான் - ஒவ்வொருவர்க்கும் அவரவர் தாயையே ஒப்பாவான்; பொருந்தார்கள் மேல் சீற்றத்தால் - தன் பகைவர்பால் சினத்தினாலே நோக்குமிடத்து; தெறு தீ திரள் அனையான் - எப்பொருளையும் அழிக்கின்ற ஊழித் தீயின் பிழம்பையே ஒப்பாவான் என்க.

(வி - ம்.) ஆற்றல் - வலிமை. கூற்றம் - கூற்றுவன். குடி - குடிமக்கள். பொருந்தார் — பகைவர். சீற்றம் — சினம். தெறு தீ என்ற சிறப்பால் ஊழித் தீ என்பது பெற்றும். (கரு).

## நகரச் சிறப்பு

உகூ. தீய தீரத் திருவிளை யாடிய
தேயங் காவல னுய்த்திசை யாவினு
மீய நீண்டகை யேந்த னகர்திசை
போய புண்ட வருத்தன மென்பதே.

(இ - ள்.) தீய தீரத் திரு விளையாடிய - தீயனவெல்லாம் ஒழிந்துபோகும்படி திருமகள் விளையாட்டயர்கின்ற; தேயம் காவலனும் - இப்பாஞ்சால நாட்டைப் பாதுகாக்கின்ற அரசனும்; ஈயத் திசை யாவினும் நீண்டகை ஏந்தல் நகர் - தன்னாட்டிலேயன்றிப் பிறநாடுகளினும் வறியோர்க்கு வழங்கும் பொருட்டு நான்கு திசைகளினும் மிகவும் நீண்டுள்ள கைகளையுடைய அச்சமுத்திரசாரன் என்னும் வேந்தன் வீற்றிருக்கும் தலைநகரம் (யாதெனில்); திசை போய புண்ட வருத்தனம் என்பது - தன்னிசை திசையெலாம் பரவிய புண்டர வருத்தனம் என்பதாம் என்க.

(வி — ம்.) தீய - பசிபிணி முதலிய தீமைகள். திரு — திருமகள். திருவிளையாடிய என்றது செல்வம் பெருகிய என்றவாறு. தேயம் — ஈண்டுப் பாஞ்சால நாடு. திசையாவினும் ஈய நீண்டகை ஏந்தல் என்றது, அம் மன்னன் தன் குடிமக்களைப் பாதுகாத்தலோடன்றி அயனாட்டின்கண்ணிருந்து வருந்தும் வறியோர்க்கும் பொருள்களை உய்த்து வழங்கினன் என்றவாறு. திசை போயது — இசையாற் றிசை போயது என்க. புண்ட வருத்தனம்-புண்டர வருத்தனம். (கஎ).

## (வேறு)

உஎ. வளங்கெழு நெடுமதில் வாயில் யாவையு
முளம்புக விழுங்கியிட் டுமிழ்வ வொத்துமேல்
விளங்கிவெண் மதிசெலல் விலக்கி நீள்விசும்
பளந்ததன் றனைமையு மறிவ வொத்தவே.

(இ - ள்.) வளங்கெழு நெடுமதில்-வளம் பொருந்திய அந்நகரத்தின் நெடிய மதில்கள்; வாயில் - தம் வாய்களாலே; யாவை

யும் உளம்புக விழுங்கி விட்டு உமிழ்வ ஒத்து - எல்லாப் பொருள் களும் தம்முட் புகும்படி விழுங்கிப் பின்னர் அவற்றையெல்லாம் உமிழ்வனபோற் காணப்படுதலன்றியும்; மேல் வெள்மதி விளங்கிச் செலல் விலக்கி - தமக்கு மேலே வானின்கண் வெள்ளிய திங்கள் மண்டிலம் ஒளியால் விளங்கிச் செல்லுதலைப் பொருவாய்த் தடுத்து; நீள் விசும்பு அளந்து அதன் துணைமையும் அறிவ ஒத்தவே - மேலும் நீண்ட வானத்தையும் ஊடுருவிச் சென்று அதன் அளவை யும் அறிந்து கொள்வன போலத் தோன்றும் என்க.

(வி - ம்.) மதிலுக்கு வளமாவது:—"மணி நீரும் மண்ணும் மலையும் அணிநிழற் காடும்" உடைத்தாதலும், "உயர்வு அகலம் திண்மை அருமை" என்னும் இந்நான்கு பண்புகளையும் உடைத்தாத லும், உட்கொண்ட உணவுகளையுடைத்தாதலும் பிறவுமாம் என்க. 'உளம்' என்புழி அம்: சாரியை. துணைமை - அளவு. (கஓ)

உரு. விரைசெல லிவுளியும் வேழ வீட்டமு
நிரைசெலற் கொடுஞ்சிநன் னேமி யூர்தியு
மரசுடைப் பெருங்கடை நெருங்கு மார்கலி
திரைபொரு கடலொலி யன்ன செம்மற்றே.

(இ - ள்.) அரசு உடைப் பெருங்கடை - மன்னவனுடைய அரண்மனையினது பெரிய வாயிலிலே; விரை செலல் இவுளியும் - விரைந்து செல்லும் செலவினையுடைய புரவிகளும்; வேழ ஈட்டமும் - யானைக் கூட்டமும்; நிரை செலல் கொடுஞ்சி நல்நேமி ஊர்தியும் - வரிசையாகச் செல்லுதலையுடைய கொடுஞ்சியையும் நல்ல உருள்களை யும் உடைய தேர்களும்; நெருங்கும் ஆர்கலி - சென்று நெருங்குத லாலே எழாநின்ற ஆரவாரம்; திரை பொரு கடல் ஒலி அன்ன செம்மற்று - அலைமோதாநின்ற கடலினது முழக்கத்தை ஒத்த பெருமை யுடைத்தாம் என்க.

(வி - ம்.) விரை செலல் - விரைந்து செல்லும் செலவு. இவுளி— குதிரை. நிரைசெலல் - வரிசையாகச் செல்லும் செலவு. கொடுஞ்சி - ஒரு தேருறுப்பு. நேமி — உருள். நேமியூர்தி - ஈண்டுத் தேர். பெருங் கடை - பெரிய வாயில். ஆர்கலி-ஆரவாரம். செம்மற்று - பெருமை யுடைத்து. (கக)

உசு. அகிற்புகை யளாவியு மணிகொள் வீதியிற்
றுகிற்கொடித் தொகுதியுந் தூய சுண்ணமு
முகிற்றலைக் கலவிவான் மூடி மாநகர்
பகற்கிடை கொடாததோர் யாண்மை மிக்கதே.

(இ - ள்.) மாநகர் - பெரிய அப் புண்டர வருத்தன நகரம் தன்கண் எழாநின்ற; அகில் புகை அளாவியும் - அகிற்புகை யாண்டும் பரவியும், அணிகொள் வீதியில் துகில் கொடித் தொகுதி

யும் - அழகு கொண்ட வீதிகளிலே உயர்த்தப்பட்ட துகிலாலியன்ற கொடிக் கூட்டங்களும்; தூய சுண்ணமும் - மாதர்கள் தூவிய நறுமணப் பொடிகளும்; முகில் தலைக் கலவி வான்மூடி - முகிற் கூட்டத்தோடு சேர்ந்து வானத்தை மறைத்து; பகற்கு இடை கொடாத ஓர் பான்மை மிக்கது-எப்பொழுதும் இருண்டிருத்தலன்றி ஞாயிற்றொளி புகுதற்கு இடைவெளி கொடாததொரு தன்மை மிகுவதாயிற்று என்க.

(வி - ம்.) தொகுதி-கூட்டம். தூய-தூவிய. சுண்ணம்-நறுமணப் பொடி. கலவி-கூடி. பகற்கு-ஞாயிற்றொளிக்கு. பான்மை-தன்மை. (௧௭)

பலாலையம் என்னும் நன்காட்டியல்பு

வேறு

௨௭. ஆங்க மாநக ரணைந்தது பலாலைய மென்னும்
பேங்கோள் பேரதவ் வூரது பிணம்படு பெருங்கா
டேங்கு கம்பலை யிரவினும் பகலினு மிகலி
யோங்கு நீர்வையத் தோசையிற் போயதொன் றுளதே.

(இ - ள்.) அ மா நகர் அணைந்தது-அப் புண்டர வருத்தன மென்னும் பெரிய நகரின் மருங்கே உளதும்; பலாலையம் என்னும் பேரது - 'பலாலையம்' என்னும் பெயரினையுடையது; ஏங்கு கம்பலை இரவினும் பகலினும் இகலி - துன்பத்தால் ஏங்கி யழுவாருடைய ஆரவாரம் இரவும் பகலுமாகிய இருபொழுதுகளினும அந்நகராரவாரத்தோடு மாறுபட்டு; ஓங்கும் நீர் வையத்துப் பேம் கொள்நீர் - பெருகாநின்ற கடல் சூழ்ந்த வுலகத்தே வாழ்வோர் அஞ்சும் நீர்மையையுடையதும்; ஓசையில் போயது - இவ்வுலகத்துள்ள சுடுகாட்டினுள் வைத்துச் சாலவும் பெரியதென்னும் புகழ் எங்கும் பரவியதும்; அவ்வூரது - அந்த நகரத்திற்குரியதும் ஆகிய; பிணம் படு பெருங் காடு ஒன்று உளது - பிணங்கள் சுடுகின்ற பெரிய சுடுகாடு ஒன்றுளதாயிற்று என்க.

(வி - ம்.) ஆங்கு : அசை. பலாலையம் என்பது அச்சுடுகாட்டின் பெயர். பேம் - அச்சம். பிணம்படுதல் - பிணங்கள் கொடுவருதல். ஏங்குதல் சுற்றத்தாரின் அழுகை. அந்நகரத்தின் கம்பலையொடு இகலி என்க. இகலுதல்-மாறுபடுதல். சுடுகாட்டிற்குப் புகழாவது, உலகினுள்ள சுடுகாடுகளில் பெரிதென்றல். ஓசை-புகழ். (௧௮)

௨௮. விண்டு நீண்டன வேய்களும் வாகையும் விரவி
யிண்டு மீங்கையு மிகுள்பட மிடைந்தவற் றிடையே
குண்டு கண்ணின பேய்களுங் கூகையுங் குழறிக்
கண்ட மாந்தர்தம் மனங்களைக் கலமலக் குறுக்கும்.

(இ - ள்.) விண்டு நீண்டன வேய்களும் வாகையும் விரவி - அப்பெருங்காடு தன்கண் பிளந்து நீண்டுள்ள மூங்கில்களும் வாகை மரங்களும் கலந்து; இண்டும் ஈங்கையும் இருள்பட மிடைந்து - இண்டங் கொடியும் ஈங்கைப் புதலும் இருளுண்டாகச் செறிந்து; இவற்றிடையே - இவையிற்றினூடேயூடே; குண்டு கண்ணின பேய்களும் கூகையும் குழறி - குழிந்த கண்களையுடைய பேய்களும் கூகைகளும் குழறுகிற்றலாலே; கண்ட மாந்தர் தம் மனங்களை - தன்னைக்கண்ட மக்களுடைய நெஞ்சங்களை; கலமலக் குறுக்கும் - பெரிதும் அச்சுறுத்தும் என்க.

(வி - ம்.) விண்டு-பிளந்து: விள் என்னும் வினைப்பகுதியிற் றோன்றிய வினையெச்சம். நீண்டன: முற்றெச்சம். வேய் - மூங்கில். வாகை-ஒருவகை மரம். விரவப்பட்டு, மிடையப்பட்டு என்க. குழறி- குழற. குண்டு - ஆழ்ந்த. காடு கலமலக்குறுக்கும் என்க. கலமலக் குறுத்தல்: ஒருசொல், அச்சுறுத்தல். (க௯)

உ௦. ஈமத் தூமமு மெரியினு மிருளோடு விளக்கா
ஊமைக் கூகையு மோரியு முறழுறழ் கதிக்கும்
யாமத் தீண்டிவந் தாண்டலை மாண்பில வழைக்கும்
தீமைக் கேயிட னயதோர் செம்மலை யுடைத்தே.

(இ - ள்.) ஈமத் தூமமும் எரியினும் இருளொடுவிளக்கா - பிணஞ்சுடும் விறகினின்றெழும் புகையாலியன்ற இருளோடே அவ் விறகில் எரிகின்ற தீயே விளக்காக; ஊமைக் கூகையும் ஓரியும் உறழ் உறழ் கதிக்கும் - ஊமத்தங் கூகையும் நரியும் மாறி மாறி ஒலிக்கும்; யாமத்து ஆண்டலை ஈண்டி வந்து - நள்ளிரவிலே ஆண்டலைப் புட்கள் கூட்டமாக வந்தெய்தி; மாண்பு இல - கேட்டற்கின்னாதனவாகிய குரலாலே; அழைக்கும் - கூப்பிடா நிற்கும்; இவ்வாற்றால் அப் பெருங்காடு; தீமைக்கே இடன் ஆயது ஓர் செம்மலையுடைத்து - தீங்கிற்கே இடனாகும் ஒரு பண்பினையுடையதாம் என்க.

(வி - ம்.) ஈமம் - பிணஞ்சுடும் விறகடுக்கு. தூமம் - புகை. எரி - நெருப்பு. ஈமத்தினின்றும் இருளும் விளக்கும் தோன்றின என்பது மருட்கையணி. ஊமைக் கூகை - ஒருவகைக் கூகை. இதனை ஊமத்தங் கூகை என்பர். ஓரி - நரி. உறழ் உறழ் - மாறி மாறி. கதித்தல் - மிண்டு ஒலித்தல். யாமம்-நள்ளிரவு. ஆண்டலை - ஒருவகைப் பறவை. கேட்டற் கின்னாவாக அழைக்கும் என்பார் மாண்பில வழைக்கும் என்றார். செம்மல் - மிண்டுப் பண்பு என்னும் பொருட்டு. கண்டோரும் கேட்டோரும் அஞ்சிப் பிணிவாய்ப்படுதலும் சாதலும் உண்டாகலின் தீமைக்கே இடனும் செம்மல் என்றார். 'இவ்வாற்றால் அப் பெருங்காடு' எனச் சொல் வருவிக்கப்பட்டது. காடு செம்மலையுடைத்து என முடிவு கொள்க. (உ௦)

௯0. வெள்ளின் மாலையும் விரிந்தவெண் டலைகளுங் கரிந்த
கொள்ளி மாலையுங் கொடிபடு கூறையு மகலும்
பள்ளி மாறிய பாடையு மெலும்புமே பரந்து
கள்ளி யாரிடைக் கலந்ததோர் தோற்றமுங் கடிதே.

(இ - ள்.) வெள்ளில் மாலையும்-பாடை மாலைகளும்; விரிந்த வெண் தலைகளும் - பிளந்த வெள்ளிய தலைகளும்; கரிந்த கொள்ளி மாலையும் - கருகிய சூறைக் கொள்ளி வரிசைகளும்; கொடிபடு கூறையும் - கொடிபோல் நீளிய கிழிந்த ஆடைகளும்; அகலும் - மண்ணகலும்; பள்ளிமாறிய பாடையும் - பிணங்கள் படுத்த லொழிந்த வறும்பாடைகளும்; எலும்பும் - எலும்புகளும்; பரந்து-யாண்டும் பரந்து; கள்ளி ஆர் இடைக் கலந்து - கள்ளிக ளடர்ந்த இடங்களும் விரவி; ஓர் தோற்றமும் கடிது - காண்டற்குக் கடுமை யாயதொரு தோற்றமும் உடைத்து என்க.

(வி - ம்.) வெள்ளில் மாலை-பாடையிற்றூக்கிய மாலை. கொள்ளி மாலை - குறைக் கொள்ளியின் வரிசை. இனி, கொள்ளிவைப்போர் சூட்டும் மாலை எனினுமாம். பள்ளி - படுக்கை பிணக்கிடை. (௨௧)

௯௧. காக்கை யார்ப்பன கழுதுதங் கிளையொடு கதறித்
தூக்க ளீர்ப்பன தொடர்ந்தபல் பிணங்களுந் தூங்கச்
சேக்கை கொள்வன செஞ்செவி யெருவையு மருவி
யாக்கை கொண்டவர்க் கணைதலுக் கரிதது பெரிதும்.

(இ - ள்.) காக்கை ஆர்ப்பன - இனி யாண்டும் காக்கைகள் கரைந்து ஆரவாரிப்பனவாகவும்; கழுதுதங் கிளையொடு கதறித் தூக்கள் ஈர்ப்பன - பேய்கள் தங்கள் சுற்றத்தோடு ஆரவாரித்து ஊனைப்பற்றி இழுப்பனவாகவும்; தொடர்ந்த பல் பிணங்களும் தூங்க-நிரலாகப் பல்வேறு பிணங்களும் தூங்காநிற்பவும்; சேக்கை கொள்வன செஞ்செவி எருவையும் மருவி - அவ்விடத்திலேயே தங்குவனவாகச் சிவந்த செவியையுடைய கழுகுகளும் கூடி; அது யாக்கை கொண்டவர்க்கு அணைதலுக்குப் பெரிதும் அரிது - அப் பெருங்காடு உடம்பெடுத்த மக்கள் அச்சம் காரணமாக எய்துதற்கு மிகவும் அரிய தொன்றும் என்க.

(வி - ம்.) ஆர்ப்பன - ஆரவாரிப்பன. கழுது - பேய். தூக்கள்- ஊன்கள். சேக்கை-தங்குமிடம். எருவை-கழுகு. யாக்கை-உடம்பு. அச்சம் காரணமாக அணைதலுக்கு அரிது என்பது கருத்து. (௨௨)

௯௨. கோளி யாலமுங் கோழரை மரங்களுங் குழீஇத்
தாளி யார்த்தெழ சுடலையு முடலமுந் துவன்றி
மீளி யாக்கைய தாக்கியுண் பேய்க்கண மிகைசூழ்
கூளி தாய்க்கென வாக்கிய கோட்டமொன் றுளதே.

(இ - ள்.) கோளியாலமுங் கோழ் அரை மரங்களும் குழுமி- கோளியாகிய ஆலமரங்களும் கொழுவிய அரையினை உடைய அரசு முதலிய மரங்களும் செறிந்து; தூளி ஆர்த்து எழு சுடலையும் உடலமும் துவன்றி - துகள்கள் ஆரவாரத்துடன் எழுவதற்கிடனான சுடுகாடுகளும் பிணங்களும் நெருங்கி; மீளி யாக்கைய - வலிமை பொருந்திய உடம்பினை யுடையன வாகிய; தாக்கி உண் பேய்க்கணம்- உயிரினங்களை அறைந்துண்ணும் பேய்க் கூட்டங்கள்; மிகைசூழ் - மிகுதியாகச் சூழ்தற்குக் காரணமான; கூளிதாய்க்கு என ஆக்கிய- பிடாரி என்னும் தெய்வம் எழுந்தருளி யிருத்தற் பொருட்டு எடுத்த கோட்டம் ஒன்றும் உளது - கோயில் ஒன்றும் அக்காட்டின்கண் உள்தாயிற்று என்க.

(வி - ம்.) கோளியாலம் – கோட்புக்க ஆல். கோளி - பூவாதே காய்க்கும் மரமுமாம். கோழரை-வழுவழுப்பான அடிமரம்; அவை அரசு, இலவு முதலியன. ஈம விறகு எரியுங்கால் வெடித்துத் துகள்களை உண்டாக்குதலின் தூளி யார்த்தெழு சுடலை என்றார். உடலம், ஈண்டுப் பிணம். துவன்றி - நெருங்கி. மீளி – வலிமை. யாக்கைய: பலவறி சொல். தாக்குதல் - அறைதல், கூளிதாய் என்றது பிடாரி என்னும் தெய்வத்தை. கோட்டம் – கோயில். (௨௩)

௨௩. இறைவி கோட்டத்து ளீரிரு திங்கள தகவை
யுறையு ளாகவவ் வுறையருங் காட்டகத் துறைவான்
பொறையு மாற்றலும் பூமியு மேருவு மனையான் [தான்.
சிறைசெய் சிந்தைய னந்தமில் பொருள்களைத் தெரிந்

(இ - ள்.) இறைவி கோட்டத்துள்-அப் பிடாரி கோயிலின்கண்; ஈர் இரு திங்களது அகவை - நான்கு திங்கள் காறும்; உறையுள் ஆக - தனக்குத் தங்குமிடமாக; அ உறையருங் காட்டகத்து உறைவான் - அந்தத் தங்குதற்கரிய பெருங்காட்டின்கண் தங்குபவனும்; பொறையும் ஆற்றலும் பூமியும் மேருவும் அனையான்- பொறுமையாலும் வலிமையாலும் நிரலே நிலத்தையும் மேரு மலையையும் ஒப்பவனும்; சிறை செய் சிந்தையன் - புலன்களிற் செல்லாமல் தியானத்தின்கண் அடக்கப்பட்ட நெஞ்சையுடையவனும்; அந்தம் இல் பொருள்களைத் தெரிந்தான் - அழிவற்ற மெய்ப் பொருள்களினியல்புகளை யுணர்ந்தவனும் என்க.

(வி – ம்.) இறைவி - பிடாரி. அகவை, உள்ளிட்டகாலம். உறையுள்–தங்குமிடம். பொறையாற் பூமியையும் ஆற்றலால் மேருவையும் ஒப்பான் என்பது கருத்து.

"அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்தல் தலை" (குறள்-௧௫௧)

என வள்ளுவனாரும் பொறுமைக்கு நிலத்தையே உவமை கூறுதலும் காண்க. சிறைசெய் சிந்தை – புலன்களிற் செல்லாமல் தியானத்தின் கண் அடக்கிய மனம் என்க. அந்தம் - முடிவு; அழிவு. (உ௩)

கூ௪. அத்தி காயங்க ளளவைக ளாலளந் தறிவான்
குத்தி யாதிய குணங்களிற் பெரியவ னரிய
பத்தின் மேலிரு தவத்தினிற் பவத்தொட ரறுக்கும்
முத்தின் யான்முனிச் சந்திர னெனும்பெயர் முனிவன்.

(இ - ள்.) அத்தி காயங்கள் - ஐவகையான அத்தி காயங்களையும்; அளவைகளால் அளந்து அறிவான் - காண்டல் முதலிய அளவைகளால் ஆராய்ந்தறிந்து ஐயம் திரிபற உணர்ந்தவனும்; குத்தி ஆதிய குணங்களில் பெரியவன் - குத்தி, சமிதி முதலான குணங்களான் மிகவும் பெருமையுடையவனும்; அரிய - செய்தற்கரிய; பத்தின்மேல் இரு தவத்தினில் - பன்னிரண்டு வகைப்பட்ட தவங்களையும் மேற்கொண்டு; பவத்தொடர் அறுக்கும் - பிறவியினது தொடர்ச்சியினை அறுக்கின்ற; முத்தியான்-வீடு பேற்றினையுடையவனும்; முனிச்சந்திரன் எனும் பெயர் முனிவன் - முனிச்சந்திரப்பட்டாரகன் என்னும் பெயரையுடைய துறவோன் ஒருவன் உளனாயினன் என்க.

(வி - ம்.) அத்திகாயம்-ஐவகை அத்திகாயங்கள்; அவை, சீவாத்திகாயம், அசீவாத்திகாயம், தர்மாத்திகாயம், அதர்மாத்திகாயம், ஆகாசாத்திகாயம் என்பன. அளவை-காண்டலளவை முதலியன. குத்தி-குப்தி; அது மூவகைப்படும். மனோகுப்தி, வாக்குப்தி, காயகுப்தி என்பன. சமிதி - துறவறம் பூண்டோர் ஆசாரம்; அது ஈரியா சமிதி, பாடைசமிதி, ஏடணைசமிதி, ஆதான நிக்கேப சமிதி, உற்சற்க சமிதி என ஐவகைப்படும். பத்தின்மேல் இருதவம் என்றது, பாகிய தபசு, அப்பியந்தர தபசுகளை. அவையாவன; அனசயம், ஆவமோதர்யம், விருத்தி பரிசங்க்யானம், இரசபரித்யாகம், விவிக்த சய்யாசனம், காயக்லேசம் என்னும் பாகிய தபசு ஆறும், பிராயச்சித்தம், விநயம், வையாப்ருத்யம், ஸ்வாத்யாயம், வியுத்ஸர்க்கம், தியானம் என்னும் அப்பியந்தர தபசு ஆறுமாம். பவம் - பிறப்பு. முத்தி-வீடுபேறு. (உ௪)

கூ௫. அன்றக் கோட்டத்து ளறிவிலா மறிதலை யறுப்பான்
சென்ற தெய்வதைக் கெனச்சிலர் சிறப்பயர் பொழுதின்
நின்றக் கோண்மின மெனச் சொல்லி நெறியறி வுறவோ
னென்றற் பல்வகை யுயிர்க் கொலை யுரைமின மெனவே.

(இ - ள்.) அன்று அக்கோட்டத்துள்-ஒருநாள் அப்பிடாரி கோயிலின்கண்; சிலர் - ஒருசில மாக்கள்; சென்று - போய்; அத்தெய்வதைக்கு என - அத்தெய்வத்தின் பொருட்டு; அறிவு இலா மறிதலை அறுப்பான் - அறிவிற் குறைந்த ஆட்டுக்கிடாயினது தலையை அறுத்தற்கு; சிறப்பு அயர் பொழுதின் - திருவிழா

நிகழ்த்தும் காலத்தே; நெறி அறி உறுவோன்-நன்னெறியை நன்கு அறிவுற்ற அம் முனிச்சந்திர பட்டாரகன் அவர்களை அணுகி; நின்றக்கோண்மினம் எனச் சொல்லி - நில்லுங்கள் என்று கூறித் தடுத்து; ஒன்றல் பல்வகை உயிர்க்கொலை உரை மினம் என- நீங்கள் இவ்வாறு நும்மொடு பொருந்திய பல்வேறு வகைப்பட்ட உயிரினங்களைக் கொல்லுதற்குரிய காரணங்களைச் சொல்லுங்கள் என்று வினவாநிற்ப என்க.

(வி - ம்.) அன்று என்றது, ஒரு நாள் என்பது பட நின்றது. அறிவிலா மறி என்றது-ஆறுவதாகிய அறிவில்லாத ஆடு என்றவாறு. தெய்வதை-தேவதை, தெய்வம். சிறப்பு-திருவிழா. நின்றக் கோண்மின்-நில்லுங்கள்; வினைத்திரி சொல். உரைமினம் என்பதுமது. (உசு)

வேறு

கூசு. பண்டிந்நின்ற பணைத்தோளி பாலற்பெ ருமையைக்
கண்டியாமிக் கணமோடி தன்பாற்சொன் னேமாக
வுண்டதாயிற் றோர்குழவி யென்னவுவப் பித்தற்குக்
கொண்டுவந்தே மறியறுக்க வென்றார் கொலையாளர்.

(இ - ள்.) கொலையாளர் - அதுகேட்ட அக்கொலையாளர்கள்; பெரியீர்!; இ நின்ற பணைத் தோளி - இதோ நிற்கின்ற மூங்கில் போலும் தோளையுடைய இப்பெண்; பண்டு பாலன் பெருமையைக் கண்டு - முன்னர்க் குழந்தைப் பேறடையாமையைக் கண்டு; யாம் இக் கணமோடி தன்பால் சொன்னேம் ஆக - யாங்கள் இந்தப் பிடாரியின் திருமுன் வந்து சொல்லி வேண்டிக் கொண்டேம் அதனால்; ஓர் குழவி உண்டதாயிற்று - இவளுக்கு ஒரு குழந்தை பிறப்பதாயிற்று, என்ன - அதனால்; உவப்பித்தற்கு மறியறுக்கக் கொண்டு வந்தேம் என்றார் - இத் தெய்வத்தை மகிழ்விப்பதற்கு இந்த ஆட்டினை அறுத்தற்குக் கொணர்ந்தேம் என்று கூறினர் என்க.

(வி-ம்.) பண்டு என்றது, இப்பொழுது இவள் குழந்தை யுடையள் என்பது தோன்ற நின்றது. பணைத் தோளி: அன்மொழித் தொகை. கணமோடி-பேய்க்கூட்டத்தையுடைய பிடாரி. சொன்னேம் என்றது சொல்லிக் குறையிரந்தேம் என்றவாறு. உண்டதாயிற்று - உண்டாயிற்று. (உஎ)

கூஎ. ஊனுடம் போவுயிரோ வுறுகுழவி யாத
லேனேநுங் குழலாட்குத் தேவர்மன னுந்தந்த
தூனுடம் பென்னி லுதிரமா முயிரென்னின்
மானிடமாம் வினைமேலேச் செய்தன்றே வந்ததென்றான்.

(இ - ள்.) உறு குழவியாதல் - அது கேட்ட அம் முனிவன் மாந்தர்களே! உங்கள் விருப்பத்திற்குகந்த குழந்தையாகப் பிறப்பது; ஊன் உடம்போ உயிரோ - ஊனால் இயன்ற உடம்போ

அல்லது அதன்கண் அமைந்த உயிரோ; தேன் ஒடுங்கும் குழலாட்கு வண்டுகள் துயிலுறுதற்கு இடனான கூந்தலையுடைய இப் பெண்ணுக்கு; தேவர் மன்னும் தந்தது-தெய்வம் மிகவும் அருளிச் செய்தது; ஊன் உடம்பு என்னில் - ஊனுலியன்ற உடம்பு மாத்திரமே யாயின்; உதிரமாம் - அது குருதி முதலிய தாதுக்களால் இயன்றதாம்; அத் தாதுக்கள் தாமும் அத் தெய்வங்களிடத்தி லில்லை; உயிர் என்னின் - தெய்வங்கள் தந்தது உயிரென்று சொல்லுவீர்களாயின் அதுதானும் அத் தெய்வங்கள் தருவதொன்றன்று; மானிடமாம் வினைமேலைச் செய்து வந்தது அன்றோ என்றான் - அவ்வுயிர் மனிதனைப் பிறப்பதற்குரிய நல்வினை முற்பிறப்பிலே செய்து அதன் பயனாக வந்து தோன்றியதல்லவோ? அங்ஙனம் இருக்கத் தெய்வங்கட்கு நீங்கள் செய்யும் இச்செயல் வீணும் என்றான் என்க.

(வி - ம்.) குழந்தையாய்ப் பிறப்பது உயிரே என்பான், ஊன் உடம்போ உயிரோ என்று வினவினான். இப்பிடாரி போலப் பலி கொடுத்தற்குரிய தெய்வங்கள் பலவிருத்தலின் அவற்றையும் கருதித் தேவர் தந்தது எனப் பன்மையில் ஓதினான். குழந்தையாதற்குரிய உடம்பிற்கு வேண்டிய குருதி முதலியனவும் அவற்றின் பாலில்லை. உயிரும் அவர்கள் தருதற்குரிய பொருள் இல்லை என்பான், உடம்பென்னில் உதிரமாம், உயிரென்னில் மேலை வினைசெய்து மானிடம் ஆம் என்றான். எனவே, நீங்கள் செய்யும் இச்செயல் உங்களுக்கும் அத் தெய்வங்களுக்கும் பழியும் பாவமும் ஆதலின்றிப் பிறிதில்லை என்றுணர்த்தியவாறும். (௨௮)

௯௮. ஏறியானை யிருங்கலைக ணேர்ந்தா ரவையிவையேன்
றூறங்கி யுருவுருசெய் தாலுமுவந் தொழிபவான்
மாறுகோ ளிலைமண்ணான் மறியுருசெய் தீர்ந்தக்காற்
பாறினீர்க் கும்மவர்க்கும் பழிபாவ மொன்றிலையே.

(இ - ள்.) நேர்ந்தார் ஏறு யானை இருங்கலைகள் - இனி அத் தெய்வங்கட்குப் பராவுக்கடன் நேர்ந்தவர்கள் அத் தெய்வங்கள் ஏறுகின்ற யானையும் பெரிய கலைமான்களும்; ஊறு அங்கி-பொருந்தும் அங்கிகளுமாகிய; அவை இவை உரு என்று-அவைகளும் இன்னோரன்ன பிறவுமாகிய இவற்றின் உருவங்களையும்; உரு செய்தாலும்-அத்தெய்வங்களின் உருவங்களையும் செய்து வழங்கினாலும் அது உவந்து ஒழிப-அத்தெய்வங்கள் அவ்வளவின் மகிழ்ந்து அமைவனவாம்; மண்ணால் மறியுரு செய்து ஈர்ந்தக்கால் மாறுகோள் இலை - இனி ஆடு முதலியன அறுப்பதாக வேண்டிக் கொண்டவர்களும் மண் முதலியவற்றால் ஆடுமுதலியனவற்றின் உருவங்களைச் செய்து கொணர்ந்து அவற்றை அறுப்பினும் அச்செயல் மாறுபட்ட செயலாகாது; பாறினீர்க்கும்-கொலை செய்கின்ற நுங்களுக்கும்; அவர்க்

கும் - அத் தெய்வங்கட்கும்; பழி பாவம் ஒன்று இலை - பழியாதல் பாவமாதல் யாதொன்று மில்லையாம் என்க.

(வி - ம்.) அவை இவை என மாறிக் கூட்டுக. யானை கலை முதலியன அத்தெய்வங்களின் ஊர்திகள். உறு அங்கி எனற்பாலது, ஊறங்கி என நீண்டது; செய்யுள் விகாரம், அங்கி - சட்டை. இது பழியும் பாவமும் இல்லா நெறியில் தெய்வங்கட்குக் கடன் செலுத்துவோர்க்கு உபாயம் கூறியபடியாம். கடன் நேருவோர் யானை முதலியவற்றின் உருவங் களைச் செய்து வழங்கின் அத்தெய்வங்கள் மகிழக்கூடும் என்பது கருத்து. இனி ஆடு முதலியன பலி இடுவதாக வேண்டிக்கொண்டாலும் மண் ணால் அவ்வுருவங்களைச் செய்து கொணர்ந்து அறுக்கலாம் என்றவாறு. பாறினீர் - கொலை செய்திராகிய நீங்கள். அவர்க்கும் - அத்தேவர் களுக்கும். (உக)

வேறு

நகூ. கொன்ற வன்னே கொடியனென வுலகங் கூறு மதனுலு
மொன்ற நூலா ருரைகளோ டொப்ப முடியு மதனுலு
மின்றி னின்று மிதுவொழிதி ராயி னுங்கட் கிருமைக்கு
நன்றி தென்றான் தெந்நரகம் புகுதல் விலக்கு நாவினன்.

(இ - ள்.) கொன்றவனே கொடியன் என உலகம் கூறும் அதனாலும் - நீங்கள் இங்ஙனம் உயிர்ப்பலி செய்யின், தீவினை செய்வாருள்ளெல்லாம் கொலைசெய்தவனே மிகவும் கொடியவன் என்று இவ்வுலகம் பழிதூற்றும் ஆதலாலும்; ஒன்ற நூலார் உரைகளோடு - இனி மேலே யான் கூறிய உபாயங்களோ வெனில் ஒருமிக்க மெய்ந்நூல் செய்த சான்றோர் மொழிகளோடே; ஒப்ப முடியும் அதனாலும் - பொருந்தக் கூடியது ஆதலாலும்; இன்றின் நின்று-நீங்கள் இற்றை நாளிலிருந்து; இது ஒழிதிர் ஆயின்-இத் தீவினையைக் கைவிடுவீராயின்; இது நுங்கட்கு இருமைக்கு நன்று என்றான் - இச்செயல் உங்களுக்கு இருமையினும் நன்மை பயக்கும் என்று உணர்த்தினன்; வெம் நரகம் புகுதல் விலக்கும் நாவினன்- [அவன் யாவனோவெனில்] அறிவிலாதார் தீவினை செய்து வெவ் விய நரகத்திற் புகுதலை விலக்குதற்குக் காரணமான அறங் கூறும் செந்நாவினையுடைய முனிச்சந்திர பட்டாரகன் என்க.

(வி - ம்.) கொலையில் மிக்க தீவினை இல்லையாதலின் கொன்ற வனே கொடியவன் என உலகங் கூறும் என்றவாறு. கொல்லாமை பல்வேறு சமய நூலார்க்கும் பொருந்துதலின் ஒன்ற நூலார் உரைகள் என்றார். இது என்றது கொல்லும் இத்தீவினையை என்றவாறு. (கூ0)

ச0. கொறல் பொய்த்தல் கொடுங்களவு
நீக்கிப் பிறர்ம னைகண்மேற்
சேற லின்றிச் செழும்பொருண்மேற்
சென்ற சிந்தை வேட்கையினை

யாறு கிற்பி னமருலக
நுங்கட் கடிய தாமென்றான்
நீறு மோடு நிழன்மணியும்
பொன்னு நிகரா நோக்குவான்.

(இ - ள்.) கோறல் பொய்த்தல் கொடுங்களவு நீக்கி - இனி நீங்கள், உயிரினங்களைக் கொல்லுதலையும், பொய் பேசுதலையும் கொடிய களவினையும் விலக்கி; பிறர் மனைகள் மேல் சேறல் இன்றி-பிறர்மனைவிமாரை விரும்பிச் செல்லுதலுமின்றி; செழும் பொருள் மேல் சென்றசிந்தை வேட்கையினை ஆறுகிற்பின்-செழித்தபொருள் களின்பாற் செல்லும் நெஞ்சத்தின் அவாவென்னும் தீயினையும் அவித் தொழுகின், நுங்கட்கு அமர் உலகம் அடியது ஆம் என்றான் - உங்களுக்கு வானவர் உலகம் உங்கள் அடியின்கீழுள்ளது போன்று அணித்தாகும் என்று கூறினான்; (அவன் யாரெனின்) நீறும் நிழல் மணியும் ஓடும் பொன்னும் நிகரா நோக்குவான் - புழுதியையும் ஒளிமிக்க மணிகளையும் ஓட்டினையும் பொன்னையும் ஒரு நிகராகக் கருதுகின்ற மெய்யுணர்வுடைய முனிச் சந்திர பட்டாரகன், என்க.

(வி - ம்.) கோறல் - கொல்லுதல். பிறர்மனைச் சேறல் - பிறர் மனைவிமாரை விரும்புதல். மிகையான பொருள் என்பார், செழும் பொருள் என்றார். ஆறுகிற்பின்-வினைத்திரி சொல். அடியது-அடியின் கீழது போன்று எண்மைத்து. நீறு - புழுதி. "ஓடும் பொன்னும் ஒக்கவே நோக்குவார்" எனப் பிறரும் ஓதுதலுணர்க. (௩௯)

சக. ஏத்து தற்கேற் றானிரங்கி யின்ன வைசொல லக்கேட்டுப்
பாத்தி யோயெம் பழவினையும் பாறு கென்று பணிந்துதாம்
யாத்து நின்ற வம்மறியும் மறமு முடனே கொண்டுபோய்க்
காத்து மென்றார் கருவினையு ணீங்கு நல்ல கருத்தினார்.

(இ - ள்.) கருவினையுள் நீங்கும் நல்ல கருத்தினார்-தீவினையி னின்றும் நீங்கி உய்தற்கேற்ற நலமுடைய நன்னர் நெஞ்சமைந்த அம்மாந்தரும்; ஏத்துதற்கு ஏற்றான்-எல்லோராலும் வணங்குதற் கேற்ற சிறப்பினையுடைய அத்துறவோன்; இரங்கி இவை சொல்லக் கேட்டு- தீவினை செய்யநின்ற தமக்கும் கொலைப்படவிருந்த யாட்டுக் கும் ஒருசேர இரங்கி இந்த நல்லுரைகளைக் கூறக்கேட்ட வளவிலே! பாத்தியோய் - முனிவர் பெருமானே; எம் பழவினையும் பாறுக என்று பணிந்து - இங்குச் செய்யவிருந்த புதிய தீவினையே யன்றி எமமுடைய பழைய தீவினைகளும் கெடுவனவாக என்று அம்முனி வன் திருவடிகளிலே விழுந்து வணங்கி எழுந்து; தாம் யாத்து நின்ற அம் மறியும் அறமும் உடனே கொண்டுபோய்க் காத்தும்

என்றார் - தாங்கள் கட்டலாலே அங்கு வருந்தி நின்ற ஆட்டினையும் முனிவர் தமக்குக் கூறிய அறங்களையும் தம்மோடு கொண்டு போய்க் காப்பாற்றுவேம் என்று கூறினர்; என்க.

(வி - ம்.) உள்ளத்தாற் பொய்யாது நல்லாற்றின் ஒழுகுந் துறவோரை எல்லோரும் வணங்குதல் இயல்பாகலின் ஏத்துதற்கேற்றான் என்றார். இரங்கி என்றது, தமக்கும் மறிக்கும் ஒருசேர விரங்கி என்பதுபட நின்றது. பாத்தியோய், விளி. பாத்தியன் - முனிவன். யாத்து, யாத்தமையாலே. நின்ற என்றது வருந்தி நின்ற என்பதுபட நின்றது. மறியைக் கொல்லாமலும் பெருமான் கூறிய அறத்தை மறவாமலும் உடனே கொண்டுபோய்க் காப்பேம் என்றவாறு.

பவ்விய சீவனுக்கன்றி அறங்கோடல் சாலாமையின், கருவினையுணீங்கு நல்ல கருத்தினர் என்றார். காத்தும் - காப்போம். இதுதும் விகுதிபெற்ற முன்னிலைப் பன்மை வினைமுற்று. பாறுக+என்று= பாறுகென்று; அகரங் குறைந்து நின்றது; தொகுத்தல் என்னும் செய்யுள் விகாரம். (௬௨)

௬௩. ஆய மெல்லா மதுசோல்லிப் போக வவணே வாழ்கின்ற
பேயுங் கூடிப் பேரிதுமகி சூழ்ந்து தம்பெற் றிசோல்லி
ஞயு மாக்க ருத்துமில ஞவ னிவனங் கட்கேன்னிற்
றீயு மன்னேன் றேற்றகரு மையாலேனுஞ்சிந் தையிலவாய்.

(இ - ள்.) ஆயம் எல்லாம் அது சொல்லிப் போக - அக்கூட்டத்தார் முனிவன்பால் அம்மொழியைக் கூறிச் செல்லாநிற்ப; அவண் வாழ்கின்ற பேயும் மகி கூடிச் சூழ்ந்து - அப் பெருங் காட்டில் வாழ்கின்ற பேய்கள் தாமும் நிலத்தின்கண் வந்து ஒருங்கு குழுமித் தம்முள் ஆராய்ந்து; இவன் தம் பெற்றி சொல்லின் ஆயும் கருத்தும் இலன் ஆவன் - இம் முனிவன்பாற் சென்று தமது குறையைக் கூறினால் அதனைச் செவியேற்று ஆராயும் கருத்துத் தானும் உடையனாகான்; நங்கட்கு என்னில் - நமக்கும் இரங்க வேண்டும் என்று வேண்டினாலோ; தீயும்மன் - அவன்றன்றவத் தீயினால் யாம் தீய்ந்தொழிவேம் மன்!; என்று - என்று (கருதுவனவாய்); ஏற்ற கருமையால் - தாம் பெற்றுள்ள அறியாமை காரணமாக அவன்பாற் செல்ல; எனும் சிந்தையிலவாய் - சிறிதும் எண்ணமில்லாதனவாய் என்க.

(வி - ம்.) ஆயம்-கூட்டம். ஈண்டு மறியறுக்க வந்தோர் கூட்டம், அது-'உடன் கொண்டுபோய்க காத்தும்' என்னும் அம்மொழி. பேயும் என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை; மறியறுக்க மக்கள் கூடினர் அங்ஙனமே இப்பேய்களும் கூடி என்பது கருத்தாகலின். மகி-நிலம். தம்பெற்றி - ஊன் கிடைத்தலின்றிப் பசியால் வாடும் தங்கள் நிலைமை. நங்கட் கென்னில் - எங்கட்கும் இரங்க வேண்டும் எனில். தீயும்-அவன்றவத்தீயால் தீய்ந்தொழிவேம். இனி, நங்கள் திறத்திலே அம்முனிவன் மனங்கன்றுவான் எனக்கோடலுமாம். கருமை - அறியாமை, ஏனும் - சிறிதும். சிந்தை - எண்ணம், (௬௩)

வேறு

௪௩. நிரந்து வெங்கதி ரெழுதலி னிற்றலை யிலதாய்க்
கரந்த காரிருள் போற்கணங் காண்டலுக் கரிதாய்ப்
பரந்த நாம்பல நாடுகள் பாடிக ணாடி [றெண்ணி.
யிரந்தோர் வன்றெய்வங் கொணர்ந்திவற் கடிதுமென்

(இ - ள்.) *நிரந்து வெம் கதிர் எழுதலின் - யாண்டும் பரவி வெவ்விய ஞாயிற்றின் கதிர்கள் தோன்றுதலாலே; நிற்றலை இலதாய் - அவற்றின் முன் நிலைபெறுதல் இலதாய்; கரந்த கார் இருள் போல் - மறைந்தொழிந்த கரிய இருள் போன்று; கணங் காண்டலுக்கு அரிதாய் - அப் பேய்க்கூட்டம் பிறரால் காண வியலாததாய், அம் முனிவன் திருமுன்னில்லாமல்; நாம் பரந்த பல நாடுகள் பாடிகள் நாடி - இனி யாம் பரந்து கிடக்கும் பல் நாடு களினும் ஊர்களினும் சென்று தேடி; ஓர் வல் தெய்வம் இரந்து கொணர்ந்து - யாண்டேனும் ஒரு வலிய தெய்வத்தைக் கண்டு அதன்பால் இரந்து கூறி அழைத்து வந்து; இவன் கடிதும் என்று எண்ணி - இம் முனிவனை இக்காட்டினின்று மகற்றுவே மாக என்று எண்ணித் துணிந்து என்க.*

(வி - ம்.) *நிரத்தல் - பரவுதல். வெங்கதிர் - ஞாயிற்றொளி. வெங் கதிர், முனிவனுக்கும் காரிருள் - பேய்க் கூட்டத்திற்கும் உவமைகள். கணம் - பேய்க்கூட்டம். கதிர் கண்டு கரந்த இருள்போன் முனிவற் கண்டு கணங்கள் கரந்தன என்க. பரந்த பல நாடு என இயைக்க. பாடி - ஊர். இவன் - இம்முனிவன்.* (௩௪)

௪௪. ஆசு மிங்கிருந் தினியென்னை யெழுகவென் றயல
காசி நாட்டினுஞ் சேடிய நாட்டினுங் காணா
தேசந் தாம்பல திரியவத் தென்றிசை நீல
கேசி மாதெய்வந் தலைப்பட்டுக் கிளர்ந்தின்ன வுரைக்கும்.

(இ - ள்.) *ஆசும்-இப்பொழுதே விரைகுவேம்!; இனி இங்கு இருந்து என்னை-இனி இங்கு வாளாவிருப்பதனால் பயன் என்னை?; எழுக என்று-எல்லீரும் எழுமின்! என்று கூறி; அயல்-பக்கத்தி லுள்ளனவாகிய; காசி நாட்டினும் சேடிய நாட்டினும் - காசி நாட்டி னும் சேடிய நாட்டினும்; காணா - அத்தகைய வன்றெய்வத்தைக் காணமாட்டாவாய்; பல தேசம் திரிய - வேறு பல நாடுகளினும் சென்று தேடித்திரியா நிற்புழி; அ தென்திசை நீலகேசி மாதெய் வம் தலைப்பட்டு - எதிர்ப்பட்ட அந்தத் தென்றிசைக்கண்ணதாகிய தமிழ்நாட்டின்கண் உறையும் நீலகேசி என்னும் பெரிய தெய்வத் தைக் கண்டு வணங்கி; இன்ன கிளர்ந்து உரைக்கும் - இம் மொழி களை மிகுத்துக் கூறா நிற்கும், என்க.*

(வி - ம்.) ஆசும் - விரைவேம். "அக்கணம் ஆசுவின் ஆசுகன் மைந்தன்" எனவரும் பாரதத்தினும் (புட்ப - கக.) அஃதப் பொருட்டாத லுணர்க. என்னை - யாதுபயன். சேடிய நாடு - ஒரு நாடு. காணு-காணுவாய். தேசம் - நாடு. தென்றிசைத்தமிழ் நாடென்க. என்னை? பழையனூர் நீலகேசி என்பவாகலின் என்க. கிளர்தல்-மிகுதல்; ஊக்கங்கோடலுமாம். (கடு)

சரு. வலிசெய் தெம்மிடம் புகுந்தடு மடையொடு முடைசேர்
பலியு மூட்டுதல் பாவமீ தெனப்பலர்க் குரைத்துக்
கலிகொள் காடுதன் காற்பொடி யாகவுங் கருதா
னலைசெய் தானெமை யாமுனக் கபயமென் றழுத.

(இ - ள்.) வலி செய்து எம்மிடம் புகுந்து - அன்னையே ஒரு துறவோன் வலிந்து எம்மிடத்தில் வந்து; கலிகொள் காடு தன் கால் பொடி யாகவும் கருதான் - யாங்கள் வாழ்கின்ற ஆரவாரமுடைய சுடுகாட்டினைத் தன் காலிலொட்டும் துகளளவும் பொருட்படுத்தாமல்; அடுமடையொடு முடை சேர் பலியும் ஊட்டுதல் - எமக்கு மாந்தர் சமைக்கின்ற படைசோற்றுடனே ஆடு முதலியவற்றைக் கொன்று நாற்றமுடைய அவற்றின் ஊன் பலி யூட்டுதலாகிய; ஈது பாவம் எனப் பலர்க்கு உரைத்து - இச்செயல் பெரிதும் தீவினையாகும் என்று பலருக்கும் அறிவுறுத்து; எம்மை அலை செய்தான்-எம்மைப் பட்டினி கிடப்பித்து வருத்தினன்; யாம் உனக்கு அபயம் என்று அழுத-ஆதலால் யாங்கள் பெருமாட்டிக்கு அடைக்கலங் காண் என்று சொல்லி அழுதன; என்க.

(வி - ம்.) வலி செய்தல்-வலிந்து புகுதல்; செருக்குற்றெனினுமாம். மடை-தெய்வங்களுக்குப் படைக்குஞ் சோறு. முடை சேர்பலி-ஊன்பலி கலி - ஆரவாரம். அலை செய்தல் - துன்பஞ் செய்தல். அபயம் - அடைக்கலம். (கசு)

சசு. அழுவ தென்செய அருந்தவம் வலித்தவ னிருந்து
பொழுது போக்குதல் புரிந்தனன் பொருந்தமஃ துடைத்தே
கழுகு தாமுணக் காட்டுவ னெனக்கைகள் புடையா
வெழுக வென்றுசென் றிடுபிணப் பறந்தலை யிருந்தாள்.

(இ - ள்.) அழுவது என் செய - அது கண்ட நீலகேசி 'பேய்காள்! நீவிர் இங்ஙனம் அழுவதனாற் பயன் என்னை?; அருந்தவம் வலித்தவன் - அரிய தவத்தை மேற்கொள்ளத் துணிந்த அப்பேதை துறவோன்; இருந்து பொழுது போக்குதல் புரிந்தனன் பொருத்தமஃது உடைத்தே-இங்ஙனம் நுமக்குப் பகைவனாக நமது காட்டிலிருந்து வாளா பொழுது கழிப்பது அவனுக்குப் பொருந்துவதேயோ? கழுகு தாம் உணக் காட்டுவன்-அப்புல்லனைக் கொன்று அவனுடம்பினைக் கழுகுகள் தின்னும்படி செய்குவல் என்று சினந்து

கூறி; கைகள் புடையா - தன்கைகளைப் புடைத்து; நமரங்காள்; எழுக என்று சென்று - எம்முடனே எழுந்து வாருங்கள் என்று கட்டளையிட்டுச் சென்று; இடுபிணப் பறந்தலை இருந்தாள் - இடு கின்ற பிணங்களையுடைய பலாலயம் என்னும் அச்சுடுகாட்டில் சென்றிருந்த நீலகேசி என்க.

(வி - ம்.) இப்பொழுது செய்யக் கடவ காரியத்தைச் செய்த லன்றி இங்ஙனம் அழுவதால் பயனில்லை என்பாள், அழுவது என்செய? என்று வினவினள். வலித்தவன் - துணிந்தவன். உடைத்தே என்புழி ஏகாரம் வினா. பொருத்தமன்று என்பது கருத்து. புடையா-புடைத்து. பறந்தலை - சுடுகாடு; ஈண்டுப் பலாலயம். இருந்தாள்-பெயர். (கூஎ)

சஎ. இருட்டி ருட்டென நடந்துசென் றெழுந்தெழுந் திருக்கும்
வெருட்ட லன்னினை விழுங்குவ னெனத்தன்னை வியக்கு
மருட்டி றம்மில னறியினி யருவரை நெடுங்கோட்
டுருட்டு வேனென வுயர்தவத் தவன்முன்னை யுரைக்கும்.

(இ - ள்.) இருட்டு இருட்டு என நடந்து சென்று - அம் முனி சந்திர பட்டாரகன் எதிரே இருட்டாகின்ற பேரிருள் போன்று கறுத்த உருவங் கொண்டு நடந்து போய்; எழுந்து எழுந்து இருக்கும் - வானிலே எழுந்துயர்ந்து பின்னர் அவன் முன்னே இருப்பள்; நினை வெருட்டலன் - ஏடா! நின்னை வாளா அச்சுறுத்துகின்றேனலேன்; விழுங்குவன் - உன்னை வாய்மை யாகவே விழுங்குவேன் காண்; என - என்று கூறி; தன்னை வியக் கும் மருள் திறம் இலன் - ஏடா யான் உன்னைப் போன்று தன்னையே வியக்குமொரு பேதைமையுடையேன் அல்லேன்; அறி - நீ என்னை அறிந்துகொள்!; இனி அருவரை நெடுங்கோட்டு உருட்டு வேன் - இனி உன்னை ஏறுதற்கரிய மலையினது நெடிய முடியி னின்று நிலத்தில் வீழும்படி உருட்டுவேன் பார்; என - என்று; உயர் தவத்தவன் முன்னை உரைக்கும் - உயர்ந்த தவவொழுக் கத்தை யுடைய அத்துறவோன் முன்னின்று கூறுவள்; என்க.

(வி - ம்.) இருட்டுகின்ற இருட்டு. இனி இருட்டிற்கு மோரிருட் டென்னும்படி எனினுமாம். மருள் - பேதைமை. அருவரை - ஏறுதற் கரிய மலை. (கூஅ)

சஅ. சீல நல்லன சினவரன் றிருமொழி தெளிந்தான்
கால மூன்றினுங் கடையில்பல் பொருளுணர் வுடையான்
மேலு மின்னபல் வியந்தரம் வெருட்டுத லறிவான்
நீல கேசிதன் னெறியின்மை யிதுவென நினைந்தான்.

(இ-ள்.) சினவரன் திருமொழி சீலம் நல்லன தெளிந்தான் - அருகக் கடவுள் திருவாய் மலர்ந்தருளிய பரமாகமங்களை ஓதி

யுணர்ந்து அவற்றிற் கூறப்பட்ட ஒழுக்கமும் பிற நல்லனவாகிய அறங்களையும் நன்கு தெளிந்தவனும்; காலம் மூன்றினும் கடை இல் பொருள் உணர்வு உடையான் - மூன்று காலங்களினும் அழியாத பொருள்களினியல்பினை ஆராய்ந் துணர்ந்த மெய்யறிவுடையவனும்; மேலும் இன்ன பல வியந்தரம் வெருட்டுதல் அறிவான் - மேலும் இத்தகைய வியந்தர தேவர்கள் உயிரினங்களை அச்சுறுத்துதலையும் அறிபவனும் ஆகிய அத்துறவி; இது நீலகேசி தன் நெறி இன்மை என நினைந்தான் - இச் செயல் நீலகேசி என்னுந் தெய்வம் செய்யும் நெறியில்லாத செயலாகும் என்றும் உணர்ந்தான் என்க.

(வி - ம்.) திருமொழி - பரமாகமம். அவையாவன; சீவாத்திகாயம், புற்கலாத்தியாயம் தர்மாத்திகாயம் அதர்மாத்திகாயம், ஆகாசாத்திகாமம் என்பன. வியந்தரம் — வியந்தர தேவர்; எட்டு வகையினர்: கின்னரர், கிம்புருடர், கருடர், காந்தருவர், யக்ஷர், ராக்ஷதர், பூதர், பசாசர். நீலகேசி என்னும் வியந்தரத்தின் நெறியின்மை எனத் தன் அவதிஞானத்தால் அறிந்தான் என்பது கருத்து. (௩௧)

சக. வெருட்டு மாகிலும் வெருட்டுக விகுர்வணை களினாற்
றெருட்டு வேனிவ டிறமின்மை சிறிதிடைப் படலும்
பொருட்டி றங்களைப் புலமையிற் புனைந்துரை பெறுமே
லருட்டி றந்நல வறநெறி பெறுதலு மறிந்தான்.

(இ - ள்.) பொருள் திறங்களை புலமையில் புனைந்துரை பெறுமேல்-பொருளியல்புகளைப் புலமை காரணமாகப் புனைந்துரை வகையாற் கூறுகின்ற மெய்ந்நூல்களைப் பெறுவாளாயின்; அருள் திறம் நல அற நெறி பெறுதலும் அறிந்தான் - அப் புனைந்துரையினூடே பொதியப்பட்ட உறுதிப் பொருள்களாகிய அருளியல்புகளையும் நல்ல ஏனைய அறநெறிகளையும் அப்புனைந்துரை நீக்கி உணர்தற்கும் அறிந்த நுண்மாணுழைபுலமுடைய அம் முனிவன்; விகுர்வணைகளினால் - வேற்றுருவம் பல கொள்ளுமாற்றால்; வெருட்டுமாகிலும் வெருட்டுக - இந் நீலகேசி என்னை அச்சுறுத்துவாளாயினும் அச்சுறுத்துவாளாக யான் அஞ்சியகல்வேனலேன்; இவள் திறமின்மை தெருட்டுவேன் - யான் இவளுடைய ஆற்றலின்மையை என் தகுதியாலே இவளுக்குணர்த்துவேன் என்று கருதி; சிறிது இடைப்படலும் - சிறிது பொழுது வாளாவிருந்த பொழுதென்க.

(வி - ம்.) பொருட்டிறம் - பொருள்களியல்பு. புலமையோர் உறுதிப் பொருள்களைத் தம் புலமை காரணமாகப் புனைந்துரை வகையாற் கூறுதலியல்பாகலின் அத்தகைய புனைந்துரைகளினும் அவற்றுட் பொதிந்துள்ள பொருளியல்புகளை ஐயந்திரிபறவுணரும் நுண்மாணுழை புலனுடைய முனிவன் என்று முனிவனைப் புகழ்ந்தபடியாம். வெருட்டுதல்-அச்சுறுத்தல். 'யானஞ்சியகல்வேனலேன்' என்பது குறிப்

பெச்சம். விகுர்வணைகளினால் வெருட்டுமாகிலும் என மாறுக. விகுர்வணை-வேற்றுருக்கோடல். சிறிதிடைப்படல்-சிறிது பொழுது வாளா விருத்தல். என்று கருதி என வருவித்தோதுக. (௪௦)

௫௦ மாக மேயுற மலையன்ன சிலையொடு சிலையா
மேக மேயென விசும்பிடை வெடிபட விடியா
நாக மேயென நாவினை நீட்டுவ காட்டாப்
பாக மேயெனப் பலவெனச் சிலவென வுலவும்.

(இ - ள்.) மாகமே உறு-அப்பொழுது அந் நீலகேசி வானத்திலே உயர்ந்து பொருந்தி நிற்கும்; அ மலை அன்ன - அப் பொன்மலையை ஒத்த; சிலையொடு சிலையா மேகமே என - வானவில்லோடே தோன்றி முழங்காநின்ற முகில் போன்று; விசும்பிடை வெடிபட இடியா-அண்டகடாகம் வெடிக்கும்படி இடித்து முழங்கி; நாகம் என - பாம்புபோலே; நாவினை நீட்டுவ காட்டா - நாக்கினை நீட்டிக்காட்டி; பாகமே என பல என சில என உலவும்-ஒருடம்பிற் பாதியே என்னும்படியும் பலவேறு வடிவங்கள் என்னும்படியும் சிற்சில வடிவங்கள் என்னும்படியும் உருவம் பல கொண்டு திரியா நிற்பள்; என்க.

(வி - ம்.) மாகம் - வானம். உறு + அ + மலை எனக் கண்ணழித்துக் கொள்க. அம்மலை என்றது - பொன்மலையை. அது பண்டு சிவபெருமானால் வில்லாக வளைக்கப்பட்டமையின் வானவில்லிற் குவமையாக எடுத்தார். அ: உலகறி சுட்டு. விசும்பிடை என்றது அண்டகடாகத்தை; இனி விசும்பின்கண் எனினுமாம். நாகம் - பாம்பு. நீட்டுவது ஈறுகெட்டது. பாகம் - பாதியுருவம். (௫௧)

௫௧. இலங்கு நீளெயிற் றிடையிடை யழலெழச் சிரியாக்
கலங்கு மார்ப்பொடு கார்ப்படு மழையெனத் தெழியாப்
பிலங்கண் டன்னதன் பெருமுழை வாய்திறந் தழையா
மலங்க நின்றுதன் மடனெடு மயிர்க்கையிட் டுயிர்க்கும்.

(இ - ள்.) இலங்கு நீள் எயிற்றிடை இடை அழல் எழ சிரியா-விளங்காநின்ற தன் பற்களின் இடையே இடையே தீப்பிழம்பு தோன்றும்படி நகைத்து; கலங்கும் ஆர்ப்பொடு - கேட்டோர் மனங்கலங்குதற்குக் காரணமான ஆரவாரத்தோடு; கார்ப்படு மழை என தெழியா-கார்ப்பருவத்திலே தோன்றும் முகிலிடித்தாற் போலே அதட்டி; பிலம் கண்ட தன் பெரு முழை வாய் திறந்து மலையினது முழைபோன்ற தனது பெரிய முழைவாயைத் திறந்து; அழையா - கூப்பிட்டு; மலங்க நின்று - உயிர்கள் கலங்கும்படி நின்று; தன் மடல் நெடு மயிர் கை இட்டு உயிர்க்கும் - தனது பனை மடல்போன்ற நெடிய மயிரமைந்த கையை வாயினுள்ளிட்டு மூச்செறியாநிற்பள்; என்க.

(வி - ம்.) எயிறு - பல். அழல் - தீ. ஆர்ப்பு - ஆரவாரம். மழை : ஆகுபெயர். தெழித்தல் - அதட்டுதல். பிலம் - மலைமுழை. முழைவா யென்புழி முழை வாளா அடைமொழிமாத்திரையாய் நின்றது. மலங்க - கலங்க. மடல் - பனைமடல். இது மயிர்க்குவமை. கையை வாயுளிட் டென்க. உயிர்த்தல் - மூச்செறிதல். (சஉ)

ருஉ. பொங்கு பூமியுட் போடிபட வடியிணை புடையாப்
பங்க மேசெய்து படபட வயிறடித் திறுகி
யங்கி போலவீழ்ந் தலறுநின் றுலறியங் காக்கு
மெங்குந் தானென வெரிகொள்ளி வளையெனத் திரியும்.

(இ - ள்.) பொங்கு பொடிபட - பொங்கியெழுகின்ற துகள்கள் உண்டாகும்படி; பூமியுள் அடி இணை புடையா - நிலத்தில் இரண்டு கால்களானும் உதைத்து; பங்கம் செய்து - சேறு செய்து; வயிறு படபட அடித்து - வயிற்றின்மேல் படபட என்றோசையுண்டாகும் படி கைகளாலடித்துக்கொண்டு; இறுகி அங்கிபோல் வீழ்ந்து - செறிவுற்றுத் தீப்போன்று நிலத்திலே விழுந்து; அலறி நின்று உலறி - ஊளையிட்டு நின்று உயிரினங்களை வருத்தி; அங்காக்கும் - வாயைப் பிளப்பாள்; எங்கும் தான் என - பார்க்குமிடமெல்லாம் அங்கங்கேயுந் தானேயாகி; எரி கொள்ளி வளை என திரியும் - எரி கின்ற கொள்ளி வட்டம் போன்று சுழலாநிற்பள்; என்க.

(வி - ம்.) புடையா - புடைத்து. ஈண்டு உதைத்தென்க. பங்கம் - சேறு. படபட - ஒலி குறித்துவந்த இரட்டைக்கிளவி. இறுகுதல் - செறிதல். அங்கி - தீ. உலறுதல் - வருத்துதல். அங்காத்தல்-வாயைப் பிளத்தல். கொள்ளிவளை - எரிகின்ற கொள்ளியைச் சுழற்றுங்கால் தோன்றும் வட்டம். (சங)

ருங. கல்லி னுற்கடுங் கனலினுங் கடுகென வெடிக்கும்
வில்லின் வாய்ப்பெய்து விளங்குவெண் பகழிகள் விடுக்கும்
மல்லி னுற்சென்று மறித்திடு வேனென நெறிக்கும்
பல்லி னுற்பல பிணங்களி னிணங்களைப் பகிரும்.

(இ - ள்.) கல்லினால் கடுங் கனலினும்-கற்களாலும் அச் சுடு காட்டுக் கடிய கொள்ளிகளானும்; கடுகென - கடிதாக; வெடிக்கும்- எறிவாள்; விளங்கு வெள் பகழிகள் - விளங்காநின்ற வெள்ளிய கணைகளை; வில்லின் வாய்ப் பெய்து விடுக்கும் - வில்லின்கண் வைத்து எய்வாள்; மல்லினால் சென்று மறித்திடுவேன் என நெறிக்கும் - வலிமையாலே சென்று தடுப்பேன் என்று கருதிப் புருவங்களை நெறித்து நோக்குவாள்; பல்லினால் பல் பிணங்களின் நிணங்களைப் பகிரும் - பல்லினாலே பல பிணங்களின் தசைகளைக் கிழிப்பாள் என்க.

(வி - ம்.) கனல்-கொள்ளிக்கனல். வெடிக்கும்-எறிவாள். கடுகென-கடிதென; கடிதாக. பகழி - கணை. புருவங்களை நெறிக்கும் என்க. பகிரும் - கிழிப்பாள். கிணம் - தசை, கொழுப்பு. (சச)

ருச. ஓடு முட்குடை யுருவுகொண் டருவென வொளிக்கும்
பாடு பாணியிற் பலபல கலகல வொலியா
ஆடு நாடக மரும்பசி களைகென விரும்பி
ஊடு போவனென் றுரைத்துரைத் துள்ளஞ்செய் தொழியும்.

(இ - ள்.) ஓடும் - அஞ்சும்படி ஓடாநிற்பள்; உட்கு உடை உருவு கொண்டு - கண்டோர் அஞ்சுதலையுடைய பேருருக்கொண்டு தோன்றி; அரு என ஒளிக்கும் - உருவமன்றென்று நினையும்படி ஞெரேலென மறையாநிற்பாள்; பாடு பாணியில் கலகல ஒலியா - பாடாநின்ற பாட்டுக்களாலே கலகல வென்று ஆரவாரித்து; நாடகம் பலபல ஆடும் - பற்பல கூத்துக்களை ஆடாநிற்பள்; அரும்பசி களைகு என - இவனைக் கொன்று என்னுடைய பொறுத்தற்கரிய பசியைத் தீர்த்துக்கொள்வேனென்று; விரும்பி - அவாவி, ஊடு போவேன் என்று உரைத்து உரைத்து - இவன் மார்பிற் புகுந்து முதுகாற் புறப்படுவேன் என்று பலகாலும் கூறி அச்சுறுத்தியும்; உள்ளஞ் செய்து - அங்ஙனம் போதற்கு நினைந்தும்; ஒழியும்- அச்சத்தால் அங்ஙனம் செய்யாதொழிவாள்; என்க.

(வி - ம்.) உட்கு – அச்சம். பாணி-பாட்டு. பலபல நாடகம் ஆடும் என இயைக்க. பலகாலும் எனினுமாம். கலகல: ஒலிக்குறிப்பு. நாடகம்-கூத்து. உள்ளஞ் செய்தல்-நினைத்தல். ஊக்கங் கோடலுமாம். அங்ஙனம் செய்யின் அவன் தவத்தீ நம்மை யழிக்கும் என்று அஞ்சி ஒழியும் என்பது கருத்து. (சரு)

ருரு. குஞ்ச ரம்பெருங் கொடுவரி கடுவிடை கொலைசூ
ழஞ்சு தன்மைய வடலரி யெனவின்ன பிறவும்
வெஞ்சி னம்பெரி துடையன விவையினும் வெருளான்
றஞ்ச மன்றிவன் றவநிறை சுடுமெனத் தவிர்ந்தாள்.

(இ - ள்.) இவன் - இம்முனிவன்; கொலை சூழ் - கொலைத் தொழில் செய்கின்ற; குஞ்சரம் - யானையும்; பெருங் கொடுவரி - பெரிய புலியும்; கடு விடை - கொடிய காளையும்; அடல் அரி - வலிய சிங்கமும்; வெம் சினம் பெரிது உடையன - மிகவும் சின முடையனவும்; அஞ்சு தன்மைய - உயிரினங்கள் அஞ்சுதற்குக் காரணமான தன்மையுடையன, என இன்ன பிறவும்-என்னும் இன் னோரன்ன பிறவும் ஆகிய; இவையினும் வெருளான்-இவற்றானும் சிறிதும் அஞ்சுவான் அல்லன் போலும்; இவன் தவநிறை தஞ்சம் அன்று - இம்முனிவனுடைய தவநிறைவு எளிய தொன்றன்று;

சுடும் எனத் தவிர்ந்தாள் - அது நம்மை ஒரு தலையாகச் சுட்டழிக்கும் என்று அஞ்சி அச்செயலை ஒழிந்தாள் என்க.

(வி - ம்.) குஞ்சரம் – யானை. கொடுவரி - புலி. விடை - காளை. அரி - சிங்கம். தஞ்சமன்று - எளிதன்று. தவநிறைவு என்க. நம்மைச் சுடும் எனத் தவிர்ந்தாளென்க. (சக)

ரு சு. அச்ச மேயுறத் தழிக்குவன் தவமென அறியேன்
விச்சை வேறிலன் விழுக்குண முடையனிவ் விறலோன்
இச்சையாலன்றி யிவன்முன்னை நிலையெனக் கரிதா
நச்சி மெய்யென நடுங்குமே னுடம்பென வொடுங்கி.

(இ - ள்.) அச்சமே உறுத்து-யான் இவனை அச்சுறுத்தியே; தவம் அழிக்குவன் என - இவனுடைய தவநிலையைக் குலைப்பேன் என்று நினைத்து; அறியேன் - ஓர் அறிவிலியேயாயினேன்!; விழுக்குணம் உடையன் - இவனோ சிறந்த குணங்களையே உடையன்; வேறு விச்சையிலன் - வேறு மாயவித்தை யாதொன்றுமுடையனல்லன்; இவ்விறலோன்-இந்தத் தவவலிமையுடைய துறவோனது; இச்சையால் அன்றி - விருப்பத்தாலே அல்லாமல்; இவன் முன்னை நிலை - இவன் முன்னர் நிலைத்து நிற்றலும்; எனக்கு அரிது - எனக்கு அருஞ் செயலேயாகும்; என் உடம்பு நச்சு மெய் என நடுங்கும்-என்னுடம்போ இப்பொழுது நஞ்சேறிய உடம்புபோல நடுங்கா நிற்கும் என்று அஞ்சி; ஒடுங்கி - அடங்கி என்க.

(வி - ம்.) அறியேனாயினேன் என ஆக்கச் சொல் வருவித்தோதுக. என்போல மாயவித்தை பயின்றிலன்; அவன் விழுக்குணமே அவன் வலிமையாகின்றதென்பாள், 'விச்சை வேறிலன் விழுக்குண முடையன்' என்றாள். விச்சை - வித்தை. ஆற்றலை வியப்பாள், விறலோன் என்றாள். அவன் விரும்பினால் அவன்முன் யான் நிற்றல் கூடும்இன்றேல் நிற்றல் கூடாது என்றவாறு. நச்சுமெய் - நஞ்சேறிய வுடம்பு. (சஎ)

ருஎ. ஆற்றல் சான்றவ னருந்தவ வழலெனை யடுமோன்
மாற்று மாறென்கொ லெனநனி மனத்தினு ணினையாச்
சீற்றந் தீர்ந்தென்செய் கருவினை தணிகெனப் பணிந்தாள்
கூற்றம் போல்வதோர்கொடுமையையுடையவள் குறைந்தே.

(இ - ள்.) கூற்றம்போல்வது ஓர் கொடுமையை உடையவள் - மறலியின் கொடுமையை ஒத்ததொரு கொடுமையையுடைய அந் நீலகேசி; குறைந்து - தன் செருக்கடங்கி; ஆற்றல் சான்றவன் - நோன்பாற்றலுடைய இம் முனிவனுடைய; அருந்தவ அழல் எனை அடும் - செயற்கரிய தவமாகிய தீயே தீயேனாகிய என்னைச் சுட்டழிக்கும்; மாற்றும் ஆறு என்கொல் என - இவன் தவநிலையை மாற்றுதற்குரிய வழிதான் இனி யாதோ? என்று; நனி மனத்தி

னுள் நினையா - மிகவும் தன்னெஞ்சத்தே நினைந்து; சீற்றம் தீர்ந்து என் கருவினை தணிக என - தன் வெகுளி விடுத்து 'அந்தோ! என் கொடுஞ்செயல் இனி ஒழிவதாக' என்று கருதி; பணிந்தாள் - அம்முனிவன் திருவடிகளை வணங்கினாள் என்க.

(வி - ம்.) கூற்றம் - மறலி. அடும் - கொல்லும். ஆல்: அசை. ஆறு - வழி. கொல்: அசை. கருவினை - தீவினை. குறைதல் - செருக்கடங்குதல். (சஅ)

ருஅ. சிந்தித் தாளிது செறியெயிற் றரிவைய துருவாய்ப்
பந்தித் தாகிய பழவினை கெடுகெனப் படிற்றால்
வந்தித் தியான்கொண்ட வடிவினின் மனநிறை யழித்தா
னெந்தித் தீநிகர் நோன்புகை விடுமிவ னெனவே.

(இ - ள்.) இது சிந்தித்தாள் - பின்னர் இவ்வாறு நினைப்பாளாயினள் யான் இனி; செறி எயிற்று அரிவையது உருவாய் - செறிந்த பற்களையுடைய ஓர் அழகிய நங்கையுருவங் கொண்டு இம் முனிவன் எதிர் சென்று; படிற்றால்-வஞ்சனையால்; பந்தித்து ஆகிய பழவினைகெடுக என-முனிவர் பெருமானே! என்னைக் கட்டுப்படுத்து மாற்றால் உண்டாகிய என் பழவினைகள் கெடுவனவாகத் திருவருள் கூர்தல் வேண்டும் என்று; வந்தித்து - வணங்கிப் பின்னர்; யான் கொண்ட வடிவினின் - யான் மேற் கொண்ட அம் மடந்தையின் எழிலாலே; இவன் மன நிறை அழித்தால் - இவனுடைய மனத் திட்பத்தைக் கெடுத்தால்; நொந்து - இவன் காமப் பிணியாலே பெரிதும் வருந்தி; தீ நிகர் நோன்பு கை விடும் என - நெருப்பினை நிகர்த்த இத் தவத்தினைக் கைவிட்டொழிவான் என்று; (சிந்தித்தாள்) என்க.

(வி - ம்.) இது - பின்வருமிச் சிந்தனையை. அரிவை - பெண். பந்தித்து என்பதற்கு - இவனை வயப்படுத்தி எனினுமாம். படிறு-வஞ்சகம், பொய்யுமாம். வந்தித்தல்-வணங்குதல். நோன்பு-தவம். (சக)

ருக. யாம நீங்கலு மரசன்ற னொருமக ளுரைசால்
காம லேகைதன் னுருவொடு திருவெனத் தோன்றித்
தாமஞ் சாந்துதண் மலரின்ன பலகொண்டு துணைசால்
சேமங் காவல சேவடி போற்றெனச் சென்றாள்.

(இ - ள்.) யாம நீங்கலும் - இங்ஙனம் சிந்தித்த நீலகேசி அன்றிரவு முதலியாமம் கழிந்தவுடன்; அரசன்றன் ஒருமகள் உரைசால் காமலேகைதன் உருவொடு - மன்னனாகிய சமுத்திர சாரனுடைய ஒரே மகளாகிய புகழ்மிக்க காமலேகை என்பாளுடைய உருவத்தை மேற்கொண்டு; திரு எனத் தோன்றி - காண்போர் இவள் திருமகளே எனத் தகுந்த அழகோடு தோன்றி (அரண்

மனையிலிருந்து புறப்படுபவள்) தாமம் சாந்து தண் மலர் இன்ன பலகொண்டு - மலர் மாலைகளும் சந்தனமும் குளிர்ந்த விடுபூக்களும் இன்னோரன்ன பிற பல நுகர்ச்சிப் பொருள்களையும் (தோழியர் சுமந்துவர) தன்னுடனே கொணர்ந்து; துணைசால் சேமங் காவல-துணையாகப் பொருந்திய அரண்மனை காவலனே!; சேவடி போற்று என - நீ என் சேவடியைப் பாதுகாத்துச் செல்க என்று கட்டளையிட்டு; சென்றாள் - அம் முனிவனிருக்கைக்குச் சென்றாள், என்க.

(வி - ம்.) யாமம்-இரவின் மூற்கூறு. அரசன் - சமுத்திரசாரன். உரை-புகழ். காமலேகை உருவொடு திரு எனத் தோன்றி, என்றமையால் காமலேகை திருமகளை ஒத்த அழகுடையாள் என்பது பெற்றாம். தாம முதலியவற்றைத் தோழியரேந்திவர உடன்கொண்டு சென்றாள் என்பது கருத்து. சேமம் - அரண்மனை. சேவடிபோற்றுதல் - வழி காட்டிச் சேறல். (௩௦)

௩௦. வணங்கி வந்திடம் வலங்கொண்டு வழிபடு பொழுதில்
கணங்க டாம்பல கடன்சொல்லிக் கலந்தெடுத் தேத்தித்
துணங்கை யாடத்தன் றுகிலிடை மேகலை துளங்க
அணங்கு மெய்யவ ளருந்தவ னுழைவர நினைந்தாள்.

(இ - ள்.) இடம் வலம் கொண்டு வணங்கி வழிபடு பொழுதில்-அங்ஙனஞ் சென்ற நீலகேசி தான் முனிவரன் பள்ளியிடத்தை வலமாக வந்து அவனடிகளில் வீழ்ந்து வணங்கி வழிபாடு செய்யும் பொழுது; கணங்கள் தாம் பல கடன் சொல்லி - தன் தோழியர் பல்வேறு கடமைகளையும் கூறி; கலந்து எடுத்து ஏத்தித் துணங்கையாட - தன்னோடு கூடித் தன் புகழ்களை எடுத்தேத்திப் பாடித் துணங்கைக் கூத்தாடா நிற்பவும்; தன் துகிலிடை மேகலை துளங்க-தன் ஆடைமேலணிந்த மணிமேகலை யணியசைந்து மின்னவும்; அணங்கு மெய்யவள் - அழகிய உடம்பினையுடையவளாய்; அருந்தவன் உழைவர - அரிய தவத்தினையுடைய அம்முனிவன்பால் வாராநிற்ப, நினைந்தாள் - பின் மற்றொன்றை நினைத்தவள் என்க.

(வி - ம்.) இடம்-முனிவனிருக்கை. கணம்-தோழிமார் கூட்டம். கடன்-அடியீடேத்தல். வாழ்த்துப் பாடல் முதலிய தோழியர் கடமைகள். துணங்கை - ஒருவகைக் கூத்து. அஃதாவது - "பழுப்புடை இருகை முடக்கியடிக்கத் துடக்கிய நடையது துணங்கையாகும்" என்பதனாலுணர்க. (திருமுருகாற் - ௩௬ உரை) வர வந்தபின் மற்றொன்றை நினைந்தவள் என்க. அணங்கு - அழகு. (௩௧)

௩௧. காவ லாளருங் கடைபிறந் திவண்வா வொழிக
வேவ லாளரு மிதற்கெய்து மியல்குறை முயல்க
கூவி யான்குறை யுளதெனக் கூறுகுமி னமரென்
றேவில பல்புக ழுறுதவ னறியநின் றுரைக்கும்.

(இ - ள்.) காவலாளரும் கடை இறந்து இவண் வரவு ஒழிக - காவலரெல்லாம் இப்பள்ளி வாயிலினின்றுஞ் சேணிடைச் சென்று பின்னர் ஈங்கு வருதலையும் தவிர்மின்!; ஏவலாளரும் இதற்கு எய்தும் இயல் குறை முயல்க - ஏவலரெல்லாம் அங்ஙனமே சேணிடைச் சென்றிருந்து என் முயற்சிக்கு ஏதேனும் குறை நிகழ்வதாயின் அப்பொழுது அதனை அகற்ற முயல்வீராக!; நமர் - நமரங்காள்!; யான் கூவிக் குறை உளது என குறுகுமின் என்று - யான் நுங்களை அழைத்துக் குறையுளது என்று கூறின் அப்பொழுது இங்கு வம்மின் என்று கட்டளையிட்டு அவரையெல்லாம் போக்கிய பின்னர்; நின்று - தமியளாய் நின்று; ஒவு இல் பல் புகழ் உறு தவன் அறிய உரைக்கும் - ஒழிதலில்லாத பலவாகிய புகழை யுடைய மிக்க தவத்தையுடைய அம் முனிச்சந்திர பட்டாரகன் அறியும்படி கூறுவாள் என்க.

(வி - ம்.) கடை-வாயில். வரவு-வருதல். இதற்கு-என் முயற்சிக்கு. குறை உளதாயின் முயல்க என்றவாறு என - என்று கூறுங்கால். நமர்: விளி. "ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து, வேண்டும் பனுவற் றுணிபு" என்பதும், "இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார், பெருமை பிறங்கிற் றுலகு" என்பதும், (திருக்குறள் உக, உங) பற்றி 'ஒவில் பல்புகழுறுதவன்' என விதந்தோதினர். நின்றென்பது, தமியளாய் நின்றென்பது பட நின்றது.(௩உ)

கூஉ. ஆண்டைக் கோட்டத்தை அணைந்ததோ ரகலிலை யால
மாண்டைக் காயதோர் மரமுத லிருந்தமா தவனைக்
காண்டக் காயென்செய் கருவினை தணிக்கெனப் [பணிந்தாள்
வேண்டிக் கொண்டவவ் வியத்தகுவிளங்குரு வுடையாள்.

(இ - ள்.) ஆண்டைக் கோட்டத்தை அணைந்தது ஓர் அகல் இலை - அவ்விடத்துள்ள பிடாரி கோயிலைச் சார்ந்து நின்றதோர் அகன்ற இலைகளையுடைய; ஆண்டைக்கு ஆயது ஓர் ஆலம் மரமுதல் இருந்த மா தவனை - அவ்விடத்தின் கண்ணதாகியதோர் ஆலமரத்தின கீழிருந்த சிறந்த தவத்தையுடைய அம்முனிவனை நோக்கி; மாண் தக்காய் என் செய் கருவினை தணிக்க எனப் பணிந்தாள் - மாட்சிமையால் தகுதியுடைய பெருமானே! அடிச்சி செய்துள்ள தீவினைகளைத் தணித்தருளுக! என்று வணங்கினாள். (அவள் யாரெனில்) வேண்டிக்கொண்ட - தானே விரும்பி மேற்கொண்ட; அவ் வியத்தகு விளங்கு உரு உடையாள் - அக்காமலேகையின் கண்டோர் மருளத்தகுந்த விளங்குகின்ற அழகினை யுடையவளாகிய நீலகேசி யெனக.

(வி - ம்.) ஆண்டை - அவ்விடத்துள்ள. கோட்டம் - கோயில். அகலிலை: வினைத்தொகை. ஆலம்-ஆலமரம். ஆண்டைக்காயது என்புழி அவ்விடத்திலுள்ள தாகிய என்க. கருவினை-தீவினை. வேண்டி-விரும்பி.

*அவ்வுரு - அக்காம லேகையின் உருவம். வியத்தகு உரு, விளங்குரு எனத் தனித்தனி கூட்டுக.* (ருக)

வேறு

ருஙு. வேண்டிய வுருவத னாலும்
வேட்கைசெய் யுருவத னாலுங்
காண்டகு மடவர லுருவங்
காமுறு வதுநனி தாங்கி
யீண்டிய மிகுகுணத் திறைவ
னியல்பினை யெனையது நினையா
ணீண்டதோர் கொடியயற் கொடிபோ
னிறைதவ வருளென நின்றாள்.

(இ - ள்.) *வேண்டிய வுருவு அதனாலும் வேட்கைசெய் உருவு அதனாலும் - தான் விரும்பி மேற்கொண்ட காமலேகையின் வடிவத்தினாலாதல், கண்டோர் விரும்புதற்குக் காரணமான அழகினாலாதல்; காண்தகு மடவரல் உருவம் - காணும் தகுதியை உடைய அப்பெண்ணுருவத்தை; காமுறுவது நனி தாங்கி - அவாவுவதனை மிகவும் தடுத்து; ஈண்டிய மிகு குணத்து இறைவன் - செறிந்த மிக்க குணச் சிறப்பினையுடைய துறவியர் தலைவனாகிய அம்முனிவனுடைய; இயல்பினை யெனையதும் நினையா - இயல்பை எத்துணையும் அறிந்து கொள்ளமாட்டாளாய்; ஓர் நீண்டது கொடிஅயல் - ஒரு நீண்ட கொடியின் பக்கத்திலே நிற்கும்; கொடிபோல் நிறைதவ அருள் என நின்றாள் - மற்றொரு பூங்கொடிபோல் நின்று நிறைந்த தவத்தினை உடைய பெரியோய் அடிச்சிக்கு அருள் கூர்ந்தருளுக! என்று வேண்டி நின்றாள் என்க.*

(வி - ம்.) *உரு இரண்டனுள் முன்னது வடிவம், பின்னது அழகு என்க. காண்தகு-எல்லோரும் விரும்பிக் காணும் தகுதி. நனி—மிகுதி குறித்தவுரிச்சொல். முனிவன் உண்ணாமை முதலிய விரதங்களான் மெலிந்திருத்தலின் கொடியோடுவமித்தார். தவ: விளி.* (ருச)

ருச. உடம்பொடு முயிரிடை மிடைந்த
வொற்றுமை வேற்றுமை விகற்பிற்
றொடர்ந்தபல் வினைகளைத் துணிக்குஞ்
சுதநெறி முறைமையு மறிவான்
படர்ந்ததன் யோகினை நிறுவிப்
பணிந்தவட் காசிடை மொழிந்தா
னிடம்பக மகளிவள் பெரிது
மிராசபுத் திரியல ளெனவே.

(இ - ள்.) உடம்பொடும் உயிர் இடை மிடைந்த - உடலிற்கும் உயிருக்கும் பொருந்தியுள்ள; ஒற்றுமை வேற்றுமை விகற்பின் - ஒற்றுமையையும் வேற்றுமையாகிய வேறுபாட்டினையும், தொடர்ந்த பல்வினைகளைத் துணிக்கும் - அவ்வுடம்பொடு உயிர் இரண்டற மிடைதற்குக் காரணமான வினைகளை அகற்றுதற்கான; சுதநெறி முறைமையும் - ஆகமநெறி முறைகளையும்; அறிந்தான் - நன்குணர்ந்தவனாகிய அம் முனிவன்; இவள் இடம்பக மகள் - இவள் பேய்மகளே யாவாள்; பெரிதும் இராசபுத்திரி அலள் - வெளித்தோற்றத்தில், மிகவும் காணப்படுகின்றபடி அரசன்மகள் அல்லள் என்றுணர்ந்தவனாய்; படர்ந்த தன் யோகினை நிறுவி - உலகெலாந் தானாய்ப் பரவிய தனது யோகத்தை நிறுத்தி; பணிந்தவட்கு ஆசிடை மொழிந்தான் - வணங்கிநின்ற அந் நீலகேசிக்கு வாழ்த்துக் கூறியருளினான்; என்க.

(வி - ம்.) உடம்பொடு உயிரிடை மிடைந்த ஒற்றுமையாவது - உடம்பும் உயிரும் வேறு வேறாக விருந்தும் இரண்டறக் கலந்து தோற்றும் தோற்றம். வேற்றுமை விகற்பு : இருபெயரொட்டு. உயிரோடு தொடர்ந்த வினை என்க. அது காதியகாதி! என மேலும் பற்பலவாக விரிதலின் பல்வினைகள் என்றார். சுதநெறி - ஆகமநெறி. எல்லாந் தானாக விரிதலின் படர்ந்த யோகு என்றார். யோகினை ஓதியின் கண்ணிறுவி இவ ளிடம்பகமகள், இராசபுத்திரியலள் என அறிந்து எனினுமாம். ஆசிடை : ஒருசொல்; வாழ்த்து என்னும் பொருட்டு. "அந்தணர் ஆசிடை கூறி," எனச் சூளாமணியினும் (குமாரகால-உ0) வருதலறிக. இடம்பமகள் - பேய்மகள். அலளென வறிந்தும் என ஒரு சொல் வருவித்தோதுக. (௬௪)

௬௫. என்னைநீ ரீண் டைக்கு வரவென்
றருந்தவன் வினவலு மெழிலார்
பொன்னனாள் புடைபெயர்த் திட்ட
பொலங்கல மனங்கலக் குவபோல்
மின்னொளி வோடுற மிழற்ற
மிழற்றுவ கிளியென மொழிந்தாள்
முன்னநான் பரவிய வரங்கண்
முடிகுறை கொடுப்பதற் கெனவே.

(இ - ள்.) அருந்தவன் - வாழ்த்துரைத்த முனிவன் பின்னரும் அவளை நோக்கி; ஈண்டைக்கு வரவு என்னை என்று வினவலும் - நங்காய்! நீ இவ்விடத்திற்கு வந்தமைக்குக் காரணம் யாதோ? என்று வினவாநிற்ப; எழில் ஆர் பொன் அனாள் - அழகு பொருந்திய திருமகளை ஒத்த காமலேகையாகிய அந் நீலகேசி; புடைபெயர்த்து இட்ட பொலம் கலம் - தான் இடம்பெயர்த்துச் சீர் திருத்தியிட்ட பொன்னணிகலன்கள்; மனம் கலக்குவபோல் -

காண்போர் நெஞ்சத்தைக் கலக்குவன போன்று; மின் ஒளியோடு உறமிழற்ற - மின்னுகின்ற ஒளியோடே பெரிதும் ஆரவாரியா நிற்ப; முன்னம் நான் பரவிய வரங்கள் முடிகுறை கொடுப்பதற்கு என - அம் முனிவன் வினவிற்கு விடையாக "பெரியோய்! முன்பு யான் வேண்டிக்கொண்ட வரங்களின் பொருட்டாக யான் இத் தெய்வத்திற்குச் செலுத்த வேண்டிய பராவுக் கடனைச் செலுத்து தற்காக" என்று; மிழற்றுவ கிளி என மொழிந்தாள் - தான் மொழிவனவாகிய இம் மொழிகளைக் கிளிபோன்று மழலை மொழி களாலே கூறினள்; என்க.

(வி - ம்.) ஈண்டைக்கு - இவ்விடத்திற்கு. பொன் - திருமகள். பொலங்கலம்-பொன்னாலியன்ற வணிகலம். உற-மிகவும். மிழற்ற-ஆரவாரிப்ப. முடிகுறை - செய்துமுடிக்க வேண்டிய கடமை. தான் மிழற்றுவனவற்றைக் கிளியென மிழற்றினாள் என்க. (௩௬)

௩௭. யாதுநீ கொண்ட வரமென்
றருந்தவ னியல்பினின் வினவ
ஏதினாட் டிறையெங்க ளிறைமே
லியல்பின்றி யெழலொழி கெனவே
போதுசாந் தவியோடு புகையும்
பொருந்திய பொருந்தெய்வக் கெனலு
மோதிஞா னியிது வாயி
னுரையழ கீதென மொழிந்தான்.

(இ - ள்.) அருந்தவன் - அதுகேட்ட செயற்கரிய தவத்தை யுடைய அத்துறவோன்; இயல்பினின் நீ கொண்டவரம் யாது என்று வினவ - இயல்பாகவே நங்காய் நீ வேண்டிக் கொண்ட அவ்வரந்தான் யாது? என்று வினவாநிற்ப; ஏதில் நாட்டு இறை - அதுகேட்ட அந்நங்கை "பெரியோய்! பகை நாட்டரசன்; இயல்பின்றி எங்கள் இறைமேல் எழல் ஒழிக என - இயற்கைக்கு மூரணாக எம்மரசன்மேல் போர்க்கு எழுதலைத் தவிர்க்க என்று (யான் வரங்கொண்டேனாக) அதன் பொருட்டு; பொருந் தெய்வக்கு - மறவருடன் சென்று போராற்றும் தெய்வமாகிய இப் பிடாரிக்கு (கொற்றவைக்கு); பொருந்தியபோது சாந்து அவியோடு புகையும் - வழிபாட்டிற்குப் பொருந்திய மலரும் சந்தனமும் மடை சோறும் நறுப்புகைப் பொருளும் (கொணர்ந்தேன்) என்று கூற ஓதி ஞானி - அதுகேட்ட ஓதிஞானமுடைய அத்துறவி; இது ஆயின உரை அழகு ஈது என மொழிந்தான் - நீ கேட்ட வரம் ஈதே யாயின் உன்னுடைய இம்மொழி மிகவும் அழகுடைத்துக் காண்! என்று கூறினன்; என்க.

(வி - ம்.) விடை கூறியவரைப் பின்னும் வினவுதல் இயல்பாகலின் இயல்பினின் வினவ என்றார். ஏதில்நாடு - தொடர்பில்லாத நாடு; பகை நாடு. இறை – மன்னன். இவ்வரம் அவன் அரசுரிமை கருதிய தாகலின் என் தந்தைமேலென்னாது அந்நாட்டுக் குடிகளையும் உளப் படுத்தி எங்கள் இறைமேல் என்றாள். கூறுவ வெல்லாம் பொய்யே யாகலின் அவற்றைக் குறை குறையாக விட்டொழிகின்றாள். என வரங்கொண்டேன் என்றும், புகையும் கொணர்ந்தேன் எனவும் அவள் விட்டவற்றை வருவித்துக் கொள்க. ஓதிஞானி – முக்கால நிகழ்ச்சி களையு முணரும் ஒருவகை அறிவினையுடையோன். உரையழகிது எனவே, பொருள்தான் பொருந்திற்றில்லை என அசதியாடினானு மாயிற்று. (கஎ)

கஅ. **தோடுகோண் டொருசெவி விளங்கத்**
**துளங்குவ மகரமோன் றாடப்**
**பாடுவண் டோடுசுரும் பரற்றப்**
**பல்கலம் வயிரவில் வீச**
**வாடுகோம் பனையவ ளுரைக்கு**
**மச்சமோ பெரிதுடைத் தடிகள்**
**காடுகண் டாற்பிறர்க் கறியேன்**
**கவற்றுவ தோக்குமீ தெனக்கே.**

(இ - ள்) தோடு கொண்டு ஒருசெவி விளங்க - அதுகேட்டுத் தோடு பெய்யப்பட்டுத் தனது ஒரு செவி விளங்கா நிற்பவும்; ஒன்று மகரம் ஆட - மற்றொரு செவியிற் பெய்த மகரகுண்டலம் ஆடாநிற்பவும்; துளங்குவ - இவ்வாறு இரு செவிகளும் விளங்கு வனவாக; பாடு வண்டொடு சுரும்பு அரற்ற - தான் அணிந்துள்ள மலர் மாலையிற் றேன் பருக வந்து பாடா நின்ற ஆண்வண்டு களோடே பெண் வண்டுகளும் இசை முரலா நிற்பவும்; பல் கலம் வயிரம் வில்வீச - தான் அணிந்துள்ள பல்வேறு அணிகலன்களி னும் பதிக்கப்பட்ட வயிர முதலிய மணிகள் ஒளி வீசாநிற்பவும்; ஆடு கொம்பு அனையவள் உரைக்கும் - ஆடாநின்ற பூங்கொம்பு போன்று தோன்றுநின்ற நீலகேசி கூறுவாள்; அடிகள்-அடிகளே!; காடு கண்டால் பிறர்க்கு அறியேன் - இத்தகைய சுடுகாட்டினைக் கண்டால் பிறர்க்கு எவ்வாறிருக்குமோ அறிகின்றிலேன்; அச்சம் பெரிதுடைத்து - என்னெஞ்சம் பெரிதும் அச்ச முடைத்து; எனக்கு ஈது கவற்றுவது ஒக்கும் - எனக்கு இக்காடு பெரிதும் வருத்துவதொன்று போலவே தோன்றுநிற்கும். (என்று கூறி னாள்) என்க.

(வி - ம்.) ஒன்று – மற்றொரு செவி. துளங்குவ - இவ்வாற்றால் இருசெவியும் துளங்குவ என்க. இனி துளங்குவது மகரம் எனக் கொண்டு கெடுதல் விகாரமெனினுமாம். பாடு-பக்கமுமாம். வண்டு– ஆண் வண்டு. சுரும்பு – பெண்வண்டு. அரற்ற - முரல. வில் - ஒளி.

கொம்பு அனையவள்—நீலகேசி. காடு கண்டால் பிறர்க்கு எவ்வாறிருக்குமோ அறியேன் என்பது கருத்து. ஈது - இக்காடு. கவற்றுவது — துன்புறுத்துவது. (௯௮)

௬௮. மணிநகு நெடுமுடி மறவேன்
மன்னவன் மகளெனின் மடவாய்
அணிநகை யாயமோ டாடி
அரும்பெறற் சுற்றமோ டிருப்பாய்
பிணிமிகு பேய்வன மிதனுட்
பேதுற லொருதலை பிறவோ
துணிவோடு துறந்தவர்க் கல்லாற்
றுன்னுதற் கரிதிது பிறர்க்கே.

(இ - ள்.) மடவாய்! - மடந்தையே!; மணிநகு நெடுமுடி மறவேல் மன்னவன் மகள் எனின் - நீ மணிகள் விளங்கும் நெடிய முடியையும் மறப்பண்புடைய வேற்படையினையுமுடைய வேந்தன் மகளாயின்; அரும் பெறல் சுற்றமோடு - நீ பெறுதற்குரிய அரசச் சுற்றத்தார் புடை சூழ; அணிநகை ஆயமோடு ஆடி - அழகிய புன் முறுவலையுடைய நின் தோழியர் கூட்டத்தோடு விளையாடி; இருப்பாய் - பாதுகாவலுடைய அரண்மனையகத்தே இனிதாக இருப்பாயல்லையோ?; பிணி மிகுபேய் வனம் இதனுள் - அத்தகைய நீ துன்பம் மிகுதற்குக் காரணமான பேய்கள் வாழும் இக்காட்டின்கண்; பேதுறல் ஒருதலை - துன்புறுதல் உறுதியே காண்; இது - இப் பெருங்காடு; துணிவொடு துறந்தவர்க்கு அல்லால் - தெளிவோடு உலகினைத் துறந்தொழுகும் துறவோர்க் கல்லது; பிறர்க்கு துன்னுதற்கு அரிது - ஏனையோர் எய்துதற்கு அரியதொன்றும் (என்றான்); என்க.

(வி - ம்.) நகுதல் - விளங்குதல். மறவேல், உடையான் பண்பு உடைமை மேலேற்றப்பட்டது. அணி — அழகு. ஆயம் — தோழியர் கூட்டம். சுற்றம் — இருமுதுகுரவர் முதலியோர். பிணி — துன்பம். பேது - துன்பம். ஒருதலை — உறுதி. பிற, ஓ, அசைகள். துணிவு — தெளிவு. துன்னுதல் - எய்துதல். (௯௧)

௬௯. வேணுவோ டினையன பிறவும்
வியப்புறு பெருவனம் வினவிற்
பேணுதற் கரிதிது பேரிதும்
பிணிதரு பேய்வன மெனவே
வாணுதன் மயிர்குளிர்த் துரைக்கும்
மாதவத் தடிகளேன் றானுங்
காணுதற் கரியன வுருவங்
கண்டறி வனகளு முளவோ.

(இ - ள்.) வேணுவோடு இனையன பிறவும் - மேலும் அம் முனிவன் நங்காய்! மூங்கிலும் இன்னோரன்ன பிறவும் செறிந்து; வியப்பு உறு பெருவனம் வினவின் - காண்போர் மருளுதற்குக் காரணமான இப்பெருங் காட்டின் இயல்பினை வினவு மிடத்தே; பேணுதற்கு அரிது-கேட்போர் தம்முளத்தை அஞ்சாமற் காத்தல் அரிதேயாம்; இது பெரிதும் பிணி தரு பேய் வனம் என - இது மிகவும் துயர் செய்யும் பேய்கள் வாழும் பெருங்காடே ஐயமின்று என்று கூற; வாள் நுதல் - ஒளி பொருந்திய நெற்றியினையுடைய் அம்மடந்தை; மயிர் குளித்து உரைக்கும்-(மருள் வாள் போன்று) மயிர் சிலிர்த்துக் கூறுவாள்; மா தவத்து அடிகள் என்றானும் - பெரிய தவத்தினையுடைய அடிகேள்! தாங்கள் எப்பொழுதேனும்; காணுதற்கு அரியன. உருவம் - மாந்தர் காண்டற் கரியனவாகிய உருவங்கள்; கண்டு அறிவனகளும் உளவோ - கண்டறிந்தனவும் இங்குள்ளனவோ? (என்றாள்) என்க.

(வி - ம்.) வேணு - மூங்கில். கேட்போர் நெஞ்சு பேணுதற்கு அரிது என்றவாறு. வாணுதல், அன்மொழித் தொகை. மயிர் குளிர்த்தல் - மயிர் சிலிர்த்தல்; இது மருட்கை என்னும் மெய்ப்பாடு. என்னை? "அற்புத வவிநய மறிவரக் கிளப்பின், சொற் சோர்வுடையது சோர்ந்த கையது, 'மெய்ம்மயிர் குளிர்ப்பது' வியத்தகவுடைய, தெய்திய திமைத்தலும் விழித்தலு மிகவாதென் றையமில் புலவரறைந்தனர் என்ப" வாகலின். (சிலப் ௩-௧௩. அடியா... உரை.) என்றானும் - எந்த நாளிலேனும். அறிவனகளும் என்புழி கள் விகுதி மேல் விகுதி. (௩0)

எ0. புக்கிருந் தொருமனை யுறைவார்
போவதும் வருவதுங் கண்டான்
மக்களுந் தாயருந் தம்முள்
மருள்வதும் வெருள்வது முளதோ
மிக்கபல் கதிகளு முயிரின்
மெய்ம்மையு முணர்ந்தவர்க் கரிதே
ஒக்குமற் றவையுள வேணு
முரைப்பது பொருத்தமின் றெமக்கே.

(இ - ள்.) ஒக்கும் - ஒக்குங்காண்; அவை உள - அத்தகைய காண்டற்கரிய உருவங்கள் இக்காட்டின்கண் உள்ளன; இருப்பின் என்? ஒருமனை புக்கு இருந்து உறைவார் - ஒரே இல்லத்தின்கண் புகுந்து வாழ்ந்திருக்கும் ஒரு குடும்பத்தாருள் வைத்து; போவதும் வருவதும் கண்டால் - ஒரு சிலர் வெளியே செல்வதனையும் மீண்டு வருவதனையும் கண்டால்; மக்களும் தாயரும் தம்முள் - அவருடைய மக்களும் தாயரும் ஆகிய உறவு முறையுடைய ஏனையோர் தம்முள்ளே; மருள்வதும் வெருள்வதும் உளதோ - மருள்வதா

தல் அஞ்சுவதா தல் உளதாகுமோ? ஆகாதன்றே; மிக்க பல்கதிகளும் உயிரின் மெய்ம்மையும் உணர்ந்தவர்க்கு - எண்ணிறந்த பல்வேறு பிறப்புக்களையும் அவற்றிற் பட்டுழலும் உயிரினியல்பினையும் உணர்ந்த சான்றோர்க்கு; அரிதே - காண்டற் கரியன காணுங்கால் அஃது அரியதொரு காட்சியாகாது காண்; உளவேனும்-இக்காட்டின்கண் அத்தகைய உருவங்கள் உளவாயினும்; ஒக்கும்-எமக்கும் அவை ஏனையவற்றைக் காண்டலையே ஒக்கும்; உரைப்பது எமக்குப் பொருத்தம் இன்று - நும்மனோர்க்கு அவற்றை வியந்துரைப்பது எமக்குப் பொருத்தம் இல்லை; (என்றார்) என்க.

(வி - ம்.) ஒருமனையுறையும் குடும்பத்தார் போவதும் வருவதும் உலகில் வாழ்வோர் இறப்பதற்கும் அவர் பேய் முதலிய பிறப்பினுள் வருவதற்கும் உவமைகள். எல்லாவுயிர்களும் கேளிர்களே யாதலால். மக்களும் தாயரும் ஆக உவமித்தார். உயிரியல்புணர்ந்தோர் வியத்தல் அரிதே எனினுமாம். (சுக)

எக. சந்திர முனிவர னுரைப்பத்
தளிரியல் சாவுகள் சாரா
மந்திர முளதெனி னடிகள்
மனத்தோடு பணிமின மெனவே
யந்தரத் தவர்களும் வணங்கு
மருந்தவ னவையுனை யடையா
இந்திரன் வேண்டினும் பேய்க
ளென்னமற் றிலங்கிழை மடவோள்;

(இ - ள்.) சந்திர முனிவரன் உரைப்ப-முனிச்சந்திர பட்டாரகன் இவ்வாறு கூற; தளிர் இயல் - மாந்தளிர் போன்ற மேனியை யுடைய அம்மடந்தை முனிவனை வணங்கி; சாவுகள் சாரா மந்திரம் உளது எனின் - பேய்கள் அணுகாத மந்திர மிருப்பின்; அடிகள் மனத்தொடு பணிமினம் என - அடிகளே அதனை அருளுடைய மனத்தோடே எனக்குச் செவியறிவுறுத்தருளுக என்று வேண்டாநிற்ப; அந்தரத்தவர்களும் வணங்கும் அருந்தவன் - வானோரும் வணங்குஞ் சிறப்பினையுடைய அரிய தவத்தினையுடைய அம்முனிவன் அவளை நோக்கி; இந்திரன் வேண்டினும் பேய்கள் அவை உனை அடையா என்ன-நங்காய்! இந்திரனே வேண்டிக் கொண்டாலும் அப்பேய்கள் உன்னை அணுகமாட்டா காண் என்று கூறுநிற்ப; இலங்கு இழை மடவாள் - அது கேட்ட விளங்குகின்ற அணிகலன்களையுடைய அம்மடந்தை; என்க.

(வி - ம்.) தளிரியல் : அன்மொழித் தொகை. சாவுகள் - பேய்கள். சாரா மந்திரம் - சாராமற் றடுக்கு மந்திரம். அடிகள் : விளி. பணிமினம்: வினைத்திரி சொல். பேய்களவை எனக் கூட்டுக. நீயே

பெரும் பேயாயிற்றே உன்னை எந்தப் பேய் அணுகும் எனக் குறிப்பான் அசதியாடுவார் "இந்திரன் வேண்டினும் பேய்கள் உனை அடையா," என்றார். (௬௨)

௭௨. துப்படு துவரிதழ் துடிக்குந்
துகிலிடை யகலல்கு றுளக்குஞ்
செப்படு வனமுலை செறிக்குஞ்
சிதரரி மழைக்கணுஞ் சிறைக்கு
மோப்படு துடியிடை யொசிக்கு
முவவுறு மதிமுக முழற்று
மிப்படி யவளிவை செயலு
மிவையெனை யெமக்கென வுரைத்தான்.

(இ - ள்.) துப்பு துவர் அடு இதழ் துடிக்கும்-துப்பு என்னும் பவளத்தை வெல்லும் அழகுடைய இதழ் துடிப்பாள்; துகில் இடை அகல் அல்குல் துளக்கும் - ஆடையினூடமைந்த அகன்ற அல்குலை அசைப்பாள்; செப்பு அடு வனமுலை செறிக்கும் - சிமிழினை வெல்லும் அழகுடைய தன் முலைகளை நெருக்குவாள்; அரிசிதர் மழைக்கணும் சிறைக்கும் - செவ்வரியோடிய குளிர்ந்த கண்களையும் சிறங்கணித்து நோக்குவாள்; ஒப்பு துடி அடு இடை - உவமமாகின்ற உடுக்கையையும் அழகால் வெல்லும் தன் இடையினை; ஒசிக்கும் - துவள்விப்பாள்; உவவு உறு மதிமுகம் உழற்றும் - உவாநாளில் வரும் நிறைத்திங்கள் போன்ற முகத்தினையும் கவிழ்த்து வருத்துவாள்; அவள் இவை இப்படி செயலும் - அந்நீலகேசி இவ்வுறுப்புக்களை இவ்வாறு செய்தலும்; எமக்கு இவைஎனை என உரைத்தான் - அவற்றைக் கண்ட அம்முனிவரன் மடந்தாய்! எந்திறத்திலே இச் செயலெல்லாம் செய்தல் என்கொலோ? என்று வினவினன் என்க.

(வி - ம்.) துப்புத்துவர் அடுமிதழ் என இயைத்துத் துப்பாகிய பவளம் எனக் கொள்க. இதழ்துடிக்கும், சினைவினை முதன்மேனின்றது. செப்பு-சிமிழ். வனம் - அழகு. அரி - செவ்வரி, சிறைத்தல் - சிறங்கணித்து நோக்குதல்.

"குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்"

என்னும் திருக்குறளும் (௧0௯௫) நோக்குக. துடி - உடுக்கை. உவவு - பூரணை. உழற்றுதல் - கவிழ்தல் முதலிய செயல்களால் வருத்துதல். இவை-இச்செயல்கள். எமக்கு, என்றது துறவியாகிய எமக்கு என்பது படநின்றது. எனை - என்னை? இவ்வினை இவற்றால் யாதுபயன் என்றவாறாயிற்று. (௬௩)

௭௩. காதின கனகப் பைந்தோடுங்
கைவெள் வளைகளுங் கழலத்
தாதின வினமலர் பலவுந்
தலையன நிலமிசை யுதிரப்
போதன புணரரி நெடுங்கண்
புனல்வரப் பூந்துகிற் புடையா
வேதனை பெரிதுடைத் தடிகள்
விளிகவிப் பிறப்பென வுரைத்தாள்.

(இ - ள்.) *காதின கனகப் பைந்தோடும்-செவிகளிற் பெய்யப் பட்ட பொன்னாலியன்ற பசிய தோடும்; கைவெள் வளைகளுங் கழல-கையிலணிந்துள்ள சங்கவளையல்களும் கழலாநிற்பவும்; தலையன தாதின இனமலர் பலவும் நிலமிசை உதிர - தலையிற் சூடப்பட்டன வாகிய பூந்துகளையுடையனவாகிய மலரினங்கள் தாமே உதிரா நிற்பவும்; போது அன அரி புணர் நெடுங்கண் புனல்வர - செந்தாமரை மலர்போன்ற அழகுடையனவாய்ச் செவ்வரி படர்ந்த நெடிய விழிகளிலே நீர்த்துளிகள் தோன்றுதலாலே; பூந்துகில் புடையா-அத்துளிகளை அழகிய ஆடையா லொற்றிநின்று; அடிகள் - அடிகேள்!; இப்பிறப்பு வேதனை பெரிதுடைத்து - இப் பெண் பிறப்புத் துன்பம் பெரிதும் உடையது, ஆதலாலே; விளிக என உரைத்தாள் - இஃதொழிவதாக! என்று கூறினள் என்க.*

(வி - ம்.) *காதின, அ: ஆறுவதன் பன்மையுருபு. தலையன என்புழி யும் அது. கனகம் - பொன். தோடும் வளைகளும் கழலலும் மலருதிர் தலும் இரண்டாமவத்தைக்கண் மெய்ப்பாடு, என்னை? "கூழை விரித்தல் காதொன்று களைதல், ஊழணி தைவரல் உடைபெயர்த் துடுத்தலொடு, கெழீஇய நான்கே இரண்டெனமொழிப," வென்ப தோத்தாகலின் (தொல்-மெய்ப்-௧௪.) என்க. கண்புனல் வர என்றது புலம்பித்தோன்றல் என்னும் மெய்ப்பாடு. இப்பிறப்பு விளிக என்றது, கலங்கி மொழிதலும் கையறவுரைத்தலும் என்னு மெய்ப்பாடுகள்; இவை ஆறும் அவத்தையின் பாற்படுவன; என்னை?*

*"புறஞ்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்*
*கலங்கி மொழிதல் கையுற வுரைத்தல்*
*விளம்பிய நான்கே ஆறெனமொழிப" (தொல்-மெய்ப்-௧௮)*

*என்ப தோத்தாகலின் என்க. (௭௨ - ௭௩) இச்செய்யுள்கள் நீலகேசி காமக்குறிப்பும் மெய்ப்பாடுங் காட்டி முனிவனைக் கலக்க முயன்றமை உணர்த்தின. இனி நீலகேசி காமநோய் வருத்துதலாலே வேதனை யுடைத்து இப்பிறப்பு விளிக என்றாளாக, அம்முனிவர் பெருமான் அக் கருத்துணராதான் போலவும் அவள் பிறப்பே துன்பமுடைத்து எனக் கூறுவாளாகத் தான் உணர்ந்தான் போன்றும் இக் கூற்றையே ஏதுவாகக் கொண்டு மேலே அவட்கு அறமுரைக்கத் தொடங்குகின்ற வுபாயம் பெரிதும் நுணுக்கமுடைத்து. (௧௪)*

முனிச்சந்திர பட்டாரகன் நீலகேசிக்கு அறங்கூறத் தொடங்கல்

எச. பிறவியும் பிறவியுட் பிறக்கும்
பிணியுமப் பிணியினைத் துணிக்கு
மறவியின் மருந்துமம் மருந்தின்
மாட்சியுங் கேட்குறின் மடவா
யறவிய மனத்தினை யாகி
அலங்கழித் தொழிலொழிந் தடங்கி
உறவினை யோம்பினை யிருவென்
றுயர்தவ னுரைத்தலு மிருந்தாள்.

(இ - ள்.) மடவாய்-மடந்தையே! பிறவி வேதனையுடைத்து என்றல் வாய்மையே காண்!; பிறவியும்-நீ அதற்கஞ்சின் அப்பிறப்பி னியல்பும்; பிறவியுள் பிறக்கும் பிணியும் - அப்பிறப்பிலுண்டா கின்ற துன்பங்களினியல்பும்; அப்பிணியினைத் துணிக்கும்-அத்துன் பங்களைத் துவரத் துடைக்கின்ற; மறவி இல் மருந்தும் - மறத்தல் இல்லாது பேணற்குரிய மருந்தும்; அம்மருந்தின் மாட்சியும - அம்மருந்தினது பெருமையும்; கேட்குறின் - கேட்டற்குடன்படுவா யாயின்; அறவிய மனத்தினையாகி - நீ அறங்கிடந்த நன்னர் நெஞ்சமுடைமையாகி; அலங்கழித் தொழில் ஒழிந்து - பிறரைக் கலக்குமித் தீத்தொழில்களை யெல்லாம் விட்டொழித்து; அடங்கி- பொறிகளடங்கி; உறவினை - உயிரினங்களை; ஓம்பினை - அருளாலே பாதுகாப்பவளாய்; இரு என்று - இங்கமர்வாயாக வென்று; உயர் தவன் உரைத்தலும் - உயரிய தவத்தையுடைய அத்துறவோன் பணித்தருள; இருந்தாள்-அந்நீலகேசியும் அறங்கேட்டற் கொருப் பட்டிருப்பா ளாயினள் என்க.

(வி - ம்.) துணித்தல் - அறநீக்குதல். மறவி இல்லாமல்ஓம்புதற் குரிய மருந்து என்க. மாட்சி - பெருமை, கேட்குறின்: ஒருசொல். அறவிய மனம், அறங்கிடந்த நெஞ்சம். அலங்கழித் தொழில்-பிறரை அலைக்கும் தீத்தொழில். உறவி - உயிரினம். அறங்கேட்டற்கு ஒருப்பட்டிருந்தாள் என்க. (சு௯)

வேறு

நரக கதி

எரு. நாற்கதி யுள்ள நரகரை நாஞ்சொல்லின் மூன்றுவகைக்
காற்று வலயங்க ளேந்து நிரைக் கதிநிலந்தா
மேற்ற நிகோதத்தி னிம்ப ரிருளி னிருளிருண்மே
லாற்றப் புகையள ருர்மணற் கூர்ம்பர லாய்மணியே.

(இ - ள்.) நால்கதி உள்ள நரகரை நாம் சொல்லின் - நான்கு வகைப் பிறப்பினுள் ஒருவகையாகிய நரகர் பிறப்பைப்பற்றி மடந்தாய்! யாம் கூறுமிடத்தே; மூன்றுவகைக் காற்று வலயங்கள் ஏந்தும் - மூன்றுவகைப்பட்ட காற்று மண்டிலங்களாலேந்தப்பட்ட, நிரையக் கதி நிலந்தாம் - நரகர் பிறத்தற்குரிய நிலங்கள்தாம்; ஏற்ற நிகோதத்தின் இம்பர் - ஏனை நரகங்களைத் தன் மேலேற்றுள்ள நரகலோகத்திற்கு இப்பால் (மேலே); இருளினிருள் இருள் மேல் ஆற்றப் புகை அளறு ஆர்மணல் கூர்ம்பரல் ஆய்மணி - இருளினிருளும் அதன்மேல் இருளும் அதன்மேல் மிக்க புகையும் அதன்மேல் சேறும் அதன்மேல் பொருந்திய மணலும் அதன்மேல் கூர்த்த பரலும் அதன்மேல் மணியும் என்று கூறப்படுகின்ற என்க.

(வி - ம்.) நால்கதி - நரககதி, விலங்கு கதி, மக்கள் கதி, தேவகதி என்பன. மூன்றுவகைக் காற்று - கனோததி, கனவாதம், தநுவாதம், என்பன. வலயம்-மண்டிலம். நிரைய நிலம்—நரக நிலம். நிகோதம்—ஏழ்நரகத்திற்கும் கீழாம் நரக நிலம். நரகம் கீழிருந்து மேலே நிரலே இருளிருள், இருள், புகை, சேறு, மணல், பரல், மணி என ஏழாகும் என்க.

இவற்றை நிரலே வடமொழியில் தமத் தமப் பிரபை, தமப் பிரபை, தூமப் பிரபை, பங்கப் பிரபை, வாலுகாப் பிரபை, சர்கராப் பிரபை, ரத்னப் பிரபை என்று கூறுப. (கூகூ)

எசு. ஏழா யவைவிரிந் தெண்பத்து நான்குநூ றாயிரமாம்
போழா மவற்றப் புரையின் விகற்பமும் பொற்றொடியாய்
கீழா ரலிகண் முழுச்செவி கின்னர்க ளெண்ணிகந்த
வூழாம் பிறப்புமுவ் வாதமல் லாருரு வொப்பினரே.

(இ - ள்.) ஏழா அவை விரிந்து - ஏழ்வகையாக அந்நரகங்கள் விரிந்து; அவற்று அப் புரையின் விகற்பமும் - அவற்றின் கண் அமைந்த குழிகளின் வேறுபாடுகளும்; எண்பத்து நான்கு நூறாயிரம் ஆம் போழாம் - எண்பத்து நான்கு நூறாயிரம் என்னும் அளவுடைய பகுதிகளாகும்; பொன் தொடியாய் - பொன் வளையலணிந்த நங்கையே கேள்!; கீழார் - கீழா நரகத்தினர், உவ்வாத மல்லார் - தவக் கோட்பாடிலாதவரும், அலி - அலிகளும், கண் முழுச் செவிகின்னர் - கண்ணும் முழுச் செவியும் கருநிற முடையரும் ஆகி; எண் இகந்த ஊழ் ஆம பிறப்பும் உரு ஒப்பினர் - எண்ணிறந்த முறைமையினை உடைய பிறப்பும் உருவும் பொருந்தியவராவார்; என்க.

(வி - ம்.) போழ் - பிளவு. ஈண்டுப் பகுதி. புரை - குழி. கிழார் - ஏழா நரகத்தார். கின்னர். கருநிற முடையோர். உவ்வாத மல்லார் - தவக்கோட் பாடிலாதார். உவவு - தவம். (கூஎ)

விலங்கு கதி

எஎ. விலங்கின் வகையும் விரிவன யான்சொல்ல வேண்டுதியே
லலங்கலம் பூணு யிருவகை யாமவை யென்கொலென்னின்
நிலங்களி னிற்பவுஞ் செல்பவு மாமென நிற்பனதா
மிலம்பட லின்றியிவ் வையகத் தைந்தா யியன்றனவே.

(இ - ள்.) அலங்கல் அம் பூணும் - மலர்மாலையையும் அணி கலன்களையுமுடைய அரிவையே! விலங்கின் வகையும் யான் சொல்ல வேண்டுதியேல் - இனி விலங்குப் பிறப்பின் வகைகளையும் யான்கூற வேண்டும் என விரும்புவாயாயின் கூறுவல்; இருவகை - அவை தாம் இருவகைப் பிறப்புடையன; அவை என்கொல் என்னின் - அவை தாம் யாவை என்று வினவின்; நிலங்களில் நிற்பவும் செல்பவும் ஆம் - நிலங்களிலே நிலைத்து நிற்பனவும் இயங்குவனவும் ஆகும்; நிற்பனதாம் இலம்படல் இன்றி இவ்வையத்து ஐந்தா இயன்றன - அவற்றுள் நிற்பன குறைவின்றி இவ்வுலகத்தே ஐந்து வகைப்பட்டனவாகும்; என்க.

(வி - ம்.) விலங்கு என்பன நிற்பனவும் இயங்குவனவும் என இருவகைப்படும்; அவற்றுள் நிற்பன ஐவகைப்படும் என்றவாறு. அலங்கல் - மாலை. நிலம் குறிஞ்சி முதலாகப் பலவகைப் படலின் பன்மை கூறினர். இலம்படல் - நல்கூர்தல், குறைதல். மரம் புல் செடி கொடி புதல் என நிற்பன ஐவகைப்படும் என்க. எனவே ஓரறிவுயிர்கள் என்பதாயிற்று.

"புல்லு மரனும் ஓரறி வினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே" (மரபி - உஅ)

எனவரும் தொல்காப்பிய நூற்பாவையும் நினைக. (கஅ)

எஅ. இயங்கு வனவு மிருபொறி யையறி வெல்லையவாய்
மயங்கியிம் மத்திம நல்லுல கத்தன மற்றிவற்று
ணயம்படு நாவின மூக்கில நந்து முரண்முதலா
வயங்கியங் கோடிய வாயிரண்டாய அறிவினவே.

(இ-ள்.) இயங்குவனவும்-முற்கூறப்பட்ட இயங்குவனவாகிய விலங்குப் பிறப்புடையன தாமும்; இரு பொறி ஐ அறி எல்லையவாய் - மெய்யும் வாயுமாகிய இரண்டு பொறி யுணர்வுடையன முதலாக மேலும் இவற்றோடு மூக்கும் கண்ணும் செவியும் ஆகிய ஐந்து பொறியுணர்வுடையன ஈறாக; மயங்கி இம் மத்திம நல்லுலகத்தன - பொருந்தி இந்த மத்திமமாகிய நல்ல நில வுலகத்தின்கண் வாழ்வனவாம்; மற்று இவற்றுள் -இவையிற்றுள் வைத்து; நந்து முரள் முதலா நயம்படு நாவின மூக்கில-நந்தும் முரளும் இவற்றின் இனமும் நன்மையுண்டாகின்ற நாவுடையன மூக்கறிவில்லன

ஆதலால்; வயங்கு - விளங்கும்; இயங்கு ஓடியவாய் இரண்டு ஆய அறிவின - இயங்கி ஓடுவனவாய் இரண்டறிவுடையன எனப்படும் என்க.

(வி - ம்.) இருபொறி - மெய்யும் நாவுமாகிய இரு கருவிகள். ஐயறிவு-இவற்றோடு மூக்கும் கண்ணும் செவியும் சேர்ந்து ஐயறிவுடையன. எனவே இயங்குவன ஈரறிவுயிர் மூவறிவுயிர் நாலறிவுயிர் ஐயறிவுயிர் என நான்கு வகைப்படும் என்றாராயிற்று. மேலுலகம் கீழுலகம் மத்திம வுலகம் என்னும் மரபு பற்றி நிலவுலகினை மத்திம நல்லுலகம் என்றார். உயிர்கள் பிறந்து முன்னேறுதற்கிடனுதல் பற்றி இதனை நல்லுலகம் என்றார்,

''நந்து முரளும் ஈரறி வினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே'' (தொல். மரபி. உக)

என வரும் நூற்பாவும் நினைக. (கூக)

இரண்டறிவுயிர், மூன்றறிவுயிர், நான்கறிவுயிர்கள்

எகூ. உண்ணி முகுட்டை எறும்பெறி தேண்முத லாவுடைய
வெண்ணில் பல்கோடிய வாயவ் விரண்டோடு மூக்குடைய
கண்ணியன் மூவறி வாமவை பெற்றுற் கருணமிலா
நண்ணிய வண்டோடு தேனீ யனையவு நாலறிவே.

(இ - ள்.) அவ்விரண்டோடு மூக்குடைய - மெய்யும் நாவுமாகிய இரண்டு பொறியுணர்வுகளோடே மூக்குணர்வு முடையன: உண்ணி முகுட்டை எறும்பு எறிதேள் முதலாவுடைய - உண்ணியும் மூடும் எறும்பும் கொட்டுகின்ற தேளும் முதலாகவுள்ளன; எண் இல் பல் கோடிய வாய் - எண்ணற்ற பற்பல கோடிக்கணக்கினவாக; மூவறிவு ஆம் அவை கண் இயல் பெற்று - மூன்றறிவுகளாகிய அவையிற்றோடு கண்ணால் நிகழ்கின்ற அறிவையும் பெற்று; கருணம் இலா-செவி மட்டும் இல்லாதனவாய்; நண்ணிய- தோன்றிய; வண்டொடு தேனீ அனையவும் நாலறிவு - வண்டும் தேனீயும் இவை போல்வனவும் நான்கு அறிவுடையனவாம் என்க.

(வி - ம்.) முகுட்டை - மூடு; மூட்டுப்பூச்சி. எறிதேள் : வினைத் தொகை. ஆய் - ஆக. கண்ணியல் - கண்ணுணியலுமறிவு. கருணம் - செவி. இலா : பலவறிசொல். ஈண்டு, ஐந்தறிவுகளில் எஞ்சிய செவி மட்டும் இல்லாதன என்றவாறு,

''சிதலு மெறும்பு மூவறி வினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே'' (தொல்-மரபி. கூ0)

எனவும்,

''நண்டுந் தும்பியு நான்கறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே'' (ஷை - கூக)

எனவும் வரும் நூற்பாக்களை நினைக. (எ0)

ஐயறிவுயிர்கள்

௭0. இறப்பப்பல் காலின வெட்டி னிரண்டிரண் டேயிழிந்த
பறப்ப நடப்ப தவழ்வன வூர்வன பற்பலவாச்
சிறப்புடை யிந்திய மைந்தென வந்த செவியுடைய
மறப்பில் கடலோடு தீவினு மல்கிய பல்விலங்கே.

(இ - ள்.) சிறப்புடை இந்தியம் ஐந்து என வந்த - முற்கூறப் பட்ட நான்கு பொறிகளையுடையவற்றினும் சிறப்புடைய ஐந்து பொறிகளையுடையன எனச் சொல்லும்படி பிறந்த; செவியுடைய - செவியுணர்வு முடையன; இறப்பப் பல்காலின - மிகப்பலவாகிய கால்களையுடையனவும்; எட்டின் இரண்டு இரண்டு இழிந்தன - எட்டுக் கால்களையுடையனவும் ஆறு கால்களையுடையனவும் நான்குகால்களையுடையனவும் இரண்டுகால்களையுடையனவும் ஆகி; பறப்ப நடப்ப தவழ்வன ஊர்வன பல்பலவா - பறப்பனவும் நடப் பனவும் தவழ்வனவும் ஊர்வனவுமாய்ப் பல்வேறு வகையனவாய்; மறப்பு இல் கடலொடு தீவினும் மல்கிய புல் விலங்கு - மறத்த லின்றி முழங்கும் கடலினும் தீவுகளினும் தோன்றிப் பெருகிய பல் வேறு வகைப்பட்ட விலங்குகளுமாம்; என்க.

(வி - ம்.) இறப்ப - மிக. எட்டின் இரண்டிரண்டே இழிந்த என்றமையால் எட்டும் ஆறும் நான்கும் இரண்டும் ஆகிய கால்களை யுடையன என்பது பெற்றும். இறப்பப் பல்காலுடையன வந்தவழிக் காண்க. எட்டுக் காலுடையன வருடை என்றும் ஆறுகாலுடையன கழிப்பாம்பு என்றும் கூறுப. பறப்ப, நடப்ப என்பன பலவறி சொற் கள். அறிவுக் கருவிகளில் செவியே மிகவும் சிறந்தமை யுணர்க. இந்தியம் - பொறி. மறப்பில் முழக்கமுடைய கடலென்க. கடலினுந் தீவினுமெனவே, நீரினும் நிலத்தினும் என்றாயிற்று. மல்குதல் - பெருகுதல். (எக)

௭க. வெப்பமுந் தட்பமு மிக்கு விரவிய யோனியவாய்ச்
செப்புவ செப்பில செய்கைக ளாற்றம செய்வினையைத்
துப்பன போர்த்தும் பொடித்தும் பொரித்து முன்றோன்றுவன
வொப்பவு மோப்பிலுடம்புடம் பேகொண் டுழல்வனவும்.

(இ - ள்.) முன் போர்த்தும் பொடித்தும் பொரித்தும் தோன்றுவன - உருவாகும் பொழுது கருப்பையாற் போர்க்கப் பட்டும் விதையினின்றும் முளைத்தும் முட்டை பொரிக்கப்பட்டும் பிறப்பனவாகிய இவ்விலங்குகள்; வெப்பமும் தட்பமும் மிக்குவிரவிய யோனியவாய் - வெப்ப மிக்கனவும் தட்ப மிக்கனவும் இரண்டும் விரவினவுமாகிய பிறப்புக்களை யுடையனவாய்; செப்புவ செப்பில - ஒலிப்பனவும் ஒலியாதனவுமாய்; ஒப்பவும் உடம்பு ஒப்புஇல் உடம்பு - ஒப்பனவாகிய வுடம்பும் ஒவ்வாவுடம்பும் கொண்டு; உழல்

வனவும் - மேற்கொண்டு பிறப்பின்கண் உழல்வனவாய்; செய்கைகளால் - தாம் இப்பொழுது செய்யும்செயல்கள் வாயிலாய்; தமசெய் வினையைத் துப்பன - தத்தமுடைய பழவினையை நுகர்வனவாம்; என்க.

(வி - ம்.) வெப்பம் மிக்கும் தட்பமிக்கும் இரண்டும் விரவியும் என்க. யோனி - பிறப்பு. செப்புவ-ஒலிப்பன. செப்பில - ஒலியாதன. துப்பன - நுகர்வன. போர்த்தல் - கருப்பையால் போர்க்கப்படுதல். பொடித்தல் - முளைத்தல். பொரித்தல் - முட்டை பொரிக்கப்படுதல், கருப்பை, நிலம், முட்டை ஆகிய மூவகை உயிர்த்தோற்றமும் இங்குக் கூறப்பட்டன. போர்த்தல், பொடித்தல், பொறித்தல் முறையே அவற்றை யுணர்த்தின. உடம்பு - ஒப்பவும் உடம்பு ஒப்பில்லாதனவும் என்றவாறு. (எ௨)

மக்கள் கதி

அ௨. நல்லவர் தீயவர் திப்பிய
ரோப்பில் குமானுயரோ
டல்லவ ருள்ளுறுத் தாடவ
ரைவரு ளாதியினார்
சோல்லுக தன்மையேன் பாயேனிற்
சோல்லுவன் பல்வகையாற்
புல்லிய போகப் பேருநிலந்
தன்னைப் போருந்தினரே.

(இ - ள்.) நல்லவர் தீயவர் திப்பியர் ஒப்பில் குமானுயரோடு-நல்லவரும் தியவரும் திப்பியரும் ஒப்பில்லாத குமானிடரும்; அல்லவர் உள்ளுறுத்து - ஏனைய மனிதரும் உட்பட; ஆடவர் ஐவருளர் - மாந்தர் ஐந்துவகை உளராவார், ஆதியினார் தன்மை சொல்லுக என்பாய் எனின் - இவருள் வைத்து முதற்கண் கூறிய நல்லவர் என்னும் மக்களியல்பினைக் கூறுக என்பாயாயின்; சொல்லுவன் - கூறுவேன் கேட்பாயாக; பல் வகையால் புல்லிய போகப் பெருநிலம் தன்னைப் பொருந்தினர் - இவர் பல்வேறுவகைப் பட்டனவாகப் பொருந்திய போகநிலத்திலே பிறந்து வாழ்பவராவார்; என்க.

(வி - ம்.) நல்லவர் முதலிய ஐவகை மக்களையும் முரலே சுமனுடர் துர்மனுடர் திவ்யமனுடர் குமனுடர் பிரகிருதி மனுடர் என்றுங் கூறுப. அல்லவர் என்றது பிரகிருதி மனுடரை. ஆடவர் என்றது பால் குறியாமல் மக்கள் என்னும் பொதுப் பொருள் குறித்து நின்றது. ஆதியினார் - முற்கூறப் பட்டவர்; நல்லவர். இவரைப் போக மனிதர் என்றுங் கூறுப. போகநிலம் - சம்புத் தீவும் தாதகிடண்டத் தீவும் புட்கரத் தீவிற் பாதியுமாம். இதனை "மக்கள் வதியும் இரண்டரைத் தீவினுள்" என வரும் சூளாமணியிலுங் காண்க. (துறவு-கச௨) (எ௩)

அரு. தீமா னுயர்திறந் தேற்றிடிற் றீவின் சிறுநிலத்தார்
கோமான் முதலார் குணங்களிற் குன்றிய குற்றத்தராய்த்
தாமாம் பெரிய தவந்தலை நிற்பினுந் தன்மைபெறு
ராமான் மடப்பிணை யன்னமென் னோக்கி யவர்திறமே.

(இ - ள்.) தீமானுயர் திறம் செப்பிடின் - தீயவர் என்பாருடைய தன்மையைக் கூறுங்கால்; தீவின் சிறு நிலத்தார் - கடலிடையே அமைந்த சிறு சிறு தீவினுள் பிறந்து வாழ்பவராவார்; கோமான் முதலார்-இவருள் அரசன் முதலியோரும்; குணங்களில் குன்றிய குற்றத்தராய் - மக்கட் பண்புகளிலே மிகவும் குறைந்தமையாலே குற்றம் நிரம்பியவராய்; தாம் ஆம் பெருந்தவம் தலை நிற்பினும் - தாங்கள் ஆக்கமடைதற்குரிய தவவொழுக்க மேற்கொண்டவிடத்தும்; தன்மை பெறுர் - அதன் பயனை எய்த மாட்டார்காண்; ஆமான் மடப்பிணை அன்ன மெல் நோக்கி - ஆமாவும் மானின் இளம் பிணையும் போன்ற பார்வையை யுடையோய்; அவர் திறம் - அவரியல்பு இங்ஙனமாம்; என்க.

(வி - ம்.) தீமானுயர் என்றது தீயவர் என்று கூறப்பட்டவரை இவர் சேகர் என்றும் கூறப்படுவர். இதனை, "பத்து வகைய பரதவி ரேவதத், தத்தகு கால விழிவி னகத்தவர், சித்தந் தெளிவிலர் சீல மடைவிலர், செத்த வறிவினர் சேக ரவரே" என வரும் சூளாமணியானு முணர்க (துறவு. கஙஅ) கோமான் - அரசன். தன்மை - தவப் பயன். கோமான் முதலாரும் எனல் வேண்டிய சிறப்பும்மை தொக்கது. ஆமான் - காட்டுப்பசு. பிணை - பெண். (எ௪)

அச. திப்பிய ரென்னப் படுபவர் தீர்த்தந் திறப்பவரு
மப்பிய புண்ணியத் தாழிய ராழிய ரையவரும்
வெப்பிய வான்செலவ் விஞ்சையரெஞ்சலில்வெள்ளியரும்
பப்பிய ரேயவர் பான்மை வினவினும் பைந்தொடியே.

(இ - ள்.) பைந்தொடியே!-பசிய வளையணிந்த மடந்தையே; திப்பியர் என்னப் படுபவர் பான்மை வினவினும்-எம்மால் திப்பியர் என்று கூறப்பட்ட மக்களியல்பினை நீ வினவினும் (கூறுவாம் கேள்) தீர்த்தந் திறப்பவரும் - பரமாகமங்களைச் செவியறிவுறுத்துபவரும், அப்பிய புண்ணியத்து ஆழியர் - செறிந்த புண்ணியங்களையுடைய பரதன் முதலிய சக்கரவர்த்திகளும்; அரையவரும் - அவரன்ன செங்கோல் மன்னரும்; வெப்பிய-வெப்பமுடைய; வான் செல் விஞ்சையரும் - வானத்தே இயங்கும் கந்தருவர்களும்; எஞ்சலில் வெள்ளியரும் - குறைதலில்லாத வெள்ளி மலையில் வாழ்பவரும் ஆகிய; பப்பியரே அவர் - பவ்வியரே அத்திப்பியராவார்; என்க.

(வி - ம்.) தீர்த்தந் திறப்பவர்-பரமாகமம் செவியறிவுறுப்போர். இதனை "தெய்வ மனிதரைத் தெளிவுறின்," துறவு (. கஅ0) "தீர்த்தம்

திறக்கும் திருமறு மார்பரும்'' என வரும் சூளாமணியானும் (துறவு-கஅக) உணர்க ஆழியர் - சக்கரவர்த்திகள்; அவர், பரதன் சகரன் மகவான் சனக்குமாரன் சாந்திநாதன் குந்துநாதன் அரநாதன் சுபௌமன் பதுமன் அரிசேனன் செயசேனன் பிரமதத்தன் என்னும் பன்னிருவருமாவார். அரையர் அரையவர் என விரிந்து நின்றது. அவர், திவிட்டன் முதலிய வாசுதேவர் ஒன்பதின்மரும், விசயன் முதலிய பலதேவர் ஒன்பதின்மரும் என்க. என்னை ?

''தெய்வ மனித ரவரைத் தெளிவுறின்
ஐய விசயனு மாழி வலவனும்
எய்த விவர்முத லீரொன் பதின்மரிவ்
வைய மருள வருநரு முளரே'' (துறவு - கஅ0)

எனச் சூளாமணி கூறுதலுங் காண்க. வெப்பிய - வெப்புடைய. விஞ்சையர் - கந்தருவர். வெள்ளியர் - வெள்ளி மலையினர். பப்பியர் - பவ்வியர், (எஅ)

அரு. கோலமி னோன்றற் குமானுயர் தம்மையுங் கூறுவன்கேள்
வாலமுங் கோடும் வளைபல்லும் பெற்ற வடிவினராய்ச்
சீலமுங் காட்சியுந் தீண்டல ரந்தரத் தீவிலுள்ளார்
நீலமும் வேலுங் கயலு நிகர்த்த நெடுங்கண்ணினாய்.

(இ - ள்) நீலமும் வேலும் கயலும் நிகர்த்த நெடு கண்ணினாய் - குவளை மலரையும் வேற்படையினையும் கயல் மீனையும் ஒத்த நெடிய கண்களையுடைய காரிகையே! இனி; கோலம் இல் நோன்றல் குமானுயர் தம்மையும் - அழகில்லாத உடல் வலிமையையுடைய குமானுயர் என்னும் மக்களியல்பும்; கூறுவன் கேள் - கூறுவேன் கேட்பாயாக! அவர்தாம்; வாலமும் கோடும் வளைபல்லும் பெற்ற வடிவினராய் - வாலும் கொம்பும் வளைந்த பற்களும் உடைய உருவமுடையவராய்; காட்சியும் சீலமும் தீண்டலராய் - அறிவும் ஒழுக்கமும் அடையப் பெறுதவராய்; அந்தரத் தீவில் உள்ளார் - கடலிடையே அமைந்துள்ள தீவுகளிலே வாழ்பவராவார் காண்; என்க.

(வி - ம்.) கோலம் - அழகு. நோன்றல் - வலிமை. வாலம் - வால். காட்சி - அறிவு. சீலம் - ஒழுக்கம். அந்தரம் - இடையில். நீலம் - கருங்குவளைமலர். கயல் - ஒரு மீன். குமானுயரை, மிலேச்சர் என்று சூளாமணி கூறும். ''தீவினுள் வாழும் குமானுயர்...'' வாலும் நெடியர் வளைந்த எயிற்றினா ''மிலேச்சர் எனப் பெயர் ஆவர்'' என்பன சூளாமணியின் கூற்று (கஉச - கு). (எகூ

அசு. மானுய ரென்னப் படுபவர் தாமா விதையமென்னுங்
கானுயர் சோலைக் கரும நிலத்தார் கருவினை போய்த்
தானுய ரின்பந் தவத்தாற் றலைப்படுந் தன்மையினார்
வானுயர் தோன்றல் வளர்பிறை யேசிய வாணுதலாய்.

(இ - ள்.) வான் உயர் தோன்றல் வளர் பிறை ஏசிய வாள் நுதலாய் - வானத்தின்கண் உயர்ந்து தோன்றுதலுடைய வளர் பிறையைப் பழித்த ஒளியுடைய நுதலை யுடையோய்!; மானுயர் எனப்படுபவர் தாம் - மனிதர் (யான் அல்லவர் என்று முற்கூறிய பிரகிருதி மக்கள்) என்று கூறப்பட்டவர்; கான் உயர் சோலைக் கரும நிலத்தார் - காடும் உயரிய பொழில்களுமுடைய கரும பூமி யின்கட் பிறந்து வாழ்பவராவர்; தவத்தால் கருவினை போய்த் தான் உயர் இன்பம் தலைப்படும் தன்மையினுர்-இவர் தாம் தாமேற் கொண்ட தவவொழுக்கத்தாலே தீவினை பலவும் கழியப்பட்டு உயரிய வீட்டின்பம் எய்தும் தகுதி யுடையர் காண்! என்க.

(வி - ம்.) கருமநிலத்தார் என்பது, கரும பூமியிற் பிறந்தவர் என்ப தனையும் கருவினைபோய்......தன்மையினுர் என்பது தீவினை நீங்கிப் போக பூமியிற் போய்ப் பிறக்கத் தவஞ்செய்யும் தன்மையுடையார் என்பதனையும் உணர்த்தும். தாம், தான் அசைகள்; கான்-மணமுமாம். உயரின்பம்-வீட்டின்பம். கருவினை-தீவினை. பிறப்பிற்குக் காரணமான வினை எனினுமாம். ஏசிய – பழித்த. (எஎ)

தேவகதி

பவணர்

அஎ. தூமாண் பவணர் வியந்தரர்
சோதிடர் கற்பருப்பால்
வேமானியரென வைவரித்
தேவர் விரித்துரைப்பிற்
றீமாண்குமரரோ டீரைவர்
முன்னவ ரன்னவர்பின்
பூமாண் புனைகுழ லாய்க்கினிச்
சொல்லற் பொல்லா துகொல்லாம்.

(இ - ள்.) தூ மாண் பவணர் வியந்தரர் சோதிடர் கற்பர் உப்பால் வேமானியர் என - தூய மாண்பினையுடைய பவணரும் வியந்தரரும் சோதிடரும் கற்பரும் அவர்க்கும் அப்பாலுள்ள வைமானிகரும் என்று; இத்தேவர் விரித்துரைப்பின் ஐவர் - இந்தத் தேவகதியினரை விரித்துக் கூறுங்கால் ஐந்து வகைப் படுவர்; முன்னவர் - இவருள் முற்கூறப்பட்ட பவணர்கள்; தீ மாண் குமரரோடு ஈர் ஐவர் - தீயால் மாட்சிமைப்பட்ட அக்கினி குமாரரை உள்ளிட்ட பத்து வகையினர் ஆவர்; அன்னவர்பின் - அவர்க்குப்பின் கூறப்பட்ட வியந்தர தேவரைப்பற்றி; பூமாண் புனைகுழலாய்க்கு இனி சொல்லல் பொல்லாது ஆம் - மலர் மாண் புற்ற ஒப்பனையுடைய கூந்தலையுடைய உனக்குக் கூறுதல் நன் றன்று; என்றுர் என்க

(வி – ம்.) தூ - தூய்மை. மாண்-மாட்சிமையுறும். கற்பர்-கற்ப லோகத்தினர். உப்பால்-அப்பால். வேமானியர் - வைமானிகர். தீமாண் குமரர் - அக்கினி குமாரர். முன்னவர் - முற்கூறப்பட்ட. பவண தேவர், அக்கினி குமாரர், வாத குமாரர், தனித குமாரர், உததி குமாரர், தீப குமாரர், திக் குமாரர், அசுர குமாரர், நாக குமாரர், வித்யு குமாரர், சுவண குமாரர் எனப் பத்து வகைப்படுவர் என்றவாறு. அன்னவர்-அப்பவணர். பவணர்க்குப்பின் கூறப்பட்ட வியந்தரரைப் பற்றிக் கூறின் நீலகேசியும் வியந்தரதேவதை யாகலின் அவளுடைய கள்ளம் வெளிப்பட்டு அவள் வருந்துவள் என்பது பற்றிப் பின் சொல்லல் பொல்லாது என்றார். (எஅ)

வியந்தரதேவர்

அஅ. இன்குர லார்முத லாநும ரீறு மிவருமெண்மர்
பொன்பிதிர்ந் தன்ன பொறிசுணங் காகத்துப் பூண்முலையா
யென்றலு மீரிழு தாரழ லுற்றுங் கினைபவளை
நின்றிறம் பின்னறி வாமறங் கேளென நேர்ந்தனளே.

(இ - ள்.) பொன் பிதிர்ந்து அன்ன பொறி சுணங்கு ஆகத்துப் பூண் முலையாய்-பொன் சிதறினாற் போன்ற புள்ளிகளையுடைய தேமல் பொருந்திய மார்பினையும் அணிகலனணிந்த முலைகளையுமுடைய நங்கையே!; இவரும் இன்குரலார் முதலா-இந்த வியந்தர தேவர் தாமும் இனிய இசையையுடைய கின்னரர் முதலாக; நுமர் ஈறு - நும்மனோராகிய பேய்கள் இறுதியாக; எண்மர் - எட்டு வகைப்படுவர்; என்றலும் - என்று கூறியதும்; ஈர் இழுது ஆர் அழல் உற்றுங்கு இனைபவளை - தன் கள்ளவேடம் வெளிப்பட்டமை யுணர்ந்து குளிர்ந்த வெண்ணெய் மிக்க தீயிடைப் பொருந்தினாற் போன்று நெஞ்சுருகி வருந்தாநின்ற அந் நீலகேசியை; நின் திறம் பின் அறிவாம் - நங்கையே வருந்தற்க! நின்னியல்பினைப் பின்னர் அறிவாம்; அறம்கேள் என நேர்ந்தனள் - இப்பொழுது யாம் கூறும் நல்லறத்தை விழிப்புடன் கேட்கக் கடவை என்று பணிப்ப அவளும் உடன்பட்டுக் கேட்க வமைந்தாள்; என்க.

(வி - ம்.) இன் குரலார் - கின்னரர், நுமர் என்றது, பேய்களாகிய நும்மவர் என்றவாறு. எனவே நீயும் பேய் என்பதனை யாம் முன்னரே அறிந்துள்ளேம் என அவளுக்கு முனிவர் குறிப்பாக வுணர்த்தினருமாயிற்று. பொன்பிதிர்ந்தன்ன பொறிசுணங்கு ஆகத்துப் பூண்முலையாய்! என்றது இகழ்ச்சிக் குறிப்பு. இஃது ஏனைய முற்போந்த இன்னோரன்னவைகட்குமாம்.

தன் கள்ளத்தை இத்தவமுனிவன் கண்டனன் என்றுணர்ந்து இனைபவள் என்பது கருத்து. இழுது - நெய்.

வியந்தரதேவர்-கின்னரர், கிம்புருடர், கருடர், கந்தருவர், இயக்கர், இராக்கதர், பூதர், பிசாசர் என எண் வகைப்படுவர் என்றவாறு. (எகூ)

## சோதிட தேவர்

௬௯. அந்தர வாழ்க்கையர் சோதிடர் தாங்களு மைவகையர்
சந்திர சூரியர் கோளவர் நாளவ ரல்லவராய்
மந்தர மாமலை தன்னை வலமுறை சூழ்பவருஞ்
சிந்துபு நின்றுசெல் லாதே விளங்குந் திறலவரும்.

(இ - ள்.) *அந்தர வாழ்க்கையர் சோதிடர் தாங்களும்* - விசும்பிடையே வாழும் வாழ்க்கையையுடையராகிய சோதிடதேவர் தாமும்; *சந்திர சூரியர் கோளவர் நாளவர் அல்லவராய்* - திங்களும் ஞாயிறும் ஏனைக் கோள்களும் நாண்மீனும் அல்லாத விண்மீனும் ஆகி; *ஐவகையர்* - ஐந்துவகைப்படுவர் காண்; *மந்தரமாமலை தன்னைவலமுறை சூழ்பவரும்* - இனி இவர் தாமே, மந்தரமென்னும் பெரிய மலையை வலமுறையாகச் சுற்றித் திரிபவரும், *செல்லாதே நின்று சிந்துபு விளங்குந் திறலவரும்*-அங்ஙனம் சுற்றித் திரியாமல் தத்தமிடத்தே நிலைத்து நின்று ஒளிசிந்தி விளங்கும் ஆற்றலுடையவரும் என இருவகைப்படுவர்; என்க.

(வி - ம்.) அந்தரம் – விசும்பு. கோள் ஈண்டு ஞாயிறும் திங்களுமல்லாத செவ்வாய் முதலிய ஏழும் என்க. நாள்–நாண்மீன். அவை, அசுவினி முதலியன. அல்லவர் என்றது, ஏனைய விண்மீன்களை. சிந்துபு - சிந்தி. ஒளிசிந்தி என்றவாறு. இருவகையர் என்பது எச்சம். வாழ் + கையர் = வாட்கையர் எனத் திரிந்ததாகக் கொள்க.

வாட்கையர் என்றும் பாடம். (௮௦)

## கற்ப தேவர்

௭௦. ஆரண னச்சுதன் சோதம னந்தமு மாதியுமாய்ப்
பாரணை நல்ல பதினறு கற்பத் தவரவர்மே [வோர்
லோரிணை ராயமும் மூன்றேன்ப தைந்துக ளுள்ளுறை
வீரியர் வைமா னிகரெனக் கோண்ணீ விளங்கிழையாய்.

(இ - ள்.) *சோதமன் ஆதியும்* - சௌதர்மகற்பம் முதலாக; *ஆரணன் அச்சுதன் அந்தமும் ஆய்* - ஆரணகற்பமும் அச்சுத கற்பமும் ஈறுக; *பாரணை நல்ல பதினறு கற்பத்தவர்* - பாரித்திருக்கும் நல்ல பதினாறு கற்பவுலகங்களில் வாழ்பவரும்; *மேல்* - அவ்வுலகங்கட்கு மேலே; *ஓர் இணராய மும்மூன்று ஒன்பதும்* - மூன்று ஒரு கொத்தாய் மூன்று கொத்துக்களாகிய ஒன்பதும், ஆகிய நவக்கிரைவேயகங்களினும்; *ஒன்பது*-நவாணுதிசைகளினும்; *ஐந்துகள் உள்*-பஞ்சாநுத்தரங்களினும் வாழ்பவரும் ஆகிய; *வீரியர்*-வீரமுடைய தேவர்கள்; *வைமானிகர் என நீ கொள்*-வைமானிகர் என்று நீ உணர்ந்து கொள்; என்க.

(வி - ம்.) சோதமன் – சோமதனுலகு. அஃதாவது - பதினாறு கற்பலோகங்களுள் முதலாவது; சோதமன் – சௌதருமேந்திரன். பாரணை-பாரித்தல்; பரவியிருத்தல். சோதமன் ஆதியா ஆரணன் அச்சுதன் அந்தமுமாய் என மாறுக. எதிர்நிரனிறை. ஆரணன் - ஆரணகற்பவுலகம். அச்சுதன் - அச்சுத கற்பவுலகம் என்க. அரசன் பெயர் நாட்டிற்கு ஆகுபெயராய் வந்தன. ஓர் இணார் மும்மூன்று என்றது, மூன்று மூன்றுகக் கூடிய மூன்றுகளாயியன்ற ஒன்பது என்றவாறு. இவற்றை நவக்கிரை வேயகம் என்பர். இவை அகமிந்திர வுலகின் உட்பகுதிகள். ஒன்பது - நவாணுதிசை. இவையும் அகமிந்திரலோகத்தின் பகுதிகள். ஐந்து என்றது பஞ்சாநுத்தரத்தை. அவை - விசயை, வைசயந்தை, சயந்தை, அபராசிதை, சருவார்த்தசித்தி என்பன. இவை நவாநுதிசை மேலுள்ளன என்ப.

இனி இஃதென் சொல்லியவாறோவெனின் :—

நமக்குமேலுள்ள வானின்கண் சௌதருமேந்திர கற்பம் முதலாக அச்சுத கற்பமீறாகவுள்ளபதினாறு கற்பங்களிலும் அவற்றின்மேலுள்ள எட்டிமத்திரயம், மத்திய மத்திரயம் உபரிமத்திரயம் என்ற மூன்று பிரிவினையுடைய நவக்கிரைவே யகங்களினும், அவற்றின்மேலுள்ள நவாணுதிசைகளினும் அவற்றின் மேலுள்ள பஞ்சாநுத்தரங்களினும் வாழும் தேவர்கள் வைமானிகதேவர் எனப்படுவார் என்றவாறு. (அக)

(வேறு)

நரகர் துயரம்

கக, இப்ப டிப்பி றவியு
ளோப்பி றீய நாரகர்
துப்ப ரிய மாதுயர்
செப்பு வாஞ் சிறிதினி.

(இ - ள்.) இப்படிப் பிறவியுள் - இத்தகைய பிறவியுள் எஞ்சிய, ஒப்பு இல் தீய நாரகர்-ஒப்பற்ற தீவினையையுடைய நரகப் பிறப்புடையோர் படுகின்ற; துப்பு அரிய மாதுயர் – நுகர்தற்கரிய வாகிய பெரிய துன்பங்களி னியல்பை; இனி சிறிது செப்புவாம் - இனிச் சிறிது கூறுவேம் கேட்பாயாக; என்க.

(வி – ம்.) நாரகர் - நரகராய்ப் பிறந்தவர். துப்பு - நுகர்ச்சி. (அஉ)

கஉ. ஈரி ருள்ளி ஞர்கடம்
பேர ளவவைஞ் ஞூறவி
லோரு மோச னையவை
யூரும் வேத னையரே.

(இ - ள்.) ஈரிருள் உள்ளிஞர்கள் தம் - கீழ்நரகமாகிய இருளினிருள் என்னுமுலகத்தின்கட் பிறந்துள்ள நரகர் வாழுமிடத்தின் பேரளவு ஐஞ்ஞூறு யோசனை வில்-உயரெல்லை ஐந்நூறு யோசனை

ஐந்நூறு வில்லளவாம்; அவை ஊரும் வேதனையவர் - அந்நரகர் அத்துணை யுயரமும் தாங்கமாட்டாராய் எழுந்து விழத்தகுந்த துன்பத்தை உடையர்காண்; என்க.

(வி - ம்.) சரிரு - இருளினிருளென்னும் கீழ் நரகம். பேரளவு - மிக்க அளவு. ஐஞ்ஞூறு-யோஜி-ஐந்நூறுயோசனை ஐந்நூறுவில்லுயரம் என்க. வில்-ஓரளவு. ஊர்தல்-எழுந்துவிழுதல். எழுந்து விழுதற்குக் காரணமான வேதனையுடையோர் என்பது கருத்து. (அங)

கூங. காள மான மெய்கடாம்
வாள வாய்க ளாற்பல
கீள வாப வாயினும்
மீளு மேனி நீரினே.

(இ - ள்.) காளம் ஆன மெய்கள் தாம் - அந்நரகருடைய கரிய நிறமுடைய உடம்புகள் தாமும்; வாள வாய்களால் பலகீள ஆப ஆயினும் - ஈர்வாள்களின் வாய்களாலே அரியப்பட்டுப் பற்பல பிளவுகள் ஆக்கப்படும் அங்ஙனம் ஆயவிடத்தும்; மேனி நீரின் மீளும்-அவ்வுடம்புகள் பிளக்கப்பட்ட நீர் மீண்டும் ஒன்றுதல் போல் மீண்டும் சேர்ந்து கொள்ளுமியல்பினகாண்; என்க.

(வி - ம்.) எனவே மீண்டும் மீண்டும் அரியப்பட்டுத் துன்புறுவர் என்றாராயிற்று. காளம்-கரியநிறம். வாள-அகரம் ஆறுவதன் பன்மையுருபு. வாள்-ஈர்வாள். கிள - பிளவுகளுடையன. ஆப: பலவறிசொல். மேனி - உடம்பு. நீரின் - நீர்போல. ஏகாரம் ஈற்றசை. (அச)

கூச. மல்ல வர்ம றஞ்செய்துங்
கொல்ல வாவ வல்லமெய்
பல்ல வாவு ளுள்ளன
சொல்ல வாவ வல்லவே.

(இ - ள்.) மெய் - அந்நரகருடம்புகள்; பல்ல ஆவும் - பல பிளவுகளாய வழியும்; உள்ளன - உயிருடையனவாம்; மல்லவர் - மறலியின் மறவர்கள்; மறஞ் செய்து - கொடுமை பல செய்தும்; கொல்ல ஆவ வல்ல - கொன்றொழிக்கக் கூடியன வல்ல; சொல்ல ஆவ அல்ல - இக்காரணத்தால் அவர் மீண்டும் மீண்டும் எய்தும் துயரங்கள் நம்மனோராற் சொல்லுமியல்பின அல்ல; என்க.

(வி - ம்.) மல்லவர் - வலிமிக்க மறவர். இவர் மறலியின் மறவர். ஆவ: பலவறி சொல். ஆவும்-ஆகவும். உள்ளன - உயிருள்ளன. (அரு)

கூரு. பண்டை வேரி யர்கடாங்
கண்டு கண்க னல்களாய்
மண்டி மாம றஞ்செய்ப
வெண்ட வப்ப லவுமே.

(இ - ள்.) பண்டை வேரியர்கள் தாம்-இம்மறலிமறவர்களே யன்றி இந்நரகருடைய பழைய பகைவரும் அந்நரகத்தே வீழ்ந்து கிடப்பவர்; கண்டு கண் கனல்கள் ஆய் மண்டி - இவர்களைக் கண்டு சினந்து தங்கண்கள் தீயெனலாகி இவர்மேல் வீழ்ந்து; எண் தவப் பலவும் மா மறஞ் செய்வர் - எண்ணற்ற பலவாகிய பெருங் கொடுமைகளைச் செய்யாநிற்பர்காண்; என்க.

(வி - ம்.) பண்டை வேரியர் - பழம் பகைவர். இவரும் நரகிற் கிடந்து கண்டுழி மறஞ் செய்வர் என்பது கருத்து. வேரியர் — வைரமுடையவர். (அசு)

கூசு. பேடி வேத னைபெரி
தோடி யூரு மாதலாற்
சேடி யாடு வன்மையிற்
கூடி யாவ தில்லையே.

(இ - ள்.) சேடி ஆடு அன்மையின் - இந்நரகத்தில் வீழுமுயிர்கள் பெண் தன்மையாதல் ஆண் தன்மையாதல் உடையன அல்ல; கூடி ஆவது இல்லை - ஆதலால் இவர்கள் தம்முட் காதலாற் கூடிக் களிப்படைவது மில்லை; பேடி வேதனை பெரிது ஓடி ஊரும் - இவர்கள் பால் பேடித்தன்மையாலுண்டாகும் துன்பம் பெரிதும் சென்று பரவா நிற்கும்; என்க.

(வி - ம்.) சேடி - தோழி. ஈண்டுப் பெண் என்னும் பொருள் மேனின்றது. ஆடு-ஆண். கூடியாவது-காதலின்பம். பேடி வேதனை-பேடித்தன்மை தரும் துன்பம். (அஎ)

கூஎ. கொன்ற பாவ மென்றுமூன்
றின்ற பாவ மென்றுதீச்
சென்று வேவ வாயினு
ணின்று கூவ வாக்குவார்.

(இ - ள்.) கொன்ற பாவம் என்றும்-பண்டு உயிரினங்களைக் கொன்ற தீவினைக்காக வென்றும்; ஊன் தின்ற பாவமென்று - ஊன் தின்ற தீவினைக்காக வென்றும்; தீச் சென்று வேவ ஆயினும் - இந்நரகர் நெருப்பினுட் புகுந்து வேவாராய விடத்தும்; நின்று கூவ வாயினுள் வாக்குவார் - இவர் அவ்விடத்திலேயே நின்று கதறும்படி மறவர் இவர் வாயினுள் செம்பினை யுருக்கிச் சாய்ப்பர்; என்க.

(வி - ம்.) கொன்றபாவத்திற்கும் ஊன்தின்றபாவத்திற்குங் கழுவாயாக இவர் தீயினுட் புக்கு வேவர் என்க. வாயினுள் வாக்குவார் என்றதற்கேற்ப மறவர் என்றும் செம்புருக் கென்றும் வருவித்தோதுக. இனி வேவ வாயினும், வாயினுள் நின்று கூவ மறவர் ஆக்குவார் எனினுமாம்,

கூஅ. உண்ண வாவ நீரேனக்
கண்ண வாவ வாபவர்
நண்ண லாவ வல்லதே
ரெண்ண லாவ தில்லையே.

(இ - ள்) ஆ அ உண்ண நீர் என - அந்தோ! எமக்கு உண்ண நீர் வேண்டும் என்று; கண் அவாவ ஆபவர் - நீர் வேட்கை கொண்டு அதனைக் காணக் கண்கள் அவாவும் நிலையை அடைந்தவர்; நண்ணல் ஆவ வல்ல - நீர் போலத் தோன்றி அடைய வொண்ணுத; தேர் எண்ணல் ஆவது இல்லை. பேய்த் தேர்கள் மட்டுமே தோன்றும் அவை எண்ணிறந்தனவாம் என்க.

(வி - ம்.) நீர் வேட்கை கொண்டு அழுவார்க்கு எண்ணற்ற பேய்த்தேர் காணப்படுதலின்றி நீர் கிடைக்க மாட்டாது என்றவாறு. ஆகவே நீர் வேட்டோர் பேய்த்தேரை நீரென்று கருதி ஓடியுழல்வர் என்க. பேய்த்தேர் - அணுக அணுகச் சேயதாகலின் நண்ணலாவ வல்லதேர் என்ருர். (அக)

கூகூ. கரிவ கன்றி நின்றகம்
பொரிவ பொங்கி வீழ்ந்தழைத்
தெரிவ வின்ன மாதுயர்
பரிப வரு மில்லையே.

(இ - ள்.) அகம் கன்றி நின்று - இவர் இவ்வாறு நெருப் பினுள் நெஞ்சு கன்றி நின்று; கரிவர் - உடல் கருகுவர்; பொரிவ - பொரிகுவர்; பொங்கி வீழ்ந்து அழைத்து - துன்பத்தால் நெஞ்சு விம்மி அத்தீயினுள் வீழ்ந்து ஓலமிட்டு; எரிவ - எரிகுவர்; இன்ன மா துயர் - இவர் இத்தகைய பெருந் துன்பத்தை நுகர்தல் கண்டு; பரிபவரும் இல்லை - இவர்க்குப் புகலாவார் கிடக்க இரங்குவார் தாமும் அங்கு யாருமில்லை; என்க.

(வி - ம்.) கரிவ, பொரிவ, எரிவ என்பன பலரறி சொற்கள்-துயர் கண்டு பரிபவர் என்க. பரிபவரும் என்புழி உம்மை, இழிவு சிறப்பு. (கo)

கoo. அங்கு வெங்க னலினுட்
டங்கி யுந்த லைத்தலை
பொங்கி யும்பு கைபுக
நுங்கி யுந்ந கர்வவே.

(இ - ள்.) அங்கு - அந்த இருளின்கண்; வெம் கனலி னுள் தங்கியும் - இவ்வாறு வெவ்விய தீயுனுள்ளிருந்தும்; தலைத் தலை - இடந்தோறும் இடந்தோறும்; பொங்கியும் - அழுதும்; புகை

புக நுங்கியும் - புகை வாயினுட் புக வுட்கொண்டும்; நுகர்வ - துன்ப மெய்துவர்; என்க.

(வி - ம்.) தலை - இடம் பொங்குதல், நெஞ்சு விம்மி அழுதல். நுங்குதல் - விழுங்குதல். (கக)

கoக. ஓச னைய பல்லுயிர்
வீவி னையு றவருங்
காய்சி னக்க டுவிடம்
பேசி னார்க்க ருளுணா.

(இ - ள்.) ஓசனைய பல் உயிர் வீவினை உறவரும் - ஒரு யோசனைத் தொலைவிலுள்ள பலவுயிர்களும் சாதற்கியன்ற கொடுமையோடு வருகின்ற; காய் சினக் கடு விடம் - கொல்லுஞ் சினமுடைய நஞ்சே; பேசினார்க்கும் - யாம் ஈண்டுப் பேசிய நரகர்க்கு; அருள் உணா - அருளுகின்ற உணவு; என்க.

(வி - ம்.) நாம் பேசிய நரகர்க்கு உணவு நஞ்சே என்க. உணா, உணவு. 'பேசினார்க் கருணல' என்றும் பாடம். (கஉ)

கoஉ. சாதி வேத னையவை
ஆதி யாக வாறினு
மோதி ஞான மல்லன
நீதி யிற்சு ருங்குமே.

(இ - ள்.) சாதி வேதனை அவை ஆதியாக - பிறப்பாலுறுந் துன்ப முதலாகக் கூறப்பட்ட; ஆறினும் - அறுவகைத் துன்பம் காரணமாக, ஓதி ஞானம் அல்லன-ஓதி ஞானமும் ஏனைய ஞானங் களும்; நீதியில் சுருங்கும் - முறைமையாலே நாளுக்கு நாள் இவர் கட்குத் தேய்ந் தொழியும்; என்க.

(வி - ம்) சாதி - பிறப்பு. ஓதிஞானம் - ஓதி ஞானம். அல்லன - ஏனைய ஞானங்கள். நரகத்திலுழல்பவர்க்கு அவ்வுழற்சி காரணமாக அறிவு பெருகா. தேய்ந்தழியும் என்றவாறு. (கஙு)

(வேறு)

விலங்குப் பிறப்பின் துன்பம்

கoஙு. நலங்களில் பிறவியு ணஞ்சுணு ரகர்கள்பின்
விலங்கின்வே தனைகளும் விரிக்கல்வேண் டும்மெனிற்
கலங்கியோன் றுரைன்றினைக் கண்டுகொற் றென்னப்போ
மலங்கிநின் றும்மனம் மன்னுமஞ் சுங்களே.

(இ - ள்.) நலங்கள் இல் பிறவியுள் - நலமற்ற பிறவிகளிலே; நஞ்சுண் நாரகர்கள் பின் - நஞ்சுண்டு வாழும் நரகர்களுக்குப் பின்; இனியாம்; விலங்கின் வேதனைகளும் விரிக்கல் வேண்டும் எனின் - விலங்குயிர்களின் துயரங்களையும் விரித்துக் கூற வேண்டும் என் பாயாயிற் கூறுதும்; ஒன்று ஒன்றினைக் கண்டு கலங்கி - அவ் விலங்குகளில் ஒன்று மற்றொன்றனைக் கண்டு பெரிதும் மனங் கலங்கி; காற்று என்னப் போம் - காற்றுப் போல விரைந்தோடா நிற்கும்; மலங்கி நின்றும் - சிலதம் பகை விலங்குகளைக் கண்டு கலங்கிக் கையற்று நின்றும்; மன்னும் அஞ்சுங்கள் - மிகவும் அஞ்சாநிற்கும்; என்க.

(வி - ம்.) சிங்கத்தைக் கண்டு யானையும், யானையைக் கண்டு மற்றொன்றும் இவ்வாறு விலங்குகள் தம்மின் வலியவற்றைக் கண்டுழி மனங் கலங்கி ஓடியும் நின்றும் பெரிதும் வருந்தும் என்றவாறு. (௧௩)

௧0௪. தண்ணென்மா மழையினற் ருமழிந் துழல்பவும்
புண்ணினு லழியமெய்ப் போரிடைப் புகுத்தவு
முண்ணல்கா ரணத்தினு லோட்டியிட் டொறுக்கவு
மெண்ணில்பல் வலையினு மிழக்குமவ் வுயிர்களே.

(இ - ள்.) அவ்வுயிர் - அந்த விலங்குப்பிறப் பெய்திய உயிரினம்; தண் என்மா மழையினல் தாம் அழிந்து உழல்பவும் - குளிர்ந்த பெருமழை மிக்குப் பெய்தலாலே தாமே அழிவெய்தித் துன்ப முழப்பனவும்; புண்ணினல் அழிய மெய் போரிடைப் புகுத்தவும் - புண்பட்டிறக்கும்படி உடலாற் செய்யும் போர்த்தொழிலிலே புகுத்தப்பட்டும், உண்ணல் காரணத்தினல் - ஊனுண்ணல் காரணமாக மாக்கள்; ஓட்டியிட்டு ஒறுக்கவும் - ஓட்டிச் சென்று கொல்லப்பட்டும்; எண் இல் பல் வலையிலும் - எண்ணிறந்த பல்வேறு வகைப்பட்ட வலைகளினுஞ் சிக்கி; இழக்கும் - தம்முயிர்களை இழப்பனவாம்; என்க.

(வி - ம்.) தாமழிந்து - தாமேயழிந்து. மெய்ப்போர் - உடலாற் செய்யும் போர். மழை முதலியவற்றால் இறப்பன காட்டு விலங்குகள். யானை குதிரை சேவல் கடா முதலியன போரிற் புகுத்தப்பட்டிறப்பன. மீனினங்கள் மானினங்கள் முதலியனவும் பறவைகளும் வலையில் உயிரிழப்பன. (௧௪)

௧0௫. வேதவா தியர்நடம் வேள்விவாய் விட்டவும்
பூததே வர்கட்கெனப் புல்லியோர்கள் கொல்லவு
மோதுநோய் மருந்தெனவ் வூட்டுதற் குரைப்பவும்
சாதலால் வரும்மிடர் தாமெனைப் பலவுமே.

(இ - ள்.) வேதவாதியர்கள் தம் - வைதிக சமயத்தாருடைய; வேள்விவாய் விட்டவும் - வேள்விக்களத்திலே உயிர் விட்டனவும்; பூத தேவர்கட்கு என - பூதங்கட்குப் பலி கொடுக்கின்றோமென்று; புல்லியோர் கொல்லவும் - அறிவிலிகள் கொல்லவும்; ஓதும் நோய் மருந்து என - மருத்துவர் கூறும்நோய் மருந்துகள் என்று கருதி; ஊட்டுதற்கு உரைப்பவும் - பிணியாளர்க்கு ஊட்டும்படி கூறப்படு வனவும்; சாதலால் வரும் இடர்தாம் - ஆகி அவை சாதலாலே வருகின்ற துயரங்கள்; எனைப் பல - எத்துணையும் பலவாம்; என்க.

(வி - ம்.) வேதவாதி - வைதிக சமயத்தார். விட்டவும் - உயிர் விட்டவும். பூததேவர் - வியந்தர தேவருள் ஒருவகையாய பூதங்கள். புல்லியோர் - கீழ்மக்கள். (௧௧)

(வேறு)

மக்கட்பிறப்பிலுறுதுன்பம்

௧0௬. நடுக்கமுறு நாற்கதியு ணரர்கள்படுந் துன்ப
மெடுக்கிலவை தாமிரண்டு பாகினவு மாகு
மடக்கமிலர்க் காவனவு மன்றிப்பொது வென்றும்
வடுப்பிளவு வாட்பகழி வாட்டியவொண் கண்ணாய்.

(இ - ள்.) வடுப்பிளவு வாள் பகழி வாட்டிய ஒள் கண்ணாய் - மாவடுவின் பிளவினையும் வாளையும் அம்பினையும் பழித்த அழகுடைய ஒள்ளிய கண்ணையுடையோய்!; நடுக்கம் உறும் நால் கதியுள் - அறிஞர் நடுக்க முறுதற்குக் காரணமான நால் வகைப் பிறப்புக்களிலே; நரர்கள் படுந் துன்பம் எடுக்கில் - மாந்தர் படுகின்ற துன்பத்தை எடுத்துக் கூறின்; அவைதாம் இரண்டு பாகினவும் ஆகும் - அத்துன்பங்கள் இருவகையிலடங்குவன ஆகும்; அடக்கமிலர்க்கு ஆவனவும் அன்றி பொது என்றும் - அவை அடக்கமில்லாத மாக்கட்கு வருவனவும், அன்றிப் பொதுவாக அனைவருக்கும் வருவனவும் என்று இருவகைப்படும்; என்க.

(வி - ம்.) நாற்கதி - நால்வகைப் பிறப்பு. நரர் - மாந்தர். பாகின - பகுப்புடையன. ஆவன - உண்டாவன. பொது - எல்லோர்க்கும் பொதுவாக வருவன. (௧௭)

௧0௭. தீவினைசெய் வாயிலோடு சேற்றமனக் குற்ற
மாவினையி னும்வெகுளி மானமோடு மாய
மோவினையிற் பற்றவல மச்சமோடு மற்று
மாவணவெ லாமடக்க மில்லவர்த நோவே.

(இ - ள்.) தீவினை செய் வாயிலொடு - மாந்தர் தீவினை செய்யும் நெறிகளினும்; செற்ற மனக்குற்றம் - சினங் கொண்ட மனத்

தோன்றிகழும் குற்றங்களினும்; மாவினையின் ஆம் வெகுளி - பெரிய செயல்களிலே தோன்றுகின்ற வெகுளியினும்; மானமொடு - மானத்தானும், மாயம் - பொய்யானும்; ஓவினை இல் பற்று - ஒழிதலை இல்லாத பற்றுடைமையானும்; அவலம் - அவலத்தானும்; அச்சமொடு - அச்சத்தானும், மற்று - இன்னோரன்ன பிறவற்றானும்; ஆவன எலாம் - உண்டாகின்ற துன்பங்களெல்லாம்; அடக்கமில்லவர் நோவு - அடக்கமில்லாதவர்க்கு வருகின்ற துன்பங்களாகும்; என்க.

(வி - ம்.) தீவினை செய்யும் வாயில்: கொலைகளவு முதலியன செய்யும் நெறி. செற்றம் - சினம். மாவினை - கொடிய தீவினை. மானம் - மாண்பிறந்த மானம். மாயம் - பொய். ஓவு - ஒழிவு. துன்பங் காரணமாகத் தீவினை செய்துழித் துன்பம் வருதலுண்மையின் அவலமும் ஏதுவாயிற்று. அவலம் - துன்பம். அடக்கம் - மெய் மொழி மனங்கள் தீ நெறிக்கட் செல்லாது அடங்குதல்.

"அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்"

எனவரும் அருமைத் திருக்குறளையும் (௧௨௧) ஈண்டு நினைக.                (௯௮)

௧௦௮. இழுக்கலுறு தீக்கதியி லுய்க்குமென வெண்ணார்
விழுக்குலங்கள் மாசுபடு மென்பதனை வேண்டார்
புழுக்குலங்க ளானிறைத்த போர்வையென வோரா
ரழுக்குடம்பிற் கேகெடுவ ராடவர்க ளந்தோ.

(இ - ள்.) அந்தோ! - ஐயகோ!; ஆடவர்கள் - மாந்தர்; இழுக்கல் உறும் - தீவினைகள் இவ்வாறு துன்பங்கள் மிகுதற்குக் காரணமான நரகர் பிறப்பு முதலிய; தீக்கதியில் உய்க்கும் என எண்ணார் - தீய பிறவிகளிலே செலுத்துமே என்றும் நினையாராய்; விழுக்குலங்கள் மாசுபடும் என்பதனை வேண்டார் - தம்முடைய சிறந்த குலங்கள் பழியுண்ணுமே என்றஞ்சி அக்குலச்சிறப்பினையும் வேண்டாதவராய்; புழுக்குலங்களால் நிறைத்த போர்வை என ஓரார் - இவ்வுடம்பு புழுக் கூட்டங்களாலே நிரப்பப்பட்டதொரு போர்வை மாத்திரையே என்றும் கருதாராய்; அழுக்குடம்பிற்கே - இந்த அழுக்குமிக்க உடலின்பத்தின் பொருட்டே; கெடுவர் - மிகவும் கெடாநிற்பர்; என்க.

(வி - ம்.) ஆடவர்கள் அழுக்குடம்பிற்கே கெடுவர் என்பது, கண்டு கேட்டுண்டுயிர்த்துற் றறியும் ஐம்புல வின்பத்தைத் தரும் மங்கையருடம்பினை விழைந்தே கெடுவர் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது; காதலே சாதலாய் முடிவார் என்பது. இது, முனிவர் உயிருழக்குந் துன்பங் கூறுழி அவ்வுயிரினங்கட்கிரங்கிக் கூறியதென்க. இழுக்கல் - துன்பத்திற்கு ஆகுபெயர். தீவினை உய்க்கும் என்க. விழுக்குலம் - சிறந்த குலம். மாசு - பழி.                (௯௯)

(வேறு)

௧௦௯. மதுவொன் றுங் கோதை மலரன்ன கண்ணாய்
போதுவென்ற நோயும் புணர்ந்திரண்டு பாகா
மிதுவொன் றிடையூ றிரண்டாய் விரியு
மதுவன்றி மெய்ப்பிணியு மூன்று யலரும்.

(இ - ள்.) மது ஒன்றும் கோதை - தேன் பொருந்திய மலர் மாலையினையும்; மலர் அன்ன கண்ணாய்-மலர் போன்ற கண்களையும் உடையோய்!; பொது என்ற நோயும் புணர்ந்து - அந்த நோய்களே யன்றிப் பொதுவென்று யாங்கூறிய நோயும் மாந்தரைச் சேர்ந்து; இரண்டு பாகுஆம்-இரண்டு வகைப்படும்; இது ஒன்று இடையூறு இரண்டாக விரியும் - இதனுள் ஒன்று இரண்டுவகைத் துன்பமாக விரியாநிற்கும்; அது வன்றி - அதுவேயுமன்றி; மெய்ப்பிணியும் மூன்றுய் அலரும் - அவர் தம்முடலைப்பற்றி வருகின்ற பிணிகளும் மூன்றாக விரிவனகாண்; என்க.

(வி - ம்.) மெய்ப்பிணி - உடல் பற்றிவரும் நோய். (௧௦௦)

௧௧௦. பெடையூடு சாயற் பிணையன்ன நோக்கி
யிடையூ றிரண்டு மினியாவை யென்னி
னடையா வுயிரதுவு மல்லதுவு மன்ன
நடையாய் முதலதுவு நாற்பூத மாமே.

(இ - ள்.) பெடை ஊடு சாயல் - மயிற்பெடை வருந்துதற்குக் காரணமான சாயலையும்; பிணை அன்ன நோக்கி - மான்பிணை போன்ற நோக்கினையும் உடைய நங்கையே!; இனி இரண்டு இடையூறு யாவை என்னின் - பொதுவாகிய இரண்டு வகைத் துன்பங்கள் யாவையோ என்று வினவின்; அன்ன நடையாய் - அன்னம் போன்ற நடையினையுடையோய்! கூறக்கேள்; அடையா உயிரதுவும் அல்லதுவும் - உயிரில் பொருளால் வருவதும் உயிர்ப் பொருளால் வருவதும் என இரண்டாம்; முதலதுவும் - இவற்றுள் முற்கூறப்பட்ட உயிரில் பொருள் என்றது; நாற்பூதம் ஆம் - நான்கு பூதங்களுமாகும்; என்க.

(வி - ம்.) அடையா உயிர் - உயிரில் பொருள். அல்லது - உயிர். நாற்பூதம் - நிலம் நீர் வளி தீ என்பன. (௧௦௧)

உயிரில் பொருளால் வரும் துன்பங்கள்

௧௧௧. பெருமழையு நீளும் பெரிதெழியுங் காற்றுங்
கருமலையுங் கல்லுங் கடுநவையு நஞ்சுஞ்
செருமலையும் பல்படையுஞ் செந்தீயும் வந்திங்
குருமிடியு மெல்லா முயிரல்ல வூறே.

(இ - ள்.) பெருமழையும் நீரும் பெரிது எறியும் காற்றும் - மிக்க மழையும் வெள்ளமும், மிகவும் வீசுகின்ற சூறைக்காற்றும்; கருமலையும் கல்லும் - கரிய மலைகளும் கற்களும்; கடு நவையும் நஞ்சும் - கடிய துன்பஞ் செய்யும் நஞ்சும்; செருமலையும் பல் படையும் - போர் புரிகின்ற பல்வேறு படைக்கலன்களும்; செந்தீயும் - சிவந்த நெருப்பும்; இங்கு வந்து உருமிடியும் - இங்கே வருகின்ற முகின் முழக்கும் இடியும்; எல்லாம்-இன்னோரன்னவுமாகிய இவையெல்லாம் காரணமாக வருகின்ற துன்பங்கள்; உயிரல்ல ஊறு - உயிரில் பொருளால் வருகின்ற துன்பங்களாம்; என்க.

(வி - ம்.) பெரிதெறிதல் - மிக்கு வீசுதல். நவையும் - வருந்துகின்ற. செரு - போர். படை - வாள் முதலியன. உரும் - ஈண்டு முகில் முழக்கம். உருமிடி: இருபெயரொட்டுயாம், ஊறு - துன்பம். (கo௨)

உயிரால் வருந்துன்பங்கள்

கக௨. சேத்துவங்க டாக்கிச் செயிரி னணங்குதலும்
மக்கள் பலவகையின் மன்னு மலைகொலையுந்
துக்கஞ்செய் பல்விலங்கிற் றோன்று மிடையூறு
மொக்கவிவை மூன்று முயிருடைய வூறே.

(இ - ள்.) செத்துவங்கள் செயிரின் தாக்கி அணங்குதலும்-பேய்கள் சினத்தினால் அறைந்து வருத்துதலும்; மக்கள் பல வகையின் மன்னும் அலை கொலையும் - மாந்தர்கள் பால் பல்வேறு வழிகளிலே நிலைபெறுகின்ற அலையும் கொலையும்; துக்கஞ் செய் பல் விலங்கின் - துன்புறுத்தும் பல்வேறு வகை விலங்குகளாலும்; தோன்றும் இடையூறும் - உண்டாகின்ற துன்பங்களும்; ஒக்க இவை மூன்றும் உயிருடைய ஊறு - ஒருமிக்க இம்மூன்று வகைத் துன்பங்களும் உயிரால் வரும் துன்பங்களாம்; என்க.

(வி - ம்.) செத்துவம் - பேய். அணங்குதல் - வருத்துதல். மன்னும் - நிலைபெறுகின்ற. அலை - அலைத்தல். விலங்குகள்: சிங்கம் புலி பாம்பு முதலியன. உயிருடைய: பல வறிசொல். (கoக)

மெய்ப்பிணி

கக௩. தீர்வனவுந் தீராத் திறத்தனவுஞ் செய்மருந்தி
னூர்வனவும் போலா தவசமத்தி னுய்ப்பனவும்
யார்வினவுங் காலு மவைமூன்று கூற்றவா
நேர்வனவே யாகு நிழறிகழும் பூணாய்.

(இ - ள்.) நிழல் திகழும் பூணாய்-ஒளி விளங்கும் அணிகலனுடைய அணங்கே கேள்; அவை - முற்கூறப்பட்ட மெய்ப்பிணிகள்

தாமும்; தீர்வனவும்-மருந்து முதலியவற்றால் தீர்வனவும்; தீராத் திறத்தனவும்-அவற்றால் தீராத தன்மையுடையனவும்; செய்மருந் தில் ஊர்வனவும் போலாதும்-மருத்துவர் செய்கின்ற மருந்தாலே தீர் வன போலவும் தீராதன போலவும் ஆகி; உவசமத்தின் உய்ப்பன வும் - அடங்கி நிற்றலிலே விடப்படுவனவும் என; யார் வினவுங் காலும் - யார் வினவினும்; மூன்று கூற்றவா சேர்வனவே யாகும்- இங்ஙனம் மூன்று வகையாக நிகழ்வனவேயாகும் என்க.

(வி - ம்.) ஊர்தல் ஈண்டுப் போதல். சில பிணிமருந்து முதலிய வற்றால் தீர்வன போலக் காட்டி அடங்கிப் பின்னரும் உடலின்கண் நிலைபெறுவனவாம் என்றவாறு. உவசமம்-அடங்கி நிற்றல். முனிவன், நீலகேசி பிற்காலத்தே பலருடன் வாதஞ் செய்வள் என்பதை ஓதியா லுணர்ந்துள்ளமையின் அங்ஙனம் வினவுங்காலும் அவை மூன்றே என்றான் என்க. இவற்றைச் சாத்தியம் அசாத்தியம் யாப்பியம் என வடமொழியாளர் கூறுவர். (கO௪)

தேவர்கட்குத் துன்பமில்லையெனல்

ககச. நல்லாய்நா ரின்றியே நாமுன் விரிசெய்த
வெல்லா விமையோர்க்கு மிறுதி சார்ந்த
தல்லா லகன்றுன்ப மாகா நுமரன்றிப்
பொல்லா தவர்களுறு மல்லைப் புகலுறுங்கால்.

(இ - ள்.) நல்லாய் - நங்காய்!; நார் இன்றி நாம் முன் விரி செய்த எல்லாமும் - குற்றமின்றி யாம் முன்பு நினக்கு விரித்துக் கூறிய துன்பங்கள் (போன்ற) இமையோர்க்கு எல்லாம் - தேவர் களுக் கெல்லாம், இறுதி சார்ந்தது அல்லால்-சாக்காடு அணுகுங் காலத்தே யல்லது, அகன் துன்பம் ஆகா - விரிந்த துன்பங்கள் உண்டாக மாட்டா; நுமர் அன்றிப் பொல்லாதவர்கள் உறும் அல்லை - நுங்கள் வகையினரில் உன்னைப் போல்பவரல்லது, தீய வர்களாகிய பேய்கள் படும் அல்லலைக் கூறுங்கால் என்க.

(வி - ம்.) நார் - குற்றம். எல்லாத்தேவரும் என்றது - பவணர் முதலிய எல்லாத் தேவரும் என்றவாறு. நுமர் என்றது வியந்தர தேவருள் ஒருவகையராகிய நும்மனோர் என்றவாறு. பொல்லாதவர் என்றது பேய்களை. அல்லல்-அல் என நின்றது. நுமரன்றிப் பொல்லாத வர் என்றமையால், வியந்தரதேவரில் எஞ்சியவரும், பெரும்பான்மை யும் ஒரே வகை உடலமைப்பும் தேசபதும சுக்கில விலேசியையும் உடையவர்கள் ஆதலால்: அவர்கள் பேரழகுடையவர் ஆவர். நீங்களோ அழகற்றவரும் தூர்லேசியையாலியன்ற உடல் உடையவர்களுமாய், பொல்லாதவர் என்றாராயிற்று. இன்னும் நீவிரோ கருவுயிர்க்குமிட முதலிய வரலாமையுடைய இடங்களைப் பற்றி நிற்றலின் தூய்மையிலி ராய்ப் பொல்லாதவர் என்றும்; நீயிர் இடையறுப் பசிப்பிணியுடைமை யானும், பிறர்க்கேவல் செய்தலானும் துன்பமுடையீராய்ப் பொல் லாதவர் என்றும்; நீயிர் பிறரைப் பற்றி அலைக்கும் தீக்குணமுடையீர்

ஆதலாற் பொல்லாதவர் என்றும் அறிவித்தானுமாயிற்று. இதனால் ஒழிந்த வியந்தர தேவர் நல்லவர் என்றும் துன்பமுறார் என்றும், உணர்த்தினானுமாதலுணர்க. (௧0௪)

பேய்கள் பிறர்க்குச் செய்யும் துன்பங்கள்

௧௧௫. தீயே யெனவெவர்க்குஞ் செல்லல் பலவாக்கி
வேயே புரைதோளாய் மிக்க விடமெங்கும்
பேயே யெனப்பட்டுப் பேறு தனசெய்வர்
நீயே யெனினல்லை நின்போல்வ ரன்றே.

(இ - ள்.) வேயே புரைதோளாய் - மூங்கிலை ஒத்த தோளை யுடையோய் !; நீயே எனின் நல்லை - வியந்தரதேவருள் ஒருத்தி யாகிய நீமட்டும் மிகவும் நல்லைகாண் !; நின் போல்வார் அன்றே - நின்னினத்தார் ஏனையோர் உன் போன்று நல்லரல்லரே; தீயே என எவர்க்கும் செல்லல் பல ஆக்கி - பிறரெல்லாம் நெருப்புப் போல எவர்க்கும் துன்பம் பலவற்றையு முண்டாக்கி; மிக்க இடம் எங்கும் - அவர் மிக்குள்ள இடங்களிலெல்லாம், பேயே எனப் பட்டு - பேய்கள் என்று இகழப்பட்டு; பேறுதன செய்வர் - சான்றோர் மேற் கொள்ளாத தீவினைகளையே செய்வாரல்லரோ ? என்க.

(வி - ம்.) செல்லல் - துன்பம். வேய் - மூங்கில். பேறுதன - தீவினை. நீயே எனின் நல்லை என்றது முகமன். (௧0௫)

முக்கூட்டு மருந்து

௧௧௬. பேர்தற் கரும்பிணி தாமிவை யப்பிணி
தீர்தற் குரியதிரி யோக மருந்திவை
யோர்த றெளிவோ டொழுக்க மிவையுண்டார்
பேர்த்த பிணியுட்பிற வார்பெரி தின்பமுற்றே.

(இ - ள்.) பேர்தற்கு அரும்பிணிதாம் இவை - அகற்றுதற் கரிய பிறப்புத் துன்பங்கள் தாமிவைகளாகும்; அப்பிணி தீர்தற் குரிய திரியோக மருந்து - அப்பிறப்புத் துன்பங்களைத் துவரத் தீர்க்கும் மருந்து முக்கூட்டு மருந்துகளாம்; இவை ஓர்தல் தெளி வொடு ஒழுக்கம் - இம்மருந்துகள் நல்லறிவும் நற்காட்சியும் நல்லொ ழுக்கமும் ஆகிய இம்மூன்றுமேயாம்; இவை உண்டார்-இம்மூன்று மருந்துகளையும் ஒருசேரக் கூட்டியுண்டவர்; பெரிது இன்ப முற்று- மிகவும் இன்பமெய்தி; பேர்த்து அ பிணியுள் பிறவார் - மீண்டும் அத் துன்பத்திற்கிடமான பிறப்பினுட்பட்டுப் பிறவார்காண்; என்க.

(வி - ம்.) பேர்தல்-அகலுதல்- திரியோகமருந்து-மூன்று மருந்து களின் கலப்பினாலியன்ற மருந்து. பிணிதாமிவை என்று சுட்டியது

முன்னர்க் கூறப்பட்ட விலங்குத் துன்பம் முதலாகத் தேவர் துன்பம் ஈருகியவற்றை என்க.

திரியோக மருந்து எனக் கூட்டுமருந்தாகக் கூறியது; இவை மூன்றுங் கூடிய வழியன்றித் தனித்தனியே நின்று பிணி தீர்ப்பன வல்லவென்றுணர்த்தற்கு. என்னை? நன்ஞானம் மட்டுமே மருந்தாயின் அது தோன்றிய பொழுதே வீடுபேறுறுதல் வேண்டும்; அன்றியும் வினையானிகழும் பிணி முதலாயினவும் ஒழிதல் வேண்டும். இனி மயக்கவறிவே கட்டிற்குக் காரணமாதல் வேண்டும்; வேண்டவே பிற சமயங்களாகிய ஒரே முடிவுடையவற்றையுணர்தலும் கட்டிற்குக் காரணமாதல் வேண்டும்; அவற்றின்பால் பற்றின்றியுணர்தல் கட்டிற்குக் காரணமன்றெனின், பன் முடிவுடையதாகிய ஆருகத சமயமும் பற்றின்றியுணருமிடத்து வீட்டிற்கேதுவாகாதாம்; ஆதலால் நற்காட்சிக்குவேறான நல்லறிவும் மிகையாயவீட்டிற்கேதுவாகாதாம். ஆயின் இவ்விரண்டுமேயமையையும், நல்லொழுக்கம் மிகையாம் பிறவெனின் அழகிதன்று. என்னை? பிறிதொரு நிகழ்ச்சியுமின்றி நல்லறிவும் நற்காட்சியும் ஒருங்கே நிகழ்தலே நல்லொழுக்கம் ஆதலின் என்க. என்னை?

"விள்ளற விருமையும் விளக்கத் தன்னுளே, யொள்ளிதிற் றரித்தலே ஒழுக்க மென்பவே" எனச் சீவகசிந்தாமணியுடையாரும் (உஅசஉ) ஓதுவராதலின் என்க.

இனி, நற்காட்சி மட்டுமே வீடுபேற்றிற்கமையும் எனலுமாகாது. என்னை? நல்லறிவு ஒழிய நற்காட்சி கூடாமையின்; அறிந்தே பற்றுதல் வேண்டுமாகலின் என்க.

இனி, நல்லொழுக்க மொன்றுமே பிறவி நோய் தீர்க்கும் மருந்தெனலுமாகாது. என்னை? அறிந்து தெளிந்தபின்னரே ஒழுக்கங் கைகூடுமாகலின் என்க. அன்றியும் நன்ஞானம் நற்காட்சி யென்னுமிரண்டு மெப்பொழுது மொருங்கு நிற்றலே நல்லொழுக்கமாதலின் அது மிகையாதல் யாண்டைய தென்க.

ஆதலின் இம்மூன்றுங் கூடியே மருந்தாமென்க. இனி, திரியோக மருந்திவை எனப் பன்மையாற் கூறியதனால், நற்காட்சி முதலியன நிச்சய மும்மணி நிகழ்வும்மணி எனவும் முழுமை எனவும் குறைபாடு எனவும் பல்வேறு வகைப்படும் என்க. அன்றியும் திரியோக மருந்தாகிய ஓர்தல் தெளிவோடு ஒழுக்கமிவை எனக் கூட்டியுரைப்பினுமாம். (௧0௭)

நன்ஞானம்

௧௧௭. மானொத்த நோக்கிமருந் தென்றவைமூன் றின்னுள்ளும்
ஞானத்தி னன்மைநனி கேட்குவை யாயினக்கா
லூனத்தை யின்றியுயி ராதிய வுள்பொருள்க
டானற் குணர்தலிது வாமதன் றத்துவமே.

(இ - ள்.) மான் ஒத்த நோக்கி - மான் போன்று மருண்ட நோக்கினையுடையோய்!; மருந்தென்றவை மூன்றின் உள்ளும் - யாம் பிறவிப்பிணிக்கு மருந்தென்று கூறிய அம்மூன்றனுள் வைத்து;

ஞானத்தின் நன்மை நனி கேட்குவை ஆயினக்கால் - முற்கூறப் பட்ட நன்ஞானத்தின் நலத்தை மிகவும் விரும்பிக் கேட்குங்கால்; ஊனத்தை இன்றி உயிர் ஆதிய உள் பொருள்கள் தான் நற்கு உணர்தல் - ஐயந்திரிபுகளாகிய பிழைகளின்றி உயிர் முதலிய உள் பொருள்களினியல்புகளை நன்றாக உணர்ந்து கோடலே; அதன் தத்துவம் இதுவாம் - அந்த நன்ஞானத்தினியல்பு இஃதே யாகுங் காண்; என்க.

(வி - ம்.) நன்மை - இயல்பு. ஊனம் - பிழை. அவை ஐயமும் திரிபும். உயிராதிய வுள்பொருள்களாவன: பஞ்சாத்திகாயம், அறுவகைப் பொருள், எழுவகைப் பொருள், எண்வகைப் பொருள், ஒன்பது வகைப் பொருள் என்பன. இவற்றுள் பஞ்சாத்திகாயம் - சீவாத்திகாயம், அசீவாத்திகாயம் தருமாத்தி காயம், அதருமாத்திகாயம் ஆகாசாத்தி காயம் என்னும் ஐந்துமாம். அறுவகைப் பொருள்-இவற்றோடு காலமும் கூடியது என்க. எழுவகைப் பொருள்-சீவனும் அசீவனும் ஆச்சிரவமும் சமுவரமும் நிர்ச்சரமும் கட்டும் வீடுமாகிய இவ்வேழுமாம். எண்வகைப் பொருள் - தலைவன், நூல், பொருள் அளவை, முயற்சி, லிங்கம், சாரித்திரம், பலம் என்பன; ஒன்பது வகைப் பொருள்-மேற்கூறப்பட்ட எழுவகைப் பொருள்களோடு தீவினையும் நல்வினையும் சேர்ந்த ஒன்பதாம். (௧0அ)

அளவைகள்

வேறு

௧௧அ. காண்டலு மல்லதே யளவை காண்டன்முன்
பூண்டவைம் பொறிமன மவதி புண்ணிய
மாண்டகு மனப்பரி யாயங் கேவல
நாண்டகு மரிவைய ருருவ நண்ணினாய்.

(இ - ள்.) காண் தகும் அரிவையர் உருவம் கண்ணினாய் - நாணந் தக்கிருக்கின்ற மகளிர் உருவமெய்திய நீலகேசியே! கேள்; அளவை - முன்கூறப்பட்ட உயிர் முதலிய வுள்பொருள்களை நன்குணர்தற்கியன்ற அளவைகள்தாம்; காண்டலும் அல்லதும் - காட்சியும் காட்சியில்லாததும என இரு வகைப்படும்; காண்டல் - இவற்றுள் காண்டல் என்னும் காட்சியளவை; முன் பூண்ட ஐம்பொறி மனம் அவதி புண்ணியம் மாண் தகு மனப்பரியாயம் கேவலம் - பழவினையால் முன்பே எய்திய ஐந்து வகைப் பொறிக்காட்சியும் மானதக் காட்சியும் அவதிஞானக் காட்சியும் புண்ணியத்தாலே மாண்புதக்கிருக்கின்ற மனப்பரியாயஞானக் காட்சியும் கேவல ஞானக் காட்சியும் என ஐந்து வகைப்படும் என்க.

(வி - ம்.) காண்டல் எனினும் காட்சி எனினும் ஒக்கும். அல்லது என்றது பரோக்கத்தை. ஐம்பொறி - மெய் வாய் கண் மூக்குச் செவி

என்பன. இனி, காண்டல் என்பது கண்ணினது தொழிலாகவும் ஏனைய வற்றிற்கும் பொருந்துவதெங்ஙனமெனின்; ஈண்டுக் காண்டல் என்பது விளங்க வறிதல் என்னும் பொருள் மேனின்றது. என்னை? "வேதங் கரை கண்டான்" என்புழியும் "காலமூன்று மவை கண்டு கூறியவன்" என்புழியும், "கண்டுரைப்பின்" என்புழியும், சூத்திரப் பொருள் கண்டான் என்புழியும்,

"செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்" (திருக்குறள் - புலான் மறுத்தல்)

என்புழியும் அஃதப் பொருட்டாதலுணர்க.

இனி, பூண்ட வைம்பொறி மனம் என்ற மிகையால்; அவதிஞானம் மனப்பரியயஞானம் கேவலஞானம் என்னும் இவற்றின் காட்சிபோலப் பொறிக்காட்சிகளும் மானதக் காட்சியும் பெருவிளக்க முடையனவே என்று கொள்க. இனி, புண்ணிய மாண்டகு மனப்பரியாய மென விதந்தமையால்; மனப்பரியாய ஞானக்காட்சி அவதிஞானக் காட்சியினுங் காட்டிற் பெருவிளக்க முடையதாய்த் தவத்தோர்பால் நிகழ்வது என்க.

இனி, பொறிக்காட்சியாவது - கண் முதலிய பொறிகளாலே நில முதலிய புறப்பொருள் பற்றிப் பிறக்கும் ஞானமாம். மானதக் காட்சியாவது - இன்ப துன்ப வியல்புகள் பொருளாகவும் நினைவு முதலிய அறிவுகள் பொருளாகவும் பிறக்கும் ஞானமாம். அவதிஞானக்காட்சியாவது-அவதி ஞானாவரணீயம் வீரியாந்தராயம் என்னும் வினைகளினுடைய அழிவானும் அடக்கத்தானும் காட்சிப் பொருள் பற்றி விளங்கத் தான் மிக்குப் பிறக்கும் ஞானமாம். மனப்பரியாய ஞானக் காட்சியாவது; மனப்பரியாய ஞானாவரணீயமும் வீரியாந்தராயமுமென்னும் மறைப்பு வினைகளின் அழிவானும் அடக்கத்தானும் பிறர் மனத்து நினைத்த பொருளைப் பற்றி மிக்குப் பெருகிய விளக்கத்ததாகிப் பிறக்கும் ஞானம். கேவல ஞானக் காட்சியாவது : ஞானாவரணீயம் தரிசனாவரணீயம் மோகனீயம் அந்தராயம் என்னும் காதி வினைகள் ஒழிவறக் கெட்டவழிப் பிறப்பதாகிய சீவன் முதலிய எல்லாப் பொருள்களையும் முக்கால நிகழ்ச்சிகளையும் கருவியும் முறையும் தடையும் இன்றி, நொடிப் பொழுதிலே கண்டுகொள்வதாய் விளக்கத்திற்கே தலைவரம்பாய விளக்க முடைத்தாகிய அருகக்கடவுளினது கடவுள் ஞானமாம். ஈண்டு விளக்கமென்பது - வினையினீக்கத்திற் கேற்றவாறு உயிரின்கண் படிப்படியாய் மிக்குத்தோன்றும் அறிவொளி என்க. (சுOசு)

காட்சியில் அளவை

கஎசு. நினைவு மீட்டுணர் வூக நேர்தரு
புனைவுசே ரணுமைபொய் யின்மை மெய்யுரை
முனைவர்தம் மாகம மொழியு மாகுமென்
றனையன காட்சியி லளவை யைந்துமே.

(இ - ள்.) காட்சியில் அளவை - காட்சிப் படாத அளவை தானும்; நினைவு மீட்டுணர்வு ஊகம் நேர்தரு புனைவு சேர் அணுமை பொய்யின்மை மெய்யுரை முனைவர் தம் ஆகமமொழியும் ஆகும்

என்று - நினைவும், மீட்டுணர்வும் உவமை எடுத்துக்காட்டுகின்ற அழகோடு கூடிய அநுமானமும், பொய் கூறுமையும் மெய்யே கூறுதலுமுடைய முனிவர் திருவாய் மலர்ந்தருளிய ஆகம மொழியும் ஆகும் என்று கூறப்படுகின்ற; அனையன ஐந்தும் - அவை ஐந்துமாகும் என்க.

(வி - ம்.) காட்சியிலளவையைப் "பரோக்கம்" என்ப. நேர் - உவமை. புனைவு - அழகு. நேர்தரு அனுமை, புனைவு சேர் அனுமை எனத் தனித்தனி கூட்டுக. அனுமை – அனுமானம். இதனைக் கருதலளவை என்றுங் கூறுவர். நினைவாவது-'அது' என இறந்தது தோற்றுவிக்கும் ஞானம். மீட்டுணர்வு என்பது, 'அதுவே இது' என்றும், 'யானே அவன்' என்றும், 'அவனே இவன்' என்றும் அதுவே போலும், 'இது' என்றும், 'ஆபோலும் ஆமா' என்றும் ஒற்றுமையும் சமமும் பற்றி எழுகின்ற பழைய நினைவுகளை மீண்டும் உணர்தற்கேதுவான ஞானம்.

ஊகம் என்றது தருக்கத்தை – அஃதாவது, இதனை ஒழிய இது கூடாது என்பது முதலிய ஆய்வுப் பொருள்களைப் பற்றிப் பிறக்கும் ஞானம்.

அநுமான மாவது:—சாத்தியத்தை யொழியச் சம்பவியாத சாதனத்தால் சாத்தியத்தைப் பற்றிப் பிறக்கும் ஞானமாகும்.

இனி, அநுமானம் என்னும் இக்கருதலளவையைப் பற்றிச் சமய திவாகர வாமன முனிவர் கூறும் அகலவுரை வருமாறு:—

சாதனந்தான் இருவகைத்து, விதி சாதனம் பிரதிசேத சாதனம் என. அவற்றுள் விதிசாதனம் இருவகைத்து; தர்மிவிதி சாதனம், தர்மி விசேட விதிசாதனம் என. அவற்றுள் தர்மி விதிசாதனமாவது-சந்தி பகிரார்த்த: சாதன தூடண பிரயோகாத, சந்தி பிரமாணாநி இட்ட சாதனம் என்பன. இவற்றுள் சாத்தியமாவன பகிரார்த்த சத்பாவமும், பிரமாண சத்பாவமும். சாதனமாவன-சாதன தூடணப் பிரயோகமும் இட்டசாதனமும். இனி, சாத்தியமாகிய பகிரார்த்த சத்பாவத்தை யொழியச் சாதனமாகிய சாதனதூடணப் பிரயோகங் கூடாதாம். என்னை? சாதன தூடணப் பிரயோகங்கடாம் பகிரார்த்தங்களாகலின் இவ்வாறே ஒழிந்த சாதனங்களினும் அவிநாபாவம் அறிந்து கொள்க.

இனி, தர்மி விசேட விதி சாதனம் இருவகைத்து, தர்மியுடன் ஒன்றுவதும், தர்மியில் வேறுயதும் என. அவற்றுள் தர்மியுடன் ஒன்றுவது தானும் இருவகைத்து; திருட்டாந்தம் இல்லதூஉம், திருட்டாந்தம் உடையதூஉமென. அவற்றுள், திருட்டாந்தம் இல்லது 'சர்வம் அநேகாத்மகம் சத்வாத்' என்பது. இவ்விடத்துத் தர்மியாவது-சர்வசப்த வாச்சியம். அநேகாந்தாத்மகத்துவமாகிய தர்மத்தையுடையதாகையால், இவ்வழி சத்வமென்னும் ஹேது தர்மியுடன் ஒன்றுகிய வாறு காண்க. மேல் வருவனவற்றையும் இவ்வாறே அறிந்து கொள்க.

இனி, திருட்டாந்த முடையது தானும் இருவகைத்து. திருட்டாந்தம் யாவற்றினும் செல்வதூஉம், செல்லாததூஉம் என. அவற்றுள் திருட்டாந்தம் யாவற்றினும் செல்வது, அநித்திய: சப்த: க்ரதகத்வாத் கடவது என்பது. இவ்வழி க்ரதகத்துவம் என்னும் சாதனம் திருட்டாந்த

மாகிய கடத்திலே யன்றி மற்றும் அநித்யமாகிய மின்னும் வில்லும் காட்டுப் பூவு முதலாயினவற்றுட் சென்றவாறு காண்க. இனிச் செல்லாதது, அநித்ய: சப்த: பிரய்த் நாந்தரியத்வாத் கடவத் என்பது; இது கடத்திற்போல அநித்தியமாகிய மேகத்துவனி, மின்னு, வில்லு முதலாயினவற்றுட் செல்லாதவாறு காண்க. இத்துணையும் தர்மியோடு ஒன்றாகிய சாதன பேதஞ் சொன்னவாறு.

இனி, தர்மியுடன் வேறாகிய சாதனம் காரியம் காரணம் அகார்ய காரணம் எனப் பல்வேறு வகைப்படும். அவற்றுள் காரிய சாதனம் அக்னிரஸ்து தூமாத் என்பது. சாத்தியமாகிய அக்கினிக்குக் காரியமாகிய தூமம் சாதனம். காரணசாதனம் வ்ருஷ்டிர் பவிஷிதி மேகோன்னதி விசேஷாத் என்பது. அகார்ய காரணம் இருவகைத்து; சாத்தியத்துடன் சமசமயம், பின்ன சமயம் என. சமசமயம் ரூபம் அஸ்திரஸாத் என்பது பின்னசமயம் உதேஷ்யதி சகடம் கிருத்திகோத்யாத் என்பது. இவையெல்லாம் விதிசாதன விசேடம் என்றுணர்க.

இனி, பிரதி சேத சாதனமும் இருவகைத்து; விதிரூபமும், பிரதி சேத ரூபமும் என. அவற்றுள் விருத்தம் நாஸ்தியத்ர சீதஸ் பரிசோ தூமாத் என்பது விருத்த காரியம். நஅயம் முநிபர பீடாகர: கபாலுத்வாத் என்பது விருத்த காரணம், அகாரிய காரணம் விருத்த வியாப்த முதலாகப் பல்வேறு வகைப்படும். விருத்த வியாப்தமாவது-நாஸ்தி பாவேஷு ஸர்வதை காந்த சத்வாத் என்பது; என்னை ? சர்வதை காந்த விருத்தமாவது-அநேகாந்தம்;அதனோடு வியாப்தம் ஆகையால். விருத்த சகசரமாவது-நாஸ்தி முநேர் மித்யாக்ஞானம் சம்யக் தர்சநாத் என்பது. என்னை ? மித்யாக்ஞான விரோதமாகிய சம்யக் ஞானத்தோடு சகசரமாகையால்.விருத்த சகசரகாரணமாவது நாஸ்தி முநேர் மித்யாக் ஞானம் ததவாதிகமாத் என்பது.என்னை?மித்யாக்ஞான விரோதியாகிய சமயக் ஞான சகசரமாகிய சம்யக்தர்தர்சனத்துக்குத் தத்வாதிகமம் காரணமாகையால். விருத்த சகசரகாரியமாவது நாஸ்தி முநேர் மித்யாக் ஞானம் அநுகம்பா ஆஸ்திக் கியாதேகே என்பது; என்னை; அநுகம் பாதி ஸம்யக் தரிசன காரியமாகையால். இத்துணையும் விதி ரூபமான பிரதி சேத சாதனம்.

இனி, பிரதிசேதரூப பிரதிசேத சாதனம் பலவகைப்படும். அவற்றுள் சுவபாவா நுலம்பமாவது-நாஸ்தி போதாத்ம: நிருபாதிகத்வம் அநுபலம்பாத், கரஸ்தக விஷாணவத் என்பது. காரணநுபலம்பமாவது நதத்ரக்ரு ஹேபாக சம்பவ: பாவகாநுபலப்தே: என்பது. கார்யாநுபலம்பமாவது நாத்ர சரீரே புத்தி வியாபார திவி சேஷாநுபலப்தே: என்பது. வியாபகாநுபலப்தியாவது – நாஸ்தி யஸ்தர ஸிம்சபா விருக்ஷா நுபலப்தே: என்பது: என்னை? ஸிம்ஸபையுள்ளளவும் விருக்ஷம் செல்லுமாகையால். சகசராநுபலப்தியாவது – நாஸ்தியஸ் யத்வக் ஞானம் சம்யக்ய தர்சந பாவாத் என்பது. நபவிஷ்யதி முகூர்த்தாந்தே சகோடோதய: கிருத்திகோதயா நுபலப்தே: என்பது. பூர்வசரா நுபலப்தி: முகூர்த்தரத் ப்ராக்நோதகாத் பரணி கிருத்திய காத நுபலப்தே: என்பது பூர்வசரா நுபலப்தி முகூர்த்தரத் ப்ராக் நோத காத்பரணி கிருத்திய காத நுபலப்தே: பூர்வசரா நுபலப்தி: முகூர்த்தரத் ப்ராக்நோதகாத் பரணி கிருத்தியகாத நுபலப்தே: என்பதுத்தர ரா நுபலப்தி: இவ்வாறே ஒழிந்தனவு மறிந்து கொள்க.

இனி. 'புணைவு சேரனுமை' என்பதனால் புணைப்பட்டா அநுமானங்களுமுள; அவையாவன-ஏதுவாபாசங்களாற் பிறக்கு மநுமானம். ஏது

வாபாசங்கள் மூன்று வகைப்படும்; அசித்தம் அநேகாந்திகம் விருத்தம் என; அவற்றுள் அசித்தம் என்பது, சொரூபாசித்தம், அஞ்ஞானசித்தம், சந்திக்தாசித்தம் என மூன்று வகைத்து. சொரூபாசித்தமாவது-அநித்ய சப்த: சாக்ஷுசத்வாத் என்பது; என்னை? சப்தத்திற்கு சக்ஷுஸோடு சம்பந்தமில்லாமையின். அஞ்ஞானசித்தமாவது-அநித்யசப்த:கிருதகத்வாத் என்பது முதலாயின. சந்திக்தாசித்தியாவது-தூபமென்னலுமாய் பாஷ்பமென்னவுமாகிய பூதசங்காயத்தை ஏதுவாகப் புணர்த்தாற் போல்வது.

அநேகாந்தம் இருவகைத்து, நிச்சித வியபிசாரி எனவும், சம்பவத் வியபிசாரி யெனவும். அவற்றுள்-நிச்சித வியபிசாரியாவது-பக்வானி ஏதானி ஆம்ரபலானி ஏக சாகாப்ரபவத்வாத், உப யுக்த பலவத் என்பதூஉம், சச்யாம: தத்புத்ரத்வாத் இதரதத் புத்திரவத் என்பதூஉமாம். இனி, சம்பவத் வியபிசாரியாவது விவாதாபன்ன புருஷ: கிஞ்சிக்ஞோ ராகாதிமத்வாத் என்பது. என்னை? வக்ரமுண்டாகில் ஞானம் மிகமிக வக்ரத்துவம் மிகுதல் கூடாதாம்.

இனி விருத்தமாவது-சாத்திய மில்லாத விடத்திலே வருவது; அது பலவகைத்து. அவற்றுள் தர்ம விபரீத சாதனமாவது - நீலத்த ஞான யோரபேத: சகோபலம்ப நியமாத் துவிசந்திரவத் என்பது. என்னை? கூடக்காண்டலென்பது இரண்டிற்கல்லது சம்பவியாமையால் சந்திர மண்டலத்தையும் இரண்டாகக் காண்கின்ற பொழுதிலல்லது சகோலம்ப மின்மையால்; தர்ம விபரீத சாதனமாவது - கணபங்கம் சாதிப்பனவாகப் பிறர் சொல்லும் சத்துவ முதலாயின. என்னை? சத்துவமாவது அர்த்தக் கிரியையோடு கூடிய தன்றே; உற்பத்திக் கணத்தே நசிக்கின்றது அர்த்தக் கிரியாசமர்த்த மன்மையின், சத்துவம் அர்த்தக் கிரியாசமர்த்தம் ஆகிய அநேகாந்தத்தைச் சாதிக்குமாதலின். விருத்தாவியபிசாரியாவது, அநித்ய: சப்த: கிருதகத்வாத் கடவது என்பது. நிரந்வய விநாசமாகிய அநித்யத்வம் சாதிப்பதாகப் பிரயோகித்த கிருதகத்வம் சவிநாசான்யமாகிய நித்யத்தைச் சாதிப்பதாகிய பிரத்யபிக்ஞாய மானத்துவ மென்னும் ஏதுவினை விட்டு நீங்காதாகையால். இவ்வண்ணம் ஒழிந்த ஏதுவாபாசங்களும் கண்டுகொள்க.

இனி, ஆகமப் பிரமாணமாவது-சகல விகலாப்த பிரகாசிதமாகிப் பூர்வாபரவிரோதமும், திருஷ்டேஷ்டவிரோதமுமின்றிப்பிரத்தியக்ஷாதி பிரமாணங்களோடு அவிசம் வாதியாதிய பரமாகமவசனமாகும். 'பொய்யின்மை' என்றதனால்பிராமாண்யமும், 'மெய்யுரை' என்றதனால் மெய்ப்பொருள் கூறலுங் கொள்க. அவை சைனகமத்துக்கன்றிப் பிறசாத்திரங்களிற் கூடாமைமேலே யதாவசரம் சொல்லுதூஉம். அஃதேல் அநுமானத்துக்கும் ஆகமத்துக்கும் ஆபாசம் தப்பினுற் கூறினர்; பிரத்தியக்காபாசம் கூருதவாறென்னை? எனின், அந்தரங்க மலோதயத்தாலும் நயன தோடத்தாலும் ஆசுப் பிரமண சேளயாறுதிகளானும் மரீசிகாதோய ஞான முதலாயினவும் துவிசந்திர பிராந்தி முதலாயினவும் பூமிப் பிரமணமும், பர்வதா கமனமும் முதலாகிய பிரத்தியக்காபாசங்கள் இந்திரிய பிரத்தியக்கத் தல்லது ஒழிந்த பிரத்தியக்கங்களில் இல்லாமையின் கூறிற்றிலர், எனினும் ஒப்பின் முடித்தல் என்னும் தந்திரவுத்தியால் அவையுந் தந்துரைக்கப்படும். பிரத்தியக்கமும் பரோக்கமுமாகிய பிரமாணங்களின் விரிவும், கடாவிடையுள்ளுறுத்தனவும் நியாய நூல் வல்லார் வாய்க்கேட்டுணர்க. ஈண்டுரைப்பிற் பெருகும்'' எனவரும்.

(கசo

சிறப்பளவை

வேறு

கஉ௦. வைப்பு நயனள வைபுகு வாயிலென்றும்
போய்ப்பி லுயிரே பொருவில்குண மார்க்கணை
செப்பி னிவற்றிற் றிரியாதுள் புகுபவாயி
ஞெப்பில் பெருமை யுணர்விற்குயர் மாட்சியாமே.

(இ - ள்.) வைப்பு நயன் அளவை புகுவாயில் என்றும் — வைப்பும் நயமும் அளவையும் புகுவாயில் என்றும் கூறப்படும் இவற்றோடு; செப்பின் - கூறுமிடத்தே; பொய்ப்பு இல் உயிர் - பொய்த்தலில்லாத உயிரியல்பும்; பொருவு இல் குணம் மார்க்கணை இவற்றின் - ஒப்பற்ற குணமும் மார்க்கணையுமாகிய இவ்வளவை களானாராய்ந்து; திரியாது உள்புகின் - பிறழ்வின்றி உள்ளத்தே யுணரின்; ஒப்பில் பெருமை உயர்விற்கு - ஒப்பற்ற பெருமையை யுடைய நன்ஞானத்திற்கு; உயர் மாட்சி ஆம் - மேலும் உயர்ந்த மாட்சிமை யுண்டாகும் என்க.

(வி - ம்.) இதுகாறும் உலகியலளவை கூறி, இச்செய்யுளால் சிறப்பளவை கூறுகின்றார் என்க.

வைப்பு என்பது ஒரு பொருளைப் பெயர் வகையானும் வடிவுவகையானும், பொருள்வகையானும், குறிப்பு வகையானும் ஆராய்ந்துணர்வது; என்னை,

"பெயரினும் பிழம்பினும் பொருளினுங் குறிப்பினும்
செப்புவ தொன்றினை வைப்பின தியல்பே"
(விளங்காமேற்கோள்)

என்பவாகலின்.

இனி நயமாவது-ஒரு பொருளின்கணின்ற பல்வேறு பண்புகளிலே அதற்கே சிறந்துரிமையுடையதொரு பண்பினாலே பிறிதொன்றனை நோக்குதலு நீக்குதலுமின்றி அப்பொருளையுணர்தலாம்; என்னை ?

"பிறிதினை விலக்கலு மாட்டலு மின்றி
யொருபொரு ளுரைப்பது சுட்டெனப் படும்" (வி-மேற்)

என்பவாகலின் என்க. நயம் எனினும் சுட்டெனினும் ஒக்கும்.

இனி, புகுவாயிலாவது; சுட்டு முதலாகிய எட்டு வகையாலும் ஒருபொருளை ஆராய்ந்துணர்வது; என்னை ?

"சுட்டே கிழமை கருவி கால
மித்துணை யிடம்பய னிகழ்ச்சி யென்றுங்
கிப்படி வருவது சுட்டுமுதற் சொல்லே" (வி-மேற்)

என்பவாகலின் என்க. இவ்வளவானும் கருவியாலாகும் உணர்ச்சி கூறியபடியாம்.

இனி பொய்யில் உயிரென்றார் உள்பொருளாதல் பற்றி, உயிரும் ஓர் அளவையாம் என்னை? சீவத்தானம் பதினான்கும் கொண்டு அத னியல்புணரலான் என்க. சீவத்தானம்: சூக்கும ஓரறிவுயிர் முதலாகக் கிடந்த பதினான்குமாம்.

குணத்தானம்: மித்தியாதிருட்டி, சாசாதன சம்யக்திருட்டி, சம்யக் மித்தியாதிருட்டி, அசம்யதம், தேசசம்யதம், பிரமத்தம், அபிப் பிரமத்தம், அபூருவகரணம், அநிவிருத்திகரணம், சூக்குமம், சாம்ப ராயம், உபசாந்தகசாயம், ஜிணகசாயம் சயோகி கேவலி, அயோகி கேவலி என்னும் இப்பதினான்குமாம்.

எனவே குணமும் அளவையாம் என்றாராயிற்று. அஃதாவது உயிர் கள் குணநிலையைக் கொண்டாராயப்படுதலால் என்க.

மார்க்கணை-மார்க்கணாத்தானம். இதுவும், கதி, இந்திரியம், காயம், யோகம், வேதம், கசாயம், ஞானம், சம்யம், தரிசனம், இலேசியை, பவ்வியம், சம்யக்துவம், சக்ஞை, ஆகாரம் என்னும் பதினான்கு வகைப்படும்.

எனவே, உயிர், பிறப்பு முதலிய இப்பதினான்கும் அளவைகளாக அளந்தறியப்படும் என்பதாயிற்று.

இனி, வைப்புநயனளவெனத் தலைதடுமாற வோதியவதனால், சத்து முதலியவற்றாலும் அளத்தலும் கொள்க. இவற்றின் விரிவையும் பிற வற்றையும் வல்லார் வாய்க் கேட்டுணர்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

மேலே கூறப்பட்ட அளவைகளால்- பிறழாமல் உணர்வது நன் ஞானத்திற்கு ஆக்கமாம் என்பார், ஒப்பில் பெருமை உணர்விற்குயர் மாட்சியாமே என்றார்.

இவ்வளவைகளால் உணர்வது நன்ஞானம் எனவே அளவாவது நன் ஞானம் என்றவாறாயிற்று. என்னை? பொறிகளும் இலிங்கங்களு மாகிய அறிவில் பொருள் அளவைகளல்லவோ எனின்? அல்ல; அவை யெல்லாம் அளவையாகிய நன்ஞானத்துக்குச் சாலகமுதலியன போலத் துணைக் காரணமாந் துணையேயல்லது அளவைகளாகா வென்க. (கக)

நற்காட்சி

கஉக. காட்சி வகைதான் கடவுண் முதலாய
மாட்சி யமைந்தபொரு ளேட்டு மனத்துவைத்து
மீட்சியில தாய்விரிந் துந்திய வின்பவெள்ள
வேட்கையது வாந்தெளி வென்றனர் வென்றவரே.

(இ - ள்) காட்சி வகைதான் கடவுள் முதல் ஆய - இனி நற்காட்சியினிலக்கணங் கூறுவாம், அதுதானும் கடவுள் முதலிய; மாட்சி அமைந்த பொருள் எட்டும் மனத்து வைத்து - சிறப் பமைந்த பொருள்கள் எட்டனையும் நன்காராய்ந்து மனத்துள்ளே நிறுத்தி; மீட்சியிலதாய் விரிந்து உந்திய இன்ப வெள்ள

வேட்கையதுவாம் - அப்பொருள்களின் பால் மீளாதாய்ப் பரந்து சென்ற இன்பமயமாகிய அன்பென்னும் பெயரையுடையதாம்; வென்றவர் தெளிவு என்றனர் - வினைப் பகைவென்ற இறைவர் அதனையே நற்காட்சி என்று தம் பரமாகமத்துக் கூறினர் என்க.

(வி - ம்.) காட்சி – நற்காட்சி. கடவுள் முதலாய எட்டாவன :— கடவுள், ஆகமம், பொருள், அளவை, நிகழ்ச்சி, இலிங்கம், சாரித்திரம், பலம் என்பன. மாட்சியமைந்த பொருளெட்டும் என்றமையால், மாட்சி யமையாத எண்பொருள்களும் உள; அவை கடவுட்போலி முதலியன. அவை செவ்வி நேர்ந்துழிக் கூறுவாம் என்றுராயிற்றென்க. (கக௨)

வேறு

மூவகை மூடங்கள்

கஉஉ. மூந்துற்ற மூடப் புலிமூன்றும் பிழைத்த பின்னை
யன்பச்ச மாசை யுலகோடிலிங் காத்த ரொப்பு
மென்பெற்று மேத்த லிலராயெண் மயத்து நீங்க
லின்புற்ற காட்சி யுடையார்க்கியல் பாகு மன்றே.

(இ - ள்.) மூந்து உற்ற மூடப் புலி மூன்றும் பிழைத்த பின்னை - நற்காட்சியாகிய ஆவினை அழிக்குமிடத்தே முற்பட்டு வருவனவாகிய புலிகளை யொத்த மூன்று வகைப்பட்ட மூடங்களுக்கும் இரையாகாமற் பிழைத்தல் அரிதேயாம்; அவற்றிற்கு அரிதிற் பிழைத்த பின்னர்; அன்பு அச்சம் ஆசையோடு - காமமே அச்சமே அவாவே என்னுமிவற்றினும் பிழைத்து; உலகு ஓடு இலிங்கு ஆத்தர் ஒப்பும் - பின்னையும், உலகொழுக்கமுடையோரையும் போலித் துறவோரையும் போலிக்கடவுளரையும் இன்னோரன்ன பிறரையும்; என் பெற்றும் ஏத்தலிலராய் - இவர்களாலே யாதானுமொரு பெருந்திருப் பெறுவதாயினும் வணங்குதலிலராய்; எண்மயத்து நீங்கல் - எட்டுவகைப்பட்ட செருக்குகளினும் நீங்குதலே; இன்புற்ற காட்சி யுடையார்க்கு இயல்பு ஆகும் - இன்புறுதற்குக் காரண மான நற்காட்சியுடையவர்களுக்கு நல்லிலக்கணமாம்; என்க.

(வி·ம்.) இஃது ஏகதேசவுருவகம். நற்காட்சியாகிய ஆவை அழிக்க வரும் புலிகளாகிய மூடங்கள் என்றவாறு. மூன்று மூடமாவன :— உலகமூடம், பாசண்டி மூடம், தேவமூடம் என்பன.

இனி, உலகத்தினதுமூடம் உலகமூடம் என்பதாயின் ஒழிந்தனவும் உலகமூடமேயாய் மூடமொன்றுதலமையும்; அஃதன்றியும், பாசண்டியின் பொருட்டும் தேவர் பொருட்டும் வந்தமூடங்களை வேறோதினவாறு போல ஒழிந்த ஆகமமே பொருளே அளவையே நிகழ்ச்சியே ஒழுக்கமே பயனே ஞானமே வழிபாடே என்றிவைமுதலாகிய பொருள்பற்றிவரும் மூடங்களையும் ஆகமமூடம் பொருள்மூடம் என இங்ஙனம் ஓதின் மூடங்கட்கு வரையறையில்லையாம். ஆகவும் இவற்றை மூன்றுவகை யுளடக்கிக் கூறல் குன்றக் கூறலாம் எனின், அற்றன்று, நற்காட்சியைக் கெடுக்குமிடத்துச் சிறப்புடைய பாசண்டிமூடமும் தேவமூடமும்

எடுத்தோதியொழிந்த மூடங்களுக்கு வரையறையின்மையின் அவை உலக மூடமெனத் தொகுத்தோதப்பட்டன போலும்; இவற்றினுட்ப மெல்லாம் மெய்ந்நூல்வல்லார்வாய்க் கேட்டுணர்க.

இனி, மூன்றுவகை மூடங்களினு நீங்கினுன் போலித்துறவியரையும் போலிக் கடவுளரையும் வணங்காஞகலின், இவ்விரண்டு வணக்கமும் வேறோத வேண்டிய தென்னை யெனின், மூடத்தினீங்கினுன் போலித் துறவிகளை மெய்த்துறவோரென்றும் திருமால் சிவன் புத்தன் பூரணன் முதலிய போலிக்கடவுளரை மெய்க்கடவுளரென்றும் மதியான் என்பதல்லது, அவரையெல்லாம் வணங்கானென்பது பெறப்படாதாகலினானும் அவரால் திருப்பெறின் வணங்குதலும் கூடும் ஆதலின் வேறோதல் வேண்டும் என்க. இது கருதியன்றோ ''என்பெற்று மேத்தலிலராய்'' என்றோதியதூஉ மென்க. அன்றியும் வணங்கப்படும் ஒன்பது கடவுளரையன்றி வணங்கும் தீயவணக்கம் இவை என்றுணர்தற்குங் கூறியவாறுமாம்.

இனி எண்மயம் என்றது எட்டுவகைப்பட்ட செருக்குகளை. அவை யாவன: ஞானம் வழிபாடு குலம் சாதி வலி இருத்தி தவம் உடம்பு என்னு மிவ்வெட்டும் பற்றிப் பிறக்கும் செருக்குகள் என்க.

புலிக்குப் பிழைத்த பின்னை அன்பு அச்சம் ஆசை உலகொழுக்கம் என்னும் இக்கொடுவிலங்கிற்கும் பிழைத்து என்க.

இனி உலகு என்றது உலகியலொழுக்கத்தால் வணங்குந் தகுதியுடையோரை; அவர் அரசன் முதலியோரென்க.

இனி,

> ''மூவகை மூடமு எட்டுமயங்களும்
> தேர்வகையிற் காட்சிக்க ணில்''

எனவும்,

> ''அவ்விநய மாறு மகன்றது நற்காட்சி
> செவ்விதிற் காப்பா னிடை''

எனவும் வரும் அருங்கலச்செப்பு நூற்பாவினையும் கண்டுகொள்க. (௧௩௧)

நற்காட்சியினுறுப்புகள்

௧௩௨. ஐயற்றல் வேட்கை யுவர்ப்பேமயக் கியாது மின்மை
செய்குற்ற நீக்க நிரிந்தாரை நிறுத்த லின்றிப்
பொய்யற்ற காதற் போகுவில்லறங் காட்ட லெட்டுங்
கையுற்ற வாயில் லதுகாட்சியின் மாட்சி யாமே.

(இ - ள்.) ஐயுற்றல்-பரமாகமத்துக் கூறிய மெய்ப்பொருளைத் தெளிந்தபடியிராமல் ஐயுறுதலும்; வேட்கை - உலகவின்பங்களை விரும்புதலும், உவர்ப்பு-மெய்த்துறவோருடைய உடம்பு முதலியன கண்டுவரும் வெறுப்பும், மயக்கு - உலகியலொழுக்குடைய அறிவிலாமாந்தருடைய மதிப்பையும் அளவளாவுதலையும் வணக்

கத்தையும் புகழ்தலையும் ஏற்றற்குக் காரணமான மயக்கமும்; யாதும் இன்மை - ஆகிய இந்த நான்கு குற்றங்களினும் சிறிது மின்றி ஒழிதலும்; செய்குற்றம் நீக்கல் - நன்னெறியொழுகும் இளைஞரும் முதியோரும் செய்யும் குற்றங்களை அறங்கூறி விலக்கு தலும்; திரிந்தாரை நிறுத்தல் நற்காட்சியிலாதல் ஒழுக்கத்திலாதல் பிறழ்ந்தாரை யாதானுமோருபாயத்தாற் பிறழாமல் நிறுத்து தலும்; இன்றிப் பொய் அற்ற காதல்-நன்னெறியொழுகுவார்பால் பிறிதொரு காரணமின்றியே பொய்யில்லாத மெய்யன்பு செலுத் தலும்; பொருவுஇல் அறம் காட்டல் - மாந்தருக்கு ஒப்பற்ற நல்லறங்களைச் செவியறிவுறுத்துத் தெளிவித்தலும் ஆகிய இந் நான்கு நலங்களும் ஆகிய; எட்டும் - எட்டுநலங்களும்; கையுற்ற வாயில் - ஒருவற்குக் கைகூடுதலரிதேயாம், இவை, கை கூடு மாயின்; அது காட்சியின் மாட்சி ஆம் - அப்பேறே நற்காட்சியின் மாட்சிமையாகும் என்க.

(வி - ம்.) ஐயுறாமையும் வேட்கையுறாமையும் உவர்ப்புறாமையும் மயங்காமையும் செய்குற்றம் நீக்கலும் திரிந்தாரை நிறுத்தலும் காத லுடைமையும் அறங்காட்டலும் என்னும் இவ்வெட்டும் கைகூடின் நற்காட்சி சிறப்பெய்தும் என்பது கருத்து.

ஐயுறல் — ஐயுற்றல் என விரிந்து நின்றது; செய்யுள் விகாரம். ஐயுறலாவது, ஆகமம் கூறிய பொருள் மெய்யோ பொய்யோ என்று ஐயுறுதல். வேட்கை-உலகின்பங்களை நுகரவெழும் விருப்பம். உவர்ப் பாவது — மெய்த்துறவோர் உடல்பற்றித் தோன்றும் வெறுப்பு. செய் குற்றம் நீக்கல் என்றது, அறியாமையாற் குற்றஞ்செய்வாரை அது செய்யாதபடி விலக்குதல் என்றவாறு. காரணமின்றியே எழும் மெய்க் காதல் என்க. காதல்-ஈண்டு அன்பு. கையுறல் அரிதென்பார் கையுற்ற வாயில் என்றார். காட்சி - நற்காட்சி. (௧௧௩)

நல்லொழுக்கம்

௧௧௪. நன்றாய காட்சி யுடனாகிய ஞானந் தன்னோ
டொன்றாகி யுள்ளத் தொழியாமை யொழுக்க மென்ப
குன்றாத வொன்றுங் குறைபாட்டதுங் கூறு பவ்வே
வென்றார்த நூலின் விதிமெய்ம்மை யுணர்ந்த வரே.

(இ-ள்.) வென்றார் தம் நூலின் விதி மெய்ம்மை உணர்ந்தவர் - காதிகன்மங்களை வென்ற அருகக் கடவுள் திருவாய் மலர்ந்தருளிய மெய்ந்நூல் கூறும் விதிகளினுண்மையை உணர்ந்த மேலோர்; நன்று ஆயகாட்சி உடனாகிய ஞானம் - ஒருவன் தன்னோடு ஒன்று ஆகிய நற்காட்சியோடும் நன்ஞானத்தோடும் இரண்டறக் கலந் தவனாய் உள்ளத்து ஒழியாமை-அவை பின்னர்த் தன்னுள்ளத்தே ஒழியாமல் நிற்றலே; ஒழுக்கம் என்ப நல்லொழுக்கம் என்றோதுவர்;

குன்றாத ஒன்றும் குறைபாட்டதும் கூறுப-மேலும் அவ்வொழுக் கந்தானே குறைவிலொழுக்கம் என்றும் குறையொழுக்கம் என்றும் இரண்டுவகைப்படும் என்றுங் கூறுகிற்பர்; என்க.

(வி - ம்.) நன்ஞானத்தோடும் நற்காட்சியோடும் இரண்டறக் கலந்து அவை பின்னிங்காமல் அவற்றிற்கேற்ப ஒழுகுதலே நல்லொழுக்கம் என்பது கருத்து.

இனி அவ்வொழுக்கம் குறைவில் ஒழுக்கம் குறையொழுக்கம், என இருவகைப்படும் என்றவாறு. இவற்றைச் சகலசாரித்திரம் என்றும் விகலசாரித்திரம் என்றும் கூறுப.

நற்காட்சியோடும் நன்ஞானத்தோடு மிரண்டறக் கலந்தவர் செயலெல்லாம் நற்செயலேயாம் என்னுந் துணிவுபற்றி அவற்றின் கூட்டரவையே ஒழுக்கமாக வோதினார். (கசு)

## நல்லொழுக்கத்தினிலக்கணம்

கஉரு. போற்றல் செறிவே பொறையாதிய நல்ல றமு
மேற்ற நினைப்போ டிருசார்வி ழுத்த வமு
மாற்றல் பரிசை முதலாகிய வன்ன வெல்லாம்
மாற்ற மறுக்கு மொழுக்கத்தின் மாட்சி யாமே.

(இ - ள்.) போற்றல்-துறவொழுக்கம் பேணுதலும்; செறிவு-மனமொழி மெய்களாகிய முக்கருவிகளும் அடங்குதலும்; பொறை ஆதிய நல்லறமும்-பொறுமை முதலிய நல்லறங்களை ஓம்புதலும்; ஏற்ற நினைப்போடு - உயரிய நினைவுகளை நினைதலும், இருசார் விழுத்தவம் - இரண்டு வகைப்பட்ட தவங்களைத் தாங்குதலும்; பரிசை ஆற்றல் - உற்றநோய் நோன்றலும்; முதலாகிய அன்ன எல்லாம்-முதலிய இவையிற்றையும் இன்னோரன்ன பிறவற்றையும் மேற்கோடலே; மாற்றம் அறுக்கும் ஒழுக்கத்தின் மாட்சி ஆம் - பகையாகிய பிறவியை ஒழிக்கும் நல்லொழுக்கத்தின் இலக்கணங்களாம்; என்க.

(வி - ம்.) போற்றலாவது – துறவியர்க்கோதிய ஒழுக்கங்களைப் பேணியொழுகுதல். இவற்றைப் பஞ்ச சமிதி என்ப. இவற்றினியல் பின்,

"முன்னுகத் தளவு நோக்கி முன்புபின் பிரியச் செல்லார்
இன்சொலும் பிறர்த மக்கும் இதத்தன வன்றிச் சொல்லார்
அன்புநீத் துயிரை ஓம்பி அளவமைத் துண்பார் யார்க்கும்
துன்புறக் கோடல் வைத்தல் மலங்களைத் துறத்தல் செல்லார்"

எனவரும் மேருமந்தர புராணச் செய்யுளானு முணர்க. இவற்றை, ஈர்யாசமிதி பாடஷாசமிதி ஆதானசமிதி நிக்ஷேபசமிதி உத்ஸர்க்கசமிதி என்றும் கூறுப.

செறிவு என்றது மனவடக்கமும் மொழியடக்கமும் மெய்யடக்கமும் என மூன்றும். இவற்றைத் திரிகுப்தி என்ப.

ஏற்ற நினைப்பு என்றது, நிலையாமை முதலியவற்றை நினைதல். அவை பன்னிரண்டுவகை. அவையாவன: அநித்தியம், அசரணம், சம்சாரம், ஏகத்துவம், அந்நியத்துவம், அசுசி, ஆசுரவம், சம்வரை, நிர்ச்சரை, உலகம், போதிதுர்லபம், தருமசுவாகியாவாதத்வம் என்பனவாம்.

இனி இருசார் விழுத்தவம் என்றது உடற்றவமும், உயிர்த்தவமும் என்னும் இருவகைப்பட்ட தவவகையினை; இவற்றுள் உடற்றவம், உண்ணாமை, உணவுசுருக்கல், உணவுவரையறை, சுவைவிரும்பாமை, தனித்துறைதல், தவத்தால் மெலிதல் என ஆறுவகைப்படும். இனி உயிர்த்தவம் - குற்றங்கட்குக் கழுவாய் செய்தல், வணக்கமுடைமை, பிறர்பிணி தீர்த்தல், நூல் ஓதுதலும் ஓதுவித்தலும், பற்றறுத்தல், தூயதேசினைத்தல் என ஆறுவகைப்படும். இவையிற்றைப் பாகிய அப்யந்தரதபசுகள் என்ப. பரிசை ஆற்றல் என மாறுக. பரிசை, பரீஷஹர் என்பதன் தமிழ் வடிவம். தவத்தால் வரும் நோய்நோன்றல் என்பது இதன் பொருள். இத்தவத் துயரங்கள் இருபத்திரண்டுவகைப் படும். அவற்றை,

"வெப்பமொடு தட்பங் கடிப்பன குத்துவ
வித்திவ தையலை புல்லூறு மிக்க
சிறப்புமுறை பாட்டொடு மெய்ம் மாசு தரித்தல்
புறப்பரிசை புல்லியவாம் பத்து"

எனவும்,

"பசிபேறு நீர்த்தாபம் சோலைமே வாமை
யொசியு நோய்கோட் பிறவாமை யோகுத்
திருத்தல் கிடத்தல் அறிவுகாண் பின்மை
யகப்பரிசை யாறிரண்டா நற்கு"

எனவும் வருஞ் செய்யுட்களால் உணர்க. மாற்றம்-இயல்பிற்கு மாறான பிறப்பு என்க. இவையெல்லாம் நல்லொழுக்கத்தின் இலக்கணம் என்பார் ஒழுக்கத்தின் மாட்சியாம் என்றார். (சுகசு)

## முனிவர் முடிவுரை

சுஉ. யோக மிவற்றை யுடனுண்ட வுயிர்க ளெல்லாம்
மாக விசும்பி னவர்தம்மோடு மன்ன ரும்மாய்ப்
போக நுகர்ந்து பொருந்தாவினை புல்ல லின்றி
யேகநல் லின்ப மியைந்தாலிழ வில்லை நல்லாய்.

(இ - ள்.) நல்லாய் - நலமிக்க நங்கையே கேள்!; யோகம் இவற்றை உடன் உண்ட உயிர்கள் எல்லாம் - கூட்டப்பட்ட இம் மருந்துகளை ஒருசேர வுட்கொண்ட மாந்தரெல்லாம்; மாக விசும்பினவர் தம்மொடு - மேலுள்ள அகமிந்திரவுலகத்திலே தேவராகப் பிறந்து; மன்னருமாய் - அத்தேவர்களுக்கு அரசருமாகி, போகம்

நுகர்ந்து - ஆண்டுள்ள சிறந்த - இன்பங்களையும் நுகர்ந்து, பொருந்தா வினை புல்லல் இன்றி-அறிவுக்குப் பொருந்தாத தீவினைகளைச் செய்தலின்றி; ஏகம் நல்லின்பம் இயைந்தால்-படிமுறையாக ஒப்பற்ற நலமுடைய வீட்டின்பத்தை எய்தினால்; இழவு இல்லை - பின்னொருகாலத்தும் அவ்வின்பத்தை இழந்து பிறவிப்பிணியுட் புகுதார் காண்; என்க.

(வி - ரை.) இஃது மும்மணியின் பயன் கூறியபடியாம். அறங் கேட்டமையால் மறநீங்கி நல்லையாயினை என்பார் இறுதியாக நல்லாய் என விளித்தார். யோகம் – கூட்டு, ஈண்டுக் கூட்டுமருந்து. உயிர் என்றது மாந்தரை. எல்லாவற்றினும் உயர்ந்த அகமிந்திரவுலகத்தே பிறப்பர் என்பார், மாகவிசும்பினவர் தம்மொடு என்றார். இங்ஙனம் கூட்டுமருந்துண்டோர் மேன்மேல் உயர்வர் என்பார், மன்னருமாய் ஏக நல்லின்பம் எய்தி என்றார். பின்னர்ப்பிறப்பில் மீளார் என்பார் இழவில்லை என்றார். (ககஎ)

வேறு

நூலாசிரியர் கூற்று

கஉஎ. பிறவியா மாறும் பிணியாந் திறமும்
மறவிதா னில்லா மருந்தாம் வகையும்
திறவியாள் கேட்டுத் தெரிந்துள்ளங் கொள்ள
வறவியான் ருனு மறவமிர்த மீந்தான்.

(இ - ள்.) அறவியான் - இங்ஙனம் துறவறத்தோனாகிய அம் முனிச் சந்திரபட்டாரகன் என்னும் ஆசிரியன்; திறவியாள்கேட்டுத் தெரிந்து உள்ளம் கொள்ள - அறங்களைக் கேட்கும் செவ்வி பெற்றிருந்த அந்த நீலகேசி என்பவள் கேட்டு ஆராய்ந்து தெளிந்து கொள்ளும்படி; பிறவி ஆம் ஆறும் - உயிர்கள் விலங்கு முதலிய பிறவியுட் சென்றுழலும் வகையும்; பிணி ஆம் திறமும் - அவ்வுயிர்கட்குத் துன்பங்கள் வரும் வகையும்; மறவி தான் இல்லா மருந்து ஆம் வகையும் - அத்துன்பங்கட்கு அவ்வுயிர்கள் மறதியின்றி உண்டற்குரிய திரியோக மருந்துகள் ஆகின்ற வகையும்; அற அமிர்தம் ஈந்தான் - ஆகிய நல்லறங்களாகிய அமிழ்தத்தை வழங்கியருளினன்; என்க.

(வி - ரை.) திறம் – வகை. மறவியில்லாதுண்ணற்குரிய மருந்தென்க. நீலகேசியும் அறங்கேட்குஞ் செவ்வி பெற்றிருந்தாள் என்பார் திறவியாள் என்றார். தெரிதல் – ஆராய்தல். அமிழ்தம்: உவமவாகுபெயர். அறம் + அமிர்தம் = அறவமிர்தம் – அறமாகிய அமுதத்தை; பிறவிப் பிணிக்கு மருந்தாக ஈந்தான் என்க. (ககஅ)

வேறு

முனிவர் கூற்று

கஉஅ. வண்டவாம் வார்குழலும் வாளெயிறும் பூண்முலையும்
தொண்டைவாய் நன்னலமுந் தோளுந் துடியிடையும்
கண்டவாங் காமுகரும் யாமுங் கணநரியும்
விண்டவாக் கொண்டுணரின் வேறுவே றாமன்றே.

(இ - ள்.) வண்டு அவாம் வார்குழலும் - மகளிருடைய வண்டுகள் விரும்புதற்குக் காரணமான நறுமணமுடைய நெடிய கூந்தலையும்; வாள்எயிறும் பூண்முலையும் - ஒளியுடைய பற்களையும் அணிகலனணிந்த முலைகளையும் தொண்டைவாய் நல்நலமும் - கொவ்வைக்கனி போன்ற செவ்வாயின் மிக்க அழகினையும்; தோளும் - அவர்தம் தோள்களையும்; துடி இடையும் - உடுக்கை போன்ற இடையினையும்; கண்டு அவாம் - கண்டு பெரிதும் விரும்புகின்ற; காமுகரும் யாமும் கணநரியும் - காமுகரும் எம்ம னோரும் கூட்டமான நரிகளும் ஆகிய இம்முத்திறத்தாருடைய அவா விண்டு உணரின் - விருப்பங்களையும் வேறுபடுத்தி ஆராய்ந் துணரின்; வேறு வேறு ஆம் - அவை வேறு வேறு வகைப் படுதலை அறியலாம்; என்க.

(வி - ம்.) அவாம் - அவாவும். வார் - நெடிய. குழல் - கூந்தல். வாள் - ஒளி. எயிறு - பல். பூண் - அணிகலன். தொண்டை: ஆகு பெயர்; கொவ்வைக்கனி. நன்னலம் - பேரழகு. இஃதிகழ்ச்சி. துடி - உடுக்கை. யாமும் என்றது எம்போன்ற முனிவரும் என்பதுபட நின்றது.

மகளிருடைய இவ்வுறுப்புக்களைக்கண்டு கழிகாமுகர் இன்ப நுகர விரும்புவர்; முனிவர் இவற்றின் இழிதகைமையையும் நிலையாமையை யும் இவற்றால் வருந்துயரங்களையும் எண்ணி வீடுபேற்றையே அவாவுவர். மற்று நரிகளோ இவற்றைத் தம்முணவாகக் கருதிப் பெரிதும் விரும்பும். ஆகவே இவற்றை விரும்பும் விருப்பம் வேறு வேறு ஆகும், என்றவாறு. (கஉஅ)

கஉகூ. கரையவா வாங்குங் கயமகன் கைத்தூண்டி
லிரையவாப் பன்மீன் னிடருறுவ தேபோல்
நுரையவா நுண்டுகிலு மேகலையுஞ் சூழ்ந்த
வரையவாய்ப் பட்டார்க்கு மாழ்துயரே கண்டீர்.

(இ - ள்.) கயமகன் கரையவா வாங்கும் கைத்தூண்டில் - சிறு கயவனொருவன் கரையேறுவனவாக இழுத்தற்கிட்டிருக்கும் சிறு தூண்டிற் பொன்னிற் கொளுவிய; இரை அவா - இரையை உண்ணப் பெரிதும் விரும்பி அதனை விழுங்கிய; பல் மீன் இடர் உறுவது போல் - பல்வேறு வகை மீன்களும் பெரிதும் துன்

புறுதல்போன்று; நுரை அவா நுண் துகிலும் மேகலையும் சூழ்ந்தன நீர் நுரைபோன்று காண்போர் அவாவு மழகுடைய நுண்ணூலா னியன்ற ஆடையும் மேகலையென்னும் அணிகலனும் சுற்றப்பட்ட; அரை அவாய் - அம்மகளிருடைய இடையைப் பெரிதும் விரும்பி; பட்டார்க்கும் - அவர்பால் அகப்பட்ட மாக்களுக்கும் எய்துவது; ஆழ்துயர் கண்டீர்! - ஆழ்ந்த துன்பமேயாம்; காணுங்கோள், என்க.

(வி - ம்.) கரையவாக : ஈறுகெட்டது. செய்யுள்விகாரம். கைத் தூண்டில் - சிறுதூண்டில். கையின்கண்ணதாகிய தூண்டிலுமாம். அவா - அவாவும்; நுரையவா என்புழி. மேகலை - ஓரிடையணிகலன். அரை - இடை; இடக்கரடக்கல். படுதல் - சிக்குதல்.

தூண்டிலிரையை யவாவி இடருறும் மீன், மகளிர் அரையை அவாவி ஆழ்துயரெய்துங் காமுகர்க் குவமை. (௧௨0)

௧௩0. மட்டார் மலர்புனைவும் வாணெடுங்கண் மையணிவும்
பட்டார் கலையுடையும் பல்வளையும் பைந்தோடு
நட்டாரை யெல்லா நரகுக்கே யுய்க்கு நாய்க்
கோட்டார்த்தார் செய்யும் கோலங்கள் வண்ணம்.

(இ - ள்.) நாய்க் கொட்டு ஆர்த்தார் - நாயுடம்பு போன்று இழிதகைமையுடைய உடம்பினை அணிசெய்கின்ற மகளிர்; மட்டு ஆர்மலர் புனைவும் - தலையில் தேன்பொருந்திய மலர்சூடிக்கோடலும்; வாள் நெடுங்கண்மை அணிவும் - வாள்போன்ற நெடிய கண்களிலே மையெழுதுதலும்; பட்டு ஆர் கலை உடையும் பல்வளையும் - அவர் தாம் தம்மிடையிலே உடுக்கின்ற பட்டு நூலானியன்ற ஆடை யாகிய உடையும் கையிலணிகின்ற பல்வேறு வளையல்களும்; பைந் தோடும் - செவியிலணிகின்ற பசிய தோடும் முதலிய; கோலங்கள் வண்ணம் - ஒப்பனைகளும் வண்ணங்களும்; நட்டாரை எல்லாம் - அம் மகளிரை நட்புச்செய்யும் காமுகரை யெல்லாம் இறுதியில்; நரகுக்கு உய்க்கும் - நரகிற்கே செலுத்துவனவாம் என்க.

(வி - ம்) மட்டு - தேன். புனைவு - புனைதல். அணி - அணிதல். கலையாகிய வுடை என்க. நட்டார் - நண்புசெய்தோர். நாய்க்கொட்டு - நாயுடல்போன்ற இழிதகைமையுடைய வுடல். கொட்டு - உடல். ஆர்த்தார் - அணிந்தார். மலர் புனைதல் முதலிய கோலங்களும் வண்ணமும் நரகிற்கு உய்க்கும் என்க. (௧௨௧)

௧௩௧. ஆடினாய் நான மணிந்தாய் கலன்மாலை
சூடினா யேனுஞ் சுணங்கார் வனமுலையா
யூடினா யாக வொழுக் கூற்றைப் பல்பண்டம்
மூடினாய் தோலின் முகமனுரை யேனே.

(இ - ள்.) சுணங்கு ஆர் வன முலையாய்-தேமல் பொருந்திய அழகிய முலைகளையுடைய அரிவையே; ஊடிறுய் ஆக - நீ என் மொழிகேட்டு வருந்துவாயாயினும் ஆக; முகமன் உரையேன்-யான் இப்பொழுது முகமன் மொழியேன்; (உண்மையே உரைப்பேன்) நானம் ஆடினுய் - நீயுந்தான் நீராடினை; கலன் மாலை சூடினுய் ஏனும் - அணிகலன்களையும் மலர்மாலைகளையும் அணிந்தனை; அணிந்தாயேனும்; ஒழுக்கு ஊற்றைப் பல்பண்டம் - மலமுதலியன ஒழுகாநின்ற ஊற்றினையுடைய குருதி என்பு முதலிய பல்வேறு பண்டங்களையும்; தோலின் மூடினுய் - தோலாலே மூடப்பட்ட இழிதகையுடலையுடையை யல்லையோ காண்!; என்க.

(வி - ம்.) நானம் - குளித்தல். இனி - புழுகுபூசினுய் எனினுமாம். கலன் - அணிகலன், சுணங்கு - தேமல். வனம் - அழகு. இம்மொழிகள் உனக்கு வருத்தந்தருமாதலால் நீ ஊடினுயாயினும் யான் முகமன் மொழியேன்; உண்மையேவுரைக்கின்றேன் காண் என்றவாறு மூடினுய் - மூடப்பட்டாய். (௧௨௨)

௧௩௨. மின்போ னுடங்கிடையும் வேயேய் திரடோளு
மென்றே யிவை மகிழ்ந்தீங் கென்முன்னே வந்தாயாற்
புன்றோலும் பல்லென்பும் போர்த்த புறங்காட்டு
ளன்றே யுறைவ னவற்ருன் மருள்வேனே.

(இ - ள்.) மின்போல் நுடங்கு இடையும் - (நீ என்முன் வந்துழி,) மின்னல் போன்று துவள்கின்ற நுண்ணிடையும்; வேய் எய் திரள் தோளும் - மூங்கிலை ஒத்த திரண்ட தோளும்; என்றே இவை மகிழ்ந்து - என்னு மிவற்ருல் செருக்குற்று; ஈங்கு என் முன் வந்தாய் - இங்கு என்னை மயக்குதற்கு என் முன்னர் வந்தாய், வந்து மென்னை ?; புன் தோலும் பல் என்பும் போர்த்த - மாஞே அழுகிய புன்மையான தோலையுடைய பிணங்களானும் பல்லாகிய எலும்புகளானும் போர்க்கப்பட்ட; புறங்காட்டுள் அன்றே உறைவன் - சுடுகாட்டிலேயல்லவா உறைகின்றேன்; அவற்ருல் மருள்வேனே - அவற்றினியல்பெல்லாம் கண்கூடாகக் காண்கின்ற யான் அப்பொருள்களைக் கண்டு மருட்கையடைவேனோ? மருளேன் காண்; என்க.

(வி - ம்.) இது தான் பெண்ணைக் கண்டு மருளாமைக்குக் காரணங் கூறியவாறும். சுடுகாடு மாந்தர் உடலின் இழிதகவெல்லாம் கண் கூடாகக் காண்டற்கேற்ற இடம் ஆதலின் யான் புறங்காட்டிலன்றே உறைவன் என்ருன். சுடுகாடு அங்ஙனமாதலை,

"என்புந் தடியு முதிரமு மியாக்கையென்
றன்புறு மாக்கட் கறியச் சாற்றி
வழுவொடு கிடந்த புழுவூன் பிண்டத்

தலத்தக மூட்டிய வடிநரி வாய்க்கொண்டு
உலப்பி லின்பமோ டுளைக்கு மோதையுங்
கலைப்புற வல்குல் கழுகுகுடைந் துண்டு
நிலைத்தலை நெடுவிளி யெடுக்கு மோதையும்
கடகஞ் செறித்த கையைத் தினா
யுடையக் கவ்வி யொடுங்கா வோதையும்
சாந்தந் தோய்ந்த வேந்திள வனமுலை
காய்ந்தபசி யெருவை கவர்ந்தா னோதையும்
பண்புகொள் யாக்கையின் வெண்பலி யரங்கத்து
மண்கணை முழவ மாக வாங்கோர்
கருந்தலை வாங்கிக் கையகத் தேந்தி
யிரும்பே ருவகையி னெழுந்தோர் பேய்மகள்
புயலோ குழலோ கயலோ கண்ணே
குமிழோ மூக்கோ விதழோ கவிரோ
பல்லோ முத்தோ வென்னா திரங்காது
கண்டொட் டுண்டு கவையடி பெயர்த்துத்
தண்டாக் களிப்பி னாடுங் கூத்து" (மணி—சக்கர—க0எ-உ௯)

எனவரும் மணிமேகலையினுங் காண்க.

மருள்வேனே என்னும் வினா அதன் எதிர்மறைப் பொருளை வற்புறுத்துகின்றது. (கஉ௩)

கஉ௩. மெழுகுருகு மண்பாவை மேதையான் காய்த்தி
யொழுகுருகு செம்பொன்னா லுண்ணிறைந்த தேபோல்
புழுகுருகு மேய்காட்டிப் போல்லாத போக்கி
யழகுருவு கோண்டா ளறவமிர்த மூண்டாள்.

(இ - ள்.) அறம் அமிர்த முண்டாள் - இவ்வாறு முனிச்சந்திர பட்டாரகன் கூறிய அறமாகிய அமிழ்தத்தைப் பருகியவளாகிய நீலகேசி; உருகும் மெழுகு மண் பாவை - உருகுமியல்புடைய மெழுகாற் செய்து மண்பூசப்பட்ட பாவை; மேதையான் - சிற்பக்கலையுணர்ந்தவனாகிய அறிஞன் ஒருவனால்; காய்த்தி - காய்ச்சப்பட்டு; உருகு ஒழுகு செம்பொன்னால் - உருகுகின்ற ஒழுகுமியல்புடைய செவ்விய பொற்குழம்பால், உள் நிறைந்தது போல் - தன் உள்ளே மெழுகாலியன்ற விடமெல்லாம் நிறைக்கப்பட்டாற் போன்று; புழுகு உருக மெய்காட்டி-புழுகு உருகி மணக்கும் பெண்ணுடலை முன்பு காட்டி; பொல்லாத போக்கி - அவ் வறவமிழ்துண்டமையால் அவ் வுடலகத் துயிரின்கண்ணவாகிய பொல்லாத காதிவினைகளைப் போக்கி; அழகு உருவு கொண்டாள்-உண்ணின்ற நன்ஞானம் நற்காட்சி நல்லொழுக்கமாகிய இம் மூன்றும் மெய்ப்

பாடாகத் தோன்ற ஞானவொளி பரப்பும் அழகிய வடிவமுடையா ளாயினள் என்க.

(வி - ம்.) பொற்சிலை வடிக்குஞ் சிற்பக்கலைஞர் முதலில் மெழுகால் உருவஞ்செய்து அதன்மேற் பன்முறையும் மண்பூசி உலர்த்திப் பின் பொன்னை உருக்கி அப்பொற்குழம்பு புகற்கென வமைத்த துளையில் விடுவர்; அப் பொன்புகும்பொழுது மெழுகு வெளியேறற்கமைத்த துளை வழியே அஃதுருகி வெளிப்பட அகமெல்லாம் பொற்குழம்பு பரவி அழகிய பொற்பாவையாக அமையும். இதனை அறங்கேட்டமையால் மறம் நீங்கி அகமெல்லாம் அறங்கிடந்த நெஞ்சினளாகிய நீலகேசிக்கு உவமையாக வெடுத்துக்கூறும் இந்நூலாசிரியர் திறம் பெரிதும் இன்பந் தருவதொன்றாதலுணர்க.

உள்ளத்தே அறம் நிறைந்துழி அதன் ஒளி மெய்ப்பாடாகப் புறத் தேயும் ஒளிவிரித்துத் திகழ்தலின், அழகுருவு கொண்டாள் என்றார். புழுகுருக மெய்காட்டியது அவள் வந்துழி அவள் உடல் நிலை கருதிற்று, பொல்லாத என்றது காதிகன்மங்களை. அவை ஞானாவரணீய முதலாகப் பலவாகலின் பன்மை கூறினார்.

அழகுருவு கொண்டமைக்கு ஏதுக்கூறுவார் அறவமிர்த மூண்டாள் என்று பெயர் கூறினார். (கஉ௪)

வேறு

நீலகேசியின் செயல்கள்

கஉ௫. காய்வ செயினுங் குழவிக்கட்
கவன்று கழிகண் ணோட்டத்தாற்
றாய்தன் முலையி லமுதூட்டுந்
தகைய னறவோன் றானென்று
மாய வுருவ மாறித்தன்
மற்றை யுருவ மேகொண்டு
பேயேன் செய்த பிழையெல்லாம்
பெரும பொறுவென் றிறைஞ்சினாள்.

(இ - ள்.) காய்வ செயினும்-தான் வெகுளுதற் கேதுவாகிய தீச்செயல்களைச் செய்தவிடத்தும்; தாய் குழவிக்கண் கவன்று - ஒரு தாயானவள் அக்குழந்தையின் அறியாமைக்குத் தானே வருந்தி அதனை வெகுளாமல்; கழி கண் ஓட்டத்தால் முலையில் அமுது ஊட்டும் - தனக்கியல்பான மிக்க அருள் காரணமாக அக் குழந்தைக்குப் பரிந்து தன் முலைப்பாலை ஊட்டாநிற்பாளன்றோ; அற வோன் தான் தகையன் என்று - அறச்செம்மலாகிய இம்முனி வனும் அத்தகையனே அம்மவோ! என்று பாராட்டி; மாய உருவம் மாறி - தான் மேற்கொண்டுவந்த காமலேகையாகிய பொய்யுருவத்

தினை மாற்றி; மற்றைத் தன் உருவமே கொண்டு - முந்திய தனது வடிவத்தையே யுடையளாய் நின்று; பெரும - பெருமானே!; பேயேன் செய்த பிழை எல்லாம் பொறு என்று - இயல்பாகவே பெரும் பேய்ச்சியாகிய அடிச்சி திருமுன் அறியாமையாற் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்தருளுக! என்று கூறி; இறைஞ்சினாள் - வணங்கினாள்; என்க.

(வி - ம்.) காய்வ - வெகுளப்படும் தீச்செயல்கள். கவன்று - வருந்தி. கழிகண்ணோட்டம் - பேரருள். அமுது - பால். ஊட்டும் - ஊட்டுவாள். அத்தகையன் அறவோன் எனச் சுட்டுச்சொல் பெய்க. மாயவுருவ மென்றது, பொய்யாகிய காமலேகையுருவத்தை. தன்னுருவம் - நீலகேசியுருவம். (சஉ௬)

கஙரு. முழங்கு முந்நீர் வையத்து
முனிதக் கார்தம் முன்னின்று
வழங்க வாட்ட மொழிவர்நீ
மன்னும் பொறுத வகையுண்டோ
வழுங்க லென்ற வறவோன்ற
னலர்கோள் பாதம் பேரிதேத்தித்
தோழுங்கை யாளக் குணக்குன்றைத்
துதிப்ப னென்று தோடங்கினாள்.

(இ - ள்.) முழங்கும் முந்நீர் வையத்து - முழங்காநின்ற கடல்சூழ்ந்த இவ்வுலகத்திலே எத்தகையோரும் தம்மால்; முனிதக்கார் - வெகுளப்படுதற்குரிய தீமைகளைச் செய்தவர்; தம் முன் நின்று - தமக்கு முன் வந்து நின்று; வழங்க - சில மொழிகள் வழங்கியவளவானே; வாட்டம் ஒழிவர் - தம் வெகுளியை விட்டு மகிழ்வர்; பொறுத வகை உண்டோ - அங்ஙனமிருப்பவும் பெண்ணாகிய நீ செய்த பிழையை முனிவனாகிய யான் பொறுதிருத்தலும் உண்டேயோ!; நீ அழுங்கல் என்ற - இதுபற்றி நீ வருந்தாதே கொள்! என்று தேற்றுரை கூறிய; அறவோன்றன் அலர் கொள் பாதம் - முனிவனுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடிகளை; பெரிது ஏத்தித் தொழும் கையாள் - மிகவும் புகழ்ந்து தொழாநின்ற கைகளையுடைய அந்நீலகேசி; அக்குணக்குன்றை - அந்தக் குணக்குன்றம் போன்ற முனிவனை; துதிப்பன் என்று தொடங்கினாள் - யான் இனி என் நெஞ்சார நாவாரப் பாடி வாழ்த்துவேனென்று கருதி வாழ்த்தத் தொடங்குபவள்; என்க.

(வி - ம்.) முந்நீர் - மூன்றுவகை நீரையுடையதென அன்மொழித் தொகையாய்க் கடலையுணர்த்திற்று. இதனை முன்னீர் என்றும் வழங்குப. அதற்குப் பழைதாகிய நீரையுடையதென்று பொருளாமென்க.

முனிதக்கார் – வெகுளற்குரியவர். வாட்டம் - வெகுளி. வாட்ட மொழிவர் என்றது - உலகமாந்தரே வாட்டமொழிவர் என்பது படநின்றது. மன்னும்: அசை. பொறுதவகையுண்டோ என்றது பெண்ணாகிய நின்பால் முனிவனாகிய யான் பொறுதவகையுமுண்டோ என்பதுபட நின்றது. நீ அழுங்கல் என வியைக்க. அலர் - மலர். தொடங்கினாள் : பெயர். தொடங்கினவள் (௧௪௩) என்றாள் என முடியும். (௧௨௬)

## நீலகேசி முனிவனை எத்துதல்

௧௩௬. வெள்ள மாரி தரித்தோய்நீ
வினையின் வாயி லடைத்தோய்நீ
யுள்ள மாட்சி யுடையோய்நீ
யுயப்போம் வண்ண முரைத்தோய்நீ
நள்ளேன் யாமத் தியான்செய்த
நவைக ளெல்லா நனிகண்டு
மெள்ள லில்லாப் பெரியோய்நின்
னிணையில் பாத மணைவல்யான்.

(இ - ள்.) நீ வெள்ளம் மாரி தரித்தோய் - நீ வெள்ளம் போன்று பெருகுதற்குக் காரணமான ஞான மழை பொழிதலை மேற்கொண்டனை; நீ வினையின் வாயில் அடைத்தோய் - நீ பிறப் பிற்குக் காரணமான இருள் சேர் இருவினையும் வருகின்ற வழியை அடைத்தனை; நீ உள்ளம் மாட்சி உடையோய்-நீ நின்னர் நெஞ்சத் தாலே சாலவும் மாண்புடையை; நீ உயப்போம் வண்ணம் உரைத் தோய் - நீ யான் பிறப்புத் துன்பத்தினின்றும் உய்ந்து போதற் குரிய அறங்களைக் கூறியருளினை; நள் என் யாமத்து யான் செய்த நவைகள் எல்லாம் நனிகண்டும் - நள்ளென்னும் ஒப்போசையை (அனுகரணவோசை) யுடைய இடையாமத்திலே அறிவிலியாகிய யான் செய்த தீமைகளை யெல்லாம் நன்குணர்ந்து வைத்தும்; நீ எள்ளல் இல்லாப் பெரியோய் - நீ தானும் என்னைச் சிறிதும் இகழ்தலில்லாத பெருந்தகைமையுடையை அல்லையோ; யான் நின் இணை இல் பாதம் அணைவல் - அனையை யாதலின் அடிச்சி நின் னுடைய ஒப்பற்ற பெருமையுடைய திருவடிகளையே இனிப் புகலாகக் கொள்கின்றேன்; என்க.

(வி - ம்.) நீ வெள்ளமாகப் பெருகும்படி பெய்யும் ஞானமழையைத் தரித்தோய் என்றவாறு. வினை - இருள் சேரிருவினை. "மனத்தின் கண் மாசிலனாதல் அனைத்தறன்" என்பது பற்றி நீ மாசற்ற நன்னருள்ள முடையை காண் என்பாள், நீ உள்ளம் மாட்சி யுடையோய் என்றாள். உயப்போதல்-பிறவிப்பிணியுட் படாமல் உய்ந்து போதல். வண்ணம்– அறம். நள் – ஒப்போசை. செறிவுமாம். நவை - தீமை. நனி : மிகு

திப் பொருள் குறித்த வுரிச்சொல். ஆதலால் நின் இணையில் பாதமணை வல் என்க. ஏ துச்சொல் வருவித்தோதுக. (கஉஎ)

கரு௭. மூட மூன்று முரைத்தோய் நீ
முரண்செய் தோற்ற முனிந்தோய் நீ
வீடுங் கட்டும் விரித்தோய் நீ
வினையி னின்பம் வெறுத்தோய் நீ
காடு கிளர்ந்து காட்டியான்
கலக்க வொன்றுங் கலங்காத
பாடற் கரிய பெரியோய்நின்
பழிப்பில் பாதம் பணிவல்யான்.

(இ - ள்.) நீ மூடம் மூன்றும் உரைத்தோய் - நீ அடிச்சி தெளியும்படி மூன்றுவகை மூடங்களையும் அறிவுறுத்தினை, நீ முரண் செய் தோற்றம் முனிந்தோய் - நீ தானும் பகை செய்யும் பிறப்பினைச் சினந்தழித்தனை; நீ வீடும் கட்டும் விரித்தோய் - நீ வீட்டியல்பும் கட்டியல்பும் இத்தகையன என்று விரித்தோதி விளக்கினை; நீ வினையின் இன்பம் வெறுத்தோய் - நீ தானும் இருவினையாலெய்தும் சிற்றின்பங்களை வெறுத்தனை; யான் காடு கிளர்ந்து காட்டி - யான் இப்பெருங் காட்டின்கண் என் மாய வினைகளை மிகுத்துக் காட்டி; கலக்க ஒன்றும் கலங்காத - நின்னெஞ்சத்தைக் கலக்காநிற்பவும் அவற்றால் ஒரு சிறிதும் கலக்கமெய்தாத; பாடற்கு அரிய பெரியோய் - புகழ்தற்கரிய சிறப்பினையுடைய பெரியோனே, யான் நின் பழிப்பு இல் பாதம் பணிவல் - யான் நின்னுடைய தூய திருவடிகளை வணங்குவேன்; என்க.

(வி - ம்.) மூடம் மூன்று: உலகமூடம் பாசண்டி மூடம் தேவ மூடம் என்பன. முரண் - பகை. தோற்றம் - பிறப்பு. கட்டு - கட்டுண்ணல். வினையினின்பம்-சிற்றின்பம். பாடற்கு - புகழ்தற்கு. பழிப்பு - குற்றம். (கஉஅ)

கரு௮. அல்லற் பிறவி யகன்றோய்நீ
ஆசை வெவ்வே றறுத்தோய்நீ
வெல்லற் கரிய வனங்கனைமெய்
வெண்ணீ றாக வெகுண்டோய்நீ
கொல்லக் கருதி வந்தேனைக்
குணங்க ளாலே வணங்குவித்த
சொல்லற் கரிய பெரியோய் நின்
றூமில் பாதந் தொழுவல்யான்.

(இ - ள்.) நீ அல்லல் பிறவி அகன்றோய் - நீ துயர்க்கெல்லாம் காரணமான பிறவியினீங்கி முத்தனுயினை; நீ ஆசை வெவ்வேர் அறுத்தோய் - நீ அப்பிறவிக்கு வித்தாகிய அவாவின் வெவ்விய வேரினை அறுத்தொழித்தனை; நீ வெல்லற்கு அரிய அனங்கனை - நீ யாராலும் வெல்லுதற்கரிய காமவேளை; மெய் வெண்ணீறு ஆக வெகுண்டோய் - உடல் வெள்ளிய சாம்பராகும்படி சினந்தெரித்தனை; கொல்லக் கருதி வந்தேனை - அறியாமை காரணமாக நின்னைக் கொல்ல நினைத்து வந்த எளியேனை; வெருளாமல் குணங்களாலே வணங்குவித்த - நின் குண நலங்களைக் காட்டுமாற்றாலே என்னை வணங்கும்படி செய்தருளிய; சொல்லற்கு அரிய பெரியோய் - சொல்லொணுத பெரிய புகழையுடையோய்; யான் நின் தோம் இல் பாதம் தொழுவல் - அடிச்சியாகிய யான் நின்னுடைய தூய திருவடிகளை வணங்குவேன்; என்க.

(வி - ம்.) அல்லலுக்குக் காரணமான பிறவி என்க. அனங்கன்—காமவேள். காமத்தைத் துவர வொழித்தாய் என்றவாறு. வெண்ணீறு — சாம்பல்.

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல்" (குறள் - ௧௫௮)

என்னும் நல்லறம் பற்றிக் கொல்லக் கருதி வந்தேனைக் குணங்களால் வணங்குவித்தாய் என்பது கருத்து. தோம் - குற்றம். (௧௨௧)

௧௨௨. உடம்பின் மெய்ம்மை யுணர்ந்தோய்நீ
யுறங்க லார்வ மறுத்தோய்நீ
யிடங்கோ ளின்னு வினையெல்லா
மெரிக்கும் வாயில் விரித்தோய்நீ
யடங்க லில்லேற் கருளினு
லறங்கூர் மாரி பொழிந்தோய்நின்
றடங்கோள் சேந்தா மரையடியேன்
றலைய வேயென் றலையவே.

(இ - ள்.) நீ உடம்பின் மெய்ம்மை உணர்ந்தோய் - நீ உடலினது நிலையாமையாகிய உண்மையை நன்குணர்ந்தனை; நீ உறங்கல் ஆர்வம் மறுத்தோய் - ஆதலால், நீ அவ்வுடலைத் தானுகக் கருதி அதன்கண் அழுந்தி மயங்கிக்கிடத்தலையும் அதன்கண் அன்பு செய்தலையும் விடுத்தனை; நீ இடம் கொள் இன்னு வினை எல்லாம் - நீ பிறப்பிற்கு இடந்தருகின்ற தீவினைகளை யெல்லாம்; எரிக்கும் வாயில் விரித்தோய் - சுட்டழித்தற்குரிய நன்னெறிகளை யெல்லாம் நன்கு விரித்துணர்த்தினை; நீ அடங்கல் இல்லேற்கு - நீ நின்பால் அறங்கேட்டற் கின்றியமையாத அடக்கமில்லாத தீவினையாட்டி

யாகிய எனக்கும்; அருளினுல் கூர் அறம் மாரி பொழிந்தோய் - அருளுடைமையாலே மிகுந்த நல்லறமாகிய மழையைப் பொழிந்தும் வித்தனே; நின் தடம் கொள் செந்தாமரை அடி - ஆதலால் நின்னுடைய குளத்திலே மலர்ந்த செந்தாமரை மலர் போன்ற திருவடிகளிரண்டும்; என் தலைய தலைய - இனி என் புன்றலை மேலனவே புன்றலை மேலனவேகாண்; என்க.

(வி - ம்.) உடம்பின், மெய்ம்மை. நிலையுதலில்லாத்தன்மையும் பிறவும். உறங்கல் - பிறப்பிற்கட்டுண்டு மயங்கிக்கிடத்தல். ஆர்வம் கூறியதனுல் செற்றமும் கொள்க. வாயில் - வழி. அடங்கல் - அடக்கமுடைமை. இல்லேற்கும் எனல் வேண்டிய இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற்ருெக்கது. தடம் - குளம். பெருமையுமாம். தலையவே தலையவே என்னும் அடுக்கு ஆர்வமிகுதி காட்டிற்று. "மலர் மிசை நடந்தோன் மலரடி யல்லதென் தலைமிசை யுச்சி தானணி பெருஅது" என வரும் கவுந்தியடிகள் மொழிகளும் (சிலப்-கO. உOச-ㅡ) காண்க. (கசO)

வேறு

கசO. தடம்படு மாரி தலைத்தலை நூற
விடம்படு பல்லுயிர் மெய்வழி யேற
வுடம்போடு வேறெனு மோர்ப்பினை யாகி
யடங்கிய நின்னடி யஞ்சலி செய்வேன்.

(இ-ள்.) தடம்படு மாரி தலைத்தலை நூற-அந்தோ! தீவினையேன் பெரிய மழையாகி நின்றலையின்மேலே பெய்து நுறுக்கவும்; விடம் படு பல் உயிர் மெய்வழி ஏற - நஞ்சுடைய பாம்பும் தேளும் பிறவுமாகிய பல்வேறுயிர்களாகி வந்து நின் உடல் மேலே ஏருகிற்பவும்; உடம்பொடு வேறு எனும் ஓர்ப்பினை ஆகி-நீ அப்பொழுதெல்லாம் இவ்வுடம்பு வேறு யான வேறு என்னும் கினைவினையுடையையாய்; அடங்கிய - அவற்ருல் கலக்கமுருது அமைதி கொண்டிருந்த; நின் அடி - மெய்யுணர்வுடைய நின்னுடைய திருவடிகளை; அஞ்சலி செய்வேன் - அடிச்சி வணங்குவேன்; என்க

(வி - ம்.) இது நீலகேசி தான் செய்த தீவினைக்கு இரங்கிக்கூறிய படியாம். தடம் - பெருமை - குளமாகப் பெருகும் மழை எனினுமாம். விடம்படு பல்லுயிர் - பாம்பு தேள் முதலியன. (கசக)

கசக. கல்லுரு கக்கடுங் காற்றெறி போதினி
னல்லிருள் கூர்சுடு காட்டிட மாகப்
பல்வினை யும்பறிப் போய்நின் பாதம்
நல்வினை யிற்ருெழு வேனினி நாளும்.

(இ - ள்.) கல் உருகக் கடுங் காற்று எறி போதினில் - கல்லும் வெப்பத்தாலே உருகும்படி கடிய சூறைக் காற்று வீசும்

போதும் அஞ்சாமல்; அல் இருள் கூர் சுடுகாட்டு இடமாக - இர வினது இருளானது மிகாநின்ற பொழுதும், இச்சுடுகாடே தன துறையுளாகக் கொண்டு நோன்பாற்றி; பல்வினையும் பறிப்போய் - காதி முதலிய பல்வேறு வினைகளையும் களைகின்ற பெரியோய்!; நின் பாதம் நல்வினையின் - நின்னுடைய திருவடிகளை ஆகூழ் உண்மை யின்; நாளும் இனித் தொழுவேன் - நாடோறும் இனி யான் வணங்குவேன்!; என்க.

(வி - ம்.) இஃது உற்ற நோய் நோற்கும் அம்முனிவனது பரிசை வெற்றியைப் பாராட்டியபடியாம். பல்வினை - ஞானாவரணீயம் முதலியன. அல் - இரவு. காடிடம் - காட்டிடமென ஒற்று இரட்டித்தது. இங்ஙனம் தொழக்கிடைத்ததற்கு ஆகூழே காரணம் என்பாள், நல்வினையிற்றொழுவேன் என்றாள். (கக௨)

கசஉ. மங்குன் மழைபொழி மாரிபெய்ந் நாளிற்
கலங்குலெண் ணில்லங் கவலைசெய் காட்டு
ளெங்கு மியங்கல னென்றிருந் தோய்நின்
பங்கயம் போல்வன பாதம் பணிவேன்.

(இ - ள்.) மாரி பெய் மங்குல் மழை பொழி நாளில் - மழை பெய்தற்குரிய கார்ப்பருவத்தே இரவில் மழை பொழிகின்ற நாள் களினும்; கங்குல் இல்லம் எண் கவலை செய் காட்டுள் - இரவிலே இல்லங்களை நினைக்கின்ற கவலையையுண்டாக்கும் இப்பெருங் காட்டி னூடே; எங்கும் இயங்கலன் என்று இருந்தோய்-யான் இல்லங்களை நாடி யாண்டுஞ் செல்லேன் என்னும் மனத்திட்பத்தோடே நோற் றிருந்த நோன்மையுடையோயே!; நின் பங்கயம் போல்வன பாதம் பணிவேன் - அடிச்சி நின்னுடைய செந்தாமரை மலரை நிகர்த்தன வாகிய திருவடிகளை வணங்குவேன்; என்க.

(வி - ம்.) மங்குல் - இரவு. மாரி - கார்ப்பருவம். கங்குல்-இருளு மாம்; கார்காலத்து மழை பெய்யு மிரவிலும் இல்நாடி இயங்காது நோற்றிருந்தாய் என இதுவும் அவனது பரிசை வெற்றியைப் பாராட்டிய படியாம். இல்லம் எண்ணும் கவலை செய்யும் காடு என இயைக்க. இல்லம் நாடி என வருவித்தோதுக. (கக௩)

கசந. இற்றவர் தம்முட லின்றிட யாமம்
முற்ற நரிமுர லும்முது காட்டுட்
பற்றற வேநினை வோயிரு பாதம்
சுற்றுபு யான்விதி யிற்றொழு வேனே.

(இ - ள்.) இற்றவர் தம் உடல் தின்றிட - இறந்தவருடைய உடலைத் தின்னும்பொருட்டு; நரி யாமம் முற்ற முரலும் முது காட்டுள் - நரிகள் இரவு முழுதும் ஊளையிடுதற்கிடனான இச்சுடு

காட்டின்கண்; பற்றறவே நினைவோய் - நோன்புடனிருந்து உடற் பற்று அறுதற்கே தவமுயலாநின்ற சான்றோனே!; யான் விதியில் இருபாதம் சுற்றுபு தொழுவேன் - அடியேன் வழிபாட்டு நூல் விதித்த முறைப்படி நின்னிணையடிகளை வலமாக வந்து தொழுவேன்; என்க.

(வி - ம்.) இற்றவர் - இறந்தவர். யாமம் - இரவு. முற்ற - முழுதும். முடியுமளவு எனினுமாம். முதுகாடு – பழைதாகிய சுடுகாடு. பற்று - புறப்பொருளாகிய உடல் முதலியவற்றில் உண்டாகும் நசை. சுற்றுபு - சுற்றி; சூழ்வந்து. விதி - நூல்விதி. (கந௪)

கச௪. திண்டிறல் சேர்சிறு பேயறை கீறி
வெண்டலை யால்விளை யாடிய காட்டு
ளெண்டுக ளும்மெரிப் போய்நின பாதம்
வண்டறை பூவொடு வந்தனை செய்வேன்.

(இ - ள்.) திண் திறல் சேர் சிறு பேய் - திண்ணிய வலிமையுடைய சிறிய பேய்ப்பிள்ளைகள்; அறை கீறி - வகுப்பறைகள் கீறிக்கொண்டு; வெள் தலையால் விளையாடிய - வெள்ளிய தலைகளைக் காயாக வைத்துச் சூதாடாநின்ற; காட்டுள் - அச்சுதருமிச்சுடு காட்டின்கண் தனித்திருந்து; எண் துகளும் எரிப்போய் - காதி வினைகளாகிய எட்டுவகை அழுக்குகளையும் சுட்டுச் சாம்பராக்குவோய்!; நின பாதம் - நின்னுடைய திருவடிகளை; வண்டு அறை பூவொடு வந்தனை செய்வேன் - வண்டுகள் பாடுதற்கிடனான மலர்ப் பலி தூவி வணக்கஞ் செய்குவேன்; என்க.

(வி – ம்.) திறல் - வலிமை. சிறுபேய் - பேய்ப்பிள்ளைகள். அறை - வகுப்பறை. தலை காயாகக்கொண்டு சூதாடிய வென்பது அறை கீறினமையாற் பெற்றும். நின : அகரம் ஆறுவதன் பன்மையுருபு. அறைதல் - பாடுதல். (கந௫)

கச௫. பிணங்க ளிடையிடை பேரழ லீமத்
தணங்கு துணங்கைசெய் தாடிய காட்டுட்
குணங்க ளுடையன குன்றுத லில்லாய்
வணங்குவ னின்னடி வைகலி னும்.

(இ - ள்.) பிணங்கள் இடை இடை - பிணங்களின் ஊடேயூடே; பேரழல் ஈமத்து - பெரிய தீயினையுடைய விறகடுக்கின் ஒளியிலே; அணங்கு - பேய்கள்; துணங்கை செய்து ஆடிய காட்டுள் - தமக்குரிய துணங்கைக் கூத்தின் முறையைச் செய்து ஆடாநின்ற இச்சுடுகாட்டின்கண் தனித்திருந்தும்; உடையன குணங்கள் குன்றுதல் இல்லாய் - நீ பெற்றுள்ளனவாகிய நற்குணங்கள் ஒரு சிறிதும் குறைதலில்லாத நிறை தவத்தோனே!; நின் அடி -

நின் திருவடிகளை; வைகலில் நாளும் - தங்குதலில்லாது கழியா நின்ற நாள் தோறும்; வணங்குவன் - தொழுவேன்; என்க.

(வி - ம்.) ஈமம் – பிணஞ்சுடும் விறகடுக்கு. ஈண்டு ஒளிக்கு ஆகு பெயர். அணங்கு - பேய். துணங்கை - ஒருவகைக் கூத்து; மூன்றுங் கூறினும். குணங்கள்-ஈண்டு நற்காட்சி முதலியன. வைகல்- தங்குதல். (கசுசு)

கசசு. நுனித்தகு நன்னெறி நோக்கின ளாகி
முனிப்பிறை யோனடி மும்மையி னேத்திப்
பனிக்கட லன்னதோர் பாவமுஞ் செய்தே
னினிச்செய்வ தென்னுரை யாயெனக் கென்றாள்.

(இ - ள்.) நுனித்தகு நல்நெறி நோக்கினள் ஆகி - நுண்மை யுடைமையாற் றகுதியுடைய நன்மையுடைய அறநெறிச் செல வினையே கருதுபவளாகி; முனிப்பிறையோன் அடி - அம்முனிச் சந்திரபட்டாரகனுடைய திருவடிகளை, மும்மையின் ஏத்தி - மனம் மொழி மெய் என்னும் முக்கருவிகளானும் வழிபாடு செய்து; பனிக்கடல் அன்னது ஓர் பாவமும் செய்தேன் - பெரியோய்! எளியேன் நின் திறத்திலே குளிர்ந்த கடலளவு பெரியதொரு தீவினையுஞ் செய்தொழிந்தேன்; இனிச் செய்வது என் - அத் தீவினை தீர்தற்கு அடியேன் இனிச் செய்யக்கடவ செயல் யாது?; எனக்கு உரையாய் என்றாள் - எளியேனுக்குக் கூறியருளுக என்று வேண்டினள், என்க.

(வி - ம்.) நுனி - நுண்மை. நோக்கு ஈண்டு நோக்கம்- கருதுதல். முனிப்பிறையோன் - முனிச்சந்திரன். மும்மையின் - மனம் மொழி மெய் எனும் மூன்றானும். பாவம் என்றது அம்முனிவனுக்கியற்றிய தீவினையை. அதற்குக் கழுவாயாகச்செய்வது என என்க. (கசுஎ)

வேறு

முனிவன் தேற்றுரை

கசஎ. விலங்கு வெங்நர காதிக டம்முள்
விளிந்து தோன் றிவிழு நோயொடு முற்றக்
கலங்கி யெங்குங் கண்ணில வாகிக்
கவலைவெள் ளக்கட லிற்குளித் தாழு
நலங்களில் லாவுயிர் தங்களுக் கெல்லா
நடுக்கநீக் கியுயர் நன்னிலை யீயுஞ்
சலங்களில் லாப்பெரி யோன்சரண் கொண்ணீ
சனங்கட் கெல்லா மவன்சர ணென்றான்.

(இ - ள்.) விலங்கு வெம் நரகு ஆதிகள் தம்முள் தோன்றி- விலங்குப்பிறப்பும் வெவ்விய நரகர் பிறப்பு முதலிய பிறப்புகளிலே பிறந்தும், விளிந்து - இறந்தும்; விழு நோயொடும் உற்று - துயர் மிக்க நோய்களோடு பொருந்தியும்; கலங்கி - மனங்கலங்கி; எங்கும் கண் இலவாகி - எவ்விடத்தும் தமக்குக் களைகணுவாரைக் காணப் பெருவாகி; கவலை வெள்ளக் கடலில் குளித்து ஆழும் - துன்பமாகிய பெருகிய கடலிலே மூழ்கி அழுந்தா நின்ற; நலங்கள் இல்லா உயிர் தங்களுக்கு எல்லாம் - இன்பஞ் சிறிதும் எய்துதல்இல்லாத உயிர்களுக்கெல்லாம்; நடுக்கம் நீக்கி உயர் நல்நிலை ஈயும்-அவற்றின் துன்பமெல்லாம் போக்கி உயர்ந்த வீட்டின்பத்தை வழங்குஞ் சிறப் பினையுடைய; சலங்கள் இல்லாப் பெரியோன்-அகாதி முத்தனுகிய அருகக் கடவுளுடைய; சரண் கொள் நீ - திருவடிகளையே நீயும் புகலாகக் கொள்ளக்கடவை; சனங்கட்கு எல்லாம் அவன் சரண் - என்றுக்கெனின், மாந்தர்க்கெல்லாம் அக்கடவுளே புகலிடமாகுவன் ஆகலான்; என்க.

(வி. - ம்.) நரகு - நரகர். விளிந்தும் தோன்றியும் எனல் வேண்டிய எண்ணும்மைகள் தொக்கன. விழுமம் - சண்டுத் துயரம். மிக்கதுயரம் என்பார், விழுநோய் என்றார். கண் - களைகண். அகக் கண்ணிலவாகி எனினுமாம். கவலையாகிய கடல். நலங்கள் - இன்ப முதலியன. நடுக்கம் - துன்பத்திற்கு ஆகுபெயர். நன்னிலை - வீடுபேறு. சலங்கள் - அழுக்குகள். சரண் - திருவடிச் சரணைச் சரணுகக்கொள் என்றவாறு. எம்மனோர் அடிகள் நினக்குச் சரணுகா மாந்தர்க்கெல்லாம் அவன் சரணே சரண் என்றவாறு. (கஅ)

முனிவரன் நீலகேசிக்குக் கழுவாய் கூறுதல்

கசஅ. உய்தல் வாயுரைத் தாயதன் மேலு
மூயிருள்ளிட் டபல வுள்பொருள் சொன்னுய்
நைதலில் லாத்தெளி வோடுநன் ஞான
நானுங் கொண் டேனுன் னற்குண மெல்லாம்
பெய்துதந் தாய் பிழைத் தேற்கினி தாவோர்
பிராயச்சித் தம்பெரி யோயரு ளென்னச்
செய்த தீமை கெடக்கட னுட்டிற்
சினவ ரன்னெறி யேதெருட் டென்றான்.

(இ - ள்.) உய்தல் வாய் உரைத்தாய் - அதுகேட்ட நீலகேசி முனிவனை வணங்கிப் பெருமானே! அடியேன் புகல் புகுந்துய்தற் குரிய இடமும் உணர்த்தினை; அதன்மேலும் உயிர் உள்ளிட்ட பல வுள் பொருள் சொன்னுய் - அதுவேயுமன்றி உயிர் முதலில் பலவாகிய உள்பொருளியல்புகளெல்லாம் உணர்த்தினை; நைதய

இல்லாத் தெளிவோடு நன்ஞானம் நானும் கொண்டேன் - வருந்தா மைக்குக் காரணமான நற்காட்சியோடு நன்ஞானத்தையும் பேய்ச்சி யாகிய யானும் நின்றிருவருளாற் பெற்றேன்; உன் நல் குணம் எல்லாம் பெய்து தந்தாய் - மேலும் நின்னுடைய நற்குணங்கள் பலவற்றையும் மழைபோலப் பெய்து வழங்கினை; பிழைத்தேற்கு - பெருமானுக்குப் பிழை செய்த தீவினையாட்டியாகிய அடிச்சிக்கு; பெரியோய் இனிதா ஓர் பிராயச் சித்தம் அருள் என்ன - பெரு மானே இனிதாக ஒரு கழுவாய் கூறியருளல் வேண்டும் என்று இரவாநிற்ப; செய்த தீமை கெட - இதுகேட்ட அம்முனிவன், நங்காய்! வருந்தாதே கொள் நீ செய்த தீவினை கெடும்படி; கடல் நாட்டில் - கடல்சூழ்ந்த இந்த நாட்டின்கண் யாண்டுஞ் சென்று; சினவரன் நெறி தெருட்டு என்றான் - அருகக் கடவுள் திருவாய் மலர்ந்தருளிய நன்னெறியை யாவர்க்கும் கூறித் தெளிவிப்பாயாக! என்றான் என்க.

(வி - ம்.) உய்தல் வாய் என்றது, பெரியோன் சரண் கொள் நீ எனச் செவியறிவுறுத்ததனை. உயிருள்ளிட்ட பல் பொருள் முன்பு விளக்கினும். தெளிவு - நற்காட்சி. தேவர்களுக்கு நல்லொழுக்கம் வாயாமையின் அதனைவிடுத்து, தெளிவோடு நன்ஞானம் நானுங் கொண்டேன் என்றொழிந்தாள். பிழைத்தேற்கு - தீவினை செய்த எனக்கு. பிராயச்சித்தம் - கழுவாய். சினவரன் நெறி - ஆருகதசமய நெறி. தெருட்டுதல் - தெளிவித்தல். ஈண்டு முனிச்சந்திரபட்டாரகன் நீலகேசியைச் சினவரன்னெறி தெருட்டு என்று ஏவியபடி அவள் அந்நெறியை யாவர்க்கும் தெருட்டுதலின், இந் நூற்கு 'நீலகேசித் தெருட்டு' என்று பெயர் வந்தது என்பாருமுளர். (கசுக)

வேறு

கசுஈ. யாஅ தடிக ளதருளா
லருந்துய ரகல்வகை யதனன்
மாஅ துடைஅடி யிவைதா
மறவலே னெனவலங் கொண்டு
வேள தடவியன் டீலமேல்
விரிகதிர் மணிவிளக் காதி
தீஇ தடுதலை விலங்குஞ் சினகர
மூவகையிற் சென்றாள்.

(இ - ள்.) அடிகள் அது யாது அருளால் - அதுகேட்ட நீலகேசி அடிகளுடைய அருளிச் செயல் யாதொன்று அதனாலே; அருந்துயர் அகல்வகை அதனன் - எனது தீர்த்தற்கரிய துன்பம் தீர்ந்தமையாலே; மாது உடை அடி இவைதாம் மறவலன் என - அழகுடைய பெருமானுடைய இத் திருவடிகளை யான் ஒரு பொழு

தும் மறவேன் என்று கூறி; வலங்கொண்டு - அம்முனிவனை வலம் வந்து வணங்கி விடை கொண்டு; வேதட வியன் மலை மேல் - வேதண்டமென்னும் அகன்ற பெரிய வெள்ளிமலையின் மேல்; விரி கதிர் மணி விளக்கு ஆதி - விரிந்த ஒளியுடைய மணிக ளாகிய விளக்குகள் முதலியவற்றோடிருந்து; தீது அடுதலை விலங்கும் - உயிரினங்களைத் துன்பங்கள் நலிதலைத் தடுக்கின்ற சிறப்பினையுடைய; சினகரம்-சித்தகூடசைத்தியாலயத்தில்; உவகை யில் சென்றாள் - மகிழ்ச்சியோடே புகுந்தாள்; என்க.

(வி - ம்.) நான்கடிகளினும் நெட்டெழுத்துக்கள் அளபெடுத்தன. அடிகள் அருள் யாதொன்று அதனால் துயர் அகல்வகை என்றவாறு. மாது-அழகு. வேதண்டம் - வேதடம் எனக் கெடுதல் விகாரமெய்தி னின்றது. வேதண்டம் — வெள்ளிமலை. தீது அடுதலை விலங்கும் என்க: விலக்கும் — விலங்கும் என மெலிந்தது. சினகரம் — சித்த கூட சைத் தியாலயம் என்னும் அருகன் திருக்கோயில். (க௫0)

நீலகேசித் தெருட்டில் நீலகேசி நெறி தலைப்பட்ட சிலவானது

தருமவுரைச் சருக்கம் முற்றும்.

---

இரண்டாவது

# குண்டலகேசி வாதச் சருக்கம்

கஙிo. கொல்லை முல்லைபைங் கோங்கு
குருந்தங் கோடறண் குரவ
நல்ல மல்லிகை நறவம்
ஞாழல் தாழைபுன் னாகம்
பல்லி தழ்ப்பனிக் குவளை
பானல் பாதிரி பிறவு
மெல்லை யின்மல ரேந்தி
யிறைவன திடவகைக் கெழுந்தாள்.

(இ - ள்.) கொல்லை முல்லை - (முனிவன்பா லறங் கேட்டுச் சினகரம் புக்க நீலகேசி) முல்லை நிலத்துக் கொல்லையின் கண்ணதாகிய முல்லைக் கொடியின் மலர்ந்தனவும்; பை கோங்கு - பசிய கோங்குமரத்தின் மலர்ந்தனவும்; குருந்தம் - குருந்தமரத்தின் மலர்ந்தனவும்; கோடல் - காந்தளில் மலர்ந்தனவும்; தண் குரவம் - குளிர்ந்த குராமரத்தில் மலர்ந்தனவும்; நல்ல மல்லிகை - சிறந்த மல்லிகைக் கொடியின்கண் மலர்ந்தனவும்; நறவம் - நறவஞ் செடியில் மலர்ந்தனவும்; ஞாழல் - ஞாழலின்கண் மலர்ந்தனவும்; தாழை - தாழையில் மலர்ந்தனவும்; புன்னாகம் - சுரபுன்னையில் மலர்ந்தனவும்; பல் இதழ் பனிகுவளை - பலவாகிய இதழ்களையுடைய குளிர்ந்த குவளையில் மலர்ந்தனவும்; பானல் - கருங்குவளையில் மலர்ந்தனவும்; பாதிரி - பாதிரிமரத்தில் மலர்ந்தனவும்; பிறவும் - இன்னோரன்ன பிறவற்றில் மலர்ந்தனவும் ஆகிய; எல்லை இல் மலர் ஏந்தி - எண்ணிறந்த பல்வேறு மலர்களையும் ஏந்திக் கொண்டு; இறைவனது இடவகைக்கு எழுந்தாள் - அருகக் கடவுள் எழுந்தருளிய திருக்கோயிலுட் சென்றாள் என்க.

(வி - ம்.) கொல்லை - முல்லை நிலத்துள்ள வயல். கோங்கு - ஒருவகை மரம். குருந்தம்-ஒருவகை மரம். கோடல் — காந்தள். குரவம் - குராமரம். மணச் சிறப்புடைமை தோன்ற நல்ல மல்லிகை என்றார். நறவம் - அனிச்சமரம்; நறைக்கொடி என்பாருமுளர். ஞாழல் - ஒரு மரம். புன்னாகம்-சுரபுன்னை. பானல் - கருங்குவளை. எல்லை - அளவு. திருக்கோயிலின் ஊடே இறைவன் எழுந்தருளிய இடவகை என்க. இனி இடவகை-திருக்கோயில் என்பாருமுளர். (க)

கருக. நீட்சி யோக்கமோ டகல
நினையநின் றெங்கணு நோக்கி
மாட்சி யால்வலங் கொண்டு
மாதவத் திறைவனிற் பிழையாக்
காட்சி யேனெனி லெல்லாக்
கதவமுந் திறக்கெனத் திறப்ப
வாட்சி மூவுல குடைய
வடிகட மடியிணை தொழுதாள்.

(இ - ள்.) நீட்சி ஒக்கமோடு அகலம் நினைய - அங்ஙனந்
தொழுத நீலகேசி அந்தச் 'சித்தகூட சைத்தியாலய' மென்னும்
திருக்கோயிலினது நீளமும் உயரமும் அகலமுமாகியவற்றை
நினைந்து பார்த்தற் பொருட்டு; எங்கணும் நின்று நோக்கி - பற்
பல விடங்களினும் நின்று நின்று நோக்கி; மாட்சியால் வலங்
கொண்டு - மாண்போடே அதனை வலமாகச் சுற்றி வந்து; மா
தவத்து இறைவனின் பிழைக் காட்சியேன் எனின் - பெரிய
தவத்தினையுடைய கடவுள் ஆணையிற் பிழையாத நற்காட்சியை
யான் உடையேனாயின்; எல்லாக் கதவமும் திறக்க என - எல்
லாக் கதவுகளும் திறப்பனவாக வென்று கருதுமளவிலே; திறப்ப-
அக்கதவுகள் எல்லாம் திறவாநிற்ப; மூவுலகு ஆட்சி உடைய -
மூன்றுலகங்களையும் அருளாட்சி செலுத்துதலுடைய; அடிகள்
தம் அடி இணை தொழுதாள் - தடையேதுமின்றி அருகக் கடவுள்
திருவடிகளைக் கண்ணாரக்கண்டு கைகூப்பித் தொழுதனள் என்க.

(வி - ம்.) சித்தகூட சைத்தியாலயம், தெற்கு வடக்காக ஒருகா
வத நீளமும், அகலம் அரைக் காவதமும், உயரம் முக்காற் காவதமு
முடைத்தாய் அழகிய மலைமுழை வடிவினையுடைய தென்ப. ஒரு
முறை கண்கூடாகக் கண்ட பொருளே பின்னர் மானதக் காட்சியிற்
காணப்படுமாகலின் அத்திருக்கோயிலை எப்பொழுதும் மானதக் காட்சி
யிற் கொணரும் பொருட்டு அதன் இயல்பெல்லாம் நினைய எங்கணும்
நின்று நின்று நோக்கி வலம் வந்தாள் என்றார். (உ)

கருஉ. அத்தி யாளியோ டாமா
னட்ட மங்கல மரிய
பத்தி பாவைபல் பறவை
பயில்கொடி திமிசொடு பிறவும்
வித்த கம்பெரி துடைய
விசித்திர வுருவநன் மலராற்
சித்த நன்னெறி பயந்தான்
திருவடிக்கு அருச்சனை செய்தாள்.

(இ - ள்.) நல் மலரால் - பின்னர் அந் நீலகேசி தான் கொணர்ந்த நறுமண மலர்களாலே; அத்தி ஆளியோடு ஆமான் அட்டமங்கலம் அரிய பத்தி - யானையும் யாளியும் ஆமாவும எண்வகை மங்கலப் பொருள்களும் செய்தற்கரிய மலர்பபத்திகளும்; பாவை - பாவைவடிவங்களும்; பல்பறவை பயில் கொடி திமிசொடு- பல்வேறு பறவையும் வளர்கின்ற பூங்கொடிகளும் வேங்கை மரமும்; பிறவும் - இன்னோரன்ன பிறவுமாகிய; பெரிது வித்தகம் உடைய விசித்திர உருவம் - மிகவும் கலைப்பண்பமைந்த வியத்தகு வடிவங்களைப் புனைந்து; சித்த நல் நெறி பயந்தான் திருவடிக்கு - ஆருகத சமயமாகிய நல்வழியைத் தோற்றுவித்தவனாகிய அருகக் கடவுளுடைய திருவடிகளிலே வைத்து; அருச்சனை செய்தாள் - வழிபாடாற்றினாள்; என்க.

(வி - ம்.) அத்தி - யானை. யாளி - ஒருவகை வல் விலங்கு. சிங்கமுமாம். ஆமான் - காட்டுப்பசு. அட்டமங்கலம் - எண்வகை மங்கலப் பொருள்கள்; அவையாவன: கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, பதாகை, இணைக்கயல் என்பன. இவற்றை,

"சாமரை தீபம் தமனியப் பொற்குடம்
காமர் கயலின் இணைமுதலாத் — தேமருவு
கண்ணாடி தோட்டி கதலிகை வெண்முரசம்
எண்ணிய மங்கலங்க ளெட்டு"

எனவரும் (சிந்தா - நச்சி - உரை மேற்கோள். கோவிந்தை - சுச) வெண்பாவானுமுணர்க. பத்தி-வரிசை. பாவை-பாவைவடிவம். பயில் கொடி: வினைத்தொகை. திமிசு-வேங்கைமரம். வித்தகம்-கலைப்பண்பு. விசித்திரம்-வியப்பு. நன்மலராலே யானை முதலிய உருவங்கள் புனைந்து இறைவனடியிணையில் பெய்து வழிபட்டாள் என்க. (க)

கஞ. தூமஞ் சாந்தோடு சுண்ணந்
துதியோடு பரவுபு தொழுதே
தாமந் தாழ்தர நாற்றித்
தத்துவ தரிசிய துருவே
யாமென் றையென வியந்தாங்
கன்ன வாயிரத் தோரெண்
ணும நல்லிசை தொடுத்து
நாதகீ தங்களை நவிற்றும்.

(இ - ள்.) தூமம் சாந்தொடு சுண்ணம் துதியொடு பரவுபு தொழுது - நறும்புகை கொடுத்தும் சாந்தந்தெளித்தும் பொற்சுண்ணந் தூவியும் வாழ்த்துப்பாடல் பாடியும் புகழ்ந்து கைகுவித்து வணங்கியும்; தாமம் தாழ்தர நாற்றி - மலர்மாலைகளை நிலத்திற்றோயும்படி தொங்கவிட்டும்; தத்துவதரிசியது உருவே ஆம் என்று -

இறைவன் திருவுருவத்தைக் கூர்ந்து நோக்கி ஆ! இத்திருவுருவம் மெய்க்காட்சியாளனுடைய திருவுருவமே என்று கூறி; ஐ என வியந்து - ஐ இ! என்று வியந்து; அன்ன - அவ்விறைவனுடையனவாகிய; ஆயிரத்து ஓர் எண் நாம நல் இசை தொடுத்து - ஆயிரத்தெட்டுத் திருப்பெயர்களாகியன்ற நல்ல இசைப்பாடலை யியற்றி; நாதகீதங்களை நவிற்றும் - அவற்றை இன்னிசைப் பண்களாகப் பாடுவாள் என்க.

(வி - ம்.) தூமம்-நறுமணப்புகை. சாந்தம்-சந்தனம். சுண்ணம்-நறுமணப்பொற்சுண்ணம். துதி - வாழ்த்து. பரவுபு - பரவி. தாமம் - மலர்மாலை தத்துவதரிசி - மெய்க்காட்சியாளன். என்றது-இறைவனை; ஐ: வியப்புக்குறிப்பு. நாதகீதம்-இன்னிசைப் பண். (௪)

(இதுமுதல் எட்டுச் செய்யுள் ஒரு தொடர்)

கரு௪. கன்று காலனைக் கடந்தாய்
காதற் காமனைக் கடிந்தாய்
தோன்று மூத்தலைத் துறந்தாய்
தோற்ற மாக்கட லிறந்தா
யொன்ற நோய்பகை யொருங்கே
யுடைந்து வெங்களத் துதிர
வென்றி ருந்தனை நீயே
வீரர்தம் வீரர்க்கும் வீரா.

(இ - ள்.) வீரர்தம் வீரர்க்கும் வீரா - வீரராயோர்க்குள்ளும் சிறந்த வீரர்க்கும் மேலான வீரனே!; நீயே! - நீ தானும் அவ்வீர முடைமையாலே; கன்று காலனைக் கடந்தாய் - உயிரினங்கள் நெஞ்சங் கன்றுதற்குக் காரணமான கூற்றுவனையும் வென்றொழித்தனை; காதல் காமனைக் கடிந்தாய் - காமுறுதற்குக் காரணமான காமவேளையும் அழித்தனை; தொன்று மூத்தலைத் துறந்தாய் - பழைமைப்பட்டு மூத்தலையும் அகற்றினை; தோற்றம் மாக்கடல் இறந்தாய் - பிறவியாகிய பெரிய கடலையும் கடந்தனை; ஒன்று அ நோய் பகை - தம்முட் கூடும் அந்த நோயும் பகைமையும்; வெம் களத்து ஒருங்கே உடைந்து உதிர-நீ அறப் போராற்றிய வெவ்விய போர்க்களத்திலே ஒரு சேரத் தோற்றொழியும்படி; வென்று இருந்தனை - வெற்றிகொண்டு வாகைசூடி வீற்றிருப்பாயாயினை; அடிச்சி நின் இணையடி தொழுவேன் என்க.

(வி - ம்.) காலன் - கூற்று, இறப்பு. காமன் - அவா. தொன்று - பழைமை. பழைமைப்பட்டு என்க. மூவாமுதல்வன் ஆயினை என்பது கருத்து. தோற்றம் - பிறப்பு. அதற்கெல்லையின்மையின் மாக்கடல் என்றார். நோய், பகை, என்பன-ஞானாவரணீயம் முதலியன; இங்ஙனம் வெல்லுதலாலே நீயே வீரர்க்கும் வீரன் என்றவாறு. (௫)

கருரு. சாத னோய்சரை பிறவி
தாஞ்செய் தீவினைக் கடலுண்
மாது யருழந் துறுநோய்
மறுகு மன்னுயிர்க் கெல்லாந்
தீதி னன்னெறி பயந்து
திரைசெய் நீள்கரை யொருவிப்
போத ரும்புணை படைத்தாய்
புலவர்தம் புலவர்க்கும் புலவா.

(இ - ள்.) புலவர்தம் புலவர்க்கும் புலவா - புலவருள்ளும் சிறந்த புலவர்க்கும் மேலான புலவனே! நீதானும்; சாதல் நோய் சரை பிறவி தாம் செய் தீவினைக் கடலுள் - சாதலும் பிணியுறுதலும் மூத்தலும் பிறத்தலுமாகிய இவற்றையே செய்யாநின்ற தீவினையாகிய கடலுள்ளே வீழ்ந்து; மா துயர் உழந்து உறும்நோய் மறுகும் - பெருந்துயரத்தையே நுகர்ந்து மேலும் வருகின்ற துன்பத்தையெல்லாம் கண்டு மனங்கலங்காநின்ற; மன் உயிர்க்கு எல்லாம்-நிலையுதலுடைய உயிரினங்களுக்கெல்லாம்; தீது இல்நல் நெறி பயந்து - தீமையற்ற நல்ல ஆருகத நெறியை அருளிச் செய்யுமாற்றாலே; திரை செய் நீள் கரை ஒருவிப் போதரும் - அக்கடலின் அலைமோதுதலைச் செய்கின்ற நெடிய கரைக்கு அக்கடலினின்றும் ஒருவிச் செல்லுதற்கியன்ற; புணை படைத்தாய் - தெப்பத்தைப் படைத்தருளினை; ஆதலால் நீ புலவர்தம் புலவர்க்கும் புலவன் ஆயினை; என்க.

(வி - ம்.) சரை - மூப்பு. சாதல் முதலியவற்றைச் செய்யும் தீவினை என்க. மறுகுதல் - கலங்குதல். நன்னெறி - ஈண்டு ஆருகத நெறி பயந்து-அவ்வாற்றால் புணை படைத்தாய் என்க. சிறந்ததொரு நன்னெறியைப் புலமை மிகுதியாலன்றிக் காணமாட்டாமையின், நன்னெறிபயந்த புலவர்தம் புலவர்க்கும் புலவா என்று விளித்தாள். தீவினையைக் கடலென்றலின் நன்னெறியைப் புணையென்றாள். (சு)

கருசு. அரிய வாயின செய்திட்
டமரர் துந்துபி யறைந்து
புரிய் பூமழை பொழியப்
பொன்னெயில மண்டிலம் புதைந்த
விரிகோ டண்டளிர்ப் பிண்டி
மரநிழ லிருந்திரு வினையும்
பிரியும் பெற்றியை யுரைத்தாய்
பெரியவர்ப் பெரியவர்ப் பெரியாய்.

(இ - ள்.) பெரியவர்ப் பெரியவர்ப் பெரியாய்-பெரியோருள்ளும் பெரியோரினும் பெரியோனே!; அமரர் துந்துபி அறைந்து - தேவர்கள் மகிழ்ச்சியாலே துந்துபி என்னும் தங்கள் இசைக் கருவியை முழக்கிக்கொண்டு; புரிய பூமழை பொழிய - முறுக்குடைய மலர்மழையைப் பொழிதலாலே; பொன் எயில் மண்டிலம் புதைந்த - பொன்னாலியன்ற மதில் வட்டத்தினாலே மறைக்கப்பட்ட; விரி கொள் தண் தளிர் பிண்டி மரநிழலிருந்து - விரிந்த குளிர்ந்த தளிரையுடைய அசோக மரநிழலிலமர்ந்து; அரியவாயின செய்திட்டு - பிறரால் செயற்கரிய பரமாகமங்களைத் திருவாய் மலர்ந்தருளி; இருவினையும் பிரியும் பெற்றியை உரைத்தாய் - இருவகை வினைகளும் விலகும் உபாயத்தினை உலகிற்கு உரைத்தருளினை; அத்தகைய நின்னிணை யடிகளைத் தொழுவேன் என்க.

(வி - ம்.) அரியவாயின-செயற்கரியவாகிய பரமாகமங்கள். துந்துபி - ஒருவகை தேவரிசைக்கருவி. தேவர் பூமழை பொழிதலாலே புதைந்த பிண்டிமரம், மண்டிலத்தாடுள்ள பிண்டிமரம், விரிகொள் தண் தளிர்ப் பிண்டிமரம் எனத் தனித்தனி கூட்டுக.

புரிய-புரியினையுடைய. புரி - முறுக்கு. இருவினை - காதி அகாதி என்னும் இருவகை வினைகள். அவையாவன: ஞானாவரணீயம் தரிசனாவரணீயம் மோகனீயம் அந்தராயம் என்னும் இந்த நான்கும் காதிவினையாம்; இவை உயிரின் குணங்களைக் கொல்வதனால் காதிவினை எனப்பட்டன; இனி வேதனீயம் ஆயுஷ்யம் நாமம் கோத்திரம் என்னும் இந்த நான்கும் அகாதிவினை எனப்படும். இவ்விரு கூற்று எண்வினையும் நீங்கின் உயிரின் எண்குணமும் எய்தி அஃது இன்புறுமென்ப. ஆகலின் இருவினையும் பிரியும் பெற்றியையுரைத்தாள் என்று போற்றினன். எண்குணங்கள் அநந்த ஞானமுதலியன. இங்ஙனம் உரைத்தல் வினையினீங்கி விளங்கிய அறிவினையுடைய முனைவர்க்கன்றி ஏலாமையின் யாரினும் பெரியோய் என்றான். (எ)

கஅ. பொங்கு சாமரை யேந்திப்
புடைபுடை யியக்கர்நின் றிரட்டச்
சிங்க வாசனத் திருந்து
தெளிந்தொளி மண்டில நிழற்றத்
திங்கண் முக்குடை கவிப்பத்
தேவர்தந் திருந்தவை தெருள
வங்க பூவம தறைந்தா
யறிவர்தம் மறிவர்க்கு மறிவா.

(இ - ள்.) அறிவர்தம் அறிவர்க்கும் அறிவா - அறிஞராயினருள்ளும் சிறந்த அறிஞர்க்கும் மேலான அறிவையுடையோய்! நீதான்; பொங்கு சாமரை ஏந்து-பரிய சாமரைகளை ஏந்தி; இயக்கர் புடைபுடை நின்று இரட்ட-இயக்கர் நின்னிரு மருங்கினும் நின்று

இயக்கவும்; சிங்க ஆசனத்து இருந்து - அரியணையிலே வீற்றிருந்தருளி; ஒளி மண்டிலம் தெளிந்து நிழற்ற-ஆலோகம் பிரபாமூர்த்தி கனப்பிரபா என்னும் திருவொளி மண்டிலங்கள் மூன்றும் விளங்கி ஒளிராநிற்பவும்; திங்கள் முக்குடை கவிப்ப - திங்கள் மண்டிலம் போன்ற வட்டவடிவினவாகிய சந்திராதித்தம் நித்தியவிநோதம் சகலபாசனம் என்னும் மூன்று குடைகளும் கவிந்து நிழல் செய்யவும்; தேவர் தம் திருந்து அவை - தேவர் கூட்டமாகிய திருந்திய நல்லவையோர் கேட்டுத் தெளியும்படி; அங்கம் பூவம் அது அறைந்தாய் - அங்காகமத்தையும் பூர்வாகமத்தையும் பிரகீருண்வாகமத்தையும் திருவாய் மலர்ந்தருளினை; அத்தகையை ஆதலின் நின்னடியிணை பணிகுவல் என்க.

(வி - ம்.) இயக்கர் - வியந்தர தேவரில் ஒரு வகையினர். இரட்டுதல் - அசைத்தல். சிங்கவாதனம் - அரியணை. திருந்தவை - நல்லிலக்கண முடைய சான்றோர் கூட்டம். அங்கம் - அங்காகமம். பூர்வம் - பூவமென இடை குறைந்து நின்றது. பூர்வாகமம் என்க.

இனம்பற்றி எஞ்சிய பிரகீர்ண ஆகமமும் கொள்க. இவற்றி னியல்பெல்லாம் விரிந்த நூல்களுட் கண்டு தெளிக. (அ)

கரு௯. ஊறி யாவது முணரா
யுறல்வகை யிதுவென வுரைத்தி
கூறு வேனெனக் கூறுய்
குரன்முர சனையதோர் குணத்தை
சேற லுள்ளமு மில்லையாய்த்
திருமலர் மிசையடி யிடுதி
தேற மாறென்னை நின்னைத்
தேவர்தந் தேவர்க்குந் தேவா.

(இ - ள்.) தேவர்தம் தேவர்க்கும் தேவா - தேவர்களுக்குத் தேவராய்த்திகழுந் தேவர்க்கும் மேலான தேவனே! நீ தான்; ஊறு யாவதும் உணராய் - வினைகள் நின்னுடன் சேரவரும் வாயிலில்லையாகலின் ஊற்றினைச் சிறிதும் நுகர்ந்தறிவாயுமில்லை; உறல்வகை இது என உரைத்தி - அங்ஙனமிருந்தும் அவ்வூற்றுவகை இத்தன்மைத்தென்று உணர்த்தினை; கூறுவேன் எனக் கூறுய் - நீ பரமாகமங்களைக் கூறினுய் எனினும் யான் இவற்றைக் கூறுவேன் என்று செருக்குற்று அவாவினுலே கூறுவாயல்லை; குரல் முரசனையது ஓர் குணத்தை - ஆதலால் தனக்கொரு பயன் இன்றியே ஊரவர்க்குச் செய்தியுணர்த்தும் பொருட்டு முழங்கும் முழக்கத்தையுடைய முரசின் குணம் போல்வதொரு குணத்தையுமுடையை காண்; சேறல் உள்ளமும் இல்லையாய் - செல்லுதல்

வேண்டும் என்னுமவாச் சிறிது மின்றியே; திருமலர்மிசை அடி இடுதி - தாமரைமலரின்மேல் திருவடியை இடுகின்றனை; நின்னைத் தேறும் ஆறு என்னை - இத்தகைய நின்னியல்பினை யான் தெரிந்துகொள்ளும் வழிதான் யாதோ? அறிகின்றிலேன் என்க.

(வி - ம்.) ஊறு - வினைகள் உயிருடன் சேரவரும் வாயில். அவ் வாயில் நினக்கில்லையாகவும் அதனியல்பு எவ்வாறறிந்து கூறினை? என்று வியந்தபடியாம். உறல்வகை, வினைகள் உயிருடன் சேரும் வகை. கூறுவேனெனக் கூறுய் என்றது, யான் கூறுவேனெனச் செருக்குற்று அவாவாற் கூறுய் என்றவாறு. சேறல் - அவாவிச் செல்லுதல். அவாவுஞ் செருக்குமின்றி அருஞ்செயல் செய்த நின்னியல்பு அறியும் ஆறு என்னையோ? என்றபடியாம். யான் அறிகின்றிலேன் என்பது குறிப்பெச்சம். (௯).

௧௫௯. கண்ணி ஞலோன்றும் காணுய்
காணவு மூளபொரு ளோருங்கே
பெண்ணு மல்லவுஞ் சாராய்
பிரிதலில் பேரின்ப முடையை
யுண்ணல் யாவது மிலேயா
யொளிதிக ழுருவமஃ துனதா
லெண்ணில் யார்நினை யுணர்வா
ரிறைவர்தம் மிறைவர்க்கு மிறைவா.

(இ - ள்.) இறைவர்தம் இறைவர்க்கும் இறைவா - கடவுளர்க்கும் கடவுளராயவர்க்கும் மேலான கடவுளே! நீ தானும்; கண்ணினால் ஒன்றும் காணுய் - எம்போலக் கண்ணாலே யாதொன்றும் நோக்கிக் காண்கின்றிலை; பொருள் ஒருங்கே காணவும் உள - அங்ஙனமிருந்தும முக்காலத்துப் பொருளும் நினக்கே ஒருசேர உணரும்படியாகவும் உள்ளன; பெண்ணும் அல்லவும் சாராய் - நீ தானும் இன்புறுதற்குரிய பெண்ணும் பிறவுமாகிய பொருள்களைச் சார்கின்றிலை; பிரிதல் இல் பேரின்பம் உடையை - அங்ஙனமிருந்தும் நீ ஒரு பொழுதும் பிரிதல் இல்லாத பேரின்பமுடையையாகின்றாய்; உண்ணல் யாவதும் இலேயாய் - நீதான் உண்ணுதல் ஒன்றும் இல்லாதாயாயிருப்பவும்; உனது உருவம் அஃது ஒளிதிகழும் - உன்னுடைய திருமேனி ஒளிவீசித் திகழாநிற்கும்; நினை எண்ணில் - நின் இவ்வியல்புகளை ஆராயின்; யார் உணர்வார் - யார்தாம் உணரமாட்டுவர்? இஃது எனக்கு மருட்கைத்தே: என்க.

(வி - ம்.) இது வியப்பணி. இறைவன் கேவலஞானத்தால் கொடிப்பொழுதின் முற்றுமுணர்தலின், கண்ணால் காண்டல் வேண்டா வாயிற் றென்க. தலைமைபற்றிப் பெண்ணை விதந்து ஏனையவற்றைத் தொகுத்து அல்லவும் சாராய் என்றாள். இடையறாப் பேரின்பமுடைய

ளுகலின் இறைவன் பொருள்களால் இன்புறுதல் வேண்டாவாயிற்றென்க.

கண்ணால் காண்போரும் பெண்புணர்ந்தின்பமுறுவோரும் போலிக்கடவுளர்; நீயே மெய்க்கடவுள் என்பாள், இறைவர்க்கும் இறைவா என்றாள். (க0)

கசுஉ. சொற்றி யாவதுங் கேளாய்
சுதநயந் துணிவுமங் குரைத்தி
கற்றி யாவது மிலையாய்க்
கடையில்பல் பொருளுணர் வுடையை
பற்றி யாவது மிலையாய்ப்
பரந்தவெண் செல்வமு முடையை
முற்ற யார்நினை யுணாவார்
முனைவர்தம் முனைவர்க்கு முனைவா.

(இ - ள்.) முனைவர்தம் முனைவர்க்கும் முனைவா - வினையின் நீங்கி விளங்கிய அறிவினையுடைய முனைவராகியாருள்ளுஞ் சிறந்த முனைவர்க்கும் மேலான முனைவனே!; நீ தானும் ஆசிரியரையடுத்து யாவதும் கேளாய்-யாதொரு பொருளையும் கேட்டுணர்ந்தாயுமல்லை; சுதம் நயம் சொற்றி- அங்ஙனமிருந்தும் பரமாகமங்களையும் வீட்டின்பத்தையும் உலகிற்குக் கூறுகின்றனை; அங்குத் துணிவும் உரைத்தி- அவ்வாகமத்தே துணிபொருளும் உரைத்தருளினை; கற்று யாவதும் இலையாய் நீ ஆசிரியர்பாற் சென்று ஓதி யுணர்பொருள் ஒன்றும் இலையாகவும்; கடையில் பல்பொருள் உணர்வு உடையை- அழிவில்லாத உள்பொருள் இவை எனனும் மெய்க்காட்சியும் உடையையாகின்றாய்; பற்று யாவதும் இலையாய் - செல்வங்களின்பாற் செல்லும் அவாச் சிறிது மிலையாயிருந்தும்; பரந்த எண் செல்வமும் உடையை - யாண்டும் பரவிய எட்டுவகைச் செல்வங்களையும் உடையையாகின்றனை; நினை யார் முற்ற உணர்வார் - இத்தகைய நின்னியல்புகளை யாரே முழுதும் உணரவல்லார்; என்க.

(வி - ம்.) சொற்றி - சொல்கின்றனை. சுதம் - ஆகமம். நயம் - நன்மை. ஈண்டு வீட்டின்பம். துணிவு - முடிபொருள். யாவதும் - சிறிதும். கடையில் பல்பொருள் என்றது, உயிர் முதலிய உள்பொருள்களை. பற்று - அவா. எண்செல்வம் - அனந்தஞானம், அனந்ததரிசனம், அனந்த வீரியம், அனந்தசுகம், நிர் நாமம், நிர்க்கோத்திரம். நிராயுஷியம், சகலசம்பியக்பாவம் என்பன. முற்ற - முழுதும். (கக)

கசுக. அன்மை யாரவர் தாந்தா
மறிந்தன வுரைத்த பொய்யாக்கி
நின்மெ யாகிய ஞான
நிகழ்ச்சி நீவிரித் துரைத்த

சொன்மை யாரிடை தெரிந்தார்
தொடர்வினை முழுவதுஞ் சுடுநின்
றன்மை யார்பிற ரறிவார்
தலைவர்தம் தலைவர்க்குந் தலைவா.

(இ - ள்.) தலைவர்தம் தலைவர்க்கும் தலைவா - தலைவர்தம் முள்ளும் தலைவராயோர்க்கும் மேலான தலைவனே! நீ தானும்; அன்மையாரவர் - மெய்க்காட்சியுடையாரல்லாதவராகிய பிறசமயக் கணக்கர்; தாம்தாம் அறிந்தன உரைத்த பொய் ஆக்கி - தத்தம் புல்லறிவிற்கேற்பத் தாம்தாம் மயங்கி யுணர்ந்தனவாய்க் கூறிய முடிவுகள் எல்லாம் பொய்யாதலை யுணர்த்தி; மெயாகிய - உண்மையேயான; நின் ஞான நிகழ்ச்சி - நீ கண்ட மெய்ஞ் ஞான நிகழ்ச்சியினை; நீ விரித்துரைத்த சொன்மை - நீ விரித்துக் கூறிய பரமாகமத்தின் சொல்லியல்புகளை; யார் இடை தெரிந்தார்- யாரே ஆராய்ந்துணர்ந்துளர்; தொடர்வினை முழுவதுஞ் சுடும் நின் தன்மை-உயிர்களைப் பிறவிகடோறும் தொடராநின்ற வினைகள் முழுவதையும் சுட்டழிக்கின்ற நின்னியல்பினைத்தான்; பிறர் யார் அறிவார் - பிறராகிய அச்சமயக்கணக்கருள் யாரே அறிய வல்லுநர் என்க.

(வி - ம்.) அன்மையார் என்றது, பிறசமயக்கணக்கரை. அவ ரெல்லாம் முழுதுணர்ந்தாரல்லர் என்பாள், தாம் தாமறிந்தன என்றாள். மெயாகிய : இடைக்குறை. சொன்மை - சொல்லின் திறம், இடை தெரிதல் - ஆராய்ந்தறிதல். பிறர் என்றது - பிற சமயக்கணக்கரை. (கஉ)

கசுஉ. ஆதி யந்தளப் பரிய
அருகந்த பகவர்த மறஞ்சால்
சேதி யம்புக்க வர்தந்
திருந்தடி களைப்பெருந் துதிசேர்
போதி யிற்பணிந் திருந்தாள்
புன்னெறி தாம்பல வவற்றுள்
யாதுகோ ளுன்மு னென்று
லடர்க்கிற் பாலது வென்றாள்.

(இ - ள்.) ஆதி அந்து அளப்பு அரிய அருகந்த பகவர்தம்- முதலும் முடிவும் அளவைகளாலளந்துணரவொண்ணாத அருகக் கடவுளுடைய; அறம்சால் சேதியம் புக்கு - அறச்செயல்கள் மிக் குள்ள திருக்கோயிலிலே புகுந்து; அவர்தம் திருந்து அடிகளைப் பெருந்துதி சேர் போதியில்-அக்கடவுளுடைய திருந்திய இலக்கண மமைந்த திருவடிகளை வாழ்த்தோடு கூடிய மெய்யறிவினாலே; பணிந் திருந்தாள் - இவ்வாறு வாழ்த்தி வணங்கியிருந்த நீலகேசி; புல்

நெறி தாம் பல- இவ்வுலகிலே புல்லிய பொய்ச்சமயங்கள் தாம் பற்பல வுள்ளன; அவற்றுள் யாது கொல்தான்- அவையிற்றுள் வைத்து எச்சமயந்தான்; முன் என்னால் அடர்க்கற் பாலது என்றான் - என்னாலே முற்படச் சொற்போராற்றி வெல்லுதற்குரியது? என்று தன்னுட் கருதினள் என்க.

(வி - ம்.) ஆதி - முதல்; தொடக்கம். அந்து - அந்தம்; கடை குறைந்துநின்றது; செய்யுள் விகாரம். அளப்பு - அளத்தல். அருகந்த பகவர் - அருகக் கடவுள். சேதியம் - அருகன் கோயில். அவர் - அக் கடவுள். போதி - அறிவு. "நீதிச்செல்வம் மேன்மேனிந்தி நிறை வெய்திப் 'போதிச் செல்வம்' பூண்டவர்" என்புழியும் - (சீவகசிந்தாமணி. கஅக) அஃதப் பொருட்டாதலுணர்க. புன்னெறி - பொய்ச்சமயம். கொல், தான் அசைகள். என்று கருதினள் என்றவாறு. (கக)

வேறு

கஉ. ஊன்றின்ற லிழுக்கென்னு
னுயிரினையு முளதென்னு
னோன்றலையு நோன்பென்னு
னோக்குடைய கணிகையரே
போன்றிருந்து போதியறுக்கும்
புத்தன்றன் புன்னெறியை
யான்சென்றஃ தடிப்படுப்ப
னறக்கரும மிதுவென்றாள்.

(இ - ள்.) யான் சென்று - யான் முற்படச் சென்று; ஊன் தின்றல் இழுக்கு என்னான் - சான்றோர் பழிக்கும் ஊன் உண்ணுதலைத் தீவினை என்று கூறான்; உயிரினையும் உளது என்னான் - உயிர் என்று ஒருபொருள் உளது என்றும் கூறான்; நோன்றலையும் நோன்பு என்னான் - தவஞ்செய்தலையும் சிறந்த அறம் என்று பாராட்டுதலிலன்; நோக்குடைய கணிகையர் போன்று இருந்து - பிறர்பொருளைக் கவரும் நோக்குடைய கணிகை மகளிரே போன்றிருந்து; போதி அறுக்கும் புத்தன் தன் - மக்களுடைய அறிவுச் செல்வப் பொதியினை அறுத்தொழிக்கின்ற புத்தன் செவியறிவுறுத்த; புல் நெறியை - பொய்யாய புல்லிய சமயத்தை; அச் சமயக்கணக்கரொடு சொற்போர் தொடுத்து, அஃது அடிப் படுப்பன் - அதனை வென்று பொய்யாக்குவேன்; இது அறக் கருமம் என்றாள் - இச்செயல் என் கடமையாகியதோர் அறச் செயலேயாகும் என்று துணிந்தாள்; என்க.

(வி - ம்.) ஊன்றின்றல் என்றது சான்றோரால் பழிக்கப்பட்ட ஊன்றின்னுஞ் செயல் என்பதுபட நின்றது. என்னை?

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூ னுண்பா
னெங்ஙன மாளு மருள்"

என்றத் திருக்குறள்களானும்,

"ஊனுண் டுயிர்கட் கருளுடைய னென்பானும்"
(திரிகடுகம். ௩௭)

என்றும்,

"விலைப்பாலிற் கொண்டூன் மிசைவதூஉங் குற்றம்"
(நான்மணிக் கடிகை – ௨௧)

என்றும்,

"ஊனைத்தின் றூனைப் பெருக்குதன் முன்னின்னா"
(இன்னா நாற்பது. ௨௧)

என்றும், ஊனுண்ணல் சான்றோர் பலரானும்பழிக்கப் படுதலுமுணர்க.

இனி, உயிரினையும் உளதென்னான் என்புழி உம்மை உயர்வுசிறப்பு.

இனி, இம்மையிலறந்தலைநின்று மேனிலையுலகத்தே சென்று இன்ப நுகர்தற்கு ஓர் உயிர் உள்தாயினன்றோ அறஞ்செய்தல் வேண்டும் என்னும் எண்ணமும் எழுவதாம். அந்த உயிருண்மையையும் புத்தன் கூறினனல்லன் என்பது கருத்து.

இனி, புத்தர் உயிருண்மையையாதல் கடவுளுண்மையை ஆதல் ஆராய்ந்து அவற்றைப்பற்றி ஒன்றுங் கூறினாரலர். இவ்வாராய்ச்சி பயனில் செயல் என்பது அவர் கருத்தென்பது பௌத்த நூல்களா லுணரப்படும். எடுத்துக்காட்டாக,

சம்யுக்த நிகாயம் என்னும் பௌத்த நூலில் வச்சகோத்திரன் என்ற ஒரு துறவி கௌதமபுத்தரிடஞ் சென்று உயிர் என்றொரு பொரு ளுளதோ! என்று வினவிய பொழுது புத்தர் யாதொன்றுங் கூறாமல் மௌனமா யிருந்தனர் என்றும், ஆயின் அங்ஙனமொரு பொருளில் லையோ என்று பின்னும் அவன் வினவ அதற்கும் அவர் ஒன்றுங் கூறா மலே மௌனமுற்றிருந்தனர் என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

இன்னும், பிரசேசித் என்னும் ஒரு மன்னன் ஒரு பௌத்த பிக் குணியாகிய பகவதி என்பவளைக் கண்டு "பகவதி! ததாகதன் இறந்த பின்னரும் உளனோ?" என்று வினவ அதற்கவள், "அரசே! ததாகதன் இறந்தபின்னரும் இருப்பதாக ஆசாரியபுத்தன் சொல்லவில்லை" என்று கூற, அதுகேட்ட அரசன் மீண்டும் "பகவதீ அங்ஙனமாயின் இறந்த பின் ததாகதன் இல்லையோ?" என்று வினவ, அதற்கவள் "வேந்தே! ததாகதன் இறந்த பின்னர் இல்லை என்பதையுங்கூட ஆசாரியபுத்தன் கூறவில்லை" என்று விடை கூறினள் என்றும் ஒரு பௌத்த நூல் கூறு கின்றது. இவற்றானும் புத்த சமயத்தில் உயிருண்மை கூறப்படாமை யுணர்க. நோன்றல் - தவமேற்கொண்டு பசிமுதலிய பரிசைகளைப் பொறுத் தொழுகுதல்.

இனி, நோன்றலையும் நோன்பென்னான் என்பதனை,

அவர் உண்ணாமை முதலிய நோன்புகளை மதியாமையானு முணர்க. என்னை? அவர் நீராடலும் பருகுதலும் வெள்ளடை மெல்லலும் மேற்

கொண்டு "உடலை வருத்துதல் தவமென்பாய், அது தவமாயின் உடலை மூடியிட்டுப் புழுக்கியிடுக. முழங்கையைக் கல்லிற் றேய்த்திடுக" என்று இங்ஙனம் கூறுதலானுமுணர்க.

ஆதலால், இங்ஙனம் அழகுடைய கணிகையர்போன்று மாந்தருடைய குணப்பெருஞ் செல்வத்தைக் கவரும் புத்தனுடைய பொய்யாகிய சமய நெறியினை முற்றும் அழித்து ஆருகத சமயத்தை மக்களுக்குவிளக்குவேன்; இஃது எனக்கு அறமாகிய முதற்கடமை என்று நினைந்தாள் என்பது கருத்து. (௪௪)

கசுச. மண்டலத்தி னோக்குவாள்
மடுத்ததன தவதியால்
கண்டனடான் காம்பிலிக்
காவலன் கடைமுகத்தோர்
தண்டழைய பொழில்நாவற்
சாகைநட் டுரைபெறுக்
குண்டலகே சிப்பெயரைக்
குறியாக வேகோண்டாள்.

(இ - ள்) மடுத்த தனது அவதியால் - தான் முனிச்சந்திர பட்டாரகன் அறிவுரையாலே உட்கொண்டுள்ள தனது அவதி ஞானத்தாலே; மண்டலத்தின் நோக்குவாள் - இந்நிலவுலகத்தே அவ்வறச் செயலைத் தொடங்குதற்கேற்ற இடத்தை நோக்குபவள்; காம்பிலிக் காவலன் கடைமுகத்து - காம்பிலி என்னும் நகரத்து மன்னனுடைய அரண்மனை முன்றிலிலே; தண் தழைய பொழில் ஓர் நாவல் சாகை நட்டு - குளிர்ந்த தழைகளையுடையதொரு பொழிலின் கண்ணதாகிய ஒரு நாவன்மரத்தினது கிளையை முரித்துக் கொணர்ந்து தன்னோடு சொற்போர் நிகழ்த்துவாரை அறைகூவற் கறிகுறியாக நட்டு; உரை பெறு - தன்னோடு எதிர்த்து உரை தருவாரைப் பெறாது செருக்குற்றிருக்கின்ற; குண்டலகேசிப் பெயரை - குண்டலகேசி என்னும் பெயருடைய பிக்குணியை; தான் கண்டனள் - தானே கண்டனள்; குறியாகக்கொண்டாள் - அவளோடு சொற்போர் நிகழ்த்துதலையே தன் குறிக்கோளாகக் கொண்டனள் என்க.

(வி - ம்.) மண்டலம் - நிலவுலகம். மடுத்த — பருகிய- முனிவன் அருளால் பருகிய அவதிஞானம் என்பது கருத்து. அவதி ஞான மாவது: ஞானவரணீயம் வீரியாந்தராயம் என்னும் வினைகள் அழிதலாலே உருவப் பொருள்பற்றி மிக்குத்தோன்று மறிவு. காம்பிலி - தென் பாஞ்சாலத்தொரு தலைநகரம். (கன்னிங்காம் புராதன இந்திய பூகோள நூலில் ௪0௪ ஆம் பக்கம் பார்க்க) பொழிலின் கண்ணதாகிய நாவலினது ஒரு சாகை என்க. சாகை—கிளை. நாவற்கிளை நடுவது வாதிடுவோரை அறை கூவற்கு அறிகுறி என்க. பெயரை — பெயருடையாளை. குறி - குறிக்கோள். (௪௫)

கசுகு. தருமத்திற் றிரிவில்லா
டயாச்செய்தற் பொருட்டாக
நிருமித்த வகையினதா
நெடுநகரை வலஞ்செய்து
திருமுத்தப் பீடிகைக்கட்
சித்தரையுஞ் சிந்தித்தோர்
பெருமுத்தப் பெண்ணுருவங்
கொண் டியைந்த பெற்றியளாய்.

(இ - ள்.) தருமத்தில் திரிவு இல்லாள் - அருகன் கூறிய அறங்களிலே பிறழாதவளாகிய நீலகேசி, குண்டலகேசியோடு சொற்போர் நிகழ்த்தத் துணிந்து; தயாச் செய்தல் பொருட்டாக நிருமித்த வகையினதாம் - தேவர்கள் தங்களுக்கு அருள் வழங்குதற் பொருட்டாக வமைத்த பலவேறு வகைகளை யுடையதாகிய; நெடுநகரை வலஞ்செய்து - நெடிய அச் சித்த கூடசைத்தியாலயத்தை வலமாக வந்து, திருமுத்தப் பீடிகைக் கண் சித்தரையும் சிந்தித்து - அழகிய முத்துக்களாலியன்ற பீடிகையின்கண் எழுந்தருளியுள்ள சித்தபரமேட்டிகளையும் நினைந்து வழிபாடுசெய்து; ஓர் பெருமுத்தப் பெண் உருவம் கொண்டு - ஒப்பற்ற பெரிய தவத்தை மேற்கொண்ட தாபதப் பெண் உருவங் கொண்டு; இயைந்த பெற்றியளாய் - பொருந்திய தன்மையுடையளாகி; என்க.

(வி - ம்.) தருமம் - ஆருகத சமயவொழுக்கம். தயா - அருள். தயாச்செய்தற் பொருட்டுத் தேவர் நிருமித்த நிருமித்த - இயற்றிய. நகர் என்க. நகர்-திருக்கோயில். முத்தப் பீடிகை-முத்துக்களாலியன்ற பீடம். இனி முத்தருறையுமுலகுமாம் சித்தர் - சித்தபரமேட்டிகள். இவர் ஆத்தருள் ஒருவகையினர். முத்தப்பெண் - தவப்பெண். (கக)

கசுஎ. அந்தரமே யாறுச்சென்
றழனுதிவே லரசர்கட்
கிந்திரனே போன்றிருந்த
விறைமகனை திடமெய்திக்
கந்திருவ மகளேன் யான்
காவலனைக் காண்குறுவேன்
வந்திருந்த துரைவிரைந்து
வாயிலோ யெனச்சொன்னாள்.

(இ - ள்.) அந்தரமே ஆறுச் சென்று - வானமே வழியாகச் சென்று; அழல் நுதி வேல் அரசர்கட்கு - சினக்கின்ற நுனியை

யுடைய வேற்படையேந்திய வேந்தர்கட்கெல்லாம்; இந்திரனே போன்று இருந்த இறைமகனது இடம் எய்தி - அரசனாக இந்திரனைப்போன்று அரசு வீற்றிருந்த காம்பிலிக் காவலனுடைய அரண்மனையை எய்தி; வாயிலோய் - வாயில் காவலனே!; யான் கந்திருவ மகளேன் - யானொரு கந்திருவப் பெண்ணாவேன்; காவலனைக் காண்குறுவேன் வந்திருந்தது - யான் நும்மரசனைக் காண்டற்கு வந்திருக்கும் என்வரவினை; விரைந்து உரை எனச் சொன்னாள் - நீ விரைந்து சென்று வேந்தனுக்கு அறிவிப்பாயாக என்று கூறினள் என்க.

(வி - ம்.) அந்தரம் — வானம். அழல்வேல் நுதிவேல் எனத் தனித்தனி கூட்டுக. அழல்வேல்: வினைத்தொகை. நுதி — கூர். அரசர்கட்கரசனாய் இந்திரனே போன்றிருந்த இறைமகன் என்றவாறு. இடம் — அரண்மனை. மகளேன் - மகளாவேன். காண்குறுவேன் - காண. (கஎ)

கசுஎ. கருங்களிறுங் களிமாவுங்
கந்தோடு பந்தியவே
நெருங்குபுபோய் நீருண்ணா
தேர்பண்ணா நெடுங்கடைக்குப்
பெரும்படையுஞ் சாராதிப்
பெண்பாவி மரநட்டிங்
கிருந்ததன் றிறத்தினா
லெனக்கரிது புகலென்றான்.

(இ - ள்.) இப் பாவிப் பெண் மரம்நட்டு இங்கு இருந்ததன் திறத்தினால் - அதுகேட்ட வாயிலோன் குண்டலகேசியை நீல கேசிக்குச் சுட்டிக்காட்டிப் பெருமகளே! இந்தப் பாவியாகிய பிக்குணி, நாவல் மரம்நட்டு இவ்விடத்தே இருந்ததன் விளைவாக; கருங்களிறும் களிமாவும் கந்தோடும் பந்திய - கரிய களிற்றி யானைகளும் களிப்புடைய குதிரைகளும் தத்தம் தறியிடத்தனவும் பந்தியிடத்தனவுமாகவே கிடக்கின்றன; நெருங்குபு போய் நீர் உண்ணா - அவை நெருங்கிச் சென்று நீருண்ணுதலும் செய்யா வாயின; தேர் பண்ணா - தேர்கள் பண்ணுறுத்தப்படாவாயின; பெரும்படையும் நெடுங்கடைக்குச் சாராது - பெரிய காலாட்படை தானும் இந்த நெடிய அரண்மனை வாயிலை அணுகாதுகாண்; புகல் எனக்கு அரிது என்றான் - இங்ஙனமிருத்தலின் அளியேன் இவ்வரண்மனைக்குட் புகுதல் முடியாது காண் என்று கூறினான்; என்க.

(வி - ம்.) குண்டலகேசியின் கொள்கை தனக் கொவ்வாமையின் அவளைப் பெண்பாவி என்றான். யானைப்படை கந்திடத்தன. களிமா-

குதிரை. குதிரைப்படை பந்தியிடத்தன என நிரனிறையாகக் கொள்க.
நெருங்குபு - நெருங்கி. நீருண்ணுதனவாய்க் கந்திடத்தும் பந்தியிடத்
தும் கிடக்கின்றன என்பது கருத்து. பெரும்படை என்றது, காலாட்
படையை; படைகளே இவட்கு இங்ஙன மஞ்சுமாயின் எளியேன்
எங்ஙனம் உட்புகுவேன் என்பது கருத்து. மரம்-நாவற்கிளை. (கஎ)

## நீலகேசி குண்டலகேசியை வினுதல்

கஎஅ. வாயிலோ னுரைகேட்டு
வடிக்கண்ணாண் முகநோக்கி
கோயிலையான் புகவிலக்குங்
குறையென்னை முறைதிருத்தும்
பூசலிங் குடையையோ
பொருளிழவோ வுயிரிழவோ
நீயிலையார் புதனடற்கு
நிமித்தமிங் கென்னென்றாள்.

(இ - ள்.) வாயிலோன் உரைகேட்டு - நீலகேசி அவ்வாயில்
காவலன் மொழியைக் கேட்டுப் பின்னர்; வடிக்கண்ணாள் முகம்
நோக்கி - மாவடுப்பிளவு போன்ற கண்களையுடைய குண்டலகேசி
யினது முகத்தை நோக்கி; யான் கோயிலைப் புக விலக்கும் குறை
என்னை ?—மடந்தாய்! யான் இவ்வரண்மனையிற் புகுதலை விலக்கு
தற்கு நினக்குற்ற குறைதான் யாதோ?; இங்கு முறை திருத்தும்
பூசல் உடையையோ - இங்கு அரசனைக் கண்டு அவனது செங்
கோன் முறையைச் சீர் திருத்துவதாயதொரு பூசலையுடையையோ?;
அல்லது; பொருள் இழவோ-நினக்குரிய பொருளை இழந்தனையோ?;
அல்லது; உயிர் இழவோ - நின் சுற்றத்தார் கொலையுண்டு
உயிரிழந்தனரோ?; நீ இங்கு இலை ஆர் புதல் நடற்கு-நீ இவ்விடத்
திலே தழைபொருந்திய இந்த நாவற்கிளையை நட்டிருத்தற்கு;
நிமித்தம் என் என்றாள் - காரணம் யாது? என்று வினவினள்
என்க.

(வி - ம்.) வடி — மாவடுவின் பிளவு. வடிக்கண்ணாள் என்றது,
குண்டலகேசியை. கோயில்-அரண்மனை. குறை - இன்றியமையாப்
பொருள். காரியமுமாம். அரசன்பாற் கூறவேண்டிய குறை என்க.
முறை திருத்துதல்—அரசன் செங்கோன்மை பிறழ்ந்த வழிச் சான்றோர்
அவன் பாற் சென்று அவனைத் திருத்துதல். அவ்வாறு இவ்வரசன் பாற்
சென்று அவன் முறையைத் திருத்தவோ? என்று வினவியபடியாம்.
சான்றோர் அரசன்பாற் சென்று முறை திருத்துதலை :

"காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே

வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே''

எனவரும் பொருண்மொழிக் காஞ்சியானும் (புறநா – ககஅ) உணர்க. அரசனது முறைதிருத்துங்கால் அவனுடன் சொற்போர் நிகழ்த்துதலும் வேண்டுமாகலின் அதனை முறைதிருத்தும் பூசல் என்றாள். பூசல்—போர். பொருள் முதலியவற்றை இழந்தோரும் வலியோரால் உறவினர் உயிரிழக்க நேர்ந்துழியும் மன்னன்பாற் சென்று குறையிரத்தல் மரபு. நாவற்கிளை புதல் போறலின் ஆகுபெயராற் புதல் என்றாள். நிமித்தம் – காரணம். (கக)

குண்டலகேசி கூற்று

கசுக. என்கருமம் வினவுதியே
லிலிங்கியரு ளென்னோடு
நன்குரைப்பார்த் தரல்வேண்டி
நாவற்கோம் பிதுநட்டே
னுன்கரும நீ செய்வாய்
நுழைந்தறிவு முடையையேல்
மன்பெரியான் றிருந்தவையுண்
மாற்றந்தா வெனச்சொன்னாள்.

(இ - ள்.) என் கருமம் வினவுதியேல்-அதுகேட்ட குண்டலகேசி நீலகேசியை நோக்கித் ''தவமகளே. நீ யான் இங்கெய்திய தற்குற்ற குறையைக் கேட்பாயாயிற் கூறுவல்; இலிங்கியருள் என்னோடு நன்கு உரைப்பார் தரல் வேண்டி - பிறசமயக்கணக்கராகிய துறவோருள் வைத்து என்னோடு எதிர்ந்து வன்றுகச் சொற்போர் புரியும் தகுதியுடையோரை இம்மன்னன அழைத்துத் தருதலை வேண்டி; இது நாவற் கொம்பு நட்டேன்- இங்கு வந்து இந்த நாவற் கிளையை நட்டிருக்கின்றேன்; நீ நுழைந்து உன் கருமம் செய்வாய்; நீ இவ்வரண்மனையுட் புகுந்து உன் காரியத்தைப் பார்த்துக் கொண்டுபோ; அறிவும் உடையையேல் - அன்றி நீ தானும் என்னோடு சொற்போர் நிகழ்த்தற்கேற்ற நல்லறிவுடையையாயிருப்பின்; மன் பெரியான் திருந்து அவையுள் - மன்னர்களிற் பெரியோனாகிய இவ்வேந்தனுடைய நல்லவையின்கண் வந்து; மாற்றந்தா எனச்

சொன்னுள்-என் வினுவிற்கு விடை தருவாயாக! என்று கூறிஞள் என்க.

(வி - ம்.) இலிங்கியர் – துறவோர். உரைப்பாரை அழைத்துத் தருதல் வேண்டி என்றவாறு. நுழைந்து உன் கருமம் செய்வாய் என மாறுக. இனி நுழைந்த அறிவு நுழைந்தறிவு என அகரம் கெட்டுப் புணர்ந்தது எனக் கொண்டு பொருள்களினூடு புக்காராய்ந்துணர்ந்த அறிவு எனக் கோடலுமாம். மன் என்பதனை உன்கருமம் நீ செய்வாய் மன் என வியைத்து ஒழியிசையாக்கி நீ உன்காரியத்தைச் செய்து கொண்டுபோ, இவ்வாராய்ச்சி யெல்லாம் உனக்கு வேண்டா என்று கூறலுமாம். திருந்தவை–நல்லிலக்கணமமைந்த அவை. அதனியல் பினை; வெண்பாமாலையில், ''அவைய முல்லை'' என்னுந் துறைபற்றி,

''நவை நீங்க நடுவு கூறும்
அவை மாந்தர் இயல்புரைத் தன்று''

எனவரும் கொளுவானும், அதற்கு வரும்

''தொடைவிடை ஊழாத் தொடை விடைதுன்னித்
தொடைவிடை ஊழிவை தோலாத் – தொடைவேட்டு
அழிபடல் ஆற்ருல் அறிமுறையேன் றெட்டின்
வழிபடர்தல் வல்ல தவை''

எனவரும் வரலாற்று வெண்பாவானும், இன்னும்,

''குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மை வாய்மடுத்து மாந்தித் தூய்மையிற்
காத லின்பத்துத் தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை யவாவின் மையென
இருபெரு நிதியமு மொருதா மீட்டும்
தோலா நாவின் மேலோர் பேரவை''
(ஆசிரியமாலை - புறத்திரட்டு)

எனவரும் பழம்பாட்டானுமுணர்க.

சொற் போராகலின், திருந்தவை கூறல்வேண்டிற்றென்க. (௨0)

நீலகேசி கூற்று

௧௪0. அப்படித்தே யெனின்வாயி
லடைப்பொழிக யானதே
ரேப்படியு மியங்குகநும்
மிறைமகற்கு மிசைமினேன்

றீப்படியா லிவையுரையா
லிலேகாவ லிறுத்திட்டா
ளுப்போடு கனிதொண்டை
துயில்கொண்ட துவர்வாயாள்.

(இ - ள்.) அப்படித்தே எனின் - அதுகேட்ட நீலகேசி அங்ஙனமாயின் யான் நினக்கு மாற்றம் தருவேன்காண்; வாயில் அடைப்பு ஒழிக - இவ்வாண்மனே வாயில் இனி அடைத்தலொழிவதாக என்றும்; யானை தேர் எப்படியும் இயங்குக - இதனகத்துள்ள யானையுந் தேரும் பிறவும் அவை அவை விரும்புமாற்று லியங்குவனவாக என்றும் குண்டலகேசிக்குக் கூறி; நும இறைமகற்கும் இசைமின் என்று - பின் காவலரை நோக்கி நீயிர் சென்று இந்நிகழ்ச்சியினை நும்மரசனுக்கும் அறிவிமின் என்றும்; இப்படியால் இவை உரையா - இங்ஙனமாக இம் மொழிகளைக் கூறிவிட்டு; துப்போடு கனி தொண்டை துயில் கொண்ட - பவளத்தோடே கனிந்த கொவ்வைப் பழமும் துயில் கொண்டு கிடந்தாற் போன்ற; துவர் வாயாள் - சிவந்த வாயினையுடைய அந்த நீலகேசி; இலேகாவல் இறுத்திட்டாள் - இலைகளையுடைய அந்த காவற் கிளைமை முரித்தகற்றினுள், என்க.

(வி - ம்.) யான் நினக்குமாற்றந்தருவேன் என்பது குறிப்பெச்சம். எப்படியுமியங்குக என்றது அவை விரும்பியபடியெல்லாம் செல்க என்றவாறு. நும் என்றது காவலரை நோக்கிக் கூறியபடியாம். உரையா உரைத்து. துப்பு-பவளம். கனிதொண்டை: வினைத்தொகை. தொண்டை: ஆகுபெயர். கொவ்வைப்பழம் - துயில்கொண்ட என்றது பெரிதும் தங்கியிருந்தாற் போன்ற என்றவாறு. துவர் - நிறத்திற்கு ஆகு பெயர். (உக)

காம்பிலி மன்னன் செயல்

உஎக. வேந்தனு மதுகேட்டே விம்முயிர்த்த வுவகையனுய்ப்
பூந்தடங்க ணல்லார் புகுதுக வெனப்புகலும்
போந்திருக்க வெனவிருக்கை பொருந்திய வாறவர்கட்
கீந்துலகத் தியற்கையு மினிதினிற் செய்திருந்தான்.

(இ - ள்.) வேந்தனும் அது கேட்டு - அவ்வரசன்றானும் காவலர் வாயிலாய் அந்நிகழ்ச்சியினைக் கேட்டறிந்து; விம்மு உயிர்த்த உவகையனுய் - மனம் விம்முதற்குக் காரணமான துயரொழிந்தமையன்று உயிர்ப்பெறிந்து மகிழ்ந்தவனுகி; பூ தடம் கண் நல்லார் புகுதுக என - ஆயின் மலர்போன்ற அகன்ற விழிகளையுடைய அம்மகளிரிருவரும் நம்மவைக்கட் புகுதுவாராக என்று தன் உடம்பாடுணர்த்த; புகலும்-அரசன் அழைப்புப் பெற்ற அந்

மகளிரிருவரும் அங்ஙனமே அரசன் அவையிற் புகாநிற்றலும்; போந்து இருக்க என-அவர் வரவுகண்ட வேந்தனும் இங்கு வந்து இவ்விருக்கையிலமர்க என்று கூறி வரவேற்று; அவர் அவர்கட் குப் பொருந்தியவாறு இருக்கை ஈந்து - அவரவருடைய தகுதிக் கும் சொற்போர் நிகழ்த்துதற்கும் பொருந்திய வகையால் இருக் கைகள் தனித்தனியே வழங்கி மேலும் அவர்கள் அமர்ந்தபின்னர்; உலகத்து இயற்கையும் இனிதினிற் செய்து இருந்தான் - உலகத் தார் துறவோர்க்குச் செய்யும் வழிபாடு முதலியவற்றையும் மரபிற் இணங்கச் செய்து பின்னும் அவர் இருவென; தன்னிருக்கையி லமர்ந்தனன் என்க.

(வி - ம்.) துன்பமுழல்வோர் அது தீர்ந்துழி அயாவுயிர்த்தலியல்பு. இது துன்பச்சுமை நெஞ்சினின்றும் அகலுதலாலுண்டாகும் மெய்ப்பா டென்க. விம்மு உயிர்த்தல் - விம்முதற்குக்காரணமான துன்பநீக்கத் தாலே உயிர்ப்பெறிதல். அம்மகளிர் புகலும், என்றும், அவர் வரவு கண்ட அரசன் என்றும் பிறவும் சொற்பெய்து கூறுக. பொருந்துதல்- அவரவர்தகுதிக்கும் சொற்போர் ஆற்றுதற்கும் ஏற்றவாறிருத்தல். உலகத்தியற்கை - துறவோரைக் கண்டுழி உலகத்தோர் இயல்பாகச் செய்யும் வழிபாடு முதலியன. (௨௨)

மன்னன் வேண்டுகோள்

௧௭௨. முதலவனோ டவனூலு
மந்நூலின் முடிபொருளு
நுதலிய பொருணிகழ்வு
நுங்கோளு மெமக்கறியத்
திதலைமா ணல்குலீர்
தெருட்டுமி னெனச்சொன்
னதலையம் பெருங்கதவ
மடைப்பொழித்திட் டலைவேலான்.

(இ - ள்.) அலை வேலான் - பகைவரை வருத்தும் வேற் படையினையுடைய அக்காம்பிலிமன்னன்; அ தலை அம் பெருங்கத வம் அடைப்பு, ஒழித்திட்டு - அந்தத் தலைவாயிற் கதவுகளின் அடைப்பை மாற்றித் திறப்பித்துப் பின்னர்; திதலைமாண் அல்கு லீர் - தேமலால் மாட்சிமையுடைய அல்குலையுடைய மகளிரே நீயிரிருவரும்; முதலவனோடு அவன் நூலும் அ நூலின் முடி பொருளும் - உங்கள் சமய முதல்வரையும் அவர் கூறிய சமய நூல்களையும் அந்நூல்களாற்றுணியப்பட்ட முடிந்த பொருள்களை யும்; நுதலிய பொருள் நிகழ்வும் - அந்நூல்கள் கூறிய பொருள் நிகழ்வுகளையும்; நும கோளும்-நுங்கள் கொள்கைகளையும்; எமக்கு அறியத் தெருட்டுமின் - யாங்கள் நன்குணரும்படி தனித்தனியே

எடுத்துக்கூறி விளக்குவீர்களாக; எனச் சொன்னான் - என்று வேண்டினன் என்க.

(வி - ம்.) முதல்வன் - கடவுள் அல்லது சமயாசாரியன். நூல் - சமய நூல். முடிபொருள்-சித்தாந்தம். பொருள்-தத்துவம். கோள்-கொள்கை திதலை-தேமல். தெருட்டுதல் - தெளிவித்தல். அத்தலையம் பெருங்கதவம் எனற்பாலது எதுகை நோக்கி அதலையம் பெருங்கதவம் எனநின்றது. அதலையும் பெருங்கதவம் எனவும் பாடம். இதற்கு உம் இசைநிறை என்க. அல வேலான் என்றும் பாடம். (உ௩)

குண்டலகேசி கூற்று

கஎ௩. நன்றாக வுரைத்தனைநீ
நரதேவ நின்னவையுள்
வென்றார்க்கோர் விழுப்பொருளும்
தோற்றார்க்கோர் பெருந்துயரும்
ஒன்றாக வுரையாக்கா
லுரையேன்யா னெனச்சொன்னாள்
குன்றாத மதிமுகத்துக்
குண்டலமா கேசியே.

(இ - ள்.) குன்றாத மதி முகத்துக் குண்டலமாகேசி-நிறைத் திங்கள் போன்ற முகத்தையுடைய குண்டலகேசி அரசன் மொழி கேட்டலும்; நரதேவ மன்னனே!; நீ நன்றாக உரைத்தனை - நீ நன்றாகவே பணித்தருளினை; (ஆயினும்); நின் அவையுள் வென்றார்க்கு ஓர் விழுப்பொருளும் - நின்னரசவையுள் யாங்கள் ஒருவரோடொருவர் சொற்போர் புரிந்துழி எம்முள் வென்றவருக்கு ஒரு சிறப்புப் பொருளும்; தோற்றார்க்கு ஓர் பெருந்துயரும் ஒன்று ஆக உரையாக்கால்-தோற்றவருக்கு ஒரு பெருந்துன்பமும் வழங்குவதாக இப்பணியோடே ஒரு சேரக்கூறாதவிடத்து; யான் உரையேன் - யான் யாதொன்றுங் கூறேன்காண்; எனச் சொன்னாள் - என்று கூறினள் என்க.

(வி - ம்.) நரதேவன்-அரசன். விழுப்பொருள்-சிறப்புப்பொருள். பெருந்துயர் என்றது ஒறுப்பினை. எனவே வென்றவரைப் பாராட்டிச் சிறப்புச் செய்தல் வேண்டும்; தோற்றவரை நன்கு ஒறுத்துத்துன்புறுத்தல் வேண்டும்; இங்ஙனம் செய்வதாக நீ உடன்பட்டாலன்றி யான் சொற்போர் புரியேன் என்றாளாயிற்று. முன்பணித்த வுரையோடு இவற்றையும் ஒன்றாக உரையாக்கால் என்பது கருத்து. குன்றாதமதி - நிறை நாட்டிங்கள். குண்டலகேசி, நரதேவ (என விளித்து) நன்றாக வுரைத்தனை வென்றார்க்கு ஓர் விழுப்பொருளும், தோற்றார்க்கு ஓர் பெருந்துயரும், ஒன்றாக வுரையாக்கால் உரையேன் எனச் சொன்னாள் எனக் கூட்டுக. (உ௪)

வேந்தன் உடன்பாடும் மகளிர் மகிழ்ச்சியும்

கஎச. அறத்தகைய வரசனு
மதுகேட்டாங் கவர்க்குரைப்பான்
சிறப்பயர்வ னன்றாக
வென்றார்கட் கின்றேயான்
புறப்படுப்பன் றோற்றாரைப்
பொல்லாங்கு செய்தென்றாற்
சிறப்பவும் பெரிதுவந்தா
ரிலங்கிழையா ரிருவருமே.

(இ - ள்.) அறத்தகை அ அரசனும்-அறப்பண்புடையவனாகிய அம்மன்னவனும்; அது கேட்டு-அக்குண்டலகேசியின் மொழியைக்கேட்டு; அவர்க்கு உரைப்பான் - அம்மகளிரிருவருக்கும் கூறுபவன்; யான் ஆங்கு வென்றார்க்கு நன்றாகச் சிறப்பு அயர்வன் - யான் அங்ஙனமே நுங்களில் சொற்போரில் வென்றவர்க்கு நன்றாகச் சிறப்புக்கள் செய்வேன்; தோற்றாரை - தோற்றவரை; பொல்லாங்கு செய்து இன்றே புறப்படுப்பன் - துன்புறுத்தி இற்றைநாளிலேயே எம்நாட்டினை விட்டு வெளியேற்றுவேன்; என்றாற்கு- என்று இங்ஙனம் கூறிய மன்னவன் உடன்பாட்டிற்கு; இலங்கிழையார் இருவருமே இறப்பவும் பெரிது உவந்தார் - அம்மகளிர் இருவருமே மிகமிக மகிழ்வாராயினர் என்க.

(வி - ம்.) அது – குண்டலகேசி கூறிய மொழி. அவர்க்கு-அம்மகளிரிருவருக்கும். உரைப்பான் - பெயர். பொல்லாங்குசெய்தல் - வருத்துதல். இறப்பவும் பெரிது - மிகவும் பெரிது. இலங்கிழையார் என்பது விளங்கிய அணிகலனுடையார் எனத் தன் சிறப்புப் பொருள் குறியாது மகளிர் என்னும் பொதுப் பொருள் குறித்து நின்றது. (உ௯)

அம் மகளிரிருவரும் சொற்போர் தொடங்குதல்

கஎரு. வேனிரைத்த விரிதானை
வேத்தவையார் வியப்பெய்தக்
கோனுரைத்த வுரைகேட்டே
குண்டலமா கேசியுந்
தானுரைத்தாள் தான்வேண்டுந்
தலைவனாற் போகுணிகழ்ச்சி
தேனிரைத்த கருங்குழலா
டானும்பின நெருட்டினாள்.

(இ - ள்.) கோன் உரைத்த உரைகேட்டு - மன்னன் தன் வேண்டுகோட் கிணங்கிக் கூறிய மொழிகளைக் கேட்டுமகிழ்ந்த, குண்டல மாகேசியுந்தான் - குண்டலகேசி தானும்; வேல் நிரைத்த விரிதானை வேந்து அவையார் வியப்பு எய்த - வேற்படையை நிரல்பட ஏந்திய விரிந்த படைமறவரையுடைய அவ் வேந்தனுடைய நல்லவையிலுள்ள சான்றோரெல்லாம் வியக்குமாறு; தான் வேண்டும் தலைவன் நூல் பொருள் நிகழ்ச்சி - தான் விரும்புகின்ற தலைவன், அவன் கூறிய நூல், அவற்றில் ஓதிய பொருள், அப் பொருளின் நிகழ்ச்சி என்னுமிந் நான்கனையும்; உரைத்தாள் - எடுத்து மொழிந்தாள்; தேன்நிரைத்த கருங்குழலாள் தானும் - வண்டு நிரல்பட்ட கரிய கூந்தலையுடைய நீலகேசிதானும்; பின் தெருட்டினாள் - பின்னர்க் குண்டலகேசி மொழிகள் பிழைபட்டனவாதலை அவ்வவையோர்க்குக் காட்டித் தெளிவிப்பாளாயினள் என்க.

(வி - ம்.) நிரைத்த-நிரல்படவேந்திய. தானை-படை. வேந்தவை வேத்தவை எனப் புணர்ந்தன. கோன்-மன்னன். தலைவன், நூல், பொருள், நிகழ்ச்சி என்னுமிவற்றை வடநூலோர் நிரலே ஆப்தன், ஆகமம், பதார்த்தம், பிரவிருத்தி என்றோதுப.

இனி, இங்ஙனமே "நின்றற் புகழுந் தலைவன் யார் நூல் பொருள் யாவை அப்பொருள் நிகழ்வும்......விளம்பென" மணிமேகலையினும் வருதலுணர்க (உஎ - கஅ-௨) குண்டலகேசி எனமுற்படப் பெயர் குறிக்கப்பட்டமையால் பின்னர்த் தேனிரைத்த குழலாள் என்றது நீலகேசியை என்பது பெற்றும். தெருட்டினாள் என்றது குண்டலகேசி மொழிந்தவை பிழையுடையன வென்று அவ்வவையோரைத் தெருட்டினாள் என்றபடியாம். (௨க)

குண்டலகேசி கூறிய தலைவன் முதலியவற்றின் இலக்கணம்

(க) தலைவன்

களகூ. ஆதிதான் பெரியனா
யறக்கேடு மளவெல்லா
மூதியமே யுணர்ந்தவ
னுறுதரும மேயுரைத்தான்
யாதனையுந் தான்வேண்டா
னயலார்க்கே துன்புற்றான்
போதியா னெம்மிறைவன்
போதுந்தினா குயக்கோள்வான்.

(இ - ள்.) ஆதி தான் பெரியனாய் - அவையீரே! யான் விரும்பும் தலைவனியல்பு கேண்மின்! அவன் முன்னரே பெருமைக்

கண் நின்றவனும்; அறக் கெடும் அளவு எல்லாம் - தான் முழுதுங் கெடுதலாகிய நிர்வாணம் எய்துந் துணையும்; ஊதியமே உணர்ந் தவன் - பிறவுயிர்க்கு இன்பத்தையே எண்ணிபவனும்; உறு தருமமே உரைத்தான் - மக்களுக்கு மிக்க தனது அருளறத்தையே செவியறிவுறுத்தவனும்; தான் யாதனையும் வேண்டான் - தான் தனக்கென யாதொரு பொருளையும் விரும்பாதவனும்; அய லார்க்கே துன்புற்றான் - பிறர்நலங்கருதியே துன்பமுற்றவனும்; பொருந்தினர் உயக்கொள்வான் - தன்னைப் புகலாக அடைந்தவரை யெல்லாம் உய்விப்பவனும் ஆகிய; போதியான் - புத்தபகவனே; எம் இறைவன் - எம்மனோர்க்குத் தலைவன் ஆவன் கண்டீர்! என்க.

(வி - ம்.) ஆதி - முன்பு. பெரியன் - பெருமைப்பண்புடையன். அஃதாவது: செயற்கரிய செய்தல், தருக்கின்மை, பிறர்குற்றங் கூறாமை, என்றிவை முதலிய நற்குணங்களாலே யாவரினும் பெரியனாந் தன்மை என்க. அறக் கெடுதல் - முழுதும் அழிந்துபோதல். ஊதியம் - இன்பம். தருமம் - அருளறம். 'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல், லதனின் அதனி னிலன்' என்பவாகலின்; யாதனையும் தான் வேண்டான் என்றாள்.

இது,

"முன்றான் பெருமைக்க ணின்றான்முடி வெய்து காறும்
நன்றே நினைந்தான் குணமேமொழிந் தான்ற னக்கென்
றொன்றானு முள்ளான் பிறர்க்கேயுறு திக்கு ழந்தா
னன்றே யிறைவ னவன்றாள்சர ணாங்க ளன்றே"
(குண்டலகேசிச் செய்யுள்)

எனப் பெருங்காப்பியம் ஐந்தனுள் ஒன்றாகிய குண்டலகேசியின்கண் வரும் தன்கூற்றாகிய கடவுள் வாழ்த்துச் செய்யுளை வழி மொழிந்த படியாம். (உஎ)

(உ) நூல் (௩) பொருள் (௪) நிகழ்வு

கஎஎ. முந்துரைத்தான் முந்நூலு
மந்நூலின் முடிபொருடா
மைந்துரைப்பி னுருவுழப்
பறிவோடு குறிசெய்கை
சிந்தனைகட் செலவோடு
வரவுமே நிலைபின்னை
தந்துரைப்பி னேரிநுதிபோற்
றாங்கேடு நிகழ்வென்றாள்.

(இ - ள்.) முந்து முந்நூலும் உரைத்தான் - எம் புத்தர் பெருமான் முற்பட விநயபிடகம் சூத்திர பிடகம் அபிதருமபிடகம்

என்னும் மூன்று மெய்ந்நூல்களையும் திருவாய் மலர்ந்தருளினன்; அந்நூலின் முடிபொருள் தாம் ஐந்து - அந்த நூலின்கண் முடிவுடைய பொருளும் ஐந்து கூறினன்; உரைப்பில் - அவற்றை விரித்துக் கூறுங்கால்; உரு உழப்பு அறிவோடு குறி செய்கை - உருவக்கந்தம் நுகர்ச்சிக்கந்தம் அறிவுக்கந்தம் குறிக்கந்தம் செயற்கந்தம் என விரியும்; சிந்தனைகண்-இவற்றை ஆராயுமிடத்து; வரவோடு செலவுமே நிலை இல்ல - இவை தோன்றுவனவும் அழிவனவுமே யாகும் நிலையுதலுடையனவல்ல வென்பது புலப்படும்; தாம் கேடு நிகழ்வு - இவற்றின் கேடாகிய நிகழ்ச்சிக்கு; தந்துரைப்பின் - ஓர் உவமை கொணர்ந்து கூறின்; எரிநுதிபோல்-விளக்கின் நுனிபோல் கெடும் என்னலாம்; என்றுள் - என்று கூறினன் என்க.

(வி — ம்.) எழுவாய் புத்தன் என்பது அதிகாரத்தாற் பெற்றும். மூந்நூல் - மூன்று பிடகநூல்கள். இவற்றைப் பிடகத்திரயம் என்ப. "பெரியோன் பிடகநெறி" என மணிமேகலை கூறுதலும் (உ௬ — ௬௬) காண்க. பிடகம் என்பதற்குக் கூடை என்று பொருளாம். புத்தன் தன்மம் சங்கம் என்னும் மும்மணியும் அழிவின்றி இருத்தற்கு இடமாய்க் கூடைபோறலின் இவற்றிற்கு அப்பெயர் அமைந்தன வென்பர்.

இவற்றுள் முதற்கண்ணதாகிய விநயபிடகம் விபங்கம், கண்டகம் பரிவாரபாடம் என மூன்று வகைப்படும் என்றும்; இவற்றுள் விபங்கம் பாராசிகாதி பிரதமபாகமென்றும், (அஃதாவது சங்கத்திலிருந்து விலக்குதற்குரிய குற்றங்களைக் கூறுவது என்க.) பிராயச்சித்தாதி துவிதிய பாகமென்றும், (அஃதாவது கழுவாய்க்குரிய குற்றங்களைக் கூறுவது என்க.) இரண்டு பகுதியையுடைத்து என்றும், கண்டகம் மகாவருக்கம் குல்லவருக்கம் என இரண்டு பகுதியையுடையது என்றும் கூறுப.

இனி, இரண்டாவதாகிய சூத்திரபிடகம், திர்க்கநிகாயம் மத்தியமநிகாயம் சயுக்தநிகாயம் அங்கோத்தரநிகாயம் சூத்திரக நிகாயமென ஐந்து பகுதியையுடையது என்றும், இவற்றுள், சூத்திரகநிகாயம், சூத்திரகபாடம், தருமபதம், உதானம், இத்தியுத்தம், சூத்திர நிபாதம், விமானவத்து, பிரேதவத்து, தேரகாதை, தேரீகாதை, சாதகம், நிருத்தேயம், பிரதிசம்பிதாமார்க்கம், அபதானம், புத்தவமிசம், சரியாபிடகம் எனப் பதினைந்து பகுதியுடையது என்ப.

இனி மூன்றாவதாகிய அபிதருமபிடகம் - தருமசங்கினி, விபங்கம், கதாவத்துப் பிரகரணம், புற்கலப் பிரஞ்ஞப்தி, தாது, கதையமகம், பிரத்தானப் பிரகரணம் என ஏழு வகையினை உடையது என்றும் கூறுப.

இனி, ஐந்து என்றது, ஐந்து கந்தங்கள் என்றவாறு. அவை உருவக்கந்தம், அறிவுக்கந்தம், நுகர்ச்சிக்கந்தம், குறிக்கந்தம், செயற்கந்தம் என்பன. செயற்கந்தம் எனினும் பாவனைக்கந்தம் எனினும் ஒக்கும்.

இவற்றை,

"உருவு நுகர்ச்சி குறியே பாவனை
யுள்ள வறிவிவை யைங்கந்த மாவன"

என மணிமேகலையினும் (கூ0-கஅக-கO) காண்க. இவற்றை ரூபக்கந்தம், விஞ்ஞானக்கந்தம், வேதனைக்கந்தம், சஞ்ஞாக்கந்தம், சமக்காரக் கந்தம் என்னும் ஓதுப. இவற்றுள்,

(க) உருவக்கந்தமாவது – உருவங்களுக்கெல்லாம் காரணமான பொருள் என்க. இந்த வுருவக் கந்தத்தில் நிலம் நீர் தீ வளி ஆகிய நான்கு பூதங்களும் மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐந்தறிவுக் கருவிகளும் உருவம் சுவை நாற்றம் ஓசை ஊறு என்னும் ஐம்புலன்களும் ஆண்மை பெண்மை வேறுபாடுகளும் இன்னோரன்ன பிறவுமாகிய இருபத்தெட்டுத்தத்துவங்கள் அடங்கியிருக்கின்றன. வானத்தைப் பௌத்தர் ஒரு பூதமாகக் கொண்டிலர்.

(உ) நுகர்ச்சிக் கந்தமாவது - பொறிகளுக்கும் புலன்களுக்கும் உள்ள தொடர்பால் உண்டாகும் உணர்வு என்க. பொறிகள் ஐந்தும் மனமும் ஆகிய ஆறு வாயில்களாலே இவ்வுணர்வு ஆறுவகைப்படும்; இந்த ஆறும் தனித்தனியே குசலம் அகுசலம் குசலாகுசலம் என விரிதலின் நுகர்ச்சி பதினெட்டுவகைப்படுமென்ப.

(ங) அறிவுக்கந்தம் என்பது துயில்வோருடைய உணர்வானது தலைமைத் தன்மையும் நுகர்வுமின்றிச் சான்றாந்துணையாய் நிற்றல் போல அறிவுடையோர் உடலகத்திருந்து அவர்களுடைய அறிவுக்கெல்லாம் முதலாய் நிற்கும் அறிவுப்பொருள் என்ப.

(ச) குறிக்கந்தமாவது - முற்கூறப்பட்ட மெய்ம்முதலிய ஆறு கருவிகளாலுமுண்டாகிற அறுவகையுணர்வோடுந் தொடர்புற்று அவ்வுணர்விறைலுண்டாகிற பொதுவறிவினையும் சிறப்பறிவினையுங் கொண்டு பொருள்களைப் பெயரிட்டுக் குறித்துக்காட்டுகற்கியன்ற அறிவு என்ப. இது முற்கூறிய ஆறு கருவிகள் வாயிலாய்த் தோன்றுதலால் ஆறுவகைப்படும் என்க.

(ரு) செயற் கந்தமாவது - மனமும் மொழியும் மெய்யுமாகிய முக்கருவிகளாற் செய்யப்படும் தொழில் வேறுபாடுகளால் அக்கருவிகளுக்குண்டாகும் தேர்ச்சிச் சிறப்பு என்ப. இஃது ஐம்பத்திரண்டு வகைப்படும் என்றும் கூறுப.

இனி, இவற்றின் நிகழ்ச்சி. வரவும் செலவுமேயன்றி நிலைத்தல் இல்லை என்பாள், வரவொடு செலவுமே நிலையில்ல என்றாள். செலவோடு வரவுமே என்னுந் தொடரை வரவோடு செலவுமே என முறைப்படுத்து மாறுக.

தந்துரை-எடுத்துக்காட்டுரை. அஃதாவது உவமைதந்துகூறுதல் என்றவாறு. வந்து அப்பொழுதே அழிதற்கும் நிலையாமைக்கும் எரிகின்ற விளக்கில் நுனி உவமை. எரிநுதி - எரிகின்ற விளக்கின் நுனி.

இனி முடிபொருள் எனவே முடியாப் பொருளும் உண்டு என்பது பெற்றாம். அது முழுதுங் கெடுதலாம். இதனை நிர்வாணம் என்ப. இது புத்தர் நூலாகிய பிடகம் கூறியபடியாம்.

"அன்னோற் செய்யப்பட்ட நூல் பிடகம்" எனவரும் செய்யுளை (குண்டலகேசிப் பெருங்காப்பியம்) வழி மொழிந்தபடியாம் கண்டுகொள்க. (உஅ)

நீலகேசி குண்டலகேசியின் கூற்றிற்குக் குற்றங் காட்டத் தொடங்கல்

௧எ௮. சொல்லியவந் நான்மைமேற்
றுணிவினையுந் தான்பெயர்த்து
நல்லவையை மனங்கொளீஇ
நான்மையின் முதல்வைத்த
வெல்லையில் குணத்தலைவ
ரிலக்கணமென் றெடுத்ததன்மேற்
பல்வகைய பெருங்குற்றம்
பதம்பதமாயக் கேளென்றாள்.

(இ - ள்.) சொல்லிய அந்நான்மை மேல் **துணிவினையும்** -- அதுகேட்ட நீலகேசி இவ்வாறு குண்டலகேசி அவையின்கட் கூறிய இறைவன் நூல் பொருள் நிகழ்வு என்னும் அந்த நான்கு பொருளினமேல் தனக்குண்டாகிய தெளிவினையும்; **தான் பெயர்த்து** - தாமொருமுறை தன்கூற்றாக வழிமொழிந்து; **நல் அவையை மனங் கொளீஇ** - நல்லோர் குழுமிய அவ்வவையினரை மனத்தின்கட் கொள்ளும்படி செய்து பின்னர்; **நான்மையின் முன்வைத்த எல்லை இல் குணத்தலைவர் இலக்கணம் என்று** - அந்த நாற்பொருள்களுள் முற்படவைத்துக் கூறப்பட்ட அளவிறந்த நற்குணங்களையுடைய எம்மிறைவனுடைய இலக்கணம் இவை என்று அக்குண்டலகேசி; எடுத்தனமேல்- எடுத்தியம்பிய இலக்கணத்தின்பால்; **பல்வகைய பெருங்குற்றம் பதம் பதமாகக் கேள்** - பல்வேறு வகைப்பட்ட பெரிய குற்றமுண்மையை யானிப் பொழுது மொழிக்கு மொழியாகக் கூறுவேன் கேட்பாயாக!; **என்றாள்** - என்று குண்டலகேசியை நோக்கிக் கூறினள் என்க.

(வி - ம்.) சொற்போர் புரிவோர் தம் மாற்றார் கூற்றைத் தாம் தெளிந்துகொண்ட முறையினை முற்பட வழிமொழியுமாற்றால் கூறுக் கால் பின்னர் அவர் கூறுங் குற்றங்கள் அவையோர்க்கு நன்கு விளங்கா வாகலின் நீலகேசி குண்டலகேசி கூற்றிற்குக் குற்றம் கூறுமுன்னர் அவள் கூற்றினைத் தான் தெளிந்துள்ள தன்மை தோன்ற வழிமொழிந்து அவையோர்க்கு விளக்கினள் என்பது கருத்து.

நான்மைமேற் றுணிவு-நான்கு பொருள் பற்றித் தனக்குண்டான தெளிவு என்க. நான்மை - மும்மைத் தமிழ் என்புழிப் போல நான்கு என்னும் எண்குறித்து நின்றது. அவை இறைவன் முதலியன. பெயர்த்தல் - வழிமொழிதல். கொளீஇ - கொள்வித்து. எல்லையில் குணமென்றது,குண்டலகேசிஆதிதான் பெரியனாய் என்பது தொடங்கி உயக்கொள்வான் என்பதீறாகக் கூறிய குணங்களை. எடுத்ததன்மேல் - எடுத்துக்கூறிய அத் தலைவனிலக்கணத்தின்மேல். பதம் - சொல். நீ கூறிய ஒவ்வொருசொல்லும் குற்றமுடைத்தென்பாள் பதம்பதமாய்க் கேள் என்றாள். (௨௧)

கஎகூ. முன்னெனப் படுவதுதான்
முதலில்லாத் தடுமாற்றம்
அன்ன தன்கட் பெரியனே
லறங்கொண்ட தவமாகும்
பின்ன தன்கட் பெரியனேற்
பிறழ்வெய்துங் காலச்சொ
லென்னென்றான் பெரியவா
றிருமையினுந் திரிந்தென்றாள்.

(இ - ள்.) முன் எனப் படுவதுதான் முதல் இல்லாத் தடு மாற்றம் - ஏடி! நின்னால் ஆதி என்று கூறப்படுவதுதான் அநாதி யாகிய அவனது பிறப்புழற்சிக்காலமன்றோ?; அன்ன தன்கண் பெரியனேல் - அச்சம்சாரப்பொழுதிலேயே பெரியவனாயின்; அறம் கொண்டது அவம் ஆகும் - அவன் அறவொழுக்கம் மேற் கொண்டது வீணையாகும்; பின்ன தன்கண் பெரியனேல் - அறங் கொண்டு புத்தனாய பின்னரே பெரியவனாயினன் என்பாயாயின், காலச்சொல் பிறழ்வு எய்தும் - நீ ஆதிதான் பெரியனென்புழிக் கூறிய ஆதி என்னும் காலங்குறிக்குஞ் சொல் பிழையுடையதாகும்; இருமையினும் திரிந்து - இங்ஙனம் இருநிலைகளினும் ஒழிந்தபின்; பெரியவாறு என்னென் - பெரியனாயவாறு எத்தன்மையுடைமை யாலோ? கூறிக்காண்! என்று கூறினள் என்க.

(வி - ம்.) முன் என்னும் சொல் தடுமாறாதிருத்தல் வேண்டு மெனின் அது காலத்தையாதல் இடத்தையாதல் முன்னிட்டு வருதல் வேண்டும். அஃதாவது, இக்காலத்திற்கு முன், இவ்விடத்திற்குமுன் என்று வருதல் வேண்டும். நீ கூறிய 'முன்' தன்னை நிலைநிறுத்தற்குரிய முதலில்லாமனின்று தடுமாறுகின்றது காண் என்றும் ஒருபொருள் தோற்றுதலுணர்க. இனி ஒருவாற்றான் அவன் சம்சாரியாகுமுன் என்று கூறுவாயாயின் சம்சாரியாகுமுன்னரே பெருமையுடையன் எனிற் சம்சாரியாகி அறங்கொள்ளுதல் அவன் பெருமைக்கு இழுக்காம். இங்ஙன மிழுக்காம் என்றஞ்சி அவன் அறங் கொண்டு புத்தனாய பின்பே பெருமைக் கணின்றான் என்பாயாயின், முன்னின்றான் பெருமைக்கண் என்றதும் அதனை வழிமொழிந்து இப்பொழுது ஆதிதான் பெரியனாய் என்றதும் பிழையாகும். இங்ஙனம் இருவழியும் பிழையாகவே இவற்றின் வேறாய எவ்வழியில் அவன் பெரியன்; கூறுக என்பாள், இருமையினுந்திரிந்து பெரியவாறு என் என்று வினவினள். (கூ0)

கஅ0. பெருமைமுன் பெற்றனனேற்
பின்னைத்தான் முடிப்பதோர்
கருமமிங் கேவனுகுங்
காட்டுதியேற் பெற்றிலன்முன்

றருமந்தான் கருதிநீ
சொன்னையேற் றலைவரே
யொருமையா லறந்தெளிந்த
வுழப்புலையர் முதலானோர்.

(இ - ள்.) முன் பெருமை பெற்றனனேல் - முன்பே பெரியவனும் வீடேறப்போவான் உயிர்கள் அறியாமையாற் படும் அல்லல் கண்டிரங்கி அவ்வீடுபேற்றினை விடுத்து காலெண்ணிறப்பு நூறுயிரங்காலம் அவ்வுயிர்களை உயக்கோடற் பொருட்டு உழந்தானாகலின் ஆதிதான் பெரியனாகி என்று கூறினேன் என்பாயாயின்; பின்னைத்தான் முடிப்பது ஓர் கருமம் இங்கு எவன் ஆகும் - முன்பே பெருமைக்குத் தலைவரம்பாகிப் பெருமை பெற்றனனாயின் பின்பு பிறர்க்குழக்கின்றதனான் முடிக்கும் செயல் யாவதாம்?; காட்டுதியேல் - இங்ஙனம் உழந்து முன்பு பெறாத புத்தத்தன்மை பெற்றான் என்று காட்டுவாயாயின்; இவன் முன்பே பெரியன் ஆயினன என்பது பிழையாம், ஆதலின்; முன்பெற்றிலன் - இவன் முன்பே பெருமை பெற்றிலன் என்றாகி உழந்ததும் இப்புத்தத் தன்மை பெறற்கே என்றும் ஆகித்தான் "யாதனையும் வேண்டான்" என்பதும் பிழையாமொழியுமே; தருமந்தான் கருதி நீ சொன்னையேல் - அவன் உழந்ததெல்லாம் பிறர்க்கு அறங்கருதியேயாம் தனக்கென ஒன்றானும் உள்ளான் அதனால் பெருமைக்கணின்றான் என்றேம் என்பாயாயின்; இவ்வாறு பெருமை கொள்ளின் ஒருமையால் அறந்தெளிந்த உழப் புலையர் முதலானோர் தலைவரே - ஒருசேரப் புத்த தருமத்தை உணர்ந்த பிறர்க்குழுது செய்த்தலைக் கிடந்து வருந்துகின்ற புலையர் முதலானோரும் தலைவரேயாகி விடுவர்காண்! என்றாள்; என்க.

(வி - ம்.) காட்டுதியேல் என்பது முன்பு பெறாத புத்தத்தன்மை பெற்றானென்று காட்டுதியேல் என்பதுபட நின்றது. எனவே முன்பு புத்தத்தன்மை பெற்றிலன் ஆதலான் ஆதிதான் பெரியனாகி என்று நீ கூறியது பிழையாகும் என்றாளாயிற்று. இன்னும் முன்பு பெருமைக்குத் தலைவரம்பாகிய பெருமை பெறாது அதனைப் பெறுதல் வேண்டியே பிறர்க்குழந்தான் ஆதலின் நீ முன்பு அவன் யாதனையும் வேண்டான் என்பதும் பிழைபடும் என்றாளுமாயிற்று இனி, அவன் புத்தத்தன்மை பெறுதலைக் கருதிப் பிறர்க்கற முயன்றானல்லன் பிறர்க்கற முயல்வுழி அது தானே வந்தெய்தும் என்பாயாயின்; பிறர்க்கற முயலுங்கால் இதனாற்றனக்கு அப்பெருமை வரும் என்று அறிந்து முயன்றனனோ? அறியாதே முயன்றனனோ? அறிந்து முயன்றான் எனின் அதனை வேண்டியே உழந்தான் என்பது உறுதியாம். அறியாதே முயன்றான் எனின் அவன் அறிவுக் குறையுடையன்; அறியாமையால் அறத்தினும் குறையுடையன் என்றும் கருதப்பட்டு முன்றான் பெருமைக்கணின்றான் என்றது முழுமுற்றும் பிழையாதற்கே ஏதுவாங்காண் என்று குறிப்பாலுணர்த்தினாளுமாயிற்று. இனி, இங்ஙனமன்றி அவன் அறிந்தோ

அறியாமலோ எங்ஙனமாயினும் பிறர்க்கே உழன்றானல்லனோ? அதனால் பெருமைக்கணின்றான் என்பாயாயின் அறிந்தோ அறியாமலோ உழவு முதலியனசெய்து பிறர்க்கே முயலும் புலையர் முதலானோரும் பெருமைக்கணின்றவரே யாவர் என்று அசதியாடுவாள்; உழப்புலையர் முதலானோர் தலைவரே என்றாள். இதனால் 'ஆதிநான் பெரியதுகி' என்ற குண்டலகேசி கூற்றுப் பல்லாற்றானும் பிழைபாடுடைத்தெனக் குற்றங் கூறப்பட்டமை யுணர்க. இனி, மேலே புத்தனுடைய அறியாமையையும் அவன்செயல் அறமாகாமையையும் கூறுகின்றனள். (௩௪)

௧௮௧. தான்கெடினுந் தக்கார்கே
டெண்ணற்க வென்பதனை
யூன்கொடுமை யுரைத்தானஃ
துணர்ந்திலனே யாகானோ
தான்கெடு மளவெல்லா
நினைந்துரைத்த தத்துவந்தான்
மான்கடியு நோக்கினாய்
வழியறக்கெட் டொழிவதோ.

(இ - ள்.) மான்கடியும் நோக்கினாய் - தனது அழகினாலே மானைவெருட்டுகின்ற பார்வையையுடையோய்!; 'தான் கெடினும் தக்கார் கேடு எண்ணற்க என்பதனை - 'தான் கெடநேர்ந்தாலும் பிறருடைய கேட்டினை நினையாதேகொள்' எனவரும் ஆன்றோர் அறவுரையைத் தானும் அறியாமல் நின்னிறைவனாகிய புத்தன்; ஊன் கொடுமையுரைத்தான் - 'அங்காடியிற் கிடைக்கும் ஊனை விலைக்குப் பெற்றுண்ணல் குற்றமாகாது' என்று மாந்தர் கொடுமைசெய்தற்குக் காரணமான ஒழுக்கத்தையும் அறிவுறுத்தினன் அல்லனோ; இதனால் அவன்; அஃது உணர்ந்தவன் ஆகானோ - நீ அறக்கெடுமளவெல்லாம் ஊதியமே உணர்ந்தவன் என்றதற்கேற்ப அவன் உயிர்கட் கூதியமாகிய அந்நன்மையை உணர்ந்திலன் என்றாகானோகாண்!; தான் கெடும் அளவெல்லாம் - நின்னிறைவன் தான் வெறும் பாழாகும் நிர்வாண மடையுந்துணையும்; நினைந்து உரைத்த தத்துவம் தான் - நீளநினைந்து கூறிய தத்துவந்தானும்; வழியறக் கெட்டொழிவதோ - உயிரினங்கள் வாழுநாளெல்லாம் துன்பத்தே உழன்றுழன்று இறுதியாகத் தங்கள் வழியும் அற்றுப்போகத் தாமும் பொன்றக்கெட்டு வெறும் பாழாய் முடிவதுதானோ? நன்று நன்று புத்தனார் கூறிய தத்துவம் என்றாள் என்க.

(வி - ம்.) இதனால் புத்தன் நன்குணராமையும் குணனே மொழியாமையுங் கூறுகின்றாள் என்க. என்னை? தான் கெடினும் தக்கார் கேடெண்ணற்கவென்னும் ஆன்றோர் அறவுரையையும் அறியாமல் தான் ஊன்றின்றல் வேண்டிக் கொடுமையுரைத்தான் ஆதலின் அவன் உயிர்

கட்கு ஊதியமாகிய நல்லறத்தையும் உணர்ந்திலன் என்பது நீலகேசி யின் கருத்தாதலின் என்க.

தான் கெடினும் தக்கார் கேடெண்ணற்க என்பதனை அறியாதே என ஒருசொல் வருவித்தோதுக, இது சொல்லெச்சம்.

அஃது என்றது "அறக்கெடுமளவெல்லாம் ஊதியமே உணர்ந்த வன்" எனக்கூறிய குண்டலகேசி மொழியில் வரும் ஊதியம் என்பதனைச் சுட்டி நின்றது. உணர்ந்திலனே என்றுகாதோ என்க. இனி ஆகாதோ என்பது வழுவமைதி எனினுமாம்.

மிகமிக ஆராய்ந்து கண்ட தத்துவமிதுதானோ என்பாள், தான் கெடுமளவெல்லாம் நினைந்துரைத்த தத்துவம் என்றாள்.

கொல்லாமையே பௌத்தருடைய தலைசிறந்த அறமாயினும் பொருளாசையுடையார் உயிரினங்களைக் கொல்லுதற்குக் காரணமான மொழியையும் புத்தன் கூறினன் என்றவாறு. அஃதாவது பழியில் ஊனுண்ணல் தீவினையாகாதென்பது பௌத்தருடைய கொள்கையாம். பழியில் ஊனாவது தாமே கொல்லாமல் இறந்துபட்ட உயிரினங்களின் ஊன் என்க. பௌத்தர் இங்ஙனமொரு கொள்கையுடையர் என்பதனை மணிபல்லவத்திலே நக்கசாரணர் தலைவனுக்கு அறங்கூறுகின்ற சாதுவன் என்னும் பௌத்தன்,

"நன்று சொன்னாய் நன்னெறிப் படர்குவை
யுன்றனக் கொல்லும் நெறியற முரைக்கேன்
உடைகல மாக்கள் உயிருய்ந் திங்குறின்
அடுதொழி லொழிந்தவர் ஆருயிர் ஓம்பி
மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டும்
தீத்திறம் ஒழிக" (மணி-கசு-சுஉ-சுஎ)

எனக் கூறுமாற்றானுமுணர்க.

இனி, இங்ஙனம் பழியில் ஊனுண்ணலும் கொலைக்கே காரணம் ஆதலின், அவன் நன்குணரான் ஆயினன் என்றாள். என்னை? பலரும் ஊனுண்பாருண்டாயினல்லது நமக்கு ஊன் கிடைத்தலரிது என்னும் கருத்தால் நின்றலைவன் அங்காடியிற்பட்ட ஊனுண்பார்க்குக் குற்ற மில்லை என்றான்; என்றலுமே பொருளாசைமிக்க மாக்கள் பொரு ளீட்டற் பொருட்டு உயிரினங்களைக் கொல்வாராயினர்; ஆகவே இவ் வாற்றால் உயிரினங்கள் நாளடைவில் அழிந்தொழிந்தன. ஆகவே தன் வயிற்றின் பொருட்டுப் பிறவுயிர்கட்கு நிலைநிற்கும் கேட்டினையுரைத் தான் ஆதலின் நன்கு நினைத்தானாகான் என்பது கருத்து ஆதலின் என்க.

இனி, இவ்வாறு பிறவுயிர்க்குக் கேடுரைத்தமையால் குணம் மொழிந்தானுமாகான் என்றாளுமாயிற்று. என்னை? ஓரரசன் தன் ஏவலரை விளித்து "நும்முள் இன்ன நாட்டிலுள்ள மாந்தர் தலை கொணர்ந்தார்க்குப் பொருள் கொடுத்து வாங்குவே" மென்றானாக; அவன் நன்கு நினைந்தானும் குணமொழிந்தானும் ஆகாதவாறுபோலப் புத்தனும் மாந்தர் ஊனொழிய ஏனைய உயிரினங்களின் ஊனை விலை கொடுத்து வாங்குக என்றானாதலின் இவனும் நன்கு நினைந்தானும் குணமொழிந்தானும் ஆகான் என்பது கருத்தாகலின் என்க.

இனி, புத்தன் உலகத்துயிர்கள் துன்பத்துநீங்கி உய்தற்பொருட்டுத் தத்துவங்களை அறிவுறுத்தமையாலே நன்கு நினைந்தானும் குண மொழிந்தானுமாகானோவெனின், ஆகான்; என்னை? இவன் தன்பால் வந்தெய்தினார்க்குப் பொன்றக் கேடே உணர்த்தினனாதலின் பொன்றக் கேடு கூறுதல்தான் தத்துவம் உணர்த்துமழகோ! அது தத்துவ முணர்த்தலாகாது என்பது கருத்து.

இனி, துன்பமல்லது தொழுதகவில்லாப் பிறப்பினிலுற்று வருந்து தலினுங் காட்டில், வெறும்பாழாதல் சிறப்பன்றோ எனின்? நன்று சொன்னாய்! பிறப்பினில் துன்பமுளதேயெனினும் நோன்பானும் கொடையானும் உண்டாகும் துறக்கவின்ப முதலியவின்பங்களு முள வாகலின் வெறும்பாழாதல் சிறப்பன்று என்பது. ஆதலால், ஒருமுறை மலர்மாலை சந்தனம் மகளிர் முதலியவற்றால் இன்புற்றும், ஒருமுறை பிணிமுதலியவற்றால் துன்புற்றுந் திரிவானொருவனைச் சாமருந்துண் ணென்று அறிவுறுப்பதே போலும் புத்தனது அறங்கூறல் என்பது கருத்து என்க. இதனாலும் இவன் நன்குணர்ந்தானும் குணமொழிந் தானும் ஆகான் என்று மறுக்கப்பட்டமையுணர்க. (கஉ)

இதுவுமது

கருஉ. வழிவாழக் கெடுகின்றார்
மாந்தருள் மேலாயார்
பழிபாவ மோராதான்
பற்றினார்ப் பாழ்செய்வான்
ஒழிபாவி தலைவனென்
றுரைப்பதனை யுலகத்தார்
கிழியோடு மாறுக்கா
சென்றான்சொற் கேட்பவோ.

(இ - ள்.) மாந்தருள் மேலாயார் - மக்களுண் மேம்பட்ட சான்றோர்; வழிவாழக் கெடுகின்றார் - தம்மை வழிபட்டார்க்குக் கேடுவராமைப் பொருட்டுத் தாமே கெடுவர்காண்; பற்றினார் பாழ்செய்வான் - உன் புத்தனோ தன்னை அடைந்தவரையெல்லாம் வெறும்பாழாக்கிக் கெடுக்கின்றனன்; பழிபாவம் ஓராதான் பாவி - பழியும் பாவமும் அறியாதானொரு பாவிகாண்!; தலைவன் என்று உரைப்பதனை ஒழி - நீ அவனைத் தலைவன் என்று கூறுவதனை விட்டொழி, இவன் அறவுரை சான்றோரால் மதிக்கப்படாது; எங்ஙனமெனின்; கிழியோடு இக்காசு மாறு என்றான்-ஒருவண்ணக் கன் கிழியை அவிழ்த்து ஒவ்வொன்றாக ஆய்ந்து இது செல்லும் இது செல்லாது என்று கூறாமல் ஆய்ந்து பாராமலே கிழியோடே இந்தக் காசுகள் செல்லமாட்டா என்று கூறினன் எனின், உலகத் தார் சொல் கேட்பவோ - சான்றோர் அவன் சொல்லை நன்கு மதித் துக் கேட்பரோ? கேளார் என்க.

(வி - ம்.) வழி - தம்மை வழிபட்டார். மேலாயோர் - சான்றோர். மாந்தருண் மேலாயோர் வழிவாழக் கெடுகின்றார் எனவும், பற்றினர்ப் பாழ் செய்வான் பழிபாவ மோராதான் எனவும், பாவி தலைவனென் றுரைப்பதனை ஒழி எனவும் மாற்றிக் கூட்டுக. ஓராதான் பாவி ஆதலால் உரைப்பதனை ஒழி என்க. கிழி - காசு பொதிந்த பை. மாறு - செல்லமாட்டா.

இனி, இவன் தன்னை அடைந்த மக்களைக் கெடுத்த வாறென் னெனின் முற்கூறப்பட்ட பொன்றக்கேடே நிர்வாணம் என்றது மொன்று. அன்றியும் இவனைப்பற்றி வாழ்பவரல்லரோ இவனுடைய மக்களும் மனைவியும்; அவருள் மக்களைப் பார்ப்பனருக்கு அடிமையாகக் கொடுத்து அல்லல் கண்டான்; என்னை ? பௌத்த சமயத்தினர் அவனை,

"வண்டுளங்கொண் பூங்குழலாள் காதலனே யுன்றன்
மக்களைத்தா சத்தொழிற்கு மற்றொருத்த ரில்லென்
றெண்டுளங்கச் சிந்தையளோர் பார்ப்பனத்தி மூர்க்க
னிரத்தலுமே நீர்கொடுத்தீர் கொடுத்தலு மத்தீயோன்
கண்டுளங்க நும்முகப்பே யாங்கவர்க டம்மைக்
கடக்கொடியா லேபுடைத்துக் கானகலும் போது
மண்டுளங்கிற் றெங்ஙனே நீர்துளங்க விட்டீர்
மனந்துளங்கு மாலெங்கள் வானோர் பிரானே"

எனவும் "புடை புதல்வர் புனையிழையர்" எனவும் புகழ்ந்து பாராட்டு தல் கேட்குதுமல்லமோ என்பது கருத்தாகலின் என்க.

இனி, தன்மக்கள் இடர்ப்பட வேண்டிக் கொடுத்தானல்லன்; மறுக்கமாட்டாக் கண்ணோட்டத்தாலன்றே கொடுத்தானெனின், ஆடு முதலாயின கொல்விப்பாரும் அவையிடர்ப்படவேண்டிக் கொல்விக் கின்றாரல்லர்; கறிவிருப்பினாலன்றே கொல்விப்பர்; அவரும் நன்கு நினைந்தாரும் குணமொழிந்தாருமாகல் வேண்டுமாகலால், இவன் தீங்கு நினைப்பானுந் தீங்குரைப்பானுமேயாமென்பது.

இனி, ஒரு வண்ணக்கன் (காசுகளை ஆராய்பவன்) ஒருவனைப் பகைத்திருந்தானாக; அப்பகைவன் ஒருநாள் ஓரிறைக்கு ஒரு கிழியில் காசு கட்டிக்கொண்டுவந்து அவ்வண்ணக்கனுக்குக் காட்ட; அவ் வண்ணக்கன் தன்பகைமை காரணமாக அவற்றை ஆராயாமலே இக்காசுகள் அவற்றைக் கட்டிய கிழியோடே முழுவதும் செல்லாக் காசுகள் என்று கூறினன். அக்காசுகளை ஏனையோர் ஆராய்ந்து பார்த்து அவ்வண்ணக்கன் கூற்றினை ஏற்றுக்கொண்டிலர்; அதுபோலவே புத்தனும் அவாமுதலிய குற்றங்கெடாத அறிவினையுடையனாய் ஆராயாமலே வெறும்பாழே வீடுபேறு என்றான். அஃதன்றியும், இவை வழங்கத் தகுவன; இவை வழங்கத் தகாதனவென்று ஆராயா மலே இரவலர் வேண்டுமவற்றையெல்லாம் வழங்குகவென்று அறிவுறுத்தினன் ஆதலால் இவன் அறிவுரை சான்றோரால் கொள்ளப் படாது என்றாள் எனவும் கொள்க.

உவமையில் வருவது பொருளினும் வருமாதலால் புத்தன் கூறிய அறிவுரை சான்றோரால் நன்குமதிக்கப்படாதென்பது பெற்றாம்.(கஉ)

கஅ௧. நுனைத்தலைய நுண்மயிரை
நுனியுறீஇ விதிர்த்திட்டா
லனைத்துணைய தடங்கலு
மறக்கிடந்த பிறந்துழப்பு
நினைக்குங்காற் பிறர்க்கேயா
மென்றியா னீயன்றே
யனைத்துணைய பெரும்பாவ
மவன்செய்தா னாகானோ.

(இ - ள்.) அன்னாய் - அன்னையே! நீ - நீ தானும் நின்றலைவனாகிய புத்தன்; நுனைத்தலைய நுண்மயிரை நுனி உறீஇ - கூர்த்த தலையினையுடைய நுண்ணிய மயிரினது நுனியிற்றோய்த்து; தடம் கடலும் அற விதிர்த்திட்டால் - பெரிய கடல்நீர் முழுதும் வற்றிப்போகும்படி விதிர்த்துத் துளிக்குற்றினால்; கிடந்த அனைத்துணைய - எத்துணைத் துளிகள் கிடக்கும் அத்துணைய வாகிய; பிறந்துழப்பும் - பிறவிகளிலே பிறந்துழன்றதெல்லாம்; நினைக்குங்கால் பிறர்க்கேயாம் என்றி - ஆராயுங்காலத்தே பிறர் பொருட்டேயாகும் என்று கூறுகின்றனையல்லையோ?; அவன் அனைத்துணைய பெரும் பாவம் செய்தான் ஆகானோ - அங்ஙனமாயின் அவன் அவ்வளவு பெரிய தீவினைகளைச் செய்தவன் ஆகமாட்டானோ? என்றாள் என்க.

(வி - ம்.) இஃது "அயலார்க்கே துன்புற்றான்" என்ற குண்டலகேசியின் கூற்றிற்குக் குற்றங் கூறுகின்றது. நுனை-நுனி. விதிர்த்தல்-உதறித் துளிவீழ்த்துதல்.

புத்தர் பிறர்க்கறமுயலுதற் பொருட்டு எண்ணிறந்த பிறவிகளிலே பிறந்துழன்றார் என்று கூறுவர். இதனை,

"இறந்த காலத் தெண்ணில்புத் தர்களும்
சிறந்தருள் கூர்ந்து திருவாய் மொழிந்து"

எனவரும் மணிமேகலையானும் (கூ௦ - கஜ - கூ) உணர்க.

பிறந்துழப்பு - பிறவிகளிலே பிறந்துழலும் உழப்பு. பிறந்துழத்தற்குத் தீவினையே காரணமன்றிப் பிறிதன்றென்பாள், நின்புத்தன் எண்ணிலாப்பிறவிகளிலே பிறந்துழன்றான் என்றது, அவனுக்கு இழிவு ஆதலன்றிப் பெருமையாகாதென்பாள், அவன் அனைத்துணைய பெரும் பாவஞ் செய்தான் ஆகானோ என்றாள். ஓகாரம் எதிர்மறை.

இனி, புத்தன் தீவினை செய்தவாறென்னெனில், இன்ன நாட்டு மக்கள் தலைகொடு வருவார்க்குப் பொருள் கொடுக்கப்படும் என்ற அரசனைப்போல இவனும் பழியிலான் கொடுவருவார்க்குப் பொருள் கொடுத்துக் கொள்க என்னும் உபாயத்தால் கொலை செய்தானன்றோ ஆதலால் இவன் மாபெருந்தீவினையாளன் என்றான் என்க.

இனி, அக்கொடிய மன்னனை அந்நாட்டிலுள்ளார் செற்றங் கொண்ட வாறுபோல, தினற் பொருட்டாகக் கொலையுண்ட உயிர்களிற் பேயாய்ப் பிறந்தவுயிர்கள் இவன்மேற் செற்றங்கொண்டு "நம்மையுபாயத்தினாற் கொல்வித்தானை நாமும் உபாயத்தினாற் கொல்விப்போ" மென்று கொடையாராய்தன் மேலிட்டும் இரத்தன் மேலிட்டும் கொல்வித்துத் துன்புறுத்தின போலு மல்லது, ஒருகால் ஆராய்ந்து உரைபார்த்து இன்னது மாற்றென்று அறுதியிட்ட பொன் பின்னுரைக்க வேண்டாதவாறுபோல ஒருபிறப்பிலே ஆராய்ந்து அறுதியிடப்பட்ட இவனை அவன்றானே பலகாலாராய வேண்டுவதில்லை என்பது (௩௪)

௩௮௪. துன்பந்தான் றீவினையின் வழித்தோன்றுந் துன்பேயா
மென்பதனை நமரேடி யெப்பொழுது முரைப்பவாற்
பின்புந்தான் பிறர்பிறர்க்குப் பிறந்துழப்பே யாக்கினா
லன்பினான் முன்செய்த தருவினையே யாகாதோ.

(இ - ள்.) ஏடி நுமர் துன்பந்தான் தீவினையின் வழித்தோன்றும் துன்பேயாம் என்பதனை - ஏடி குண்டலகேசி! நும்மவராகிய பௌத்த சமயத்தினர் ஒருவனுக்கு வருந்துன்பந்தான் அவன் முன்செய்த தீவினையின் பயனாகத் தோன்றும் துன்பமேயன்றி வேறன்று என்னுமிதனை; எப்பொழுதும் உரைப்ப - ஆருகதராகிய எம்மனோருடைய நோன்பின் பொருட்டு உற்ற நோய் நோற்றலைப் பழிக்கும் பொருட்டு எப்பொழுதும் கூறுவாரல்லரோ?; பின்பும் தான் பிறர் பிறர்க்குப் பிறந்து உழப்பு ஆக்கினால் - இங்ஙனம் கூறியபின்பும் புத்தன் மாந்தர்க்குத் தீவினைகளை அறம்போல அறிவித்து அவரைத் தீவினை செய்வித்து அவர்க்குப் பிறப்புத் துன்பத்தை உண்டாக்கின்; அன்பினான் - நீ அருளாளன் என்று கூறுகின்ற புத்தன்; முன் செய்தது-இங்ஙனம் முன்பு அறிவுறுத்த மொழிகள்; அருவினையே ஆகாதோ - உய்தற்கரிய தீவினையே ஆகாதோகாண் என்றாள் என்க.

(வி - ம்.) புத்தமதத்தினர் யாங்கள் நோன்பின் பொருட்டு உண்ணாமை முதலிய விரதங்களைக் கைக்கொண்டு வருந்துவதனைப் பழித்தற் பொருட்டு எப்பொழுதும் துன்பந்தான் தீவினையின் வழித்தோன்றுந் துன்பேயாம்; ஆதலால் இங்ஙனம் பட்டினிகிடந்து நலிகின்றனர் என்று கூறுகின்றனரே! இங்ஙனம் கூறும் நீங்களே மாந்தரைத் தீவினை செய்வித்தல் மாபெருந்தீவினையாகாதோ என்று முன்பு (௩௮௩) அனைத்தனைய அரும்பாவம் அவன் செய்தான் ஆகாதோ என்றதனை வலியுறுத்தியபடியாம்.

இனி, புத்தன் மாந்தர் தீவினை செய்யும்படி கூறிய அறவுரை என்னெனின், அருளுடையராய்த் தீவினைக்கஞ்சுகின்ற மாந்தர்க்கு ஐந்துறுப்புக்களும் கூடியவிடத்தல்லது கொலை கொலையாகா தென்றும், காற்பொன்னிற் கீழ்ப்பட்டது களவாகாது என்றும், எட்காயளவு நீளம் அழுந்த வையாவிடின் அது காமமன்றென்றும் இவ்வாறு அறிவுறுத்து

அவரைத் தீவினையிற் செலுத்தி அவர்க்கெல்லாம் பிறப்புழற்சியைச் செய்தான் என்பது.

இச் செய்யுளின் முதலடியில் காட்டப்பட்ட "துன்பந்தான் இவினையின் வழித்தோன்றுந் துன்பேயாம்" என்பது ஐம்பெருங் காப்பியத்து ளொன்றாகிய குண்டலகேசிச் செய்யுள் ஒன்றன் முதலடி என்றும், அச்செய்யுள் ஆருகதருடைய தவவொழுக்கத்தைப் பழிக்க வெழுந்தது என்றும் ஊகித்தற் கிடனுண்டு.

இனி, ஐந்துறுப்புங் கூடினல்லது கொலை கொலையாகாது என்பதற்குப் புத்தவாதச் சருக்கத்தில் "ஒன்றிநின்ற வுயிரை" எனவரும் செய்யுள் உரைவிளக்கத்தே விளக்கங் கூறுவாம் ஆண்டுக் காண்க.

"எட்காய் நீள மழுந்தவையாவிடின்" என்பது இடக்கரடக்கு. (௬௯)

க௮௫. தனக்கோன்றும் பயனின்றித்
தலையாளென் றான்வருந்தி
யெனைப்பெருங் குப்பையு
மெருச்சுமப்பாற் கண்டக்கால்
நினைப்பதோன் றுடைத்தவன்செய்
நெடும்பாவ நிச்சலும்
மனக்கினிதா வவன்றன்னை
யாள்வார்மாண் புரையாயோ.

(இ - ள்.) தனக்கொன்றும் பயனின்றித் தலையாள் என்றான் வருந்தி - (எடி நீ எம்பெருமான் தனக்கொரு பயனுங் கருதாதே பிறர்க்கே உழந்தான் அதனாற் பெருமையுடையன் ஆகானோ எனின் ஆகான்) உலகத்திலே தனக்கொரு பயனுமில்லாமலே அடிமை எனப்படுபவன் பெரிதும் வருந்தி; எனைப் பெருங் குப்பையும் எருச் சுமப்பான் கண்டக்கால் - எத்துணைப் பெருங்குப்பையையும் ஆண்டான் வயலுக்கு எருவாகச் சுமந்து செல்லுபவனைக் கண்டபொழுது; நினைப்பது ஒன்று உடைத்து - உலகத்தார் அச்செயலால் அவன் திறத்திலே நினைப்பது ஒன்று உண்டு அஃதியாதெனின்; அவன் செய் நெடும்பாவம் - அவ்வடிமை செய்துள்ள நெடிய தீவினையேகாண்; நிச்சலும் மனக்கு இனிது ஆக அவன் றன்னை ஆள்வார் மாண்பு உரையாயோ - நாள்தோறும் தம்மனத்திற்கு இன்பமாகும்படி அவ்வடிமையை ஆள்கின்ற தலைவருடைய நல்வினையின் மாட்சியினையும் உலகத்தார் நினைந்து கூறுவர் நீ அங்ஙனம் கூறுயோகாண் என்றாள் என்க.

(வி - ம்.) இது புத்தன் தனக்கொரு பயனுமின்றி உழந்தானயின் அவன் தலைமைப் பண்புடையன் அல்லன். மேலும் அவ்வுழற்சிக்குக் காரணம் அவன் தீவினையே என்றற்கு ஒன்று எடுத்துக் காட்டியபடியாம்.

முற்பிறப்பில் அறம்புரிந்தான் அடிமையாகப் பிறவான் என்பதை,

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை" (குறள் - கூ எ)

என வரும் திருக்குறளும் விளக்குவது காண்க.

தலையாள்-அடிமை. குப்பையை எருவாகச் சுமக்கும் அடிமையைக் கண்டுழி அறிஞர் அவன் முன்செய் தீவினையை நினைவர். அதுபோலத் தனக்கொரு பயனுமின்றித் துன்புழக்கும் நின்றலைவனும் தீவினையாளனேகாண் என்றவாறு.

இனி, அவன் இவ்வுழப்பினாற் புத்தத்தன்மை கொண்டான் என்பாயாயினும் அவன் அதுபெறல் வேண்டியுழந்தான் என்பதல்லது பிறர்க்குழந்தான் என்பது பெறப்படாது என்றுளுமாயிற் றென்க. (கூசு)

கஅசு. அவ்வகையா லுழக்கின்ற
னயலார்கள் படுகின்ற
வுய்வகையில் பேரிடரை
யொழிப்பதன் பொருட்டாக
விவ்வகையா லருள்செய்யு
மென்பதனை யெடுத்துரைத்தாள்
கோவ்வையங் துவர்ச் சேவ்வாய்க்
குண்டலமா கேசியே.

(இ - ள்.) கொவ்வை அம் துவர்ச் செவ்வாய் குண்டலமாகேசி - (நீலகேசியின் மொழிகேட்ட) கோவைப்பழத்தையும் அழகிய பவளத்தையும் ஒத்த சிவந்த வாயையுடைய குண்டலகேசி; அவ்வகையால் உழக்கின்றான் - ஏடி நீலகேசி, நீ கூறுமாறு எருச்சுமப்பான் போன்று பிறவியுட்பட்டு அந்த வகையால் துன்புழப்பவனாகிய எங்கள் புத்தபெருமான்; அயலார்கள் படுகின்ற - பிறர் எய்துகின்ற; உய்வகை இல்பேர் இடரை ஒழிப்பதன் பொருட்டாக - தப்புதற்கரிய பெருந்துன்பங்களைப் போக்குதற் பொருட்டேயன்றித் தந்நலம் பேணியன்றாகலான்; இவ்வகையால் அருள் செய்யும் என்பதனை - தான் துன்புற்றும் பிறர் துன்பம் போக்கும் இச்சிறந்த முறையாலேயே எம்பெருமான் பிறர்க்கு அருள் செய்வான்காண்! என்னும் விடையை; எடுத்துரைத்தாள் - விதந்து கூறினள் என்க.

(வி - ம்.) இது, எம்பெருமான் தீவினை செய்தார் போன்று பிறந்து உழப்பதுவும் பிறர்பொருட்டேயாகலான் அம்முறையே அவன் பெருமைக்குச் சான்றாகும் எனக் குண்டலகேசி நீலகேசிக்கு விடை கூறிய படியாம். (கூஎ)

௨௮௭. அருளினாற் பிறர்க்குழக்கு
மவனென்ற வவ்வுரையைப்
புரளல்நீ பிறப்பொழியும்
பொழுதின்க ணவ்வருளைப்
பொருளன்மை கண்டானோ
புற்கலர்தா மொழிந்தாரோ
தெருளநீ யுரைத்துக்காண்
டிருந்தவையா ரிடையென்றாள்.

(இ - ள்.) நீ அவன் அருளினால் பிறர்க்கு உழக்கும் என்ற அவ்வுரையை - ஏடி நீ 'எந்தலைவன் தான் புத்தனாதற்குழந்தானல்லன் பிறவுயிர்களின்பாற் செல்லும் தன் அருளுடைமை காரணமாகவே உழன்றான்' என்று நீ இப்பொழுது கூறுகின்ற இவ்வுரையினின்றும், புரளல் - நீ பிறழாது நிற்பாயாக; பிறப்பு ஒழியும் பொழுதின்கண் - நின்றலைவன் பிறர்க்குழன்று வெறும் பாழாகிப் பிறப்பொழியலுற்ற பொழுதில்; அவ்வருளைப் பொருள் அன்மை கண்டானோ - தான் மேற்கொண்ட அந்த அருளறத்தை ஆராய்ந்து அஃது உறுதிப்பொருள் அல்லாமையைக் கண்டு கைவிட்டுப் போயினனோ; புற்கலர்தாம் ஒழிந்தாரோ - அல்லது அவ்வருள் செலுத்தற்குரிய பண்பு பெற்ற மாந்தர்தாம் இலராயினரோ?; நீ திருந்து அவையாரிடை தெருள உரைத்துக்காண் - நீதானும் திருந்திய இந்த நல்லவையோரிடையே எல்லோரும் தெளியும்படி என்வினாக்கட்கு விடைகூறிக்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) இது நீலகேசி நின்றலைவன் தனக்குப் புத்தத்தன்மை வேண்டி உழந்தான் என்றாட்குக் குண்டலகேசி அற்றன்று! என்றலைவன் அருள் காரணமாகவே உழன்றான்காண் என்றாளாக; அதுகேட்ட நீலகேசி அவள் கூற்றை வழிமொழிந்து கொண்டு அதற்கும் குற்றம் கூறியபடியாம்.

அன்றியுமிவன் அருளினாற் பிறர்க்குழக்கின்றவழிப் பிறரான் வினை வழி நின்றுழப்பனோ தானேயுழப்பனோ என வினவுங்கால் பிறன் வினை வயப்பட்டுழப்பானெனின் தளையாளன் ஆன அடிமை போலத் தலைமைத் தன்மையிலனாவன். அன்றித் தானே உழப்பன் எனின், இவன் நரகத்துத் துன்புறுவாருடைய துன்பங்களையுந் தான் கொண்டு அவருக்குத் தன் புத்தப் பண்பினை வழங்குதல் வேண்டும். அஃதன்றே அருளின் செயலாவது, என்னை? தான் அருளுடையானுமாகித் தன்னாற் செய்யப்படுவதுமாகிய இது செய்யானெனின் அருளிலன் ஆகானோ என்க.

இனி, அவ்வாறு செய்வானெனிலோ இவனுக்கென்றும் நரகத்துன்பம் ஒழியாதாம். என்னை? நரகம் புகுவார் ஒருநாளும் ஒழிதலின்மையானென்க. அன்றியும் இவன் அறமுரைத்து ஒருவர்க்குந்தீவினை தவிர்க்க வேண்டுவதுமின்றாம், இவன் தீவினைப்பயனாகிய துன்பத்தைத் தான்

கொண்டு தீவினை செய்தார்க்குத் தன் நல்வினைப் பயனுகிய புத்தப் பண்பினை அப்புத்தன் வழங்கக் கூடுமாகலின் என்க.

இனி இவ்வாறன்றி வீடுபெறுந் தகுதியுடையாரை வீடு பெறுவிப் புன்; ஒழிந்தாரைப் பெறுவியான். அஃதவற்குக் குற்றமுமன்று;என்னை?

"ஆராத குடருடைமை யாரமிர்தின் குற்றமோ
ஏரியங் கில்லாமை யெழிலியின் குற்றமோ
காரரும்பு மலராமை காய்கதிரோன் குற்றமோ
தேராதா னுணராமை தெளிவுடையோன் குற்றமோ"

என்பவாகலின் என்றுட்கு, ஞாயிறு செவ்விபெறுந்துணையும் நின்று மலர்களை அலர்த்துமாறுபோல இவனும் அவர்க்குத் தகுதி வருந்துணை யும் நின்று நின்றே ஒழிவற மலர்த்தவேண்டும். அப்படியொரு மனக்கோளுடையனுதலின், அன்றியும், புத்தனுக்குத் தான் விரும்பினு லல்லது வீடுறுது இருத்தலுங் கூடுமே; இருந்தால் இவன்பால் ஒழிவறக் கெட்டபற்று மீண்டுமிவன்பால் வராததும் ஆகும். இவன் ஏறட்டுக்கொண்ட குளுறவு முடிதற்குந் தடையில்லையே. இங்ஙன மாயின் இவன் பின்னுமிருந்து மாந்தர்க்குத் தத்துவமுணர்த்துதலால் வரும் குற்றமென்னையோ? என்பது.

அன்றியும் பான்மையாவது வீடுபெறுவிக்கும் நல்வினையாலே வருவதொன்றன்ரே, அதற்குத் தக்கவாறே இவன் செய்யின் இவனும் வினையிற் கட்டுண்டுழல்பவனே யாவன் என்பது.

இச் செய்யுளால் இவன் தனதருளுடைமை காரணமாகப் பிறர்க் குழந்தானல்லன்; வினை காரணமாக வுழந்தானென்பது போந்தது (கூஅ)

கஅஅ. ஊடுபுக் குயிரடுந் துயரந்தா னொழிக்கின்றுன்
வீடுபெற் றிறந்தனனேல் விளிகவன தருள்பாவி
யோடுகிற் றிலனென்றுந் தாதையையே யுழப்பித்தோ
னுடைபற் றேனவுரைத்த வவன்போன்று னகாதோ.

(இ - ள்.) பாவி - தீவினையாட்டியே கேள்; ஊடுபுக்கு உயிர் அடும் துயரம் தான் ஒழிக்கின்றுன் - உன் தலைவன் மாந்தர்படு மல்லல் கண்டருள் கூர்ந்து அவரிடையே புகுந்து அவர் தம் உயிரை வருத்தும் துன்பங்களை அறங்கூறி விலக்குபவன்; வீடு பெற்று இறந்தனனேல் - அந்த அருட்பணியைக் கைவிட்டுத் தான் மட்டும் வீடுபெற்றுப் போயினன் ஆயின்; அவனது அருள் விளிக - அவனது அருளறம் ஒழிவதாக! அஃதளியதொன்று காண்; ஒரு தேவதத்தன், ஆடைபற்று என வுரைத்த தாதையை-மகனே நீ காட்டினூடே செல்கின்றனை; நீ கொண்டு செல்லும் ஆடைகளை மனதில் வை, அவையிற்றைப் பறிகொடுத்துவிடாதே என்று கூறிய தந்தைக்கு; யான் ஓடுதலில் வல்லன் என்று கூறிச் செல்பவன்; ஒன்றும் ஓடுகிற்றிலன் - கள்வர் தொடர்ந்துழிச்

சிறிதும் ஓடமாட்டானாய் நின்று ஆடைகளைப் பறிகொடுத்துவந்து; உழப்பித்தோன் - தன் தந்தையைப் பெரிதும் வருத்துவித்தனன்; அவன் போன்றான் ஆகாதோ - நின் தலைவனும் அவனையே ஒத்தவன் அல்லனோ என்றாள் என்க.

**(வி - ம்.)** இஃது 'ஒழியாமலுலகுய்யக் கொள்வன்' என்னும் மேற்கோளுடைய புத்தன் அஃதொழிந்து முத்தனாய்க் கையறக் கேட்டுப் போனதற்கு ஓர் எடுத்துக்காட்டுரைக்கின்றது.

ஊடுபுக்கு-இடையிலே புகுந்து. இறந்தனன்—போயினன். விளிக என்பதன் ஈற்றகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. புத்தனை விடையிலே கைவிடப்பட்ட அருளுக்கிரங்குவாள், அவனது அருள் விளிக என்றாள். இத்தகையவொருவனைத் தலைவன் என்கின்றனையே நீயும் ஒரு பாவியே யாதல் வேண்டும் என்பது தோன்ற, பாவி! எனவிளித்தாள், இனி இரக்கத்தாலே பாவியருள் என்றாள் என அருளுக்கு அடையாக் கினுமாம்.

ஒன்றும்-சிறிதும். ஓடுகிற்றிலன்-ஓடமாட்டாதவன். எடுத்துக் காட்டு வருமாறு: ஒரு தேவதத்தன் பெருவிலை பெறுவனவாகிய பல ஆடைகளைக் கொண்டு கள்வருள்ளதொரு காட்டுவழிப் போகலுற்றவிடத்து அவன் தந்தை, மகனே ஆடைகளை விழிப்புடன் போற்றுக! என யான் ஓடுதலில் வல்லேனாகலின் இவற்றைப் பாதுகாப்பேன் என்று சொல்லி அவற்றைக் கட்டியுடுத்துப் படைக்கலனேந்திச் செல்வுழிக் கள்வர் தொடர்ந்தாராக; அப்பொழுது அவன் அச்சத்தாற் சிறிதும் ஓடமாட்டானாகி அவற்றைப் பறிகொடுத்துத் தன்னுயிருய்ந்து போய்த் தன் தந்தையை வருத்தமுறச் செய்தான் என்பது.

ஒழியாமலுலகுய்யக் கொள்வேன் என்று புகுந்து இடையிலே அது செய்யமாட்டானாய் வீடுற்ற புத்தனுக்கு இத்தேவதத்தன் எடுத்துக் காட்டென்க. (௩௧)

கஅக. அங்கிருவ ருளரன்றே யறப்போக்கிப் போவாரேன்
றிங்கிருந்து நீயுரைத்தா லிவனருள்யார் தேளிகிற்பார்
அங்கிருவ ருளரேனினு மவரின்முன் னவையீரே
நங்கருமங் முலைப்பித்து நாம்போத மேனக்காள்.

**(இ - ள்.)** அங்கு இருவர் உளர் அன்றே - புத்தனார் இடையிலே வீடுபெற்றுப் போயினரேனும் அவர் அறத்தைப் பின்னரும் தொடர்ந்து நிகழ்த்துதற்கு அவர் மாணுக்கர் இருவர் உள ரல்லரோ!; அறப்போக்கிப் போவார் - அம்மாணுக்கரிருவரும் அவ்வறத்தை மேற்கொண்டு உயிர்களை எஞ்சாமலுய்வித்துப் போவார்காண்! என்று; இங்கிருந்து நீ உரைத்தால் - இவ்வவையிலிருந்து நீ பேச்சளவிலே கூறினால்; இவன் அருள் யார் தெளிகிற்பார்-இப் புத்தனுடைய அருளறத்தை யாரே உணர்ந்து கொள்ள மாட்டுவர்; ஒருவரும் உணரார்காண் என்று குண்டலகேசிக்குக்

கூறிப் பின்னர் அவையோரை நோக்கிக் கூறுபவள்; அவையீரே - அவையிலுள்ள சான்றோர்களே! அங்கு இருவர் உளர் எனினும் -, அப்புத்தனுக்குப்பின் அவனிடத்தே அவனறத்தை நடத்து மாணுக்கர் இருவர் உளர் என்று இக் குண்டலகேசி கூறினும்; அவரின்முன் - அவர் நம்பாலெய்துமுன்னரே; நாம் நம் கருமம் உலேப்பித்து நாம் போதும் - நாமெல்லாம் நாம் மேற்கொண்டுள்ள செயல்களைக் கைவிட்டு அவர் கண்ணிற்படாமல் ஓடியுய்வேமாக!; என நக்காள் - என்று கூறி நகைத்தாள்; என்க.

(வி - ம்.) இஃது, ஒழியாமலுய்யக் கொண்டான் என்பதற்குக் குண்டலகேசி கூறிய பொருளைப் பழித்தவாறென்க.

இங்கிருந்து நீயுரைத்தால் இவன் அருள் யார் தெளிகிற்பார் என்றது-உலகத்துயிர்கள் துன்புறுவது கண்டு அருண் மிகுதியால் ஒழியாமல் உய்யக் கொள்வேனென்று கைவந்த வீடுபேற்றினைக் கைவிட்டுப் பிறப்பிலேபட்டுச் சுழல்பவன், சிலரை உய்வித்து ஏனை யோரையெல்லாம் வேறுசிலர் உய்விப்பரென்றும், யான்கூறிய நூலின் வழியொழுகியுய்வ ரென்றும் வினைத்துத் தான் வீடெய்தினன் என்று நீ சொல்லின் இவன் அருளுடையன் என்று யார் தாம் ஒப்புவர் என்றவாறு.

இதனுற் போந்தது, நின்னிறைவன் அறவோராகிய ஒருசிலரை உய்வித்து ஏனையோர் துன்புறக் கண்டுவைத்தும் கைவிட்டுப்போதலின் இவன் ஊழால் உழந்தா னல்லது அருளுடைமையாலன்று என்பதாம்.

இனி, ஏனையோரையும் உய்யக்கொண்டான்: என்னே? அவர்தம் துன்பநீக்குதற்குக் காரணமாகிய மெய்ந்நூல் ஓதினமையின்; எனின், பலியிடுதற்குக் கட்டுண்டு போகாநின்றதோ ராட்டினை ஒருவன் நோக்கி 'ஆடேநீ நுழைந்தோடித் தப்பவல்லையாயின் தப்பிக்கொள்' என்றது போலும் இவன் நூலோதியுய்வித்ததூஉம் என்பது. இவ்வாறு செய்வதாயின் இவன் முன்பே நூலைச்செய்து தான் துன்புறுதே வீடெய்துதலும் கூடுமே என்பது.

இனி, நங்கருமம் உலேப்பித்து நாம்போதும் என நக்காள் என்றது- அவர்கள் நம்பால் வந்து நம்மைக் கெடுப்பதற்கு முன் தப்பிப் போவோம் என்றவாறு. இனி, அவர்கள் வருமளவும் நாம் விரும்பிய வாறொழுகப் போவோம் எனினுமாம்.

இனி, அங்கிருவர் என்றது ஆரியாவலோகனும் மைத்திரவாகுவும் என்னும் புத்தர் மாணவரிருவரையும்; இனி, இருவர் என்றது அறத் தையும் நூலையும் எனினுமாம். என்னே?

"கண்டாரை யுயக்கொண்டான் காண்பார்க்குச் சார்வானுன்
கண்டிலாக் கடைப்பட்டார் காண்கவென் றுரைவைத்தா
னுண்டாகை யுலகுய்யக் கொள்கென்றவ் வெடுத்துக்கோ
ளுண்டாக விவ்வகையா லுயக்கொண்ட தாகாதோ"

என்பவாகலின் என்க. (சO)

கசுய. முன்கோன்றான் றன்றாயை
முழுமெய்யும் போர்த்திருந்து
தின்கின்றான் பிணம்வீடுந்
தெருட்டுங்காற் சூனியமே
யென்கின்றா னிவன்போல்வா
ரிறைவரில் லெனவுரைப்பாய்
தன்கன்று சாக்கறப்பான்
றயாப்பிறிதிற் குடையவனே.

(இ - ள்.) தன் தாயை மூன் கொன்றான் - ஏடி! குண்டலகேசி நீ இன்றலைவன் தன்னையீன்ற தாயையே முற்படக் கொன்றான்; முழுமெய்யும் போர்த்து இருந்து பிணம் தின்கின்றான் - தன்னுடம்பை எஞ்சாமல் துவராடையான் மூடிக்கொண்டிருந்து பிணங்களைத் தின்கின்றான்; தெருட்டுங்கால் வீடும் சூனியமே என்கின்றான் - அவன் அறிவுரை கூறித் தெளிவிக்கும்பொழுது வீடுபேறென்பதுதானும் வெறும் பாழாய் முடிவதே யன்றிப் பிறிதில்லை என்றும் கூறுகின்றான்; இறைவர் இவன் போல்வார் இல் என உரைப்பாய் - நீயோ கடவுளரில் வைத்து இப்புத்தர் பெருமானை ஒப்பவர் யாரும் இலர் என்று கூறுகின்றாய்; தன் கன்று சாகறப்பான் - தனக்குரிய ஆன்கன்று சாகும்படி பாலை எஞ்சாது கறக்கின்ற வன்கண்ணன் ஒருவன்; பிறிதிற்குத் தயா உடையவனோ - பிறிதோருயிரின்பால் அருளுடையன் ஆதலும் உண்டோ காண்! என்றாள், என்க.

(வி - ம்.) இதன்கண், முன்கொன்றான் தன்தாயை என்றது, இவன் பிறக்கின்ற காலத்துத் தாயினது வலமருங்குலாற் பிறந்தான்; அவளும் ஆறு நாட்குற்றுயிரோடு கிடந்து ஏழாநாள் இறந்தாள் என்பது. இஃது ஏனைய புத்தர் தாய்மார்கட்கும் ஒக்கும் இதனை,

"உலும்பினி வனத்து ளொண்குழைத் தேவி
வலம்படு மருங்குல் வடுநோ யாரும
லான்றே னவ்வழித் தோன்றின னதலின்
ஈன்றே ளேழாநாளின் னுயிர் நீத்தாள்"

எனவரும் பிம்பிசாரக் கதையென்னும் காப்பியச் செய்யுளானு முணர்க. அன்றியும்,

"புத்தன்றாய் ஞெண்டிப்பி வாழை புனமூங்கில்
கத்தும் விரியன் கடுஞ்சிலந்தி - இத்தனையும்
வேலாலும் வாளாலு மன்றியே தாங்கொண்ட
சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு'

எனவரும் உலகுரையுங் காண்க. (கூஎ)

இனி, 'தின்கின்முன் பிணம்' என்றது, அன்பு செய்யப்பட்டார் துன்புகண்டன்றே அன்புடையார் இரங்குவது? அதுபோல உயிரினங் களின் உடல்கள் சோர்ந்து கிடப்பது கண்டால் அருளுடையார் அருள் செய்வர் அன்றே! இவன், அருளிலாமையானன்றே பிணமாய பிற வுயிரினங்களின் உடலைத் தின்பது என்றவாறு. ஆதலின் அருளிலன் என்பது கருத்து.

இவற்றை,

"அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்" (குறள் - எக)

எனவும்,

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூ னுண்பான்
எங்ஙன மாளு மருள்" (குறள் - உருக)

எனவும்,

"பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு" (குறள்-உருஉ)

எனவும் வரும் திருக்குறள்களானு முணர்க.

இனி, 'வீடுங்தெருட்டுங்காற் குனியமே என்கின்முன்' என்றது, வீடாவது வெறும் பாழே என்முன்; என்று தானும் ஊன் தின்று வெள்ளடை தின்முன். தின்னவே அவனறங்கொண்ட மாந்தரும் வீட்டின்ப மென்றொன்றில்லை; இவ்வுலகவின்பமே இன்பமென்றுட் கொண்டு உலோகாயதனைப் போன்று விரும்பியவாறெல்லாம் ஒழுகி விலங்கு முதலியவெம்பிறவியுள் வீழ்ந்து துன்பமுற்றனர்; ஆதலால் உயிரினங்களை இது சொல்லித் துன்புறுத்தினுன் என்றவாறு. ஆதலானும் அருளிலன் என்பது கருத்து.

இனி 'தன்கன்று சாக்கறப்பான்' என்றது தன்மக்கள் மனைவிக்கும் அல்லல் கண்டான் என்றவாறு.

இவ்வாற்முலிவன் பிறிதொன்றற்கு அருளுடையனல்லன், இவனை ஒத்த தலைவன் இல்லை என்னும் நீ அறிவிலியாவாய் என்பது கருத்து. (சக)

இஃது அவையோரை நோக்கிக் கூறியது

கககூக. கண்ணெடுகா திவையிலள்
சரந்தன முலையிரண்டு
முன்னும்வா யுதட்டோடு
மூக்கில ளுறுநோய்த்தி
பெண்ணழகிற் கிவள்பிறராற்
பேசவும் படுவாளோ
எண்ணுங்கா லென்பேதை
யெனவுரைக்கு மவளேத்தாள்.

(இ - ள்.) என்பேதை-அவையீரே! ஒருசாத்தன் என் மகள்; கண்ணோடு காது இவை இலள் - கண்ணும் செவியுமாகிய இவ் வுறுப்புக்களை உடையளல்லள்; முலை இரண்டும் கரந்தன - அவள் இரண்டு முலைகளும் மறைந்தே போயின; உண்ணும்வாய் உதட்டோடு மூக்கு இலள் - உண்ணுகின்ற வாயின் கண்ணவாகிய உதடுகளும் மூக்கும் இலள்; எண்ணுங்கால் இவள் பிறரால் - ஆராயுமிடத்து இம்மகள் ஏனையோரால்; பெண் அழகிற்குப் பேசவும் படுவாளோ - பெண்மையழகுபற்றி இகழவும் படுவாளோ? இகழப்படாளன்றே; எனவுரைக்குமவன் - என்று கூறுகின்றவனையே; ஒத்தாள் - ஒக்கின்றாளல்லளோ? என்றாள் என்க.

(வி - ம்.) மகளிர் அழகிற்கின்றியமையாத கண் முதலிய வுறுப்புக்கள் இலளாகவும், தன்மகள் என்ற காரணத்திற்காக அச்சாத்தன் என் பேதை பெண்ணழகுமிக்கவள்; பிறரால் இகழப்படாள் என்றான். இங்ஙனமே இவளும் தலைவனுக்கமைய வேண்டிய நல்லிலக்கணம் சிறிதுமில்லாத புத்தனைப் புகழ்கின்றாள் ஆதலின் அச்சாத்தனையே இவள் ஒக்கின்றாள் என்றவாறு. (சஉ)

இது புத்தனையும் குண்டலகேசியையும் ஒருசேரப் பழித்தது

கசுஉ. பருவரலோன் றிலன்றாயைப்
பழுப்பறித்தான் றலைவனிவள்
கருவரைமேற் றன்கணவன்
காலனையுங் கவிழ்த்திட்டாள்
இருவரையும் போல்வாரிவ்
விருநிலத்தின் மேலெங்கும்
பெருவழியார் பேரருளார்
பிறர்யாரே யெனநக்காள்.

(இ - ள்.) தலைவன்-இவள் தலைவனாகிய புத்தனோ; பருவரல் ஒன்று இலன் தாயைப் பழுப்பறித்தான்-இரக்கஞ் சிறிதுமிலனாய் ஈன்ற தாயினது பழுவெலும்பினைப் பறித்துக் கொன்றனன்; இவள் - அவன் மாணவியாகிய இக் குண்டலகேசியோ; தன் கணவன் காலனையும் கருவரைமேல் கவிழ்த்திட்டாள்-தன் கணவனாகிய காலன் என்பவனையும் கரிய மலையுச்சியினின்றும் உருட்டி விட்டுக் கொன்றனள்; இரு நிலத்தின்மேல் எங்கும் - ஆதலாலே அவையீரே! இப்பேருலகத்திலே எவ்விடத்தேனும்; இருவரையும் போல்வார் - இந்த இருவரையும் நிகர்ப்பவராகிய; பெருவழியார் பேரருளார் பிறர் யாரே - பெருநெறிபிடித் தொழுகும் பேரருளார் யாரேயுளர்!; என நக்காள் - என்று கூறி நகைத்தனள்; என்க.

(வி - ம்.) பருவரல் - ஈண்டு இரக்கம். தாயை என்றது தன்னை யீன்ற தாயை என்பதுபட நின்றது. அன்னையினுஞ் சிறந்த தெய்வம் இல்லையாகவும் இவன் அன்னையையே கொன்றான் என்பது கருத்து.

பழுப்பறிப்பான் என்றது கொல்லுங்காலத்தும் கொடுமை செய்து கொன்றான் என்பதுதோன்ற நின்றது. தலைவன் என்றது புத்தனை. இவள் என்றது குண்டலகேசியை; காலன்: குண்டலகேசியின் கணவன். குண்டலகேசி தன் கணவனாகிய காலனை மலையுச்சியினின்றும் கீழே தள்ளிக்கொன்றாள் என்பது அவள் வரலாறு. கணவன் காலனையும் கவிழ்த்திட்டாள் என்புழி உம்மை இழிவுசிறப்பு. மகளிர்க்குக்கணவனே தெய்வமாகவும் இவள் கணவனையே கொன்ற தீவினையாட்டி என்றவாறு. இருவர்-புத்தனும் குண்டலகேசியும். பெருவழியார் பேரருளார் என்றது இகழ்ச்சி. எள்ளல் நிலைக்களனாக நகை பிறந்தது என்க.(சக)

இது புத்தன் நூலைப்பழித்தது

கசரு. ஒண்ணுதலா யுன்றலைவ
னொழிவின்றி யுணர்கலான்
கண்முதலா வுடையவிக்
கருவியிற் கண்டுகேட்
டெண்ணியு முணர்தலா
லிலைசுமக்கு மொருவன்போ
னுண்ணுணர்வு தனக்கில்லா
னுரைத்ததுதா னூலாமோ.

(இ - ள்.) ஒள் நுதலாய் உன் தலைவன்-ஒள்ளிய நெற்றியை யுடைய நங்காய்! உன் தலைவனாகிய புத்தன் கொள்கைப்படி அறிவு தோன்றியவுடன் அழியுமியல்பிற்றாகலின் அவ்வறிவு கொண்டு; ஒழிவு இன்றி உணர்கலான் - பொருளியல்புகளை எஞ்சாத அறிவானுமல்லனே; கண் முதலா உடைய இக்கருவியில் - கண் செவி வாய் மூக்கு மெய் மனம் என்னும் இவ்வறுவகை வாயில்களாலே; கண்டு கேட்டு எண்ணியும் உணர்தலால் - கண்டும் கேட்டும் சுவைத்தும் மோந்தும் உற்றும் கருதியும் அறிதலாலே; இலை சுமக்கும் ஒருவன் போல் - வெற்றிலை சுமந்து விற்கும் இலை வாணிகன் போன்று பொதுவறிவுடையனல்லது; தனக்கு நுண் உணர்வு இல்லான் - தனக்கென்று நுண்ணிய சிறப்பறிவு சிறிது மில்லாதவனாதலின்; உரைத்தது தான் நூலாமோ - அவன் கூறியது மெய்ந் நூலாகுமோகாண்! ஆகாதன்றே என்றாள்; என்க.

(வி - ம்.) இஃது ஒழிவின்றி யுணராத புத்தன் சொல்லியது நூலாகாதெ௭ன அவன் நூலுக்குக் குற்றங் கூறுகின்றதென்க.

நின்னெற்றியே ஒளியுடைத்து நின்னறிவிலஃதில்லை என்பாள், ஒண் ணுதலாய்! என்று விளித்தாள். பௌத்தர் கண் முதலாக மனமீருக் கருவிகள் ஆறு வகைப்படும் என்பவாகலின், கண் முதலா வுடையவிக் கருவியிற் கண்டு கேட்டு எண்ணியுமுணர்தலால் என்றாள். எனவே நின்றலைவன் பொதுவறிவுடையனல்லது நூல் செய்தற்கு வேண்டிய நுண் ணுணர் வுடையன் அல்லன் என்றாளாயிற்று.

இனி, புத்தன் ஒழிவின்றி உணராதான் என்றதென்னை யெனின் அதற்கு விடை கடவுள் வாழ்த்திற் கூறப்பட்டது, ஆண்டுக் காண்க. அன்றியும், இவனுடைய அறிவு தோன்றிய பொழுதே அழியுமாதலின் பிறிதொன்றையும் அறியமாட்டாது என்பதாம். அன்றியும் கண்முத லாகவுடைய கருவியாலும் மனத்தான் நினைந்தும் பொதுமையால் ஒட்டி யுணர்தலால் இவன் நுண்ணறிவு வேண்டாத இலைவாணிகன் போலப் பொதுவறிவுமட்டுமே உடையன் ஆவன். நுண் ணுணர்விலாமை யாவது - பொதுவுஞ் சிறப்புமாகிய பொருட்டன்மை யெல்லாம் உணரும் நுண்மாணுழைபுலமின்மை என்க. நுண்மாணுழைபுலனி லாதான் வினையினீங்கி விளங்கிய அறிவினையுடைய முனைவர் மட்டுமே செய்தற்குரிய நூல் செய்தல் எங்ஙனம்? எனவே புத்தன் நூல் மெய்ந்நூலாகாது; மயக்கவறிவாற் செய்த பொய்ந்நூலேயாம் என்றாளாயிற்றென்க. என்னை ?

"ஒன்றொன்று யுணர்ந்தானே வுலந்தில பொருளென்பா
யொன்றறிந்தப் பொதுவகையா லொட்டிநு னென
[மொழிந்தாய்"

எனவும்,

"பொதுவினு லொருங்குணரு மிகுதியான் முறையுணரும்"

எனவும்,

"எப்பொரு ளாயினு மெப்பொழு தாயினு
மப்பொழு தறிகுற்று லறிகிற்கு மிலக்கணத்தா
லெப்பொருளு மறிந்தானென் றேத்துது மல்லாக்கால்
எப்பொருளு மறிவுபுக் கியைந்திருந்த தென்னுமோ"

எனவும் சொல்லுதலின்.

இவற்றுள் 'மிகுதியான் முறையுணரும்' என்றது, சிறப்பு வகையாலடையவே ஒவ்வொரு சிறப்பாக அறியும் என்றவாறு. எனவே, ஒரு பொருளின் சிறப்பையேனும் முற்ற அறியானும்; ஆகவே நுண் ணுணர் விலனும் என்பதாயிற்றென்க. (௩௩)

பொருட்குற்றம்

௪௱௩௪. ஐங்கந்த மெனல்பிழைப்பா
மறிவினின்வே றுதலாற்
சிங்குந்தன் குறியுழப்புச்
செய்கையேன் றிவைமூன்று

மிங்கொன்று முருவினோ
டிரண்டேன்னுய் மிகவுரைத்தாய்
சங்கந்தா மல்லவேற்
றத்துவமுந் தலைப்பட்டாய்.

(இ - ள்.) ஐங்கந்தம் எனல் பிழைப்பாம் - ஏடீ! நின் தலைவன் பொருளியல்பு கூறுங்கால் அவை உருவக்கந்தமும் உழப்புக் கந்தமும் அறிவுக் கந்தமும் குறிக்கந்தமும் செயற் கந்தமும் என ஐவகைப்படும் என்று கூறியதே பிழைகாண்!; எற்றாலெனின் அறிவின் வேறு ஆதலால் - அவற்றுள் குறிக்கந்தமும் உழப்புக் கந்தமும் செயற் கந்தமும் அறிவுக் கந்தத்தின் வேறுவேறு செயல்களே யாதலால்; தன்குறி உழப்பு செய்கை என்று இவை மூன்றும் - அவ்வறிவாலாய அக்குறிக்கந்தமும் உழப்புக் கந்தமும் செயற் கந்தமும் என்னும் இம்மூன்று கந்தங்களும் பொருள்களாதலன்றி; சிங்கும்-கெடும்; இங்கு ஒன்றும் சிங்கும் - மற்று இங்குக் கூறப்படும் இவற்றின் முதலாகிய அறிவுக்கந்தந்தானும் இப் பண்புகளில்லாதவழிக் கெடுவதாம்; இங்கு ஒன்றும் உருவினோடு இரண்டு என்னுய் - எனவே இங்குக் கூறப்படும் அறிவாகிய அருவக்கந்தமும் நீ கூறிய உருவக்கந்தமும் எனப் பொருள் இரண்டே என்றாயுமல்லை; மிகவுரைத்தாய் - மிகைபடக் கூறினை; சங்கந்தாம் அல்லவேல்-குறிக்கந்தம் முதலிய மூன்றும் ஒற்றுமை யுடையன வல்லவாயினும் எட்டையொன்றாக்கி உருவக்கந்தம் என்பது போலக் கொள்; தத்துவமும் தலைப்பட்டாய் - இங்ஙனம் கூறியவழி நீ தத்துவ முணர்ந்தாயுமாகுவைகாண்! என்றாள்; என்க.

(வி - ம்.) ஐங்கந்தங்களுள் வைத்து உருவக்கந்த மொழிய எஞ்சியவை அறிவின் வேறுபட்ட செயல்களேயன்றி அவை பொருள்கள் ஆகமாட்டா, செயலில்வழி அறிவுதானும் அறிவாகாது. எனவே அவை நான்கு கந்தங்களும் பிழையாயின என்பதாம்.

இனி, உருவக்கந்தம் என்பதற்கிணங்க அறிவுபோல்வனவற்றை யெல்லாம் ஒன்றுபடுத்தி அருவக்கந்தம் எனலாம். எனவே, பொருள்கள் அருவமும் உருவமும் என இருவகைப்படும் எனல் வேண்டும்; அங்ஙனம் கூறினுயெனின் நீயுமொரோவழி தத்துவமுணர்ந்தாய் ஆகுவை என்பாள், இங்கொன்றும் உருவினொடு இரண்டென்னுய் தத்துவமும் தலைப்பட்டாய் என்றாள்: சங்கந்தாமல்லவேல் என்றது அறிவின் செயல்களாகிய குறிக்கந்த முதலியன தம்முள் ஒற்றுமை யுடையன அல்லவாயினும் என்றவாறு. எனவே அவற்றின் காரணம் ஒன்றுதல் பற்றி அதனோடு ஒன்றாக்கி அறிவுக்கந்தம் ஒன்று என்று கொண்டு உருவக்கந்தம் என்றதற் கேற்ப, அதனை அருவக்கந்தம் என்றுகொள், என்றவாறு.

இதற்குப் பழைய வுரையாசிரியர் கூறும் விருத்தி வருமாறு:

"பஞ்சக்கந்தம் பொருளென்பது பிழையாம்! என்னை? அறிவிற் பின்னமாகையால்: குறியும் உழப்பும் செய்கையுங் கெட்டன. குறியு முழப்பும் செய்கைகளும் ஆகிய இவற்றின் வேறுதலால் இங்கொன்றாகிய அறிவு கெட்டது. கெட உருவக்கந்தம் ஒன்றுமே பொருளாயிற்றுதலால்; அஃதாமாறு: குறி அறிவின் வேறாயின் குறியாது. இவ்வாறாகிய உருவக்கந்தம்போல உழப்பு அறிவின் வேறாயின் உழவாது. இவ்வாறாகிய உருவக்கந்தம்போல. செயல் அறிவின் வேறாயின் செய்யாது இவ்வாறாகிய உருவக்கந்தம்போல. அறிவு; குறிப்பு உழப்பு செயல்களின் வேறாயின் அறியாது; இவ்வாறாகிய உருவக்கந்தம்போல,"

"இனி இவ்வாறன்றி உருவக்கந்தம், ஒழிந்த நான்கிற்கும் ஒரு வேற்றுமை வேண்டினையாயின் உருவக்கந்தம் அருவக்கந்தம் என இரண்டாகக் கொள்; மிகவுரைத்தவளே! இரண்டாகக்கொண்டவழித் தத்துவமறிந்தாயுமாதி யென்றவாறு"

"சங்கம் என்பது ஒற்றுமை; நான்கையொன்றாக்கி அருவமென்னுமாறென்னை? எனின், எட்டையொன்றாக்கி உருவக்கந்தமென்றவாறு போலக் கொள்ளென்பது." (௬௪)

௧௬௫. முன்னைத்தன் முழுக்கேடு
முழுக்கேட்டின் வழித்தோன்றும்
பின்னைத்தன் பிறிதறிவும்
பெயர்த்துரைத்தல் பெரும்பேதாய்
என்னொக்கு மெனினெருந
லிற்புகுந்தா னிடையிராத்
தன்னைத்தந் தேனைக்கொண்டு
தான்சென்றா னெனலன்றே.

(இ - ள்.) பெரும்பேதாய் - பெரிய பேதையே! நின் தலைவன்றான்; முன்னைத் தன் முழுக்கேடும் - கணபங்கங் கூறுங்கால் முதற்கணப்பொழுதிலே நிகழ்ந்த தனது பொன்றக் கெடுதலையும், முழுக்கேட்டின் வழித்தோன்றும் - அங்ஙனம் பொன்றக் கெட்டொழிந்த பின்னர்த் தோன்றுகின்ற; பின்னைத்தன் பிறிது அறிவும் - மறுகணப் பொழுதிலே தன்பால் தோன்றும் அதனில் முழுதும் வேறாகிய அறிவினையும்; பெயர்த்து உரைத்தல்-எடுத்துக் கூறுதல்; என் ஒக்கும் எனின் - எதனை நிகர்க்கும் என்று வினவுமிடத்து; நெருநல் இல் புகுந்தான் - ஒரு சாத்தன் 'நேற்று ஒரு கள்வன் என் வீட்டிற் புகுந்தவன்; இடை இரா - யான் துயிலும் நள்ளிரவிலே; தன்னைத் தந்து எனைக் கொண்டுதான் சென்றான் - தன்னை இங்கு விட்டுவைத்து என்னைக் களவாடிக் கொண்டோடிப் போயினன்;' எனல் அன்றே - என்று கூறு வதையே நிகர்க்குங்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) இது கணபங்கத்திற்குக் குற்றங் கூறுகின்றது. புத்தன் தன் கொள்கையாகிய கணபங்கம் கூறுமிடத்துக் கேட்பார்க்குச் சொல்லுவான் "முதற்கணப் பொழுதிலே இருந்தயான் முழுதும் கெட்டொழிந்தேன்; பிற்கணப் பொழுதிலே தோன்றியயான் அவனின் முழுதும் வேருயவன்" என்முன்; இவ்வாறு முன்புண்டாகிய தன் முழுக்கேட்டினையும், பின்புண்டாகிய தனது அயன்மையையுஞ் சொல்கின்ற புத்தன் யாரை ஒக்குமோவெனின், ஒரு சாத்தன் கள்வரையறியாதான் கள்வராவார் பகலில் இல்லந்தோறும் புகுந்து பார்த்துப் போகி இரவு வந்து பொருள் களவு காண்பர் என்பது கேட்டு, பிச்சையேற்று இல்லந்தோறும் பார்த்துப் போகாநின்ற துறவோனைக் கண்டு கள்வனென்றஞ்சிக் கிடந்தான், துயிலில் மெய்ம்மறந்து கிடந்துழித் தனது ஆடை கழலத் தடவிப்பார்த்து, ஆடையைக் காணமையிற் கள்வன்! கள்வன்! என்று கூக்குரலிட்டான்; அதுகேட்ட அயலோரெல்லாம் ஓடிவந்து கள்வன் எங்குற்முன்? என்று வினவ, "அந்தோ அக்கள்வன் தன்னை இங்கு விட்டு வைத்து என்னைக் கொண்டோடிப் போனுன் என்று சொன்னவனையே ஒக்கும்" என்றவாறு.

இதன்கண் சாத்தன் தன்னை அக் கள்வனுகவும் கள்வன் தன்னைக் களவாடிப் போயினன் எனவும் கருதுதல் புத்தன் முற்கணத்திருந்தயான் அழிந்தேன்; அழிந்த புத்தனே இப்பொழுதுள்ள புத்தனுகிய என்னை விட்டு வைத்துப் போயினன் என்றதற்கு எடுத்துக்காட்டு என்க. (௬௪

இதுவுமது

௧௬௫. கள்ளனுந் தானேயாய்க்
 கையாப்புண் டவனேபோ
லுள்ளந்தா னின்றவற்றை
 யுணர்ந்தவற்ரே டறக்கெட்டிங்
கெள்ளனைத்து மில்லென்று
 லிறப்பறித லேவனுகுந்
தெள்ளியாய் தெளிந்திருந்து
 சிந்தித்துக் காணுயோ.

(இ - ள்.) தெள்ளியாய் - தெளிவுடைய குண்டலகேசியே!; கள்ளனுந் தானே ஆய் - முன்பு துயின்ற சாத்தனே விழித்துழித் தன்னைக் கள்வன் கொண்டு போனுனெனக் கருதிப் பின்பு தானே அக்கள்வனல் விடப்பட்ட கள்வனுமாகி; கை யாப்பு உண்டவனே போல் - அயலோரால் கைகள் கட்டுண்டவனைப் போலவே; உள்ளந்தான்-ஒருவனுடைய அறிவுதான்; நின்றவற்றை உணர்ந்து- தான் தோன்றிய கணப்பொழுதிலே காணப்பட்டவற்றை அறிந்து கொண்டு; அவற்ரேடு அறக்கெட்டு-அவ்வறிவுகளோடே ஒருசேர அக்கணத்திலேயே முழுதும் அழிந்து; இங்கு எள் அனைத்தும் இல் என்றால் - மறுகணமாகிய இவ்விடத்திலே ஒரெட்டுணையும்

இல்லையாயிற்று என்றால்; இறப்பு அறிதல் எவன் ஆகும் - அவன் இறந்தகால நிகழ்ச்சிகளை அறியுமாறு யாதோ?; இருந்து சிந்தித்துத் தெளிந்து காணேயோ - நீ இங்ஙனமெல்லாம் நின் புத்தன் கூறியவற்றைக் கேட்டபின் அவற்றை அமர்ந்திருந்து ஆராய்ந்து தெளிந்து காணமாட்டாயோ? என்றாள் என்க.

(வி - ம்.) யாப்புண்ணல்-கட்டுண்ணல். யாப்புண்டவன் என்றது முற் செய்யுளிற் கூறப்பட்ட அறிவிலியை. இறப்பு - இறந்தகால நிகழ்ச்சி. எவன் - என். தெள்ளியாய் என்றது இகழ்ச்சி.

இதனால் புத்தனுடைய கணபங்கக் கொள்கை திறம்பட மறுக்கப்பட்டமையுணர்க. (சஎ)

இதுவுமது

கசுஎ. கோன்பட்டான் குந்தத்தாற்
குத்துண்டா னேனாதி
தான்பட்டான் றளவீரன்
தப்பியோ டவனருகே
யான்பட்டே னென்பவன் போல்
யாத்திருந்தே சொல்லுதியால்
தான்பட்டான் பட்டார்க்குத்
தன்பாட்டை யுரைக்குமோ!

(இ - ள்.) கோன்பட்டான்-எடி! ஒரு போர்மறவன் எம்மரசன் இறந்தனன்; ஏனாதி குந்தத்தால் குத்துண்டான் - ஏனாதிப்பட்டம் பெற்ற படைத்தலைவன்றானும் பகைவன் ஈட்டியாற் குத்துண்டிறந்தான்; தளவீரன் தான் பட்டான்-மற்றொரு படை மறவனும் இறந்தனன்; தப்பி ஓடு அவன் அருகே - அங்ஙனம் இறந்த தளவீரன் பிறகு பகைவருக்குத் தப்பிஓட அவன் பக்கலிலே; யான் பட்டேன் என்பவன்போல் - யானும் வீழ்ந்திறந்தேன் என்று கூறினனாக; இம் மறவனைப்போல; யாத்திருந்தே சொல்லுதியால்- நீ தொடர்ந்து கெடாதிருந்தே இறந்தகால நிகழ்ச்சிகளையும் சொல்கின்றாய், நீ முற்கணத்தே முழுதும் கெட்டிருந்தால் அங்ஙனமே முற்கணத்தே முழுதுங் கெட்ட எனக்கு இறந்தகால நிகழ்ச்சிகளை எங்ஙனம் கூறுவை; பட்டான் தான் பட்டார்க்குத் தன்பாட்டை யுரைக்குமோ - இறந்தவன் ஒருவன் இறந்து போனவர்களுக்குத் தான் இறந்தமையைக் கூறுவேனோகாண்! என்றாள் என்க.

(வி - ம்.) இது, புத்தன் கணபங்கம் கேட்டார்க்கு யான் முன் கணத்திலே முழுதுங் கெட்டேன் என்றதற்கு ஓர் எடுத்துக் காட்டின் வாயிலாய்க் குற்றங் கூறியபடியாம்.

அவ் வெடுத்துக் காட்டாவது போர்க்களத்தினின்றும் புறங்காட்டி ஓடி வருவான் ஒரு மறவன் போரின்கண் பட்டார் யார் என்று வினவினவர்க்குப் போரின்கண் அரசன் பட்டான் ஏனாதி பட்டான், தளவீரன் ஒருவன் பட்டான் அவன் பக்கலிலே யானும் பட்டேன் என்றான் என்பது.

முதற்கணத்தே யான் முழுதுங்கெட்டேன் என்று கூறும் புத்தன் கணபங்கம் இம்மறவன் யானும் பட்டேன் என்பதை ஒக்கும் என்றவாறு.

கசுஅ. பிறைப்பிறப்பும் பிள்ளைகடம்
பிறப்பினையு மெடுத்துரைப்பின்
மறைபொருள்கள் வெளிப்பட்டா
மன்னுந்தாங் கருதுபவால்
குறையென்னை வான்வயிற்றுற்
குண்டலமா கேசியித்
தறையகத்துப் பிறப்புரைத்தாற்
றத்துவமாக் கொள்வாமோ.

(இ - ள்.) குண்டலமாகேசி பிறைப்பிறப்பும் பிள்ளைகள் தம் பிறப்பினையும் எடுத்து உரைப்பின் - குண்டலகேசியே! கணபங்கம் கூறுமிடத்துப் பிற்கணத்தே தோன்றுவது உள்பொருளோ? இல் பொருளோ என்று கடாஅயினார்க்கு இல்பொருளே தோன்றும் எனக் கூறி அதற்குப் பிறையினது பிறப்பினையும் பிள்ளைகளின் பிறப்பினையும் எடுத்துக்காட்டினையாயின்; மறைபொருள்கள் வெளிப்பட்டாம் - அவை இல் பொருள்களல்ல உள்பொருளாய் மறைந்திருந்தன; பின் வெளிப்பட்டனவேயாம்; இல்பொருளாயின் கன்னிக்குச் சூல் உளதாகவேண்டும்; முயற்கோடு முதலாயினவும் தோன்றவேண்டும்; வான்வயிற்றுல் குறையென்னை - பிள்ளை இல் பொருளாயின் ஒரு தாய் வயிற்றில் தோன்றுவானேன் வானிடத்தே தோன்றுக; பிறை தறையகத்துப் பிறப்புரைத்தால் - அங்ஙனமே பிறை இல் பொருளாயின் அது நிலத்திலே தோன்றுக; உரைத்தால் கருதுப - அங்ஙனம் தோன்றின் நின்கூற்றை மாந்தர் கருதுவர், அங்ஙனம் கூறாமையின்; தத்துவமா கொள்வாமோ - நின் கூற்றை யாங்கள் மெய்யாகக் கொள்வேமல்லேம் என்றாள் என்க.

(வி - ம்.) இஃது இல் பொருள் தோன்றுமென்பதற்குக் காட்டிய எடுத்துக்காட்டினைப் பழித்தபடியாம்.

வெளிப்பட்டவாகும் எனற்பாலது கெட்டு வெளிப்பட்டாம் என நின்றது: செய்யுள் விகாரம். மன்னுந் தாமும் அசைகள்.

பிள்ளை வான்வயிற்றுற் குறையென்னை யென்றும் பிறை தறையகத்துப் பிறப்புரைத்தாற் குறையென்னை என்றும் ஏற்ற பெற்றி கொண்டு

கூட்டுக; உரைத்தால் கருதுப எனவும் இயைக்க. இல்பொருள் தோன்று மாயின் அவற்றிற்கு வானிற்றோன்ற வேண்டும் என்றும் வயிற்றிற் றோன்றவேண்டும் என்றும் வரையறையின்மையின் யாண்டும் எப் பொருளும் தோன்றவேண்டும் என்பது கருத்து. தறை - நிலம். (௭௩)

௧௯௬. பின்னசந் தானமும்
பிறிதில்சந் தானமு
மின்னவென் றிரண்டுரைத்
தெத்துணையோ பொழுதோதிச்
சொன்னதன் பொருளெல்லாஞ்
சுவடின்றி யறக்கெடுதற்
கன்னதே யெனிலாத
னழிநாட் டாகாதோ.

(இ - ள்.) பின்ன சந்தானமும் பிறிது இல் சந்தானமும் இரண்டு உரைத்து-குண்டலகேசி நீ ஒரு கணத்தே முழுதுங்கெட்ட அறிவின் எண்ணங்களைப் பிற்கணத்தே முழுதும் வேறாகத் தோன்றுமறிவு உணருமாறென்னை? என்றார்க்கு விடைகூறுவாய் போன்று வேறுபடு பொருட்டொடர்பும் வேறாகாப் பொருட் டொடர்பும் என இரண்டுவகைத் தொடர்புகளும் கூறி; இன்ன என்று-அவை இன்னின்ன என்று; எத்துணையோ பொழுது ஓதி-மிகமிக நீண்டபொழுது முழுதும் விரித்துக்கூறி; சொன்னதன் பொருள் எல்லாம் - விரித்துச் சொன்னவுரையின் பொருள்கள் அனைத்தும்; சுவடின்றி அறக்கெடுத்தற்கு அன்னதே எனில் - பொன்றக் கெடுதற்கண் ஒருதன்மையவாய்ப் பயனின்றிக் கழிந்தன ஆயின்; ஆதன் ஆழிநாட்டு ஆகாதோ - நின்செயல் அறிவிலி யொருவன் மோதிரந் தேடி வந்து சொன்ன கதையாய் முடியாதோ? காண்; என்றாள் என்க.

(வி - ம்.) பின்னசந்தானம்-வேறுபட்ட பொருள்களின் தொடர்ச்சி. பிறிது இல் சந்தானம்-ஒருவகைப்பொருள்களின் தொடர்ச்சி. இதனை ஏகசந்தானம் என்றும் கூறுப.

முதற்கணத்தே பொன்றக் கெட்ட அறிவின் எண்ணங்களைப் பிற் கணத்தே புதுவதாகத் தோன்று மறிவு ஏக சந்தானமாயினும் இரண் டற்கும் கலப்பின்மையின் எங்ஙனமுணரும் என்று நீலகேசி வினவின ளாக, அதற்கு விடைகூற முயல்பவள் போன்று குண்டலகேசி அவ் விருவகைத் தொடர்ச்சியின் இலக்கண மெல்லாம் நெடும்பொழுது விரித்துப் பேசினள்; பேசியும், அவ்விரிவுரையெல்லாம் நீலகேசிக்கு விடைகூற ஏதுவாகாவாயின; ஆகவே நீலகேசி அவளை அசதியாடு பவள் பின்ன.................அன்னதே என்கின்றாள் என்க.

முற்கணத்தே அறிவு முழுதுங் கெட்டதாயின், அவ்வறிவுணர்ச்சி யினைப் பிற்கணத்தே தோன்றிய அறிவு அறியுமாறென்னை? அறியு

மாயின் ஏனையோர் அறிவின் எண்ணங்களையும் நாம் அறியலாமே என்று நீலகேசி வினவ, வேறுய தொடர்ச்சியில் முற்கணத்தறிவுணர்ச்சி அறிய வொண்ணுதுகாண்! இது வேருகாப் பொருட்டொடர்ச்சியர்களின் கெட்ட அறிவுணர்ச்சியைத் தோன்றிய அறிவு அறிதல் கூடும் என்று குண்டலகேசி விடுத்தாள். அதுகேட்ட நீலகேசி முற்கணத்தே கெட்ட அறிவிற்கும் பிற்கணத்தே தோன்றிய அறிவிற்கும் கலப்புண்டோ?, உண்டாயின் அஃதெவ்வாறறியப்பட்டது? என்று வினவினள். அதற்குக் குண்டலகேசி முற்கணத்தறிவு கையறக் கெட்டபின் பிற்கணத்தறிவு பிறத்தலின் கலப்பில்லை என்றிறுத்தாள்; அதுகேட்ட நீலகேசி நகைத்து ஏடி கலப்பின்மைக்கு இருவகைத் தொடர்ச்சியும் ஒக்குமாயின் இவ்வீணுரை சொல்லிய தெற்றிற்கு? நின்விடை ஆதன் ஆழிநாட்டை ஒக்கும் என்று பழித்தபடியாம்.

ஆதன் ஆழிநாட்டாவது - ஒருவன் ஒரு மோதிரத்தைத் தொலைத்து விட்டு அதனைத் தேடி எடுத்து வருமாறு ஓர் அறிவிலியை விடுத்தான். அவன் நெடும்பொழுது கழித்து வந்து சொல்பவன் 'ஐய! யான் பொய்கைக்கரை தேடி, ஆற்றங்கரை தேடி, மரங்களடியெல்லாந் தேடி, ஒரு சருகிலை கிடந்ததனை எடுத்துப் பார்த்தேன், அங்குக் கண்டிலேன்' என்ருன்; அவன் கண்டு கொடுவந்தேனென்று சொல்லுவான் போலச் சில சொல்லிப் பொழுது போக்கிப் பின்பு கண்டிலேன் என்ருற்போல நீயும் விடைகண்டு கூறுவாய்போல மற்ருென்று விரித்துப் பொழுது போக்கினையல்லது விடைதந்திலை என்றவாறு. (௯௦)

௨௦௦. எண்ணிலாப் பலகந்த
மிடையரு வென்றுரைப்பிற்
கண்ணுரு தோன்றுதலாற்
கலப்பிலவா மாகவே
திண்ணிதா மிடையறவு
தீண்டுமேற் றிரண்டொன்ருய்
அண்ணருன் முடிந்தறக்கே
டரியதே போலுமால்.

(இ - ள்.) எண் இலாப் பலகந்தம் இடை அரு என்றுரைப்பின் - ஏடி! குண்டலகேசி! நீ எண்ணின்றி முற்கணத்தும் பிற்கணத்தும் தோன்றுகின்ற ஐவகைக் கந்தப்பிண்டங்களும் இடையறவு படமாட்டா என்று கூறின்; கண் உருது ஒன்றுதலால் கலப்பு இலவாம் - அவை தம்முள் ஊடுருவுதலின்றிப் பொருந்துதலாலே தம்முட் கலப்பில்லனவேயாம்; ஆகவே இடையறவு திண்ணிதாம் - ஆதலால் அவற்றிடையே காலமும் இடமும் மிகவும் நுண்ணியவாயினும் இடையீடுண்மை உறுதியேயாம்; தீண்டுமேல் - அங்ஙனமின்றி ஊடுருவிக் கலக்குமாயின்; திரண்டு ஒன்ருய் அண்ணல் தான் முடிந்து - அவை தம்முட் கலந்து ஒன்ருகி யிறைதல் என்பதே முடிவாகி; அறக்கேடு அரிது ஆம் - நீ கூறிய முழுக்கேடு இல்லையாகும் என்ருள் என்க.

(வி - ம்) இதுவுமது. இடங்காலங்களா லிடையறவு படாததனைப் பிறிதில் தொடர்ச்சி என்றுகூறுதற்பொருட்டுக் குண்டலகேசி முற்பிற் கணங்களிற் றோன்றுகின்ற கந்தப்பிண்டங்கள் தம்முள் இடையறு வென்றுளாக; அது கேட்ட நீலகேசி நீ அங்ஙனம் கூறின் முற்பிற் கணங்களிலே தோன்றுகின்ற அவை தம்முள் ஊடுருவிக் கலந்து பிறக்குமோ? கலவாமல் பிறக்குமோ? கலவாமலே பிறக்குமென்பா யாயின் கலப்பின்மையால் மிகவும் நுணுக்கமாகவேனும் அவற்றிற்கு இடையறவு இருத்தல் தேற்றம். கலந்து பிறக்கும் என்பாயாயின்; முற்கணத்தே தோன்றிய அறிவு பிற்கணத்தே தோன்றுமறிவு தோன் றுந் துணையும் நின்று அதனோடு கலப்புற்று அதுவுந் தன் பிற்கணத்து அறிவு தோன்றுந் துணையும் நின்று அதனோடு கலந்து இவ்வண்ணமே எல்லா அறிவுகளும் தம்முட் கலப்புற்று இரண்டறப் பொருந்தி அறிவு ஒன்றேயாகி நீ கூறிய முழுக்கேடு பிழையாய் முடியும் என்றாள் என்பது கருத்து.

கந்தம் வகையால் ஐந்தாயினும் அவை எண்ணிறந்தனவாகலின் எண்ணிலாப் பல கந்தம் எனப்பட்டது. கண்ணுறுதல் - ஊடுருவிக் கலத்தல் என்பதுபட நின்றது. திண்ணிது - உறுதி யுடைத்து. இடை யறவு திண்ணிதாம் என மாறுக. (௩௧)

௨௦௧. வாசனையி னுமெனினும் வழியதனின் முதலதோன்
றூசனைத்து மில்லையே லறிந்துரைப்பு மரிதரோ
பேசினைநீ உளதேனினும் பெருந்தாமத் துண்ணூல்போல்
லோசனையி னெடியதோ ருயிருரைத்தா யாகாயோ.

(இ - ள்.) வாசனையின் ஆம் எனினும் - ஏடி குண்டலகேசி! முற்கணத்து அறிவின் நிகழ்ச்சியைப் பிற்கணத்தறிவு அதன் வாசனையாலறிதல் கூடும் என்று நீ கூறுவாயெனினும்; வழிய தனின் முதலது ஒன்று ஆசு அனைத்தும் இல்லையேல் - பிற்கணத் தறிவின்கண் முற்கணத்தறிவினின்றும் சிறிதேனும் ஒன்று வந்ததோ? இல்லையோ? இல்லையெனின்; அறிந்து உரைப்பும் அரிது - முற்கணத்தறிவு நிகழ்ச்சியைப் பிற்கணத்தறிவு அறிந்து கூறுதல் இல்லையாம்; பேசினை நீ - சொற்போர் செய்யும் நீ; உளது எனினும் - வென்றிப் பொருட்டாக அங்ஙனம் வருவதொன்றுளது காண் எனினும்; பெருந்தாமத்து உள் நூல்போல் - பெரிய முத்து மாலையினூடே செல்லும் நூல்போல; லோசனை இல் நெடியது ஓர் உயிர் உரைத்தாய் ஆகாயோ - பார்க்கப் படுதலில்லாத நெடிய தாகிய ஓர் உயிர் உண்மையையே வாசனை என்னும் பெயராற் கூறினாய் ஆகமாட்டாயோ? என்றாள் என்க.

(வி - ம்.) எனவே நீ அறக்கேடு சொன்னாயல்லை என்பது குறிப் பெச்சம். வாசனை - பயிற்சியால் ஒரு பொருளினின்றும் ஒரு பொரு ளுக்கு உண்டாகுமொரு குணம். நல்லாரொடு பயின்று நல்லான் ஆயி னன் என்பது காண்க. இங்ஙனம் கூறின் முற்கணத்தறிவினின்றும் ஒரு பொருள் பிற்கணத்தறிவிற் புகுந்தூடுருவும் என்கின்றபடியால்

இவ்வாறு கூடுருவிரிற்பது உயிர் என்பது எம்முடைய முடிவு ஆகலின் நின் கூற்று எம்முடைய முடிவையே வற்புறுத்தி நினக்குத் தோல்வி தருகின்றது காண்! என்பது கருத்து. நாங்கள் உயிர் என்போம்; நீ வாசனை யென்று அதனையே குறிக்கின்றனை என்றவாறு.

உரைப்பு - உரைத்தல். அரிது, ஈண்டு இன்மை மேற்று. வழியது என்றது பிற்கணத்து அறிவை; முதலது என்றது, முற்கணத்தறிவை. ஒன்று என்றுள், அது வாசனையன்று, உயிரே என்றற்கு. ஆசு-சிறிது. "ஆசுமன் பிலாத புன்பெண் கூந்தல்யா னணைவ லென்றுன்" (சீவக – சுரமஞ் – அ.) என்புழியும் அஃதப் பொருட்டாதலுணர்க. பேசினை என்றது சொற்போர் நிகழ்த்தும் நீ வென்றிப் பொருட்டாகப் பேசினை என்பதுபட நின்றது. தாமம் - முத்துமாலை. லோசனையில்-பார்க்கப் படுதலில்லாத. உயிர்அருவமாகலின் இங்ஙனம் கூறினள். உயிருரைத் தாய் என்பது உயிரையே வாசனை என்னும் பெயராற் கூறினை என்பதுபட நின்றது. (௯௨)

௨௦௨. பாதிரிப்பூப் புத்தோடு பாழ்ப்பினுந்தான் பல்வழியும்
தாதுரித்தாங் கேடின்மை யென்பதுநுன் றத்துவமோ
போதுரைத்த வோடுநீர் போலுடம்பு பொன்றிடினும்
மூதுரைத்த வாசம்போன் முடிவுயிர்க்கே யாகாதோ.

(இ - ள்.) பாதிரிப்பூ புத்தோடு பாழ்ப்பினும் தான் - பாதிரி மலரும் அது வைக்கப்பட்ட புதிய ஓடும் அழிந்தொழியினும்; பல் வழியும் தாது கேடு இன்மை உரித்து ஆம் என்பது - அம்மலர் மணம் மலரினின்றும் ஓட்டினும் ஓட்டினின்று அதிற்பெய்த நீரினு மாகப் பலவழியானும் வந்து அழிவில்லாமையை உடைத்தாம் என்பது; நுன் தத்துவமோ - நின் கொள்கைக்கு எடுத்துக் காட்டாம் என்பது நின்னுடைய கருத்தோ?; போது உரைத்த ஓடு நீர்போல் - அஃது உன் கருத்தாயின், பாதிரிப்பூவும் அது பெய்யப் பட்ட ஓடும் அது தோய்ந்த நீரும்போல; உடம்பு பொன்றிடினும் - உடம்பு அழிந்துபோயினும்; மூது உரைத்த வாசம்போல் - அவற்றுள் பண்டு தோய்ந்த நறுமணம் போன்று; உயிர்க்கு முடிவு ஆகாதோ - அழியாமை உயிர்க்கே என்னும் முடிவே ஆகாதோ என்றுள்; என்க.

(வி – ம்.) இது மேலதற்கோர் எடுத்துக்காட்டு. பாதிரிப்பூவும் புத்தோடும் அழியினும் பூவின் நாற்றங்கெடாது பூவினின்று ஓட்டினும் ஓட்டினின்று நீரினும் வந்தவாறுபோல முற்கணத்தறிவிலுள்ளதொரு வாசனை கெடாது பிற்கணத்தறிவின்கண் வருமென்பது நின் தத்துவமோ? அங்ஙனம் நீ கூறும் எடுத்துக்காட்டு நின் கொள்கைக்கு அரணாகாது. அஃது ஒருடம்பு நசிக்க மற்றோருடம்பில் வருகின்றதோர் உயிருண்டென்பதற்கே எடுத்துக்காட்டாகி எமக்கே அரண் செய்வதாம் என்றுள். புத்தோட்டில் நீர்பெய்து அதனுட் பாதிரி மலரை யிட்டு வைப்பது வழக்கம். (௯௩)

௨௦௩. சத்திதான் சென்றதே யென்றியே லைந்தன்றிப்
பொத்திநீ யுரைக்கின்ற பொருளோடா றுகாவோ
சத்திதா னதுவன்றி யைந்துமே யாயினும்
பித்தியாய் முழுக்கேடு பேசினா யாகாயோ.

(இ - ள்.) *சத்திதான் சென்றதே யென்றியேல் ஐந்தன்றி* - இனி நீ வாசனை என்பதொழிந்து முற்கணத்து அறிவினின்று ஒரு சத்தி பிற்கணத்து அறிவிற் புகச் சென்றதுகாண் என்று (கூறுகின்றனை அங்ஙனம்) கூறுதியானால் நீ கூறுகின்ற ஐந்து கந்தங்களேயன்றி; *பொத்தி நீ உரைக்கின்ற பொருளோடே ஆறு ஆகாவோ* - குற்றமுடையவளாகிய நீ இப்பொழுது கூறுகின்ற சத்தி என்னும் இப் பொருளோடே கந்தங்கள் ஆறாகிவிடாவோ?; *சத்திதான் அது அன்றி ஐந்துமே ஆயினும்* - அற்றன்று, அச்சத்தி யென்பது தனித்தொரு கந்தமாகாது முற்கூறப்பட்ட ஐந்து கந்தங்களுள் அடங்கியதொன்றே என்பாயாயினும்; *பித்தியாய் முழுக்கேடு பேசினாய் ஆகாயோ* - நீ பித்தேறி முழுக்கேடு கூறினாய் ஆகுவை. என்னை? கணந்தொறும் கந்தங்கள் கெடுமென்பதனை இச்சத்தி கெடாது நின்று பொய்யாக்குதலான், என்றாள் என்க.

(வி - ம்.) சத்திதான் சென்றது என்றியேல் என்பது, முன்பு வாசனை செல்லும் என்றது பிழையாதல் கண்டு இப்பொழுது நீ சத்தி சென்றது என்பாயாயின் என்பதுபட நின்றது. ஐந்து-ஐந்து கந்தங்கள். பொத்தி-குற்றமுடையவள். இனி, பொத்தி என்பதற்கு மறைத்து எனப் பொருள் கோடலுமாம். உரைக்கின்ற பொருள் என்றது சத்தி என்றதனை. முன்னர்க் கூறப்படாத இச்சத்தி ஒரு கந்தமாகி ஆறாகும் என்றவாறு.

இனிச் சத்தி ஐந்து கந்தங்களுள் அடங்குமெனின் அறிவு கெடுங்கால் சத்தி கெடாது நிற்றலின் முழுக்கேடு கூறியது பித்தேறிக் கூறினையாதல் வேண்டும் என்றாள் என்க. எனவே நீ கணபங்கம் கூறியது பிழை என்று உறுதிப் படுத்தினாளாயிற்றென்க. (௩௪)

௨௦௪. அலைபலவே யுரைத்தாளேன்
றருகிருந்தோர் கருதுதலுந்
தலைவனால் பொருணிகழ்ச்சி
தங்கண்மேற் குற்றங்க
ளிலைபெற வுரைத்தின்மை
நிறுத்துவன்யா னென்றுதன்
தலைவனீ பொருள்களே
தானுட்ட லுறவினால்.

(இ - ள்.) *அருகு இருந்தோர்* - இவர்களுடைய சொற் பொருக்குச் சான்றாகப் பக்கத்தே அவையிலிருந்த சான்றோர்

பலரும்; தலைவன் நூல் பொருள் நிகழ்ச்சி தங்கள்மேல் - நீல கேசியார் மொழிகளாலே இக் குண்டலகேசி கூறிய தலைவன் நூல் பொருள் நிகழ்ச்சி என்னும் இந் நான்கன்மேலும்; குற்றங்கள் நிலைபெற - குற்றங்கள் பலவும் நிலைபெறுநிற்பவே; அலை பல வுரைத்தாள் - இக் குண்டலகேசி அக் குற்றங்கள் தீரக் கூறுமல் வீணே அலைக்கும் மொழிகள் பற்பல பேசினுள்; என்று கருது தலும் - என்று கருதுமளவிலே; யான் உரைத்து இன்மை நிறுத் துவன் என்று - அவையோர் கருத்தறிந்த குண்டலகேசி யான் இன்னும் சில கூறி அக் குற்றங்கள் இல்லாமையை நிலைநிறுத்திக் காட்டுவேன் என்று துணிந்து; தன் தலைவன் ஈ பொருள்களே தான் நாட்டல் உறலினுல் - தன் தலைவனுகிய புத்தன் வழங்கிய பொருள் மாண்புகளைக் கூறி அவன் சிறப்பினை நிலைநாட்டலுற்று என்க.

(வி - ம்.) அலை – வீணே அலைக்கும் வறுமொழி. யான் உரைத்து இன்மை நிறுத்துவன் என மாறுக. ஈபொருள்: வினைத்தொகை. பொருள் மாண்பு கூறுமாற்ருல் அவன் பெருமையை நிலை நாட்டத் தொடங்கி என்றவாறு. இன்மை – குற்றமின்மை. (௩௬)

### புத்தனின் வள்ளன்மை

௨0௫. கண்கொடுத்தான் றடிகொடுத்தான்
கயப்புலிக்குத் தற்கொடுத்தான்
பெண்கொடுத்தா னுடம்பினையும்
பிளந்திட்டுப் பிறர்க்கீந்தான்
மண்கொடுத்தான் மகக்கொடுத்தான்
மன்னுந்தற் சேர்ந்தார்க்கு
விண்கொடுத்தா னவன்கொடுத்த
விரித்துரைப்பன் கேளென்ருள்.

(இ - ள்.) கண் கொடுத்தான் - எந்தலைவனுகிய புத்தர் பெருமான் பிறர் பொருட்டுத் தன் கண்ணையே அகழ்ந்து வழங்கி னுன்; தடிகொடுத்தான் - தன்னுடம்பிலூனையும் அரிந்து கொடுத்த னன்காண்!; கயப்புலிக்குத் தன் கொடுத்தான் – புனிற்றுப்பசி கூர்ந்ததொரு பெரிய புலிக்குணவாகத் தன்னுடம்பையே வழங்கி னன்; பெண் கொடுத்தான் - தன்மனையாட்டியையும் வழங்கினன்; பிறர்க்கு உடம்பினையும் பிளந்திட்டு ஈந்தான் - தன்ஞெரு பிறப்பிலே தன்னுடம்பினையும் பிளந்து கொடுத்தான்; மண் கொடுத்தான் - தனது நாட்டினையும் பிறர்க்கு வழங்கினன்; மகக் கொடுத்தான் - மகவினையும் வழங்கினன்; தன் சேர்ந்தார்க்கு மன்னும் விண் கொடுத்தான் - தன்னை வந்தெய்தியவர்க்கு நிலைபேறுடைய மேனிலை

யுலகத்தையும் வழங்கினன்; அவன் கொடுத்த விரித்து உரைப்பன் கேள் என்றாள் - அப்பெருமான் இங்ஙனமாக வழங்கிய அரும் பொருள்களை இன்னும் விரித்துக் கூறுவேன், கேட்பாயாக! என்று கூறினள்; என்க.

(வி - ம்.) கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை ஆகலின் முற்படக் கண் கொடுத்தான் என்றாள். தடி-தசை. கய-பெருமை குறித்த உரிச்சொல். புத்தன் புலிக்குணவாகத் தன்னையே கொடுத்தான் என்பதனை,

"புனிற்றுப் பசியுழந்த புலிப்பிணவு தனாது
முலைமருக் குழவி வாங்கி வாய்மடுத்
திரையெனக் கவர்வுற நோக்கி யாங்க
வேரிளங் குழவியின் முன்சென்று காணக்
கூருகிர் வயமான் புலவுவேட்டுத் தொடங்கிய
வாளெயிற்றுக் கொள்ளையிற் றங்கினன் கதுவப்
பாசிலைப் போதி மேவிய பெருந்தகை
ஆருயிர் காவல் பூண்ட
பேரருட் புணர்ச்சியி னகலு மாறே"
(தொல் - பொருளதி. சூ எசு. நச். மேற்கோ.)

எனவரும் பழம் பாடலானுமுணர்க.

இன்னும், புத்தன் கொடைச் சிறப்பினை,

"மிக்கதனங் களைமாரி மூன்றும் பெய்யும்
வெங்களிற்றை மிகுசிந்தா மணியை மேனி
யொக்கவரிந் தொருகூற்றை யிரண்டு கண்ணை
யொளிதிகழுந் திருமுடியை யுடம்பி லூனை
யெக்கிவிழுங் குருதிதனை யரசு தன்னை
யின்னுயிர்போற் றேவியையீன் றெடுத்த செல்வ
மக்களைவந் திரந்தவர்க்கு மகிழ்ந்தே யீயும்
வானவர்தா முறைந்தபதி மாணு வூரே"

எனவரும் பாடலானு முணர்க. (ருசு)

வேறு

௨0சு. ஏதி லாரிடர் தீர்க்கு மேமவிறை
சாத கம்மிவை யென்று தலைத்தலை
யோகி ஞணின் றோருபக லெல்லையுங்
கோதை வார்குழற் குண்டல கேசியே.

(இ - ள்.) கோதை வார் குழல் குண்டலகேசி - மலர்மாலை யணிந்த நெடிய கூந்தலையுடைய அக் குண்டலகேசிதானும் இங்ஙனமே; ஏதிலார் இடர்தீர்க்கும் எம இறை - பிறர் துயர்கண்டு

அவற்றைத் தீர்க்கும் பேரருளுடைய எம்பெருமானாகிய புத்த னுடைய; சாதகம் இவை என்று - நாலெண்ணிறப்பு நூறுயிரக் கற்பகாலம் பிறர்க்குழந்த பிறப்புக்காதையுட் கண்டன இக் கொடைத்திறனெலாம் என்று கூறி; ஒரு பகல் எல்லையும் நின்று - நெடும்பொழுதெல்லாம் நின்று; தலைத்தலை ஓதினள் - புத்த சாதகக் கதைகளிலே இடந்தோறும் இடந்தோறும் எடுத்தெடுத்து அவன் கொடைச் சிறப்புக்களைக் கூறுகின்றாள்; என்க.

(வி - ம்.) ஏதிலார் - பிறர். இறை - தலைவன். சாதகம் - புத்த சாதகக் கதைகள். அவையாவன: புத்தன் பிறந்துழன்ற பிறப்புக் களைப்பற்றிக் கூறுங் கதைகள் என்க. சாதகம் - பிறப்பு. ஒருபகல் என்றது நெடும்பொழுது என்பதுபட நின்றது.

இனி, புத்தனுடைய பிறப்புக்களை,

“வானுடும் பரியாயு மரிண மாயும்
வனக்கேழற் களிறாயு மெண்காற் புண்மான்
றானுயு மனேயெருமை யொருத்த லாயுந்
தடக்கையிளங் களிறுயுஞ் சடங்க மாய்
மீனுயு முயலாயு மன்ன மாயு
மயிலாயும் பிறவாயும் வெல்லுஞ் சிங்க
மானுயுங் கொலைகளவு கட்பொய் காமம்
வரைந்தவர்தா முறைந்தபதி மானு லூரே”

எனவரும் பாடலானு முணர்க. (௨௭)

௨0௭. நூலு நாரு மிசைத்தன வொத்தலா
னீல கேசி நெடுங்க ணுள்சொல்லு
மாலும் பேயு முடையவர் செய்கையே
போலு நீ சொன்ன புத்தர் சரிதையே.

(இ - ள்.) நெடுங் கண்ணாள் நீலகேசி சொல்லும் - நெடிய கண்களையுடைய நீலகேசி குண்டலகேசியின் மொழிகளைக் கேட்டுச் சொல்வாள்; நீ சொன்ன புத்தர் சரிதை - ஏடி நீ நெடும்பொழுது நின்று ஈண்டுக் கூறிய நின்றலைவனாகிய புத்தன் பிறப்பு வரலாற் றுக் கதைகள் எல்லாம்; நூலும் நாரும் இசைத்தன ஒத்தலால் - நூலையும் நாரையும் சேர்த்தாற்போல ஒன்றற்கொன்று பொருத்த மற்றனவாக விருத்தலின்; மாலும் பேயும் உடையவர் செய்கையே போலும்-அச் செயல்கள் பித்தேறியவரும் பேயேறியவருஞ் செய்யுஞ் செய்கைகளையே ஒக்கு மன்றிச் சான்றோர் செய்கைகள் எனல் பொருந்தாதுகாண்!; என்றாள் என்க.

(வி - ம்.) நூலும் நாரும் இசைத்தன ஒத்தல் என்றது, பொருந்தா வுரைகள் என்றவாறு. மால் - பித்து. சான்றோர் செய்கை ஆகா என்பது குறிப்பெச்சம். சரிதை - வரலாறு (௨௮)

இதுவுமது

உ0அ. போழுங் கண்ணுந் தலையுந் தடிகளுந்
தாழ மின்றி யிவைதம்மி னேவென
வாழு மாந்த ருழைவரு வாரில்லை
கூழன் றன்னுழை யேகோளச் செல்பவோ.

(இ - ள்.) வாழும் மாந்தர் உழை - இவ் வுலகத்தில் உயிர் வாழ்கின்ற மக்களிடத்தே; போழும் கண்ணும் தலையும் தடிகளும் இவை தாழம் இன்றித் தம்மின் என - நும்முடற் பிளவும் கண்களும் தலையும் தசையும் ஆகிய இவையிற்றைக் காலந்தாழ்த்த லின்றி எமக்கு வழங்குமின் என்று கூறி; வருவார் இல்லை - வருமிரவலர் ஒருவரேனுமிலர்; கூழன்றன் உழையே - இங்ஙனம் இரப்போர் அறிவிலானிடத்தும்; கொளச் செல்பவோ - அவற்றை ஏற்கச் செல்வரோ? செல்லார்காண்!; ஆகவே இவற்றை இவன்பாற் சென்றிரப்பாருமில்லை என்பது தேற்றம், என்க.

(வி - ம்.) ஆகவே இவற்றை இவன்பாற் சென்றிரப்பாரும் இல்லை என்பது குறிப்பெச்சம்.

போழ் - பிளவு; ஈண்டு உடற்பிளவு. தடி - தசை. தாழம் - காலந்தாழ்த்தல். எனவே நின் கூற்று உலகமலைவு என்றாளாயிற்று. கூழன் - அறிவிலி. செல்பவோ? என்னும் வினா அதன் எதிர்மறைப் பொருளை வற்புறுத்தி நின்றது. (கக)

உ0க. பிளத்த லுள்ளிட்ட வாய்ச்சேல் வதிந்திர
னளத்தற் கேலவன் றுணறி யும்பிற
னுளத்தை யோரல னேலவன் றேவனுக்
கிளத்த றுனோர் கிழமையும் போலுமே.

(இ - ள்.) பிளத்தல் உள்ளிட்டவாய்ச் செல்வது - எம்பெருமானுடைய உடற்பிளவு முதலியவற்றை வேண்டி அவன்பாற் செல்வது; இந்திரன் அளத்தற்கேல் - தேவேந்திரன் எம்பெருமானது வள்ளன்மையை அளந்து காண்டற் பொருட்டென்பாயாயின்; அவன்றான் பிறன் உளத்தை அறியும் - அவ்விந்திரன் தேவனாகலின் பிறனுடைய எண்ணங்களை நன்கு அறிந்து கொள்ளுவன்; ஓரலனேல் - அங்ஙனம் ஆராயாமலே அறிந்து கொள்ளானாயின்; அவன் தேவனு கிளத்தல்தான் - அவ்விந்திரனை அமரன் என்று கூறுவதுதானும்; ஓர் கிழமையும் போலுமே-உனக்கென நீ மேற்கொள்ளும் ஓர் உரிமையே ஆதல் வேண்டும், என்க.

(வி - ம்.) பிளவு முதலியன இரந்து இந்திரன் புத்தனை ஆராயும் பொருட்டுச் சென்றான் என்பது வழிமொழிந்து கொள்ளுமாற்றாற் பெறுதும்.

அளத்தல் - கொடைத்திறத்தை ஆராய்ந்தறிதல். தேவர்கள் பிறரெண்ணங்களைத் தாமே அறிந்துகொள்ளுமியல்புடையர் ஆகலின் இந்திரன் புத்தன் கொடைப்பண்பினை அளத்தற்குச் சென்றான் என்றது பேதைமை என்பது கருத்து. பிறர் மனக்கருத்தறியாதவனைத் தேவன் என்பதற்கு உரிமையில்லை. ஆயினும் நீ சொல்லிலக்கணமறியாமையின் இங்ஙனம் கூறுகின்றனை என்றசதியாடுவாள், ஓரலனேல் அவன் தேவனுகக் கிளத்தல் ஓர் உரிமைபோலும் என்றாள். (௯0)

உ௧0. யாவ னாயினு மன்னவ னின்மையிற்
றேவ னென்று தெளியுந் தெளிந்தபின்
சாவ னென்பதோர் சங்கையு மின்றியே
யீவ னென்பதோ ரிச்சையுந் தோன்றுமே.

(இ - ள்.) இன்மையின் - உடற்பிளவு வேண்டி வருதன் முதலாயின உடைய மாந்தர் இவ்வுலகத்தில் யாண்டுமின்மையாலே; யாவன் ஆயினும் - எத்தகையவனும்; அன்னவன் - அங்ஙனம் உடற்பிளவு முதலியன இரந்து தன்பால் வருமவன்; தேவன் என்று தெளியும்-மாயத்தால் வந்த தேவனே என்பதனை நன்குணர்வான் அல்லனோ?; தெளிந்தபின் - அங்ஙனம் உணர்ந்த பின்னர்; சாவன் என்பது ஓர் சங்கையுமின்றி - இவனால் யான் சாவேனோ என்னும் ஓர் அச்சம் பிறத்தலன்றி; ஈவன் என்பது ஓர் இச்சையும் தோன்றுமே - அருள் தோன்றாது, அது தோன்றாமையின் இவனுக்கு யான் ஈவேன் என்னும் அவாவும் தோன்றுமோ? தோன்றாதன்றோ!; ஆதலால் நின் புத்தன் அறியாமையால் தலைகொடுத்தல் முதலியன செய்து தற்கொலை செய்து கொண்டானவன் என்றாள் என்க.

(வி - ம்.) யாவனாயினும்-அறிவுடையனாயினும் அறிவிலியாயினும் என்றவாறு. அன்னவன் தேவன் என்று தெளியும் என மாறுக. அன்னவன் என்றது தலைமுதலியன இரந்து வருமவன் என்றவாறு. இன்மையின் என்றது, தலை முதலியன இரந்து வருவோர் இவ்வுலகத்தின்மையின் என்றவாறு.

இடர்ப்படுவாரைக் கண்டுழியே அருள் பிறத்தல் இயல்பு; தலையிரந்து வருவோன் இடர்ப்படுவானாக யாரும் நினைத்தற்கிடனில்லை; இங்ஙனம் தலைமுதலியன இரப்பவனால் தனக்குச் சாவே நேர்தல் கூடும் என்று அஞ்சுதலே இயல்பென்பாள், 'தெளிந்தபின் சாவன் என்பதோர் சங்கையுமின்றி ஈவன் என்பதோர் இச்சையுந் தோன்றுமோ?' என்று வினவினள். ஆதலால் தலை கொடுத்தல் முதலியன செய்த புத்தன் பேதையே என்பது குறிப்பெச்சம். (௯௧)

உ௧௧. உறுதி யல்ல துணர்வுடையான்றனக்
கிறுதி யேலென்று மிந்திர னெண்ணலன்
மறுதி யின்மையின் மாணிழை நீயெங்குப்
பெறுதி முன்னொடு பின்னிலை யாதவே.

(இ - ள்.) உணர்வுடையான் தனக்கு - தன்னால் மெய்யுணர்வுடையான் என்று கருதப்படுகின்ற புத்தனுக்கு; உறுதியல்லது இந்திரன் என்றும் இறுதி எண்ணலன்-தேவேந்திரன் நலஞ்செய்வதல்லது எப்பொழுதும் சாக்காட்டினைச் செய்யவும் கருதுவனோ? கருதான்காண்!; மறுதி இன்மையின் - தலைகொண்ட பின்னர்ப் புத்தன் மீண்டும் வாழானாகலின்; மாணிழை - குண்டலகேசியே!; முன்னொடு பின் இயையாத - முன்னுக்குப்பின் முரணான இவ் வறுங் கதைகளை; நீ எங்குப்பெறுதி - நீ எவ்விடத்தே பெறுகின்றனை? என்றாள் என்க.

(வி - ம்.) உறுதி - நன்மை. உணர்வு - மெய்யுணர்வு. உணர்வுடையான்றனக்கு என்றது, தன்னால் மெய்யுணர்வுடையானாகக் கருதப்படும் புத்தனுக்கு என்றவாறு. இறுதி - சாக்காடு. ஏல்: அசை. மறுதி - மீண்டும் வாழ்தல். மாணிழை என்றது, குண்டலகேசி என்னும் பெயர் கருதியதென்க.

இனி, முன்னொடு பின்னியையாத வென்றது, ஒருகால் இந்திரன் இவன்மே லன்பினால் சந்திரமண்டலத்தில் முயல் பொறித்தானென்றும், பின்னொருகால் இவன் கொடையாராய்தல் காரணமாகக் கொன்றான் என்றும் கூறுதல்.

இனிக் கொலை செய்ததூஉம் அன்பினால் எனில் அஃதுலக மலைவாம். என்னை? அன்புடையார் கொலை செய்த வியல்பல்லவாகலின் என்க. (௩௨)

௨௩௩. ஆத னாற்குறந் தாங்கெழு வான்றும்ம
வேத மில்சுமை யேற்றெரு தாமென்றான்
சாத கம்மிவற் றானருள் சாதிப்பா
ரோதி னார்க்கு முணர்வொருப் பாயதே.

(இ - ள்.) ஆற்கு உறந்து ஆங்குத் தும்ம எழுவான் ஆதன் - பசுவிற் பால் கறந்துழித் தும்மல் வந்ததாகத் தும்முதற்குக் கறத்தலைவிட்டு எழுகின்ற அறிவிலியொருவன் தான் கறவாதெழுதற்குக் காரணம் கூறுபவன்; ஏதும் இல் சுமை ஏற்று எருது ஆம் என்றான்-இது குற்றமற்ற பொதியினை ஏற்றுதற்குரிய எருதாகும் என்றான்; சாதகம் இவற்றால் - புத்த சாதகக் கதைகளாகிய இப் பொருந்தா மொழிகளாலே; அருள் சாதிப்பார்க்கும் - புத்தனுடைய அருளுடைமையை உலகிற்கு எடுத்துக் காட்டுபவர்க்கும் முற்கூறப்பட்ட ஆதனுக்கும்; உணர்வு ஒருப்பு ஆயது - அறிவு மிகவும் ஒற்றுமையுடையதாயிற்று; என்றாள் என்க.

(வி - ம்.) இது புத்த சாதகக் கதை புனைந்த ஆசிரியர்களின் பேதைமை கூறியது என்க.

ஆதன் - அறிவிலி. ஆற்குஉறந்தாங்கு என்று கண்ணழித்துக் கொள்க. ஆற்கு: உருபு மயக்கம்; உறத்தல் - கறத்தல் வேதமில் சுடரேற்றெருதாமென்றான் என்றும் பாடம். இது பிறழ்ந்த பாடமாதல் அடுத்து வருஞ் செய்யுளானும் உணர்க.

பால் கறக்கும் பொழுது தும்மினால் பசு வெருளும் என்று எழுந்து தும்முபவன் தான் எழுவதற்குக் காரணம் இஃதாக அதற்கொரு காரணம் கற்பிப்பவனும் பொருந்தாமற் கற்பித்தலின், புத்தசாதகக் கதை புனைதற்குக் காரணம் வேறாகவும் புத்தனுக்கு அருளுடைமை சாதிப்பதாகக் கருதி அதற்கும் பொருந்தாப் பொய்களையே புனைந்த ஆசிரியர் அறிவும் இவ்வாதனறிவும் ஒன்று என்றவாறு. ஒருப்பு - ஒற்றுமை. (கக)

இதுவுமது

உகக. எருது பாலின்மை யெண்ணலன் றும்மலே
கருது மாதனுங் கண்முத லாயின
தருத லல்லது தங்குறை யீதெனூர்
மருதின் வாழ்பகை யானவிம் மாந்தரே.

(இ - ள்.) ஆதனும் எருதுபால் இன்மை எண்ணலன் - அந்த அறிவிலியும தான் கூறுகின்ற எருதின்கண் பால் இல்லாமையைக் கருதாதவனாய், தும்மலே கருதும் - தான் எழுந்து தும்முதலையே கருதுவானாயினன்; வாழ் மருதின் பகையான இம் மாந்தர் - உயிர்வாழ்கின்ற மருதமரத்திற்குப் பகைவராயின இந்தப் பௌத்த சமயத்தினரும் அந்த ஆதனைப் போலவே; கண்முதலாயின தருதல் அல்லது தங்குறை ஈது எனூர் - தங்கள் இறைவன் பிறர்க்குக் கண் முதலாயினவற்றையும் வழங்குஞ் சிறப்பினைக் கருதுவதல்லது, அதற்குத் தாங்கள் புனையும் இக் கதைகளில் வருகின்ற உலகமலைவு முதலிய குற்றம் இஃதென்று ஆராய்வதிலர்; வாய் தந்தன பேசுவர் என்றாள் என்க.

(வி - ம்.) ஆதன், தன் தும்மல், ஒன்றனையே கருதித் தான் கூறும் ஆ எருதாகாமையும் அந்த எருதுதானும் பால் கறவாதென்பதையும் கருதாது விட்டான்; இப் பௌத்தர்களும் புத்தன் அருளுடையன் என்று கூறுவதொன்றனையே குறிக்கொண்டு கண முதலியன கொடுத்தான் என்கின்றனரேயன்றி அவற்றை இரப்பாரின்மை முதலியவற்றைக் கருதிலர் என்றிகழ்ந்தபடியாம். எனவே பௌத்தர்கள் புத்தருக்குப் பெருமை கூறற்பொருட்டுப் பொருந்தாப் பொய்க்கதை பல புனையுமியல்பினர் என்றிகழ்ந்தாளுமாயிற்று.

மருதம் பூ, பட்டை முதலியன தம்மாடை துவரேற்றுதற்கு வேண்டுவன ஆதலின் மருத மரத்தை இவர் வெட்டுவர் ஆதலின் வாழ் மருதுப் பகை மாந்தர் என்றாள். இவர் மருது வெட்டவல்லவரேயன்றி தூலியற்றவல்லுநர் அல்லர் என்பது குறிப்பு என்க. (கஉ)

உகச. பாக மேபிளந் தாற்பர காயமோன்
றாகு மேயென வீவஃ தாதன்மை
காக மேயுண்ணுங் கண்ணுமற் றன்னதே
யேக மெய்யும்விண் டாலியை யார்களே.

(இ - ள்.) ஏக மெய்யும் விண்டால் - யாவரேனும் தமதோருடம்பும் பிளக்கப்பட்டவர் தாமும்; இயையார் - மீண்டும் அப் பிளவுகளைப் பொருத்தியவழிப் பொருந்தாமலிறந்தே படுவர்காண்! இங்ஙனமாகவும்; பாகமே பிளந்தால் பரகாயம் ஒன்றாகும் என - நும் புத்தன் தன்னுடலிற் பாதியைப் பிளந்து கொடுப்பின் ஏதிலனாகிய இரவலன் உடம்பிற் பொருந்தி ஒன்றுபடும் என்று கருதி; ஈவஃது ஆதன்மை - வழங்குவது அறிவின்மையேகாண்!, காகமே உண்ணும் கண்ணும் அன்னதே - அங்ஙனம் பிளந்து கொடுப்பின் அப் பிளவினைக் காகங்களே தின்னும், கண் கொடுப்பினும் அக் காகங்களே தின்று போகுங்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) இது புத்தனது பேதைமை கூறுகின்றது. பாகம்-பாதி. பரகாயம் - பிறர் உடம்பு. ஈவஃது என்புழி ஆய்தம் விகாரவகையான் வந்தது.

ஆதன்மை - பேதைமை. கண்ணும் காகமேயுண்ணும் என்க. (சுஉ)

உகரு. உள்ளந் தானிரு பாகினு முண்மையாற்
கோள்கின் றானிவ னேகொல்லு வான்றனை
யெள்ளி நேரு மறிவில்லை யேற்பிணஞ்
கோள்ளேன் றீந்து கோடுப்பினுங் கூடுமே.

(இ - ள்.) உள்ளம் தான் இரு பாகினும் உண்மையால் இவன் கொள்கின்றான் - ஏடி! நின் புத்தன் தனுடப்பில் பாதி பிளந்து கொடுப்புழிப பிளக்கப்பட்ட இரண்டு பிளவுகளினும் அறிவுண்டாகலான் இவன் பாதியுடம்பொடு தன்பால் வந்தவனுடைய அப்பாதியுடம்பினையும் ஏற்றுத் தன் பாதியுடம்பொடு ஒட்டிக் கொண்டவன் ஆவதல்லது வழங்குகின்றான் அல்லன் காண்; எள்ளித் தனைக் கொல்லுவான் - அறத்தை இகழ்ந்து தன்னையே ஓரோவழிக் கொல்லுவானுமாயினன்; நேரும அறிவு இல்லையேல் - அப்பிளவின்கண் நிகழும அறிவில்லை என்பாயாயின்; பிணம் ஈர்ந்து கொள் என்று கொடுபபினும் கூடும் - புத்தன் தன்னைக் கொன்று வழங்கவேண்டா, ஒரு பிணத்தைப பிளந்து இதனைக் கொள்க! என்று வழங்கினும் அக்கொடை வழங்கியபடியாகுமே! என்றாள் என்க.

(வி - ம்.) இது புத்தனது கொடையை இகழ்கின்றது. உள்ளம்-ஈண்டறிவு. பாகு-பாதி. உடலிற் பாதி இரந்து வருவானுக்கு இறந்துபட்ட பிணத்தை ஈர்ந்து கொடுப்பினும் அமையும்; தற்கொலை செய்தீதல் பெரும் பேதைமை என்றிகழ்ந்தபடியாம். உடலைப் பிளந்துழி அறிவு மழிதலே இயல்பு. அறிவு அழியாதெனின் புத்தன் கொடையாளியாகாமல் வந்த பாதியை ஏற்குமிரவலனாகி இழிந்தவனுமாகின்றான் என்பாள், இவனே கொள்கின்றான் என்றாள். இதற்குத் தற்கொலை செய்தலும் வேண்டுமோ? என்பது குறிப்பு. (சுக)

இதுவுமது

உ௨கசு. கூறு கூறுசெய் தாலுடம் புள்ளுயிர்
வேறு வேறு செலல்வெளி ருக்கோளாய்
பாறு வாயுரைக் கும்பர மாத்தங்க
டேறு வாருள ரோதெருண் டார்களே.

*(இ - ள்.) கூறு கூறு செய்தால் - ஏடி குண்டலகேசி! உயிர் வாழுமோர் உடம்பினை இரண்டு கூருகப் பிளந்தால்; உடம்புள் உயிர் - அவ்வுடம்பிலுள்ள உயிர்தானும்; வேறு வேறு செலல் - இரண்டு கூறுபட்டு வேறு வேருக அவ்விரு பிளவினும் செல்லுமென்பது; வெளிருக் கொளாய்-அறிவில் கூற்ருகக் கொள்ளக் கடவை; பாறுவாய் உரைக்கும் - இங்ஙனம் பொருள் சிதையக் கூறுகின்ற நீ சொல்லும்; பரம அத்தங்கள் - மேலான பொருள்களை, தெருண்டார் தேறுவார் உளரோ - அறிஞருள் தெளிந்து மேற்கொள்வாரும் உளராவரோ? என்ருள் என்க.*

(வி - ம்.) *இது கொடுக்கின்ற பாதியில் உயிர் உண்டென்பதற்குக் குற்றங் கூறுகின்றது.*

*வெளிறு – வெளிற்றுரை; அறிவில் கூற்று. பாறுதல் - சிதைதல். பரமாத்தம்–மேலான மெய்ப்பொருள். தெருண்டார் – அறிஞர். தேறுவார்–தெளிவார். தேறுவாருளரோ என்னும் வினு எதிர்மறை.* (கஎ)

இதுவுமது

உ௨கஎ. புத்த ஞர்வண்ணங் கண்ட புனையிழை
சித்த னேயென்னைச் சேர்மின மென்றலி
ளைத்த கன்னருள் செய்கல ஞய்விடின்
மத்த கம்பிளந் தானென்றன் மாயமே.

*(இ - ள்.) புத்தனுர் வண்ணம் கண்ட புனை இழை - ஏடீ! நின் நலேவணங்கிய புத்தனுடைய புறவழகினைக் கண்டு பெரிதுங் காமுற்ற ஓரிளமங்கை; சித்தனே எனைச் சேர்மினும் என்றலின்– அறிவுடையோய் நீ என்னைக் கூடி எனக்கருள் செய்தி என்றிரந்தாளாக!; அத் தகன் அருள் செய்கலன் ஆய்விடின் - அந்த வள்ளற்றகைமையையுடைய புத்தன் அவட்கிரங்கி அருள் செய்திலன் (என்று நின் புத்தசாதகம கூறுகிறபடி) ஆயினன் என்ருல்; மத்தகம் பிளந்தான் என்றல் மாயமே-அவன் பிறர் துயர்க்கிரங்கித் தன் தலைதொட்டுடலைப் பிளந்து கொடுத்தான் என்று கூறுவது பெரும் பொய்யே காண்! என்ருள் என்க.*

(வி - ம்.) *இது புத்தன் கொடைக்கு இன்மை கூறுகின்றது. புத்தனுர்: இகழ்ச்சி. வண்ணம் – அழகு. சித்தன் – அறிஞன். சேர்மினம்:*

வினைத்திரிசொல். அத்தகன் — அத்தகைய வள்ளன்மையுடையோன். எளிதாகிய இக்கொடையையே நேர்ந்திலாதான் செயற்கரிய கொடை நேர்ந்தனன் என்பது பொய்யேயாம் என்றவாறு. என்னை? அருள் செய்தற்கு எளிதுமாய் அருளப்பட்டார்க்கும் தமக்குமின்பம் பயப்பதுமாகி இரந்தவரின் துயரத்தையும் போக்குதலால் அருட்செயலாகிய இது செய்யாராகில் இந்நலஞ் சிறிது மில்லாதது செய்யக் கூடாமையின் என்க.

இனி, இஃதருட் செயலே எனினும் காமம் என்னும் குற்றமுடைத்தாகலின் செய்திலரெனின், கொலைக் குற்ற முடையவாகிய தலையரிதல் முதலாயின செய்த வாறென்னையோ? என்க.

தலையரிதல் முதலாயின அருட்செயலுமன்று. என்னை? தலைமுதலாயின போயும் உயிரோடிருந்து துயருறுவார்லேயன்றே? அவ்வாறு வந்திரப்பாருளராயவழி மாயத்தாலன்றோ அது நிகழ்வதாம், அதற்கு அருளல் வேண்டுமோ? என்க.

இனி, தற்கொலை தீவினை என்றதற்குக் குண்டலகேசி சல்லேகனையைப் பழித்தது ஞாபகவேது என்க.

சல்லேகனையாவது-தவவொழுக்கமுடையோர் அதற்கிடையூறுகப் பெரும்பிணி முதலிய வுற்றவிடத்து உண்ணாமை மேற்கொண்டுயிர் நீத்தல்; என்க. (கஅ)

உகஅ. ஆவ தின்மை யறிந்து மவத்தமே
சாவ தேயுங்கள் சத்துவர் சால்பெனிற்
காவல் பூண்ட கணவனோ டமத்தின்
வேம வட்கும் விழுக்குண மாங்கொலோ.

(இ - ள்.) உங்கள் சத்துவர் சால்பு - உங்கள் போதி சத்துவருடைய பெருமையெல்லாம்; ஆவது இன்மை அறிந்தும் அவத்தமே சாவதே என்னின் - தமக்கும் பிறர்க்கும் உண்டாகும் பயன் சிறிது மில்லாமையை அறிந்து வைத்தும் வீணே சாவதுதான் என்றால்; காவல் பூண்ட கணவனோடு - தன்னோடு இல்லறங் காத்தலை மேற்கொண்டிருந்த கணவன் இறந்துழி அவனோடு; சமத்தின் வேம் அவட்கும் - சுடுகாட்டின்கண் தீப்பாய்ந்து சாகுமொருத்திக்கும்; விழுக்குணம் ஆம் - மேன்மைப் பண்புண்டாகுமன்றோ? என்றான் என்க.

(வி - ம்.) இதுவும் புத்தனது பேதைமை கூறுகின்றது. ஆவது - உண்டாகும் பயன். அவத்தம் - வீண். சத்துவர் - போதி சத்துவர்: புத்தர் சால்பு-பலநற்குணங்களானும் நிறைவுடைமை. காவல்- அறங்காத்தல். சமம்-சமத்தீ: ஆகுபெயர். கணவனிறப்பினும் பின்னுமிருந்து பொறியடக்கி மேன்மை பெறுதற்கிடனிருத்தலின் மகளிர் கணவனோடு உடன்கட்டை ஏறுதல் வீண் செயல் என்பது ஆருகதர் கருத்தென்பது இச்செய்யுளால் பெற்றும். கொல், ஓ: அசைகள்.

இனி, புத்தன் தலையரிதன் முதலாயினவற்றால் தனக்கும் பிறர்க்கும் பயனில்லாமை எற்றாற் பெறுதுமெனின், தலையரிதன் முதலாயின

அருட்செயலன்மையின் செய்வானுக்கு அறமாகாது; என்னை? ஈதலாகிய அருட்குத் தாய் அன்பென்னுமறம் எனப்படுதலானும், இங்ஙனம் செய்பவன் இறந்துபடுதலின் பொருளும் இன்பமும் இலவாயினு; ஆகவே தனக்குச் சிறிதும் பயனில்லை என்பது பெற்றும் என்க.

இனி இவற்றைப் பெறுபவற்கும் பயனில்லை. என்னை? இவனரிந்த தலை அவன் கழுத்திலொட்டார்தாதலானும், தலையொழியவும் இவன்பால் வந்து தலை வேண்டுதலின், ஒழிந்த செயல்களும் தலையொழியவே செய்ய முடியுமாகலின் இவன்பால் இரத்தல் வீண் என்க.

இனி, இவன் தனக்கும் பிறர்க்கும் பயனின்றித் தலையரிந்து செத்தது எதனை யொக்குமெனின், ஒருவன் ஒரு பிக்குணியின்பாற் காமங்கொண்டு அவள் பிணிவாய்ப்பட்டு அது தீர்ந்து நீராடிய மகிழ்ச்சியாலே அவள் முன்றிலிலே தன் தலையரிந்து தூக்கினனும். அச்செயலையே ஒக்குமென்க.

என்னை?

"தனக்கும் பிறர்க்கும் பயனின்றிப் புத்தர்
எனைத்துத் துயரு முழத்தல்—கனப்பிணியி
னீங்கித்தன் கூத்தி குளித்தா ளெனவாதன்
றூங்கத் தலையரிந் தற்று"

என்பது முணர்க.

"மிக்கதனங்களை...........மானலூரே" என்பதனால் இவனது பயனில் கொடை முன்னரே கூறினும். அது கண்டு கொள்க. (கக)

உகக. சாந்தி யாகத் தரும முரைப்புழிக்
காந்தி பாலியைக் கண்டு கலகன்று
னேந்தி வெம்படை யாலெறிந் தாற்கிடம்
போந்து கொண்டதும் பொய்யினுட் பொய்யன்றே.

(இ - ள்.) சாந்தி ஆகத் தருமம் உரைப்புழி - அரசிமார் நெஞ்சம் அமைதியுறும்படி அறங்கூறுமிடத்தே; காந்திபாலியைக் கலகன் கண்டு - அறங்கூறுகின்ற துறவியாகிய காந்திபாலியைக் கலகன் என்னும் அரசன் கண்டு சினந்து; ஏந்தி வெம்படையால் எறிந்தாற்கு - தன் கையிலேந்திய வெவ்விய வாளால் எறிந்து கொன்றானை; இடம் - அவீசி என்னும் நரகம்; போந்து கொண்டதும் - அவ்விடத்தே தீப்பிழம்பாகி வந்து விழுங்கிற்று என்னுமிக் கதையும்; பொய்யினுள் பொய் அன்றே - பொய்யினுள் வைத்தும் முழுப்பொய்யேயன்றோ என்றாள்; என்க.

(வி - ம்.) இது பொய்யேயாகிய புத்தசாதகக் கதைகளுள் வைத்துப் பெரும் பொய் என்று கூறுகின்றது.

அரசன் தேவிமார் நெஞ்சம் சாந்தியாக என்க. காந்திபாலி என்னும் பெயரையுடைய ஒரு துறவி என்றவாறு. ஏந்தி வெம்படையால் எறிந்

தாற்கு என்றது-வெம்படையை ஏந்தி எறிந்தாற்கு என்றவாறு. எறிந்தாற்கு: உருபுமயக்கம். இடம் என்றது அவீசி என்னும் நரகத்தினை. போழ்ந்துகொண்டது என்பது பாடாயின் வாயங்காந்து விழுங்கியது என்க. முழுப்பொய் என்பாள், பொய்யினுட் பொய்யென்றாள்.

இனி, இதனுட் போந்த கதை வருமாறு: கலகனென்னு மரசன் தன் உவளகத்துரிமைத் தேவிமாரோடு காட்டகம் புக்குக் களிப்பவன், ஒரு தேவியின் மடியிற் சார்ந்து துயிலாநிற்ப, ஏனைத் தேவிமாரெல்லாம் போய்க் காந்தி பாலியென்னும் பௌத்தத்துறவியின்பால் அறங் கேட்புழி, துயிலுணர்ந்த அரசன் தேவிமார் எங்கே? என்று கேட்ப, மடிகொடுத்திருந்த தேவி "அவர்களெல்லோரும் ஒரு சாக்கியனோடே போனார்கள்" என அது கேட்ட அரசன் சினந்து சென்று காந்திபாலியை வாளாலெறிந்து கொன்றானாக; அத்தீவினை காரணமாக அவீசியென்னுங் கொடு நரகம் அவ்வழி வந்து தீப்பிழம்பினைக் கான்று கொண்டு புக்கு அவனை விழுங்கியது என்பதாம்.

இனி, இக்கதையிற் கூறப்படும் அவீசி நரகம் இடமாகையால் தன் னிலையினின்றும் புடைபெயர்ந்து வரமாட்டாது; கங்கைக் கரை காவிரிக் கரையில் வாராதாற் போல என்பது கருத்து. துடிதலோகமிவ்வழி வாராதாற் போல வெனினுமாம். அன்றியுமிந்தக் காந்தி பாலியென்பான் போதி சத்துவனன்றோ? அவன் முன் நரகம் வருதல் கூடுமோ? வரின்,

"முந்தியொரு பூமலர் முடித்துளதா யக்கால்
வெந்தநர கத்திடரை வீட்டுகென வந்த
நந்தவடி யிட்டவடி நாதனடி தன்மேற்
சிந்தை செய்மி னேதிலடி சிந்தியன்மி னென்றான்"

என்பதனால் புத்தன் காலிட்ட அடியின் கீழ் நிரையத் தீயவியு மென்ப தன்றே! அதனோடு முரணுமென்பதுபற்றிப் பொய்யினுட் பொய் என்றாள் என்க. (எ0).

௨௨0. யானை யுள்ளர சேங்குள தங்கெலாம்
வான நின்று வழிபடல் காண்டுமான்
மீனு மல்லவும் வேதனை யெய்துழித்
தான தாதற்று தாகதர் தன்மையோ.

(இ - ள்.) யானையுள் அரசு எங்குளது? அங்கு எலாம்-நல்லிலக்கணமமைந்த அரசயானை யாண்டு நின்றது அவ்விடமெல்லாம்; வானம் நின்று வழிபட்ல் காண்டுமால் - முகில் நிலைபெற்று நின்று திங்கள் மும்மாரி பெய்தல் என்னும் முறைப்படி பெய்தலைக் கண் கூடாகக் காண்கின்றோமல்லமோ?; மீனும் அல்லவும் வேதனை எய்துழி - புத்தன் மீனாய்ப் பிறந்துழி அந்த மீனும் ஏனை மீன்களும் பொய்கைநீர் வறந்தமையாலே துன்புறுகின்ற காலத்தே: (தான) அது ஆதல் - அம்மழை பொழிந்தமை; தாதகதர் தன்மையோ-புத்தருடைய தெய்வப்பண்பாலேயோ? பிறவாற்றாலுமாமென்றாள்; என்க.

(வி - ம்.) இது "புத்தன் மீனாகப்பிறந்துழிப் பொய்கைநீர் வறந்தமையாலே அம்மீனையுள்ளிட்ட மீனெல்லாந் துன்புற அப்புத்த மீன் உண்மை காரணமாக மழை பொழிந்து அவற்றின் துயரம் தீர்த்தது," என்னும் கதையும் பொய்க்கதையே என்கின்றது.

என்னை? நல்லிலக்கணமமைந்த அரசயானை நிற்கு மிடனெல்லாம் திங்கள் மும் மாரி பெய்யும் என்பது உலகுரை; அதற்கேற்பப் பெய்தலை யாம் காட்சியளவையானுங் காண்கின்றோமல்லமோ? புத்தமீன் முதலி யன நீரின்றித் துன்புற்றுழி ஆங்கு அத்தகைய அரசயானை சென்றமை யால் மழை பொழிந்ததாதலும் கூடும். இன்னோரன்ன பிற காரணங் களானும் மழை பெய்யலாமே? இதற்குப் புத்தனது தவவாற்றலே காரணம் என்பது பொருந்தாது என்றாள் என்பது கருத்தென்க. (எக)

உஉக. குரங்கு மாயவை கொல்லிய செல்வழி
இரங்கி யேயுயக் கொண்டது மென்றியாற்
குரங்கு நேர்குதி யாக்குரங் கெங்குள
மரங்கள் பாய்ந்திடு மாண்பின வல்லவோ.

(இ - ள்.) குரங்கும் ஆய் - ஏடி குண்டலகேசி நீ எங்கள் புத்தன் மன்னுயிரை உயக்கொள்ளும் பொருட்டுத் தானே குரங் காகவும் பிறந்து; அவை கொல்லிய செல்வழி - அக்குரங்கோடுட னுறையும் குரங்குகளை யெல்லாம் அரசன் பணியாளர் கொல்லு தற்குச் சென்ற பொழுது; இரங்கி உயக்கொண்டது என்றி - அப் புத்தனாகிய குரங்கு ஏனைக் குரங்குகளுக்கிரங்கி ஒருபாயத்தாலே அவற்றைக் கொலையுண்ணாதபடி செய்து காத்தருளியது என்று கூறுகின்றனை; குரங்கு நேர் குதியாகக் குரங்கு எங்குளது - குரங்கு களுள் வைத்து ஒரு குரங்கின் நீளத்தில் பாதி நீளம் குதியாத குரங்கு யாண்டுளது காண்; மரங்கள் பாய்ந்திடும் மாண்பின அல்லவோ - குரங்குகள் தாம் ஒரு மரத்தினின் றொருமரத்தின் நீளப் பாயுமியல்புடையன வல்லவோ; ஆதலால் இக் கதையும் பொய்யே காண்! என்றாள், என்க.

(வி - ம்.) குரங்குமாய் என்றது குரங்காகவும் பிறந்து என்ற வாறு. அவை - அக்குரங்குகளை, கொல்லிய - கொல்ல. கொண்டதும் என்புழி உம்மை இசைநிறை. நேர் - பாதி.

இதன்கண் வரும் கதை வருமாறு: புத்தன் குரங்காய்ப் பிறந்த காலத்துப் பசியால் வருந்துவது கண்டு இந்திரன் ஒருயாற்றங்கரையின் கண் ஒரு தேமாமரத்தைப் படைத்துக் கொடுப்ப, அக் குரங்குட்படக் குரங்குகள் எல்லாம் இம் மாப்பழமுண்டு செல்கின்ற காலத்து, நீருள் விழுந்ததொரு மாம்பழ மெடுத்தானொருவன் அரசனுக்குக் கொடுப்ப, அப் பழத்தின் சுவை யுணர்ந்த அவ்வரசனும் இம் மாமரம் யாண்டுள தென்றாராய்ந்தறிந்து அதன்கண் குரங்குகள் உளவாயின் அவற்றை யெல்லாம் கொன்றொழித்து அம் மரத்தினைக் காமின்! என்று பணி மாக்களை விடுத்தானாக; தம்மைக் கொல்லவருமவர் வரவுணர்ந்த புத்தக் குரங்கு அக் குரங்குகளை உய்யக் கொள்ளும் பொருட்டுத் தன்னிலை

யிலே ஒரு கொடி கட்டிப் பெருகுகின்ற அந்த யாற்றின் மறுகரைக்குப் பாய, அக் கொடி எட்டாது யாற்றிற் சிறிது ஒழிய முடிந்தமையால் எஞ்சிய நீளமும் அப் புத்தக் குரங்கு தன்னுடலை நீட்டி மறுகரைக் கண்ணதாகிய தொரு புதல் பற்றிக் கிடப்ப அக் குரங்குகளெல்லாம் ஒவ்வொன்றாக அக் கொடியாலும் இவன் முதுகாலும் ஏறிப்போய் உயிருய்ந்தன என்பது.

இனி, இதன்கண் அக் குரங்குகள் கொடியாலேறிப்போய் அவன் முதுகிலும் ஏறிப் போதல் வேண்டுமோ, அப் புத்தக் குரங்கின் பாதி நீளம் பாயாத குரங்குகளும் உண்டோ, ஆதலின் இதுவும் பொய் என்றாள் என்பது கருத்து. (எஉ)

(இதுவுமது)

உஉஉ. சீல நல்லவர் நீள்குவர் சேணெனிற்
கோல மில்குரங் காட்டிக் கோல் வார்களைக்
காலுங் கையு மெழற்கெனக் காண்கிலான்
வாலை நீட்டிக் கிடத்தறன் மாட்சியோ.

(இ - ள்.) சீலம் நல்லவர் நீள்குவர் சேணெனில் - ஏடீ குண்டலகேசி! நீ பத்துவகை யொழுக்கத்தாலே பெரிதும் நல்லவராய எம் புத்தனார் தமது இருத்தியாலே நெடுந்தொலை நீள்குவர் ஆதலின் அக் குரங்குகள் அத்துணைத் தொலை பாயமாட்டா என் பாயாயின்; கோலம் இல் குரங்கு ஆட்டிக் கொல்வார்களை - அழகற்ற அக் குரங்குகளைத் துன்புறுத்திக் கொல்லவந்த அரசன் பணியாக்களை; காலும் கையும் எழற்க என காண்கிலான் - தவ வாற்றல் மிக்க அப் புத்தன் இவர்கள் காலும் கையும் இயங்காதொழிக என்று கூறி அக் குரங்குகள் உய்ய வழிகாண்கிலாதவனாய்; வாலை நீட்டிக் கிடத்தல் மாட்சியோ - யாற்று வெள்ளத்திலே தன் வாலை நீட்டி வீழ்ந்து கிடத்தல் மாண்பாகுமோ! கூறுதி! என்றாள் என்க.

(வி - ம்.) சீலம் - தசசீலம். சீலம் நல்லவர் என்றது புத்தனரை. சேண் நீளுதற்குச் சீல நல்லவர் என்றது குறிப்பேதுவாய் நின்றது.

கோலம் - அழகு. ஆட்டுதல் - வருத்துதல். கொல்வார் - கொல்ல வந்த பணிமாக்கள். எழற்க - எழாதொழிக.

புத்தன், அக் குரங்குகளை உய்யக் கொள்ள வேண்டின் கொல்ல வந்தவர் கைகால்களை இயக்கமின்றிச் செய்யலாமே அங்ஙனம் செய்வதே அவனுக்கு மாண்பாகும். அங்ஙனமின்றி யாற்றில் வாலை நீட்டிக் கிடத்தல் பேதைமையேயாம் என்றிகழ்ந்த படியாம். (எங)

உஉங. தாய்க்கோன் றுன்றங்கு செங்குரு திப்புனல்
பேய்க்கோன் றீதல் பெருங்கொடை யென்பதை
வாய்க்கின் றுயினி மானுயர் மாசெலா
நாய்க்கென் றுலிது நல்லற மாங்கொலோ.

(இ - ள்.) தாய்க் கொன்றான் - ஏடி ஈன்ற வள்ளலோ ஈன்ற தாயைக் கொன்றவன்; தந்த செங்குருதிப் புனல் - அவன் ஈகின்ற பொருளோ வெனில் உடலிலே தங்குகின்ற சிவந்த குருதிநீர்; ஈதல் பேய்க்கு - அதனை வழங்குவது தானும் பேய்க் காம்; பெருங்கொடை என்பதை வாய்க்கின்றாய் - நீயே இந்நிகழ்ச்சி யின்கண் ஈவானியல்பும் ஈபொருளியல்பும் கொள்வானியல்பும் கருதாமல் இதனைப் பெரியதொரு வள்ளன்மை என்று கூறிப் பொருத்துகின்றனை, இனி - இது நல்லற மென்றபின்; மானுயர் மாசு எலாம் - மாந்தர் நாடோறும் கழிக்கின்ற மலங்களையெலாம்; நாய்க்கு என்றால் - இவற்றை யாங்கள நாய்கட்கு வழங்குகின்றோம் என்று கூறிக் கழித்தால்; இது நல் அறமாம் - இச் செயலும் நல்லறச் செயலே ஆகிவிடும் என்றார் என்க.

(வி - ம்.) புத்தன் தாயைக் கொன்றவன் ஆதலால் வள்ளல் ஆகுந் தகுதியுடையனல்லன் ஈவது குருதியாதலின் அஃதீ பொருளாந் தகுதி யுடையதன்று. ஏற்பானும் பேயாதலின் அதுவும் ஏற்குந் தகுதி யுடையதன்று. இங்ஙனம் மூன்றானும் தவறுடைய இச்செயல் வள்ளன்மை யாவதெங்ஙனம்? இது வள்ளன்மையாயின் மலங் கழிப்போர் இது நாய்க்கெனக் கழிப்பின் அதுவும் நல்லறமேயாகி விடுங் காண்! என்று எள்ளியபடியாம். இனி,

யாவனாயினும் யாவர்க்காயினும் யாதொன்றையுங் கொடுப்பதே கொடையெனின், உலகத்தில் யாவர்க்கும் கொடை வாய்த்துவிடும் என்பாள் "மானுயர் மாசெலாம் நாய்க் கென்றாலிது நல்லறமாம்" என்றாள் என்க. (௭௪)

அரசன் கூற்று

௨௨௪. யான்சே யும்பொரு ளென்றங்கோ ரேகாந்தன்
தான்செய் திட்டனன் சாதக கற்பங்கள்
மான்செய் நோக்கி மதிப்பொழி நீயெனக்
கோன்சொ ஞனிது குண்டல கேசிக்கே.

(இ - ள்.) குண்டலகேசிக்கு கோன் - நீலகேசியார் கூறிய குற்றங்கட்கு மறுமொழி கொடாமல் திகைத்திருந்த குண்டல கேசியை நோக்கி அவைத்தலைவனாகிய அரசன்; மான் செய்நோக்கி- மான்போலும் மருண்ட நோக்கினையுடையோய்!; சாதக கற்பங்கள்- உன்னால் எடுத்துக்காட்டப்பட்ட புத்தன் பிறப்புக்கதைகள் நீல கேசியார் காட்டி யாங்குப் பொருந்தாப் பொய்களே எனினும்; ஓர் ஏகாந்தன் - யாரோவொரு சாக்கியன்; யான் செயும் பொருள் என்று தான் செய்திட்டனன் - இத்தகைய கதைகள் பலரும் புனைதற் கரியன வென்றும் இவற்றை யான் செய்திட்டேன் என்றும் கூறின் உலகத்தார் தன்னை மதிப்பர் என்று கருதியே செய்தனன் போலும்; நீ மதிப்பு ஒழி - ஆதலால் இவற்றை நீ மெய்யென்று

துணிந்து மதித்தலை ஒழிவாயாக என்று; இது சொன்னன் - இம் முடிவினைக் கூறினன்; என்க.

(வி - ம்.) சொற்போர் நிகழ்த்தும் அவைக்கு நடுவனாக அரசன் இருந்தமையால் அவர்தம் மொழிகளை நன்கு கேட்டு அவையோர் சார்பாக அவன் தன் முடிவைக் கூறினன் என்க. இங்ஙனம் கூறவே நீ தோற்றனைகாண் எனக் குண்டலகேசிக்கு அறிவுறுத்தானுமாயிற்றென்க. யான் செயும் பொருள் என்றது பிறராற் செய்யப்படாத சிறப்புடையதாய் யான்மட்டுமே செய்யத் தகுந்த பொருள் என்பது படநின்றது. ஓர் ஏகாந்தன் என்றது, யாரோ ஒரு பௌத்தன் என்றவாறு. சாதககற்பங்கள் - பிறப்புக்கதைகள். இது - இந்த முடிவை. கோன் - அரசன். (எ௫)

அரசன் அவையோர்க்குக் கூறுதல்

வேறு

உஉ௫. முயலுரை யிதுவென மூடிக் கொண்டிருந்
தயலவர்க் குரைப்பவ ராத ரல்லரோ
புயலிருங் கூந்தலி பொருந்தச் சொல்லினள்
வியலவ ருரையொடு விரோத மில்லையே.

(இ - ள்.) முயல் உரை இது என - அரிதின் முயன்று செய்த நூல் இஃதென்று கருதி, மூடிக்கொண்டு - அதன்கண்ணுள்ள குற்றங்களை யெல்லாம் மறைத்துக்கொண்டு; இருந்து அயலவர்க்கு உரைப்பவர் - அவையின்கண்ணிருந்து பிறர்க்குக் கூறுபவர்; ஆதர் அல்லரோ - அறிவில்லாதாரே யல்லரோ?; புயல் இருங் கூந்தலி - முகில் போலும் கரிய கூந்தலையுடைய நீலகேசியார்; பொருந்தச் சொல்லினள் - அக் குற்றங்களை எடுத்து நம்மனோர்க்குப் பொருந்தும்படி விளக்கினர்; வியலவர் உரையொடு விரோதம் இல்லை - அவர் மொழி பெரியோர் மொழியொடு முரண் சிறிது மில்லை என்றான் என்க.

(வி - ம்.) அவையோர்க்குப் பொருந்தச் சொல்லினள் என்க. வியலவர் - பெரியோர். "வியல் என் கிளவி அகலப் பொருட்டே" (தொல்: உரி. ௬௬) என்பவாகலின் ஈண்டுப் பெருமையின் விரிவு குறித்து நின்றது. வியலவர் உரை யென்றது அளவை நூலை. நீலகேசியார் குற்றங்களை விளக்கிய மொழிகள் அளவை நூலொடு பெரிதும் பொருந்தின என்பது கருத்து. (எ௬)

அவையோர் வழிமொழிதலும், அரசன் ஆணையும்

உஉ௬. அரசிறை யிதுசோல வவையி னோர்களு
முரைசெறி வுடையன உரைத்த நீர்மையண்
முரைசோடு நெடுங்கொடி முழங்க நாட்டுக
விரைவொடு படுகென வேந்த னேயினன்.

(இ - ள்.) அரசு இறை இது சொல - அரசனாகிய அவைத் தலைவன் இம்முடிவினைக் கூறலும்; அவையினார்களும் - அவையிலிருந்த சான்றோர்களும்; உரைத்த நீர்மையள் - குற்றங்கூறிய பண்புடைய நீலகேசியார்; உரை செறிவுடையன - மொழிகள் மிகவும் பொருட் செறிவுடையனவே ஐயமில்லை! என்று வழிமொழிந்தாராக; வேந்தன் - அதுகேட்ட அரசனும்; முரைசொடு முழங்க நெடுங்கொடி நாட்டுக - மகிழ்ந்து நீலகேசியார் வெற்றிக்கு அறிகுறியாக முரசம் முழங்க நெடிய வெற்றிக் கொடியும் நாட்டுவீராக!; விரைவொடு படுக - இச்செயல்கள் விரைந்து செய்யப்படுவனவாக வென்று கட்டளையிட்டனன்; என்க.

(வி - ம்.) அரசனும் அவைத்தலைவனும் ஆகலின் அரசிறை என்றார். செறிவுடையன என்று வழிமொழிந்தனர் என அவாய் நிலையான் வருவித்துக் கொள்க. முரைசொடு: உருபு மயக்கம். முரசமுழங்க நெடுங்கொடி நாட்டுக என மாறுக. முரசம் நெடுங்கொடி இரண்டும் வெற்றியின் அறிகுறிகள். விரைவொடு படுக என்றது அரசன் ஆர்வத்தைப் புலப்படுத்து நின்றது. (௭)

நீலகேசி குண்டலகேசியை வினவுதல்

வேறு

உஉ௭. இருப்பதேன் னினியன்ன யிதுநமக் குரைத்தார்யார்
சுருக்கினைக் கடிதாகச் சொல்லெனக் கெனலோடும்
திருக்கிளர் மதிலுஞ்சைத் தென்றிசை யகனகரு
ளருக்கசந் திரனென்னு மவாச்சிய னெனச்சொன்னாள்.

(இ - ள்.) அன்னாய் இனி இருப்பது என் - அரசன் முடிவு கேட்ட நீலகேசி குண்டலகேசியை நோக்கி அம்மையாரே! இனி நீயிர் வாளாவிருப்பது என்கருதியோ?; இது நுமக்கு உரைத்தார் யார் - இப்பொய்யை நுமக்குச் செவியறிவுறுத்த ஆசிரியர்தாம் யாவரோ?; எனக்கு சுருக்கினை கடிது ஆகச்சொல் என்னலோடும் - எனக்குச் சுருக்கமாக விரைந்து சொல்வாயாக! என்று கூறலும்; திருக்கிளர் மதில் உஞ்சை தென் திசை அகன் நகருள் - செல்வமிக்க மதில் சூழ்ந்த உஞ்சைமா நகரத்தினுள் தென்றிசையினமைந்த அகன்ற நகரத்தின்கண் வாழ்கின்ற; அருக்க சந்திரன் என்னும் - அருக்க சந்திரன் என்னும் பெயரையுடைய; அவாச்சியன் - ஒரு பௌத்தத் துறவி; எனச் சொன்னாள் - அறிவுறுத்தினன் என்று கூறினள்; என்க.

(வி - ம்.) நுமக்கு என்றது, இகழ்ச்சி. உஞ்சை - உச்சயினி. உச்சயினி நகரில் தென்றிசை அகனகரில் வாழ்வோன் என்றவாறு. அகநகர் பாடமாயின் - நகரின் உட்பகுதி என்க. அவாச்சியன் - பௌத்தன். (௭அ)

### குண்டலகேசியை அலக்கழித்து வெளியேற்றுதல்

வேறு

உஎஅ. கட்டுரை பலசொல்லிக் காவல் நெடுங்கடை நாவலைமுன்
னட்டிவ ணகரிடை நகைசெய்து புகுந்தவிந் நன்னுதலை
வட்டிகோள் பறைகொட்டி வழுவுரை பலசொல்லி
[வாரலென்று
பெட்டன பலசெய்து பெருநகர் வாயிலைப் புறப்படுத்தார்.

(இ - ள்.) *கட்டுரை பல சொல்லி - அரசன் கட்டளைபெற்ற மாந்தர்கள் மறமொழி பலவற்றைப் பேசிக்கொண்டு; காவல் நெடுங்கடை - காவலமைந்த நெடிய அரண்மனை முற்றத்தே; நாவலை முன்னட்டு - நாவற்கிளையை முற்பட நாட்டி; நகர் இடை இவண் நகைசெய்து புகுந்த - நகரத்தூடே இங்குப் பிறரை எள்ளி நகைத்து வந்து புகுந்த; இ நன்னுதலை - இந்தக் குண்டலகேசியை; வட்டிகொள் பறைகொட்டி - அவள் தோல்வியை அறிவித்தற்குரிய உரத்த ஓசையையுடைய பறைகளை முழக்குவித்து; பல வழுவுரை சொல்லி - பற்பல வசைமொழிகள் கூறி வைது; வாரலென்று - இனி எம்மூர்க்கு வாராதே கொள்! என்று கட்டளையிட்டு; பெட்டன பல செய்து - தாம் தாம் விரும்பிய துன்பங்கள் பலவற்றையுஞ் செய்து; பெருநகர் வாயிலை புறப்படுத்தார் - பெரிய அந்நகர வாயிலுக்குப் புறத்தே கொடுபோய் விட்டனர்; என்க.*

(வி - ம்.) *கட்டுரை என்றது, எம்மோடு சொற்போர் நிகழ்த்துவீர் உளீராயின் வம்மின் என்பது போன்ற குண்டலகேசி வருங்காற் கூறிய மறவுரைகளை. நாவல் - நாவற்கிளை. வட்டிகொள் பறை - உரத்த வோசையையுடைய பறை. வழுவுரை-வசைமொழி. வாரல்- வாராதே கொள். பெட்டன - விரும்பியன; தாம் தாம் விரும்பியபடியெல்லாம் துன்புறுத்தி என்க.* (எக)

### அரசன் நீலகேசியைப் பாராட்டுதல்

உஉக. புனத்திடை நறுமலர்ப் பூங்கொடி
யன்னதோர் பொற்பினளாய்
எனைப்பல நூல்களு மியல்பினி
னறிபவ ளேதமில்லாள்
தனக்கினி யான்செயற் பாலது
தானென்னை யெனவுரைத்தான்
இனத்தகை யேற்றரி யிடியுரு
மேறெனு மிவற்றை யொப்பான்.

(இ - ள்.) *இனத் தகை ஏற்றரி இடியுரும் ஏறு எனும் இவற்றை ஒப்பான்-தன் கூட்டத்திலே அரசத் தகுதியுடைய*

தாகிய ஆண்சிங்கமும் இடிக்கின்ற இடியும் என்னும் இவற்றை ஆற்றலாலே ஒப்பவனுகிய அவ்வரசன் (முன்னிலைப்புறமொழியாக நீலகேசி கேட்பக் கூறுபவன்), புனத்திடை நறுமலர்ப் பூங்கொடி அன்னது ஓர் பொற்பினளாய் - காட்டின்கட் படர்ந்துள்ள நறு மணமுடையதொரு பூங்கொடி போன்றதோர் அழகுடையளுமாகி; இயல்பினின் எனைப் பல நூல்களும் அறிபவள் - பிறர் ஓதுவி யாமலே இயல்பாகவே மிகவும் பலவாகிய மெய்ந்நூல்களையும் பயின்றறியும் நுண்மாணுழைபுலமுடையவளும்; ஏதம் இல்லாள் - காமமுதலிய குற்றங்கள் சிறிதுமில்லாதவளும்; தனக்கு இனி யான் செயற்பாலதுதான் என்னை — ஆகிய இந்த நீலகேசிக்கு இனி யான் செய்யத்தகுந்த சிறப்புத்தான் யாதோ?; என உரைத்தான் - என்று கூறினன்; என்க.

(வி - ம்.) நீலகேசி இயல்பாகவே தலையாய சிறப்புக்களெல்லாம் உடையளாயிருக்கின்றாள். இவள் தகுதிக்கேற்பச் செய்யும் சிறப்பு இனி யாதுளது; என்று முகமன் மொழிந்தவாறும். பொற்பு – அழகு. எனைப் பல நூல் – எத்துணையும் பலவாகிய நூல். ஏதம் - குற்றம்; அவை காமமுதலியன. இடியுரும்: வினைத்தொகை. (அ0).

நீலகேசி கூற்று

உகூ0. ஆண்டகை அரசிறை அதுசோல்லக்
கேட்டவவ் வறத்தகையா
டண்டல னணிபிற புனைவெனு
நினைவிலன் றினையனைத்தும்
வேண்டல னிலனொடு விழுநிதி
யினையவும் விறற்றகையா
யீண்டினி யறநெறி யுறுகென
வேந்திழை யியம்பினளே.

(இ - ள்.) ஆண்தகை அரசு இறை அதுசொல்ல-ஆண்மைத் தன்மை மிக்க அவ்வேந்தர் வேந்தன் அம்முகமன் மொழிகளைக் கூறக்கேட்ட; அ அறத்தகையாள் ஏந்துஇழை-அந்த அறத்தாற் றகுதிமிக்கவளாகிய நீலகேசி; விறல் தகையாய் - அரசனை நோக்கி வெற்றியுடைய வேந்தே!; பிற அணி புனைவு எனும் நினைவு இலன் - 'மலர்மிசை நடந்தோன் மலரடி யல்லது என் தலைமிசை யுச்சி தான்அணி பெறு'தாகலின் யான் வேறு அணிகலன்கள் அணிதலைச் சிறிதும் கருதுவதிலேன் காண்!; தீண்டலன் - ஆதலால் அவற்றைத் தொடுதலுமிலேன், மேலும்; நிலன் விழுநிதி இனையவும தினை அனைத்தும் வேண்டலன் - நிலமும் சிறந்த பொன் முதலிய பொருளும் இன்னோரன்ன பிறவுமாகியவற்றைத் தினை யளவும் விரும்புகிலேன்காண்; ஈண்டு இனி அறநெறி உறுக - யான்

(வி - ம்.) பருக்கை-பருத்த கை. மால்-பெரிய; கரிய எனினுமாம். வேந்தரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. போதக - வருக. தருக்க நூலறிவின் உயர்ச்சியிலும் தன்னிகரில்லவன் எனினுமாம். (௨)

இதுவுமது

௨௬௪. போதி சத்துவர் புத்த ரெனப்படு
நீதி யிற்பெரி யாரன நீர்மையா
னோதி நூன்மும்மை யொப்ப வுணர்ந்தவன்
வாதி கட்கோர் வயப்புலி யேறனான்.

(இ - ள்.) போதி சத்துவர் புத்தர் எனப்படும் நீதியில் - அறிவில் உயர்ந்தவரே பின்பு புத்தராகத் தோன்றுதற்குரியார் என்று பௌத்தர்கள் கூறும் முறைமையாலே; பெரியார் அன - பெரியோராகிய புத்தர்களையே ஒத்த; நீர்மையான் - பண்புடையோனும்; நூல் மும்மை ஒப்ப ஓதி உணர்ந்தவன்-பிடக நூல் மூன்றனையும் ஐயந்திரிபற ஓதி உணர்ந்தவனும்; வாதிகட்கு வயப்புலி ஏறு அனான் - தன்னோடு சொற்போர் புரியுமெதிரிகளுக்கு வலிமை மிக்க ஏற்றைப் புலிபோல அச்சம் விளைப்பவனும்; என்க.

(வி - ம்.) போதி சத்துவர் அறிவிலுயர்ந்து பின்பு புத்தனாகத் தோன்றுதற் குரியவர். இதனை,

"ஆதி முதல்வன் போதி மூலத்து
நாத னானோன்" (மணிமே-௨௧. ௨௬-௨)

எனவரும் மணிமேகலையானு முணர்க. சத்துவர் என்பது வீரர் என்னும் பொருட்டு. போதி - அறிவு. போதிசத்துவர் புத்தர் எனப்படுவார் என்பது பௌத்தர் கூறு முறை. நூல் மும்மை - மூன்றுவகைப் பிடக நூல்கள் அவை முற்கூறப்பட்டன. வாதி - சொற்போர் புரியும் எதிரி. வாதிகளாகிய மான் கூட்டத்திற்குப் புலியேறு எனினுமாம். (௩)

இதுவுமது

௨௬௫. மாடமோங்கி மழைநுழைந் தின்குயில்
பாடு பூம்பொழிற் பாங்கரோர் பள்ளியுட்
பீட மேறிப் பெருந்தகை யார்க்கெலாம்
வீடு பேறும் வினையு முரைப்புழி.

(இ - ள்.) மாடம் ஓங்கி மழை நுழைந்து இன் குயில் பாடு - அத்தகைய சிறப்புடைய அவ்வருக்க சந்திரன்; மாடங்கள் உயர்ந்து முகில்கள் நுழைந்தியங்குகின்ற குயில்கள் இன்னிசை பாடா நின்ற தொரு; பூம்பொழில் பாங்கர் ஓர் பள்ளியுள் பீடம் ஏறி - மலர்ப் பொழிலின் பக்கத்தேயமைந்த தொரு பள்ளியினூடே ஒரு பீடத்தில்

ஒரு மணையில் ஏறி யமர்ந்து; பெருந்தகையார்க்கெலாம் - அறிவுப் பெருமையால் அறங்கேட்கும் தகுதியுடைய மாணவர்களுக் கெல்லாம்; வீடுபேறும் - புத்தசமயத்தார் கூறும் வீடுபேற்றிலக் கணமும்; வினையும் - வீடுபெறுவோர் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கமும்; உரைப்புழி - அறிவுறுத்திருக்கும் பொழுது என்க.

(வி - ம்.) மழைநுழைய இன்குயில் பாடும் என்க. பாங்கர்-பக்கம். பெருந்தகையார் - அறங்கேட்கும் சிறப்புடைய மாணவர். வினை - ஒழுக்கம். அவை சீலங்கள். (ரு)

நீலகேசியின் செயல்

உகூசு. சென்று தானெய்திச் சிற்பிடத் தாற்புக்குத்
துன்று நீண்மணித் தூணணிந் தெண்ணென
நின்று நீலவைம் பாற்பெய ராளுமங்
கொன்று பல்வகை யோத்துரை கேட்டனள்.

(இ - ள்.) நீல ஐம்பால் பெயராளும் - நீல நிறமிக்க கூந்தலாற் பெயர் பெற்ற நீலகேசிதானும்; சென்று தான் எய்தி - அப் பள்ளியின் பக்கத்தே சென்றெய்தி; சிற்பிடத்தால் புக்கு - அவர்க ளறியாமல் (கரவால்) அப்பள்ளியுள்ளும் புகுந்து; துன்று நீள் மணித் தூண் அணிந்து எண் என நின்று - செறிந்த நீண்ட அழகிய தூணைப் பொருந்தி அத்தூணிற் செதுக்கியதொரு தாராதேவிப்பாவை போல நின்று; அங்கு ஒன்று பல்வகை ஓத்துரை கேட்டனள் - அவ்விடத்திலே பொருந்திய பல்வேறு வகையான நூலுரைகளையும் கேட்டனள்; என்க.

(வி - ம்.) கேசி - கூந்தலையுடையாள். நீலகேசி என்பார் நீல ஐம்பால் பெயராள் என்றார். ஐம்பால் - கூந்தல்; கேசம். சிற்பிடம் - கரவு. அணிந்து - அருகிலெய்தி. எண் - தாராதேவி என்னும் பாவை. இதனைக் கந்திற்பாவை எனவும் கூறுப. தூண்மருங்குற்ற நீலகேசிக்குக் கந்திற்பாவை உவமை.

நீலகேசி சென்ற பொழுது அருக்கசந்திரன் கூறியவற்றைக் கேட்டலின் ஒன்று ஓத்துரை கேட்டனள் என்றார். ஓத்து - நூல். (௬)

உகூஎ. கொள்ளு மாறுந்தன் கோரகை யுட்கஞ்சி
மொள்ளு மாறு முதுகு நெளித்துண்டு
னள்ளு மாறு மணலெடுத் திட்டவை
மெள்ள மெள்ள விழுங்கு மவைகளும்.

(இ - ள்.) கொள்ளும் ஆறும் - அவ்வருக்கசந்திரன் அம் மாணவர்கட்கு, பௌத்தத் துறவியானவன் இல்லறத்தார் பாற் சென்று பொருள் முதலியன பெறுதற்குரிய வழியும்; தன் கோர

கையுள் கஞ்சி மொள்ளும் ஆறும் - தனது மண்டையில் அவர் வழங்குங் கஞ்சியைய முகந்துகொள்ளும் வழியும்; முதுகு நெளித்து உண்டு - அக் கஞ்சியைத் தன் முதுகை நெளித்துக்கொண்டு குடிக்கும் வழியும்; ஊன் அள்ளுமாறும் - அக்கஞ்சிக்கு வெஞ்சனமாக ஊனாலாய கறியை அள்ளித்தின்னும் வழியும்; அணல் எடுத்திட்டவை-தன் வாயிலே எடுத்துத் திணித்த அவ்வூனை; மெள்ள மெள்ள விழுங்கும் அவைகளும் - விக்கிக்கொள்ளாமல் மென்று மெள்ள மெள்ள விழுங்கும் வழிகளும் என்க.

(வி – ம்.) கொள்ளுதல்—உபாசகர் பாற்சென்று பொருள் உணவு முதலியன பெறுதல். கோரகை – கஞ்சியிரக்கும் மட்பாண்டம். முதுகு நெளித்துண்ணுதல்-வயிறு நிரம்பக் கஞ்சி குடித்தற் பொருட்டு என்க. இஃதிகழ்ச்சி. ஊன் – ஊனாலியன்ற வியஞ்சனம். அணல் - மேல்வாய். அணல் எடுத்து என்பதற்கு வாயைப் பிளந்து எனினுமாம். விக்குதல் முதலிய துன்பம் நேராமைப்பொருட்டு நன்கு மென்று மெல்லமெல்ல விழுங்க வேண்டும் என்றும் அறிவுறுத்தினன் என்பது கருத்து. (சு)

இதுவுமது

உகஅ. வழிக்கு மாறுந்தம் மண்டையி னுண்டுமேன்
ஒழிக்கு மாறுமஃ தூட்டு மவைகளும்
மழிக்கு மாறுந் தலைகளை மையிட்டு
விழிக்கு மாறும் வினைய விதியினால்.

(இ - ள்.) மண்டையின் உண்டு ஒழிக்கும் ஆறும்-இல்லறத்தார் இட்ட ஊனுணவைத் தன் மண்டையிலேற்று உண்டு அதனை ஒழிக்கின்ற முறையும்; வழிக்கும் ஆறும் - உணவு தீர்ந்தபின் மண்டையை வழித்துத் தின்னும் முறையும்; அஃது ஊட்டும் அவைகளும் - இல்லறத்தார் அவ்வுணவினைத் துறவியை உண்பிக்கு முறைகளும்; தலைகளை மழிக்குமாறும்-துறவிகள் தலைகளைச் சிரைக்கும் முறையும்; மையிட்டு விழிக்கும் ஆறும் - கண்களிலே மையெழுதி விழிக்கின்ற முறையுமாகிய இன்னோரன்ன முறைகள் பலவற்றையும்; வினைய விதியினால் - தம் வினைய பிடகம் என்னும் நூலிற் கூறப்பட்ட விதிப்படியே; என்க.

(வி - ம்.) மண்டை – இரத்தற்கலம். மன்: அசை. ஊட்டுதல் இல்லறத்தார்க்குரிய நெறி. இதனை,

"மனையகம் புகுந்து மணிமே கலைதான்
புனையா வோவியம் போல நிற்றலும்
தொழுது வலங்கொண்டு துயரறு கிளவியோ
டமுத சுரபியி னகன்சுரை நிறைதரப்

பாரக மடங்கலும் பசிப்பிணி யறுகென
ஆதிரை யிட்டனள் ஆருயிர் மருந்தென்''

எனவரும் மணிமேகலையானும் (கசு-கஉ0-௯) உணர்க.

மழித்தல் - சிரைத்தல். வினயவிதி-வினயபிடகமென்னும் நூலிற் கூறப்பட்ட விதி. (எ)

நீலகேசி பொதுவின் வினவுதல்

உஙகூ. இனைய வேசொல்லி யிட்ட தலையராய்
வினைய நூலை வியப்பெய்து வார்க்கெலா
மனைய தேநு மறநெறி யென்றனள்
முனைவன் றன்னெறி முன்ன முணர்ந்தவள்.

(இ - ள்.) இனையவே சொல்லி - இத்தகைய எளிய அறங்களையே அருக்கசந்திரன் கூறுகின்ற வளவிலே; இட்ட தலையராய் - வணங்கிய தலையினையுடையராய்; வினைய நூலை வியப்பெய்துவார்களை - அவ்விதிகளைக் கூறும் வினைய பிடகத்தின் அருமை பெருமைகளை நினைந்து பெரிதும் வியவாநின்ற அம்மாணவரைப் பொதுவாநோக்கி; முனைவன் தன் நெறி முன்னம் உணர்ந்தவள் - அருகக் கடவுள் திருவாய் மலர்ந்தருளிய நல்லறநெறிகளையெல்லாம் முனிச்சந்திர பட்டாரகன்பால் முன்னரே நன்கு கேட்டுணர்ந்தனளாகிய நீலகேசி; நும் அறநெறி அனையதே - ஆ! ஆ! நுங்கள் அறநெறி அத்துணைச் சிறப்புடையதேயோ? நன்று நன்று; என்றனள் - என்று அசதியாடினள்.

(வி - ம்.) இனையவே சொல்லி என்றது, இத்துணை எளிய நெறிகளையே சொல்லி என்பதுபடநின்றது. சொல்லி என்பதனைச் சொல்ல எனச் செயவெனச்சமாக்குக. இட்டதலை-வணங்கிய தலை. அனையதே-அத்துணைச் சிறப்புடையதோ. இஃதிகழ்ச்சி. (அ)

அருக்கசந்திரன் கூற்று

உசு0. அவ்வு ரையம ரானுய ராசனச்
செவ்வ ரைம்மிசைத் தீத்திரள் போல்பவ
னிவ்வு ரையிவ ணென்னெனச் சொல்லினுன்
றெவ்வ ரைத்திறல் வாட்டிய திண்மையான்.

(இ - ள்.) தெவ்வரைத் திறல் வாட்டிய திண்மையான் - பிற சமயக் கணக்கராகிய பகைவர்களோடு சொற்போர் புரிந்து அவர்தம் சொல்லாற்றலைக் கெடுத்த அறிவுத்திட்பமுடையவனும்; உயர் ஆசனச் செவ்வரை மிசைத் தீத்திரள் போல்பவன் - உயரிய பீட

னாகிய சிவந்த மலையின் உச்சியில் எரிகின்ற நெருப்புத்திரள் போன்றவனுமாகிய அவ்வருக்கசந்திரன்; அவ்வுரை அமரான்- அந்நீலகேசி கூறிய மொழியினை விரும்பாதவனாய்; இவண் இவ்வுரை என் எனச் சொல்லினன் - சினந்து இவ்வறங்கூறவையத்தே இத்தகைய மொழிகள் எழுதற்குக் காரணம் என்னையோ? என்று வினவினன் என்க.

(வி - ம்.) அவ்வுரை என்றது நும் அறநெறி அனையதோ? என்று நீலகேசி கூறியதனை. அம்மொழியில் இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றுதலாலே அருக்கசந்திரன் சினந்து வினவியபடியாம். இவண் என்றது சிறந்த அறங்கூறவையமாகிய இவ்விடத்தே என்பதுபட நின்றது.

அமரான் - விரும்பானாய். சினந்து வினவினன் என்பதனைத் தீத்திரள் போல்பவன் என்னும் உவமையானும் அடுத்துவரும் நீலகேசி கூற்றானும் பெறுதும். (௯)

நீலகேசி கூற்று

௨௭௩. வீரஞ் செய்து விழியல் வினையநூல்
பேர தஃதேல் பெரிது மழகிதே
யோரு மஃதோ ருறுவினை யென்பதைத்
தேரச் சொல்லுநின் றிண்பொரு ளென்றனள்.

(இ - ள்.) வீரஞ் செய்து விழியல் - அதுகேட்ட நீலகேசி, பெரியோய்! நீ என்னைச் சினந்து நின் மறங்காட்டி நோக்காதே கொள்! வினைய நூல் பேரது அஃதேல் - நீகூறிய அறங்களைக் கூறுவது வினைய பிடகம் என்னும் பெயரையுடையதாயின் அப் பெயர்; பெரிதும் அழகிதே - மிகவும் அழகுடையதேயாம்; ஒரும் அஃதோர் உறுவினை என்பதை - இனியான் இன்ற அந்நூல் ஒரு பொருந்திய நல்வினையுடைய தென்பதனை; நின் திண் பொருள்- அதன்கண் நீ கண்ட திட்பமான பொருளை; இன்று தேரச் சொல்லு என்றனள் - என்னெதிரே இன்று யான் தெளியும்படி சொல்லிக்காண்! என்று கூறினள் என்க.

(வி - ம்.) வீரம் - மறப்பண்பு. விழியல்: எதிர்மறை வியங்கோள். பெரிதும் அழகிதே என்றது இகழ்ச்சி. ஓர்தல் - நினைதல். உறுவினை- பொருந்து நல்லொழுக்கம். வினை - வினை விதிக்கும் நூல். (௧௦)

௨௭௪. வினைய தாகிய பெற்றி விரித்துநீ
தினையி னேதும் தெருட்டெனக் கென்னவே
அனைய வவ்விர தத்தோ டறிசல
மினைய கேளென் றெடுத்தன சொல்லுமே.

(இ - ள்.) நீ வினயது ஆகிய பெற்றி விரித்து - ஐய! நீ அந்நூல் நல்வினை கூறுவதாகிய தன்மையை விரித்துக்கூறி;

எனக்குத் தினையின் நேரும் தெருட்டு என்ன-எனக்கு ஒரு தினைத் துணையேனும் விளக்குக! என்று மீண்டும் கூறி; அனைய - அதன்கட் கூறப்படுவன; அவ்விரதத்தோடு அறிசலமும்-நல்விரத மல்லாதனவும் நெஞ்சறி வஞ்சக வொழுக்கங்களுமேயாகும்; இனைய கேள் என்று - அவை யங்ஙனமாதலை யான் கூறுமிவற்றைக் கேட் டுணர்வாயாக வென்று; எடுத்தன சொல்லும் - அவன் அறிவுரை களினின்றும் தான் எடுத்துக் கொண்டவற்றையே சொல்லுவான்; என்க.

(வி - ம்.) வினையது-ஒழுக்கங்கூறுவது. பெற்றி-தன்மை. நேரும்-அளவும். அவ்விரதம் - வரதமல்லாதது. அறிசலம்-நெஞ்சறி வஞ்சக வொழுக்கம். (௧௧)

நீலகேசி அவன் கூறியவற்றிற்குக் குற்றங்காட்டுதல்

௨௬௩. தன்னை யீந்ததும் தாரங்க ளீந்தது
மன்ன தன்பொருள் கேட்டறங் கொண்டவன்
மன்னு மில்லயன் மாந்தரைக் காணுமேற்
பின்னைச் செய்வன பேசலு மாகுமோ.

(இ - ள்.) தன்னை ஈந்ததும் தாரங்கள் ஈந்ததும் - சாக்கி ஞரே! நும் புத்தன் தன்னையே பிறர்க்கு வழங்கியதும், தன் மனைவி முதலாரைனரை வழங்கியதும் முதலாகிய; அன்னதன் பொருள் கேட்டு - அந்நூலின் கண்ணவாகிய இவ்வறங்களைக் கேட்டு; அறங் கொண்டவன்-அவ்வறங்களை மேற்கொண்ட பௌத்தன்; மன்னும் இல் - தான் வாழுகின்ற இல்லின்கண் தன்மனையாளை விரும்பி வருகின்ற; அயல் மாந்தரைக் காணுமேல் - ஏதின் மாக்களைக் காணுங்கால், பின்னைச் செய்வன பேசலும் ஆகுமோ - பின்னர் அவன் சினந்து செய்யுஞ் செயல்களைக் கூறவுங் கூடுமோ? என்றாள் என்க.

(வி - ம்.) புத்தன் தன்னை யீந்ததும் தாரங்கள் ஈந்ததும் என்க. அன்னதன்—அந்நூலின் கண்ணவாகிய. மன்னும் இல் — தான் நிலைத்து வாழும் இல். இல்லில் அயன் மாந்தரைக் காணுமேலென்றது இடக்கர டக்கல். தன் மனையில் தன் மனையாட்டியோடு அயலாடவன் இருத்தலைக் காணின் அவன் கொலை முதலிய கொடுவினை செய்யக் காண்குதுமன்றே வென்பான், பின்னைச் செய்வன பேசலுமாகுமோ! என்றாள்.

இனி, புத்தன் செய்தன யாவும் அறமே என்று தன்னெஞ்சிற் கொண்டாராயின், புத்தனார் தம்மைக் கொடுத்ததும் மனைவியைக் கொடுத்ததுங் கேட்டு அவரறங் கொண்ட பௌத்தன், தன்னில்லம் புகுந்த அயலாரை வெகுள்வானேன்? மனமுவந்து மனைவியை அவர்க் கீதலன்றோ அறமாவது? இஃதோரறிசலமன்றோ என்பது கருத்து.

இஃது அறிசலம்; அறமென்னும் கருத்துண்டாயின் கொடுக்க வேண்டும்; கொடாமையாற் றன்னெஞ்சறிவது பொய்த்தான். என்னை? அறமல்லாததனை அறம்போலக் கொண்டொழுகுதலான் என்க.

இனி, அஃதறமே என்னும் கருத்தாலே மனையாட்டியை ஏதிலார்க்கு வழங்கின் அச்செயல் விரதக்கேடாகும். என்னை? தன்னுடைய மனைவியைப் பிறர் நுகர வியைதலின், பிறன்மனை நுகர்விற்கும், மகளிரது கற்பழிவிற்கும் உடன்படுதலான் என்க. ஆடவர் பிறன்மனை நோக்காமையே அவர்க்கு விரதமும், மகளிர் பிற ஆடவரை நோக்காமையே அவர்க்கு விரதமும் ஆதலின், அவ்விரதங்கள் கெடுமாறுணர்க என்றவாறு. (௬௨)

## இதுவுமது

௨௪௪. காம மூரிற் கணிகைய ரோடன்ன
தூய்மை யுண்மையிற் றோற்றங் கரந்தவட்
சேம மாவகைச் செல்கமற் றென்பதும்
வாம நூலின் மறைபொரு ளல்லவோ.

(இ - ள்.) காமம் ஊரின் - பௌத்தத் துறவி யொருவன் தன்னெஞ்சத்தே காமங் காழ்கொள்ளுமிடத்தே; கணிகையரோடு - சேரிப்பரத்தையரோடே; அன்ன தூய்மை உண்மையின் - அவர்க்கேற்ற உட்டூய்மை தனக்குமிருத்தலாலே; தோற்றம் கரந்து - தன்னுடைய துவராடையைக் களைந்து வெள்ளாடை யணிந்து தன்னைப் பிறர் அறியாதபடி மறைத்துக்கொண்டு; அவண் - அவர் வாழுஞ் சேரியிலேயே; சேமமா வகைச் செல்க- தற்காப்பாகும் வகையினாலே சென்று அப்பிணியைத் தீர்த்துக்கொள்ளக்கடவன்; என்பதும் - என்று கூறுமுபாயமும்; வாம நூலின் மறைபொருள் அல்லவோ - புத்தனுர் நூலாகிய வினயபிடகத் தமைந்த மறைபொருள் அன்றோ? என்றாள்; என்க.

(வி - ம்.) ஊர்தல் - மிகுதல். அன்ன தூய்மை – அக்கணிகையர் விரும்புதற்கேற்ற தூய்மை. அஃதாவது அக்கணிகையர் போன்று பௌத்தத் துறவியும் பல் துடைத்தலும் வெற்றிலை தின்னலும் பல கால் குளித்தலும் உடைமையின் அக்கணிகையரால் விரும்பப்படும் தன்மையுடையனுகலின் என்றவாறு. தோற்றங் கரந்து செல்க என்றது, தனக்குரிய துவராடையைப் பள்ளியுள் இட்டுவைத்து வேறோராடையுடுத்துப் போர்த்துப் பிறர் தம்மையறியாதபடி செல்க! என்றவாறு. சேமமா வகை என்புழிச் சேமமாகும் எனல் வேண்டுஞ் சொல்லின் ஆக்கச்சொல் ஈறு செய்யுள் விகாரத்தால் தொக்கது. சேமம் - பாதுகாப்பு. பாதுகாப்பாவது - தன்னை முன்பறிந்த பரத்தையர்பாற் செல்லாமல் புதிய பரத்தையர்பாற் செல்க என்றவாறு. வாமநூல் என்றது, ஈண்டு வினயபிடக நூலை.

இவ்வாறு செய்தற்பொருட்டே அந்நூல் முற்படவே துறவிகட்குப் பற்றுடைத்தல் வெற்றிலை தின்றல், குளித்தல் முதலிய செயல்களையும்

விதிக்கின்றது என்றும், துவராடை போர்ப்பதும் உடலித் ரேன்றும் காமவேறுபாடுகளை மறைத்தற்கே என்றும் கூறி இவையெல்லாம் அறிசலமும் நோன்பழிவுமாம் என்றாளாயிற்றென்க.

இனி, துவராடை போர்ப்பது நடுநாட்டினர் வழக்கமன்றோ? இந் நாட்டில் மூத்தார் முன்னிலையோர் போர்வை வாங்குதல் போல: என்னை?

"மூத்தார்முன் மத்தியத்தார் போற்போர்வை போர்த்திட்டான்
வாய்த்திரா வகைவேண்டித் துவர்துன்னம் வகுத்திட்டான்"

என்பதாகலின் எனின்; அஃதுமோரறிசல மொழியேயாம். தான் தலைவனாகலின் பிறர்க்கு ஆசாரஞ்செய்வனோ? தனக்கன்றே ஒழிந்தார் ஆசாரஞ் செய்தல் வேண்டும் என்பது. அன்றெனில் புத்தத்தன்மை பெற்றிருந்தும் தன் ஞான முதலியவற்றைத் தொழல் வேண்டானோ வென்பது. (கஉ)

இதுவுமது

உசஙு. சிங்க தத்த ரெனப்படுந் தேரனோர்
சங்க போதியி லாள்கட் டயாச்செய
விங்கி தென்னென வேழாய் தவசிக்
கெங்கெங் காமி லெனவுரைத் தானரோ.

(இ - ள்.) சிங்க தத்தர் எனப்படும் தேரனோர் - ஐய! சிங்க தத்தன் என்னும் பெயரையுடைய பௌத்தத் துறவி ஒருவன்; சங்க போதியிலாள் கண் - சங்கத்துப் போதிமரத்தின்கீழ் நின்ற பிக்குணியைக் கண்டு காமுற்று; தயாச் செயப்புக - அவளைக் கலவி செய்யப் புகும்பொழுது; இங்கு இது என் என - பேதையாகிய அவளும் மருண்டு அடிகேள்! தூயவிப்பள்ளியிடத்தே தாங்கள் இச்செயல் செய்யத் துணிந்ததென்னையோ? என்று வினவ; ஏழாய்! - பெண்ணே!; தவசிகட்கு எங்கு எங்கு ஆம் இல் என உரைத்தான் - துறவிகளுக்கு எவ்விடத்தே இச்செயல் செய்யலாம் எங்குச் செய்தல் கூடாது என்னும் விதியில்லைகாண்; எற்றாலெனின்? அவர்க்கு இக்கலவி கிடைப்பது அரிதாகலின் என்று கூறினன். இதுவும் வினயபிடகத்தே கூறப்படும் கதையன்றோ? ஆகவே இதுவும் ஓரறிசலமேகாண் என்றாள் என்க.

(வி - ம்.) தேரனோர் - பௌத்தத் துறவியார்; இஃதிகழ்ச்சி. போதியிலாள் - போதியின் கீழ் நின்றவள். போதி - புத்த சமயத்தினரால் தெய்வமாக வணங்கப்படுதலின், தெய்வத்தின் முன் இச்செயல் செய்தல் அடிகளாராகிய தங்கட்கு நேர்மையோ? என்பாள் 'இங்கிது என்' என்று வினவினள். தயாச்செய்தல்: இடக்கரடக்கு. எங்கெங்காம், என்றது எவ்வெவ்விடத்தும் ஆகும் என்றவாறு. இல் என்றது, இங்கு ஆகும் இங்கு ஆகாது என்னும் விதிகள் இல்லை என்றவாறு. இதுவும் அறிசலமும் அவ்விரதமுமாம் என்பது குறிப்பு. (கச)

இதுவுமது

உ௬௬. யாது மில்லை யுயிரென் றறநெறி
யோதி னைவ் வுயிரிலி தன்னொடு
வேத னைதணிப் பான்வினை வீட்டிற்கும்
சாத னைநிற்குஞ் சத்துவ னாமென்றீர்.

(இ - ள்.) அவ் வுயிரிலி தன்னொடு வேதனை தணிப்பான் - புன்றலை மாகனார் என்னுமொரு துறவி காமமீக் கூர்தலாலே ஒரு பிணத்தைக் கண்டு அதனைப் புணர்ந்து அத்துன்பத்தைத் தணிப்பவன்; யாதும் உயிர் இல்லை என்று அறநெறி ஓதினன் - தன்னைக் கண்டு இச்செயல் தகுமோ? என்று வினவிய துறவியர்க்குத் தகும் தகும் எப்பொருளும் உயிரில்லாதனவே என்பது தானே நம்புத்தனார் அறிவுறுத்த அறநெறி ஆதலால் இது தகும் என்று கூறினன்; வினைவீட்டிற்கும் சாதனை நிற்கும் சத்துவன் ஆம் என்றீர் - அத்தகைய தீவினையாளனையும் நீவிர் தீவினை யொழிதற்குரிய தவவொழுக்கமுடைய சத்துவன் ஆவன் என்றன்றோ கூறுகின்றீர்! நன்று நன்று நும்மறமிருந்தவாறு என்றாள் என்க.

(வி - ம்.) இதுவும் வினயபிடகம் கூறுமொரு கதை யென்க. அது வருமாறு : புன்றலைமாகனார் என்பாரொரு போதிசத்துவர் ஒருவருமறி, யாமல் இரவின்கண் வெள்ளாடைபோர்த்துப் போய் மகளிரை யாண்டுந் தலைப்படாமல் மீள்பவர் ஓரில்லத்துப் புறந்திண்ணையில் போற்றுவாரின்றி நோய்கொண்டு கிடந்திறந்தாளைக் கண்டு புணராநிற்ப; அவ்வாறே முன்பே போய்ப் பிணமென்றறிந்து பின்னவ்வழிச் சென்ற சங்கத்தார், ஐய! இது பிணமன்றோ? என்று வினவ, பேதையீர்? யாம் ''சர்வம் அநாத்மகம்'' என்று பாவிப்பதறியீரோ? இனியேனு மறிந்து கொள்ளுதிர்! என்று அறிவுறுத்தார் என்பதாம்.

வினை வீட்டிற்கும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. சாதனை - தவமேற் கொண்டிருத்தல். இதுவும் அறிசலமும் அவ்விரதமும் ஆமென்பது குறிப்பு. (௬௰)

உ௬௭. சித்த மோடிக் கலங்கித் திரியாத
நத்தம் பெற்றது நற்றவ மேற்கொண்டான்
பத்தின் மேலும் பழிசெய்யு மேற்பள்ளி
வத்தன கண்டீர் வழக்கின்கட் கூரியீர்.

(இ - ள்.) வழக்கின்கட் கூரியீர்! - உலகவழக்கும் நூல் வழக்கும் ஆகிய இருவகை வழக்கறிவினும் மிக்க ஆசிரியப் பெருந் தகையீர் கேண்மின்!; சித்தம் ஓடிக் கலங்கித் திரியாத - மனம் புலன்களின்பால் ஓடித் திரியாமைக்குக் காரணமான; நல்தவம் மேல் கொண்டான் - நல்ல தவவொழுக்கத்தை மேற்கொண்ட

பௌத்தத் துறவியொருவன் காமங்காழ் கொண்டவிடத்தே; நத்தம் பெற்றது - அது தீர்த்தற்கேற்ற இரவினைப் பெற்ற பொழுது; பத்தின் மேலும் பழிசெய்யுமேல் - துறவியர் காமமாடித் தீர்த்தற்கென வரையறை செய்யப்பட்ட பத்திடத்திலேயன்றி வேறிடத்திலே காமப்புணர்ச்சி செய்வானாயின்; பள்ளி வத்தன் கண்டீர் - அவன் பள்ளியிற் புகப்பெறாத குற்றம் புரிந்தவனாவன் என்பதன்றோ நுங்கள் வினயபிடக விதி, இதனையும் நீயிர் கண்டிருப்பீரல்லிரோ? என்றாள் என்க.

(வி - ம்.) திரியாமைக்குக் காரணமான நற்றவம் என்க. நத்தம் - இரவு. ''விருத்தர் பாலரானவர்கள் நத்த போசனங்கள் பண்ண'' (ஏகாதசி. காலநிர்ணய. ௫௪) என்புழியும் அஃதப் பொருட்டாதலுணர்க. பெற்றது - பெற்றபொழுது. பத்து-துறவியர் புணர்ச்சி செய்தற்கியன்ற பத்திடங்கள். அவை உ௫௪ ஆஞ்செய்யுளிற் கூறப்படும், ஆண்டுக் காண்க. பழி என்றது - காமப்புணர்ச்சியை. பத்திடத்தும் காமமாடலாம் எஞ்சிய இடத்திற் காமமாடின் குற்றம் என்பது எத்துணைப் பேதைமை! இவையும் அறிசலமும் அவ்விரதமுமாமல்லவோ? என்றவாறு.

பள்ளி வத்தன் - பள்ளியில் புகப்படாதென்று விலக்கப்படுபவன். இவ்வரையறை இருவகை வழக்கிற்கும் பொருந்துமோ கூறுதிர் என்பாள்: வழக்கின்கட் கூறியீர் என்றாள். (௧௯)

இதுவுமது

உ௫அ. போதி யாருரு வெய்திய புற்கலர்
வேதி யாற்கிடந் தாருள ராயினன்
ஞாதி யாரென நாட்டிய கூட்டமும்
ஓதி வைத்ததொன் றுண்மை யுணர்த்துமால்.

(இ - ள்.) போதியார் உருஎய்திய புற்கலர் - புத்தர் வேடங் கொண்ட துறவியருள் வைத்து; வேதியால் கிடந்தார் உளராயினன்-காமப்பிணியால் துன்புற்றுக் கிடப்போர் உளராயவிடத்தே; ஞாதியார் என - அத்துன்பத்தைத் தீர்த்துக் கொள்ளற்கிடமானவர் புதிய பிக்குணிமார் என்றுகூறி; நாட்டிய கூட்டமும் - விதித்துவைக்கப்பட்டதொரு புணர்ச்சியும்; ஒன்று ஓதிவைத்தது உண்மையும் - ஒருவிதி கூறிவைக்கப்பட்டிருத்தலையும்; உணர்த்தும் - அவ்வினயபிடக நூலே அறிவிக்குமே என்றாள் என்க.

(வி - ம்.) வினயபிடக நூலின்கண் புத்த சங்கத்துறவோர் காமங் கொண்டு துன்புறின் புதுவதாகத் துறவு பூண்டு சங்கத்திற் சேர்ந்த பிக்குணிமாரைச் சேர்ந்து அத்துன்பந்தீர்த்துக் கொள்ளக்கடவர் என ஒரு விதியுளது என்பதாம். இதுவும் அறிசலமும் அவ்விரதமுமாம் என்பது குறிப்பு.

ஞாதி - பிக்குணி. இதனை விளக்குமொரு கதை வருமாறு: புதிதாகத் தவம்பட்ட ஒரு பிக்குணியாரை அக்குழுவிலுள்ள சங்கத்தார் ஒருவர் புணர்ச்சிக் கழைப்ப, அப்பிக்குணியார் பேதைமையாலே, "அடிகேள்! கொலை களவு கள் காமம் ஆகாவென்றன்றே கூறுப!" என மறுத்தாராக; அதுகேட்ட அத்துறவி சொல்லுவார் "நீ வினய பிடகத்து மெய்ம்மை யறிந்திலை போலும், அந்நூல் கூறுவது கேள்!, ஒழுக்கந்தான் உலகவிலக்கும் அறிவுவிலக்கும் என்று இருவகைப்படும்; அவற்றுள் உலக விலக்காவது, உலகியலின் பொருட்டு உலகத்தார் தவிர்ந்தது தவிர்தலாம், அறிவு விலக்காவது, நம் புத்தர் பெருமான் தமது கடவுளறிவாலே குற்றமுண்டென்று கடிந்தன கடிதலாம். அவற்றுள் கொலை களவு கட்காமம் பொய் யென்பன உலகவிலக்கியற் குற்றங்களாம். என்னை?

"கொலைபெற வெல்லாரு நீத்தன களைந்தனவும்
தலைவரு மிழுக்கெனத் தவிர்ந்தன வு மவையென்று
ஸிலைபெற வெல்லாரு நீத்தனயா வென்றுள்
கொலைகளவு கட்காமம் பொய்யெனக் கூறினன்'

என்பவாகலின் காமங் குற்றமுடைத்தோ? அன்றியும் எட்காய் நீளம் காமம் ஆமென்பதும் உண்டன்றே? அன்றியும் மந்திரயானம் மகாயானங்களுட் கள்ளுண்ட சங்கத்தார் வீணிருப்பரோ? என்றிவை முதலாயின காட்டித் தேற்றி, பின்னையும் பொருள்களெல்லாங் கணந்தோறுங் கெடுகின்றனவாதலின் காமமாடினனும் அக்கணத்திலே முழுதுறக் கெடுவனல்லனோ? கெடுதலின் அவன் வினையாற் பற்றப்படுபவனாதலும், அதன் பயனை நுகர்பவனும் ஆதலுண்டோ? அக்கொள்கை உண்டுமாம் இல்லையுமாம் என்னும் பலமுடிவுடைய சமயத்தினர்க்கன்றே பொருந்துவதாம். கொலை முதலாயின மெய்ம்மை வகையாற் குற்றமில்லாமையினலன்றே உலகவிலக்கென உலகியலொழுக்காற் கொள்ளப்பட்டன; என்றிவை முதலாயின கூறி அவளைக் கூடினர்; என்பதாம். இதுவும் வினயபிடகத்தாற் கூறப்பட்டது. (௪௭)

௨௪௯. ஆரம் பிச்சி யலிவிலங் கவ்வுருச்
சீரிற் கோத்தாள் கணிகை தெருண்டாள்பெண்
ஒரு மில்லா ளுயிரிலி யூமையுந்
தார மாக்கொஃடி ரென்றல் சலமதோ.

(இ - ள்.) ஆரம்பிச்சி அலிவிலங்கு அவ்வுரு - துறவோரே நுமக்குக் காமங்காழ்கொள்ளின், புதிதாகப் பிக்குணியானவளும் பேடியும் விலங்கும் அப்பெண்ணுருவமும்; சீரிற்கு ஒத்தாள் - காமமாடுதற்கேற்ற பேதைப் பருவத்தினளும்; கணிகை - பரத்தையும்; தெருண்டாள் பெண் - நம்மறந்தெளிந்த உபாசகப் பெண்ணும், ஒரும் இல்லாள் - ஒருத்தருமில்லாதவளும்; உயிரிலி - உயிரற்ற பிணமும்; ஊமையும் - ஊமைப் பெண்டிருமாகிய இப்பத்துப் பெயருள் ஒருவரை; தாரமா கொள்கிர் - மனைவிபோற் பாவித்து அவர்பால் நுங்காமப் பிணியைத் தீர்த்துக் கொள்ளக்

கடவீர்!; என்றல் சலமதோ - என்று கூறும் உபாயம் அறிசலமே யன்றோ? என்றாள் என்க.

(வி - ம்.) ஆரம்பிச்சி-தவந்தொடங்கும் புதிய பிக்குணி. அவ்வுரு என்றது பெண்ணுருக்கொண்ட யாதாயினும் என்றவாறு. சீரிற் கொத்தாள் என்றது காமஞ்சாலாவிளமைப் பருவத்தாளை. ஓருமில்லாள்-ஆதரிப்பாரில்லாதவள். உயிரிலி என்றது இடக்கரடக்கு. தாரம்-மனைவி. கொள்திர் – கொண்டீர் என்றுமாயிற்று. சலமதே - என்புழி, அது: பகுதிப்பொருளது. ஏகாரம்: தேற்றம். சலம்—அறிசலம். ஆரம்பிச்சி என்பதற்கு உவட்டாச்சி என்பது பழையவுரை; இதனை ஆராய்ந்து கொள்க. (௧௮)

உ௫௦. பிறந்த வில்லினுள் வாழ்க்கை பிழைப்பெனு
மறங்கொண் டான்கொண் டவாச்சிய வேடத்தாற்
சிறந்த வல்லன சிங்கின வெங்கணுந்
துறந்த வான்பொருள் சொல்லவும் வல்லையோ.

(இ - ள்.) பிறந்த இல்லினுள் வாழ்க்கை பிழைப்பு எனும் - ஐய! ஒருவன் தான் பிறந்த வீட்டிலேயே இருந்து மனைவி மக்களுடன் வாழ்கின்ற வாழ்க்கை தவறான வாழ்க்கை என்று கூறும்; அறங்கொண்டான்-புத்தர் அறத்தை உணர்ந்தவனாய்; கொண்ட அவாச்சிய வேடத்தால் - அவ்வறத்திற்கேற்ப மேற்கொண்ட பௌத்தத் துறவி வேடத்தினாலே; எங்கணும் சிறந்த அல்லன சிங்கின - அவன் சென்றவிடமெல்லாம் சிறப்பல்லாதனவாகிய வீண்பொருள்களே அவனைப் பின்னிக்கொண்டன; துறந்த வான் பொருள் சொல்லவும் வல்லையோ - அவ்வாறன்றி அவன் துறந்துவிட்ட சிறந்த பொருள்கள் இவை என்று நீ சொல்லிக்காட்டவும் வல்லையோ? என்றாள் என்க.

(வி - ம்.) வாழ்க்கை என்றது, மனைவிமக்களுடன் வாழும் வாழ்க்கை என்பதுபடநின்றது. அறம்—புத்தரறம். அவாச்சியவேடம்-பௌத்தத் துறவிக்கோலம். சிறந்த அல்லன சிங்கின என்பது – அவனில்லறத்திலிருந்தபொழுது சிறப்பான மனைவி மக்களைப் பற்றி வாழ்ந்தான்; துறந்த பின்னரோ பொல்லாதன பல அவனைப் பற்றிக் கொண்டன என்பது தோன்ற நின்றது. சிங்கின - சிக்கின; மெலித்தல் விகாரம்.

சிறந்தவல்லன சிக்கலாவது – எட்டுத் துவராடைவேண்டும்; அன்றியும் கிளிக்கத்தியே, கத்தரிகையே, சுண்ணும்புச் செப்பே; வெற்றிலைப் பெட்டியே, பாக்குப்பையே, பல்லுத்துடைக்கப் பாளை முதலாயினவே, தலைவழிக்கக் கத்தியே, தீட்டுக்கல்லே, குடையே, செருப்பே, மண்டையே, கெண்டியே, இவற்றின் உறைகளே, சுழற்றியே (காது குடையுமொரு கருவி), தோலே, தண்ணீர்க் கொப்பே என்றிவை முதலாயின தேடிக்கோடல் என்க. இவற்றைத் தேடுதலினும் பாதுகாத்தலினும் தீவினையும் பழியும் துன்பமும் கணக்கிலவன்றே? இவையெல்லாம் அவனைப் பின்னிக்கொண்டன என்றவாறு. (௧௯)

## நீலகேசி புத்தசமயத்தாரொழுக்கத்தைப் பழித்தல்

௨௬௧. உரைப்ப பேரரு ளுண்பன மீனொடூன்
றிரைப்ப மெல்லணை செய்வ விழுத்தவம்
கரைப்ப தீவினை கண்டது சூனியம்
புரைப்பின் மார்க்கம் பொருத்த முடைத்தரோ.

(இ - ள்.) உரைப்ப பேரருள் - ஐய! நீவிர் வாய்மொழியக் கூறுவனவோ சிறந்த அருளறமாம்; உண்பன மீனொடு ஊன் - ஆறல் நீயிர் தின்பனவோ மீன்களும் ஊன்களுமேயாம்; திரைப்ப மெல் அணை - நீயிர் படுத்தற்குச் சுருட்டப்படுவனவோ மெல்லிய பஞ்சணைகளே; செய்வ விழுத்தவம் - ஆறல் நீயிர் செய்யும் செயல்களோ சிறந்த தவச் செயல்களாகும்; கரைப்ப தீவினை - இவற்றால் அழிக்கப்படுவனவோ தீவினைகளாம்; கண்டது - வினையழிந்த பின் நீயிர் கண்ட வீடுபேறு; சூனியம் - வெறும் பாழேயாம்; புரைப்பு இல் மார்க்கம் - அருக்கசந்திர முனிவரே! நுமது குற்றமற்ற சமயநெறி; பொருத்தம் உடைத்து - மிகமிக அறிவுக்குப் பொருத்தமானதே, நன்று! நன்று! என்றாள் என்க.

(வி - ம்.) "அருளாட்சி யாங்கில்லை ஊன்றின்பவர்க்கு" என்னும் பொன்மொழியை நீயிர் கேட்டுமறிந்திலிரோ வென்பாள், உரைப்ப பேரருள் உண்பன மீனொடு ஊன் என்றாள். "உற்றநோய் நோன்றலே தவத்தின் உரு" எனவும், "சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ் சுடச் சுட நோற்கிற்பவர்க்கு" எனவும் வரும் பொன்மொழிகளைக் கேட்டிலிரோ என்பாள் செய்வதவம்; திரைப்ப மெல்லணை; என்றாள்.

தவத்தால் இருள்சேர் இருவினையும் கரைந்த பின்னர், நீயிர் எய்தும் வீடோ வெறும்பாழ்!; இதற்கோ இத்துணை ஆரவாரம்! என்பது கருத்து. புரைப்பு - குற்றம். பொருத்தமுடைத்தென்றது இகழ்ச்சி.

சூனியம் காண்டலாவது - எல்லாப் பொருளும் இல்பொருள் என்பது. பௌத்தர்து மதம்: விஞ்ஞானத்வைதம் கூறும் அதுவும் விஞ்ஞான மொழிய ஒழிந்தன பாழ் என்று கூறும்; அன்றியும், பொருள் கணந்தொறும் தோன்றியழிவனவாதலால் ஓர் உள்ளம் தோன்றிய காலத்தே முன்புள்ளன கேடுறுதலானும் மேலுள்ளன பிறவாமையானும் பாழேயாயின என்க. கண்ட உள்ளந்தானும், அறிவற்ற பொருளாகிய உடம்பிலே பிறவாதன்றே; பிறக்கின் அஃது **உலோகாயதன்மதமாம்.** இந்த உள்ளத்திற்கு முதலாகிய மெய்ப்பொருளாகிய உயிரும் இல்பொருள் எனப்படுதலால் உள்ளம் என்பதே ஒன்றில்லையாய் வெறும் பாழாயிற்று என்றவாறு.

இனி, பொருள்கள் கணத்திற்றோன்றியழிவன எனப்படுதலான் வினைகளைச் செய்தலும் செய்தவனே அவற்றின் பயனை நுகர்தலும் இன்மையில் இம்மை மறுமைகளும் இல்லையாம். இவ்வாறே ஆராய்ந்து காட்ட நுங்கள் கொள்கை வெறும்பாழிலேயே முடியும் என்றாளுமாயிற்று என்க. (௨0)

வேறு

உ௩உ. எல்லா மசுசியு மேன்ப வனவா
லல்லா லழுக்குற் றவனடிக் கேத்தலர்
சொல்லார் சுகமுஞ் சுகத னவனென்று
பல்லார் வருத்தம் பழுதெனப் பண்ணுப.

(இ - ள்.) எல்லாம் அசுசி என்ப - ஐய! நும்மனோர் எல்லாப் பொருள்களும் தூய்மையற்றனவே என்றும் மொழிவர், ஆயின் மலர் முதலியனவும் தூய்மையற்றனவல்லவோ; அனவால் அல்லால் - அம் மலர் முதலியவற்றாலேயே வழிபாடு செய்வ தல்லது, அவற்றைப்போலவே தூய்மையற்ற; அழுக்குற்று - மல முதலியவற்றைக் கொண்டு: அவன் அடி ஏத்தலர் - அப் புத் தனுடைய அடிகளை வழிபடுகின்றிலர்; சுகமும் சொல்லார் - எல்லாம் துன்பமே என்று சொல்லுவதல்லது இன்பம் உண் டென்றுஞ் சொல்லார்; அவன் சுகதன் என்று - அப் புத்தனை இன்பமுடையோன் என்றும் சொல்லுவர்; பல்லார் வருத்தம் பழுது எனப் பண்ணுவ - எம்மனோர் பலரும் நோன்பால் வருந்தும் வருத்தம் பழுதாம் என்று இகழ்ச்சியும் செய்வர். இவை ஒன்றற் கொன்று முரண்படவில்லையோ? என்றாள் என்க.

(வி - ம்.) எல்லாப் பொருளும் தூய்மையற்றனவும் துன்பந் தருவனவுமேயாம் என்பது பௌத்தர் கொள்கை.

எனவே தூய்மையில்லாமையில் மலரும் மலமும் ஒரு தன்மை யனவே யாயின் மலரிட்டு வழிபாடு செய்வானேன்? மலமிட்டும் வழிபடலாமே? இன்பமே இல்லையாயின் புத்தனை இன்பமுடையோன் என்னும் பொருளுடைய சுகதன் என்னும் பெயராற் கூறுவானேன்? மேலும் தங்கள் தவமே இன்பமுடைத்தென்றும், ஆருகதர் முதலியோர் "உற்றநோய் நோன்றல் வீண்" என்றும் கூறுப; இவையெல்லாம் அறிவில் லாக் கூற்றுக்களன்றோ? என்றவாறு.

அன. என்பது உலகறிசுட்டு. வழிபாட்டிற்கியன்ற அம்மலர் முதலியவற்றால் என்றவாறு. அழுக்கு - மலம். அவன் என்னும் சுட்டு செய்யுளாதலால் முன் வந்தது. சுகமும் சொல்லார் என மாறுக. சுகம் சொல்லார் எனவே அனைத்தும் துன்பமே என்று சொல்லுவர் என்பது பெற்றாம். பல்லார் என்றது ஆருகதர் முதலியோர் என்றவாறு.

இனி, பௌத்தராயினோர் தமக்கு வாந்தி தோன்றினால் வாய் கழுவாமையால் நுமக்கு வாலாமையுளதன்றோ வெனின், இல்லறத் தாரும் வாந்தி தோன்றினால் தூயநீர் பெறுதபொழுது அருவருப்பைப் பொறுத்திருந்து தூயநீர் பெற்றுழி வாய்தூய்மை செய்யுமாறு போலத் தகுதியான காலத்து இல்லறத்தாராற் கொடுக்கப்பட்ட தூயநீர் பெற்றுழி வாய் கழுவித் தூய்மைசெய்து பின்பே தம் ஒழுக் கங்களை மேற்கொள்ளுவர். அவ்வளவும் வாய்பேசாதிருப்பது வாய் தூய்மை செய்யவேண்டும் என்னும் இயற்கை வற்புறுத்தலாலன்றோ? ஆதலால் இவர்கள் சொன்மாத்திரையே கூறுவதல்லது அனைத்தும்

வாலாமையுடையன என்பதில் இவர்கட்கே உடன்பாடில்லை என்பதும் கொள்க. (உக)

## இதுவுமது

உஉ. நிலையா வெனச்சொல்லி நேர்ப பொருடேய
மலையோ ரனைய மாட மெடுப்ப
விலையே யுயிரென் றிறந்த நினைப
புலைசெ யமர்ந்தவர் புத்தியின் வண்ணமே.

(இ - ள்.) நிலையா எனச் சொல்லி - செல்வம் நிலையுதலுடையன அல்ல என்று பிறர்க்கு அறிவுறுத்தி; பொருள் நேர்ப - செல்வரிடத்தே நிரம்பப் பொருளையும் இரந்து பெறுவர்; மலை ஓரனைய தூய மாடம் எடுப்ப - மலையை ஒத்த தூய மாடமாளிகைகளையும் கட்டுவர்; உயிர் இலை என்று - உயிர் என்று ஒருபொருள் இல்லை என்று கூறிக்கொண்டு; இறந்த நினைப - பழம் பிறப்பு நிகழ்ச்சிகளை மீண்டும் நினைந்து கூறுவர்; புலைசேய் அமர்ந்தவர் - புலைத்தொழில் செய்தலை விரும்பிய இப் பௌத்தத் துறவோர்; புத்தியின் வண்ணம் - அறிவின் தன்மை இருந்தபடி இதுவாம் என்றான் என்க.

(வி - ம்.) செல்வமுதலியன நிலையாவென்று சொல்லிக்கொண்டே அச்செல்வங்களைத் திரட்டுவர்; மாடமுதலியன எடுப்பர். உயிரில்லை என்று கூறிக்கொண்டே யான் முற்பிறப்பிலே முயலாயினேன் என்பன முதலாயினபோன்று, மீட்டுணர்தலுஞ் செய்வர். இவ்வாறு இவர் மொழிகள் பெரிதும் முரண்பாடுடையன என்றிகழ்ந்தபடியாம்.

இறந்த-இறந்தகால நிகழ்ச்சிகள். புத்தியின் வண்ணம் இங்ஙனம் முரண்பட்டிருக்கும் என்பது கருத்து. (உஉ)

## இதுவுமது

உஙச. மயித்திரம் பாவித்து மற்றவற் றானை
யசிப்பன வேபோ லமர்ந்திருந் துண்ணுஞ்
சயித்தியங் காணிற் றலையினை முட்டும்
பயித்தியங் கொண்டவர் பண்புமஃ தொக்கும்.

(இ - ள்.) மயித்திரம் பாவித்து - வாய்மையாகவே பௌத்தத் துறவிகள் மன்னுயிர்களின்பால் மைத்திரி பாவனை செய்துகொண்டே; அவற்று ஊனை - அவ்வுயிரினங்களின் உடலிறைச்சியை; அசிப்பனவே போல் - தின்னும் சோறுபோலவே; அமர்ந்து இருந்து - தங்கள் பள்ளியிலே வீற்றிருந்து; உண்ணும் பயித்தியம் கொண்டவர் - தின்னுகின்றதொரு பயித்தியங் கொண்டவரே ஆவர்; சயித்தியம் காணின் தலையினை முட்டும்

பயித்தியம் கொண்டவர் - புத்த பீடிகை கண்டால் அன்புமிக்கவர் போன்று அப்பீடிகையில் தந்தலையினை மோதிக்கொண்டு தொழுமொரு பயித்தியமும் உடையவராவர்; பண்பும் அஃதொக்கும் - இவருடைய குணமும் பித்தேறினோர் குணத்தையே ஒக்கும் என்றாள் என்க.

(வி - ரை.) மயித்திரம் பாவித்தல் - மைத்திரி பாவனை செய்தல்; அஃதாவது, ஒருதுறவி தகுதியான ஓரிடத்துத் தனித்திருந்து, "சிறந்த பிறப்பினையுடைய உயிரினமெல்லாம் இன்புற்று வாழ்வனவாக! அவை யெல்லாம் துன்பம் பிணி தீய அவா வென்னுமிவற்றினின்றும் விடுபட்டனவாக! எல்லா மாந்தரும் எல்லாத்தேவரும் எல்லா நரகரும் எப்பொழுதும் மகிழ்ச்சியுடையவர்களாகுக! இவர்களும் துன்பம் பிணி தீய வவாவென்னும் இவற்றினின்றும் விடுபட்டவர்களாக! என்று இடையறாது நினைத்தலாம் என்க.

இவ்வாறு மைத்திரிபாவனை செய்பவரே அவற்றின் ஊனைத்தின்றல் எத்துணைப் பேதைமை என்பாள் அவற்றூனை உண்ணும் பயித்தியங் கொண்டவர் என்றாள். பயித்தியம் கொண்டவர் என்பதனை மூன்றுங் கூட்டுக. சயித்தியம் - கோயில். ஈண்டுப் புத்தபீடிகை. தலையினை முட்டுதல் - அன்புமிகுதிக் கறிகுறி.

புத்தன் கூறிய அருளறத்திற்கு மாறாக நடந்துகொண்டே அவன் பீடிகையைத் தொழுவது பயித்தியமல்லால் வேறென்? என்பது கருத்து. பண்பு-குணம். அஃது-அப்பயித்தியங் கொண்டவர் பண்பு.

இவர் உண்மையாகவே புத்தனைத் தொழுவாராயின் அவனால் அருள் செய்யப்பட்ட உயிரினங்களின் ஊனைத்தின்ன மாட்டாரல்லரோ? என்றவாறு. (உ௯)

இதுவுமது

உ௬0. புத்த ருருவுக்கும் போலிக்கும் போலியை
மத்தகத் தேத்தி வணங்கி வழிபடும்
செத்த பொழுதினச் சேந்தடி மென்றிடு
மத்த னுடைய வருள்வகை வண்ணம்.

(இ - ள்.) புத்தர் உருவுக்கும் போலிக்கும் போலியை-பௌத்தனொருவன், தலைவராகிய புத்தனுடைய உருவத்திற்குப் போலியாகிய புத்தச் சிற்பத்தையும் அதற்கும் போலியாகிய புத்த ஓவியத்தினையும்; மத்தகத்தின் ஏத்தி வணங்கி - தன் கைகளைத் தலைக்குமேற் குவித்து வணங்கி; வழிபடும் - வழிபாடு செய்வான்; செத்த பொழுதின் - மற்று அப் பௌத்தனே அப் புத்தனார் எடுத்த பிறப்பினையுடைய மான் முயல் முதலியன இறந்துழி; அச் செந்தடி தின்றிடும்-புத்தனார் பிறப்பினைமுழுவதும்ஒத்த அவற்றின் சிவந்த ஊனைச் சுவைபட மென்று தின்பான்; அத்தனுடைய அருள் வகை வண்ணம் - தலைவனாகிய அப்புத்தனார் அறிவுறுத்த

அருளறங்களை இவன் கைக்கொள்ளும் தன்மை இங்ஙனமிருந்தது என்றான் என்க.

(வி - ம்.) போலி-போல்வது. போலி என்றது-சிற்பவுருவத்தை. போலிக்கும் போலி என்றது புத்தனோவியத்தை. புத்தன் மான் முயல் முதலியனவாகவும் பிறந்தனனாகவே மானுருவமும் முயலுருவமும் சிற்பம் படம் முதலியவற்றினும் சிறந்த புத்தவுருவங்களே யன்றோ; அவற்றைத் தொழுதலே முறையாகவும் இவனோ வறிய சில முதலியவற்றை மட்டும் தொழுகின்றான். உயிரோவியங்களாகிய இவற்றின் ஊனைத் தின்கின்றான், எனவே இவன் பேதைமை மிகப் பெரிது என்பது கருத்தென்க.

இன்னும் போதிசத்துவர் இப்பொழுதும் இவ்வுயிரினங்களில் ஒன்றாகவே பிறந்திருத்தல் கூடுமன்றே! கூடுமாயின் அவை இறந்துழித் தின்னல் ஒரோவழி அப்புத்தனையே தின்னுதலும் ஆகலாமே என்றானுமாயிற்று.

இன்னும் புத்தனுடைய தாதுக்களைப் போற்றி வணங்கு மியல்புடைய இவன் இம் மான்பிணம் முயற்பிணம் முதலியவற்றையும் போற்றி வணங்கவேண்டுமே! புத்தனது எலும்பாகிய 'தாது' ஆம்வாரை வணங்குமாறு போலே என்றானுமாயிற்று.

மத்தகம் - தலை. தடி - தசை. அத்தன் - தலைவன். இனி மென்றிடும் மத்தன் எனவு மொன்று. மத்தன் - பித்துடையான். (உச)

பௌத்தத் துறவிகளின் துன்பநிலை

வேறு

உ௫. பேனருக் கூறை பெருமுடைநா
றுமேற் றுக்கந் துக்கம்
மானரு நோக்கி மணற்சுமையுந்
தான்பெரிதாற் றுக்கந் துக்கங்
கூனிருக் கண்டாலுங் கொள்ள
முடியாதேற் றுக்கந் துக்கந்
தானருப் பஃறேழிலுந் தான்றுக்க
மாதலாற் சகுவ்வந் துக்கம்.

(இ - ள்.) பேன் அருக்கூறை பெருமுடைநாறுமேல் - சீலைப் பேன் ஒழிதலில்லாத துவராடை அழுக்கேறி மிக்க முடைநாற்றம் வீசுமாயின்; துக்கம் துக்கம் - அந்தோ! மிகவும் துன்பம்; மான் அரு நோக்கி - மான்றன்மை நீங்காத நோக்கினையுடைய பிக்குணி பிழை செய்துழி சுமக்கும்; மணல் சுமையும் பெரிதால் துக்கம் துக்கம் - மணற்சுமையும் பெரிதாதலாலே அவற்றைச் சுமத்தலும் பெருந் துன்பமாம்; கூன் இருக் கண்டாலும் - கூனுடைய இரு மீன் விற்புழிக் கண்டாலும்; கொள்ள முடியாதேல் - அவற்றை

விலைகொடுத்துக் கொள்ள முடியாவிடத்தேயும்; துக்கம் துக்கம்- அவாவாலுண்டாகும் துன்பமோ மிகப் பெரிதாகும்; தான் அருப்பல் தொழிலும் - தன்னை விட்டொழியாத பலவேறு வகைப்பட்ட பிறதொழில் செய்தலும்; துக்கம் - துன்பமே; ஆதலால் - இங்ஙனமாதலால்; சருவம் துக்கம் - இப்பௌத்தத் துறவிகளுக்கு எல்லாந் துன்பமே; ஆதலாற் போலும் இவர்கள் 'சர்வம் துக்கம்' என்று பாவிப்பர் என்றான் என்க.

(வி - ரை.) இது பௌத்தருடைய சர்வந்துக்கம் என்னும் கொள்கை ஒருவகையில் அத்துறவோர் வாழ்க்கையில் உண்மையேயாகின்றது என்று அசதியாடியபடியாம்.

பேன் - சீலைப்பேன். கூறை - ஆடை. முடுகு - முடைநாற்றம். அஃதாவது புலானாற்றம். கூறை முடுகு நாறும் என்றது, அவர்கள் புலாலுண்டலைக் குறிப்பாக வுணர்த்தியபடியாம்.

மானரு நோக்கி என்றது, பிக்குணியை; அவர்கள் பிக்குணியாய பின்னரும் காமநோக்க மொழியார் என்பாள் மானரு நோக்கி என்றான். பிக்குணிகள் பிழை புரியின் அதற்குக் கழுவாயாகப் புத்தக்கோயில் முற்றத்திற்கு மணற்சுமத்தல் வேண்டும் என்பது விதி. ஆதலால் அவர்கள் காமுற்றுப் பிழைசெய்யா திருப்பாருமல்லர், செய்துழி மணற்சுமத்தல் பெருந்துன்பம் என்பது கருத்து. இது துறவோருள்ளும் காமமாடுதலைக் குறிப்பாக வுணர்த்தியது.

இரு - ஒருவகை மீன். மீன் விற்போர் இரு விற்கும்பொழுது அவற்றை வாங்குதற்குப் பொருளின்மையால் பெரிதும் துன்பமுறுவர் என்றவாறு. இனி - பலதொழில் என்றது, துறவி பிழைசெய்யின் மலர்ப்பொழிலுக்கு நீர் இறைத்தலும், ஆடை துன்னலும் இன்னோ ரன்னவுமாகிய பிறவற்றை என்க. (உ௯)

வேறு

உ௩0. பொய்பொத்திச் சொல்லினவும்
போங்கூலி கொண்டனவும்
வையத்தஞ் சுட்டனவும்
வாழ்மருது சொன்றனவும்
கையத்தி னுனுக்கே
கன்றிக் கலாய்த்தனவு
மையத்தை யின்றி
யடுப வாலோ
வழல்நரகத் துள்ளே
யடுப வாலோ.

(இ - ள்.) பொய் பொத்திச் சொல்லினவும் - தும்மால் பொய்மை மறைத்துக் கேட்போர் மெய்யென்றே நம்பும்படி சொல்

லப்பட்ட தீவினைகளும்; போம் கூலி கொண்டனவும் - அறச்செய லுக்குப் போவதற்குக் கூலிபெற்றுப் போகின்ற தீவினையும்; வை அத்தம் சுட்டனவும் - தம்பால் அடைக்கலமாக வைத்த பொருளை வஞ்சனையாகக் கைப்பற்றுதற் பொருட்டுப் பள்ளியிற் றீக் கொளுவிச் சுட்ட தீவினையும்; வாழ்மருது கொன்றனவும் - ஆடை துவளூட்டுதற்கு உயிர் வாழ்கின்ற மருதமரங்களை வெட்டியழித்த தீவினையும்; கையத்தின் - கீழ்மையாலே; ஊனுக்கே கன்றிக் கலாய்த்தனவும் - ஊனுண்டற் பொருட்டே மனங்கன்றிக் கலகஞ் செய்த தீவினையும்; ஐயத்தை இன்றி - ஐயுறுதற்குச் சிறிதுமிட னின்றி; அடுபவாலோ - நுங்களை வருத்துவனவாம்; அழல்நரகத் துள்ளே படுபவாலோ - தீநரகத்தே நும்மைத் தள்ளுவனவாம் என்றாள் என்க.

(வி - ம்.) பொய் பொத்திச் சொல்லுதலாவது, பொய்யை மறைத்து மெய்போலப் பேசுதல். அறச்செயலுக்குப் போம்பொழுது கூலிபெற்றுப் போந்த தீவினையும் என்க. வைஅத்தம் - அடைக்கல மாக வைக்கப்பட்ட பொருள். அதனை வஞ்சித்துக் கோடற்குப் பள்ளி யிற்றீயிட்டனர் என்று இதுவுமொரு கதை கூறியவாறு. கையம் - கீழ்மை. கலாய்த்தல் - கலகஞ்செய்தல். படுப்ப, படுப என நின்றது. இவையெல்லாம் அறிசலமும் அவ்விரதமுமாம் என்று காட்டியபடி யாம். செய்யுள்தோறும் இவற்றை ஆராய்ந்து கொள்க.

இன்னும் பொய் பொத்திச் சொல்லினவும் என்றதனானே, பீலி முருந்தை நுறுக்கி மாயத்தாற் சென்று செல்வர்மேற் றூவிப் புத்தர் தாது நும்மேல் வீழ்ந்தன என்று காட்டி, நீயிர் பத்தர்க்கன்பர் என்று கூறுதலும், முயன் முதலாயினவாகி இருக்கையிலேறி அற வுரை கூறுதலும்; இணையெருதின்றி ஒரெருதுடையான் ஒருவன் பேரீரம் விழுந்து உழப்பெறாது வருந்துவது கண்டு புத்தன் அருளால் ஒழிந்த எருதினது உருவங் கொண்டு தன் துன்பம் பாராது உழுதான்; அப்புழுதி பொன்னாயிற்றென்றலும், தலை முதலாயின கொடுத்தாரென்றலும், தாது ஆழ்வார் ஒரு நாட்டினின்றும் ஒரு நாட்டின் வந்தாரென்றலும், மகாமேருக்களைப் பிடுங்கி விலத்திலிட்டு மேனின்றுலாவினன் என்றலும், இவ்வாறு கூறும் பொய்களையும் ஆராய்ந்தறிந்து கொள்க. (உசு)

உ௫அ. பற்றே மிகப்பெருக்கிப் பஃறொடர்ப்பா டேயாக்கி
யற்றீர்போற் காட்டி யடைக்கலமே வவ்வுநீர்
பெற்றீரே பேயுடம் பன்றேற் பெரும்பாவு
மெற்றே யிருணரகிற் கீர்க்கு மாலோ
விரக்கமோன் றில்லீரை யீர்க்கு மாலோ.

(இ - ள்.) பற்றே மிகப்பெருக்கி - பற்றின் வருவது துன்பம் என்பீராயினும் அப்பற்றினையே மேலும் மேலும் பெருக்கி, பல் தொடர்ப்பாடே ஆக்கி - அதனாற் பல்வேறு தொடர்புகளையும்

உண்டாக்கிக் கொண்டிருந்தும்; அற்றீர் போல் காட்டி அடைக் கலமே வவ்வுநீர் - பொருளாசையற்றனிர் போன்று பிறர்க்குக் காட்டி அடைக்கலமாக நும்பால் அயலார் வைத்த பொருளை வஞ்சகமாகக் கவர்ந்து கொள்ளும் நீவிர்; பேய்உடம்பு பெற்றீர் - பேய்உடம்பு பெறுதல் திண்ணம்; அன்றேல் எற்று - அவ்வாறு பேயாய்ப் பிறவீராயின் எப்பிறப்புறுவீர்; இத்தீவினைகள் நும்மை; பெரும்பாலும் இருள் நரகிற்கு ஈர்க்கும் - மிகுதியாக இருளையுடைய நரகத்திற்கே இழுத்துச் செல்லும்; இரக்கம் ஒன்று இல்லீரை - இரக்கம் சிறிதுமில்லாத நுங்களை அத் தீவினைகள்; ஈர்க்கும் - இருள் நரகிற் கிழுத்துச் செல்லும்; இஃதொருதலை என்றாள் என்க.

(வி - ம்.) பற்றால் வருவதே துன்பம் என்று கூறுதிர்; பின்னரும் அப் பற்றையே பெருக்கிப் பல்வேறு தொடர்புகளையுமுடையீர் ஆகுதிர்; இதுவும் அறிசலமும் அவ்விரதமுமாம் என்றவாறு.

அற்றீர் – அவாவற்றீர். வவ்வுவிர் - கவர்வீர். இத்தகைய நீர் பேய்ப்பிறப்பெய்துதல் திண்ணம் என்பாள், பேயுடம்பு பெற்றீர் எனத் தெளிவு பற்றி இறந்தகாலத்தாற் கூறினள். என்னை ?

> "வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
> இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்
> இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை"
>
> (தொல், சொல் - வினை சுஅ)

என்பது இலக்கணமாதலின் என்க.

இனித் தீவினை செய்வோர்,

> "விலங்கும் பேயு நரகரு மாகி
> கலங்கிய உள்ளக் கவலையிற் றோன்றுவர்"
>
> (மணி – கூo - எச - கு)

என்னும் அவர் மதமே பற்றி நீயிர் பேயாய்ப் பிறப்பீர்; அன்றேல் நரகராகுவிர்; பின்னர் எப்பிறப்புத்தான் எய்துவிர் என்பாள் 'எற்றே' என்றாள் என்க. முன்னர்ப் பெரும்பாலும் நரகிற்கு ஈர்க்கும் என்றவள் தேற்றமாக ஈர்க்கும் என்று பின்னரும் வற்புறுத்தினள் என்க. (உஎ)

அருக்கசந்திரன் கூற்று

வேறு

உஙகூ. ஆங்கவ ளறங்கூறக்
கேட்ட வவாச்சியன்றான்
றேங்கம ழோலிகோதாய்
சித்தமே யல்லதில்லை

தீங்கொழுக் கென்றதெல்லாந்
 தீவினையென் னல்வேண்டார்
பூங்கமழ் காராடை
 போர்த்தவெம் புத்தரென்ருன்.

(இ - ள்.) ஆங்கு அவள் அறங்கூறக் கேட்ட அவாச்சியன் தான் - அவ்விடத்தே அந்நீலகேசி தங்கள் நல்லறங்களைக் கூறக் கேட்ட பௌத்தத்துறவியாகிய அவ்வருக்கசந்திரன்; தேம் கமழ் ஒலி கோதாய் - தேன்பணக்கும் தழைத்த மலர்மாலையையுடைய நீலகேசியே கேள்!; பூ கமழ் கார் ஆடைபோர்த்த எம் புத்தர்-மலர் மணங்கமழும் நீலப்படாம்போர்த்த எம்முடைய தலைவராகிய புத்தர் பெருமான்; சித்தமே யல்லது இல்லை-தீவினைக்கெல்லாம் காரணம் மனமேயன்றிப் பிறிதொன்றுமில்லை; தீங்கொழுக்கு என்றது எல்லாம் - தீயவொழுக்கம் போலப் புறத்தார்க்குத் தோன்றுவன வெல்லாம்; தீவினை என்னல் வேண்டார் - தீவினை என்று கூறு வதனை ஒப்புகிலர் என்று கூறினன் என்க.

(வி - ம்.) மருத்துவன் பிணியாளர்க்குக் கருவிகொண்டு உடம்பினை அறுத்துந் தீய்த்துஞ் செய்யும் வினை தீவினை போலக் காணப்படினும் அவன் உள்ளம் பிணி தீர்ப்பதாகிய நன்மையை உடைத்தாதலின், அச் செயல் கொண்டு தீவினை என்று கூறுவார் யாருமிலர். ஆதல்போல எம் புத்தனுர் தீவினை நல்வினைகளை மனத்தைக் கொண்டே அறிதல் வேண்டும், செயல்களைக் கொண்டு முடிவு செய்தல் கூடாது என்பர் என்றவாறு. இதனை,

'மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
 னாகுல நீர பிற' (திருக்குறள் - கச)

எனவரும் திருக்குறளினுங் காண்க.

ஆங்கு அவள் அறங்கூற என்றது இதுகாறும் புத்தர் அறங்களுக் குக் குற்றஞ்சாட்டி மறுத்துவந்தவள் அது முடிந்தவுடன் தமது ஆருகத சமய அறங்களை விளக்கினாளாக என்பது தோன்ற நின்றது. (உஅ)

நீலகேசி கூற்று

உகூ0. துத்தலே வேண்டிநின்று
 தோந்தோடர்ப் பாருநீக்காய்
சித்தமே நல்லதென்ருற்
 றேற்றவு மாவதுண்டோ
கத்திகொண்டில் லில்வாழ்பேய்
 காறலை வேறுசெய்து
குத்துவதின் னும்போழ்திற்
 கூடுமோநன் மையேடா.

(இ - ள்.) ஏடா - அருக்கசந்திரனே! நீதானும், துத்தலே வேண்டி நின்று - இன்ப நுகர்ச்சிகளையே பெரிதும் விரும்பி நின்று; தோம் தொடர்ப்பாடு நீக்காய் - அவ்விருப்பங்காரணமாகக் குற்றந் தரும் பொருள்களைப்பற்றிக் கிடத்தலை நீக்குகின்றிலை, சித்தமே நல்லது என்றால்-நீ யான் எச் செயலைச் செய்தாலும் என்னை? என் மனமட்டும் மாசற்றதே! என்று கூறுவாயாயின்; தேற்றலும் ஆவது உண்டோ - அதனை உண்மை என்று தெளிதலும் கூடுமோ?; இல்லில் வாழ்பேய் - நின் மனமாகிய இல்லத்திலே வாழுகின்ற பேராசையென்னும் பேய்கள் அங்கு வாழும் உன்னை; கத்திகொண்டு கால்தலை வேறுசெய்து - கூரிய கத்தியைக் கொண்டு நின்னுடைய கால்களையும் தலையையும் வேறு வேறாகச் செய்து பின்னரும்; குத்துவ தின்னும் போழ்து-குத்தித் தின்னும் பொழுது; நன்மை கூடுமோ - நீ சொன்ன நன்மை அம் மனத்தின் கண் இருத்தல் கூடுமோ? நினைத்துப் பார்.

(வி - ம்.) ஏடா நீ, பொறியின்பமே காமுற்று நின்று அதற்கு வேண்டிய பொருளையெல்லாம் பற்றிக்கொண்டு கிடக்கின்றாய். அங்ஙனமிருந்தும் என் மனத்தின்கண் நலம் குடிகொண்டுளது என்கின்றாய். இதனை யார்தாம் நம்பமுடியும்? உன்மனமாகிய இல்லிலே மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை யெனப் பல பேய்கள் அல்லவோ வாழ்கின்றன? அவை இடையறாது அது கொண்டுவா? இது கொண்டுவா? என்று உன்னைப் பிய்த்துத் தின்கின்றன. அத்தகைய மனதுள்ளே நன்மை இருத்தற்கு இடமேது? நின் கூற்றுப் பேதைமையுடைத்து என்பதாம்.

அவாக்கள் கொடுமையாக இன்பம் வேண்டுமென்று அலைப்பதனை, பேய் கத்திகொண்டு கால்தலை வேறு செய்து குத்துவனவாய் நின்னைத் தின்னுகின்றன என்றாள். ஆசைபலவாதலின் பன்மையாற் கூறினள். எனவே அவாநிரம்பிய மனதில் அறமிருக்கும் என்பது பொய் என்றுளாயிற்று.

தோம் தொடர்ப்பாடு - குற்றமுடைய பொருளின்பாற் பற்றுடைமை. இச்செய்யுள் பொருளாழமும் உவமை நலனுமுடைத்தாய் ஆற்றவும் இன்பம் நல்குதலுணர்க. (உக)

இதுவுமது

உசுக. உள்ளமும் பாயிரமும் ஒக்குமேல் வீடுமுண்டாம்
கொள்ளுமேற் குற்றமஃதாக் கூடுமே பற்றுமாங்கண்
விள்ளுமேல் வேறதாய வேடமு மன்னதேயாங்
கள்ளமே சொல்லிநின்று கன்றினுற் காட்டலாமோ.

(இ - ள்.) உள்ளமும் பாயிரமும் ஒக்குமேல் - அகப்பற்றும் புறப்பற்றும் நீங்கி ஒருவனுக்கு உள்ளும் புறம்பும் ஒக்கில்; வீடும் உண்டாம் - அவனுக்கு அறமும் பொருளும் இன்பமும் கைகூடு

வதேயன்றி வீடுபேறும் உண்டாதல் ஒருதலை; கொள்ளுமேல் - அங்ஙனமின்றி இருவழியும் பற்றுடையனாயின்; குற்றம் அஃதாக - அக்குற்றமே தமக்குப் புகுவழியாக; பற்றும் ஆங்கண் கூடும் - மேன்மேலும் எல்லையற்ற பற்றுக்களே வந்து கூடுங்காண்; விள்ளுமேல் - உள்ளும் புறமும் பற்றில்லையேல்; வேறதாய வேடமும் அன்னதேயாம் - அப்பற்று வேறாகியதற் கறிகுறியாகிய தவவேடங் கோடலும் பற்றறுதிக் கேதுவாம்; கள்ளமே சொல்லி நின்று - அஃதன்றிப் புறப்பற்றுண்டாயினும் அகப்பற்றில்லை என்று கள்ளமே கூறிநின்று; கன்றினால்-மனங்கன்றினால்; காட்டலாமோ- அப்பற்றின்மையைக் காட்டுதல் கூடுமோ? கூடாதுகாண் என்றாள் என்க.

(வி - ம்.) புறத்தே புகையுண்டாயின் அகத்தே தீயுண்மை உறுதியாதல் போன்று புறப்பற்றுண்டாயின் அகத்தே அதற்குக் காரணமான அவாவுண்மை நன்கு தெளியப்படும் என்பது கருத்து.

புறத்தே சிறிது பற்றுக் காணப்படினும் அகத்தே அவாப் பெரிதும் உளதென்பது திண்ணம் என்றறிவுறுத்தாளென்க.

இதனோடு,

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்" (குறள்-கூசக)

எனவும்,

"இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து" (குறள்-கூசசு)

எனவும்,

"அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லாம் ஒருங்கு" (குறள்-கூசங)

எனவும் வருந் திருக்குறள்களையும்,

"அது மனத்தைத் துன்பத்தானும் தீவினையானுமன்றி வாராத பொருள்கண் மேலல்லாது வீட்டு நெறியாகிய யோக ஞானங்களிற் செலுத்தாமையின் அதனை 'அடல் வேண்டும்' என்றும்; அஃது அப்பொருள்களின்மேற் செல்லின் அந் நுகர்ச்சி விறகு பெற்ற தழல்போல மூறுகுவதல்லது அடப்படாமையின் வேண்டிய வெல்லா 'மொருங்கு விடல் வேண்டும்' என்றுங் கூறினார்"

எனவும், "எல்லாப் பொருள்களையும் விட்டு ஒருபொருளை விடாத வழியும், அது சார்பாக விட்டனவெல்லாம் மீண்டும் வந்து தவத்திற் கிடையீடாய் மனக்கலக்கஞ் செய்யும் என்பது கருத்து" எனவும் வரும் பரிமேலழகர் உரைப்பகுதிகளையும் நினைக. (கூ0)

இதுவுமது

உ௬உ. புனைந்துநீ சொல்லும் வீடும்
போகவுண் டாக தந்தே
நினைந்துநாங் காணி னெல்லா
நின்றதோன் றில்லை யென்றாற்
றுனைந்துதா னுண்மை நன்று
சூனிய மாதற் கென்றாட்
கினைந்தினைந் தேங்கி நல்லா
யென்செயற் பால தென்றான்.

(இ - ள்.) *நீ புனைந்து சொல்லும் வீடும் உண்டாக போக* - *அருக்கசந்திர! நீ பொய்யே படைத்து மொழிகின்ற வீடுபேறு உனக்குண்டாயின் உண்டாவதாக! அன்றி உண்டாகாதொழியினும் ஒழிக!; தந்தேம்* - *யாம் நினக்கொரு வீடுபேறு தருகின்றேங்காண்! அஃதியாதெனில்; நாம் நினைந்து காணில்* - *யாம் நினது பொன்றக்கேடாகிய வீட்டினை ஆராய்ந்து பார்ப்போமாயின்; நின்றது ஒன்று இல்லை என்றால்* - *அறிவுகள் கணந்தோறும் தோன்றி அழிகின்றன என்புழி; இவற்றினூடே நிலைத்து நிற்பதாகிய உயிர்ப்பொருள் என்பது ஒன்று இல்லை என்று கொண்டக்கால்; சூனியம் ஆதற்கு* - *முடிவில் வெறும்பாழாய் முடிவதினுங்காட்டில்; தான் துனைந்து உண்மை நன்று* - *பிறப்பினூடே, நீ கணந்தோறும் வீடுபேறு எய்துகின்றனை ஆதலால் வருந்தியும் தான் என்னும் செருக்கோடே நிற்றலே நினக்கு வீடாதற்கமையும் அதனையே பெற்று நீ வாழ்வாயாக; என்றாட்கு* - *என்று கூறிய அந்நீலகேசியை நோக்கி; இனைந்து இனைந்து ஏங்கி* - *அவ்வருக்கசந்திரன் தன் வாழ்நாள் வீணாயினமைக்குப் பெரிதும் உளம் நைந்து வருந்தி; நல்லாய்* - *நன்மையுடையோய்!; என் செயற்பாலது* - *யான் இனிச் செய்யக்கடவது யாது? அறிவித்தருள்க; என்றான்* - *என்று வேண்டினான் என்க.*

(வி - ம்.) இஃதென் சொல்லியவாறோ எனின்; பொன்றக்கேடாகிய வீடு உனக்கு உண்டாயின் ஆகுக! ஆனால் அது நினக்குண்டாகாது என்பது தேற்றம். எற்றாலெனின் நின் புத்தனுக்கும் அவ்வீடுபேறு இற்றைநாள்காறும் உண்டாகாமையான்; என்னை? அவன் ஐவகைக் கந்த வடிவினன் அல்லனோ? அவற்றுள் தாதுவாகிய உருவக் கந்தம் கெடாமையின் ஒழிந்த கந்தங்கள் கெடாமையும் பெற்றாம் ஆகலின்; ஆதலால் அவ்வீடுபேறு நினக்கும் ஒழியின் ஒழிக. அஃதொழிய யாமே இந்நிலையில் நினக்குள்ளதாகிய வீடுபேறு ஒன்று காட்டுதும், அதுவே நினக்கு அமைவதாம்; அதுதான் எவ்வாறெனில்- நின் கொள்கைப்படி நின்னறிவு கணந்தோறும் தோன்றி அழிகின்றன அல்லவோ? அவை மீண்டும் பிறவாவல்லவோ? இங்ஙனமாயின் நீ

இப்பொழுதே கணந்தோறும் வீடுபேறு எய்துகின்றனை காண். என்னை? அவ்வறிவிற்கு வேறாக உயிர் என்பது நினக்கில்லாமையாலே என்றறிக. கையறக் கெட்டு இம்மையின்பத்தையும் இழப்பதினுங்காட்டில் தான் உளனுய்நின்று கணந்தோறும் வீடெய்துதலே நன்றுகாண் என்றவாறு.

நீ உயிர் என்று ஒன்று இல்லையென்னும் அறிவே நீ என்றும் கருதுகின்றனை. மற்று அவ்வறிவுதானும் நிலையுதலின்றிக் கணந்தோறும் தோன்றி அழிகின்றன என்றும் கூறுகின்றனை. இங்ஙனமாயின் நீ இப்பொழுதே கணந்தொறும் வீடுபேறு எய்துகின்றனை. இந்த வீடுபேறே நினக்கமையும். இனி நின் புத்தனுர் இறுதியாக அவ்வறிவுதானும் பொன்றக் கெட்டு வெறும் பாழாய் முடிதலே வீடு என்பதைவிட இப்போது நினக்குக் கைவந்த வீடுபேறே மிகவும் நன்று என அசதியாடியபடியாம் என்க. எனவே, புத்தன் கொள்கை வெறும் பொய்யென்றுணர்க: எமது ஆருகத நெறியை மேற்கொள்ளுக என்பது குறிப்பாயிற்று.

இக் குறிப்புணர்ந்து கழிந்த நாட்குப் பெரிதும் வருந்தினன் என்பார், இனைந்தினைந்து ஏங்கி என்றுர். என்செயற்பாலது என்றது, எனக்கும் நின்னறத்தை அறிவுறுத்துக என்று குறிப்பால் வேண்டியபடியாம். (கூக)

நீலகேசி அருக்கசந்திரன் வருத்தம் போக்கல்

உசுகூ. சேத்தவ ரப்போழுதே தேவருட் சேல்பவேனு
மத்தலை யின்பநோக்கா ரஞ்சுவ மாக்களந்தோ
தோத்துள வாகவேன்னுன் சூனிய வீடுசோன்ன
புத்தனை நோதுமத்த புலம்பனீ போகவேன்றுள்.

(இ – ள்.) செத்தவர் அப்பொழுதே தேவருள் செல்பவேனும் - இறந்தோர் அப்பொழுதே தேவருட் சென்று பிறந்து தேவராகுவர் என்று கூறினும்; மாக்கள் அத்தலை இன்பம் நோக்கார் - இம்மாந்தர் அத்தேவர் நாட்டினுள்ளவாகிய இன்பங்களைக் கருதாராய்; அஞ்சுவ – மிகவும் அஞ்சாநிற்பர்; அந்தோ - ஐயகோ! அத்தகைய மாந்தர்களுக்கு; தொத்து உள ஆக என்னுன் - நுங்கட்கும் வீட்டுலகிற்கும் பெரிதும் தொடர்புளது என்று கூறுனுய்; சூனிய வீடு சொன்ன - நீவிர் வெறும் பாழாய்முடிதலே வீடு என்று அறிவுறுத்திய; புத்தனை நோதும்–அந்தப் புத்தனையே யாம் நோகக்கடவேம்; அத்த நீ புலம்பல் போக என்றுள் - அப்பனே! அருக்கசந்திர! நீ வருந்தற்க! அப்புன்னெறியை விட்டு நன்னெறியே செல்வாயாக என்றுள்; என்க.

(வி - ம்.) செல்ப என்று சொல்பவேனும் என ஒரு சொற்பெய்து கொள்க. இறந்த மாந்தர் தேவராவர் என்று கூறினும் மாந்தர் அஞ்சுகின்றனர்; அத்தகையோர், நீங்கள் இறப்பின் வெறும்பாழேயாவீர் என்றால் எத்துணை அச்சங்கொள்வர். இங்ஙனம் ஒரு பேதைமையைச் சொன்ன புத்தனின் அறியாமைக் கிரங்கவேண்டும் என்பது கருத்து.

தொத்து - தொடர்பு. அன்புடைமையாலே இரங்கி அத்த என்று விளித்தாள். போக என்றது, இனி நீ இப்புன்னெறியை விட்டு நன்னெறியிற் செல்க என்றவாறு. (கஉ)

இதுவுமது

உகசச. புன்னெறி யவைகளெல்லாம்
போக்கிய பாக்கியத்தாய்
நன்னெறி நன்ஞானங்
காட்சியு நன்குகொண்டேன்
சொன்னெறி திரிவாயேற்
சோர்வில்பே ரின்பமெய்தி
மன்னுதி யென்றுமற்றுங்
கூறினாண் மாதராளே.

(இ - ள்.) மாதாாள் புல்நெறி அவைகள் எல்லாம் போக்கிய பாக்கியத்தாய் - பின்னரும் நீலகேசி அப்பனே! நீ இப்பொழுது பொய்யாகிய புத்தசமய நெறி முதலியவற்றைப் பொய்யென்றுணர்ந்து கைவிடுதற்குக் காரணமான ஆகூழுடையையாயினை காண்!; நல்ஞானம் காட்சி நல்நெறியும் நன்கு கொண்டு - அருகக்கடவுளருளிய நன்ஞானம் நற்காட்சி நல்லொழுக்கம் என்னும் இம் மும்மணிகளையும் நன்றாகப் பெற்றுக்கொண்டு; என்சொல் நெறி திரிவாயேல் - என்னுடைய சொல்வழி நின்றொழுகுவாயாயின்; சோர்வு இல் பேரின்பமெய்தி - அழிதலில்லாத பேரின்ப வீட்டினையடைந்து; மன்னுதி - நிலைபெறுவைகாண்! என்று; மற்றுங் கூறினள்-மேலும் அவற்றை அவனுக்குச் செவியறிவுறுத்தனள்; என்க.

(வி - ம்.) பாக்கியம்-ஆகூழ். ஆகூழுண்மையாலேதான் நீ என்னைத் தலைப்பட்டனை என்பது கருத்து. திரிதல் - ஒழுகுதல். மற்று - வினைமாற்றின்கண் வந்தது. அவ்வறங்களைக் கூறினள் என்க. (கங)

அருக்கசந்திரனின் ஆக்கநிலை

உகசரு. காட்டுழல் களிநல் யானை
கால்கையி னோர்ப்பித் தேறித்
தோட்டியிட் டேர்வ தேபோற்
சூரிய சோமன் றானும்
வாட்டடங் கண்ணி நல்லாள்
வாக்கெனுந் தூக்க யிற்றாற்
பூட்டுபு கொள்ளப் பட்டான்
போதியார்க் காதி யன்னான்.

(இ - ள்.) போதியார்க்கு ஆதி அன்னுன் சூரிய சோமன் தானும் - அற்றை நாள்வரை புத்தருள் வைத்து முதற் புத்தனையே ஒத்த அவ் வருக்கசந்திரன் என்பான் இப்பொழுது; காட்டு உழல் களி நல் யானை கால் கையின் ஓர்ப்பித்து ஏறி - காட்டின்கண் தன் மனம் போனவாறு உழன்ற களிற்றியானையை யானைப்பாகு நூல் வல்லான் ஒருவன் தன் மொழியாலே பழக்கி அதன் காலையும் துதிக்கையையும் தானேறுதற்குக் கொடுக்கும்படி உடன்படுத்தி அதன் பிடரிலேறியிருந்து தன் மொழிப்படி செல்லும்படி; தோட்டியிட்டு ஊர்வதே போல்-தோட்டியாற் குத்தி நடத்துமாறு போலே; வாள் தடங்கணணி நல்லாள் - வாள் போலும் பெரிய விழிகளையுடைய அந் நீலகேசியினுடைய; வாக்கு எனும் தூ கயிற்றால் - அறவுரை என்று கூறப்படுகின்ற வலிய கயிற்றினாலே; பூட்டுபு கொள்ளப்பட்டான்-அவள் நெறிச் செல்லும்படி பிணித்துக் கொள்ளப்பட்டான்; என்க.

(வி - ம்.) உவமையில் வருவது பொருளுக்கும் வருமாகலின் கயிற்றாற் கட்டப்பட்டு அவள் நெறியே நடக்கும்படி செய்யப்பட்டான் என்றும் கொள்க. ஓர்ப்பித்தல்-உடன்படுத்தல். தோட்டி—அங்குசம். அருக்க சந்திரன் என்பதனைப் பரியாயத்தால் சூரியசோமன் என்றார்.

நல்லாள் - நீலகேசி. தூ - வலிமை; "சுற்றமொடு தூவறுத்தலின்" (மதுரைக்காஞ்சி. கஅஅ) என்புழியும் அஃதப் பொருட்டாதலுணர்க. போதியார்க்காதி என்றது ஆதிபுத்தரை. (கஎ)

வேறு

உசுசு. அருக்கமா சந்திரனை
யறங்கோளீஇ யாங்கவனை
யிருக்கும்வா யொருப்படுத்திங்
கீதுநனக் குரைத்தாரைப்
பொருக்கநீ சொல்லென்னப்
புத்தனூர் முதன்மாணி
முருக்குவாய்சேன் றவனும்
மொக்கல னெனச்சொன்னான்.

(இ - ள்.) அருக்க மா சந்திரனை-இவ்வாறு அருக்கசந்திரன் என்னும் பௌத்தனை வென்று; அறங்கொளீஇ-அவனுக்கு அருக சமய அறங்களையும் செவியறிவுறுத்து; இருக்கும் வாய் ஒருப்படுத்தி-அவ்வற மேற்கொண்டு ஒழுகும்படி உடன்படுத்திப் பின்னர்; நுனக்கு ஈது உரைத்தாரை - இப்புத்த சமயவறங்களை உனக்குச் செவியறிவுறுத்தார் யார் என்று; நீ பொருக்க சொல் என்ன - நீ விரைந்து கூறுவாயாக! என்று கேட்ப; அவன் நாமம் மொக்கலன்

புத்தனார் முதன் மாணி - எனக்கிதனை உணர்த்தின ஆசிரியன் பெயர் மொக்கலன் என்பதாம் அவன் புத்தனுருடைய முதன் மாணுக்கனுமாவான்; சென்று முருக்குவாய்-அவனிடத்தே சென்று அவனையும் சொற்போரில் வென்றொழிப்பாயாக!; எனச் சொன்னான்-என்று வேண்டினன் என்க.

(வி – ம்.) இருக்கும்வாய் ஒருப்படுத்தி என்றது, ஆருகதநெறியில் ஒழுகும்படி செய்தென்றவாறு. ஈது-இப் புத்த சமயத்தை. பொருக்க-விரைய. மாணி – மாணுக்கன். அவனுடைய பெருமை கூறுவான் புத்தனார் முதன் மாணி என்றான். பகை வெல்லுவோர் மாற்றான் வலியறிதலும் இன்றியமையாமையின் இங்ஙனம் கூறினன் என்க.

முருக்குதல் - அழித்தல். மொக்கலன் – முத்கரன் என்பதன் திரிபு. (கூ௭)

அருக்கசந்திர வாதச் சருக்கம் முற்றும்

நான்காவது

# மொக்கல வாதச் சருக்கம்

## மொக்கலன் பள்ளி வருணனை

௨௮௭. நீவருத லொழியென்று
 நிறைபதும புரத்துக்கே
மாதிரந்தா னெறியாக
 மனம்போலச் சென்றெய்தி
முதுரையுங் காரணமு
 முழுதெழுதி யழகிதாய்ப்
போதுகளும் பொன்மணலும்
 புனைந்தினிய பொலிவிற்றாய்.

(இ - ள்.) நீ வருதல் ஒழி என்று-இவ்வாறு கூறி யானும் நின்னுடனே வருகின்றேன் என்ற அவ்வருக்க சந்திரனை நோக்கி நீலகேசி 'ஐய நீ! என்னோடு வருதல் ஒழிக' என்று கூறி அவன்பால் விடைகொண்டு; மாதிரந்தான் நெறியாக-வானமே வழியாக, மனம்போல - மனஞ்செல்லும் விரைவுபோல விரைந்து; சென்று-போய்; நிறை பதுமபுரத்துக்கே எய்தி - வளநிறைந்த பதுமபுரம் என்னும் அம் மொக்கலன் இருந்த நகரத்தை அடைந்து அந் நகரத்தின்கண்; மூதுரையும் காரணமும் முழுது எழுதி - புத்த சமயக் கருத்துக்களை விளக்கும் பழமொழிகளையும் அச்சமயச் சிறப் பிற்கியன்ற காரணங்களையும் முழுமையுற எழுதப்பட்டு; அழகி தாய் - மிகவும் அழகுடையதாய்; போதுகளும் பொன் மணலும் புனைந்து - மலர்களையும் பொன்னையும் மணலையும் கொண்டு அணி செய்யப்பட்டு; இனிய பொலிவிற்று ஆய் - காண்டற் கினிய பொலிவினையுடையதாய் என்க.

(வி - ம்.) நீ வருதலொழி என்றது அருக்கசந்திரனை நோக்கி நீலகேசி கூறியது. வளநிறைந்த பதுமபுரம் என்க. இதனால் மொக்கல னிருக்கு நகரம் பதுமபுரம் என்பது பெற்றாம். மாதிரம்-வானம். மனோ வேகம் வாயுவேகம்போல என்பதுபற்றி அவள் சென்ற விரைவிற்கு மனத்தை உவமை எடுத்தார். இனித் தான் கருதியாங்கு எனினுமாம்.

மூதுரை - பழமொழி. காரணம் புத்தசமயப் பெருமைக்குரிய காரணம் என்க. மொக்கலன் பள்ளியின் சுவர் முதலியவற்றில் மூதுரையும் காரணங்களும் முழுமுழுவுருவமாய்ப் பொறிக்கப்பட் டிருந்தன என்க. பொன்மணல் - பொற்றுகளுமாம்; அழகிய மணலு மாம். புனைதல் - அணிசெய்தல். (க)

இதுவுமது

உ௬அ. கோடிமகரக் கோபுரமு
நெடுமதிலுங் குடிஞைகளும்
தோடிமகரத் தூணிரையுஞ்
சொலற்கரிதாய்ச் சுவர்க்கத்தின்
படிமகரப் படிமையதப்
பள்ளிகண் டளியள்போய்க்
கடிமகரக் கடல்கடந்து
கலந்தந்த கலமென்றாள்.

(இ - ள்.) *கொடி மகரக் கோபுரமும் - கொடிகள் உயர்த்தப் பட்டு மகரமீன் வடிவிற்றாகிய கோபுரத்தையும்; நெடுமதிலும் - நீண்ட மதில்களையும், குடிஞைகளும்-ஞாயில்களையும்; தொடி மகரத் தூண் நிரையும் - பொற்பூண் கட்டி மகரமீன் வடிவம் செதுக்கப் பட்ட தூண்களின் வரிசையையும் உடையதாய்; சொலற்கரிதாய்-புகழ்தற்கரிய ஏனைய சிறப்புக்களையு முடையதாய்; சுவர்க்கத்தின் படி - மேனிலையுலகத்தை ஒப்ப, மகரப் படிமையது - மகரமான படிமையை யுடையதாகிய, அப்பள்ளி கண்டு - அம் மொக்கலனுறை கின்ற பள்ளியைக் கண்டு; அளியள் போய்-அருள்மிக்க அந் நீலகேசி அப்பள்ளியுட் புகுந்து பார்த்து; கடிமகரக் கடல் கடந்து கலம் தந்த கலம் என்றாள்-இப்பள்ளியின் வளங்களெல்லாம் இப்பள்ளிக் குரிய துறவோர் மிக்க மகரமீன் வாழ்கின்ற கடலைக் கடந்துபோய் ஆங்குள்ள நாட்டிலீட்டி மரக்கலத்தாலே கொணர்ந்த வளங்கள் போலும் என்று வியந்தனள் என்க.*

(வி - ம்.) *மகர கோபுரம் - மகரமீன் வடிவிற்றாகிய கோபுரம். குடிஞை-ஞாயிலென்னும் மதிலுறுப்பு. தொடி-பூண். அளியள்-அருளுடைய நீலகேசி. மகரப் படிமையையுடையது என்க. அப்பள்ளியின் ஆகுலநீர்மை கண்டு இப்பொருள் எல்லாம் இப் பௌத்தத் துறவியர் கடல் கடந்து சென்றீட்டி வந்தனபோலும் என்று வியந்தபடியாம்.*

**இதனால் அக்காலத்துப் பௌத்தத் துறவோர் கடல் கடந்துபோய்த் தமது சமயத்தைப் பரப்புதல் தலைக்கீடாக அந்நாட்டிலே நிரம்பப் பொருளீட்டிக் கொணர்ந்து ஆரவாரமுடைடாகப் பள்ளிகளமைத்து வாழ்ந்தனர் என்பது பெற்றாம்.** *இதனானும் அக்காலத்துப் பௌத்தரின் புன்மை புலப்படுத்தினமை நுண்ணிதின் உணர்க.* (உ).

இதுவுமது

உ௬௯. ஒழுக்கமுங் கல்விகளு
முரைத்தனவே யோப்பனகள்

இழுக்கில்லாப் பெருந்தவத்தி
லிங்கிகளைத் தான்கண்டு
முழுத்தாள தாய்ப்பள்ளி
முற்றத்தோ ரரைமரத்தின்
குழுக்கோம்பர் பிடித்தொருகாற்
குஞ்சித்து நின்றுதான்.

(இ - ள்.) ஒழுக்கமும் கல்விகளும் உரைத்தனவே ஒப்பனகள் - இனி, அப் பள்ளியிலுறையும் சங்கத்தார் ஒழுக்கங்களும் அவர்தம் சமயநூற் கல்வியும் மேற் கூறப்பட்டபடியே ஆரவார நீர்மையுடையனவேயாம்; தான் இழுக்கு இல்லாப் பெருந்தவத்து இலிங்கிகளைக் கண்டு - அந் நீலகேசி பின்னர் அப்பள்ளியுறையும் குற்றமற்ற பெரிய தவவொழுக்கந்தாங்கிய துறவோரையும் கண்டு; முழுத்தாள தாய் - கருவிகளாலே வெட்டப்படாமையால் முழுமையுடைய அடிப் பகுதியை யுடையதாய்; பள்ளி முற்றத்து ஓர் அரை மரத்தின் - அப் பள்ளியின் முற்றத்தே நிற்குமோர் அரசமரத்தினது; குழுக்கொம்பர் பிடித்து - கூட்டமான கிளைகளுள் ஒன்றைப் பிடித்துக்கொண்டு; ஒருகால் குஞ்சித்து நின்றாள் - தனது ஒரு காலைச் சிறிது தூக்கி நின்று என்க.

(வி - ம்.) முற்கூறப்பட்ட அப்பள்ளியின் ஆரவார நீர்மைக் கேற்பவே அவர் ஒழுக்கமும் கல்வியும் இருந்தன என்றவாறு. கள் விகுதி மேல் விகுதி. இழுக்கில்லாப் பெருந்தவம் என்றது இகழ்ச்சி. இழுக்கு - குற்றம்.

அரைமரம் - அரசமரம். பௌத்தர் அரசமரத்தைத் தெய்வமாக வழிபடுதலுண்மையின் அப்பள்ளியின் முற்றத்தே அரசமரம் வளர்த்துப் பேணி வைத்திருந்தனர் என்பது தோன்ற முழுத்தாள தாய்ப் பள்ளி முற்றத்து ஓர் அரைமரம் என்றார். (கூ)

நீலகேசி ஒருதுறவியை வினவுதல்

உஎ0. துன்னஞ்செய் தாடையைத்
துவர்தோய்த்துக் கோட்டியும்
பொன்னஞ்செய் பத்தங்கப்
புகையூட்டிக் கைசெய்து
தன்னமு மளித்தாய
தலைசோறியு மிடையிலையா
லென்னவற்றி னும்பயனை
யெனக்கறிய வுரையென்றாள்.

(இ. - ள்.) ஆடையைத் துன்னம் செய்து துவர் தோய்த்துக் கொட்டியும் - அங்ஙனம் சின்ற நீலகேசி அத்துறவோருள் ஒருவனை நோக்கி அடிகேள் நீயிர் நும்மாடையைத் தைத்து மருதந்துவர் தோய்த்துக் கையாலே புடைத்தும்; பொன் அம் செய் பத்து அங்கப் புகையூட்டி - அழகு செய்கின்ற பத்துறுப்பாலாய மணப் புகையுமூட்டி; கைசெய்து - மேலும் ஒப்பனைசெய்து, முழுமெய்யும் போர்க்கின்றீர்; அளித்தாய தலை சொறியுமிடை தன்னமும் இல்லை யால் - அளிக்கத்தக்க நுந்தலையில் தினவு தோன்றிற் சொறியவும் சிறிதுமிடமில்லை; என் அவற்றின் ஆம் பயனை எனக்கு அறியவுரை என்றாள் - இங்ஙனம் போர்த்தல் எற்றிற்கோ? அவ்வாடைகளால் நுமக்குண்டாகும் பயனை யான் அறியும்படி கூறுவீராக என்றாள் என்க.

(வி - ம்.) துவர் - மருதந்துவர். கொட்டுதல் - ஆடையை அடுக்குற மடித்து இருமருங்கும் கையாற் புடைத்தல். பொன்-அழகு. அம் : சாரியை. புகை - மணப்புகை. தன்னமும் - சிறிதும். முக்காடிட்டுப் போர்த்தலின் தலைசொறியும் இடமும் இல்லை. ஆதலால் நுந்தலை அளித்து என்று இரங்குவாள்போன்று அசதியாடினள் என்க. (௬)

நீலகேசி மொக்கலனை வினவுதல்

உ௪௧. ஆங்கவ ளதுவுரைப்ப
வதற்குரிய மறுமாற்றந்
தாங்களு முரைக்கில்லார்
தலைசாய்த்தங் கிருந்தார்
மூங்கைமையான் மொழிகொண்டேன்
மொக்கலநற் றேரயான்
பாங்கினால் வினவுவன்
படிறின்றி யுரையென்றாள்.

(இ - ள்.) ஆங்கு அவள் அது உரைப்ப - நீலகேசி அங்ஙனம் வினவ; தாங்களும் - அத்துறவோரெல்லாம்; அதற்கு உரிய மறுமாற்றம் உரைக்கில்லார் - அவ்வினவிற்கு மறுமொழி யாதுஞ் சொல்லாராய்; மூங்கையமையான் - ஊமைத்தன்மையுடனே; தலை சாய்த்து அங்கு இருந்தார் - தலைகவிழ்ந்து இருந்த அவ்விடத்திலேயே இருப்பாராயினர்; நல்தேர மொக்கல - அதுகண்ட நீலகேசி முதல்வனாகிய மொக்கலனை நோக்கி; நன்மையுடைய பௌத்தத் துறவியாகிய மொக்கலனே!; மொழிகொண்டு யான் பாங்கினால் வினவுவன் - மொழிகளாலே யான் முறைப்படி வினவுவேன்; படிறு இன்றி உரை என்றாள் - நீதானும் வஞ்சனையின்றி விடைகூறுவாயாக! என்று வேண்டினள்; என்க.

(வி - ம்.) ஆங்கு: அசை. அவன்: நீலகேசி. மறுமாற்றம்-விடை. தாங்களும் என்றது வினவப்பட்ட அத்துறவிகளேயன்றி ஏனைத் துறவோரும் என்பது குறித்தலின் எச்சவும்மை. மூங்கைமையான் தலைசாய்த் திருந்தார் என இயைக்க. ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருள் குறித்து ஒடு உருபின் பொருட்டாய் நின்றது. மொழி கொண்டேல் என்புழி, ஏல்: அசை, மொழிகொண்டு வினவுவன் என இயைக்க; என் மொழியை ஏற்றுக்கொண்டு உரை எனினுமாம். (ஞ)

இதுவுமது

உஎஉ. வீடிற்கே யெனின்ஞானம்
வேண்டாதே மூடியுமாற்
பீடிற்கே யெனினின்னிற்
பெருஞ்செல்வர் திருந்தினார்
மூடிற்றின் பயனென்னை
யெனவினவ மொக்கலனு
மூடிற்றுஞ் சிறிதுளதா
லுருவறிதற் கெனமொழிந்தான்.

(இ - ள்.) வீடிற்கே எனின் - ஐய! நீ (புடைவை கொண்டு கிழித்து மகதநாட்டுச் சித்திரவறைக் கண்ணுறுபோலத் துன்னஞ் செய்து மருதந்துவர் தோய்த்துக் கொட்டிப் புகையூட்டி இங்ஙனம் பெரிதும் வருத்தமுற்றுப் போர்க்கின்றது) வீடுபெறும் பொருட்டு என்று கூறுவாயாயின்; ஞானம் வேண்டாதே முடியும் - அவ்வீடு பேறு இப் போர்வையாலே கைகூடுவதாகிய அறிவினை வேண்டாமலே முடிவதொன்றாகும், அவ்வழி கற்றல் வேண்டா; பீடிற்கே எனின் - பிறர் மதிக்கும் பொருட்டே என்பாயாயின்; நின்னில் பெருஞ் செல்வர் திருந்தினார் - நின்னினுங் காட்டில் இங்ஙனம் போர்த்தலின்றியே பிறரால் நன்கு மதிக்கப்படும் பெரிய செல்வர்களே சிறந்தோராவர்; அவ்வழி நீதானும் துறவொழுக்கங் கொண்டு போர்வையால் மூடவேண்டா; பொருளீட்டலே அமையுமே; மூடிற்றின் பயன் என்னை - இவையன்றிப் போர்வையால் மூடியவிச் செயலாலெய்தும் பயன்தான் யாதோ?; என்று வினவ - என்று வினவா நிற்ப; மொக்கலனும் - அதுகேட்ட அம்மொக்கலன்றானும் அதற்கு விடையாக; மூடிற்றும் சிறிது உளது - மடந்தாய்! யாங்கள் போர்வையால் மூடும் இச்செயலாலும் சிறிது பயன் உளதுகாண்; உரு அறிதற்கு என மொழிந்தான் - அஃதி யாதெனின் இல்லறத்தார் எம்மைத் துறவோர் என்றுணர்ந்து உணவு முதலியன வழங்குதலேயாம் என்று கூறினான் என்க.

(வி - ம்.) இனி, அறிவொடு கூடிய துவராடையும் வீடுபேற்றுக் கருவியேயாம் எனிலோ நீயிர்,

"போர்த்தலுடை நீக்குதலின் பொடித்துகள் மெய்பூசல்
கூர்த்தபனி யாற்றுதல் குளித்தழலு ணிற்றல்
சார்த்தரிடு பிச்சையர் சடைத்தலைய ராதல்
வார்த்தைபிற செய்தவ மடிந்தமன மென்றான்"

என்பதனால் போர்த்தல் முதலியன வீடு பேற்றிற்கு நிமித்தமன்றெனவும் கூறிவைத்து, இப்பொழுது அறிவோடு கூடிய போர்வையும் ஏதுவாம் எனின், உடை நீக்குதல் முதலிய ஏனையவும் அறிவோடு கூடிய வழி வீட்டிற் கேதுவாமாதலின் அவற்றையும் நீ வெறாதே மேற்கோடல் வேண்டுமே! அன்றியும்,

"மூத்தார் முன் மத்தியத்தார் போற்போர்வை போர்த்திட்டான்
வாய்த்திரா வகைவேண்டித் துவர் துன்னம் வகுத்திட்டான்"

என்பதனால் நடுநாட்டார் வழக்கமாகப் போர்த்தானென்பதுஞ்சொல்லி, இப்பொழுது அறிவோடு கூடிய துவராடையும் வீட்டிற்கேதுவாமென்னின், அந்நடுநாட்டு மாந்தர் மகளிர் முன்செய்யும் ஆசாரங்கள் முதலாயினவும் வீட்டிற் கேதுவாதல் வேண்டும்; ஆதலால் போர்வை வீட்டிற் கேதுவாகாது என்பதுங் கொள்க.

இனி, பிறர் மதிப்பது கருதிப் போர்த்தேன் எனின் போர்வையின்றியே செல்வர் மாந்தர்களால் மதிக்கப்படுதலின் நீ போர்த்தல் வீண்: செல்வமே தேடுக என்பாள் பீடிற்கே எனின் பின்னிற்செல்வர் திருந்தினர் என்றாள்.

இனி, உருவறிதற்கு என்றது இல்லறத்தார் துறவோர் என்று அறிந்து எம்மைப் போற்றுதற்கு என்றவாறு. (சு)

நீலகேசி கூற்று

உஎக. படைப்பெளிதாற் கேடரிதாற்
பலகள்வர் நவையாரா
வுடைக்கிவைந்த வோலியற்று
வூன்றருவார்க் குணர்த்துமால்
விடக்கமர்ந்த வுள்ளத்தாய்
வேடமு மறிவிக்குந்
தொடர்ப்பாடும் பெரிதன்றாற்
றொட்டைநீ பூணியோ.

(இ - ள்.) தொட்டை நீ பூணி - அதுகேட்ட நீலகேசி மொக்கல! உருவறிந்து இல்லறத்தார் உணவிடுதலே துவராடையின் பயன் என்பாயாயின் பெருந்துயர்க்குக் காரணமான இவ்வாடையை விடுத்து நீ தோலை உடுத்தலே நன்றாம்; எற்றாலெனின்; படைப்பு எளிது - அதனைப் பெறுதலோ மிகவும் எளிதாம்; கேடு அரிது - இவ்வாடைபோல் விரைவில் கெடாது; பல கள்வர் நவையார் - ஆறலைக்கும் பல்வேறு கள்வர்களும்

இதனைப் பறித்தற்கு வருந்துதலிலர்; உடைக்கு இயைந்த ஒலி அற்று - உடுத்தற்கும் பொருந்திய ஆடையை ஒப்பது; ஊன் தருவார்க்கு உணர்த்துமால் - நீ விரும்பும் பயன்பெறுதற்கு அது நினக்கு ஊன் வழங்கும் இல்லறத்தார்க்கும் நீ துறவி என்பதனை அறிவிக்கும்; விடக்கு அமர்ந்த உள்ளத்தாய் – ஊன் உணவையே பெரிதும் விரும்புகின்ற துறவியே; வேடமும் அறிவிக்கும் - உனது துறவுக் கோலத்தையும் அஃதறிவிக்கும்; தொடர்ப்பாடும் பெரிது அன்று - அதனால் உண்டாகும் பற்றும் பெரியதன்று ஆதலால் என்றாள் என்க.

(வி - ம்.) இங்ஙனம் கூறவே துவராடை பெறுதலும் பெருந் துன்பம்; அது விரைவிற் கெட்டுப்போம்; ஆறலைப்போர் வருத்திக் கவர்வர்; அதன்பாற் பற்றுடைமையும் மிகப் பெரிதாம் என்றாளு மாயிற்று. ஊனைவிட ஊனையே நீயிர் பெரிதும் விரும்புவீர் என்பாள் ஊண் தருவார் என்னுது ஊன் தருவார் என்றும், விடக்கமர்ந்த வுள்ளத்தாய் என்றுங் கூறினள். ஒலி-ஒலியல் என்பது கடைகுறைந்து நின்றது. ஒலியல்-ஆடை. தோல் ஆடைபோறலின் ஒலியற்று என்றாள். தொடர்ப்பாடு – பற்றுடைமை. தோல் எளிதிற் பெறப்படுதலின் அதன்கண் பற்றுடைமையும் பெரிது அன்று என்றாள். தோடு - தொடு எனக் குறுகி நின்றது. தோடு - தோல். பூணி – பூண்க. (எ)

இதுவுமது

உஎஅ. பொன்கொண்டா ராயினும்
போர்வைபூச் செனிற்புலையன்
வன்கண்மை யாற்செய்த
வஞ்சமே யெனவளைப்பர்
தன்றன்மை யாகிய
தான்பழிப்பார் தாமுளரோ
வென்கண்டு வந்திங்க
ணிதுகொண்டா யெனச்சொன்னாள்.

(இ - ள்.) பொன் கொண்டாராயினும் - ஐய! உலகத்தார் கண்டபொழுது பொன்னென்றே கருதி வாங்குவாராயினும்; போர்வை பூச்சு எனின் - பின்னர் உரையாணியிட்டாராயுங்கால் இது பொன் னன்று பொற்குழம்பால் மேலே பூசப்பட்ட பிறிதோருலோகமாம் எனக் கண்டகாலத்தே; புலையன் வன்கண்மையாற் செய்த வஞ்சமே என - அந்தோ கீழ்மகன் கண்ணோட்டமின்றி நமக்குச் செய்த வஞ்சமே இஃதென்று சொல்லி; வளைப்பர் - அது கொடுத்தவனை வளைத்துப் பிடித்துத் துன்புறுத்துவர்; தன் தன்மையாகிய தான் பழிப்பார் தாம் உளரோ - அங்ஙனமின்றி அகமும் புறமும் தன்றன்மையேயுடைய தூய பொன் கும்பியிற்

இடப்பினும் அதனைப் பழிப்பாரும் உளராவரோ?; என்கண்டு வந்து - நீ என்ன சிறப்பினைக் கண்டு வந்து; இங்கண் இது கொண்டாய் - இங்கே இத்துவராடையைப் போர்த்துக் கொண்டாய்!; எனச் சொன்னாள் - என்று கூறினள் என்க.

(வி - ம்.) உலகத்தார் என்னும் எழுவாய் வருவித்தோதுக. வன்கண்மை – கண்ணோட்டமின்மை. தன்னன்மையாகிய தான் என்றது அகமும் புறமும் தனது பண்பேயுடைய பொன்னை என்றவாறு. எனவே புறவேடத்தாற் போற்றுதலகு அகநலமே உலகம் போற்றற்குக் காரணம் என்பதாயிற்று.

பொன், கொள்வோர் கண்டபோது பொன்னாயிருந்ததேனும் அகத்தே பிறிதொன்றாகி மேலே பொன் பூசப்பட்டதாயின் மேலே பொன்கண்டே மென்றிராது கொடுத்தானை அலைப்பர். அதுபோல நீயிர் இத்துவராடையாற் கொள்ளும் வேடம் நன்றேயெனினும், அகத்தே குற்றமுண்டாயின் இகழ்வர்; தூய பொன் கும்பியுட்கிடப்பினும் பழியார்; அவ்வாறே புறவேடம் அழுக்குடைத்தாயினும் காமமுதலிய அகக்குற்றமில்லையாகில் உலகத்தார் போற்றுவர், ஆதலால் பல்வேறு துன்பங்கட்கும் பல்வேறு உடைமை வேண்டுதற்கும் பல்வேறு அவாவிற்கும் மிக்க தீவினைக்குங் காரணமான இப் போர்வையில் மேலான தவவொழுக்கத்திற்கு ஆக்கமாக என்ன நன்மையைக் கண்டு இது கொண்டனை என்றவாறு.

பல்வேறு துன்பமாவன – பெறுதல் தைத்தல் துவரூட்டல் முதலியன. பல்வேறு பொருள் வேண்டப்படுதல் - ஆடைவேண்டுதல், அஃதொலித்தற்கு உவர் வேண்டுதல், புழுக்குப்பானை, விறகு முதலியன வேண்டுதல், ஊசி நூல் முதலாயின வேண்டுதல், மருதம்பூ முதலாயின வேண்டுதல், இன்னோரன்ன பிறவும் என்க. இங்ஙனம் பெறும் ஆடையும் இரண்டு வேண்டும்.

இனி, பல்வேறு அவாவாவன – நல்ல புடைவை கண்டால் இது துவராடைக்காமென்றவாவுதலும், பிறவுமாம்.

பல்வேறு தீவினையாவன–இல்லறத்தாரை வஞ்சித்துப் புடைவை கோடலும், சிரைப்பேன் முதலியவற்றைக் கொல்லுதலும், விறகு மருதம்பூ முதலியவற்றிலுள்ள சிற்றுயிரைக் கொல்லலும் பிறவுமாம்.

இனி, கோவணமட்டுங் கோடல் குற்றமில்லையாம் பிறவெனின் அற்றன்று. அதுவும் குற்றமுடையதே; என்னை? ஈட்டலும் பேணலும் பிறவும் கோவணத்திற்கும் கோடி பொருளுக்கும் ஒக்குமாதலின் என்க. என்னை?

"கோடி பொருளோடு கோவணக் கொத்திடும்
கோடி யுழவான் கொணரு மொருமகன்
ஓடி யுழலுமோர் கோவணக் கோர்மகன்"

என்பவாகலின்; (அ)

உஎ௫. உண்ணன்மை தவமென்றங்
குறுப்பெல்லா மறைக்கின்றாய்
திண்ணேன்ற மனமிலைநீ
சிறைபலவுஞ் செய்தலால்
பெண்ணேன்றும் பிறவென்றுந்
தானோக்கிப் பெரும்பேதாய்
கண்ணன்றோ வுள்ளத்தைக்
கலக்குவன வவைகாவாய்.

(இ - ள்.) உள் நன்மை தவம் என்று - உள்ளத்தின்கண் மாசில்லாமையாகிய நன்மையே தவம் என்று கூறிவைத்துப் பின்னர்; உறுப்பு எல்லாம் மறைக்கின்றாய் - நீ நின் உறுப்புக்கள் பலவற்றையும் போர்வையாலே மறைத்துழலுகின்றாய்; சிறை பலவுஞ் செய்தலால் - நீ இவ்வாறு நின் மனத்திற்குப் பலவேறு தடைகளையுஞ் செய்தலாலே; நீ திண் என்ற மனம் இலை - நீ திட்பமான மனமுடையை யல்லை யென்பது தேற்றம்; பெண் என்றும் பிற என்றும் தான் நோக்கி - எதிரே காணப்படும் பொருளை இது பெண் என்றும் பெண்ணல்லாத பிறபொருள் என்றும் வேற்றுமை செய்து; பெரும் பேதாய் - மிக்க அறியாமையையுடையோனே; கண் அன்றோ - நின் கண்களல்லவோ; உள்ளத்தைக் கலக்குவன - நின்னெஞ்சத்தைக் கலக்குவனவாம்; அவை காவாய் - காக்கவேண்டுமாயின் அவற்றையே மூடி மறைத்தல் வேண்டும், நீயோ அவையிற்றைப் பாதுகாக்கின்றிலையே என்றாள் என்க.

(வி - ம்.) உறுப்பெல்லாம் மறைக்கின்ற இச்செயலே நின் உள்ளத்தின் கள்ளத்தை உணர்த்தும் என்பாள், சிறை பலவுஞ் செய்தலால் திண்ணென்ற மனமிலை என ஏதுவாக்கினாள். சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் நின்னிறைகாக்கும் காப்பே தலை ஆகலால் இப் போர்த்தல் முதலியன பயனில் செயல் என்பது கருத்தென்க.

இனி, மறைத்துக் காக்கவேண்டுமாயின் பெண் முதலாயின காட்டி நின்னறிவினை வேறுபடுத்துவனவாகிய கண்களையன்றோ மறைத்தல் வேண்டும் அது செய்யாமை என்? என்பாள் பெண்ணென்றும்.........அவை காவாய் என்றாள் என்க. காவாய் என்பதற்குக் காத்திடுக எனினுமாம். (௧)

இதுவுமது

உஎ௬. பெண்பாலார் கண்டக்காற்
பேதுறுவ ரெனவுரைப்பாய்
திண்பான்மை யவர்க்கழியச்
சிதையுநின் றவமாயின்

மண்பாலா ரவருள்ள
மாண்புள தா யுரையாரா
லெண்பாலும் படாதாகி
யிழுக்குநின் குணமங்தோ.

(இ - ள்.) பெண்பாலார் கண்டக்கால் பேதுறுவர் என உரைப்பாய் - என்னெஞ்சம் திட்பமுடையதே, அஃதவரைக் கண்டு கலங்காது காண்! அப்பெண்பாலார் கட்டிளமையும் அழகு முடைய எனதுடம்பைக் கண்கூடாகக் காணுங்கால் காமுற்றுப் பெரிதுந் துன்புறுவரல்லரோ? அவர் துன்புறுமைப் பொருட்டே யான் இங்ஙனம் என்னுடம்பைப் போர்க்கின்றேன் என்று கூறுவா யாயின்; அவர்க்குத் திண்பான்மை அழிய நின் தவம் சிதையு மாயின் - அப்பெண்பாலாருடைய மனத்திட்பம் அழியுமாயின் நின்னுடைய தவமும் சிதைந்தொழியும் என்பது நின் கருத்தா யிற்று அங்ஙனமாயின்; மண்பாலார் அவர் உள்ளம் மாண்புள தா உரையார் - மண்ணுலகிலுள்ள சான்றோர் அம்மகளிர் உள்ளம் மாண்புடையது என்று ஒருபொழுதும் கூறுர்காண்; அந்தோ எண்பாலும் படாதாகி இழுக்கும் நின் குணம் - ஐயகோ! அவர் நீ போர்த்தினும் போர்த்தாவிடினும் நின்னைக் கண்டு காமுறுதல் ஒழியார் ஆகவே நின் தவப்பண்பு நினக்கொருகாலும் கைகூடாது அழிதல் ஒருதலை என்றாள் என்க.

(வி - ம்.) "பெண்பாலார் பேதுறுவர் என்று போர்க்கின்றேம்" என்று மொக்கலன் கூறினுகை அவன் கூற்றை வழிமொழிந்து நீலகேசி அதற்குக் குற்றம் கூறியபடியாம். நின் றவம் சிதையும் என்பதுன் கருத் தாயின் என்றவாறு. மண்பாலார் என்றது, சான்றோரை. சான்றோர் பெண்பாலார் உள்ளம் பீடுடையதன்று என்பவாகலின் அவர் நீ போர்வையான் மூடினும் மூடாவிடினும் நினதிளமை முதலியவற்றைக் கருதலளவையானுணர்ந்து நின்னைக் காமுறுதல் ஒழியார். அவ்வழி நினக்குத் தவம் கைகூடாதொழியும் என்றவாறு. சான்றோர் பெண் பாலார் உளம் மாண்புடையதன்றென்பதனை,

"பெண்ணெனப் படுவ கேண்மோ
பீடில பிறப்பு நோக்கா
உண்ணிறை யுடைய வல்ல
வொராயிர மனத்த வாகும்
எண்ணிப்பத் தங்கை யிட்டா
லிந்திரன் மகளு மாங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற் றாற்போன்
மெலிந்துபின் னிற்கு மன்றே"

எனவரும் சிந்தாமணி (கவிகள்) முதலியவற்றானு முணர்க. (௪0)

இது பௌத்தர் மண்டையின் பயனின்மை கூறுகின்றது.

உ௭௭. இழுக்கினு மிழத்தியா
லிடறினு மதுவேயால்
விழுக்கலமால் வினைபெரிதால்
வினைக்கேடாந் தொழிறருமா
லொழுக்கிற்கு முரித்தன்றா
லூணோரிடையூ றுடன்கொடுக்கும்
வழுக்கின்றித் தவஞ்செய்யின்
மண்டையாற் பயனென்னோ.

(இ - ள்.) இழுக்கினும் இழத்தியால் - ஐய! நீ ஏந்திய மண்டை கையிலிருந்து தவறிக் கீழே வீழ்ந்தவிடத்து அஃது உடைந்து போதலாலே இழந்து விடுவாய்!; இடறினும் அதுவே யால் - அன்றி நீ கால்இடறி வீழுமிடத்தும் அங்ஙனமே அதனை இழந்திடுவாய்; விழுக்கலமால் - சிறப்புடைய கலனுகலின்; வினை பெரிதால் - அதனைச் செய்துகோடற்கண் செய்யவேண்டிய தொழிலும் மிகுதியாகும்; வினைக்கேடு ஆம் - அச்செயலில்லீடு படுங்கால் நின்றவத்தொழில் கேடெய்து மளவு; தொழில்தரும் - அது நினக்குத் தொழிலையுண்டாக்கும்; ஒழுக்கிற்கும் உரித்து அன்று - நீ மேற்கொண்டுள்ள தவவொழுக்கிற்கும் உரிமை யுடையதுமன்று; ஊண் ஓர் இடையூறு உடன்கொடுக்கும் - நீ அதனுல் ஊண் ஏற்றுவருங்கால் உடைந்தொழியின் அப்பொழுதே உணவின்மையாகிய துன்பத்தையும் கொடுக்கும்; வழுக்கு இன்றித் தவஞ்செய்யின் - நீ குற்றமின்றித் தவஞ்செய்வாயாயின், இத்தனை இடையூறுகளையுடைய; மண்டையால் பயன் என் - இம் மண்டையாலே அத்தவத்திற்குண்டாகும் பயன்தான் யாதுளது கூறிக்காண்; என்றுள் என்க.

(வி - ம்.) இழுக்குதல்-கையினின்றும் தவறிவிழுதல். இடறுதல்-காலிடறி வீழ்தல். விழுக்கலம்-எவ்விடத்தும் கிடைத்தலில்லாத சிறப் பினையுடைய கலம். வினை - அதனைச் செய்யுந் தொழில். வினைக்கேடு என்றது, தவவினைகெடும் என்றவாறு. ஒழுக்கு - தவவொழுக்கம். ஒழுக்கிற்குமுரித்தென்றது, அது தவத்திற்கு இன்றியமையாத தொரு கருவியுமன்று என்றவாறு. ஊண் ஏற்றுவரும்பொழுதுடையில் ஊண்கெட்டு உடனே இடையூறுந் தரும் என்க. மண்டை - மண்ணு லியன்றதோர் இரத்தற்கலம். (௧௧)

உ௭அ. நிறந்தூய்தா நீரினல்
வாய்தூய்தாம் பாகாற்
பறைந்துபோய் மேல்கோலாற்
பல்லெலாந் தூயவாம்

புறந்தூய்மை செய்தக்கால்
புரிவுள்ளந் தூய்தாமே
லறந்தூய்மை கணிகையர்க்கே
யாற்றவு முளதாமால்.

(இ - ள்.) நீரினால் நிறந்தூய்தாம் - நீராடுதலாலே உடம்பு அழுக்ககன்று தூயதாகும்; பாகால் வாய் தூய்தாம் - பாக்குடனே வெற்றிலை மெல்லுதலாலே நாற்றங்கெட்டு மணமுடைத்தாய் வாய் தூயதாகும்; மெல்கோலால் பறைந்து போய் பல் எலாம் தூய ஆம் - கோல் மென்று துலக்குதலாலே ஊத்தையெலாந் தேய்ந்தகன்று பற்கள் எல்லாம் ஒளியுடையவாய்த் தூயன ஆகும்; புறந் தூய்மை செய்தக்கால் - இவ்வாறு புறந்தூய்மை செய்துழி; புரி உள்ளந்தூய்து ஆமேல் - விரும்புந்தன்மையுடைய உள்ளமுந் தூயதாதல் ஒருதலை என்பாயாயின்; கணிகையர்க்கே அறந் தூய்மை ஆற்றவும் உள தாம்-இவ்வாறு புறந்தூய்மை செய்தலில் நும்மினும் சாலச்சிறந்தவராகிய விலைமகளிர்க்கே துறவறம் பெரிதும் கைகூடுவதொன்றாகுங்காண் என்றாள் என்க.

(வி - ம்.) நிறந்தூய்மை...புரிவுள்ளந்தூய்தாம் என்னுந் துணையும்; மொக்கலன் கூற்றை நீலகேசி கொண்டு கூறியபடியாம்.

நீலகேசி துவராடைக்கும் மண்டைக்கும் குற்றங்கள் பல காட்டி இகழ்ந்தமை கண்ட மொக்கலமுனிவன் சினந்து அக்குற்றங்களை மறுத்துரைக்கமாட்டாது மற்றொன்று கூறுவானாய் யாங்கள் நீராடல் முதலியன செய்து புறந்தூய்மை பெறுமாற்றால் அகந்தூயேமும் ஆவேம் என்றானாக, அதுகேட்ட நீலகேசி புறந்தூய்மையாலே அகந் தூய்மையுறுவதாயின் விலைமகளிர் எல்லாம் சிறந்த துறவோரேயாவர் காண்! என்று நகுகின்றாள் என்க.

பாகு – பாக்கு. பறைதல் – தேய்தல். மெல்கோல்-பற்றுலக்கும் கோல். ஆற்றவும் – மிகவும். (கஉ)

உஎகூ. சவருடைய மனைவாழ்க்கை
யெனப்போந்து தவம்புரிந்தாய்
பவருடைய விறகிறுத்துப்
பலகலங்க ளொருப்படுத்துற்
றவரோடு பல்கூறை
யுடன்புழுக்கி யொலித்திடு நீ
துவரடுதி பூவடுதி
சோறடலே முனிந்தாயோ.

(இ - ள்.) சவர் உடைய மனைவாழ்க்கை எனப் போந்து - 'துறவியே! இல்லின்கண் மனைவியோடிருந்து அறஞ்செய்து

வாழும் வாழ்க்கை பல்வேறு குற்றங்களையும் உடையது என்று கருதி அதனைத் துறந்து இப்பள்ளியில் வந்து; பவர் உடைய விறகு இறுத்து - புறம்வலிதாகிய விறகுகளை முரித்துவைத்து; பல கலங்கள் ஒருப்படுத்து - பல்வேறு பாண்டங்களையும் ஒருங்கே சேர்த்து; உற்று - முனைந்து; உவரோடு பல்கூறை - உவர்மண் சேர்த்த பலவாகிய ஆடைகளையும்; உடன்புழுக்கி ஒலித்திடும் நீ- ஒருசேரப் புழுக்கிப்போய் நீர்த்துறையிலே ஒலிக்கின்ற நீ பின்னரும்; துவர் அடுதி பூவடுதி - துவர்ப்பொருளைச் சமைக்கின்றாய், மருதம்பூவைச் சமைக்கின்றாய்; சோறு அடலே முனிந்தாயோ - இத்துணையும் சமைத்தும் இன்றியமையாச் சோறு சமைத்தல் ஒன்றனையே வெறுத்தனையோ? அதனையும் சமைத்துக் கோடலால் உனக்கு வருந்தீங்கென்னை? என்றாள்; என்க.

(வி - ம்.) சவருடைய: ஒருமைப்பன்மை மயக்கம்; ஈறுகெட்டது எனினுமாம். பவர்-புறவலிமை. அஃதாவது புறத்தே காழ்ப்புடைமை. இறுத்தல் துன்பம் என்பது தோன்றப் பவருடைய விறகு என்றாள். கலம் - பாண்டம். உவர் - உவர்மண். ஒலித்தல் - கல்லிற் றுவைத்தல். பூ - மருதம்பூ. வீண்பொருளாகிய இவற்றையெல்லாம் மிகவும் முயன்று சமைக்கின்ற நீ இன்றியமையாச் சோற்றைமட்டும் சமையாது விடுவானேன் என்றவாறு. (௧௯)

உ௮௦. வண்ணாரந் துன்னாரம் மச்சிகமே கச்சாரஞ்
சண்ணார மெனப்பிறவுந் தவத்துள் நீ கற்றனவா
லெண்ணார்ந்த காரங்க ளில்லகத்தே பயின்றாயே
லுண்ணாயே வயிறார வோர்ப்பொன்று மிலையேகாண்.

(இ - ள்.) வண்ணாரம் துன்னாரம் மச்சிகம் - ஐய! நீ துணி வெளுக்கின்ற வண்ணாரத் தொழிலென்றும் துணி தைக்கின்ற துன்னத்தொழில் என்றும் தலைமழிக்கும் சிரைத்தற் றொழிலென்றும்; கச்சாரம் சண்ணாரம் எனப் பிறவும் - கச்சுக்குத்துந் தொழிலென்றும், குடைகுத்துந் தொழிலென்றும் சூயத்தொழில் சக்கிலியத்தொழில் என்றும் பிறதொழில்களென்றும்; தவத்துள் நீ கற்றன - இத்தவவொழுக்கத்தினூடே எத்துணைத் தொழில்கள் உள்ளன நீ கற்றவை; எண் ஆர்ந்த காரங்கள் இல்லகத்தே பயின்றாயேல்- இங்ஙனம் எண்ணிக்கை மிகுந்த தொழில்களை நீ நின் இல்லிலிருந்தே செய்வாயாயின; வயிறு ஆர உண்ணாயோ - நின் வயிறு நிரம்ப உண்ணமாட்டாயோ? இங்கு இத்துணைத்தொழில் செய்தும் இரந்துண்பானேன்; ஓர்ப்பு ஒன்றும் இலையேகாண் - நீ சிறிதும் ஆராய்ச்சி உடையை அல்லை காண்! என்றாள் என்க.

(வி - ம்.) வண்ணாரம் முதலிய இத்தொழில்களைச் செய்யவும் பிச்சை புகவுமே நின் பொழுதெல்லாம் போக, நீ தவச்செயல் எங்ஙனம்

செய்குவை என்றிடித்துரைப்பாள் இவை நீ தவத்துள் கற்றனஎன்றுள். எண் ஆர்தல் - எண்ணிக்கையில் மிகுதல். காரம் - காரியம்; தொழில். துன்னரம் - தையற்றொழில். மச்சிகம் - சிரைத்தற்றொழில். கச்சாரம் கச்சுக்குத்துந் தொழில். சண்ணாரம் - குடைகுத்துந் தொழில். (௧௪)

துறவோர்க்கு இன்றியமையாதது சோறு ஒன்றே எனல்

உ௮௧. சிறந்தாய்க்கீ துரைக்கலாஞ்
சிந்தனையை முடிப்பதே
துறந்தார்க்குக் கடனாகிற்
சோறலாற் பிறவேண்டா
விறந்தார்க்கு மெதிரார்க்கு
மிவட்காலத் துள்ளார்வான்
பிறந்தார்க்கு மிதுவன்றிப்
பிறிதோன்று சொல்லாயோ.

(இ - ள்.) சிறந்தாய்க்கு ஈது ஒன்று உரைக்கலாம் - தவவொழுக்கத்தே சிறந்த மொக்கல முனியே யான் நினக்குரைத்தற்குரிய உறுதிப் பொருளாக ஒன்று கூறவேண்டுமேல் இஃதொன்றுமே இன்றியமையாப் பொருள் என்று கூறலாம். என்னை; துறந்தார்க்குச் சிந்தனையை முடிப்பதே கடன் ஆகில்-உலக வாழ்க்கையைத் துறந்த சான்றோர்களுக்குப் பற்றுதற்குரிய புலன்களிலே செல்லுகின்ற நினைவினைத் துவரத்தீர்த்து விடுவதொன்றுமே செய்தற்குரிய கடமை என்பது யாரானும் மறுக்கமுடியாத வாய்மையாயின்; சோறு அலால் பிற வேண்டா - மனமடக்குதலாகிய அச் செயற்கரிய செயலைப் பின்னும் பிழைத்திருந்து செய்து கைவரப் பெறுதற்கு இன்றியமையாச் சோறுமட்டுமே அவர்க்கு வேண்டப்படும பொருளாவதன்றி வேறு எப்பொருளும் வேண்டப் படாதனவேயாம்; இறந்தார்க்கும் எதிரார்க்கும் இவண் காலத்து உள்ளார்- துறந்தோர்க்கேயன்றி இறந்தொழிந்தவர்க்கும் இனிப் பிறந்து வாழப்போகின்ற எதிர்காலத்தவர்க்கும் இவ்வுலகத்தே இப்பொழுது வாழ்பவர்க்கும்; வான் பிறந்தார்க்கும் - வானுலகத்தே சென்று தேவராய்ப் பிறந்தோருக்கும்; இது வன்றிப் பிறிது ஒன்று சொல்லாய் - இச்சோற்றையன்றி இன்றியமையாப் பிறிதொரு பொருள் உளதாயின் கூறிக்காண் என்றாள் என்க.

(வி - ம்.) இதனைத் துணிந்துரைக்கக்கூடும் என்பாள் ஈது உரைக்கலாம் என்றாள். சிறந்தாய் என்பதிகழ்ச்சி. பற்றால் வருவது பிறப்பு அஃதற்றார் உறுவது பிறவாமை என்பது எல்லாச் சமயத்தார்க்கும் ஒத்த முடிவாதலின் சிந்தனையை முடிப்பதே துறந்தார்க்குக் கடன் என்றாள். பற்றுதற்குரிய புலன்களில் நினைவு செல்லாதடக்குதலைச்

சிந்தனையை முடிப்பது என்றாள். இங்ஙனம் மனமடக்குஞ் செயல் மிகவும் அரிதாதல் பற்றி அப்பயிற்சி முடியுந்துணையும் உயிர்வாழ்தல் இன்றியமையாமையின் அதற் கின்றியமையாச் சோறு ஒன்றுமே அவர்க்கு வேண்டப்படும் பொருள் என்றாள். ஏனையவெல்லாம் ஆரவார நீர்மையவே என்பது கருத்து. உயிர் வாழ்வோர் மாந்தராயினும் தேவராயினும் உணவு வேண்டலின் வான் பிறந்தார்க்கும் அது வேண்டும் என்றாள். யான் கூறுவது முக்காலத்திற்கும் பொருந்தும் காலங்கடந்தார்க்கும் பொருந்து மென்பாள் இறந்தார்க்கும்......வான் பிறந்தார்க்கும் இதுவன்றிப் பிறிதொன்று சொல்லாயோ என்றாள். (௧௭)

உ௮௨. உண்டியா லுடம்புளதா
லுடம்பினா லுணர்வாமென்
றெண்டிசையும் பரந்திசைப்ப
வீதுனக்கே தெரியாதோ
தண்டியாய்க் கழியாது
தவஞ்செய்த லுறுதியேற்
பண்டியாற் போக்குநின்
பஃறொடர்ப்பா டெனச்சொன்னாள்.

(இ - ள்.) உண்டியால் உடம்பு உளது ஆம் உடம்பினால் உணர்வு ஆம் என்று - உணவினாலே உடம்பு அழியாமல் நிலை பெறுவதாம்; அவ்வுடம்பினாலே உணர்வு ஆக்கமுறும் என்று சான்றோர்கள்; எண் திசையும் பரந்து இசைப்ப - எட்டுத் திசை களினும் சென்று மக்கட்குக் கூறுவர்; இவ்வறிவுரை நீ அறிய மாட்டாயோ? தண்டியாய்க் கழியாது - வீணே வாழ்நாளைத் தடிய னாய்க் கழியாமல்; பண்டியால் தவம் செய்தல் உறுதியேல் - வயிற்றை ஓம்பிக்கொண்டு பிறவிப்பயன் கோடற்குத் தவஞ் செய்ய முயல்வாயானால்; நின் பல் தொடர்ப்பாடு போக்கு எனச் சொன் னாள் - நின்னுடைய பற்றுக்குக் காரணமான இவ்வாரவார ஆடை முதலிய பல்வேறு பொருளின் தொடர்பினை விட்டொழிவாயாக! என்று கூறினள் என்க.

(வி - ம்.) உண்டியால் உடம்புளதாம் என்பதனை,

"மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"
(மணி - ௧௧ - ௯௫, ௯௬)

எனவும்,

"மக்கள் யாக்கை உணவின் பிண்டம்" (மணி. ௩௦ - ௩௦)

எனவும் வரும் மணிமேகலையானும்,
உடம்பானுணர்வாம் என்பதனை,

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே"
எனவரும் திருமந்திரத்தானு முணர்க. (திருமந். எஉச)

சான்றோர் எண்டிசையும் இசைப்ப என்க. நின் சமயத்தாரும் ஈதுரைப்பரே! ஈது உனக்கே தெரியாதோ? என்றவாறு.

தண்டி – தடியை யொப்பவன். பண்டியால் தவஞ்செய்த லுறுதி யேல் என மாறுக. பண்டி – வயிறு. வயிறோம்புதல் மட்டுமே செய்து தவஞ்செய்வாயாயின் என்பது கருத்து. பல்தொடர்பு என்றது ஆடை முதலியவற்றை. (சக)

## மொக்கலன் நீலகேசியைச் சினந்து அவள் சமயத்தை ஆராய்தல்

உஅரு. அருளுடையா ளுரைப்பக்கேட்
டாங்காரித் தவனுந்தன்
பொருளுடைமைத் தருக்கினும்
புன்ஞானக் களிப்பினு
மருளுடையார் மதிப்பினு
மாற்றந்தான் செயற்பொருட்டா
லிருளுடைந்த கூந்தலா
ளிட்டத்தை யெண்ணுவான்.

(இ - ள்.) அருள் உடையாள் உரைப்பக்கேட்டு-அருண்மிக்க நீலகேசி இங்ஙனம் கூறக்கேட்டு; அவனும் - அம் மொக்கல முனிவனும்; தன் பொருளுடைமைத் தருக்கினும் - தான் பெற்றுள்ள பொருள் காரணமாக வுண்டாகிய இறுமாப்பினாலும்; புல் ஞானக் களிப்பினும் - தனது மருட்காட்சி காரணமாகப் பிறந்த பொச்சாப் பினாலும்; மருள் உடையார் மதிப்பிலும் - அறியாமையுடைய மாக்கள் தன்னை மதிக்கின்றமையாலும்; ஆங்காரித்து - தான் என்னுஞ் செருக்குற்று; மாற்றந்தான் செயற் பொருட்டால்- தான் அவளோடு சொற்போர் புரிந்து அவளை வெல்லுதற் பொருட்டாக; இருள் உடைய கூந்தலாள் - இருண்ட கூந்தலையுடைய அந்த நீலகேசியின்; இட்டத்தை-விருப்பமான சமயத்தை; எண்ணுவான்- ஆராய்பவன்; என்க.

(வி - ம்.) நீலகேசியின் மொழிகேட்டுச் சினந்த மொக்கலன் அவளோடு சொற்போர் புரிந்து வெல்லும் பொருட்டு அவள் எந்தச் சமயத்தைச் சார்ந்தவள் என்று ஆராய்பவன் என்பது கருத்து. ஆங்காரித்தல் – செருக்குறுதல்.

இருளுடைக் கூந்தலாள் என்றது நீலகேசியை. இட்டம்-விரும்புஞ் சமயம். அவள் கருத்தை எனினுமாம். (௪௭)

மொக்கலன் கூற்று

உ௮௪. தரணென்று நன்றென்று
ளென்றன்மை யுருவென்றாள்
அரணென்னத் தெளிந்ததுதா
னாருகத மேமன்னு
மூரணின்ற துண்மையான்
மொக்கலனு முனிந்துரைப்பா
னிரணியனைப் போல்வந்திங்
கிடர்ப்பட்டா யென்றானே.

(இ - ள்.) என்றும் தரண் நன்று என்றாள் - இவளோ எப்பொழுதும் தூய பொன் கும்பியுட் கிடப்பினும் நன்மையுடையதே என்று கூறினள்; என் தன்மை உரு என்றாள் - எனது தன்மையைப் போர்வைப்பூச்சுப் போன்று புறவேடம் என்றாள், ஆதலால்; அரண் என்னத் தெளிந்ததுதான் ஆருகதமே - இவள் தனக்குப் பாதுகாப்பாகத் தெளிந்து மேற்கொண்ட சமயம் ஆருகதசமயமே ஆதல்வேண்டும் என்றுட் கொண்டு; மன்னும் முரணின்றது உண்மையால் - முன்னமே அச் சமயத்தார் பால் தனக்குப் பகையுண்மையாலே; மொக்கலனும் - அந்த மொக்கலன் என்னும் துறவி; முனிந்து உரைப்பான் - நீலகேசியைச் சினந்து கூறுபவன்; இங்கு இரணியனைப்போல் வந்து இடர்ப்பட்டாய் என்றான் - ஏடி, நீ என் ஆற்றலறியாது முன்னர் என்பால் சொற்போர் செய்ய வந்து பெரிதும் துன்புற்றோடிப்போன இரணியனைப்போலே வந்து பெரிதும் இடர்ப்பட்டனை என்று கூறினன் என்க.

(வி - ம்.) தரண் - தூயபொன். தரண் என்றும் நன்று என்றாள் என்றது, முன்பு நீலகேசி தன்றன்மையதாகிய பொன்னைப் பழிப்பார் உளரோ என்றதனை. இதனால் இவள் ஆருகத சமயத்தைச் சார்ந்தவள் என்றுணர்ந்தனன் என்பதனை, என்னை? அமணத்துறவோர் வேடம் யாதும் புனைதலிலராதலின் இங்ஙனம் உவமை எடுத்தாள் என்பது அவன் கருத்தாதலின் என்க. இனி என் தன்மை உருவென்றாள் என்பது எனது துறவுத்தன்மைவெறும் வேடமே என்றாள் என்றவாறு. முரண் - பகைமை. இரணியனைப் போல் வந்திடர்ப்பட்டாய் என்றதனால் இவன்பால் முன்பு இரணியன் என்னும் ஒரு சமயக்கணக்கன் சொற்போருக்கு வந்து தோற்றோழிந்தான் என்பது பெற்றாம். தெளிவுபற்றி இடர்ப்பட்டாய் என இறந்த காலத்தாற் கூறினான். இஃது இரணியனைப் போல நீயும் என்னுடன் சொற்போர் புரிந்தால் உறுதியாகத் தோற்றோழிவாய், வாளாசெல்வதே உனக்குப் பெருமையாம் என்று குறிப்பால் அவளுக்கு அறிவுறுத்தியது. (௪௮)

நீலகேசி தன் வெற்றி விளம்பல்

உ௮௭. என்னாலும் வெலப்பட்டா
ரிருவருள ரிங்கவரைச்
சொன்னாலு மறிதிநீ
துடிகடியு மிடையுடைய
கொன்னாணு நெடுவேற்கட்
குண்டலமா கேசியு
மன்னாளுக் கறமுரைத்த
வருக்கமா சந்திரனும்.

(இ - ள்.) என்னாலும் வெலப்பட்டார் இருவர் உளர் - அது கேட்ட நீலகேசி ஐயா! துறவியாரே! நும்மால் வெல்லப்பட்டான் ஒருவனே போலும்; என்னால் வெல்லப்பட்ட சமயக்கணக்கர் இருவருளர்காண்; இங்கு அவரைச் சொன்னாலும் நீ அறிதி - இங்கு அவர் பெயரை யான் சொன்னாலும் நீ அறிந்து கொள்ளுவாய்; துடிகடியும் இடையுடைய கொல் நெடுவேல் நாணும் கண் குண்டலமாகேசியும் - உடுக்கையைப் பழித்த இடையினையும் கொல்லுந் தொழிலாற் சிறந்த நெடிய வேல் நாணும் கண்களையும் உடைய குண்டலகேசி என்னும் பிக்குணியும்; அன்னாளுக்கு அறம் உரைத்த அருக்க மாசந்திரனும் - அக் குண்டலகேசிக்குப் புத்தர் அறமறிவுறுத்த அருக்கசந்திரனும் ஆவர் காண் என்றாள் என்க.

(வி - ம்.) நின்னால் வெலப்பட்டான் ஒருவன் எனில் என்னால் வெலப்பட்டார் இருவர் என இதனானும் தானே மிக்கவள் என்றுணர்த்தியபடியாம். அருக்கசந்திரன் நின் மாணாக்கனாகலின் நீ எளிதில் அறிந்து கொள்வாய் என்பதுபட அவரைச் சொன்னாலும் நீ அறிதி என்றாள். எனவே, நின்னாசிரியர் கிளைகளைக் களைந்தேன் இப்பொழுது முதலையே அழித்தொழிக்க வந்துள்ளேன் என்பது குறிப்பு என்க. (கக)

மொக்கலன் ஐயுற்று வினாதல்

உ௮௯. என்றாளை முகநோக்கி
யிதுபெரிதும் பொய்த்தனைநீ
யொன்றாத கொள்கையா
ருலகினுள யாவரையும்
வென்றாள்மற் றிவள்சம்பு
விரதியாய்த் திரிந்தெங்கும்
தன்றூரம் பிறர்க்கீந்தான்
றருமங் கொண்டேன்றாய்.

(இ - ள்.) என்றனை முகம் நோக்கி - என்று கூறிய நீலகேசியின் முகத்தைநோக்கி அம்மொக்கலன்; இவள்-நின்னாற் கூறப்பட்ட அக்குண்டலகேசிதானும்; தன் தாரம் பிறர்க்கு ஈந்தான் தருமம் கொண்டு - தன்மனைவியையும் இரவலர்க்கீயும் வள்ளலாகிய புத்த பெருமான் திருவாய் மலர்ந்தருளிய அறங்களை நன்குணர்ந்து கொண்டு; எங்கும் சம்பு விரதியாய்த் திரிந்து - உலகெங்கும் நாவல் நட்டுச் சொற்போராற்றுதலையே நோன்பாகக் கொண்டவளாய்ச் சென்று; ஒன்றாத கொள்கையால் உலகின் உள யாவரையும் வென்றாள் - தான கொண்ட பௌத்த நெறியோடு பொருந்தாத கொள்கையுடையோராகிய உலகிலுள்ள சமயக்கணக்கரையெல்லாஞ் சொற்போரில் வென்று வாகையுஞ் சூடினாள் காண்; நீ இது பெரிதும் பொய்த்தனை - அத்தகைய குண்டலகேசியை யான் வென்றேன் என்னுமிதனால் நீ மிகவும் பொய்யே புகன்றனை; என்றானால் - என்றிகழ்ந்தவனாய் என்க.

(வி - ம்.) குண்டலகேசி என்பாள் ஒரு வணிக மகள்; இவள் ஒருநாள் மேனிலை மாடத்தே விளையாடும் பொழுது, புத்த சமயத்தைச் சார்ந்தவனும் வணிகனும் காளன் என்னும் பெயரையுடையவனும் ஆகிய கயமகன் ஒருவன் பலவழியானும் களவு செய்து வாழ்ந்து வருபவனை, மன்னன் கொல்லுக என்று கட்டளை யிட்டமையானே பணிமாக்கள்சிறைப்படுத்திக் கொலைக்களத்திற்குக்கொண்டுபோயினர், அக்கள்வனாகிய காளனைக் கண்ட குண்டலகேசி அவனைப் பெரிதும் காமுற்று வருந்துவாளாயினள். அதனை அறிந்த அவள் தந்தை அரசன் பாற் சென்று தகுந்ததோருபாயத்தாலே அக் காளனை மீட்டுக் கொணர்ந்து தன் மகளையும் திருமணம் செய்விக்க, அக் காளன் குண்டலகேசியோடு இனிது வாழ்க்கை நடத்துங்கால், ஒருநாள் குண்டலகேசி அவனோடு ஊடுபவள் நீ யொரு கள்வனல்லையோ? என்றாளாக; அது கேட்ட காளன் மிகச் சினந்து,பின்னர் ஒருநாள் அக் குண்டலகேசிக்குத் தானொரு வித்தை கற்பிப்பதாகக் கூறி அவளைத் தனியே அழைத்துச் சென்று ஒரு மலையினுச்சியிலேறி "ஏடி! நீ என்னைக் கள்வன் என்றிகழ்ந்தமையாலே உன்னை யான் இப்பொழுது இம்மலையுச்சியினின்றும் தள்ளிக் கொல்வேன் காண்!" என்று கூற, அது கேட்ட குண்டலகேசி "**தற் கொல்லியை முற்கொல்லிய**" என்பது சான்றோர் அறிவுரையன்றோ! இவனை யானே கொல்வேனெனத் தன்னுட்கருதி, "ஐய, கற்புடைப் பெண்டிர்க்குக் கணவனே தெய்வமாகலின், தாங்கள் கொல்வதாயின் யான் மகிழ்ச்சியுடன் மாள்வேன். யான் மாளுமுன்னர்த் தங்களை வலம் வந்து வணங்கிச் சாதற்கு வரமருளவேண்டும்" என்று வேண்டினள்; அதுகேட்ட காளனும் அதற்குடன்பட வலம் வந்த குண்டலகேசி அவனை அம் மலை யுச்சியினின்றுமுருள நூக்கினள். காளனும் புத்தனை வணங்கியவாறே வீழ்ந் துயிர்நீத்து வீடுபேறெய்தினன். குண்டலகேசியும், அக் காளனைக் கொன்றமையால் பெரிதும் வருந்தியவளாய் உலக வாழ்க்கையைத் துறக்கத் துணிந்து, பௌத்தர் மெய்க்காட்சி கொண்டு உலகெங்குந் திரிந்து, நாவல்நட்டு அறைகூவிப் பிறசமயக் கணக்கரை யெல்லாம் வென்று வாகை சூடினள். அவளை நீ வென்றேன் என்று மிகவும் பொய் கூறினை என்றான் என்பது.

ஒன்றுத கொள்கை - பௌத்தர் கொள்கையோடு பொருந்தாத கொள்கைகள். சம்பு விரதி-நாவல் நட்டு அறைகூவுதலை நோன்பாகக் கொண்டவள். அவள் அங்ஙனமாதலைக் குண்டலகேசி வாதச்சருக்கத்திலுங் காண்க. தன்றுரம் பிறர்க்கிந்தான் என்றது புத்தனை. (உ0)

## நீலகேசி கூற்று

உ௮௪. வேதியரை முதலாக
வெலப்பட்டா சிவரிவரேன்
றோதியாங் கவையவைதா
மிவையிவையென் றுரைப்பக்கேட்
டாதிகா லாவணத்து
ளார்கதரை வென்றதனை
நீதியா லுரைத்தியே
னின்னையான் வெல்லலேனோ.

(இ - ள்.) வேதியரை முதலாக வெலப்பட்டார் - பின்னரும் மொக்கலன் அக்குண்டலகேசி வென்ற சமயக்கணக்கராவார் வேதவாதிகளையுளளிட்ட; இவர் இவர் என்று ஓதி - இன்னார் இன்னார் என்று அவர்தம் பெயர்களையும் கூறிக்காட்டி; அவை அவைதாம் இவை இவை என்று உரைப்பக் கேட்டு - அவள் சொற்பொருளின் கண் வென்று நிலைநாட்டிய அப்பொருள்களும் இன்னின்னவை என்றும் கூறக்கேட்ட நீலகேசி; ஆதிகால் ஆவணத்துள் ஆர்கதரை வென்றதனை - ஐய! நீ அக்குண்டலகேசி முற்காலத்தே ஆவணமா நகரத்தின்கண் ஆருகதசமயத்து நாதகுப்தனரை வென்ற முறையினை; நீதியால் உரைத்தியேல் - முறைப்படி எனக்குக் கூறுவாயாயின்; யான் நின்னை வெல்லலேனோ - யான் இப்பொழுது அதற்குக் குற்றங்காட்டி நின்னையும் வெல்லலேனோ; ஒருதலையாக வெல்லுவேன்! கூறிக்காண்! என்றான் என்க.

(வி - ம்.) வேதியர் – வேதவாதியர். அவை அவை – அவ்வப் பொருள்கள். குண்டலகேசியால் வெல்லப்பட்டவர் இன்னார் இன்னார் எனவும், அவர்கள் கூறிய பொருள்கள் இவை இவை எனவும், அப் பொருள்களை இன்ன இன்னவாறு மறுத்துத் தன் மதத்தை நிலைநிறுத்தி வென்றான் எனவும் விளக்கம் கொள்க. ஆவணம் - ஒரு நகரம். ஆர்கதர் – ஆருகத சமயத்தார். ஈண்டு ஆருகதசமயத்து நாதகுப்தனர் என்பதனைப் பழையவுரையாற் பெற்றும். ஐம்பெருங்காவியத்துளொன்றாகிய குண்டலகேசியின்கண் குண்டலகேசி ஆவண நகரத்தே நாதகுப்தனரோடு வாது செய்து வென்ற வரலாறு கூறப்பட்டிருத்தல் கூடும் என்று இதனால் ஊகிக்கக்கூடும்.

ஓகாரம் ஒழியிசை; அந்நாதகுப்தனரை வென்ற குண்டலகேசியை வென்ற யான் நின்னை வெல்லுதல் கூறவும் வேண்டுமோ என்னும் ஒழிந்த பொருண்மேனிற்றலான். (உ௧)

## மொக்கலன் கூற்று

உஅஅ. எனக்கேட்டாங் கெடுத்துரைப்பா
னிந்திரர்க டொழப்படுவான்
றனக்காய தர்மமு
மதர்மமுங் காலமுங்
கனப்பாட்டிற் காயமே
யுயிருருவே புண்ணியமே
நினைக்குங்காற் பாவமே
கட்டுவீ டெனநிறுத்தி.

(இ - ள்.) எனக்கேட்டு ஆங்கு எடுத்துரைப்பான் - என்றிவ்வாறு நீலகேசி கூறிய மொழியைக் கேட்டவுடன் அம் மொக்கலன் அக் குண்டலகேசி வென்ற முறையினை எடுத்துக் கூறுபவன்; இந்திரர்கள் தொழப்படுவான் - இந்திரர்களாலே தொழப் படுஞ் சிறப்புடையவன் இறைவன் ஆவான்; தனக்கு ஆய தர்மமும் அதர்மமும் காலமும் - அவ்விறைவன் காட்சிக்கியன்ற தருமாத்திகாயமும் அதருமாத்திகாயமும்; காலமும் கனப் பாட்டின் காயமே உயிர் உருவே புண்ணியமே - காலமும் அகலிடமுடைய ஆகாயமும் உயிரும் புற்கலமும் புண்ணியமும்; நினைக்குங் கால் பாவமே கட்டு வீடு என நிறுத்தி - ஆராயுங்கால் பாவமும் கட்டும் வீடுபேறும் என்னும் இவையே பொருளென்று தலைதடுமாற எண்ணி நிறுத்தி என்க.

(வி - ம்.) மொக்கலன் மாற்றான் மேற்கோளை எடுத்துமொழிபவன் அவர் கூறும் முறையானன்றி முறை பிறழ்ந்து தவறாக எண்ணி நிறுத்து மாற்றால் பரபக்கமறியாமை என்னும் தன் குற்றத்தை வெளிப்படுத்தினான் என்க. இவற்றை ஓதுங்கால் உயிர், உயிரில்லாதது ஊற்று, செறிப்பு உதிர்ப்பு கட்டு வீடு என முறைப்படுத்தோதுவர் ஆருகதர்.

இவற்றுள் உயிர் என்பதன்கண் அடங்கும் இறைவனையும் சிவனையும் ஒன்றாகக் கூறாமல் இறைவன் என்றும் சிவன் என்றும் தனித் தனி கூறுதல் காண்க. இன்னும் உயிரையும் உயிரற்றவற்றையும் தலைதடுமாற ஓதுதலும் காண்க. இன்னும் இறைவனுக்குச் சிறப்புக் கூறுங்கால் அநாதிசித்தன் முதலிய கூறாமல் இந்திரர் தொழப்படுதலே கூறுதலும் காண்க. இன்னோரன்ன ஆராய்ந்து கொள்க. (உஉ)

## இதுவுமது

உஅக. இப்பொருட்க ணிகழ்ச்சியு
மிவையிவையா மெனவிரித்துச்
செப்பினு றதன்றன்
சிந்தைக் கெழுந்தவா

றப்போருளு மங்நிகழ்வு
மவையவையா வறியாதே
வப்பிள வனமுலையார்
மணல்விளையாட் டதுவேபோல்.

(இ - ள்.) இப்பொருட்கண் நிகழ்ச்சியும் இவை இவை என - இங்ஙனம் தலைதடுமாற எழுகூற்றுப் பொருள்களைப் பதினொன்றாகத் தொகுத்துப் பின்னர் அவற்றின் நிகழ்ச்சிகள் தாமும் இவை இவையென்று; அப்பொருளும் அந்நிகழ்வும் அவை அவை அறியாதே - அப்பொருள்களையும் அவற்றின் நிகழ்ச்சிகளையும் அவ்வவற்றிற்குரியவற்றைப் பட்டாங்கு அறியாமல்; ஆதன் தன் சிந்தைக்கு எழுந்தவாறு விரித்துச் செப்பினான் - அந்த அறிவிலியாகிய மொக்கலன் தன் மனத்திலே தோன்றியபடியெல்லாம் விரித்துக் கூறினான்; அஃதெப்படியெனின்; வப்பு இளமுலையார் மணல் விளையாட்டு அதுவே போல் - கச்சணிந்த இளமுலையினையுடைய பேதைப்பருவத்து மகளிர் புழுதியைச் சோறென்றும் கற்களைக் கறியென்றும் தம் மனம்போனபடி பெயரிட்டு விளையாடுமாறுபோல; என்க.

(வி - ம்.) இதனால் "தன்புறத்த" வென்னுங் காதை சொல்லப்பட்டது. இவ்வாறு பற்பலவிடங்களில் பழையவுரையாசிரியரால் கூறப்படும் செய்யுள் முதற்குறிப்புக்கள், குண்டலகேசி என்னும் காப்பியச் செய்யுட் குறிப்புக்களாதல் கூடும் என்று கருதக்கூடும். இப்பொருள் என்றது, முற்கூறப்பட்ட இறைவன் முதலியவற்றை. நிகழ்ச்சி-பொருள்கண் நிகழும் நிகழ்ச்சிகள். வப்பு; வம்பு; வலித்தல் விகாரம். விளையாட்டின்கண் மணல் முதலியவற்றைச் சோறு முதலியனவாக மனம்போனபடி கூறுமாறு போலே என்க.

இதுவும் மாற்றான் மேற்கோளறியாமை என்னுங் குற்றங் கூறியபடியாம். மாற்றான் மேற்கோளெனினும் 'பரபக்கம்' எனினும் ஒக்கும். கடைப்பிடிக்க. (உக)

நீலகேசி கூற்று

உகூ. மோக்கலனு மிதுகூற
முல்லைநா றிருங்குழலா
ணக்கனளா யிதுகூறு
நாதன தியல்பறியா
யிக்கிரமத் திந்திர
னிருடிகளைத் தேவியரைத்
தக்கதாத் தொழுதக்கா
லவர்தலைவ ரெனலாமோ.

(இ - ள்.) மொக்கலனும் இதுகூற - அந்த மொக்கலன் ருனும் மாற்றான் மேற்கோளை வழிமொழிவானாய் இங்ஙனம் தலை தடுமாறக் கூறக்கேட்ட; முல்லை நாறு இருங்குழலாள் நக்கனளாய்- முல்லை மணங்கமழும் கரிய கூந்தலையுடைய நீலகேசியார் அவன் பேதைமை கண்டு நகைத்தவளாய்; இது கூறும்-இம்மொழிகளைக் கூறுவாள்; இக்கிரமத்து நாதனது - இந்த முறையாலே கூறிய நீ இறைவனுடைய இயல்பு அறிந்திலை என்பது தேற்றம்; இந்திரன் இருடிகளை தேவியரைத் தக்கதா தொழுதக்கால் - நீ 'இந்திரர்கள் தொழப்படுவான் இறைவன்' என்கின்றனை; இந்திரன் துறவோர் யாரையும் தொழுதல் தனக்குத் தகுமென்று கருதித் தொழுவான் அவன்றன் மனைவிமாரையும் ஊடற்பொழுதிலே தொழுவா னல்லனோ இந்திரன் தொழுதலே இறைவனுந்தகுதியாயின்; அவர் தலைவர் எனலாமோ - அத்துறவோரும் தேவிமாரும் தலைவர் என்று கூறலாமன்றோ? என்றாள்; என்க.

(வி - ம்.) இஃது அவன் கூறிய தலைவனிலக்கணத்திற்குக் குற்றங் கூறியபடியாம். இறைவனுக்குச் சிறப்பியல்பு பலவாக அவையிற்றை விட்டு மொக்கலன் "இந்திரர்கள் தொழப்படுவான்" இறைவன் என்று அடைதொடுத்தமைக்கு நீலகேசி நகைத்தாள் என்க.

முல்லை நாறிருங்குழலாள் என்றது நீலகேசியை. பிறன்கட் பேதைமை நிலைக்களனாக நீலகேசிக்கு நகை பிறந்தது. (உ௯)

இதுவுமது

உ௯௧. எந்தலைவ ரியல்பொரு
        லின்னணமென் றறியாதாய்
சிந்தனைக்க ணாயினுந்
        தீமையு முரைத்திலையாற்
றந்துரைத்த தலைவனூற்
        றத்துவமா மாகவே
முந்துரைத்த பொருணிகழ்வு
        பிழைப்பின்மை முடியாவோ.

(இ - ள்.) எம் தலைவர் இயல்பொடு நூல் இன்னணம் என்று அறியாதாய் - எம்முடைய தலைவனியல்பாதல் அவன் வகுத்த ஆகமங்களினியல்பாதல் இவ்வண்ணத்தன என்று சிறிதும் அறியாதவனே!; சிந்தனைக்கண் ஆயினும் தீமையும் உரைத்திலையால்-குண்டலகேசி தன் னெஞ்சத்தானும் எம்முடைய தலைவனுக்காதல் நூலினுக்காதல் குற்றம் கூறினளாக; நீ கூறு இன்றிலை, ஆதலால் அஞ்சினாய் போலும்; தலைவன் நூல் தத்துவம் ஆம் - எனவே எந்தலைவனுக்கும் நூலுக்கும் அவள்

குற்றங்கூறுமையால் அவை குற்றமற்றன என்பது அவளுக்கும் உடன்பாடாயிற்றன்றே; ஆகவே தந்துரைத்த - ஆகவே அத் தலைவனாலும் ஆகமத்தாலும் கூறப்பட்ட; முந்து உரைத்த பொருள் நிகழ்வு - முன்னர் நின்னாற் கூறப்பட்ட பொருள்களுக்கும் அவற்றின் நிகழ்ச்சிகளுக்கும்; பிழைப்பு இன்மை முடியாவோ - குற்றமில்லாமையும் அவட்கு உடன்பாடாயிற்றன்றோ? ஆதலால் நின்னாற் கூறப்படும் குற்றம் குற்றமாகுமோ என்றாள் என்க.

(வி - ம்.) சிந்தனைக்கணுயினும் அவள் கருதிய தீமையும் நீ கூறினையல்லை என்றவாறு. குண்டலகேசி நாதகுப்தனோடு சொற் போர் நிகழ்த்துங்கால் அவள் எம்மிறைவனுக்கும் நூலுக்கும் கூறிய குற்றம் இவை எனக் கூறவில்லை. அவள் அவற்றிற்குக் குற்றங் கூறுமையே அவட்கவை குற்றமற்றன என்பது உடன்பாடு என்பது பெற்றும்; பெறவே அந்த இறைவன் தன் ஆகமத்தாற் கூறப்பட்ட பொருள்களுக்கும் நிகழ்ச்சிகட்கும் குற்றமில்லை என்பதும் அவட்குடன் பாடாதல் பெற்றும். ஆகவே நீ குற்றம் கூறின் அவை குற்றமாகுமோ என்பது கருத்தென்க.

இஃதென் சொல்லியவாறோ வெனின்,

"**இறைவன் யாவன்? நூல் யாது? பொருள் என்னை? மற்றிவற்றின் முறைப்பட்ட நிகழ்வுரைக்கவென மொழிந்தாள்**" என்றிவ்வாறு பிறரை வினவுகின்ற குண்டலகேசி நாதகுப்தனுரை நூல் யாதென்று கேளாத வாறும் "**நன்றுரைத்தீர் நும்மிறைவரிவனில்லை**" எனவும், "**ஆதிநூ ரென்பது முரைப்பவா**" னெனவும், "**சொன்னவைந்துணரானேற் சொல் லனவா**" மெனவும், "**உள்ளத்தா லெதிர்ச்சியு முடன்பாடு மில்லார்க்**" கெனவும், பல்வகையானும் பிறருடைய தலைவனுக்குக் குற்றங்கூறிய குண்டலகேசி நாதகுப்தனுரால் சொல்லப்பட்ட தலைவனுக்குக் குற்றங் கூறுகவாறும் என்னை என்றவாறு. இது தன் மேற்கோளறி யாமை கூறிற்று.

[குறிப்பு—இதன்கண் பழைய உரையாசிரியரால் குண்டலகேசி கூற்றாக எடுத்துக் கூறப்படுவன வெல்லாம் குண்டலகேசி என்னும் காப்பியத்தினின்றும் எடுத்துக்காட்டப்பட்டவை என்று ஊகிக்கலாம். மேலும், குண்டலகேசி, சமண சமயத்தாரையன்றியும் பிறசமயக் கணக்கர்களையும் கண்டு சொற்போர் புரிந்தமையை மேலே, பெரிய எழுத்தில் தரப்பட்ட செய்யுட் குறிப்புகள் உணர்த்துகின்றன.] (உ௫)

இதுவுமது

உசுஉ. அத்தியைத் தேனினல்ல
வறுபொருளு மவையாகா
வுத்தியா லெடுத்தோத
மொன்பதனோ டொட்டலவாற்
குத்திய பல்குறையே
யன்றியுமிப் பொருளெல்லாம்
பொத்தியுங் காட்டுவாய்
பொருளியைவோ பெரிதென்றாள்.

(இ - ள்.) அத்தி ஐந்து எனின் அல்ல - மொக்கலனே! எம்மனோர் அத்திகாயங்கள் ஐந்தென்று கூறுப, நின்கூற்று அம்முறை பற்றினவுமல்ல; அவை அறுபொருளும் ஆகா - நின்மொழிகள் எம்மனோர் ஆறுபொருள் என்று கூறுப அவைபற்றினவுமல்ல; உத்தியால் எடுத்து ஓதும் ஒன்பதனோடு ஒட்டல - அன்றியும் எம்மனோர் ஊகத்தால் எடுத்துக் கூறும் ஒன்பது பொருளோடும் பொருந்தினவல்ல; குத்திய பல்குறையே யன்றியும் - இங்குக் குத்திக் காட்டப்பட்ட இருகுற்றங்களே யல்லாமல், இப்பொருளெல்லாம் - எம்மனோர் கூறும் இத்தத்துவங்களை யெல்லாம்; பொத்தியுங் காட்டுவாய்-முறையன்றி அங்கொன்று மிங்கொன்றுமாகச் சேர்த்துக் கூறிக்காட்டவும் காட்டுகின்றனை; பொருள் இயைபு ஓ பெரிது என்றுள் - நின் மொழிகளில் பொருளியைபு ஆ ஆ! மிகவும் நன்றுகாண் என்றுள்; என்க.

(வி - ம்.) இது மொக்கலன் ஆருகதசமய தத்துவங்களைத் தலைதடுமாறக் கூறியதனைப் பழித்து அவனுக்கு மாற்றான் மேற்கோளறியாமை என்னுங் குற்றங் கூறியபடியாம் என்க.

ஆருகதர், பொருள்களைப் பஞ்சாத்திகாயம் என்றும், ஷட்திரவியம் என்றும், சப்த தத்துவம் என்றும், அட்டபதார்த்தம் என்றும், நவபதார்த்தம் என்றும் முறைப்படுத்தோதுப; நீ கூறியது இவற்றுள் எந்தமுறையையும் தழுவியதில்லையாகலின் நீ எந்தத்துவம் உணர்ந்தாயல்லை என்பது கருத்து.

அத்தி – அத்திகாயம். ஒட்டல - பொருந்தில. குத்திய – யான் குத்திக்காட்டிய. பொத்துதல் - அங்கொன்று மிங்கொன்றுமாக எடுத்துச்சேர்த்தல். (உ௯)

உ௩௰. சலம்படவே யுரைத்தனை நீ
தருமத்திற் செல்லுதுமென்
றிலம்படுமே லியக்கில்லை
யென்பதேம் முரையென்போம்
கலஞ்செல்லுங் கடலதனைக்
காற்றேபோ லுந்தாதாம்
பலம்படு முரைநினக்குப்
பாம்புண்ட பாலேபோல்.

(இ - ள்.) நீ தருமத்தில் செல்லுதும் என்று-ஐய! நீ தானும் யாங்கள் தருமாத்திகாயம் செலுத்தச் செல்கின்றோம் என்று எங் கருத்துணராது; சலம்பட உரைத்தனை-குற்றமுண்டாகக் கூறினை; இலம்படுமேல் இயக்கு இல்லை என்பது எம் உரை என்போம் - அத்தருமாத்திகாயம் இல்லையெனில் பொருள்களுக்கு இயக்கம்

இல்லை என்பதே எம்மொழியின் கருத்து என்று கூறுவோம் காண்; கலஞ் செல்லும் கடல் அதனைக் காற்றே போல் உந்தாது - மரக்கலம் இயங்கும்போது கடல் அம்மரக்கலம் இயங்குதற்குத் தொழிலற்ற கருவியாதல் அன்றி; அம்மரக்கலத்தைக் காற்றுப் போலச் செலுத்தமாட்டதாம், ஆயினும் கடலின்றேல் மரக் கலத்திற்கு இயக்கமில்லையன்றே அதுபோல தருமாத்திகாயம் இல்லையேல் பொருள்களுக்கு இயக்கமில்லை என்பது எம் கருத்துக் காண்; பலம்படும் உரை - இவ்வாறு பொருள்பயந்து பயன் தருகின்ற எம்முரை; பாம்பு உண்ட பால்போல் - பாம்புக் கொண்ட பாலானது நஞ்சானது போல; நினக்கு - நின் அறியாமை காரணமாகக் குற்றமாய்த் தோன்றிற்றுக்காண் என்றவாறு.

(வி - ம்.) விருப்பமும் முயற்சியுமின்றித் தாமே பிறிது காரணத் தாலியங்கும் பொருள்களுக்குத் தருமாத்திகாயம் தொழிலற்றதொரு கருவியாம்; குயவன் திகிரிக்குக் கீழிட்ட கற்போலவும் தேருக்கு அச்சுப்போலவும், மரக்கலத்திற்குக் கடல்போலவும் என்று யாங்கள் கூறுவேமாக, நீ இக் கருத்தறியாது கருமாத்திகாயம் மரக்கலத்தைக் காற்று இயக்குமாறு இயக்கும் கருவி என்றேமாகப் பிறழவுணர்ந்து குற்றங் கூறினை; அதற்குக் காரணம் நின் அறியாமையேயாம் என்பது கருத்து.

பால் நன்மையுடையதாகவும் அதனைப் பருகும் பாம்பு நஞ்சுடைய தாகலின் நஞ்சாதல் போன்று பயனுடைய எம்முரை நின் அறியாமை யாலே குற்றமுடையதுபோல் நினக்குத் தோன்றுகின்றதென்பான் "பலம்படும் உரை நினக்குப் பாம்புண்ட பாலேபோல்" என்றான். குற்றமுடையதாகக் காணப்படுகிறது என்பது இசையெச்சம்.

சலம் – குற்றம். தருமாத்திகாயம் – உயிர்களும் புற்கலமும் இயங்குதற்கு நீர்வாழ்வனவற்றிற்கு நீர்போலத் துணைக்காரணம் என்பது ஆருகதர் கொள்கை.

இதனால் "தலைவைத்த" "நிறுத்துவனுண்மை" "எல்லையுள் விழவிறுங்" என்னுஞ் செய்யுள்களால் பௌத்தர் கூறும் குற்றம் நீக்கப்பட்ட தென்க. (உஎ)

இதுவுமது

உகூச. அல்லதற்கு மப்படியே
யாமென்ற லதுகோள்ளாய்
சேல்லவுஞ் சேலுத்தவு
நில்லவு நிறுத்தவுஞ்
சோல்லியவாய் தேய்க்குறுவாய்
சோல்லிக்கோள் வலியதனால்
யல்லோடும் படத்தேய்த்தாற்
பயம்பேரிதும் படுமன்றே.

(இ – ள்.) அல்லதற்கும் - இனி எனை அதருமாத்திகாயந் தானும்; அப்படியே ஆம் - அங்ஙனமே தொழிலறு கருவியாகும்; என்றல் அதுகொள்ளாய் - என்னுமக்கருத்தினை அறிந்து கொள்ளாயாய்; செல்லவும் செலுத்தவும் நில்லவும் நிறுத்தவும் சொல்லிய - பொருள்கள் செல்லவும் அவற்றைச் செலுத்தவும் அவை நிற்கவும் அவற்றை நிறுத்தவும் இயங்கியற் கருவியாம் என்று கூறினேமாகக் கூறி; தேய்க்குறுவாய் - இப்பிழைகளைச் சொல்லுமாற்றாலே நின் வாயை வருத்துகின்றனை; வலியதனால் நின்வாயை வருத்துவதே நின்கருத்தாயின் வலியதொரு கல்லாலே; சொல்லிக்கொள்வாய் பல்லொடும் படத் தேய்த்தால் - இக்குற்றங் களைச் சொல்லிக் கொள்கின்ற நின் வாயையும் பல்லையும் துன்பப் படும்படி நன்கு தேய்ப்பாயாயின்; பெரிதும் பயம் படுமே - மிகவும் பயன் உண்டாகுமே என்றாள் என்க.

(வி – ம்.) அல்லது - அதருமாத்திகாயம். இஃது உயிரும் புற்கலமும் நிற்றலுக்குத் துணைக்காரணம், என்பது ஆருகதர் கொள்கை. துணைக்காரணம், நிலையியற்காரணம் இயங்கியற் காரணம் என்பன. இவற்றுள் நிலையியற் காரணம் குயவன் திகிரிக்குக் கீழ்க்கிடக்குங் கல் போல்வன. இயங்கியற் காரணம் அவன் திகிரி போல்வன என்க.

ஈண்டு ஆருகதர் தருமாத்திகாயம் அதர்மாத்திகாயம் இரண்டும் நிலையியற் றுணைக்காரணம் என்பதறியாமல் மொக்கலன் அவற்றை இயங்கியற் றுணைக்காரணம் என்றாராகக் கருதிக் குற்றங் கூற அவற்றை நீலகேசி மறுத்தபடியாம்.

இதன்கண்: அதருமாத்திகாயமும் தருமாத்திகாயம் போன்று உயிர்களும் புற்கலமும் நிலைத்தற் காரணமாம்; அன்றி மரக்கலத்துள்ள மீகானும் நங்குரமும் போன்று மரக்கலத்தை நிறுத்தும் கருவியன்று. கடனீர் மரக்கலம் நிற்றற்குக் காரணமாதல் போலப் பொருள்கள் நிலைத்து நிற்றற்குக் காரணமாம் என்றவாறு. எனவே இவ்விரு செய்யுளானும் தருமாத்திகாயமும் அதருமாத்திகாயமும் நிரலே உயிர்களும் புற்கலமும் இயங்குதற்கும் நிலைநிற்றற்கும் பறவைக்குச் சிறகும் காலும் போல நிலையியற்றுணைக் காரணங்களாம் என்றுணர்த்தப்பட்டன வென்க.

சொல்லிய - சொல்லி. சொல்லிக் கொள்வாய் என இயைக்க. வாய் தேய்த்தல் - வாயை வருத்துதல். வருத்துதலே நின் கருத்தாயின் இவை கூறல் வேண்டா, கல்லாலே தேய்த்து வருத்துக என்றாள் என்க. (உஅ)

இதுவுமது

உ௬௯. கடனிலமா காயமே
யமையாவோ விவையிரண்டு
முடனில்லை யாயினு
மூனமிங் கேவனென்பாய்

மடனுடையை நீபெரிது
மன்னுயிர்க்கும் புற்கலக்கு
மிடனெல்லா வுலகி
னெல்லையும் புறப்படுமோ.

(இ - ள்.) கடல் நிலம் ஆகாயம் அமையாவோ - கடலும் நிலமும் ஆகாயமும் ஆகிய இம்மூன்றுமே உயிர்க்கும் புற்கலங்களுக்கும் நிலைத்தற்கும் இயங்குதற்கும் வேண்டிய நிலையியற்றுணைக்காரணங்கள் ஆதற்கு அமையமாட்டாவோ?; இவை இரண்டும் உடன் இல்லை ஆயின் - தருமாத்திகாயமும் அதருமாத்திகாயமும் ஆகிய இவை இரண்டும் ஒருசேர இல்லையானால்; இங்கு ஊனம் எவன் என்பாய்-இவ்வுலகத்திற்கு வரும் கேடுதான் யாதோ? என்று வினவுகின்றாய்!; நீ பெரிதும் மடன் உடையை - இங்ஙனம் வினவும் நீ மிகவும் அறியாமை உடையை என்பதனை அவ்வினாவே புலப்படுத்தும்; எற்றுலெனின்; மன்னுயிர்க்கும் புற்கலக்கும் - அவை இல்லையெனின் உயிர்கட்கும் புற்கலத்திற்கும்; எல்லாம் இடம் - ஆகாயமெல்லாம் இடமாகி; உலகம் அலோகமென்னும் வரையறை கெடுவதாம்; உலகின் எல்லையும் புறப்படுமோ- கெடவே, இது துறக்கம் இது நரகம் என்பன வெல்லாம் கெடும்; என்னை ? அவை அவ்வழி யன்றிப் பிறவழியும் போதல் கூடுமாகலின்; என்றாள் என்க.

(வி - டு.) இயங்கு தொழிலுள்ளதற்கே நிலைத்தொழிலும் உளதாதலின் இயக்கமற்ற தரும வதருமாத்தியாயங்களுக்கு நிலைத்தொழிலின்மையின், நிலையியற்றுணைக் கருவி வேண்டாவென்பதாம்.

இனி, ஆகாய முதலியவற்றிற்கு நிலைத்தொழில் உண்டாகில் தொழில் நிலையற்றதாகையால்; அந்த நிலைத்தொழில் கெட இயக்க முதலிய தொழில் பின்பு தோன்றல் வேண்டும்; அது தோன்றாமையின் நிலைத்தொழில் இல்லை என்பதாம்; என்னை ? மலை முதலியனவும் இயக்க முடைய புற்கலக் கூட்டமேயாதலின் இவற்றது நிலைத் தொழிலுக்கு அதருமாத்திகாயம் வேண்டுமென்க. (உக)

உகூசு. பலசொல்லிக் குறையென்னைப்
பஞ்சமா கந்தமே
யலகில்லாப் பெரும்பரப்பி
ஞகாய நினக்கில்லை
நிலைசெலவிற் கிவை வேண்டா
நின்பொருளு மிவையல்லா
வுலகெல்லை யுரைப்பான்புக்
குணர்வினையே வருத்துதியால்.

) பல சொல்லி குறை என்னை-முழுவதுங் குற்றமே
றகயுடைய நினக்கு இங்ஙனம் பலப்பல சொல்லிக்
உசஅ (இ - ல்தான் எற்றிற்கு? நின் பொருளும் பஞ்சமா கந்தமே-
னும்; அக் கண்டவை ஐவகைக் கந்தங்கள் மட்டுமேயாம்;
(இ - ள். றல் ஆப் பெரும்பரப்பின் ஆகாயம் நினக்கு இல்லை-மேலும்
யாய கொள் யாய்; ற பெரிய பரப்பினையுடைய ஆகாயம் என்பதும் உனக்கு
குற்றங்காட்ட ால்ாம்; நிலை செலவிற்கு இவை வேண்டா - பொருள் அனைத்
நீ ெ ற்கும் இருக்க இடந்தருகின்ற அவ்வாகாயம் நினக்கு வேண்டா
தது ஆறுற்போன்று உயிர் முதலியவற்றிற்கு நிலைத்தற்கும் இயங்குதற்கும் காரணமான இத் தருமவதருமாத்தியாகங்களும் உனக்கு வேண்டுவன அல்லவேயாம்; இவை அல்லாவுலகு எல்லை உரைப்பான் புக்கு - இவையிற்றை வேண்டாத நின்னுடைய உலகங்களுக்கு நீ எல்லையும் கூறப்புகுந்து; உணர்வினை வருத்துதி- எல்லையுரைத்தல் கூடாமையின் நின் அறிவினைப் பெரிதும் வருத்த வும் வருத்துகின்றனை என்றுள் என்க.

(வி - ம்:) ஆகாய முதலியவற்றை இல்லை யென்று கூறிப் பின் மேல் கீழுலகங்கட்கு எல்லை கூறப்புகுவது மடமை. என்னை? ஆகாய மில்லையாயின் மேல் கீழ் என்பனவும் இலவாகலின் என்றவாறு.

பௌத்தர் ஆகாயத்தை ஒரு பூதமாகக் கொள்ளார். ஆகலின் இங்ஙனம் கூறினர்.

பௌத்தர்கள் அருபப் பிரமலோக முதலாக நரகலோக மீருக முப்பத்தோருலகங்கள் உண்டென்று அவற்றிற்கு எல்லையும் வகுப்பர், அவையிற்றை அவர்தம் நூலுட் காண்க. (கூ0)

உகஎ. காலநீ வேண்டாயாய்க்
கணிகமுங் கற்பமும்
சாலமும் புனைந்துரைத்தி
சமழ்ப்பென்னு மிலையாகிப்
பாலமா பண்டிதனே
பழநோன்பி யிவனென்பாய்
மாலுமிங் குடையையோ
மயக்குவதோன் றுண்டனையோ.

(இ - ள்.) பால மா பண்டிதனே - இளமையிலேயே சிறந்த புலமையுடையோனே!; நீ காலம் வேண்டாயாய் - நீ காலம் என்ப தொரு பொருளில்லை என்று சொல்லிவைத்துப் பின்னரும்; கணிகமும் கற்பமும் சாலமும் - கணப்பொழுதும் கற்பகாலமும் இவற்றிடையேயமைந்த எனைக்கால விகற்பங்களையும்; சமழ்ப்பு என்னும் இலையாகி - நாணஞ் சிறிதுமின்றி; புனைந்து உரைத்தி -

கின் பொருள்களோடே சேர்த்தியுங் கூறுகின்றனே; இவன் பழ நோன்பி என்பாய் - எம் புத்தபெருமான் நீண்டகாலம் தவ முயன்றோன் என்று கூறித் தொழுகின்றாய்; இங்கு மாலும் உடையையோ - இங்ஙனம் கூறுதற்கு நீ பித்தேறினையோ?; மயக்குவது ஒன்று உண்டனையோ - அல்லது அறிவினைமயக்குங் கள் முதலியவற்றுள் யாதேனும் ஒன்றனை உண்டாயோ? என்றுள் என்க.

(வி - ம்.) காலம் என்று ஒரு பொருளில்லை என்பது பௌத்தர் கொள்கை. இதனை அவர் பொருளாகக் கொண்ட ஐங்கந்தங்களுட் காலம் கொள்ளப்படாமையானுணர்க.

இங்ஙனம் காலத்தைப் பொருளாகக் கொள்ளாத பௌத்தர் கணந்தொறும் பொருள் கெடுமென்றும் புத்தன் கற்பகாலம் தவமுழந்தான் என்றும் கூறுதல் குற்றமாம் என்றவாறு.

பாலமா பண்டிதனே! என்பதிகழ்ச்சிக் குறிப்பு. சாலம்-விகற்பம், அவை சிறுபொழுது முதலியன. சமழ்ப்பு - நாணம், எனும்-சிறிதும்.

இனி, கணம் என்பது ஏழு செங்கழுநீரிதழை யொரு குறட்டிலடுக்கி வலியுடையோ னொருவன் மிகவுங் கூரியதோர் ஊசி வைத்துக் கூட மிட்டுப் புடைத்தால் ஆறும்புரையற்று ஏழாம்புரையிற் செல்லிலும் காலவளவாம்; கற்பமாவது — ஒருயோசனையகன்றுயர்ந்ததொரு வைரமலை கருவுடையாள் பட்டாடை தேய்க்கப்பட்டுக் கையறத் தேயும் காலவளவாம் என்பது பௌத்தர் கொள்கை. (௩௧)

இதுவுமது

உகூஅ. இக்கோட்க ளேழனோக்கி
யிவையிவையே யாமென்று
லக்கோட்க ளேழனோக்கி
யவையவையாக் கண்டிருந்
தேக்கோளு மில்லென்பா
யாண்டேண்ணி யேத்துதியான்
மெய்க்கோளா லென்றியான்
மிகைதெருட்டுந் திறங்காணேன்.

(இ - ள்.) இ கோள்கள் எழல் நோக்கி - கணிகமாக்கள் முன்னரே இந்தக் கோள்கள் தோன்றுதலை ஆராய்ந்து பார்த்து; இவை இவையே ஆம் என்றால் - இவற்றின் தோற்றத்தாலே இன்னின்ன பயன்கள் உண்டாகும் என்று கூறினால்; அக்கோள்கள் எழல் நோக்கி - அந்தக் கோள்கள் அவ்வாறே தோன்றுதலையும் பார்த்து; அவை அவையா கண்டிருந்தும் - அவற்றின் தோற்றத்தாலே நிகழும் பயனும் அவர் கூறியவை கூறியவைக

ளாகவே இருத்தலையும் அறிந்திருந்தும் பின்னர்; மெய்க்கோளால் எக்கோளும் இல் என்பாய் - வாய்மையாக எந்தக் கோளும் இல்லை என்று கூறுகின்ற நீ, யாண்டு எண்ணி ஏத்துதி - புத்தர் யாண்டு இத்துணையாயின என்று எண்ணி அவன் தோன்றிய யாண்டினையும் தொழுகின்றாய்; மிகை - மிகையாய இக்குற்றத்தை விளக்கி; தெருட்டும் திறம் காணேன் - நின்னைத் தெளிவிக்கும் வழியுமறிகின்றிலேன்; அத்துணை மடமையுடையோய் காண்! என்றாள் என்க.

(வி - ம்) கோள்கள் - ஞாயிறு முதலியன. யாண்டு - புத்தன் பிறந்த யாண்டு. மெய்க்கோள் - வாய்மையாகிய கொள்கை. மிகை - ஒருவகைக் குற்றம்.

இனி, கோள்களை ஆராய்ந்து கூறும் கணிவர் கூற்று ஓரோவழிப் பிழைபடுதலும் காண்டலால், கோள்களின் எழுச்சி வீழ்ச்சிகளால் நன்மையுந் தீங்கும் உண்டாமென்பது பிழையாம் எனின் அற்றன்று; கணிவன் கூற்றுப் பிழையாதல் அவனுடைய அறிவு மயக்கத்தாலும் மறதியானும் கணிதப் பிழையானுமே நேர்வதாம்; என்க.

இம்மூன்று செய்யுள்களானும் "காசமுங் காலமும்" என்னும் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்கப்பட்டன வென்க. (கஉ)

இதுவுமது

உ௬௬. கருத்தினாற் பெற்றாமோ
கண்கூடாக் கண்டோமோ
பொருத்தனையென் றுரைக்கின்றா
யுறுநோயைத் தீர்ப்பதோர்
மருத்துநூ லில்லையான்
மயங்கியே சொல்லாது
திருத்தியநின் னுணர்வின்மை
தெருட்டிக்கா ணெனச் சொன்னாள்.

(இ - ள்.) ஒருத்தனை - உயிர்ப்பொருளை; கருத்தினால் பெற்றாமோ கண்கூடாக் கண்டோமோ - கருதலளவையாலுணர்ந்தோமோ? அல்லது, காட்சியளவையால் கண்டோமோ? சொல்லுக!; என்றுரைக்கின்றாய் - என்று வினவுகின்ற நீ கொண்டுள்ள; உறுநோயைத் தீர்ப்பது ஓர் மருத்துநூலில்லை- மிக்க அறியாமைப் பிணியைத் தீர்த்தற்குரிய மருத்துநூலும் இல்லையாதலால் அதுநிற்க; திருத்திய நின் உணர்வு இன்மை - நின்னால் திருத்தமுறக் கூறப்பட்ட அறிவுக்கந்தத்திற்கு நீ யாம் உயிர்க்குக் கூறும் குற்றமின்மையை; மயங்கிச் சொல்லாது - நீ அறிவு மயங்கிக் கூறாமல் விழிப்புடன்; தெருட்டிக் காண் எனச்

சொன்னாள் - கூறி எம்மைத் தெளிவிப்பாயாக! என்று கூறினாள்; என்க.

(வி - ம்.) இது "கருத்திறற் பெற்றேமோ" என்னுஞ் செய்யுளால் பௌத்தர் உயிருண்மைக்குக் கூறும் குற்றத்தை நீக்குகின்றது.

இனி, மொக்கலன் நீலகேசியை நோக்கி, "நீ உள்பொருளாகக் கூறுகின்ற உயிரைக் கருதலளவையாற் பெற்றாயோ? பெற்றாயாயின் அதனை விளக்கிக் கூறுக. அன்றிக் காட்சியளவையால் பெற்றாயாயின் எனக்கும் அதனைக் காட்டுக! இனி ஆகமவளவையால் பெற்றேமென் பாயாயின் அஃதெமக்குடன்பாடன்மையின் யாமதனை ஏற்பேமல்லேம். ஆகவே முற்கூறப்பட்ட இரண்டளவையானும் உயிர் உண்மை அறியப் படாமையின் உயிர் என்றொரு பொருளில்லையென்றே கொள்க!" என்றனை, அதுகேட்ட நீலகேசி ஐய! அஃதொக்கும் நீ பொருளாகக் கொண்ட ஐவகைக் கந்தங்களுள் ஒன்றாகிய அறிவுக் கந்தத்தை எதனாற் பெற்றனை; அதனைக் கூறுதியாயின் யாமுயிர் உண்மை பெற்றமை அதனாலேயே விளங்கும் ஆதலால் அதனைக் கூறுக என்றாள் என்றவாறு.

நீ எவ்வளவையாலே அறிவுக்கந்தமுண்மை பெற்றாயோ அவ்வளவையாலேயே உயிருண்மையும் பெறுதல் சாலும், என்பதாம்.

இனி, 'அறிகின்றேன், பார்க்கின்றேன்' எனத் தோன்றுதலாலே அறிவுக்கந்தமுண்மை பெற்றாமென்பாயாயின், அங்ஙனமே செல்வனு யிருந்த அவனே யான் எனவிவ்வாறு தோன்றுதலால் உயிர்ப்பொருள் உண்மையும் கொள்; உயிரறிவு உண்டேயெனினும் அது பொய்த் தோற்றமேயாதலின் அதனால் உயிருண்மைகொள்ளேமெனின்; உயிரறி விற்குப் பொய்த்தோற்றம் எதனாற் கொண்டனை? அது மருட்காட்சி யுடைத்தாகலின் அங்ஙனம் கொண்டாமெனின்; அதற்கு மருட்காட்சி அதனியல்பாலுண்டாவதோ? அன்றி அறியப்படும் பொருள்கள் பல வற்றினுங் கிடக்கும் ஒற்றுமைப்பண்பாலுண்டாவதோ? உயிரறிவிற்கு மருட்காட்சி இயல்பேகாண் என்பாயாயின், அறிவு யாவர்க்கும் ஒத்தலின் நின் புத்தன் அறிவும் மருட்காட்சியுடைத் தெனப்பட்டு அவன் கூறும் பொருளும் பிறவும் மருளுடையனவாம். இனி, பொருள்களின்பாற் கிடக்கும் ஒற்றுமைப் பண்பு காரணமாகவே உயிரறிவு மருட்காட்சி யுடைத்தாயிற்று என்பாயாயின், ஒருவரைப்போலத் தோன்றும் பலரைக் கண்டானன்றே, அவ்வொற்றுமையான் மயங்கி அவரை வேறு வேறாக அறியாது ஒருவர் என்றே கருதுவான்; அவ்வாறே ஒன்று போல் தோன்றும் பலவற்றைக் கண்ட அறிவன்றோ அவற்றை ஒன் றென்று கருதுவது? ஆதலால், பொருள்களின்பாற் கிடக்கும் ஒற்று மைப் பண்பு காரணமாக மயங்கி அறியும் அறிவிற்கன்றே மருட்காட்சி யுண்டாவது? இவ்வாறு மருட்காட்சி எய்துவதாகிய ஓரறிவு நினது கணிக மேற் கோளின்கண் நிகழமாட்டாமையால் உயிரறிவு மெய்க் காட்சியுடைய தென்றே கொள்; கொள்ளவே அவ்வறிவிற்குப் பொருள்களின் ஒற்றுமைப் பண்பு காரணமாக வரும் மருட்காட்சியு மில்லையாம். உண்டெனினும் ஒற்றுமையால் மயங்கிய அறிவிற்கு மட்டுமே அம்மருட்காட்சி வருவதாம்; நின் உயிரறிவிற்கு மயங்கியறிதல் இன்மையின் அதற்கு மருட்காட்சியும் இல்லையாதல் வேண்டும்; என்னை? ஒன்றனைக் கண்ட அறிவு அக்கணத்தே பொன்றக் கெடுதலின் அது போல்வதொன்றனைப் பின்னர்க் காணுமறிவு அவ்விரண்டற்கும் உள்ள

ஒற்றுமையை உணரமாட்டாமையின் நின் அறிவு மயங்கி ஒற்றுமைப் பண்பு காரணமாக ஒன்றை வேறொன்றாக அறிதலிலாதாயிற்றாகலின்; எனவே நின் அறிவு மெய்க்காட்சித்தென்பது தேற்றமாம். இதனால் உயிருண்மையும் தேற்றமாதலுணர்க.

அன்றியும் "யான் காண்டீர் நோன்பிகாள் முன்னையோர் பிறப்பின் முயலானேன்," என்று புத்தனுக்குப் பிறந்த உயிரறிவு மருட்கைத்தோ? மெய்ம்மைத்தோ? மருட்கைத்தேயாயின் மருளறிவுடைய அப்புத்தன் கூறிய ஏகாந்தவாதம் பொருந்தாதாம். மெய்ம்மைத்தாயின் உயிருண்மையும் தேற்றமாம். இதனை இல்லை என்கிற நினது அறியாமை அகற்றுதற்கரியதொன்றாம் என்பது கருத்து. (௯௯)

௩00. பொறியுணர்வின் புலமாய
புற்கலமே யுயிரறியு
மறிவினா லறியாதே
யாமாகா தெனவுரைப்பாய்
நெறியென்னை யிந்திரன்றன்
நெடுநகரக் கவன்றேவி
குறியளோ நெடியளோ
நூலொழிப்பாய் கூறிக்காண்.

(இ - ள்.) நூல் ஒழிப்பாய்! - உரையளவையைக் கொள்ளா தொழிக்கின்ற மடவோனே!; புலம் ஆய புற்கலம் பொறி உணர்வின் - நிலமுதலியனவாகிய புற்கலப் பொருளே பொறியறிவிற்குப் பொருளாவதாம்; உயிர் அறியும் அறிவினால் அறியாதே ஆம் - நீ கூறுகின்ற உயிர்ப்பொருள் அப்பொறிகளால் அறியும் அறிவினாலே அறியப்படாததே ஆகும் ஆகவே; ஆகாது என வுரைப்பாய் - அஃதோர் ருள்பொருளாகமாட்டாது என்று கூறுவாய்; இந்திரன்றன் நெடுநகர்க்கு நெறி என்னை - நீ இந்திரனிருக்கும் நெடிய மேனிலையுலகுண்மை காட்டுதற்கு உரையளவையன்றிப் பிறிது வழி யாதுளது; அவன் தேவி குறியளோ நெடியளோ - அவ்விந்திரன் உண்மைக்கும் அவன் தேவியுண்மைக்கும் அவள் குறியளோ நெடியளோ ஆதற்கும் அவ்வுரையளவையை விடுத்து வேறளவைகளால் எமக்கு, கூறிக்காண் - சொல்லுக என்றாள் என்க.

(வி - ம்.) எனவே நின் நூலிற் கூறப்படுகின்ற இந்திரன் அவன் நெடுநகரம் அவன் தேவியர் என்னுமிவையெல்லாம் நீ அந் நூலளவையாலன்றோ கொள்கின்றனை? இவ்வாற்றால் நூலளவை கொண்டும் அதனை மேற்கொள்ளேன் என்பது அறியாமையேயன்றோ? இந்திரன் முதலியோர் உண்மையை நீ நூலளவையாற் கொள்ளுமாறு போலே உயிருண்மையும் அந் நூலளவையாற் கொள்க என்பது கருத்தாயிற்றென்க.

இன்னும் நின் னூலின்கண் உயிர்ப்பொருள் கூறப்பட்டதில்லையெனினும், கோடல் வேண்டும் : என்னை? முதன்முதலாகிய பிறப்புக்

களிலே பிறந்து அறமறிவுறுத்தவனே பொன்றக்கெடாது புத்தத் தன்மை பெற்று போதிமரத்தின் கீழிருந்தானென்பது கணிகவாதியாகிய நின்னூலிற்குப் பொருந்தாதெனினும் கொண்டவாறு போல என்பதூஉம் கொள்க.

புலம் – நிலம், புலப்பட்ட புற்கலமெனினுமாம். அறியும் அறிவு என்றது, பொறிகளாவறியும் அறிவு என்றவாறு. ஆகாது-உள்பொருளாகமாட்டாது. நகர்க்கு - நகரத்திற்கு. நூலொழிப்பாய் என்றது, உரையளவை கொள்ளாத மடவோனே என்பதுபட நின்றது. கூறிக்காண் என்றது உரையளவையானன்றிக் கூறுக என்றவாறு. (௯௪)

௯௦௧. மெய்யளவிற் றுயிரேன்று
மெய்யகத் தடக்குரைத்தல்
பொய்யளவைக் குடங்குடத்திற்
புகலருமை போலென்பாய்
மெய்யளவின் மெய்யுணர்வை
மெய்யகத் தடக்குரைத்தி
யையனையே யடங்கானென்
றதுவாதன் வண்ணக்கால்.

(இ - ள்.) மெய்யளவிற்று உயிர் என்று - உடலின் அளவே அதன்கண் உறையும் உயிரின் அளவுமாம் என்று கூறிப் பின்னர்; மெய் அகத்து அடக்கு உரைத்தல் - அவ்வுயிர் அவ்வுடலின் கண்ணே அடங்குமென்று கூறுதல்; பொய் - பொய்யேயாகும்; அளவைக் குடம் – ஓர் அளவினையுடைய இரண்டு குடங்களுள்; குடத்தில் புகல் அருமைபோல் என்பாய் - ஒரு குடத்தில் மற்றொன்று புகுதல் அரிதாமாறுபோல என்று கூறுவாய்; மெய் அளவின் மெய்யுணர்வை - மற்று எதானும், உடலளவிற்றாகிய ஊற்றுணர்வினை; மெய் அகத்து அடக்கு உரைத்தி - அவ்வுடலின் கண்ணேயே அடங்குவதாகவும் கூறுதி இங்ஙனம் கூறுவோய்; ஐயனை அடங்கான் என்றது - உயிர் உடலின்கண் அடங்காது என்னுமிது எதனை ஒக்குமெனின்; ஆதன் வண்ணக்கு - ஓர் அறிவிலி வண்ணக்கத்தொழில் கூறியதனையே ஒக்கும் காண் என்றாள் என்க.

(வி - ம்.) உயிர் தான் மேற்கொண்ட உடலின் அளவிற்றாம் என்பது ஆருகதர் துணிபு. உணர்வு உடலெங்கும் பரவி அதனளவிற்றாம் என்பது பௌத்தர் துணிபு. எனவே மொக்கலன் உடலில் உயிரடங்காது என்றது தன் மேற்கோள் மலைவாம் என்றவாறு.

வண்ணக்கு - வண்ணக்கத்தொழில், ஈண்டு ஆதன் வண்ணக்கு என்றது அறிவிலியொருவன் வண்ணக்கத் தொழிலில் புகுந்து காசினை ஆய்ந்து கூறிய மொழியையே நின்மொழி ஒக்கும் என்றவாறு. வண்ணக்கன் – நாணய ஆராய்ச்சியாளன்.

அது வருமாறு:—ஒரு மாநகரத்து வாழ்வாரொரு வண்ணக்கன் இறந்துபட அவன் மகன் அத்தொழிலறியாமையால், அரசன் பிறனொருவனை வண்ணக்கனாக்க; இறந்த வண்ணக்கன் மகனும், காசு ஆய்வுத் தொழிலைப் பயின்று வல்லுநன் ஆவேன் என்று மற்றொரு வண்ணக்கன்பாற் சென்றிருப்ப, அவன்பால் ஒருவன் சில காசுகளைக் கொணர்ந்து காட்ட அவற்றை ஆராய்ந்து பார்த்து இவை செல்லும், இவை செல்லா என்று கூறிவிடுத்தானாக; அதனைக் கண்டிருந்த அவ் விளைஞன் தன் தாயிடம் வந்து யானும் அத்தொழில் பயின்றுள்ளேன் என்று கூறிக் கடையிலிருந்தான்; அவன்பால் ஒருவன் ஓரோவொரு காசைமட்டும் கொணர்ந்து காட்டி இது செல்லுமோ? செல்லாதோ? என்று வினவ, அவன் அதனிருபக்கங்களையும் புரட்டிப் பார்த்து இதன் கண் இந்தப் பக்கம் செல்லும் இந்தப் பக்கம் செல்லாது என்று கூறினன் என்பதாம். மெய்யுணர்வு — ஊற்றுணர்வு. அடக்கு — அடங்கல். ஐயன் என்றது, உயிரை.

இது 'உடம்பளவிற்றுயிர்' என்னும் செய்யுட்குக் குற்றங் காட்டியது. (௯௫)

இதுவுமது

௯0௨. அருவாத லாலடங்கு
மூணர்வுதா னங்கென்னிற்
பெருவாத மங்கில்லை
பெற்றியோன் றறியாத
திருவாள னுரைவண்ணந்
தீட்டொட்டுக் கலப்பியாப்
புருவாய வுடம்பினோ
டுணர்வினுக் குளதாமோ.

(இ - ள்.) உணர்வு அருவு ஆதலால் அங்கு அடங்கும் என்னில் - ஐய நீ ஊற்றுணர்வு அருவப்பொருளாதலால் அவ் வுடலிலே அடங்கும் என்பாயாயின்; அங்கு பெரு வாதம் இல்லை - அஃதெமக்கு மொக்குமாதலின் அவ்விடத்தே பெரியதொரு சொற் போர் நிகழ்த்துதற்கு இடனில்லை; பெற்றி ஒன்று அறியாத திருவாளன் உரைவண்ணம் - இல்லையாயினும் பொருட்டன்மையை நன்கறியாத அறிவுச் செல்வனாகிய நுங்கள் புத்தன் கூறியபடி; உணர்வினுக்கு தீட்டு ஒட்டு கலப்பு யாப்பு - அருவமாகிய ஊற் றுணர்வினுக்கு, தீண்டுதலும் ஒட்டுதலும் கலத்தலும் யாத்தலு மாகிய தொழில்கள் கூடாமையின்; உருவு ஆய உடம்பினோடு உளது ஆமோ-உருவமாகிய உடம்பினோடு அடங்குதல் கூடுமோ? எமக்காயின் எண்வகை வினைப் புற்கலங்களாலே கட்டுண்ணப் பட்டுச் சிறிதுருவப் பொருளுமாகிய உயிர்க்குடலிலடங்குதல் கூடும் என்றுள் என்க.

(வி - ம்.) உணர்வு முழுதும் அருவமே ஆதலின் அஃதுருவப் பொருளைத் தீண்டுதல் முதலியன செய்தல் கூடாது. யாங் கூறும் நுண்மையான வினைப் புத்கலங்களாலே கட்டுண்ணப்படுதலேயன்றித் தானும் ஓரளவு சூக்குமவுருவப் பொருளாகவுமிருத்தலால் உடம்பிலே அடங்குதல் கூடும் என்பது கருத்து. இங்ஙனம் சிறிது வாதத்திற்கும் இடனிருத்தலாலே பெருவாதமங்கில்லை என்றாள்.

எமக்காயின் எண்வகை வினைப்புத்கலங்களாலே கட்டுண்ணப் பட்டுச் சிறிதுருவப் பொருளுமாகிய உயிர்க்கு உடலிலடங்குதல் கூடும் என்பது குறிப்பெச்சம். இதனால், முழுதும் அருவமேயாகிய சித்தபர மேட்டிக்கே வினை முதலியவற்றின் தொடர்பில்லை என்றாளுமாயிற்று.

இனி, சிறிதே அருவப்பொருளாகிய உயிர் முழுது முருவப் பொருளாகிய உடலில் அடங்குமென்றது கருப்பங்கோலில் கருப்பஞ் சாறு அடங்குதல் போல் அடங்கும் என்றவாறு. (கக)

௩௭. யாப்புண்டா லுழப்பதவ்
வுயிரென்றேற் கதுவன்று
போய்ப்பிண்டத் துழப்புழப்பப்
புலம்புவ தென்செயலென்பா
யேப்புண்பட் டான்படநோ
யேதிலர்க்காய்ச் சோமாகிச்
சாப்புண்பட் டேனென்று
சாற்றுவதுன் றத்துவமோ.

(இ - ள்.) யாப்புண்டால் உழப்பது உயிர் என்றேற்கு - உயிரின் நுகர்ச்சியும் நிகழ்ச்சியும் காட்டும் பொருட்டு, உடலிற் கட்டுண்டவழி இன்ப துன்பங்களை நுகர்வது உயிரேயாம் உடலன்று என்று கூறிய எனக்கு; அதுவன்று - அக்கருத்தினை அறிதலின்றி; பிண்டத்து உழப்புப் போய் உழப்பப் புலம்புவது என் செயல் என்பாய் - உடல் கட்டுண்ண அங்குயிர் சென்று அவ்வருத்தத்தை நுகரும் என்று பிதற்றுவது என்னுடைய செயல் என்று கூறி இஃது எருது காலொடியக் கழுதை முடவின தொக்கும் என்று நீ கூறும் குற்றம்; உடம்பும் உயிரும் தீட்டொட்டுக் கலப்பு வகையால் தொடர்புற்று நிற்கும் என்று கூறும் எமக்காகாது காண்!; பட்டான் புண்பட நோய் ஏதிலர்க்கு ஆய் - அம்பு பாயப் பட்டானொருவன் புண்படாநிற்க, அப்புண்ணானுண்டாகும் துன்பம் அயலார்க்குண்டாகி; சோமாகி சா புண்பட்டேன் என்று சாற்றுவது-இன்புறுமுடம்புடைய மற்றொருவன் யான் சாதற்குக் காரணமான பெரும் புண்பட்டேன் என்று கூறுவது உன் தத்துவமே-(உருவக்கந்தத்தின் யாப்பும், நுகர்ச்சிக் கந்தத்தின் நுகர்ச்சியும், பாவனைக் கந்தத்தின் பாவனையும், ஒன்றற்கொன்று தொடர்

பற்றவை என்று கூறுவதனாலே,) உன் தத்துவமல்லவோ? என்றாள் என்க.

(வி - ம்.) உடலுழப்புண்டால் என்க. திட்டொட்டுவகையால் உயிர் உடலோடிரண்டறக் கலந்திருத்தலானும் உடல் புற்கலமாகிய அறிவில் பொருளாதலானும் நுகர்ச்சியுயிருக்கேயன்றி யுடலுக்கின்றென்பேம் இஃதறியாது நீ குற்றங் கூறுகின்றனை அக்குற்றம் எமக்காகாது உருவக்கந்தம் முதலியவற்றை முழுதும் வேறுவேறாகக் கொள்ளும் நினக்கேயாம் என்பது கருத்து.

யாப்புண்ணல் - கட்டுண்ணல். ஏ - அம்பு. சோமாகி - சுகம்ஆகி. இன்பமாய வுடலையுடையேன். ஆகம் - உடல். சாப்புண் - சாதற்குக் காரணமான புண். (கூஎ)

இதுவுமது

கூ0அ. உழப்புழப்பச் செய்கையா
னுறுதுயருற் றேனேன்றல்
பிழைப்பதுவாக் கருதாதே
பெருவழியு ளிடறுதியா
லுழப்பறிவு குறிசெய்கை
யொருவனவே யெனச்சொன்னார்க்
கிழிக்குவதிங் கில்லாமை
யிதனாலே யறியன்றாள்.

(இ - ள்.) உழப்பு உழப்ப - ஐய நின்னுடைய நுகர்ச்சிக் கந்தமே துன்பத்தை நுகர்வதாகவும்; செய்கையான் உறுதுயர் உற்றேன் என்றல் - அதனில் முழுதும் வேறாகிய செயற்கந்தம் யான் மிக்க துயரெய்தினேன் என்று கூறுதலே-எருதுகாலொடியக் கழுதை முடவினது போன்றதொரு; பிழைப்பதுவா கருதாதே - குற்றமாகக் கொள்ளாமல்; பெருவழியில் - அரசவீதியிலேயே குருடன்போன்று; இடறுதி - இடறிவீழ்கின்றாய்; உழப்பு அறிவு குறி செய்கை ஒருவனவே - நுகர்ச்சியும் அறிவும் குறியும் செயலும் உயிரின் பண்புகளே; எனச் சொன்னார்க்கு - என்று கூறிய ஆருகதருக்கு; இழிக்குவது இங்கு இல்லாமை - குற்றங் கூறுவது இதன்கணின்மையை; இதனாலே அறி என்றாள் - இதனாலே அறிவாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) உழப்பு-நுகர்ச்சி. உறுதுயர்-மிக்கதுன்பம். பிழைப்பது வாக என்பதன் ஈறு கெட்டது. பெருவழியில் இடறுதி என்றது, குற்றமற்ற ஆருகதர் கொள்கையிற் குற்றங்காண்கின்றனை என்றவாறு. பெருவழி - ஈண்டு அரசவீதி. இழிக்குவது - குற்றங் கூறுவது. இதனாலே ஈண்டுக் கூறியவிதனாலே. (கூஅ)

கூ0௬. அருவாயில் யாப்பில்லை
யன்றுயிற் குறைபடூஉ
மிருவாறின் கூட்டமுந்
தீதென்ப தெம்மிடமே
மருவாதா யுரைத்ததனை
மனங்கொள்ளா யதுவன்றிப்
பொருவாறென் றுரைத்தாலு
மொருவாறு முணராயால்.

(இ - ள்.) அருவு ஆயில் யாப்பு இல்லை-உயிர் அருவமானல் உடம்பு முதலியவற்றோடு கட்டுண்டு நில்லாதென்றும்; அன்று ஆயின் குறை படூஉம் - அருவமல்லாத உருவாயின் - வெட்டவும் துணிக்கவும் கூடியதாய் உடலளவிற்றாகலின் அதன்கண் அடங்காதாம்; இரு ஆறின் கூட்டமும் தீதென்பது - அருவும் உருவும் ஆகிய இரண்டு வகையின் கூட்டமே உயிர் என்னின் மூற்கூறப் பட்ட இருவகைக் குற்றமுமாம் என்று நீ கூறுவது; எம் இடமே-ஒரு படித்தாய் ஊற்றுணர்வு உடலளவிற்றாய் அஃது உடலி லடங்குமென்று நீ கூறுங்கால் யாங்கள் நினக்குக் குற்றங் கூறுதற் குரிய இடமேகாண்!; மருவாதாய் உரைத்ததனை - எம்மொடு பொருந்தாத நீ ஊற்றுணர்வு உடலின்கண் அடங்கினவாறு போலக் கொள்ளென்று யான் கூறியதனையும்; மனங் கொள்ளாய்-மனத்திற் கொள்கின்றிலை; பொருவு ஆறு ஒன்று உரைத்தாலும்-அஃதன்றிக் கருப்பங் கோலிலே கருப்பஞ்சாறு அடங்குமாறு அடங்கும் என யாங்கள் உவமை முகத்தான் விளக்கும் வழி யொன்று கூறினும்; ஒருவாறும் உணராய் - நீ ஒருவாற்றானும் உணர்கின்றிலை; நின்னை யுணர்த்தும்வழி இனியில்லை என்றாள் என்க.

(வி - ம்.) இது "கலப்பாடி" என்னுஞ் செய்யுளானும், "ஒருவகை யால்" என்னுஞ் செய்யுளானும் பௌத்தர் கூறிய குற்றம் நீக்கிற்று.

மொக்கலன் உயிர் அருவாயில் கட்டுண்டு நில்லாது; உருவாயின் வெட்டவும் துண்டிக்கவும் படும். குடம் குடத்தில் அடங்காமைபோல உடலின்கண் அடங்கவும் மாட்டாது; அன்றி உயிர் அருவுரு என்ற வழியும் முற்கூறிய இருவகைக் குற்றமுமாம் என்றானாக, அது கேட்ட நீலகேசி அருவம் கட்டுண்ணாது என்று நீ கூறிய குற்றம் யாங்கள் நினக்குக் குற்றங்கூறற்கியன்ற இடமேயன்றி நினக்கிடமாகாது என்றாள் என்க.

ஈருற்றின் கூட்டமும் எனற்பாலது எதுகையின்பம் நோக்கி இரு வாறின் கூட்டம் என நின்றது. மருவாதாய்-பகைவனாகிய நீ யாங்கள் உரைத்ததனை மனங்கொள்ளாய் என்றவாறு. அஃதாவது, நீ ஊற்

ணுணர்வு உடலில் அடங்கு மென்றதுபோல உயிரும் உடலில் அடங்கு மெனக்கொள் என்று முன்னுரைத்தது என்க.

பொருவு ஆறு-உவமைகூறி விளக்கும் நெறி. அஃதாவது: பருப் பொருளாகிய உடலின்கண் சூக்கும உடலுடைய உயிர் அடங்குதல் கருப்பங்கோலில் கருப்பஞ்சாறு அடங்குதல் போன்று அடங்கு மெனக் கொள்க என்றதாம்.

இனி, உயிர் சிறிது உருவமுமுடைத்தென்றது, உருவப் பொரு ளாகிய புற்கலங்களுள் வைத்து மிகவும் நுண்ணுருவமுடைய வினையாலே உயிர் கட்டுண்டிருத்தல் கருதிக் கூறியபடியாம். அதற்காக உயிர் உடலில் அடங்காதாதல் வேண்டுவதில்லை. என்னை? உருவப் பொருளேயாயினும் இலை இலையின்கண் அடங்காதாகவும் அவ்விலையின் அளவிற்றாகிய அதனுருவம் அதன்கண்ணடங்கி நின்றதன்றே? அது போலக் கொள்ளென்றுவமை கூறுதலுமொன்று.

இதனால், வினையாலியன்ற நுண்ணுருவம் பெறாது அருவமேயாய் நின்ற உயிர்க்கு உடல் முதலியவற்றோடு தொடர்பு கூறுஞ் சமயக் கணக்கர்க்கு நீ சொல்லிய குற்றமெல்லாம் பொருந்தும் என்றாளும் ஆயிற்றென்க. (௩௧)

௩௦௬. அறிவெழுந் தவலிக்கு
 மென்பதூஉ மதுவெழப்
பிறிதோன்று பேதுறுமங்
 கென்பதூஉம் பெரும்பேதாய்
குறிகொண்டாருரையன்றாற்
 குற்றமே கொளலுறுவாய்
பொறிகொண்டு காற்றினையும்
 போகாமற் சிமிழாயோ.

(இ - ள்.) பெரும்பேதாய்-மிக்க அறியாமையையுடையோனே!; அறிவு எழுந்து அவலிக்கும் என்பதூஉம் - துன்பமெய்துங்கால் அறிவு முனைத்தெழுந்து வருந்தாநிற்கும் என்பதும்; அது எழ - அவ்வறிவெழுந்து துன்புறக் கண்டு; அங்கு பிறிது ஒன்று பேதுறும் என்பதூஉம் - அவ்விடத்தே அதனின் வேறாகிய உயிர் வருந்தும் என்பதும் யாங்கள் சொன்னேமாகக் கருதி; குற்றமே கொளல் உறுவாய் - இவற்றின்கண் குற்றங் காண்பாய்; குறி கொண்டார் உரை அன்றால் - இவை அறிவுடைய ஆருகதர் கூற்றன்றுகாண்; காற்றினையும் பொறிகொண்டு சிமிழாய்-இங்ஙனம் உயிரையும் அறிவினையும் வேறுவேறாக் கொள்ளாத எமக்குக் குற்றங் கூறுவாயாயின் நீ காற்றினையும் ஓரியந்திரத்தாலே இயங்கா வண்ணம் கட்டுவாய் காண் என்றாள் என்க.

(வி - ம்.) இஃது "எழும்பயிற்றி" என்னுஞ் செய்யுளாற் பௌத்தர் கூறும் குற்றம் நீக்குகின்றது.

இஃதென் சொல்லியவாறோவெனின் - அறிவையும் உயிரையும் வேறு வேறு பொருளாகக் கொண்டு அறிவின் துன்பத்தைக் கண்டு உயிர் வருந்துமென்று யாங்கள் சொன்னோமாகச் சொல்லியது உன் பேதைமையேயாம்; யாங்கள் அறிவு முதலிய பண்புடையது உயிர் என்றே கூறுதும்; அஃதேயெனின் - அறிவிற்கு வேறான உயிரினைக் காட்சியளவையாற் கண்டிலேமாதலின் அறிவே உண்டு உயிரில்லை எனல் அமைவுடைத்தாம் பிறவெனின், அற்றன்று, அறிவிற்கு வேறாக உயிர் உண்டு என்பார்க்கன்றே அறிவதாகிய அறிவினையே கொண்டு அறியாதாகிய உயிரில்லை என லமைவதாம்; உயிரினை அறிவினின்றும் பிரிக்கலாகாமையின் உயிரில்லை எனல் எம்மனோர்க்கமையாது; யாங்ஙனமெனின்? இயங்குந் தன்மைத்தாகிய காற்றினை அவ் வியக்கத்தினின்றும் நீக்கி ஒரு பொறியாலே கட்டலாமாகில் அறிவுப் பண்புடைய உயிரை அதனினின்று பிரித்தல் கூடும் என்பது. இயக்கமும் காற்றுமுண்டானவாறுபோல அறிவும் உயிரும் உண்டென்பது. இதன் றுணிவு "நிலம்வலிது, நீர்துவளும், தித்தெறும், காற்றுளரும்" எனக் காற்றினை இயங்குந் தன்மைத்தாக வோதினன்.

இனி, குளிர் ஊறு முதலியவற்றாலும் காற்றுப் புலப்படுமெனின்? திருத்திருபத்தாலும் விஷாதருபத்தாலும் யான் முன் முயலானேனென அத்துவித ருபத்தாலும் உயிரும் புலப்படும் என்றவாறு. (௯0)

௬0௭. பிறன்சுமவான் றானடவான்
பெருவினையு முய்க்கில்லா
வறஞ்செய்தா னமருலகிற்
செல்லும்வா யரிதென்று
புறம்புறம்பே சொல்லியெம்
பொருணிகழ்ச்சி யறியாயாற்
கறங்குகளு மல்லனவுங்
காற்றெறியத் திரியாவோ.

(இ - ள்.) அறம் செய்தான்-நல்வினையைச் செய்தானுடைய வுயிரை; பிறன் சுமவான் - பிறனொருவன் சுமந்து கொடுபோய் விடுவானுமில்லை; தான் நடவான் - காலின்மையால் அவ்வுயிர் தானேயும் நடந்து செல்லமாட்டாது; பெருவினையும் உய்க்கில்லா - அவ்வுயிர் செய்த மிக்க நல்வினைகளும் அறிவில் பொருளாகலின் அது செல்லுமிடமறிந்து அதனைச் செலுத்தமாட்டா ஆதலால் அவ்வுயிர்; அமருலகில் செல்லும் வாய் அரிது என்று - அந் நல்வினைப் பயனை நுகர்தற்குத் துறக்கவுலகிற் றுச் செல்லும் வாயில் இல்லையாம், இங்ஙனமாகவும் அறஞ்செய்தான் துறக்கம் புகுவான் என்று நீ சொல்லுமாறென்னென்று; புறம் புறம்பே சொல்லி - எம்மனோரில்லாதவிடத்தே எம்மைப் புறங்கூறி; எம்பொருள் நிகழ்ச்சி அறியாயாய் - எம்முடைய பொருள் நிகழ்வினை அறியாத மடவோனாகின்றனை; கறங்குகளும் அல்லனவும் காற்று எறியத்

திரியாவோ - காற்றுடிகளும் சருகு முதலிய பிறவும் காற்று வீசுத லாலே புடைபெயர்ந்து போதல் காண்டுமன்றே? அங்ஙனமே அறிவில் பொருளேயாயினும் வினைத்தொடர்பாலே உயிர்க்குப் புடைபெயர்ச்சியும் ஓரிடத்தினின்றோரிடத்தே செல்லலும் கூடும் என்று கொள்! என்றாள் என்க

(வி - ம்.) இது, 'காலிஞற் சுமந்துய்ப்பாளில்லை'' என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்ற நீக்குகின்றது.

அறஞ் செய்தான் என்றது உயிரை. அதற்குக் காலின்மையால் தானே நடவாது என்றவாறு. அமருலகில் என்றமையால் பெருவினை என்றது நல்வினையை என்பது பெற்றும். வினை அறிவில் பொரு ளாகலின் அவ்வுயிர் செல்லுமிடமறிந்து செலுத்தா என்க. வாய்-வாயில். அரிது ஈண்டு இன்மை குறித்து நின்றது. புறஞ்சொல்லல் - காணுத வழிப் பிறரை இகழ்ந்துரைத்தல்.

கறங்கு-காற்றாடி. அல்லன-சருகு முகில் முதலாயின. கறங்கு அல்லனவும் காற்றெறியத் திரியாவோ என்றது நுவலா நுவற்சி என்னும் அணி; அஃதாவது உவமை கூறுமாத்திரையாலே பொருள் தானே தோன்றுதல். இவ்வணியினை,

> ''பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டம்
> சால மிகுத்துப் பெயின்'' (குறள். சஎரு)

என வரும் திருக்குறளினும் காண்க.

சருகு முதலியவற்றைக் கீழ்க்காற்று மேற்குக் கொண்டுபோதலும், மேல்காற்றுக் கிழக்குக் கொண்டுபோதலும் போல அநுபூர்விகர்மம் நான்கும் உயிர்களை நான்கு கதிக்கண்ணும் உய்க்கும் என்றவாறு. இஃதெம் பொருணிகழ்ச்சி. இதனை அறியாதே புறங்கூறித் திரி கின்றனை என்றிகழ்வாள் எம்பொருணிகழ்ச்சி யறியாய் என்றாள்.

வெண்பா

> ''மருந்து மனச்சென் றிடமா தொருவ
> னிருந்த விடத்திருளிற் செல்லுந் - திருந்து
> துறக்கத் துயிரையத் தொல்லுயிர்கொண் டுய்த்துப்
> பிறப்பிப்ப தற்கென்னே பேசு.'' (சக)

**கூ0அ. மகனேயாய்ப் பிறப்பினு மாதுயரங் கேடில்லை**
**யவனுகா னுயினு மறஞ் செய்த லவமாகு**
**மேவனுகு மென்றேம திட்டமே யுரைத்தியா**
**னகைநாணி நீநின்னை நன்பகலே மறைக்கின்றாய்.**

(இ - ள்.) மகனேயாய் பிறப்பினும் - அறஞ்செய்தானொருவன் மனிதனுகவே துறக்கத்தே சென்று பிறப்பினும், மாதுயரம் கேடு இல்லை - அம்மனித கதிக்குரிய பெருந்துன்பங்கள் தீராதாம்; அவன்

ஆகான் ஆயினும் - துறக்கத்துப் பிறந்தோன் மனிதனொருவன் அவனின் வேறாய தேவனே ஆவன் என்றாலும், மனிதனொருவன் அறஞ்செய்ய அதன்பயனை அவனின் வேறாய தேவன் ஒருவனே நுகர்வான் என்றாகின்றமையாலே; அறம் செய்தல் எவன் ஆகும் - ஒருவன் அறஞ் செய்தலாலே பயன் என்னையோ?; அவமாம் அச் செயல் பயனில் செயலே யாமென்று; எமது இட்டமே உரைத்தி யால் - உனக்குக் கூற விரும்புகின்ற குற்றத்தை நீ எமக்கே ஏற்றிக் கூறுகின்றாய்; நகை நாணி - கேட்டோர் நகைப்பரே என்று நாணி; நின்னை நீ நன்பகலே மறைக்கின்றாய் - உன்னை நீ நல்ல இந்தப் பகற்பொழுதிலேயே மறைக்கமுயல்கின்றாய் காண்! இங்ஙனம் நீ நின்னை மறைப்பதே நின் குற்றத்தைப் பிறர்க்குப் புலப்படுத்தும் என்றாள் என்க

(வி - ம்.) இது ''மக்கட் பண் பறியாது'' என்னுஞ் செய்யுளால் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

எமது இட்டம் - யாங்கள் நினக்குக் கூறவிரும்புகின்ற குற்றம். நீ நின் குற்றத்தை மறைத்துக்கொண்டு அக் குற்றத்தையே எங்கட்குக் கூறுகின்றாய். ஆயினும் நீ மறைத்ததே நின் குற்றத்தைப்பிறர் அறியத் தூற்றுகின்றது. என்னை ? நகமுதலியவற்றிற் பட்டபுண்ணைப் பிறர் அறியாதிருக்கும்பொருட்டுப் போர்வையாற் போர்த்தாற் போர்த்த அப்போர்வையே அங்குப் புண்ணுண்மையைப் புறத்தார்க்குப் புலப் படுத்துமாறு போலே என்றவாறு.

இனி, பௌத்த சமயத்திலாயின் அறஞ்செய்தோன் செய்தவக் கணத்திலே கையறக் கெடுகின்றானாதலின் அதன் பலனுகருமளவும் நில்லான்; நிற்கில் அவர் கணபங்கம் கெடுமாதலின் அறத்தினைச் செய் தாற்கு அதன் பயனுகர்ச்சி இல்லையாம். இனி, அதன் தொடர் முறையில் அந்நுகர்ச்சி கைகூடுமெனின், தொடர்முறையிற் கைகூடும் என்பது செய்தவன்தானே பெறுவனென்றவாறோ? பிறனே பெறுவன் என்றவாறோ? தானே பெறின் கணபங்கம் கெடும்; பிறனே பெறின் செய்தாற்குப் பயனின்றிச் செய்யாதாற்குப் பயனுகர்ச்சியுண்டாகை வேண்டிவரும்; அன்றியும் கணபங்கம் நுந்தத்துவம் ஆதலின், செயதவனுக்குப் பயனின்மை யறிந்து வைத்தும் அறஞ் செவியறி வுறுத்தும் புத்தன் வஞ்சனுமாம்.

இனி உயிர் போக்குவரவற்ற நித்தியமென்று கொள்வார்க்கும் அறஞ் செய்தலும் பயனுகர்தலும் கூடாவாம்; கூடின் போக்கு வர வற்ற நித்தியத்தன்மை கெடும். ஆதலின் நித்தியாநித்தியப் பொருள் உயிரென்று கொள்ளும் ஆருகத சமயத்தினராகிய எமக்கே உயிர் மனிதப் பிறப்பு மாறித் தேவப் பிறப்பெய்தி வினைமுதலாகிய பயனுகர்வதாம் என்பது பொருந்துவதாம். என்னை? ''சுற்றிக்கொண்டு கிடந்து கண்ட இரையை நெருங்கப்பற்றி விழுங்கிய பாம்புபோலுற்று மனிதனிற் செய்த வினைப்பயனைத் தேவராயினிதினுகரும் உயிர்'' என்பது உண்டுமாம் இல்லையுமாம் என்னும் பலதலை மேற்கோளினேமாகிய எம்மனோர் கூற்றாகலின் என்பதாம்,	(௬௨)

௩௦௯. வீயுடம்பிட் டுயிர்சென்று வினையுடம்பு முளதாகத்
தாயுடம்பி னகத்துடம்பு தான்வைத்த தின்றியே
நீயுடம்பு பெற்றவா றுரையென்பாய் நிழல்போலும்
பேயுடம்பு பிறிதுடம்பிற் புகல்பேதாய் காணாயோ.

(இ - ள்.) *பேதாய் - அறிவிலியே! நீ எம்மை நோக்கி; உயிர் வீ உடம்பு இட்டு - பிணி முதலியவற்றாற் கெடுகின்ற நின்னுடலை விட்டிறக்கின்ற நின்னுயிர்; வினை உடம்பும் உள தாக - வினையாகிய புற்கலத்தாலியன்ற நுண்ணுடம்பும் தனக்குள தாகவே; தான் சென்று தாய் உடம்பின் அகத்து உடம்பு வைத்தது இன்றியே - பிறள் ஒரு தாயின் உடம்பினூடே தனது நுண்ணுடலை வைத்தது மல்லாமல்; நீ உடம்பு பெற்ற ஆறு உரை என்பாய் - நீ இவ்வுடம் பினைப் பெற்ற வகையையும் கூறுதி என்பாய்; நிழல் போலும் பேய் உடம்பு பிறிது உடம்பில் புகல் காணாயோ? - நிழலை ஒத்த பேயினது நுண்ணுடம்பு மற்றொருவருடம்பினூடே புகுவதனை அறிந்திலையோ? என்றாள் என்க.*

(வி - ம்.) *இஃது* "இயற்றிய உடம்பிட்டால்" என்னுஞ் செய்யுளால் *கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.*

*இதன்கண் மொக்கலன் உடலை விட்டிறந்த வுயிர் மற்றொரு தாயின் வயிற்றில் தனது நுண்ணுடம்பினைக் கொடுபோய் வைத்தது எங்ஙனம்? அன்றியும் நீ இவ்வுடம்பினைப்பெற்றவாறென்னை? என்று வின விணுக, நீலகேசி 'பேதையே நுண்ணுடம்புடைய பேய் ஏனையோர் பருவுடம்பினுள் புகுவதனை அறிந்திலையோ? அறிந்தனையெனின் இதனையும் அங்ஙனமே கொள்' என்றாள் என்க.*

*வீயுடம்பு: வினைத்தொகை; வீதல் - இறத்தல், வினையுடம்பு என்றது வினையாலியின்ற நுண்ணுடம்பினை.* (௬௯)

இதுவுமது

௩௧௦. எப்பொருளு மொன்றொன்றிற்
கிடங்கொடுத்த லிரும்புண்ணீர்
புக்கிடங்கொண் டடங்குதலே
போலவும் தந்தைதாய்
சுக்கிலமுஞ் சோணிதமுந்
தழீஇச்சுதையு ணெய்யனைத்தா
யொத்துடம்பி னகத்தடங்கி
யுடன்பெருகு மெனவுரைத்தாள்.

(இ - ள்.) *எப் பொருளும் ஒன்று ஒன்றிற்கு இடங் கொடுத்தல் - எல்லாப் பொருள்களும் தம்மில்ஒரு பொருள் மற்றொரு*

பொருளிற்கு இடங் கொடுத்தல் உண்டுகாண்; இரும்பு உண் நீர் - கொல்லுலையில் வெந்த இரும்புண்ட நீரானது; புக்கு இடங் கொண்டு அடங்குதலே போலவும் - அவ்விரும்பினுட்புகுந்து ஆங்கு இடமும் பெற்று அடங்குதல் போலவும், தந்தை தாய் சுக்கிலமும் சோணிதமும் தழீஇ - பருவுடலை விட்டிறந்து போகும் உயிர் வினையுந்துதலாலே புதிய தந்தையுந் தாயுமாகிய இருவருடைய புணர்ச்சிப் போதிற் பெருகும் சுக்கிலமும் சுரோணிதமும் என்று கூறப்படுகின்ற கருநீரைப் பொருந்தி; சுதையுள் நெய் அனைத்தாய் ஒத்து - மண்ணீட்டின்கட் கூட்டிய கருப்பஞ்சாறு கலந்தாற் போன்று அக்கருநீரோடு கலந்து; உடம்பின் அகத்து அடங்கி - தாயின் உடம்பினூடே கருப்பையுள் அடங்கி; உடன் பெருகும் என வுரைத்தாள் - அப்பொழுது தொடங்கி உருவாகி வளரும் என்று கூறினள் என்க.

(வி - ம்.) எப்பொருளும் ஒன்று ஒன்றிற்கு இடங்கொடுத்தல் உண்டு என ஒருசொல் வருவித்து முடிக்க. வானின்கண் ஏனைப் பூதங்கள் அடங்குதலும் நிலத்திற் புக்கு நீரடங்குதலும்இன்னோரன்ன பிறவுங் காண்க. போலவும் என்னும் உம்மை எதிரது தழீஇய எச்சவும்மை. நீர் அடங்குதல் போலவும் நெய்யொத்தும் என எதிரது தழீஇயது - ஒக்கும் எனல் வேண்டிய இறந்தது தழீஇய எச்சவும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது.

தாயுடம்பினூடு முன்னர் உடம்பு இல்லையெனினும் மணலும் நீருங்கூட அரைத்த சாந்தில் கருப்பஞ்சாறாகிய (கட்டி) நெய்யளவினவாறு போலச் சுக்கில சுரோணிதங் கலந்து கூடியவழி யொருகால் உயிர் வினை வயத்தாலே அதனுட் கலந்து அக்கரு நீராகிய உடம்போடே வளர்ந்து பெருகும் என்றவாறு.

இன்னும், கருப்பஞ்சாற்றோடுகூடிய சாந்தினியன்ற மண்ணீடுகள் அக் கருப்பஞ்சாறு ஆற்றல் கெட்டவழிஅழிந்தொழிதல் போன்று உயிர் நீங்கிய வழி உடலும் அழிந்துபடும் என்பதும் இவ்வுவமையாற் கொள்க.

சுக்கிலம் - தந்தையின் கருநீர். சுரோணிதம் – தாயின் கருநீர்: நெய் – கருப்பஞ்சாறு. சுதை - மண்ணீடு. (சச)

கூகக. செய்வினை தா னிற்பவே பயனெய்து மென்பதூஉ
மவ்வினை யறக்கெட்டா லதுவிளையு மென்பதூஉ
மிவ் விரண்டும் வேண்டுத லெமக்கில்லை யெடுத்துரைப்பி
னவ்வினையி னிலைதோற்ற நாசந்தா னொட்டுங்கால்.

(இ - ள்.) செய்வினை தான் நிற்பவே பயன் எய்தும் என்பதூஉம் - ஒருவன் அறஞ்செய்யுங்கால் அதன்பயன் அவ்வினையுளதாய வப்பொழுதே அவனுக்கு நுகர்ச்சியாக வந்தெய்தும் எனபதும்; அவ்வினை அறக்கெட்டால் அது விளையும் என்பதூஉம்- அவ்வறவினை பொன்றக் கெட்டபின்னரே அதன் பயன் நுகர்ச்

சிக்கு வரும் என்பதுமாகிய; இவ்விரண்டும் எமக்கு வேண்டுதல் இல்லை - இந்த இரண்டு கொள்கைகளும் எமக் குடன்பாடல்ல வாகலின் இவையிற்றை யாங்கள் கொள்ளேங்காண்; எடுத்துரைப் பின் - யாங்கள் கூறுமாறு எடுத்துக் கூறுமிடத்தே; ஐவினை நாட்டுங்கால் - வினை முதலின் செயலாகிய வினையியல்புநிலை நாட்டுமிடத்து, இல்நிலை தோற்றம் நாசம் - செய்தானைப் பற்றுங் கால் சிலநாள் நுகர்ச்சிதருதல் இன்றி நிலைத்திருந்து, பின்பு அத்தன்மை கெட்டுத் தகுதியான காலமெல்லாம் நுகர்ச்சியுண் டாக்கி அந்நுகர்ச்சி முடிந்துழித் தானும் அழிந்தொழியும் என் பேங்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) இது "வினைநிற்க பயன்" என்னுஞ் செய்யுளாற் கூறப் பட்டகுற்றம் விலக்குகின்றது.

"வினை நிற்கவே பயனும் தோன்றும் என்பதும், வினை அறக் கெட்ட பின் பயன்றோன்றும் என்பதும் ஆருகதர் கொள்கையெனக் கருதிய மொக்கலன்" வினை நிற்கப் பயன் தோன்றுமாயின் அருகன் கோயி லெடுப்பான் எடுக்கும் அப்பொழுதே துறக்கம்புகுதலும் நிகழ் தல் வேண்டும். வினை அறக்கெடின் பயனுமில்லையாம்; உண்டெனின் வீடெய்தினவனுக்கும் அந்நுகர்ச்சி உளதாதல் வேண்டும் என்று அவற் றிற்குக் குற்றங் கூறினான்; அதுகேட்ட நீலகேசி ஐய அவ்விரண்டும் எம் மேற்கோள்களல்ல: யாங்கள் ஒருவனை அவன் செய்த வினை பற்றி னால் அது நுகர்ச்சிக்குத் தகுதியான செவ்வியை எதிர்நோக்கிச் சிலநாள் வாளாநின்று, அச் செவ்வி தோன்றியவழித் தன் பயனை நுகர்வித்து அந்நுகர்ச்சி முடிந்துழித் தானும் அவனை விட்டகலும் என்று கூறுவேம். ஆதலால் நீ கூறும் குற்றம் எமக்காகா என்றாள் என்க. இதன்கண், அவன் மாற்றான் மேற்கோளறியாமை என்னும் குற்றமுடையனாதல் குறிப்பாலுணர்த்தப்பட்டமை யுணர்க. இதற்கு மேல் வருஞ்செய்யுளில் எடுத்துக்காட்டோதுகின்றாள். (சஇ)

இதுவுமது

நகஉ. பைம்பொன்செய் குடமழித்துப்
பன்மணிசேர் முடிசெய்தாற்
செம்பொன்னு னிலையுதலுஞ்
சிதைவாக்க மவைபெறலு
நம்பொன்றிங் கிவைபோல
நரர்தேவ ருயிர்களையும்
வம்பென்ற கருதனீ
வைகலும்யா முரையாமோ.

(இ - ள்.) பைம்பொன் செய்குடம் அழித்து - பசிய பொன் னாற் செய்த குடத்தை அழித்துப் பின்னர் அப்பொன்னாலே; பல் மணி சேர் முடி செய்தால் - பல்வேறு மணிகள் பதித்த முடிக்கல

ளுகச் செய்யுங்கால்; செம்பொன்னு நிலையுதலும் - அப்பொன்முடியாக அமையுந்துணையும் பயனின்றிப் பொன்மாத்திரையாகவே நிற்றலும்; ஆக்கம் சிதைவு அவைபெறலும் - பின்னர் அணிதற்குத் தகுதியுடைய செவ்விபெற்றவுடனே அரசனுக்கு அணியாகி ஆக்கஞ் செய்தலும் அவ்வரசன் முடியணிதற்குரியனல்லாத பொழுது தானும் சிதைந்து போதலும் ஆகிய தன்மைகளைப் பெறுதலும்; என்னுமிதுவே இவைபோல நரர் தேவர் உயிர்களையும் நம்பு - மக்களாகவும் தேவர்களாகவும் மாறிப்பிறக்கும் உயிர்களையும் வினைபற்றி நின்று நுகர்வித்துக் கழியும் என்று நம்புவாயாக!; நீ ஒன்று இங்கு வம்பு என்று கருதல்-நீ இப்பொழுது யாங் கூறுத தொன்றனை இவ்விடத்தே கூறி அஃது எங்குற்றம் என்று கருதாதே கொள்; யாம் வைகலும் உரையாம்-யாம் எந்த நாளினும் நீ கூறுமாறு கூறுவேமல்லேம் என்றாள் என்க.

(வி - ம்.) பொற்குடம் அழிக்கப்பட்டு முடியாகச் செய்யுந்துணையும் பொன்மாத்திரையாய்ப் பயனின்றி நின்று முடியாயவழிப் பயன்றந்து அணிவோன் அத்தகுதியிழந்தவுடன் சிதைதலும் ஈண்டு எடுத்துக் காட்டு.

இனி, தீயானது தீண்டியபொழுதே சுடுவதுபோலவும் பால் நாவினிற் பட்டபொழுதே சுவைப்பதுபோலவும் வினையும் பற்றிய பொழுதே பயன்றரவேண்டாவோவெனின்; வேண்டா. என்னை? மருந்துண்டுழி அஃது அப்பொழுதே பயன்றராமல் செவ்விபெறுந் துணையு நின்று சில காலங்கழித்துப் பயன்றந்தவாறுபோல வினையும் சிலகாலங் கழித்துப் பயன்றரும் என்க.

இதனை,

"மருந்துண்டாற் சில்பொழுது முன்போற் பலியா
திருந்து பயன்கொடுப்ப தேபோற்—பொருந்துவினை
செய்தாற் சிலநாள் கழிந்து வினைப்பயனை
யெய்து மெனவுரைப்பார்க் கென்"

என்பதனானுமுணர்க. (சக)

இதுவுமது

௩௧௩. பெரும்பாவ மறத்துய்த்துப்
பெறுதும்யாம் வீடேன்றே
மரும்பாவ காரிநீ
யாவர்வா யதுகேட்டாய்
வரும்பாவ மெதிர்காத்து
மன்னுந்தம் பழவினையு
மோருங்காக வுதிர்த்தக்கா
லுயிர்த்தூய்மை வீடென்றாள்.

(இ - ள்.) யாம் பெரும்பாவம் அறத்துய்த்து வீடு பெறுதும் என்னேம் - ஐய! யாங்கள் செய்த பெரிய தீவினைப் பயன்களைத் துவரத்துய்த்த பின்னரே வீடு பெறுவேம் என்று கூறு இன்றிலேம்; அரும் பாவகாரி நீ - தீர்தற்கரிய தீவினையையுடைய நீ தான்; அது யாவர் வாய் கேட்டாய் - அவ்வாறு யார் சொல்லக் கேட்டு இவ்வாறு மேற்கோள் மலைவாகக் கூறுகின்றனை; வரும் பாவம் எதிர்காத்து - யாங்கள் இனி வரும் வினைகளைக் குப்தி சமிதி முதலியவற்றாலே வாராமற் றடுத்து; மன்னும் தம் பழவினையும் - முன்னரே தம்பால் நிலைபெற்ற பழவினைகளையும்; ஒருங்கு ஆக உதிர்த்தக்கால் - தபசு சம்மிய முதலியவற்றாலே ஒரு சேரத் துடைத்தவழி; உயிர்த்தூய்மை வீடு என்றாள் - உயிரின்கண் அவ்வழுக்கு நீக்கத்தாலே பிறக்கின்ற தூய்மையே அதற்கு வீடாகும் என்று கூறுவேம்; என்றாள் என்க.

(வி - ம்.) இது, "தொல்லைச் செய்யப்பட்டது" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

துய்த்தொழித்தல் அருமை யென்பது தோன்றப் பெரும்பாவம் எனப்பட்டது. இங்ஙனம் ஆன்றோர்க்குக் குற்றங் கூறுதல் தீர்த்தற்கரிய தீவினை என்பது தோன்ற அரும்பாவகாரி நீ என்றாள். அது - அங்ஙனம் கூறுமதனை.

குப்தி, மனமொழி மெய்களை அடக்கி நிற்றல். சமிதி-துறவறத்தோர்க்குரிய ஐந்துவகை ஒழுக்கங்கள். அவையாவன - ஈர்யா சமிதி, பாடைசமிதி, ஏடணைசமிதி, ஆதானநிக்கேபசமிதி, உச்சர்க்கசமிதி என்பன தவசு-உட்டவமும் புறத்தவமும் ஆம். சம்மிய வொழுக்கம், சஉஓ ஆம் செய்யுளிற் காண்க.

வரும்பாவம் என்றது எதிர்காலத்தே செய்யுந் தீவினைகளை.

இனி, அங்ஙனமாயின், நல்லொழுக்கத்தால் உயிருக்கு நல்வினை உண்டாமன்றே, அதனால் அதற்கு இன்பநுகர்ச்சி எய்துதலும் உண்டாகலின், இவ்வாற்றால் உயிர்க்கு வினைத்தொடர்புண்டாகி அது வீடெய்துதல் சாலாவாம் பிறவெனில்; அற்றன்று; அந்நல்வினைப் பயன் தீவினைகளைக் கெடுத்துத் தானுங் கெடும்; கலங்கனீரிற் றேற்றாம்பரல் தேய்த்தாலது மண்ணோடுகூட அத்தண்ணீரைவிட்டு நீங்கினவாறுபோலவென்பது; இன்னும்,

> "மருவிய வினைகள் மாற்ற மாகினைக் கழுவி வீட்டைத்
> தருதலாற் புனித ஞக்குந் தன்மையாற் புண்ணிய மாமே"

என வரும் மேருமந்தரபுராணச் செய்யுளும் (கூ௫) காண்க. (௬எ)

வேறு

௩கசு. சொன்ன சூளைத் துறந்தவற் றட்டன
பின்னை யுண்டல் பிழைப்புடைத் தேன்றியா
னன்னு தல்லைத் துறந்தவ ளட்டது
தன்னை யுண்டுந் தவசியை யல்லையோ.

(இ - ள்.) சொன்ன சூனைத் துறந்து - துறவோர் துறத்தல் வேண்டும் என்று கூறப்பட்ட அடுப்பு துடைப்பம் உரல் அம்மி நீர்ச்சால் என்னும் ஐந்து குற்றக்கருவிகளையும் துறந்து வந்தும்; அவற்று அட்டன - அவற்றையே கருவியாகக் கொண்டு சமைத்த சோறு முதலியவற்றையே; பின்னை உண்டல் பிழைப்பு உடைத்து என்றியால் - பின்னர் நீயிர் உண்ணுதல் குற்றமுடைத்து என்பாயாயின்; நல்நுதலைத் துறந்து - நீதானும் நல்ல நெற்றியையுடைய பெண்ணைத் துறந்து வந்த பின்னர்; அவள் அட்டது தன்னை உண்டும் - அப்பெண் சமைத்த சோறு முதலியவற்றை உண்டும்; தவசி அல்லையோ? - தவத்தோனாக விருக்கவில்லையோ? எம்மை மட்டும் குற்றங் கூறுவானேன்? என்றாள் என்க.

(வி - ம்.) இஃது "அடுப்புத்துடைப்பம்" என்னும் செய்யுளாற் கூறப்பட்ட குற்றத்தின்மை காட்டிற்று.

அடுப்பு முதலியன சிற்றுயிர் இறத்தற்குக் காரணமாதலின் அவற்றைச் சூன் என்றார். சூன் - குற்றம்; ஆகுபெயர்.

இன்னும் பௌத்தர்க்கு வலைதுறந்து வலையான் வந்த மீனூண் முதலியனவுங் கொள்க. நன்னுதல் : அன்மொழித்தொகை, ஈண்டுப் பெண் என்னுந்துணையாய் நின்றது. (௪௮)

௩௪௯. கொன்ற பாவங் கெடுகெனக் கையிட்டு
நின்ற தென்பது நீயுரைப் பாயெனி
னன்று துன்னின தாதன்மை யாற்சொன்னாய்
சென்றும் வந்துந் தியானம் புகலென்றாள்.

(இ - ள்.) கொன்ற பாவம் கெடுக என - காட்சிப் புலனாகாத சிற்றுயிர்களைக் கொன்று, அத்தீவினை கெடுக என்று பிரதிக்கிரமணஞ் சொல்லி; கையிட்டு நின்றது என்பது - தியானஞ்செய்து தவவேடத்தே நிற்கின்றேமென்று; நீ உரைப்பாய் எனின் - நீ குற்றங் கூறுவாயாயின்; ஆதன்மையால் சொன்னாய் - அது நின் அறியாமையாற் கூறினைகாண்; சென்றும் வந்தும் தியானம் புகல் நன்று துன்னினது - அஃது இன்றியமையாமையால் தியானத்தை விட்டுச் சென்றும் மீண்டுவந்தும் அத்தியானங் கைக்கொள்ளும் போது அவ்வாறு செய்வதொரு நன்மை பொருந்திய முறைமை காண் என்றாள் என்க.

(வி - ம்.) தியானத்தைக் கைவிட்டுச் சென்று மீண்டும் வந்து தியானங் கைக்கொள்ளுங்கால் தீவினை கெடுக என்று பிரதிக்கிரமணஞ் சொல்லித் தியானத்தமர்தல் அதற்கென விதிக்கப்பட்டதொரு முறை காண்! கொன்றுவந்து அங்ஙனம் கூறுகின்றேமில்லை என்றவாறு.

இது, "துடிக்கும் வண்ணத்தின்மையிலுயிர்களை" என்னும் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

கையிடுதல் - தியானத்தமர்தல். தியானங் கலைதலைக் கையெடுத்தல் என்று கூறுப. இதனை,

"இன்னது நினைந்த திவனென்று கையெடுத்தே"

எனவரும் யசோதரகாவியத்தாலுமுணர்க. (உஅக)

அது :—தியானம் புகலாகிய நன்று துன்னினது நன்மையைப் பொருந்திய தொருமுறை என்றவாறு.

தியானம் புகுந்தோறும் தீவினை கெடுக! என்று சொல்லிப் புகுதலால் யாங்கள் தீவினை செய்து வந்து அங்ஙனம் சொல்வேமல்லேம். தியானம் புகும்பொழுது அங்ஙனம் சொல்லிப் புகுதல் முறைகாண் என்பது கருத்து.

இனி, தொழிலைத் துறந்து தவந் தலைநின்று தியானங் கொண்டால் மேல்வருவதாகிய வினை வாராதொழிவதல்லது, முன்பு செய்து நின்ற பழவினை கெடுமோவெனில், கெடும்; என்னை?

"உண்டியால் வந்த துயரமது மேலை
யுண்டி யொழிய வொழிந்தாற்போற்—பண்டைத்
தொழிலால் முடிந்தவினை மேற்செருழிலை நீங்க
வொழியா நினைவா லுகும்"

என்பதெம்மோத்தாகலான் என்க.

அஃதேல் தியானமாவது அருகக் கடவுளின்மேல் வைத்த நினைவே யன்றோ? இதனால் பழவினை கெடுகின்றவாறென்னெனின், கருடனைத் தியானித்தவழிப் பாம்பின் நஞ்சு கெடுமாறுபோலே, வினைகளைக் கெடுத்தலின் அவற்றிற்குப் பகைவனாகித் தூயோனுமாகிய இறைவனை அறிவுருவமுடைய உயிர் அவ்வறிவுத் தொழிலாகிய தியானத்திலே வைத்துழிப் பழவினைகள் துவரக் கெடுதல் ஒருதலை யென்க. (சக)

கூகசு. இன்ப துன்ப மிருவினைக் காரிய
மென்ப வர்க்கென்னை யேதமுண் டேன்றியேற்
பின்பு பேணுந் தவத்தினி னாகிய
துன்ப வர்க்குந் துதாங்கனத் தோன்றுமே.

(இ - ள்.) இன்பம் துன்பம் இருவினைக் காரியம் என்பவர்க்கு - இன்புறுதலும் துன்புறுதலும் நிரலே நல்வினையும் தீவினையுமாகிய இரண்டன்காரியங்களாகும் என்று கூறும் ஆருகதர்க்கு; என்னை? - உடலைத் துன்புறுத்திச் செய்யும் தவத்தான் என்னபயன்? அது தீவினையின் பயனாகாதோ? ஏதமுண்டு என்றியேல் - அவர் உடலைத் துன்புறுத்துதற்குக் குற்றமுண்டு என்று கூறுவாயாயின்; பின்பு பேணுந் தவத்தின் ஆகிய துன்பு- துறந்த பின்னர் மேற்கொள்ளும் தவவொழுக்கத்தாலே வரும் துன்பம்; அவர்க்கும் - நும்மனோராகிய பௌத்தர்கட்கும்; துதாங்

கனத்து ஒன்றுமே - தவ வொழுக்கத்தினும் வந்துறுமல்லவோ? அதுபோலக் கொள்! என்றாள் என்க.

(வி - ம்.) இது "துன்பந் தீவினையின் பயன்" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

மொக்கலன், நீயிர் இன்பதுன்பம் இருவினைப் பயன் என்னும் கொள்கையுடையீரல்லீரோ? நீயிர் தவம் பண்ணுங்கால் வருந்துன்பம் முற்பிறப்பிலே நீயிர் செய்த தீவினைப்பயனே ஆதல்வேண்டும். அன்றென்பீராயின் துன்பம் நல்வினையின் பயன் என்பது போதரும்; போதரவே இன்பம் தீவினைப்பயன் என்பதுமாம்; ஆகவே தீவினைசெய்தலிற் குற்றமில்லையாம் என்றானாக; அதுகேட்ட நீலகேசி தவமாற்றுங்கால் எமக்கு வரும் துன்பம் நுமது தவவொழுக்கத்திலே வரும் துன்பம் போலவாம் என்று கொள் என்றாள் என்க.

அன்றியும், துன்பமாவது - புத்தன் அறிவுசான்றாகத் தன்னைக் கொல்வேனென்னு நினைவாலே உடலைப் பிளத்தல் முதலாயின செய்து துன்புறுகின்றதன்றே? யாங்கள் பற்றறத்துறந்து காட்டகத்தே சென்று ஒருவழி நின்று ஞானதியானங்கள் செய்வுழி வெயில் முதலாயினவற்றால் வருஞ் சிறு துன்பங்களை நீ துன்பமென்று கொள்ளப்படாது. என்னை? உண்பானுக்குச் சோறு சுடுதலும், மருந்துண்பானுக்கு மருந்து கைத்தலும், நீராடுவானுக்கு நீர் குளிர்தலும், மணிமுடி சூடுவானுக்கு அம்முடி கனத்தலும், கறிகள் உண்பானுக்கு மிளகு முதலியன அழலலும் இவ்வாறு வருவன பிறவும் துன்பமென்று கொள்ளப்படாதவாறு போல என்றாளுமாம் என்க.

இனி, உண்ணுமை முதலிடனவும் பிணியாளன் போன்று அவ்வுணவினால் வரும் சிறு தீவினைகளை நீக்குதற் பொருட்டும், பிச்சை பெருதவன்று துன்பம் வாராமற் பொருட்டும், பொறிகள் மிகாமைப் பொருட்டும், தத்தம் ஆற்றலுக்குத்தக மேற் கொள்வரல்லது, துன்பம் வரவேண்டுமென்று உடலை ஒன்றுஞ்செய்யார் 'ஆற்றற்கேற்பத் தவஞ்செய்' என்பது எம்மோத்தாதலின், என்றாள் என்க.

துன்புறுதற்கே உடலை வருத்துதல் தவமாகுமெனின் ஆச்சிரம வேறுபாடும் வேண்டாவன்றே? ஆச்சிரமம் பலகொண்டது துன்புறாமல் அவற்றைமேற்கோடற் பொருட்டன்றோ என்பதுங் கொள்க. (௩௦)

௩௧. செய்த தீவினை சென்றின்ப மாக்குமென
றிஃது ரைப்பவ ரீங்கில்லை யாயினும்
பொய்கள் சொல்லிப் புலைமக னேயெம்மை
வைதல் காரண மாநின்று வைதியோ.

(இ - ள்.) புலைமகனே-தவத்துள் மறைந்து ஊனுண்டல் முதலிய புலைத் தொழில் செய்யும் கயவனே!; செய்வ தீவினை சென்று இன்பம் ஆக்கும் என்று-ஒருவன் செய்த தீவினையானது அவனைத் தொடர்ந்துபோய் அவனுக்கு இன்பநுகர்ச்சியை உண்டாக்கும் என்று; இஃது உரைப்பவர் ஈங்கு இல்லை - இப் பேதைமையைக்

கூறுபவர் எம்மாருகதருள் யாருமில்லைஉண்டாயிற் சான்றுண்டோ? கூறிக்காண் !; ஆயினும் - கூறுவாரிலராகவும்; எம்மை வைதல் காரணமா நின்று - எம்மை வைதற் பொருட்டாகவே இங்ஙனம் எம்மெதிர் துணிந்து நின்று; பொய்கள் சொல்லி வைதியோ - பொய்களைச் சொல்லி வைகின்றனை போலும்; என்றாள் என்க.

(வி - ம்) இது "நின்ற துன்ப மென்று" என்னுஞ் செய்யுளால் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

செய்த தீவினை இன்பமாக்கும் என்றது தீவினைப் பயனாகிய துன்பத்தை நுகர்ந்தால் அது பின்னர் இன்ப முண்டாக்கும் என்றவாறு.

இது தவத்திலுழக்கும் துன்பம் முன்செய்த தீவினைப் பயனுதல் வேண்டும் என்று கூறிய மொக்கலன் தவத் துன்பம் இன்பமுண்டாக்கும் என்னும் ஆருகதர் கொள்கை; தீவினை இன்பமுண்டாக்கும் என்றாராகக் குற்றங்கூற நீலகேசி அதனை மறுத்தபடியாம்.

புலைமகன் என்றது அவன் தவமறைந்து ஊனுண்ணல் முதலிய புலைத் தொழில் செய்வதனைக் குறித்துக் கூறியபடியாம். (இக)

நகஅ. இந்திரி யங்களை வென்றற் பொருட்டென
வந்து டம்பு வருத்தல் பழுதென்பாய்
தந்து ரைத்த தலைமழி யாதிய
சிந்த னைக்கிவை செய்வதே னேசொல்லாய்.

(இ - ள்.) இந்திரியங்களை வென்றல் பொருட்டு என-பொறிகளை வென்று அடக்கும் பொருட் டென்று; வந்து-துறந்து வந்து; உடம்பு வருத்தல் பழுது என்பாய் - யாங்கள் உண்ணுமை முதலியவற்றால் உடலை வருத்தல் அதன்கணுறையும் உயிரை வருத்துவதாதலால் இன்னு செய்தல் என்னும் குற்றமாம் என்று கூறுவாய்; தந்து உரைத்த தலைமழி ஆதிய - நின் சமயத்திலே துறவோர்க்கு விதியாக வெடுத்துக்கூறிய தலைமழித்தல் முதலிய; இவை - இச் செயல்கள்; சிந்தனைக்குச் செய்வது எனே-தியானமாகிய நுந்தவச் செயலுக்குச் செய்யும் ஆக்கந்தான் யாதோ ?; சொல்லாய்-எமக்குக் கூறுவாயாக, கூறுவதுண்டாயின் அதுவே எமக்கு அமையும் என்றாள் என்க.

(வி - ம்.) இஃது "ஓம்பல் வேட்கை" என்றும் "போகவேட்கை" என்றும் தொடங்குகின்ற இரு செய்யுளாலும் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

"பொறிகளை வெல்லும் வாயிலாய் உயிரினங்களைப் பாதுகாத்தற் பொருட்டு உண்ணுமை முதலியவற்றால் வருந்துதலிற் பயனில்லை; என்னை ? உயிரினங்களைப்பாதுகாத்தலாலே அறமுளதாயினும் உயிரை வருத்துதலாலே தீவினையாம்" என்றிவ்வாறு கூறுகின்ற நீ நின் தவத்தின் கண், தலைசிரைத்தலே, புருவஞ்சிரைத்தலே, மிகையான வெப்ப

மும் மிகையான சுமையும் மிக்க நாற்றமு முடைய சீவரம் போர்த்தலே, எல்லாம் அழுக் கென்று பாவித் துண்டலே, காம வேட்கையே, பொழுது செகுத்துண்டலே முதலாயின உயிரை வருத்துந் தீவினையாகாதவாறு போல எமது உண்ணுமை முதலியவற்றையும் கருதுக; உனக்கு வளர்ந்த தலைமயிரை மழித்தன் முதலியன பொறியடக்குதற் பொருட்டன்றி மெய்யறிவு நிகழ்ச்சிக்குக் காரணமாமோ சொல்லுக! என்றவாறு.

இத்துணையானும் "ஓம்பல் வேட்கை" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் விலக்கப்பட்டது.

இன்னும் பொறியடக்கற் பொருட்டாக யாங்கள் நீராடாமை விரதங்கொண்டதல்லது உடம்பினை அழுக்காக்க வேண்டுமென்று சொல்லியதூஉஞ் செய்ததூஉ மில்லை; ஆயினு மிவ்வாறு பொய் சொல்லி என் பெறுதி, நீயேயன்றோ எல்லாம் அழுக்கு என்று பாவித்தும் அழுக்குடைய பன்றி முதலியவற்றின் ஊனை உண்கின்றாய்; ஆதலின் நீ சொல்லிய குற்றம் உனக்கேயாம் என்றவாறுமாம்.

இத்துணையானும் **போக வேட்கை** என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் விலக்கியபடியாம்.

இந்திரியம்-பொறி துறந்து வந்து என்க. தந்துரைத்தல் - விதியாகக் கொடுத்துக் கூறுதல். தலைமழி - தலைசிரைத்தல். சிந்தனை - தியானம். எனோ-என்னே. (௯௨)

௩. ககூ. **புனைவு வேண்டலர் போக நுகர்விலர்**
**நினைவிற் கேயிடை கோளென நேர்தலா**
**லினைய வும்மல மேறினு மென்செய**
**அனைய தான்மாக்கள் யாக்கையின் வண்ணமே.**

(**இ - ள்.**) *நினைவிற்கு இடைகோள் என நேர்தலால்-தியானத்திற்கு இடையூறாகக் கருதலாலே; புனைவு வேண்டலர் - ஆடை முதலியவற்றாலே உடலைப் புனைதலை எம்மனோர் வேண்டாது விடுக்கின்றனர்; போகம் நுகர்வு இலர் - அவ்வுடலால் உண்டாதற்குரிய இன்பங்களையும் நுகராது விடுகின்றனர்; இனையவும் மலம் ஏறினும் என் செய-நீராடாமை முதலியவற்றால் வியர்வை முதலியவற்றானும் பிறவற்றானும் உடலின் அழுக் கேறிய விடத்தும் அது துறவோரை என் செய்யக்கூடும்; ஆன்மாக்கள் யாக்கையின் வண்ணம் அனையது-உயிர்கள எடுத்துள்ள உடம்பினியல்பே அழுக்குடைமையேயன்றோ என்றுள் என்க.*

(**வி - ம்.**) இது "**வாயினல் வேட்கை களைவான்**" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

புனைவு-ஆடை முதலியவற்றால் உடம்பை அணி செய்தல். நினைவு-தியானம். போகம்-இணைவிழைச்சு முதலியன. இடைகோள்-இடையூறு. நேர்தல்-நினைதல். என்செய என்னும் வினை அது தவத்தோரை என்செயற்பாற்று; அவரை வருத்தமாட்டாது என்றவாறு. அழுக்

கேறுதல் யாக்கைக்கே இயல்பாகலின் நீராடன் முதலியவற்ருல் அத்
வியல்பை மாற்றுதலுமரிது என்பாள் - யாக்கையின் வண்ணம்
அனையது என்ருள்.

எனவே எம்மனேர் மனத்தூய்மை வேண்டுதலன்றி உடற்
றூய்மை வேண்டலர்; உடம்பினை நிறுத்தலன்றி இன்பநுகர்ச்சி
வேண்டலர். உடல் அழுக்கேறுதலாலே தவத்திற்கிடையூறுமில்லை நீ
வேண்டியவாறு எம்மை வைகின்ருய் என்ருளாயிற்று.

இனி புனைவு வேண்டலர் எனவே உண்ணுங்கால் வாய் தூய்மை
செய்தல் இன்றியமையாமையின் அதனை வேண்டுவர் என்ருளுமாயிற்று.
அஃதாவது-உணவுப்பொழுதில் வாய்தூய்மை செய்து ஒழிந்த தூய்மை
நிமித்தமாக இல்லறத்தாராற் கொடுக்கப்பட்ட குண்டிகை நீர்
கொள்வது.

இன்னும் புனைவு வேண்டலர் என்பதனுல் பல்லுத் துடைத்தலும்
கண்ணுக்கு மை யெழுதுதலும் முக மினுக்குதலும் வாய் சிவப்பித்
தலும் என்றிவை முதலாயின வொழிதலும் கொள்க.

இனி, போகநுகர்விலர் என்றதனுல் பின்னும் பிழைத்திருந்து
தவஞ்செய்தற் பொருட்டு உடம்பினை நிலைப்பித்தல் மட்டுஞ்செய்வர்
என்ருளுமாயிற்று. அஃதாவது: தகுதியான காலத்தில் இல்லறத்
தாராற் கொடுக்கப்பட்ட உணவும் மருந்து மாகியவற்றை வருத்த
மின்றி ஏற்றுக் கோடல்.

இனி, போக நுகராமையாவது : வெள்ளடை மெல்லலும், நீராட
லும், இனியன பருகுதலும், நீரைத் தூய்மை செய்து குடித்தலும்,
சுவையுடைய உணவு தேர்ந்து உண்டலும், எப்பொழுதும் பண்ணி
காரந் தின்னலும், புரோக்குப் பொடி கறிக்குதலும், பஞ்சணை இருக்கை
முதலியவற்றிலிருத்தலும் என்றிவை முதலாயின வொழிதல் என்க.

இனி, யாக்கைக்கியல்பான அழுக்ககற்றலாகாதென்றது இயற்
கைப்பண்பை அகற்ற வொண்ணுது என்றவாறு. அன்றியும் உலகத்
தாரால் பல் துடைத்தல் முதலியவற்ருல் வாய் தூய்மை பண்ணப்
பட்டதேயெனினும் இம்மக்களாற் கழிக்கப்பட்டவை கைக்கொள்ளப்
படாமையு மறிந்துகொள்க. பிறிதொரு காரிய நிமித்தம் செல்கின்ற
மதயானைக்குப் பேன்முதலான சிற்றுயிர்கள் செய்யுந் துன்பம் தோன்
ருதவாறு போல ஞான தியானங்களில் அழுந்திய துறவோர்க்கு
வியர்வை முதலாயினவற்ருல் வருந் துன்பமுமில்லையா மென்பது.
ஆதலால் துறவோர்க்கு நெஞ்சழிய வந்துறுந் துன்ப மொன்று மில்லை
என்பதாம். (௩௯)

௩௨௦. பாவந் துய்த்துமேன் ருேமல்ல துய்ப்பினு
மாவ தின்மைக் கரசுரைத் தாயன்ருே
வோவ லின்பந் தருமே னுயிரென்பாய்
தேவ ஞகித் திரிந்துதான் காட்டிக்காண்.

(இ - ள்.) பாவம் துய்த்தும் என்ருேம் - மொக்கலனே
நீ யாங்கள் தவத்தாற்றுன்புறுதலைத் தீவினைப்பயனை நுகர்கின்
ருேம் என்ருேம் என்று கூறி; அல்ல துய்ப்பினும் ஆவது இன்
மைக்கு-ஒருவன் தான் நினைத்தபொழுது தனது நல்வினைப் பயனை
நுகர்தலும் கூடாமைக்கு; அரசு உரைத்தாய் அன்ருே - அவன்

நினைத்தபொழுது அரசன் ஆகக் கூடாமையை எடுத்துக் காட்டியும் எமக்குக் குற்றங் கூறினையன்றோ; அங்ஙனம் யாங்கள் கூறியதற்குச் சான்று காட்டவல்லையோ ?; என் உயிர் ஓவல் இன்பந் தரும் என்பாய் - துறந்தமையாலே என்னுடைய உயிர் எனக்கு ஒழியாத பேரின்பத்தைத் தருகின்றது என்று கூறுகின்றாய்; தேவன் ஆகித் திரிந்துதான் காட்டிக்காண் - அஃதுண்மையாயின் நீ இப் பொழுது ஒரு தேவனாகி இன்புற்று எங்கண் முன் திரிந்து எமக்குக் காட்டுக அல்லது நரகனாய்த் துன்புற்றுக் காட்டுக என்றாள் என்க.

(வி - ம்.) இது ''தீவினையின் பயன்றுய்ப்பல்'' என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

ஆருகதர் தவத்தின்கண் படுந்துன்பத்தை யாங்கள் முன் செய்த தீவினைப்பயனை நுகர்கின்றோம் என்று கூறினாராகக் கொண்டு அப்படி ஒருவன் தான் பண்டு செய்த தீவினைப்பயனைத் தான் நினைத்த பொழுது நுகர்தல் கூடுமாயின் அங்ஙனமே ஒருவன் பண்டு செய்த நல்வினைப் பயனையும் தான் நினைத்தபொழுது அரசனாகி நுகரலாமன்றோ? அங்ஙனம் நுகர்தல் கூடாமையின் அவர் கூற்றுக் குற்றமாம் என்றானாக, இவ்வடாப் பழியைக் கேட்ட நீலகேசி யாங்கள் அங்ஙனம் கூறிய தற்குச் சான்றுண்டோ? உண்டாயிற் காட்டுக. அன்றியும் நீ என் தவவேடம் இடையறாத இன்பந்தருகின்றது என்பாய்; இன்பம் பண்டு செய்த நல்வினைப் பயனன்றோ? நீ நினைத்தபொழுது அவ்வினைப்பயன் கை கூடுதலாலே இப்பொழுதே அந்நல்வினைப் பயனை நுகர்தற்கு ஒரு தேவனாகிவிடலாமே? நல்வினை செய்திலேன் என்பாயாயின் ஒரு மானிடனாகித் துன்புற்றேனுங் காட்டுக என்று அக்குற்றம் அவனுக்கு முண்டாதலை உணர்த்தியபடியாம்.

தேவனாகித் திரிந்துதான் காட்டிக்காண் என்றது அஃதியலாவிடின் நரகனாகியேனும் காட்டு என்பது தோன்ற நின்றது. (௧௪)

௩௨௪. அழிவு காலத் தறத்தோடர்ப் பாடேலா
மொழியல் வேண்டுமேன் றேற்றுமை தாங்கோளீஇ
வழியுங் காட்டுமம் மாண்புடை யார்கண்மேற்
பழியிங் கிட்டுரைத் தாற்பய னென்னையோ.

(இ - ள்.) அழிவு காலத்து - ஏடா! உடலுக்கு அழிவு வாராநின்ற இறுதிக்காலத்தே; தொடர்ப்பாடு எல்லாம் அற ஒழியல் வேண்டும் என்று - உடம்பு முதலிய நிலையிலாப் பொருள் களின்பால் மனத்திற்குரிய பற்றுக்கள் முழுவதும் துவரக்கெடுதல் வேண்டும் என்னும் கருத்தாலே; ஒற்றுமை தாம் கொளீஇ - வரு கின்ற சாவுவாயிலாய் அம்மனத்திற்கு அவற்றின் நிலையாமை காட்டி அறத்தோடு ஒற்றுமை கொள்வித்து அதன் கலக்கந்தீர; வழியுங் காட்டும் மாண்பு உடையார்கள்மேல் - சல்லேகனை என்னு மொரு சிறந்த நெறியையும் உணர்த்துகின்ற மாட்சிமையுடைய ஆருகதர்பால்; இங்குப் பழி இட்டு உரைத்தால் - இங்கு நீ

பொய்மாய் குற்றத்தை ஏற்றிக் கூறினால் அதனை உலகம் பழியாகக் கொள்ளமாட்டாது காண்; பயன் என்னை-இப்பயனில் செயலால் நினக்கு வருமூதியந்தான் என்னையோ? என்றாள் என்க.

(வி - ம்.) இது "கொல்லா வேட்கை" என்னுஞ் செய்யுளால் சல்லேகனைக்குக் கூறிய குற்றம் நீக்குகின்றது.

அழிவு காலம்-இறப்பு வந்துறுங்காலம். தொடர்ப்பாடு-பற்று. தொடர்ப்பாடு அற ஒழியல் வேண்டும் என்று இயைத்துக்கொள்க. ஒற்றுமை - அறத்தாலெய்தும் அமைதி. வழி - சல்லேகனை என்னும் வழி.

சல்லேகனையாவது – இறப்பு வந்துறும் பொழுது இறக்கின்றோம் என்று அகப்புறப்பற்றுக்களாலே உயிர் வருந்தாமைப் பொருட்டு அதுகாறும் பயின்றுவந்த அறத்தினை நெஞ்சினுக்கறிவுறுத்தி அதன் கலக்கநீக்கி, இனிச் செல்லுந் தேயத்துக் குறுதுணையாக ஐந்தெழுத்தோதி வழிபாடு செய்து தியானத்திருந்து உயிர் நீத்தல். எனவே, இத்தகைய சிறந்த கொள்கையுடையாரை நீ "கொல்லாவிரதமுடையீர்! நும்விரதத்திற்கு அழிவாக இறப்போர்க்குச் சல்லேகனை கொடாநின்றீர்" என்று பழிசொல்லுகின்றாய், இதனால் நீ என் பெறுதி? நீ பழிப்பினும் உலகம் இதனைப் பழியாகக் கொள்ளாதுகாண்! என்றாளாயிற்று.

காணுவுயிர்க்கும் கையற் றேங்கிப் பீலி பிடித்து அவற்றை ஓம்பும் துறவோர் கொலை செய்யார் என்றறியாயோ? என்பது கருத்து.

இனி,

"எல்லாப் படியும் விலக்கப் படாதெரியா
வில்ல மழியி லதனகத்தில் நல்ல
பொருள்கொண்டு போவான்போற் சாம்போது பற்றற்
றருள்கொண்டு போத லறம்"

என்பதனாலும் சல்லேகனையாமாறறிந்து சொல்லிக்கொள்க. (௯௯)

இதுவுமது

௩௨௨. சிந்தனையினுந் தீவினை யாமமென்பார்க்
கந்திற் காம மமையுமென் றீரென்பாய்
சுந்த மாகச் சுவடறு வீரென
வந்தி தோறும் புடைக்க வமையுமோ.

(இ - ள்.) சிந்தனையினுங் காமம் தீவினை ஆம் என்பார்க்கு - ஏடா! நெஞ்சால் நினைப்பினும் காமமானது தீவினைக்கே காரணம் என்று கூறி அஞ்சும் எம்மனோரை; கந்தில் காமம் அமையும் என்றீர் என்பாய் - துறவி கந்தியின்பாற் காமமாடல் தவறன்று அமைவதே என்று அறமுரைத்தீர்! என்று யாஞ் சொல்லாத சொல்லிப் பழி கூறுகின்றாய்; அந்தி தோறும் - இவ்வாறு அடாப்

பழி கூறுதலினுங்காட்டில் நீ சந்திதோறும் நின்று; சுந்தமாகச் சுவடு அறுவீர் என - நீயிர் முழுவதும் நும் சுவடு அற்றுப் பாழா வீராக என்று வைது; புடைக்க அமையுமே - அவரைப் புடைத்துக் கொல்லலே நன்றாகுமே! என்றாள் என்க.

(வி - ம்.) இது "பூமைத்தாங்" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

காமம் என்பதனை முன்னுங்கூட்டுக. கந்தியில் எனற்பாலது கந்தில் என ஏழாவதனுருபு முதல் கெட்டு நின்றது. கந்தி-ஆருகத சமயத்துத் தவமகள். இவளை ஆரியாங்கனை என்றும் வழங்குப. சுத்தம்- எதுகைநோக்கிச் சுந்தம் என மெலிந்து நின்றது. சுத்தம் - ஈண்டு முழுதும் என்னும் பொருட்டு.

மொக்கலன் நீலகேசியை நோக்கி நீயிர் "துறவி கந்தியின்பால் காம நுகர்தல் தவறன்று" என்பீர் என்று அடாப்பழி கூறினனாக, அது கேட்டு அட பாவி! எம்மனோர் நெஞ்சானும் காமம் நினைத்தல் தீவினையாமென்றன்றோ கூறுவர்; அத்தகையோர்க்கு இங்ஙனம் அடாப்பழி கூறுதலினுங் காட்டில் அவரை வைது அடித்துக் கொல்லுதல் நன்றாம் என்று கூறுகின்றாள் என்க. (௫௪)

இதுவுமது

௩௨௩. பெண்மக ளிரிர் பிறகிட வுண்பவர்
கண்ணி னுலில்லுட் கந்தியைக் காணினு
முண்ண லம்மெனும் மோத்துடை யார்களைத்
திண்ண தாவைது தீவினை கோடியோ.

(இ - ள்.) பெண் மகளிர் பிறகிட உண்பவர் - எடா! எம் துறவோர் பிச்சை புகும்பொழுது தம்மெதிரே பெண்டிர் செல்லு தலைக் கண்டவிடத்தும் முட்டுப்பாடு கொண்டு மீண்டு மறுநாள் உண்பவர் அல்லரோ?; கந்தியை இல்லினுள் கண்ணினால் காணி னும் - அன்றியும் தாம் பிச்சை புகுமில்லத்தின்கண் ஆரியாங்கனை யைத் தம் கண்ணினாற் காண நேர்ந்தவிடத்தும்; உண்ணலம் - இன்று பிச்சையேற்றுண்ணோதொழிவேம்; எனும் ஒத்து உடையார் களை - என்று உண்ணாது விடுதற்கேதுவான அறத்தினையுடைய சான்றோரை; திண்ணதா வைது தீவினை கோடியோ - இங்ஙனம் திட்பமாகப் பழி கூறி அதனாலுண்டாகும் தீவினையைச் சுமக்கத் துணிந்தனையோ? என்றாள் என்க.

(வி - ம்.) இது "காமங்கூர்" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

மகளிர்: விரிக்கும் வழி விரித்தல். பிறகிடுதல் - செல்லுதல். இல் - பிச்சைபுகும் இல்லம். என்றுண்ணாதிருத்தற் கிடமான ஒத்து என்க. ஒத்து: ஆகுபெயர்; திண்ணதாக எனல் வேண்டிய சொல்லின் ஈறு தொக்கது. திண்ணது - திட்பமுடையது.

துறவோர் பிச்சைபுகும் இல்லத்து ஆரியாங்கனையைக் காணின் முட்டுப்பாடு கொண்டு மீள்க வென்றும், ஆரியாங்கனைகளும் துறவோரைக் கண்ட வில்லத்தில் பிச்சை கொள்ளாது மீள்கவென்றும், துறவோர் இருக்கும் பள்ளியுள் ஆரியாங்கனை இருக்கப் பெறுரென்றும், ஆரியாங்கனைகளிருக்கும் பள்ளியுள் துறவோர் இருக்கப் பெறுரென்றும் துறவோர் துறவோர்பாற் றுறக்க; ஆரியாங்கனைகள் ஆரியாங்கனைகள்பாற் றுறக்க வென்றும், ஓதுதலும் இங்ஙனமே ஓதுகவென்றும் விதிக்கின்ற மேலான மெய்ந்நூலுடையார் ஆருகதர்; அவ்வாறே இன்றுகாறு மொழுகவு மொழுகுகின்றார்களை நீ இவ்வாறு பழிகூறி மாபெருந்தீவினையுடையை யாகினை என்றிரங்கியபடியாம். (௩௭)

௩௪௭. பிள்ளை பெண்ணலி யாயினும் மாண்வயிற்
றுள்ள தேயென் றொழுக்கங் கொடுத்தியாற்
பிள்ளை பெண்ணலி யன்மையை யாதினு
லுள்ளங் கொண்டிழ வூசி யுரைப்பதே.

(இ - ள்.) பிள்ளை பெண் அலி ஆயினும் - மொக்கல! நீ வயிறுவாய்த்த மகளுக்குச் சிலங்கொடுக்குங் காலத்தே அவள் வயிற்றிலுள்ளது ஆண் ஆயினும் பெண் ஆயினும் அல்லது அலியேயாயினும்; வயிற்றுள்ளதே ஆண் என்று ஒழுக்கம் கொடுத்தி - அவள் வயிற்றின் கண்ணுள்ள மகவு ஆண் என்றே கூறிச் சிலங்கொடுக்கின்றனை, சிலங்கொடுக்கும் வழக்கம் எம்பாலும் உளதெனினும் இங்ஙனம் கூறிக் கொடேம்; பிள்ளை பெண் அலி அன்மையை - நீ ஆண் என்று கூறுமப்பிள்ளை பெண் அல்லது அலி யல்லாமையை; யாதினுல் உள்ளங்கொண்டு - எக்காரணத்தால் அறிந்து கொண்டு; இழவு ஊசி யுரைப்பது - சிலங்கொடுப்பான் இழவூசி கொண்டு கூறிக்கொடுப்பாயோ? கூறிக்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) இது "துன்னவூசி" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

ஊசி கொள்வதும், கொடுத்தலும் உபாசித்தலும் எமக்கில்லை. உண்டென்று சொன்னாயேனும், பெருகுகின்ற ஆறு நீத்தோ? நிலையோ? என்றறியாமையில் தெப்பங்கொண்டிழிந்தவாறு போலத் தீவினை வருவதோ என்று கருதி உபாசித்தாரேனுங் குற்றமில்லை; நின் உபாசகப்பெண் கருக்கொண்டிருக்குங்கால் ஆண் மேலிட்டுச் சிலங்கொடுத்தி! அவள் கரு ஆண் என்று எவ்வாறறிந்தனை? பெண்ணுமலியு மாகாதென்பது பெற்றாயோ? என்று சமானக் குற்றங் கூறுக! என்னை? சமானக் குற்றம் குற்றமாகாமையின் என்றவாறு.

துன்னவூசி யென்பதனுள் ஊசி கொடுத்தால் தாண்டிவிடுவாரெடுக்கின்றாரோ வென்று பட்டினி விடுவேமாகக் கொண்டு துன்னவெடுத்தல் தவமகளிரெடாரோ? வென்றற்கண் வந்ததிச்செய்யுள். இவ்வாறு ஐயுற்றிருப்பது தகுவதோ வெனில், தகும். என்னை? தாமே நட்டுக்கொண்ட விரதங் குற்றப்படாமல் அவ்வாறு கழுவாய்செய்வரா

கலின் அது குற்றமன்றென்க. இல்லறத்தினின்றுந் துறவறத்துப்போந்து நிற்பது தீவினை புகுதா தொழுகுதற்கன்றே. ஒன்றைக் காப்பனென் றேறட்டுக் கொண்டானவ்வாறு கடைப்பிடித்துக் காண்பதுலகத்துக் காண்கின்றதன்றோ! ஆதலால் அது குற்றமன்றென்பது கருத்து.(௬௮)

௩௨௫. மோனம் போய்யஞ்சிக் கொண்டவன் மெய்யுரைக்
கூனந் தோன்றி லுரைத்தன னென்றியேற்
றானம் யாவர்க்குஞ் செய்வது நன்றனென்பா
யீன மென்னோ தெருச்சுமக் கிற்றியோ.

(இ - ள்.) பொய் அஞ்சி மோனம் கொண்டவன் - ஆருகதத் துறவியருள் வைத்துப் பேசின் ஒரோவழிப் பொய் பிறத்தலுங் கூடுமென்றஞ்சி வாய் வாளாமை விரதமாகக் கொண்டவன்; மெய் உரைக்கு ஊனம் தோன்றின் - பிறர் கூறும் மெய்ம்மொழிக்கு அழிவு தோன்றக் கண்டவிடத்தே; உரைத்தனன் - தன் விரதத்தைக் கெடுத்து வாய் பேசுகின்றான்; இது குற்றமன்றோ?; என்றியால் - என்கின்றனை; தானம் யாவர்க்குஞ் செய்வது நன்று என்பாய் எருச்சுமக்கிற்றி - ஈதல் எத்தகையோர்க்கும் நன்றென்று கூறி ன்னொருவனுக்கு வழங்கிப் பின்னர் மற்றொருவனுக்கு எருவுஞ் சுமந்து செல்கின்றனை; ஈனம் என் - எமக்கு வரும் குற்றந் தான் என்னையோ?; ஓது - கூறுதி; அது குற்றமாகாதவாறு போல இதுவுங் குற்றமன்றெனக் கொள் என்றாள் என்க.

(வி - ம்.) இது "பொய்யை யஞ்சி யுரையாமை" என்னுஞ் செய்யுளால் கூறப்பட்ட குற்ற நீக்கிற்று.

தானம் யாவர்க்கும் நன்றென்பாய் எருச்சுமக்கிற்றி என்றது புத்தனுடைய செயலை மொக்கலன் செயலாகக் கொண்டு கூறியபடியாம்.

மொக்கலன் நுந்துறவோர் மோனங்கொண்டிருப்பர்; பின்னர் மெய்யுரைக்கு அழிவு தோன்றின் அம்மோனங் கைவிடுதலுஞ் செய்வர். இது குற்றமன்றோ என்றாகை, அது கேட்ட நீலகேசி, "ஏடா! எம்மனோர் மோனங்கொள்ளுதல் பொய்யுரைக்கஞ்சிக்கொண்டதாக நினக்கு யார் சொன்னார். அங்ஙனமே கொள்வரெனினும் இழுக்கொன்றுமில்லை. மெய்யுரைக் கழிவு தோன்றியவழி மோனம்விட வேண்டுவதுமில்லை. என்னை? புத்தன் யாவர்க்கும் ஈதல் வேண்டுமென்று மேற்கொண்டு செல்வுழியொருவன் காற் செருப்பைக் கையிற்கொண்டு நீரிழிய மாட்டாது வருந்துகின்றானைக் கண்டு, அவன் காற் செருப்பைத் தன் கையில் வாங்கி அவனுக்குத் தோளுங்கொடுத்து நீரிழிந்து போவான்; அங்கு எருச்சுமந்து வருஞ் சண்டாளன் ஒருவனைக் கண்டு வைத்தும் தோள் பிடித்துக் கொண்டுபோவானை விடாது போயவழிக் குற்றமில்லாதவாறு போல, யாமேறட்டுக்கொண்ட மௌனவிரதம் விடாதுஞற்றலிற் குற்றமின்மையின் என்பதாம். இனி மௌனம் விட்டாலும் வருவதொரு குற்றமில்லை; தோள்பிடித்துப் போவானைக் கரையேற விட்டு வந்து சண்டாளனுக்கு எருச்சுமந்தாலும் புத்தனுக்குக் குற்றமில்லாதவாறு போலவென்பது. ஆதலின் இது குற்றம் இல்லையென்பது. (௬௯)

## இதுவுமது

௩௨௬. உய்யக் கொள்வ னெனச் சொல்லி யுள்ளத்தாற்
கைபிற் காட்டல் கரவுள தாமெனிற்
பொய்சி தைத்ததென் சொல்லிப் பெயர்ந்துரை
பொய்யு ரைத்தில னென்றல் பொருந்துமோ.

(இ - ள்.) உய்யக் கொள்வன் என உள்ளத்தால் சொல்லி - ஒருவனைப் பாதுகாப்பேனென்று நெஞ்சாலே நினைத்துப் பின்னர்; கையில் காட்டல் - பொய்கூறுதற்கஞ்சிக் கை முதலியவற்றாற் குறிப்புணர்த்துதல்; கரவு உளது ஆமெனின் - வஞ்சகமுடைத் தெனப் பிறர் கருதுமிடத்தே; பொய் சிதைத்தது என் - வாயாற் பொய் கூறி அவனைப் பாதுகாத்தலாலே அப் பொய்யும் வாய்மை யென்னும் அறத்திற் படுதலாலே அதனால் அழிந்ததென்னையோ?; சொல்லி - ஒருவனைப் பாதுகாப்பேனென்று சொல்லிப் பின்னர்; பெயர்ந்து உரை பொய் - மீண்டும் அவனைப் பாதுகாத்தற் பொருட்டு யான் கூறவேண்டிய மொழி பொய்யாகலின்; உரைத் திலன் - அப் பொய்யைக் கூறுது விடுத்தேன்; என்றல் பொருந்துமோ? - என்று கூறுவது அறத்தொடு பொருந்துமோ? என்றாள் என்க.

(வி - ம்.) இஃது "இவ்விடத்தோராலைக்கோட் சிறை" என்னும் செய்யுளாலும் "இந்நிலத்துப் புகுந்தில" என்னும் செய்யுளானும் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

ஒருவனைக் காப்பாற்றும்பொருட்டுப் பொய் கூறுதல் இன்றியமை யாதாயவிடத்து, வாயாற் பொய்கூறுதல் தீவினையென்றஞ்சிக் கைகாட்டியும் நிலங்காட்டியும் அவனை உயக்கோடல் அரிதாகலின் அது வஞ்சனையேயாம். அவ்வழி,

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்பது எம் மோத்தாகலின் பொய்யுரைத்தலுமறமாம் என்பது கருத்து.

இனி, நன்மைவேண்டிப் பொய் சொல்வது அறமாயின் நன்மை வேண்டிக் கொலை முதலாயின செய்தலும் அறமாம் பிறவெனின்; ஆகாது. என்னை? அறமாவது உயிர்கட்குத் துன்பம் நேராமல் ஒழுகும் ஒழுக்கம் அன்றோ? கொலை முதலியன உயிர்கட்குத் துன்பமின்றிச் செய்யவியலாமையின் என்க.

இனிக் கர்மமாடுதலும் பல்வேறுயிர்க்கும் கேடுபயக்கும் என்பதனை எம் நூலுட் கண்டுகொள்க. இனி நீ "குறளையுரை சாவன் கொதித் தெழுமி னென்றான்" என்னுஞ் செய்யுளாலே குறளை சொல்லலாகா தென்றனை யன்றோ? அவ்வழி, குறளையாயினும் மெய்க்குறளை கூறு தற்கட் குற்றம் என்? என்று வினவியவர்க்கு, மெய்யேயெனினும் உயிர்

கட்குத் தீங்கு பயக்குமென்றொழிந்தேனெனில், பொய்யெனினும் உயிர்கட்கு நன்மை பயத்தலிற் சொன்னேமென்று கொள்ளென்பதாம்.

ஒருவன் பிறரறியாமல், சங்கத்தாரறியக் களவு கண்டனன். அவனைக் கோத்தொழின்மாக்கள் சங்கத்தாரைக் கேட்டுத் தக்கவாறு செய்துமெனக் கேட்டவழிக் 'களவு கண்டா'னெனிற் குறளையாம்; இல்லையெனிற் பொய்யாம்; வாளாவிருப்பின் அருளிலராம்; இவன் தூயன் என்று சொல்லாமையின் அவனை வருத்துவராகலின், பொய்யே யெனினும் அருள் காரணமாக அவன் தூயனென்று சொல்லுவதே சாலுமாயின் எமக்கு மஃதொக்குமென்று கொள்ளென்பது.

இனி, நின் மதத்தாலும் பொய்யுங் குறளையு மறுத்தமையின் உயிர்களுக்குத் தீங்குவரச் சொல்லுஞ் சொல் தீவினைக் காரணமென்பதாயின் உயிர்களுக்குத் தீமை வாராமைச் சொல்லுஞ் சொல் தீவினைக் காரணமன்றென்பாம்; ஆகலின் நன்மை பயக்கச் சொல்லும் பொய் குற்றமன்றென்பது.

அது நிற்க, நின்னுபாசகனுக்குக் கறிமுதலாயினவற்றை யொடித்துங் கிள்ளியுந் தள்ளியும் பெயர்த்துவைத்துஞ் சிதைத்துக் 'கப்பிய' என்று சொல்லென்று அறிவுறுத்தி நின் வயிறு வளர்க்கின்ற வஞ்சனையை யுணராது யாங்கள் மன்னுயிர்களின்பாலருளுடைமை காரணமாகச் சொல்லிய மொழியில் வஞ்சனையுளதென்று சொல்லியது நின் அறியாமையே யென்று கொள்ளென்பதாம். (௪0)

வேறு

௩௨௭. கொல்வினை யஞ்சிப் புலால்குற்ற மேன்பதை
நல்வினை யேயென நாட்டலு மாமென்னை
வில்லினை யேற்றிநம் மெய்ம்மை கொளீஇயது
சொல்வினை யாதலிற் சொல்லுவன் யானே.

(இ - ள்.) கொல்வினை அஞ்சி - ஏடா! கொலையாகிய தீவினைக்கஞ்சி; புலால் குற்றம் என்பதை - அதற்குக் காரணமான புலால் உண்ணலையும் குற்றம் என்று நின்னால் கூறுவதனையே; நல்வினையே என நாட்டலும் ஆம் - நின்னால் புலாலுண்ணல் நல்வினையே யாகும் என்று கூறி நாட்டுதலுங் கூடும்; என்னை?- எவ்வாறெனின்; யான் சொல்லுவன் - யானே கூறிக் காட்டுவேன் காண்டி!; வில்வினையேற்றி - விற்பிடித்தல் தீவினையாகவும் புத்தன் 'கனகரதன்' அறங்கோடற் பொருட்டு அவனுடைய வில்லை வளைத்து நாணேற்றி; மெய்ம்மை கொளீஇயது - நும்மறஞ் செவியறிவுறுத்த வரலாற்றினை; சொல்வினை ஆதலின் - நீயே நல்வினை என்று சொல்லினை ஆதலால் என்றுள் எனக.

(வி - ம்.) இது "கோறலை யஞ்சி" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

இதன்கண், புத்தன் ஊனுண்டல் தீவினையே என்று தன்னூலினும் கூறியுள்ளான்; அங்ஙனமிருந்தும் நீ நின்னூல் விதிக்கு முரணாகவே

ஊனுண்கின்றாய், உண்டுவைத்தும், ஊன் உண்டல் நல்வினையென்றும் நீ கூறக்கூடும், எங்ஙனம் எனில் புத்தன் விற்பிடித்தது நல்வினை என்கின்றனையல்லையோ அதுபோல என்றாள் என்க.

இனி, பௌத்த நூலில் குற்றமில்லூன் உண்க என்று விதித்தலின் பொதுவாக ஊன் உண்ணல் புத்தனுக்கும் தீவினையென்பது உடன் பாடாதல் பெற்றாம்.

குற்றமில்லூனாவது-மூன்றானும்ஆறானும் ஒன்பதானும் தூய்தான ஊன். அவற்றுள் மூன்றனுந் தூய்தாதல் என்றது, உயிரைக் கொல்லலும் கொல்வித்தலும் கொலைக்குடன்படலுமாகிய இம்மூன்று குற்றங்களில்லாத ஊன் என்றவாறு. இனி ஆறானுந் தூய்தாதலாவது- அம் மூன்றோடு தனக்கெனக் கொலை காண்டல், கேட்டல், ஐயுறுதல் என்னும் இம்மூன்று குற்றங்களுமில்லாமை. இனி ஒன்பதானுந் தூய்தாதலாவது-அவ்வாறு குற்றங்களோடு; அவாவாற் கொலைசெய்ய வேண்டுதலும் மிகைபடத்தின்றலும், ஊன்றருவார்க்கு முகமன் கூறிப் புகழ்தலுமென்னும் இம்மூன்றுமாம். இவ்வொன்பது குற்றங்களில் ஒன்று வரினும் அவ்வூன் குற்றவூனாகித் தின்னப்படாதாம் என்பது புத்தனால் விதியாம் என்க.

இனி, இவ்வொன்பது குற்றமுந் தீர்ந்த வழி ஊன் உண்ணல் தகும் என்று விதித்தலால் ஊன் உண்ணல் தீவினை யென்பதும் போந்தது. போதரவே புத்தனல் காரணத்தீவினையும் கொள்ளப்பட்டதாம். என்னை? விரும்பித் தின்றல் முதலியன கொலைக்குக் காரணமாம் என்றலின் என்க.

இனி, இந்த ஒன்பது குற்றமும் ஒழிய ஊன்றின்றல் யாவர்க்கும் அரிதாம். என்னை? ஐயுறவொழிதன் முதலாயின கூடாமையின் என்க. எவ்வழித் தின்னினும் ஐயுறல் கூடாவாறு தின்னல் எங்ஙனமாம்? என்றவாறு. எனவே நீயிர் நும்மிறைவன் நூலுக்கு முரணாகவே புலா லுண்ணுகின்றீர். மேலும் அதனை அறமெனவும் துணிகின்றீர் என்று இகழ்ந்தபடியாம்.

இனி, இதன்கண் வில்லினை யேற்றி மெய்ம்மைகொளீஇயது "கனகரதன்" என்பானோர் அரசன் செருக்குற்று அறமுரைக்கச் சென்ற புத்தனரை இகழ்வானாக; அமைச்சர்கள் அவர் மாந்தருள் மிக்காரொருத்தரல்லரோ என்று புத்தனுடைய பெருமையை அரசனுக்குரைப்ப; அவனும், "அங்ஙனம் மிக்காராயின் யான் ஏறடும் வில்லை ஏற்றுக," என, புத்தனர் அஃதேற்றடு அவனை அறவோனாக்கினர் என்னும் வரலாற்றை யுட்கொண்டு நின்றது. (௬௧)

இதுவுமது

௩௨அ. புத்தர்கட் பத்தியிற் போதி மரந்தொழிற்
புத்தர்கட் பத்தரை யேதொழு புத்தர்கட்
பத்தியை யாக்கு மதுவேனிற் (பற்றிய)
பத்தங் குடைசெகுப் புந்தொழு பாவீ.

(இ - ள்.) புத்தர்கண் பத்தியின் - நுந்தலைவராகிய புத்தர்பாற் கொண்டுள்ள அன்புகாரணமாக; போதி மரந்தொழில்

நீ அவரிருந்த நிழலையுடைய அரசமரத்தைத் தொழுது வழிபடு இன்றேன் என்பாயாயின்; புத்தர்கண் பத்தரையே தொழு - அருளறிவு துறவு முதலியன வில்லாத மரத்தினைத் தொழுதலி னுங்காட்டில், அவையுடைய பௌத்தர்களையே தொழுதல் அமை வதாம்; அது புத்தர்கண் பத்தியை ஆக்கும் எனின் - புத்தன் தன்னிழலிலிருந்தமையாலே அவ்வரசமரம் அவன்பா லன்பினை யுண்டாக்கும் என்று தொழுகின்றேன் என்பாயாயின்; பாவி! ஊனுண்ணல் முதலிய தீவினையையுடையோனே! பத்தம் குடை செருப்பும் தொழு - அவனிரந்த மண்டை போன்ற மண்டையினை யும் அவன் கைக்கொண்ட குடைபோன்ற குடைகளையும் அவன் தொட்ட செருப்புப்போன்ற செருப்புகளையும் தொழவேண்டாவோ; தொழுவாயாக! என்ருள் என்க.

(வி - ம்.) அருளறிவு துறவில்லாத போதி மரத்தை நீ தொழுத லென்னை? என்றுட்கு, போதிமரத்தின்கீழ்ப் புத்தனிருத்தலின், அவர் மேலுள்ள அன்பாற்றொழுதேனெனில், "கொலையஞ்சினுயாயிற் கொலை யைத் துற! ஊன்றுறவாதொழி!" என்று நீ எம்மைச் சொல்லியவாறு போல, "புத்தவன்பினுல் போதிமரந்தொழுதனையாயில், அருண் முதலிய வில்லாத மரத்தினைத் தொழாது இவையுடைய புத்தரடியா ரையே தொழுவாயாக!" என்ருட்கு, அருண்முதலாயின வில்லையெனி னும் அவையுடைய புத்தனை நினைத்து அன்புறுதற்குக் காரணமாய்த் தொழப்படுமெனில்; எமக்கும், நுகர்ச்சி முதலாயினவில்லை யெனினும் உயிரினங்களின் உடம்பின் இறைச்சி அவையுடைய உயிர்களை நினைவூட்டி அருள் செய்தற்குக் காரணமாதலின் துறக்கப்படும் என்று கொள் என்பது கருத்து.

புத்தர்மேலன்பிற்குக் காரணமாகிய அரசமரம் நின்னுல் வெட்டிச் சுடப்படாது, புத்தன்தொடர்புண்மையால் தொழப்பட்டவாறுபோல, உயிர்களின்பால் அருள் செய்தற்குக் காரணமாகிய ஊனும் உயிரின் உட லோடு தொடர்புண்மையால் துறக்கப்படும் என்று கொள் என்பதாம்.

இனி, கொலைக்குக் காரணமென்று ஊன் துறந்தாமெனின், நும்மா லுண்ணப்படுவதாகிய சோறு முதலாயினவும் ஒன்றறிவுயிர்க்கின்னு செய்தற்குக் காரணமாதலின் அவற்றையுந் துறப்பீராமின்? என்பாயா யின், நீயும் புத்தரன்பால் அவனிருந்த போதிமரம்போலும் போதிமரந் தொழுகின்றனையாயின், அவனிரந்த மண்டை போலும் மண்டையினை யும் அவன் கைக்கொண்ட குடைபோலுங் குடையினையும். தொட்ட செருப்புப்போலுஞ் செருப்பினையுந் தொழுகவென, அவை போதிமரம் போலப் புத்தர் வழிபாட்டிற்குக் காரணமல்ல வென்பாயாயின்,யாமுண் ணுஞ் சோறு முதலாயினவும், நீயுண்ணுமூன் முதலாயினபோலக் கொலைக்காரணம் அல்லவென்று கொள்ளென்பதாம்; என்னை? உயி ருடம்பாகிய ஊன் உண்டல் உயிர்க்கொலைக்குக் காரணமானவாறு போல ஒன்றறிவுயிருடம்பினுறுப்பாகிய சோறுண்டலின் ஒன்றறி வுயிர்க்கொலை தோன்றுதோ? எனிற் பிறவாது; என்னை? மரங்கள்தாம் இருவகைய; புத்தர்தாய் போலக் கருவுயிர்த்தபின் றுமே யழிவனவும், ஆன்பால் கறக்குமாறுபோலப் பேறுமாற்றுற் பின்னும் பின்னும் நின்று பயன்றருவனவும் என; அவ்விரு வகை மரங்களது பழமுண்

போமாகிய வெமக்கு அவற்றின் கொலை யொழியவும் உண்ணல் கூடு மாகலான் என்க.

அஃதேயெனின், இங்ஙனமே தாமே இறந்து வீழ்ந்த உடலின் ஊனுண்ணலும் தாமே ஒழுகிய குருதியுண்ணலும் தீவினையல்லவாம் பிறவெனின், அவ்வாறு வந்த ஊன் உண்ட உயிர்களுக்கு அந்த அந்த உயிரினங்களைக் கொல்வதிலே மனம் செல்லும் என்பதற்கு உலகமே சான்றாகும்; என்னை? தாமே விழுந்த பழ நுகர்ந்தான் கொம்பிலிருக்கும் பழத்தை அறுத்துண்ணவும் அவாவுதலியல்பாகலின் என்க.

இனி, குற்றமிலான் முதலியன தின்றல் பண்பிலுயிர்கட்குக் கொலையினையும், பண்புடையவுயிர்கட்குக் கொலைமேலுள்ளத்தினையும் பிறப்பிக்குமாறு போல மரத்தின் பயனுகிய இருவகையுமுண்டவன் மரங்களை வெட்டலினையாமையின் அவை ஒன்றறிவுயிரையழித்தற்கு நிமித்தமாகா வென்பதாம்.

இக்காதை நுவலா நுவற்சிவகையாற் கூறியது. அவன் காரண அறங்கொள்ளுமாறு காட்டிக் காரணத்தீவினைக் குற்றம் நீக்கியவாறு. காரணவறங் கோடலாவது—அறத்திற்குக் காரணமாகிய இறை யன்பிற்குக் காரணமென்று போதிமரந் தொழுதல் போல்வன. தீவினைக்குக் காரணமாகிய கொலைக்குக் காரணமாகிய ஊனுண்டல் போல்வன. காரண வறங்கைக்கொண்ட புத்தனால் தீவினை கருதப் படாமை ''ஊருக்குக் குன்றி மிருகாதம் போதுமக் குன்றத்துக்கின்று ரொருகாத மெனல்'' என்பதனுனுந் தெளிக. (கஉ)

## இதுவுமது

௩௨௧. ஆங்கவர் போல வருள்செய் பவர்களை
நீங்குமி னென்பது நீர்மை யெனினது
வீங்கிதற் கெய்தா விடினிலை போதிக்கும்
தீங்கே நுமர்செய்கை தேரமற் றென்றாள்.

(இ - ள்.) தேர - தேரனே!; ஆங்கு அவர் போல - முற் கூறப்பட்ட இறையன்பு காரணமாகப் போதிமரந் தொழுமவர் களைப்போல்; அருள்செய்பவர்களை - உயிர்களிடத்தே அருள் செய்தல் காரணமாகப் புலவூண் துறந்தாரை; நீங்குமின் என்பது- அவ்வறத்தைக் கைவிடுமின் என்று நீ கூறுவது; நீர்மை எனின் - சான்றாண்மையே என்பாயாயின்; அது இதற்கு எய்தா விடின் - அக்காரண வறம்போல இப்புலவூணுக்கும் காரணத் தீவினை எய்தாவிடின்; போதிக்கும் நுமர் செய்கை தீங்கே என்றாள்- போதிமரத்திற்கும் நும்மனோர் செய்யும் வழிபாடு பயனில் செய லாந் தீமையே யாம் என்றாள்; என்க.

(வி - ம்.) ஆங்கு - அவர்போல என்றது 'புத்தர்கட் பத்தியிற் போதிமரந்தொழுவார்போல' என்றவாறு.

நுமர் காரணவறங்கொண்டு போதிமரந்தொழுமாறுபோலே எமர் காரணத்தீவினை கொண்டு புலவுண்டுறப்பர். இஃதறியாமையாயின் போதி தொழலும் பேதைமையே காண் என்பது கருத்து.(௩௯)

௩௩௦. பல்லுடை யான்றனைப் பண்டுகண் டேத்தினுந்
தொல்லுரை கேட்டுறப் பேதொழு தாலும்பி
னல்வினை யாமென்று நாட்டுதி யாய்விடிற்
கொல்வதுந் தின்பதுங் குற்றமற் றென்னாய்.

(இ - ள்.) பல்லுடையான்றனைப் பண்டு கண்டு ஏத்தினும் - ஈழமடிப்படுத்த தாடையாழ்வார் என்னும் போதிசத்துவரை அவருள்ள காலத்தே வணங்கினார்க்கும்; பின் தொல் உரைகேட்டு உறுப்பே தொழுதாலும் - பின்னர் அவருடைய பழைய புகழைக் கேட்டு அவருடைய பல்லினைத் தொழுதவர்க்கும்; நல்வினையாம் என்று நாட்டுதியாய்விடின் - நல்லறமேயாகும் என்று கூறி உறுதி செய்குவையாய் விடின்; கொல்வதும் தின்பதும் - உயிரினங்களைக் கொல்வதும் அவற்றின் ஊனைத் தின்பதும்; குற்றம் என்னாய் - தீவினையே என்று கொள்க; என்றாள் என்க.

(வி - ம்.) இது "கொன்றுதின்றான்" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

பல்லுடையான் என்றது ஈழமடிப்படுத்த தாடையாழ்வார் என்னும் போதிசத்துவரை. ஈழமடிப்படுத்தலாவது—நெடிய பல்லுடையானொரு பௌத்த ஆசிரியன், ஈழத்தே சென்று சிங்கள மன்னனைக் கண்டு எனக்குத் தோலிடுகைக்கு இடஞ்சிறிது தரவேண்டுமென்றிரந்து தனது இருத்தியால் தோலை ஈழமுள்ளவளவும் விரித்து ஈழத்தைத் தனதாக்கி என்னுட்டிலிருப்போரெல்லாம் எம்மறங்கொண்டிருக்கவென்று அறிவுறுத்து அறமுரைத்தான் என்பது.

ஈழமடிப்படுத்த தாடையாழ்வாரென்னும் போதிசத்துவரை அவருள்ள காலத்து வணங்கினார்க்கும், பின்பு அவரது பல்லினைத் தொழுதார்க்கும் அறமுண்டாயின், உயிரோடிருக்கும் உடம்பினை அறிப்பார்க்கும் தீவினையுண்டென்று கொள்! என்றவாறு. என்பு முதலியவற்றிற்கும் இவ்வாறு சொல்லிக்கொள்க. அஃதாவது - செத்தது மண்ணோடொக்குமென்று உயிர் போயஉடம்பினைச் சுட்டுத்தின்பார்க்குத் தீவினையும், அவை துறப்பார்க்குப் புண்ணியமுமில்லை எனின் அவ்வாறாகிய தாடையாழ்வாருடைய என்பு முதலியவற்றைச் சுட்டார்க்குத் தீவினையும், தொழுதார்க்கு அறமுமில்லை என்று கொள்ளென்பதாம். (௩௪)

இதுவுமது

௩௩௧. ஏத்தின ரேத்துக வென்றிறை போல்வன
பாத்தில பைம்பொற் படிமைசெய் தாலவை
யேத்துநர் செய்தவ ரெய்துவ கன்றெனில்
வீத்தவர் தின்பவர் வெவ்வினைப் பட்டார்.

(இ - ள்.) ஏத்தினர் ஏத்துக என்று - வழிபடுவோர் வழி படுவாராக என்று கருதி; பாத்து இல - குற்றமற்றனவாகிய; பைம்பொன் - பசிய பொன்னாலே; இறைபோல்வன படிமைசெய் தால் - நும்மிறைவனாகிய புத்தனைப்போல்வனவாகிய படிமங்கள் செய்தால்; செய்தவர் ஏத்துநர் - அவற்றைச் செய்தவரும் வழி படுவாரும்; நன்று எய்துவ எனின் - நல்லறம் பெறுகுவர் என் பாயாயின்; வீத்தவர் தின்பவர் வெவ்வினைப் பட்டார்-அங்ஙனமே உயிரினங்களைக் கொன்றவரும் அவற்றின் ஊனைத்தின்பவரும் கொடிய வினையிற்பட்டவராவர் என்று கொள்! என்றாள் என்க.

(வி - ம்.) இறை - புத்தர். பாத்து - குற்றம். படிமை - உருவம். ஏத்துநர் பெய்தவர் என்றும் பாடம். இதற்குப் புகழ்வாரும் பூப்பெய்து வழிபடுவாரும் என்று பொருள் கூறிக் கொள்க. எய்துவ: பலரறிசொல். நன்று-அறம். வீத்தவர்-கொன்றவர். பட்டார் என்றுகொள் என்பது இசையெச்சம். (௬௧)

இதுவுமது

௩௩௨. வெற்றுடம் புண்பதும் வேலின் விளிந்தவை
தேற்றென வுண்பதுந் தீமை தருமென்னை
யொற்றைநின் றாடுணை யூறு படுத்தவட்
குற்றமன் றோசென்று கூடுவ தேடா.

(இ - ள்.) வெறு உடம்பு உண்பதும் - வாழ்நாளுலந்து தாமே இறந்து வீழ்ந்த உடம்பினைத் தின்பதும், வேலின் விளிந் தவை தெற்றென உண்பதும் - விலைப் பொருட்டாற் கொல்வோ ருடைய வேல் முதலியவற்றால் இறந்துபட்ட உயிரினங்களின் உடம்பினைத் தின்பதும்; தீமை தரும் - ஒரே வகையான தீவினை யையே உண்டாக்கும்; என்னை ? - எங்ஙனமெனில்; ஏடா - அடே மொக்கல !; ஒற்றை நின்றாள் சென்று கூடுவது - கணவனிறப்பத் தானே கைம்மை யெய்தியவளைச் சென்று கூடுவதுதானும்; துணை ஊறுபடுத்தவள் குற்றம் அன்றோ-ஒருத்தியின் கணவனைக் கொன்று அவளைக் கைப்பற்றிக் கொள்வானுக்குண்டாகும் தீவினை யளவிற்றாமன்றோ ? என்றாள் என்க.

(வி - ம்.) வெற்றுடம்பென்றது - தானே இறந்துபட்ட உடம்பு என்றவாறு. வேலின் விளிந்தவை என்றது - விலைப்பொருட்டாலூன் தரும் வேடர் முதலியோர் படைக்கலங்களாலே கொல்லப்பட்ட உயிரினங்களின் உடம்பு என்றவாறு.

ஒற்றை நின்றாள் - கைம்பெண். துணை ஊறுபடுத்தவள் - ஒருவன் ஒருத்தியைக் காமுற்று அவள் கணவனைக் கொன்று கைப்பற்றிய கைம்பெண். இனி, கொன்றுவந்த வூன்றின்பார்க்குக் கொலைப் பாவம் வருக !; படுமுடை தின்பார்க்குக் குற்றமென்னோ வெனின் இருவர்க்குங் குற்றமாம். என்னை ? துணைவனைக் கொன்று கைம்மையுற்றவளைக்

கைப்பற்றினோர்க்கும், தானே கைம்பெண் ஆயினளைக் கைப்பற்றினோர்க்கும் ஒரேபடித்தாகிய தீவினை வருமாறுபோல வென்க. அன்றியும், பிறன் மனையாட்டியின் மேலுண்டாகிய வேட்கையாலன்றோ அவள் கணவனைக் கொன்று அவளைக் கைப்பற்றியது. அவ்வாறே கைம்பெண்ணைக் காமுற்றுக் கைப்பற்றினோர்க்கும் அவள் கணவன் சாவிற் குடம்பாடாம், அதுபோலப் படுமுடை தின்பார்க்கும் உயிரினங்களின் சாவிலே அறிவு பிறக்கும் என்பதாம். உகுநெற் பொறுக்கியுண்பான் நெல்லுக வேண்டினவாறு போல. என்னை?

> "உகுநெற் பலகூட்டி யுண்டி முடிப்பான்
> மிகநெல் லுதிர்வதனை வேண்டுந்—தகவுடையோ
> ருண்ணுப் படுமுடையை யுண்பா னுயிர்மரண
> மெண்ணுத வாறுண்டோ விங்கு"

என்பதுங் காண்க. (கசு)

௩௩௩. பிடிப்பது பீலி பிறவுயி ரோம்பி
முடிப்ப தருளது போன்முடை தின்று
கடிப்ப தெலும்பதன் காரண மேனி
தடிப்பத லாலரு டானுனக் குண்டோ.

(இ - ள்.) பீலி பிடிப்பது - ஏடா! எம்மனோர் மயிற்பீலியைக் கையிற் பிடிப்பது; பிறவுயிர் ஓம்பி அருள்முடிப்பது - காணுவுயிர்க்கும் கையற்றேங்கி அவற்றைப் பாதுகாத்து அருள் முடித்தல் காரணமாம்; அதுபோல் - அதுபோல; முடைதின்று எலும்பு கடிப்பது - நீ ஊன் தின்று எலும்பு கடித்தல்; அதன் காரணம் - அதற்குக் காரணம்; மேனி தடிப்பது அலால் - உன்னுடம்பு தடிப்பதேயன்றி; அருள்தான் உனக்கு உண்டோ - நின் மேற்கோளாகிய அருள் முடிப்பதற்கு உனக்குக் காரணம் ஆதலுமுண்டோ? கூறுதி என்றாள் என்க.

(வி - ம்.) இது "வாலிதினானுன்" என்னுஞ் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

காரணம் என்பதனை இருவழியுங் கூட்டுக. நின் வயிறு வாடாமைப் பொருட்டு ஊன் தின்கின்றாய்; நின் ஊனுணவு கொலைக்குக் காரணமாவதல்லது உயிரோம்பி அருண் முடித்தனிமித்தமாகப் பிடிக்கின்ற பீலி கொலைக்குக் காரணமாமோவென்பது போந்தது.

இனி, எறும்பு முதலிய சிற்றுயிரின் சாவினையும் தவிர்த்தற் பொருட்டுப் பீலி பிடிப்பார் மயில் சாவப் பீலி பிடியாரென்பது விளங்கும். (கஎ)

௩௩௪. ஆட்டோரு கான்மயிற் பீலி யுகுமவை
ஈட்டுதல் போலுதிர்ந் துக்க விறைச்சியைக்
காட்டியுந் தின்னுங் கருத்திலை நீ தசை
வேட்டுநின் றேயழைத் தீவினை யாளோ.

(இ - ள்.) ஆண்டு ஒருகால் மயில் பீலி உகும் - எடா! ஓராண்டிற்கு ஒருமுறை மயில்கள் விளையாடித் தம் பீலியை உகுக்கும்; அவை ஈட்டுதல் போல் - எம்மனோர் அங்ஙனம் வீழ்ந்த பீலிகளைப் பொறுக்கிச் சேர்த்துயிர் ஓம்புதல் போல; நீ உதிர்ந்து உக்க இறைச்சியைக் காட்டியும் தின்னும் கருத்து இலை-நீ இறந்து பட்ட உடம்பினின்றும் உக்க இறைச்சியைத் தின்னல் அறமெனக் காட்டித் தின்கின்ற கருத்தும் உடையையல்லையே!; தசை வேட்டு நின்று அழைத்தி - நீயே வாழ்கின்ற உயிரின் உடற்றசையைத் தின்னவிரும்பிக் கூற்றுவனை அழைக்கின்றனை; வினையாள் - தீவினையை ஆள்பவனே! என்றாள் என்க.

(வி - ம்.) இது "புய்ந்துக்க பீலி" எனவருஞ் செய்யுளாற் கூறப் பட்ட குற்றம் நீக்குகின்றது.

ஆட்டொருகால்—ஆண்டு + ஒரு கால், உதிர்ந்துக்க இறைச்சி யென்றது இறந்துபட்ட உடம்பிலூன்.

இறைச்சியைத் தின்னல் எமக்கறம் என்று காட்டியுந் தின்கிலை என வருவித்தோதுக. கூற்றுவனை அழைத்தி – என்க. வினையாள்: அண்மைவிளி.

யாங்கள் மயில்கள் தாமே உகுக்கும் பீலிகொண்டுயிரோம்புதும். என்னை?

"செந்தாள வாகிச் சிவந்து புடையொதுங்கி
வந்தாற் கொலையென்று வைத்திடுவர்—தந்தாள்
வளைபோல்வ முல்லை முகைபோல்வ கொள்வர்
விளையாடி வீழ்ந்தனவென் றோர்ந்து"

என்பவாகலின் என்க.

இனி, இவ்வாறே தானே விழுமூனுமுளதென்று ஒப்புக் கூறினை. அஃதுண்டேனும், அது தின்றார்க்குக் கொலைமேலுள்ளம் பிறப்பிக்கு மாதலிற் பீலி அதனோடொவ்வாது, நீ விழுந்தவூன் பொறுக்கித் தின்றாயுமில்லை, கூற்றுவனை அழைத்துயிர் குடிப்பித்துப் பின்னரன்றோ ஊன் தின்கின்றனை என்றவாறு.

இனி, "நைந்துக்க மாமுதிர்ந்தற்ற விறைச்சிகள், சந்திக்கிற் றின்பது தத்துவ மாம்" என்று நீயே கூறினமையின், ஒழிந்த ஊன் றின்பார்க்குக் கொலைத் தீவினையுளதென்பதிசைந்தாயாகுதி! என்பதும், இறைச்சிப் பொருட்டு மயில் கொன்றார் பீலியும் கொடுவந்து விற்பதல்லது, பீலிப் பொருட்டு மயில் கொல்வாருமில்லை என்பதும் கொள்க. (௬௮)

௬௯. மானொடு மீனில மன்னு முடம்பட
வூனடு வாரிடு வாரை யொளித்தலிற்
றூனடை யாவினை யாமென்ற றத்துவந்
தீனிடை நீபட்ட தீச்செய்கை யென்னோ.

(இ - ள்.) ஊன் அடுவார் இடுவாரை ஒளித்தலில் - ஏடா! தினற்பொருட்டாய்த் தம்மூனைச் சமைப்பவரையும், அவ்வூனை வழங்குவாரையுங் கண்டுழி அஞ்சி ஒளிதலாலே; மானொடு மீன் உடம்படல் இல - மானும் மீனும் முதலாயின கொலையை உடம்படுதலில என்பது தேற்றம்; அடையா வினை - ஆதலால் கொலைப்படுமவ்வுயிர்கள் அத் தீ வி னை யை எய்தமாட்டா; ஆமென்றல் தத்துவம் - ஆதலால் கொலையிலுடம்பாடுடைய அடுவார்க்கும் இடுவார்க்குமே அத்தீவினையாகும் என்று கூறுதலே வாய்மையாம்; தினிடை நீ பட்ட தீச்செய்கை என்னோ- ஊன் தின்னல் வேண்டி நீ படும் மனத்துயராகிய இச்செய்கை என்கொலோ? என்றாள் என்க.

(வி - ம்.) இஃது, "ஊன் விற்பவர் கொள்பவர்" என்னும் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

தின்பவன் கொலைக்குக் காரணமாயினாற்போல மான் முதலாயினவற்றுண்மை கொலைக்குக் காரணமன்று; கையகப்பட்ட உயிரினத்தைத் தின்னல் வேண்டும் என்றவாப் பிறந்தபொழுதே அதற்குக் கொலைபிறந்தமையின் தின்றலே கொலைக்குக் காரணமாம், அவற்றினது உண்மை கொலைக்குக் காரணமாகாதென்பது; என்னை? சங்கத்தார்க்கும் எருது முதலாயினவற்றிற்கும் உண்மையுண்டேயெனினும், தின்பாரின்மையிற் கொலை பிறவாமையால் என்க.

இனி, தின்பானுளனேயெனினும் அவற்றுண்மையின்றேல் கொலை பிறவாமையால் அவற்றினுண்மையும் கொலைக்குக் காரணமாம் பிறவெனின், நன்று சொல்லினை! வெட்டுதல் குத்துதல் முதலாகிய கொலைத்தொழில் கருவிக்கும் கருத்தாவிற்கும் ஒக்குமேயெனினும் கருத்தாவே கொலை செய்தானாயினவாறுபோலத் தின்பானே கொலைக்குக் காரணனாயினான் என்று கொள்ளென்பதாம்.

இத்துணையானும் போந்த பொருள் கொலையிலுடம்பாடுடைமையே கொலைக்குக் காரணமென்பதாம்; அவ்வுடன்பாடு தின்பார்மாட்டு நேர்முகமாகக் காணப்படாவிடினும் உய்த்துணரும்வழிச் செவ்விதிற் புலனாம். புலனாகவே அவரே கொலைக்குக் காரணராவர். ஆதலால் ஊனடுவார் முதலாயினாரைக் கண்டோடியொளிக்கின்ற மான் முதலாயினவற்றிற்குக் கொலையுடன்பாடின்மையில் அவை வினையடையா என்றவாறு. தின்பானுக்குக் கொலையுடன்பாடு போன செய்யுள்களாற் பெறப்படும். ஊன் தின்னல் வேண்டி நீ படுமித்துயர் என்னையோ? என்பாள் தினிடை நீ பட்ட தீச்செய்கை என்னோ? என்றாள். மனத்துயரத்தாலன்றோ 'இடித்தார் தீவினை எடுத்தார்க்காம்' என்பது முதலாயின சொல்லுகின்றாய் என்பது.

இனி, காரணத் தீவினை கொள்ளின் அதுவுமாமன்றோவெனின் நன்று சொல்லினை! தின்பவன்பாற்பெறும் பொருணிமித்தமாகச் செம்படவர் முதலாயினார் கொன்றவாறுபோல, எடுப்பவன்பாற் பெறும் பொருணிமித்தமாகக் கோயிலிடித்தானாயினன்றே எடுத்தவன் தீவினை யெய்துவது; இது நின் பேதைமையாற் கூறினையென்பது.

"எடுப்பான் கொடுக்கும் பொருள்வேட் டிடிக்கில்
எடுத்தானும் பாபத்தை யெய்தும்—கடித்தெலும்பு
தின்பாய் கொடுக்கும் பொருணசையாற் கொல்வார்க்கு
நின்போல் வினையுள தெனில்"

என்க.

இனி, இடித்தவர் தீவினை கோயிலெடுத்தவர்க்காகுமென்பதன் பொருள் இடித்த செங்கன் முதலாயின கொண்டு அந்தக் கோயில் எடுத்தார்க்குத் தீவினையாமென்பதன்றேவெனில் நன்று சொன்னாய்! இடித்தவர்க்குப் பொருள் கொடாது அவரை வெறுத்து அக்கோயிலைப் புதுக்குவார்போல, தின்பாயும் கொல்வார்க்குப் பொருள் கொடாது, அவர் தாமே அவ்வூனைப் போகட்டவழி, நீ அதனை யெடுத்து முன்போ லுடம்பாக்கியுயிர்க்கிட மாக்குதியெனினன்றே அவ்வாறு சொல்ல லாவது; அவ்வாறன்றி இன்ன கோயிலிடித்துச் செங்கற்கொண்டு வருகின்றானென்றறிந்து, அச்செங்கன் முதலாயின கைக்கொண்டு, மனை முதலாயின செய்வார்க்கு இடித்தலுடம்பாடு வருமாறுபோல உயிர்க்கொலை செய்து ஊன் கொடுவந்தமையறிந்து அதனைக் கைக் கொண்டுண்பாருக்கும் கொலையுடம்பாடாமென்பது.

இனி, மகன்செய்த தீவினை தந்தைக்காமென்பதும் பேதைமையாம், என்னை? ஊன்தின்பார்க்குக் கொலையுடம்பாடுண்டாமாறுபோல. மகன் செய்யுந் தீவினைகளுக்குடம்படுமெனிலன்றே தந்தை தீவினை பெறும் என்க. காரணத்தீவினை கொண்டேமென்று எம்மையிவ்வாறு சொல்லுகின்றாய்; நீ காரணத்தீவினை கொள்ளாயாகில் ஓவியத்தினுல் மகளிர் வடிவம் கண்டாலும் காமக்குற்றம் வருமென்று அது தவிர்த்த லொழி என்பதாம். (கக)

நரு சு. குறிக்கப் படாமையிற் கொல்வினை கூடான்
பறித்துத் தின்பானெனிற் பாவமாம் பூப்போற்
செறிக்கப் படுமுயிர் தீவினை பின்னு
நெறிக்கட் சென்றுறலைப் பாரோப்ப னேர்நீ.

(இ - ள்.) பறித்துத் தின்பான் குறிக்கப்படாமையின் - ஊன் வாணிகரை ஆறலைத்து அவர் கொணரும் ஊனைப் பறித்துண்பவன் அவ்வூன் அவனைக்குறித்துக் கொன்று கொணரப்படாமையாலே; கொல்வினை கூடான் எனின் - கொலைத்தொழிலால் வருந் தீவினை யைப் பெருன் என்பாயாயின்; பூப்போல் பாவமாம் - அற்றன்று புத்தப்படிமத்திற் இட்ட பூவினைப் பிறர்க்குப் பரிசாரகர் கொண்டு போவதறிந்து அப்புத்தர்பாலெழுந்த அன்புகாரணமாக இடை வழியிற் பறித்துச் சூடினார்க்கும் நல்வினையுண்டாமாறு போல, ஆறலைத்து ஊனுண்பானுக்கும் அத்தீவினை எய்துவதாம் என்று கொள்; பின்னும் உயிர் தீவினை செறிக்கப்படும்-மேலும் அவ்வூன் வாணிகர் யாரைக்குறித்துக் கொணர்ந்தாரோ அவர் உயிரும் அத்தீவினையாலே விரப்பப்படுங்காண்! நெறிக்கண் சென்று ஆறு

அலைப்பார் ஒப்பன் நீ நேர் - ஐய! ஆறலைத்தூனுண்பவன் குறிக் கப்பட்டிலனுயினும் கொலைத்தீவினை அடைதலோடன்றி, பொருள் கொண்டு ஆறு செல்வோரை அலைத்துண்ணும ஆறலைகள்வர் போன்று ஆறலைக்குந் தீவினையையும எய்துவன் என்று நீ கொள் என்றுள் என்க.

(வி – ம்.) இது "விலைக்குக் கொள்வானை" யெ......ற்று.

ஊன் வாணிகரை வழியடித்தும் பிச்சைபுக்கும் ஊன் உண்பார்க்குக் குற்றமில்லை; அவரைக் குறித்துக் கொல்லப்படாமையாலெனின், புத்த ரடியிலிட்டு வழிபாடு செய்த மலராகிய நிருமாலியத்தைப் பரிசாரகர் பிறர்க்குக் கொண்டுபோவதறிந்து இடைவழியிற் பறித்துச் சூடினார்க்கு நல்வினையுண்டானவாறுபோலக் கொலையால் வருவது ஊன் என்று அறிந்து பறித்துத் தின்றூர்க்குந் தீவினையுண்டாம் என்றவாறு.

இனி மலர் வேட்கையாலன்றிப் புத்தர்பால் வைத்த அன்பு காரண மாகப் பறித்துச் சூடுதலின், அது நல்வினையாம்; மலர் வேட்கையா லெனின், பிறிதொரு மலர் சூடவும் அமையும். அங்ஙனம் வேறு மலர் சூடின் நல்வினையாதல் இல்லையாதல்போல, ஆறலைத்தலின்றிக் கிடைக் கும் பிறிதோர் ஊனுண்ணின் தீவினையாகாதாம் பிறவெனின், அற் றன்று; ஊன்பறித்துத் தின்பானும் ஊன் வேட்கை மாத்திரையாலன்றி அது கொலையால் வருஞ் செவ்வி குறித்து இது சிறந்தவூன் என்று கருதி யன்றே பறிப்பது; அங்ஙனம் கருதாது ஊன் வேட்கைமாத்திரையே காரணமாயின் ஊரில் இறந்து கிடக்கும் நாய் முதலியவற்றின் ஊனுண்ண அமையுமே. அவற்றை உண்ணுமையின் அவன் பறித்தற்குக் காரணம் அவ்வூன் கொலையால் வருகின்ற நல்லூன் என்னும் கருத்தே யாதல் தேற்றமாம். ஆகவே, கொலை என்றறிந்தே பறித்துண்ணவின் தீவினை வருதலும் தேற்றம் என்க.

இனி, புத்தன் அடியிற் பெய்த பூவென்று அதனை இகழ்ந்து வாங் காதான் நல்வினை பெருதவாறுபோலக் கொலையால் வந்த ஊனென்று இகழ்ந்து ஊன் வாங்காதான் தீவினை யெய்தான் என்க.

இனி, வேட்கை மாத்திரையானே யாதானும் மலர்சூடினார்க்கு நல்வினையில்லாதவாறுபோலத் தாமேஇறந்துபட்ட ஊன்தின்பார்க்குத் தீவினையில்லையெனின் அதற்கும் அதுவே கூறிவடுக்க; என்னை? பூச்சூடவேண்டுவான் அப் பூமிக வேண்டுமாறுபோலத் தாமே விழுந்த ஊனை தின்பானும் அத்தகையவூன் மிகும் பொருட்டு உயிர்களின் இறப்பினைப் பெரிதும் வேண்டித் தீவினையெய்தும் என்க. அது நோக்கியன்றே, சேடப் பூப்போலென விதந்தோதாது பூப்போற் பாவமாம் எனப் பொதுப்பட வோதுவாராயினர் என்க.

இனி, குறிக்கப்பட்டார் அந்த ஊன்றின்னுமையின் அவர்க்குந் தீவினையில்லையே யெனின், அவரும் ஊன் கொடுவந்தார்க்கு விலை கொடுத்துக் கொள்வோமென நினைத்திருந்தமையிற் கொலையுடன் பட்டுத் தீவினை யெய்துவர் என்க; என்னை?

ஒரு நகரத்துள்ளாரெல்லாரும் உபாசகராதலின், பிச்சைப்பொழு தில் புத்த மண்டையிலிடவேண்டி ஆர்வமுற்றிருந்தாராக; அவனும்

ஓரில்லத்தே பிச்சைபெற்று மீண்டானாயினும், அவனுக்குப் பிச்சையிட வேண்டியிருந்தார் யாவரும் நல்வினை பெற்றவாறுபோல வென்பதாம்.

இனி, அஃதொக்கும், கடற்றலைப் பிறந்த கொலைத்தீவினை மலைத்தலையார்க்கு வந்தவாறென்னை? எனின், ஈழத்துச் சங்கத்தாரும் உபாசகரும் இவ்வழி ஒரு கோயில்செய்ய உடன்பட்டார் நல்வினைபெற்றவாறு போல என்றுவிடுக்க. தின்பான் ஊன் வரவேண்டுவதல்லது கொலை வேண்டுமோ? எனின் 'தலை கொடுவந்தார்க்குப் பொருள் கொடுத்தும்' என்றிருந்தான் அக்கொலை வேண்டினவாறுபோலப் புலைகொடுவந்தார்க்கு விலைகொடுத்தும் என்றிருந்தானும் கொலை வேண்டினனும் என்று விடுக்க. கடற்றலைப்பிறந்த கொலைத்தீவினை மலைத்தலைவாழ்வாரொருவருக்கு எத்துணை விழுக்காடு வருமெனின், ஈழத்தொரு கோயில் செய்தற்கு இவ்வழியுடன்பட்ட பௌத்தர் பலரிலொருவர்க்கு வரும் விழுக்காடு வரும் என்று கொள்! என்க.

இனி, 'தீவினை பின்னுஞ் செறிக்கப்படும் எனக் கூட்டி, குறிக்கப் பட்டார் தின்றிலர் எனினும் அவர்க்குந் தீவினைவரும் எனவும் உரைத்துக் கொள்க. அன்றியும் ஆறலைத்துண்பார் பொருள்கொண்டு பலரையும் வரவேண்டுமாறுபோல, ஊன் ஆறலைத்துண்பானும் ஊன் கொன்று கொணரவேண்டும் என்பதுமுரைத்துக் கொள்க.

இனி, ஊன் கொணருங்கால் அது நீரோடு போகினும் நெருப்பில் வேவினும் எல்லாம் முன் சொல்லியவாறே தின்பார்க்குத் தீவினைவந்தெய்துதல் ஒருதலை என்று முரைத்துக் கொள்க. இதனை,

> "தலைகொணர்ந் தார்க்கியுந் தனமென் றிருந்தான்
> கொலையுவந்தா னுகு மதுபோற்—கொலையுவந்தா
> னூன்றருவார்க் கீதும் பொருளென் றிருந்தானுஞ்
> சான்றுலக மல்லவோ தான்"

(எ௦)

என்பதனானுமுணர்க.

நூரு௭. **விலையறம் போலு மெனின்வினை யாக்க**
**நிலையுமீ றென்பது நேர்குவை யாயின்**
**வலையினின் வாழ்நர்க்கும் வைகலு மீந்தாற்**
**கோலையென் றும் வேண்டலன் றேகுண மில்லாய்.**

(இ-ள்.) 'விலை அறம்போலும் எனின் - ஏடா! நீ ஊன் வாணிகர்க்கு முன்னரே கொடுக்கும் விலைப்பொருள் அம்பலம் செய்வார்க்கு அறங்கருதி முன்னே கொடுக்கும் பொருளையே ஒக்கும் என்று கூறுவாயாயின்; வினை ஆக்க ஈறு நிலையும் என்பது-அறங் கருதிக் கொடுப்போன் அவ்வறவினையைச் செய்துழி அவ்வினையின் பயன் தன்பால் வந்து நிற்கும் என்பது கருதியன்றோ கொடுப்பது, அதுபோல நீ கொடுக்கும் பொருளால் நிகழும் வினைப்பயனும் நின்பால்வந்து நிற்கும் என்பதனை ஒப்புக்கொள்ளாநின்றாய்; ஆயின் - அங்ஙனமாயின்; குணம் இல்லாய் - நற்பண்பில்லாத நீ; வலையினின் வாழ்நர்க்கும் வைகலும் ஈந்தால் - வலை முதலியவற்றால்

வாழும் வேடர் முதலியோர்க்கு நாடோறும் பொருள் கொடுத்தால்; என்றும் கொலை வேண்டலன்றோ-நாடோறும் நீ உயிர்க்கொலையை வேண்டுதலாகாதோ? என்றாள்; என்க.

(வி - ம்.) இது ''செய்வினை கொடுத்தார் நிற்ப''......ற்று.

ஊன்வாணிகர்க்கு யாங்கள் முற்படக் கொடுக்கும் பொருள் அம்பலஞ் செய்வார்க்கு அறங்கருதி முற்படக் கொடுக்கும் பொருளையே ஒக்கும் அதனால் வரும் குற்றம் என்னையோ? என்பாயாயின், அறங்கருதிக் கொடுக்கும் பொருளின் பயன் கொடுத்தார் பால் வந்து நிற்றல் போலக் கொலைகருதி நீ வலைஞர் முதலாயினார்க்குக் கொடுக்கும் பொருளால் நிகழும் வினைப்பயனும் நின்பால் வந்து நிற்கும் என்பதனை நீயே ஒப்புவாயாகின்றனை. என்னை? நீ கொடுக்கும் பொருள் அவர்பால் நட்புச் செய்தலாகிய அறங்கருதியன்றே! அவர் தரும் ஊன்வேண்டியன்றே கொடுக்கின்றாய்; அவர் உயிரினங்களைக் கொன்றன்றே ஊன் கொடு வருவது? ஆதலால் நீ ஊன் வாணிகர்க்கு முன் கொடுப்பதும் பின்பு கொடுப்பதும் பயனால் ஒக்கும் ஆகலான் நீ கொலை வேண்டினை யாகாயோ என்றவாறு.

'அறங்கருதிக் கொடுக்கும் பொருள்போலும் யாங்கள் கொடுக்கும் பொருளும் என்னும் நின் கூற்றே கொடுத்தார் கொடுத்த பொருளின் பயனெய்துவர் என்பதனையும் நீ ஒப்புக்கொள்கின்றனை என்பதனைக் காட்டும் என்பாள் வினையாக்க ஈறு நிலையும் என்பது நேர்சுவை' என்றாள். ஈறு - பயன். வினையினிறுதியிற் பிறப்பதாகலின் அதனை ஈறு என்றாள்.

வாழ்நர்க்கும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. வைகல் – நாள்.

இனி, கொன்றவனோடு கொலைத் தீவினை நிற்பதன்றிக் கொண்டு தின்பவர்க்கு வருமாறென்னை? எனின், கொல்கின்றான் தின்பவர் கொடுக்கும் பொருளை விரும்பி அவர் விருப்பத்திற்குத் தக்கவாறு உயிரோடு கொடுவந்து கொடுத்தும், ஊனாக்கிக் கொடுவந்து கொடுத்தும் முயலுங் காடையு முதலாயின அவர் வேண்டின கொடுத்தும்; விலை கொடுக்கும் பொழுது இவறுவார்க்குக் கொடாதும், விலையிற் சிறிது ஏறவிடுவார்க்கு ஊனுஞ் சிறிது ஏறக் கொடுத்தும் தின்பவர் பொருள் கொடுக்கும்படிக்குத் தக்கவாறு செய்கின்றனன். கொல்பவன் தின்பவர் கொடுக்கும் பொருள் வேண்டாது தானே கொல்லும் எனின், வலையிற் பட்ட பாம்பு தவளை முதலாயினவும் நாய் நரி முதலாயினவும் கொல்லா தொழிவதென்னோ? அவை தின்கின்ற நாட்டில் அவை கொல்கின்ற வாறென்னோ? தின்னாவிலங்கு கொல்வாரை ஒறுக்கின்ற வுலகம், தின்னும் விலங்கு கொல்வார்க்குப் பொருள் கொடுப்புழி யுடன்பாடுஇல்லையாமோ? நெற்கொண்டுண்பார் நென்மிக வேண்டுமாறு போல ஊன் கொண்டு தின்பார் ஊன் மிக வேண்டியிராரோ? என்றிவை முதலாயின சொல்லித் தின்பார்க்குந் தீவினை வருதல் தேற்றுக. (எக)

ருருஅ. நம்பள்ளிக் கீபொரு ளாவுணர் வில்லவ
ரெம்பள்ளி தாஞ்சென் றெடுப்ப வெனினது
கம்பலை யாம்வினை யில்கறிக் கீபொருள்
செம்பக லேகொலை யாளரிற் சேரும்.

(இ - ள்.) நும்பள்ளிக்கு ஈ பொருளால்-ஏடா! நுமர் நுங்கள் பௌத்தப்பள்ளி செய்தற் பொருட்டுக் கொடுத்த பொருளைக் கொண்டு; உணர்வு இல்லவர் - சமய வேறுபாட்டுணர்ச்சியில்லாத மாக்கள்; எம் பள்ளிதாம் சென்று எடுப்ப எனின் - எமது சமண் பள்ளி செய்குவராயின்; அது கம்பலை ஆம் - அச் செயல் நுமக் குடன்பாடன்மையால் கலகத்திற்குக் காரணமாகும், அவ்வாறே கொலையும் நுமக் குடன்பாடன்றாயின் கொலையால் வந்த ஊனென் றறிந்தவழி நீயிர் கலகம் செய்யாமையால் அது நுமக்குடம்பாடா மென்பது தேற்றமாம்; வினை இல் கறிக்கு ஈபொருள் இது கிற்க, நுமர் முயல் முதலாயினவற்றை உயிரொடு கொணர்தற்குக் கொடுக்கும் பொருளோ; செம்பகலே கொலையாளரில் சேரும் - எல்லாருமறியவே நும்மைக் கொலைத் தொழிலாளரொடு சேர்க்கும் காண்! என்றாள் என்க.

(வி - ரை.) இது "விலைக்கு விற்பான் செய்த வஞ்சமும் வேண்டி, விலைக்குக் கொள்வானே படவிதியாயோ!" என்னுஞ் செய்யுட்கும், "செய்ய விலைகொடுத்தான்" என்னுஞ் செய்யுட்கும் விடையாக வந்தது.

அவ்வாறே கொலையும் நுமக்குடன்பாடன்றாயின் கொலையால் வந்த ஊனென்றறிந்தவழி நீயிர் கம்பலை செய்யாமையின் அது நுமக்குடன் பாடென்பது தேற்றமாம்' என்பது உவமைக்குறிப்பாற் கொண்ட பொருள்.

இனி, நும்பள்ளி செய்யவேண்டி நீயிர் பொருள் கொடுப்ப அவர் எம்பள்ளி எடுப்பரெனின் எவ்வாறு கம்பலை செய்தீர்? நுமக்குடன் பாடல்லாமையினன்றோ? அவ்வாறே, நீ தின்னுதநாயூன் முதலியனவும் நெல்லீற் பதர்முதலியனவும் கலந்து விற்றாரென் றறிந்தவழியும் கம்பலை செய்தீர் அவையும் நுமக்குடன்பாடன்மையின், அவ்வாறே கொலையும் நுமக்குடம்பாடில்லேல் கொலையால் வந்த ஊனென்றறிந்தாலது கொள்ளாது கம்பலை செய்குவிரன்றோ? அது செய்யாதது நுமக்குக் கொலையுடம்பாடாதலாலன்றோ? ஆகலால் நுமக்குக் கொலைத்தீவினை யாம். விற்பவன் வஞ்சம் கொள்பவர் வேண்டாமையிலிவர்க்குத் தீவ்வினை யில்லை யாம். அன்றியும் இன்னாருடைய பொருளை இவன் களவுகண்டு கொடுவந்தான் என்பதறிந்து அப்பொருள் கொண்டார் யாவரும் கள்வராதலறியாயோ!; கொலையால் வந்த வூனென்பதறிந்து கொள்வார் யாவர்க்குங் கொலைத்தீவினை யுண்டென்று கொள்க என்றவாறு.

"களவால் வருவ தறிந்துகொண் டானக்
களவாள னுவதூஉங் காண்டு - மளவின்றிக்
கொன்று வருத லறிந்துந் தசைகொண்டான்
கொன்றவ னல்லனோ கூறு"

என வோதுதலுணர்க.

வினையில்லாக்கறி என்றது உயிரோடு கொண்டுவரும்படி கூறிக் கொடுத்தலால் கொலையாளர் கொல்லாது கொணரும் முயல் முத

லாயின. அவை கறிக்கே கொணரப்படுதலின் வினையில் கறி என்றார். கொல்லாது கொடுவருக என்று பொருள் கொடுப்பினும் அவை வந்த பின் கொன்று தின்னலே கருத்தாதலின் அப்பொருட் கொடையும் இவர் கொலை வினைஞர் என்பதனை எல்லோருக்கும் அறிவிக்கும் என்பாள், 'அப்பொருள் செம்பகலே கொலையாளரிற் சேர்க்கும்'' என்றாள். சேர்க்கும் என்பது செய்யுளின்பம் குறித்துச் சேரும் என நின்றது. செம்பகல் - நண்பகல். எல்லாருமறிதற்குக் காரணமாக வின் இங்ஙனம் கூறினள். (எஉ)

நடுநகூ. நாவின்கண் வைத்த தசைபய னேயேனை
வேவினை நீயுமற் றின்பமஃ தாதலிற்
றேவன்கண் வைத்த சிரத்தை செயலன்று
தூவென வெவ்வினை யைத்துடைத் தாயால்.

(இ - ள்.) நாவின்கண் வைத்த தசை பயனே - ஏடா! நீ ஒருவன் தின்னற் பொருட்டுத் தனது நாவிலிடும் ஊன் - அவன் செய்ததொரு வினையின் பயனே; அஃது இன்பம் ஆதலின்-எற்றா லெனின் அஃதவனுக்கு இன்ப நுகர்ச்சியையுண்டாக்குதலாலே, எனவே; வினை நீயும் - ஆகவே அந் நுகர்ச்சிக்குக் காரணமான அக் கொலைத் தீவினை அவ்வின்ப நுகர்ச்சியோ டொழிவதாம்; ஆகவே, அவ்வூன் றின்னல் பின்னரும் அவனுக்குத் தீவினை யுண்டாக்காதென்று நீ கூறி; வெவ்வினையைத் துடைத்தாய் - அத் தீவினையில்லை என்றாய்; தேவன்கண் வைத்த சிரத்தை - அங்ஙனமாயின் நீ நின்னிறைவன்பாற் கொண்டுள்ள அன்பு வழிபாடும்; இன்பம் ஆதலின - உனக்கு அப்பொழுதே இன்பந் தருதலாலே; செயல் அன்று - அதுவும் பின்னர் நல்வினையை ஆக்காது என்று கொள என்றாள் என்க.

(வி - ம்.) இது, ''பூவினைக் காட்டலென்'' என்னும் செய்யுளாற் கூறப்பட்ட குற்றம் நீக்குகின்றது.

மொக்கலன் ''ஒருவன் செய்த வினை தன்பயனை நுகர்வித்துழி ஒழியுமாதலின் உயிரினங்களைக் கொன்றவன் அவ்வினையின் பயனாகிய ஊனை உண்டுழி ஒழிவதாம்; பின்னும் அவனுக்குத் தீவினை உளதாம் என்பது பேதைமையாம்!'' என்றானாக, அதுகேட்ட நீலகேசி அங்ஙன மாயின் நீ இறைவழிபாடு செய்யும் காலத்தே அஃது இன்பந்தருதலின் அது நல்வினையுண்டாக்கும் என்பதும் பேதைமையே என்று கொள் என்றாள் என்க.

பயன் - வினையின் பயன். அஃது இன்பமாகலின் என மாறுக. இது, பயன் என்றதற்கு ஏதுக் காட்டியபடியாம்.

நீயும் - நீங்கும். அஃதின்பமாதலின் என்றது வினை நீயும் என்ற தற் கேதுக் காட்டியபடியாம். சிரத்தை - ஆகுபெயராய் வழிபாடு குறித்து நின்றது. சிரத்தை இன்பமாதலின் என ஏதுவைப் பின்னரும் கூட்டிக் கொள்க. (எகூ)

௩௪௦. கன்றிய காமந்துய்ப் பான்முறைக் கன்னியை
யென்றுகோ லெய்துவ தோவெனுஞ் சிந்தையன்
முன்றினப் பட்ட முயன்முத லாயின
நின்றன வுந்தின நேர்ந்தனை, நீயே.

(இ - ள்.) கன்றிய காமந்துய்ப்பான் - ஏடா! நீ காமவின்பம் நுகர்வானுக்கு முறையல்லாதாளிடத்தே காமவுள்ளம் பிறவாத வாறு போலச் சான்றோர்கள் ஊனுண்பாராயினும் உயிர்க் கொலை செய்தற்குடம் படுவாரல்லர் என்பாயாயின்; முதிர்ந்த காமவுள்ளத் தாலே களவின்கண் காமவின்பந்துய்க்கு மொருவன்; முறைக் கன்னியை - அவ் வின்பத்திற்குக் காரணமான முறைமையை யுடைய அக் கன்னியை; எய்துவது என்று கொலோ எனும் சிந்தையன் - யாம் அடைவது எந்த நாளிலே கை கூடுமோ என்று வேணவாக்கொள்ளும் நெஞ்சினன் ஆதல் போலே; முன் தினப் பட்ட முயல் முதலாயின - நின்னால் முன்பு தின்னப்பட்ட முயல் முதலாயினவற்றின் நீ கண்ட சுவை காரணமாக; நின்றனவும் தின நேர்ந்தனை - எஞ்சி உயிர்வாழ்கின்றவற்றையும் தின்பதற்கு வேணவாக் கொண்டிருப்பாய் என்பது தேற்றம் என்றாள் என்க.

(வி - ம்.) இது, "தின்ற புலால் கொலை நேர்விக்கும்' ......ற்று.

இனிச் சான்றோர் ஊனுண்ணினும் கொலை வினையார் சாலாதாரும் தீவினையாளரும் ஊனுண்ணிற் கொலை நினைப்பர் என்பதும்போந்தமை யுணர்க. அன்றியும் முறையில்லாதாளுழைக் காமவுள்ளஞ் செல்லா தென்பது யாதினாற் பெற்றனை?

"ஈன்றாள் மகள்தன் னுடன்பிறந்தா ளாயினும்
சான்றார் தமித்தா வுறையற்க வைம்புலனுந்
தாங்கற் கரிதாக லான்'' (ஆசாரக்கோவை-௬௫)

என வருமிதனை நீ கேட்டுமறியாயோ? இதனால் காமநுகர்ச்சியில்லை யென்பதல்லது உள்ளம் செல்லுமென்று கொள் என்பதாம்.

இனி, நல்லோர்களுக்குச் செல்லாது முறையலுழிக் காமவுள்ள மெனின், அறியாது சொல்லினை; சான்றோர் என்றும் புலவர் என்றுஞ் சொல்லுவது நல்லோரையன்றோ? அன்றியும் நீ ஓவியத்திலும் பெண்டிர் உருவத்தைக் காணலாகாதென்றது, காணின் காம உள்ளம் பிறக்கு மென்றன்றே? மகளிருறுப்பு எற்புச் சட்டகம் என்றும் முடைக்குரம்பை யென்றும் சிற்றுறுப்பும் பேருறுப்பும் என்பு வேறுபாடுஞ் சொல்லித் தூய வல்லாமை சிந்திப்பது அவர்பாற் காம வுள்ளம் பிறவாமைக்கன்றே என்பதாம்.

இன்னும் கடையிற் கொண்டு வாழைப்பழமுதலாயின தின்ற வனுக்குக் குலையோடு பழுத்துநின்ற வவற்றைக் கண்டாலுள்ளஞ் செல்லாதோ? கடையிற் பூக்கொண்டு சூட்டினால், கோடுமுதலாயின வற்றுப் பூக்கண்டாலுள்ளஞ் செல்லாதோ? இம்மயக்கவுரையாற் பயனென்னை? என்பதும் கொள்க. (எச)

௩சக. தூய்மையி லாமுடை சுக்கில சோணித
மாமது போன்மேனி ளான்முலைப் பாலன்ன
தூய்மைய தன்றது சோல்லுவன் சோர்வில
வாம னுரைவையந் தன்னொடு மாறே.

(இ - ள்.) தூய்மையிலா முடை - தூய்மையில்லாத ஊன்; சுக்கில சோணிதம் ஆம் - சுக்கில சோணிதபரிணாமம் ஆகும் என்று யாங்கள் ஊன் உணவிற்குக் குற்றங் கூறின்; ஆன்முலைப் பால் அது போனம் எனின் - நீ 'அங்ஙனமாயின் ஆவின்முலையி னின்றுங் கறக்கப்படும் பாலும் அவ்வூன்போலத் தூயதன்றாதல் வேண்டும்' என்று கூறுகின்றாய் அங்ஙனம் கூறின்; அது அன்னது தூய்மையது அன்று சொல்லுவன்-யான், அவ்வூன் அப்பாலினது தூய்மையுடையது அன்று என்று கூறுவேன்; சோர்வில வாமன் உரை வையந்தன்னொடு மாறு - நின்கூற்று குற்றமற்றனவாகிய நின்னிறைவன் புத்தன் மொழிக்கும் சான்றோர் மொழிக்கும் முரணுகுங்காண் என்றாள் என்க.

(வி - ம்.) இது "சுக்கில சோணிதமே"......ற்று.

மொக்கலன் "ஊன் தூய்மையில்லாததெனின் ஆன்பாலும் ஊனி னின்றும் பிறத்தலிற் தூயதன்றாம்," என்றாகை, அதற்கு நீலகேசி "ஆன்பால் ஊன்போலும் என்பது, உலகமலைவாம். புத்தன் மொழிக் கும் முரணும்," என்றாள் என்றவாறு.

இன்னும், "நுனையபுழுக்கு வந்த.........என்னலுமாமே" எனவும், ஊனைத்தூயதன்று எனவும் பாவிக்கின்ற நீதானும் பாலை அவ்வாறு சொல்கிலை. என்னை?" ஆன்முலைப்பாலினை எக்குலத்தார் எத்தவத்தார் இழிக்கின்றார் என்று சொல்வினையாதலால் ஊனே யாவராலும் பழிக்கப்படுகின்றது. நின்னை யொழிய ஊனுண்பாரும் அது தூயது என்றுரைவினையார். உலகத்தார் விலக்கப்பட்டதென்று வாலாமையுடைத் தாகக் கொள்கின்றதும் ஊனையன்றோ? மேலும்,

"தம்புண் கழுவி மருந்திடுவர் தாம்பிறிதின்
செம்புண் வறுத்த வறைதின்பர்" (அறநெறிச்சாரம் கள)

எனவும்,

"உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்" (குறள்-உருஎ)

எனவும் சான்றோரால் ஊன் பழிக்கப்படுதலும் காண்க.

"விலைப்பாலிற் கொண்டுன் மிசைவதூஉங் குற்றம்" என்பன முதலியவற்றால் ஊனுண்ணல் தீவினையாம் என அச்சான்றோரோதுதலுங் காண்டி! இத்தகைய ஊனோடு ஆன்பாலை ஒப்பவினைப்பது உலக மலைவாம்.

இனி, சுக்கில சோணிதத்தால் வந்த ஊன்போலவே பாலும் அவற்றினின்றும் வருதலாற் றூயதன்றாம் பிறவெனின், அற்றன்று.

பால் ஊனால் வருவதன்று. ஆவாற்றின்னப்பட்ட புல்லும் தண்ணீருமே பாலாய்ப் பரிணமிப்பது. என்னை? வேப்பிலை முதலாயின தின்ற ஆவின்பால் கைப்பதூஉம், சோறு முதலாயின தின்ற ஆவின்பால் பெரிதும் சுவைப்பதும், தாய் மருந்துண்ண அவள் முலைப்பாலுண்ட பிள்ளைக்குப் பிணி தீர்வதும் பிறவுங் காணப்படுகின்றமையின் என்பதாம்.

இனி, ஊனிற்பிறந்த பாலும் ஊனும் பிறவெனின், சேற்றிற் குவளை போலவும், கடலுண் முத்துப் போலவும், மண்ணின் மரம் போலவும், தலையின் மயிர்போலவும் ஊனிடமாகப் பிறந்ததே யெனினும் பால் ஊனின் வேறென்று கொள் என்றாளுமாயிற்று. அன்றியும் ஊனிற்பிறந்த பால் ஊனெனின் முலைப்பாலுண்பாரும் ஆன்பால் குடிப்பாரும், மாந்தருனும் ஆவினூனும் தின்றாராகல் வேண்டும். ஆதலால் உலகமலைவாம் என்றாளுமாயிற்று.

இனி, தோலிற்பட்ட நெய் முதலாயின ஒழித்தல் போன்று ஊனிற்பட்ட பாலுமொழிய வேண்டும் எனின், உயிரோடு கூடிநின்ற உடம்பிலுள்ள ஊன் தூயதேயாம். என்னை? உள்ளங்கைப்பட்ட நீர் பிணத்தின் கைபட்ட நீர் போன்று தூயதன்றெனக்கொள்ளப்படாமையானென்க. அன்றியும், ஆவின் சாணமும் மூத்திரமும் பாலும் தூயபொருளென்றே உலகத்தாராற் கைக்கொள்ளப்படுதலும் காண்டி! ஆதலால், ஊனோடு பாலை ஒப்புரைத்தல் உலகமலைவாம் என்றாளுமாயிற்றென்க. (௪௩)

௩௪௪. மேன்மக்க ணஞ்சோடு கள்வரைந் தாரது
போன்மக்க ளாரும் புலால்வரை யாரேனிற்
றூன்மெய்க்க ணின்ற தவசிமற் றெங்குள
னூன்மெய்க்கோண் டுண்பவ னுன்னல தென்றாள்.

(இ - ள்.) மேல்மக்கள் நஞ்சொடு கள்வரைந்தார் - ஏடா! நீ சான்றோரெல்லாம் நஞ்சுபோல்வதென்று கருதிக் கள்ளுண்ணலைத் தவிர்ந்தனரல்லரோ?; அதுபோல் மக்கள் யாரும் புலால் வரையார் எனின் - அதுபோலச் சான்றோர் பலரும் புலாலூண் துறந்திலரே ஆதலால் புலாலுண்ணல் தீவினையன்றென்பாயாயின்; மெய்க்கண் நின்ற தவசி - உண்மையின்கண் நிலைபெற்ற துறவியாவர் உலகத்துச் சான்றோர் எல்லாம்; உண்மையான துறவியருள் வைத்து ஒரு துறவி; ஊன் மெய்க் கொண்டு உண்பவன் - ஊனாகிய உடம்பினை உணவாகக் கருதி உண்பவன், உன் அலது - உன்னையல்லால்; எங்குளன் - யாண்டிருக்கின்றான்; இருந்தானாயிற் காட்டுதி என்றாள் என்க.

(வி - ம்.) "உள்ளங் கொள்ள"......ற்று.
கள் நஞ்சு போல்வது என்பதனை,

"துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்" (குறள் - ௯௨௬)

என வருந் திருக்குறளானுமுணர்க.

மேன்மக்களால் ஊன் துறக்கப்பட்டதில்லை யெனின் மேன்மக்க ளெல்லாம் துறவியராகார், துறவோருள் உன்னையல்லால் பிறர் ஊனுண்போருளரோ! என்றவாறு.

இனி, ஊனுண்ணும் மேன்மக்கள்தாமும் அதனை நன்றென்று கருதி உண்பதிலர். என்னை! அவர்தாமும், ஏகாநசி முதலிய நன்னாளுள்ளும் பிறவற்றுள்ளும் ஊன் வரைதல் காண்டி என்றுளுமாயிற்றெனக.

இனி, எல்லாமாந்தரும் கள்வரைந்தார் என்று சொல்லிய தென்னை? மூவகைப் பௌத்தருள்ளும் சிராவகயானத்தாராகிய நீங்கெளொழிய மகாயான மந்திரயானத்தார் யாவரும் கள்ளுண்பது நீ யறியாயோ? மற்றும் கள்ளுண்பாரை நீ யறியாயோ? எல்லாரும் ஒக்க ஊன் வரைந் திலரென்று நீயும் ஊனுண்பாயாயின், எல்லாரும் ஒக்கக் கள் வரைந் திலர் என்று நீயும் கள்ளுண்ணுதவாறு என்னையோ? என்பதுங் கொள்க.

ஆதலால், 'கள்ளொடு நஞ்சினைப்போற் கடிகிற்றீர்' என்று அறியாது சொல்லினை என்பது குறிப்பாயிற்றெனக. (௭௬)

௩௪௩. பார்ப்பனி யோத்துநின் னோத்தும் பயமெனி
னீப்பவுங் கோள்பவு நேர்து மவையவை
தூப்பெனு மில்லன வேசொல்லி நிற்குமோர்
கூர்ப்பினை நீயென்றுங் கோளிலை யென்றாள்.

(இ - ள்.) பார்ப்பனி ஓத்தும் நின் ஓத்தும் பயம் எனின் - மொக்கலனே! பார்ப்பனி நூலும் உன்னுடைய நூலும் எமக்கு அளவை நூல்களாகப் பயன்படுவனவாயினன்றே; நீப்பவும் கொள் பவும் அவை அவை நேர்தும் - அப்பார்ப்பனி நூலால் விலக்கப் பட்ட தாதுவை முதலாயினவும் நினது நூலாற் கொள்ளப்பட்ட ஊன் முதலாயினவும் எமக்கும் விலக்குவனவும் கொள்வனவுமாகக் கொள்வேம்; நீ தூப்பு எனும் இல்லனவே சொல்லி - நீ வாய்மை யாகிய தூய்மை சிறிதும் இல்லாத பொய்ம் மொழிகளையே சொல்லி; நிற்கும் ஓர் கூர்ப்பினை - அதன்கண்ணே நிற்கின்ற ஒரு கூர்மை யுடையையல்லது; கோள் என்றும் இலை என்றாள் - சிறந்த கொள்கையினை எப்பொழுதும் உடையையல்லை காண்! என்றாள் என்க.

(வி - ம்.) இஃது "ஓதின வுண்பாராவது நன்றெனி"......ற்று. பார்ப்பனி ஓத்து - பார்ப்பன மாக்களுடைய நூல். அது விலக்குவன தாதுவை முதலாயின என்க. நின்னோத்து என்றது பிடகநூலை. தூப்பு. தூய்மை. எனும்-சிறிதும். தூப்பு இல்லன-பொய். கோள்-மேற்கோள்.

யாங்கள் பார்ப்பனி ஓத்தும் நின்னோத்தும் கொள்கிலேம் எனவே, யாங்கள் சைனாகமத்துச் சொன்னவாறே செய்வேம் என்பது குறிப் பாயிற்று. நீப்பவும் கொள்பவும் என்னுமிரண்டும் பலவறி சொற்கள். அவை அவை - அவ்வந் நூலிற் கூறப்பட்ட விதிவிலக்குக்கள். (௭௭)

௩௪௪. தூவினி னுண்புழுத் துய்ப்பனென் றுமையிற்
றீவினை சேர்ந்திலன் றின்பவ னென்னினு
மோவென முன்விலை வாணிக ரென்றினர்
மேவினர் தாம்விலை யேவினை வேண்டார்.

(இ - ள்) தின்பவன் தாவினின் நுண் புழுத் துய்ப்பன் என்றுமையின் - ஊனுண்பான் அவ்வூனின் கண்ணதாகிய நுண்ணிய புழுக்களைத் தின்பேன் என்னுங் கருத்தோடுண்ணுமையால்; தீவினை சேர்ந்திலன் என்னினும் - அப்புழுக்களைக் கொன்ற தீவினையடைந்திலன் என்பாயாயினும்; ஓ எனும் ஊன் விலை வாணிகர் என்று இனர் - ஓஓ என்னும் கூக்குரலோடே ஊன் விலைக்கு விற்கும் வாணிகரும் அவரன்னோரும்; தாம் விலை மேவினர் - தாங்கள் அவ்வூன் விலைப்பொருளிலே குறிக்கோளுடையரன்றி; வினை வேண்டார் - உயிரினங்களைக் கொல்லுதலில் குறிக் கோளுடையரல்லர்; எனவே அவரும் தீவினை யடைவாரல்லர் எனல் வேண்டும் என்றாள் என்க.

(வி – ம்.) இது "சீவன் பரிணமித்தம்"......ற்று.

இது, நாதகுத்தனார் "புழுக்குலந்தம்மால் நுகரவும் வாழவும் பட்ட வினையவுடம்" பென ஊனின்கண் உயிர்கள் தோன்றுவது நீயே சொல்லி அது தின்றால் அன்பிலை; தீவினையாகாதோ? என்றார்க்கு உயிர் தசையினுள் தோன்றும் எனில் அன்று என்று முன்னுக்குப்பின் முரண் படக் கூறுவாய் என்பாள் தின்பவன் தீவினை சேர்ந்திலன் எனினும் என உம்மை கொடுத்தோதினள்.

உயிர்க் கொலையால் பொருள் தேடுதலின் அவர்க்குத் தீவினையுள தாம் என்று நீயே கூறுவாய்; உயிர்க்கொலையால் ஊனுண்ணலின் உனக்குந் தீவினையுளதென்று கொள் என்பது கருத்து. அன்றியும், புலி முதலிய கொடுவிலங்குகளும் ஊனுண்ணவேண்டும் என்னுங் கருத்தால் உண்பதல்லது, உயிர்களைக் கொல்லவேண்டும் என்னுங் கருத்தாற் கொல்கில வாதலின் உன்னைப்போல அவற்றினுக்குந் தீவினை இல்லை என்பதுஞ் சொல்லுக என்றாளுமாயிற்று.

அஃதே யெனின், பொருளாசையாலே ஆறலைப்ப மாண்டவனது ஊனைத் தின்ற காகமுதலாயினவற்றிற்குக் கொலைத் தீவினையுண்டா மாறென்னெனின்; அவற்றிற்கும் கொலையுடன்பாடுண்மையிற் றீவினையாம் என்க.

தின்பவன் தாவினின் நுண்புழுத் துய்ப்பன் என்றுமையின் என மாறுக. மேவினர் - விருப்பமுடையோர். அவ்வூன் விலைப்பொருள் பெறுதலிலே மட்டும் குறிக்கோளுடையர் என்பது கருத்து.

தூ-தசை. துய்ப்பன் என்னுங் கருத்தால் உண்ணுமையின் என்க. ஓ - கூக்குரல். பண்டமாற்றின்கண் வணிகர் எடுக்கும் ஓ என்னு மொலி. இனர் - இத்தகையோர். (எஅ)

௯௪௫. அடங்கிய வம்பு பறித்தன் முதலா
வுடங்குசெய் தார்வினை யொட்டல ரென்பாய்
மடங்கினர் வாழ்க வெனுமாற் றார்போற்
சடஞ்சொல்லித் தின்பதிங் கியார்கட் டயாவோ.

(இ - ள்.) அடங்கிய அம்பு பறித்தல் முதலா உடங்கு செய்தார் - ஒருவனது உடம்பிற் புகுந்தடங்கிய அம்பினை அவ்வுடம்பை அரிந்து வாங்குதல் முதலாகிய செயல்களைச் செய்யுங்கால் அம்புபட்டோன் முதலானவர் இறப்பாராயின், ஒருமித்து அக் கொலையைச் செய்தவர் அத் தீவினையை எய்தாராதல்போல; வினை ஒட்டலர் என்பாய்-ஊன்றின்பாரும் தீவினை எய்தார் என்று கூறுவாய்; மடங்கினர் வாழ்க எனும் ஆற்றார் - அம்புவாங்குதல் முதலியன செய்வோர் அமபு முதலியவற்றால் துன்ப முற்றோர் பின்னும் வாழ்க! என்னும் அன்பு நெறிக்கண்ணின்று செய்பவராவர்; போல் சடஞ் சொல்லி தின்பது - யாமும் அவர்போல என்று அறியாமையுடைய மொழியைக் கூறி நீ ஊன் தின்பது; யார்கண் தயாவோ - யாரிடத்துக் கொண்ட அன்போ? யாமறிகிலேம் என்றாள் என்க.

(வி - ம்.) இஃது "ஒழிந்த படைபறித்தலென்"......ற்று.

இனி உடலின்கண் அடங்கிய அம்பு அரிந்து வாங்குதலே, ஓடு விழுங்கின பிள்ளை மிடற்றுட் கையிட்டு ஓடுவாங்குதலே, கழலை முதலாயின கருவியிட்டறுத்தலே, என்றிவை செய்வுழி ஒருவன் மாண்டால் அவர் அவன் சாவிற்குக் காரணமாயினாரேயெனினும் அவர்க்குத் தீவினை ஆகாதவாறுபோல ஊன் தின்பானுக்கும் தீவினையுளதாகாது என்று மொக்கலன் கூறினாக, அதுகேட்ட நீலகேசி "ஏடா? அம்பு வாங்குந் தாய் முதலாயினோர் இவ்வுயிரைப் பாதுகாக்க வேண்டும் என்னுங் கருத்தினால் தீர்வு பண்ணும் வழி மிகையால் அவன் இறந்தவாறு போலவே, நீ ஊன் தின்று அந்த உயிரைப் பாதுகாக்கப் புக்கு அவ்வுயிர் மிகையாலிறந்ததோ? அருளினாலும் அன்பினாலுந் தாய் முதலாயினோர் அத்துன்பங்கட்குத் தீர்வு பண்ணிச் சாவாமற் கொள்ளுமாறுபோல நீ அருளால் ஊன் தின்று உயிர்களைச் சாவாமற் பாதுகாக்கின்றனையோ? இந்த அறிவிலா மொழி கூறிப் புலால் தின்று என்ன அருள் முடிக்கின்றாய் என்றிகழ்ந்தாள் என்க.

இனி, கொலைக் காரணமாகை இருவழியும் ஒக்குமேயெனின், தீர்வுச் செயல்களால் உயிர்கள் மீண்டும் வாழ்தலுங் கூடும்; ஊன் தின்னல் உயிர்களுக்குச் சாவினையே செய்யும் என்று கூறி விடுக்க.

அஃதொக்கும்; இனி, பிணந் தின்பார்க்குப் போலப் பிணஞ் சுடுவார்க்கும் தீவினையாம் பிறவெனின், ஆகாது; என்னை? பிணஞ் சுடுவார் தமக்கொரு பயன் இன்றி இறந்தவன்பால் அன்புடைமையாலே அந்த உடல் நாய் முதலிய விலங்குகளாலும், காக முதலிய பறவைகளாலும் பௌத்தர் முதலிய தீவினையாளர்களாலும் தின்னப்படின், அவர்க்கு

மாந்தருள் மிசை அவாப் பிறந்து அதனால் மாந்தர் கொலை பிறப்பதோ? என்னும் அச்சத்தாலும், அஃது இறந்த வுடம்பிற்குச் செய்யும் வழிபாடாகலானும், பிணஞ் சுடுதல் கொலைக்குக் காரணமாகாமையானும், பிணத்தினைச்சுட்டழியாதவழி உலகு பழி தூற்றுதலாலும், தீவினை வருதலாலும், இறந்தவனுடைய மக்கள் முதலிய உறவினரால் மந்திரத் தீ தோற்றுவித்துப் பின்னும் வழிபாடுகள் பலவும் பண்ணி, கங்கை யாறு முதலான யாற்றுநீரிலிடப்படுகின்றது. அன்றியும் மெழுகாற் செய்யப்பட்ட உருவத்தைப் பொன்முதலியவற்றாற் படிவம்செய்யுங் கால் அழிப்பவர்க்குத் தீவினை வாராதவாறுபோலே இறந்தார் மேலன்பா லழித்தலின் அவர்க்குத் தீவினையுளதாகாதென்க. எனவே, இதனை நினது புலாலுணவோடு கூட்டியுரைப்பதும் சடவுரையாம் என்றுளாயிற்று. சடவுரை—அறிவொடு பொருந்தாத மயக்கமொழி. நெஞ்சறி கொடுமைமொழியுமாம். (எக)

௩௭௬. தின்னு மனமுடைப் பேயெய்துந் தீவினை
மன்னு மிகவுடைத் தாய்வினைப் பட்டில்லா
ளென்னு முரைபெரி தேற்கு மிகழ்ச்சி
தன்னை வினைப்பட நீசொல்லி னையால்.

(இ - ள்.) தின்னும் மனம் உடைப் பேய் தீவினை எய்தும் - ஒரு பிள்ளையைப் பேயும் தாயும் பற்றி இழுக்குங்காலத்தே அப் பிள்ளை இறப்பின் அப் பிள்ளையைத் தின்னும் மனமுடைய பேயே கொலைத் தீவினை எய்துவதாம்; மன்னும் மிக உடைத் தாய் - அப் பிள்ளை உயிரோடு நிலைத்திருப்பதற்கு விருப்பம் பெரிதும் உடைய தாய்; வினைப் பட்டில்லாள் - தீவினை அடைந்திலள்; என்னும் உரை பெரிது ஏற்கும் - என்று கூறும் மொழி மிகவும் பொருந்தும்; நீ தன்னை வினைப்பட சொல்லினாய் - மற்று நீயோ கொலைக்குக் காரணமாகாத தாயையும் அக் கொலைக்குக் காரணம் ஆகக் கூறினாய்; இகழ்ச்சி - இம் மொழி நினக்கிழிவாம் என்றுள் என்க.

(வி - ம்.) இது, 'பேய் பெற்ற தாய் பற்று''......ற்று.

தினற்பொருட்டாக ஒருபால் பேய் பற்றியிழுக்கவும், காத்தற் பொருட்டாக மற்றொருபால் தாய் பற்றியிழுக்கவும் பிள்ளை இறந்த வழித் தாய்க்குத் தீவினையில்லாதவாறுபோலத் தின்பார்க்குக் கொலைக் காரணமுண்டேயெனினும் தீவினையில்லையெனின், தாயும் பேயும் பற்றி யிழுத்தாரேனும் தின்னும் விருப்பமுடைய பேயே கொலைக்குக் காரணமாகித் தீவினை பெற்றவாறுபோல, தின்னும் விருப்பமுடைய நீயே கொலைக்குக் காரணமாகி அத் தீவினையைப் பெறுதி; மீனுண்மை முதலாயின சொல்லிய வெல்லாம் கொலைக்குக் காரணமல்லவென்பதும் இதனால் நீ சொன்னையாகின்றாய் என்றவாறு.

அஃதே யெனில், தின்னு மனமுடையார்க்குத் தீவினை வந்தவாறு போல, தண்ணீர் குடிக்கும் மனமுடையராகித் தண்ணீர்ப்பந்தரில் குடித்தார்க்கே நல்வினையாம் பிறவெனின், அற்றன்று; தண்ணீர் வைத்தானை இந்த நீரறுங் காட்டகத்தே தண்ணீர் வைத்தான் அறவோன்

என்று - வாழ்த்தித் தண்ணீர் வைத்தற் குடன்பட்டுக் குடிப்பர். அவ்வாறே ஊன் றின்பானும் கொன்று கொணர்ந்தானை இந்த ஊன் அறுங்காலத்தே ஊன் கொடுவந்தானென்று உவகை செய்து கொலைக் குடன்பட்டுத் தின்பனுதலின் உடம்பாட்டா லிருவருக்கும் நிரலே நல்வினையும் தீவினையுமாம் என்பதாம்.

ஊனுண்பேமாயினும் எமக்குக் கொலையுடன்பாடில்லை யெனின் உங்களை யொழிய வேறு ஊன்றின்பார் யாவர்க்கும் கொலையுடன் பாடேயாம். இனி உயிரின் இறப்பினை யொழியக் கிடைக்கப் பெறாத ஊனைத் தின்னு மெமக்கு அவ்வுயிர் இறப்பின்கண் உடன்பாடில்லை யென்று சொல்லுவது, என்போலுமோ எனின், காமவுள்ளத்தாலன்றி நிகழப் பெறாத மாதரைத் தழுவுதல் முதலியன செய்தேனே யெனினும் எனக்குக் காமவுள்ளமில்லை யென்றொருவன் சொல்லு மதே போலும் என்பதாம்.

கொலையால் வருமூனைக் கொண்டுண்ணும் புத்தன் கொலையுடன் பாடின்றென்று கூறல் 'கலையகல்குல், கட்டிக்கிடந்தேனே யாயினுங் காமநோய், எட்டுணையு மின்றெனக்கென் றற்று' என்க. (௮௦)

௩௭௭. அறஞ் சொல்லக் கொள்ளு மறமென் றறிந்தாங்
கறஞ்சொல்லி னோர்க்கற மாமென் றறியாய்
புறஞ்சொல்லி தன்று புலால்குற்ற மென்று
துறந்தொழிந் தாற்கொலை துன்னினர் யாரே.

(இ - ள்.) அறம் சொல்லக் கொள்ளும் அறம் என்று அறிந்து - யாம் நல்லறம் கூறின் இவன் அதனை ஏற்றுக் கொள்வன் என்றுணர்ந்து; அறஞ் சொல்லினோர்க்கு அறமாம் என்று - அறங் கூறினோர்க்கும் நல்வினை உளதாம் என்று சொல்லி அங்ஙனமே அறங் கூறுகின்றனை; புலால் குற்றம் என்று - அத்தகைய நீ புலாலுண்ணல் தீவினையாம் என்று பிறர்க்கு அறிவுறுத்தும்; துறந்து ஒழிந்தால் - நீயும் அப்புலாலுணவைத் துறந்து விட்டால்; இது புறஞ் சொல் அன்று - அங்ஙனம் துறத்தலால் உனக்குப் புறங் கூறுதலும் உளதாமோ; யார் கொலை துன்னினர் - அங்ஙனம் அறங்கூறின் யாரே கொலைத் தீவினை எய்துவர் என்றாள் என்க.

(வி - ம்.) போன செய்யுள்களால் அவன் ஊன் வேண்டிச் சொன்ன குற்றங்கள் நீக்கி இதனால் அவனுக்கு அறங்கூறுகின்றாள்.

பிறர்க்கு அறங்கூறினோர்க்கும் நல்வினையுண்டென்று சொல்லி நீயும் கள்வன் முதலாயினோர்க்கும் அறங்கூறிக் கொலை முதலாய தீவினைகளை ஒழிக்கின்றாய். நீயும் ஊனுண்ணாது பிறர்க்கும் உண்ணலாகாதென்றுஞ் சொல்ல உலகத்தார் கொலை யொழிவர், அதனால் இது செய்தற்கண் வரும் குற்றமுண்டோ? தின்னப்படாத குதிரை முதலியன கொலையுண்ணாமையுங் கண்டாமன்றோ? ஊனூண் துறத்தலின் உனக்கு வரும் புறஞ்சொல்லுமுளவோ? இஃதொழிய நின்

செயல் நடவாதோ? இதனை யொழி! இஃதொழியாயாயின் நீ கொலை விலக்கினதூஉம் பொய்யேயாம்; என்பது கருத்து.

அஃதேல் நீ ஊனூண் ஒழிந்ததற்காக உலகின்கண் கொலை ஒழிந்தின்மையின் தின்னல் அமையாதோ! எனின், நீ கள்ளுண் துறக்கவும் உலகில் கள்ளாக்குதல் ஒழிந்ததோ? நீ கொலையொழியவும் கொலையொழிந்ததோ? ஒழிந்ததில்லையெனின், நீயவை செய்தவாறென்னோ, என்பதாம். (அக)

கூசஅ. அறந்தலை நின்றுங் கருளோடு கூடித்
துறந்தனன் யானென்னுஞ் சொல்லு முடையாய்
மறங்கொண்டி துண்டேன்னை மன்னுயிர்க் காமே
சிறந்ததுண் டோவிது சிந்தித்துக் காணாய்.

(இ - ள்.) யான் அறந்தலை நின்று - ஏடா! நீ தானும் யான் புத்தனார் கூறிய நல்லற நெறியிலே நிலைபெற்று நின்று; அருளொடு கூடி - அவன் வீடுபேற்றிற்குக் காரணமாகக் கூறிய அருளோடே பொருந்தி; துறந்தனன் என்னும் சொல்லும் உடையாய் - ஏனையவற்றை யெல்லாந் துறந்துவிட்டேன் என்று சொல்லுதலுமுடையை; மறங்கொண்டு இது உண்டு என்னை? - அங்ஙனம் சொல்லும் நீ தீவினை நயந்து இவ்வூன் உணவை யுண்பதனால் நீ பெறுகின்ற உறுதிப் பொருள்தான் யாதோ?; மன்னுயிர்க்கு ஆமே - அன்றி உயிர்களின்பால் அருள் செய்தலுமாமோ?; சிறந்தது உண்டோ - அன்றி இதனால் வரும் சிறப்புத்தான் வேறு ஏதேனும் உண்டோ?; இது சிந்தித்துக் காண் - இதனை நன்கு ஆராய்ந்துபார்! என்றாள் என்க.

(வி - ம்.) நீ உயிருடன் பகை கொண்டு ஊனுண்டு உறுதிப் பொருள்களுள் யாது பெறுகின்றனை? யாங்களே உயிரினங்கட்குச் சிறந்த உறவினர் ஆவேங்காண்! நீயும் மைத்திரி பாவிக்கின்றாயன்றோ? பார்வையாக வளர்க்கப்பட்ட விலங்கு முதலியன செத்தாலும் அவற்றின் ஊனை உண்பார் வேடருள்ளும் யாருமிலரே. நீ நின்னாலன்பு செய்யப்பட்ட உயிரினங்களின் ஊனைத்தின்பது தகுவதோ? நீ தாது வினைத்தொழுவது அவை புத்ததாது என்றன்றே? நீ தின்கின்ற ஊன் புத்தனூன் அல்லவென்று யாதினாற் பெற்றாய்? முயல் முதலாயினவாகப் பிறந்து பாரமிதை நிறைக்கும் எதிர்காலப் போதிசத்துவரும் பலரல்லரோ? பெரும் பகையுடையார் தம் பகைவன் இறந்துழி அவனது பச்சூனைத் தின்பதறியாயோ? ஒருயிரின் ஊனைத்தின்பவன் அதற்குப் பகைவனல்லனோ? இவையெல்லாம் ஆராய்ந்துணர்கவென்பாள் 'சிந்தித்துக்காண்' என்றாள். (அஉ)

இஃது ஆசிரியர் கூற்று

கூசகூ. பேயோப்ப நின்ற பிணங்கிக்கண் டார்க்கேனு
மாயத்தி னானுண்ண மன்னு மருமையி
னாயோப்பச் சீறி நறுநுத லாளோடு
காயக் கிலேசத்திற் கட்டுரைக் கின்றான்.

(இ - ள்.) பேயொப்பப் பிணங்கி நின்று - இவ்வாறு மொக்கலன் பேய் போன்று நீலகேசியோடு மாறுபட்டு நின்று; கண்டார்க்கு மாயத்தின் - தன்னை ஆசிரியனாகக் கண்டவர்க்குத் தனது பொய்யுரையாலே; எனும் ஊன் உண்ண மன்னும் அருமையின் - சிறிதும் ஊன் உண்ணப் பொருந்துமாறு காட்டுதல் தனக் கரியதாகலாலே; நறுநுதலாளோடு நாய் ஒப்பச் சீறி - நறிய நுதலையுடைய அந்நீலகேசியை நாய்போலச் சினந்து; காயக்கிலே சத்தில் - ஆருகதர் மேற்கொள்ளும் காயக்கிலேசத்திற்குக் குற்றங் கூறத் தொடங்கி; கட்டுரைக்கின்றான் - பொய்யுரை பல கூறுகின்றான் என்க.

(வி - ம்.) உலகத்தார் உண்டென்பதில்லென்றலின் பேயொப்ப நின்று என்றார். என்னை ?

"உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்" (குறள் - அ௫0)

எனவரும் திருக்குறளும் காண்க.

கண்டார் என்றது தன்னை ஆசிரியனாகக் கண்ட தமர்க்கு என்றவாறு. எனும் - சிறிதும். மாயம் - பொய்.

பிறரைக் கண்டுழி நாய் காரணமின்றியே சினத்தலின் நாயொப்பச் சீறி என்றார். நறுநுதலாள் என்றது நீலகேசியை. கட்டுரைத்தல்—ஈண்டுக் கட்டிக் கூறும் பொய்யுரைத்தல் என்பதுபட நின்றது. காயக்கிலேசம் உண்ணாமை முதலிய விரதங்களால் உடலுக்கு வரும் துன்பத்தைப் பொறுத்தல். (அரு)

மொக்கலன் கூற்று

வேறு

கூ௫௦. வெயிறெறவ் வுணங்கியும் வெள்ளிடைந் நனைந்துமூன்
பயிறலிற் பட்டினிகள் விட்டுமின்ன கட்டமாய்த்
துயிறுறந் திராப்பகற் றுன்பவெங் கடலினார்க்
கயிறெறுநெ டுங்கணா யாவதில்லை யல்லதும்.

(இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்)

(இ - ள்.) அயில் தெறும் நெடுங் கண்ணாய் - வேற்படையை வெல்லும் நெடிய கண்ணையுடையோய்!; வெள்ளிடை வெயில் தெற வுணங்கியும் - வெட்ட வெளியிலே நின்று நோற்றலாலே வெயில் மிகவும் சுடாநிற்ப வருந்தியும்; நனைந்தும்-மழையினும் பனியினும் நனைந்தும்; ஊன் பயிறல் இல் - ஊன் முதலியன உண்ணுதலில் லாத; பட்டினிகள் விட்டும் - பட்டினிகள் விட்டும்; இன்ன கட்டமாய் - இத்தகைய துன்பங்களோடே; துயில் துறந்து - உறக்கத்தையும் ஒழித்து; இராப் பகல் துன்பவெம் கடலினார்க்கு - இரவும்

பகலும் இடையறுது துன்பமாகிய வெவ்விய கடலிலே அழுந்திக் கிடக்கின்ற அமண்துறவோருக்கு; ஆவது இல்லை - இத்தகைய துன்பங்களாலே எய்தும் உறுதிப்பொருள் யாதென்றுமில்லையே, அன்றியும், என்க.

(வி - ம்.) இதுவும் அடுத்து வருஞ் செய்யுளும், "காயந்தன்னை வருத்தல் தவமென்பாய்" எனவும், "வெயினுணிற்ற"லெனவும் 'துன்பம் வேண்டி''லெனவும் வரும் இம்மூன்று செய்யுட் பொருளையும் தம் முளடக்கிகின்றன.

வெள்ளிடை - வெட்டவெளி. உணங்குதல் – வருந்துதல். ஊன் முதலியன பயிலுதல் இல்லாத பட்டினிகள் என்க. கட்டம்–துன்பம். இங்ஙனம் உடலை வருத்துதலாலே பயன் ஏதுமில்லை என்பான் 'ஆவதில்லை' என்றான். அயில் – வேல். (அச)

௩௫௪. காயம்வாட்டி யுய்த்தலிற் கண்டநன்மை யுண்டெனின்
தீயினாற் சுடுதலுந் தெற்றியேறி வீழ்தலு
நோயினாற் றிரங்கலுந் நோன்மையென்ன லாம்பிற
நீயுமா யிதற்கினி நேமியென்று சொல்லென.

(இ - ள்) அணாய்! - தாயே நீலகேசி!; காயம் வாட்டி உய்த்தலின் - இவ்வாறு உடம்பினை வருத்தி நோன்பு நடத்துதலாலே; கண்ட நன்மை உண்டு எனின் - யாங்கள் கண்ட நன்மைகளும் உண்டு என்பாயாயின்; தீயினால் சுடுதலும் - நெருப்பினாலே தம் முடம்பினைச் சுடுதலும்; தெற்றியேறி வீழ்தலும் - மேடையேறி லேறிக் கீழே விழுதலும்; நோயினால் திரங்கலும் - நோய்கொண்டு வருந்தி மெலிதலும்; பிற - இன்னோரன்ன பிற செயல்களும்; நோன்மை என்னலாம் - தவவொழுக்கம் என்றே சொல்லலாமே; நீ இதற்கு இனி நேமி என்று சொல்என-நீயும் இங்ஙனம் வருந்துவதற்கும் தவவொழுக்கம் என்றே பெயர் கூறுவாயாக என்று அசதியாடினன் என்க.

(வி - ம்.) உடலை வருத்துவதே தவமாயின் தீயினாற் சுடுதல் முதலியனவும் தவமாகிவிடும். ஆதலால் நீ இவற்றையும் தவமென்றே சொல்லுக என்று அசதி யாடியபடியாம். நேமி-நியமத்தையுடையது. அஃதாவது தவம் என்க. (அரு)

## நீலகேசி கூற்று

(இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்)

௩௫௫. புண்ணினைத் தடிதலும் பாழவாற்றி நிற்றலும்
கண்ணினைக் கழி[illegible]ளான் மீண்டிக்கொண்டு நீட்டலும்
விண்ணுயர் [illegible]வரைவ் வீற்றுவீற்று வீழ்தலும்
அண்ண[illegible]ந் செய்கையு மாவதில்லை யல்லதும்.

(இ - ள்.) புண்ணினைத் தடிதலும் போழ ஆற்றிநிற்றலும்- எடா! யாங்கள் நோற்புழி இயல்பாய் வருந்துன்பங்களைப் பொறுத்துக் கொள்வேம் அன்றி, புண்ணுண்டாக உடம்பினை வெட்டுதலும் உடம்பினை இருகூறுகப் பிளக்குங்கால் அத்துன்பத்தைப் பொறுத்து நிற்றலும்; கழிகளால் கண்ணினை மிண்டிக்கொண்டு- கழிகளாலே கண்களை அகழ்ந்து கையிற் கொண்டு; ஈட்டலும்- இரவலர்க்கு வழங்குதலும்; விண் உயர் நெடுவரை வீற்று வீற்று வீழ்தலும் - வானளாவவுயர்ந்த மலைகளிலே முறைமுறையாகஏறி வீழ்தலும் ஆகிய; அண்ணலார் தம் செய்கையும் ஆவது இல்லை- நுங்கள் புத்தர் பெருமானார் செய்த செயல்களையும் ஒப்பன இல்லை எம்முடைய உடல் வருத்தச் செயல்கள்; அல்லதும் - அன்றியும்; என்க.

(வி - ம்.) யாங்கள் நோற்குங்காலத்தே உடல் வருந்துமாயினும் உங்கள் புத்தனார் உடம்பினைத் தடிதல் முதலாகச் செய்த உயிரின்னல்களை அவை ஒவ்வா காண் என்பது கருத்து.

போழ – பிளக்க. கழிகள்ளான் என்புழி ளகரமெய் விரிக்கும் வழி விரித்தல். வரைவ் வீற்று என்பது மது.

> "புத்தனார் உடல் தடிதலும் பிறவும்
> கண் கொடுத்தான்......கேளென்றாள்" என்பதனானுணர்க.

அண்ணலார் என்றது புத்தரை; இகழ்ச்சிக் குறிப்பு. (அக)

௩௫௩. தூக்கடம்மை யாக்கலே தொல்லைநல் லறம்மெனின்
நாக்களைப் பறித்தலுந் நான்றுவீழ்ந்து போன்றலுந்
தீக்கள் பாய்ந்துசாதலுந் தீயசெங் கழுவ்வின்மேன்
மேக்கினைக்கொண் டேறலு மேன்மையென்ன லாம்பிற.

(இவ்விரண்டு செய்யுளும் மொக்கலன் கூற்றிற்கு மறுமாற்றம்)

(இ - ள்.) தம்மைத் தூக்கள் ஆக்கலே தொல்லை நல்அறம் எனின் - எடா! தங்கள் உடம்பினை இவ்வாறு ஊன்களாக்குதலே சிறந்த பழைய அறமாகும் எனின்; நாக்களை பறித்தலும் - நாவுகளைப் பிடுங்கிக் கொண்டு சாதலும்; நான்று வீழ்ந்து பொன்றலும் - தூக்கிட்டுக் கொண்டும் மலை முதலியவற்றினின்றும் வீழ்ந்தும் சாதலும்; தீக்கள் பாய்ந்து சாதலும் - தீயிற் பாய்ந்து சாதலும்; தீய செங் கழுவின்மேல் - கொடிய சிவந்த கழுமரத்தின்மேல்; மேக்கினைக் கொண்டு - உச்சியினை அடைந்து; ஏறலும் - ஏறிச் சாதலும்; மேன்மை என்னலாம் - மேலான அறம் என்று கூறலாமே என்றாள் என்க.

(வி - ம்.) தம்மைத் தூக்கள் ஆக்கலே என மாறுக. தூ... ன். நா - உண்ணாவும் வெளிநாவுமென விரண்டாகலின் நாக்கள் ... ப்

பன்மையாற் கூறப்பட்டது. நான்றுதல் வீழ்ந்தாதல் பொன்றலும் என்றவாறு. நாலுதல் – தூக்கிட்டுக் கொள்ளுதல்.

அறம்மெனின் என்புழியும் கழுவ்வின்மேல் என்புழியும் மகர வொற்றும் வகரவொற்றும இசை நிறைத்தற் பொருட்டுக் கெடாதும் விரிந்தும் நின்றன. கழுவின்மேல் மேக்கு – கழுமரத்தின் மேலுள்ள உச்சி. பிற : அசை.

இவற்றினாற் போந்த பொருள் : யாங்கள் வேறு சமயத்தைச் சார்ந்த துறவோர் போன்று ஐவகைத் தீயிடைநின்றும், ஒருகால் மடித்து ஒரு காலினின்றுங் கனவிய கற்களைச் சுமந்தும் நீருண்முழுகி மூச்சையடக்கியும் உடம்பினைப் பெரிதும் வருத்துவதே தவமென்று வருத்துவேமல்லேம்; எம்மை நீ யிவ்வாறு சொல்லியதுன் பேதைமை யாம். யாங்கள் கொலை முதலிய தீவினை தீர்தற் பொருட்டு எம்மாற்றலுக் கேற்பவே, உண்ணாமை முதலிய நோன்புகளைச் செய்து இன்ப நுகர்ச்சிகளையும் துறக்கின்றேம்; நின்னைப்போல யாங்கள் ஒருநாளிற் பலமுறை உண்ணவும் தின்னவும் குளிக்கவும் வெள்ளடை மெல்லவும் புகுவேமாகில் அவற்றை ஈட்டலும் பேணலு முதலிய செயல்களாலே கொலை முதலாகிய தீவினைகளும் மெய்யுணர்தல் சேனித்தல் முதலிய வற்றிற்குக் கேடும் உண்டாமாதலின் "ஆற்றற்கேற்ற நோற்றலே நோன்பு" என்னும் எம்மோத்திற்கியைய எம்மாற்றற்கேற்ப நோற்பதன்றி, ஆற்றற்கு மிகையாக உண்ணாமை முதலிய விரதங்களைச் செய்வேமல் லேம். வெயினின்றல் முதலாயினவும், காட்டகத்துறைவோராகி எல்லாத் தொழில்களையும் துறந்து ஒருவழி நிற்றல் இருத்தல் செய்து ஞானதியானங்கள் பயில்வுழி வெயிலும் மழையுங் காற்று முதலாயின வந்தால் அவற்றை எம்மாற்றற்குத் தக்கவாறு பொறுப்பேம் காண்! என்னை ?

"உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு" (குறள் – ௨௬௧)

என்பது எம்மோத்தாதலும் காண்க.

இனி, தாமே வந்தன பொறுத்தலல்லது வெயின் முதலாயினவற் றால் வருந்துதலே தவமென்று யாங்கள் சொன்னதுண்டோ? இல்வாழ்க் கையினோரும் அவ்வாழ்க்கைக்கு இன்றியமையாத தொழில்களுள் ஒன்று செய்யுங்கால் வந்த வெயின் முதலாயினவும் தம்மாற்றற்குத் தக்கவாறு பொறுப்பரல்லரோ? அதற்காக அவர் உடல் வருந்தினர் என்பரோ? நீ சொல்லிய குற்றமெல்லாம், 'உயிர்க்கின்னாமை செய்தலே புத்தத்தன்மை பெறுதற்கு நிமித்த' மென்று பெருந்துயர்க்குக் காரணமாகிய உயிரின் னல்கள் பண்ணுகின்ற—நினக்கேயாம் என்று சொன்னபடியாம். (அஎ)

## 'பாரமிதை'

௩௫௪. தானஞ்சீல மும்பொறை தக்கதாய வீரியம்
மூனமில் தியானமே யுணர்ச்சியோ டுபாயமும்
மானமில் லருளினைவ் வைத்தலேவ லிம்மையுஞ்
ஞானமீரைம் பாரமீதை நாடுங்கா லிவைகளும்.

(இ - ள்.) காடுங்கால் - ஆராயுமிடத்து; தானம் சீலமும் பொறை - தான பாரமிதையும் சீலபாரமிதையும் பொறைப் பாரமிதையும்; தக்கது ஆய வீரியம் ஊனம் இல் தியானம் - தகுதியுடையதாகிய வீரியபாரமிதையும் குற்றமற்ற தியானபாரமிதையும்; உணர்ச்சியோடு உபாயமும்-உணர்ச்சிபாரமிதையும் உபாயபாரமிதையும்; மானம் இல் அருளினை வைத்தலே - அளவற்ற அருள் வைத்தலாகிய அருட்பாரமிதையும், வலிமையும் - வலிப்பாரமிதையும்; ஞானம் சரைம்பார மீதை - அறிவுப்பாரமிதையும் என்னும் இப்பத்துப் பாரமிதைகளும் என்க.

(வி - ம்.) இது புத்தன் உடம்பு நோவும், உறுப்புநோவும், பொருள் நோவும் பாரமிதை பத்தும் கூறும். பாரமிதை என்பதன் பொருள் கரையை அடைந்தது என்பதாம். எனவே தான முதலியவற்றின் எல்லை காண்டல் என்றாயிற்று.

பாரமிதை - தானம் சீலம் பொறை வீரியம் தியானம் உணர்ச்சி உபாயம் அருள் வலிமை அறிவு எனப் பத்து வகைப்படும் என்க. அருளினைவ் வைத்தலே என்புழி வகரமெய்யும், வலிம்மை என்புழி மகர மெய்யும் விரிக்கும் வழி விரித்தல். பாரமீதை என்புழி மீ - நீட்டல் விகாரம்.

இனி, பாரமிதைகளை,

"சென்றிரந்தார்க் கீந்தனன் பொருளுடம் புறுப்புக்க
டென்றினன் பிறக்கன்ன ஞயினன் மாமேருக்
குன்றியின் றுணையாகக் கொடுத்திட்டா னல்லனோ"
(குண்டலகேசி)

எனவும்,

"இன்பஞ்சால் பெரும்பார மீரைந்து முடனிறைத்து
நன்கன நிலைபெற்ற நாதன்" (குண்டலகேசி)

எனவும்,

"தானமே முதலாகத் தசபார நிறைத்தருளி
ஊனமொன் றில்லாமை யொழிவின்றி யியற்றியே"

எனவும் வருவனவற்றானுமுணர்க.

இனி, தானபாரமிதையாவது - தானநிறைப்பது; அது "குன்றியின் றுணையாகக் கொடுத்திட்டானல்லனோ?" என்பதனாற் பெறப்படும்.

சீலபாரமிதையாவது-ஒழுக்கம் நிறைத்தல். அது விநயபிடகத்துச் சொன்னவாறு ஒழுகுதல். "அது எண்ணிறந்த தானமுஞ் சீலமுமிகை யாக்கி" யென்பதனாற் பெறப்படும்.

பொறைப் பார மிதையாவது - பொறுமை நிறைத்தல். அது, "இன்னார்க்கு மினியனு" யென்பதனாற் பெறப்படும்.

வீரியபாரமிதையாவது - வீரம் நிறைத்தல்; அது, "வினைவாய போதியை யுறுமளவும் வினைமடியான், றளர்வின்றி யோடிய தாளின னல்லனோ?" என்பதனாற் பெறப்படும். பள்ளி வலங்கோடன் முதலாயின செல்வுழிச் சோம்பாமையுமாம்.

தியானபார மிதையாவது - தியான நிறைத்தல். அஃதாவது, சீல சமாதி நினைவு அழியாமற் காப்பது. அது,

' நலங்கிள ரொழுக்கந்தா னண்ணிய காலத்துக்
கலங்குதற்குத் தக்கன கண்டன வுளவெனினுந்
துலங்காது நிற்குந்தன் துணிவுடைமை காணுங்கால்
நிலம்பூனை யாயொழியு நிறையினு னல்லனோ?"
(குண்டலகேசி)

என்பதனாற் பெறப்படும்.

உணர்ச்சிபார மிதையாவது - நினைவு நிறைத்தல், அது, வழியறிவு; அது "எவ்வந்தீர் அறிவர செய்தினு னல்லனோ?" என்பதனாற் பெறப்படும்.

உபாயபாரமிதையாவது - வீட்டிற்குபாயமாகிய வழி நிறைத்தல். அது, "பிறப்புக்கே டெடுத்துரைத்த பெருவழியா னல்லனோ" என்பதனாற் பெறப்படும்.

அருட்பாரமிதையாவது – அருணிறைத்தல். அது, "மறைபோகப் பொழிகின்ற மாண்புசா லருளினு" லென்பதனாற் பெறப்படும்.

வலிப்பாரமிதையாவது - வலிமை நிறைத்தல். அது, "பற்றுய வலி நிறைந்த பழியிலானல்லனோ?" என்பதனாற் பெறப்படும்.

அறிவுப்பாரமிதையாவது - அறிவு நிறைத்தல். அது, அபிதன்மபிடக மோதியுணர்தல்; அதுவும், "அறிவரசெய்தினன்," என்பதனாற் பெறப்படும். இவையெல்லா மறிந்துகொள்க.

இனி, இப்பாரமிதைபத்தும் உயிர், உறுப்பு, பொருணோர்ச்சி என்னு மூன்றுனுமுறழ முப்பதாம். இதனை,

"அருணெறியாற் பாரமிதை யாறைந்தும் உடனடக்கிப்
பொருண்முழுதும் போதிநிழ னன்குணர்ந்த முனிவரன்றன்
அருண்மொழிய னல்வாய்மை யறிந்தவரே பிறப்பறுப்பார்
மருணெறியார் பிறநாலு மயக்கறுக்கு மாறுளதோ?"

எனவரும் சித்தாந்தத் தொகையாலுணர்க.

துதாங்கம் - (அஃதாவது துறவோருக்குரிய தூயவொழுக்கம்) (அஅ)

௩௫௫. விருக்கமூலி யாகலும் வெள்ளிடை யுறைதலும்
மிகுத்தனிற்ற லன்றியு மிட்டகூறை யெய்தலும்
மருக்கையின் மயானத்துட் சேக்கையும் மனைகளை
வருச்சியார் புகுதலும் மற்றவற்றே யுண்டலும்.

(இ - ள்.) விருக்கமூலி ஆகலும் - காட்டின்கண் மரத்தடியிலே உறைதலும்; வெள் இடை உறைதலும்-வெட்டவெளியிலே இருத்தலும்; இருத்தல் நிற்றல் அன்றியும் - இவ்விடங்களிலே இருத்தலும் நிற்றலும் அல்லாமல்; இட்ட கூறை எய்தலும்-இல்லறத்தார் வழங்கும் ஆடையை ஏற்றுக் கோடலும், மருக்கையில் மயானத்துள் சேக்கையும் - பிறர் மருவுதலில்லாத சுடுகாட்டின்கண் உறைதலும், மனைகளை வருச்சியார் புகுதலும் - வீடுகளை வரையறை செய்து கொள்ளாமல் பிச்சைபுகுதலும், மற்றவற்றொடு உண்டலும் கப்பிய லூன்றின்றலும், என்க.

(வி - ம்.) விருக்கமூலி - மரத்தடியிலிருப்பவன். மரத்தடியிலும் வெளியிலும் உறைதல் இருத்தல் நிற்றல் முதலியன செய்தல் என்றவாறு. இட்ட கூறை - வழங்கிய ஆடை. மருக்கை - மருவுதல். ஏனையோர் மருவுதலில்லாத மயானம் என்றவாறு. வருச்சித்தல் - வரையறை செய்துகோடல். மற்றவை என்றது கப்பியத்தை. கப்பியமாவது - தீதில் ஊன். (அக)

இதுவுமது

௩௱௭௰. அத்திட்டாடை கோடலும்
மமையுமேன்ன நீங்கலும்
பெற்றதன்னிற் சேக்கையும்
போர்த்துண்ணு தொழிதலும்
குற்றமென்னப் பிச்சையுங்
குறித்துழிப் புகாதுதான்
றுற்றியுய்த்த றன்னொடு
துதாங்கென்றுத்தர் சொன்னவே.

(இ - ள்.) ஆடை அத்து இட்டுக் கோடலும் - ஆடையைத் துவர் தோய்த்துடுத்தலும், அமையும் என்ன நீங்கலும் - பிச்சையேற்புழி வேண்டாமென்று விலக்கியவர் அவ்வளவே போதியதாம் என்று பின்னரும் ஏலாது போதலும்; பெற்றதனில் சேக்கையும் - சேர்ந்தவிடத்தே தங்குதலும்; பேர்த்து உண்ணாது ஒழிதலும் - காலமல்லாத காலத்தே உண்ணாமையும்; குற்றம் என்னப் பிச்சையும் குறித்துழி புகாது - ஒருசில இல்லத்தைக் குறிக்கொண்டு பிச்சையேற்றல் குற்றமாம் என்று குறிக்கொண்டு பிச்சைபுகாமல்; துற்றியுய்த்தல் தன்னொடு - ஒரு பிடியும் இரண்டு பிடியும் குறையத் தின்றலோடு; துதாங்கு - துதாங்கமாம்; என்று ஆத்தர் சொன்ன - என்று தலைவர் அறிவுறுத்தனவாம்; என்க.

(வி - ம்.) அத்து - துவர். அமையும் - போதியதாம். பெற்றது - தானே கிடைத்தது. உணவுப் பொழுதிற் பிச்சைபுக் குண்ணுதலன்றி

ஏனைப் பொழுதிற் பிச்சைபுக் குண்ணுமையைப் பேர்த்துண்ணு தொழிதல் என்ருர். பிச்சை புகுங்கால் குறிக்கொண்டு புகுதல். குற்ற மென்னக் குறித்துழிப் புகாது என்க. துற்றி - பிடித்து. இவை யெல்லாம் துதாங்கம் என்று ஆத்தர் சொன்னவை, என்க. ஆத்தர் - தலைவர். இவையெல்லாம் ஆராய்ந்து கொள்க. (௯௦)

கூ௫எ. பாரமீ துதாங்கோடு பற்பல கிலேசமும்
நேருமனையி லுண்மையா னீரும்வேண்டி னீரெனக்
கூரிமம் வெயில்பசி கூடலங் கூடினுற்
சேர்தலில்லை நல்லறஞ் சிந்தையென்று செப்பலும்.

(இ - ள்.) பாரமீ துதாங் கொடு பற்பல கிலேசமும் - மேலே கூறிய பத்துவகைப் பாரமிதைகளானும் துதாங்கங்களானும் மேலும் பல்வேறு துன்பங்களும்; நேரும் மனையில் உண்மையால் - நீயிர் பிச்சை புகும் இல்லங்களிலே உண்டாதலாலும்; நீரும் வேண்டினீர் என - நீங்களும் உடலுக்கு வருந் துன்பங்களைப் பொறுத்தல் வேண்டும் என்று கொள்கின்றீர் அல்லிரோ? - என நீலகேசி வினவ; கூர் இமம் வெயில் பசி கூடலம் - அதுகேட்ட மொக்கலன் யாங்கள் அவற்றை வேண்டுமாயினும் நும்போல மிக்க பனியினும் மழையிலும் பசிப்பிணியினூடும் சேர்ந்து வீணே உடம்பினை வாட்டுகிலேங் காண்!; கூடினுல் சிந்தை நல்லறம் சேர்தல் இல்லை என்று - அங்ஙனம் வீணே உடம்பை வாட்டு மிடத்து மனம் நல்லறத்திலே நில்லா பெறுதன்றே? என்று கூறலும் என்க.

(வி - ம்.) இது நீலகேசி கூற்றும், அதற்கு விடையாக மொக்கலன் கூறலும் ஆம்.

பற்பல கிலேசமும் என்றது மேற்கூறிய செய்யுள்களிற் கூறப் பட்டவற்றை. அன்றியும், போதிமரத்தின் நாற்றிசையும் எவ்வேழு நாள் அம் மரத்தையே நோக்கி நின்று உபவாசஞ் செய்து பின் விசாகை யென்பாள் பொற்கலத்திற் சோறிடப் புத்தனுண்டானென்பது முண்டே யாதலால் எம்மைக் காயக்கிலேசஞ் சொல்லிப் பழிக்கின்ற உனக்கு இந்தக் காயக்கிலேசங்களுண்டே என்றவாறு. அவை தலை சிரைத்தல் புருவஞ் சிரைத்தல் முதலாயினவுமாம் என்க. (௯௧)

கூ௫அ. அருந்தடிக ளீரவும் மறஞ்செய்வாளிற் போழவும்
வருந்துவான துள்ளநீ மாட்சிநன்று மென்றியா
லிருந்துநின்று நன்னெறிக் கிடைப்படாத சிந்தையாற்
பெருந்தவங்கள் செய்ந்நரைப் பேசுவாயோர் பேதையே.

(இ - ள்.) நீ அருந்தடிகள் ஈரவும் - அதுகேட்ட நீலகேசி ஏடா! நீதானும், அரிதற்கரிய தசையை அரிதலானும்; மறஞ்செய்

வாளிற் போழவும் - கொலை செய்தற்குரிய வாளாலே உடம்பினை அரிந்து பிளத்தலானும், வருந்துவானது உள்ளம்- பெரிதும் வருந்தும் புத்தனுடைய மனம்; நன்றும் மாட்சி என்றி- பெரிதும் அறமாண்புடைத்து என்று கூறுகின்றாயல்லையோ; யாங்கள் பனி முதலியவற்றில் நிற்றலால் சிந்தை நல்லறஞ் சேர்தலில்லை என்று எங்ஙனம் கூறினை; இருந்தும் நின்றும் நன் னெறிக்கு இடைப்படாத சிந்தையால் - மனமடக்கி இருந்தும் நின்றும் நல்ல அறநெறிக்கண் இடையறவின்றி நடக்கும் நெஞ்சத் தோடே; பெருந்தவங்கள் செய்ந்நரை - பெரிய தவத்தைச் செய்யும் ஆருகதரை; பேசுவாய் ஓர் பேதையே - பழிக்கின்ற நீ ஓர் அறி விலியே ஆதல் வேண்டும் என்றாள் என்க.

(வி - ம்.) இது போன செய்யுளில் இறுதியில் மொக்கலன் கூற்றாக வருதற்குக் கழுவாய் கூறுகின்றது.

உடம்பிற்றசையரிதலும் உடம்பைப் போழ்தலும் ஆகிய கொடிய துன்பங்களைப் பொறுக்கும் புத்தன் மனம் நன்னெறிக் கண்ணதாயின் பனிமுதலியவற்றில் நின்று தவம் செய்வார் மனம் நன்னெறிக்கண் நில்லாதென்று கூறுவது அறியாமையன்றோ என்றவாறு. (௩௨)

இதுவுமது

௩௦௩. புத்தராகு மாண்பினோர் போதிசத்து வர்கட்காம்
பத்துமாய பாரமீதை பாரவிட்ட மென்றலும்
சித்தராகு மாண்பினாற் சீலமும் வதங்களும்
மெத்துணையு மாயிரம்மா மென்றுமியாமு மென்றனள்.

(இ - ள்.) புத்தராகும் மாண்பினோர் - ஏடா! எதிர்காலத்தே புத்தராகின்ற சிறப்பினையுடையோராகிய, போதிசத்துவர்கட்கு ஆம் - போதிசத்துவர்கள் மேற்கொண்டொழுகுதற்குரிய; பத்து ஆய பாரமீதை - பத்து வகைப்பட்ட பாரமிதைகளும், பாரவிட்டம் என்றலும் - துதாங்கங்கள் என்பனவும்; சித்தர் ஆகும் மாண் பினாற் சீலமும் வதங்களும் - மேலும் துறவியர் ஆகும் சிறப்பி னாலே மேற் கோடற்குரிய ஒழுக்கங்களும் விரதங்களும் என; எத் துணையும் ஆயிரம் ஆம் - எத்தனையோ ஆயிரம் காயக்கிலேசங்கள் உங்களுக்கும் உண்டு; என்றும் யாமும் - என்று கூறுவேம் யாங்களும்; என்றனள் - என்று கூறினள் என்க.

(வி - ம்.) போதிசத்துவர்—எதிர்காலத்தே புத்தராகும் சிறப்புடை யோர். பத்தும் என்புழி உம்மை: இசை நிறை. பாரவிட்டம் - துதாங்கம். சித்தர் என்றது - பௌத்தத் துறவோரை. வதம் - விரதம்.

யாங்கள் மேற் கொள்ளும் காயக்கிலேசங்களினும் பன்மடங்கு மிகுதியாக நுங்கட்கும் காயக்கிலேசங்கள் உண்டு எனவே நீ எமக்குக் குற்றங் கூறுதல் அறியாமையேகாண் என்றவாறு. (௩௩)

௩௬௦. உடம்பினுள்ள பல்லுயிர் சாவவூனுண் மானுக்குத்
தடங்கொண்மா வரைமிசைத் தன்னையீத னன்மையேற்
படம்புனைந்த வர்கடாம் பலருமுண்ணு நீரினுள்
விடம்பெய்தாற்கு நன்றுகோல் வியாதியாளன் றீர்கென.

(இ - ள்.) உடம்பின் உள்ள பல் உயிர் சாவ - ஏடா! நுங்கள் புத்தனார் தம்முடம்பிலே வாழுகின்ற பலவாகிய உயிர்களும் இறந்தொழியும்படி; ஊன் உண் மானுக்கு - ஊனைத் தின்னுமியல்புடைய புலிக்கு; தடங்கொள் மாவரை மிசைத் தன்னை ஈதல் நன்மையேல் - பெருமையுடைய கரிய மலையேறி வீழ்ந்து மாண்டு தன்னுடம்பினை உணவாக வழங்குதல் நல்லறமேயாயின்; படம் புனைந்தவர்கடாம் பலரும் உண்ணும் நீரினுள் - செம்படம் போர்த்துத் துறவோர் பலரும் பொதுவில் நீருண்ணுதற்குரிய குளத்து நீரிலே; வியாதியாளன் தீர்கென - அவருட் குட்ட நோயுற்றானொரு துறவியின் நோய் தீர்வதாக என்று கருதி; விடம் பெய்தாற்கு நன்று கொல் - ஏனைத் துறவியர் சாவு நோக்காது அக்குட்ட நோயாளன் பொறுப்பதொரு நச்சு மருந்தினைக் கரைத்தவனுக்கும் எய்துவது நல்லறமேயோ? என்றாள் என்க.

(வி - ம்.) இது புத்தனது மயக்கவறிவு கூறுகின்றது.

புத்தன் தன்னுடம்பில் வாழுஞ் சிற்றுயிர் எல்லாம் இறந்தொழியும்படி பசியுற்ற புலிக்கிரங்கி அதற்குணவாகத் தன்னுடம்பையே கொடுத்தது நல்லறமெனின் துறவோர் பலரும் சாகும்படி ஒரு துறவியின் நோய் தீர்தற் பொருட்டுக் குளத்திலே நஞ்சுபெய்தவன் செயலும் நல்லறமே போலும் என்று அசதியாடியபடியாம். (௬௪)

இதுவுமது

௩௬௧. அல்லவர்கள் சாதலை அறிந்தனன் னவனெனில்
நல்லதில்லை நஞ்சினா லென்றுநாட்டு வாயேனி
னெல்லையில்ல பல்லுயிர் தன்கணுள்ள வெஞ்சலுங்
கோல்லவந்த வூன்களும் குற்றமேன்ற வாறுகோல்.

(இ - ள்.) அவன் அல்லவர்கள் சாதலை அறிந்தனன் எனில் - ஏடா! நீ அவன் ஏனைய துறவோர் அந் நஞ்சினாலே இறப்பர் என்பதனை அறிந்து கரைத்திருப்பானாயின்; நஞ்சினால் நல்லது இல்லை - அவனிட்ட அந் நஞ்சினாலே அவனுக்கு நல்வினையில்லை; தீவினையே உண்டாகும்; என்று நாட்டுவாயெனின் - என்று கூறுவாயாயின்; தன்கண் உள்ள எல்லையில்ல பல்லுயிர் எஞ்சலும் - புத்தன் புலிக்குத் தன்னுடம்பை வழங்குங்கால் தன்னுடம்பிலுள்ள கணக்கற்ற உயிர்கள் சாதலும்; கொல்லவந்த

ஊன்களும் - நீயிர் தினற் பொருட்டாய் வேடர் கொல்வதனாலே வருகின்ற ஊன்களும்; குற்றம் என்றவாறு - தீவினையே தரும் என்றவாறுமன்றோ? என்றாள் என்க.

(வி - ம்.) சங்கத்தார் சாவதறிந்து நஞ்சு கரைத்தலின் தீவினை யாமெனின், புத்தன் தன்னுடம்பிலுள்ள உயிர்கள் சாவதறிந்தும், உடம்பு கொடுத்தலும், கொன்றுவருவதறிந்து நீயிர் ஊனுண்டலும் தீவினையாம் என்பதும் தேற்றம் என்றவாறு.

அல்லவர் - ஏனைய துறவோர். நல்லதில்லை எனவே, தீவினை யுண்டாம் என்பதாயிற்று. புத்தன் உடம்பு வழங்குழி என்பதும் நீயிர் உண்ணும் எனவும் வருவித்தோதுக. (௩௰)

வேறு

௩௯௨. நீட்சி திரிவா மயிருகிர் காட்டினை
மாட்சியில் லாமயிர் மன்னுயி ருள்வழித்
தாட்க ணிமிருந் தலைநிமி ராவெழல்
காட்சி மரத்திற்குக் காறலை யெங்கும்.

(இ - ள்.) நீட்சி திரிவு ஆம் மயிர் உகிர் காட்டினை - ஏடா! நீ! யாங்கள் மரங்கள் உயிருடையன: அவை உணவுண்டு அமைதியோடு வளர்தலாலே உணவுண்டு வளரும் சாக்கியனைப்போல என் புழி (அவ்வேதுவின்கண் 'அசித்தம்' என்னும் குற்றமில்லாமை கண்டு யாம் அதற்கு வியபிசாரக் குற்றம் கூறுதும் என்று அதற் கேதுவாக) அம் மரங்களோடு வளர்ச்சியின்கண் மாறுபடுகின்ற மயிரையும் நகத்தையும் ஏதுவாகக் காட்டினை; மன்னுயிர் உள்வழி மயிர் தாள்கண் நிமிரும் - நீ காட்டியவற்றுள் மயிர் உயிருடைய உடலின்கண் உயிர்த் தொடர்புடைய அடிப்பகுதியிலே வளர்வ தாம்; தலை நிமிரா - அன்றி நுனியின்கண் வளர்ச்சி பெறமாட்டா; மரத்திற்கு - யாங்கள் ஏதுவாகக் காட்டிய மரத்திற்கோ, எழல் காட்சி - வளர்ச்சி காண்பது; கால் தலை எங்கும் - அடிப் பகுதியிலும் நுனிப்பகுதியிலும் மற்று எப் பகுதியிலுமாம். ஆகவே அக்குற்றம் எமக்காகாது என்றாள் என்க.

(வி - ம்.) இது ''மற்ற மாமரங்களு''......ற்று.

இருவகை மரங்களும் உயிருடைய தம் வாழ் நாளிலே நீரும் எருவும் முதலாயின பெற்று அமைதியோடு வளர்தலாலே, இறைச்சியுஞ் சோறும் பெற்று அமைதியோடு வளர்ந்த சாக்கியனைப் போல என்று நாதகுப்தனார் சொல்லுதற்கண் கூறிய ஏதுவினுக்கு, அசித்த விருத்தம் என்னும் குற்றமில்லாமையால் வியபிசாரக்குற்றங் கூறுவேம்; எங்ஙன மெனின் கொடிப்புற்றும் மயிரும் உகிரும் உயிரில் பொருளாகியும் வளர்தலின் நீ கூறிய ஏது போலியாம் என்று நீ சொல்லுவாயாயின்; அவ்வாறு சொல்லுவதுன் பேதைமையாம்; நீ காட்டிய புற்று முதலி யுவை உணவுண்டு வளர்வன அல்லாமையால் என்றவாறு.

என்னை? எனில், புற்றுவது கறையான் முதலாகிய உயிர்கள் கீழ் மண்ணை மேலே ஏறட வளர்வது; மயிரும் உகிரும் உயிருடைய உடம்பினின்றும் நீங்கினால் வளராவாதலானும், உயிருடைய உடம்பினின்ற வழியும் உயிர்த் தொடர்புடைய தம் மடிப்பகுதியில் வளர்வதல்லது நுனியினும் ஏனைப்பகுதியினும் வளரமாட்டா. நுனியில் வளராமையை கரைத்த மயிருக்குக் கறுப்பிடுவாருழையும் உகிருக்கு ஐவணம் (மருதான்றி) இடுவாருழையும் காண்க. ஆதலால் அவை உணவுண்டு வளர்வன அல்லவாதல் அறிக.

இனி, மரங்களோ மாந்தர்போலவே அடி நுனி சுற்றுப்புறம் யாண்டும் வளரும்; அவை யுணவுண்டு வளர்வது யாவருமறிந்ததேயாம். ஆதலால் யாங்கள் கூறிய ஏது, போலியன்மை காண்க என்றவாறு.

இனி, உயிரில் பொருளும் உண்டு அமைதியாய் வளர்வனவே என்று கொள்ளின் வருங்குற்றம் என்னையோ? என்பாயாயின், உயிரில் பொருளுக்கும் நுகர்ச்சியும் அமைதியும் உண்டாமாயின் உயிர்ப்பொருள் உயிரில் பொருள் என்னும் வரையறை கெடும். ஆதலாலிந்த ஏதுவினுக்குப் போலி என்னும் குற்ற மின்மையால் குற்றமற்ற இந்த ஏதுவினால் மரங்களுக்குயிருண்மை விளங்கும் என்றான் என்க.

இருவகை மரமென்றது புறக்காழுடைய புல் மரங்களையும் அகக்காழுடைய நன்மரங்களையும். என்னை? "இருமரப் பெயரும் மரமொடு சிவணும்" என்பதோத்தாகலின் என்க. அசித்த விருத்தம், வியபிசாரதூடணம் என்பன ஏதுப்போலிகள்.

இது மரத்திற்கு உயிருண்மைக்கு உண்டு வளரும் சாக்கியன் ஏது. இவ்வேது போலியெனக் காட்டவேண்டி மொக்கலன் உயிரில்லனவும் வளர்வனவாம் புற்றும் மயிரும் உகிரும்போல என்று கூற அவை வளர்வனவல்ல ஆதலால் நீ காட்டிய ஏதுவே போலியாம் என்றவாறு. (௩௪)

௩௯௫. மரங்கள் வளருமென மன்னுங் கூம்பி
விரிந்த விலையின் வேற்றுமை சொன்னாய்
பொருந்து மிவையு மல்லவு மன்றே
வொருங்கிவ் வுலகத் துயிர்களு மென்றாள்.

(இ - ள்.) மரங்கள் வளரும் என மன்னும் கூம்பி விரிந்த இலையின்-எடா! யாங்கள் மரங்களும் மாந்தர் போலக் கண்வளரும் (உறங்கும்) என்று கூற அதற்கு நீ மரங்களிற் சில மிகவும் இலை குவிதலல்லது உறங்குவன அல்ல வேறு சில இலை குவியாமையுங் காண்டி என; வேற்றுமை சொன்னாய் - அவை வேற்றுமை உடையனவாதலை எடுத்துக் கூறினை; இவ்வுலகத்துயிர்களும்-இவ்வுலகத்தே வாழும் உயிரினங்களும்; ஒருங்கு பொருந்தும் இவையும் அல்லவும் அன்றே என்றாள் - ஒரு படித்தாக இமை குவித்துறங்குவனவும், இமை குவியாது உறங்குவனவும் அல்லவோ ஆதலால் அவற்றைப்போலக் கொள்! என்றாள் என்க.

(வி - ம்.) இஃது "உறங்குநனான்"......ற்று

யாங்கள் "மரங்கள் உயிருடைய, உறங்குதலாலே சாக்கியனும் ஆடும் போல என்றேமாக; அதற்கு நீ, புளியமரம் முதலாயின இலை குவித்தலல்லது தூங்குகின்றனவல்ல; அவை உறங்கினும், ஆலமரமும் மகிழமரமும் முதலாயின அங்ஙனம் இலை குவித்துறங்காமையின் அவை யுயிரிலவாகாவோ? எனின்; ஏடா! உயிருண்டாக நின்றுற் கருதப்பட்ட மாந்தரும் விலங்குகளும் உறங்குங்கால், இமை குவித் துறங்குவனவும், இமை குவியாதுறங்குவனவும் என இருவகைப் படுவனவாம். மயின் முதலாயினவும் மக்களுள் ஒருசாராரும் விழித் துறங்குவதுபோல, ஆலமரமும் மகிழமரமும் முதலாயின இலை குவியா தேயும் உறங்குவனவாம். புளி முதலாயினவும் இலை குவித்தல் அல்லது உறங்கின வல்லவெனின்; பசு முதலாயினவும் இரவில் உறங்குகின்றன வல்ல கண்ணிமை பொருந்து மாத்திரையே செய்கின்றன எனலும் அமையுமே. அற்றன்று அவற்றிற்கு மயக்கமுண்மையின் உறங்கின வென்றே கொள்ளுதும் என்பாயாயின்; அவை மயங்கின என்பது யாதினாலறிந்தனை? அவை ஒருகால் செயலற்றிருத்தலானும் ஒருகால் செயற்படுதலானும் அறிந்தேன் எனின், அவை உறங்காமலும் அவ்வாறு செய்யலாமே! இனி நீ யாது கூறினும் இக்கேள்வி வரும்.

இனி, இரவின்கண் பசு முதலாயின உறங்குமென்பதற்கு உலகமே சான்றெனின், இரவில் புளி முதலாயின வுறங்குவதற்கும் உலகமே சான்றாகும். அவற்றின் உறக்கத்தை உலகத்தாரைக் கேட்டுணர்க.

இனி உயிர்ப் பொருளிடத்தல்லது நிகழாத உறக்கத்தைப் புளி முதலாயினவற்றுக் காண்டலின் அவையும் உயிருள் பொருள் என்று கொள்ளுமாறுபோல, ஒழிந்த மரங்களும் அவற்றோடொத்தலின் உயி ருள்ள பொருள்களேயாம் என்று கொள் என்றவாறு.

இனி, முன்னுரைத்த ஏதுவால் மரங்கட்கு உயிருண்மை காட்டிய பின்னர் இந்த ஏதுக் கூறுதல் மிகையாம் பிறவெனின்; ஒன்றைப் பல வேதுக்களால் அறிவது குற்றமன்று.

அன்றியும், மொக்கலன் சொன்ன குற்ற நீக்குதற்கு இங்ஙனம் கூறப்பட்டன வெனவும் அமையும். இது மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும். வளர்தல் – கண் வளர்தல்; உறங்குதல். பொருந்துமிவை – இலை குவிவன. அல்ல – இமை குவியாதன. (௧௭)

௩௬௪. வயாத்திரு வாக்கி வளர்பூ சணிக்குத்
தயாச்செய்கை தீதென்னுந் தத்துவங் கண்டா
யுயாப்பிழைத் தாய்மேழு கூறுடு பட்ட
வயாவதற் கீண்டுப் பயத்தலி லன்றே.

(இ - ள்.) வயா திருவாக்கி வளர் பூசணிக்கு - ஏடா! நீ வேட்கைமால் அழகினைப் பெருக்கி வளராநின்ற பூசணி முதலிய ஓரறிவுயிர்க்கு; தயாச் செய்தல் தீது என்னும் - அருள் செய்தல் அறியாமை ஆகும் என்னும்; தத்துவம் கண்டாய் - ஒருண்மையை அறிந்த நீ; உயாப் பிழைத்தாய் - அவ்வாராய்ச்சியிற் பிழைசெய்

தனே; மெழுகு-என்னே? அதற்கு நீ காட்டிய மெழுகு ஏதுவாகாமை
யுணர்க; ஊறெடுபட்ட வயா - என்னே - உயிரிமல்பாகிய வேட்கை
அதற்கு - மெழுகிற்கு; ஈண்டுப் பயத்தல் இன்று - இங்குப் பயன்
படாமையால் என்றான் என்க.

(வி - ம்.) இது ''நட்டுச் சோறவாவுறு''......ற்று.

வயா - வேட்கை. ''வயாவே வேட்கை வருத்த மாகும்'' என்பது
தொல்காப்பியம். திரு - அழகு. பூசணி முதலியன உயிருள்ளனவல்ல;
அவை பருக்குமாயினும் மெழுகு தீயைச் சேர்ந்துழி இளகிப் பருப்பது
போலப் பருப்பனவன்றி உயிருண்மையால் அன்று என்றும் ஆதலால்
அவற்றிற்கு அருள் செய்தல் அறியாமை என்றும் மொக்கலன் கூறினு
ளுக; அது கேட்ட நீலகேசி ஏடா? உயிர்ப் பொருளாகிய ஒன்றறி
வுயிர்க்கு, நீ காட்டிய உயிரில் பொருளாகிய அரக்கு ஏதுப் போலியாய்
நின் கருத்தை முடித்து வையாது என்றாள் என்பது கருத்து. ஊன் -
ஆகுபெயராய் உயிர் என்பது குறித்து நின்றது.

இனி, மரமுதலியன உயிருடையன வேட்கையுடைமையால்,
வேட்கையாலுணவுண்டு பருக்கும் மாந்தர் விலங்குகள்போல என்புழி வட்
டாகிய மெழுகு தீயைச் சேர்ந்தால் இளகிப் பெருத்த தெனினும் அவா
விற்றாகாதவாறுபோல பாகல் எச்சிலாலும், அவரை கழுநீராலும்
சுரை பாற் சோற்றாலும் எருமுதலானவற்றாலும் பருத்து வளர்வன
வாயினும் அவாவின வாகாமையின் இந்த ஏது அசித்தம் எனில், மெழுகு
வட்டு தீமுகத்தே பெருத்ததே யெனினும் முன்புள்ளதிற் சிறிது
குறைவதல்லது மிகுதலின்று. மரம் அவ்வாறன்றி மிகுதல் காண்டுமாக
லின் நீ பிழைபட ஆராய்ந்தனே. நீரறுங்காலத்து வாடிநின்ற மரம்
மழைபெற்று வளமுடைத்தாதலறியாயோ? பட்டமரத்தினும், படாது
வாடிநின்ற மரத்தினும் மழை பெய்தவழி யொக்குமோ? நீர் முதலா
யின எப்பொழுதும் பெற்றன தழைத்து வளர்தலும், காலங்களில் நீர்
முதலாயின பெறுதன வற்றி நிற்றலும் நீரும் காற்று முதலாயின ஒரு
காலத்தும் பெறுவிடின் சிறிது காளிற் பட்டுப் போதலும் மாந்தரைப்
போலக்காணப்படுதலின் அவற்றுக்கு அவாவுண்மை பெறப்படும்.
ஆதலின் நீ இங்ஙனம் ஆராயாது பிழைபட்டனே என்றவாறு.

இனி, வேட்கை உயிரில் பொருளில் நிகழாமையில் யாங்கள்
கூறிய ஏதுவிற்குக் குற்றமில்லை. வேட்கை உயிரில் பொருளில் நிகழின்
உயிருள் பொருள் உயிரில் பொருள் என்னும் வரையறை கெடும்.

இனி, அஃதொக்கும். தீ, விறகு முதலியன பெற்று வளர்தலில்
அமைதியும் வளர்ச்சியும் வேட்கையுமுடைத்தாமோ? எனின்? உடைத்
தாகாது. என்னே? விறகு முதலிய காரணமுள்ள துணையும் தீயாகிய
காரியம் பெருகுவதல்லது அவாவி நுகர்ந்து அமைதியாய் வளர்கின்ற
தன்மையின் என்க. இனி மரமும் நீர் முதலிய காரணமுள்ள துணையும்
வளர்தலின்றி இளம் பருவத்தே வளர்ந்து பின்ப நீர் முதலாயின கூடப்
பெறினும் வளர்தலின்றி இறுதிக்காலத்தே படுதலும், நீர் முதலியன
அளவுக்கு மேற்படப் பெறின் சில பிணிகளாற் பற்றப்பட்டழிதலும்
இளம் பருவத்தில் ஏருடைய வுடம்பினவாதலும் முதுபருவத்தில் வற்
றிய வுடம்பின வாதலும் வெட்டுதன் முதலாயின ஒழியவும் நீர் முத
லாயின உண்டாகவும் சில மரங்கள் சாதலும் மக்களைப்போலக் காணப்

படுகின்றன. தீ அவ்வாறன்றி விறகு முதலியன பெறின், ஊழிகாறும் பெருகியே நிற்கும். நீர் முதலாயின பெறினும் இறுதிக் காலத்தே படுதல் தினை முதலாயினவற்றிற் கண்டு கொள்க; ஆதலின் மரமுதலியன காரண காரிய வகையாலன்றி வேட்கையுற்று வளர்கின்றன என்பதாம். (௬௮)

௩௬௫. யாதினு மாழ்குமம் மாழ்கியு மென்றுழி
நீதின்னுந் தோலை நெருப்போடு கூட்டத்தி
னோதினை தேறுற நீர்க்குரைத் தாய்மற்றுஞ்
சேதனை யில்லாய் திரிவென்னை வண்ணம்.

(இ - ள்.) சேதனை இல்லாய் - ஏடா அறிவில்லாதோனே !; அம் மாழ்கியும் யாதினும் மாழ்கும் என்றுழி - யாங்கள் மரமுமுயிருடைய தீண்ட மாழ்கியும் சுண்டில் முதலாயினவும் தீண்டினும் கற்கொண்டெறியினும் இன்னோரன்ன பிற வெச்செயலானும் மயங்குதலால் அட்டை முதலாயினபோல என்று கூறற்கண்; நீ தின்னுந் தோலை நெருப்பொடு கூட்டத்தின் ஓதினை-நீ தின்னுந் தோலைத் தீயோடு சேர்த்துங்கால் சுருங்குகின்றதுபோல அவை சுருங்கினும் உயிருடையவல்ல என்று ஏதுக் காட்டிக் குற்றங் கூறினை; நீர்க்குத் தேறு உற உரைத்தாய் - இன்னும் அவை விரிதற்குக் கலங்கிய நீரில் தேற்றும் விதை தேய்க்கத் தெளிவதனையும் ஏதுவாகக் காட்டிக் கூறினை; திரிவு என்னை வண்ணம் - நீ கூறிய தோல் முதலியன சுருள்வதும் கலங்குவது மன்றி மயங்குகின்றனவோ ? இவற்றிற்கு மயக்கம் கூறிய தெவ்வண்ணமோ ? என்றாள் என்க.

(வி - ம்.) இது "மெய் தீண்டவிலை"......ற்று.

மரமு முயிருடைய 'மாழ்கி' சுண்டில்' முதலாயின, மாழ்குதலால்; அட்டை முதலாயினபோல என்று யாங்கள் கூறியதற்கு, நீ நின்னாற் றின்னப்படுந் தோல் நெருப்பொடு கூடிச் சுருளுமதனையும் நின் னெஞ்சம் போலக் கலங்கிய நீரிற் கலக்கம் தேற்றும் பரல் தேய்க்கத் தெளிவதனையும் எடுத்துக் காட்டினை. ஆதலால் அறிவில்லாதாயாயினை. என்னை ? தீண்டினும் கற்கொண்டெறியினும் மாழ்கி முதலாயின மாழ்குவதூஉம், முன்னின்ற மலர்ச்சி யொழிவதூஉம் சிறிது பொழுது கழிந்தால் முன்பு போல்வதூஉம் காண்கின்றோமல்லமோ ? தோல் நெருப்பொடு கூடியவழி, சுருள்வதல்லது மாழ்குகின்றதோ ? மாழ்கினால் எதனொடு கூடினும் அட்டை முதலாயினபோல மாழ்கவேண்டுமன்றோ ? நீரிற் கலக்கமும் தேற்றும் பரலொடு கூடியவழியன்றி யாதினுந் தெளியுமோ ?; ஆதலால் தோல் முதலாயின மாழ்குகின்றன வல்லாமையின் இந்த ஏதுவினுக்குத் திரிவு எவ்வண்ணங் கொண்டனை ? என்பதாம்.

இன்னும் தீண்ட மாழ்கி முதலாயினவும் அட்டை முதலாயினவும் அம் மாழ்குதல் நீங்கினால் காரணமின்றி முன்புபோல ஆகும். தோல்

வலிய விமிர்க்குமளவும் சுருண்டே கிடக்குமாதலால் அது மாழ்குகின்ற தன்றெனபதுமாம்.

இங்ஙனம் குற்றமுறக் கூறினை ஆதலின் நீ அறிவிலி என்பாள் சேதனையில்லாய் என்று விளித்தாள். மாழ்கி - தொட்டாற் சுருங்கி. சுண்டில் - ஒருவகைக் கொடி. இதுவும் தொட்டாற் சுருங்கிபோல ஊற்றுணர்ச்சி மிக்கது. அட்டை-மரவட்டை. மாழ்குதல்-மயங்குதல். (கக)

கூருசு. அரும்பு மலரு மரும்பிணி தீர்வு
மொருங்குதங் காரணத் தாக்க முணர்த்து
மரங்களு மன்னுயி ரெய்தின வென்ன
விரும்பொடு காந்த மியைவி றிரிவே.

(இ - ள்.) அரும்பும் மலரும் அரும்பிணி தீர்வும் - மரங்கள் அரும்புதலும் மலர்தலும் தீர்தற்கரிய நோய்வாய்ப்பட்டு அந் நோய் நீங்குதலும், ஒருங்கு தம் காரணத்து ஆக்கம் உணர்த்தும்- ஒரு சேரத் தாம் தம்முடைய காரணமாகிய உயிரின் செயலாதலை நம்மனோர்க் கறிவிக்கும் ஆதலால்; மரங்களும் மன்னுயிர் எய்தின நம்மனோர்க் - மரங்களும் உயிருடையன என்று யாங்கள் கூறுகிற்ப; என்ன - மரங்களும் உயிருடையன என்று யாங்கள் கூறுகிற்ப; இரும்பொடு காந்தம் திரிவு - உயிரில்லாத இரும்போடு காந்தம் கூடிய வழியுண்டாகும் காரியத்தைக் காட்டி, ஆதலால் அவையுயிருடையன வல்ல என்கின்றனை, இயைபு இல் - நினது மேற்கோளும் ஏதுவும் பொருத்தமுடையன அல்ல காண் என்றாள் என்க.

(வி - ம்.) இது தீயுற்றுற் "கொடியரும்பு"......ற்று.

அரும்பு - அரும்புதல்; அஃதாவது பருத்தல் என்க. காரணத்து ஆக்கம் - காரணத்தாலுண்டாய காரியங்கள். காரணம்: உயிர், காரியம்: அரும்பலும் மலர்தலும் பிணி தீர்தலும் என்க.

இனி, மரம் உயிருடைய; பிணிப்பட்டுச் சுடுதன் முதலாய தீர்வு களாற் பிணிதீர்ந்து அரும்புதலால் (தளிர்த்தலால்); சுடுதன் முதலாயினவற்றாற் பிணிதீர்ந்து பருக்கும் பசு முதலாயினபோல. இன்னும் மரங்கள் உயிருடைய; சிறைப்பட்டுச் சிறையினீங்கி மலர்த லால்; சிறைப்பட்டுச் சிறையினீங்கி முகமலர்ந்த மகன்போல; மரம் உயிருடைய பிணிப்பட்டுப் பிணி தீர்தலால்; மகன்போல, எனப் பிணி என்பதனை முன்னுங் கூட்டிச் சிறை என்னும் பொருள் கொண்டும் கூறுக.

அரும்புதல், மலர்தல், என்னவேண்டாவோ? 'அரும்பு, மலர்' என்றதென்னையெனின், வேண்டா. என்னை? 'தல், கை, சி' என்பன முதலாயின பகுதிப்பொருள் விகுதி; உணர்தல், உணர்கை, உணர்ச்சி என இவற்றுளெல்லாம் 'உணர்' என்பதன்றே பகுதி. அதுபோல, ஈங்கு அரும்பு, மலர் என்னும் பகுதிதானே அரும்புதல், மலர்தல் என்னும் பொருள் தோற்றும் என்க. "நுவலருங் காப்பி னுசேச்சி" என்னுமிதன் கண் 'நுவல்' என்பது நுவறல் என்னும் பொருள்பட்டது போல.

மல்லிகை முதலாகிய கொடி யொருசாரன சுட்டாற் பிணிதீர்ந்து அரும்பும்: மாமுதலாகிய மரமொரு சாரன அவற்றின் கொம்புகளைப் புரிச்சுற்றியாயினும் பிறவாற்றாயினும் சிறை செய்துவிட்டு நீரிறைக்க அக்காலத்து மலரும்.

இனி, பிணியாவன – நெல்லுட் செம்பை, உருநை, தாட்புழு முதலாயின: வெற்றிலைக்கு 'நாவேறு, சுருட்டை' முதலாயின; இவ்வாறே ஒழிந்த பிணிகளுமறிந்து கொள்க.

இனி, பிணி வருவதுந் தீர்வதும் வினைகளாலன்றே? அன்றாயில், பசுமுதலியவற்றிற்குக் கோமாரி, கருநோய்முதலாயினவும், மக்களுக்கு வெக்கை முதலாயினவும் தாமே வரவேண்டுமன்றே; ஆதலால் மரங்களும் வினையாற் பிணிப்பட்டனவாதல் வேண்டும். இனி அப்பிணிகள் தீருமிடத்து உப்பு முதலாகிய மருந்துகளும் மந்திரயந்திரச் செயல்களும், வினைக்கழுவாயும் சாதனங்களாம். இவ்வாறாகுதல் உயிரில் பொருளின்கணிகழாமையின் இவை மரங்களுக்குயிருண்மை யுணர்த்தும்; என்றற்கண் ''வரங்கு காந்தம் வாய்ந்த வாளினைச்'' சீர் செய்தலாலே வாட்பிணி தீர்ந்ததாமோ? எனின் அழகிதன்று; என்னை? மரங்களும் மக்களும் பிணிதீர்ந்து ஆக்கமெய்துமாறுபோல, வாள்முன்பு நின்ற அளவின் மிக்க துண்டோ? இவ்வாறு காட்டிய திரிவுபொருத்தமில்லை என்றவாறு.

இல்லை என்பது 'இல்' என நின்றது. ''காரெனச் செய்தாரும் இல்'' (நாலடி - ௧0௩) என்றாற்போல வென்க. (௪00)

௩௬௭. ஒப்ப மரங்கட் குயிருண்மை யாமினி
யிப்படித் தோன்று மிருதுக்கள் சார்ந்தேனச்
செப்பிய வேதுத் திரிவேனக் காட்டிய
வெப்பங் குளிரவை தாமவை யேயால்.

(இ - ள்.) இருதுக்கள் சார்ந்து ஒப்ப - ஏடா! யாங்கள் மரங்கள் இளவேனிற் காலத்து இன்புற்றும் பனிக்காலத்துத் துன்புற்றும் வாழ்தலால்; மகனைப்போல; மரங்கட்கு உயிர் உண்மை ஆம் - அவற்றிற்கு உயிர் உண்மை தேற்றமாம் என்றேமாக, இனி இப்படித் தோன்றும் வெப்பம் குளிர் என – இங்ஙனமே அவ்விருதுகளிலே வெப்பமும் குளிரும் தோன்றுகின்றன ஆதலால் அவற்றிற்கும் உயிருண்டோ? என்று வினவி; ஏது திரிவு எனக் காட்டிய செப்பிய - யாங்கள் கூறிய ஏது போலியாம் என்று காட்டற்குக் கூறிய; அவைதாம் - அவ் வெப்பமும் குளிரும்; அவையேயால் - அவ்விருதுக்களேயன்றி வேறல்ல வாகலால் பொருந்தா என்றாள் என்க.

(வி – ம்.) இது ''தோற்ற''......ற்று.

இருதுக்கள் சார்ந்து மகனை ஒப்ப என மாறி மகனை என வருவித்து ஓதுக. ஏதுத் திரிவெனக் காட்டிய செப்பிய அவைதாம் என இயைத்துக் கொள்க. இருதுக்கள் வேறு வெப்பம் முதலியன வேறு என்றது பொருந்தாது என்றவாறு. (௪0௧)

௩௬௫ மரங்கிளை யொப்புமை யாலுயி ரென்னக்
கிரந்தியும் வெப்புங் கிளக்குவை யாயி
னிரந்த வுடம்பின் விகார நினக்குப்
பரந்துண ருண்மையைப் பார்ப்படுத் தாயால்.

(இ - ள்.) மரம் உயிர் கிளை ஒப்புமையால் என்ன - மரங்கள் உயிருடையன; பசுவின் கன்று பசுவானதுபோல அவற்றின் கிளை மரமாகும் ஒப்புமையால் என்று யாங்கள் சொன்னேமாக; கிரந்தியும் வெப்பும் கிளக்குவை - அங்ஙனமாயின் உடம்பிற் கிரந்தியும் வெப்பும் அதற்குக் கிளை போறலின் அவற்றோன்றும் உயிருண்டோ? என்று வினவுவை; நிரந்த வுடம்பின் விகாரம் - அவை உயிர்கலந்த உடம்பினது விகாரங்களேயன்றிக் கிளையாக மாட்டா; நினக்குப் பரந்து உணர் உண்மையை - இவ் வினாவால் உனக்கு விரிந்த அறிவு இருத்தலை; பார்ப்படுத்தாய் - மண்ணோடு கூட்டினைகாண், என்றாள் என்க.

(வி - ம்.) இது "ஒப்பவற்றுலே"......ற்று. கிளையொப்புமை மரங்கள் உயிருடைய; கிளையொப்புமையால். கிளையொப்புமை யாவது - வாழைக்கன்று வாழையாதல் முதலாகக் கொள்க. பசுவின் கன்று பசுவானது போல என்றற்கண், கிரந்தியும் வெப்புங் கிளை போறலின் அவற்றிற்கும் உயிருண்டோ? என்று திரிவு சொல்லினை அவை கிளையொக்குமெனினும் உயிருடைய வுடம்பிற் றோன்றுதலின் உயிருடைய வெனினுமாம்; பிணத்தின் அவை தோன்றாமையின்.

இனி, மரத்தின் கிளையும் மரமாவதற்போல, வெப்பு உடம்பின் கிளையாய்த் தோன்றுகின்றதோ? வாழை தொட்டாற் குளிர்வதுபோல வுடம்பு தொட்டாற் சுடுவதன்றோ வெப்பெனப்படுவது; நின் அறிவை மண்ணோடு மண்ணாக்கி விட்டாய் என்றவாறு.

நினக்கிருந்த அறிவை மண்ணாக்கிவிட்டாய் என்பாள் நினக்குப் பரந்துணர் உண்மையைப் பார்ப்படுத்தாய் என்றாள். இஃது அவன் அறிவின்மையைக் கூறியபடியாம். கிளை-வழித்தோற்றமுமாம். (௧௦௨.

௩௬௬. வாட்டங்க ளுண்மையின் வாழ்மரஞ் சேர்ந்தவை
நாட்டிய வாதலி னல்லுயி ரோவெனக்
காட்டிய தோலோத் திராமையும் வாடுமத்
தோட்டஞ்செய் சேம்புயிர் தோன்றுடி வன்றோ.

(இ - ள்.) வாழ்மரம் வாட்டங்கள் உண்மையின் சேர்ந்தவை- வாழுகின்ற மரங்கள் துணிக்கப்பட்டுழி வாடிப் போதலாலே; மகன்போல உயிர்ப் பொருளிற் சேர்ந்தவை என்றேமாக; தோல் நாட்டிய ஆதலின் நல் உயிரோ என - நீ ஏடா! யாங்கள் வாழுகின்ற தோலும் கீறிப் போகட்டவழி வாடுதலின் அதற்குமுயிருண்டோ? என்று வினவி; காட்டிய தோல் ஒத்திராமையும்-எடுத்துக்காட்டப்

பட்ட தோல் மரங்களை ஒத்திராமையும்; வாடும் அத் தோட்டஞ் செய் சேம்பு உயிர் - வாடுகின்ற தோட்டத்திலே பயிர் செய்யப்படுகின்ற சேம்பு கரும்பு முதலாயின உயிர்ப் பொருளே என்பதும்; தொன்முடிவு அன்றோ - முன்னரே கூறிய ஏதுக்களாலே முடிந்தன வல்லவோ என்றாள் என்க.

(வி - ம்.) இது "சேர்ந்திட"......ற்று.

இனி, மரங்கள் உயிருடைய துணிபட்டுழி வாடிப்படுதலாலே மகன்போல என்புழி; தோல் கீறிப் போகட வாடுதலின் அதற்குமுயிருண்டோ ? எனின்; அஃதுணங்குகின்றதல்லது வாடுகின்றதன்று; என்னை ? கீறிப் போகடாவிடினும் உலருமாதலான்; மரம் துணித்துழியல்லது வாடாதாதலின் அதற் கிஃதொவ்வாதாம் என்றவாறு.

இனி, துணிக்கப்பட்டாலும் சேம்புங் கரும்பு முதலாயின வாடாமையின் பாகாசித்தம் என்னும் குற்ற முடைத்தாகிய இந்த ஏதுவினால் மரங்கட்குயிருண்மை பெறப்படாதாம் பிறவெனின்; அற்றன்று, ஈர விறகு முதலாயினவற்றோடு கூடிய நெருப்பினல்லது நெய் முதலிய வற்றோடு கூடிய நெருப்பிற் புகையின்மையின் புகை யாகிய ஏது பாகாசித்தமாகலின் தீயுண்மை பெறப்படாதாயின் இதுவும் பெறப்படாதாமென்க. (பாகாசித்தம் ஒருவகை ஏதுப்போலி.) ஆதலால் உயிருள் பொருளினல்லது நிகழாத இந்த ஏதுவால் மரங்களுக்கு உயிருண்மை பெறப்படும்; சில மரங்கள் உயிருடையவாறாற் பிற மரங்களும் மரங்களாதலின் உயிருடையவாம் என்க.

இனி, தொன்முடி வன்றோ என்றது - முன்னரே உறங்குதலால் அவற்றிற் குயிருடைமை முடிந்தவாறு முடியும் என்றவாறு; (கூகூ.) இனித் தோல் ஒத்திராமையும் (கூகூ.)'யாதினும்' என்னுஞ் செய்யுளில் முடிந்தது என்க. ஈராமையும் வாடும் என்பதனைக் குறுக்கல் வழிக் குறுக்கி இராமையும் வாடும் என்றாரெனினுமாம். இதற்குத் தோல் ஈரினும் ஈராவிடினும் ஒத்து வாடும் எனப் பொருள் கூறுக.

இனித் துணிக்கப்பட்டாலும் சேம்பு முதலியன வாடாமையில் வாடும் என்பது அசித்தம் ஆமென்றாளாக அதற்கு விடையாகச் சேம்பு முதலாயின துணித்துப் போகட்டால் சிறிதுகாலம் கழித்தாயினும் வாடும்; காட்டட்டை முதலாயின சில நாட்கிடந்து சாவதுபோல என்பாள், அத்தோட்டஞ் செய் சேம்பு வாடும் என்றாள் என்க. வாழ் மரம் வாட்டங்கள் உண்மையின் உயிர் சேர்ந்தவை என ஓதுக. இனி சேர்தல்-துணித்தல் எனக் கொண்டு அதற்கியையக் கூட்டினுமாம். (கoகூ)

கூஎo. அற்ற வுடம்புக ளாறுத லான்மரந்
தெற்ற வுயிருண்மை செப்பத்தி னுமெனப்
பெற்ற பிழைசோல்லிப் பித்தெழுந் தாரோப்பக்
குற்ற மிவையெனக் கூறுதி யன்றே.

(இ - ள்.) அற்ற உடம்புகள் ஆறுதலால் - ஏடா ! மாங்கள் உடம்பு புண்பட்டுத் தீர்ந்த வடுக்கள் ஆறுதலாலே; மரம் உயிர்

உண்மை தெற்ற செப்பத்தின் ஆம் என - மரங்கள் உயிருடைய என்பது தெளியச் செவ்விதாக முடியும் என்று கூறினேமாக; பித்து எழுந்தார் ஒப்ப - நீயோ பித்தேறினார்போல; பெற்ற பிழை சொல்லி - நின் புல்லறிவாற் பெறப்பட்ட பிழை பலவற்றைச் சொல்லி; இவை குற்றம எனக் கூறுதி - நீயிர் கூறும் இவை குற்றமுடைய எனக் கூறுகின்றாய் என்றாள் என்க.

(வி - ம்.) இது "நேரொத்து வாடுறு"......ற்று.

யாங்கள் மரங்கள் உயிருடைய; புண்பட்டுத் தீர்ந்த வடு ஆறுத லால்; மக்களுடம்புபோல; என்றற்கண், நீ, 'காரத்தால்' பொன் கது வாய்ப்பட்டால் (வடுப்பட்டால்) தீரும். காந்தத்தால் வாள் வடுப் பட்டால் ஆறும்; அவற்றிற்கும் உயிருண்டோ? என்று வினவுதி. பொன்னும் வாளும் சுத்தியிட்டு ஒக்கத் தட்டினவாறுபோலக் காரமும் காந்தமும் படுதலின் ஒத்துநிரவி நின்றதல்லது வடு ஆறுதலில. உளவேல் மரங்குறைபட்டது நிரம்பினவாறுபோலக் காரத்தாற்குறை பட்ட பொன்னிரம்பவேண்டும்; இன்னும் மரம் தானே வடு ஆறப் பெறும். பொன்னும் வாளும் காரத்தாலும் காந்தத்தாலும் நிரவி நிற்கும். இஃதறியாது நீ பித்தேறினார்போலப் பிழை கூறினாய் என்றவாறு. (௧0௪)

தெற்ற - தெளிய. செப்பம் – செம்மை.

௩௭௧. காட்டின மண்ணை முதலா வுடையன
வோட்டி யுரைத்த வுயிரென வோட்டலர்
நாட்டினுள் வாழ்பவ ரின்னரென் றுவந்த
நாட்டை யவரென்ன நாட்டிய வாறே.

(இ - ள்.) காட்டின மண்ணை முதலா உடையன - எடா! நீ காட்டிய மண் முதலாகவுடையனவற்றிற்கு; ஓட்டி உரைத்த உயிர் என ஓட்டலர் - ஏற்றிக் கூறியபடி எம்மனோர் ஒருகாலமும் உயிர் உண்டென்று கூறுவதிலர்; யாங்கள் அவ்வாறு கூறுவேமென்று கூறுவது அறியாமையேயாம்; இனி அது நிற்க. நாட்டினுள் வாழ்பவர் இன்னர் என்று ஆ - எம்மனோர் ஒரு நாட்டின்கண் வாழ்வோர் இன்னவர் என்று பொருளாகும்படி; அந்த நாட்டை அவர் என்ன நாட்டிய ஆறு - அந்த நாட்டை அவர்க்கு ஆகு பெயராக நிறுத்திக் கூறியபடியாம்; நீ அஃதறியாய் போலும் என்றாள் என்க.

(வி - ம்.) இது "மரங்களுங் கற்களு"......ற்று.

நின்றாற் காட்டப்பட்ட மண் முதலியவற்றிற்கு உயிருண்டு என்று எம்மனோர் ஒருகாலத்துஞ் சொல்லார், இது நின் பேதைமையாற் சொல்லினாய்.

"நீர்மர விலங்கள் செல்லும் விலங்கொடு மக்கடம்பில்" (மேரு மந்தரம் - வைசயந். ௭௪) என்பது தானும் நாட்டுள் வாழ்வாரை

ராடென்றவாறுபோல, நிலத்தில் வாழும் உயிரை நிலம் என இடத்தின் பெயர் இடத்தின் நிகழ்வதற்காகிய ஆகுபெயர் வகையாற் சொல்லப்பட்டது என்றவாறு. (௧0௫)

௩௭௨. தாவர மாய மரமிவை தாமெண
யாவருஞ் சொல்லுப வஃது மறிந்திலை
நீவி ரெவர்சொல்லச் சொல்லினீ ரென்றுநின்
சீவரம்போற் கட்டில் செப்புவ தென்ளே.

(இ - ள்.) யாவரும் மரம் இவைதாம் தாவரம் ஆம எனச் சொல்லுப - எம்மனோரெல்லாம் மரமாகிய இவையெல்லாம் நிலையிய லுயிர்கள் ஆயின என்று சொல்லுவர்: அஃதும் அறிந்திலை - நீ அதனையும் அறிந்தாயில்லை; நின் சீவரம்போல் கட்டில் என்று - நின்னுடைய துவராடையையே ஒத்த இயங்கியற் பொருளாகிய கட்டிலை ஒக்கும் என்று; செப்புவது என் - கூறுவது எற்றிற்கு?; நீவிர் எவர் சொல்லச் சொல்லினீர் - நீயிர் யார் சொல்லக் கேட்டிவ்வாறு சொன்னீர்? என்றாள் என்க.

(வி - ம்.) இது "வந்தீங் குவைகுங்கள்"......ற்று.

யாங்கள் மரங்களை நிலையியலுயிர் என்பதல்லது ஒன்றினொன்று ஏறுதலும் இடம் பெயர்ந்து போதலும் உடைய என்று சொல்லோம். என்னை?

"விலங்கின் வகையும் விரிவன யான்சொல்ல வேண்டுதியேல்
அலங்கலம் பூணு யிருவகை யாமவை யென்கொ லென்னின்
நிலங்களி னிற்பவும் செல்பவு மாமென நிற்பனதாம்
இலம்பட லின்றியிவ் வையகத் தைந்தா யியன்றனவே"
(இந்நூல் – செய். ௭௭)

என்பதெம்மோத்தாதலுங் காண்டி.

இங்ஙனமாகவும் சீவரம் போலப் பிறராற் புடை பெயர்வதாகிய கட்டிலை எடுத்துக்காட்டாக எற்றிற்குக் கூறினை? நீ யார் சொல்லக் கேட்டிது கூறுகின்றாய்? என்றவாறு. அறிந்திலை நீவிர் சொல்லினீர் என்புழி இழிப்பின்கண் ஒருமை, பன்மை யாயிற்று. (௧0௬)

௩௭௩. மக்களுட் டோன்றிய போழ்த மரவுயிர்க்
கொப்ப வுடம்பறி வன்றியொன் றில்லெனிற்
றக்கதன் றன்மையுடைப் போதி சத்துவன்
மிக்கதென் னோதிக்கு வேற்றுமை வேண்டார்.

(இ - ள்.) மக்களுள் தோன்றிய போழ்து - ஏடா! நீ ஒன்றறி உயிராகிய மரம் செத்து மக்கட் பிறப்பிலே பிறந்த பொழுதும்; அ மரவுயிர்க்கு ஒப்ப - அம்மரவுயிர்க்கிணைய; உடம்பு அறிவு அன்றி - உடம்பாலறிவதாகிய ஊற்றறிவை யன்றி; ஒன்று இல்

எனில் - பிறிதோரறிவும் இல்லையாதல் வேண்டும் என்பாயாயின்; அன்மையுடைப் போதி சத்துவன் - ஆறறி பிறப்பல்லாமையை யுடைய முயலாகப் பிறந்த புத்தன் மீண்டும் புத்தனும்ப் பிறந்துழி; ஓதிக்கு மிக்கது என் - ஓதிஞானம் பெறுமளவிற்கு மிகுந்த தென்னேயோ? இதனை ஒப்பும் நீ இங்ஙனம் கூறுவது; தக்கது அன்று - தகாதுகாண்; வேற்றுமை வேண்டார் - மேலும் எம்மனோர் அறிவுடைய உயிர்கள் வேறுபட்டுப் பிறக்குமென்ப தல்லது அறிவு வேறுபட்டுப் பிறக்கும் என்னார். எனவே எமக்கது குற்றமாகாது என்றாள் என்க.

(வி - ம்.) இஃது "ஓரறி வாமுயிர்"......ற்று.

ஓரறிவுயிர் இறந்து மக்கட்பிறப்பிற் றோன்றினும் ஓர் அறிவே உடைத்தாதல் வேண்டுமெனின், முயலாய்ப் பிறந்து குறைந்த அறிவுடைய அது மகனாக நாற்பொருளுணர்வோனாக வேண்டுவதில்லை; வேண்டின், மக்களுட் பிறந்தால் ஐந்தறிவுடைத்தா மென்பது தக்கதன்றென வேண்டார் என்றவாறு.

இனி, அறிவு முதலிய பண்புடைய வுயிர் மேலுலகங்கட்குச் செல்வ தல்லது, அறிவு முதலிய குணங்கள் மேலுலகத்துச் சென்று வேறுபட்டுப் பிறக்குமென்பது வேண்டாவாம். வேறுபட்டுப் பிறக்க வேண்டினன்றே ஒன்றறியு மறிவே சென்று பிறத்தலின் ஒன்றறியு மறிவேயாகல் வேண்டுவது; அஃதன்றி ஒன்றறியுமறிவோடு நின்ற வுயிரே வேறுபட்டுப் பிறக்கு மென்றலின் எமக்குக் குற்றமாகா தென்றவாறு.

அன்மை - ஆறறிவன்மை என்க. (௧0௭)

௩௭௪. நாண முடைய மரமுத லியாவையும்
ஊணின வாழ்ந்துமுண் ணாவிடிற் சாதலைக்
காணவும் பட்டது கஞ்சியோ டல்லதை
யாண மிலாப்பொரு ளாட்சியர் போன்றே.

(இ - ள்.) நாணம் உடைய மரம் முதல் யாவையும் - ஓர் அறிவுடைய மரமுதலியன எல்லாம்; ஊணின வாழ்ந்தும் - உணவு பெற்றன வாழ்ந்தும்; உண்ணாவிடின் - உணவு பெறாவிடின், சாதலை - பட்டுப் போதலையும்; காணவும் பட்டது - காட்சியளவை யாலறியப்பட்டது; ஆணம் இலாப் பொருள் ஆட்சியர் - அன் பற்ற பொருளை ஆளுகின்ற நும் பௌத்தர்கள்; கஞ்சியோடு அல்லது போன்று - உணவுண்டாலல்லது சாதல் போன்று; என்றாள் என்க.

(வி - ம்.) இதுவும் மரங்களுக்கு உயிருண்மை யுணர்த்தும்.

அறிவுடைய மரங்கள் எல்லாம் உண்ணின்வாழ்ந்தும் உண்ணாவிடின் சாதலும் காண்டலின் உயிருடைய; இவ்வாறாகிய சாக்கியரைப்போல என்றவாறு. சாதலையும் எனல் வேண்டிய உம்மை தொக்கது. காணவும்

பட்டது: பன்மை ஒருமை மயக்கம். ஆணமில் பொருளாட்சியர்—என்றது பௌத்தரை. ஆணம் - அன்பு. அஃதின்டு ஆகுபெயராய் உயிர் என்பது குறித்து நின்றது. உயிருண்மை அறியாத மடவோராகிய சாக்கியர் என்றிகழ்ந்தபடியாம். நாணம் – அறிவு. ஈண்டு ஒன்றறியும் அறிவின் மேற்று. (௩௦௪)

நூலாசிரியர் கூற்று

வேறு

௩௭௫. மயக்குடை யாட்சியி னோர்க்கு மரங்கட்கு மன்னுயிர் தாம்
பயப்பட வொக்கு மெனவே யெனமன்னும் பற்றிலனாய்
வியப்புடை யாகம மீதென நீயும் விரித்துரைக்கு
நயப்பிர மாணங்கண் மேற்குற்ற நாடுவன் யானெனவே.

(இ - ள்.) மயக்கு உடை ஆட்சியினோர்க்கும் - நீலகேசி, இவ்வாற்றால் துயில் மயக்கமுடைய சாக்கியனோர்க்கும்; மரங்கட்கும் மன்னுயிர் தாம் பயப்பட ஒக்கும் - மரங்களுக்கும் நிலையுதலுடைய உயிருண்மை பயனுண்டாகும்படி ஒப்பதாகும்; என - என்று கூற; பற்று இலனாய் - அதுகேட்ட மொக்கலன் அவள் கூற்றின் கண் பற்றில்லாதவனாய்; நீயும் வியப்பு உடை ஆகமம் ஈது என விரித்து உரைக்கும்-எடி நீ தானும் வியப்புடைய எமது பரமாகமம் இஃது என்று பாராட்டி விரித்துக் கூறுகின்ற; நயம் பிரமாணங்கள் மேல் - நயம் என்னும் அளவைகளின் மேல், யான் குற்றம் நாடுவன் என - இனி மான் குற்றங்களை ஆராய்ந்து சொல்லுவேன் என்று தொடங்கி யென்க.

(வி - ம்.) உறங்குகின்ற சாக்கியனுக் குயிர் உண்டானவாறு என்னென்று யான் கேட்புழி; நீ சாக்கியன் உறங்குங்கால் 'கப்பியம்' என்று வாய் வருவுதலின் (பிதற்றுதலின்) உயிருண்மை பெறும் எனின்; வருவாதபோது (பிதற்றுதபோது) உயிரிலனாம். இனி அவன் உயிர்த்தலால் உயிருண்டெனின், துருத்திக்கும் உயிருண்டு; உயிர்த்தலான் என்று கொள். இண்டிறுக்கென்னும் அநுகரணத்தால் கொரக்கை விடுதலாற் சாக்கியனுக் குயிர் உண்டெனின், நீர்புக்குருண்ட பானை அவ்வாறு கொரக்கை விடுதலின் அதற்குமுயிருண்டென்று கொள்; அவன் பல் இறுகுகின்றுறுதலாலுயிருடையனெனின், உலர்ந்த மூங்கில்கள் 'நெறுக்' கென்றலின் உயிருடைய வென்று கொள்! என்றவாறு.

இவற்றாற் போந்த பொருள் இவை போலும் நீ மரமுயிரில என்று சொல்லியவாறென்பதாம்.

இன்னும், நீ சொல்லிய திரிவுகளால் மரத்துக் குயிரில்லை யெனின், யான் சொல்லிய திரிவுகளால் உறங்குகின்ற சாக்கியனுக்கும் உயிரில்லையாய் அவனை விறகிலிடப்படும் என்று சொல்லி, உறங்குஞ் சாக்கியனுக்கும் மரத்துக்கு மொப்ப உயிருண்மை முடிப்ப, அதுகேட்ட மொக்

கலன் இனி நீ சொல்லும் நயப் பிரமாணங்களின்மேல் யானும் குற்றங் கூறுவேன் என்று தொடங்கினன் என்க.

மயக்கம் – துயில் மயக்கம் என்க. நயப் பிரமாணம் – இதனியல்பு தருமவுரைச் சருக்கத்தில் ககக ஆம் செய்யுளில் விளக்கப்பட்டது ; ஆண்டுக் காண்க. (க0௯)

மொக்கலன் குற்றங் கூறுதல்

௩௭௬. நிற்றலுங் கேட்டினோ டுண்மையு மின்மையு நேர்தலினு
மொற்றுமை வேற்றுமை தம்மையு மொட்டப் படுதலினுங்
குற்ற மிவையிவை யாதலைக் கேளெனக் கூறினனே
முற்று மவளது பக்க மறிதலில் மொக்கலனே.

(இ - ள்.) முற்றும் அவளது பக்கம் அறிதல் இல் மொக்கலன் - நீலகேசியின் மேற்கோள் முழுவதும் அறிந்திலாத மொக்கலன்; நிற்றலும் கேட்டினோடு உண்மையும் இன்மையும் நேர்தலினும் - நீலகேசி ! நீ ஒரு பொருளின் கண்ணே நிலைத்தலும் நிலையாமையும் உளதாந் தன்மையும் இலதாம் தன்மையும் ஒருங்கே கூறுதற் கண்ணும்; ஒற்றுமை வேற்றுமை தம்மையும் ஒட்டப் படுதலினும் - நின்னால் ஒற்றுமையும் வேற்றுமையும் அவ்வொரு பொருட்கண் கொள்ளப்படுதலினும்; இவை இவை குற்றம் ஆதலைக் கேள் என - இன்னின்ன குற்றமாதலை யான் எடுத்துக் கூறக் கேட்பாயாக என்று கூறினன் என்க.

(வி – ம்.) நீலகேசியின் மேற்கோளறியாது மொக்கலன் குற்றங்கள் இவை இவை ஆதலைக் கேளென்றான்; என்றவாறு.

நிற்றல் – நிலைத்தல். கேடு–நிலையாமை. உண்மை-உள்பொருளாந் தன்மை. இன்மை-இல்பொருளாந் தன்மை. பக்கம்-மேற்கோள். (ககO)

௩௭௭. வேயொத்த தோளி நிலையுதல் வேண்டப் படுதலினுற்
காயத்தின் றன்மைய வாயெக் கருமமுங் காண்பரிதா
நாசத் தவமெனிற் றோன்றுவ தாமு நவநவமாம்
தோசத்த வாநின் பொருளெனக் கேட்டிது சொல்லினனே.

(இ - ள்.) வேய் ஒத்த தோளி - மூங்கிலை யொத்த தோளை யுடையோய்!; நிலையுதல் வேண்டப்படுதலினால் - பொருள்களுக்கு நிலைத்தற்றன்மை நும்மால் கொள்ளப்படுமிடத்து; காயத்தின் தன்மையவாய் - அப் பொருள்கள் வானத்தின் றன்மையுடைய வாகி; எக்கருமமும் காண்பு அரிது - எந்தச் செயலும் அவற்றினின்றும் தோன்றக் காண்டல் இல்லையாம்; நாசத்தவம் எனின் - அங்ஙனமன்றிப் பொருள்கள் நிலையுதலுடையவல்ல என்பீராயின்; தோன்றுவ தாமும் நவம் நவமாம் - மேற்பிறப்பனவெல்லாம் புதிய

புதிய பொருள்களாகும், நின் பொருள் தோசத்தவாம் என-ஆதலால் உன்னுடைய பொருள் பற்றிய மேற்கோள்கள் குற்ற முடையனவாம் என்று மொக்கலன் கூற; கேட்டு இது சொல்லினள் - அது கேட்டு நீலகேசி இம் மறுமொழியைக் கூறினள் என்க.

(வி - ரை.) இது பொருளின் நிலையுதலும் நிலையாமையுமாகிய வற்றிற்குக் குற்றங் கூறுவதாகிய "நின்றுந் பிரகாசமே போல்" என்னுஞ் செய்யுட் கருத்தைக் கொண்டு கூறியபடியாம்.

போன செய்யுளிற் குற்றமிவையிவை யென்பதனு லிந்தப் பண்புகள் ஒன்றிற் கிடத்தலாவது அப் பொருளினது நிலைமையோ? பொருளிலே பிறவற்ருற்றரப்படுமோ! பொருளினது தன்மையோ? என்று மொக்கலன் கேட்ப, பொருட்டன்மையால் இவை பொருளிற் கிடங்குங்காண் என்று நீலகேசி சொல்ல, அதுகேட்ட மொக்கலன் தோளீ? நிலைத்திருத்தல் பொருட்குத் தன்மையாயின் அதனினின்று யாதொரு காரியமுந் தோன்ருது வானம்போல; திரிவு என்று நும்மாற் கூறப்பட்ட அழிவு பொருட்குத் தன்மையாயின் மேற் பிறப்பனவெல்லாம் புதியனவாம்.

இனி நிலைத்தலும் அழிதலும் ஆகிய இரண்டும் ஆகாதெனின் பொருட்கு நிகழ்ச்சியில்லை; ஒருவகையாலெனின், பொருள் ஒருவகையால் கெடுவதாம் என்னும் குற்றமுடையன என்று சொல்லினன், என்றவாறு. என்னை?

"சென்றெய்து மவத்தையோ சிலவற்ருற் றரப்படுமோ
வன்றியு மப்பொருள் தோறவ்வத் தன்மையோ"

எனவும்,

"நின்றதூஉந் திரிந்ததூஉ மன்ருயி னிகழ்வில்லை
யொன்றிய வொருவகையேல் ஒருவகையாற் கேடுண்டோ"

என்வுங் கூறினனுதலின். இவற்றுண் முதலது குற்றம், 'இவையிவை' என்பதனுற் பெறப்பட்டது. ஒழிந்தது, 'தோசத்ததா நின்பொருள்' என்பதனுற் பெறப்பட்டது. புதியன தோன்றலாவது - முன்புள்ளது கையற நசித்துப் பிறிதொன்று தோன்றுதலாம். இதனுல் நிலைத்தலுடைத்தாயினும் நிலையாமையுடைத்தாயினும் மீட்டுணர்ச்சி முதலிய அளவைகள் கூடாதென்று சொல்லினுன் என்பது போந்ததென்பதாம்.

நாசத்தவம் - நாசத்வம்; அழிவு. நவம் - புதுமை. தோசம் - குற்றம். பொருள் - பொருளைப்பற்றிய மேற்கோள். (௧௧௧)

௩௭அ. நின்றன வேயென்று நில்லல
வேயென்று நேர்பவர்க்கு
மொன்றென வேயும்பின் வேறென
வேயுந்தம் முண்மையின்கட்

சென்றன வேயென்றுஞ் செல்லல
வேயென்றுஞ் செப்பினர்க்கே
அன்றென லாமோ வறைந்தபல்
குற்ற மவையவையே.

(இ - ள்.) நின்றனவே என்றும் நில்லலவே என்றும் நேர்பவர்க்கும் - ஏடா! பொருள்கள் எஞ்ஞான்றும் நிலையுதலுடையனவே என்றும், பொருள்கள் நிலையாமையுடையனவே என்றும் தனித்தனி மேற்கோளுடைய சமயக் கணக்கருக்கும், ஒன்று எனவேயும் பின் வேறு எனவேயும் - பொருள் ஒன்றே பிறிதில்லை என்றும், இன்னும் பொருள் ஒன்றல்ல பலவாம் என்றும், தம் உண்மையின்கண் சென்றனவே என்றும் - பொருள் தம்முண்மைத் தன்மையின் உளவாம் என்றும், செல்லலவே என்றும் - உளவாந் தன்மையில்லாத இல் பொருள்களே என்றும் தனித்தனி மேற்கோள், செப்பினர்க்கே - கூறுகின்ற சமயக் கணக்கருக்குமே, அறைந்த பல் குற்றம் அவை அவை - நீ கூறிய பல்வேறு குற்றங்களும் அவ்வவையாகவே உளவாம்; அன்று எனல் ஆமோ - அவர்கள் அக்குற்றம் தங்கட்கில்லை என்று கூறலாகாது. ஆயின் யாங்களோ பொருள்கள் ஒருவாற்றான் நிலைத்தலும் ஒருவாற்றான் நிலையாமையும் உடைய என இவ்வாறு பிறவும் கூறுவேமாதலின் எமக்கு அக் குற்றங்கள் உளவாகா என்றாள் என்க.

(வி - ம்.) இஃது அவன் கூறிய குற்றங்களை விலக்குகின்றது.

யாங்கள் ஒருவாற்றான் நிலைத்தலும் ஒருவாற்றான் நிலையாமையும் உடைய என இவ்வாறு பிறவுங் கூறுவேமாகலின் எமக்கு அக் குற்றங்கள் உளவாகா என்பது குறிப்பெச்சம்.

பொருள் நிலையுதலுடையது என்றும், நிலையாமையுடையதென்றும், ஒன்றென்றும். பலவென்றும், உண்டென்றும், இல்லையென்றும் தனித் தனியே ஒவ்வொரு மேற் கோளேயுடைய பல்வேறு சமயக்கணக் கர்க்கும் நீ கூறிய குற்றங்கள் உளவாம்.

யாங்களோ அவ்வாறன்றித் தேவதத்தனில் இளையன், யக்ஞ தத்தனில் மூப்பன் பிரமதத்தன் என்றவழியும், கல்வியா னல்லன், காமத்தாற் றீயன் என்றவழியும் என்ன குற்றமாம்?; பிரமதத்தன் இளையானேயுமன்றி மூத்தானேயுமன்றி யொருவனிலிளையானுயும், ஒருவனில் மூத்தும் நல்லனேயுமன்றித் தீயனேயுமன்றி, ஒன்றானல்ல னுயும், ஒன்றாற்றீயனுயு'மிருக்கின்றிலனோ? அவ்வாறே யொருமுகத் தால் நிலையுதலும், ஒருமுகத்தா னிலையாமையும் ஒரு பொருட்குரைத்து மாதலின் எமக்கொரு குற்றமுமில்லை யென்றவாறு.

''கல்வியா னல்லனே காமாதி யாற்றீயான்
செல்வத் துயர்ந்தான் குலத்தினிற் றாழ்ந்தனனும்
வல்லுவா னென்றொன்று வல்லா னிதுவன்றோ
நில்லாமை நிற்ற னிலை''

"ஒருமுகத்தா னிலையினதே யொருமுகத்தா
னிலையாதென் றுரைமா றில்லா
விருமுகத்த தொருபொருளி னியல்பென் று
மொழிந்தவர்தம் மிருக்கை போலாம்"

என்பன எம்மோத்தாகலின். ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும்; அவையும் ஓரோவொரு முகங்களாற் கொள்வேமாதலினென்க.

"அன்றெனலாமோ" என்னுமோகாரம் ஒழியிசைப் பொருளின் மேல் வந்ததாகலின் இத்துணையுந் தந்துரைக்கப்பட்டது. (௧௧௨)

௩௭௯. நின்ற குணங்களி னித்தியமென்று நிலையிலவா
மென்ற குணங்க ளநியத மென்று மியம்புதலாற்
சென்ற குணங்க ளிருமையு மல்ல தவற்றினிற்றீர்ந்
தொன்றங்கு நின்ற பொருளுள்ள தேலா தெனவுரைத்தான்.

(இ - ள்.) நின்ற குணங்களின் நித்தியம் என்றும் - அது கேட்ட மொக்கலன், நீலகேசி! நீதானும், பொருளின்கண் எஞ் ஞான்றும் ஒன்றாகி நிலைத்து நின்ற பண்புபற்றி அது நிலையுத லுடைய தென்றும், நிலையிலவாம் என்ற குணங்கள் - அப் பொருளின் வேறாகி நிலைத்தல் இல்லாத பண்புபற்றி; அநியதம் என்றும் - பொருள் நிலையாமையுடையதென்றும்; இயம்புதலால் - கூறுதலாலே; சென்ற குணங்கள் இருமையும் அல்லது - அப் பொருளிற் சென்ற இருவேறு பண்புகளையன்றி; அவற்றில் தீர்ந்து - அப்பண்புகளினின்றும் வேறாக; நின்ற பொருள் ஒன்று அங்கு உள்ளது ஏலாது எனவுரைத்தான் - தனித்து நின்ற ஒரு பொருள் அவ்விடத்தே உள்ளது என்று கோடல் பொருந் தாதுகாண்! என்று கூறினன்; என்க.

(வி - ம்.) இது "நித்ய குணங்களால்" எனவும், "அநித்ய குணங்களால்" எனவும் வருமிரண்டு செய்யுட் பொருளையும் கொண்டு கூறியபடியாம்.

போன செய்யுள்களில் நிலைத்தலும் நிலையாமையுமுதலியன ஓரோ வொருமுகங்களாற்கொள்வேமென்றாட்கு, நிலைத்தலும் நிலையாமையும் எம் முகங்களாற் கொள்ளப்படுமென்று மொக்கலன் கேட்ப, பொருளோ டொன்றாந் தன்மையாகிய பண்பால் நிலையுதலும், வேறாந் தன்மையாகிய நிலையில்லாப் பண்பால் நிலையாமையும் கொள்ளப்படும் என்று நீலகேசி சொல்ல மொக்கலன் ஏடி! நீ நிலைத்த பண்பால் நிலையு தல் ஆம் என்பாயாயின் அந்த நிலையுதலுடைய பண்பே நிலையுத லுடையதாம் பொருள் அன்று. இஃதென் சொல்லினையோ? என, நீல கேசி ஏடா! ஒருவன் கல்வியால் நல்லன்; காமத்தாற் றீயன் என்றால் கல்வியே நன்றாகும்; அவனுக்கு நன்மை என்னையோ? என்றும் காமமே தீதாகும் அவனுக்குத் தீதியாது? என்றும் சொல்லலாமோ? என்றாள். அதுகேட்ட மொக்கலன் நீ கூறிய நிலைத்த பண்பும் நிலையாப் பண்பு

மன்றி யான் பொருள் ஒன்று இவற்றின் வேருகக் கண்டிலேன் என்ருன் என்றவாறு.

இனி, ஒரு பொருளின்கண் சொன்முறை வேற்றுமையால் பண்பு வேற்றுமை வருமாறும் அவ்வாறு வந்தவழி முரண்முதலிய குற்ற மின்மையும் காட்டுதற்கு இந்த எடுத்துக் காட்டுக் காட்டப்பட்ட தென்க. உரையிற் கோடல் என்னும் தந்திரவுத்தியால் தெளிவுபற்றி யித்துணையுந் தந்துரைக்கப்பட்டது. (௧௧௩)

௩௭௦. கேடில வாய குணத்தி னிலையுங் கெடுங்குணத்தி
னீடல வென்பது நேர்ந்தினி யப்பொரு ணேர்தலில்லாய்
மூடலை யாவதன் காரண மென்னை முடிகுணத்திற்
கூடல தாய குணிப்பொருள் கூறினர் யாவரென்ருள்.

(இ - ள்.) கேடு இலவாய குணத்தின் நிலையும்- பொருளோடு ஒன்றிக் கெடாது நிற்குங் குணத்தின் நிலைத்தற்றன்மையையும்; கெடுங் குணத்தின் - நிலையாத பண்புகள்; நீடு அல என்பதும்— நிலையாமையுடையன என்பதனையும், நேர்ந்து - நீ ஏற்றுக் கொண்டு; இனி அப் பொருள் நேர்தலிலாய் - அப பண்புடைய பொருளுண்மையை ஏற்றுக் கொள்கின்றிலை; மூடலை ஆவதன் காரணம் என்னை - நீ இவ்வாறு அறிவு மறைபடுதலை உடைமை ஆதற்குக் காரணம் யாதோ?; முடி குணத்தின் கூடாது ஆய- தனக்குரிய பண்போடு பொருந்தாத; குணிப்பொருள் யாவர் கூறினர் என்ருள் - பண்பிப் பொருளுண்டென்று இதுகாறும் யாரே கூறினர், என்ருள் என்க.

(வி - ம்.) இது, மேற் கூறிய குற்றம் நீக்குகின்றது.

ஏடா! நீ நிலைத்தலும் நிலையாமையுமுடைய பண்புகளை ஏற்றுக் கொண்டு அவற்றையன்றிப் பொருள்வேறு காணேன் என்புழிப் பொருளையும் ஏற்றுக்கொண்டாயாகின்றனை; நீ இங்ஙனம் அறிவு கெடுதற்குக் காரணம் என்னை? குணமுண்டாயின் குணியுமுண்டாதல் தேற்றமன்றே? மேலும் நீ "சர்வக்ஞ மநந்த குணம்பிரணம்ய" எனவும், "குறையில்லாக் குணத்தானைக் கூறுதற்கு மேற்கொண்டான்" எனவும் குணமுங் குணியுமாகக் கூறுகின்றாயன்றே? குணியை யொழியக் குணம் உண்டாகுமோ? உண்டாயின் நிலம் வலிது நீர் துவளும், தீத்தெறும், காற்றுளரும் என, இதனுள் நிலம் என்பதொரு பொருளாகவும், வன்மை என்பது அதன் குணமாகவும் சொல்லியதென்னை? இந்தப் பொருந்தாக் கூற்றுக்கள் நின்னை யொழியச் சொல்ல வல்லவர் யாவர்? என்றவாறு.

இனி, பொருளோடு நிலையுதலுடைய குணமும் நிலையாமையுடைய குணமும் பொருளும் காட்டல் வேண்டுமெனின், கடல் என்னும் பொருளில் நீரின் குணமாகிய குளிர் முதலியன அதன் நிலைக்குணங்களாம். கடலின் முழக்க முதலியன நிலையாக் குணங்கள் இவ் விருவேறு குணங்களையுடைய கடல் பொருளாம். அன்றியும், பொன் என்னும் பொருளில் நிறமும் திண்மையும் கவர்ச்சியும் முதலாயின நிலைக்குணமாம். வன்னம் முடி வளை முதலியன நிலையாக் குணங்களாம்; இங்ஙனம் இருவேறு

குணங்களையும் உடைய பொன், பொருளாம். இவற்றுள் நிலைக் குணங்களின் நிலையுதற்றன்மையையும் நிலையாக் குணங்களின் நிலையாமையையும் உணர்க. இங்ஙனமாதலின் பொருள் நிலைத்தலும் நிலையாமையும் உடைத்தாம் என்றவாறு. (ககச)

### மொக்கலன் கூற்று

கூஅக. குணங்களல் லாற்பொருள் வேறில்லை
யாயிற் குறிப்பொருளாம்
பிணங்கல வாகிப் பிறபிற
வாயிற் பிறபொருளா
முணர்ந்தன தாமிரு சொல்லினு
மொன்றெனி னொன்றவையா
நுணங்கிய கேள்வியி னாயோ
னுரையென நோக்கினனால்.

(இ - ள்.) குணங்கள் அல்லால் பொருள் வேறு இல்லை ஆயின் - குணங்களே உள் பொருளாதலின்றி அவற்றின் வேறாகப் பொருள்கள் இல்லை என்றால்; பொருள் குறி ஆம் - அப் பொருள்கள் உயிரென்றும் பிற வென்றும் பெயர் பெற்றிருத்தலை நினைத்துக்காண்! என்கின்றனை; பிணங்கலவாகிப் பிறபிற ஆயின் பிறபொருளாம்-அவை தம்முள் வேறுபடாவாகியும் குணமென்றும் குணி என்றும் வெவ்வேறு பொருள்களேயாம்; உணர்ந்தன தாம் இரு சொல்லினும் ஒன்று எனின் - பெயராக அறியப் பட்ட இருவேறு சொற்களானும் அறியப்பட்ட பொருள் ஒன்றேயாகும் என்பாயாயின்; நுணங்கிய கேள்வியாய் - நுணுகிய நூற்கேள்வியையுடையோய்! அவை ஒன்று ஆம் ஒன்று உரை என - பலவும் ஒன்றுமாயிருப்பதொன்றனை (ஒரு பொருட் பல சொல்லுளவாதலன்றி) எனக்குச் சொல்லிக்காண்! என்று கூறி; நோக்கினன் - செருக்கோடு நீலகேசியை நோக்கினன் என்க.

(வி - ம்.) இது "குணங் குணி" எனவும், "பலகுணமா" எனவும், வரும் இரண்டு செய்யுட் கருத்தையும் கொண்டு கூறியபடியாம்.

குணத்துப் பிரித்துக் குணி காணேமாகில் குணியாகச் சொல்லுகின்ற உயிர் முதலியன உயிரென்பது முதலிய வேறு வேறு பெயர்கள் பெற்றிருத்தலைக் காண் என்றி. அவை தம்முள் வேறுபடாவாகியும் வேறு வேறு தனிப் பெயர் உடையன ஆயின் வெவ்வேறு பொருள்களேயாம். அவ்விருவேறு பெயர்ச் சொல்லாலும் நம்மால் அறியப்பட்ட பொருள் ஒன்றேயாம் என்பாயாயின் ஒருபொருட் பல சொல்லன்றி இங்ஙனம் பலவும் ஒன்றுமாயிருப்பதொரு பொருள் ஒன்றனை எனக்குக் கூறிக் காட்டுவாயாக! என்றவாறு.

குறி - பெயர். ஒன்றும் அவையும் ஆம்; எனல் வேண்டிய எண்ணும்மைகள் தொக்கன. அவை-ஈண்டுப் பல என்னும் பொருட்டு.

ஒருபொருள் - பல்வேறு சொல்லால் குறிக்கப்படும் ஒரு பொருள். பல சொல்லாற் குறிக்கப்படும் ஒரு பொருள் உண்டன்றிப் பலவும் ஒன்றுமாயிருப்பதொரு பொருளில்லை என்பான் ஒன்றும் அவையும் ஆம் ஒன்று உரை என்றான். நோக்கினான் என்பது செருக்கோடு நோக்கினான் என்பதுபட நின்றது. (கஃ)

## நீலகேசியின் மறுமொழி

கூஅஉ. நிலையா தெனவு முயிரில்லை
யென்று நெறிமையினாற்
றொலையாத் துயரொடு தூய்தன்மை
யென்றின்ன தொக்குளவாக்
கலையா விழுப்பொருட் கந்தங்க
ளைந்திற்கும் காட்டுதலான்
மலையா திதுநுங்கண் மார்க்கத்தோ
டென்றனள் மாணிழையே.

(இ - ள்.) மாணிழை கலையா விழுப்பொருள் - அதுகேட்ட நீலகேசி, ஏடா! தம்முட் கலைதலில்லாத சிறந்த பொருளாகிய; கந்தங்கள் ஐந்திற்கும் - ஐவகைக் கந்தங்கட்கும்; நிலையாது எனவும் - நிலையற்றன என்றும்; உயிர் இல்லை என்றும் - உயிரில்லாதன என்றும்; தொலையாத் துயரொடு தூய்து அன்மை என்று - ஒழியாத துன்பமுடையன என்றும் தூயதல்லாதன என்றும்; இன்ன தொக்கு உளவா - இப்பண்புகள் கூடியுள்ளன வாக; நெறிமையினாற் காட்டுதலான் - நூனெறியாலே காட்டப் படுதலாலே; இது - பலவும் ஒன்றுமாம் ஒருபொருள் என்று யாங்கள் கூறுமிது; நுங்கள் மார்க்கத்தொடு மலையாது - நுங்கள் பௌத்த சமயம் நெறியோடு முரண்படுவதன்று; என்றனள்- அங்ஙனமிருப்பவும் நீ எம்மைக் குற்றங் கூறுவது நின் அறியாமை யேயாம் என்றாள் என்க.

(வி - ம்.) "வாய்மையை யுணராதான் உணரொருவன் உளன் என்றுந் தூய்தென்று மினிதென்று முணர் பொருளைக் கடைப் பிடிக்கும்", என்பதனாலும், பிறவற்றாலும், ஐங்கந்தங்கள் அநித்யமும், துக்கமும், அசுசியும் அநாத்துமாவுமாயிருக்குமென்று நீயிருஞ் சொல்லுதலின் உங்கள் சமயநெறியோடும் பொருந்தும் ஒருபொருளின்கண், வேற்றுமை யொற்றுமைகளும் குணகுணி நான்கு குணங்களும் முரணு மென்றவாறு.

மலையாமையாவது - ஒரு மகனாகிய பிண்டத்தின்கண், உருவம் நுகர்ச்சி குறிப்பு பாவனை அறிவு என்னும் ஐந்துமுளவாகக் கூறுத

லாலும்; அந்தப் பிண்டத்தின் கண்ணே இன்னும் நிலையாமை முதலிய நான்குமுளவாகச் சொல்லுதலாலும் என்பதாம். என்னை ? உருவமுதலி யனவும் மகனுடைய பிண்டமும் பிரித்து வேறு காணப்படாவெனினும் உளவாய்த் தம்மில் ஒற்றுமை வேற்றுமையுடையவானவாறு போலவும், நிலையாமை முதலிய நான்கும் ஐங்கந்த பிண்டமும் இவ்வா றுதலுமுண்மையின் என்பதாம்.

அன்றியும், "ஒன்றுகுங் காரண காரியமாந் தன்மையா, லன்றுகு மொன்றல்ல வவயத்தின் நன்மையால்" என்று நீயும் ஒன்றும் பலவுமாகப் பொருள்களைச் சொல்லுதலாலும், மலையாதென்பதாம். அன்றியும், "யாதினை நீ நோக்கினு மிறந்ததற்குக் காரியமா, மாதலை யுடையதற்கே யினிச் சொல்லுங் காரணமே", என்று நீ சொல்லுதலில் நிகழும்பொழுது உள தாகியதோர் அறிவு இறந்தொழிந்த அறிவிற்குக் காரியமாகியும் மேற்றோன்று மறிவுக்குக் காரணமாகியும், தான் அறிவுப் பொருளா யிருந்தும், அறிவில்பொருளாகிய வியானன் முதலியவற்றை யுடைத் தாகியும், இவ்வாறு பற்பல குணங்களை யுடைத்தாகலின் பல குணமாய் ஒருபொருள் விரிந்தது என்புழிக் குற்றங் கூறியது நின் பேதைமையாம்; இதனாலும் முரண்படாதென்பதாம்.

நீ நின் சித்தாந்தத்தைப் பாராட்டிச் செவியறிவுறுத்துங்கால் இவ்வாறு சொல்லி, யாமிவ்வாறு சொன்னவழிக் குற்றஞ் சொல்லுதி யாயின் அக்குற்றம் உனக்கும் வருமென்று கொள் என்பதாம். இதனை அடுத்துவருஞ் செய்யுளால் விளக்குகின்றார்.

இனி, பௌத்தர் "கந்தங்கள் நிலையாமை முதலிய வுடையன என்பதனை,

"அநித்தந் துக்க மநான்மா வசுசி யெனத்
தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதல்" (மணி-௩௦-௨௫௪-௫)

எனவரும் மணிமேகலையானும் உணர்க. இன்னும்,

காரண காரிய மாகிய பொருள்களை
ஒன்றா வுணர்தல் ஒற்றுமை நயமாம்" (மணி-௩௦-௨௨௦-௧)

என வருதலும் காண்க. (௧௧௩)

௩௮௩. ஆரிய சத்தைய லாற்கந்தம்
வேறில்லை யேற்குறியா
மாரிய சத்தையுங் கந்தமும்
வேறெனின் வேறவையாம்
பேரிவை தாமிரண் டோன்றினுக்
கேயெனி னென்றவையாங்
கூரிய சிந்தையி னாயோன்று
சொல்லென்று கூறினளே.

(இ -ள்.) கூரிய சிந்தையினாய்-கூர்த்த ஆராய்ச்சியாளனே ! ஆரியசத்தை அலால் - நிலையாமை முதலிய நான்குமல்லாது;

கந்தம் வேறு இல்லையேல் - கந்தம் என்னும் பொருள் வேறு இல்லையாயின்; குறியாம் - ஆரியசத்தை யென்னும் பெயரே கந்தத்திற்கும் பெயராகும்; ஆரியசத்தையும் கந்தமும் வேறு எனின் - அல்லது அந்த ஆரியசத்தையும் கந்தமும் வேறு எனின், வேறு வேறு பொருள்கள் என்றாள்; அவை வேறு ஆம் - அவை வேறு வேறு பொருள்களேயாகும்: பேர் இவைதாம் ஒன்றினுக்கே எனின் - பெயர்களாகிய ஆரியசத்தையும் கந்தமும் ஆகிய இவை ஒருபொருளையே குறிக்கின்றன என்னின்; அவை ஒன்று ஆம் - அவை பல்வும் ஒன்றும் ஆகும்; ஒன்று சொல் என்றாள் - கந்தம் பலவும் ஒன்றும் ஆகிய ஒருபொருள் என்றே கொள்! என்றாள் - என்க.

(வி - ம்.) ஆரியசத்தை-அநித்தியம், துக்கம், அசுசி, அநாத்துமா என்பன. இதனால் பலவும் ஒன்றும் ஆகிய பொருள் காட்டிய வாறுணர்க. ஈண்டும்,

> "ஒன்று வுணர்தல் ஒற்றுமை நயமாம்
> வீற்றுவீற் றுக வேதனை கொள்வது
> வேற்றுமை நயமென வேண்டல் வேண்டும்"
> (மணிமேகலை-௩௦. ௨௨௦-௩)

எனப் பௌத்தரும் கூறுவது நினைக.

ஐங்கந்த பிண்டத்தோடு குணகுணிகளை யொப்பித்துக் காட்டின வாறு குணகுணிகள் பிரித்துப் பெறப்படாமையின் குற்றமுடைய வெனில், அநித்தியம் முதலிய ஆரியசத்தையும் ஐங்கந்த பிண்டமும் பிரித்துப் பெறப்படாமையின் குற்றமுடைமையின் எமக்குங் குற்றமாகா; என்னை ? யாவர்க்கும் ஒப்பது குற்றமன்று" என்பவா கலின்; இதனை,

> "சமாநதோஷோ நதோஷ:"

என்பதனானும்,

> "இருவர்க்கு மொத்த பொருளை யொருவ
> ெனாருவர்க்குத் தீங்கா யுரைத்தல்— திருவனையாய்
> கட்டிக் கடைகிடந்தான் றனமுற்குச் சென்றானை
> எட்டிச் சிரிப்ப தெனல்"
> (௧௧௭)

என்பதனானு முணர்க.

மொக்கலன் கூற்று

௩௮௪. சொல்லலன் யானெனச் சொல்லுவை
யாயினுஞ் சொன்மலைவாம்
சொல்லல னென்ன வினவினு
மென்னினுஞ் சொல்லிலையாம்

சொல்லுவ னல்லன் ஒருவகையாச்
சொலினவ் வகையாற்
சொல்லிய குற்றங்க டுன்னு
மெனவது சொல்லினனே.

(இ - ள்.) யான் சொல்லலன் எனச் சொல்லுவையாயினும்-பொருள்கள் சொல்லப்படாவாகலின் யான் சொல்லேன் என்று நீ கூறுவாயாயினும்; சொல்மலேவாம் - சொல்லபபடா என்றுயினும் சொல்லப்படுதலில் நினக்குச் சொற்குற்றம் வரும்; வினவினும் சொல்லலன் என்ன என்னினும் - அதற்கஞ்சிக் கேட்பினும் சொல்லாது வாளாவிருப்பாய் என்னினும்; அப் பொருள் சொல்லப் படா வென்னும் நயம் பிறவாமல்; சொல் இலையாம் - அங்ஙனம் ஒரு பொருள் இல்லை என்றுகும்; சொல்லுவன் அல்லன் ஒருவகை யால் சொலின்-இவற்றுள் யான் சொல்வேனுமல்லேனும் ஆவேன் என்னும் ஒருவகையால் உண்டென்று கொள்ளினும்; சொல்லிய குற்றங்கள் மன்னும்-முற்கூறப்பட்ட குற்றங்கள் இதற்கும் வரும்; என அது சொல்லினன்-என்று அவ்வாறு மொக்கலன் கூறினன் என்க.

(வி - ம்.) இது "சொல்லேன் யானென்றியேல்" எனவரும் செய்யுட் கருத்தைக் கொண்டு கூறியபடியாம். இது 'சொல்லப் படாதது' என்றற்குக் குற்றங் கூறுகின்றது.

பொருள்கள் 'சொல்லப்படா வியல்பின' என்று சொல்லின் நின் கூற்றிற்கே முரணுகும்; என்னை ? சொல்லப்படா வியல்பின என்றொரு வகையாற் சொல்லப்படுதலின். அதற்கஞ்சி வாளாவிருப்பினும் அவ் வியல்புந் தோன்றுதாம். அன்றிப் பொருள்கள் சொல்லவும் படும் சொல்லப்படாதனவுமாம் என்னும் வகையாற் கொள்ளினும் இரு வகைக் குற்றமுமாம் என்றவாறு.

சொல்லுவன் அல்லன் என்னும் ஒருவகையால் என்க. அஃதாவது - சொல்லப்படும் சொல்லவும் படாது என்னும் ஒருவகையால் என்றவாறு. (கககு)

நீலகேசி மறுமொழி

கூஅ௩. தன்மையி னன்மையுந் தன்னல்
பொருள்களி னுண்மையுந்தம்
பன்மை யுடையவப் பண்புக
ளெல்லா மூடனுரையுஞ்
சொன்மை யுணரா தவர்கட்குத்
தான்சொலற் பாடின்மையாற்
புன்மை யுடைய புறத்தீ
ருரைக்கு முரையுமென்றாள்.

(இ - ள்.) தன்மையின் அன்மையும் - ஒருபொருளின், பொருள் இடம் காலம் குணம் என்னும் தன்றன்மையின்கண் இல்லை எனலும்; தன் அல் பொருள்களில் உண்மையும் - தானல்லாத பிறபொருள்களின், பொருட்டன்மை முதலிய தன்மையின்கண் அப்பொருள் உண்டு எனலும்; தம் பன்மை யுடைய அப்பண்புகள் எல்லாம் - அப்பொருள்களினுண்டாகிய பலவாகிய பண்புகளை யெல்லாம்; உடன் உரையும் - ஒருங்கே கூறும்; சொன்மை உணராதவர்கட்கு - சொல்லின் றன்மை யுணராத மடவோருக்கு; சொலற்பாடு இன்மையின் - சொல்லப் படுதல் இல்லாமையால்; புறத்திர் உரைக்கும் உரையும் புன்மை யுடைய - எமக்கு அயலோராகிய நீயிர் கூறும் குற்றங்களாகிய மொழிகளும் அறியாமை என்னும் புன்மையுடையனவேகாண்!; எமக்குக் குற்றமாகா; என்றாள் - என்று நீலகேசி கூறினள் என்க.

(வி - ம்.) இது, மொக்கலன் கூறிய குற்றம் விலக்குகின்றது. தன்மை – ஒரு பொருளினியல்பு. அஃதாவது பொருள் இடம் காலம் குணம் என்னும் இந்த நால்வகைப் பண்புகளையும் உடையதாதல். அன்மை – இன்மை மேற்று. பொருள் தன்மையில் அன்மையும் பிற பொருள்களின்பால் அப்பொருள் உண்மையும் சொலற்பாடின்மையின் என முன்னுங் கூட்டுக. இங்ஙனம் கூறவே பொருள் தன்மையில் உண்மையும் தன்னல் பொருளில் அப்பொருள் இன்மையும் சொல்லப் படும் என்றுளாயிற்று. இவ்வாற்றால் ஒரு பொருள் உண்டுமாம் இல்லையுமாம் என்றல் குற்றமல்லாமையுணர்க.

இனி, பொருளினியல்பை உணர்த்தப்புகும் நல்லாசிரியனால் சொன்மை நன்மாணாக்கர்க்கு அப்பொருள் சொல்லப்படுதலும் சொன்மை உணராத மடவோர்க்குச் சொல்லப்படாமையும், மேலும் அப்பொருளி னியல்புகள் பலவற்றுள்ளும் ஆசிரியனால் சில சொல்லப்படுதலும் சில சொலப்படாவாதலும் உணர்க.

இவற்றால் போந்த பொருள்: ஒரு பொருளை ஒருமுகத்தால் உண்டு எனலும் ஒருமுகத்தால் இல்லை எனலும் குற்றமன்று என்பதும், பொருளியல்பு ஒருமுகத்தால் சொல்லப்படும் ஒருமுகத்தால் சொல்லப் படாது என்பதும் குற்றமல்ல என்பதாம்.

உணராதவர்க்குச் சொலற்பாடின்மையின் எனவே சொன்மை யுணரும் மாணாக்கர்க்குச் சொல்லப்படும் என்பது பெற்றாம். பண்புகள் எல்லாம் உடன் உரை சொலற்பாடின்மையின் என்றதனால் முறைமை யாற் சொல்லப்படும் என்பது பெற்றாம்.

இனி, பொருளியல்பு சொல்லப்படுதல் இன்றிச் சொல் சொல்லப் படாமையேயாம் என்பார்க்கு நீ கூறிய குற்றம் பொருந்தும் யாங்கள் அவ்வாறன்றி, ஒருவகையாற் சொல்லப்படும் என்றும், ஒருவகையாற் சொல்லப்படாது என்றும் சொல்லுதும். அஃதியாங்கனமெனின் பொருட்டன்மை முதலிய நான்குமாகிய தன்னியல்பின் இல்லையென்று சொல்லப்படாது உண்டென்று சொல்லப்படும் தன்னல் பொருள்களின் அந்நான்மையின்; கண் உண்டென்று சொல்லப்படாது: இல்லையென்று சொல்லப்படும் நிலைத்தல் முதலியனவும் இவ்வாறே அறிந்து கொள்க.

இனி, ஒருபொருளின்கணுண்டாகிய பல்வேறு பண்புகளாலும் பொருள் ஒருங்கு சொல்லப்படாது. முறையாற் சொல்லப்படும். மேலும் சொன்னுற் கொள்ளாத சிருஅர்க்கும் அறிவிலிகளுக்கும் பொருள் சொல்லப்படாது: நன்மாணுக்கர் முதலியோர்க்குச் சொல்லப் படும். இவ்வாறு பொருளிருப்பது காண்கின்றிலேயோ? நீ பொருந் தாமையே கூறுகின்றனை என்றவாறு. (௧௧௯)

மொக்கலன் கூற்று

௩௮௰. சேற்பொருள் போலரி சிந்திய
கண்ணுய் சிதர்ந்துரைக்கு
நூற்பொது டாம்பரி ணுமத்
திரிவென நோக்குதியேற்
பாற்பொரு டான்றயி ராய
பொழுதின்கட் பாழ்த்திலதேற்
பாற்பொரு ளேயின் றயிரெனச்
சொல்லப் பழுததென்ருன்.

(இ - ள்.) சேல்போல் அரி சிந்திய கண்ணுய் - சேல்மீனை ஒத்துச் செவ்வரி பரந்த கண்ணையுடையோய்!; பொருள் சிதர்ந்து உரைக்கும் நூல் - பொருளியல்பு சிதையும்படி கூறும் உன்னுடைய நூல்தான்; அதுபோல நீயும்; பொருள்தாம் பரிணுமத்திரிவு என நோக்குதியேல் - பொருள்கள் தாம் கெடாது நின்று ஒன்று ஒன்ருகப் பரிணமிக்கும் மாறுபாட்டினையுடைய என்றுணர்வா யாயின்; பால் பொருள்தான் - பாலாகிய பொருள்; தயிர் ஆய பொழுதின்கண் - தயிராகிய பொழுதில்; பாழ்த்திலதேல் - பொன்றக் கெட்டதன்ருயின்; பால் பொருளே - தயிருள்ளும் பாலாகிய பொருள் உளதாகும்; இன் தயிர் எனச் சொல்லல் பழுதது - இனிய தயிர் என்று கூறுதல் குற்றமுடைத்தாம்; என்ருன் - என்று மொக்கலன் கூறினன்.

(வி - ம்.) இது ''பரிணமிக்கும் பொருள்'' என்னுஞ் செய்யுளை வழிமொழிந்தபடியாம். அதனுள், இது பொருள் முழுதுங் கெடாது நின்று ஒரு நிலையினின்றும் பிறிதொரு நிலையினை யடையுமென்றற்கண் குற்றங் கூறும்.

பொருள் சிதர்ந்துரைக்கும் நூல் எனக் கூட்டுக. பாழ்த்தல் — முழுதுங்கெடுதல்.

பொருள்கள் கெடாது நின்று ஒன்ருெென்ருய்ப் பரிணமிக்கு மெனின், பாலாற்றயிர் தோன்றியவழி, பால் கெடாது நின்றதாயிற் றயிருள்ளும் பாலுளதாம். உளதாயின் தயிரென்பதின்றிப் பாலேயா மாதலின் தயிரென்று சொல்லுதலமையாதென்றவாறு. (௧௨0)

நீலகேசி மறுமொழி

௩அஎ. உருவப் பிழம்பப் பொருளேன்
முரைப்பனிப் பாறயிர்மோர்
பருவத்தி னும்பரி யாயப்
பெயரென்பன் பாலழிந்து
தருவித் துரைத்த தயிருரு
வாய்மும்மைத் தன்மையதாந்
திருவத்த தென்பொரு ளாதலைத்
தேர தெளியிதென்றாள்.

(இ - ள்.) தேர - பௌத்தனே!; அப்பொருள் உருவப் பிழம்பு என்று உரைப்பன் - யான் புற்கலம் என்னும் அப் பொருளே உருவமாகிய பிழம்பு என்று கூறுவேன்; இப் பால் தயிர் மோர் பருவத்தின் ஆம் பரியாயப் பெயர் என்பன் - இந்தப் பால் தயிர் மோர் என்பன அப்பொருளுக்கு ஒவ்வொரு செவ்வியிற் பொருந்தும் வேறு வேறு பெயர்களாகும் என்று கூறுவேன்; பால் அழிந்து தருவித்து உரைத்த தயிர் உருவாய் - அப் புற்கலப் பொருளின்கண் பாற்றன்மை கெட்டுழி வருவித்தோதிய தயிர் வடிவமாய்; மும்மைத் தன்மையது ஆம் திருவத்தது என்பொருள் - இங்ஙனம் தோன்றல் நிற்றல் அழிதல் என்னும் மூன்று தன்மையையும் தன்பாலுடைய பெருமையுடையதாம் யான் கூறிய அப் புற்கலப் பொருள்; இது ஆதலைத் தெளி என்றாள் - இப்பொருள் இங்ஙனமாதலை நீ உணர்ந்துகொள் என்றாள் என்க.

(வி - ம்.) இஃது, அக்குற்றம் விலக்குகின்றது. 'தேரனே! உருவப் பிழம்பாகிய புற்கலத்தைப் பொருள் என்பேன். பால் தயிர் முதலாயின அதனது பரியாயம் என்பேன். பாற்பரியாயத்து நின்ற புற்கலப் பொருள் தயிர்ப் பரியாயமடைந்து பரிணமித்தலின் தோற்றம் நிலை யிறுதி என்னும் மூன்றையும் உடையதாய் நின்றுக் குற்றங் கூறப் படாத பெருமைத்தாம் என்பொருள் இதனைத் தெளி,' என்றாள் என்க.

இவ்வாறன்றிப் பாலும் பாலாய் நின்ற புற்கலப் பொருளும் முழுதுறக் கெட்டவாயின் தயிர் பிறத்தற்குக் காரணமில்லையாம்; இனி, பாலாய் நின்ற பொருள் கெடாது தயிராய்ப் பரிணமியாதாகில், தயிர் யாங்குநின்று வந்ததாம்?; ஈண்டுப் பாலாய் நின்ற பொருள் என்றது புற்கலப் பொருளை.

இனி, பாலொழிவறக் கெட்டுத் தயிர் பிறக்கின், பாலிருந்த சட்டியிற் பிறக்க வேண்டுமென்பதில்லை; பிறிதொரு வழியிற் பிறக்கவு மமையும். ஒழிவறக் கெட்டு இன்மையெய்திய வழிப் பிறத்தலா லென்றார்க்கு ஒழிவறக் கெட்டின்மையெய்தும் பாலாகிய பொருள் தயிராங்கால் என்று கூறேன்; என்னை?

"பொன்றக்கே டின்மையாற் பொருள்வழிப் பொருடோன்று
நின்றற்ற வன்மையா னெல்வழி முளைதோன்று
மொன்றாகுங் காரண காரியத்தி னிகழ்ச்சியால்
அன்றாகு மொன்றல்லா வவையவற்றின் றன்மையால்"

என்பதோத்தாகலின்: பாற்பொருள் ஒழிவறக் கெடாதென்பாயெனின்; யாங்கள் பாலாய்நின்ற பொருள் கையறக் கெடாது நின்று தயிராய்ப் பரிணமிக்குமென்று சொல்லியவழி, என்னகுற்றஞ் சொல்லினை யாகுவை என்பதாம்.

இத்துணையும் 'மும்மைத் தன்மையதாம் திருவத்தது என்பொருள்' என்பதன் கருத்தால் கொண்டுரைக்கப்பட்டது. ஒழிவறக் கெடுதல் பௌத்தர் மேற்கோள் என்பதற்குத் 'தயிரின்கட் பரிணமித்த பாலில் லையேல்' என்றவன் சொன்னதே ஞாபகம். (௩௨௧)

மொக்கலன் கூற்று

௩௨௨. பெற்றது தானுங்கும் மாயத்
திரிபு பயற்றியல்பே
யிற்ற திதுவென திட்டமென்
பாயிவ் விருமையினுந்
தேற்றெனத் தீர்ந்ததோர் பொருளென்னை
தேற்றினித் தேற்றலையேன்
மற்றது வாமை மயிரெனச்
சொல்லுவன் மன்னுமென்றான்.

(இ - ள்.) பயற்று இயல்புதான் கும்மாயத் திரிபு பெற்றது- நீலகேசி! பொருட்குப் பயற்று இயல்புபோய்க் கும்மாயமாய்த் திரிபு பெற்றது; இற்று அது-ஆதலின், இக்கும்மாயம் அப்பொருளே!; இது எனது இட்டம் என்பாய்-இவ்வாறு கூறுதல் என் விருப்பம் என்கின்றாய்; இருமையினும் தீர்ந்து ஓர் பொருள் என்னை - பயற்றுத்தன்மையினும் கும்மாயத் தன்மையினும் வேறாய் உள்ள பொருள் யாது?; இனி தெற்று எனத் தேற்று - இனி நீ அப் பொருளைத் தெளிவுற உணர்த்துதி; தேற்றலையேல் - உணர்த்தா யாயின்; அது ஆமை மயிர் எனச் சொல்லுவன் என்றான் - அப் பொருள் ஆமை மயிர் போல இல்பொருள் என்றே யான் கூறுவேன் என்றான் என்க.

(வி - ம்.) இது, "பிறந்த கும்மாயம்"........தது.

"பயற்றியல்பு கும்மாயமாய்த் திரிபு பெற்றது" என்பதனால் பொருட்குப் பயற்றியல்புபோய்க் கும்மாயத் திரிபு தோன்றிற்று என்பா யாயின் பயற்றியல்பும் கும்மாயத் தியல்புமாகிய இரண்டியல்புமன்றிப் பொருள் என்பதொன்று காணுமையின் இல்லை என்பேன் என்றான்என்க. இற்று – இது. அது - அப்பொருள். கும்மாயம் – பயற்றையவித்து

உருண்டை யாக்கியது. மற்றது வாமைமயிர் என்புழி எதுகை நோக்கிக் குற்றியலுகரம் கெடாமல் வருமொழி யுயிர் உடம்படுமெய் பெற்று நின்றது. (கஉஉ)

நீலகேசி மறுமொழி

ரு.அசுூ. கெட்ட திரட்சியுந் தோன்றிய
சாந்தும் பொருளெனவும்
பட்டன வப்பொருள் பையைகளே
என்னும் பான்மையினால்
விட்ட திரள்வினுந் தோன்றிய
சாந்தினும் வேற்றுமையாம்
நட்டமுந் தோற்றமு நாட்டே
னுருவிற்கு நானுமென்றாள்.

(இ - ள்.) கெட்ட திரட்சியும் தோன்றிய சாந்தும் - ஏடா! அழிந்த பயற்றின் இயல்பாகிய திரட்சி முதலியனவும் தோன்றிய கும்மாயத்தியல்பாகிய சாந்து முதலியனவும்; பொருள் எனவும் பட்டன - பொருளினது பரியாயமாதலின்; பொருள் எனவும் என்றாற் கூறப்பட்டன; அப்பொருள் பையைகளே - அப் பொருள்கள் யாவை எனின் புற்கலப் பொருள்களேயாம்; என்னும் பான்மையினால் - என்று நூல் கூறுகின்ற முறைமையினாலே; விட்ட திரள்வினும் தோன்றிய சாந்தினும் - அழிந்த திரட்சியும் தோன்றிய சாந்தும் ஆகிய இவை; வேற்றுமையாம் - அப் புற்கலப் பொருளின் பரியாயங்களே ஆதலின்;உருவிற்குத் தோற்றமும் நட்டமும்-அவை தாமே அப் புற்கலப் பொருளிற்குத் தோற்றமும் அழிவுமாகக் கூறுவேன்; நானும் நாட்டேன் என்றாள் - யானும் அப் புற்கலப்பொருளிற்கு அத்தோற்றமும் அழிவும் உண்டென்று கூறுவேனல்லேன் என்றாள்; என்க.

(வி - ம்.) இது, மொக்கலன் கூற்றிற்கு மறுமொழி. திரட்சி முதலாகிய பயறும் இயல்பு கெடப் பயறாய் நின்ற புற்கலப் பொருளே கும்மாயமாய்ப் பரிணமித்தமையில், அவ்விரண்டு பரியாயப் புற்கலப் பொருள் அவ்விரண்டு இயல்பினும் வேறு பிரித்துக் காணப்படாதே யெனினும் பொருள் உளதாம்; என்னை? அநித்திய முதலியவற்றி னின்றும் வேறு பெறப்படாத ஐங்கந்த பிண்டமும் அவற்றையொழிய வேறு பெறப்படாத மக்கட் பிண்டமும் உளவாகியவாறு போல என்பதாம்.

இனி, ஐங்கந்தங்களை யொழிய மக்கட் பிண்டமென்பது மெய்ம்மை யன்றெனின், ஐங்கந்தங்களை யொழியப் புத்தன் உளன் என்பதூஉம் மெய்ம்மையின்மையின் அப் புத்த வருணை பொருந்தா மொழியாகி, ஆகாயப் பூ முதலியவற்றின் வருணைபோல் நும் பௌத்த சமயமும் வாய்மையன்றாம், என்க. ஆதலால் கெட்ட திரட்சியும் தோன்றிய கும்மாயமுமாகிய இவை புற்கலப் பொருளின் பரியாயமாதலின் அவை

தானே தோற்றமும் அழிவுமாக அவற்றின் வேறாகாத பொருளினுக்கு நிகழ்ச்சி நாட்டுவேன் வேறாக நாட்டேன் என்றவாறு. (௪௨௯)

மொக்கலன் கூற்று

௩௯௦. திரியும் பொருள்க டிரிந்தாம்
பயறுகும் மாயமுமாய்
விரியு மெனவது வேண்டுகின்
றறக் கெட்டமைக்கேற்
கரியும் முடையன் பயறொடு
நீருங் கலந்துபெய்தா
லெரியுறு கின்றதன் றேயிது
வோவொப்ப விற்றதென்றான்.

(இ - ள்.) திரியும் பொருள்கள் திரிந்து ஆம் - ஏடீ நீ! திரியுமியல்புடைய பொருள்கள் ஒன்று ஒன்றாய்த் திரிந்து தோன்றுமாதலின்; பயறும் கும்மாயமும் ஆய் விரியும் என - பயறே கும்மாயமாய்த் திரிந்து பெருகும் என்று; இது வேண்டு இன்றாய் - இக் கொள்கையை நாட்ட விரும்புகின்றனை; அறக் கெட்டமைக்கு - அப் பயறு கையறக் கெட்டமைக்கு; கரியும் உடையன் - யான் சான்றும் உடையேன்காண்!; பயறொடு நீரும் கலந்து பெய்தால் - பயற்றோடு நீரைக்கலந்து சமைக்குங்கால்; எரி உறுகின்றதன்றே - அந்நீர் தீயினால் எரியுற்றுக் கையறக் கெடுகின்றதன்றே; இது ஒப்ப இற்றது - இந்நீரைப் போலப் பயறும் கையறக் கெட்டது; என்றான் - என்றுகொள் என்று கூறினான் என்க.

(வி - ம்.) இது "பயற்றது திரிவாக"..........தது.

பொருள்கள் கையறக் கெடாதொன்றொன்றாய்த் திரிந்து ஆகும் ஆதலின், பயறு கும்மாயமாய்த் திரிந்தது என்பாயாயின், பயறு கையறக் கெட்டமைக்குப் பயற்றொடு கூடவார்த்த நீர் கையறக் கெட்டதுதானே சான்றாகும். பயறு கும்மாயமாய்ப் பரிணமித்ததாயின் அதனோடு வார்த்த நீரும் மற்றொன்றாய்ப் பரிணமித்தல் வேண்டும். கெட்டதாயின் அதுபோலப் பயறும் கெட்டதென்று கொள்; என்றான் என்றவாறு.

கரி – சான்று. இது ஒப்ப இற்றது என்று கொள் என்றான் என்க. (௪௩௦)

நீலகேசி மறுமொழி

௩௯௧. பருமை யுடைய பயற்றின்
வழியொன்று பாவியுண்டா
யருமை யுடையவந் நீருக்கு
மாவியன் றேவதன்றி

யிருமையுங் கெட்டுட ஞயிற்கும்
மாயமு மில்லற்கனும்
பெருமையி ஞலொன்ற பெற்ருென்ற
பேறின்மை பேதைமையே.

(இ - ள்) பாவி - ஏடா தீவினையாளா!; பருமை உடைய பயற்றின் வழி ஒன்று உண்டாய் - பரிய பயற்றின் வழிக் கும்மாயம் என்னும் ஒரு பொருள் தோன்றுகிறப; அருமை உடைய அந்நீருக்கும் ஆவி அன்றே - நின்னல் உணர்தற்கரிய அந்த நீரினின்றும் நீராவி என்னும் ஒரு பொருள் தோன்றிற்றன்றே ?; அதன்றி - அங்ஙனமன்றி; உடன் இருமையும் கெட்டு ஆயின் - பயறும் நீருமாகிய இரண்டும் கையறக் கெடுமாயின்; கும்மாயமும் அற்கல் இல் - கும்மாயம் என்னும் ஒரு பொருளும் உளதாய்த் தோன்றுதாம்; நும் பெருமையினல் - நும்மனோர் பெருமையினுற் போலும்; ஒன்று பெற்று ஒன்று பேறுஇன்மை - பயறும் நீருமாகிய இரண்டனுள் ஒன்று கும்மாயமாய்த் தோன்ற மற்றென்றில் யாதொன்றும் தோன்ருமை, பேதைமையே - இங்ஙனம் கூறுதல் உன்னுடைய பேதைமையாம் பிறிதில்லை என்றாள் என்க.

(வி - ம்.) இஃது அதற்கு விடை.

பயறு கும்மாயமாய்த் திரிந்தவாறு போல, நீரும் ஆவியாய்த் திரிந்தது; என்னை? ஒரு கலத்துள் நீர் வார்த்து ஒரு சீரையால் வாய் கட்டிக் கீழ் எரித்தால் சீரை அந்தஆவிபட்டு உகைவதூஉம், அச்சீரை மேலிட்ட மாவெந்து பிட்டாவதும் காண்கின்றிலையோ? பயறு கையறக் கெட்டுக் கும்மாயம் அதன் வழித் தோன்றிற்ருயின் நீர் கையறக் கெட்டால் அதன் வழி ஒன்றுந் தோன்ருதொழிந்தது நின் பெருமையாலோ பேதாய்? என்றவாறு.

இரண்டுங் கையறக் கெட்டதாயின் இரண்டின் வழியும் இரண்டு பொருள் பிறக்க வேண்டும் என்பதாம். கேடொப்பின் ஒன்றன் வழி ஒன்று தோன்று மென்பதொரு நியதியில்லையெனின், ஓர் அறிவு கெட ஓர் அறிவு தோன்றும் என்னும் நியதியுமில்லாமையின் பற்றுடைமை என்பதொன்றில்லை என்றூர்க்கு, அறிவுகள் பொன்றக் கெடாமையின் மேன்மேற் பிறக்குமெனின், பொன்றக் கெடுதலாவது - மேலொன்று தோன்ருமை ஒழிவறக் கெடுதலன்ரே? அவ்வாறு பற்றுடைய அறிவுகள் ஒழிவறக் கெட்டன வில்லையாயின், கெடுதலும் கெடாமையு மாய் நின்று நும் மேற்கோளுக்கே முரணுகாதோ? ஈண்டும் பயறொழி வறக் கெடாமையிற் கும்மாயமுந் தோன்றிற்ருய், ஒன்றின் வழி ஒன்று தோன்றிற்ருய் ஒன்றின்வழி ஒன்று தோன்றுமிடமெல்லாம் ஒழிவறக் கெடாமையும் பெறுதும்.

இனி, ஒழிவறக் கெட்டேயும் ஒன்றன் வழி ஒன்று தோன்று மெனின் ஒழிவறக் கெட்ட புத்தன் வழியும் ஒருவன் தோன்ற வேண்டு மாதலின், அவன் வீடெய்திஞனல்லன், பற்றுடையனேயாம்.

இன்னும் ஒழிவறக் கெட்டதன் வழிப் பிறிதொன்று பிறக்கும் நியதியில்லையெனின் பற்றுடைமையில்லையாம் என்பது முதலாகிய

குற்றங்கள் வந்து ஒன்றனை ஒன்று பற்றுதல் என்னும் குற்றமாம். ஆதலால், பயறு கெட்டுக் கும்மாயந் தோன்றிற்று என்று கொண்ட நீ, நீர் கெட ஒன்று தோன்றும் என்று கொள்ளாதது நின் பேதைமையாம் என்பதாம். அற்கல் – உளதாதல். (௩௨௰)

மொக்கலன் கூற்று

௩௩௨. கெடுவன தோன்றுவ நிற்பன தாமுங் குணமென்றியேற்
கெடுவன தோன்றுவ நிற்பன தாங்குண மாயினக்காற்
கெடுவது தோற்ற நிலையுத ரனப் பொருளெனவும்
படுவஃ தாக வுரைப்ப தியாதின் பயத்ததென்றான்.

(இ - ள்.) கெடுவன தோன்றுவ நிற்பன தாமும் குணம் என்றியேல் - ஏடீ நீலகேசி! அழிவனவும் தோன்றுவனவும் நிற்பனவுமாகிய இவையெல்லாம் குணங்களே என்பாயாயின்; கெடுவன தோன்றுவ நிற்பன தாம் குணம் ஆயினக்கால் - நீ கூறியாங்குக் கெடுவனவும் தோன்றுவனவும் நிற்பனவும் குணங்களேயாய பொழுது; கெடுவது தோற்றம் நிலையுதல்தான் அப்பொருள் எனவும் படுவதாக உரைப்பது - கெடுவதும் தோன்றுதலும் நிலைத்தலும் புற்கலமாகிய அப்பொருளே எனப் பொருள் படவும் கூறுவது; யாதின் பயத்தது என்றான் - இக்குணங்களையன்றி இவற்றின் வேறாக அப்பொருள் காணப் படாமையின் என்ன பயனுடையதோ கூறிக்காண்! என்றான் என்க.

(வி - ம்.) இது "தோன்றினவுங் கெட்டனவும்" என்பது முதலாகிய மூன்று செய்யுட் கருத்தையும் கொண்டு கூறியபடியாம்.

கெடுதல் முதலாகிய குணங்களல்லது குணியென்பது காணேன்; காணினும் அஃதொரு பெயராந்துணையே யன்றிப் பொருளன்று என்றான் என்றவாறு.

இதனாற் போந்த பொருள் – மொக்கலன் முன்பு பலபடியுஞ் சொன்னதனையே தனது போக்கறுதியாற் பின்புஞ் சொல்லுகின்றான் என்பதாம். (௩௨௧)

நீலகேசி மறுமொழி

௩௩௩. கூறிய தேக்குண மக்குணந்
தானக் குணிப்பொருளே
தேறிய தேக்குணி யக்குணி
தீர்ந்தில பல்குணமும்
வேறெண வொன்றென விவ்வகை
வேண்டுகின் றேற்கவைதா
மாறென்னுங் கோள்ளா முடிபு
மொழிநின் மயக்கமென்றாள்.

**(இ - ள்.)** கூறியது எக்குணம் அக்குணம்தான் அக்குணிப் பொருள் - ஏடா! கூறப்பட்டது யாதொரு குணமோ அந்தக் குணமே அதனையுடைய குணிப் பொருள் உண்மையும் உணர்த்துவதாம்; தேறியது எக்குணி அக்குணி தீர்ந்து பல்குணமும் இல - இவ்வாறு உணரப்பட்டது எந்தக் குணிப் பொருளோ அந்தக் குணிப் பொருளையன்றி அதனுடைய பல்வேறு குணங்களும் இல்லையாம்; இவ்வகை வேறு என ஒன்று என வேண்டுகின்றேற்கு - இவ்வாறு, குணமென்றும் குணி என்றும் பிரித்துக் காணும் ஒரு முகத்தான் வேறு வேருகவும் இவ்விரண்டும் பிரித்துப் பெறப்படாமையின் ஒன்று எனவும் கூறுகின்ற எனக்கு; அவை தாம் முடியும் என்னும் மாறுகொள்ளா - அப்பொருள்கள் தாம் எம் முடிபின்கண் சிறிதும் மாறுகொள்ளமாட்டா; நின் மயக்கம் ஒழி - ஆதலின் நின்னுடைய மயக்கத்தை விட்டொழி; என்றுள் என்க.

**(வி-ம்.)** இது மேலதற்கு விடை. என்னும் முடியும் மாறுகொள்ளா என மாறுக. என்னும் - சிறிதும்.

கூறப்பட்ட தியாதொரு குணம் அதுதானே அக்குணியினைத் தோற்றுவிக்கும். என்னை? குணியையொழியக் குணமென்பதொன்று பெறப்படாமையால், பெறப்படின் காக்கைப் பல்லும் கழுதைக் கொம்பு முதலியவற்றிற்கும் குணமுளதாகல் வேண்டும். அன்றியும் குணியென்ப தொன்றில்லையாயின் குணம் உறைவிடமின்றி இன்மையெய்தும். என்னை? உறைவிடமின்றி உளதாகுங்குணம் காணப்படாமையின் என்க. ஆதலால் தோற்றம் முதலாகிய குணம் பெறப்பட்ட விடத்து அக்குணங்கட்கு உறைவிடமாகியது யாது? அதுவே குணியென்பதும் ஆதலின் குணியும் பெறப்படுமென்பதுமாம். ஆதலிற் குணமுங் குணியுமாகிய இரண்டும் பெறப்படுதலின் வேருகவும் இரண்டும் பிரித்துப் பெறப்படாமையின் ஒன்ருகவும் இவ்வாறு பெறப்படுதலின் மாறுகோளின்றி முடிதலின் மயங்கா தொழியென்றவாறு.

இதன்கண், காக்கைப்பல் கழுதைக்கொம்பு முதலியவற்றிற்கும் என்றது, இல்பொருள்களுக்கும் என்றவாறு.

இனி உறைவிடமும் உறைவதுமாயின் வேறு பெறப்படவேண்டும்; குளத்துட்குவளை போலவெனின், அறியாது சொல்லினை! மணியின்கண் ஒளியென்ருற்போலக் கொண்டு பிரித்துக் காணப்படாமையுண்மையு மறிந்து கொள்க.

இனி, மாறென்பதனுல் புத்தன் அடையிலா வறிவும் அளவிலா வருளும் வரையாவீகையும் மறையாமொழியும் முதலாகிய பல குணங்களுமுடையனெனினும் அக்குணங்களில் வேறு பெறப்படாமையின் இலனுக வேண்டும். இலனுகின் பௌத்த சமயமுமிலதாம். குணத்தின் வேறு பெறப்படானெனினும் உளன் எனின் தோற்றம் குணங்களின் வேறு பெறப்படாதாயினுங் குணியுண்மை பெறுதலின் மாறுகொள்ளாது மயங்கா தொழியென்றவாறுமாம். இன்னும் குணகுணிகளுக்குச் சொல்லும் குற்றமெல்லாம் புத்தனேடும் அவன் குணங்களோடுஞ் சொல்லிக் கொள்க.

(௩௨௭)

மொக்கலன் கூற்று

௩௯௪. புற்கல மாய முதற்பொரு
டத்தமுட் புல்லினவாய்க்
கற்களு நீருங் நிலத்தொடு
காற்றழ லென்றினைய
பற்பல கூற்ருற் பிறங்கிப்
பரக்குந் திறமென்னையோ
வுற்றவை யொன்றென்றி னுட்புகு
மோத்துடை யாய்க்கெனலும்.

(இ - ள்.) *புற்கலம் ஆய முதற்பொருள் - புற்கலம் என்னும் எல்லாப் பொருட்கும் காரணமாகிய நுண்ணணுப்பொருள்; தத்தம் உள் புல்லினவாய்-தம்முள்ளே கூடினவாகி; கற்களும் நீரும் நிலத் தொடு காற்று அழல் என்று இனைய - கற்களும் நீரும் நிலமும் காற்றுந் தீயும் என்று கூறப்படும் இத்தகைய; பல்பல கூற்ருய்ப் பிறங்கி - பல்வேறு கூறுகளாய்த் திரண்டு; பரக்கும் திறம் என்னையோ - விரியும் வகை எங்ஙனமோ?; அவை உற்று ஒன்றின் ஒன்று புகும் ஓத்து உடையாய்க்கு-அந்நுண்ணணுக்கள் பொருந்தி ஒன்றனுள் ஒன்று புகும் என்று கூறுகின்ற நூலினையுடைய உனக்கு அங்ஙனம் ஆதல் பொருந்தாதாம்; எனலும் - என்று கூறுதலும் என்க.*

(வி – ம்.) *இது "குணியாய்ப் புற்கலம்"......... தது.*

*இடங்கொடுக்குந் தன்மையுண்மையால் ஓர் அணுவுள் ஓர் அணு புகுமென்று சொல்லும் உனக்கு அணுக்கள் பலகூடி நிலமுதலாயின வாகிப் பரிணமிக்குமாறு என்னென்று வினவினன்; என்றவாறு.*

*அழல் - தீ. பிறங்குதல் - திரளுதல். அவை - அப் புற்கல வணுக்கள். ஓத்து - நூல்.* (௬௨௮)

நீலகேசியின் விடை

௩௯௫. யாத்தற் கமைந்த குணத்தின வாய வணுப்பொருள்க
ணீத்தற் கரியன நீத்த வருக்க நெறிமையினு
லேத்தற் கியைந்த விரண்டணு வாதியி னின்னணமா
மோத்திற் கிடந்த வகையிது கேளென் றுரைத்தனளே.

(இ - ள்.) *ஓத்தில் கிடந்த வகை இதுகேள் -மொக்கல! எம் மெய்ந்நூலின்கண் கூறப்பட்டிருக்கின்ற முறையாகிய இதனைக்கேட் பாயாக!; யாத்தற்கு அமைந்த குணத்தின ஆய அணுப்பொருள் கள் - ஒன்றனுள் ஒன்று புகுதலும் புகுதற்கிடங் கொடுத்தலு*

மின்றி ஒன்றனோடொன்று கட்டுண்ணலுக்குப் பொருந்திய பண்புடையனவாகிய அணுக்கள்; நீத்தற்கு அரியன நீத்த அருக்க நெறிமையினால் - தம்மால் ஒருவுதற்கியலாதனவாகிய 'நீத்தம்' 'அருக்கம்' என்னும் வழியாலே; ஏத்தற்கு இயைந்த இரண்டு அணு ஆதியின்-தம்முட் கூடி உயர்தற்குப் பொருந்திய இரண்டு அணுக் கூடிய கந்தம் முதலாக நிலமுதலிய பெருங்கந்த மீருக; இன்னணம் ஆம் என்று உரைத்தனள் - இவ்வாறு திரண்டு விரியும் என்று கூறினள்; என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை.

யாத்தல் - கட்டுண்ணல். நீத்தம் - பசை. அருக்கம் - வறட்சி. நெறிமை - வழி; முறைமை. ஏத்தல் - உயர்த்தல். இரண்டணுவாகக் கூடுதல் தொடங்கி நிலமுதலிய பூதங்களாந்துணையும் திரண்டு விரியும் என்றவாறு. இதனை,

"அவ்வணு வுற்றுங் கண்டு முணர்ந்திடப்
பெய்வகை கூடிப் பிரிவதுஞ் செய்யும்
நிலநீர் தீக்காற் றெனநால் வகையின்
மலைமர முடம்பெனத் திரள்வதுஞ் செய்யும்"

(உஎ-கசஅ-கள) எனவரும் மணிமேகலையினும் காண்க. (௪௨௬)

மொக்கலன் கூற்று

௩௪௭. இரண்டணு வாதியி னின்னண
மேறுநின் கந்தமேனிற்
றிரண்டன வாய்த்தம்முட் சென்றுடன்
றீண்டு மிடத்தவைதா
முருண்டன தாமொன்றி னுள்ளும்
புடையு முடைமையினாற்
றெருண்டனம் பாகுபா டுற்றற்கு
மென்றனன் றேரனுமே.

(இ - ள்.) தேரன் - அதுகேட்ட மொக்கலன்; நின் கந்தம்- நின்னாற் கூறப்பட்ட கந்தங்கள்; இன்னணம் இரண்டு அணு ஆதியின்ஏறும் எனின்-இவ்வாறு இரண்டணுக் கூட்டமுதலாகப் பூதமீருக உயரும் என்பாயாயின்; அவைதாம் தம்முள் உடன் சென்று தீண்டும் இடத்து - அவ்வணுக்கள் தம்முள் ஒருங்கு சென்று கலக்குமிடத்து; உருண்டன திரண்டனவாய் - உருண்டு திரண்டனவாகி; தாம்ஒன்றின் உள்ளும் புடையும் உடைமையினால்- அவ்வணுக்கள் ஓரணு தன் உள்ளிடத்தேயும் மேலும் கீழும் பக்கங்களினும் பிற அணுக்களையுடைத்தாமாகலின்; பாகுபாடு

உற்றற்கு-அவ்வணு கூறுபடுத்தற்கு; தெருண்டனம் என்றனன்- ஏதுவாம் என்பது தெளிந்தோம் அல்லமோ? என்று கூறினன் என்க.

(வி - ம்.) ''புற்கலமிரண்டின்''......தது.

நுண்ணணு கூறுபடாதது என்று சொல்லுதலால், இரண்டு முதல் பல வணுக்கள் தம்முட் கட்டுண்டு திரளுமிடத்து ஒவ்வோரணுவும் உள்ளும் புடையும் மேலுங் கீழுமென நான்கிடங்களினும் கூறுபடும் என்பது பெறப்படுதலின் குற்றமாம் என்றவாறு. (௧௩௦)

நீலகேசி விடை

௩௨௭. ஓரிட மாய முதற்பொருட் குள்ளும் புடையுஞ்சொல்லிப்
பேரிட மாக்கிப் பிளப்ப னெனவும் பிதற்றுகின்று
யாரிட மாய வறிவிற்கு மின்னண மாதலினு
னேரிடத் தாற்பன்மை யெய்தி யுருவா நெறியுமென்றாள்.

(இ - ள்.) ஓர் இடம் ஆய முதல் பொருட்கு-ஏடா! நீ ஓரிட முடைத்தாகிய நுண்ணணுவினுக்கு; உள்ளும் புடையுஞ் சொல்லி- உள்ளிடமும் புறவிடங்களும் உண்டென்று நீயே சொல்லிக் கொண்டு; பேர் இடம் ஆக்கி - அதனைப் பேரிடமுடைத்தாகவும் ஆக்கி; பிளப்பன் எனவும் பிதற்றுகின்றாய் - அவ்வணுவினைக் கூறுபடுத்துவேன் என்றும் பொருந்தாத மொழிகளைப் பிதற்று கின்றனை; ஆர் இடம் ஆய அறிவிற்கும் இன்னணம் ஆதலினால்- நிறைந்த பல்வேறிடங்களையுமுடைய உடம்பின் கண்ணதாகிய அறிவும் இவ்வாறாதலினால்; நேர் இடத்தால் பன்மை எய்தி - அது நிகழுமிடங் காரணமாகப் பலவாகப் பகுக்கப்பட்டு; உருவு ஆம் - உருவமுடையதுமாகும்; நெறியும் என்றாள் - நீ கூறும் வழியால் என்று கூறினாள்; என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை.

ஓரிடமுடைத்தாகலின் உறுப்பற்றதாகிய நுண்ணணுவினுக்கு உள்ளும் புடையும் உடைமையின் உறுப்பியாய்ப் பல்வேறிடமுடைத் தாமென்று அதற் கொவ்வாத கூறுவாய்; பல்வேறிடமுடைத்தாகிய உடம்பு முழுதும் கலந்து நிற்கும் ஊற்றுணர்விற்கும் பல்வேறிட முண்மையால் அதனையும் உறுப்பி என்றும் உருவம் என்றும் கொள் என்றவாறு.

இஃதென் சொல்லியவாறோ வெனின் அறிவு ஓரிட முடைத்தாய்க் கணத்திற்றோன்றியழிவதுமாயிருக்கும் என்பது தேற்றமாகலின், பகுக்கப்படாததும் உருவமற்றதுமாகிய ஊற்றுணர்ச்சிக்கு உறுப் புடையதும் உருவமுடையதுமாகிய உடம்பின் தொடர்பினாலே உறுப் புடைமையும் உருவமுடைமையும் வாராதவாறுபோலப் பலவணுக்க ளோடே தொடர்புண்டாயினும் நுண்ணணுவினுக்கும் பல்வேறிட முடைமை இல்லை யென்றவாறு.

அன்றியும், பல்வேறிடந் தம்முட்கூடியன்றே நுண்மணல் ஐயவி எள்ளு நெல்லு விரல் சாண் முழம் கோல் காதம் ஓசனை யென்னும் இடங்கள் பெறப்படுகின்றன. இவ்வாறு பெறுவுழி இரண்டிடங்கள் தம்முட் கூடுமிடத்து, ஓரிடம் பலவிடமாமோ? ஆகாதெனின் ஓரிட முடைத்தாகிய அணு பிறிதோரணுவுடன் கூடினும் பலவிட முடைத் தாகாமையில் உறுப்பியாகாதென்பது. ஓரிலை பிறிதோரிலையோடு சேர்வுழி முன்புள்ள அளவில் மிகாதவாறுபோல ஓரிடமுடைத்தாகிய அணுவும் பிறிதோரணுவோடு கூடிற் றெனினும் பலவிடமுடைத்தா காமையின் உறுப்பியாகாதென்பதாம். (௩௩௪)

மொக்கலன் கூற்று

வேறு

௩௩௮. வண்டாயுங் கோதாய் வரைநெல்லியின் காய தங்கை
யுண்டாய போதே யுறையூரகத் தில்லை யென்பாய்
கண்டாயிம் மெய்ம்மை பிறர்காண்டற் கரிய தென்றான்
பெண்டான மீயு மறங்கொண்ட பெருமை யினான்.

(இ - ள்.) பெண் தானம் ஈயும் அறம் கொண்டான் - தன் மனைவியைப் பிறர்க்கு வழங்கும் அறத்தினை மேற்கொண்டவனாகிய மொக்கலன்; வண்டு ஆயும் கோதாய் - வண்டுகள் தேன் ஆராய் தற்குக் காரணமான மலர்மாலையை யணிந்த நீலகேசியே; வரை நெல்லியின் காய் - வரியினையுடைய நெல்லிக்காயானது; அங்கை உண்டாய போது - நினது உள்ளங்கையிலிருக்கின்ற பொழுது; அது உறையூர் அகத்து இல்லை என்பாய் - அக் காய் உறையூர்க் கடையுள் இல்லையாதலின்; இந் நெல்லிக்காய் உண்டும் இல்லையு மாம் அன்றோ என்பாயாயின்; இம் மெய்ம்மை காண்டற் கரியது - இந்த உண்மை பிறரால் காண்டற்கரிய தொன்றேயாம்; கண்டாய் - நீ நின் நுண்மாணுழை புலனாலேதான் இதனைக் கண்டுருத்தல் வேண்டும்; என்றான் - என்று அசதியாடினான்; என்க.

(வி - ம்.) இது "அங்கையு ணெல்லிக்காய்"......தது.

வரை - கோடு. பெண்தானமீயும் அறங்கொண்டான் என்றது புத்தன் மனைவியை வழங்கினமை குறித்து நின்றது. கண்டாய் என்றது நின் நுண்மாணுழைபுலனாற் கண்டனை என்பதுபட நின்றது. இது நீல கேசியை மொக்கலன் அசதியாடியபடியாம்.

மொக்கலன் ஆருகதருடைய உண்டுமாமில்லையுமாம் என்னும் மேற் கோளுக்குக் குற்றங் கூறுவானொருப்பட்டு வண்டாயும் மலர் மாலையை யுடைய நங்காய்! நின் கையிலிருக்கின்ற நெல்லிக்காய் நின்கையிலிருக் கின்ற காலத்து உறையூர்க் கடையு ளில்லையாவது கண்டு நின்கையி லுண்மையும் கடையுளின்மையுமுடைமையின் நெல்லிக்காய் உண்டு மில்லையு மாமன்றோ? என்றுயாயின், இவ்வாறுண்டுமில்லையுமாம் வேண்டாதார் யாவரோ? இவ்வரும் பொருள் நீ யல்லது காணவல்லா ருண்டோ? என்று சொன்னான் என்றவாறு.

இதனாற் போந்த பொருள் 'இவ்வாறு உண்டுமில்லையும் கொள்ளின் இஃதியாவர்க்கு மொப்ப முடிவதன்றோ? இது சொல்ல வேண்டுமோ?' என்பதாம். (௩௯௮)

வேறு

நீலகேசி விடை

௩௯௯. வெய்தாய தீயுங் குளிராகிய நீரும் விண்டோய்ந்
தைதாய காற்று மவையாரு மறிய வென்றாற்
பொய்யாகு மென்ன யவைபுத்த வசன மென்பாய்
செய்தாய் முழுக்கூ றதுபோலச் சிதைக்க வென்றாள்.

(இ - ள்.) வெய்து ஆய தீயும் குளிர் ஆகிய நீரும் விண் தோய்ந்து ஐது ஆய காற்றும் அவை - ஏடா! வெப்பமுடைய தாகிய நெருப்பினையும், குளிர்ச்சியுடையதாகிய நீரினையும் வானிற் றோய்ந்து மெல்லென வீசுவதாகிய காற்றும் ஆகிய அவையிற்றின் பண்புகளை; யாரும் அறிப என்றாள் - எல்லோரும் அறிவீராகவும்; தீ வெய்தாம் நீர் தண்ணிதாம் காற்று இயங்குவதாம் என்னு மிவற்றை; பொய் ஆகும் என்னாய்-குற்றம் என்று கூறுவாயல்லை; அவை புத்தவசனம் என்பாய் - இவை எம் புத்த பெருமான் கண் டுரைத்த வாய்மைகள் என்று போற்றா நிற்றை; முழுக்கூழ் செய் தாய் - எமக்குமட்டும் குற்றங் கூறுவாய் போல உன் மேற்கோள் முழுவதையும் குழப்பிவிட்டாய்; அதுபோலச் சிதைக்க என்றாள் - நீ அவை குற்றமல்ல என்பது போலவே எமக்குக் கூறிய குற்றத் தையும் ஒழிப்பாயாக! என்றாள்; என்க.

(வி - ம்.) இது நீலகேசி விடை.

எல்லார்க்கும் ஒப்ப முடிந்து விளங்கியது சொல்லுதல் குற்ற மாகில் நிலம் வலிது, நீர் துவளும், தீத்தெறும், காற்றுளரும் என்பதனால், நீ நெருப்புச் சுடுமென்பது முதலாயின யாவரும் அறிபவே எனினும் அவை சொல்லுதலின் உனக்குக் குற்றமாமன்றோ? குற்றமாமே யெனினும் அவை புத்தன் மொழியாகலின் அளவையாம் என்று சொல்லுவாயாகவும், எமது உண்டுமில்லையுமாங் கொள்கைக்கு என்ன குற்றஞ் சொன்னாயாகுதி? இதனால் நின் சமயத்தார்க்கே குழப்பஞ் செய்தாய். நெருப்புச் சுடுமென்று நீ சொல்லியது குற்றமன்றாயின் அதுபோல எமக்கும் நீ சொல்லிய குற்றத்தைத் தவிர்க்க என்றவாறு.

முழுக்கூழ்—முழுக்குழப்பம்; கலக்கம். அட்டகமெனினுமாம். (௩௯௯)

மொக்கலன் கூற்று

௪௦௦. கந்தின்கட் காணாய் களியானையை யில்லை யென்பாய்
வந்திங்க ணின்ற பொழுதுண்மை மறுக்க லாமோ
தந்திங் குரைத்த வுரைதானுங் கெடுக வென்றான்
வெந்திங்கு வித்தின் னனைத்தாகிய வீடு கண்டான்.

(இ - ள்.) வெந்து இங்கு வித்தின் அனைத்து ஆகிய வீடு கண்டான் - வெந்துகிடக்கும் விதைபோன்ற வீடுபேற்றினைக் கண்ட மொக்கலன்; கந்தின்கண் களியானையைக் காணாய் இல்லை என்பாய் - ஏடி, நீ தறியின்கண் களிப்புடைய யானையைக் காணாத பொழுது யானை இல்லை என்பாயேனும்; இங்கண் வந்து நின்ற பொழுது உண்மை மறுக்கலாமோ - அத்தறியிடத்தே யானை வந்து நின்றபொழுது அங்கு அதன் உண்மையை மறுக்கக் கூடுமோ?; இங்கு தந்து உரைத்த உரைதானும் கெடுக என்றான்- கூடாதாகலின் நீ இவ்விடத்தே எடுத்துக்கூறிய சொல் கெடுவ தாக என்றான் என்க.

(வி - ம்.) இது, "கந்நிடத்துக் காணுதாயின்"......தது.

இங்குவித்து – கிடக்கும் வித்து. ஐங்கந்தமும் பொன்றக் கெடுதலே வீடென்பவாகலின், 'வெந்த வித்துப் போன்ற வீடு கண்டான்' எனப்பட்டது.

தறியிடத்து யானையைக் காணாத பொழுது இவ்விடத்து யானை யில்லையென்று சொல்லுவாயாயின் அவ்விடத்து யானை வந்து நின்ற பொழுது உண்டாமாதலின் தறியிடத்து யானையில்லை என்று நீ சொல்லிய சொல் கெடுவதாக என்றான் என்றவாறு. (௪௲௯)

## நீலகேசி கூற்று

௪௦௧. ஆண்டில்லை யென்பன் னதுவுள்வழி யுண்டு மென்ப
னீண்டின்மை யுண்மை யிவையாக விசைத்து நின்றேன்
வேண்டி யனவே முடிப்பாய்விரி போன்னே யிவு
லீண்டி யிமையோர் தொழுவானெம் மிறையு மென்னாய்.

(இ - ள்.) ஆண்டு இல்லை யென்பன் - ஏடா! யான் தறியிடத்தே யானையைக் காணாத பொழுது இல்லை என்று சொல் வேன்; அது உள்வழி உண்டும் என்பன் - அவ்வியானை அவ் விடத்துளதாய பொழுது உண்டென்றுஞ் சொல்வேன்காண்!; ஈண்டு இன்மை உண்மை இவையாக - நீதானும் இவ்விடத்து யானையினது உண்மையையும் இன்மையையும் இத்தன்மையன வாகவே; இசைத்து நின்றேன் வேண்டியனவே முடிப்பாய் - யான் கூறுமாறே கூறுவை; இமையோர் விரிபொன்னெயிலுள் ஈண்டி- கூறுவை ஆதலின் நீயும் தேவர்கள் ஒளிவிரிகின்ற பொன்னெயி லகத்தே கூடிநின்று; தொழுவான் எம் இறையும் என்னாய்- தொழப்படுபவனாகிய அருகக் கடவுளே எமக்கும் இறைவன் என்று கொள்வாயாக என்றாள்; என்க.

(வி - ம்.) இது நீலகேசியின் விடை.

தறியிடத்து யானையைக் காணாத்பொழுது யானை இல்லை யென்றும் அதனை அவ்வழிக் கண்டபொழுதுஉண்டென்றுஞ் சொல்வேன். ஒருகாற்

காணுததற்காக எக்காலுந் தறியிடத்து யானை இல்லையென்றுஞ் சொல்லேன். இவ்விடத்திப் பொழுதில்லையென்று நான் காலத்தை யிட்டுச் சிறப்பித்துச் சொல்லுதலின், யான் சொல்லியவாறே நீயுமொருகாற் றறியிடத்து யானை யுளதாகவும் ஒருகாலிலதாகவுஞ் சொல்லுதலின் என் மாணவனைப் போலச் சமவ சரணத்து இந்திரன் முதலிய தேவர்கள் வணங்க வெழுந்தருளியிருந்த அருகனையே கடவு ளாகவுங் கொள்ளென்றவாறு. (கடு௫)

மொக்கலன் கூற்று

சுoஉ. கோல்லேற்றின் கோடு குழக்கன்றது வாயி னக்கா
லில்லாகு மென்றி யிவையிங்ஙன முண்மை யின்மை
சோல்லேனு மல்லே னதுசோல் லுவன் யானு மன்னய்
கோல்லேற தாகாப் பொழுதேயுடன் கூறு கென்றான்.

(இ - ள்.) அன்னய் - அன்னையே!; கொல்லேற்றின் கோடு - கொல்லும் ஆனேற்றின்கண் உளவாகிய கோடு; அது குழக்கன்று ஆயின் அக்காலத்தில் இல் ஆகும் என்றி - அவ்வாறே இளங் கன்றாயிருந்தபொழுது இலவாம் என்று கூறுகின்றாய்; இவை இங்ஙனம் உண்மை யின்மை யானும் சொல்லேனுமல்லேன் - இக் கோடுகள் இவ்வாறு உளவாதலும் இலவாதலும் யானுஞ் சொல் லேனேன்; அது சொல்லுவன் - அவ்வாறே சொல்லுவேன்; அது கொல்லேறு ஆகாப்பொழுது - அக்கன்று எருதாகாத பொழுதே; உடன் கூறுக என்றான் - கோட்டின் உண்மையையும் இன்மையையும் ஒருசேரச் சொல்லிக்காண்! என்றான் என்க.

(வி – ம்.) இது "கொல்லேற்றின் கூர்ங்கோடு"......தது.

ஆனேற்றின் கோடு அது குழக்கன்றாய காலத்தில்லாமையின் உண்டுமில்லையுமாதல் சொல்லுகின்றாயாயின் அஃதியாவர்க்கு மொக்கு மாதலிற் சொல்லவேண்டுவதில்லை; குழக்கன்றாய காலத்தேயே உண்டு மில்லையும் சொல்லவேண்டு மென்று சொன்னானென்றவாறு. (கடுசு)

நீலகேசி கூற்று

சுoங. ஏறாய காலத் தெழினல்லது வத்து பேதங்
கூறாரே ழாத குழக்கன்றினுக் கின்மை முன்னா
வீறாகி நிற்கும் முதலுண்மையிற் கின்மை யெங்கு
மாறியாது மில்லை கலைக்குண்மையு மற்றுமென்றாள்.

(இ - ள்.) ஏறு ஆய காலத்து எழின் அல்லது - ஏடா! எம்மனோர் குழக்கன்று ஏறாக வளர்ந்த காலத்தே கோடு தோன் றின் கூறுவதல்லது; வத்துபேதம் கூறார் - உண்டுமில்லையுமாம் பொருள் வேறுபாடு கூறுவதிலர்; எழாத குழக்கன்றினுக்கு -

கோடு தோன்றாத இளங் கன்றினுக்கு; இன்மை முன்னாக் கூறார்-கோடின்மை முன்னாகச் சொல்லார்; முதல் உண்மையிற்கு இன்மை எங்கும் ஈறாகி நிற்கும் - பொருளினது உண்மைக்கு அதனது இன்மை யாண்டும் ஈறாகியே நிற்கும் ஆதலால்; கலைக்கு - எங்கள் நூலுக்கு; உண்மையும் மற்றும் - உண்மையும் இன்மையும் கூறுதற்கண்; யாதும் மாறு இல்லை - யாதும் குற்றம் இல்லையாம் என்றாள்; என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை.

யாங்கள் பொருளுக்கன்றே யுண்டு மில்லையுஞ் சொல்லுவது; ஆதலால் பொருளாய்ப் பெறப்பட்டால் அதற்கொரு முகத்தால் இன்மை சொல்லுவதல்லது, பெறப்படாததற்கு உண்டு மில்லையு முதலாயின சொல்லேமாதலின், ஏறுய காலத்திற் பெறப்பட்ட கொம்புக்குக் குழக்கன்றாய காலத்து இன்மை சொல்லுவதல்லது குழக்கன்றாய காலத்துக் கோடு பெறப்படாதவழி யின்மை முன்னாகவும் உண்மை பின்னாகவும் சொல்வதிலேம். யாண்டும் உண்மை முன்னாக அதற்கின்மை பின் சொல்லுதும் ஆகலின் எங்கள் உண்டுமாம் இல்லையுமாம் கொள்கை மாறுபாடின்றி முடியும் என்றவாறு.

இனி, இது யாவர்க்கும் ஒப்ப முடிதலின் சொல்ல வேண்டுமோ? எனின், அதற்கும் முன் சொல்லியவாறே (செய் - கூகக) சொல்லிக் கொள்க. நீ எமது சித்தாந்தம் அறியாது வேண்டியவாறு சொல்கின்றா யென்பதாம். (கதுஎ)

மொக்கலன் கூற்று

சு0சு. கன்று முயலுங் கழுதைப்பெயர் பெற்ற னவுங்
குன்றுந் தலையுட் பெறப்பாடெய்தல் கோடு றுப்பா
வென்றும் மவற்றுக் கெழலில்லைநின் பேத மென்றாற்
சென்றுஞ் சிலவிற் சிலவின்மையு மாகு மென்றான்.

(இ - ள்.) கன்றும் முயலும் கழுதைப் பெயர் பெற்றனவும்-நங்காய்! ஆன்கன்று முதலியனவும் முயலும் கழுதை என்னும் பெயரையுடையனவும்; தலையுள் கோடு பெறப்பாடு எய்தல் - நின் மேற்கோளால் தலையுள் ஒருவகையால் கோடு உண்டாகப் பெறுதல்; அவற்றுக்கு என்றும் கோடு உறுப்பா எழல் இல்லை - அவற்றுள் முயல் முதலாயினவற்றிற்கு ஒருகாலும் கோடு ஓர் உறுப்பாகத் தோன்றுதல் இல்லையாகலின்; நின்பேதம் என்றால் குன்றும் - நீ கூறியதே நின்னுடைய உண்டுமில்லையுமாம் கொள்கையாயின் குறைபாடுடைத்தாம்; என்னை? சிலவிற் சென்றும் சிலவின்மையும் ஆகும் என்றான் - இக்கொள்கை சிலவற்றிக்குப் பொருந்தும் சிலவற்றிற்குப் பொருந்தாமையுமுடையதாதலின் என்றான்; என்க.

(வி – ம்.) இஃது "ஒருவகையாற் குழக்கன்று மொருவகையான் முயலும்," என்னும் செய்யுட் கருத்தை வழிமொழிந்தது.

குழக்கன்றும், முயலும் கழுதையு முதலாயின நின் மேற்கோளால் ஒருவகையால் கோடுடையவாக வேண்டும். வேண்டினும் முயல் முதலாயினவற்றுக்கு ஒருகாலும் கோடு பெறப்படாமையின் நினது உண்டுமில்லையுமாம். மேற்கே ள் சிலவற்றுளுண்டாகியும் சிலவற்றுள் இல்லையாகியும் இலக்கணம் இலக்கிய முழுதுஞ் சேராமை என்னும் குற்றமுடைத்தாம் என்றான் என்றவாறு.

இதுவே நின்பேதம் என்றால் குன்றும் என ஒரு சொல் வருவித்தும் மாறியும் கூட்டுக. (௩௨அ)

நீலகேசி கூற்று

௩௦௯. இல்லாத கோட்டை யுளதாக வெடுத்து மென்று
சொல்லார்கள் பேதம் சொலவேண்டுவை யாயி னக்காற்
புல்லாது நில்லாப் பொருடங்களுக் குண்மைக் கின்மை
கல்லாது நீயுங் கழுதைக்கருள் செய்தி யென்றாள்.

(இ - ள்.) இல்லாத கோட்டை உளது ஆக எடுத்தும் என்று சொல்லார்கள் - ஏடா! எம்மனோர் ஒருகாலத்தும் இல்லாத முயற்கோடு முதலாயினவற்றை எடுத்து அவற்றிற்கு உண்டுமாம் இல்லையுமாம கூறுதும என்று சொல்வதிலர்; கல்லாது - நீ எம்மனோர் நூலைக் கல்லாது வைத்தே; புல்லாது நில்லாப் பொருள தங்களுக்கு - பொருந்தாததும் இல்பொருளுமாகிய வற்றிற்கு; உண்மைக்கு இன்மை பேதம சொல்ல வேண்டுவை ஆயின் அக்கால் - உண்டுமாம் இல்லையுமாம் வேறுபாடு சொல்லி எமக்குக் குற்றங்கூற விரும்புவாயாயின பொழுது, நீயும் - நீயும் நின் புத்தனைப் போலவே; கழுதைக்கு அருள் செய்தி என்றாள் - கோடு இல்லாத கழுதைக்குக் கோடுண்டாக அருள் செய்கின்றாய் இது நின் அறியாமையே என்றாள்; என்க.

(வி – ம்.) இது மேலதற்கு விடை.

இல்லாத கோடு – ஒரு காலத்தும் இல்லாத முயற்கோடு முதலாயின. சொல்லார் - 'உண்டுமாம் இல்லையுமாம்' சொல்லார்.

புல்லாது நில்லாப் பொருள் தங்களுக்கு உண்மைக்கு இன்மைப் பேதம் சொல்லவேண்டுவையாயினக்கால் கழுதைக் கருள் செய்தி என்றாள் என மாறிக் கூட்டுக.

இனி நீயும் நின்தலைவனாகிய புத்தன்போலக் கழுதைக்கு அருள் செய்யத் தொடங்கி விட்டாய் என்பது கருத்தாகலின் நீயும் என்னும் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. புத்தன் கழுதைக்கருள் செய்த மையை,

"காமமே கன்றி நின்ற கழுதைகண் டருளி னாலே
வாமனார் சென்று கூடி வருந்தினீ ரென்று வையத்
தீயஞ்சேர் மாலை போல விழித்திடப் பட்ட தன்றே
நாமவேற் றடக்கை வேந்தே நாயிது தெரியி னென்றான்"

எனவருஞ் சீவக சிந்தாமணியானும் (உ௪0) உணர்க.

இது நீலகேசி மொக்கலனை இகழ்ந்து அசதியாடியபடியாம்.

இல்லாத முயற்கோடு முதலாயினவற்றிற்கு உண்டு மில்லையுமாம். முதலியன சொல்லுகை எம்மேற்கோளன்றாதலின், நீ நின் போக்கறுதியால் ஒருகாற் சொல்லியதனை மீட்டு மீட்டுஞ் சொல்லுகின்றாய்; யாங்கள் உள்பொருளாகிப் பெறப்பட்டது ஒருகாலத்தோரிடத்து ஒருவாற்றால் இல்லையாமென்று சொல்லுதும்; நீ அஃதறியாது நின் புத்தன்பாலன்பினால் அவன் போலக் கழுதைக்கு அருள் செய்கின்றாய் என்றாள் என்றவாறு.

கழுதைக்கில்லாத கொம்பை உண்டென்று கூறிக் குற்றங் கூறுதலைக் கழுதைக் கருள் செய்தி என்றாள் என்க. (௩௯௯)

மொக்கலன் கூற்று

௪0௰. இல்லை வலக்கை யிடக்கைவகை யால தேன்றஞ்
சொல்லின் னதற்கு மதுவேயெனுஞ் சூழ்ச்சி மிக்கா
யொல்லை யிரண்டு முளவாக வுணர்ந்தனை நீ
நல்லை பெரிதும மெனமொக்கல னக்க னனே.

(இ - ள்.) மொக்கலன் - மொக்கலமுனிவன் நீலகேசியை நோக்கி; இடக்கை வகையால் - இடக்கையினது தன்மையாலே; வலக்கையது இல்லை என்றும் - வலக்கையானது இல்லையாம் என்றும்; அதற்குச் சொல்லின் - இனி அவ்விடக்கைக்குக் கூறுமிடத்தும்; அதுவே - வலக்கையினது தன்மையாலே இடக்கையானது இல்லையாம் என்னும் அதுவேயாம்; எனும் சூழ்ச்சி மிக்காய் - என்கின்ற ஆராய்ச்சி மிக்கோய்; நீ ஒல்லை இரண்டும் உளவாக உணர்ந்தனை - நீ இங்ஙனம் கூறுமிடத்து அவை இல்லையாகவும் உள்ளனவாக வன்றோ விரைந்து உணர்ந்துள்ளனை போலும்; பெரிதும் நல்லை - நீ மிகவும் நன்மையுடையை காண்!; என-என்று கூறி; நக்கனன் - நகைத்தான் என்க.

(வி - ம்.) இஃது "இடக்கை வகையாற்"......தது.

இடக்கை வகையால் வலக்கையது இல்லை என்னும் என மாறுக.

வலக்கை தன்றன்மையால் உண்டு; இடக்கையினது தன்மையால் இல்லை; இடக்கையும் தன்றன்மையால் உண்டு; வலக்கையினது தன்மையால் இல்லை, என்று சொல்லுதற்கண், இடக்கையன்று வலக்கை, வலக்கையன்று இடக்கை என்பதன்றி அவை இல்லையாமாறு என்? அவை

யில்லை எனினும் உளவாகவன்றே நீ உணர்ந்துள்ளாய் என்று நகைத்தான் என்றவாறு. (௩௭௦)

நீலகேசி கூற்று

௩௭௭. இக்கை வகையா லதுதானுள தாயி னக்காற்
றொக்க விரண்டு முடனாதலிற் றாய்தொ ருபால்
பக்கம் மதுவும் படுபாழினிக் காலு மற்றாய்ச்
செக்கின் கணைபோன்றினிச் சென் றுருள் சேம மென்றாள்.

(இ - ள்.) இக் கைவகையால் அதுதான் உளதாயின் - ஏடா! மொக்கல! இந்த வலக்கையின்றன்மையால் அந்த இடக்கையும் உளது என்பாயாயின்; அக்கால் - அப்பொழுது; தொக்க இரண்டும் உடன் ஆதலின் - சேர்ந்த வலக்கையும் இடக்கையும் ஒருபக்கத்தன ஆதலாலே; ஒருபால் தாய்து - ஒருபக்கம் வறிதாம்; பக்கம் அதுவும் படுபாழ் - இனி இவ்வாறே இடக்கையின்றன்மையால் வலக்கையுளது என்னுமிடத்து மற்றொரு பக்கமும் முழுப் பாழாய்விடும்; இனி காலும் அற்று ஆய் - இனிக் கால்களையும் அங்ஙனம் கூறுமிடத்து இரண்டு பக்கமும் பாழாய் முடியும்; இனி செக்கின் கணைபோன்று சேமம் சென்று உருள் என்றாள் - இங்ஙனம் காலும் கையும் இல்லையான பின் நீ செக்குரல் போல நின் பள்ளிக்குச் சென்று உருள்வாயாக என்றாள்; என்க.

(வி - ம்.) இது, மேலதற்கு விடை.

இக்கை என்னும் சுட்டு முற்செய்யுளில் வலக்கை என்பதனையும், அதுதான் என்பது இடக்கை என்பதனையும் சுட்டி நின்றன.

நீ இடக்கையன்று வலக்கை என்புழி; வலக்கையில் இடக்கை இல்லாமையில் இடக்கையன்று வலக்கை என்கின்றாயோ? அன்றி வலக்கையில் இடக்கை யுண்மை கண்டு இடக்கை என்கின்றாயோ? வலக்கையில் இடக்கையின்றன்மை உண்டாயின் இடக்கையன்று வலக்கை என்றல் முடியாதாம். இனி வலக்கையில் இடக்கையின்றன்மை இல்லையாயின் இடக்கையினது இன்மை வலக்கைக்குளதாம். இனி, தன் வகையாலுளதாவதன்றி இடக்கை வலக்கையாலும், வலக்கை யிடக்கையாலும் உண்டாமாயின் இடக்கை யென்பதொன்றில்லையாம்; இவ்வாறே வலக்கையுமில்லையாம்; இவ்வாறே கால்களும் இல்லையாம்; இல்லையாகவே செக்குரல் போல நீயுருளாயோ? என்றவாறு.

இனி இடக்கையின துண்மை யிடக்கையிற் கிடப்பதன்றி வலக்கையினுங் கிடப்பினும் வலக்கையின துண்மை வலக்கையிற் கிடப்பதன்றி இடக்கையினுள் கிடப்பதாயினும், இடக்கை வலக்கை என்பதொரு வரையறையில்லையாம். என்னை? அறிவுப் பொருளில் அறிவில் பொருளும் அறிவில் பொருளில் அறிவுப் பொருளும் கிடக்கில் வேற்றுமை என்பதொன்றில்லையாய் அறிவுப் பொருள் அறிவில் பொருள் என்னும் வரையறை கெடுமாறு போல வென்க. (௩௭௧)

## மொக்கலன் கூற்று

௪௦௮. கைகால் வகையால் பெறப்பாடிலை காலு மற்றாய்
மெய்தா மொழிய வவைபாறெய்தல் வேண்டு தலாற்
கோய்தார் நறும்பூங் குழலாய்குழ மண்ணர் களாச்
செய்தா யுலகிற் சிறுமானுயர் தம்மை யென்றான்.

(இ - ள்.) கொய் நறும் பூ தார் குழலாய் - கொய்து புனைந்த நறிய மலர்மாலையணிந்த கூந்தலையுடைய நங்காய்! நன்று! நன்று!; கை கால் வகையால் பெறப்பாடு இல்லை - கை காலின் தன்மையால் பெறப்படுதல் இல்லை; காலும் அற்று ஆய் - இனிக் காலும் கையின்றன்மையால் இல்லை; மெய்தாம் ஒழிய - இவ்வாறனுல் உடம்புகள் கைகளையும் கால்களையும் இழப்ப; அவை பாறு எய்த வேண்டுதலால் - அவ் வுடம்புகளைப் பேய்களே தின்னல் வேண்டுமாதலின; உலகில் சிறு மானுயர் தம்மை - அந்தோ! நீ நின் மேற்கோளாலே இவ் வுலகில் வாழும் சிறிய மக்களை யெல்லாம்; குழ மண்ணர்களாய்ச் செய்தாய் - காலுங் கையுமற்ற மரப்பாவைகளாகச் செய்தொழிந்தாயல்லையோ?; என்றான் - என்று அசதியாடினன்; என்க.

(வி - ம்.) இது, "காற்றிறந் தாற்கையில்லை"......தது.

கால் வகையாற் கையில்லை; கைவகையாற் காலில்லை; இவ்வாறாக உலகத்துள்ளோரெல்லாம் குழமணர்களாகாரோ? என்று சொன்னன் என்றவாறு.

பாறு - பேய். குழமணர் - விளையாட்டு மரப்பாவை. பேதை மகளிர் விளையாடுங்கால் கையுங் காலுமற்ற மரக்கட்டையைக் குழவியாகக் கற்பனை செய்து கொண்டு ஆடுவரல்லரோ அம் மரப்பாவைக்குக் குழமணர் என்பது பெயர் என்றறிக. (கசஉ)

## நீலகேசி கூற்று

௪௦௯. கால்கால் வகையா லுளகைகளுங் கையி னற்றாய்ப்
பாலாய் முடிய மவைபண்டை யியல்பி னலே
யேலா திவைதா முளவேத்திறத் தானு மென்னி
னலாவ தான முடிவி னயொடு நண்டு மொத்தாய்.

(இ - ள்.) கால் கால் வகையால் உள-ஏடா! யாங்கள் கால்கள் அக் காலினது தன்மையாலே உளவாகும (கையாந்தன்மையில் இல) என்றும; கைகளும் கையின் அற்று ஆய் - கைகளும் அக்கையின் றன்மையால் அங்ஙனமே உளவாய் (காலாந் தன்மையில் இலவாய்; அவை பண்டை இயல்பினலே பால் ஆய்முடியும் - அக்கால்களும் பழைய இயல்பிற்கேற்பக் குணமாய் முடியும் என்று

கூறுதும்; ஏலாது இவை எத்திறத்தானும் உள என்னில் - நீ நுங்கள் கூற்றுப் பொருந்தாது இக் காலுங் கையும் (தன்றன்மை பிறிதின் தன்மை என்னும்) எவ்வகையானும் உளவாம் (இலவாகா) என்பாயாயின்; நால் ஆவது ஆன முடிவின் - அவை தாம் கால்கள் நான்கு கைகள் நான்கு என்னும் முடிவினையுடைய வாகி, நாயொடு நண்டும் ஒத்தாய் - அவ்வழி நீ நாயும் நண்டும் போல்வாய் காண்! என்றாள்; என்க.

(வி - ம்.) இது, மேலதற்கு விடை. பால் - குணம்.

கால் காலாந் தன்மையாலுள, கையாந்தன்மையிவில வென்றும், கை கையாந்தன்மையாலுள, காலாந்தன்மையிவில வென்றும் சொல்லுதும்; அப் பொருள் அவ்வாருகின்றமை காண்கின்றிலேயோ? இனி எவ்வகையானும் காலும் கையும் உளவென்பாயாயின் நினக்குக் கால் நான்காக நாயோடும் கால் நான்குங் கை நான்குமாக நண்டோடும் ஒப்பாகுவை காண் என்றவாறு.

இனி இதனைத் போந்த பொருள்—காலின தன்மை காலிற் கிடப்ப தன்றிக் கையிற் கிடப்பிற் காலிலுண்மை கிடவாதாக வேண்டும். இனி, காலின தன்மை கையுங் காலுமாகிய இரண்டிலுங் கிடப்பிற் கால் நான்காம்; கையு மிவ்வாறேயாக எட்டாம்; இனிக் காலின தின்மை கைம் முதலான பிறபொருளிற் கிடவாதாகில் எல்லாப் பொருள்களினும் ஒருவனது காலுளதாக வேண்டும்; என்னை? நெருப்பினதின்மை நீரிற்கிடவா தாகில் நீரிலேயு நெருப்புளதாக வேண்டியவாறு போல என்க. ஆதலால் காலின தின்மை கைம்முதலான பிறபொருளிற் கிடக்க வேண்டுமாதலிற் கை தன் வகையாலுளதாய்க் கால் வகையாவிலதா மென்பது பொருந்துவதாம் என்பதாம்.

தன்வகை என்பது-தன்இட முதலியவற்றை; கால்வகை என்றது-கால் நிற்கின்ற இடமுதலாயினவற்றையாம். இனிக் கால்வகையால் கையில்லை என்பதென்னை? கையிற் காலில்லை என்ன அமைபாதோ? எனின், "மெய்த்தவத்தாற் றொக்கான் குணத்தால் மிக்கான்" என்ற வழி மெய்த்தவம் தொக்கது புத்தனுழை என்னாது புத்தன் மெய்த்தவத் தால் தொக்கான் என்றவாறு போலக் கொள்க வென்க. (௩௪௯)

மொக்கலன் கூற்று

௩௫௰. அல்லென் றுரைத்த வுரைதானுமெம் மாகமத்து
ளில்லென்ற வாறென் றிவையிங்ஙனம் வேண்டு கின்றாய்
சொல்லன்று நாயைந் நரிதானெனச் சொல்லு கின்று
னில்லென்ற வாறு நரிதன்னையு மென்ற னனே.

(இ - ள்.) அல் என்று உரைத்த உரை தானும் - அது கேட்ட மொக்கலன் ஏடி! "அன்று" என்று கூறுகின்ற மொழி; எம் ஆகமத்துள் இல் என்றவாறு என்று - எங்கள் நூலின்கண் இல்லை என்று கூறியபடியாம் என்று கூறி; இங்ஙனம் வேண்டுகின்

ருய் சொல்-பின்னரும் நீலகேசியை நோக்கி இவ்வாறு கூறுகின்ற நீயே சொல்வாயாக!; நாயை நரி அன்று என்னச் சொல்லுகின்றார் - நாயைக் கண்டு இது நரி அன்று என்று கூறுபவன்; நரி இல்லை என்ருன் ஆகானோ-நரி இல்லை என்று சொன்னவன் ஆகமாட்டானோ? என்ருள்; என்க.

(வி - ம்.) இது, "நீ யென்றுரைப்ப"......தது.

பொருளின் உண்மையின்மையாவது - ஒன்று ஒன்று அல்லாமை என்றற்கண், 'அல்' என்பதற்கும் 'இல்' என்பதற்கும் பொருள் ஒன்ருக வேண்டும்; வேண்டவே; நாயைக் கண்டு இது நரியன்று என்ருன் நரி இல்லை என்றவன் ஆகமாட்டானோ? நீயே சொல் என்ருன் என்றவாறு. (௩௯௪)

நீலகேசி கூற்று

௩௯௫. நாய்கோன் னரிகோல் லெனத்தோன்று

முணர்வு நண்ணி

யாய்சொல லிரண்டின் னுணர்ந்தல்லது

வின்மை யென்ருய்

நீசொல லறியா யறிவார்நெறி

நேடு கில்லாய்

பேய்சொல லுபவே பலசொல்லிப்

பிதற்ற லென்ருள்.

(இ - ள்) நாய் கொல் நரிகொல் எனத் தோன்றும் உணர்வு நண்ணி - ஏடா! ஒருவனுக்கு நாயோ நரியோ எனக் கவர்பட்டுத் தோன்றும் ஐயவுணர்வு பிறந்துழி; ஆய் சொல் இரண்டின் உணர்ந்து அல்லது இன்மை என்ருய் - ஆராய்தற்குரிய சொற்களாகிய 'இல்,' 'அல்,' என்னும் இரண்டு எதிர்மறையையும் கொண்டுணர்ந்தல்லது அன்மைப் பொருள் பெறப்படாதாகவும் நீ இன்மை மட்டுமே கூறிஞய்; நீ சொல்லறியாய் - நீ சொல்லியல்பு அறிந்தாயல்லை; அறிவார் நெறி நேடுகில்லாய்-நீ சொல்லறியும் சான்றோர் நெறியினும் செல்வாயல்லை; பேய் சொல்லுபவே பல சொல்லிப் பிதற்றல் என்ருள் - ஆகவே, நீ பேயேறிஞர் சொல்லுவனவே போன்று பலபல சொல்லி இங்ஙனம் பிதற்ருதே கொள் என்ருள்; என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை.

நாயோ நரியோ என்றையந் தோன்றி நரியன்மை துணிந்து, நரியன்று நாயென்புழி, நரியன்மை நாயிற் கிடந்ததெனின் நாயாதலும் நரி அன்ருதலும் நாயிற் கிடந்ததாம்; அவ்வழி. நரியன்மை யாதிஞற் பெற்ருய்? நரியாந்தன்மை இன்மையின் எனின், நரியாந்தன்மையினது இன்மை நாயிற்கிடந்ததாம்; ஆதலால் இன்மையைப் பற்றி அன்மை

வந்ததாம். ஆதலால் அவ்விரு சொல்லுக்கும் வேற்றுமையுளதாம். அன்றியும் இல்லென்பது பொருளினது இன்மையைக் காட்டி நிற்கும், அல்லென்பது ஒரு பொருளினது இன்மையினையுடைய பிறிதொரு பொருள் காட்டும். இது தம்முள் வேற்றுமை; நாயின்று நாயன்று என. எனவே நாயன்று என்றவன் நாயில்லை என்று சொன்னவன் ஆகான் காண் என்றவாறு.

அன்றியும் வடநூல் வழக்கினும் ந என்னும் எதிர்மறை யுணர்த்துஞ் சொல்லிற்குப் பொருள் இரண்டாம். ப்ரஸஜ்ய ப்ரதிஷேதமும், பர்யுதாஸப் ப்ரதிஷேதமும் என, இருவகைப்படும். அவற்றுள்– ப்ரஸஜ்ய ப்ரதி ஷேதமாவது - எடுத்துக் கொண்ட பொருளின் இன்மையையே காட்டும்; என்னை? ''வர்த்தமானஸ்ய நிஷேத ப்ரஸஜ்ய ப்ரதிஷேத'' என்பவாகலின், பர்யுதாஸ ப்ரதிஷேதமாவது - எடுத்துக் கொண்ட பொருளின் இன்மையோடுகூட அதனையுடைய பிறிது பொருள் காட்டுவது; என்னை? ''பரம் பரிக்ரஹ்ய விவக்ஷிதமு தஸ்யதீதி பர்யுதாஸ'' என்பவாகலின் அநவஸ்மென்றவழி குதிரையின்மையைக் காட்டுவது, ப்ரஸஜ்ய ப்ரதிஷேதம். இனி அஸ்வமல்லாப் பிறிதைக் காட்டுவது பர்யு தாஸப்ரதி ஷேதம். அவ்விரண்டு பொருளினும் இல்லென்பதூஉம் அல்லென்பதூஉம் வந்தவாகலின் அவ்விரண்டு சொல்லும் முழுதும் வேறுபட்ட பொருள்கள் அல்லவாதலின் நீ சொல்லில் அறியாமையும் சொல்லறிவாரோடு சேராமையு முடையையாய்ப் பேய் போலப் பிதற்றுகின்றா யென்றவாறு.

இரண்டினுணர்ந்தல்லது இன்மை யென்றாய் என்பதன் பொருள் இல் அல் என இரண்டுங் கூடியல்லது அன்மை பெறப்படாது ஆதலின். நரி யன்று என்புழி நரி இல்லை என்பது பெறப்படாதாகவும் இன்மை என்றாய் என்றவாறென்க. (நரியன்று நாய் என்னல் வேண்டும் என்பது கருத்து.) (௪௬௧)

## மொக்கலன் கூற்று

௪௬௨. பேரும் உணர்வும் பொருளில்லதற் கில்லை யென்றி
சார்வும் மகல்வுந் தலைப்பெய்தலோ டுள்ள மின்மை
நேரிங் கிவையு முணராமையிற் கென்ற னளாய்த்
தேரன் சிறிதே தெரிகோதையை நக்க னனே.

(இ - ள்.) தேரன் - பின்னர் மொக்கலன்; பொருள் இல்லதற்குப் பேரும உணர்வும் இல்லை என்றி - ஏடி நீ இல்பொருளுக்குப் பெயரும் அதனை உணரும் உணர்ச்சியும் இல்லை என்று கூறுகின்றாய்; சார்வும் அகல்வும் தலைப் பெய்தலோடு உள்ளம் இன்மை-கண்ணுள எழுதும் மையும சேய்மையிலுள்ள மலை முதலியனவும் அறிகருவிகளால் அணுகப் படாதனவும் மனஞ்செல்லாதனவும்; இங்கு இவையும் உணராமை-என்னும் இப் பொருள்கள் தாமும் உணரப்படாமையினால்; இற்கு நேர் - இல்பொருள் என்றற்கு ஒப்புக்கொள்!; என்றனளாய் தெரிகோதையைச் சிறிது

நக்கனன்-என்று கூறியவனாய் நீலகேசியை எள்ளிச் சிறிது நகைத்தான் என்க.

(வி - ம்.) இஃது, "உணராமை காரணத்தால்"......தது. இற்கு-இல்லாமைக்கு. அஃதாவது இல்பொருளாதற்கு என்றவாறு.

பெயரால் அறியப்படாத பொருள் இல்லை என்பாயாயின் கண்ணுள் அணியும் மையும் சேய்மையிலுள்ள மலை முதலிடனவும் தலைப்பெய்யாப் பொருளும் மனப்பற்றுப் பொருளும் பெயரால் அறியப்படாத பொழுதும் உளவாகலின் பெயர் அறியப்படாத பொழுது பொருள் இல்லையென்று கொள்ளலாமோ? என்று சிரித்தான் என்றவாறு.

சார்வு அணிமை – அவை, கண்ணுள் அஞ்சன முதலாயின; அவையுணராத பொழுதும் உள; சேய்மை-தொலைவிலுள்ள மலை முதலியன. அவையும் உணர்வெழாத காலத்துமுள; தலைப்பெய்யாமை - அறிகருவிகள் பொருளோடு புணராமை. அதுவும் உணராத பொழுதுமுண்டு. உள்ளமின்மை – ஒரு பொறிப்புலத்துள்ளஞ் செல்கின்ற காலத்துப் பிறிதொரு பொறிப்புலத்துள்ளஞ் செல்லாமை. அதுவும் அப்பொழுதுண்டு. தலைப்பெய்யாமையும் உள்ளமின்மையும் என்பன பெயரின்றியும் பொருள் உண்மையுடையவாயின. ஆதலால் பெயர் அறிவில்லாமை பொருளின தின்மைக்குக் காரணமன்றென்பது போந்தது. பொருண்மை என்புழி மை செய்யுள் விகாரத்தாற் குறைந்து நின்றது. உணராமையால் இவையும் இன்மைக்கு நேர் என்க. (௩௭௩)

நீலகேசி கூற்று

௪௩௩. ஆத்தன் னுரைத்த பொருடன்னையவ் வாச கத்தாற்
சாத்தன் பயின்று லறியாவிடுந் தன்மை யுண்டோ
வீர்த்திங் குரைத்த பலதம்முளோன் றின்ன தென்று
யோத்தின் வகையாற் பெயரோடுணர் வின்மைக் கென்றுன்.

(இ - ள்.) பொருள்தன்னை - எடா! நீ ஈண்டுக் கூறிய பொருளை; ஆத்தன் உரைத்த அவ் வாசகத்தால் - ஆசான் செவியறிவுறுத்த அந்த மொழியாலே; சாத்தன் பயினுரல் அறியாவிடும் தன்மையுண்டோ-ஒரு சாத்தன் பயின்றால் அவ்வழி அதன் பெயரையறியாமல் விடுதலுமுண்டோ?; ஈர்த்து ஈங்கு உரைத்த பல தம்முள் - நீ வலிந்திழுத்து இவ்விடத்தே இப்பொழுது கூறிய பலவாகிய பொருள்களுள் வைத்து; ஓத்தின் வகையால் பெயரோடு உணர்வு இன்மைக்கு ஓதுமுறையாலே பெயரும் உணர்வெழுதலும் இல்லாமைக்கு எடுத்துக்காட்டாக, ஒன்று இன்னது என்றும் - ஒன்றுகூறி இஃதித்தன்மையது என்று கூறிக்காட்டுக!; என்றுன்-என்று கூறினள்; என்க.

(வி - ம்.) இது மேலதற்குவிடை.

எடா! யாங்கள் பேரும் உணர்வும் உடையது யாதொரு பொருள், அஃதில்லை எனப்படாது என்பதல்லது; பேரும் உணர்வும் இல்லாததனை

இல்லை என்று சொல்லேம்; இவ்வாறு பேரும் உணர்வும் இல்லாதன வாக நின்றுக் கூறப்பட்டன ஆசான் அறிவுரை முதலியவற்றுலே உணரப்படாவோ? நீ சொன்ன இவற்றுள் உணரப்படாதது இன்னது என்று சொல்க என்றவாறு.

இனி, பேரும் உணர்வும் உளவாய வழி, பொருளுண்டாயின் முயற் கோடு முதலாயினவு முளவாக வேண்டுமெனின், முயற்கோடில்லை என்பதல்லது முயல் என்னும் பெயரும் கோடென்னும் பெயரும் பொருளுடையவே. என்னை? மொக்கலன் மகாபோதியிலில்லை என்றால் மொக்கலன் இல்லையாகாதவாறு போலக் கொள்க என்பதாம். (கசஎ)

## மொக்கலன் கூற்று

சகச. ஒன்றி னியற்கை யொருவான்பொருட் கில்லை யென்றே
யென்று முரைத்தி யிரும்பெய்திய வெம்மை யந்நீர்
சென்றும் மறுகித்தெறு தீக்குணஞ் சேர்ந்த தற்றேற்
குன்றும் பிறவோ வினிநீகொண்ட கோளு மென்றான்.

(இ - ள்.) என்றும் - மொக்கலன் ஏடி நீலகேசி! நீ எப் பொழுதும்; ஒன்றின் வான் இயற்கை ஒரு பொருட்கு இல்லை என்றே உரைத்தி - ஒரு பொருளினது சிறப்புரிமையுடைய தன்மை மற்றொரு பொருளுக்கு இல்லையாம் என்றே கூறுகின்றனை; அற்றேல் - அங்ஙனமாயின்; இரும்பு எய்திய வெம்மை - இரும்பு உலையிலிடப்பட்ட பொழுது அடைந்த வெப்பமும்; அந்நீர் சென்றும் மறுகி - அவ்விரும்பு தோய்க்கப்பட்ட நீர் ஓடியும் சுழன்றும்; தெறு தீக்குணம் சேர்ந்தது-சுடுந்தீயினது தன்மையைப் பெற்றது காண்டலின்; இனி நீ கொண்ட கோளும் குன்றும் என்றான் - இனி நீ கொண்ட அம் மேற்கோளும் குறையுடையதாம் அன்றே? என்று கூறினன்; என்க.

(வி - ம்.) இஃது "ஒன்றினதியற்கையால்"......தது.

ஒன்றினதியற்கை பிறிதொன்றினில்லை என்கின்றாயாயின், இரும்பு காய்ந்து நெருப்பாவதும் குளிர்ந்தவியல்பையுடைய நீர் காய்ந்து மறுகிச் சுடுவதும் முதலாயினவற்றால் நின்மேற்கோள் குறைபடு மன்றே என்றான்; என்றவாறு. (கசஅ)

## நீலகேசி கூற்று

சகரு. கொண்ட வுடம்போடுயிர் தானுடன் கூடி நின்றாற்
கண்டு முணர்ந்து மவையாவதென் கல்வி யில்லா
யுண்டங்க ணின்ற வுயிர்க்காக வுரைப்ப தோக்கும்
பிண்டந் நிகழ்ச்சி பிழைப்பாகு நினைக்கு மென்றாள்.

(இ - ள்.) கல்வி இல்லாய்-கற்றறியாத மடவோனே !; உயிர் தான்கொண்ட உடம்போடு உடன்கூடி நின்றால் - உயிர் தான் ஊழ் வகையா லெடுத்துக்கொண்ட உடம்போடே ஒருங்குசேர்ந்து நின்ற தாயினும்; கண்டும் உணர்ந்தும் - கண்டும் உணர்ந்தும் பிறவும் ஆகிய நுகர்ச்சிக்குக் காரணமான; அவை ஆவது என் - அவற்றைச் செய்வது யாது, அவ்வுயிரன்றோ ?; அங்கண் நின்ற உயிர்க்கு ஆக உண்டு உரைப்பது ஒக்கும் - அவ் வுடம்பின்கண் நின்ற உயிரின் தன்மையால் உடம்பிற்கும் அவை உண்டு என் பதனை ஒக்கும்;. பிண்டம் நிகழ்ச்சி பிழைப்பு ஆகும் நினக்கும் என்றாள் - இவ்வாறு கொள்ளாதொழியின் அட்டகபிண்டமாகிய தீயினது நிகழ்ச்சியும் உனக்கும் குற்றமாய் முடியும் என்றாள் என்க.

(வி - ம்.) இது. மேலதற்கு விடை.

உடம்பின்கணின்ற உயிரின் குணவேற்றுமைகள் உடம்பிற் காணப்பட்டவெனினும் அவை உடம்போடு தொடர்புடையனவன்றி உடம்பினின்ற உயிரினுடையன வாவதறியாயோ ! அதுபோல இரும்பும் நீரும் தீயோடு கூடுதலின் இரும்பினும் நீரினும் தீயின் குணங் காணப்பட்ட தெனினும் அது தீயின் குணமென்றே கொள்ளென்ப தாம். இவ்வாறு கொள்ளாதொழியில் அட்டகபிண்டமாகிய தீ சுட்ட தெனினும் நீரும் மண்ணும் சுட்டதென்னுது தீ சுட்டதென்று நீ சொல்லுகின்ற வழக்கும் பிழையாம் என்றவாறு. இதனாற் போந்த பொருள் 'இயல்பிறப்பு' என்பதில்லையாமென்பதாம்.

இனி, நெருப்பினியல்பால் நீரில்லையென்றும், நீரினியல்பால் நெருப்பில்லை என்றுமன்றே நீங்கள் சொல்லுவது; ஆயின், நெருப்பி னியல்பாகிய சுடுதலால் நீர் உளதாயிற்றாகாதோ ? எனின், ஆகாது; என்னை ? நெருப்பினியல்பாகிய சுடுதலன்றி நெருப்பு ஓட்டைக் கூட்டத்தான் நீரின்கட்டோன்றிய தொருவேற்றுமையன்றோ ? வெப் போடு கூடிய உடல் வேற்றுமையான வெப்பம் தீயின் குணமாமோ ? தீயின்குணமாகின் வெப்பு நோய் கொண்டார் மேலிட்ட புடைவை வேவாதோ ? ஆகையால் நெருப்பினது வெப்பமன்றி நீர் முதலிய வற்றிற்குக் காரணத்தால் தோன்றுவதொரு குணமென்று கொள்ளென் பதாம். அன்றியும் இக்காலத் தவ்விடத்து இத்தன்மையால் உண் டென்று சொல்லுதலால் நீ சொல்லிய குற்றம் எங்கட்காகாதென்ப தாம். இஃது இயல்பிறப்புக் காட்டிக் குற்றங் கூறப்புகுவதனை விலக்கியபடியாம். (௪௪௪)

## மொக்கலன் கூற்று

௪௪௫. மெச்சி யிடத்தாற் பிறிதின்மை விளம்பு கின்றாய்
பிச்சை முதலாப் பெரிதாவறஞ் செய்த வன்றா
னச்சேல் கதியுள் ளமரன்னேனப் பாடு மின்றே
விச்செய்கை யெல்லா மிகழ்வாம்பிற வென்ற னனே.

(இ - ள்.) மெச்சி பிறிது இன்மை விளம்புகின்றாய் - அது கேட்ட மொக்கலன் ஏடி நீ நின்னையே புகழ்ந்துகொண்டு ஒரு

பொருள் தன்னிடத்துளதாம் பிறிதிடத்திலதாம் என்று கூறு கின்றாய்; பிச்சைமுதலா பெரிதா அறஞ் செய்தவன்றான் - துற வோர்க் குணவு நல்குதல் முதலாகப் பெரிதாக அறஞ்செய்தவ னொருவன்: அச் செல்கதியுள் - அவ்வறங்காரணமாக அவன் சென்று பிறக்கும் தேவகதியின்கண்; அமரன் எனப்பாடும்இன்று - தேவன் எனப்படுதலும் இல்லையாம்; இச் செம்மையெல்லாம் இகழ்வு ஆம் - நீ இவ்வாறு கூறுவனவெல்லாம் குற்றமாம்; என்றனனே - என்று கூறினான்; என்க.

(வி – ம்.) இது "பிறிதிடத்துள்ள"......தது.

இவ்விடத்துண்டு; பிறிதிடத்தில்லை என்று சொல்லுதலால், அறஞ் செய்தான் இவ்விடமென்ற தன்னிடத்திலன்றிப் பிறிதோர் இடத்தில் இல்லையாதல் வேண்டும்; வேண்டவே மேனிலையுலகமென்ப தொன் றில்லையாய் அறஞ்செய்ததெல்லாம் அவமாம் என்றான்; என்றவாறு. (௧௯௦)

நீலகேசி கூற்று

௪௧௭. ஊனத்தை யின்றி வழங்காவுழல் கின்ற போழ்து
மானத்தி னீங்கி வதங்காத்து வருந்தும் போழ்தும்
வானத்த தாய பொழுதுமன் னுயிர தென்று
டானத்தி னுண்மை யிதுதத்துவ மாக்கொ ளென்றாள்.

(இ - ள்.) ஊனத்தை இன்றி வழங்கா உழல்கின்ற போழ்தும் - எடா! ஒருவன் மனத்தின்கண் மாசின்றி வழங்கி அறஞ் செய்கின்ற காலத்தும் அதன்பயனை நுகர்கின்ற காலத்தும், மானத்தின் நீங்கி வதம் காத்து வருந்தும் போழ்தும் - குற்றத்தி னின்றும் நீங்கிக் கொல்லாமை ஊனுண்ணாமை முதலிய விரதங்களை மேற்கொண்டு வருந்துகின்றபொழுதும்; வானத்தது ஆய பொழுதும - அவனுயிர் உடலைவிட்டு மேனிலையுலகத்தின் கண்ணதாய பொழுதும்; மன் உயிர் அது என்றாள் - நிலை பெற்ற உயிர் அதுவேயாகலின் நீ கூறிய குற்றம் எங்கட்கு ஆகா என்று மேலும்; தானத்தின் உண்மை இது தத்துவமா கொள என்றாள் - ஒரு பொருளின இடவியல்பு இதுவாம் என்று அவ்வியல்பையும் கூறி இதனையே தத்துவமாகக் கொள்வாயாக என்றாள்; என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை. ஊனம்-மாசு. மானம்-குற்றம். இக்காலத்து இவ்விடத்தில்லை என்று, யாங்கள் காலத்தையிட்டுச் சிறப் பித்துச் சொல்லுதலால் பிறிது காலத்துப் பிறிதிடத்துண்டெண்பது பெறப்படுதலால், அறஞ் செய்கின்ற காலத்தும் நிலவுலகத்தே அறப் பயனை நுகரும் காலத்தும் துறக்கத்தினும் ஓர் உயிரே என்றலின், நீ சொல்லிய குற்றம் எங்கட்கு எய்தாதென்பதாம்.

அன்றியும் இடமுங் காலமும் இயல்பும் உயிர்முதலிய பொருள்க ளால் அடையப்பட்டன. 'தன்னிடம்' 'தன்காலம்' 'தன்னியல்பு' என்றும்,

அடையப்படாதன வேற்றிடமுதலியன என்றும் சொல்லுதுமாதலின் இடமுதலியவற்றிற்கு வரையறையின்மையின் எமக்கு நீ சொல்லிய குற்றமாகாவென்பதுமாம். (௧௰௧)

மொக்கலன் கூற்று

௪௧௮ காலம் பிறிதிற் பொருளில்லெனக் காட்டு கின்றாய்
ஞால மறியத் தவஞ்செய்தவ னல்லு யிர்தா
னேலங்கொள் கோதா யெதிர்காலத்தி னின்மை யாமேற்
சீலங்கள் காத்தல் வருத்தஞ்சிதை வாக வென்றான்.

(இ - ள்.) ஏலம் கொள் கோதாய் - அதுகேட்ட மொக்கலன் நீலகேசியை நோக்கி மயிர்ச் சாந்தமணங் கமழும் மலர்மாலையினை யுடைய நங்காய் நீ; பொருள் காலம் பிறிதில் இல் எனக் காட்டு இன்றாய்-ஒரு பொருள் தன்காலத்திலன்றிப் பிறிதொரு காலத்தில் இல்லையாம் என்று கூறுகின்றனை; ஞாலம் அறியத் தவம் செய் தவன் நல் உயிர்தான் - உலகத்தாரெல்லாம் அறியும்படி தவஞ் செய்தானொருவனுடைய நல்ல உயிர்; எதிர்காலத்தில் இன்மை யாமேல் - நீ கூறியவாறு எதிர்காலத்தே இல்லையாமாயின்; சீலங்கள் காத்தல் வருத்தம் - தவவொழுக்கத்தைப் பேணுதல் துன்பமாந்துணையேயாம்; சிதைவு ஆக என்றான்-மேலும் பொருட்கு நாங் கூறும் கணபங்கமும் வாய்மையாகும் என்றான்; என்க.

(வி - ம்.) இஃது "ஒருகாலத்துளபொருள்"......தது.

இக்காலத்துண்டு பிறிது காலத்தில்லையென்று சொல்லுவாய்; தவம் பண்ணுவானொருவன் தவம் பண்ணுகின்ற இக்காலத்திலே யுளனாய் எதிர்காலமுதலிய வேறுகாலத்தில் இலனாதல் முடிதலின் துறக்கவுலகம் என்பதொன்றில்லையாய் அறச்செயலுக்குப் பயனில்லை யாம்; அன்றியும் இக்காலத்துண்டு பிறிது காலத்தில்லை எனவே பொருள் கணிகமாமென்பதும் பெறப்படுமென்றான் என்றவாறு. (௧௰௨)

சிதைவு – கணிகம்.

நீலகேசி கூற்று

௪௧௯. ஆற்ற வருத்தித் தவஞ்செய்து மரிய காத்துங்
கோற்றும் பெரிதுங் நுணுகாநின்ற பொழுதி னானும்
மேற்ற முடைய விமையானெனப் பட்ட போழ்தஞ்
சாற்றி னுயிர்தன் பொழுதே யுண்மை தங்கு மென்றாள்.

(இ - ள்.) சாற்றின்-எடா! கூறுமிடத்தே; ஆற்ற வருந்தித் தவஞ் செய்தும் அரிய காத்தும் நோற்றும் பெரிதும் நுணுகா நின்ற பொழுதினானும் - பெரிதும வருந்தித் தவஞ் செய்தும மேற் கோடற்கரிய விரதங்களை மேற்கொண்டும் உற்றநோய் நோற்றும் நுண்ணிதாம் பொழுதும்; ஏற்றம் உடைய இமையான் எனப்பட்ட

போழ்தும் - உயர்வுடைய தேவனுகிப் பயனுகரும் பொழுதும்; உயிர் தன்பொழுதே தங்கும் - அவ்வுயிர் தான் தன் காலத்திலேயே உள தாம் காண!; என்றாள் - என்று கூறினள்; என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை. நுணுகுதல் - காமவெகுளி மயக்கந் தீர்ந்து நுண்ணிதாதல்.

தவம், பண்ணுகின்ற காலத்தும் அதன் பயனான மேனிலையுலக நுகர் வினும், உயிர் தன் காலத்திலேய உளதாம்; அஃதாவது-பொருள்கள் கணந்தோறும் ஒரு காலத்தை விட்டுப் பிறிதொரு காலத்தையடைத லால், அடையப்பட்ட காலம் தன்காலமாகவும் அடையப்படாத காலம் வேறு காலமாகவும் சொல்லுதலின் ஒரு காலமே தன்காலம் என்னும் வரையறையின்மையின் தவம்பண்ணுகின்ற காலம் தன்காலமாய் எதிர் காலமும் இறந்த காலமும் வேறு காலமாம். பின்பு துறக்கத்தே சென்று பயனுகருங்காலத்து அது தன் காலமாய் ஒழிந்த காலம் வேறு காலமாம். ஆதலின் நீ சொல்லிய குற்றம் எங்கட்கு ஆகாதென்ப தாம். (௩௯௩)

மொக்கலன் கூற்று

௪௨௦. நூற்று னிரும்பாய் நிகழாமை நொடிதி யாங்கே
பாற்றன் றயிரா மெனநின்று பயிற்று தியான்
மாற்று னுடையா ருரையொக்குநின் மாற்ற மென்னுத்
தேற்றார் தெருண்டா ரெனச் சொல்லினன் றேர னும்மை.

(இ - ள்.) தேரன் நூல் தான் இரும்பாய் நிகழாமை நொடிதி - அது கேட்ட மொக்கலன தனது போக்கறுதியாலே மீண்டும் நீல கேசியை நோக்கி ஏடி! நீ நூல் இரும்பாகப் பரிணமியாது என்றும் கூறுகின்றாய்; பால் தான் தயிர் ஆம் என நின்று பயிற்றுதி யால் - மீண்டும் பால் தயிராகப் பரிணமிக்கும் என்றும் கூறு கின்றாய்; நின் மாற்றம் மால் தான் உடையார் உரை யொக்கும் என்னு - நின் மொழி பித்துடையார் பிதற்றுரையையே ஒக்கும் என்றும்; தெருண்டார் தேறார் எனச் சொல்லினன் - ஆதலின் நின்மொழியை அறிவுடையோர் கொள்ளார்காண் என்றும் கூறினன்; என்க.

(வி - ம்.) இது "நூலிரும்பாய்"......தது.

மூன்றிடத்துந் தான்: அசை. மால் - பித்து. தேரன் - மொக் கலன்.

நூலிரும்பாய்ப் பரிணமியாது என்று சொல்லுதியாதலின், பால் தயிராய்ப் பரிணமியாதாம்; ஆகவும் பால் தயிராமென்றுஞ் சொல்லு தியாதலின் நின்னுரை பித்தருரையோ டொக்கும் ஆதலின் அறிஞர் கொள்ளார் என்றான்; என்றவாறு. (௩௯௪)

நீலகேசி கூற்று

௪௨௧. நூத்தந் நிமித்தந் தலைப்பெய்துதங் காரி யம்மா
யொத்த பொருள்க ணிகழ்வாக்க முரைத்து நின்றேன்
பித்தனி னுைப்பப் பிறிதிற்பிறி தாமென் பனோ
வித்தின் வழியா னுலைநீயும்வெள் யானை யென்றாள்.

(இ - ள்.) தம் தம் நிமித்தம் தலைப்பெய்து-ஏடா! பொருள் கள் தத்தமக்குப் பரிணாமமாதற்கேற்ற காரணங்களைப் பெற்றுழி; காரியம்மா - காரியப்பட்டு; ஒத்த பொருள்கள் நிகழ்வு ஆக்கம் உரைத்து நின்றேன் - தாம் தாம் பரிணமித்தற்கேற்ற பொருள் களாய்ப் பரிணாமமாகும் என்று கூறினேனல்லது; பித்தனின் ஒப்ப - பித்தன் போன்று; பிறிதிற் பிறிது ஆம் என்பனே - பரிணாமமாதற்கியலாத பிறிதொன்றினின்றும் அதற்கொவ்வாத பிறிதொன்று தோன்றும் என்று யான் கூறுவேனல்லன்காண்!; வித்தின் வழியான் வெள்யானை உரை என்றாள்-நீ வித்தினின்றும் அதற்கொவ்வாத வெள்ளானை தோன்றும் என்று கூறிக் கொள்க! அதனால் எமக்கென்ன? என்றாள் என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை.

ஏடா! யாங்கள் பொருள் கையறக் கெடாது நின்று தாம்தாம் பரிணமித்தற் கேற்ற காரணங்கள் பெற்றுத் தத்தமக்குப் பொருத்த மான பொருளாகப் பரிணமிக்கும் என்று சொல்லுதும்; ஆதலால் நூல் இரும்பாய்ப் பரிணமித்தற் கேற்ற காரணம் அல்லாமையின் அஃதா காதாதலின் அதற்கேற்ற பரிணாமத்தை அடையும் என்பது பொருந்தும். ஒருபொருள் கையறக் கெட்டவிடத்து அதினின்றும் முழுதும் வேறான தொரு பொருள் தோன்றுமென்று சொல்லுகின்ற நினக்கே அக் குற்ற மாவதாம். ஒன்று கையறக் கெட்டுப் பிறிதொன்று தோன்றில் நிலத்திலிட்ட வித்து கையறக் கெட்டால் அதன் வழியொரு வெள் ளானை பிறக்க வேண்டும் என்று யாங்கள் உனக்குக் கூறுங் குற்றத்தை நீ எங்கண் மேலிட்டுக் கூறினாயென்றவாறு.

நிமித்தம் - காரணம். நூல் புடைவையாய்த் திரிதற்குக் குழல் நிமித்தம் என்க. வித்து முளையாதற்கு நிலமும் நீரு முதலாயின நிமித்தம். பால் தயிராதற்கு மோர் முதலியன நிமித்தம். இவ்வாறே நிமித்தம். ஒழிந்தனவு மறிந்து கொள்க. காரணமின்றி உள்ளது கையறக் கெடுதலும் இல்லாதது தோன்றுதலுஞ் சொல்லுதலால் உனக்கிவ் வாறு கோடலருமையின் நீ சொல்லிய குற்றம் உனக்கேயாம் என் பதாம்.

"கேட்டிற்குக் காரணங் கேட்பேன்யா னெனமொழிந்தான்
கேட்டிற்குத் தோற்றமே கெடுப்பதிங் கில்லென்றான்"

என்னுமிது காரணமின்றிக் கெடுமென்பதற்கு அவன் நூற்கூற்று.

இனி "தோன்றுவ துள்ளதின் நூல்கன்னிக் குளதாகும்"

என்னுமிது இல்லாதது தோன்று மென்பதற்கு அவன் நூற்சான்று.

இனி, உள்ளது கெட, இல்லாதது தோன்றுதற்கண், வித்துக்கெட வித்தின் வழி வெள்ளானை தோன்றவு மமையு மென்பாள், "நீயும் வித்தின் வழியான் வெள்ளானை யுரை" என்றாள் என்க.

ஒன்றொன்றாய்க் கையறக் கெடாதே நின்று பரிணமிக்கில் பொன்முடி முதலியனவாய்ப் பரிணமிப்புழிக் கெட்டதில்லை யெனினும்

வித்து முளையாய்ப் பரிணமிப்புழிக் கெட்டது கண்டாமல்லமோ? எனின், ஒன்று ஒன்றாய்ப் பரிணமிப்புழிக் காரணத் தன்மையால் பிறிதாகிப் பரிணமிப்பனவும், தானதுவாய்ப் பரிணமிப்பனவும் என இருவகைத்தாம். அவற்றுள் பொன் காரணம் பற்றி வெள்ளியாய்ப் பரிணமித்தலும், வித்துக் காரணம்பற்றி முளையாய்ப் பரிணமித்தலும், விறகு காரணம் பற்றிச் சாம்பராய்ப் பரிணமித்தலும், பால் காரணம் பற்றித் தயிராய்ப் பரிணமித்தலும் முதலாயின. தான் பிறிதாகிய பரிணாமம். இவ்வழிப் புத்கலப் பொருள் கெடாது நின்றது. பொன் முதலியன கெட்டன.

இனி, வழக்குப் பொருளாகிய பொன் முதலியனவும், நில முதலியனவும் காரணத் தன்மையால் முடி குண்டலம் முதலியனவாய்ப் பரிணமிப்புழித் தானதுவாய்ப் பரிணமிக்கும். இவ்வழிப் புற்கலத்திரளாகிய பொன் முதலிய பொருள் கெடாது நின்றன. முடி முதலியன கெட்டன. உயிருள்ளும் மகன் தேவனாய்ப் பரிணமித்தல் முதலாயின தான்பிறிதாகிய பரிணாமம். இவ்வழி உயிர் கெடாது நின்றது; அதன் பரிணாமமாகிய மகன்மை முதலியன கெட்டன.

இனி, மகன்மை குழவிப் பருவ முதலியனவாய்ப் பரிணமிப்புழி மகன்மை தானதுவாய்ப் பரிணமித்தது. இவ்விடத்து உயிரும் புற்கலமும் கூடிய மகன்மை முதலியன கெடாது நின்றன. குழவிப் பருவ முதலியன கெட்டன. இனித் தானும் பிறிதுமாகிப் பரிணமிக்கும் பரிணாமமும் இவற்றின்பாற்படும். இவ்வாறு காரணத் தன்மையாலே பொருள் பரிணமிக்கும் என்று கொள்ள எமக்கு யாதொரு குற்றமும் வாராது என்று கொள்ளென்பது. இத்துணையும் உத்திபற்றிக் கொண்டுரைக்கப்பட்டது.

நிகழ்வாக்கம் எனினும் பரிணாமம் எனினும் ஒக்கும். (கஉஉ)

## மொக்கலன் கூற்று

சஉஉ. கூடா போருள்கள் பிறிதின் குணத் துண்மை யென்பாய்
பாடாலப் புட்பத் தனவாகிய பண்பு நாற்றம்
மோடாவ தெய்திற் றெனவைய முரைக் கின்ற தஃதா
ணாடாது சொன்னா யதனன்மை யொழிக வென்றான்.

(இ - ள்.) பொருள்கள் பிறிதின் குணத்து உண்மை கூடா என்பாய் - நீலகேசி! நீ பொருள்கள் தத்தம் இயல்பினால் உளவாவனவன்றிப் பிறிதினியல்பால் உளவாகா என்கின்றனை, அங்ஙனமாயின்; பாடாலம் புட்பத்தன பண்பு ஆகிய நாற்றம் - பாதிரி மலர்களினுடைய இயல்பாகிய நாற்றத்தை; ஓடு ஆவது எய்திற்று என வையம் உரைக்கின்றது - ஓடாகிய பிறிது பொருள் அடைந்தது என்று உலகத்தார் கூறுகின்றனரல்லரோ? அஃதால் நாடாது - நீ அவ்வுலகுரையாலே ஆராயாது; சொன்னாய்-கூறினையாதல் வேண்டும்; அதன் நன்மை ஒழிக என்றான் - ஆதலின் அக் கொள்கையின் நலம் ஒழிவதாக என்று கூறினான்; என்க.

(வி - ம்.) இது "பிறதோன்றினியற்கை"......தது.

ஏடி! நீ ஒன்றினது தன்மையால் ஒன்றில்லை என்பாயாயின் பாதிரிப் பூவின் பண்பாகிய நாற்றம் ஓட்டின்கண் வந்ததாகலின் ஒன்றினியல் பாற் பிறிதொன்று உண்டாயிற்றும். நீ இதனை ஆராயாது சொன்னை யென்று சொன்னனென்றவாறு.

பாடலம் - பாடாலம் என நீண்டது. பாடலம் - பாதிரி. (கஉ௯)

## நீலகேசி கூற்று

௪௨௯. போதுக்க வாசம் புதுவோட்டைப் பொருந்தினும்
மேதக்க நாற்ற மிதுபூவின தென்ப மிக்கார்
தாதுக்க நின்று மவைபோக்குந் ததாக தற்கென்
றேதுக்கள் காட்டி முடித்தாளிணை யில்ல நல்லாள்.

(இ - ள்.) இணை இல்ல நல்லாள் - ஒப்பற்ற நன்மையினை யுடைய நீலகேசி மொக்கலனை நோக்கி, போது உக்க வாசம் புது ஓட்டைப் பொருந்தினும் - ஏடா! பாதிரிப்பூ வெளியிட்ட மணம் புதிய ஓட்டைச் சேர்ந்தாலும்; மிக்கார்-அறிவின் மிக்கோர்; மேதக்க நாற்றம் இது பூவினது என்ப - மேன்மை தக்கிருக்கும் இந்த நறு மணம் பாதிரிப் பூவினுடையதே என்று கூறுவரல்லது ஓட்டினு டைய தென்னார்; உக்க தாது நின்று போக்கும் - புத்தனுடைய தாதுக்கள் அவனினின்றும வெளிப்பட்டவை பிறிதோரிடத்திருந் தாலும் சென்றாலும்; அவை ததாகதற்கு என்று அவை புத்தனு டையன ஆனாற்போல என்று; ஏதுக்கள் காட்டி முடித்தாள் - எடுத்துக் காட்டித் தன் மேற்கோட்குக் குற்றமின்மை முடித்தாள்! என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை. போது-பாதிரிப்பூ. ததாகதன்- புத்தன்.

இணையில்ல ஏதுக்கள் காட்டி முடித்தாள் என இயைத்து அதற் கேற்பக் கோடலுமாம்.

பாதிரிப்பூவுடனே சேர்தலினால் ஓட்டிற்கு அந்த நாற்றம் வந்ததா யினும் அஃது ஓட்டின் குணமன்று. அதன் குணமாயின் அதற்கு எப் பொழுதும் அந்த நாற்றமுளதாக வேண்டுமன்றே? தீயினுக்கு வெப் பம் ஒருகாலத்து வந்ததோ? உயிரினது அறிதல் முதலிய செயல்கள் தொடர்புடைமையால் உடம்பின்கண் வந்தனவெனினும். உயிரினுடை யன வாகின்றனவல்லவோ? அவற்றைப் போல ஓட்டில் வந்த நாற்றம் பாதிரிப்பூவினதேயாம். தாது எவ்வழி நிற்பினும் புத்தனுடையன ஆனாற்போல என்று ஏதுவுங்காட்டி முடித்தாள் நீலகேசி என்றவாறு.

ஏதுவென்று எடுத்துக்காட்டிற்குப் பெயர். "அதற்கு வருமேதுவு முரைப்பனிது கேணீ!" எனவும், "காரணங் காட்டிக் கணிகையரோ டெண்ணல்" எனவும் கூறுதல் காண்க. (கஉ௯)

வேறு

மொக்கலன் கூற்று

சஉச. வீட்டிட மென்று நின்னால்
வேண்டவும் பட்ட தன்னை
காட்டுவ னதுவு நாயிற்
கென்றுநன் றென்றி யாயிற்
சூட்டடு நரகந் தானுஞ்
சுடர்ந்தநற் சுவர்க்கந் தானும்
பூட்டின முரைத்த வக்காற்
போந்ததங் கென்னை யென்றான்.

(இ-ள்.) *நின்னால் வீட்டிடம் என்று வேண்டவும் பட்டதனை - மொக்கலன் பின்னர் நீலகேசியை நோக்கி, ஏடி! உன்னாலே வீட்டுலகம் என்று கூறப்பட்டதனை ; அதுவும் நாய் இற்கு காட்டுவன் - அதுவும் இடமாதலின் நாய்க்கொட்டிலை ஒக்கும் என்று கூறுவேன்; நன்று என்றியாயின் - இவ்வுவமையை நன்றென்று கொள்வாயாயின் ; சூட்டடு நரகந்தானும் சுடர்ந்த நல் சுவர்க்கந்தானும் - இன்னும் சுட்டுவருத்தும் நரகத்தையும் ஒளிவீசும் துறக்கத்தையும்; பூட்டினும் உரைத்த அக்கால் - உவமைகாட்டிக் கூறினேமாயின் அப்பொழுது ; அங்கு போந்தது என்னை என்றான் - அவ்விடத்து வந்த குற்றந்தான் என்னையோ ? என்றான் ; என்க.*

(வி - ம்.) *இது, ''நீயுரைக்கும் வீட்டிடமும்''.......தது.*

*''ஏடி வீட்டுலகம் என்று நீ சொல்லுகின்றதுவும் ஓரிடமேயாகையால் அது நாய்கிடக்குமிடத்தையும் நரகத்தையும் துறக்கத்தையும் ஒக்குமென்று சொன்னாற் போந்த குற்றமென்னை?'' என்றவாறு.*

*வீட்டுலகம் நாயிருக்குமிடம், இடமாகையால் நாய்க்கொட்டில் போல வீட்டுலகம் துக்ககாரணம்; இடமாகையால் நரகம்போல; வீட்டுலகம் மீண்டும் வீழ்தற் காரணம், இடமாகையால் துறக்கம்போல என்று, கருதலளவை கூறினான் என்பதாம்.*

*சூட்டடுநரகம் - சுட்டு வருத்துகின்ற நரகம். சுட்டு - சூட்டென நீண்டது.* (சஉச)

*நீலகேசி கூற்று*

சஉரு. கதியின வகைய வாறுங்
கந்தபிண் டங்கள் சொன்னான்
பதியின வென்ன நின்றாய்
பாக்கனாய் காட்டு தீயால்

விதியினின் வினையட் டார்தம்
வீட்டிட மின்ன தென்றாற்
கதுவென்னை யென்னச் சொன்ன
லாகம மல்ல தாமோ.

(இ - ள்.) கதியின வகைய ஆறும் கந்த பிண்டங்கள் சொன்னான்-எடா! நீ, பிறப்புவகையினவாகிய ஆறனையும் கந்தவகையின வாகிய பிண்டங்கள் ஐந்தனையும் கூறிய புத்தன் வீடுபெற்ற; பதி இன என்ன நின்றாய்-இடங்கள் இன்னின்ன என்று நின் ஆகமத் தாற் கூறுகின்றனை; பாக்கன நாய் காட்டுதி-அவ்வாறு கூறுகின்ற நீ எங்கள் வீட்டுலகிற்குக் காட்டுப் பூனையினிடத்தையும் நாய்க் கொட்டிலையும் உவமை காட்டுகின்றாய்; விதியினின் வினை அட்டார் வீட்டிடம் இன்னது என்றால் - யான் முறைப்படி ஒழுகி இருவினை களையும் கெடுத்தவருடைய வீடுபேற்றிடம் இன்னது என்று கூறி னால்; என்னைக் கது சொன்னால் - எனனைக் குற்றங்கூறின்; ஆகமம் அல்லது ஆமோ-நூலளவை அளவையன்றாகுமோ? என்றாள் என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை. கது-குற்றம். பாக்கன்-காட்டுப் பூனை. கதிவகை ஆறாவன-விலங்குகதி, பேய்க்கதி, நரககதி, தேவகதி, பிரமகதி, மக்கட்கதி என்பன. இவற்றை,

"இத்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயும் நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்"
(மணி. ௩0, ௭௩-௫)

எனவும்,

"சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமருமாகி" (மணி.௩0, ௭௮-௮0)

எனவும் வரும் மணிமேகலை துறவினுங் காண்க.

அறுவகைக் கதியும் ஐவகைக் கந்த பிண்டமும் சொன்னனிருக்கின்ற மகாபோதியிடமும் கபிலபுரம் முதலாயினவும் புத்தனுடைய வீடு பேற்றிடங்கள் என்று சொல்லுகின்றாய், எமது வீட்டுலகிற்குப் பாக்கனையும் நாயையும் காட்டுகின்றாய்; வினைகெடுத்தவர் இன்னவழியிருப்பரென்று யான் எம்பரமாகமத்துச் சொன்னவாறு சொல்லின் நீ இவ்வாறு குற்றங்கூறின் ஆகமத்துச் சொல்லுகின்ற பொருள்கள் அல்லவாமோ? என்று சொன்னாளென்றவாறு.

புத்தனிருக்கும் மகாபோதியிடம் முதலியன நாயிருக்குமிடம், இடமாகையால் நாய்க்கொட்டில் போல: துக்ககாரணம் இடமாகையால் அவீசி நரகம்போல; மீண்டும் வீழ்தற்காரணம் இடமாகையால் படுகுழி போல; துடிதவிமானத்தினின்றும் போந்து,குயிலாலபுரத்துத் தோன்றி, உலும்பினி வனத்துப் பிறந்து கபிலபுரத்துப் புத்தத்தன்மை

பெற்று அறஞ் செய்யறிவுறுத்து மகாபோதியிடத்துப் பொன்றக் கெடுதல் புத்தனுக்கு நியதி. (கஙக)

மொக்கலன் கூற்று

சஉ௬. பேர்த்திவண் வார லில்லாப்
பிறவியாந் தான மென்னிற்
றீர்த்திவண் வார லின்மை
சேர்விடக் குண்மை யாமோ
கூர்த்தலில் வினையி னின்மை
கூறுவ னென்றி யாயி
ளூர்த்துள னவனே யாயி
னண்ணுமே வினையு மென்றான்.

(இ - ள்.) இவண் பேர்த்து வாரல் இல்லாப் பிறவி ஆம் தானம் என்னின் - ஏடி! நீ வீட்டுலகமாவது, மீட்டும் இங்கு வந்து பிறவாமைக்குக் காரணமான பிறவி எய்தும் இடம் என்பாயாயின்; தீர்த்து இவண் வாரல் இன்மை - இருவினைகளையுமொழித்து மீண்டும் இவ்வுலகிற்கு வருதலில்லாமைக்குரிய ஆற்றல்; சேர் விடக்கு உண்மை ஆமோ - உயிர் சேர்ந்த அவ் வீட்டுலகிற்கு உளதாமோ? அல்லது; கூர்த்தல் இல் வினையின் இன்மை கூறுவன் என்றியாயின் - மிகுதல் இல்லாத வினைகளின் அழிவே மீண்டு வந்து பிறவாமைக்குக் காரணம் என்பாயாயினும்; அவனே உளன் ஆயின் - முன்பு வினை செய்தழித்தவனே அவ்வீட்டுலகின்கண் இருப்பவனாயபொழுது; வினையும் ஆர்த்து நண்ணுமே என்றான் - அவ்வினைகள் தாமே ஆரவாரித்து அவனை எய்துமே? இதற்கென் சொல்லுதி? என்றான் என்க.

(வி - ம்.) இது "பேர்த்திங்குவார"..........தது.

வீட்டுலகமாவது மீட்டுப் பிறவாப் பிறவிக்குத் தகுதியானதோரிடமெனின், இடமாகிய விதனுக்குத் தன்னுழைச் சென்றாரை மீட்டுப் பிறவாமை செய்யும் ஆற்றலுளதோ? இனிப் பின்பிறப்புச் செய்வதாகிய வினைகெடுதலிற் பிறவானெனின் அவனுளனாயிருப்பின் வினை தாமே உளவாமென்று சொன்னானென்றவாறு.

வாரல் - வருதல். இடக்கு - இடத்திற்கு. வினை ஆர்த்து நண்ணும் என்க. (கஙo)

நீலகேசி கூற்று

சஉ௭. பிறப்பதை வீடு மென்னே
னவ்விடம் பேர்ப்பின் றென்னே
னறத்தகு வினைக டாமு
முண்மையா லோட்டு மென்னேன்

மறத்தலில் யோக பாவ
மாசுதா மீட்டு மென்ப
திறப்பவும் வேண்டு கின்றேற்
கெய்தல நின்சொ லென்றாள்.

(இ - ள்.) பிறப்பதை வீடும் என்னேன் - ஏடா! மொக்கல! யான் மீண்டும் பிறவாமற் பிறப்பதொரு பிறப்பினை வீடு என்றும் சொல்கின்றிலேன்; அவ்விடம் பேர்ப்பு இன்று என்னேன் - அவ் வீட்டுலகம் மீட்டுப் பிறவாமையைச் செய்யும் என்றும் சொல்கின்றி லேன்; உண்மையால் - வீடுபெற்றான் இருத்தலாலே; உறத்தகும் வினைகள் ஒட்டும் என்னேன் - அவனோடு பொருந்தற்கேற்ற வினை கள் தாமே அவனை அடையும் என்றுஞ் சொல்கிலேன்; மறத்தல் இல்யோகபாவ மாசுதாம் மீட்டும் என்பது-ஒருவனுடைய மறத்தற் கரிய யோகபாவத்தா லுண்டாகிய வினைகளே அவனை மீண்டும் பிறப்பிக்கும் என்னும் மேற்கோளினையே; இறப்பவும் வேண்டுகின் றேற்கு - பெரிதும் ஏற்கின்ற எனக்கு; நின்சொல் எய்தல - நீ கூறிய குற்றங்கள் பொருந்தமாட்டா; என்றாள் - என்று கூறினள் என்க.

(வி - ம்.) இது, மேலதற்கு விடை. பேர்ப்பு-மீட்டுப் பிறப்பித்தல். ஏடா! யான் பேர்த்துப் பிறவாமற் பிறப்பதோர் பிறப்புவீடு என்றும், வீட்டுலகம் பிறவாமை செய்யும் என்றும், உயிரினது உண்மை மாத்திரையால் வினையுண்டாம் என்றும், சொல்கின்றிலேன். யோக பாவங்களால் வினையாம்; வினையாற் பிறப்புண்டாம் யோகபாவ நீங்க வினை நீங்கும், வினை நீங்கப் பிறவி நீங்கும். பின்பு யோகபாவ மின்மையின் வினைத் தொடர்பில்லை என்றுஞ் சொல்வேனாதலின் நீ சொல்லிய குற்றம் எமக்கு எய்தா என்றாள் : என்றவாறு.

யோகமாவது மனமொழி மெய்களின் செயல். பாவமாவது அந்தச் செயல்களால் உயிரின்கணுண்டாகிய பரிணாமத்தன்மை. சித்த பரமேட்டிகளுக்குமை மனச்செயல் உளதன்றோ? எனின், உளதன்று; என்னை?

"இன்ன திருந்தடி யீண்டு குணச்செல்வ
னென்னும் பகைபசி வேட்கை வியப்பிலன்
கண்ணுந் துயிலான் கறுவச்ச மார்வமு
மன்னுமொன் றில்லை மனச்சிந்தை யின்றே"

[குணச்செல்வன் - அருகக்கடவுள். என்னும் - சிறிதும். கறுவு - சினம். அருகன் பகை முதலியன இலான். துயிலான். சினமுதலியனவு மிலான் என்க.]

என்பதனால் அருகனிலையினும் இல்லாதது சித்த பரமேட்டியுமை உள தாகாதென்பது. ஆதலால் சுபயோகத்தால் அறமும் அசுபயோகத் தால் தீவினையும் யோகமொன்றுமின்மையால் வினையின்மையுமாம் என்பதாம். (௧௪௪)

மொக்கலன் கூற்று

சஉஅ. பிறக்குந்தன் ஞானத் தாலும்
பின்னுந்தன் னுண்மை யாலும்
புறப்பொருள் கொண்டு நின்று
புல்லிய சிந்தை யாலுஞ்
சிறப்புடை வீடி தென்று
செப்புநீ தீவி னையைத்
துறக்குமா றில்லை நல்லாய்
சொல்லுநீ வல்ல தென்றான்.

(இ - ள்.) *நல்லாய் பிறக்கும் தன் ஞானத்தாலும் - ஏடீ நங்காய் ! ஒருவனுக்குத் தோன்றும் தனது அறிவினாலும் ; பின்னும் தன் உண்மையாலும் - மேலும் தனது உண்மையாலும் ; புறப்பொருள் கொண்டு நின்று புல்லிய சிந்தையாலும் - அவன் வெளிப்பொருள்களைப் பற்றி நின்று அவற்றோடு பொருந்திய தன் நினைவாலும் ; தீவினையைத் துறக்கும் ஆறு இல்லை - தனது தீவினையை அழிக்கும் வழி இல்லையாம் ; சிறப்புடை வீடு இது என்று செப்பும் நீ - சிறப்புடைய வீடு வினையின்மையாலாம் என்று கூறுகின்ற நீ ; வல்லது சொல்லு நீ - இதற்கு நீ வன்மையுடையதொரு விடைசொல்லிக்காண்! ; என்றான் - என்று கூறினன் என்க.*

(வி - ம்.) இஃது, "உணர்வவர்க்குப் பிறக்குமேல்"........*தது.*

*இவனுக்கு அறிவு எப்பொழுதும் பிறத்தலாலும், தனதுண்மையாலும், புறப்பொருள்களைப் பற்றி நினைவுண்மையாலும் நின் அறிவா முயிர்க்கு வினைத்தொடர்பு நீங்குமாறில்லை. நீ இதற்கு வல்லையேல் விடை சொல்லுவாயாக என்றான் ; என்றவாறு.*

*விளக்குள்ள துணையும் மையுண்டானவாறு போல, அறிவுருவாகிய இவனுள்ள துணையும் வினைத்தொடர்புமுளனாவன் ; என்னை? இவன் பிறப்புற்ற காலத்தும் புறப்பொருண்மேற் சென்ற அறிவு நிகழ்ச்சி யாலன்றோ வினைத்தொடர்புளதாவது. அவ்வறிவோடு கூடி நிற்கில் இவனுக்கு வினைத்தொடர்புளதாம் என்று சொன்னான் என்பது போந்தது.* (கககூ.)

நீலகேசி கூற்று

சஉகூ. நன்றியில் கார ணங்க
ளாட்டிநீ காட்டி னவ்வு
மொன்றுநா னொட்டல் செல்லேன்
யோகொடு பாவ நின்றாற்

குன்றினிற் கூர்ங்கை நட்டாற்
கூடுநோ யாதிற் குண்டோ
வொன்றுநீ யுணர மாட்டா
யொழிகநின் னுரையு மென்றாள்.

(இ - ள்.) யோகொடு பாவம் நின்றால் - ஏடா! யான் யோகமும் பாவமும் உயிரோடியைந்து நின்றால் அவையே வினைத்தொடர்புக்குக் காரணமென்பேன்; நீ நன்றியில் காரணங்கள் காட்டிக் காட்டினவும் - நீ பொருத்தமில்லாத காரணங்களைச் சொல்லிக் காட்டினவும்; ஒன்றும் - இவையல்லாதபிறிதும்; ஒட்டல்செல்லேன் - வினைத்தொடர்பிற்குக் காரணங்களாக இசைவேனல்லேன்; குன்றினில் கூர்ங்கை நட்டால் - மலையின்மேல் முழங்கையை ஊன்றி அழுத்தினால்; கூடும் நோய் யாதிற்கு உண்டோ - உண்டாகும் நோய் மலைக்கோ? கைக்கோ? எதற்காம்?; நீ ஒன்றும் உணரமாட்டாய் - நீ யாதொன்றும் அறியமாட்டாய்; நின் உரையும் ஒழிக என்றாள் - ஆதலால் நின் மொழியையும் இனி விடுக! என்றாள் என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை.

ஏடா! நின்னால் பொருத்தமின்றிக் காட்டப்பட்டனவும், பிறவுமொன்றும் வினைபற்றுதற்குக் காரணமாக இசையேன். யான் முன்சொன்ன யோகபாவங்களே வினைவருவாய்க்குக் காரணமாகக் கூறுவேன்; ஆதலால் நீயிவை சொல்லுதலால் நின் வாய் நோவதல்லது எமக்கு வருவதுண்டோ? மலையில் முழங்கையை ஊன்றி அழுத்தினானுக்கல்லது அதனுக்கு நோவுண்டோ? நீ யாது மறியலை; நின்னுடன் உரைப்பது வீணே! என்றாள் என்றவாறு.

நான் காட்டியன பொருந்தாவாறென்னை? எனின் எண்ணெயுடனுந் திரிமுதலானவற்றுடனும் கூடிய விளக்கன்றே மையுமிழ்வது; இவையின்றி எரிவதொரு விளக்குளதாயின் அது மையுமிழுமோ? மணிவிளக்கு மையுமிழுமாறுண்டோ? அதுபோல வினைப்புற்கலத்தோடு கூடிய அறிவு வினைக் காரணமாம். வினைத்தொடர்பினீங்கித் தூயதான மெய்யறிவு வினைக்காரணமாமோ? அன்றியும், நோய்க் காரணமாகிய அழுக்குநீர் தக்க மருந்துகளால் தூயதாக்கப்பட்டு அழுக்ககன்றால் நோய்க்காரணமாகுமோ? ஆகாதாகலின், மெய்யறிவு வினைவருவாய்க்குக் காரணமாகாமையில் நீ காட்டியவையெல்லாம் பொருந்ாதனவே என்பதாம்.

இனி, உனக்கு வீடாவது அறிவு கெடுகையன்றே; ஆதலால் நின் அறவொழுக்கம் அறிவிற்குப் பகையாமன்றே; பகையாதலால் நின் அற வொழுக்கம் வளர வளர அறிவு தேய்ந்து பாழாதல் வேண்டும். வேண்டவே, இவன் புத்தப்பண்பு பெற்றவழி, பிணம்போலப் பெரிதும் சிற்றறிவுடையனாதல் வேண்டும்; வேண்டவே உயிரற்றவனும்.

இனி, மிகவும் அறிவுடையன் எனின் மிக்க வினைகளாற் கட்டுண்டவனாய்ப் பிறப்பின்கட் புகுவான். ஆதலால், நீ நின் குற்றம் பாராது பிறர் குற்றம் நாடுவது நினக்கே குற்றமாமென்பது போந்தது. (கஎ௬)

மொக்கலன் கூற்று

௪௱௰. கருவிதா னென்று மின்றிக்
கடையிலாப் பொருளை யெல்லா
மருவிய ஞானந் தன்னு
லறியுமெம் மிறைவ னென்பாய்
கருவிதா னகத்தி னய
கடையிலா ஞான மன்றே
மருவியார்க் கமிர்த மொப்பாய்
மாற்றந்தா விதனுக் கென்றான்.

(இ - ள்.) மருவியார்க்கு அமிர்தம் ஒப்பாய் - ஏடி! நின்னைச் சேர்ந்தவர்கட்கெல்லாம் அமிழ்தம் போன்றவளே!; எம் இறைவன்- எங்கள் கடவுள்; கடையிலாப் பொருளை எல்லாம் - எல்லையற்ற பொருள்களையெல்லாம்; மருவிய ஞானந் தன்னால் அறியும் என்பாய் - தன்னோடு பொருந்திய அறிவினாலே அறிவான் என்கின்றனை; அகத்தின் ஆய கடையிலாஞானம் கருவிதான் அன்றோ - அவனுள்ளிருக்கின்ற கடையிலாஞானம் என்னும் அந்த அறிவு பொருள்களையறியுமிடத்துக் கருவியன்றோ?; இதனுக்கு மாற்றம் தா என்றான் - இவ்வினாவிற்கு விடையிறுப்பாயாக! என்றான் என்க.

(வி - ம்.) இது, "கருவியால் பொருள்கள்"......தது.

'மருவியார்க்கு அமிர்தம் ஒப்பாய்' என்றது, இகழ்ச்சிக்குறிப்பு. அமிழ்தம் ஒப்பாய்! நீ கருவியின்றி யெல்லையில்லாப் பொருள்களை உணர்ந்தான் எம்மிறைவன் என்று சொல்லுவாய்; அவனது கடையிலா ஞானந்தான் பொருள்களையறியுமிடத்துக் கருவியன்றோ? இவன் அறவோனாதலின் அறமும் அவனுக்குக் கருவியன்றோ? கருவியின்றி யுணர்ந்தான் என்னுமாறென்னை? இதனுக்கு மறுமாற்றஞ் சொல்லுவாயாகவென்று சொன்னானென்றவாறு. (௧௩௪)

நீலகேசி கூற்று

௪௱௰௧. வினையுமவ் வினையி னய
விகலஞா னங்க டாமு
மினையவே கருவி யென்று
லிங்குநின் னுள்ளம் வையாய்
முனைவனுய் மூர்த்தி யல்லான்
மூடமே மாசு மென்பாய்
கனைகட லெல்லை காணுங்
காக்கையோத் தாய்கொ லென்றாள்.

(இ - ள்.) வினையும் வினையின் ஆய விகல ஞானங்கள் தாமும் ஏடா! யாங்கள் வினையும் அந்த வினையின் காரியமாகிய விகலஞானங்களும்; இனையவே கருவி என்றால் - இவையே கருவிகள் என்று கூறின்; இந்த நின் உள்ளம் வைபாய் - இக்கூற்றின்கண் நின்னுள்ளத்தைச் செலுத்தாயாகி; முனிவனாய் - முற்றத்துறந்தவனாய்; மூர்த்தி அல்லான் - உருவமற்றவனாகிய எம்மிறைவனை; வினைமாசு ஊடும் என்பாய்-வினைமாசு ஊடும் என்று கூறுவாய்; கனைகடல் எல்லை காணும் காக்கை ஒத்தாய் என்றாள் - ஆரவாரிக்கின்ற கடலினது எல்லையைக் காண்டற்கு ஏறப்பறக்கும் காக்கையையே ஒத்தனை காண்! என்றாள்; என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை. விகலஞானம்: இஃது ஆகுபெயராய்ப் பொறிகளையும் லிங்கத்தையும் உணர்த்தியது.

ஏடா! யாங்கள் கருவி என்று சொல்லுவது-வினைகளையும் அவற்றின் காரியமாகிய பொறி லிங்கமுதலியவற்றையும் அவற்றாலாய விகலஞானங்களையுமேயாம். இறைவன் அவையொழிய வுணர்ந்தமையின் கருவியின்றி யுணர்ந்தான் என்போம். என்னை, "முறையினும் பொறியினு மறையினு நீங்கி" என்பவாகலின் என்க.

இனி, பொறிகளும் அறங்களும் இறைவன்பாலும் உளவெனினும். அவை கருவியாகப் பொருள்களை உணராதுகலின் என்போல வெனின், நண்பகலில் வெள்ளிடை நின்றான் கையுள் விளக்குளதேனும், அது கருவியாகப் பொருள்காண வேண்டாதவாறு போலவும், கரையை வழிந்து தடையின்றி யோடாநின்ற பெருவெள்ளத்திற்குத் தூம்பு முதலாயின வுளவேனுமவை நீரோட்டத்திற்குக் கருவியாகாதவாறு போலவுமென்பதாம். இவையொன்றுமெண்ணாது உருவமில்லாத சித்தபரமேட்டிக்கு நீ உருவமாகிய வினைகளொடு தொடர்புண்டு என்று சொல்லுவாய். நீ யிவ்வாறெமக்குக் குற்றஞ் சொல்லத் தேடுகின்றவிது கடலைக்கடக்க நினைக்கின்ற காக்கைபோல நினக்கே துன்பந்தருவதாம் என்று சொன்னாள் என்றவாறு.

இனி, மரக்கலக் காக்கை சுழலப் பறந்தும் மரக்கல மொழிய அறியாதவாறுபோல நீயுமொருகாலத்தலனையே கூறியது கூறலாகப் பலகாலுஞ் சொல்லுகின்றாயென்றுமாம். (௩௯௧)

மொக்கலன் கூற்று

௩௯௨. கொண்டதன் கரணந் தானு
மில்லையேற் கூற்று மில்லை
மண்டினர் வினவு வார்க்கு
மலைச்சிலம் பனைய னென்று
முண்டுதன் கரணந் தானு
முரைக்குநர்க் குறுவ னென்னிற்
பண்டுசெய் நல்வி னையைப்
பகவனே யென்று மென்றான்.

(இ - ள்.) கொண்ட தன் காணந் தானும் இல்லையேல் கூற்றும் இல்லை - ஏடி! உன் இறைவன் கொண்டுள்ள பல்லும் நாவும் முதலிய கருவிகளாற் பேசுதல் இல்லை என்பாயாயின் அவ் வழி மொழியும் இல்லையாம்; மண்டினர் வினவுவார்க்கு மலைச் சிலம்பு அனையன் என்றால் - அல்லது தன்பால் வந்து வினவுந் தேவர்முதலியோர்க்கு மலை எதிரொலிக்குமாறுபோலே அணனிடத் திருந்து மறுமொழி பிறக்கும் என்னிலோ ?; உண்டுதன் காணம் தானும் - மலை எதிரொலி யெடுத்தற்குங் காரணம் உண்டாமே; உரைக்குநர்க்கு உறுவன் என்னின் - தன்னை அறிந்து புகழ்வார்க்கு அவர் அறங் காரணமாக உதவுவான் என்னின்; பண்டு செய் நல்வினையைப் பகவன் என்றும் - அத்தேவர் முதலியோர் முன்பு செய்த . நல்வினையையே இறைவன் என்று யாங்கூறுவேம் (சித்தபரமேட்டி இறைவன் எனல் வேண்டா); என்றான் - என்று சொன்னான்; என்க.

(வி - ம்.) இது "காணத்தையிலனு கி"......தது

ஏடி! நின்னிறைவன் பல்லும் நாவும் முதலிய கருவிகளாற் பேசல னயிற் சொற்பிறவாதாம். அஃதன்றி மலை சிலம்புமாறுபோல வின வினார்க்கு அவனுழை மறுமொழி பிறக்கில் அதுவுங் காரணமுடைத் தாம். என்னை? மலைச்சிலம்பாவது ஒரொலி சென்றுறைக்க அக்காரணத் தால் பிறக்குமொலியேயாதலின். அறிந்து சொல்லும் கணதரதேவர் முதலியோர்க்கு அவர் நல்வினை காரணமாக உதவிநிற்பனெனின், இவன் மொழிதத்துவஞ் செவியறிவுறுத்தற்குக் காரணமாவது அவர் செய்த நல்வினையே யாதலால் அந்நல்வினையையே தலைவனாகக் கொள் ளவமையும் என்றாள் என்றவாறு.

இவனையொழித்து இவன்செய்த புண்ணியத்தையே தலைவனாகக் கொள்ளவமையும் எனினுமாம்.

நல்வினை காரணமாக உறுவனென்னின் எனச் சிலசொல் வருவித் துக்கொள்க. (௧௧௩)

## நீலகேசி கூற்று

௪௧௬. தனுவெனுங் கருவி தன்னாற்
றன்னடைந் தார்க டன்னை
வினவின வுணர்ந்து சொல்லும்
வினையினுக் கின்ன துண்டோ
சினவினுந் தேர வொன்று
செப்புவன் செல்க தீயுட்
கனவினு நின்ன னுரைக்
காணல னாக வென்றாள்.

(இ - ள்.) தேர - பௌத்த முனிவனே!; தனுவெனுங் கருவி தன்ஞல் - எங்களிறைவன் தனது கடவுட்டிருவுருவின்கண் உளவாகிய நாவும் பல்லும் முதலிய கருவிகளாலே ; தன் அடைந் தார்கள் - தன்னைப் புகலாக அடைந்த அடியார்கள்; தன்னை வின வின வுணர்ந்து சொல்லும் - தன்னை வினவிய பொருள்களுக்கு விடை யுணர்ந்து செவியறிவுறுத்துவன்; வினையினுக்கு இன்னது உண்டோ - அறிவில் பொருளாகிய வினைக்கு இங்ஙனம் உணர்ந் துணர்த்தும் தன்மை யுண்டேயோ ?; சினவினும் ஒன்று செப்பு வன் - ஏடா! நீ வெகுள்வா யாயினும் யான் ஒன்று நினக்குக் கூறு வேன் கேள்!; செல் கதியுள்-யான் மேற்பிறக்கும் பிறப்பினுள்ளே ; நின் அறுரைக் கனவினும் காணலன் ஆக - யான் சொல்லாதன சொல்லி வைகின்ற உன்போல்வாரைக் கனவிடத்தேயும் காணேன் ஆகுக !; என்ருள் - என்று கூறினள் என்க.

(வி - ம்.) இது, மேலதற்கு விடை. தேர : விளி. செல்கதி : செல் கதீ என நீண்டு நின்றது; செய்யுள் விகாரம்.

எம்மிறைவன் தனது தெய்வவுருவத்தின்கண் ணுளவாகிய நாவும் பல்லும் முதலிய கருவிகளாலே மெய்ப் பொருளுணர்த்துவன் என்று யாங்கள் கூறுவதல்லது; நீ சொல்லிய பொருக்கா மொழிகள் கூறுவ தில்லை, அதனைலன்றே யாங்கள் வினை நீக்கத்தின்கண்ணல்லது மெய் யுணர்த்தல் இல்லை என்று சொல்லுவது, அறிவற்ற வினையினுக்கு மெய் யுணர்த்தும் ஆற்றல் உளதாயினன்றே அதனை இறைவன் என்று கொள்ள வேண்டுவது ;

அன்றியும், கற்பனை யறிவுள வழியல்லது மொழியில்லையென்றும் நீ சொல்லுதலின் நிர்விகற்ப ஞானியாகிய புத்தனுழை மொழி பிறவா தாகலின் அவனுக்கே நீ சொல்லிய குற்றம் வருவதாம். நீ எம்பால் சினம் கொண்டனையாயினும் ஒன்று சொல்லுவன், யான் சொல்லாதன சொல்லி வைகின்ற உன்னை யொப்பாரை மேலைப் பிறப்புக்களினும் காணுதேஒழிகக் கடவேன் என்றவாறு. (௩௬௭)

மொக்கலன் கூற்று

௩௬௮. முறையினு லறிய லன்னேன் மூத்தலே யிளமை சாக்கா
டுறையல வொருவன் கண்ணே யுடனவை யாக வொட்டி
னிறைவனு ருணர்வு தானு மின்மைமே லெழலும் வேண்டி
யறைதுநா மன்ன மன்னு யன்னண மாக வென்ருன்.

(இ - ள்.) அன்னம் அன்னுய் - அன்னப் பறவை போன்ற அரிவாய் !; முறையினுல் அறியலனேல் - நின்னிறைவன் பொருள் களை முறையால் அறியான் என்னின் ; இளமை மூத்தல் சாக்காடு ஒருவன்கண் உடன் உறையல - இளமையும் மூப்பும் சாக்காடும் ஆகிய இவை ஒருவன்பால் ஒருங்குளவாகாவன்றே?; இறைவனுர்

உணர்வுதானும் அவை உடனுக ஒட்டி இன்மைமேல் எழலும் — உன் இறைவனுருடைய அறிவுதானும் அவற்றை ஒருங்கே சேர்த்து இல் பொருளின்மேல் நிகழ்தலும்; வேண்டி - வேண்டும், வேண்டவே; அன்னணமாக நாம் அறைதும் என்ருன் - அவ்வாறு அவன் உணர்வு பொய்யுணரும் உணர்வாம் என்று யாங்கள் இவ்வாறு குற்றம் கூறுவேம் என்ருன் என்க.

(வி - ம்.) இது ''முறையுணரா னென்றியே''......தது.

மூற்றுணர்வுடைய நும் மிறைவன் பொருள்களை முறையால் அறியானெனின், இளமை மூப்பு சாக்காடு முதலாயின ஒருவன் கண் ஒருங்குளவாகாவன்றே; அவை வரன் முறையே யுணராது ஒருங்குளவாக வுணரினவனுடைய அறிவு பொய்யறிவு என்று யாங்கள் சொல்லுதும் என்ருன் என்றவாறு.

அறியலனேல், என்பது அறியலவ் னேன் என்று விரிந்தது செய்யுள் விகாரம். அவையுடனுக என்றும் இயைக்க. (கசஅ)

நீலகேசி கூற்று

சகூகு. சீலவான் றெய்வ யாக்கை
திண்ணிதா வெய்தி நின்ருர்
காலமூன் ருனு மூய்த்துக்
காட்டலுங் காண்டு மன்ருே
ஞாலமூன் ருனு மிக்க
ஞானவா னுன நாதன்
போலுமேன் ருேர்தல் செல்லாய்
போர்த்தனே யகமு மென்ருள்.

(இ - ள்.) சீலவான் தெய்வ யாக்கை திண்ணிதா எய்தி நின்ருர்-எடா! மொக்கல! மிக்க தவத்தினரும், தேவ உடம்பினைத் திட்பமாக அடைந்திருந்த அமரர்களும்; உய்த்து காலம் மூன்ருனும் காட்டலும் காண்டும் அன்ருே - தம் மறிவினைச் செலுத்தி மூன்று காலத்துப் பொருள்களையும் அறிந்து கூறக் காண்கின்ருேமல்லமோ?; ஞாலம் மூன்ருனும் மிக்க ஞானவானுன நாதன் என்று - உலகங்கள் மூன்றும் அணுவாகப் பெருகிய முற்றறிவுடைய தலைவன் என்று; ஓர்தல் செல்லாய் - நீ எம் மிறைவனை உணர்கின்றிலை; அகமும் போர்த்தனே போலும் என்ருள் - ஆதலால் நீ துவாரடையால் புறம் போர்த்ததூஉமன்றி உள்ளத்தையும் அறியாமையாற் போர்த்தொழிந்தாய் போலும் என்ருள்; என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை.

போர்த்தனை போலும் என இயைக்க.

ஏடா! தெய்வத் துறவோரும், தேவராய்ப் பிறந்தோரும் மூன்று காலத்துப்பொருளுமறிந்துசொல்லுவது காண்கின்றுமன்றோ? அங்ஙன மாகவும் மூன்றுலகத்துப் பொருளும் ஓரணுவாகப் பெருகிய கேவல ஞானமுடைய இறைவனுக்கு முறையுணர்தல் வேண்டுமோ ?

இனி, எம்மனோரும் தமது சிற்றறிவாலேயே பல பொருள் ஒருங்கு காண்கின்றமை காண்கின்றேமல்லமோ? கோளூலுணர்ந்தோர் ஒருவனை இவன் முன்னம் இன்ன நாட் பிறந்தானென்றும், மேலின்ன நாள் இறக்கும் என்றும், இன்ன நாள், திங்கள் ஞாயிறு முதலியவற்றைப் பாம்புக்கோள் பற்றுமென்றும் அறிந்த காலத்து, அந்நிகழ்ச்சிகள் இல்லை எனினும் அவ்வறிவு பொய்யறிவாமோ? இது நீ உணராமையின் புறம் போர்த்தது மன்றி உள்ளும் போர்த்தாயாகுதி யென்றான் என்றவாறு.

ஒரு பொருளின்கணுண்டாகிய இறந்த கால எதிர்கால நிகழ்ச்சிகள் எல்லாம் ஒருங்குள வென்றுணர்கின்றனலன்; இப்பொருள் முன்பு இந்த நிலையினை யடைந்தது இனி இந்த நிலையினை யடையும் இப்பொழுதின்ன நிலைமைத்து என்று எப்பொருளையும் ஒருகாலத் தொருங் குணருமாதலின் நீ சொல்லிய குற்றம் எமக்கில்லை என்பது போந்தது. (௩௬௬)

மொக்கலன் கூற்று

௩௬௭. நாளெல்லா மாகி நின்ற
நன்பொரு டம்மை யெல்லாங்
கோளெல்லாந் தானொ ருங்கே
கொள்ளுமே லீங்கு வள்ளைத்
தாளெல்லாந் தானொ ருங்கே
தானுநல் லானோர் நல்ல
வாளினோ லேறு முண்டேல்
வாய்க்குநின் னுரையு மென்றான்.

(இ - ள்.) நாள் எல்லாம் ஆகி நின்ற நல் பொருள் தம்மை எல்லாம் - ஏடி! நங்காய்! எல்லாக் காலங்களினும் எல்லாவிடத்தும் உள்ள பொருள்கள் அனைத்தையும்; கோள் எல்லாம் தான் ஒருங்கு கொள்ளுமேல் - அவற்றின் இயல்புகள் அனைத்தையும் நின்னிறைவன் ஒருங்கே உணர்ந்துகொள்வன் என்பாயாயின்; ஈங்குவள்ளைத் தாள் எல்லாம் தான் நல்லான் நல்ல வாளினால் ஓர் எறும் உண்டேல் - ஒரு குளத்திற் பூத்து நின்ற குவளைகளின் தண்டுகள் எல்லாம் வாள்வித்தை நன்மையுடையான் ஒருவனுடைய நல்லதொரு வாளினாலே ஒருங்கே துணிபடுதற்குக் காரணமான ஒரே வீச்சுண்டாயின்; நின் உரையும் வாய்க்கும் என்றான் - நின் கூற்றும் பொருந்துவதாம் என்றான்; என்க.

(வி - ம்.) இஃது "உடலுகப் பொருள்களை யொருங் குணர்ந்தான்"...தது

மொக்கலன் ஏடி! நின்னிறைவன் எல்லாக் காலத்தும் எல்லாவிடத்தும் உள்ள பொருள்களை யெல்லாம் ஒருங்குணருமெனின், ஒரு குளத்துப் பூத்து நின்ற குவளைகளை யெல்லாம் ஒரு வாளில் ஓர் ஏற்றால் ஒரு காலத்தே ஒருவன் துணித்தல் கூடுமாகின் நின்னுரையும் அளவையாம் என்று சொன்னான் என்றவாறு.

மூன்றிடத்தும் தான், அசைச் சொற்கள். (௪௭௦)

நீலகேசி கூற்று

௪௩௭. நீருநீர் தோறு மோவ்வா
நிலையிற்றே திங்க ளென்று
மூரினூர் தோறு மோவ்வா
வொளியிற்றே ஞாயி றென்றும்
யாரின்யார் கேட்ட றிவா
ரன்னனே யண்ண லென்றார்
தேரனீ சொன்ன தன்னம்
சேரல வாக வென்றாள்.

(இ - ள்.) நீர் நீர் தோறும் திங்கள் ஒவ்வா நிலையிற்று என்றும் - ஏடா மொக்கல! நீர்நிலைதோறும் நீர்நிலைதோறும் திங்கள் மண்டிலம் ஒரே காலத்து ஒப்ப நிழலிடுதலன்றி ஒப்ப நிழலிடாத நிலையினையுடையது என்றும்; ஊர் ஊர் தோறும் ஞாயிறு ஒவ்வா ஒளியிற்று என்றும்-ஊர்தோறும் ஊர்தோறும் ஞாயிற்று மண்டிலம் ஒப்ப ஒளி செய்தல் அல்லது ஒப்ப ஒளி செய்யாது என்றும்; யாரின் யார் கேட்டு அறிவார் - யார் கூற யார் கேட்டுணர்வார்?; அண்ணல அன்னன் - எம் மிறைவனும் அச்சுடர் மண்டிலங்கள் போல்பவனே; என்றார் - என்று அறிஞர் கூறினர்; தேரன் நீ சொன்ன தன்னம் சேரல ஆக என்றாள் - ஆதலால் கூறியன எறிதும் எடுத்துக் காட்டாகாவாகுக என்றாள்; என்க

(வி - ம்.) இது மேலதற்கு விடை. நீரும் என்புழி உம்மை இசைநிறை; நீர்நிலை. நீர்ப்பாண்டமுமாம். கேட்டறிவார்: நீட்டல் விகாரம்.

நீர்நிலை பலவற்றினும் ஒரு காலத்துத் திங்கள்மண்டிலம் ஒப்ப நிழலிட்டவாறு போலவும், ஞாயிறு ஒரு காலத்துத் தன்னால் விளக்கப்படும் இடமத்துணையும் ஒருகாலே விளக்குமாறு போலவும், முற்றறிவன், ஒரு காலத்தே அறியப்படும் பொருளெல்லாம் அறியுமென்று கொள்வாயாக. நீ எடுத்துக்காட்டிய எடுத்துக்காட்டு பொருளாதலால் பண்பாகிய அறிவுக்குப் பொருந்தாத போலியாம், இனி பல கப்பியக் கறியுஞ் சோறுமாக நின்முன் வைத்தபோது அவையடைவடைவே நுகர்ந்தா யெனினும் ஒருங்கே காண்கின்றிலையோ? சிற்றறிவேமாகிய நம்மனோரும் பல பொருளுமொருங்கே காண்கை கண்டிலையோ? இது பிறர் அறிவுறுத்தாமற் றெரியாதோ? படையும், காடும் பல கூடிய

வேனும் ஓர் அறிவுக்குப் புலனுவது நீ யறியாயோ? அவை போலக் கொள்வாயாக, இவ்வாறு கொண்டக்கால் எங்கட்கொரு குற்றமு மாகா தென்முன் என்றவாறு. தன்னம் - சிறிதும். (௩௭௪)

மொக்கலன் கூற்று

௩௯௮. அளவிலாப் பல்பொ ருள்கட்
காகுபண் பாகி நின்ற
வுளவெலாப் போதுக்கு ணத்தா
ஞெருங்குகோ ளீயுமென்னிற்
பிளவெலா மாகு மன்றே
பெற்றிதா மொத்த லில்லேற்
கோளவெலா ஞானந் தானுங்
கோள்ளுமா றெவன்கோ லென்முன்.

(இ - ள்.) அளவு இலா பல் பொருள்கட்கு - அது கேட்ட மொக்கலன் நங்காய்! அளவற்ற பல வேறு பொருள்களுக்கும்; ஆகு பண்புடன ஆகி நின்ற - இயல்பானுளவாகியிருந்த; எல்லாப் பொதுக் குணத்தால் - எல்லாப் பொதுக் குணத்தினுலேயும்; ஒருங்கு கோளீயும் என்னின் - எம்மிறைவன் ஒருங்குணருவன் என்பாயாயின்; எலாம் பிளவு ஆகும் அன்றே - பொருள்களெல்லாம் வேறுபட்ட குணங்களையுடைய வாகையால் அவனறிவும் எல்லாவற்றையும் உணருங்கால் பிளவுபடும் அன்றே?; பெற்றி தாம் ஒத்தல் இல் - அப்பொதுப்பண்பும் பொருள்தோறும் பல ஒத்திருத்தல் இல்லை; ஞானந் தானும் கொள எலாம் கொள்ளு மாறு எவன் கொல் என்முன் - நும் முற்றறிவனுடைய அறிவு தானும் இவற்றை யெல்லாம் ஒருங்குணரும்படி உணரும் வழி தான் யாதோ? கூறுதி! என்முன் என்க.

(வி - ம்.) இது ''பொதுவாய குணத்தினுல்''......தது.

ஏடி! எல்லையிலாத பொருள்களு ளெல்லா முளதாகிய பொதுப் பண்பை எம்மிறைவன் ஒருங்கே யுணருவன்; சிறப்புப் பண்பை முறை யாலே உணருவன் எனபாயாயின, பொருள்கள் ஒன்றற் கொன்று வேறுபட்ட குணங்களையுடைய வாகையால் இவற்றை யுணருகின்ற அறிவும் பிளவு பட்டுப் பல்வேறு வகைப்படல் வேண்டும். அன்றியும் பொதுப் பண்பும் பொருள்தோறும் பலவுளவன்றே? உளவாக அப் பொதுத்தானும் ஒருங்குணர்தல் கூடாதாம். ஆதலின் உன் முற்றறிவ னுடைய அறிவு ஒருங்குணர்வ தெவ்வாறு என்று சொன்னுன் என்றவாறு.

பொதுக் குணத்தால் ஒருங்குணரும் எனவே சிறப்புக் குணத்தால் முறையானுணரும் என்பது பெற்றும். கோளீயும்: வினைத்திரி சொல்; கொள்ளும் என்க. (௩௭௫)

நீலகேசி கூற்று

௩௬௧. ஒன்றல்லாப் பலபொ ருளு
மொத்தொவ்வாப் பெற்றி யாலே
நின்றுகோட் செய்யு மென்று
னீடிய குற்ற மாகா
தென்றலா லின்ன தன்மை
யிறைவன தறிவு மெய்ம்மை
யின்றெலாங் கேட்டு மோரா
யேடனீ யென்று சொன்னாள்.

(இ - ள்.) ஏட - ஏடா! மொக்கல; ஒன்று அல்லாப் பல பொருளும் - ஒன்றல்லாத பல்வேறு பொருள்களையும் எம் மிறைவன்; ஒத்து ஒவ்வாப் பெற்றியாலே - அவற்றின்கண் ஒத்த பொது வகையாலும் அவை தம்முள் ஒவ்வாத சிறப்பு வகையாலும்; நின்று கோள் செய்யும் என்றால் - பல்வேறு தன்மையுடைத் தாகிய தனது கேவல ஞானத்தாலே நின்றுணருவன் என்று கூறுதலையும்; நீடிய குற்றம் ஆகாது என்றலால் - நீ கூறும் நெடிய குற்றம் எங்கட் காகா என்று கூறுதலையும்; இன்று எலாம் கேட்டும் - இற்றைநாள் முழுதும் யாங் கூறக் கேட்டிருந்தும்; இன்ன தன்மை இறைவனது அறிவு மெய்ம்மை - இத்தகைய தன்மையையுடைய எம்மிறைவனது முற்றறிவினியல்பினை; நீ ஓராய் என்று சொன்னாள் - நீ அறிந்திலை காண் என்று கூறினள்; என்க.

(வி - ம்.) இது, மேலதற்கு விடை.

ஏடா! ஒன்றல்லாத பலபொருள்களையும் பொதுவகையானும் சிறப்பு வகையானும் பல்வேறு பண்புகளையுடைய கேவல ஞானத்தாலே ஞாயிறு தன் ஒளியாலே பொருள்களை விளக்குமாறுபோல அறிவன் என்று சொல்லுதலால் எங்கட்கு ஒரு குற்றமுமாகா தென்றிவ்வாறு பலபடியுஞ் சொல்லவும் நீ அஃதறியாயாய்ச் சொன்னதனையே மீட்டு மீட்டுஞ் சொல்லுகின்றாய். நினக்கே நீ சொல்லிய குற்றங்களாவன. என்னை?

"பொதுவினா லொருங்குணரு மிகுதியான் முறையுணரு
மீதுமற்றவ் விருவகையு மிந்தனம் பெற்றதீப்
பொதுவாகச் சுடுதலுமொன் றொன்றாச் சுடுதலும்
கதுவாயின் றில்லாமற் காண்கின்றோ மல்லமோ?"

[மிகுதி-சிறப்பு. இருவகை-பொதுவான் உணர்த்தலும், சிறப்பானுணர்த்தலும். இந்தனம் - விறகு. கதுவாய் - குற்றம். இது பௌத்தநூற் செய்யுளென்றுணர்க.]

என்று நீயே சொல்லுதலினென்று சொன்னாள் என்றவாறு. (௩௬௧)

மொக்கலன் கூற்று

௪௪௦. எல்லையில் பொருள்க டம்மை எல்லையி லறிவி னாலே
யெல்லையின் றறியு மெங்க ளெல்லையி லறிவ னென்பாய்
எல்லையில் பொருள்க டம்மை யெல்லையின் றறியி னின்ற
வெல்லையி லறிவு தானு மெங்ஙன மெய்து மென்றான்.

(இ - ள்.) *எல்லை இல் பொருள்கள் தம்மை* - நங்காய்! எல்லை யில்லாத பொருள்களை எல்லாம்; *எங்கள் எல்லையில் அறிவன்* - எம்முடைய எல்லையில்லாத அறிவினையுடைய இறைவன்; *எல்லை இல் அறிவினாலே எல்லையின்று அறியும் என்பாய்* - அந்த எல்லையில்லாத அறிவினாலே எல்லையின்றி அறிகுவன் என் றனை; *எல்லையில் பொருள்கள் தம்மை* - எல்லையற்ற பொருள் களை; *எல்லையின்று அறியின்* - அவன் எல்லையின்றி அறியுங்கால்; *நின்ற எல்லையில் அறிவுதானும்* - அங்ஙனம் அறியக் கருவியாக நின்ற அந்த எல்லையில்லாத அறிவுதானும்; *எங்ஙனம் எய்தும் என்றான்* - முறையானெய்தி அறிவதன்றி எவ்வாறு ஒருங்கே யறியும் என்று வினவினன்; என்க.

(வி - ம்.) இது "வரம்பில்லாப் பொருள்களை"......தது.

நங்காய்! நீ எம்மிறைவன் எல்லையற்ற பொருள்களை எல்லையற்ற அறிவால் அறிபொருள் உள்ளளவும் அறிவனென்றும் சொல்லுவாய்; இவ்வாறு உணர்கின்ற எல்லையிலறிவு முறையானுணராதாயின் எவ்வா றறிவதென்று சொன்னானென்றவாறு. (௩௭௭)

நீலகேசி கூற்று

௪௪௧. துளக்கில்லாப் பலபொ ருளுந்
தொக்கதன் றன்மை யெல்லாம்
விளக்குமே ஞாயி றொப்ப
வென்பது மேலுஞ் சொன்னேற்
களக்குமே யன்ன மன்னா
யாத்தன தறிவு மென்றேன்
றிளக்கிநீ என்னு மஃதே
சொல்லுதி யேழை யென்றாள்.

(இ - ள்.) *ஏழை* - அறிவிலியே!; *துளக்கு இல்லாப் பல பொருளும் தொக்கதன் தன்மை எல்லாம்*-குற்றமில்லாத பல்வேறு பொருள்களையும் அவற்றின்பாற் சேர்ந்துள்ள பண்புகளும் ஆகிய எல்லாவற்றையும்; *ஞாயிறு ஒப்ப விளக்கும் என்பது* - ஞாயிறு தன் ஒளியால் ஒருகாலத்தே எல்லாப் பொருளையும் ஒருங்கே

விளக்குதல் போல எம்மிறைவன் அறிவும் ஒருகாலத் தொருங்கே விளக்கும் என்னுமிதனை ; மேலும் சொன்னேற்கு - முன்னரும் சொன்ன எனக்கு ; அன்னம் அன்னாய் - அன்னம் போல்பவளே!; ஆத்தன தறிவு அளக்குமே என்று என்று - நின்னிறைவன றிவு ஒரு காலத்தொருங்கே எல்லாப் பொருளையும் அளந்தறியுமோ ? என்று என்று ; நீ இளக்கி இன்னும் அஃதே சொல்லுதி என்றான் - நீ அவ்வறிவினைக் குறைத்து மீண்டும் மீண்டும் கூறியதனையே கூறுகின்றனை ; என்றாள் என்க.

(வி - ம்.) இது மேலதற்கு விடை.

'களக்கிவர் தன்ன மன்னு வாத்தன தறிவு' என்றும் பாடம்.

ஏழாய் ! எம்மிறைவனறிவு, எல்லாப் பொருளையும் அவற்றியல் பையும் ஞாயிறு பொருள்களை விளக்குமாறுபோல விளக்கும் என்று யான் முன்னர்க் கூறியிருப்பவும் நீ மீண்டும் அவனறிவு ஒருகாலத் தொருங்குணருமோ? என்றென்று பலகாலும் கூறியது கூறலாக வினவுகின்றனை என்று சொன்னாள் என்றவாறு.

மொக்கலன் தன்னை 'அன்னமன்னாய்' என்று விளித்தமை நினைவி னிற்றலால் அதனைக் கொண்டு கூறுவாள் அன்னமன்னாய் !......... சொல்லுதி என்றாள் என்க. அங்ஙனம் விளித்தமையை சகூச ஆஞ் செய்யுளிற் காண்க. பொருளும் : நீட்டல்விகாரம். (கஙஇ)

மொக்கலன் கூற்று

சசஉ. ஓதலி லுணர்வு மின்றே
  லூறவற் குண்டு மாகு
மோதலி லுணர்வு முண்டே
  லொன்றுமே பலவும் வேண்டா
மோதலி லுணர்பொ ருடா
  முள்ளவும் மில்ல வும்மே
லேதமா மில்பொ ருண்மே
  னிகழ்ச்சிதா னிறைவற் கென்றான்.

(இ - ள்.) இறைவற்கு - ஏடி! நும்மிறைவனுக்குப் பொருள்களை; ஓதல் இல் உணர்வும் இன்றேல் ஊறு அவற்கு உண்டும் ஆகும் - ஒழிவின்றி எப்பொழுதும் உணரும் உணர்ச்சி இல்லை யாயின் அவனுக்கு இடையூறுண்டாகும்; ஓதல் இல் உணர்வும் உண்டேல்-இனி ஒழிவின்றி உணரும் உணர்ச்சி உண்டு எனினும்; பலவும் ஒன்றுமே வேண்டாம்-நிகழ்ச்சிகள் பலவும் ஒருங்கே நிகழ்த லின்மையின், அங்ஙனம் உணரும் உணர்ச்சியுளதாகவும் யாங்கள் கொள்ளேம் ; ஓதல் இல் உணர் பொருள் தாம் உள்ளவும்

இல்லவும்மேல்-இனி அவன் ஒழிவின்றி உணர்கின்ற பொருள்கள் தாமும் உளவும் இலவும் ஆயின்; இல் பொருள்மேல் நிகழ்ச்சி- அவ்வழி அவனறிவு இல்பொருளின்மேற்சென்றறியும் என்பதனால்; ஏதம் ஆம் - அதுவும் குற்றமாகும்; என்றான் - என்று மொக்கலன் கூறினான் என்க.

(வி - ம்.) இது ''எப்பொழுது மறியானேல்''......தது.

ஓதல் - ஒழிதல். 'ஓஒதல் வேண்டும்' எனவரும் திருக்குறளினும் அஃதப்பொருட்டாதலறிக. (குறள் - கூகூ௩).

அது கேட்ட மொக்கலன் ஏடி! நும்மிறைவன் எப்பொழுதும் ஓவாதே பொருள்களை யுணரானாயின் அவனுடைய அறிவிற்கிடை யீறுண்டாய் ஒருகால் முற்றறிவனாயினான் எனினும் ஒருகாற் சிற்றறி வினன் ஆவன்.

இனி ஓவாதே எப்பொழுதும் அறிவனாகில் ஓவாது நிகழ்ச்சிகள் நிக ழாமையின் இவனறிவு இல்பொருளைப் பற்றிப் பிறந்ததாம். இனி, பொருள் உண்டும் இல்லையும் ஆமெனினும் இவனுடைய அறிவு இல் பொருளைப் பற்றியும் பிறந்ததாம் என்று சொன்னான் என்றவாறு.

பொருடாம்: நீட்டல் விகாரம். (களகூ)

நீலகேசி கூற்று

சசுஅ. சென்றவக் குணங்க டாமுஞ்
செல்லுமக் குணங்க டாமு
மன்றையக் குணங்க டாமு
மப்பொருட் டன்மை யாலே
நின்றதன் ஞானந் தன்னா
னிருமல னுணரு மென்றாற்
போன்றின வெதிர்வ வென்றல்
பொருள்களுக் கில்லை யென்றாள்.

(இ - ள்.) சென்ற அக்குணங்கள் தாமும் - ஏடா! பொரு ளின்கணிருந்து கழிந்துபோன பண்புகளையும்; செல்லும் அக் குணங்கள் தாமும் - இனி வரவிருக்கும் பண்புகளையும்; அன்றே அக்குணங்கள் தாமும்-அப்பொழுதுளதாய குணங்களையும்; அப் பொருள் தன்மையாலே - அவ்வப் பொருள்களின் தன்றன்மை யாலே; நின்ற தன் ஞானந்தன்னால் - தன்பால் நிலைத்து நின்ற தனது முற்றறிவினாலே; நிருமலன் உணரும் என்றால் - தூயனா கிய எம்மிறைவன் அறிவான் என்னின்; பொருள்களுக்கு போன் றின எதிர்வ என்றல் இல்லை - பொருள்கள் கேடும் தோற்றமும் உடையன என்று கூறிலேமல்லேம்; என்றாள் - என்று கூறினாள் என்க.

(வி - ம்.) இது, மேலதற்கு விடை. பொருள்களின்பானின்று கழிந்துபோன பண்புகளையும் இனி வரக்கடவ பண்புகளையும் நிகழ்கின்ற பண்புகளையும் அவ்வப் பொருளுக்குத் தன்மையாக; இப் பொருள் முன்பு இன்ன பண்புகளை யுடைத்தாய் நிகழ்ந்த தென்றும் இப்பொழுதின்ன பண்போடு நிற்கின்றதென்றும் மேலின்ன பண்புகளை யுடையுமென்றும் எம்மிறைவன் தன்னுடைய சகல விமல கேவல ஞானத்தால் கணந்தோறும் உணர்கின்றமையின் பொருள்களுக்குக் கேடும் தோற்றமும் முதலாயின இன்மையில் இறைவனுடைய முற்றறிவு பொய்ப் பொருள் என்று கூறுதல் பொருந்தாது என்று சொன்னான் என்றவாறு.

இன்னும் பொருள் உண்டுமில்லையு மாதலால் முற்றறிவனது அறிவு பொய்ப்பொருள் என்பதும் பொருந்தாது; என்னே? இந் நிலவுலகில் குடம் இல்லை என்று அறிந்த அறிவு எடுத்துக் கொண்ட பொருளாகிய குடத்தைக் குறிக்கப்பட்ட நிலவுலகத்து இல்லை என்றறிந்த தெனினும் அறிவு பொய்யாகாதவாறு போல என்பதாம். (கஎஎ)

மொக்கலன் கூற்று

சசச. பிறவிதா னொன்று மில்லான்
பெரியனே யென்று நின்றான்
மறவிதா னில்லை யோனி
மன்னுநான் கென்னு மில்லா
னறவியா யுந்த நூலுள்
ளாத்தனு மாயி னக்காற்
புறவினிற் புரளுங் கல்லும்
புண்ணிய னாக வென்றாள்.

(இ - ள்.) பிறவிதான் ஒன்றும் இல்லான் - எடி! பிறப்பற்றவனும்; பெரியனே என்று நின்றான் - யாவரினும் பெரியவன் என்று கூறப்படுபவனும்; மறவிதான் இல்லை - மறப்பற்றவனும்; யோனி மன்னும் நான்கு என்னும் இல்லான் - பிறப்புக்களாய் நிலை பெற்ற நான்குஞ் சிறிதும் இல்லாதவனும்; அறவியாய் - அறவோனும் ஆயவன்; உந்தம் நூலுள் ஆத்தன் ஆம் ஆயின் - உங்கள் ஆகமத்துட் டலைவன் என்று சொல்லப்பட்டனன் என்றால்; புறவினில் புரளும் கல்லும் புண்ணியன் ஆக என்றான் - முல்லை நிலத்திலே புரண்டு கிடக்கின்ற கல்லும் தலைவன் ஆவதாக என்று கூறினன் என்க.

(வி - ம்.) இது "யோனிமற் றவர்க்குரை"......தது.

பிறவியறுத்துள்ளானுமாய் எப்பொழுதும் எல்லாப் பொருள்களையும் அறிபவனுமாய் பிறப்புக்களாய் நிலைபெற்ற நான்கு முடையன் அல்லாதவனுமாய், பெரியனும் ஆகின்றவனும் ஆயவன் உங்கள் ஆகமத்துள் தலைவன் என்று சொல்லப்பட்டான் எனின் பிறப்பு முதலியன இல்லாது

தாய்க் காட்டிற் கிடக்கும் கல் முதலாயினவும் தலைவன் ஆதல் வேண்டும் என்றான் என்றவாறு. யோனி மன்னும் நான்கு, அண்டசம், சுவேதசம், உற்பிச்சம் சராயுசம் என்பன. (கஎஅ)

நீலகேசி கூற்று

சசகூ. பிறத்தலே தலைமை யாயிற்
பிள்ளைக ளல்ல தென்னை
யறக்கெட ளுன தென்னி
லட்டக வித்து வெந்தாம்
புறப்படும் போர்வை யாலேற்
புண்டொழு நோய ராகச்
சிறப்புடை யண்ண றன்னைக்
கல்லெனச் சொல்லு வாய்க்கே.

(இ - ள்.) சிறப்புடை அண்ணல் தன்னை - அதுகேட்ட நீலகேசி எடா! பிறவாமை முதலிய சிறப்புக்களையுடைய எம்மிறைவனை; கல் எனச் சொல்லுவாய்க்கு - கல் என்று இகழ்ந்து கூறுகின்ற நினக்கு; பிறத்தலே தலைமையாயின் - பிறப்பதே தலைமைத் தன்மைக்கு ஏதுவாதல் வேண்டும், அங்ஙனமாயின்; பிள்ளைகள் அல்லது என்னை - பிறந்துழலும் பிள்ளைப் புழுக்களும் புத்தன் போலத் தலைவனாகாமைக்குக் காரணம் என்னையோ?; அறக் கெடல் தான் அது என்னின் - இனி, கையறக் கெடுதலே தலைமைக்குக் காரணம் என்பாயாயின்; அட்டக வித்து வெந்து ஆம் - அட்டக பிண்டமாகிய விதை வெந்துழித் தலைவனாகிவிடும்; புறம் படும் போர்வையாலேல் - இனி, புறத்தே போர்க்கப்படும் போர்வையுடைமையாலே என்பாயாயின்; புண்தொழு நோயர் ஆக - அங்ஙனம் போர்க்கும் புண்ணையுடைய தொழுநோயாளர் தலைவர் ஆகக் கடவர் என்றாள் என்க.

(வி - ம்) இது மேலதற்கு விடை.

எடா மொக்கல! யாம் பிறப்பு முதலாகிய நான்கு மில்லாத முற்றறிவனே தலைவன் என்றவழி நீ அதற்குக் குற்றங்கூறுதியாதலின், நீ நான்கு முடையவனையே தலைவனாகக் கொண்டாயாகுதி மின் மேற்கோளாலும் அஃதொக்கும். என்னை? நாலெண்ணிறப்பு நூறாயிரங் கற்ப காலம் பிறந்து துன்பம் நுகர்ந்தான் புத்தன் என்று சொல்லுதலின்.

இனி, அவ்வாறுதற்கண் பிள்ளைப் புழுக்களும் புத்தனைப் போலத் தலைவர் ஆதல் வேண்டும். என்னை? புத்தனைப்போல அவையும் சாணக (சாணம்) முதலாயினவற்றுட் பிறந்தும் பிணிப்பட்டு மூத்துஞ் சாகின்றன வாதலானும், புத்தன் பூதம் பேய் அரக்கர் முதலியோராற் பற்றப்பட்டவன் ஆயினவாறு போலப் பிள்ளைப் புழுக்களும் கட்டெறும்பு முதலாயினவற்றாற் பற்றப்படுவன வாதலானும், புத்தனைப் போலக்

கணத்திற் றோன்றியழியு மறிவினை யுடைமையிற் பொருள்களை யறியா வாதலானு மென்பதாம்.

இனி, அவ்வாறன்றி, புத்தன் கையறக் கெடுதலால் தலைவன் எனின், அவனைப் போல ஆற்றல் கெட வெந்த அட்டக பிண்டமாகிய வித்துந் தலைவன் ஆதல்வேண்டும். இனி, அவ்வாறன்றி முகமொழிய உடம்பு போர்த்தலால் தலைவன் எனின், அவ்வாறு போர்க்கின்ற அழுகு தொழு நோயாளரும் பரத்தையரும் தலைவர் ஆதல் வேண்டும். வினையி னீங்கி அனந்த ஞான முதலிய வுருவமுடையவனுய்த் தூயனுய் மூன் றுலகும் தொழுதேத்தப்படுபவனுய்த்திகழும் எங்கள் இறைவனைக் கல் லோடொப்பித்துச் சொல்லுகின்ற தீவினையாளனாகிய நினக்கு என்று சொன்னாள் என்றவாறு.

''பிள்ளையுட்புகுந் தழித்த காதலால்'' (சிந்தாமணி, கோவிந்-கக)எனவும் ''பிள்ளைப் பெயர்ச்சி'' எனவும் இவற்றுட் பிள்ளை என்னும் பறவையைப் பிள்ளை என்றவாறு போல ஈண்டும், பிள்ளைப் புழுவினைப் பிள்ளை என்றான் என்க.

இனி, இவனுடைய அறிவு கணத்திற்றோன்றியழிவதாதலின் எல் லாப் பொருள்களையும் அறியமாட்டாதாம். இவனுடைய அறிவு ஓரே கணத்திற்றோன்றியழிவதாகலின் இறந்த காலத்துப் பொருள்களையும் வாராக் காலத்துப் பொருள்களையும் இவனுக்கு அறிதல் கூடாதாம். என்னை? இறந்த காலத்துப் பொருள்கள் முன்பே கையறக் கெட்டில் லாமையாலும், எதிர்காலத்துப் பொருள்கள் பிறவாதில்லாமையாலும், ஓரே அறிவிற்குப் பல்வேறு பொருள்களையும் அறிதற்குப் பல்வேறு ஆற்றல்களுமில்லாமையாலும், என்பதாம்.

இனி, ஓர் அறிவிற்குப் பல்வேறு ஆற்றலும் உண்டாகில் இவனு டைய அறிவு பல்வேறு முடிவுத்தன்மை உடையதாய்ப் பல்வேறுரு வத்ததுமாய்த் தன்மேற்கோளுக்கு முரணும், என்பதாம்.

இனி, நிகழ்காலத்துப் பொருள்களையும்இவன் அறிதல் கூடாதாம்; என்னை? பொருள் காரணமாக அறிவு பிறக்க வேண்டுதலின் நிகழ் காலத்துப் பொருள்களும் இவன் அறிவும் ஓரே கணத்திற்றோன்றி யழிதலால் அவை காரணமாக மாட்டாமையின் என்பதாம்.

இனி, இவனுக்குப் பிறவியுண்டென்பது,

''அளவிலாக் கடைப்பிடி யொருநான்கும் பிறப்பென்னும்
களையருந் துன்பத்துக் கற்ப நூறாயிரமும்
விளைவாய போதியை யுறுமளவும் வினைமடியான்
தளர்வின்றி யோடிய தாளினா னல்லனோ''

என்பதனாலும் ''வானொடு பரியாயும்......மானாவூரே'' என்பதனாலும் பெறப்படும். இதனாலே இவனுக்குப் பிறப்பு மூப்பு முண்டென்ப தூஉம், பெறப்படும்.

இனி, இவன் வினைவயத்தால் வருவனவாகிய பசியாலும் நித்திரை யாலும் வருந்திக் கலமேந்திப் பிச்சை பண்ணுதலும், உறங்குதலும், வெயிலுக்குடைந்து தன்கையிற் குடைபிடித்தலும், நிலத்திற் பருக்கை

முதலானவற்றுக்கஞ்சிச் செருப்புத் தொடுதலும் முதலான உண்மையின் இவனுக்குப் பிணியுண்டென்பதூஉம், இவன் கருதியது முடித்தானல்லன் என்பதூஉம் பெறப்படும். ஆதலாலிவன் தன் விருப்பத்தாலேயே பிறந்தானென்று சொல்லினும் இவன் பற்றுடையனேயாமாதலின் தலைவனாகானென்பதாம். (சஎக)

இதுவுமது

சசக. அடைவிலா யோனி யாகு
யாருமோப் பாரு மின்றிக்
கடையிலா ஞான மெய்திக்
கணங்களுன் மூன்றுஞ் சூழ்ந்து
புடையெலாம் போற்றி யேத்தப்
பொன்னெயிற் பிண்டி மூன்று
குடையினு னிறைவ னென்றாற்
குற்றமிங் கென்னை யென்றாள்.

(இ - ள்.) அடைவு இலா யோனியான் ஆய் - ஏடா ! இவ்வாறு பிறப்பற்றவனாய்; ஒப்பார் யாரும் இன்றி - தன்னை ஒப்பார் பிறர் யாரும் இன்றி ; கடையிலா ஞானம் எய்தி - இறுதியில்லாத அறிவினையடைந்து ; நான்மூன்று கணங்களும் சூழ்ந்து - பன்னிரண்டு கணங்களும் தன்னைச் சூழ்ந்து நின்று ; புடை எலாம் போற்றி ஏத்த - எல்லாப் பக்கங்களினும் வாழ்த்தி ஏத்தாநிற்ப ; பொன் எயில் - பொன் மதில் சூழ்ந்த வட்டமாகிய சமவசரணத்தினிடையே ; பிண்டி - அசோகமரத்தின் கீழே ; மூன்று குடையினான் - மூன்று குடை நிழல் செய்ய வீற்றிருப்பவனாகிய அருகனே; இறைவன் என்றால் - கடவுள் என்று யாங்கள் கூறின் ; இங்குக் குற்றம் என்னை என்றாள் - இவ்விடத்துண்டாகும் குற்றந்தான் என்னையோ ? கூறுவாய் ! என்று நீலகேசி கூறினள் என்க.

(வி - ம்.) இதனால், அருக்கடவுளின் இயல்பு கூறப்படுகின்றது. பிறப்பு முதலிய துன்பமில்லாதவனாய்த் தன்னோடொப்பாரையும் மிக்காரையுமுடையனின்றித் தானே பெரியனாகிக் கடையிலா ஞான முதலிய பண்புடையனாகித் துறவோர் முதலிய பன்னிருகுழுவும் எப்பக்கமும் நின்றேத்தச் சமவசரணமண்டலத்து அசோகின்கீழ் மூவுலகுங் காத்தற்கறிகுறியாகிய முக்குடையும் நிழற்ற எழுந்தருளியிருந்த அருகக்கடவுளே எமக்குத் தலைவன் என்று சொன்னால் குற்றமென்னை? என்றவாறு.

இதனால் "யோனி மற்றவர்க் குரையேன்" என்னுஞ் செய்யுளால் ஒரு குற்றமும் சொல்லிற்றில்லை என்பது சொல்லப்பட்டது. 'அடைவிலா யோனியனு' யென்பதனால், "யோனி...லே" என்று இத்துணையுஞ் சொல்லப்பட்டது. "யாருமொப்பாருமின்றி" என்பதனால் "தானத்துப் பெரியனுய்"

என்று சொல்லப்பட்டது. "கடையிலா ஞானமெய்தி" என்பதனால், "தத்துவத்தாற் சொல்லப்படுவான்" என்பது சொல்லப்பட்டது. இவ்வாறு குணங்கூறிய நீ அவனைக் கல்லோடொப்பித்தது எக்குணத்தாலென்று அவன் குற்றமென்று சொன்னதனைக் குற்றம் அன்மை சொன்னவாறு போந்தது. (கஅ0)

நீலகேசி மொக்கலன் தோற்றமையுணர்த்தல்

சசஎ. கோதியிட் டுள்ள தெல்லாங்
குண்டல கேசி யென்பா
ளாதிசா லாவ ணத்து
ளார்கதர் தம்மை வென்ற
வீதியீ தென்று சொல்லி
வீழ்ந்தனை நீயு மென்று
ணீதியாற் சொல்லி வென்ற
நீலமா கேசி நல்லாள்.

(இ - ள்.) நீதியால் சொல்லி வென்ற - இவ்வாறு மொக்கலன் வினாவிற்கெல்லாம் விடையிறுத்து அவன் மேலே வினவாதபடி வெற்றிகொண்ட ; மாநீலகேசி என்பாள் - பெருமை மிக்க நீலகேசி என்பவள் ; குண்டலகேசி என்பாள் - மொக்கலனை நோக்கி எடா ! நீ குண்டலகேசி என்னும் பிக்குணி ; ஆதி சால் ஆவணத்துள் - தலைமைசான்ற ஆவணமா நகரத்தின்கண் ; ஆர்கதர் தம்மை வென்ற வீதி ஈது என்று - நாதகுப்தனார் என்னும் அருக சமயத்துச் சான்றோரை வென்ற முறைமை இது என்று ; கோதியிட்டு உள்ளது எல்லாம் சொல்லி - அவள் கூற்றினின்றும் ஆராய்ந்தெடுத்து நின்பாலுள்ளதெல்லாம் கூறி; நீயும் வீழ்ந்தனை- நீயும் தோற்றொழிந்தனை ; என்றாள் - என்று கூறினள் என்க.

(வி - ம்.) மொக்கலன் சொற்போர் தொடங்குங்கால் குண்டலகேசி வைதிகர் முதலிய எல்லாச் சமயக்கணக்கரையும் வென்றாள் என்று கூற நீலகேசி அவள் ஆவண நகரத்துள் அருகசமயத்தினராகிய நாதகுப்தனாரை வென்றமுறையை நீ சொல் யான் அவற்றிற்கு விடையீந்து நின்னையிப்பொழுது வெல்வேன் என, அதுகேட்ட மொக்கலன் குண்டலகேசியின் வினாக்களையே கொண்டு கூறினான் ஆகலின் ஈண்டு நீலகேசி இவ்வாறு கூறுகின்றாள் என்க. இவற்றை, உஅஎ-அ ஆஞ் செய்யுள்களிற் காண்க.

கோதியிடுதல்-ஆராய்ந்தெடுத்துக் கூறுதல். ஆவணம்-ஒரு நகரம். விதி, வீதி என்று நீண்டது விகாரம். ஆர்கதர் - ஆருகதர். என்றது நாதகுப்தனாரை.

வென்றவிதி என்று அதனைக் கோதியிட்டு உள்ளதெல்லாம் சொல்லி வீழ்ந்தனை என இயைத்துக் கொள்க. விதி - முறைமை. வீழ்ந்தனை - தோற்றனை. (கஅக)

## நீலகேசி மொக்கலனுக்கு அருகனியல்பு கூறுதல்

(இச்செய்யுள் முதலாக ௪௫௯. ஆத்தனிவன் என்னுந் துணையும் நீலகேசி கூற்றாய் ஒரு தொடர்.)

### வேறு

௪௪௮. பேதைக ளுரைப்பன வேசொல்லிப்
பெரிதலப் பாட்டினைநீ
பேதைமற் றிவன்பெரி தெனப்படும்
கருத்துடை மிகுதியினாய்
தாதையைத் தலைவனைத் தத்துவ
தரிசியைத் தவநெறியி
னீதியை யருளிய நிருமலன்
றகைதனைக் குரைப்பனென்றாள்.

(இ - ள்.) நீ பேதைகள் உரைப்பனவே சொல்லி - ஏடா! மொக்கல! நீ அறிவிலிகள் கூறுவனவற்றையே கூறி; பெரிது அலப்பாட்டினை - மிகவும் மனச் சுழற்சி யெய்தினை; இவன் பெரிது பேதை எனப்படும் கருத்துடை மிகுதியினாய் - ஆதலினால் எம் மிறைவன் பெரிதும் பேதையாவான் என்னும் கருத்து மிகுதியும் உடையை ஆயினாய்; நினக்கு - அங்ஙனம் ஆயினும் நினக்கும் கருணைகாரணமாக யான்; தாதையை - மூவுலகுக்குந் தந்தையாயவனும்; தலைவனை-யாவர்க்குந் தலைவனாயவனும், தத்துவதரிசியை- மெய்க்காட்சியாளனும்; தவநெறியின் நீதியை யருளிய நிருமலன்- சிறந்த தவநெறியினது முறைமையினைத் திருவாய் மலர்ந்தருளிய வனுமாகிய தூய வெம்மிறைவனுடைய; தகை உரைப்பன்-பெருந் தகைமையினைக் கூறுவேன்; என்றாள் - கேள்! என்று கூறினாள் என்க.

(வி - ம்.) பேதைகள் என்றது-மொக்கலனுக்குப் பௌத்த சமயத்தைச் செவியறிவுறுத்த ஆசிரியர் முதலியோரை. இவன் என்றது, எம்பிறைவனாகிய அருகக்கடவுளை என்றவாறு. கருத்து மிகுதியுடைய என்க. தகை - இயல்புமாம். (௪௮௨)

### வேறு

௪௪௯. பகைபசி பிணியொடு பரிவின பலகெட
முகைமலர் தளிரொடு முறிமரம் வெறிசெய
மிசைநிலம் விளைவெய்த விழைவொடு மகிழ்வன
திசைதோறு மிவைபிற சுகதன செலவே.

(இ - ள்.) சுகதன செலவு - ஏடா! எம்மிறைவனாகிய அருக பரமேட்டியின் ஒழுக்கத்தாலே; திசை தொறும் - எல்லாத்திசை

களினும்; பகை பசி பிணியொடு பரிவு இனபல கெட - உயிர்கட்குப் பகையும் பசியும் பிணியும் ஆகிய துன்பங்களும் இன்னோரன்ன பிறவும் கெடவும்; மரம் முறி தளிரொடு முகை மலர் வெறி செய-மரமுதலிய ஓரறிவுயிர்கள் முறியாகிய தளிரீன்று தழைத்து அரும்பெடுத்து மலர்ந்து நறுமணம் பரப்பவும்; மிசைநிலம் விளைவெய்த-மேட்டு நிலமும் பெரிதும் விளைவுண்டாகவும்; இனைபிற - இவை போல்வனவாகிய பிறநலங்களும் பெருகி; விழைவொடு மகிழ்வன-உயிரினங்கள் பெரிதும் விருப்பத்தோடு மகிழ்வனவாம் என்றான் என்க.

(வி - ம்.) இது மலர்மிசை அருகன் செல்லும் செலவாலுண்டாகும் நலங்கள் அத்தகைய பெருமையுடையது அவன் செலவு என்றவாறு.

பரிவு - துன்பம். இன-இன்னோரன்ன. முறிதளிர் என ஒட்டி இரு பெயரொட்டாக்குக. முகை - அரும்பு. வெறி - மணம். மரம் என்றது ஓரறிவுயிர்களை - திங்கள் மும்மாரி பெய்தலால் மிசை நிலமும் விளை வெய்தும் என்றவாறு. சுகதன் - அருகன். (௧அ௩)

௪௫௦. குழுவன பிரிவன குறைவில நிலையின
எழுவன விழுவன விறுதியி லியல்பின
வழுவலில் பொருள்களை மலர்கையின் மணியென
முழுவது முணருமே முனிவர னறிவே.

(இ - ள்.) எம் முனிவரன் அறிவு - எடா! எங்கள் வினையினீங்கி விளங்கிய அறிவினையுடைய அருகனுடைய அறிவுதானும்; குழுவன பிரிவன-சீவாத்திகாயமும் புற்கலாத்திகாயமும்; குறைவு இல நிலையின - தருமாத்திகாயமும் அதருமாத்திகாயமும் ஆகாயாத்திகாயமும்; எழுவன விழுவன இறுதியில் இயல்பின-தோன்றுவனவும், அழிவனவும் நிலையுதலுடையனவும்; வழுவல் இல் பொருள்களை - ஆகிய குற்றமில்லாத இப்பொருள்களையெல்லாம்; மலர்கையின் மணியென - உள்ளங்கையிலிட்ட மணியை அறியுமாறுபோல; முழுவதும் உணரும்-முழுவதும் ஒருங்குணரும் சிறப்புடையதுகாண்! என்றான் என்க.

(வி - ம்.) குழுவன பிரிவன என்றது சீவாத்திகாயத்தையும் புற்கலாத்திகாயத்தையும்; குறையில நிலையின என்றது எஞ்சிய மூன்றத்திகாயங்களையும் என்க. எழுவன - தோன்றுவன; விழுவன - அழிவன. இறுதியிலியல்பின - நிலையுதலுடையன - மலர்கை என்றது விரிந்த உள்ளங்கையினை. முனிவரன் - அருகன். (௧அ௪)

௪௫௧. நிறைபொறி யுளவவை யறிதலி னெறிமைய
முறைபொரு ணிகழினு முறைபடு மறிவிலன்
மறைபொரு ளுளவவ னறிவினை மறையல
விறைபொருண் முழுவது மறிதிற மிதுவே.

(இ - ள்.) இறை பொறி உள - எடா! எம்மிறைவனுக்குத் தலை சிறந்த பொறிகள் ஐந்தும் உளவே யாயினும்; அவை அறிதல் இல் நெறிமைய - அவை நம்மனோர் பொறிகள் போன்று புலன்களை அறிதல் இல்லாத முறைமையினையுடையனவேயாம்; பொருள் முறை நிகழினும் - உலகத்துப் பொருள்கள் முறையே நிகழ்வனவேயாயினும; முறைபடும் அறிவு இலன் - அவற்றை ஒருங்குணரும் முற்றறிவுடையனாதலின் அவற்றை முறையே சுட்டியறியும் சுட்டறிவுடையானல்லன்; மறை பொருள் உள - உலகில் தோன்றாப் பொருள்கள் உளவாயினும் அவைதாமும்; அவன் அறிவினை மறையா-அவன் அறிவிற்குத் தோனறுதிரா; இறை-எம்மிறைவன்; பொருள முழுவதும் அறி திறம இது - எல்லாப் பொருளையும் ஒரு காலத்தொருங்கே யுணரும் தனமை இஃதாம் என்றாள் என்க.

(வி - ம்.) எம்மிறைவன்பொறிகளுடையனாயினும்அவற்றாற்காண வேண்டுவதிலன்; நிகழ்ச்சிகள் காரணகாரிய முறையில் நிகழுமாயினும் அம்முறையானன்றிக் காரணகாரிய மிரண்டையும் ஒருங்கேயுணர்வன் என்றவாறு. இஃதென்சொல்லியவாறோ வெனின், இருட்டறையில் விளக்குக்கொண்டுபொருள்களைக்காண்பானுக்கன்றி, நன்பகலில் வெள்ளிடை நின்றான் பல பொருள் ஒருங்கு காண்பது காண்டுமன்றே? அதுபோல எல்லா மறைப்புக்களினின்றும் நீங்கிய இவனுடைய அறிவு காட்சிப் பொருள் உள்ளதுணையும் ஒருங்குணரும் என்றவாறு.

ஏனையோர் அறிவுக்குப் புலப்படாப் பொருளும் அவனறிவுக்குப் புலப்படும் என்பாள், 'மறை பொருள் உள; (அவை) அவனறிவினை மறையல' என்றாள். மறை பொருள்-தோன்றாப் பொருள்; அவை-பொருளாற்றோன்றுதனவும், இடத்தாற்றோன்றுதனவும், காலத்தாற்றோன்றுதனவும், இயல்பாற்றோன்றுதனவும் என நான்கு வகைப்படும். அவற்றுள் - பொருளாற்றோன்றுதன, நிலத்துள் நீர் முதலியன; இடத்தாற்றோன்றுதன, நாவலந்தீவினர்க்குப்பொன்மலை முதலாயின; காலத்தாற்றோன்றுதன, இறந்த காலப் பொருளும் எதிர்காலப் பொருளும்; இயல்பாற்றோன்றுதன, பேய், தேவர் முதலியோரின் உடம்புகள் முதலியன என்க. (கஅ௧)

கூ௬உ. பிணிதரு பிறவிய மறுசுழி யறுவதோர்
துணிவிது வெனநம துயர்கெடு முறைமையு
மணிதரு சிவகதி யடைதலு மருளுதல்
பணிதரு பரமன தருள்படு வகையே.

(இ - ள்.) பிணிதரு பிறவிய - துன்பந்தரும் பிறப்பினையுடைய உயிர்களினுடைய; மறு சுழி-மீட்டுப்பிறத்தல்; அறுவது ஓர் துணிவு இது என - அற்றுப் போதற்கு ஒப்பற்ற மேற்கோள் இதுவென்று; நம துயர் கெடு முறைமையும் - நம்முடைய துன்பங்கள் நீங்குதற்கியன்ற நெறிகளையும், அணிதரு சிவகதி அடை

தலும் - அழகு தருகின்ற வீடுபேற்றினை யடைதற்குரிய முறைமையையும்; அருளுதல் - திருவாய் மலர்ந்தருளுதல்; பணி தரு பரமனது - நம்மனோரால் வணங்கப்படுகின்ற இறைவனுடைய; அருள்படு வகை - திருவருள் செயல்படும் முறைமையாம் என்றுள் என்க.

(வி - ம்.) இஃது அருகனுடைய அருளிச் செய்கையை உணர்த்துகின்றது.

இறைவனுடைய திருவருள் நிகழ்ச்சியாவது - வினைவினோர்க்குப் பிறவிக்குக் காரணமானவற்றையும் வீடுபேற்றிற் குரியவற்றையும் திருவாய் மலர்ந்தருளுதலே என்றவாறு. (௧அ௬)

சு௫௩. சொரிவன மலர்மழை துளிகளு நறுவிரை
புரிவன வமரர்கள் புகழ்தகு குணமிவை
விரிவன துதியொலி விளைவது சிவகதி
எரிவன மணியிதே மிறைவன திடமே.

(இ - ள்.) எம் இறைவனது இடம் - எம்மிறைவன் எழுந்தருளிய இடத்தின்கண்; சொரிவன - பெய்வன; மலர்மழை - மலர் மழையேயாம்; துளிகளும் நறுவிரை - ஆண்டு எழுந் தூளிகளும்; நறுவிரை - நறிய மணமுடைய சுண்ணங்களே; புரிவன - ஆண்டு விரும்பப்படுவன; புகழ்தகுகுணம் - அவனுடைய புகழத்தகுந்த குணங்களேயாம்; விரிவன - ஆண்டுப பரவுவன; இவை அமரர்கள் துதியொலி - இவற்றைத் தேவர்கள் வாழ்த்துகின்ற இன்னிசையே; விளைவது சிவகதி - ஆங்கு விளைவது வீடுபேறேயாம்; எரிவன - ஆங்கு எரிவன; மணி - மணிவிளக்கங்களேயாம், இது - அவ்விடம் இத்தகைய சிறப்புடையதென்றுள் என்க.

(வி - ம்.) தூளி - துளி எனநின்றது. விரை - மணப்பொருள். சிவகதி - வீடுபேறு. மணி - மணிவிளக்கம். இது சமவசரணத்தின் சிறப்புக் கூறுகின்றது. (௧அ௭)

சு௫௪. அரசரு மமரரு மமர்வனர் வினவலின்
வரைவில பிறர்களு மனநிலை மகிழ்வெய்த
உரைபல வகையினு முளபொரு ளுணரவோர்
முறைசென வதிருமே முனிவரன் மொழியே.

(இ - ள்.) எம் முனிவரன் மொழி - எம்மிறைவனுடைய திருவாய்மொழி; அரசரும் அமரரும் - வேந்தர்களும் தேவர்களும்; அமர்வனர் - பெரிதும் விரும்பி; வினவலின் - கேட்டலாலே; வரைவு இல பிறர்களும் மன நிலை மகிழ்வு எய்த - வரையறை இல்லாத மற்றையோரும் தத்தம் மனம் நிலைத்த இன்பத்தை எய்தும்படி;

பல உரை வகையினும் - பல்வேறு வகைப்பட்ட மொழியினை யுடையோரும் அவ்வம் மொழியிலே ; உளபொருள் உணர - தம்பா லுளவாகிய மெய்ப்பொருளை நன்குணர்ந்து கொள்ளும்படி ; முரைசு என அதிரும் - முரசம் முழங்குமாறுபோல முழங்கும் என்றான் என்க.

(வி - ம்.) இஃது, அருகனுடைய திருமொழிமாண்புணர்த்துகின்றது வேண்டுதலும் வேண்டாமையுமின்றி முழங்குமென்பாள் 'முரசென வதிரும்' என்றாள்.

இனி, அறிவில் பொருளாகிய முரசு அறிவுடைய இறைவனுக்கு உவமையாமோ வெனின்; ஆம். என்னை ? விளக்கின் கொழுந்தும் ஆற்றொழுக்கும்அறிவுத்தொடர்ச்சிக்குநீகாட்டியவாறு போலவும், திங்கள் மண்டில நீழல் பிரமத்திற்கு உவமையாக்கியவாறும் பிறவும் போல என்பதாம். அவை ஒருபுடையால் உவ்மையாயினவாறுபோல இதுவும் ஒருபுடையாலுவமையாயிற்றென்றுகொள்க. அன்றியும்காமமுதலியன வும் பேசும் விருப்பமும் முதலாயினவும் மொழி-தோன்றுதற்குக் காரண மாகா; என்னை? காம முதலியவற்றான் மிக்க பொதுமக்களினும் காட்டில் அவற்றிற் குறைபட்ட முனிவர் முதலாயினாரிடத்தே மெய்ந் நூல்கள் பலவும் தோன்றுதலானும், பேசும் விருப்பம் உண்டாகிய விடத்தும் சிலரிடத்தே உரை முதலியன தோன்றாமையானும், பேசும் விருப்பமின்றியும் இடறி வீழ்தல் முதலிய விடத்தினும் உறக்கப் பொழு தினும் மொழி பிறக்கக் காண்டலானும் என்க. (௧௮௮)

௪௫௫. வினையிரு ளடுவன விரிகதி ரியல்பொடு
கனையிருள் கடிவன கடுநவை யடுவன
மனையிரு ணெறிபெற மதிகெட வடைவன
வினையமே யிறையவ னிணையடி யிவையே.

(இ - ள்.) மெய் இறைவன் இணை அடி - மெய்யாகிய அருகக் கடவுளுடைய இரண்டாகிய திருவடிகள் ; வினையிருள் அடுவன - அடியாருடைய வினைகளை அழிப்பனவும் ; விரி கதிர் இயல்பொடு கனையிருள் கடிவன - விரிகின்ற ஒளியையுடைய ஞாயிறுபோல மிக்க புறவிருளையும் அகற்றுவனவாம் ; கடுநவை அடுவன - கொடிய துன்பங்களை அழிப்பனவாம் ; மனையிருள் கெடமதி பெற அடைவன - அடியவர் உளத்தே மனைவாழ்க்கை என்னும் இருள் கெடவும் மெய்யறிவு பெறவும் வந்து எய்துவனவாம் ; இவை இனைய - இத்திருவடிகள் இத்தகைய மாண்புடையன காண்! என்றாள் என்க.

(வி - ம்.) இஃது அருகக் கடவுளுடைய திருவடி மாண்பு கூறியது. வினை - ஞானாவரணம் முதலியன. விரிகதிர் - ஞாயிறு. கனை - மிக்க. நவை - துன்பம். மனையிருள் - மனைவாழ்க்கையில் எய்தும் மயக்கம். இருள் கெட, மதி நெறி பெற என இயைக்க. (௧௮௯)

## வேறு

சஙக. ஆத்த னிவனென் றடிக ளடிமிசைப்
பூத்தனைத் தூவிப் பொருந்து துதிகளி
னேத்துநர் கண்டா யிருவினை யுங்கெடப்
பாத்தில் சிவகதிப் பான்மைய ரென்றாள்.

(இ - ள்.) *அடிகள் இவன் ஆத்தன் என்று* - இத்தகைய மாண்புடைய அருகனை இறைவன் என்று துணிந்து ; *அடிமிசை பூத்தனைத் தூவி* - அவனுடைய திருவடிகளிலே மலரிட்டு ; *பொருந்து துதிகளின் ஏத்துநர்* - அவன் மாண்பிற்கேற்ற வாழ்த்துக்களாலே வாழ்த்தி வழிபாடு செய்பவரே ; *இருவினையும் கெட* - தம்முடைய இருவினைகளும் அழிந்தொழிய ; *பாத்து இல் சிவ கதிப் பான்மையர் என்றாள்* - குற்றமற்ற வீட்டின்பத்தை எய்துந் தன்மையுடையோர் ஆவர் என்று கூறினள் ; என்க.

(வி - ம்.) *ஆத்தன்* - இறைவன். *அடிகள்* - கடவுள். *இருவினை* - நல்வினையும் தீவினையும்; காதி அகாதி வினைகள் எனினுமாம். *பாத்தில்* - குற்றமற்ற. *சிவகதி*-வீடுபேறு. அருகனே இறைவன் என்று தெளிந்து அவனை வழிபடுவோர் மட்டுமே வீடுபெறுவர் என்றவாறு. (௧௧௦)

## மொக்கலன் நீலகேசியை வினவுதல்

சஙள. ஏந்த றிறங்க ளிவையே லமைந்தன
போந்த வகையாற் பொருளும் பிழைப்பில
வீந்த விவற்றினின் வேற்றுமை வீட்டிற்கு
மாய்ந்த வகையா லறிவிமற் றென்றான்.

(இ - ள்.) *ஏந்தல் திறங்கள் இவையேல் அமைந்தன* - அது கேட்ட மொக்கலன் நீலகேசியை நோக்கி நங்காய் ! தலைவனியல்புகள் இவையே என்னின் அவை நன்கு பொருந்தினகாண் ; *போந்த வகையால் பொருளும் பிழைப்பு இல* - நாம் சொற்போர் ஆற்றி வந்த வகையினால் யான் அறிந்துகொண்ட நுஞ்சமயப் பொருள்களினியல்பும் தவறில ; *ஈந்த இவற்றின் வேற்றுமை வீட்டிற்கும்* - இவ்வாறு அறிவித்தருளிய இவ்விரண்டினும் வேறாகிய வீட்டினது இயல்பும் ; *ஆய்ந்த வகையால் அறிவி* - நீ ஆராய்ந்து கண்ட முறைமையாலே எனக்கும் அறிவித்தருள்க ; *என்றான்* - என்று வேண்டினன் என்க.

(வி - ம்.) இது மொக்கலன் தத்துவமுணர்ந்தபின் தலைவனியல்பும் பொருளியல்பும் உணர்ந்தேன், இனி வீட்டியல்பு உணர்த்துக என்று நீலகேசியை வேண்டியபடியாம். (௧௧௧)

## நீலகேசி வீட்டியல்பு விளம்பல்

௪௫௮. வித்தென்றும் வெந்தால் முளையல தாயெண்மை
யொத்தினி துண்டா முயிரும் பிறப்பின்றிச்
சித்தி யகத்துச் சிதைவிலெண் டன்மையி
னித்திய மாகி நிலையுள தென்னாய்.

(இ - ள்.) வித்து வெந்தால் என்றும் முளையலதாய்-மொக்கலனே! யாதானுமொரு விதை வெந்த பின்னர் என்றென்றும் முளையாததாகிய; எண்மை ஒத்து இனிது உண்டாம்-எட்டுருப்பும் ஒத்து இனிதாக உளதாகுமன்றே அவ்வாறே; உயிரும் - உயிர் தானும்; சித்தி அகத்து - வீட்டுலகின்கண்; பிறப்பின்றி - மீண்டும் பிறத்தலின்றி; சிதைவு இல் - அழிதலில்லாத; எண் தன்மையின் - கடையிலா அறிவு முதலிய எட்டுவகைப் பண்புகளோடே; நித்தியம் ஆகி - அழிவின்றி; நிலையுளது என்னாய் - நிலையுதலுடைத் தென்று கொள்வாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) இது, வீட்டியல்பு கூறுகின்றது.

வறுத்த வித்து முளையாதே எனினும் நின் மேற்கோளின்படி, அட்டகபிண்டமாயே நிற்குமன்றே? அதுபோல உயிரும் வினையழிதலாலே பிறவாதாகிக் கடையிலா அறிவு முதலிய எண்குணவுருவமாகி வீட்டுலகத்தின்கண் அழிவின்றி நிலைபெறும் என்று கொள்! என்றாள் என்றவாறு.

வெறும் பாழாகிய பௌத்தர் வீட்டியல்பிற்கும் வெந்த வித்து உவமையாகா தென்பதூஉம் போந்தது. (௧௧௨)

## மொக்கலன் கூற்று

௪௫௯. ஒக்கு மிதுவென வுள்ளங் குளிர்ந்தினி
மொக்கலன் சொல்லுமிம் மோக்கத்தைப் பாழ்செய்த
தக்கில தாகுந் தலைவ ரியல்பென
நக்கன னய்க்கென்று நன்னுத லென்றான்.

(இ - ள்.) மொக்கலன் சொல்லும்-அதுகேட்ட மொக்கலன் கூறுவான்; நல் நுதல் - நல்ல நெற்றியினையுடையோய்!; இது ஒக்கும் என - இது மிகவும் பொருந்துவதாம்! என்று கூறி; உள்ளம் குளிர்ந்து-மனம் மகிழ்ந்து; இம் மோக்கத்தை - இங்ஙனமிருக்கின்ற மெய்யான வீடுபேற்றினை; பாழ் செய்த தலைவர் இயல்பு - வெறும் பாழாக்கிய புத்தருடைய தலைமைப் பண்பு; ஆய்க்குத் தக்கிலது - தாயாகிய நினக்குத் தகுதியுடைத் தன்று காண்!; என்று - என்று கூறி; நக்கனன்-யான் என் அறியாமை

யாலே இதுகாறும் நின்னை எள்ளி நகைத்தேன்!; என்றான் - என்று கூறி வருந்தினன் என்க.

(வி - ம்.) இது மொக்கலன் தன்னறியாமைக்கு வருந்தியது. மோக்கம் - வீடு. பாழ் செய்த தலைவர்: புத்தன். நக்கனன் என்பது, என்னறியாமையாலே நின்னை நக்கனன் என்பதுபட நின்றது. (௧௯௯)

இதுவுமது

௪௯௦. பண்டே யெனக்கிம் மயக்கம் பயந்தவன்
கண்டார் மயங்குங் கபில புரமென்ப
துண்டாங் கதனகத் தோத்துரைக் கின்றனன்
றண்டா தவனொடு தாக்கெனச் சொல்லி.

(இ - ள்.) பண்டே எனக்கு இம்மயக்கம் பயந்தவன் - பின்னரும் மொக்கலன் நீலகேசியை நோக்கி, அன்னையே! பண்டொரு காலத்தே எனக்கு மயக்குடைய இப் பௌத்த சமயத்தைச் செவியறிவுறுத்தவன்; கண்டார் மயங்கும் கபிலபுரம் என்பது உண்டு - கண்டோர் வியத்தற்குக் காரணமான கபிலபுரம் என்னும் நகரம் ஒன்றுளதன்றே?; ஆங்கு அதன் அகத்து - அந் நகரத்தின்கண்; ஓத்து உரைக்கின்றனன் - இன்றும் மாணவர்க்குப் பிடகநூலை அறிவுறுத்தாநின்றான்; தண்டாது அவனொடு தாக்கு எனச் சொல்லி - காலந்தாழ்க்காமல் ஆங்குச் சென்று அவனோடு சொற்போர் புரிவாயாக என்று கூறி; என்க.

(வி - ம்.) மயக்கம் - மயக்கமுடைய பௌத்த சமய நெறி. (௧௯௪)

௪௯௧. சிறப்பின தென்பதைச் செப்பலுந் தெற்றெனப்
பிறப்பறுத் தின்பெய்தும் பெற்றியின் மிக்க
வறப்புணை யாகிய வாயிழை யாயான்
மறப்பில னென்று வலஞ்செய் தொழிந்தான்.

(இ - ள்.) சிறப்பு இனது என்பதைச் செப்பலும் - மேலும் அவ் வாசிரியனுடைய சிறப்பு இன்னது என்பதையும் கூறிய அளவிலே; தெற்று என - தெளிவாக; பிறப்பு அறுத்து - பிறப்பினை அறுத்து; இன்பு எய்தும் - வீட்டின்பத்தினை எய்துதற்கியன்ற; பெற்றியின் மிக்க - பண்பில் உயர்ந்த; அறப்புணையாகிய - அறத் தெப்பமாகிய; ஆயிழையாய் - பெரியோய்!; யான் மறப்பிலன் - நீ செய்த நன்றியை ஒருகாலத்தும் மறவேன் காண்!; என்று - என்று நன்றிகூறி; வலஞ்செய்து ஒழிந்தான் - நீலகேசியை வலம்வந்து வணங்கிப் போயினன்.

(வி - ம்.) இனது - இன்னது. தெற்றென - தெளிவாக. இது மொக்கலன் நீலகேசிக்கு நன்றி கூறிச் சென்றதனை உணர்த்துகின்றது. (௧௧௫)

## நீலகேசி கபிலபுரம் செல்லுதல்

௪௯௨. அருளே யுடைய ளறனே யறிவா
ளருளா தவரைத் தெருட்டல் லதுவே
பொருளா வுடையாள் புலனே நிறைந்தாள்
இருணீர் சுடர்போ லெழுந்தா ளவன்மேல்.

(இ - ள்.) அருளே உடையள் - அருட்செல்வத்தையே செல்வமாக உடையவளும்; அறனே அறிவாள் - அறத்தை நன்கு அறிபவளும்; தெருளாதவரைத் தெருட்டலதுவே - மெய்யுணராத வரை மெய்யுணர்த்துதலே; பொருளா உடையாள் - தலைசிறந்த தன் கடமையாகக் கொண்டவளும்; புலனே நிறைந்தாள் - மெய் யறிவே நிறைந்தவளும் ஆகிய அந்த நீலகேசி நல்லாள்; அவன் மேல் - கபிலபுரத்துள்ள அப்பௌத்தாசிரியன்பாற் போதற்கு; இருள் நீர் சுடர்போல் எழுந்தாள் - இருளகற்றும் ஞாயிறு விண்ணில் எழுந்தாற் போலே விண்ணின்கண் எழுந்து சென்றாள் என்க.

(வி - ம்.) இது நீலகேசியின் மாண்பு கூறுகின்றது.

பொருள் - கடமை. புலன் - அறிவு. இருள்நீர் சுடர் - ஞாயிறு. ஈண்டுப் பிறசமயவிருளைப் போக்குதல் கருதி இருள்நீர்சுடர் போல் என்றார். (௧௧௬)

## மொக்கல வாதச் சருக்கம் முற்றும்

———

ஐந்தாவது

# புத்த வாதச் சருக்கம்

## நீலகேசி கபிலபுரம் என்னும் நகரத்தை அடைதல்

சசுரு. அணிநா டிவைதா மறல்யா றிவைதாம்
பிணிநா டிவைதாம் பெருங்கா டிவைதாம்
மணிமா மலைதா மெனவே வருவாள்
அணியார் சுகதன் நகரெய் தினளே.

(இ - ள்.) இவை அணி நாடு என - இங்ஙனம் நீலகேசி பதுமபுரத்தினின்றும் புறப்பட்டு வான்வழியே கபில புரத்தினிடையேயுள்ள இவை அழகிய மருதஞ்சூழ்ந்த நாடுகள் ஆமென்று நோக்கியும்; இவை அறல் யாறு தாம் என - இவை கருமணலையுடைய யாறுகள் என்று நோக்கியும்; இவை பிணி நாடு தாம் - இவை தங்கண் வாழ்வார்க்குத் துயர் செய்யும் பாலைநிலம் என்று நோக்கியும்; இவை பெருங்காடு தாம் என - இவை பெரிய காடுகளடர்ந்த முல்லைநில நாடுகள் என்று நோக்கியும்; இவை மணி மாமலை தாம் எனவே - இவை மணிகளையுடைய மலை மிக்க குறிஞ்சி நில நாடுகள் என்று நோக்கியும்; வருவாள் - களிகூர்ந்து வருபவள்; சுகதன் - புத்தனிருந்த; அணியார் நகர் எய்தினள் - அழகு பொருந்திய கபிலபுரம் என்னும் நகரத்தை எய்தினள்; என்க.

(வி - ம்.) அணிநாடு என்றது மருதவைப்பினை; பிணிநாடு என்றது பாலை நிலத்தினை. பெருங்காடு என்றது முல்லைப்பரப்பினை. மணிமாமலை என்றது குறிஞ்சி நிலப்பரப்பினை; அடுத்த செய்யுளில் நெய்தல் கூறப்படும். இவ்வாற்றால் ஐந்திணைகளும் கூறியவாறுணர்க. அணிவாள் சுகதன் என்றும் பாடம். நகர் - கபிலபுரம். (க)

(இனி ஐந்து செய்யுள் கபிலபுர வருணனை)

சசுச. அறையும் கடலும் அரவக் குரலும்
பறையின் னொலியும் படுகண் டிகையுஞ்
சிறையின் மிகுமா லிதுசெம் படர்கள்
இறைவன் னுறையு மிடமா மெனவும்.

(இ - ள்) சிறையின் - ஆங்கொரு பக்கத்தே; அறையும் கடலும் - முழங்காநின்ற கடலினது ஆரவாரமும்; பறையின் ஒலியும் - பறை முழக்கமும்; படு கண்டிகையும் - ஒலிபடுகின்ற கண்டிகையின் முழக்கமும்; மிகுமால் - மிக்கிருத்தலாலே; இது செம்படர்கள் இறைவன் - இது சிவந்த ஆடைபோர்க்கும் பௌத்தர் தலைவனாகிய

புத்தன் இருக்கின்ற; இடம்ஆம் எனலும் - இடமாதல் வேண்டும் என்றறிதலும் ; என்க.

(வி - ம்.) அறைதல்-முழங்குதல். கடலுமலைவக்குரலும் என்றும் பாடம். கண்டிகை என்பது ஓர் இசைக் கருவி. சிறை, என்பதற்கு அரண் எனினுமாம். பறை - ஈண்டு மீன் கோட்பறை.

கடற்கரையாதலானும் உண்ணற்பொருட்டுக் கொல்லப்படுகின்ற உயிரினங்களின் துன்பக்குரலுடைமையானும், மீன்கோட்பறையுடைத்தாகலானும் இது புத்தனிருக்குமிடமாதல் வேண்டும் என்று கருதினள் என்றவாறு. இவன் ஊன் உண்ண வேண்டுதலின் நெய்தனிலத்துப் பட்டினத்திலிருத்தல் வேண்டிற்று. இனி, சிறை என்பதனை அரண் என்று கொண்டு இவன்பொருளுடையன் ஆதலின் அரண் வேண்டிற்று என்பர் உரையாசிரியர். செம்படர் - சிவந்த படத்தையுடையர் ; அவராவார் செம்படாம் போர்த்த பௌத்தர் என்க. அவர்க்கிறைவன் - புத்தன். இனிச் செம்படர் என்றது வலைஞருள் ஒரு வகுப்பினர். ஆதலின் சிலேடை வகையா லிருபொருளுந் தோன்றுமாறு கூறப்பட்டது. (உ)

சசுரு. மழைசேர் நகரம் மலைபோன் றனவே
கழைசேர் கொடியுங் கதலிவ் வனமே
விழைதா ரவரும் விரிகோ தையரும்
முழைவாழ் புலியே மயிலே மொழியின்.

(இ - ள்.) மொழியின் - இனி, அந்நகரியல்பு கூறுமிடத்து; நகரம் மழைசேர் மலை போன்றன - இனி அந்தக் கபிலபுரத்து மாளிகைகள் முகில்தவழும் மலைக் கூட்டத்தை ஒத்திருந்தன; கழை சேர் கொடி - அந்த மாளிகைகளிலே மூங்கிலிற் கட்டி உயர்த்திய கொடிக் குழாமும் ; கதலி வனம் - அம்மலைமேலடர்ந்த வாழைத் தோட்டங்களை ஒத்திருந்தன ; விழைதாரவரும - காண்போர் விரும்புதற்குக் காரணமான மலர்மாலை யணிந்த ஆடவர் தாமும் ; புலி - அம்மலை முழையில் வாழும் புலிகளையே ஒத்திருந்தனர் ; விரிகோதையர் - மலர்ந்த மலர்மாலை யணிந்த மகளிர் தாமும் ; மயிலே - அம்மலைகளிலே களித்தாடும் மயிற்குழாங்களை ஒத்தனர் ; என்க

(வி - ம்.) நகரம்-மாடமாளிகைகள். கதலிவ் வனம் - செய்யுள் விகாரம். தாரவர்-ஆடவர். கோதையர்-மகளிர். இனி, தாரவர்மொழியின் புலிமுழக்கம் போலும், கோதையர் மொழியின் மயிலகவினாற் போலும் எனவும் ஒருபொருள் தோன்றுதல் காண்க. அஃதாவது, தாரவர் மொழியினாற் புலி, கோதையர்மொழியினான் மயில் என்க. இஃது அவரை யிகழ்ந்தபடியாம். (ஙு)

சசுசு. நெடுவேண் டிரைமே லிமிருந் திமிலுங்
கடுவேஞ் சேலவின் னுலவுங் கலனும்
படுவண் டறையும் பொழிலும் மெழிலார்
மடுவுந் திடரும் மணல்வார் புறவும்.

(இ - ள்.) நெடு வெள் திரைமேல் - அந்நகர் மருங்கே கடலினது வெள்ளிய அலைகளின் மேலே; திமிலும் மிமிரும்-ஓடங்கள் நிமிர்ந்து இயங்காநிற்கும்; கலனும் - பெரிய மரக்கலங்களும்; கடு வெம் செலவின் உலவும் - மிகவும் விரைந்த செலவினையுடையனவாய் யாண்டும் இயங்காநிற்கும்; படு வண்டு அறையும் பொழிலும் - இன்னும் அந்த நகரம் யாண்டும் மொய்க்கின்ற வண்டினங்கள் இசை முரலுகின்ற பூம் பொழில்களையும்; எழில் ஆர் மடுவும் - அழகுபொருந்திய நீர்நிலைகளையும்; திடரும் - மணற்றிடர்களையும்; மணல் வார் புறவும் - மணன்மிக்க நெடிய புறப்பரப்புக்களையும் உடைத்தாம்; என்க.

(வி - ம்.) இச்செய்யுள் நெய்தனிலத்தின் சொல்லோவியமாய்த் திகழ்தலுணர்ந்து இன்புறுக. அலைமோதுந்தோறும் ஓடம் அணந்து அணந்து இயங்குதலாலே திமில் திரைமேனிமிரும் என்றார். திமில் - ஒரு வகை ஓடம். கலன் என்றது பெரிய மரக்கலங்களை. அவை பாய்விரித்தியக்குதலின் கடுவெஞ்செலவின ஆயின வென்க. எழிலார் என்பதனைத் திடர் புறவு என்பவற்றிற்கும் ஒட்டுக. (௬)

௪௬௭. கயன்மீ னிரியக் கழுநீர் விரியும்
வயன்மாண் புடைய வளமைத் தெனவும்
முயன்மீ னெறியு முறியுங் கறியா
தயன்மே யுறையா தணியிற் றெனவும்.

(இ - ள்.) வயல் கயல்மீன் இரியக் கழுநீர் விரியும்-அந்நகரத்தின் ஒரு மருங்கமைந்த கழனி கயற் கெண்டைகள் பாய்தலாலே செங்கழுநீர மொட்டுக்கள அலருகின்ற; மாண்பு உடைய வளமைத்து எனவும் - சிறப்புடைய வளமுடையது எனவும்; மீன் எறியும் முயல் முறியும் கறியாது அயல் மேய் உறையாது அணியிற்று எனவும் - அக்கழனியின்கண் பாய்கின்ற மீன்களால் தாக்கப்படுகின்ற முயல் தானும் ஆண்டுள்ள தளிர்களைத் தின்னாது அவற்றின் அருகே சென்று உறைதலும் செய்யாது, ஆதலால் அக்கழனிகள்; அணியிற்று - தளிர் முதலியவற்றானும் அழகுடையன எனவும்; என்க.

(வி - ம்.) கயல் - ஒரு வகை மீன். மீனால் எறியப்படும் முயல் அதற்கஞ்சி என வருவித்தோதுக. முறி - தளிர். கறித்தல் - தின்னல். மேய் - சென்று. அணியிற்று - அழகுடையது. (௭)

௪௬௮. கழுகின் னினமுங் கழுதின் னினமும்
முழுதும் மறுவை பலமூ டினரும்
கொழுதின் னிணனும் பிணனுங் குலவி
இழுதேன் னெலும்பா ரிடுகா டெனவும்.

(இ - ள்.) கழுகின் இனமும் - இன்னும் அங்ககாத்தின்கண் கழுகுக் கூட்டமும்; கழுதின் இனமும்-பேய்க் கூட்டமும் ; அறுவை பல முழுதும் மூடினரும் - சீவரவாடை பலவற்ருலே உடம்பு முழுதும்போர்த்தபௌத்தத் துறவோரும்; கொழுதின் கிணனும்- அவர் தின்னற்கு வேண்டிய கொழுப்புடைய கிணலூனும் ; பிண னும் - மான் ஆடு முதலியவற்றின் உடல்களும்; குலவி-மிகுந்து ; இழுது என் எலும்பு ஆர் இடுகாடு எனவும்,- பசையுடைய எலும் புகள் நிரம்பிய இடுகாடு எனவும் தோன்றுகின்றது ; என்க.

(வி - ம்.) கழுது - பேய். உடன் முழுது மூடினர் என்க. இவர் பௌத்த சமயத்துறவோர் என்க. ஊன் உண்ணுதலாலே இவரையும் கழுகும் கழுதும் என்னுமிவற்ருேடு அவற்றின் இனமாக எண்ணினர். கொழுமை-கொழுது என்ருயிற்று. தோன்றுகின்றது என வருவித்து முடிக்க. (௬)

வேறு

நீலகேசி கூற்று

௪௬௬. சாதியே மிக்க தடுமாற்ற வேந்துயர
மோதியே வைத்தாரவ் வோத்தெலா மீக்கிடக்த
வீதியே காணலா மென்ருளா னின்ருரும்
போதியா ரீண்டைப் புலால்பழியா ரென்றலும்.

(இ - ள்.) சாதியே மிக்க தடுமாற்ற வெந்துயரம் ஓதியே வைத்தார் - அங்ககரின் வீதியிற் சென்ற நீலகேசி, பிறப்புறு தலே மிகுதற்குக் காரணமான தடுமாற்றமுடைய வெவ்விய துன் பத்திற்குக் காரணமான மொழிகளைப் புத்தனுர் அறம் என்று கூறி வைத்தார் ; அவ் ஓத்து எலாம் - அவ்வற வுரையின் பயனை யெல்லாம்; மீக்கிடந்த - மீன் முதலியவற்றின் ஊன் மிக்குக்கிடந்த; வீதியே காணலாம் என்ருளால் - இந்த வீதியிலேயே காணலாம் என்று கூறினளாக ; நின்ருரும் - அம்மொழிகேட்டு அவ் வீதியிலே நின்ற மக்களும் ; போதியார் - எங்கள் ஆசிரியர் ; ஈண்டைப் புலால் பழியார் - இவ்வங்காடிப் புலாலை வாங்கி யுண்ணு தலைப் பழிப்பதிலர் ; என்றலும் - என்று கூறவும் என்க.

(வி - ம்.) அவ்வீதியிலே செல்கின்ற நீலகேசி அங்கு யாண்டும் மீன் முதலியன விற்றற் பொருட்டுக் குவித்துக்கிடத்தல் கண்டு புத்தனுர் ஓதிய அறத்தின் பயனை இவ்வீதியிலேயே காணலாம் போலும் என்று வருந்தியுரைத்தாளாக ; அங்கு நின்ற உபாசக மாக்கள் ஆம் ! ஆம் ! எம்மாசிரியர் புலாலுண்ணலைப் பழிப்பதிலர் ; ஆதலின் பௌத்தர்களாகிய யாங்கள் வாழுமிடத்தே இவை விற்கப் படுகின்றன என்பது கூறினர் என்பது கருத்து.

சாதி - பிறப்பு. ஓத்து - அறவுரை; நூலுமாம், ஈண்டைப் புலால் என்றது அங்காடிப்புலாலை. (எ)

நீலகேசி அம்மக்களை நோக்கிக் கூறியது

௪௭௦. அங்காடிப் பண்டவூன்
தின்ன வறமுரைத்தார்க்
கிங்காடி வாழ்வனவு
மூனுய்வந் தீண்டியவாற்
கொங்காடத் தேனறையுங்
கொய்ம்மருதம் பூவணிந்த
பொங்காடை போர்த்தார்க்குப்
பொல்லாதே யென்னீரோ.

(இ - ள்.) அங்காடிப் பண்ட ஊன் தின்ன அறம் உரைத்தார்க்கு - அதுகேட்ட நீலகேசி அம்மாந்தரை நோக்கி, ஐயன்மீர்! அங்காடியின்கண் வணிகர் கொணரும் பண்டமாகிய ஊனைத் தின்னும்படி நுங்கட்கெல்லாம் அறங்கூறிய நும்மாசிரியர்க்கு; இங்கு ஆடி வாழ்வனவும் - இங்கிவ்வுலகிலே பிறந்து விளையாடி வாழ்கின்ற உயிரினங்கள் எல்லாம்; ஊனுய் வந்து ஈண்டிய - கொலைஞரால் கொல்லப்பட்டு ஊனாகி வந்து குவிந்தனவே, இஃதொரு தீவினை கண்டீர்; கொங்கு ஆடத் தேன் அறையும்-தேன் உண்ண வண்டு முரலுகின்ற; கொய்மருதம்பூ அணிந்த பொங்கு ஆடை போர்த்தார்க்கு - கொய்கின்ற மருதம்பூத்துவர் தோய்த்த மிக்க ஆடையைப் போர்த்துள்ள நுங்கள் ஆசிரியர்க்கு நீவிரேனும்; பொல்லாது என்னீரோ - இது மிகவும் தீவினையேயாம் என்று அறிவுறுத்த மாட்டீரோ? என்றாள்; என்க.

(வி - ம்.) தான் ஊன்தின்னவேண்டி மக்களையும் ஊன்தின்ன அறமுரைத்தார். அவர் பொருட்டு உயிரினமெல்லாம் ஊனாகிவந்து ஈண்டின என்றிரங்கியபடியாம். நுமக்கு அறமுரைத்தார்க்கும் நீயிர் அறமுரைத்தல் தகும் என்பாள் - போர்த்தார்க்குப் பொல்லாதே என்னீரே என்றாள். பொல்லாது, தீவினை.

இனி, என்னை? காரணத்தால் தீவினையுண்டென்று கொள்வார்க்கன்றே ஊன் உண்ணினுங் கொலைத்தீவினை வருவது. புத்தர் காரணத்தாற் றீவினை வரும் என்று கொள்ளாமையின் அவர்க்கு கொலைவினை ஆகாதன்றே? ஆகாமையின் அங்காடியின் ஊன் கொண்டுண்பார்க்குத் தீவினையாமாறு என்? எனின்; புத்தர் காரணத் தீவினை கொள்ளாரெனின் காரணத்தால் வரும் நல்வினையும் கொள்ளாராகல் வேண்டும்; ஆகவே புத்ததேவரை வழிபடுதல் பிழைப்பாக வுடைய பரிசாரகனொருவன், புத்த வழிபாடு பண்ணி அவரது பாதபீடிகையிலிடப்பட்ட மலர் முதலாயின கொணர்ந்து உபாசகர்க்குக் கொடுப்ப, அவர்களுமவற்றை அன்புள்ளத்தோடே வாங்கிக் கொண்டு அவனுக்குப் பொருள் கொடுத்தார்; அவ்வழி உபாசகர் தாம் வழிபட்டதுமிலர்; வழிபட ஏவிற்றுமிலர், இவ்வாறாகவும் அவர்க்குக் காரணமான மாத்திரத்தாலே வருவதாகிய நல்வினை இலதாக வேண்டுமென்க.

இனி, வழிபாட்டிற்கென்பதறிந்து பொருள் கொடுத்தலின் நல்வினையாமென்னின்; வழிபாட்டுத்தொடர்பில்லாத மலர்கொண்டு செல்லப் பொருள் கொடுத்து வாங்கினாற்கு நல்வினை இல்லாதவாறு போல; கொலைத் தொடர்பில்லாத ஊன்கொடுவர விலை கொடுத்து வாங்கினாற்குத் தீவினை இல்லையெனின்; மலர் கொண்டான் அம்மலர் வருவாய்க்குடன் பட்டவாறு போல; தாமே இறந்துபட்ட உடம்பின் ஊன் கொண்டாற்கும் அந்த ஊன் வருவாயாகிய உயிரினங்களின் சாவிற்குடன்பாடா மென்பதாம்.

புத்தவழிபாட்டால் வந்த மலர்முதலியவற்றை வேண்டாதான் புத்தவழிபாட்டையும் வேண்டாதானவாறு போல, உயிரின் சாக்காட்டாலே வருவதாகிய ஊனை வேண்டாதவனே அவற்றின் சாவிற்கும் உடன்படாதான் என்பதாம்.

இன்னும்,

"காரணத்தாற் பாவத்தைக் கைக்கொள்ளாச் சாக்கியன்றான்
காரணத்தாற் புண்ணியமுங் கைக்கொள்ளா னாற்
பொருள் கொடுத்தான் பூசைக்குப் புண்ணியத்தை யெய்தா
னருள் படைத்தார்க் கில்லை யறம்."

"புத்தன் சிறப்பால் வரும்பூவை வேண்டாதான்
புத்தன் சிறப்பினையும் போற்றானா—மித்திறத்துக்
கொன்று கொணர்ந்தவூன் கொள்ளாக் குணமுடையா
னன்றோ கொலைநேரா தான்"

என்பவற்றானும் புத்தனுக்குப் பொல்லாங்கு தெரிந்து கொள்க.

அன்றியும் புத்தன் 'திட்டிவிடம்' என்னும் பாம்பாகப் பிறந்த பிறப்பின்கண், ஒரு வேடன் மூங்கிற் கொடி கோத்து இழுப்புழித் தான் கொல்லானும் ஏவுதலுமில்லானும் கொலையுடன்படானும் ஆயினும் கண் விழிப்பின் அவ்வேடன் சாமென்பதறிந்து, தன் கண்விழியாதே கிடந்திறந்தமையின் புத்தன் காரணத்தால் வருந் தீவினையிசைந்தானாம். இங்ஙனம் இசைத்தவனே ஊன் தின்றால் கொலை நிகழும் என்பது அறிந்தும் அது தவிர்க! என்னாது தின்கவென்று அறிவுறுத்தமையால் இவனுக்குப் பொல்லாங்கேயாமென்பதாம்.

"காரணத்தாற் பாவங் கடிந்த சுகதன்றான்
சீரிலாத் திட்டி விடமாகி—நார்கோத்
திழுக்கின்ற வன்சாவ னென்றருள்செய் தென்னோ
விழிக்கின் றிலன்செத்தான் வேறு"

என்பதனாலும் பௌத்தர் காரணத்தாற் றீவினை கொண்டவாறு தெரிக. (அ)

௪௭௯. விலைபடைத்தா ரூன்வேண்ட வவ்விலைதான் வேண்டி
வலைபடைத்தார்க் கெம்முயிரை வைக்கின்றா மின்ன
கொலைபடைத்தா னேகொடிய னென்பனவே போலத்
தலைபெடுத்து வாய்திறப்ப தாமிவையோ காணீர்.

(இ - ள்.) படைத்தார் விலை ஊன்வேண்ட-பொருள்படைத்தோர் விலை கொடுத்து ஊன் கொள்ளுதலாலே ; அவ்விலை தான் வேண்டி வலை படைத்தார்க்கு-அந்த விலைப்பொருளைப் பெறுமவாவினாலே வலை முதலியன இயற்றிக்கொண்ட கொலையாளருக்கு; எம்முயிரை வைக்கின்றோம்-யாங்கள் எம்முயிரை அவர்கொள்ளுமளவும் பேணி வைக்கின்றோம் ; இன்ன கொலைபடைத்தான் - இவ்வாறு உலகின்கண் கொலைத்தொழிலையுண்டாக்கிவைத்த புத்தன் ; ஓ கொடியன் என்பனபோல - ஐயகோ பெரிதும் கொடியவன் என்று கூறுவன போன்று ; இவை தலை எடுத்து வாய்திறப்பது ஓ காணீர் - இம்மீன்கள் தலையை உயர்த்தி வாயைத் திறப்பதனை அந்தோ! உணர்வுடையீர் எல்லீரும் காணுங்கோள் ; என்க.

(வி - ம்.) இது நீலகேசி வீதியிலுள்ளார்க்குக் கூறியது.

படைத்தார்-பொருள்படைத்தவர். படைத்தார் விலையூன்வேண்ட எனமாறுக. வலைபடைத்தார் என்றது மீன் படுக்கும் பரதவரை. இன்ன கொலைபடைத்தான் என்றது புத்தனை.

புத்தன் விலைகொடுத்து ஊன் உண்ணல் தீவினையன்றென்று கூறினன். எனவே மாந்தர் விலைகொடுத்தூன்றின்னலாயினர். விலைப்பொருட்டாற் கொலைசூழ்ந்து வணிகரூன் தருவாராயினர்; ஆகவே இக் கொலைக்குப் புத்தனே காரணமாயினன். ஆதலால் அவன் பெரிதும் தீயன் என்று முறையிடுகின்றன என்றவாறு.

இதனோடு,

> ''தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
> விலைப்பொருட்டா லூன்றருவா ரில்''

எனவரும் திருக்குறளையும் (உ௫௬) நோக்குக. (௧)

இதுவுமது

சஎஉ. தன்றார மீந்தான் றனக்குறுதி யாவதனை
யொன்றானும் வேண்டான் பிறர்க்கே யுழந்தானூன்
தின்றானுந் தீவினையைச் சேருமெனச் சொன்னாற்
பொன்றாவாய்ப் பல்விலங்கும் பூமிமேல் வாழாவோ.

(இ - ள்.) தன் தாரம் ஈந்தான் - நுந்தம் புத்தர் பெருமான் அருளுடைமை காரணமாகத் தன் மனைவியையும் இரவலனுக்கு வழங்கினன் ; தனக்கு உறுதியாவதனை ஒன்றானும் வேண்டான் - தனக்கு உறுதிப்பொருளாகிய வீடுபேற்றினையும் ஒரு வழியானும் விரும்பானாய் ; பிறர்க்கே உழந்தான் - பிறர் நலமே கருதிப் பெரிதும் உழந்தனன் என்று கூறுவீர் ! அத்தகைய அருளாளன் ; ஊன் தின்றானும் தீவினையைச் சேரும் எனச் சொன்னால் ஊன்

தின்றவனும் கொலைத்தீவினையை அடைவான் என்று உண்மையாய் இவ்வறத்தைக் கூறியிருப்பின் ; பல்விலங்கும் பூமிமேல் பொன்றுவாய் வாழாவோ - பல்வேறு அஃறிணையுயிர்களும் இந் நிலவுலகின்மேல் கொலையுண்டு சாவாமல் வாழ்நாளுள்ள துணையும் இனிது வாழமாட்டாவோ ? என்று இரங்கினள் ; என்க.

(வி - ம்.) இது, பௌத்தர் புத்தனுக்குக் கூறும் சிறப்புக்களை ஒப்புக்கொண்டு அத்தகையோன் இவ்வறத்தைக் கூறுதொழிந்ததெற்றிற்கு என்றிரங்கியபடியாம்.

உறுதியாவது - வீடு பேறு. ஒன்றுனும்-ஒரு வழியாலும். ஈண்டு "உண்ணாமை யுள்ளது உயிர் நிலை" எனவரும் வள்ளுவர் பொன் மொழியை நினைக. (குறள்-உருரு.) (சுo)

இதுவுமது

சஎங. உரிதா வுணர்ந்தானென் றோரா துரையான்
பரிவே யிதுவுந்தன் பாலரோ டெல்லா
மெரிதோய் நரகம்பா ழேற்றுவா னேயாம்
பெரிதா மளியன் பெருந்தகைய னேகாண்.

(இ - ள்.) உரிதா யுணர்ந்தான்-எம்மாசிரியன் மன்னுயிரெல்லாம் தன்னுயிர் என்னும் உரிமையோடு கருதினன்; ஓராது ஒன்று உரையான் - ஆராயாமல் யாதொன்றனையும் கூறுவதிலன் என்பீர் !; இதுவும் பரிவே விலைக்குக் கொண்டேன் தின்மின் என்னும் இதுவும் அவ்வுயிர்கள் பாற் கொண்ட அருள் தானோ ? கூறுமின் !; பெரிதும் அளியன்- இங்ஙனம் கூறியவன் பெரிதும் அருளுடையனே !; தன் பாலரோடு எல்லாம்- தன்மக்களும் மாணக்கரும் பிறருமாகிய எல்லோரையும் ; எரிதோய் பாழ் நரகம் ஏற்றுவானே ஆம் - இங்ஙனம் கூறியதனால் ; தீ நிறைந்த பாழான நரகத்திலே வீழ்த்துபவனே ஆவன் ; ஆகவே, பெருந்தகையனேகாண் - நும்மிறைவன் பெருந் தகைமையுடையனே காண் என்று அசதியாடினள் ; என்க.

(வி - ம்.) உரிது-உரிமையுடையது. உரிதாக என்பதன் ஈறுகெட்டது. பரிவு - அருள். எல்லாம் என்றது மாணக்கர் முதலாயினரை. பாழ் நரகம் என மாறுக. அளியன் - அளியுடையோன். இனி, இரங்கத் தகுந்தவன் எனினுமாம். (சக)

இதுவுமது

சஎச. கோடைக்கோட்டி விற்பானுங் கோள்வானு மன்றி
யிடைச்சேட்டி னற்பொருளை யெய்துவான் போல
முடைக்கோட்டி முத்துரைத்து மூடிக்கொண் டேகுங்
குடைச்சிட்ட னுயிர்க்கோர் கூற்றமே கண்டீர்.

(இ - ள்.) கொடைக்கு ஒட்டி விற்பானும் - கொள்வோர் கொடுக்கும் பொருளுக்கேற்பப் பண்டத்தை விற்கும் வணிகனும்; கொள்வானும் அன்றி - அப்பண்டத்தை வாங்குபவனுமல்லாமல்; இடைச் செட்டினால் பொருளை எய்துவான்போல - இவ்விருபாலர்க்குமிடையே நின்று செய்யும் வணிக முறைமையாலே பொருள்களைக் கொள்ளுகின்றவனைப்போல; முடைக்கு ஒட்டி - தான் தின்னும் ஊனுக்குப் பொருந்துமாறு; முத்து உரைத்து - முத்துக்களை விலையாகப் பேசிக் கொடுத்து; மூடிக்கொண்டு ஏகும் - அவ் வூனைத் தன் போர்வையாலே மூடிக்கொண்டு செல்லுகின்ற; குடைச் சிட்டன் - குடையையுடைய நுங்கள் ஆசிரியன்; ஆருயிர்க்கு ஓர் கூற்றமே கண்டீர் - அரிய உயிரினங்கட்கெல்லாம் மற்றொரு கூற்றுவனே காண் என்றாள்; என்க.

(வி - ம்.) கொடை - விலையாகக் கொடுக்கும் பொருள். ஒட்டுதல் - பொருந்தச் செய்தல். இடைச் செட்டு - இடையிலே நின்று செய்யும் வணிகம். செட்டு - ஊதியம். வணிகரிடம் பண்டம் கொண்டு மீண்டு தாமும் வணிகஞ் செய்வானை இடைச் செட்டினாற் பொருளை யெய்துவான் என்றாள். இவரை இக்காலத்தார் தரகர் என்பர்.

புத்தன் தானே அங்காடியிற் சென்று ஊன் வாங்காமலே ஊன் கொடு வருவாரை இடைமறித்து முத்துக்களை விலையாகக் கொடுத்து ஊன் வாங்கி அதனைப் போர்வையில் மறைத்துக் கொண்டு பள்ளியுட் புகுவன் என்றவாறு. மூடிக்கொண்டேகுதல் - பிறர் தன்னை இகழாமைப் பொருட்டு. முத்துரைத்து என்றது யாம் முத்துத் தருகின்றோமென்று சொல்லி என்றவாறு. எனவே இவன் செல்வரிடத்தே முத்துக்களைக் கையுறையாகப் பெற்று அவற்றையும் கொடுத்து ஊன் வாங்கித் தின்பவன் என்றவாறு.

குடைச்சிட்டன் என்றது இகழ்ச்சி. சிட்டன் - பெரியோன். உயிர்களின் அகவை முடியுங்காலத்தே வருங்கூற்றுவனல்லன் இவன்! இடையிலேயே கொல்லும் கூற்றுவன் என்பாள் உயிர்க்கு ஓர் கூற்றுவன் என்றாள். (௧௨)

இதுவுமது

௪௭௫. ஆடுவார் காண்பா ரவரருகே தான்சென்று
தோடுவார்ந் தாலோப்பச் சொல்விரிப்பான் போற்பாவம்
கூடுவார் கூடாதார் கொன்றார்தின் றாரேன்னும்
சேடனார்க் காண்டநா மென்றுதான் சென்றாளே.

(இ - ள்.) ஆடுவார் காண்பார் அவர் அருகே தான் சென்று - (நீலகேசி,) கூத்தாட்டுவிப்போன் கூத்தரும் கூத்துக் காண்பவரும் ஆகிய அவ்விருதிறத்தார்பாலும் சென்று; தோடு வார்ந்தால் ஒப்பச் சொல் விரிப்பான் - பனையோலைவார்வதுபோலப் புகழ்ந்து பொருள் வாங்குவான்; கூடுவார் கொன்றார் கூடாதார்

தின்றார் என்னும் சேடனார் - அவன்போலக் கொலைத் தீவினை எய்துவோர் உயிரினங்களைக் கொன்றவரேயாவர் அத்தீவினையை எய்தாதவர் அவ்வூனைத் தின்றவர் என்று அவர்க்கிதமே பேசி அவர்பால் ஊன் இரந்து தின்னும் புத்தனாரை ; நாம் காண்டும் என்று சென்றாள் - இனி யாம் சென்று காண்பாம் என்று கூறிச் சென்றனள் ; என்க.

(வி - ம்.) தோடு-பனையோலை. பனையோலை வார்பவர் அதற்கு நன்மை செய்வார்போல அதனை வார்ப. வாய்மையில் ஓலைக்கு நன்மை யாதுமில்லை வார்வார்க்கே நன்மையாம். அங்ஙனமே கூத்தாட்டு விப்போன் தன்னலம் கருதி ஆடுவாரையும் காண்பவரையும் புகழ்ந்து பொருள் கொள்வான். இனிப் புத்தனும் கேட்பார்க்கு நன்மை செய்வான் போல விலைக்கு ஊன் கொண்டுண்ணல் தீவினையன் றென்பன். அதற்குக் காரணம் அவர்பால் ஊனிரந்து தின்னலாம் என்னும் கருத்தேயாம் என்பது கருத்து. சேடனார் : இகழ்ச்சி. (கசு)

## வேறு

சஎசு. அணிசெய் கோழரை யரைநிழ லழகனைப் பொருந்தி
மணிக டாம்பல கதிர்விடு மலருடை மணைமேற்
றுணிவு தோற்றினை யெனச்சிலர் துதியொடு தொழுது
பணிய யாதுமோர் பரிவிலன் படம்புதைத் திருந்தான்.

(இது முதலாக ச-செய்யுட்கள் ஒரு தொடர். புத்தனார் இருக்கை யியல்பு கூறும்.)

(இ - ள்.) அணிசெய் கோழ் அரை அரை நிழல் - அங்ஙனம் சென்ற நீலகேசி, அழகு செய்வனற கொழுவிய அடிப்பகுதியினை யுடைய அரசமரத்தின் நிழலின்கண்; மணிகள் தாம் பல கதிர் விடும் மலருடை மணைமேல் அழகனைப் பொருந்தி - நன்மணிகள் பலவும் ஒளிவீசா நின்ற மலர் பரப்பிய மணைப் பலகையின் மேல் வீற்றிருக் கின்ற அழகுமிக்க புத்தனையடுத்து; சிலர் துணிவு தோற்றினை என - ஒரு சிலர் எதிர் நின்று, மெய்யாய துணிபொருளையுணர்ந்து அடி யேங்கட்குச் செவியறிவுறுத்தனை என்று பாராட்டி ; துதியொடு தொழுது பணிய - வாழ்த்துப்பாடிக் கைகூப்பித் தொழுது அடி களிலே வீழ்ந்து வணங்கவும் ; யாதுமோர் பரிவு இலன் படம் புதைத்திருந்தான் - அவன் அவர்பால் ஒரு சிறிதும் அருளிலனாய்த் தன் மெய்ம்முழுதும் துவராடையாலே போர்த்திருந்தான் ; என்க.

(வி - ம்.) அணி - அழகு. கோழரை-வழுவழுப்பான அடிமரம். மணைமேல் அழகனைப் பொருந்தி என மாறுக. மணிகடாம் பல கதிர் விடு மலருடை மணைமேல் என்றது, துறவோர்க் கொவ்வாத பொரு ளாட்சியுடைமை கூறியபடியாம். துணிவு - சித்தாந்தம்; பொருண் முடிபு. பரிவு - அன்பு. படம் - ஆடை. (கஎ)

சஎஎ. ஆத்த னேயெனத் தெளிந்தவ னமர்ந்திருந் தவர்க்குச்
சூத்தி ரம்மிது வினையமு மிதுவிது பிறிதாஞ்
சாத்தி ரம்மிவை மூன்றெனை வன்றவத் தோன்றல்
பாத்து ரைக்குந்தன் பதப்பொருள் பலவகைப் படவே.

(இ - ள்.) ஆத்தனே எனத் தெளிந்து அவண் அமர்ந்திருந்தவர்க்கு - அவ்வாறு படம் போர்த்திருந்தவனைச் சிறந்த நல்லாசிரியனே என வுணர்ந்து அவன்பால் அறங் கேட்டற்கு அவ்விடத்தே அமர்ந்திருந்த மாணாக்கர்க்கு ; இது சூத்திரம் - இந்நூல் சூத்திரபிடகம் எனப்படும் ; இது வினையமும் - இந்நூல் விநயபிடகம் எனப்படும் ; இது பிறிது ஆம் - இந்நூல் அபிதம்ம பிடகம் எனப்படும்; இவை மூன்று சாத்திரம் என - இம்மூன்று நூல்களும் நஞ்சமயத்தினர்க்குரிய மெய்ந் நூல்களாகும் என்று முற்பட முன்னுரை கூறி; வல்தவத்தோன்றல் - வலிய தவவொழுக்கமுடைய அத்தலைவன் ; தன் பதப்பொருள் பலவகைப் படப் பாத்து உரைக்கும் - தன்னுடைய சொற்பொருளைப் பலவேறு வகைப்பட பகுத்து விரித்துக் கூறலானான் ; என்க.

(வி - ம்.) ஆத்தன்-தலைவன். ஆத்த னியல்பிலனாகவும் ஆத்தனே எனத் தம்மறியாமையாற் றெளிந்து என்பது கருத்து. சூத்திரம் - சூத்திரபிடகம். வினையம்-வினையபிடகம். பிறிது என்றது அபிதம்ம பிடகத்தை. பாத்து - பகுத்து. பதம் - சொல்.

அவ்வாசிரியன் தன் மாணவர்க்குப் பிடக நூலிவையென்று முற்படத் தொகுத்துரைத்துப் பின் வகுத்து மீண்டும் சொற்பொருள் விரித்துரைத்தான் என்றவாறு. (கு)

சஎஅ. கந்த மைந்திவை கணிகத்த வாமெனக் கரைந்து
முந்தி நாடினே ருணரவல்ல தில்லையென் றுரைத்தும்
புந்தி யாலங்கோர் புற்கல னுளனெனப் புணர்த்து
மந்தி லாற்சொலாப் பாட்டினே டியாதுமில் லெனவும்.

(இ - ள்.) கந்தம் ஐந்து - அங்ஙனம் கூறியவன் கந்தம் ஐந்துமே பொருளாம் என்றும்; இவை கணிகத்த ஆம் எனக் கரைந்தும் - இக்கந்தங்கள் ஒரு கணப்பொழுதிற் றோன்றி மறைவனவே என்று சொல்லியும்; முந்தி நாடின் - இவற்றை முற்பட்டு ஆராயின் ; உணர்வு அல்லது இல்லை என்று உரைத்தும் - அறிவு ஒன்றுமே பொருளாவதல்லது ஒழிந்த நான்கு கந்தங்களும் இல்லையாம் என்று சொல்லியும் ; புந்தியால் அங்கு ஓர் புற்கலன் உளன் எனப் புணர்த்தும் - மெய்ம்மை வகையாலன்றி வழக்கு வகையாலே ஓர் ஆத்துமன் உளன் என்று சொல்லியும்; சொலாப் பாட்டினோடு யாதும் இல் எனவும் - பொருள் சொலப்படாதது என்றும் எல்லாப் பொருளும் இல்பொருள் என்றும் ; என்க.

(வி - ம்.) அவ்வாசிரியன், ஐங்கந்தமே பொருள் என்று கூறிப் பின் ''அறிபொரு ளொன்றொழியக் கணிக மடங்கலும்'' என்பதனால் அவை, கணப்பொழுது மாத்திரையே நிலையுடையன; அவற்றுள் அறி வொன்றுமே பொருள் ஒழிந்த நான்கும் இல்லை என்று சொல்லியும் உண்மை வகையாலன்றி வழக்கு வகையால் ஓர் ஆத்துமன் உளன் என்று சொல்லியும் பின்பு பொருளியல்பு சொலப்படாதது என்றும் பாழ் என்றும் இவ்வாறு ஐந்து மேற்கோள் சொன்னான் என்றவாறு.

அந்தில்: ஆல், அசைகள். சொலாப்பாடு-சொல்லொணாத்தன்மை. சொலப்பாட்டிைேனாடு என்னும் பாடம், பிழை என்பது பழையவுரை யாற் பெற்றாம். இல் என்றது, பாழ் என்றவாறு. (௧௬)

௪௭௯. தத்து வம்மிவை தாமெனத் தமர்களுக் குரைக்கும்
புத்த னார்தம்மைப் புயலிருங் கூந்தலி பொருந்திப்
பித்தர் போற்பல பிதற்றனீர் பிதற்றிய விவைதா
மெத்தி றத்தினு மிசைவின்மை யிசைக்குவ னெனவே.

(இ - ள்.) இவை தாம் தத்துவம் என - இவையே நஞ் சமயத்தத்துவங்கள் என்றும் கூறி; தமர்களுக்கு உரைக்கும் - தம் மாணாக்கர்களுக்குச் செவியறிவுறுத்துகின்ற; புத்தனார் தம்மை புத்தரை; புயல் இருங் கூந்தலி - முகில் போன்ற கருங்குழலை யுடைய நீலகேசி; பொருந்தி - அணுகி; பித்தர் போல் பல பிதற்றினீர்-பெரியீர்! பித்தேறியவர் போலப் பற்பல வாய் தந்தன கூறினீர்; எத்திறத்தானும் - எவ்வாற்றானும்; பிதற்றிய இவை இசைவு இன்மை இசைக்குவன் என - நீயிர் கூறிய இத்தத்து வங்கள் பொருத்தமில்லாமையை யான் எடுத்துக் கூறுவேன் கேண்மின்! என்று கூறி; என்க.

(வி - ம்.) தமர் - தம் மாணவர். கூந்தலி - கூந்தலையுடையவள்; நீலகேசி. இசைவின்மை - பொருந்தாமை. (௧௭)

நீலகேசி கூற்று

௪௮௰. ஓதி னீர்சொன்ன கந்தமைந் துளவெனி னுருவே
வேத னையோடு குறிசெய்கை யிலவென விரிப்பும்
போதியா லங்கோர் புற்கல னுளனெனப் புணர்ப்பும்
யாது மின்மையோ டவாச்சிய மறும்பிற வெனவே.

(இ - ள்.) ஓதினீர் - இவ்வாறு ஐந்து பக்கமாகத் தத்துவ முரைத்த நீயிர்; சொன்ன கந்தம் ஐந்தும் உள எனின் - கூறிய ஐந்து கந்தங்களும் உள்பொருள் எனக் கொண்டால்; உருவே வேதனை குறி செய்கை இலவென விரிப்பும் - பின்னர் நீயிர் அவையிற்றுள் அறிவுக்கந்தம் ஒழிய ஏனைய உருவுக்கந்தமும் நுகர்ச்சிக் கந்தமும் குறிக்கந்தமும் செய்கைக் கந்தமுமாகிய

நான்கும் இல்லனவாம் என்று விரித்துக் கூறியதும்; போதியால் அங்கு ஓர் புற்கலன் உளன் எனப் புணர்ப்பும் - அறிவுகாரணமாக அவ்விடத்தே ஓர் ஆத்துமன் உளன் ஆவன் என்று கூட்டிக் கூறியதும் ; யாதும் இன்மையோடு-எல்லாம் பாழே என்றதனோடு; அவாச்சியம் - பொருளியல்பு சொலப்படாது என்றதும் ; அறும்-பொருளல்லவாய் ஒழியும் அல்லவோ? என்றாள்; என்க.

(வி - ம்.) நும்முன் வைபாடிக மதமாகிய ஐங்கந்தங்களுமே உள் பொருளாய வழி ஒழிந்தவை பொருளல்லனவாய் அவற்றை யுரைப்பது பயனின் முயற்சியாம் என்றாள் என்றவாறு (கஅ).

புத்தன் விடை கூறலும்; நீலகேசி நகைத்தலும்

சஅக. ஐந்தில் யான்சொன்ன பலகளு மமைவில வெனினும்
கந்த முண்மைக்கட் கருத்துள தாம்பிற வதனாற்
சிந்த மாயவு முளவெனத் தெளியினி யெனலும்
நந்த ளுர்க்கற முரைத்திர்நீ ரோவென நக்காள்.

(இ - ள்.) ஐந்தில் யான் சொன்ன பலகளும் அமைவில வெனினும் - அது கேட்ட புத்தன் நங்காய்! ஐந்து வகை முடிவினும் யான் கூறிய தத்துவங்கள் பொருந்துவனவல்ல என நீ கூறினும் ; கந்தம் உண்மைக்கண் கருத்து உளது ஆம் — யான் கூறிய ஐங்கந்தங்களும் உளவாதலின்கண் நின் கருத்து ஒத்துள தாமன்றோ?; அதனால் - யான் கூறியவற்றுள் ஒரு மேற்கோள் நினக்குப் பொருந்துவதனால் ; இனி சிந்தமாய பிறவும் உள எனத் தெளி எனலும் - இனி என்னால் கூறப்பட்ட பிற மேற்கோள்களும் அறிவிற்குப் பொருந்தியுள என்றே நீ அறிந்து கொள்ளக் கடவாய் என்று கூறவும் ; நீரோ நந்தனுர்க்கு அறம் உரைத்திர் என நக்காள் - நீயிரல்லிரோ முன்பு நந்தனுர்க்கு அறம் உரைத்தவர், ஆகவே நீயிர் இவ்வாறு கூறுதல் தகுவதேயாம் என்று கூறி நகைத்தாள் ; என்க.

(வி - ம்.) புத்தன் யான் கூறிய ஐந்து பக்கங்களுள் ஒன்று நின் கருத்திற்கொத்திருத்தலின் ஏனையவும் ஒத்தனவேயாம் என்று கொள்; எற்றாலெனின் ? அவையும் என்னாற் கூறப்பட்டனவேயாதலின் என்றான். அது கேட்ட நீலகேசி அவன் பேதைமைகண்டு ஓஓ நீயிர் தாமே பண்டு நந்தனுர்க்கு அறமுரைத்தவர், நுமக்காயின் தகும் என்று சொல்லிச் சிரித்தாள் என்றவாறு.

ஓகாரம் உமக்காயிற்றகும் என ஒழியிசைக்கண் வந்தது.

இனி, நந்தனுர்க்கறமுரைத்தலாவது-புத்த தேவர்க்கு ஞாதியாவா னொருவன் நந்தன் என்பான் ; புத்தன் அவனுக்கு அறஞ்செவியறிவுறுத்துத் தவம்படுத்தி, அவனை மூவகைப்பிடக நூல்களையும் ஓது

விப்ப, அந்நந்தன் காமுகனுய் உறக்கப் பொழுதின்கண் தன் மனைவியாகிய வரசுந்தரியை வாயரற்ற, அதுகண்ட புத்தன் அவன் காம வேட்கையைத் தவிர்ப்பான் வேண்டித் தேவருலகத்துக் கூத்தியரைக் காட்டி அவன் வரசுந்தரியை வெறுக்கும்படி செய்ய அவனும் அத்தேவ மகளிரைக் கண்டு காமவேட்கை மிகுந்து தவம் விட்டுப் போயினன். இவ்வாறு ஆற்றலுடையீரல்லிரோ? நீயிர் என்று சிரித்தாள் என்றவாறு.

சிந்தமாயவும் - முடிந்தனவும்.

இதனால் நீர் நினைத்தவாறு காரியம் முடியாவென்பது போந்தது. (கக)

நீலகேசி கூற்று

சஅ௨. இட்ட நீபல வுரைத்தனை யிவற்றுளோன் ஞொழிய
நட்ட மாயினு நன்மையை நின்வயிற் றருவோய்
குட்ட மேமுழு மெய்யினு மெழுந்தவன் குடுமி
தொட்டி யானெனி னுந்தூய ஞெவது மாமோ.

(இ - ள்.) இட்ட நீ - அன்புடையோய் நீ; பல்வுரைத்தனை - தம்முள் முரணுடைய பல முடிவுகளைக் கூறினுய்; இவற்றுள் ஒன்று ஒழிய - இவற்றுள் ஒன்று நிற்க ஏனைய; நட்டமாயினும் - பொருந்தா தொழிந்தனவாயினும்; நின் வயின் தருவோய் - நீ நின்னையே எடுத்துக் காட்டி அவை பொருந்துவனவே என்று அறிவிக்கின்றனை; நின் ஏதுவும் எடுத்துக் காட்டும் எதுபோலும் எனின்; முழு மெய்யினும் குட்டம் எழுந்தவன் - தனது உடம்பு முழுதும் தொழுநோய் தோன்றப்பட்டானெருவன்; குடுமி தொட்டு யான் எனினும்-என்னுடம்பில் நோயில்லை; என்னுடம்பாகையால் என் குடுமி மயிர் போல என்று தன்குடுமி மயிரைத் தொட்டுக் காட்டி நான் என்று கூறினும்; தூயஞெ - அவன் நோயற்றவன் ஆவனே?; அது ஆமோ-அஃது பொருந்துமோ ஏதுவும் எடுத்துக் காட்டும் அவன் கூற்றுப் போல்வனவே காண் என்றாள்; என்க.

(வி - ம்.) புத்தன் ஐங்கந்த மேற்கோள் வாய்மையாயின் ஒழிந்த மேற்கொள்களும் வாய்மையேயாம் அவையும் என்றுற் சொல்லப் பட்டனவாகையால்; ஐங்கந்த மேற்கோள் வாய்மையானவாறு போல என்று கருத்தளவை காட்ட, அது கேட்ட நீலகேசி சொல்லுவாள்: முழுதும் முரணுய ஐந்து மேற்கோள் சொல்லிய வழி ஒன்று வாய்மையாக ஒழிந்தன பொய்ம்மையேயாம். அங்ஙனமாகவும், இந்தக் கருத்தளவையால் அவற்றையும் வாய்மை யாக்க லுற்றனையாகில், தொழுநோயாளன் ஒருவன் என்னுடம்பு நோயற்றது என்னுடம் பாகையால், என் குடுமி மயிர் போல என்று கருத்தளவை கூறின்; இதுவும் பொருத்தமாய் அவன் தொழுநோயிலனுகல் வேண்டும். அவன் அங்ஙனமாகானுயின் நின் மேற்கோள்களும் பொருந்துவனவாகா என்றவாறு. இது புத்தன் யான் கூறிய ஐங்கந்த மேற்கோள் வாய்மை யாயின் ஏனையவும் வாய்மையே என்றதனை மறுத்தவாறு. (௨0)

## புத்தன் தன் தத்துவங்களை விரித்துரைத்தல்

௪௩௩. நல்ல வேயென நாட்டிய கந்தமிவ் வைந்து
மில்ல வேயெனத் தெருட்டுவ னெடுத்துரை யெனத்தான்
சொல்ல வேதுவ ராடைகண் மூடிய சேடன்
மெல்ல வேயிவை கேளென விரித்தவ னுரைக்கும்.

(இதுமுதலாக, கக செய்யுள்கள் புத்தன் கூற்றுய் ஒருதொடர்.)

**(இ - ள்.)** *நல்லவே என நாட்டிய இ கந்தம் ஐந்தும்- பின்னரும் புத்தனை நோக்கி ஐய! நின்னால் நல்ல தத்துவங்கள் என்று கூறி நிறுத்தப்பட்ட இந்தக் கந்தங்கள் ஐந்துமே; இல்லவே என-அறிவுக்குப் பொருத்தமில்லாதனவே என்று; தெருட்டுவன் - யான நினக்கு அறிவிப்பேன் காண்; எடுத்துஉரை - அவற்றை நீ இப்பொழுது எடுத்துக் கூறுவாயாக!; எனத் தான் சொல்ல-என்று நீலகேசி கூற; துவர் ஆடைகள் மூடிய சேடன்- அது கேட்ட துவராடைகளாலே உடம்பு முழுதும் மூடிக் கொண்டுள்ள அந்தப் புத்தன்; இவை கேள் என நன்று இவற்றைக் கேட்பாயாக! என்று கூறி; மெல்லவே விரித்தவன் உரைக்கும் - விரையாது தன் தத்துவங்களை விரித்துக் கூறுவன்; என்க.*

*(வி - ம்.) நீலகேசி நின்றத்துவங்களை நீ இப்பொழுது எனக்குக் கூறுதி! யான் அவற்றின் பொருந்தாமையை உனக்குக் கூறி விளக்குவேன் என, அது கேட்ட புத்தன் அவற்றை விரித்துரைக்கத் தொடங்கினான் என்றவாறு.*

*இல்ல-பொருத்தமில்லாவன. தான்-நீலகேசி. சேடன்-ஆசிரியன்; புத்தன்.* (உக)

### வேறு

### ஐங்கந்தங்கள்

௪௩௪. உருவே திரிவே தனையா றுணர்வும்
மருவா தனமாண் குறியத் துணைசெய்
இருவே றவைசெய் கையிரு பதுமாந்
திருவே யிவையெம் பொருடே ரெனவும்.

(இ - ள்.) *திருவே - திருமகளை யொப்பானவளே!; உரு - உருவக்கந்தமும்; திரிவேதனை - மூன்று வகைப்பட்ட நுகர்ச்சிக் கந்தமும்; ஆறு உணர்வும் - ஆறுவகைப்பட்ட அறிவுக் கந்தமும்; மருவாதன- தம்முட் பொருந்தாதனவாகிய; அத்துணைசெய்- அவ்வளவுடைய; மாண் குறி - மாண்புடைய குறிக்கந்தமும்; இருவேறு இருபதுமா அவை செய்கை- இருகூற்றிருபதுமாகிய தொகுதிகளையுடைய செயற்கந்தமும்; இவை - இவையே; பொருள்*

தேர் எனவும் - எமக்குப் பொருளென்று தெளிவாயாக எனவும் என்க.

(வி - ம்.) உரு-உருவக்கந்தம். திரிவேதனை-மூன்றுவகைப்பட்ட நுகர்ச்சிக்கந்தம். ஆறுணர்வு - ஆறுவகைப்பட்ட அறிவுக்கந்தம். அத்தனை செய் குறி-அவ்வளவினைச் செய்கின்ற குறிக்கந்தம். அவை-தொகுதி. இருவேறு அவை இருபது மாஞ்செய்கை என மாறுக. அஃதாவது, குயலம் அகுயலம் என்னும் இரு கூற்று இருபது ஆகின்ற செயற்கந்தம் என்க.

உருவக்கந்தமும் நுகர்ச்சிக்கந்தமும் அறிவுக்கந்தமும் குறிக்கந்தமும் செயற்கந்தமும் ஆகிய இவையே எமக்குப் பொருளென்று சொன்னனென்றவாறு. இவற்றை, வீரலே ரூபஸ்கந்தம் விஞ்ஞானஸ்கந்தம் ஞானஸ்கந்தம் சம்ஸ்காரஸ்கந்தம் என்றும் ஓதுப. இவற்றை,

"உருவு நுகர்ச்சி குறிப்பே பாவனை
உள்ள அறிவிவை ஐங்கந்த மாவன"

எனவரும் மணிமேகலையானும் (௩௦-௧௮௬-௧௯௦) உணர்க. (௨௨)

உருவக்கந்தம்

௪௯௫. முறைசெப் பியவைந் தினுண்முன் னையுரு
வரையிற் பலவட் டகமுள் ளுறுத்த
விறைபட் டனவெட் டெனவொட் டினகே
ணறையிற் பொலிகோ தைநறுந் நுதலே.

(இ - ள்.) நறையில் பொலி கோதை நறு நுதலே கேள்; தேனொடு பொலிகின்ற மலர் மாலை யணிந்த நறிய நுதலினையுடையோய் இன்னுங் கேள்!; முறை செப்பிய ஐந்தினுள் முன்னை உரு - ஈண்டு முறைப படுத்தோதிய ஐந்துகந்தங்களுள் வைத்து முற்படக் கூறிய உருவக்கந்தத்தின்கண்; வரையில் அட்டகம் உள்ளுறுத்த பல இறை பட்டன - வரையறையில்லாதனவாகிய அட்டகம் உட்படப் பற்பல தங்குதலுடையனவாம்; எட்டென ஒட்டின-அவற்றை யெல்லாம் எட்டுவகையிலடக்கப்பட்டன காண் என்றான்; என்க.

உள்ளுறுத்த பலவாவன - பெண்டன்மை ஆண்டன்மை முதலாயின வென்க. அட்டகம் மேற்கூறுகின்றனர். (௨௩)

இதுவுமது

௪௯௬. நிலநீ ரெரிகாற் றேருரு விரதந்
நலமா கியநாற் றமொடூ றிவைதா
மிலவே யவையெட் டினும்விட் டதிறஞ்
சொலவா முடன்கேட் டொடுதோற் றமுமாம்.

(இ - ள்.) நிலம் நீர் எரி காற்றோடு-நிலமும் நீரும் தீயும் காற்றும் ஆகிய பூதங்கள் நான்கும் ; உரு இரதம் நலமாகிய நாற்றமொடு ஊறு இவைதாம் - ஒளியும் சுவையும் நன்மையுடைய நாற்றமும் ஊறும் ஆகிய புலன்கள் நான்கும் ஆகிய இவையே அட்டகம் என்பனவாம் ; அவை யெட்டினும் விட்டதிறம் இல - இவ்வெட்டினும் ஒன்றையொன்று விட்டு நீங்குந்தன்மை ஒரு பொழுதும் இல்லை ; உடன் தோற்றமும் உடன் கேட்டொடு ஆம் - அவை ஒக்கப்பிறத்தலும் ஒக்கக்கெடுதலும் உடையவாம்; என்றான் என்க.

(வி - ம்.) முற் கூறப்பட்ட அட்டகம் என்பது-நிலமுதலிய நான்கு பூதமும் உரு முதலிய நான்குபுலன்களும் கூடிய கூட்டமாம். இவ்வெட்டுறுப்பும் ஒரு பொழுதும் விட்டு நீங்கா. அவை ஒக்கத் தோன்றி ஒக்கக் கெடும் என்றவாறு. இனி,

"உருவியா தெனமொழிந்தான் பூதமுபா தானமுந்
திரிவுரைப்பி னிலநீர்தீ வளிபூத முபாதாக்க
டெரிவுரைப்பி னிறநாற்றஞ் சேவுறுடன் வலிநான்கு
முரியவாம் பெண்ணியல்போ டொழிந்தனவு முளவென்றான்"

எனவும்,

"ஒழிவிலவாய்த் தோற்றுங்கள் ளொழிவிலவாய்க் கெடுமெட்டு
மொழிவார்க்கும் பொருளொன்று வுணர்வுடைய.........
குழியிவற்றுண் மிக்கதனுற் கூற்றுடைய மிகைதானு
மழிவின்றி யுணர்வதுமற் றூற்றனூர்த் தியுமாமே"

எனவும் வரும் அவன் ஓத்தாலும் உருவக்கந்த மாமாறறிக. (உகூ)

## இதுவுமது

சஅஎ. வலிதா நிலமை யதுநீர் வெய்துதீக்
கலியே தருகாற் றியக்கம் கருமப்
பொலிவேற் பொறையயர்த் தல்புலர்த் துளர்த்தன்
மலிபூ தங்களுன் கின்மாண் பின்னவையே.

(இ - ள்.) நிலம் வலிது ஆம் நீர் ஐயது - நங்காய்! முன் கூறிய அட்டகத்துள் வைத்து நிலம் வலிதாயிருப்பதாம் ; நீர் ஐதாயிருப்பதாம்; தீ வெய்து - தீ வெய்தாயிருப்பதாம் ; கலியே தரும் காற்று இயக்கம் - ஆரவாரஞ் செய்கின்ற காற்று இயங்குவதாம்; கருமப் பொலிவு - இனி இவற்றின் செயல்களோ ; பொறை அயர்த்தல் புலர்த்து உளர்த்தல் - பொறுத்தலும் அயர்த்தலும் புலர்த்தலும் உளர்த்தலும் ஆம் ; மலி பூதங்கள் நான்இன் மாண் பின்னவை - இனி நிறமுதலிய நான்கும் மிக்க இப்பூதங்களின் மாட்சிமையால் அவை சார்பாக நிற்பனவேயாம் என்றான் என்க.

(வி - ம்) ஐபது-துவட்சியுடையது. கலி - ஒலி. இயங்குவதாம் என்க. பொலிவு - தன்மை. செயல் எனினும் ஆற்றலெனினுமாம். அவை மாண்பினவை என எழுவாய் வருவித்தோதுக.

முன்சொன்ன அட்டகத்துள் நிலம் வலிது; நீர் ஐது; தீவெய்து; காற்றியங்குவது. இவை அவற்றின் தன்மை, அவற்றின் செயல் பொறுத்தல் முதலியன. நிற முதலியன இவற்றின் சார்பாக நிற்பன வாம் என்றவாறு. இவற்றை,

"நிலம்வலிது நீர்துவளும் தீத்தெறூஉங் காற்றுளரும்
புலமாமா றிதுபொருள் வரையறுக்கு மாகாச
நலமாண்ட நாற்பூதஞ் சார்வாக வுபாதாக்கள்
சொலமாண்ட வியற்கைதா னிறமுதலாச் சொலற்பாற்றே"

(உச)

என்பதனானுமறிக.

## நுகர்ச்சிக் கந்தம்

சஅஅ. இனிவே தனையா வனவின் பமோடு
துனிவே தருதுன் பமுமா மிடையுன்
நனிதா நலதீ வினையன் மையினும்
பனிவே யிணைபன் னியதோண் மடவாய்.

(இ - ள்.) பனி வேய் இணை பன்னிய தோள் மடவாய் - குளிர்ந்த பச்சை மூங்கில்களை ஒத்த தோள்களையுடைய மடந்தையே! இனி, வேதனையாவன - இனி நுகர்ச்சிக்கந்த மென்பன ; இன்பமொடு துனிவே தரும் துன்பமும இடையும் ஆம் - இன்ப நுகர்ச்சியும் நோய் தருகின்ற துன்ப நுகர்ச்சியும் சமநிலை நுகர்ச்சியும் என்னும் இம்மூன்றுமாம் ; தாம்-அவை மூன்றும் ; நல தீ அன்மை வினையின் நனி ஆம் - நல்வினை என்னும் குயலத்தாலும் தீ வினை என்னும் அகுயலத்தாலும் இவ்விரண்டின் கலப்பாலும் மிகவும் உண்டாவனவாம் என்க.

(வி - ம்.) நுகர்ச்சிக்கந்தம், இன்பநுகர்ச்சியும் துன்பநுகர்ச்சியும் இவ்விரண்டும் விரவிய சம நுகர்ச்சியும் என மூவகைப்படும்; இவை குயலம் அகுயலம் இவ்விரண்டின் கலப்பும் ஆகிய வினைகளினால் உண்டாவனவாம் என்றான் என்றவாறு.

குயலம்-நல்வினை; அகுயலம்-தீவினை. அன்மை என்றது இரண்டும் விரவிய சமவினையை என்க. (உரு)

## அறிவுக்கந்தமும் குறிக்கந்தமும்

சஅகு. அறிவா வனதா மினியா வெனினும்
பொறியோ டுமனம் மிவைபுல் லினவேற்
குறிதா மிவையா றினுங்கூ றுவதென்
னெறியா மிவைநீ லநிகர்த் தகணாய்.

(இ - ள்.) நீலம் நிகர்த்த கண்ணாய் - நீலமலர்போன்ற கண்களையுடைய காரிகையே கேள்!; இனி அறிவு ஆவன - இனி அறிவுக் கந்தம் ஆறென்று சொல்லப்படுவன; யா எனின் - யாவை? என்று வினவுவாயாயின; ஐம்பொறியோடு மனம் இவை புல்லின - மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் பொறிகளைந்தையும் மனத்தையும் பற்றிப் பிறக்கும் ஆறுவகை அறிவுகளுமாம்; குறிதாம் இவையாறினும் கூறுவது - இனி, குறிக்கந்தங்களும் இவை ஆறுனும் ஆறென்று கூறுதல்; என் நெறி இவை ஆம் - என் பொருணெறி இசையாம்; என்று கூறினன் என்க.

(வி - ம்.) அறிவுக் கந்தம் பொறிகளைந்தையும் மனத்தையும் பற்றிப் பிறக்கும் அறுவகையறிவுகளாம். இனிக், குறிக்கந்தமும் அவ்வறுவகையறிவு பற்றிப் பிறத்தலால் ஆறுவகைப்படும் என்றவாறு. ஏல்: அசை. (௨௯)

## மூவகை வினை

௪௩௦. குயலா குயலம் மெனக்கூ றும்வினைப்
பயனாற் பலபா கெனப்பட் டவைதா
மயலா மனமே வசிகா யத்தினு
மயலா ரிவைதா மினியா ரறிவார்.

(இ - ள்.) குயலாகுயலம் எனக் கூறும் வினை - இனி, குயலமும் அகுயலமும் என்று கூறப்படும் வினைகள்; பயனால் பல பாகு எனப்பட்டு - அவற்றின் பயனால் வேறுபடுத்துங்கால் பல வேறு வகைப்படும்; அவைதாம் - அவ்விருவினைகளும், மயல் ஆம் மனம் வசி காயத்தின் ஆம் - மயக்கமுடைய மனத்தாலாவனவும் மொழியால் ஆவனவும் உடம்பாலாவனவும் என மூவகையினடங்கும்; இனி இவைதாம் - இனி இவ் வியல்புகளை எல்லாம்; அயலார் யார் அறிவார் - என் மதத்தினரன்றிப் பிறசமயத்துள்ளார் யாவரே அறிகுவர் என்றான் என்க.

(வி - ம்.) குயலம் அகுயலம் என்னும் நல்வினை தீவினைகள் அவற்றின் பயனால் நோக்குங்கால் சாலப் பலவாமாயினும் அவை மனத்தாற் றோன்றுவன, மொழியாற் றோன்றுவன; உடம்பாற் றோன்றுவன என மூன்று வகையுளடங்கும். இவற்றை எம்மனோர் அறிவதல்லது பிறர் அறியார் என்றான் என்றவாறு.

மயலார் யார் அறிவார் எனக் கண்ணழித்து இவற்றை மயக்கறிவுடையார் யாரும் அறிகிலர் என்றுரைப்பினுமாம்.

இனி, இவற்றை,

"தீவினை யென்ப தியாதென வினவின்
ஆய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீவிழை

வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்,
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவர்
இத்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
நல்வினை யென்ப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரும் மக்களும் பிரமரு மாகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பயன் உண்குவர்"

எனவரும் மணிமேகலையானும் (௩௦ : ௬௪ - ௮௧) உணர்க. (௨௭)

## கந்தங்களின் தோற்றக்கேடுகள்

௪௯௧. கடனா கியகந் தமிவைந் துகளும்
உடனே யவைதோன் றியொரு கணத்துட்
கெடுமே யவைகேட் டினும்வாட் கணல்லாய்
சுடர்மே யசுடர்ந் நுதிபோன் மெனவும்.

(இ - ள்.) வாள்கண் நல்லாய் - வாள்போலும் கண்ணை யுடைய நங்காய் !; கடன் ஆகிய இ கந்தம் ஐந்துகளும் - யாவரா னும் அறிதற் கடப்பாடுடையனவாகிய இந்தக் கந்தம் ஐந்தும் ; ஒரு கணத்துள் உடனே தோன்றி அவை உடனே கெடும் - தோன்றுங் காலத்தே ஒரே கணத்துள் ஒருசோத் தோன்றி அவை அக்கணத்துள்ளேயே ஒரு சேரக் கெடுவனவாம் ; அவை கேட்டி னும் - அவை கெடுமிடத்தும் ; சுடர்மேய சுடர்ந் நுதிபோன்ம் - ஒளி பொருந்திய விளக்கினது நுனிபோலக் கெடும் ; தோன்றுங் காலத்தும் - அச்சுடர் போலவே தோன்றுங்காண் ! என்றான் என்க.

(வி - ம்.) கடன் - அறிதற் கடமை. உடனே கெடும் எனவும் கூட்டுக. கேட்டினும் என்ற வும்மையால் தோற்றத்தினும் அது போலும் என்பது பெற்றும்.

இந்தக் கந்தமைந்தும் உடனே தோன்றி உடனே கெடும். கெடு மிடத்து அட்டகபிண்டமாகிய விளக்குப் போலக் கெடும், தோன்று மிடத்துமதுவே போலும் என்றவாறு. (௨௮)

உயிர்

௪௬௨. கவையொப் பனகை விரலைந்து களும்
இவையிப் படிக்கைப் பிடியென் றதுபோ
லவையப் படிக்கந் தங்களைந் துகளும்
நவையைப் படுநல் லுயிரா மெனவும்.

(இ - ள்.) கவை ஒப்பன கைவிரல் ஐந்துகளும் - முன் கையிற் கவைத்து தம்முட் சேரப் பிடித்த கைவிரல்களைந்தனையும்; இவை யிப்படி கைப்பிடி என்றதுபோல் - இவை இப்படியாய பொழுது கைப்பிடி என்றொரு பெயரிட்டு வழங்கினாற் போல; கந்தங்கள் ஐந்துகளும் அவையப்படி - ஐந்து கந்தங்களும் ஆகிய அவை தம்முள் ஒத்தவழி அங்ஙனமே; நவையைப்படு நல் உயிராம் எனவும் - துன்ப முதலியவற்றை நுகரும் உயிர் என்று ஒரு பெயரிட்டு வழங்கப்படுவதாம் என்றும் கூறினான் என்றவாறு.

(வி - ம்.) கவை - கிளை. இப்படியாய பொழுது என்றும் அப்படியாய பொழுது என்றும் வருவித்தோதுக.

நவை - துன்பம். பிறந்தோருறுவது பெருகிய துன்பம் என்பது பற்றி நவைமட்டுமே கூறப்பட்டது.

ஐந்து விரல்களையும் கூட்டிப் பிடித்தவழி, கைப்பிடி என்றொரு வழக்குண்டானாற்போல ஐங்கந்தமும் கூடிய கூட்டத்திற்கே உயிர் என்று பெயர் கூறப்படுகின்றது என்றவாறு. எனவே, உயிர் என்பது வாய்மைவகையான் இல்பொருளாம் வழக்குவகையால் உள்பொருளாம் என்றவாறாயிற்று. (௨௧)

வீடுபேறு

௪௬௩. அவைதா நிலையா துயரா மசுவம்
நவையா ருயிர்நாட் டிலங்காட் டமிலை
யிவைநான் மையென்வாய் மையிவ்வா றுணர்வா
ரெவையே செய்துமெய் துபவீ டுமென்றான்.

(இ - ள்.) அவைதாம் - அந்த ஐந்து கந்தங்களும்; நிலையா துயராம் அசுவம் - நிலையில்லாதன எனவும் துன்பந் தருவன எனவும் அருவருப்புடையன எனவும்; நவை ஆர் உயிர் நாட்டில் அங்கு ஆட்டம் இலை - துன்பத்தழுந்தும் உயிரைக் கூறின் அங்குச் சொல்லாட்டம் இல்லை எனவும்; இவை நான்மை என் வாய்மை - கூறப்படும் இந்நான்கும் என் மெய்க்காட்சியாம்; இவ்வாறு உணர்வார் - இவற்றை இவ்வாறுணர்பவர்கள்; எவையே செய்தும் - எச் செயல்களைச் செய்தாலும் இவற்றின்பாற் பற்றறுத்து; வீடு எய்துப என்றான் - வீடுபெறுவர் என்றும் கூறினான் என்க

(வி - ம்.) அவை-அவ்வைந்து கந்தங்களும். அசுவம்-அருவருப்பு. உயிரை எடுத்துக் கூறின் அங்குச் சொல்லாட்டமில்லை என்க. எனவே, ஐங்கந்தங்களும் உயிரில்லன என்றாராயிற்று.

மேற் கூறப்பட்ட ஐங்கந்த பிண்டம் அநித்தியமும் துன்பமும் அருவருப்பும் உயிரின்மையுமுடையனவாம். இவற்றை இவ்வாறுணர்வோர் எத்தொழில் செய்தாராயினும் இவற்றின்பாற் பற்றறுத்து வீடுபெறுவர் என்றான் என்றவாறு.

இனி,

"அநித்தம் துக்கம் மநான்மா அசுசி யெனத்
தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதல்"

எனவரும் மணிமேகலையும் (௩0 : உ௫௪ - ௫.) நோக்குக. (௩0)

## வேறு

### நீலகேசி புத்தன் மெய்க்காட்சிகளை மறுத்தல்

சசுச. பல்லியல் பாகிப் பரந்தவைங் கந்தமுங் கந்தங்கடாம்
புல்லிய வொற்றுமை யிற்குறி யாகிய போய்யுயிருஞ்
சொல்லிய கேட்டவள் வேட்டக் குரம்பை சுடுபவர்போ
லல்லியங் கோதைநின் காட்சி யழித்திடு வேனெனத்தான்.

(இ - ள்.) பல் இயல்பு ஆகிப் பரந்த ஐங்கந்தமும் - பல்வேறு தன்மையுடையவாய் விரிந்த ஐந்து கந்தங்களையும்; கந்தங்கள் தாம் - அவ்வைங் கந்தமும்; புல்லிய ஒற்றுமையில் குறியாகிய பொய் உயிரும் - தம்முட் பொருந்திய கூட்டத்தின்கட் பெயராகிய பொய்யாய உயிரும் இத்தகையன என்று; சொல்லிய - புத்தன் சொல்லியவற்றை; கேட்டவள் அல்லி அம் கோதை - கேட்டவளாகிய அகவிதழ்களாற் புனையப்பட்ட அழகிய மலர்மாலையணிந்த நீலகேசி; வேட்டக் குரம்பை சுடுபவர் போல் - புத்தனே! வேட்டுவக் குறிச்சியைத் தீயிட்டழிப்பவர் போலே; நின் காட்சி அழித்திடுவேன் என - நின் மருட்காட்சியை யான் அழித்திடுவேன் காண்! என்று கூறி என்க.

(வி - ம்.) குறி - பெயர். பொய்யுயிர்-இல்பொருளாகிய உயிர். குரம்பை - குடில். ஈண்டு அவர் குறிச்சிக்கு ஆகுபெயர்.

இவ்வாறு புத்தன் கந்தமும் அவற்றின் கூட்டத்தினால் பெயரளவாகிய உயிரும் பிறவும் சொல்லக் கேட்ட நீலகேசி, நின் மருட்காட்சியை யான் குறிச்சி சுடுவார் போல அழிப்பேன் என்று கூறி என்றவாறு.

வேட்டுவக் குறிச்சி சுடுவார் உள்புக்குச் சுடுமாறுபோல நின்மதத்தையும் உள்புக்கு அழிப்பேன் என்றாள் என்பது கருத்து. (௩௧)

சகூரு. பிண்டம் பிரிவில வேயெனச்
சொல்லுத லாலவற்றுக்
குண்டங் கொருகுணி யாங்கவை
தாங்குண மாகுமன்றேல்
விண்டங் கவையவை வேறுள
தாதலும் வேண்டுமன்றே
பண்டங்கு நீசொன்ன முட்டியிற்
பஞ்சாங் குலிகளும்போல்.

(இ - ள்.) பிண்டம் பிரிவு இல எனச் சொல்லுதலால் - பேராசிரியனே! நீ கூறும் ஐங்கந்த பிண்டம் தனித்தனி பிரித்துப பெறப்படுவனவல்ல என்று கூறுதலாலே; அவற்றுக்கு ஒரு குணி உண்டு - அவை பிரியாமல் நிற்றற்குக் காரணமான ஒரு குணிப்பொருள் உண்டு என்பது பெறப்படும்; ஆங்கு அவைதாம குணம் ஆகும் - அங்ஙனம் பெற்ற குணிப்பொருளுக்கு நீ கூறிய பிண்டங்கள் குணமாதல் வேண்டும. அன்றேல - அங்ஙனமன் றென்பாயாயின்; அவை அவை விண்டு வேறு வேறு உளது ஆதலும் வேண்டும் அன்றோ? - அவ்வக் கந்தமும் பிரிந்து வேறு வேறாக இருத்தலும் வேண்டும் அன்றோ?; பண்டு அங்கு நீ சொன்ன முட்டியில் பஞ்ச அங்குலிகளும் போல் - முன்பு அங்கே நீ கூறிய கைப்பிடியின்கண் அமைந்த ஐந்து விரல்களும் நிமிர்ந்து பிரிந்து தனித்தனியே காணப்படுதல் போல் என்றாள் என்க.

(வி - ம்.) ஐங்கந்த பிண்டம் தனித்தனி பிரிந்து காணப்படாவாய் ஒக்கத் தோன்றி ஒக்கக் கெடுமென்று சொல்லுதலால், அவை பிரியாமற் கொண்டு அவற்றிற்கு இடமாய்த் தலைவனுமாய் நிற்பதொரு குணிப் பொருளாகிய உயிர்ப் பொருளும் உளதாதல் வேண்டும். இல்லை யெனின், கைப்பிடியிலுள்ள விரல்கள் பிரிந்து வேறு பெறப்பட்டவாறு போலவும் இல்லின்கண் கழி கம்பு கற்றை வேறு பெறப்பட்டவாறு போலவும் ஐங்கந்தங்களும் தனித்தனி, வேறு வேறு பெறவேண்டும். அங்ஙனம் பெறேமெனின் அவை ஒரு பொருளின் குணங்களாதல் வேண்டும் என்றாள் எனறவாறு.

குணி - குணத்தையுடையது. பஞ்சாங்குலிகள் - ஐந்துவிரல்கள். (கூஉ)

இதுவுமது

சகூசு. பூதங்க ளைன்கும் புகுந்தே தெருட்டலுற் றுயவற்றுக்
கேதமி றன்மை கரும மிரண்டா வியைந்தவைதாம்
பேதமு மாமென்ற பேற்றியி னுற்பொரு ளிற்றென்றலாற்
சாதமு மாமுயிர் தன்மையிற் றேற்றத் தவறேவனே.

(இ - ள்.) பூதங்கள் நான்கும் தெருட்டல் உற்றாய் - ஐய! நீ நிலமுதலிய பூதங்கள் நான்கினியல்பும் உணர்த்தியவழி ; அவற்றுக்கு ஏதம் இல் தன்மை கருமம் இரண்டாய் இயைந்தவை தாம்- அப் பூதங்களுக்குக் குற்றமற்ற வன்மை முதலிய பண்பும் பொறுத்தல் முதலிய செயல்களுமாக நிலம் முதலியன இரண்டாகப் பொருந்தியவை; பேதமாம் என்ற பெற்றியினால் - தம்முட் பண்பும் செயலுமாகிய வேற்றுமையுடையன என்று கூறிய தனாலே ; பொருள் இற்று என்றலால் - அப்பேதத்தையுடைய பொருள் நில முதலிய இவை என்பது பெறப்படுதலாலே ; சாதமாம் உயிர் தன்மையில் தேற்றத் தவறு எவனோ - அவ்வாறே எஞ்சிய நுகர்ச்சி அறிவு குறி செயல் முதலிய கந்தங்களுக்கும் நிலைக்களனாகும் உயிர்ப்பொருளையும் இப்பண்பு செயல்களாலே உண்டென்று உணர்த்துவதில் குற்றம் யாதோ? கூறுதி என்றாள் என்க.

(வி - ம்.) ஐய நீ பூதவியல்பு கூறுங்கால் வன்மையும் பொறுத்தலு முதலாகிய தன்மை செயல்களாலுரைத்தாயன்றே? அவ்வழிக் காணப் பட்ட வற்கெனவும் பொறுத்தலுமின்றி அவற்றுக்கு நிலைக்களனாகிய நிலமென்பதும் ஒருபொருள் உண்டாகலினன்றே நிலம் வலிது என்பன முதலாக வேற்றுமை தோன்றச் சொல்லுவாயாயினை ; அவ்வாறே நுகர்ச்சி அறிவு குறி செயல் முதலியவற்றிற்கும் நிலைக்களனாகப் பெறப்படுவதோர் உயிர்ப்பொருளும் உண்டென்று சொல்லின் உனக்கு வரும் குற்றம் என்னையோ? என்றாள் என்றவாறு.

தெருட்டல்-உணர்த்துதல். ஏதம்-குற்றம். சாதம் - நிலைக்களம்.
(௩௩)

இதுவுமது

௪௬௭. நின்சொல்லப் பட்ட வலிப்புந் தரிப்பு நிலத்தினவே
லென்சொல்லப் பட்ட வுணர்வோடு காட்சி யுயிரனவா
முன்சொல்லப் பட்ட நிலந்தா முடியின் முடிவுளதாம்
பின்சொல்லப் பட்ட வுயிரும் பெரிய பிரச்சையினாய்.

(இ - ள்.) பெரிய பிரச்சையினும்-மிகப் பெரிய போர்வையினை உடைய ஆசிரியனே!; நின் சொல்லப்பட்ட வலிப்பும் தரிப்பும் நிலத்தினவேல் - நின்னாற் கூறப்பட்ட வன்மையும் பொறையும் நிலத்தினுடையனவாயின் ; என் சொல்லப்பட்ட உணர்வொடு காட்சி - என்னாற் கூறப்பட்ட அறிவும் காட்சியும் ; உயிரன ஆம் - உயிரினுடையனவாகும்; முன் சொலலப்பட்ட நிலந்தாம் முடியின்- நின்னால் முன் கூறப்பட்ட நிலத்தின் உண்மை பெறப்படின்; பின் சொல்லப்பட்ட உயிரும் முடிவு உளது ஆம் - பின்னர் என்னாற் கூறப்பட்ட உயிர்ப் பொருளுண்மையும் பெறப்படுதல் தேற்றமாம் என்றாள் ; என்க.

(வி - ம்.) இது நிலத்துடனும் நிலத்தின் குணங்களுடனும் உயிரையும் அறிவு முதலியவற்றையும் ஒப்பித்து உயிருண்மை காட்டிய படியாம்.

நீ உடலைப் போர்த்துள்ளனை!, அறியாமை நின்னறிவை மறைத்துளது என்று குறிப்பானிகழ்வாள் பெரிய பிரச்சையினுய் என்ருள். பிரச்சை - போர்வை. (கூஅ)

இதுவுமது

சகூஅ. வற்பமல் லானில மில்லெனச் சொல்லுவ ஞங்கதுபோற்
பொற்ப மிலாவுயிர் தானுமில் புத்திய லாலெனலும்
வற்பமலா நிலமன்னுந் தரிக்குமென் பாயல்லையோ
கற்பமெல் லாம்பிறர்க் கேநின் றுழந்த கருணையினுய்.

(இ - ள்.) வற்பம் அல்லால் நிலம் இல் எனச் சொல்லுவன் - அதுகேட்ட புத்தன் நங்காய்! யான் வன்மையல்லது அதனின் வேருக நிலம் என்ருெரு பொருள் இல்லை என்று கூறுவேன்; அதுபோல் - அவ்வாறே; புத்தி அலால் - உணர்வையன்றி; பொற்பம் இலா உயிர்தானும் இல் எனலும்; பொலிந்து தோன்றுதல் இல்லாத உயிர் என்னும் வழக்குப் பொருளும் இல் பொருளேயாம் என்று கூற அது கேட்ட நீலகேசி; கற்பம் எல்லாம் பிறர்க்கே நின்று உழந்தகருணையினுய்-ஊழிதோறும் பிறர் நலங் கருதியே துன்பமுற்ற அருளுடையோனே!; வற்பம் அலால் நிலம் தரிக்கும் என்பாய் அல்லையோ - அங்ஙனங் கூறின் நிலம் வலிதென்ருெழியாது நிலம் பொறுத்தலுஞ் செய்யும் என்று ஒன்று கூறுகின்ருயன்ருே? கூறவே நிலமில்லை எனின் வன்மையே பொறுத்தலும் செய்யுமென்ருகாதோ? என்ருள் என்க.

(வி - ம்.) வற்பமல்லது நிலமென்பதொரு பொருளில்லை; அது போல அறிவல்லது உயிர் இல்லை என்பாயாயின், பொறுத்தலென்பதும் ஒன்று சொல்லுகின்ருயன்றே; நிலமில்லையாயின் பொறுத்தலும் நிலத்தினுடையதன்றி வற்பத்தினுடையதாகல் வேண்டுமன்றே?; ஆக வற்பம் பொருளும் பொறுத்தல் குணமுமாகி முன்பு போலக் குண குணியாம். வற்பமுமில்லை என்பாயாயின், நிலம், வலிது, நீர் துவளும், தீத்தெறும், காற்றுளரும் என்று நீ அட்டக பிண்டம் சொல்லும்வழிச் சொல்லியது பித்தன் பிதற்றுரையாகும். நில முதலாயினவற்றை யில்லையென்பதும் உலக மலைவாமன்றே? ஆதலால் வற்கெனவு முதலாயினவற்றிற் றீர்ந்து நில முதலாயின பெறப்படா வாயினும், வற்கெனவு முதலாயின நிலைக்களனின்றிப் பெறப் படாமையின் நிலமுதலாயின வுண்டென்று கொண்டவாறுபோல, அறிவு முதலாயினவற்றின் வேருக உயிர் பெறப்படாதாயினும் அறிவு முதலியனவும் நிலைக்களனின்றி நிகழாமையின் உயிர்ப்பொருள் உண்டென்று கொள்வாயாக!; கற்பகாலமெல்லாம் அந்த உயிர் களுக்காக அருளுடையவனுகி அல்லலுழந்த பேதையே என்றவாறு.

உயிரில்லையாயின் நீ பிறர்க்குமுந்தவாறென்னை? அறிவுத் தன்மை கணப்பொழுதிற் கெடுமன்றே? அதனைக் கெடாமல் நோக்கலாகுமோ? என்பது கருத்து. (௯௯)

இதுவுமது

௪௯௯. உரிய வலிமையல் லானில மோரல னென்றிருந்தாற்
பெரிய நிலத்தை யறிவிக்கும் பெற்றியில் லாய்பெரிது
மரிய வுயிரை யறிவுறக் காட்டென்றி யெப்பொருளும்
தெரியக் குணமுகத் தாலன்றி யென்றுந் தெருட்டுளதோ.

(இ - ள்.) உரிய வலிமை அல்லால் நிலம் ஓரலன் என்று இருந்தால - ஐய! நிலத்திற்குரிய வலிமையை யன்றி அதனின் வேறாக நிலம் என்றொரு பொருள் உளதாக யான் அறிகின்றிலேன் என்று கூறியிருப்பாயாயின்; பெரிய நிலத்தை அறிவிக்கும் பெற்றி இல்லாய் - நிலம் வலிது என்று நின்னாற் கூறப்பட்ட பெரிய நிலத்தைத்தானும் நீ அறிவிக்கும் வழியுடையை ஆகாய்; பெரிதும் அரிய உயிரை - மிகவும் அறிதற்கரிய உயிர்ப்பொருளை; காட்டு என்றி - அறிவின் வேறாகக் காட்டுக என்கின்றனை; எப்பொருளும்-எந்தப் பொருளையும்; என்றும் - எந்தக் காலத்தினும்; குணமுகத்தால் அன்றி - அப்பொருளினது குணவாயிலாலன்றி; தெரியத் தெருட்டு உளதோ - பிறர் அறியும்படி அறிவித்தல் கூடுமோ? கூடுமாயின் ஒன்று அறிவித்துக் காண்! என்றாள் என்க.

(வி - ம்.) வற்ப முதலாகிய குணங்களாலன்றி நிலத்தை யறிவிக்கலாகுமோ? யாதொரு பொருளும் குணமுகத்தாலன்றி யறிவிக்கலாவது உண்டாயிற்காட்டாயோ? உயிரை அறிவு முதலிய குணத்திற் நீர்த்துக் காட்டுகவென்று சொல்லியது நின் பேதைமையாமன்றோ? என்பதாம்.

இத்துணையாலும், நிலம் வலிது நீர் துவளுமெனக் குணகுணியுருவத்திற் கூறியதே நினைவாக உள்பொருளாகிய உயிருண்மை காட்டி. இனி, உருவக்கந்தத்திற்குக் குற்றங் கூறுவாள்; என்க. (௯௬)

உருவக் கந்தத்திற்குக் குற்றங்கூறல்

௫௦௦. விருத்த நிலைமையும் வேண்டலம் யாமென வேண்டுகின்றீ
ரருத்த மெனக்கொண்ட வட்டகம் யாவையும் விட்டில
திருத்தமி றீவயி னீருறை திட்ட விரோதமன்றே [வாற்
பொருத்தம லாதன வேசொல்லும் புத்தநின் புத்தியிதோ.

(இ - ள்.) புத்த - புத்தனே!; யாம் விருத்த நிலைமையும் வேண்டலம் என வேண்டுகின்றீர் - நீயும் நின் மாணவரும் யாங்கள் அறிவுக்கு முரணாக யாதொன்றுங் கூறேம் என்றன்றே கூறுகின்

நீர்! அங்ஙனமாகவும்; அருத்தம் எனக் கொண்ட அட்டகம் யாவையும் விட்டிலவால்-நீயிர் பொருளாகக் கொண்ட நிலமுதலிய அட்டகபிண்டத்தின்கண் நிலமுதலிய எட்டுறுப்புக்களும் பிரியாதே கூடிநிற்றற்கண், தீயின் நீர் உறை - தீயின்கண் நீர் உறைவது; திருத்தம் இல் திட்டவிரோதம் அன்றோ - திருத்தம் இல்லாத காட்சி முரண் அன்றோ?; பொருத்தம் அலாதனவே சொல்லும் - அறிவுக்குப் பொருந்தாதவற்றையே கூறுகின்ற; நின் புத்தி இதோ - நின் அறிவிருந்தபடி இதுதானோ? என்றுள் என்க.

(வி - ம்.) அறிவுக்குப் பொருந்தக் கூறுவதன்றிப் பொருந்தாமல் யாதுஞ் சொல்லலேமென்றன்றோ நீயும் நின் மாணவரும் சொல்வது; வாயின், நீயிர் அட்டகபிண்டத்தில் நில முதலியன பிரிந்து நில்லாமையின் எட்டுங்கூடியே நிற்குமென்று சொல்லுதற்கண், நீருந் தீயும் ஒரு பொருட்கட் கிடப்பது காண்டல் முரண் அன்றோ? நிலமாகக் காணப்பட்ட பூதத்தில் ஒழிந்த பூதங்கள் மூன்று முளவாயில் நிலத்தின் கண் ணுளதாகிய நீரில் நிலமும் தீயும் காற்றும் உளவாதல் வேண்டும் நிலமாகக் காணப்பட்ட பூதத்ததாகிய நீரிற் சேர்ந்த நில முதலிய வற்றினும் இவ்வாறும். அது சேர்ந்த நீரினுமிவ்வாறும். இவ்வாறு நோக்க முடிவின்மை என்னுங் குற்றமாம். முடிவற்றதுமாய் நிலம் நீரென்று வழங்குதலும் அரிதாகிப், பொருந்தாக் கூற்றும். அன்றியும் நீரிலே தீ நிற்கும் என்று இஃதெவ்வளவையாற் கூறினை? தீயில் நீரும், நீரில் தீயும் நிற்குமாயின் ஒளியில் இருளும், இருளில் ஒளியும் நிற்றலுமா மன்றோ? இப்படியாக, சதாவத்தானமும், உடனிலையும் ஒன்றற் கொன்று தீர்வும் இல்லையாமன்றோ? இப்படிப் பொருந்தாதன நீ சொல்லுதலினன்றே நின்னைப் போல வெல்லாரும் பொருந்தாமை சொல்லுவாரென்னுங் கருத்தினால் எல்லா மொழியும் பொய்ப் பொருளும் அளவையல்லனவும் என்று சொல்லுவாயாயினை; புத்தனே நின்புத்தியிருந்தவாறிதுவோ? என்று சொன்னானென்றவாறு.

இன்னும், நின்புத்தி யிருந்தவாறிதுவோ? என்பதனால், நீ ஒழிந்த பொருள்களை அறிந்தவாறு மிதுவோ? என்று அசதியாடினானு மாயிற்று. (௬௭)

இதுவுமது

௫௦௧. தன்மை கரும மவற்றன வேயென்ற னேனென்னைவே
றின்மை முடியினே னிட்டமுரைப்பினுங் கெட்டதென்னே
மன்னுமந் நான்கு மறுதலை தத்தமு ளாதலினா
லென்னு மியல்பும் பயனு மழிக்குமென் பேனல்லனோ?

(இ - ள்.) வேறு இன்மை முடியின்-நிலமுதலாயின வன்மை முதலாயினவற்றிற்கு வேறாய பொருள் இல்லை என்பது முடிபாயின விடத்து; தன்மை கருமம் அவற்றன என்றல் தான் என்னை - வன்மையும் பொறுத்தலும் முதலாயின பண்புஞ் செயலும் அந்நில முதலியவற்றினுடையன எனறு கூறுதல் என்கொல்?

என் இட்டம் உரைப்பினும் கெட்டது என்னோ- இவ்வாறு நித்த துவங் கூறவறியாயாயின் யான் விரும்பிக் கூறும் எம் தத்துவங் களை ஏற்றுக் கொண்டு கூறினும் அதனுற் குற்றம் என்னே?; மன் னும் அந்நான்கும் தத்தமுள் மறுதலை ஆதலினால் - நின்னால் நிலை காட்டப்பட்ட அப்பூதங்கள் நான்கும் தம்முள் ஒன்றற்கொன்று முரணியபண்புடையன ஆதலாலே ; என்னும் இயல்பும் பயனும் அழிக்கும் என்பேன் அல்லனோ - அவற்றுள் எதுவும் மற்றதன் இயல்பையும் பயனையும் அழித்து முடிவில் பாழாய் முடியும் என் பேன்; அதற்கு என்ன விடை கூறுவாய் என்றாள் என்க.

(வி - ம்.) நில முதலாயினவற்றுக்குத் தன்மையுஞ் செயலுமாகிய விலக்கணங் கூறவேண்டுவது நிலமுதலாயின வேறு பெறினன்றே? நிலத்திற் கிலக்கணமாகக் கூறப்பட்ட வன்மை, அந்நிலத்ின்க ணுண் டாகிய ஒழிந்த பூதங்களுக்கு மொக்குமன்றே? ஆதலின், நிலம் வலி தென்றும் நீர் துவளுமென்றும் இவ்வாறு வேறிலக்கணஞ் சொல்லுவது பிழையாகுமன்றே? நீ தத்துவவியல்பு அறியாயெனின் எனக்கு மாண வனாகி யான் செவியறிவுறுத்தவாறு சொன்னாலுனக்குவருவதென்னோ? இனி, அவை ஒன்றற்கொன்று மாறுபட்ட பண்புடையனவாதலால் ஒன்றையொன்று அழித்துப் பாழாய் முடியும் என்று சொல்லேனோ? சொன்னால் நீ அதற்குக் கூறு மறுமொழி என்னையோ? என்றவாறு.

நெருப்பையும், நெருப்பின் தன்மை செயல்களையும் நீர் கெடுக்கும்; நீரையும் நீரின் தன்மை செயல்களையும் நெருப்புக் கெடுக்கும்; இவ் வாறே ஒழிந்தனவுஞ் சொல்லிக் கொள்க. (கூஅ)

## இதுவுமது

ருoஉ. ஊரிது காடிது தானெனை லென்னை யொருங்குளவே
னீரிது தீயிது தானெனை லாமோ நிகழ்வுடனே
யாரிவை கேட்டறி வாரவை யட்டக மென்னினலாற்
பேரிது வேயெனச் சொல்லுத ருனும் பிழைக்குங்கொலோ.

(இ - ள்.) ஒருங்கு உளவேல் - ஊரும் காடும் ஒருகாலத்து ஓரிடத்தே இருப்பனவாயின் அவ்வழி; இது ஊர் இது காடு எனல் என்னே - இஃது ஊர் இதுகாடு என்று அவற்றிற்கு இலக் கணம் கூறுமாறென்னே?; நிகழ்வுடனே இது நீர் இது தீ தான் எனல் ஆமோ - அங்ஙனமே பூதங்களும் ஒரு காலத்தோரிடத்தே யுளவாயின் அவற்றின நிகழச்சிகளோடே இது நீர் இது தீ என்று தனித்தனி வரைவிலக்கணம் கூறுதல் கூடுமோ?; யார் இது கேட்டு அறிவார் - யாரே இவ்விலக்கணத்தைக் கேட் டறியவல்லுநர்; அட்டகமென்னின் அல்லால் - நீ கூறும் பூதக் கூட்டத்தை அட்டகம் என்று கூறினுற் கூறலாமேயன்றி; இதுவே பேர் எனச் சொல்லுதல தானும் பிழைக்கும் கொல்லோ - இப்பூதத்

திற்கு இதுவே பெயர் என்று கூறுதல் தானும் பிழையாகும் என்பது ஐயமாமோ? என்றாள் என்க.

(வி - ம்.) ஒருங்குளவேல் ஊரிது காடிது தானெனல் என்னை? என்று மூன்றுங் கூட்டுக. கொலோ என்பது ஐயமோ என்றவாறு.

ஊருங்காடும் ஒரு காலத்தோரிடத்தே யுளவாமாறென்னை? உளவாயிலூர் வீடுங்குடியுமாயிருக்கும் காடு தூறும் புதலுமாயிருக்குமென்று அவற்றுக் கிலக்கணஞ் சொல்லுமாறென்னை? அவ்வாறே நீருந் தீயும் ஒரு காலத்தோரிடத்தே உளவாயின் நீர்க்கிலக்கணமிது தீக்கிலக்கணமிது வென்று சொல்லுமாறென்னை? இனி, பூதங்களை அட்டகமென்பதல்லது நில முதலிய பெயர் கொடுத்து வழங்குதலும் பிழையாம் என்பதில் ஐயமில்லை; என்றவாறு.

இதனால் வன்மைத் தன்மையோடுகூட நிலம், ஒழிந்த பூதங்களையொழிய வேறு பெறினன்றே நிலம் வலிதென்று சொல்லலாவதென்பது போந்தது. (௯௬)

இதுவுமது

௩௦௯. தொக்கவை யாயுட னேயவை
நிற்பினு மாங்க வற்றுண்
மிக்கத ணாற்பெயர் சொல்லுவன்
யானென்று வேண்டுதியேற்
புக்கன தாம்பொறி யானின்
புலமன்றிப் பொய்யெனத்தா
னக்கனர் சாக வெனுநீ
யுரைக்கு நயங்க ளென்றாள்.

(இ - ள்.) அவை தொக்கவையாய் உடனே நிற்பினும்-ஐய! நீ அப்பூதங்களும் குணங்களும் தம்முட் சேர்ந்து ஒருங்கே நின்றாலும்; ஆங்கு அவற்றுள் மிக்கதனால் யான் பெயர் சொல்லுவன் என்று வேண்டுதியேல் - அவ்விடத்தே அவற்றுள் மிக்கு நின்ற பூதத்தாலே யான் பெயர் கூறுவேன் என்பாயாயின்; நின் புலமன்றி - அவை நின் கண்ணுக்குப் புலமாதலன்றியும்; பொறியாற் புக்கன தாம் - பிறர் பொறிகளினும் புகுந்து புலமாவனவாம்; நீ உரைக்கும் நயங்கள்-அவ்வாறு பிறர்க்குப் புலப்படாமையினாலே நீ கூறும் பொருணயங்கள், தாம்பொய் என நக்கனர் சாக எனும்-தம்மைக் கேட்டோர் பொய் யென்று சிரித்துச் சாகக்கடவர் என்று கூறும்; என்றாள் என்று கூறினாள் என்க.

(வி - ம்.) நீ உரைக்கும் நயங்கள் (தம்மைக் கேட்டார்) தாம் பொய்யென நக்கனர் சாக எனும் என்றாள் என்றியைத்துக் கொள்க.

நயம் - ஈண்டுப் பௌத்தர் கூறும் நான்குவகை நயங்களுள் வேற்றுமை நயம் என்க.

நால்வகை நயங்களை,

"நான்கு நயமெனத் தோன்றப் படுவன
ஒற்றுமை வேற்றுமை புரிவின்மையியல் பென்க"

எனவரும் மணிமேகலையா னுணர்க.

இனி, இதனாற் போந்த பொருள் வருமாறு:—

பூதங்களும் அவற்றின் குணங்களும் தொக்கு நின்றனவெனினும் "குழிஇயவற்றுள் மிக்கதனாற் கூற்றுடையன்" என்பது என்னோத்தாகலின், நிலமிக ஒழிந்த பூதங்கள் குறைந்து நின்ற வழி நிலமென்றும், நீர் மிக ஒழிந்தன குறைந்து நின்றவழி, நீர் என்றும் இவ்வாறே ஒழிந்தன வற்றிற்கும் பெயரிட்டு வழங்குவனெனின், நிலமிக நீர் குறையின் நீர் நிலத்திற் சுவறிப்பாழாம்; நீர்மிக நிலங்குறையின் நீரிற் கரைந்து பாழாம். இவ்வாறே ஒழிந்தனவும் அறிந்துகொள்க. இவ்வாறாதற் கண் எட்டுங்கூடி ஒருங்கு நிற்றல் பொருந்தாதாம். அன்றியும் நெருப்புக் கட்புலமாவதொன்றன்றோ? ஆதலால், நின்கண்ணுக்குப் புலமாயினவாறே ஒழிந்தார்கண்களுக்கும் புலமாமன்றே; பெரிய வெள்ளத்துளுண்டாகிய தீப்பொறி யாருக்குப் புலப்படுவதாம்? பெருந் தீயுணின்ற நீர்த்துளி யாருக்குப் புலனும்? இந்தப் பெருந்தீயுட் கலந்து நின்ற நீர்த்துளியோடு தொடர்புபட்டதொரு பொருள் காணப் படாமையாலே அது கருதலளவையானும் அறியப்படாததாம். இதற் கென் சொல்லுதி? என்றார்க்கு, நிலத்தின் கூறாகிய விறகின்கண் தீத் தோன்றுதலின் நிலத்தில் தீ காணப்பட்ட தன்றோவெனின் விறகினது அழிவுப் பொழுதின்கண் தீத்தோன்றியதல்லது அப்பொழுதிற்கு முன்பு விறகிற் றீயில்லை. உளதாயின் விறகைப் பற்றித் தீ யெரிய வேண்டாவோ?

அன்றியும் மாயாதேவியதூஉம் சுத்தோதனதூஉம் கூட்டத்தில் நீ தோன்றினை யெனினுங் கூட்டத்திற்கு முன்பு அவருழை நீ யில்லை யாயினவாறுபோல வென்பது.

விறகினழிவுக்கணத்தில் தீப் பிறத்தற்கு விறகிலே ஆற்றலுண் டன்றோ வெனின், நின்னைப் பெறுதற்கு வேண்டிய ஆற்றலுடைய மாயா தேவியுழை நீ முன்பில்லையாயினவாறுபோல விறகில் தீ முன் பில்லை என்று கொள்ளென்பது. "வெயிலொடு காற்றோடீடத்த வாயின வொழித் தியோ" என்பதனால் வெயிலுங் காற்றுங் கூடி நிற்பது கண்டாமன்றே; அவ்வாறே அட்டகபிண்டத்துப் பூதங்கள் கூடி நிற்குமென்று சொன்னை யெனின், கூடிநின்ற வெயிலுங் காற்றும் கூடினவெனினும், வெயிலுட் காற்றில்லை யென்பதூஉம் வெளிப்படையன்றோ? நிலத்தினுள் கிணற்று நீர் முதலாயின காட்டினும், அவை அங்கையில் நின்ற நீர் போல நிலைக்களனும் அதன்கண்ணின்ற பொருளுமாந்தன்மையால் நின்றவன்றோ? ஒன்றினுள் ஒன்று புக்கு நின்றனவோ? இவ்வாறு நீ பொருந்தாமொழி கூறுவது நின்மொழி கேட்டார் சிரித்துச் சாதல் வேண்டிச் சொல்லுகின்றாயோ? என்று சொன்னானென்றவாறு.

நயம்-'நகைக்குக் காரணமாகிய மொழி' என்பது பழையவுரை.(௩௦)

இதுவுமது

ருoச. உருவுடை யட்டக மன்றியு
மைந்தினுட் பட்டவெல்லாம்
மருவோடு கூடியுந் தீண்டியு
மாக்குந் திறமரிதான்
மருவுடை யார்களை மாயங்கள்
சொல்லி மருட்டியுண்ணுந்
திருவுடை யாயவ காயத்துத்
தேரை யடித்தெருட்டாய்.

(இ - ள்.) மருவு உடையார்களை மாயங்கள் சொல்லி மருட்டியுண்ணும் திருவுடையாய் - நின்னை வந்து சேர்வார்க்கெல்லாம் பொய்கள் பற்பல கூறி மயக்கி வயிறு நிறைக்கின்ற செல்வனே!; உருவு உடை அட்டகம் அன்றியும் - உருவக்கந்தமாகிய அட்டகங்கள் அல்லாமலும்; ஐந்தினுள் பட்ட எல்லாம் - அவ்வுருவக்கந்தம் ஐங்கந்தங்களுள அடைந்த ஏனைய வெல்லாமாகிய; அருவொடு கூடியும் தீண்டியும் ஆக்குதல் அரிது ஆல் - அருவமாகிய அறிவுக்கந்த முதலியவற்றோடு பொருந்தியும் தீண்டியும் செயல் செய்தல் கூடாதாம்; அவகாயத்துத் தேரை அடித்தெருட்டாய்-அருவமும் உருவமும் தம்முட் கூடுமென்பாயாயின் அருவமாகிய வானத்தின் கண் தத்திய தவளையின் அடிச்சுவடுகளை எனக்குக் காட்டிக்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) உருவப் பொருளாகிய அட்டகங்கள் தம்முட் கூடுதலருமை சொன்னேன், இனி அந்த உருவக்கந்தந்தானும் அருவமாகிய அறிவுக்கந்த முதலியவற்றோடு கூடுமாறென்னை? நின்னைச் சேர்ந்தார்க்குப் பொய்களைக்கூறி அவரை மயக்கி வயிற்றை நிரப்புகின்ற நீ அருவமும் உருவமும் தம்முட் கலக்குமாயின் வானத்துத் தத்திய தவளையின் அடிகளைக் காட்டல் வேண்டும் என்றவாறு. (சுக)

நுகர்ச்சிக்கந்தமும் குறிக்கந்தமும்

ருoரு. திரிவே தனைகளுந் தீரா
நமக்குள வாதலன்றே
கரிவே தனையவர் காமுறு
காமங் கடிந்ததுதான்
பரிவே பெரிதுடை யீர்முன்
னுரைத்தபல் செய்கைகளின்
விரிவே யவையோரின் வேதனை
வேறில்லை யாம்பிறவே.

(இ - ள்.) திரி வேதனைகளும் நீரா நுமக்கு உளவாதல் அன்றே - பேராசிரியரே! நீயிர் கூறியபடி மூன்றுவகை நுகர்ச்சிகளும் நீராதனவாய் நும்பால் உள்ளன என்பது தேற்றம், அதனால் அன்றோ; கரி வேதனையவர் காமுறு காமம் கடிந்தது - பெட்டைக் கழுதையில்லாமையால் ஆண் கழுதைமார் விரும்பிய காமப் பிணியை நீயிரே பெட்டைக் கழுதையாகித் தீர்த்தது தானும்; பரிவே பெரிதுடையீர் - இதனால் நீயிர் அருளே மிகவும் உடையீர் என்பதும் தேற்றமாம், இவைநிற்க; முன் உரைத்த பல் செய்கைகளின் விரிவே அவை - நீயிர் முன்பு கூறிய செயற்கந்தத்தின காரியமேயாகும் நீயிர்கூறிய நுகர்ச்சிக் கந்தங்களும்; ஓரின்-காரணமும் காரியமுமாய் அவற்றைக் கருதின்; வேதனை வேறு இல்லை ஆம் - நுகர்ச்சிக் கந்தம் என்று நீயிர் கூறியது செயற்கந்தமேயன்றி வேறாக இல்லையாங் கண்டீர்! என்றாள் என்க.

(வி - ம்.) திரி வேதனை - மூன்றுவகை நுகர்ச்சி. மூன்றுவகைத் துன்பமுமாம். கரி-பெட்டைக்கழுதை. வேதனையவர் என்றது ஆண் கழுதையை.

மூன்று வேதனைகளும் நுமக்குண்மையினன்றே பெட்டைக் கழுதையைப் பெறாது வேதனைப்படுகின்ற ஆண் கழுதையோடு பெட்டைக் கழுதையாகிக் கூடுவீராயினீர் என்றவாறு. இது புத்தனுடைய அருளுடைமையை எள்ளி நகைத்தபடியாம். இதனை,

"காமமே கன்றிநின்ற கழுதைகண் டருளினாலே
வாமனார் சென்றுகூடி வருந்தினீ ரென்றவையத்
தீமஞ்சேர் மாலைபோல விழித்திடப் பட்டதன்றே
நாமவேற் றடக்கைவேந்தே நாயிது தெரியினென்றான்"

எனவரும் சிந்தாமணியானும் (௨௧௦) உணர்க.

மூன்று வேதனையாவன: பெண்துயர், ஆண்துயர், அலித்துயர் என்பன. இம்மூன்று துயரும் உமக்குளவாதலன்றி நீயிர் கூறிய வேதனைக் கந்தம் என்பன இல்லையாம் என்பது கருத்து.

இன்ப நுகர்ச்சியும் துன்ப நுகர்ச்சியும் சம நுகர்ச்சியும் என நீயிர் சொன்னவை செயற்கந்தங்களின் காரியமே ஆதலின், மண்ணின் காரியமாகிய குடம் மண்ணின் வேறன்றாயினாற்போல செயற்கந்தத்தில் வேறாக நுகர்ச்சிக் கந்தம் பெறப்படாதாம்; உருவக்கந்தமும் அறிவுக் கந்தமும்போல வேறு வேறு ஆயினன்றே அது வேறொரு கந்தமாவது என்றவாறு. (௬௨)

இதுவுமது

௩௦௬. உணர்ச்சியி னாற்செய்கை யாக்கியச்
செய்கையி னாலுழப்பாம்
உணர்ச்சியி னுங்கோர் பொருட்சுவ
டுள்ளது போல்கின்றதா

ஒணர்ச்சியோ டல்லன வொன்றொன்றில்
நோக்கில வாமெனினு
மிணர்ச்சி யிழந்து பிறபிற
வாகிப் பெறலிலவே.

(இ - ள்.) உணர்ச்சியினால் செய்கை ஆக்கி - அறிவினாலே செயல் நிகழத்தப்பட்டு; அச் செய்கையினால் உழப்பு ஆம் - அந்தச் செய்கையாலே நுகர்ச்சியுண்டாம். ஆதலின் அவற்றிற்கிங்ஙனம் தொடர்புண்டெனிலோ; உணர்ச்சியில் ஆங்கு ஓர் பொருட்சுவடு உள்ளதுபோல்கின்றது - அவ்வுணர்ச்சியின்கண் உணருவதாகிய ஒரு பொருட் குறிப்பு உள்ளதுபோல் தோன்றுகின்றதன்றோ அதுவே உயிராகும்; உணர்ச்சியொடு அல்லன ஒன்று ஒன்றில் நோக்கு இல ஆம் எனினும் - இனி அவ்வுணர்ச்சியின் ஏனைய செயலும் நுகர்ச்சியும் தம்முள் தொடர்புடையன அல்ல வேறு வேறு என்று கொள்ளினும்; இணர்ச்சி இழந்து பிற பிற ஆகிப் பெறல் இல - அவை தம்முட் காரணகாரிய இயைபுகெட்டு வேறு வேறாகிப் பெறப்படாவாம் என்றாள் என்க.

(வி - ம்.) உணர்ச்சியாற் செய்கை ஆகும் செய்கையால் நுகர்ச்சியாகும் ஆதலின் அவற்றுக்குக் காரணகாரியத் தொடர்பு உண்டெனின்; உணர்ந்தும் செய்தும் பயனுகரும் உயிர்ப்பொருள் ஒன்று உளதாதல் வேண்டும். அஃதன்றி உருவக்கந்தம்போல அவை வேறு வேறு பொருள்களே எனின் உணர்ந்து செய்து நுகர என்பது நிகழாமையின் உணராது செய்தலும் செய்யாது நுகர்தலுங் கூடாமையின் அவை மூன்றும் பெறப்படா வென்றவாறு.

உழப்பு-நுகர்ச்சி. சுவடு - குறிப்பு. அல்லன - செயற்கந்தமும் நுகர்ச்சிக்கந்தமும். நோக்கு-தொடர்பு. இணர்ச்சி-இணங்கல். (சஙரு)

அறிவுக்கந்தமும் உயிர்ப் பொருளுண்மையும்

கூசு. ஆறினி னொன்றே நிகழும்
பொழுதினல் லாவுணர்வு
தேறின வாறவற் றுண்மை
யெனக்குத் தெருட்டனலிந்
தாறின வோவில்ல தாழ்ச்சியி
னுவுள தாமெனினீ
கூறிய வாற்ற லுயிருண்மை
கூறலுங் குற்றமென்னே.

(இ - ள்.) ஆறினின் ஒன்றே நிகழும் பொழுதின் - நீ கூறிய அறிவுக்கந்தங்களுள் வைத்து ஓரறிவு நிகழுகின்ற காலத்தே;

அல்லா உணர்வு உண்மை தேறின ஆறு எனக்குத் தெருட்டல்-
ஏனைய அறிவுகள் உளவாய் வைத்து நிகழா தொழிந்தனவோ?
அங்ஙனமாயின் அவற்றுண்மை நீ தெளிந்த வழியை எனக்கும்
கூறித் தெளிவிப்பாயாக!; இல்ல நலிந்து ஆறினவோ-இல்லையாய்
அவை கெட்டு நிகழாதொழிந்தனவோ?; தாழ்ச்சியின் உளவாம்
எனின்-ஆற்றன்மாத்திரையாய் அடங்கியுளவாகும் என்பாயாயின்;
நீ கூறியவாற்றல் உயிர் உண்மை கூறலும் - அங்ஙனம் அவை
அடங்கிக் கிடத்தற்கு நிலைக்களன் வேண்டும் அன்றே அவற்றிற்கு
நிலைக்களமாவது உயிர் என்று அவ்வுயிருண்மை கூறுதலினும்;
குற்றம் என் - குற்றம் யாது? என்றுள் என்க.

(வி - ம்.) ஆறு-ஆறுவகையறிவுக்கந்தங்கள். அறிவுக்கந்தங்கள்
ஆறுவன-மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் அறிவுக் கருவிகள்
ஐந்தனையும், மனத்தையும் பற்றிப் பிறக்கும் ஆறுமாம் என்க.
தெருட்டல் : வியங்கோள். இல்ல - இலவாகி.

ஆறு அறிவுக்கந்தங்களுள்ளும் ஓர் அறிவுத்தொடர்ச்சி நிகழ்கின்ற
காலத்து, ஒழிந்த ஐந்து அறிவுத் தொடர்ச்சிகளும் உளவாய் வைத்து
நிகழாதொழிந்தனவோ ? இல்லையாய்க் கெட்டு நிகழாதொழிந்
தனவோ ? உளவாய் நிகழா தொழிந்தனவெனின், அவற்றுண்மை
யறிந்தவாறு எமக்குச் சொல்லுவாயாக. அவையுளவாயின் தோன்று
மைக்குக் காரணமென்னை ? நிகழ்கின்ற அறிவுத் தொடர்ச்சி
நுகர்ச்சியால் வெளிப்பட்டவாறுபோல அவையும் தோன்றவேண்டு
மன்றே? அன்றியும்'' நாகாரணம் விஷய'' என்பதனால் பொருள் காரணமாக
அறிவு பிறப்பது; பொருளில்லாத வழி அறிவு பிறக்குமாறுண்டோ?
இனி நிகழ்கின்ற தொடர்ச்சியொழித் தொழிந்த ஐந்தறிவும் கெட்டன
வெனின், பின்பு பொருள் பெற்றவழியும் பிறவாதொழிதல் வேண்டும்.
பிறக்கின், தொடர்ப்பாடறக் கெட்ட புத்தனும் பிறக்க வேண்டும்.

இனி, ஆற்றலாந் துணையாய்த் தாழ்ந்துளவெனின் இவை தாழ்ந்து
கிடத்தற்கு ஒரு நிலைக்களன் உளதாகல் வேண்டும்; அறிவில் பொரு
ளாகிய உடம்பின்கண் அறிவு தாழ்ந்துகிடத்தல் கூடாதாம், கூடுமாயின்
அறிவில் பொருளெல்லாவற்றுள்ளும் அறிவுளதாக வேண்டி அறிவுப்
பொருள் அறிவில் பொருள் என்னும் வரையறை வழக்குக்கெடும்.
ஆதலால் உடம்பிற்கு வேறாகி ஐந்து அறிவுகளும் ஆழ்ந்து கிடத்தற்கு
நிலைக்களனாகியதொரு பொருள் உளதாகல் வேண்டும். இவற்றால்
உயிர்ப் பொருள் உளதென்றற்கண் குற்றம் என்னை? என்றவாறு.

இன்னும், ஐந்து அறிவும் ஆழ்ந்து கிடக்கின் அவை பொருள்
பெற்றே யாழ்ந்து கிடக்குமோ ? பொருளின்றியும் ஆழ்ந்து
கிடக்குமோ? பொருள் பெற்றே யாழ்ந்து கிடக்குமெனின், எப்
பொழுதும் ஆழ்ந்தே கிடத்தல் வேண்டும். பொருளின்றி ஆழ்ந்து
கிடக்கின், ''நாகாரணம் விஷய'' என்பதனாற் காரணமாகிய பொருளின்றிக்
காரியமாகிய அறிவு பிறத்தல் கூடாதாம். பொருளின்றியும் அறிவு
ஆழ்ந்து கிடக்கின் அதற்கு நிலைக்களனாகியதோர் உயிர்ப்பொருளும்
ஆழ்ந்துளதாகல் வேண்டும் என்பதாம். (௨௭)

இதுவுமது

ரு0அ. ஓருணர் வுள்ள பொழுதி
  ஞெழிந்த வுணர்வுகடம்
பேரு முணரப் படாமைபெற்
  றுமென்னும் பேச்சுமுண்டா
லீருணர் வில்லை யிருமூன்
  றேருங்குள வென்றுரைக்கு
மோருணர் வேயுடை யீர்சொற்க
  ளொன்றேன் றழிப்பனவே.

(இ - ள்.) ஓர் உணர்வு உள்ள பொழுதின் - யாதானுமோர் அறிவு நிகழ்கின்ற பொழுதில்; ஒழிந்த உணர்வுகள் தம் பேரும் உணரப்படாமை பெற்றும் - எஞ்சிய அறிவுகளினுடைய பெயர் தாமும் அறியப்படாமை பெற்றும்; என்னும் பேச்சும் உண்டால் - என்கின்ற உரையளவையும் உண்டே அஃதறிந்திலீரோ; ஈர் உணர்வு இல்லை - நுமக்குப் பகுத்தறியும் அறிவில்லை; இருமூன்று ஒருங்குள என்று உரைக்கும் ஓர் உணர்வே உடையீர்-ஐந்து அறிவு ஆழ்ந்தும் ஓரறிவு மிதந்தும் இங்ஙனமாக ஆறறிவு ஒருங்கேயுள என்று ஆராயாது கூறுகின்ற ஓர் அறிவுமட்டுமே உடையீர்; சொற்கள் ஒன்று ஒன்று அழிப்பன - நும் சொற்கள் தம்முள் ஒன்றை ஒன்று அழித்துவிடுகின்றன என்றுள் என்க.

(வி-ம்.) ஓரறிவு பொருள் பெற்று நிகழ்கின்ற காலத்துப் பிறிதோரறிவில்லை என்பது பெறப்படும்; பெறப்படவே, ஐந்துணர்வும் ஆழ்ந்து கிடக்க மேலோருணர்வு மிதந்து கிடக்குமென்னும் அறியாமையையுடையீர்! நுஞ்சொற்கள் ஒன்றையொன்று அழிக்கும் என்றவாறு.

ஈர் உணர்வு, வினைத்தொகை. ஈரும் அறிவு - பகுத்தறியும் அறிவென்க. ஈர்தல் - பகுத்தல். (ச[illegible])

இதுவுமது

ரு0கூ. ஒன்றே யுணர்வாய் நிகழற்குக்
  காரண மவ்வுணர்வாய்
நின்றே யறிவான் றனிமையி
  னுலெனத் தேரினிநீ
யன்றே யெனினவை யாறுந்த
  முண்மையின் வேறென்னலாற்
சென்றே புலந்தலைப் பெய்தலறி
  வுடன் சீர்க்குமன்றே.

(இ - ள்.) உணர்வு ஒன்றே ஆய் நிகழ்தற்குக் காரணம் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புலன்களும் ஒருங்கே பெற்றுழியும் அவற்றுள் யாதானுமொன்றைப்பற்றி அறியும் அறிவும் ஒன்றேயாக நிகழ்வதற்குக் காரணம்; அவ் வுணர்வாய் நின்று அறிவான் தனிமையினால் எனத் தேர் - நிகழாநின்ற அவ்வறிவே தானாக நின்று அறிகின்ற உயிரினது சிறப்பியல்பேயாம் எனத் தெளிந்து கொள்ளக் கடவை; நீ அன்றே எனின் - இனி நீ அங்ஙன மன்று என்பாயாயின்; அவை ஆறும் தம் உண்மையின் வேறு என்னலால் - அந்த ஆறு அறிவுகளும் தத்தம் தனித்தன்மையினால் வேறு வேறு ஆம் என்று நீ கூறுதலாலே; சென்று புலந் தலைப் பெய்தல் உடனசேர்க்கும் - ஐம்புலன்களையும் ஒருங்கு பெற்ற வழி அவை சென்று அப்புலன்களை அறிதலும் ஒருங்கே நிகழ்தல் வேண்டும் என்றான் என்க.

(வி - ம்.) தனிமை-சிறப்பியல்பு. அவ்வாறறிவது உயிரின் சிறப்பியல்பு. சுவை முதலிய புலன்கள் பலவும் ஒருங்கே பெற்ற வழியும் எல்லாப் புலன்களும் பற்றி எல்லா அறிவும் ஒரு காலத்தே பிறவாது ஒரு புலன்பற்றி ஓரறிவே பிறப்பது நுகர்ச்சியாற் காண்டும் அது தானும் அந்த ஆறு அறிவுகட்கும் தலைவனாய் ஒளி முதலாயினவற்றிற் பிரித்து மணி காணப்படாதவாறுபோல எல்லையற்ற அறிவுகளிற் பிரித்து வேறு காணப்படாதாகித் தற்காலத்து ஓரறிவு வடிவமுடைத் தாகிய உயிரினது சிறப்பியல்பால் என்றுணர்வாயாக!

தனிமை - தனித்தன்மை; சிறப்பியல்பு. தனிமையைத் தலைமை என்றாற் போலக்கொள்க. அவ்வாறன்றி அறிவுகள் தனித்தனியுள்ளன. எனின், அவை ஆறும் எப்பொழுதும் ஒருங்கே நிகழவேண்டும். அவ்வாறு காணப்படாமையின் கடிப்பேற்றினால் (கோல்புடைத் தலால்) முரசு சார்வாக ஒலி பிறந்தாற்போல, புலன்களின் உறைப் பாலே உடம்பு சார்வாக உணர்வு பிறக்குமென்று நீ சொல்லியது பொருந்ாது. அவன் சொல்லியதாவது: "மற்றுடம்பு சார்வாக வுணர் வெழூஉ மெழுதற்குப் பெற்றிமை பறையடிப்பப் பெறுமொலியே புரையாதே" என்ற தென்க. ஆதலின் இதற்கொரு காரணம் சொல்லவேண்டும் என்பதாம். (௪௮)

## இதுவுமது

௫௧௦. இச்சையில் லாமையி னெல்லா
மொருங்குண ராவெனினு
மிச்சையெல் லாத்திற்கும் வேறே
லொருங்குட னெய்துமன்றி
யிச்சையெல் லாத்திற்கு மொன்றேற்
குணிப்பொரு ளிச்சையென்றாய்
தச்சனஞ் சிச்சா ரகழ்கள்வ
னென்கின்ற தன்மையினாய்.

(இ - ள்.) இச்சை இல்லாமையின் எல்லாம் ஒருங்கு உணரா ஏனினும்-புத்த! இனி நீ விருப்பம உண்டாகாமையால் ஆறறிவும் ஒருசேரப் பிறவாவாயின என்பாயேனும்; இச்சை எல்லாத்திற்கும் வேறேல்-நீ ஈண்டுக் கூறுகின்ற விருப்பம் என்பது ஆறறிவிற்கும் தனித்தனியே உண்டாயின்; ஒருங்குடன் எய்தும்-அவை தத்தமக் குரிய புலன்பெற்ற விடத்து ஒருசேர நிகழ்வனவாகும்; அன்றி இச்சை எல்லாத்திற்கும் ஒன்றேல் - அல்லது விருப்பம் என்பது எல்லாவற்றிற்கும் பொதுவாக ஒன்றேயுளது என்பாயாயின் அவ்வழி; குணிபபொருள் இச்சை என்ருய்-அறிவாகிய குணத்தை யுடைய குணிப் பொருளாகிய உயிரையே விருப்பம் என்ற பெய ராற் கூறினேயாகுவை; அஞ்சிச் சாரகழ் கள்வன் என்கின்ற தச்சன் தன்மையினும் - இவ்வாற்ருல் நீ அரசன் மறவர்க்கஞ்சி யான் சுவர் அகழ்கின்ற கள்வன் என்று கூறிய தச்சனேயே ஒக்கின்றனே என்ருள் என்க.

(வி-ம்.) எல்லாத்திற்கும் எனவரும் இரண்டும் எல்லாவற்றிற்கும் என்பதன் மரூஉ. உயிராகிய குணிப் பொருள் என்க.

புலன்களினெதிரே எல்லா அறிவும் பிறத்தல் வேண்டும்; பிறவா தொழிந்தது விருப்பம் இல்லாமையாலெனின், விருப்பம் ஒவ்வோர் அறிவுக்கும் தனித்தனி உளதாயின் ஒருங்கே நிகழ்தல் வேண்டும். இனி விருப்பம் எல்லாவற்றிற்கும் ஒன்றே; அதன் வழியாகப் பிறத்தலின் ஒரு காலத்தில் ஓரறிவே பிறத்தல் வேண்டிற்று என்பாயாயின் - அவ்வழி அறிவுக்கு நிலைக்களனுகிய உயிரையே ஈண்டு நீ விருப்பம் என்னும் பெயராற் கூறினையாதல் வேண்டும். இங்ஙனம் கூறுதலின் நீ, அரசனுக்கு வஞ்சம் செய்து அச்சத்தால் ஓடிப்போகின்ருன் ஒரு தச்சன் அரசன் மறவர்களைக் கண்டு அஞ்சி ஒரு சுவரடியில் ஒதுங் கினனே அவர் பிடிப்ப, அவனும் நான் தச்சனல்லேன் களவாடுதற்காக இச்சுவரை அகழவந்த ஒரு கள்வன் என்ருன். அவனையே ஒக்கின்றனே என்று அசதியாடினள் என்றவாறு. (சஎ)

இதுவுமது

௩கக. பிறந்து பிறந்துநி னிச்சை
கேடலன்றிப் பின்ஞென்றின்மேற்
சிறந்து சிறந்தாங் குணர்ச்சி
விரியுந் திறமரிதாற்
கறந்த கறந்த கலஞ்சுவைத்
திட்டாற் கறைக்கலங்க
ணிறைந்த நிறைந்தவை பாறயிர்
மோரெனத் தானென்னையோ.

(இ - ள்.) நின் இச்சை பிறந்து பிறந்து கெடல் அன்றி-ஞய நீ ரும் நினது விருப்பம் கணப் பொழுதிலே பிறந்து கெட்டுப்

போதலல்லால்; சிறந்து சிறந்து - மேலும் மேலும் வளர்ந்து; உணர்ச்சி விரியும் திறம் அரிது-மேலும் மேலும் உணர்ச்சியை வளர்த்து விரிவிக்கும ஆற்றல் உடைத்தாகாது, என்னை?; கறந்த கறந்த கலம் சுவைத்திட்டால் - கறக்குந்தோறும் கறக்குந்தோறும் பாலினைக் கறவைக் கலமே குடித்துவிடுமாயின்; கறைக் கலங்கள் நிறைந்து நிறைந்தவை - கறவைக் கலங்களில் அப்பாலின் நீர்கள் நிறைந்து பின்னர் அவை; பால் தயிர் மோர் என்த்தான் என்னையோ - பால் என்றும் தயிர் என்றும் மோர் என்றும் கூறு தற்கு என்னுளதோ? என்றுள் என்க.

(வி - ம்.) கலம் - பால்கறக்கும் மட்கலம். புதிய மட்கலம் பால் முதலியவற்றை உரிஞ்சும் இயல்புடையன ஆதலின் இங்ஙனம் கூறினர்.

விருப்பந்தானும் ஒரு கணத்துள்ளே தோன்றியழியும் என்பது நின் மேற்கோளாதலால் அது பிறந்தபொழுதே கெடுவதல்லது உணர்வைப்பிறப்பிக்கும்ஆற்றலுடையதாகாது. கறக்கின்ற பால்கறக் கக்கறக்கப் பாண்டத்திற் சுவறுமாயின் பால் தயிர் மோர் என்பன உண்டாகுமோ? என்றவாறு. (௪௮)

இதுவுமது

௪௯. எல்லா வுணர்ச்சியு மிச்சை
வழியா லெழுமெனலா
லில்லாம் பிறநுன திச்சையு
மிச்சைமு னின்மையினல்
வல்லா யிதற்குமுண் டாயின்
வரம்பின்மை யாமதனற்
சொல்லா விடுந்திற மென்னே
விரிவிற்குச் சூனியமே.

(இ - ள்.) எல்லா உணர்ச்சியும் இச்சை வழியால் எழும் எனலால் - நீ எல்லா வுணர்ச்சிகளும் விருப்பத்தின் வழியாகவே பிறக்கும் என்று கூறுதலாலே; நுனது இச்சையும் முன் இன்மையினல் - நீ கூறுகின்ற அவ்விருப்பந்தானும் முன் இல்லாமையாலே; இல்லாம் - அதன் வழி உணர்ச்சி பிறப்பதுமில்லையாம்; வல்லாய் - ஆராய்ச்சி வல்லவனே!; இதற்கும் உண்டாயின் - இவ் விருப்பம் பிறத்தற்கும் முனமொரு விருப்பம் உண்டாம் என்பாயாயின்; வரம்பின்மையாம-வரம்பில்லாமை என்னுங்குற்றம் வரும்; அதனல் - அங்ஙனமாதலின்; விரிவிற்குச் சூனியம சொல்லாவிடுந் திறம் என்னே - உணர்ச்சி விரிதற்கிடமின்மையாலே அது பாழ் என்று நீ கூறுமைக்குக் காரணம் யாதோ? என்றுள் என்க.

(வி - ரை.) நுனது - உனது. வல்லாய் என்றது இகழ்ச்சி. நீ உணர்வுகளெல்லாம் விருப்பத்தின் வழியாகப் பிறக்கும் என்று சொல்லுதலால், அவ்விருப்பம் உணர்வுக்கு முன்னே யுளதாகல் வேண்டும். அஃதாயின், அந்த விருப்பம் யாண்டுளதாம். உடம்பின் கண்ணுளது எனின் அறிவில் பொருளாகிய உடம்பில் விருப்பம் உளதாதல் கூடாதாம். கூடின், நில முதலிய பூதங்களினும் விருப்பம் உளதாகல் வேண்டும்.

இனி, விருப்பம் உணர்வின் கண்ணது எனின் விருப்பம் முன்பே யுண்டாயினலலது உணர்வு பிறவாமையின் உணர்வுக்கு விருப்பம் உண்டாதல் கூடாதாம். இனி, யாம் மேற்கொண்ட விருப்பம் பிறிதொரு விருப்பத்திற் பிறக்குமெனின் அதற்கு மேற் கூறிய குற்றம் வரும். அதற்குமொரு விருப்பம் உண்டாயின் அதற்கு மிவ்வாறு குற்றமாய் வரம்பின்மையாய் முடியும். ஆதலால், விருப்பம் என்ப தொன்று பெறப்படாமையின் அதனாற் பிறப்பதாகிய உணர்வும்பெறப் படாதாய் அதனால் வருவனவாகிய செயல்களும் நுகர்ச்சிகளும் இல வாகிப் பாழாம் என்று சொல்லாதவாறு என்னையோ? என்றவாறு. (சக)

உயிரும் ஆலயவிஞ்ஞானமும்

௫கஙு. வெளிப்பட்டு நின்றதொன் றன்றி
யொழிந்தவிஞ் ஞானங்கடாங்
குளித்தன தாங்கொள்ளப் பாடின்மை
யாலின்மை கூறிநின்றேற்
களித்தவை தங்களுக் காலய
மாலய மாமெனநீ
யொளித்தனை கொள்ளலுற் றுயுயிர்
தன்னையோர் பேருரைத்தே.

(இ - ள்.) வெளிப்பட்டு நின்றது ஒன்று அன்றி-தனக்குரிய புலனைப் பெற்று நிகழாநின்ற ஓர் அறிவின்றி; ஒழிந்த விஞ்ஞானங்கள்-ஏனைய அறிவுகள்; தாம் குளித்தன கொள்ளப்பாடு இன்மையால் - தாமமுழ்ந்திக்கிடத்தற்கு இடமின்மையாலே; இன்மை கூறி நின்றேற்கு-அவற்றிற்கு இல்லாமை கூறிய எனக்கு; அளித்தவை தங்களுக்கு - நீ முற்கூறிய அறிவுகளுக்கு; நீ ஆலயம் ஆலயம் ஆம் என ஓர் பேர் உரைத்து - நீ தானும 'ஆலயவிஞ்ஞானம்' 'ஆலய விஞ்ஞானம்' என்று ஒரு புதிய பெயரினைப் படைத்திட்டுக் கொண்டு; உயிர் தன்னை - யாங்கள் உயிர் என்று கூறும் அப் பொருளையே; ஒளித்தனை கொள்ளலுற்றும் மறைத்து மேற்கொள் வாயாயினை; என்றாள் என்க.

(வி - ரை.) குளித்தன தாங்கொள்ள என்றது, குளித்தற்கு என்பது பட நின்றது. பாடு-இடம். ஆலயம் ஆலயம் என்னும் அடுக்கு ஒரு தொழில் பலகாலிகழ்தல் பற்றி வந்தது.

தனக்குரிய புலனைப்பெற்று நிகழாநின்ற ஒரு பொறியுணர்வின் தொடர்ச்சி யொழித் தொழிந்த உணர்வுகள் தாழ்ந்து கிடத்தற்கு ஒரு நிலைக்களனில்லாமையானும், பெறப்படாமையானும் அவையில வென்று சொல்லுதற்கண், அந்த வுணர்வுகள் ஆழ்ந்து கிடத்தற்கு உடம்பு இடனாமெனின் உடம்பு அறிவில்லது ஆதலின் நில முதலியன போல இடனாகாது என்றார்க்கு, நீர் சொல்லும் உயிருக்கு உடம்பு இடமானவாறுபோல அறிவிலதாயினும் இடனாமெனினும், "யான் கண்டீர் நோன்பிகாள் முன்னேயோர் பிறப்பினுள் முயலானேன்" என்பதனால் உடம்பிற்கு முன்பேயுளதாகிய முற்பிறப்பினும் தன்னாற் செய்யப்பட்ட வினையினால் உயிர் உடம்புடன் கூடிற்றாகலின், அதற்கு அஃது இடனாகுமென்றார்க்கு அறிவுமிவ்வாறாகலின் அதற்கு உடம்பு இடனாமெனின் நீ சொல்கின்ற அறிவு கணப்பொழுதிற் றோன்றி யழிவதும் உடம்பிற் றோன்றுவதுமாகித் துறக்க வுலகத்தினின்றும் இவ்வுலகத்து வந்தும், இவ்வுலகத்தினின்றும் துறக்க வுலகத்துச் செல்வதுமாகியவொரு பொருளாகின் யாங்கள் உயிர் என்றும் ஆத்துமா என்றும் சீவன் என்றும் வழங்குவதனை நீ அறிவென்றும் சித்தம் என்றும் விஞ்ஞானமென்றும் வழங்கினையாமாதலால். ஒருடம் பின்கண் ஆறு உயிர் உளவாம். அதன்கண் உயிர் இல்லை என்கிற மேற் கோள் இல்லையாம். அன்றியும் உடம்பிற்கு முன்னே அறிவுளதா மென்று சொல்லுவதும் மேற்கோள் மலைவாம். என்னை?

"மற்றுடம்பு சார்வாக வுணர்வெழூஉ மெழுதற்குப்
பெற்றிமைப் பறையடிப்பப் பெறுமொலியே யுரையாதோ"

என்பதனால் உடம்பிடமாகப் பொருள்பெற்று அறிவு பிறக்குமென்று சொல்லினையாதலின் உடம்பிற்குமுன் அறிவும் இல்லையாம். அன்றியும் அறிவிலதாகிய உடம்பு பொருள் இவற்றின் கூட்டத்தில் அறிவு பிறக்கு மெனின் நான்குவித பரிணாமமாகிய உடம்பின்கண் உணர்வு பிறக்கு மென்று சொல்லுகின்ற சார்வாகனை நின்தலைவனுமன்றோ? அறிவில தாகிய உடம்பில் அறிவு பிறக்கின் பிணம் முதலானவற்றுள்ளும் அறிவு பிறக்குமன்றோ என்றார்க்கு உயிர்ப்புடைய பொறிகளும் முதலுணர் வாகிய ஆலயவிஞ்ஞானமும் அறிவுகளுக்குப் பிறப்பிடமாய் உடம்பின் கண் நிற்கும் அவை போதலின் பிணத்தின்கண் உணர்வு பிறவாது பொத்த (கிழித்த) பறையிலொலி பிறவாதவாறுபோல. என்னை?

"செத்தார்க்கு மாமெனின் சிவிகையு முதலுணர்வும்
பொத்தமையா லாகாது பொத்தற் கொலிபோல"

வென்பதாகலினெனின், உயிர்ப்புடைய பொறியும் முதலுணர்வும் உடம்பு தானேயோ? அதனின் வேறோ? உடம்பே யெனின் உலோகாயதமே நிலை நிற்பதாம். உடம்பில் வேறாகி உடம்பிற் கூடி நிற்கின் நீ உயிர்ப்பொருளை ஆலய விஞ்ஞானமென்றொரு பெயரிட்டு ஒளித்துக் கொள்ளலுற்றாய் என்றவாறு. (௯௦)

இதுவுமது

௫௧௪. இருளுடை மாலைக்கண் டோன்று
தெனக்கென நண்பகலே
பொருளுடை யார்பொருள் கொள்வா
னகமுநன் போன்றிலையோ

வருளுடை யார்சொல்லு மாருயி
ராலய மென்றிருக்கும்
மருளுடை யாய்நின் மாண்பழிந்
தேற்றான் மயங்கினையோ.

(இ - ள்.) அருள் உடையார் சொல்லும் ஆருயிர் ஆலயம் என்று இருக்கும் - அருட் செல்வமிக்க எம்மனோர் கூறுகின்ற அரிய உயிரையே ஆலய விஞ்ஞானம் என்று கூறிக்கொண்டிருக்கின்ற; மருளுடையாய் - மயக்கமுடைய நீ; என்னுடைய இருள் உடை மாலைக்கண் தோன்ருது என்று-எனக்கு இருளுதலையுடைய மாலைக்கண்ணுக்குப் பொருள் தோன்றமாட்டாது என்று கருதி; பொருள் உடையார் பொருள் - செல்வருடைய பொருள்களை; கொள்வான்-களவு கொள்ளுதற்கு; நண்பகலே அகமுநன்போன்று இலையோ - நடுப்பகலிலேயே சுவரகழுகின்றதொரு கள்வனைப் போன்று தோன்றுகின்ருயல்லையோ? என்ருள் என்க.

(வி-ம்.) அருளுடையார் என்றது ஆருகதசமயத்துச் சான்றோரை.

அருளுடையராகிக் கொல்வதூஉந் துறந்த சைனர்களாற் சொல்லப்படுகின்ற நல்வினை தீவினைகளைச் செய்வதூஉம் அவற்றின் பயன்களை நுகர்வதூஉமாகிய உயிரை நீ ஆலய விஞ்ஞானமென்று வேருரு பெயரிட்டுக் கொள்ளவேண்டியதென்னை? யென்ருர்க்கு அவ்வாறு கொள்ளாதவழி அறிவு பிறத்தற்கு விலைக்களனில்லாமையின் பாழாவது கண்டு அதற்குக் கழுவாயாகக் கொண்டேனென்கின்ற பித்தனுகிய நீ யாவனே டொத்தியெனின்! இருளின் மாலைக்கண் தோன்ருது என்று பகலே சுவரகழ்கின்ற கள்வனேடொத்தி என்றவாறு.

மாலைக்கண் தோன்ருமையால் வருமிடையூறு களைதற்காகப் பகலிற் சுவரகழப்புக்குத் தன் உயிரிழந்தவனே போல நீயும் உணர்வுகளுக்குப் பிறப்பிடமில்லாமையால் வரும் குற்றம் களைதற்காக ஆலய விஞ்ஞானம் வேண்டி உயிரில்லை என்கின்ற நின்மேற் கோலைக் கெடுத்தனையென்பது போந்தது. (இக)

உணர்வு பிறக்கும் முறை

ருசுரு. மூக்கொடு நாமெய்யும் மூன்றுந்தம்
மூன்று புலன்களையும்
தாக்கிய போழ்தே யறிதலுந்
தத்துவ மாமென்றியா
லாக்கிய மூன்றி லறிவு
மருவா லவையொருவாப்
பாக்கியஞ் செய்தாய் பரிசங்கள்
கொள்ளும் பரிசென்னையோ.

(இ - ள்.) பாக்கியஞ் செய்தாய் - ஒரு சிலர் நல்லாசிரியன் என்று பாராட்டுதற்கு நல்வினை செய்தவனே!; மூக்கொடு நாமெய் இம் மூன்றும்-மூக்குமநாவுக உடம்பும் ஆகிய இம்மூன்று பொறி களும்; தம் மூன்று புலன்களையும் தாக்கிய பொழுதே - தமக்குரிய நாற்றம் சுவை ஊறு என்னும் மூன்று புலன்களையுமுற்றபொழுதே; அறிதலும் தத்துவம் ஆம் என்றியால் - அறிவு பிறந்து அறியும் என்பதும் யாங்கள் கூறும் தத்துவம் ஆகும் என்று கூறுகின்றாய்; அறிவும் அருவால்- அறிவுதாம் அருவப் பொருளாதலால்; அவை ஒருவாப் பரிசங்கள் கொள்ளும் பரிசு என்னையோ-அவை நீங்காத வையாம் உருவமாகிய அப்புலன்களை யுறுந்தன்மைதான் என்னையோ? என்றாள் என்க.

(வி - ம்.) பாக்கியஞ் செய்தாய் என்பது இகழ்ச்சி. நல்லாசிரியன் ஆதற்குரிய இலக்கணமுடையையல்லை; அங்ஙனமாகவும் நீ ஆசிரியன் ஆயது நீ செய்த பாக்கியத்தாற் போலும் என்றவாறு. இனி, பாக்கியம் என்பதற்கு ஆக்ஷேபம் என்ற குறிப்புப் பழையவுரையிலுளது.

"கண் செவியுறுவனவல்ல நம் புலன்களையென மொழிந்தான்" (அஃதாவது - கண்ணும் செவியுமாகிய இரண்டு பொறிகளும தமக்குரிய புலன்கள் தம்பால் வந்துறக் கவர்வனவல்ல. மற்றை மூன்று பொறிகளுமே கவர்வனவாம்.) என்பதனால் மூக்கும் நாவும் உடம்பும் தம் புலன்களை யுற்ற பொழுது உணர்வு பிறக்கு மென்று சொல்லுதியாதலின் அறிவில்லாதனவாகிய எளிய இப்பொறிகள் புலன்களையுற அறிவு பிறக்கின் பிண முதலியவற்றினும் புலன்களுற்றால் அறிவு பிறக்க வேண்டும். அஃதன்றி இந்த மூன்று பொறிகளாலும் பிறக்கின்ற அறிவுகள் புலன்களை யுறுமெனின் அந்த அறிவுகள் பிறந்தாலன்றிப் புலன்களை யுறுதலும், உற்றாலன்றி உணர்வு பிறத்தலும் கூடாவாம். அன்றியும் அருவம் என்று எல்லார்க்கும் ஒப்ப அறிவு புலன்களை யுறுதலும், உற்றாலன்றி அறிவு பிறத்தலும் கூடாவாம். ஆகவே அறிவு புலன்களையுறுமாறென்னே? கூறாய்! என்றவாறு.

இனி, நீங்களும் பொறிகள் புலன்களைக் கவர்வன என்றே கூறு தலின் நுங்கட்கும் இக்குற்ற மொவ்வாதோ? எனின், யாங்கள் வினைத் தொடர்பாலே சிறிதுருவமுடைத்தாகிய உயிரின் பண்பாகிய அறிவும் சிறிதுருவமுடைத்தாமென்று கோடலின் முன்பு பிறிதொரு புலத்தி னின்ற அறிவு அதனையறிந்தபின் புடைபெயர்ந்து எதிர்ப்பட்ட புலனைக் கொள்ளுமென்று கூறுவதல்லது புலனின் எதிர்ப்பாட்டில் அறிவு பிறக்குமென்று சொல்லாமை பெறுது மென்பது. (இஉ)

இதுவுமது

ருகசு. உற்றில வாயொலி கோள்ளுஞ்
செவியென வோதுகின்றாய்
கற்றிலை மெய்ம்மைநீ கட்புலந்
தன்னோடோர் காலத்தினாற்

பெற்றில காமதன் பின்கோள
ருனும் பெருந்தவத்தாய்
மற்றிது தான்றன் பொறியுற
காறும் வரலினன்றே.

(இ - ள்.) பெருந் தவத்தாய்-பெரிய தவத்தையுடையோய்!; செவி ஒலி உற்றிலவாய் கொளனும் என ஓதுகின்றாய்-செவிப்பொறியானது தன் புலனாகிய ஒலி தனபால் வந்துறுதபொழுதே சென்று பற்றும் என்று கூறுகின்றாய்; நீ மெய்ம்மை கற்றிலை-நீ பொருளியல்பினை நன்கு ஆராய்ந்து கண்டிலை; ஓர் காலத்தினால்-ஒரே காலத்தில் தோனறுகின்ற ஒளியையும்; ஒலியையும் நாம் பெற்றிலம்-யாம் ஒருங்கே பெறுகின்றேமல்லேம்; பின் கொளல் தானும்-ஒளியை முன்னர்க் கண்டு ஒலியைப் பின்னரே கேட்க நேர்வது தானும்; இதுதான் தன் பொறி உறுகாறும் வரலின் அன்றே - இவ்வொலி தனக்குரிய செவிப் பொறியை எய்துமளவும் வருதலால் அல்லவோ? என்றாள் என்க.

(வி - ம்.) "கண் செவியுறுவன வல்லதம் புலன்களை யென மொழிந்தாள்" என்பதனுற் செவியுற்றுக் கவராதென்று நீ சொல்லுதலால் உனக்கு மெய்யறிவு இல்லை போலும். செவியும் கண் முதலியனவும் புலன்கள் வந்துறக் கவர்வன வல்லவாயின், வண்ணான் புடைவை யொலிக்கின்ற காலத்துப் புடைவை கன்மேற் படக் கண்ட காலத்தே அந்த ஒலியுங் கேட்கப்படாததென்னை? பின்பு சிறிது தாழ்த்துக் கேட்கப் படுதலின் இது செவியை வந்துறுங்காறும் தாழ்த்தவாறன்றே என்றவாறு.

அன்றியும் ஒலிப்புலன் சென்றுறுவதன்றாயின் காற்றுப் போகின்ற திக்கில் நின்றாரால் கேட்கப்படுதலும் ஒழிந்தவராற் கேட்கப் படாமையும் சுவர் முதலியவற்றாற் றடைப்படுதலுங் கூடாவென்பதாம். (௬௧).

புத்தன் கூற்றும் நீலகேசி தேற்றுரையும்

௬௨. வாய்த்துரை யீதென வாம
னிதுசொல்லும் வந்துறுமேற்
சேய்த்தெனக் கோடலுஞ் சேரா
தொலிசெவிக் கண்ணதேனி
னீத்தன தாமல வாயினு
நீசொல்லு முற்றறிவின்
றீத்தனைப் போலவுந் தேறேன்
றவனைத் தெருட்டினளே.

(இ - ள்.) ஒலி வந்து உறுமேல்-ஓசையானது புறத்திருந்து வந்து செவியின்கண் படுமாயின் சேய்த்து எனக் கோட

லும் - இது செய்ம்மைக்கண்ணது என்று அறிதலும்; சோரது செவிக்கண்ணது | எனின்-புறத்திருந்து வந்து சேராமல் அகத் தெழுந்து தன் செவிக்குப் புலப்பட்டவிடத்து அறிதலும்; ஈத்தன தாம் அலவாயினும்-ஈண்டுக் கூறப்பட்டன அல்லாதனவாகிய வேறுவகை ஒலிகளேயாயினும் அவற்றை அறிதலும்; நீ சொல் லும் உற்று அறிவின்-நீ கூறுகின்ற புலன் பொறிகளை யுற்றும் அறியும் அறிவில்; தீத்தனைப் போலவும் தேறு என - தீயினது வெப்பத்தை மெய்ப்பொறி அறியுமாறு போலவே அறியப்படும் என்றுணர்வாய் என்று கூறி; வாமன் - எம்முடைய அருகக் கடவுள்; இது சொல்லும் - இவ்வாறே கூறுவன்; வாய்த்துரை யீது என - பொருந்துமுரையும் இஃதேயாம் எனவும் கூறி; அவனைத் தெருட்டினள் - புத்தனை நீலகேசி தெளிவித்தனள் என்க.

(வி - ம்.) வாய்த்துரை யீது - பொருந்துமுரை இது. வாமன்-அருகக் கடவுள்; அருகக் கடவுள் இவ்வாறே கூறுவன், ஆதலால் தேறு என்றவாறு. செவிக்கண்ண தெனினும் எனல் வேண்டிய உம்மை தொக்கது.

இனி, இச் செய்யுட்குப் பழைய வுரையாசிரியர் புத்தன் கூற்றாக வும் அதற்கு நீலகேசி விடையாகவும் இரு கூறுபடுத்தி விரிவுரை கூறுவர்; அது வருமாறு:—

''ஒலியினைச் செவியுற்றுக் கிரகிக்குமாகில், ஒலி செவியிற் பட்ட தாம்; பட, இது தூரத்தெழுந்த வொலி, இது கிட்ட எழுந்த வொலி என்று கொள்ளுதலும், ஒரு செவியிற் பட்டதாகில் எப்பக்கமும் நின்ற வெல்லார்க்கும் யோக்கியயான பிரகாரத்தாற் கேட்டலும், இவ்வொலி கிழக் கெழுந்தது, மேற் கெழுந்தது என்றலுங் கூடாதாதலின் இது வாய்த்தவுத்தரம் என்று சுகதன் சொல்ல உற்றுக் கிரகிப்பனவாக நுன்னுந் சொல்லப்பட்ட அக்கினிஸ்பரிச முதலாயினவற்றுக்கு மிது ஒத்தலின், அவைபோலக் கொள்ளென்று நீலகேசியார் சுகதனைத் தெளி வித்தார் என்றவாறு'' எனவரும்.

இனி, தெருட்டினள் என்றது ஊற்றுப் பொறி முதலியன தம் புலன்களை யுற்றவழி அறிவு பிறக்கு மென்றற்கண், பொறிகளா லுறப்பட்ட புலம் பற்றி அறிவு பிறக்குமோ? பிறிதொரு புலன்பற்றி யறிவு பிறக்குமோ? உறப்பட்ட புலம்பற்றி அறிவு பிறத்தல் கூடா தாம். என்னை? உறப்பட்ட புலம் உறப்பட்ட வக்கணத்திலேயே கையறக் கெடுதலாலே. கெடாதாயின் பொருள்கள் கணிகமாம் என்னும் நும் மேற்கோட்கு முரணும் என்றற்கு,

''உருவுகள் கணிகமே லொப்பக் கொளினென்று
ளுருவுகள் வழித்தோன்றி யொப்பனவு முளவென்றுன்''

என்பதென்னேத்தாதலின் உறப்பட்டது அழிந்ததே யெனினும் அதன் வழி அதுபோலத் தோன்றுவதாகிய புலம்பற்றி யுணர்வு பிறக்கு மெனின், அதனையுமுற்றுப் பிறக்கவேண்டுதலின் அதற்கு மிக்குற்ற

மொக்கும்; அதன் வழித் தோன்றியதற்கும் இக்குற்றமாதலால் உணர்வு பிறத்தல் கூடாதாம். உறப்படாத பிறிது புலம்பற்றி யுணர்வு பிறக்கில் எல்லாப் பொறிகளும் உருதே புலன் கொள்ளுவனவாம். இன்னும் உணர்வுகள் புலன் கொள்ளுமிடத்துப் பயனுள்ள புலனைக் கொள்ளுமோ? பயனில்லாத புலனைக் கொள்ளுமோ? பயனுள்ள புலனைக் கொள்ளின் அஃதக் கணத்தே அழியும். அதன்வழித் தோன்றிய புலனும் பயனாகிய கணத்திலே அழியுமாதலால் புலன் கோடல் கூடாதாம். பயனில்லாத புலனைக் கொள்ளில் யாவராலும் எல்லாப் புலன்களும் எவ்வாற்றாலும் கொள்ளப்படுதலின் புலன் வரையறை முதலாயின பெறப்படாவாம். இவ்வாறவனை நீலகேசி தெளிவித்தாள் என்பதாம். (௩௪)

கணிக மேற்கோளுக்கு நூற் பயிற்சி கூடாமை

௩௪௫. பெற்ற வெழுத்தேற் பிரிவின்க
 ணாறும் பெயர் நுனது
முற்ற வுணர்ந்து முடித்துரை
 யென்னை முதலெழுத்துப்
பற்றின சித்தம் பலவுணர்ந்
 தேயவை பாழ்படலாற்
கற்றினி யெல்லாக் கணக்குங்
 கலந்துரை காண்பென்னையோ.

(இ - ள்.) நுனது பெயர் பெற்ற எழுத்து பிரிவின்கண் ஆறும் - புத்ததேவனே! உனதுடைய பெயர் பெற்றுள்ள எழுத்துக்கள் பிரித்துக் காணுங்கால் ஆறாகும்; முதல் எழுத்துப் பற்றின சித்தம் பல - அவற்றுள் முதலெழுத்தைப் பற்றிய பிறந்த அறிவுகள் பற்பல; உணர்ந்தே - அம் முதலெழுத்தொன்றனையே அறிந்தறிந்து; அவை பாழ்படலால் - அவ்வறிவுகள் அவ்வக் கணத்திலேயே கையறக் கெட்டழிதலாலே முற்ற உணர்ந்து முடித்து உரை என்னை - அவ்வாறனையும் முடிய வறிந்து முடித்துக் கூறுதல் எங்ஙனமாம் ஆகாதன்றே!; இனி எல்லாக் கணக்குங் கற்றுக் கலந்து உரை காண்பு என்னையோ - இனி எல்லா நூல்களையும் கற்றறிந்து அவற்றுள் விரவி அவற்றின் பொருளைக் கண்டுரைப்பதுதான் எவ்வாறு; என்றாள் என்க.

(வி - ம்.) நுனது பெயர் என்பது 'புத்ததேவன்' என்பதனை. இனி, புத்தன் என்றே கொள்ளினும் உயிரும் மெய்யுமாய் ஆறெழுத்தன்மையாலமையும்.

புத்தனே நினது பெயராற்பெறப்பட்ட எழுத்துப் பிரித்துநோக்க வாறும்; நின்பெயர் சொல்லலுறுவார்க்கு அவ்வாறனுள்ளும் முதலெழுத்தாகிய பகரத்தைப் பற்றிப் பிறந்த அறிவு அக்கணத்தே அழிதலின், அக் கணத்தே பிறந்த அறிவும் பகரத்தையே பற்றி அழிதலின் இவ்வாறே பல பிறக்கும். பிறக்கும் அறிவெல்லாம் பகரத்தையே பற்றி

மடைவே யறிந்து
அழிந்தொழிதலின் ஒழிந்த எழுத்துக்கண் முழுவது முதலிய நூங்கள்
சொல்லுதல் யாவர்க்கும் அருமையில் விநயபிடக அவற்றின் பொருள்
நூலின்கணுள்ள எழுத்துக்களையும் சொற்களையும் பிறர்க்குரைத்தலும் முத
களையும் ஓதியுணர்தலும், தாமோதியவாறே
லாயின கூடுமாறென்னோ? என்றவாறு.

இதனால், கணிகமேற்கோளுக்கு நூற்பயிற்சி கூடாதெனல் (௬௪)
போந்தமையுணர்க.

இதுவுமது

௫௧௬ ஓதிய கந்தங்க ளொற்றுமை
யாலுயி ரென்றதுபோற்
போதிய னாய்நின்னைப் புத்தனென்
றாலது பொய்பிறவோ
வாதியி னும்புத்தி யாவதல்
லாலந்தத் தன்களையா
நீதியி னாற்சொல்லி நின்றுநின்
பேரு முணர்விலையே.

(இ - ள்.) போதியனும் - அரைமரம் போல்வோனே!; ஓதிய
கந்தங்கள் ஒற்றுமையால் உயிர் என்றது போல் - நீ கூறிய ஐந்து
கந்தங்களும் கூடிய கூட்டம் காரணமாக உயிர் என்னுமொரு
பொய்ப்பொருள் வழங்கப்படுதல் போல; நின்னைப் புத்தன் என்
றால் - உன்னைப் புத்தன் என்று சொன்னால்; அது பொய் - அது
னும் ஒரு வழக்குமாத்திரையாய்ப் பொய்யே யாகும்; ஆதியின் ஆக்
புத்தி ஆவது அல்லால் - இனி நீ தானும் நின் பெயரின் முதற்
கண்ணுள்ள புத்தியே ஆவதல்லது; அந்தத்து அன்களையா -
நீ நின் பெயர் வினவியவர்க்கு இறுதியினின்ற அன் என்னும்
விகுதியை விலக்காத; நீதியினாற் சொல்லி நின்று - முறைமை
யினாலே கூறி நிற்றலாலே; நின்பேரும் உணர்வு இலை - நீ நின்னு
டைய பெயரியல்பும் அறியாது மயங்கிக் கூறுகின்றனை காண்
என்றான் என்க.

(வி - ம்.) போதியனாய் என்பதற்கு அறிவு போல்வானே எனினு
மாம். பிற, ஓ: அசைகள்.

ஐந்து கந்தக் கூட்டத்தே வாய்மைவகையாலன்றி வழக்குவகை
யாலே ஓருயிர் உளதென்றாற் போலப் புத்தன் என்று நின்னைச் சொல்லு
வதும் வழக்கு வகையேயாதலின் பொய்யாமன்றோ? ஆதலால் 'புத்தி'
யென்னும் பகுதிமிசை இதனையுடையவன் என்னும் பொருள் தோற்ற
வருவதாகிய 'அன்' என்னும் விகுதியைக் களைந்து நீ நின் பெயர் கேட்
டார்க்கு 'நான் புத்தி' என்று சொல்லுவதல்லது புத்தன் என்று
சொல்லின் நின்னையும் நின் பெயரையுமறியாது மயங்கிச் சொல்லு (௬௫)
கின்றாய் என்றவாறு.

இதுவுமது

ருஉ௦. அன்றியு நின்சொ லறிபொரு
டானில வாதலினு
லொன்றி யுரைத்த வுனக்கு
மெனைத்து முணர்வருமை
யென்றினி யாமுந் தெளிந்தோ
மிதனு லெனவுரைத்தாள்
வென்றி யுடையன வல்லது
சொல்லா விரிகுழலே.

(இ - ள்.) வென்றி உடையன அல்லது சொல்லா விரிகுழல்- வெற்றியுடைய மொழிகளைச் சொல்வதல்லது வெல்லா மொழி கூருத விரிந்த கூந்தலையுடைய நீலகேசி பின்னரும்; அன்றியும் நின்சொல் அறிபொருள் தான் இல ஆதலினுல் - நின் பேரும் உணர்விலையாதல் அன்றியும் ; நின்னுடைய பிடகநூல்தாமும் அறிதற்குரிய மெய்ப்பொருளை அறிவிக்குந் தன்மையுடையனவல்ல; ஒன்றி உரைத்த உனக்கும் எனைத்தும் உணர்வு என்று - அந் நூல்களை மனமொன்றிச் செய்த உனக்கேயும் பொருள் அறிதல் அருமையாம் என்று; இதனுல் யாமுந் தெளிந்தோம் எனவுரைத் தாள் - இதனுல் யாமும் நன்குணர்ந்தோம் என்று கூறினள் என்க.

(வி - ம்.) நீ பொருளறியா யாதலின் நின்னுற் சொல்லப்பட்ட முப்பிடகம் முதலாயினவற்றிற்கும் ஒரு பொருளின்மை பெறப் பட்டது. படுதலின், பெயர்க்கும் நின்னுற் சொல்லப்பட்ட முப்பிட கத்திற்கு நீயும் பொருளறியா யென்பது தெளிந்தோமென்று நீலகேசி சொன்னுள் என்றவாறு. (கஎ)

வருகின்ற இரண்டு செய்யுளும் நீலகேசி கூற்றும் புத்தன் விடையுமாய்க் குளகம்.

குறிக்கந்தம்

வேறு

ருஉக. ஆறுகுறி யாவனவு மாயபுலந் தாமும்
கூறுகுறி யாறுமவை கொள்ளும்வகை தாமும்
மாறுகுறி மாறிக்குறி யென்றுமயக் காதே
வேறுகுறி தாமுணர்வின் விள்ளுவ லினிக்கேள்.

(இ - ள்.) ஆறு குறி ஆவனவும் - பின்னர் நீலகேசி ஐய! இனி நீ நின்னுடைய ஆறுவகைப்பட்ட குறிக்கந்தங்களையும் ; ஆய புலந்தாமும்- அவற்றிற்காய புலங்களையும்; ஆறும் குறியவை

கொள்ளும்வகைதாமும் - அக்குறிக்கந்தங்கள் ஆறும் அப் புலங்களைக் கொள்ளும் வகையையும்; மாறுகுறி மாறிக்குறி என்று மயக்காதே கூறு - மாறுகுறி மாறிக்குறி என்று கூறி மயக்காமல் விளங்கும்படி கூறுவாயாக! என; உணர்வின் குறிதாம் வேறு - அறிவுக் கந்தத்தின் குறிக்கந்தம் ஆறும் வேறுபட்டனவாம்; இனி விள்ளுவல் கேள் - இனி அவற்றைக் கூறுவேன் கேள்! (என்று புத்தன் கூறத் தொடங்கினன்) என்க.

(வி - ம்.) குறி - குறிக்கந்தம். மாறுகுறி மாறிக்குறி என்பது: ஒருவிடன் குறிவாசிப்புழி ஒரு குறியையே மாறுகுறி யென்றும், மாறிக் குறி என்றும் வாசித்து மயங்கினன், அவன் போல மயக்காதே என்றவாறு.

ஆறு குறிக் கந்தங்களையும் அவற்றின் புலங்களையும் அவை புலன் கொள்ளும் வகையையும் மயக்காமல் கூறுக! என்று நீலகேசி சொல்லப் புத்தன் அவற்றியல்பு கூறத்தொடங்கினன் என்பதாம். (கூஅ)

கூஉஉ. கண்ணின்குறி மூக்கின்குறி மெய்யின்குறி செவியி
னண்ணுங்குறி நாவின்குறி நாடின் மனத்தோடு
மெண்ணுங்குறி யாவனவிவ் வாறுமெனக் கொண்ணீ
பண்ணின்குறி யேசுமொழிப் பாவையெனச் சொல்லும்.

(இ - ள்.) பண்ணின் குறி யேசும் மொழிப் பாவை - பண்ணினது இன்பத்தைப் பழிக்கும் இனிய மொழியினையுடைய பாவை போல்வோய்!; குறி ஆவன - குறிக்கந்தங்கள் ஆவன; கண்ணின் குறி மூக்கின் குறி மெய்யின் குறி செவியின் நண்ணுங்குறி நாவின் குறி - கண்ணாலுண்டாகும் குறியும் மூக்கால் உண்டாகும் குறியும் உடம்பாலுண்டாகுங் குறியும் செவியாலுண்டாகுங் குறியும் நாவால் உண்டாகும் குறியும்; நாடிய மனத்தோடு - ஆராய்கின்ற மனத்தாலுண்டாகும் குறியும் ; எண்ணும் இ ஆறும் எனக் கொள் நீ - என எண்ணுகின்ற இவ் வாறுமேயாம் என்று கொள் நீ என்றான் என்க.

(வி - ம்.) குறிக்கந்தம் ஆவன ஐம்பொறியும் மனமும் பற்றியுண்டாகும் அவ்வறுவகைப் பொருள்களுக்கும் பெயரிட்டுக் குறித்துக் காட்டுதற்கு வேண்டிய அறுவகை அறிவுகளுமாம் என்றவாறு. குறி- பெயர்.

இஃது அவை இவை என்று விரித்தோதியவாறு. (கூகூ)

நீலகேசி கூற்று

கூஉக. அறிவுகுறி யென்பனவி ஞயபுல மொன்றே
லறிவுகுறி யென்பனவு மாகுமவை யொன்றே
பிறிதுகொளு புலமுள்ள தாகுமெனிற் பேதம்
சிறிதுகெழி காட்டினது செல்லுமெனச் சொல்லும்.

(இ - ள்.) அறிவு குறி என்பனவின் - அறிவுக் கந்தம் குறிக்கந்தம் என்று கூறப்படு மிருவேறு கந்தங்களாலும் ; ஆய புலம் ஒன்றேல் - கொள்ளப்படும் புலம் ஒன்றெனில் ; அறிவு குறி என்பனவும் அவை ஒன்றேமாகும் - அறிவு குறி என்னும் அவ் விருவேறு கந்தங்களும் அறிவுக் கந்தம் என்றுதல் குறிக்கந்தம் என்றுதல் ஒரு கந்தமேயாகும், இரண்டென்றல் மிகையாம் ; கொளும் புலம் பிறிது உள்ளது ஆகும் எனின் - இவ்விரண்டும் பிறிது பிறிதாகக் கொள்ளும் புலமும் உளதாமென்னின் ; சிறிது பேத நெறி காட்டின் அது செல்லும் எனச் சொல்லும் - நீ அவற் றிற்குச் சிறிதேனும் வேறுபாடு முறையாகக் காட்டுதல் அது கொள்ளப்படும் என்று கூறினள் ; என்க.

(வி - ம்.) அறிவுக் கந்தத்தாலும் குறிக்கந்தத்தாலும் கொள்ளப் படும் புலம் ஒன்றுயவழி அவை இரண்டெனல் மிகை; ஒன்றெனலே முறை என்பது கருத்து. புலம்வேறுளதாயிற் கூறிக்காண் ! என்றவாறு. (௩௦)

## இதுவுமது

௯௨௪. உண்மைகுறி கொள்ளுமுணர் வின்புலம தெய்தா
தெண்ணினுணர் வோடுகுறி யிவ்வகைய வென்னி
லுண்மையுணர் வின்புலமோ டொன்றெனில தொன்றே
நண்ணலில வேலுணர்வி னுயபுல னின்றே.

(இ - ள்.) குறி உண்மை கொள்ளும் - குறிக்கந்தம் பொருளி னது உண்மைத் தன்மையைத் தன் புலனாகக் கொள்ளும் ; உணர் வின் புலம் அது எய்தாது - அறிவினாற் கொள்ளப்படும் புலனாக அவ்வுண்மை ஆகமாட்டாது ; உணர்வோடு குறி எண்ணின் இவ்வகைய என்னின் - அறிவுக் கந்தத்திற்கும் குறிக் கந்தத்திற் கும் ஆராயுங்கால் இத்தகைய வேறுபாடுள என்பாயாயின் ; உண்மை உணர்வின் புலமோடு ஒன்று எனின் - குறிக்கந்தத் திற்குப் புலனாகும் பொருளினது உண்மைத்தன்மையும் அறிவுக் கந்தத்திற்குப் புலனாகும் பொருளும் ஒன்றேயாகும் எனின் அவ் விரண்டும் ஒன்றேயாகும் இரண்டாகா ; நண்ணல் இலவேல் உணர்வின் ஆய புலன் இன்று - அன்றி அவை தம்முளியையாது இரண்டேயாயின் அறிவினாற் கொள்ளப் படுவதாய புலன் இல்லை யாம் என்றான் என்க.

(வி - ம்.) குறிக்கந்தத்திற்குப் பொருளாவது அதன் உண்மைத் தன்மையாம்; அது அறிவுக்குப் புலனாகாது. இஃதவற்றின் பொருள் வேற்றுமை எனின் புலனாவது ஒன்றுதலின் அதனைக் கொள்வது மொன்றேயாய், குறியென்றும் அறிவு என்றும் கந்தமும் இரண்டின்றி ஒன்றேயாம். இனி அவை இரண்டும் தம்முட் கூடலின்றி இரண்டேயா

மென்னின் குறிக்கந்தம் சென்று குறித்த கணத்திலேயே அவ்விரண்
டிற்கும் பொதுவாகிய புலன் கெடும். பின்பு அதன்வழித்தோன்றிய
பொருளும் குறியாற் குறிக்கப்பட்ட கணத்திலேயே கெடும். இவ்வாறு
கெடுதலின் ஒருபொழுதும் அறிவுக் கந்தத்திற்குப் பொருளில்லையாம்
என்றவாறு.

இனி, குறிக்கும் அறிவுக்கும் புலனுகும் பொருளிரண்டும் கூடாது.
வேருகுமெனினும் குறிக்கும் பொருளாகிய உண்மையிற் றீர்ந்து விற்ப
தொரு பொருளுண்மையாலும், நிலைக்களனின்றி விற்குபோ ருண்மையு
மின்மையாலும் குறிக்கந்தம் அறிவுக்கந்தம் இரண்டிற்கும் பொரு
ளில்லையா மென்பதூஉங் கொள்க. "உணர்விற்கே புலனில்லை"என்று
விலக்கினுரேனும் ஒப்பின்முடித்தல் என்னும் தந்திரவுத்தியாற் குறிக்
கும் பொருளில்லை என்பதுங் கொள்க. (௯௧)

இதுவுமது

௫௨௫. ஒருங்குகுறி யோடுணர்வு
தோன்றியுடன் கோள்க
வொருங்குபுலந் தோன்றியவை
யொத்தகெட லாஞு
லொருங்குகுறி யோடுணர்வு
தோன்றலில வாமே
லொருங்குபுலந் தோன்றுதலி
னென்றுமுணர் வில்லை.

(இ - ள்.) குறியோடு உணர்வு ஒருங்கு தோன்றி உடன்
கொள்க - குறிக்கந்தத்திற்கும் அறிவுக் கந்தத்திற்கும் புலன்
ஒருங்கு தோன்றுதலாலே அவை யிரண்டும் ஒருங்கே தோன்றி
ஒருங்கே அப்புலனைக் கொள்ளக் கடவன; ஒருங்கு புலம் தோன்றி
அவை ஒத்த கெடல் ஆஞல் - அவற்றின் புலன்கள் ஒருங்கே
தோன்றி அவை ஒருங்கே அழியுமாஞல்; ஒருங்கு குறியோடு
உணர்வு தோன்றல் இலவாம் - ஒருசேரக் குறியும் அறிவும்
தோன்றுதல் இலவாம்; புலம் ஒருங்கு தோன்றுதலின் - இலவா
கவே அவற்றின் புலங்கள் ஒருங்கே தோன்றுதலாலே; ஒன்றும்
உணர்வு இல்லை - தன் புலனைக் கொள்ள அறிவு ஆண்டில்லை
யாதலால், அதனைப் பொருந்தும் அறிவு இல்லையேயாய் ஒரு
கணத்தே நான்கு கந்தங்களே உளவாம் என்ருன என்க.

(வி - ம்.) குறிக்கந்த வறிவுக்கந்தங்களுடைய புலம் ஒருங்கு
தோன்றுதலின் அவ்விரண்டும் ஒரு காலத்தே தோன்றி ஒருங்கே
கொள்ளல் வேண்டும். அஃதன்றிக் குறிக்கந்தத்தாற் குறிக்கப்பட்ட
பின்பு அறிவு பிறக்க வேண்டின் அறிவுக்குப் பொருளின்மையின்
உணர்வுமில்லையாம் என்றவாறு.

குறியும் அறிவும் ஒருங்கே நிகழாவிடின் ஒருகணத்திலே நான்கு கந்தங்களே உளவாம் என்பதாம். அறிவும் குறியும் ஒரு காலத்தே பிறக்குமெனின் அது காண்டல் முரணும். என்னை? குறிக்கொண்ட பின்னரே அறிவு பிறக்கக் காண்டலால் என்க. (௬௨)

குயலாகுயலக் குறிக்கந்தங்கள்

வேறு

ருஉரு. உள்ளஞ் சொல்லுடம் பென்றிவை மூன்றினாற்
கொள்ளு நுங்குச லாகுச லங்கடா
மெள்ளி னேரு மிவையின்மை காட்டுவே
னுள்ளக் காக வுரைத்தவம் மூன்றினுள்.

(இ - ள்.) உள்ளம் சொல் உடம்பு என்று இவை மூன்றினால்- மனமும் மொழியும் உடம்பும் என்னும் இம் மூன்று கருவிகளாலும்; கொள்ளும் நும் குசலம் அகுசலங்கள் தாம் - நிகழுவன என்று நீங்கள் கொள்கின்ற நல்வினைகளும் தீவினைகளும்; இவை எள்ளின் நேரும் இன்மை காட்டுவென் - ஆகிய இவை ஓர் எட்டுணையும் பொருத்தமில்லாமையை இனி எடுத்துக் காட்டுவேன் காண்பாயாக !; உள்ளக்கு ஆக உரைத்த அம் மூன்றினுள் - நீயிர் உள்ளத்தினின்றும் தோன்றுவனவாகக் கூறிய அந்த மூன்று தீவினைகளிலே ; என்க.

(வி - ம்.) இச் செய்யுள் குளகமாய் மேலே தொடரும். குசலம்- நல்வினை. அகுசலம் - தீவினை. இன்மை. ஈண்டுப்-பொருத்தமின்மை - உள்ளக்கு - உள்ளத்திற்கு: சாரியை இன்றி உருபு புணர்ந்தது.

மனம் மொழி மெய் என்னும் மூன்று கருவிகளாலும் தோன்றுதல்.

"வெஃகல் வெகுளல் பொல்லாக்காட்சி யென்று
உள்ளந் தன்னின் உருப்பன மூன்றும்"

எனவரும் மணிமேகலையானும் உள்ளத்தாற் றோன்றுந் தீவினை மூன்றும் உணர்க. (உச: கஉக-௩0)

"மருடருமனம் வாய்மெய்யிற் கொலைமுதல் வினைபத்தாமே"

என்பது சித்தாந்தத் தொகை.

"தீவினை.....பத்துவகை" என்பது மணிமேகலை, (உச: கஉக-௩க)

இவ்வாறு தீவினை பத்தென்று வரையறுத்தலாற் கள்ளும் பொருள் பறித்தலும் தீவினையென்று கொள்ளப் படாவாயின. "மையலுற்ற மகன்ன தெய்தல" னென்று சொல்லுதலால் கள்ளுண்டு மயங்கினான் செய்த கொலை முதலாயின தீவினையாகாமையிற் கள்ளுண்டல் தீவினையாகா தென்பது. (௬௩)

இதுவுமது

இஉஎ. வேண்ட லேயென்றும் வெஃகுத லாயினு
லீண்டி நின்றநி னித்தொடைப் பாடெலாங்
தீண்ட லன்னெனத் தீண்டிய வந்தவோ
வீண்டை யேநிற்ப விஃது மறிகிலே.

(இ - ள்.) வேண்டல் என்றும் வெஃகுதல் ஆயினுல் - விரும்
பல் என்பதே எப்பொழுதும் வெஃகுதல் என்பதன் பொருளாயின்;
ஈண்டி நின்ற நின் இத் தொடைப்பாடு எலாம் - ஈங்குச் சேர்ந்திருந்த
நின் குடை முதலிய இந்தத் தொடர்ப்பாட்டுப் பொருள் எல்லாம்;
தீண்டலன் என - இவன் நம்மை விரும்பித் தொடுவானல்லன்
எனக் கண்டு தாமே நின்னை விரும்பி ; தீண்டிய வந்தவோ - தீண்டு
வதற்கு வலிய வந்தனவோ ?; ஈண்டையே நிற்ப - வெஃகல் என்
னும் அத்தீவினை ஈண்டு நின்னிடமே நிலைத்து நிற்பவும் ; இஃதும்
அறிகிலே - இத்தீவினையைத்தானும் நீ அறிகின்றிலை ; என்றுள்
என்க.

(வி - ம்.) நீ உள்ளத்தில் தோன்றும் தீவினை மூன்றனுள் வெஃகல்
என்னுந் தீவினையை இடையருது செய்கின்றனை என்பதற்கு இக்குடை
முதலியனவே சான்ருகவும் நீ அதுதானுமறிந்திலை என்றவாறு.

இக்குடை முதலியன நீ வேண்டாதிருக்கத் தாமே நின்னை வந்து
எய்தினவோ? என்று அசதியாடிய படியாம்.

தொடைப்பாடு-தொடர்புடைய பொருள். அவையாவன-குடை
செருப்பு மண்டை என்றிவை முதலாயின. இனி அருகக் கடவுளுக்கு
அசோக மரம் முதலிய எண் வகைப் பொருள்களும் உளவன்றே
எனின் அவை தேவர்களால் செய்யப்படுஞ் சிறப்பாதலின் அன்றென்க.
என்னை? அவர் தாமவ்விடத்து நின்று வழிபாடு பண்ணின மலர் நீர்
முதலியவற்ருல் இறைவனுக்கு ஒருபயனும் இன்மையின் அவற்றின்
கண் அவனுக்குப் பற்றுமில்லையாகலின் என்க.

இனி, நினக்கு வெயிலுக்குக் கவிக்கக் குடை வேண்டுதலானும்,
பருக்கை முதலியன ஊன்ருமலிருத்தற்குச் செருப்பு வேண்டுதலானும்,
இரத்தற்கு மண்டையேந்த வேண்டுதலினுனும், இன்னும் வெள்ளடை
மெல்லலுக்கு வேண்டுவனவும், படுக்கை இருக்கை முதலியனவும்
கொள்ளவேண்டுதலானும் அவையெல்லாம் நின்ருல் வெஃகப்படுவன
வேயாம்.

ஆதலால் வெஃகுதல் தீவினையென்று பிறர்க்குரைக்கின்ற நினக்கும்
நின் வழிப்படுவோர்க்கும் வெஃகுதல் பலவுமுண்மையினும் நெஞ்சார
வெஃகுதலொழித்தாயல்லை என்ருட்கு யான் வீடு பெற்ருேனும் அவா
முழுது மறுத்தோனும் அல்லாமையின் எனக்கு உணவும் உறக்கமும்
வெற்றிலை மெல்லலும் முதலாயினவும் வேண்டுதலின் அவற்றைக் கைக்
கொள்கின்றே னல்லது எனக்கு வெஃகுதல் என்னுந் தீவினையில்லை
யெனின் இவ்வாறு கொள்ளின் எல்லா மாந்தரும் வெஃகுதல் ஒழிந்

தாரே யாவர். அன்றியும் மனமில்லாததற்கு வினையில்லை யென்றன்றோ நீ சொல்லுவது; அஃதாயின், நீ திட்டிவிடப் பாம்பாகப் பிறந்த காலத்தே நினக்குக் கொலையுள்ளம் இல்லை எனினும் கண்விழிக்கின் உயிரினங்கள் சாமென்றறிந்து அதற்கஞ்சி விழியாது கிடந்ததென்னோ? பள்ளியுட் சங்கத்தாரோடு கிடந்த உபாசகன் துயின்மயக்கத்தால் சங்கத்தார்மேல் காலேறட்டு விழித்தாலதற்கு இரங்குவது தீவினையுண்டென்று அஞ்சியன்றோ இஃதொன்றுமறிகிலை என்பதுமாம். (கச)

இதுவுமது

ருஉஅ. நன்மை வெஃகுதல் நன்றெனச் சொல்லலு
மன்மை வெஃகுத லன்றெனக் கூறலு
மின்மை யால்வெஃக லென்றதுந் தீமையி
னின்மை யாய நெறியொழி நீயினி.

(இ - ள்.) நீ - புத்தனே நீ; நன்மை வெஃகுதல் நன்றெனச் சொல்லலும்-நன்மையை வெஃகுதல் நன்மையேயாம் என்று அறிவுறுத்தலும்; அன்மை வெஃகுதல் அன்றெனக் கூறலும் இன்மையால் - தீமையை வெஃகுதல் தீமையேயாம் என அறிவுறுத்தலும் இல்லாமையாலே; வெஃகல் என்றதும் தீமையின் - வெஃகுதலெல்லாம் தீவினையே என்றறிவுறுத்தினமையாலே; இனி இன்மையாய நெறியொழி - தீவினையின்மையாகிய நின்னுடைய நன்னெறியையும் வெஃகா தொழிவாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) போன செய்யுளில் உனக்கு வெஃகுதலுளதென்றற்கண், எனக்கு வெஃகுதல் உளதெனினும் ஒழிவார்க்கு நன்றென்று அறிவுறுத்தினேன் எனின், உன்னை யொழிந்த பற்றுடையோர்க்கு நன்மை வெஃகுதல் நன்றாதலும் தீமை வெஃகுதல் தீதாதலுமன்றி வெஃகுதலெல்லாந் தீதென்றுணர்த்தினையாதலால், நின்னை நல்லாசிரியன் என்று வெஃகுதலும் உயிரில்லாக் காட்சியாகிய நினது வீட்டு நெறியை நன்னெறியென்று வெஃகுதலும் பிறவும் வேண்டாமையின் வினையாக்கும் சமயநெறிச் செலவு கூடாதாதலினாலும் நின் நெறியை நீ வெஃகுதலும் தீவினையாகலினாலும் நினது சமயவறிவுரையை இனியொழி! என்றாள் என்றவாறு. (கரு)

இதுவுமது

ருஉக. தீய வாய வெகுளியை யொப்பன
மாய மான முலோப மனத்தன
காய்வு செய்திலை கண்டுநின் கள்ளமே
நீய வையவை நேர்தலி னும்பிற.

(இ - ள்.) வெகுளியை ஒப்பன - புத்த! உள்ளத்தில் தோன்றுவனவாகிய தீவினைகளிலே நீ இரண்டாவதாகக் கூறிய

வெகுளியை ஒத்தனவாகிய ; தீய ஆய மாய மானம் உலோபம் மனத்தன - தீவினைகளாகிய வஞ்சமும் மாண்பிறந்த மானமும் இவறலும் இன்னோரன்ன பிறவும் அவ்வுள்ளத்தினுள்ளனவாகவும்; நீ அவை நேர்தலின் - நீ அத்தீவினைகளைச் செய்தலாற்போலும்; காய்வு செய்திலை - அவையிறைறை வெறுத்துத் தீவினைகள் என்று அறிவித்தாயல்லை ; கண்டு நின் கள்ளமே ஆம் - அதுகண்டு அங்ஙனம் அறிவியாமைக்குக் காரணம் நின் வஞ்சமே ஆகும் என்று அறிந்தேம் ! என்றாள் என்க.

(வி - ம்.) நின்றாற் றவிர்க வென்று அறிவுறுத்தப்பட்ட வெகுளியை யொப்பனவாகிய மாயமும் மானமும் இவறலும் மற்றுந் தீயனவாகிய மனத்தின்கண்ணவாகிய தீவினைகளையும் தவிர்கவென்று அறிவுறுத்தாமை அவற்றுக்கு நீ உடம்படுதலினன்றோ? நின் வஞ்சனை அறிந்தோமென்றவாறு.

அங்ஙனம் அறிவியாமைக்குக் காரணம் நின் வஞ்சமே என்று அறிந்தோம் என்பது குறிப்பெச்சம்.

இனி, கொலை முதலாயின செய்விக்குமென்று வெகுளியொழிந்தாயாகின், காரணத் தீவினையும் இயைந்தாயாகுதி; வெகுளி தன்னையும் பிறரையும் கொல்லுதலும் பிறவும் பண்ணுவிக்கு மாறுபோலே மாண் பிறந்த மானமும் அவை பண்ணுவிக்கும். இனி வெகுளி கொலை முதலாயின ஆக்குமாறுபோல மாயமும் இவறன்மையும் களவு முதலாயினவும் உயிர்க்கின்னாமையும் ஆக்கும் ; ஆதலால் மான முதலாயின வெகுளியோடொக்கும். வெஃகுதலும் இவறன்மையும் ஒன்றல்லவோ? வெனின், வெஃகுதலாவது பிறிதின்மேற் செல்லும் வேட்கை இவறன்மையாவது தன்னுடையவற்றினுண்டாகும் பற்று. அன்றியும் நீ மானமாகா தென்றன்றே நின்னைப் பணியாது செருக்குற்று நின்ற அரசன்முன் வில்லேற்றி அவன் மானந்தவிர்த்ததூஉம். மற்றும் நின் ஞாதிகள் தமது மானத்தால் நின்னை அவமதிப்ப, அவர்களது மானம் போக்குதற்கு நீ 'இருத்தி' காட்டினமை மறந்தாயோ? ஒருவன் தன் மனைவியுடனுங்கூட மச்சேறி அப்பஞ் சுட்டுத் தின்பானது இவறன்மை போக்குதற்கு நீ அவ்வழிச் சென்று அப்ப மிரந்ததுமறியாயோ? இவ்வாறு செய்கின்ற நீ இவை மனத்திற்றோன்றுந் தீவினையாகச் சொல்லாத தென்னோ? மற்றும் மனத்திற் பிறக்குந் தீவினைகளுக்கு வரையறையுமுளதோ? ஆதலால் மனத்திற்றோன்றுவன மூன்றென்றது நின்மடமையேயாம், என்பதாம்.

தீயவாய மாயமான முலோபம் எனக்கூட்டுக. உலோபம் எனினும் - இவறன்மை எனினும் ஒக்கும். இருத்தி - சித்தி. (கூகூ)

பொல்லாக் காட்சி

ருகூ௦. காட்சி நல்லன காண்ட லனைத்தினு
மாட்சி யாமெனின் மன்னுமஃ தோட்டுவேன்
வேட்கை யாலிது நன்றெனை வேண்டினு
மாட்சி யோட்டி வழித்தன னல்லனோ.

(இ - ள்.) அனைத்தினும் நல்லன காண்டல் காட்சி மாட்சி ஆம் எனின் - காணும் பொருள்கள் அனைத்தினும் அவற்றின் உண்மைத் தன்மையாகிய நன்மைகளையே காண்பதே நற்காட்சியின் மாண்பாகும் என்று கூறுவாயாயின் ; அஃதொட்டுவேன் மன் - யானும் அதனை இசைவேன்மன் ; வேட்கையால் இது நன்று என வேண்டினும் - நீ நினது அவாவினாலே இக்காட்சி நற்காட்சி என்று கொள்வாயாயினும் ; ஆட்சிஒட்டி-நீ அக்காட்சியைக்காணும் முறையினைப்பற்றி ; அழித்தனன் அல்லனோ - யான் இதுகாறும் அவை நற்காட்சி யாகா வென்று அழித்தேனல்லனோ ? ஆகவே நின் காட்சியனைத்தும் பொல்லாக் காட்சியே காண் ! என்றாள் என்க.

(வி - ம்.) பொருளியல்பறியாமல் நீ கண்டதே காட்சி என்கின்றனை ஆதலால் நின் காட்சியனைத்தும் பொல்லாக் காட்சியே ஆக அவற்றை நீ தீவினை என்றுமைக்குக் காரணம் யாதென்றவாறு.

இஃதென் சொல்லியவாறோவெனின்-நின் மேற்கோளால் நினக்கே பொல்லாக் காட்சியுளது; என்னை? நின் மேற்கோளில் நற்காட்சியாவது எப்பொருளும் கணிகமேயாம் என்று தெளிகையன்றோ; அஃதாயின் "யான் கண்டீர் நோன்பிகாள் முன்னேயோர் பிறப்பில் முயலானேன்" என்று முயலான அன்றுதொட்டின்றளவு நின்றாயாகப் பேசுதலின் என்பதாம். பொல்லாக் காட்சி தீதென்பது அருத்தாபத்தியாற் பெறப்பட்டது. ஆட்சி என்றது, மேற்கோளாட்சியை. (கள)

சொல்லில் தோன்றுந் தீவினைகள்

ஙகூச. பொய்குறள்ளை கடுஞ்சொற் பயனில்சொ
ல்லைத லில்லன நான்கிவை நாவினுஞ்
செய்கை தீயன வாமெனச் செப்பினீ
ரைய நன்மையென் றீரவற் றப்புடை.

(இ - ள்.) ஐய - தலைவரே ! நீர் ; பொய் குறளை கடுஞ்சொல் பயனில்சொல் இவ்வ நான்கு- பொய்யும் குறளையும் கடுஞ்சொல்லும் பயன் இல் சொல்லும் ஆகிய இவை நான்கும்; நாவின் ஆம் செய்கை தீயனவாம் - நாவினால் நிகழும் செயல்களாய்த் தீவினைகளாம் ; எனச் செப்பினீர் - என்று சொன்னீர் ; அவற்றுப்புடை நைதல் இல்லன நன்மை என்றீர் - அங்ஙனம் சொல்லவே அவற்றிற் கயலாகிய நாவின் செயல்கள் எல்லாம், துன்புறுத லில்லாதன வாகிய நல்வினைகளேயாம் என்றும் சொன்னீராகுதிர் என்றாள் என்க.

(வி - ம்.) குறள்ளை : விரித்தல் விகாரம். நைதலில்லன நன்மை என்றீர் எனக் கூட்டுக. அவற்றுப்புடை - அவற்றிற் கயலான சொற்கள்.

பொய்யும் குறளையும் கடுஞ்சொல்லும் பயனில் சொல்லும் என
இந்நான்கும் சொல்லிற்றோன்றுவனவாகிய தீவினைகள் என்று சொல்லு
தலான் அவற்றினீங்கிய சொற்களெல்லாம் நல்வினை நல்குவன
என்றும் சொல்லப்பட்டதாம் என்றவாறு.

ஒரு பள்ளியுளிருந்த சங்கத்தார் பலருட் சிலரைக் குற்ற
மூடையோ ரென்றும், உடனுண்ணல் உடனிருத்தல் முதலியவை
களுக்குத் தகுதியுடையாரல்லர் என்றும் கழித்தால் ஒழிந்தார்
எல்லாரும் தகுதியுடையாரானவாறுபோலக் குற்றமென்றுன்றுங்
கழிக்கப்பட்ட அந்த நான்கு சொல்லுமொழிந்தன நன்மையுடை
யனவே யாமென்பது, அவை குறளையல்லாத மெய்யுரை முதலியன;
அவற்றுட் சில வருமாறு:—

பேரவைக்கண் அறவுரையறிவுறுத்தாகின்ற புத்தன் 'சிந்தாமாணவை'
யையும், 'பரிவிராசிகை'யையும் கொன்றவாறறிவா னொருவன், "இவன்
அறவோன்போல அறங்கூறுகின்றான்; சிந்தாமாணவையையும் பரிவிரா
சிகையையும் கொன்றவாறு இது," என்று சொல்லுதலும், "இவன்
கண்மாளப் பெண்ணின்பால் செக்கானுக்குப் பிறந்து தாயினது
வலமருங்கிற் பீறிப் பிறந்தான்," என்றலும், "கபிலபுரத்து முன்னொரு
நாள் நீலகேசியாரோடு சொற்போரிட்டுத் தோற்றான்" என்றலும்,
குண்டலகேசி முன்னே சென்று "இவள் தன்கணவனைக் கொன்றா
ளொரு தீவினையாட்டி," என்றும், காளன் முன்சென்று "இவன்
பலவழியுங் களவுகண்டு திரிந்தானொரு கள்வன்" என்றும், ஓதா
திருப்பானொரு சீலியுழைச் சென்று "இவன் அறிவிலி," என்றும்
கூறுதன் முதலாகிய வேளாச் சொற்களும், மெய்க்கோளும்
வாய்மையும் முதலாயின.

இவை, உண்மை சொல்லுதலானும் முட்டுதலின்றி எதிர் நின்று
சொல்லுதலின் குறளையன்மையானும், மெத்தெனச் சொல்லுதலின்
கடுஞ்சொல் அன்மையானும் புத்தன் முதலாயினாரைக் குற்றமேற்றிப்
பிறரைக் கடுஞ்சொல் குணமேற்றும் பயனுடைமையானும் இவை
போல்வனவும் அறக்காரணமா மென்பது.

இனி, பொய்யெல்லாம் தீவினையெனின், புத்தன் அடி தாமரை
என்புழிப் புத்தன் அடி தாமரையன்றாயினும் அதனைத் தாமரையாகச்
சொல்லுதலால் தீவினையாமென்பது. (௬௮)

கண்மாளப் பெண் - கம்மாளப் பெண்.

இதுவுமது

௩௫௨. மண்டை கேண்டிகை மாட மடாமனை
கோண்டை குண்டிகை கூறை குடங்குடை
யுண்டி கட்டி வுடம்புயி ராதிய
பிண்ட மாய பிறபிற யாவையும்.

(இ - ள்.) மண்டை......உயிர் ஆதிய - மண்டை முதலாக
உயிர் ஈறாக ஈண்டுக் கூறப்பட்ட பெயர் முதலாக; பிண்டம் ஆய-
அட்டக பிண்டமாகிய பொருட் பெயர்களும், பிறபிற யாவையும்-

இன்னோரன்ன வேறு வேறு பொருள்களின் பெயர்களும் எல்லாம்; என்க.

(வி - ம்.) வெளிப்படை. (கக)

இதுவுமது

ருகூ௩. கூட்ட மான குறியெனி னலதை
பூட்ட லங்கோர் பொருளின்மை வேண்டியு
மீட்டு மீட்டிவை சொல்லின மெய்யுரை
நாட்டு மாறென்கொ லோவிளி நாசநீ.

(இ - ள்.) விளி நாச நீ - எப்பொருளும் அழிந்து பாழாம் என்றும் கொள்கையுடையோய் நீ; கூட்டமான குறி எனின் அல்லதை-நில முதலிய எட்டுருப்புக்களின் கூட்டமாகிய பிண்டங் களுக்கு யாமே கற்பித்துக்கொண்ட பெயர்கள் என்று கூறுவ தன்றி; பூட்டல் அங்கு ஓர் பொருள் இன்மை வேண்டியும் - அப் பெயரோடு பூட்டுதற்கு அவ்விடத்தே யாதொரு பொருளும் இல்லை என்பதனை நீயும் மேற்கோளாகக் கொண்டிருந்தும்; மீட்டு மீட்டு இவை சொல்லின - மீண்டும் மீண்டும் அப்பெயர்களே பொருள்கள் போல இவை குறிக் கந்தம் என்று சொல்லிய நின் சொற்களை; மெய் யுரை நாட்டும் ஆறு என் - மெய்யுரையாக நிறுத்தும் வழி யாதோ? கூறாய் என்றாள் என்க.

(வி ம்.) நிலமுதலியவற்றின் கூட்டமாகிய அட்டக பிண்டங்களுக் கிட்ட குறி யென்பதல்லது அவை யென்னும் பொருள் இன்மை நின் மேற்கோளாக வைத்தும் அப் பெயருடைய பொருளாக அவற்றைச் சொல்லுதல் பொய்யாதலின் அவ்வாறு சொல்லுகின்ற நீ மெய் சொன்னுயாமாறென்னை? என்றவாறு. (எ0)

வேறு

சத்தை

ருகூ௪. நிலம்போய் நீர்போய் நெடுநகர் தாமும்போய்
கலம்போய் காற்றொடு தீயும்போய் காடும்போய்
குலம்போய் யேயெனக் கூறுஞ்செங் கூறையாய்
சலம்போய் யன்றிதோன் றேநுங்கள் சத்தையே.

(இ - ள்.) நிலம் பொய் நீர் பொய் நெடு நகர் தாமும் பொய்- கண் கூடாகக் காணப்படுகின்ற இந்த நிலமும் பொய் நெடிய நகரங்கள் தாமும் பொய்; கலம் பொய் காற்றொடு தீயும் பொய் காடும் பொய் - கலங்களும் பொய், காற்றும் பொய், காடுகளும்

பொய்; குலம் பொய்யே எனக் கூறும் - மக்கட்குல முதலியனவும் பொய்யே என்று காண்டல் முரண் கூறுகின்ற; செங்கூறையாய்!- செம்படாம் போர்த்த புத்ததேவனே !; சலம் பொய் அன்று இது ஒன்றே நுங்கள் சத்தை - இவ்வாறு நீங்கள் எல்லாம் பொய் பொய் என்று கூறுகின்ற நுங்கள் பொய்மட்டுமே நுங்கட்கு மெய்ப் பொருளாம் போலும் எனருள் என்க.

(வி - ம்) நீங்கள் கூறுகின்ற நிலம் முதலியன பொய்யல்ல உள் பொருளே, நீங்கள் அவற்றைப் பொய் என்பதே பொய் என்று அசதியாடியபடியாம்.

இச் சொல்லிய வெல்லாம் நுங்கள் பக்கத்தால் பொய்யாதலின் நுங்கள் சத்தியவாதத்துவம் ஒன்றன்று என்றவாறு. (எக)

குறளை.

ருகடு. குற்ற மென்ற குறளையே யொப்பன
மற்றுஞ் சால வுளபிற மாண்பில
வொற்றைப் பெண்ணுரை யாடுதல் யோகங்கள்
கற்ற லேகடுஞ் சொல்லின்ன காத்தலும்.

(இ - ள்.) (ஐய! நீயிர் சொல்லிற் றென்றும்) குற்றம் என்ற குறளையே ஒப்பன - குற்றம் என்று கூறிய குறளைச்சொல்லையே நிகர்ப்பனவாகிய ; மற்றும் சால உள - அதனையன்றி வேறு பற்பல சொற்களும் உள ; மாண்பு இல - மாட்சிமையில்லாத அவையாவை எனின் ; ஒற்றைப் பெண் உரையாடுதல் - தனித்துநின்ற பெண்ணோடு காமமுற்றுப் பிறர் அறியாமல் உரையாடுதலும்; போகங்கள் கற்றல் - அவளோடு காமநுகர்ச்சிக்குரிய விளைய மொழிகளைப் பேசுதலும் ; கடுஞ்சொல் இன்னபிற காத்தலும் - கடிய தீவினைச் சொற்களாகிய இன்னோரன்னவற்றைக் காத்தலும் வேண்டாவோ ? என்றுள் என்க.

(வி - ம்.) குறளைச் சொல்லைப்போன்ற தீயசொற்கள் பலவுளவாக அவற்றை யெல்லாம் தொகுத்தோதாது குறளையை மட்டுமே கூறியது குன்றக் கூறலாம் என்றவாறு.

ஒற்றைப் பெண் என்றது தனித்து நின்ற ஏதிலாட்டியை. பிறர் மனைவியரோடு அவர் கணவர் அறியாது பேசும் இன்பச் சொற்களும் குறளைச் சொற்களையே ஒக்கும் என்பது கருத்து. (எஉ)

கடுஞ்சொல்

ருகசு. பையச் சொல்லுத னல்வினைப் பாலென்று
லெய்யக் குற்ற வெறியப் புணர்க்குங்கால்
வையத் தியாவரு மந்திர மாமவை
செய்யச் சொல்லுநர் செவ்விய ராபவோ.

(இ - ள்.) பையச் சொல்லுதல் நல்வினைப் பாலென்றால் - நீயிர் கடுஞ்சொல் தீவினை தரும் என்றமையால் மெத்தெனப் பேசுதல் நல்வினை தரும் எனநீரல்லிரோ? அங்ஙனம் பேசுதல் நல்வினையாமெனின்; வையத்து யாவரும் எய்ய குற்ற எறிய புணர்க்குங்கால் - உலகின்கண் தம்பகைவர்மேல் அம்பெய்யவும் ஈட்டிமுதலியவற்றால் குத்தவும் வாளால் எறியவும் கயவரை ஏவுங் காலத்தே; மந்திரமாம - மறைவாக மெத்தெனவே பேசுவர்; அவை செய்யச் சொல்லுநர் செவ்வியர் ஆபவோ - அச் செயல்களைச் செய்ய மெத்தெனச் சொல்லுபவர் அறவோர் ஆவரோ? கூறுவாய்! என்றாள் என்க.

(வி - ம்.) மறைவாக மெத்தெனப் பேசிக் கொலை முதலாயின செய்ய ஏவுதல் அறவினையாயோ? என்றவாறு.

கொலையேவுதல் கொலையுளடங்குதலின் தீவினையன்றோவெனின், கொலையுங் களவுங் காமமும் உடம்பாறறேன்றுந் தீவினைகளாதலினும். கொலையேவன் முதலாயின சொல்லாற்றேன்றுந் தீவினையுட் கூறுமை யாலும் அடங்காதென்பது கருத்து.

இனி, கடுஞ்சொல் என்பது கேட்டற்கின்னுதாகிய கடிய சொல்லன்றே உயிர்களுக்கு இன்னுமைதரும் சொல்லெல்லாம் கடுஞ் சொல்லாமெனின் உயிர்களுக்குத் துன்பமான சொல்லைச் சொல்லுதல் தீவினை என்னவமையாதோ? இந்தப் பாகுபாட்டாற் போந்ததென்னை? என்பதாம். அன்றியும்,

"கெட்டகமு தைக்குரல தென்பர்குயில் கூவி
னட்டவர்கள் போன்மகிழ்வர் நண்பதனோ டென்னை
பட்டபொருள் சொல்லலுற லுண்டெனினும் யாரும்
வெட்டென வுரைத்தலை விடுத்திடுமி னென்றான்"

என்பதனாற் கடுஞ்சொல்லுக்கு அவனிலக்கணஞ் சொல்லியவாறு அறிந்து கொள்க. (எ௬)

இதுவுமது

ருஙஎ. கடுக்கத் தாமடி கள்ளெனக் காய்ஞர்யா
ரொடுக்கச் சாம்பிவை தாலுவப் பாரில்லை
கொடுக்க வென்றல் குசலமன் றென்பதோ
படுக்க லுற்ற பதகநின் பாடமே.

(இ - ள்) கடுக்கத்தாம் அடிகள் என - ஒரு சாத்தன் உரத்துக் கடிதாகக் கூறி அடிகளே! என்று அழைத்தால், காய்ஞர் யார் - அங்ஙனம் அழைத்தவனைச் சினப்பவர் யாரேயுளர்; ஒடுக்கச் சாம்பி வைதால் - ஒலி ஒடுங்கும்படி குறைத்து மெத்தென வைதால்; உவப்பார் இல்லை - அது கேட்டு மகிழ்வாரும் யாருமில்லை; கொடுக்க என்றல் - கொடுக்க என்று ஏவுங்கால்

அதன்கண் வல்லெழுத்தே மிக்குக் கடிதாக ஒலித்தலால்; குசலம் அன்று என்பதோ - அங்ஙனம் ஏவுதல் நல்வினை அன்று தீவினையேயாம் என்பதோ ?; படுக்கல் உற்ற பதக - இவ்வா றெல்லாம் கூறி மக்களைத் தாழ்ந்தலுற்ற தீவினையாளனே !, நின் பாடம் - நின்னுடைய நூன்முறை என்றாள்; என்க.

(வி - ம்.) கடுக்க - கடிதாக. ஒடுக்க-ஒடுங்க. சாம்புதல் - மெலி தல். வைதல் - வசை கூறுதல். கொடுக்க என்னும் சொல்லில் வல்லெழுத்தே மிக்கிருத்தலால் கடிதாக ஒலிக்கும்; அதனைத் தீவினை என்பதோ என்றவாறு. பாடம் - நூல். குசலம் - நல்வினை.

அடிகளெனக் கடிதாகச் சொன்னதற்காக வருந்தீமையும் மெத்தென வைததற்காக வரும் நன்மையும் இல்லையன்றே ? உண்டெனின் கொடுக்கவெனக் கடிதாகச் சொல்லுதல் தீவினையோ? தீவினையாள நின் நூன் முறை என்றவாறு. (எச)

பயனில் சொல்

ருஙஅ. பாவ மாம்பய னில்லன சொல்லலேற்
பூவ மேபொருள் கைக்கொண்டு புற்கலர்
சாவச் சொல்லுவ தத்துவ மாம்பிற
வேவ னன்றென்றி யொப்பவொன் றில்லையேல்.

(இ - ள்.) பயன் இல்லன சொல்லல் பாவம் ஆம் - நின் மேற்கோளில் பயன் இல்லாத சொற்களைக் கூறுதல் தீவினையாகு மெனின் ; புற்கலர் பொருள் கைக்கொண்டு சாவச் சொல்லும் பூவும் ஆம் - மாந்தர் ஆறு செல்வோர் கைப்பொருளைப் பறித்துக் கொண்டு அவரைச் சாகும்படி கூறுவனவெல்லாம் நல்வினையாம் ; ஏவல் நன்று என்றி - இவ்வாற்றால் சாகும்படி ஏவுதல் நல்வினை என்கின்றாய் யல்லையோ?; தத்துவம் ஒப்ப ஒன்று இல்லை - நின்னு டைய இத்தத்துவத்தைப் போன்ற சிறந்த தத்துவம் பிறிதொன் றில்லை காண் ! என்றாள் என்க.

(வி - ம்.) பூவம்-அறம். சொல்லுவ பூவம் ஆம் என்றும் தத்துவம் ஒப்ப ஒன்று இல்லை யென்றும் கூட்டுக. புற்கலர் - ஈண்டு மாந்தர் என்னும் பொருட்டாய் நின்றது.

பயனில சொல்லுதல் தீவினையாமெனின், பயனுடையன சொல்லு தல் அறமாமன்றே நின் பக்கத்தால். அவ்வாறாயின் ஒரு பயன் கருதி ஒருவரைச் சாவச் சொல்லுதலும் நின் மேற்கோளால் அறமாம். ஆதலின் நின் நெறியை ஒப்பது பிறிதொரு நெறியில்லை என்றவாறு.

இனி, ஒருவன் கொலையேவல் தீவினையன்றோவெனின் மொழியால் வருவனவாகச் சொல்லப்பட்ட தீவினை நான்கினும் கொலை முதலாயின அடங்காமையானும் கொலை யேவலையுங் கூட்டி மொழியால் வருவன ஐந்தென்னாமையானும், கொலை முதலாயின மனத்தானிகழ்வன வென்றே யோதுதலானும் நின் மேற்கோளால் அது தீவினையன்றென் பதாம். (எரு)

இதுவுமது

ருகூசு. காயத் தாற்கொலை காமங் களவென
நீயத் தாசொன்ன நேருந் திறமென்னோ
மாயத் தான்மன மின்றி யவையவை
தேயத் தியாருளர் செய்பவ ரென்பவே.

(இ - ள்.) அத்தா நீ மாயத்தால் கொலை காமம் களவு காயத்தால் எனச் சொன்ன - ஆசிரியனே நீ பொய்யாகக் கொலையும் காமமும் களவும் ஆகிய தீவினைகள் உடம்பாலே நிகழ்வன என்று கூறியவற்றை; நேரும் திறம் என்னோ - உலகத்தார் ஒப்புதற்கு வழி யாது? ஒவ்வாமைக்குக் காரணம் என்னை எனின்; தேயத்து - உலகின்கண்; அவை அவை - அவ்வத் தீவினைகளை; மனம் இன்றிச் செய்பவர் - மனத்தின் உதவியின்றிச் செய்வோர்; யாருளர் என்ப - யாரேயுளர் என்று உலகினர் கூறுவர் ஆகலான் என்றான் என்க.

(வி - ம்.) கொலை முதலிய மூன்றும் உடம்பிற் றோன்றுவன என்று நீ சொன்னால் அதற்கு உலகத்தாரியையார்; என்னை இயையாதவாறு? என்னின் கொலையுள்ளம் ஒழியக் கொலையும், களவு காண்ப னென்னும் உள்ள மொழியக் களவும் காமவுள்ள மொழியக் காமமுஞ் செய்து முடிப்பார் உலகின்கண் எவருமில்லாமையின் என்றவாறு.

உள்ளத்திற் றோன்றுந் தீவினைகள் மொழி மெய்களை அவாவாவாறு போல உடம்பிற் றோன்றுவன உள்ளம் மொழிகளை அவாவா வாதல் வேண்டும் என்பது.

இனி, கொல்வேனென்னு நினைவு முதலாயின உள்ளத்திற் றோன்றுந் தீவினையுட்பட்டன வில்லை யென்றாட்கு, வெகுளியாலன்றோ கொலை எண்ணம் வருவது; வெகுளியை விலக்கினமையின் அதுவும் விலக்குண்டதன்றோ வெனின் விளையாட்டின் பொருட்டும் கறிதின்னற் பொருட்டும் கொல்வுழி வெகுளியொழியவும் கொலையுள்ளம் பிறத்தலின் வெகுளியிற்படாதென்பது.

இனிக் கொல்வேன் என்னுஞ் சொல் முதலாயின மொழியிற் றோன்றும் தீவினையுட்பட்டதில்லை யென்றாட்குக் கடுஞ் சொல்லுட் படுமன்றோ வெனின், வெட்டென வுரைத்தலே கடுஞ்சொற் கிலக்கணமாக வோதினமையிற் படாதென்பது. (எகூ)

உடம்பிற் றோன்றும் பிறதீவினைகள்

ருசல. வழிமுள் ளூன்றன் மனைசுடன் மாந்தரைக்
குழியு ளூந்துதல் கோயிற் கலஞ்செய்த
லொழிவில் யானைமுன் னோட்டலோ டின்னவும்
பழியும் பாவமு மாக்குவ வல்லவோ.

(இ - ள்.) வழி முள ஊன்றல் - நடைவழியிலே முள்ளை ஊன்றுதலும் ; மனை சுடல் - பிறர் இல்லத்தில் தீக் கொளுவுதலும்; மாந்தரைக் குழியுள் உந்தல் - மக்களைக் கிணறு முதலிய குழியிற் றள்ளுதலும்; கோயில் கலஞ் செய்தல் - கோயிற் காரியங்களைக் கலக்கஞ் செய்தலும்; ஒழிவு இல் யானைமுன்னொடு உலோடு - ஒழிவில்லாத யானை முன்னே விடுதல் முதலிய இவற்றினோடு ; இன்னவும் - இவைபோல்வன பிறவும் ஆகிய வினைகள்; பழியும் பாவமும் ஆக்குவ அல்லவோ - உடம்பிற் றோன்றிப் பழியையும் தீவினையையும் உண்டாக்குவன வல்லவோ ? என்றாள் என்க.

(வி - ம்.) ஈண்டுக் கூறப்பட்டனவும் இன்ன பிறவும் உடம்பாற் றோன்றுந் தீவினைகளன்றோ? உடம்பிற் றோன்றுவன மூன்றே என்ற தெற்றிற்கு என்றவாறு.

கலஞ் செய்தல் - கலகஞ் செய்தல். கோயிற்கு அலஞ் செய்தல் எனப் பிரித்துக் கோயிலை அழித்தல் எனினுமாம். அலஞ் செய்தல் - கேடு செய்தல். (௭)

பௌத்தர் கூறும் கொலையின் இலக்கணம்

௩௪௮. ஒன்றி நின்ற வுயிரை யுயிரிது
வென்று சிந்தித் தழிப்ப னெனவெண்ணி
நன்றி யில்ஃறொழி றோற்ற நவையினாற்
கொன்ற தேகொலை யென்றைந்திற் கூறினாய்.

(இ - ள்.) ஒன்றி நின்ற உயிரை-கொலை செய்தற்குரியதாக அமைந்து நின்ற உயிரை; இது உயிர் என்று சிந்தித்து - இஃது உயிர் என்றுணர்ந்து, அழிப்பன் என எண்ணி - இதனை யான் கொல்லுவேன் என்று நினைந்து; நன்றி இல் தொழில் தோற்ற - நன்மையில்லாத வெட்டுதல் குத்துதல் முதலிய தொழில்களைச் செய்து; நவையினால் - அவ்வுயிர் இன்னலுறுமாற்றாலே; கொன்றதே கொலை என்று — அதனை ஒருவன் கொன்ற வினைதான் கொலைத் தீவினையாகும் என்று; ஐந்தில் கூறினாய் - ஐந்துறுப்புக்களோடே நிகழ்வதே கொலை யென்று வரையறையுஞ் செய்து கூறினை ? என்றாள் என்க.

(வி - ம்.) இது, "வீதல் வீவ துயிராத லக்குறி
காய்தல் கோறல் கொலையேவ லென்றிவை
யோய்த லின்றி யுடனாத லால்வருஞ்
சேதனைக் குக்கொலை யாமெனச் செப்பினான்"

என்னுஞ் செய்யுட் கருத்தை வழிமொழிந்தவாறு.

இனி, இதன்கண், ஒன்றி நின்ற உயிரை என்பது, வீவது உயிராதல் கூறிற்று. உயிரிது என்று சிந்தித்து; உயிர் என்னும் குறிக்கோள் கூறிற்று. அழிப்பனென எண்ணி, என்பது காய்தல் கூறிற்று

நன்றியில் தொழில் தோற்ற வென்பது கோறல் கூறிற்று. இத்துணை யாலும் "வீதல், வீவதுயிராதல், அக்குறி காய்தல், கோறல்" என்னும் ஐந்துறுப்புக்களும் கூறப்பட்டன. கொலை என்று ஐந்திற் கூறினுய் என்பன இவை. "ஓய்தலின்றி உடனுதலால் வருஞ் சேதனைக்குக் கொலையாதல் செப்பினுன்" என்பதனுல் ஐந்துறுப்புங் கூடியதே கொலையாவது; ஒழிந்தன கொலையாகா வென்று அவன் கூறியவாறு கூறிற்று.

வீதல்-கொலைப்படுதல்; வீவதுயிர் ஆதல்-கொலையுண்டது உயிர்ப் பொருளாதல்; அக்குறி - கொல்லவேண்டும் என்னும் குறிக்கோள்; காய்தல் - துன்புறுத்தல்; கோறல் - கொல்லுதல்.

இவ்வாறு, ஐந்துறுப்புங் கூடியதே கொலை யென்றதனுல் கொலை தீவினை யன்று என்பது பெறப்பட்டது. என்னை? அந்த ஐந்துறுப்புக் களும் ஒருங்கே கூடல் ஒருபொழுதும் நிகழாமையான் என்க. அஃதாவது: உடனுதல் என்பதற்குப் பொருள், அவை ஒருகாலத்து இவ்வைந்தும் நிகழ்தல்தான், இவ்வைந்தும் ஓரிடத்து நிகழ்தல்தான் என இவ்விரண்டல்லதில்லை; அவ்வைந்தும் ஒருகாலத்து நிகழ்தலும் கூடாதாம். என்னை? உயிரென்று குறிக்கொள்வது ஒரு காலத்தும், காய்தல் ஒரு காலத்தும், கோறல் ஒரு காலத்தும், வீதல் ஒரு காலத்து மல்லது இவ்வைந்துமொரு காலத்து நிகழ்தல் கூடாமையான் என்க.

இனி, ஓரிடத்து நிகழ்தலுங் கூடாதாம்: யாங்ஙனமெனின் பொருள் கணத்திற்றேன்றி யழியுமாதலின், உயிர் என்று குறிக்கப் பட்ட தொன்று காயப்பட்டது. அதன்வழித் தோன்றிய பிறிதொன்று கொல்லப்பட்டது, அதன்வழித் தோன்றிய பிறிதொன்று செத்ததுவும், அதன்வழித் தோன்றிய பிறிதொன்று இத்துணையும் ஒன்றின்கண்ணே நிகழின் கணிக மேற்கோள் மலைவாம். இவற்றுட் குறிக்கோளும் காய்தலுங் கோறலும் கொல்வான் பிண்டத்தன; ஏனையன கொல்லப் படும் பிண்டத்தன ஆதலால் ஓரிடத்து ஆதல் கூடாதாம். "ஓய்தலின்றி யுடனுதலால்" என்றமையால் இடையறவின்றி நிகழுமே உடனுதல் எனின் காய்தல் நிகழ்ந்தவுடன் கோறல் நிகழாது பிறிதோர் அறிவு பிறந்து பின்பு கோறல் நிகழின் கொலையில்லை என்பதாம். ஆதலால் ஐந்துறுப்பும் கூடாமல் கொலை நிகழாதாம். 'வீதல்' கொலைக்கு உறுப்பென்று வேண்டவே உயிர்க்கழு, கடைத்தூண்டில் சிறையிடல் உறுப்புக் குறைத்தல் என்றிவையும், அடித்தல் கட்டுதல் சூடிடுதல் முதலாயினவற்றுல் துன்பமுறுதலும் கொலையுட்படா. உயிர்க்கழு, கடைத்தூண்டில்களாற் சிறிது காலங்கழித்து வீதலுண்டெனின் உறுப்புக்கள் ஒழிவின்றி உடனுகாமையிற் கொள்ளப்படா தென்பது. "வீவதுயிராத"லென்பது வேண்டவே ஒழிந்தவுறுப்புக்கள் கூடினும் குற்றியை மகனென்று மறிவினுல் வெட்டினுனுக்குக் கொலை யில்லையாம். உயிர் என்னும் குறிக்கோள் வேண்டவே ஒழிந்த வுறுப்புக்கள் கூடினும் மரமென்னும் குறிக்கோளால் மகனை வெட்டினு னுக்குக் கொலையில்லையாம். காய்தல் என்பது வேண்டவே, கறி தின்னற் பொருட்டாகவும் விளையாட்டுவகையானும் வந்த கொலை கொலையல்லவாம். கோறலென்பது வேண்டவே, ஊர் சுடுதல் நிலங் கல்லிப் புதைத்தல் கடல் முதலியவற்றுட் கட்டிப் புக விடுதல் இவை முதலாயின கொலையல்லவாம். ஆதலால் ஐந்துறுப்புங் கூடியதே கொலை யென்றலால் கொலை தீவினையாகாதென்பது போந்தமை உணர்க.

(எஅ)

இதுவுமது

௫௪௨. தேவ னையிவன் றேவ னெனவெண்ணிப்
பாவ னையிற் பணியு மனத்தனுய்த்
தூவென் மும்மையே தோற்றித் தொழானங்கோர்
தாவ னைதொழு தான்றவ றெய்துமோ.

(இ - ள்.) தேவனை இவன் தேவன் என எண்ணி - ஐய ! ஒரு சாத்தன் புத்த தேவனாகிய நின்னைக் கண் கூடாகக் கண்டு இவன் புத்த தேவனே என்று குறிக்கொண்டு; பணியும் மனத்தனுய் - நின்னை வழிபாடு செய்ய வேண்டும் என்று அன்புறு நெஞ்சமுடையனுய் ; பாவனையில் - வழிபாட்டுமுறைமையினாலே ; மும்மையே தோற்றி - இருந்தும் நின்றும் தொழும் மூன்றுவகை யையும் மேற்கொண்டு; தொழான் - தொழாதவனும் ; அங்கு ஓர் தாவனை தொழுதான்- அவ்விடத்தே ஒரு புத்தபீடிகையைக் கண்டு தொழுதானுயின்; தவறு எய்துமோ?; அவன் அந்த நல்வினை பெருமற் கெடுவனே? கெடானுயின் உயிரையே அன்றி அவற்றின் உடம்பையும் தசையையும் பிறவற்றை அழித்தவனும் கொலைத் தீவினை யெய்துவான் என்றுள் என்க.

(வி - ம்.) தேவனைத் தேவனென்றெண்ணி அன்பு செய்து வழி பாட்டு முறையாலே தொழாது அத்தேவனின் படிமத்தையாதல் கோயிலையாதல் என்பையாதல் கண்டு தொழுதான் நல்வினை பெருது கெடுவனே? என்றவாறு.

கெடானுயின் உயிரையேயன்றி அவற்றின் உடம்பு முதலிய வற்றை யழித்தவனும் கொலைத் தீவினை யெய்துவான் என்பது எய்துமோ என்புழி வந்த ஒழியிசை ஓகாரத்தாற் பெற்றும்.

இச் செய்யுளால் தொழுதலும் தொழப்படுவான் புத்தனுதலும் புத்தன் என்னும் குறிக்கோளும் அவன்மேற் காதலும் இரங்கியும் இருந்து நின்று தொழும் முறைமையும் என ஐந்துறுப்புங் கூறினமை யுணர்க. (௭௧)

இதுவுமது

௫௪௩. ஒத்த வன்றனை யுறுபகை யேயெனக்
குத்தி னுற்குங் கொலைவினை யில்லெனப்
புத்த னீருரைத் தீரங்கோர் புற்கலன்
செத்த வாறது சிந்திக்கற் பாலதே.

(இ - ள்.) புத்தனீர் - புத்தபெருமானே! நீயிர் இவ்வாறு கொலைக்கு இலக்கணம் கூறின்; ஒத்தவன்றனை - ஒரு சாத்தன் தன் பகைவனைப் போல்வான் ஒருவனைக் கண்டுழி; உறுபகையே எனக் குத்தினுற்கும் - இவன் மிக்க பகைவனே யென்று நினைத்து

வேல் முதலியவற்றாற் குத்திக் கொன்றான் ஆயின் அவனுக்கும்; கொலை வினை இல் என - கொலையால் வருந் தீவினை இல்லையாகும் என்று; உரைத்தீர் - அறிவுறுத்தருளினீரல்லிரோ?; அங்கு ஓர் புற்கலன் செத்தவாறு - அவ்வழியும் ஓர் உயிர் கொலையுண்டிறந்த வாறேயாம்; அது சிந்திக்கற் பாலதே - ஆகவே அவ்வினை தீவினையோ? நல்வினையோ என்று ஆராய்ந்தறியற்பாலதே காண்! என்றாள் என்க.

(வி - ம்.) புத்தரே நீயிர் ஐந்துறுப்பும் கொண்டதே கொலையென இவ்வாறு கொலைக்கு இலக்கணமோதின் பகைவனைப் போல்வான் ஒரு வனைப் பகைவனென்று குறித்துக் கொன்றாற்கும் கொலையில்லையாம். என்னையெனின் பகையென்னுங் கருத்தினாற் பிறனைக் கொன்றதன்றி அவனைக் கொல்லவேண்டும் என்னும் கருத்தின்மையின் அவனைக் கொன்றிலனும்; மேலும் பகைவனையும் கொன்றிலன் ஆதலால் அவனுக்குக் கொலையில்லையாம்; என நீயிர் கூறினீராகின்றீர். அவ்விடத்தும் ஓருயிர் இறந்தமை ஆராய வேண்டாவோ? என்றவாறு.

பிறனைக் கொல்வேனென்னும் கருத்தின்றியும் கொலை முடிதலிற் றீவினையெனின் கருத்தின்றிக் கொலை முடிந்தவழியும் கொலை தீவினையேயாகல் வேண்டும் என்பதாம். (அ0)

நீலகேசி கொலைவினைபற்றித் தன் கருத்துரைத்தல்

ருசச. கொன்ற பாவமுண் டாயின் குறட்கண்ணும்
ஒன்று மேயென் றுரைப்பனொப் பாரியார்
பொன்றினும் புத்த ரேநீவிர் சொல்லின
சென்று சேர்தலைச் சித்தம தின்மையால்.

(இ - ள்.) கொன்ற பாவம் உண்டாயின்-(புத்தபெருமானே நுமது கணிக சித்தாந்தத்தால் கொலையால் வருந் தீவினையும் அது பிறந்த கணத்திலே கையறக் கெடல் வேண்டும், வேண்டவே அஃதில்லையாம்) இனிக் கொன்றமையால் தீவினை உண்டென்பாயாயின்; குறட்கண்ணும் ஒன்றும் என்று உரைப்பன் - அத் தீவினை ஐந்துறுப்புங் கூடாதே குறைந்த விடத்தும் கொலையுண்டேல் தீவினையுண்டாகும் என்று யான் எனது சித்தாந்தத்தாற் கூறுவேன்காண்; யார் ஒப்பார்-என் கூற்றினை யாரே ஒப்பாதவர்; சித்தம் அது இன்மையால் - கொலைக்குக் காரணமான அவ்வறிவானது அக்கணத்தே கையறக் கெடுதலாலே; பொன்றினும் - கொலை செய்தவன் இறந்தவிடத்தும், நீவிர் சொல்லின - நீயிர் கூறிய அத்தீவினைகள்; சென்று சேர்தலை - மறுமைக்கண் வந்து தம்மைச் சேர்வதனை; யார் ஏற்பார்; என்றாள் என்க.

(வி - ம்.) யார் ஏற்பார் என்றது அவாய் நிலையால் வருவித்துக் கூறப்பட்டது.

குறள் - ஐந்துறுப்பிற் குறைந்தது. என் கூற்றை ஒப்பார் யார்
எனவே, நின் கூற்றை ஒருவரும் ஒப்பார் என்பதும் பெற்றாம்.

இதனாற் போந்தது, ஐந்துறுப்பும் கூடியவழிச் செய்தலும் நின்
கணிக சித்தாந்தப்படி தீவினையாகாது; என்னை? செய்த அறிவு அப்
பொழுதே கெட்டமையான் என்பதாம்.

இதனால் நின்மதம் அடாதென்று கூறித் தன்மதங் கூறினள் என்க.
(அக)

## இதுவுமது

௫௪௫. பட்டி லன்பகை யாலெய்து பாவமங்
கோட்டி நீயவ் வுயிர்க்கொலை யாலென்னில்
துட்டனைத் தொழு தோன்றுறந் தானெனக்
கேட்ட னன்னிது கேட்க வினைநிலை.

(இ-ள்.) அங்கு நீ ஒட்டி-நீ, பகைவனென்று பிறனைக் கொன்ற
வனுக்குக் கொலைத் தீவினையுள தென்னுமிடத் திசைந்து; அவ்
வுயிர்க் கொலையால் - அந்தக் கொலையினால்; பகையால் எய்தும்
பாவம் பட்டிலன் எனின்-அவன் பகைவனைக் கொன்ற தீவினையை
எய்தான் (எற்றாலெனின் பகைவனைக் கொன்றிலனாகலின்) என்பா
யாயின்; துறந்தோன் எனத் துட்டனைத் தொழுதோன் - மெய்த்
துறவோன் என்று கருதித் துறவு வேடத்துள் மறைந்து வந்த
கயவனை வணங்கியவன்; கெட்டனன் - நல்வினையுறாது கெட்டவன்
ஆதல் வேண்டும்; வினைநிலை இது கேட்க - நீ கூறும் வினை
யியல்பு இதுவாகும் கேட்குங்கால் என்றாள் என்க.

(வி - ம்.) நினைத்தலும் செய்தலோ டொக்கலின் பகைவனல்லனா
யினும் பகைவனென்றே கருதிக் கொன்றமையின் அவனைக் கொன்ற
தீவினையும் அவனுக்குளதாகல் வேண்டும்; என்றற்கண், பகைவனைக்
கொல்லாமையின் தீவினையும் இல்லையாம் என்னின் துறவோன் என்று
கருதித் துறவு வேடங்கொண்ட கயவனை வழிபட்டவனுக்கு நல்வினை
இல்லையாதல் வேண்டும் என்றவாறு.

தொழுபவன் துறவோன் என்றே கருதித் தொழுதலின்
நல்வினையாம் என்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்தது ஆகலின் அது கூறி
மறுத்தபடியாம்.

பழையவுரை ஏடெழுதுவோராற் பிழைபட்டிருத்தல் வேண்டும்
என்று தோன்றுகின்றது. அது வருமாறு:—

"பகைவனைக் கொன்றமையால்? (கொல்லாமையால் என்றிருப்பது
நன்று) அவனும் பாபம் படான்; கொலையால் வரும் பாவம் படும்
என்றிசைந்து சொல்லில் ஒரு மொட்டையன் தூர்த்தனுயுள்ளான்
செம்படாம் போர்த்துச் செருப்புத் தொட்டு வெற்றிலைதின்றுவருவானை
ஒருபாசகன் சங்கத்தானென்று நினைத்துத் தொழுதான்; சங்கத்தாரைத்
தொழுதபலம் பெறாது தூர்த்தனைத் தொழுதானுய்க் கெடல் வேண்டும்
இது கருமசுபாவம் என்றவாறு; பாவம் என்பதனை இருவழியும்
கூட்டிக் கொள்க" எனவரும். இதனை ஆராய்ந்து கொள்க. (அஉ)

இதுவுமது

௫௪௬. ஆய்ந்த வைந்தினு மாம்வினை யார்ப்பெனின்
வீய்ந்த தின்மையின் வெய்ய வவீசிதான்
காந்தி பாலி யிரங்கக் கலகனைப்
போழ்ந்து கோடல் பொருந்தல தொக்குமே.

(இ - ள்.) *ஆய்ந்த ஐந்தினும் வினை ஆர்ப்பு ஆம் எனின் - யான் ஆராய்ந்து கூறிய வீதல் முதலிய ஐந்துறுப்புங் கூடிய வழியே கொலைவினை பற்றுவது என்பாயாயின்; வீய்ந்தது இன்மையின் — கலகன் என்னும் அரசன் காந்திபாலி என்னும் தன் மனைவியைச் சினந்து கொல்லப் புக்கபொழுது அவள் கொலை யுண்டு இறவாதிருக்கவே; வெய்ய அவீசி - வெவ்விய அவீசி யென்னும் நிரயம்; காந்திபாலி இரங்க - அக் காந்திபாலியே இரங்கும்படி; கலகனைப் போழ்ந்து கோடல் - அக் கலகனைத் தன் வாயைப் பிளந்து விழுங்கிக் கொள்ளுதல்; பொருந்தலது - பொருந்தாக் கூற்றை, ஒக்கும் - போல்கின்றதன்றோ? என்றாள் என்க.*

(வி - ம்.) *வினையார்ப்பு - வினையாற் கட்டுண்ணல்.*

*ஐந்துறுப்புங் கூடியதே கொலையுமாமதனாலே வினைப்பற்று மாமெனின் கலகனென்னுமரசன் காந்திபாலியைக் கொல்லப் புகுமளவிலே அவீசியென்னும் நரகம் வந்து அவனைக் கொண்டு போயிற்று என்று நீங்கள் கூறுவது அவள் கொலையுண்மையாற் பொருந்தாது என்றவாறு. காந்திபாலியின் வரலாற்றினை, ௨௧௧-ஆம் செய்யுள் உரை விளக்கத்தினும் காணலாம்.* (௮௧)

நீலகேசியார் கொலை முதலியன பற்றிய ஆருகதர்மேற்கோள் கூறுதல்

௫௪௭. கொல்வ னென்றவன் கூர்ம்படை குன்றினுஞ்
செல்வ னென்றய லார்மனைச் சேரினுங்
கல்வு வானொ டெல்லார்க்குங் கருவினை
சொல்லு வானோ டுலகமுஞ் சுற்றமே.

(இ - ள்.) *கொல்வன் என்றவன் கூர்ம்படை குன்றினும் - கொல்லுவேன் என்று எழுந்தவன் கூரிய படைக்கலக் குறைவாலே கொல்லாது மீளினும்; செல்வன் என்று அயலார் மனைச் சேரினும் - பிறன்மனைவியின்பாற் செல்லுவேன் என்று மனமொருப்பட்டு அவன் மனையை அடைந்து தடையுண்டு மீளினும்; கல்லுவா னொடு - பிறன் பொருளைக் களவு காண்பேன் என்று கருதி அவன் மனைச்சுவரை யகழ்ந்து தடையுண்டு மீளினும்; எல்லார்க்கும் - ஈண்டுக் கூறப்பட்ட மூவர்க்கும்; கருவினை சொல்லுவான் - நிரலே*

கொலையும் காமமும் களவும் என்னும் மூவகைத் தீவினை வந்தெய்துதல் தேற்றம் என்று சொல்லுகின்ற சைனனுக்கே; உலக்மும் சுற்றம் - இவ்வுலகில் வாழ்வோரெல்லாரும் உறவினராவார்; என்றாள் என்க.

(வி - ம்.) கொலை செய்யத் துணிந்து தடையால் மீண்டவனும் கொலைத் தீவினை யெய்துவன். பிறன் மனைவியை விரும்பிப் போந்து தடையுண்டு மீண்டவனும் காமத் தீவினையெய்துவன்; பிறன் பொருளைக் களவு கொள்ள முயன்று தடையுண்டு வாளா மீண்டவனும் களவால் வருந்தீவினையை எய்துவான் என்று கூறுவது ஆருகதர் நெறியாம்; ஆதலால் அவரையே எல்லோரும் மதித்துச் சுற்றத்தாராவர் என்றவாறு. எனவே, நீ ஐந்துறுப்புங் கூடிற் கொலையென்று சொல்லி உபாயத்தால் உயிரினங்களைக் கொல்வித்தலின் நீ எல்லாவுயிர்க்கும் பகைவனே ஆகுதி என்றாளுமாயிற்று. (அஅ)

காமத்தீவினை

௫சஅ. துப்பி னால்வினை சொல்லலன் யானென்று
வப்பி னார்முலை காய்வது வாமனீ
யிப்ப லாரிடை யென்னையி தென்பதோ
செப்பி னாலுஞ் சிதைகின்ற தில்லையால்.

(இ-ள்.) வாமனீ துப்பினால் வினை சொல்லலன் யான் என்று - புத்ததேவனே! நீ நுகர்ச்சியினாலே வினை வரும் என்று கூறுகின்றிலேன் யான் என்று கூறிவைத்தும்; வப்பின் ஆர் முலை காய்வது என்னை-கச்சினாற் கட்டுகின்ற மகளிர் முலைப் போகத்தை வெறுத்தற்குக் காரணம் யாது?; இப் பலார் இடை இஃது என்பதோ - இந்தப் பலர்கூடிய அவையின்கண் என்னொழுக்கம் இத்தகையது என்று கூறிக்கொள்ளத்தானோ?; செப்பினாலும் சிதைகின்றது இல்லையாம்-நீ மனத்தின்கண் நினைவதே காமத் தீவினை என்பாயாயின், மொழியாற் கூறினும் மெய்யால் நுகரினும் தீவினையாகாதன்றே என்றாள் என்க.

(வி - ம்.) செப்பினாலும் என்னும் உம்மையால் நுகர்ந்தாலும் என்பது பெறப்பட்டது. துப்பு-நுகர்ச்சி. நுகர்ச்சிக் கந்தம் வினையால் வரும் என்றமையின் நுகர்ச்சி வினைக்குக் காரணமாகாமையும் உணர்க.

துப்பினால் வினைவரும் என்று சொல்லேன் யானென்று கூறினமையால் பயன்கள் யாவையும் வினையாகாமையின் மகளிரைப் புணர்தலும் கள்ளுண்ணலும் முதலாயின பயன் ஆதலால் அவற்றால் வருவதொரு குற்றமும் இன்மையறிந்தும் நீ கச்சணிந்த முலையாரைச் சித்திரத்திலும் நோக்கேனென்று காய்வது எற்றிற்கு. நினைவே காமத்தீவினை என்னின் நின் சித்தாந்தத்திற்கு முரணன்றன்றோ? "உறுப்போர் எண் மாத்திரை வைக்குமாயிலது காம வாழ்க்கையே" என்பதனால் காமத்துக்கு எட்காயளவு இசைதலாலும் முரணில்லையே என்பதாம். (அகூ)

களவு

௫௪௯. பண்டு தான்வைத்தப் பண்டத்தை யொப்பதோன்
றுண்ட தாயி னதுவது வேயெனக்
கொண்டு போகினுங் கொள்ளினுங் குற்றமில்
கண்ட போழ்துங் களவன்ற தென்றலால்.

(இ - ள்.) பண்டுதான் வைத்து அப் பண்டத்தை ஒப்பது உண்டதாயின் - ஒருவன் பிறன் இல்லத்தின்கண் முன்புதான் ஒரு பொருளை வைத்துப் பின்பு அவ்வில்லத்தின்கண் அப்பொருளை யொத்த பிறிதோர் பொருளிருப்பக் கண்டு; அது அதுவே எனக் கொண்டு போகினும் - அப்பொருளை இப்பொருள் என்று கருதிக் கைக்கொண்டு வேறு நாட்டிற்குச் சென்றாலும்; கொள்ளினும் செல்லாது கைக்கொண்டிருப்பினும்; கண்டபோழ்தும் - அவனை அவ்வில்லத்தார் கண்டுபிடித்த பொழுதும்; அது களவன்று என்றலால் - அச்செயல் களவாகாது; குற்றம் இல் - களவுத் தீவினையும் இல்லை ஆம்; என்றலால்-என்னை? நீயிர் உள்ளமின்றிக் கொள்வது களவாகாது என்று கூறுதலாலே; என்றாள் என்க.

(வி - ம்.) நீயிர் உள்ளமில்லது களவாகாதென்றலால், ஒருவன் பிறனில்லத்து முன்பு வைத்த பண்டத்தை ஒப்பதொன்றனைக் கண்டு அஃதிதுவே என்று கைக்கொண்டு போகினும் களவுக் குற்றமில்லை யன்றோ என்றவாறு.

உறையிட்டதொரு சுவடியை வைத்து அதுபோல் உறையிட்டிருப்பதோர் ஆடையை எடுத்துக் கொண்டானைக் கண்டு பிடித்தாலும் சுவடியென்று முள்ளத்தா லெடுத்தமையின் களவாகாதென்பது. என்னை? "உடைப்பண்பில்ல களவுதான்" என்று களவுக்கிலக்கண மோதினமையால், உடைப்பண்புடையதும், காற்பொன்னிற்குழவிலை பெற்றதுங் களவு கண்டதாயினும், கொடுக்கக் கொள்வதூஉங் களவு காண்கின்றே னென்னும் உள்ளமின்றிக் கொள்வதூஉந் தேசாந்தரத்துப் போகாது கொள்வதூஉங் களவன்று என்று நீயிர் உடன்படுதலுண்டாகலின் என்பதாம். (௮௧)

காமம்

௫௫௦. பஞ்சி மெல்லடி நோவப் பகனடந்
தஞ்சி லோதியு மல்க வவளெனத்
துஞ்சு மில்லுடை யாளைச் சுமந்துபோய்
வஞ்சி யான்கொள்க வாழ்கபுத் தன்னென.

(இ - ள்.) பஞ்சி மெல் அடி நோவப் பகல் நடந்து அஞ்சில் ஓதியும் அல்க - புத்தனே! ஒருவன் அலத்தகமூட்டிய மெல்லிய அடிகள் வருந்தும்படி பகலிலே நடந்துவருகின்ற அழகிய சிலவாகிய கூந்தலையுடைய தன் மனைவியுந் தானுமாய் அயலான் மனையிலே

இரவின்கண் தங்குவானாக; துஞ்சும் இல் உடையாளைச் சுமந்து போய் - அவன் காமமிகுதியினாலே தன்மனைவியென்று கருதி அங்குத் துயில்கின்ற அந்த இல்லமுடையாளைத் தூக்கிச் சென்று; வஞ்சியான்-பின்பு அவள் பிறளாதல் கண்டும் யான் என்மனைவியே எனக் கருதினேன் ஆகலின் யான் பிறன்மனைவியை நுகர்வேனு கேன் என்றெண்ணி; புத்தன் வாழ்க எனக் கொள்க - இதனைத் தீவினை என்னாத புத்தர் பெருமான் வாழ்கவென்று நின்னை வாழ்த்தி அவளை நுகர்வானாக! என்றாள் என்க.

(வி - ம்.) வஞ்சியான் என்றது - தன்மனைவியே என்று கருதிக் கொணர்ந்தமையின் வஞ்சமுமிலனாய் என்றவாறு.

ஒருவன் தன் மனைவியோடு ஆறுசெல்பவன் ஒரு வீட்டிற் றங்க, இரவின்கண் தன்மனைவி என்று கருதி உறங்குகின்ற அம்மனைத் தலைவியைச் சுமந்துபோய்ப் பின்னர் அவளன்மை யறிந்தும் யான் என் மனைவி என்னு முள்ளத்தாற் கொடுபோந்தே னாகலின் புத்தர் அறவுரைப்படி யான் பிறன்மனைவியைக் கூடுந் தீவினையுடையேன் ஆகேன் என்று அவளைத் தன் மனைவியாகவே நினைத்து இங்ஙனம் அறங் கூறிய நின்னை வாழ்த்தி அவளை நுகர்வானாக என்பதாம். நின் அறத்திற்கு இவன் செயல் தீவினையன்றே என்றபடியாம். (அஎ)

ருருக. கந்த மாவன காகதந் தம்மெனப்
பந்த மின்மையிற் பாழ்செய்திட் டேனினி
யந்தி னீசொன்ன வாரிய சத்தையுஞ்
சிந்தை யுஞ்சிதைப் பேன்சில சொல்லினால்.

(இ - ள்.) கந்தம் ஆவன - புத்தனே! நீ கூறிய ஐங்கந்தங்களும்; பந்தம் இன்மையின் - அறிவொடு பொருந்தாமையால்; காகதந்தம் எனப் பாழ் செய்திட்டேன் - காக்கைப்பல் போல இல் பொருளாம் என்று எடுத்துக்காட்டிப் பாழாக்கிவிட்டேன்; நீ சொன்ன ஆரியசத்தையும்-இனி நீ கூறிய ஆரியசத்தை என்னும் நிலையாமை முதலிய நான்கினையும்; சிந்தையும் - மேலும் நினது பிற கருத்துக்களையும்; சில சொல்லினால் - ஒருசில மொழிகளாலேயே; சிதைப்பேன் - கெடுப்பேன்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) அந்தில் : அசைச்சொல்.

'புத்த! யான் இதுகாறும் நினது ஐங்கந்தக் கொள்கைகளை ஏதுக் காட்டிப் பாழாக்கினேன். இனி அங்ஙனமே நின் ஆரியசத்தைக் கொள்கைகளையும் அழித்தொழிப்பேன் காண்!' என்றவாறு.

ஆரியசத்தை - பொருள்கள் நிலையில்லாதன; துன்பந்தருவன; உயிரில்லன; அருவருப்புடையன; என்னும் கொள்கை. இதனை,

''அநித்தம் துக்கம் அநான்மா அசுசியெனத்
தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதல்''

எனவரும் மணிமேகலையானும் (ங0 : உசச - ரு.) உணர்க. (அஅ)

நீலகேசி புத்தனை நோக்கிக் கூறல்

வேறு

ருருஉ. பிண்டமோன் றுயினும் பிரியநோக் கின்னது
கொண்டுநின் றும்பிற கூறினைந் தேயெனக்
கண்டநா மெய்ம்மையுங் காட்டுவா யீங்கெனி
னுண்டுதா மாகுல முணர்வுதான் கூறுவேம்.

(இ - ள்.) பிண்டம் ஒன்று ஆயினும் - புத்த நீ மக்கட் பிண்டம் ஒன்றேயாகவும்; பிரிய நோக்கின் ஐந்தே எனக் கூறின் - அதனைப் பிரித்துப் பார்க்குமிடத்து ஐந்து கந்தங்களாம் என்று முன்பு கூறினை; அது கொண்டு நின்றும் - அதனைக் கேட்டேம் அது நிற்க; கண்ட நாம் - அதனைக் கேட்ட யாமே; ஈங்கு மெய்ம் மையுங் காட்டுவாயெனின - இனி இவ்விடத்தே நினது நான்கு வாய்மைகளையும் எடுத்துக் கூறுவாயாயின்; தாம் ஆகுலவுணர்வு உண்டு - அவற்றினும் குற்றமுணர்தற்கு வழியுண்டு; கூறுவேம்- அக்குற்றங்களையும் கூறுவேம் கேள்; என்றுள் என்க.

(வி - ம்.) 'மக்கட் பிண்டமொன்றுகவும் பிரித்து நோக்குழி ஐந்தாம் என்றனை, அதுகேட்டுக் குற்றம் கூறினேம். இனி நினது வாய்மை நான் கனையும் கூறுதி. அவற்றிலுள்ள குற்றமும் கூறுவேம்கேள்!' என்ற வாறு.

கொண்டு நின்றும் - குற்றமாகவும் கேட்டு நின்றேம்.

இனி, உருவக்கந்தம்போல ஏனைய கந்தங்களும் வேறுபட்ட இலக்கணமுடையன வன்றேவெனின், ஏனைய அருவப்பண்புடை யனவாய் அவ்வுருவக்கந்தத்தினின்றும் பிரித்து வேறு பெறப்படாத குணங்களன்றே? உருவக்கந்தம்போல வேறுபட்ட இலக்கணங் களெனின் உடம்பிற் காணப்படுவனவல்லவாம். அன்றியும் உருவக் கந்தம் வேறுபட்டாற்போல உடற்பிண்டத்தை யொழியஅறிவுக்கந்தம் முதலியனவும் வேறு பெறவேண்டும். அன்றியும், அருவப்பொருளில் உண்டாகிய அறிவு முதலிய நான்கையும் நான்கு கந்தங்களாகக் கொள்ளின், உருவக்கந்தத் துளவாகிய நிற முதலிய எட்டனையும் எட்டுக் கந்தங்களாக்கிக் கந்தம் பன்னிரண்டாகக் கொள்ளல்வேண்டும். இனி நிறமுதலிய எட்டனையும் உருவமெனவொன்றுகவே கொள்ளின், அறிவு முதலிய நான்கனையும் அருவமென ஒன்றுக்கப் பொருளிரண்டே யாம் ஆதலால் ஐங்கந்தம் என்பது பிழையாம் என்பது போந்தது.

மெய்ம்மை - வாய்மை. அவையாவன: 'துன்பம்' 'துன்பநீக்கம்', 'துன்பத்தோற்றம்', 'துன்பநீக்கநெறி' என்பன. (அக)

துன்பம்

ருருங. முழுதுந்துன் பம்மென மொழியினஃ தாகிய
பொழுதினு னல்லவும் புல்லுமா மாதலாற்
பழுதுதா னவ்வுரை பன்மைதா னின்மையில்
இழுதையா ஞன்குள வென்றுசோன் ஞயென.

(இ - ள்.) முழுதும் துன்பம் என மொழியின் - ஐய! நீ எல்லாம் துன்பம் என்று கூறுங்கால்; அஃது ஆகிய பொழுதின் - அத்துன்பம் வாய்மையாய பொழுது; அல்லவும் புல்லுமாம் - எஞ்சிய நிலையாமையும் அருவருப்பும் உயிரில்லாமையும் அத்துன்பமாய் அடங்குவனவாமன்றோ?; ஆதலால் பன்மைதான் இன்மையில் - ஆகவே ஆங்குப் பலவில்லாமையாலே; அவ்வுரை பழுது - அக்கூற்றுப் பழுதாகும்; இழுதையால் - நினது அறியாமையால்; நான்கு உள என்று சொன்னாய் - துன்பமுதலாக நான்குள்ளன என்று கூறினையாகுதி! என்றான் என்க.

(வி - ம்.) இஃது எல்லாந் துன்பமென்று சொல்லுதற்கண் நிலையாமை முதலியனவும் அடங்குதலின் அதனை நான்கென்றது நின் அறியாமை என்றவாறு. பழுது - குற்றம்; இழுதை - அறியாமை. (௯0)

இதுவுமது

௫௯௪. உழப்புமூன் றும்முட னொக்கநோக் கின்னது
வழுக்கில்லா வாய்மையேல் வாய்மை சொல்லியினி
யிழுக்கினாய் நீபிறர்க் கின்பமீந் தேனெனல்
பழுக்களே காய்வது பண்டுமுண் டேபிற.

(இ - ள்.) வழுக்கு இல்லா வாய்மையேல் - நீ கூறிய துன்பம் குற்றமற்ற வாய்மையே ஆகிவிடின்; உழப்பு மூன்றும் உடன் ஒக்க நோக்கின் - நீ கூறிய நுகர்ச்சிக்கந்தமாகிய மூன்றனையும் ஒன்றாகத் துன்பநுகர்ச்சியாகவே நோக்குமிடத்து; வாய்மை சொல்லி இழுக்கினாய் - நீ வாய்மை கூறுமாற்றால் தவறுசெய்துவிட்டாயல்லையோ? இனி, பிறர்க்கு இன்பம் ஈந்தேன் எனல் பழுக்கள் காய்வது - அஃதன்றியும் நீ பிறர்க்கு இன்பம் வழங்கினேன் என்று யாண்டும் கூறுதல் தவறாகிக் கேட்போருடைய பழுக்களை ஒடிப்பதேயாகும்; பண்டும் உண்டு - பழுவொடிப்பது நினக்குப் பண்டு முண்டன்றோ என்றவாறு.

(வி - ம்.) நுகர்ச்சி, இன்பம் துன்பம் சமம் என மூன்று வகைப்படும் என்று கூறிவைத்துப் பின்னர் எல்லாம் துன்பமே என்பது முன்பின் மலைவாம். எல்லாம் துன்பமே என்று கூறி நீ "இன்பஞ்சால் பெரும்பாரம் ஈரைந்தும்" "இன்பம் பிறழாநெறி" என்றின்னோரன்ன கூறுதலும், "இன்னாற்கு மினியனாய் இரந்தார்க்கும் இன்றீம்பால் குன்றாமற் பொழிந்திட்ட குன்றாய குணத்தினன்" என நின்னை நின்னடியாரேத்துவதும் பேதைமையேயாம். இவ்வாறு பொய்பல நின் சமயத்தார் மேலேற்றி அவர் பழுவொடித்து விட்டாய். பழுவொடிப்பது பண்டும் உனக்கியல்பு என்றவாறு. பிற : அசை. இன்பஞ்சால் பெரும்பாரம் எனப் பிழைபடக் கூறி அப்பாரத்தால் பழுவொடித்தாய் என்று அசதியாடியபடியாம். (௯௧)

இதுவுமது

௫௬௭. துக்கமே யாயினுற் றொழிலுமொன் ருய்ப்பய
மொக்கவே வேண்டுமா லுயர்விலாக் கீழ்க்கதி
புக்குவீழ்ந் தார்பிறர் பொங்கிநின் ருரேமர்
மிக்கதே யென்னெறி யென்றுவேண் டல்லேவன்.

(இ - ள்.) துக்கமே ஆயினுல்-புத்ததேவனே! நீ கூறுகின்ற வாய்மையின்படி எல்லாம் துன்பமேயாகிவிடின்; தொழிலும் ஒன்ருய்-நல்வினை தீவினை என்னும் பாகுபாடின்றிச் செயலெல்லாம் தீச் செயல்களேயாகி; பயம் ஒக்க வேண்டுமால் - அவற்றின் பயனெல்லாம் அத்துன்பம் ஒன்றுமே யாதல் வேண்டும்; பிறர் உயர்வு இலாக் கீழ்க்கதி புக்குவீழ்ந்தார் - பிற சமயத்தாரெல்லாம் மேன்மையில்லாத நரக்கதி விலங்குகதிகளிலே சென்று வீழ்ந்தனர் என்றும்; எமர் பொங்கி நின்ருர் - எஞ்சமயத்தினர் தேவகதி முதலியன பெற்று இன்பம் பொங்கி நின்ருர் என்றும்; என் நெறி மிக்கதே என்றும் - ஆதலால் யான் அறிவுறுத்துஞ் சமமம் மெய்ம்மை மிக்கதாகும் என்றும்; வேண்டல் எவன்-கூறுதல் என்னெலோ? என்ருள் என்க.

(வி - ம்.) எல்லாம் துன்பமே எனின், அதற்குக் காரணமாகிய தீவினைகளே எல்லாவினைகளும்ஆதல் வேண்டும்.வேண்டவே பௌத்த சமயத்தார் இன்பமெய்தினர் எனலும் பிறசமயிகள் துன்பமெய்தினர் என்றும் இன்ஞேரன்ன கூறுதல் பெரும்பேதைமையே என்பதாம்.

(௬௨.)

இதுவுமது

௫௬௩. உறுதிகூ றல்லொழி யொழுக்கங்காத் தல்லொழி
யிறுதியிஃ றுன்பமே யின்பமில் லாயினுற்
சிறிதுநீ தீப்புகாய் சேர்வதென் னைநிழல்
இறுதியில் லாத்துய ரின்னசெய் யாயினி.

(இ - ள்.) இறுதியில் துன்பமே இன்பம் இல் ஆயினுல் - புத்தனே! இவ்வுலகத்தின்கண் எய்துவது முடிவில்லாத துன்பமேயாகும் இன்பம் சிறிதும் இல்லை என்பாயாயின்; உறுதி கூறல் ஒழி - நீ இனி அறவுரை கூறுதலை ஒழிக்கக் கடவாய்!; ஒழுக்கம் காத்தல் ஒழி - நல்லொழுக்கத்தைக் கடைப்பிடியா தொழி; நீ சிறிதும் தீப்புகாய் - துன்பமே எல்லாமாயின் நீ சிறிதேனும் தீயிற் குளிக்கின்றிலை நீரிலேயே குளிப்பதெற்றிற்கு?; நிழல் சேர்வது என்னை - வெயிலிற் செல்கின்றிலை, நிழலிலேயே உறைதல் எற்றிற்கு; இனி இறுதியில்லாத் துயர் இன்ன செய்யாய்-இனி முடிவில்லாத துன்பத்தையே தருகின்ற தீக்குளித்தல் முதலிய இன்ஞேரன்னவற்றைச் செய்வாயாக; என்ருள் என்க.

(வி - ம்.) உறுதி - அறம். ஒழுக்கம் - தவவொழுக்க முதலிய நல்லொழுக்கங்கள். தீப்புகாய் எனவே நீரிற் புகுவாய் என்பதும் நிழல் சேர்வது என்? எனவே வெயிலிற் செல்கின்றிலை என்பதும் பெற்றாம்.

நீ பிறர்க்கு அறங்கூறல் முதலாயின தவிர்க. அறவொழுக்கத்தாலும் துன்பமேயன்றி இன்பமில்லையாகலான். அன்றியுந் துன்பமே யுளதெனின் தீயிற் குளியாது நீரிற் குளித்து ஊன் தின்று வெற்றிலை மென்று அரைமர நீழலில் உறைவதெற்றிற்கு? வாளாவிருப்பினும் நினக்குத் துன்பமேயாதலின் மூயிட்டுப் புழுக்காய்; முழங்கையைத் தேயாய்; தீயிற் சுடாய்; பருமுண் மேற்பாயாய்; மற்றுமிவை போல்வன வெல்லாம் செய்கின்றிலை வாளாவிருப்பதாற் பயனென்னை? என்பதாம். (கக)

தூய்மையின்மை

வேறு

௫௫௭. தூய்மை யில்லை முழுவது மென்பதை
வாயும் நீசோல்லும் வாய்மைய தாயினுற்
றாமஞ் சாந்தம் புனைபவர் தாமெலாம்
ஏம நன்னெறி கண்டில ரேபிற.

(இ - ள்.) முழுவதும் தூய்மையில்லை என்பது வாய்மையது வாயும் ஆயினும் - ஐய! இன்னும் நீ எல்லாப்பொருளும் தூய்மையுடையன அல்ல என்று கூறுவது நீ சொல்லும் வாய்மையுள் பொருந்தும் ஒன்று ஆகுமெனின்; தாமம் சாந்தம் புனைபவர் தாம் எல்லாம் - உலகின்கண் தூய்மையில்லாத மல மூத்திர முதலியவற்றைப் போக்கி நீராடி மலர் சந்தனம் முதலியவற்றை அணிவோரெல்லாம்; ஏம நல்நெறி கண்டிலரே - இன்பந் தருகின்ற நல்லவழியை அறிந்திலாதோரே ஆதல் வேண்டும்; என்றாள் என்க.

(வி - ம்.) வாய்மையது வாயும் எனக் கூட்டுக. வாயும்-பொருந்துகின்ற. பிற: அசை. தாமம் - மலர்மாலை.

எல்லாம் அருவருப்புடையன என்னும் நின் வாய்மை உண்மையானால் மலம் முதலியன களைந்து நீராடி மலர் முதலியன புனைவோர் அறிவிலிகளே யாதல் வேண்டுமன்றோ என்றவாறு. (கஉ)

இதுவுமது

௫௫௮. ஓது மோத்து மொழுக்குநின் னுண்டியுங்
கோதில் தூய்மைய வாமெனக் கூறியும்
யாது நீயசு வாமெனச் சோல்லுவாய்
நாத னீபிற நன்கறிந் தாயவை.

(இ - ள்.) ஓதும் ஒத்தும் ஒழுக்கும் நின் உண்டியும் - புத்தனே! நீ ஓதாநின்ற பிடக நூல்களும் ஒழுகுகின்ற ஒழுக்

கமும் நின்னுடைய உணவும்; கோது இல் தூய்மைய ஆம் எனக் கூறியும் - குற்றமற்ற தூய்மையுடையன என்று கூறிவைத்தும்; நீ யாதும் அசுவாம் எனச் சொல்லுவாய் - நீயே எல்லாப் பொருளும் தூய்மையில்லாதனவே எனவுஞ் சொல்கின்றனை; நீ அவை நன்கு அறிந்தாய் நாதன் - இங்ஙனம் ஒன்றற்கொன்று முரண்படப் பேசுகின்ற நீ அப்பொருள்களின் இயல்பினை ஐயந்திரிபற அறிந்தாயும் ஒரு சமயத்தலைவனும் ஆதல் வியப்பேகாண்! என்றாள் என்க.

(வி - ம்.) ஓத்து - நூல். அவை பிடக முதலியன. அசுவாம் எனற்பாலது அசுவம் என ஈறு கெட்டுகின்றது. இங்ஙனம் முரண்படப் பேசும் நீ மெய்யுணர்பவனும் சமயாசிரியனும் ஆதல் எங்ஙனம் என்றவாறு. (௩௫)

இதுவுமது

௫௫௯ நீயி னேசொன்ன மெய்ம்மையை நோக்கலார்
தூய்மை யாம்பிறர் தூய்மை யிலரென்று
காய்ப வேகவி மண்டைகள் என்றனள்
வேயி னன்மை விலக்கிய தோளினள்.

(இ - ள்.) நீ இனே சொன்ன மெய்ம்மையை நீ இவ்வாறு கூறிய இந்த வாய்மையினை; கவி மண்டைகள் நோக்கலார் - தலை கவிந்த மண்டையேந்தி இரக்கின்ற நின் மாணுக்கராகிய சாக்கியரெல்லாம் ஆராய்கின்றிலர்; யாம் தூய்மை-யாங்கள் எப்பொழுதும் தூயராகவே இருக்கின்றேம்; பிறர் தூய்மையிலர் என்று காய்பவே - பிற சமயத்தாரெல்லாம் தூய்மையில்லாதவராவர் என்று கூறி வெறுக்கின்றனரே; அவரெல்லாம் நினக்கு மாற்றார் ஆயினரோ?; என்றாள் - என்று கூறினள்; (அவள் யாரெனின்) வேயின் நன்மை விலக்கிய தோளினள் - மூங்கிலினது அழகைக் கெடுத்த தோளையுடைய நீலகேசி; என்க.

(வி - ம்.) கவிமண்டைகள் என்றது அன்மொழித் தொகையாய்ச் சாக்கியரைக் குறித்து நின்றது. காய்ப: பலரறிசொல். அவர் நினக்கு மாற்றார் ஆயினரோ என்பது குறிப்பு.

'நீ எல்லாம் தூய்மையில்லாதனவே என்று கூறவும் நின் மாணுக்கரே சாக்கி, நின்வாய்மையை ஏலாது யாங்கள் தூயேம்என்கின்றனரே; அவர் நினக்குப் பகைவராயினரோ?' என்றவாறு. (௩௬)

இதுவுமது

௫௬௦. சென்று சென்றன சென்நெறி கண்டவர்
பின்றைத் தூய்மை பெறுவது மில்லையே
லின்று மின்று மியல்வது வாக்கோள்வாய்க்
கின்றித் தூய்தன்மை யென்னை யிழைத்ததோ.

(இ - ள்.) உனசெந் நெறி சென்று சென்று கண்டவர் - ஐய பண்டும் மனமொழி மெய்களிற் றூய்மையிலராய் அவற்றைத் தூய்மையாக்கற் பொருட்டு உன்னுடைய செவ்விய சமயநெறியிற் சென்று சென்றுயர்ந்து அந்நெறி நன்மையைக் கண்ட நின் மாணவர் தாமும்; பின்றைத் தூய்மை பெறுவதும் இல்லையேல் - பின்னரும் தம்மனமொழி மெய்களிலே அத்தூய்மையைப் பெறல் இல்லையாயவிடத்தும், அது இயல்வு ஆக்கொள்வாய்க்கு - அத் தூய்மையின்மையையே இயற்கையாகக் கொள்கின்ற வுனக்கு!; இன்றும் இன்றும் - அம்மாணவர்பாற் பண்டிருந்த தூய்மை யின்மைக்கும் பின்பிருக்கும் தூய்மையின்மைக்கும் இடையே; இன்று இத்தூய்து அன்மை இழைத்தது என்னையோ ?- இற்றை நாள் நினது இந்தத் தூயதல்லாமை என்னும் வாய்மை செய்த காரியந்தான் யாதோ ? என்றாள் என்க.

(வி - ம்.) 'தூய்மைபெற வன்றோ நினது வாய்மையையுணர்ந்து தவஞ் செய்கின்றனர். அவர் தம் மன முதலியன தூய்மை பெறுவாயின் அவ்வாய்மையுணர்ந்தமையாற் பயன் என்னே?' என்றவாறு.

இன்றும் - இன்மையும், இன்மைக்கும் இன்மைக்கும் இழைத்த வேறுபாடென்னே? என்பது கருத்து. எனவே எல்லாம் தூய்மை யில்லாதன என்றது பேதைமையாம் என்பது போந்தது. (௬எ)

இதுவுமது

௩௬௧. அழுகு பூசுமி னங்கண மாடுமின்
கழுகு ணூத்தையோ டேனவுங் கவ்வுமின்
மேழுகு மின்னிடை மேச்சிய மல்லதின்
முழுதுந் தூய்தன்மை சொல்லிய மூடர்கள்.

(இ - ள்.) முழுதும் தூய்தன்மை சொல்லிய மூடர்கள் எல்லாப் பொருட்கும் வேற்றுமையின்றித் தூய்மையின்மையே கூறுகின்ற அறிவிலிகளே! நீயிர்; அழுகு பூசுமின் - மெய்யின்கண் சந்தனம் முதலியன பூசுதல் எற்றிற்கு? மலத்தையே பூசிக் கொள்ளுமின்; அங்கணம் ஆடுமின் - நன்னீரிலே ஆடல் எற்றிற்கு? அங்கணங்களிலேயே ஆடுமின்; கழுகு உண் ஊத்தை யோடு ஏனவும் கவ்வுமின்-தூயவுணவு தேடி உண்ணல் எற்றிற்கு? கழுகுகள் தின்னும் அழுகற் பிணங்களையும் அவற்றையொத்த பிறவற்றையும் தின்னுங்கோள்!; இடை - உங்கள் பள்ளியிடங்களை; மெச்சியம் அல்லதின் - புகழ்ப்படாதனவாகிய மல மூத்திரங் களாலே; மெழுகுமின் - மெழுகி மேலும் தூய்மையின்மையே செய்யுங்கோள்! என்றாள் என்க.

(வி - ம்.) அழுகு-மலம். அங்கணம்-அழுக்கு நீரோடும் கால்வாய். மெச்சியம் அல்லதின் - மெச்சப்படாதனவற்றால். (௬அ)

நிலையாமை

வேறு

௫௬௨. நில்லா வேன்னி னில்லன்மையாலும் நில்லாவா
யில்லா மேன்ற லின்புறு மேற்கோ ளிழுக்காகு
மெல்லாந் தானே யென்றலி னேன விழவெய்தி
நல்லாய் சோன்ன நான்மையை நாட்டுந் திறமேன்னோ.

(இ - ள்.) எல்லாம் நில்லா என்னின் - எல்லாப் பொருளும் நிலையாமை யுடையனவே என்னின்; நில்லன்மையும் நில்லாவாய் இல்லாம் என்றல் - நீயிர் கூறும் நிலையாமை என்னும் வாய்மையும் வாய்மையாய் நில்லாமல் வாய்மையில்லையாகும் அன்றோ இங்ஙனம் கூறல்; இன்புறும் மேற்கோள் இழுக்காகும் - நீ கூறியின்புறுகின்ற நின் மேற்கோட்கே முரணுய்க் குற்றமாம்; எல்லாந்தானே என்றலின் - இனி எல்லாம் அந்நிலையாமையுடையனவே என்று கூறுதலின்; என இழவெய்தி - ஏனைய மூன்று வாய்மைகளும் வாய்மையாய் நில்லாதொழிய; நல்லாய் சொன்ன நான்மையை நாட்டுந் திறம் என் - நல்லோனே! நீ கூறிய அந்த நான்கும் வாய்மைகளே என்று நிலைநாட்டுதல் எவ்வாறோ? கூறுய் என்றாள். என்க.

(வி - ம்.) ஆல்: அசை. தானே - அந்நிலையாமையே. என - ஏனை மூன்று வாய்மைகளும். எய்தி - எய்த.

எல்லாம் நில்லா எனவே நீ கூறும் நிலையாமை வாய்மையும் நில்லாதாம். எல்லாம் நிலையாமையுடைய எனவே ஏனையவும் இல்லாதனவாம். எனவே இந்த வாய்மை நின்மேற்கோளை அழித்துவிடுகின்றது என்றவாறு.

இனி, ஒரு பொருளிற் கிடந்த நில்லாத்தன்மை யொழித்து ஒழிந்த தன்மைகள் நிலையுதலுடையனவாமெனின்; ஒரு பொருளிற் பல தன்மைகள் உளவாய்ப் பொருள்கள் உண்டுமாம் இல்லையுமாம் என்னும் மேற்கோளே நிலைபெறும் என்பதுமாம். (கக)

இதுவுமது

௫௬௩. உழுவார் வணிக ரேன்றிவ ருள்ளிட்டுலகத்துள்
வழுவார்க் கீய வான்பொருள் வேறாய் மறியும்மே
லழுவார் தமையுங் காண்டுமெஃ தாமாறுரையீரோ
புழுவாழ் கேன்று புனன்மழை தந்த புகழுள்ளீர்.

(இ - ள்.) புழு வாழ்க என்று - உலகிலுள்ள புழுக்கள் முதலியனவும் வாழ்வனவாகவென்று அருள் கூர்ந்து; புனல் மழை தந்த புகழ் உள்ளீர் - மீனுய்ப் பிறந்து நீராகிய மழையைப்

பெய்வித்த புகழையுடைய புத்தர் பெருமானே! நீயிர்; உழுவார் வணிகர் என்று இவருள்ளிட்டார் - உழவரும் வணிகரும் என்று கூறப்படும இவர் முதலானோர்; உலகத்துள் வழுவார்க்கு ஈய - உலகின்கண் இழுக்குடைய அரசர் கள்வர் முதலியோர்க்குக் கொடுத்தல் காரணமாக; வான்பொருள் வேறுய் மறியுமேல் - தம்முடைய சிறந்த பொருள்நிலை மாறுபட்டு அழியுமாயின்; அழுவார் தமையும் காண்டும் - அழுகின்றவர்களையும் யாம் கண் கூடாகக் காண்போமல்லமோ?; அஃது ஆம் ஆறு உரையீர் - நீயிர் கூறுமாறு பொருள்கள் கணந்தொறும் அழியுமாயின் அவர் அக்காலத்தே மட்டும் அழுதற்குக் காரணம் யாதோ? கூறுவீர்! என்றவாறு.

(வி - ம்.) உலகின்கண் உழவு வணிகம் முதலியவற்றால் வாழ்வோர் கொடுங்கோலரசர் கள்வர் முதலாயினரால் தம் பொருள் அழிவுறின் அழுவர். பொருள்கள் கணந்தொறுங் கெடுமாயின் அவரும் கணந்தொறும் அழல்வேண்டும்; அங்ஙனம் அழாமல் அவ்வொரு காலத்தே அழுமதற்குக் காரணம் யாதோ? என்றவாறு.

வேறுய் மறியுதலாவது-நிலைமாறிக் கெடுதல். வழுவார் என்றது, குற்றமுடைய கொடுங்கோன் மன்னர் கள்வர் முதலாயினரை.

கணந்தோறும் அவரழாமையே பொருள் கணந்தொறும் கெடாமைக்குச் சான்றும் என்பது கருத்து. "காற்றெறியப் பட்டவிந்த விளக்குக் காங்கோர் பழங் கூரை புக்கதோ?" என்பதனால் விளக்குக் கையறக் கெட்டமை காணப்பட்டதன்றோவெனின், எண்ணெய் முதலாகிய காரணங்களால் விளக்காய்ப் பரிணமித்து நின்ற புற்கலப் பொருள் காற்று முதலாகிய காரணம் பெற்று இருளாய்ப் பரிணமித்ததாதலின் அங்கும் முழுக்கேடில்லை என்பதாம்.

இனி, நீயிர் முழுக்கேடு கூறுவதென்னை? சொல்லீர்! என்றவாறு மாம். இதனால் கணந்தோறும் பொருள்கள் கையறக் கெடுகின்றன வென்று நீயிர் சொல்லக் கேட்கின்ற உபாசகரும் வேறுபாட்டையே கேடாக வுணர்ந்து இரங்குதலால் உலகப் பொருள்கட்கு அழிவாவது வேறுபடுதலேயன்றி வெறும் பாழாதல் இல்லை என்பது விளங்கும். (௪00)

இதுவுமது

௫௬௪. தெய்வத மென்று தேறினர் செய்யுஞ் சிறப்பென்றும்
கையது வீயக் காமுறு தானக் கலப்பென்று
மெய்தல ரேயின் னிவையிவை யெல்லா மிழுக்காவோ
மெய்பிளந் திட்டு வேண்டுநர்க் கீயும் விழுமியீர்.

(இ - ள்.) வேண்டுநர்க்கு மெய் பிளந்திட்டு ஈயும் விழுமியீர் - இரவலர்க்கு உடம்பினையும் பிளந்து வழங்கும் வள்ளன்மைச் சிறப்புடைய புத்தனரே!; எல்லாப் பொருளும் கையறக்கெடும்

என்னும் நுமது வாய்மை வாய்மையாயவிடத்து; தெய்வதம் என்றுதேறினர் செய்யும் சிறப்பு என்றும் - தெய்வம் உளதென்று தெளிந்த சான்றோர் அத் தெய்வத்திற்குச் செய்யும் நாள்வழிபாடும் சிறப்பு வழிபாடும் என்று கூறப்படுவனவும்; கையது வீய - தம் கைப்பொருளழியுமாறு; காமுறுதானக் கலப்பு என்றும் - நன்மையை விரும்பிச் செய்கின்ற வண்மைகளுமாகிய; இவை - இவையிற்றின் பயன்களை அவ்வவர்; கலப்பு என்றும் எய்தலர் - உளங்கலந்து நுகர்தலை எக்காலத்தும் பெறுவாரல்லர்; இன்னிவை இழுக்காவோ- இவைபோல்வனவாகிய நல்வினையெல்லாம் பயனற்றவையாகாவோ? என்றாள் என்க.

(வி - ம்.) கையது - கைப்பொருள். கலப்பு - நுகர்வு.

தெய்வமுளதென்று தெளிந்தசான்றோர் செய்யும் வழிபாடும் கைப்பொருளழியும்படி ஈத்துவக்குஞ் சான்றோர் செய்யும் ஈகையும் இன்னோரன்ன பிற அறவினைகளும் பயனில் செயலாம் அல்லவோ? இதற்கு என் கூறுதிர்? என்றவாறு.

நீயிர் நும்முடம்பினைப் பிளந்திட்டு வழங்கினமைதானும் அதன் பயனாகிய இப் புத்தப் பண்பினை நுமக்கு நல்காதாயின் வீணன்றோ என்பாள், மெய்பிளந்திட்டு வேண்டுநர்க்கியும் விழுமியீர் என்றாள்.

விழுமிய்யீர்: விரித்தல் விகாரம்.

இனி இவையிற்றைச் செய்தவர் பயன் பெறுதவாறென்னெனில், பொருள்கள் எல்லாம் தோன்றிய கணத்திலேயே அழிவன என்னும் பௌத்தர் மேற்கோளின்படி; செய்தவன் பயன் நுகரும் காலத்தளவும் இல்லாமையானும், அவ்வறவினைகளும் அங்ஙனமே பொன்றக் கெடுதலின்பின்னொருகாலத்தே பயன்றருவனவாகாமையானும் என்க. இனி, அவனுடைய வழித்தொடர்பினும் அவற்றின் தொடர்பினும் அவன் பயனுகர்தல் கூடுமெனின்; வழித்தொடர்பிற் பயனுகர்தல் ஆவது அவன்றானே பயனுகர்வன் என்றவாறோ? அவன் வழித்தொடர்பிற் பின்பு பிறந்த பிறனொருவன் நுகர்வன் என்றவாறோ? தானே நுகர்வன் எனின், பொருள் கணந்தொறும் கெடும் என்பது பெறப்படாதாம். இனி அவன் வழித்தொடர்பிற் றோன்றிய பிறனொருவன் நுகருமெனின், வினைகளைச் செய்தவன் பயனுகராமையும், செய்யாதானொருவன் அவன் வழித்தொடர்பிற்றோன்றிப் பயனுகர்வன் என்பதுமாகிக் குற்றமாம்; ஆதலால் கணிக மேற்கோளில் செய்தவன் பயன்நுகர்தல் இன்மையின் அம்மேற்கோளுடைய புத்தன் தன்னுடம்பு பிளந்து கொடுத்தது பேதைமையாம் என்பது போந்தது. (௧0௧)

இதுவுமது

௹௬௫. ஒள்ளிழை யாரே யுறுபொருள் பிச்சைக் குரியார்கள்
தள்ளின போழ்தின் னவையவை தன்னைத் தலைநிற்பார்
கள்ளர்க ளன்மை காட்டலு மாமோ கருணையாற்
பிள்ளைக ளேங்கப் பிறர்களுக் கீந்த பெருமைய்யீர்.

(இ - ள்.) கருணையால் - அருளுடைமை காரணமாக ; பிள்ளைகள் ஏங்க - நும் மக்கள் துன்புற்றழாநிற்பவும் ; பிறர்களுக்கு ஈந்த பெருமையீர் - அவர்களை இரந்துவந்த இரவலர்களுக்கு வழங்கிய வண்மை மாண்புடைய பெரியீர் ! நீயிர் கூறும் கணபங்கம் மெய்ம்மையாயவிடத்து; ஒள் இழையார் உறுபொருள் பிச்சைக் குரியார்கள் - ஒள்ளிய அணிகலன்களையுடைய மகளிரை மணந்தவரும் மிக்க பொருளை ஈட்டியவரும் பிச்சைச் சோறேற்ற துறவோரும்; தள்ளினபோழ்தின் அவை அவை தன்னைத் தலைநிற்பார் - மணத்தல் முதலிய பொழுது கழிந்த பின்னரும் அவ்வப் பொருள்களைத் தத்தம் பொருளாகக் கைக்கொள்ளாநிற்பர் ; கள்ளர்கள் அன்மை காட்டலாமோ - இவரெல்லாம் நும்முடைய கணிக மேற்கோளாலே கள்ளர்கள் ஆகாமையை நும்மால் கூறிக் காட்ட முடியுமோ ? முடியுமாயிற் காட்டிக் காணுதிர் ! என்றுள். என்க.

(வி - ம்.) ஒள்ளிழையார் உறுபொருள் எனத் திணைவிரவி அவை என அஃறிணை முடிபெற்றது. பிச்சைக்குரியார் ஏற்ற சோறும் என்க.

மணமுறையாலே மணந்து கொள்ளப்பட்ட பெண்ணை வேறொரு கணத்திலே என் மனைவியென்று கைப்பற்றிய கணவனும், தானீட்டிய பொருளைப் பிறிதொரு கணத்திலே கைக்கொண்ட உடையவனும் ; பிச்சை புக்குவந்த சோற்றை யொருவழி வைத்து நீராடி வந்துண்ணு மற்ற துறவியும், கணப்பொழுதிலே பொருள் கையறக் கெடுமென்பது வாய்மையாகின் தம்முடையவல்லாதனவற்றைப் பற்றினராகுவராதலின், அவர் கள்வர் ஆகுவர்; அவர்களை அம்மேற்கோளுடைய நும்மாற் கள்வரல்லர் என்றுமுடித்துக் காட்டலாமோ? நும் மக்கள்தமக்கு வருந்துன்பத்திற்கஞ்சி நுங்கால் பற்றிக் கிடந்து கூப்பிடவும், அதற்கு இரங்காது எனக்குத் தொண்டு செய்ய அடிமையில்லை; நும்மக்களை அடிமையாகத் தம்மின்! என்றிரந்து அவர்களை அப்பொழுதே ஒரு கொடி கொண்டு மோதுகின்ற அந்தணனுக்கு அருள்செய்து கொடுத்த பெருமை யுடையீர்! என்றவாறு. பெருமைய்யீர்: விகாரம்.

இதனாற் புத்தன் அருள்செய்யுமாறறியான் என்பது போந்தது. என்னை? வருத்தப் படுவாரன்றே அருள் பண்ணப்படுவார். வருத்தப் படும் பிள்ளைகளையும், அவர்களைத் தேடி ஏழு சக்கரவாளமெல்லாம் அழுது அரற்றியுழன்ற அன்னையையும் அருளாது, அவர்களை வருத்த வேண்டி வந்திரந்த பார்ப்பனத்திக் கயவனை அருள்பண்ணுதலான் என்பது இதனை "வண்டுலங்கொக......பிரானே" என்பதனானும் (குண்டலகேசி வாத - கக - ஆம் செய்யுளுரை) உணர்க. (க0உ)

இதுவுமது

குசூ சி. நில்லா தாகக் கூறுத றன்னை நெறியென்றீர்
பல்வகை யானும் பாழ்செய்து பின்னே பரிகாரஞ்
சொல்லுவி ராயிற் சொல்லிய மெய்ம்மை துறவாமன்
கொல்சின வேழங் குறிநிலை செய்த குணத்தின்னீர்.

(இ - ள்.) கொல்சின வேழம் குறிநிலை செய்த குணத்தின்னீர் - நும்மைக் கொல்லவந்த வெகுளியையுடைய யானையைக் கைகவித்து அமைதி நிலையுறும்படி செய்தருளிய தவப்பண்புடைய பெரியீரே! நீயிர்; நில்லாதாகக் கூறுதல் தன்னை நெறி என்றிர் - எப்பொருளும் நிலையுதலுடையதன்று என்று கூறுதலை நுமது சமயநெறியின் வாய்மையுள் ஒன்று என்று கூறினீர்; பல்வகையானும் பாழ்செய்து - அவ்வாய்மையை யான் பலவழியானும் குற்றங்கூறி அழிக்கவும்; பின்னே பரிகாரம் சொல்லுவிர் ஆயின் - பின்னர் யான் கூறிய குற்றங்களுக்குத் தீர்வாக நிலையுதற்குறிப்பாகிய தொடர்ச்சி வாசனை சத்தி என்பனவற்றைக் கூறுவீராயின்; சொல்லிய மெய்ம்மை துறவு ஆம் மன் - நீயிர் கூறிய அந்த வாய்மை இவற்றானும் கெட்டுப்போம், என்னை? இவை நிலையுதலுடையவாய் எல்லாம் நிலையாமையுடையன என்பதை அழித்தலான் என்றாள் என்க.

(வி - ம்.) துறவு ஆம்-கெட்டுப்போம். மன்: ஒழியிசை. பரிகாரம்-தீர்வு. அப்பரிகாரமே அதனை அழிக்கும் என்பது ஒழியிசைப்பொருள்.

எல்லாம் நிலையாதனவே என்று நீயிர் சொல்லுதற்கண், யாங்கள் உலகியலொழுக்கமும் நாற்பயிற்சியும் சிறுவன் ஆளாதலும் வினைப்பயன் நுகர்தலும் முதலாயின கூடாமை காட்டி மறுப்ப, நீயிர் இவற்றிற்குத் தீர்வாக நிலையுதற்குறிப்பாகிய தொடர்ச்சி வாசனை சத்தி என்பவற்றைக் கூறுவீராயின் பொருள் நிலையாமையுடையன என்பதேயன்றி நிலையுதலுடையனவுமாய் நுமது கணபங்கம் கெடுமன்றோ? கொல்லவந்த வேழத்தை நுங் குறிப்பிலே நிறுத்தின குணமுடையீரென்றவாறு.

கொல்ல வந்த வேழத்தைக் குறிநிலை செய்தலாவது - ஓரரசன் பௌத்தர் காட்சிகொண்டு மிகவும் அன்பனாய்ச் செல்ல அவன்பால் அன்புகொண்ட புத்தனும் அவ்வரசன் சாவாமைவரங்கொடுப்ப அவன் அரசு புரியா நிற்புழி, புத்தன் மாணாக்கர் வகையிலுள்ளானொரு துறவி அவ்வரசன் மகனை நோக்கி, 'மன்னவன் மகனே! புத்த பகவன் நின் றந்தைக்குச் சாவாவரங் கொடுத்தனனாதலின் உனக்கு இனி அரசாட்சியில்லை என்று சொல்லக் கவன்ற அவ் விறைமகன் அத்துறவி அறிவுறுத்தபடி ஒருபாயத்தால் அரசனைக்கொன்று அரசு கட்டிலேறி ஆள்பவன், தன் நண்பனைப் புத்தனுக்க வேண்டிப் புத்தன்பிச்சை புகப் போம் வழி ஒரு மதயானையை விடுத்துக் கொல்விக்கப் புக்கானாக; அம் மதயானையை நோக்கிப் புத்தன் தன் கைகவித்து அறவுரை கூறி அதனை அமைதி கொள்வித்தனன் என்பதாம். இவ்வரலாற்றினை "உணர்ந்தவன் விடப்பட்ட களிநாகம் விசைவித்தகையினன்...அன்றே" என்பதனானும் (இடம் விளங்கா மேற்கோள்) உணர்க.

இனி, உலகியல் கூடாமையாவது "ஒக்கிறையாரே" (இகூ0) என்பதனாலறிக. நாற்பயிற்சி கூடாமையாவது "கற்றினி யெல்லாக் கணக்கும் கலந்துரை காண்பென்னையோ?" (இகஅ) என்பதனாலறிக. கணிக பக்கத்துக் குழவி காளையாதல் கூடாமையுமுணர்க. வினைப்பயனுகர்வு கூடாமையாவது "தெய்வ மென்னத் தேறினர் செய்யுஞ் சிறப்பும்" (இகச) என்பதனாலறிக. (கoக)

உயிருண்மை

௫௬௭. ஓதி யாது முயிரில்லை யென்ப துரைத்து நின்றாயேற்
கோதி லங்கோர் குறியுயிரே கொள்ளி னுங்கோளழிவாம்
வேதி லார்சொல் பரிகற்ப னையி னாலின் மைசொல்லி
னீதி யாகின் கருத்தினா லுண்மை யுந்நேர்ந் தாயன்றே.

(இ - ள்.) ஓதி - புத்தனே! நீ உயிருண்டென்று கூறி வைத்தும் பின்னர்; உயிர் யாதும் இல்லை என்பது உரைத்து நின்றாயேல் - உயிர் என்று ஒன்றனை யாதொரு பொருளும் உடையதில்லை என்றும் முன்னுக்குப் பின் முரணாகக் கூறி நிற்பாயாயின்; அங்கு ஓர் கோதில் குறியுயிரே கொள்ளின் - அவ்விடத்தே ஒரு குற்றமற்ற பெயர் ஆகிய உயிர் என்பதனை அவ்வுயிரே பெறின்; நுங்கோள் அழிவாம் - நும் மேற்கோளுக்கே முரணாகும்; அ ஏதிலார் சொல் பரி கற்பனையினால் இன்மை சொல்லின் - இனி, அப் பிறசமயக் கணக்கர் கற்பித்துக் கூறும் கற்பனையினாலே உயிர்க்கு யாங்கள் இன்மை சொல்கின்றேம் என்பாயாயின்; நின் கருத்தினால் உண்மையும் நீதியால் நேர்ந்தாயன்றோ - நின்னுடைய மேற்கோளாலே அவ்வுயிருண்மையை முறையாக ஏற்றுக் கொண்டாயாகின்றனையல்லையோ? என்றாள் என்க.

(வி - ம்.) மனம் பற்றிப் பிறக்கும் குறிக்கந்தவகையுள் உயிர் என்னும் பெயருண்மையே அதன் பொருளாகிய உயிருண்மையை முடிக்கும் என்பாள் அங்கோர் குறியே உயிர் கொள்ளின் நுங்கோளழிவாம் என்றாள்.

இனி,

"யாப்பவிழவும் யானில்லை யெனதில் லென்றும் என்றான்"

எனவும்,

"கருத்தினாற் பெற்றாமே கண்ணேபோற் கொளப்படுக"

எனவும்,

"ஆமையின் கோசத்தாற் கயிறிடுதி"

எனவும், இவ்வாறு உயிரென்பதொரு பொருளின்மையின் எப்பொருளுக்கும் உயிர் என்பதொன்றில்லை என்றுஞ் சொல்லிப் பின்னர்,

"கூறுதிரோ வுயிரென்றாள் கூறுது முயிரென்றான்
கூறுமி னுயிரெமக்குக் குழுவாகித் தடுமாறி
யீறு விடாவுடையா னிவனன்றோ வெனமொழிந்தான்"

என்பதனால் உயிருண்மை கூறின் முன்பின் முரணும் உயிரில்லை என்னும் மேற்கோண் மலைவுமாம்.

இனி, பிறர் சொல்லும் உயிரை யில்லையென்றே னெனினும் பிறர் சொல்லும் இலக்கணத்ததாகிய உயிர் உள்ளதென்றிசைந்தாயாகுதி. அதனான் உயிர் இல்லை என்னும் நின்மேற்கோள் மலைவாம்.

அன்றியும் அநாதியாகிய பிறப்பின்கண் தடுமாறிப் பொன்றக் கேடாகிய வீடுபேறு எய்துமளவும் நின்ற அறிவெல்லாம் ஒருயிராகு மென்று சொல்லினையன்றே, அவ்வாறு சொல்லின் வந்த அறிவுகள் நல்வினை தீவினைகளைச் செய்தும், அவற்றின் பயன்களை நுகர்ந்தும் பிறப்பின்கட் சுழன்றே வீடுபெற வேண்டுதலின் கணந்தொறுங் கெடுகின்றன வல்லவாம். கெடின் இவ்வுலகத்தினின்றும் வேறுலகங் கட்குச் செல்வதாகி உயிரென்று பெயர் பெற்ற பொருளியாவதாம்? அன்றியும் வீடுபெறுந்துணையும் நின்ற அறிவுகள் எல்லாந்திரண்டு இவ்வுலகத்தினின்றும் வேறுலகங்களுக்குச் சேறல் முதலாயின கூடுவனவுமல்ல. சிலநாள் கழிந்து வீடெய்தும் நீ இதுபொழுது முழுமையுற்ற உயிருமல்லையே என்றூர்க்கு, முப்பது நாட்களை ஒரு திங்களென்று பெயரிட்டவாறுபோல, கணந்தோறும் கெட்டன வாயினும் வீடுபெறுந் துணையும் நின்ற அறிவுகளை உயிரென்று பெய ரிட்டேனெனின் ஒரு திங்களின் தொடக்க முதலாக இறுதியீறாக நின்றகாலத்தை அறிதலின் அதற்குத் திங்கள் என்று பெயரிடல் அமையும். முதலுமின்றிக் கணந்தோறும் அழிந்துபாமாகும் அறிவுகளை அவ்வாறு அறிவதொன்றின்மையால் உயிரென்று பெய ரிடல் முடிவதாமன்று ; மலர்கள் பலவற்றை மாலையென்று பெயரிட லாகாதவாறுபோல வென்பது. இங்ஙனமே பிறவு மெய்துங் குற்றங்கள் எல்லாம் ஆராய்ந்து அறிந்து கொள்க. (௬௦௭)

இதுவுமது

௫௩௮. ஒன்று மில்லை யுயிரென்று
 ரைத்தநீ யுண்மை யின்மை
நின்ற வாறே நெறியாக
 நேர்கின் றய்நீ யாவனோ
வன்றி முன்சொன் னவத்திறமெத்
 திறத்தா னும்மா காமையா
லின்றும் நின்றும் நீமொழிந்தா
 யெம்மிறை யேயிறை யாகவே.

(இ - ள்.) உயிர் ஒன்றும் இல்லை என்று உரைத்த நீ - உயிரென்று ஒரு பொருளில்லை என்று கூறிய நீ; உண்மை யின்மை நின்ற ஆறே நெறியாக நேர்கின்றாய் - அவ்வுயிரை உண்டுமாம் இல்லையுமாம் என் எம் மேற்கோள் நின்றவழியாகவும் கூறுகின்றாய்; நீ யாவனோ - இங்ஙனம் தலைதடுமாறக் கூறுகின்ற நீதான் எத்தகையனோ அறிகின்றிலேன்; அன்றி - இவ்வாறு கூறுதல் ஒருவாற்றாற் பொருந்தினும் பொருந்துவதன்றி; முன் சொன்ன அத்திறம் எத்திறத்தானும் ஆகாமையால் - நீ உயிர் என்று ஒன்று இல்லை என்று கூறிய அஃது எவ்வாற்றானும் பொருந்தாமையாலே; இன்றும் நின்றும் நீ மொழிந்தாய் - அவ் வுயிர்க்கு நிலையாமையும் நிலையுதலுங் கூறினாய் ஆதலால்; எம்

இறை இறையாக - அங்ஙனம் கூறும் எங்களிறைவனுகிய அருகனே உனக்கும் இறைவனுகக் கொள்க என்றான் என்க.

(வி - ம்.) இன்றும்-நிலையுதலின்மையும் நின்றும், - நிலையுதலும். உயிரென்ப தொன்றில்லை யென்று சொல்லிப் பின்பு,

"இயல்பொடு வேறல்லன் ஒன்றல்லன் இல்லல்லன்
இயல்புளவா வுளனுகும் இயல்பிலவா இல்லாகும்
இயல்பாதி யின்மையான் முதறேற்ற மிலனிடை
இயல்பெலாந் தானிறுதி யுடைமையா லநித்தியனே"

என்பதனால் அவ்வுயிரினை உண்டுமாம் இல்லையுமாம் என்றும், நிலையாமை யுடைத்தென்றும், நிலையுதலுடைத்தென்றும், வேற்றுமையுடைத்தென்றும், வேறுபடாதென்றும் கூறுகின்றாய். இங்ஙனம் கூறும் நீ யாவனே? அல்லதூஉம் ஒரு முடிபு கொள்ளும் சமயிகட்கு இவ்வாறு பன்முடிபு கூறும் எம்மிறைவனையே இறைவனென்றறிந்து கூறினை போலும் என்றான் என்க.

'நின் கூற்றுகள் முன்பின் முரணுய் நின் மேற்கோளையே அழிக்கின்றனகாண்' என்பது இதனுற் போந்த பொருளாம். (சஂ௯)

## இதுவுமது

௫௬௬. போற லானு மதுபோ லாதேன்
றும்பு னைவினுலும்
வேறல் லதில் லையெனவும் வினைவ
லியும்யோ கினுலும்
தேறி நின்ற பொழுதோடிவ்
வேழாந்திறத்தி னுலுங்
கூற லாமோ மீட்டுணர்வு
கொண்டு ணர்வா னில்லாக்கால்.

(இ - ள்.) மீட்டுணர்வு கொண்டு உணர்வான் இல்லாக்கால் - மீட்டுணர்வு என்னும் அளவையாலே பொருளியல்புணரும் உயிர் இல்லை எனின்; போறலானும் - ஒப்புமையானறிதலும்; அது போலாது என்றும்-ஒப்புமையின்மையால் அதனை இஃது ஒவ்வாது என்றறிதலும்; புனைவினுலும் - ஆக்கங்கண்டு புனைந்துரைத்தலும்; வேறு அல்லது இல்லை எனவும் - அதனின் இது வேறு என்றறிதலும் வினைவலியும் - தொழிலாற்றல் கண்டுரைத்தலும்; யோகினுலும் - யோக நிலையறிதலும்; தேறி நின்ற பொழுதோடு - முன்பு மயங்கிப் பின்னர்த் தெளிந்து நின்ற பொழுதினையறிதலும் ஆகிய; இ ஏழு ஆம் திறத்தினுலும் - இந்த ஏழுவகையாலும்; கூறலாமோ - பொருளியல்பறிந்து கூறுதல் கூடுமோ? என்றான் என்க.

(வி - ம்.) மீட்டுணர்வு, ஐவகை அளவைகளுள் ஒன்று. அஃதாவது அதுவே இது, யானே அவன், அவனே இவன், அதுவே போலும் இது, ஆபோலும் ஆமா என்பன முதலிய அறிவுகளையுடையவாய் முன்பு கண்ட பொருள்களோடு ஒற்றுமையுடைமை சமமுடைமை முதலியன பற்றிப் பின்பு கண்டபொருள்வயிற் பிறக்கும் அறிவு என்க.

இனி, இதன்கண் போறலானும் என்பது ஆபோலும் ஆமா என்றல் போலாதென்றுமென்பது, அதுபோலா திதுவென்றல். புனைவினானும் என்பது பண்டு கல்லாதான் இவனிப்பொழுது கல்வியிற் பெரியனாயி னான் என்றல். வேறல்லதில்லை என்பது-அதனின் இது வேறு என்றல். (அதனோடிது முன்பு வேறுபட்டிருக்கும் இதுபொழுது வேறுபாடில்லை என்றல் என்பது பழையவுரை) வினைவலி என்பது - முன்பு தொழி லாற்றல் உடையான் இப்பொழுது அவ்வாற்றலிலன் என்றல்; யோகு என்பது - முன்பு மாயோகியாயிருந்தான் இப்பொழுது ஒழுக்கங் கெட்டான் என்றல்; தேறின்றபொழுது என்பது-முன்புமயங்கினான் இப்பொழுது தெளிந்தான் என்றல்.

இந்த ஏழுவகையானும்அறிதற்கு ஓர்உயிரில்லையாயின் இவ் வறிவு நிகழமாட்டா என்பதாம்.

இனி, ஒப்பு முதலியவற்றால் அஃதல்லாததனை அஃதென்றுணர்தல் மயக்கவறிவாம். என்னை? முன் தாமரைப் பொய்கை கண்டான் பின்னொருநாள் அப்பொய்கை நீரற வற்றி, நீர் பெற்றுத் தாமரை பூத்த காலத்துக் கண்டு அத்தாமரைப் பூ வென்றலும், முன்பு புளிப்பதொரு புளியம் பழந்தின்றான் பின்பொரு புளியம்பழங் கைக்கொண்டு இப் பழந்தின்றேன் இதுபுளிக்குமென்றலும் அம்மயிர் இம்மயிர் என்றலும் முதலாயின மயக்கவறிவே யன்றோவெனின், நன்று சொல்லினை, மீட்டுணர்வின் கண் ஓரோவொன்று மயக்கறிவு ஆயதற்காக எல்லாம் மயக்கறிவாயின் காட்சி அளவையினும் இவ்வாறு ஓரோவழி மயக்கறி வுண்டாதல் பற்றி எல்லாம் மயக்கறிவே என்னல்வேண்டும். அன்றியும் முன்பின் தொடர்புடையதொரு பொருளையன்றி இவ்வாறுணர்தலுங் கூடாதாம்.

இனி, மீட்டுணர்வெல்லாம் மயக்கவறிவேயாகில், 'யான்கண்டீர் நோன்பிகாள் முன்னையோர் பிறப்பினுள் முயலானேன்' என்றதூஉம் மயக்கவறிவாகி மயக்கமுடைய நீயும் தலைவனாகாமையின், பௌத்த சமய மென்பதொன்றிலதாம். இது நல்லதொரு அளவையேயாயின் முன்பின் தொடர்புடைத்தாகிய அவ்வறிவுக்கு நிலைக்களமாகியதோர் உயிர்ப்பொருள் உளதாகல் வேண்டும் என்பது.

ஏழுதிறம் என்றது, பிறர்மதம் மேற்கொண்டு கூறியது. (௪0௯)

இதுவுமது

௫௭0. நாம சீவன் முதலாய நான்மை களின்முன் மூன்றிலுந்
தூய்மை சீவனுடைத்தாகு மன்றே னின்சோன் மாறுமாந்
தாம சீவன் முழுவது மென்று தருக்கு கின்றாய்
வாம சீவ னிவற்றினு லுண்மை மறுக்க லாகுமோ.

(இ - ள்.) வாம - புத்தனே!, நாம சீவன் - தனக்கெனச் சிறந்துரிமையுடைய பெயரையுடைய உயிர்; நாம முதலாய நான்மைகளின் - பெயர் இருக்கை பொருள் உண்மை என்னும் நான்கனுள் வைத்து மூன்றுமூன்றிலும் - முன்னின்ற பெயர் இருக்கை பொருள் என்னும் மூன்றும் உயிர்க்கிருத்தலாலே; சீவன் உண்மை யுடைத்தாகும்-உயிர்ப்பொருள் உண்மையையுமுடைத்தாய் உள்பொருளே யாகும்; அன்றேல் நின் சொல் தூய்மை மாறுமாம் - அங்ஙனம் உள்பொருள் அன்றெனின் நின் மொழி வாய்மை கெட்டுப் பிழையாகும். முழுதும் அசீவன் என்று தருக்குகின்றாய் - அங்ஙனமாகவும் அஃறிணை உயர்திணை என்னும் இரு கூற்றெப்பொருளும் உயிரில்லனவே என்று கூறிச் செருக்குறுகின்றனை; இவற்றினுல் - இவ்வேதுக்களுண்மையால்; சீவன் உண்மை மறுக்கல் ஆகுமோ-உயிர் உள்பொருளாதலை யாரானும் மறுத்தல் கூடுமோ? என்றாள் என்க.

(வி - ம்.) நாம சீவன் என்றும் நாம முதலாய நான்மை எனவும், நாமமென்பதனைப் பின்னுங் கூட்டுக. நின்சொல் தூய்மை மாறுமாம் எனக் கூட்டுக. தூய்மை-ஈண்டு வாய்மை.

பெயர் இருக்கை பொருள் உண்மை என்கின்ற நான்கினுள் உயிர் என்ற பெயருண்மையும் அப்பெயர் குறிக்கும் பொருளும் அப்பொருளிருக்கையும் உயிர்க்கு நின்மொழியாலே முடிந்தன. எஞ்சிய உண்மையை மட்டும் மறுப்பது பேதைமையாம்; என்னை? உலகின்கண் உள்பொருட் கல்லது பெயரில்லாமையால். உயிர் என்னும் பெயர் உளதாகவே பெயர் முதலிய நான்கு முடைத்தாம் உயிர் என்றவாறு.

இனி, ஆகாயப்பூ முதலான பெயர்கள் உண்மையில் அவையும் உளவாகல் வேண்டுமன்றோவெனின், வேண்டா,

> "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தன்றே
> தொடர்மொழி யல்லாக் காலை யான"

என்று சொல்லோத்துடையாரும்(?)சொன்னாராதலின் தொடர்மொழிகளிற் சிலவன்றித் தனிப் பெயர் எல்லாம் பொருளுடைய. இனி ஆகாயப்பூ என்னுமிவ்விடத்தும் ஆகாயத்துப் பூ இல்லை என்பதல்லது ஆகாயம் என்னும் பெயரும் பூ வென்னும் பெயரும் பொருளுடையவாதலால் உயிர் என்னும் பெயர் தனிப்பெயராதலால் பொருளுடைத்தென்பது.

இனி, வடிவுடைமையாலும் உயிர்ப்பொருள் உளது. இல்பொருட்கோர்வடிவின்மையால், தன்னுணர்வுண்மையானும்மொழிதன் முதலியவற்றாற் பிறரான் உணரப்படுதலானும் உயிர்ப்பொருள் உளதாம் அன்றெனின் நின்சொல்லெல்லாம் உலகத்திற்கு முரணும். என்னை? புத்தன் என்னும் பெயரும் அதன் வடிவமும் புத்தனாகிய நீயும் உலகத்திற்கு இல்லையாதல் வேண்டும். இல்லையாகவே பௌத்த சமயமென்பதொன்றில்லையா மாதலின் உயிரில்லை என்னும் கொள்கையும் இல்லையாதலின் என்பது. அவை உளவெனின் எல்லாம் உயிரில்லன என்பது பெறப்படாதாம்.

இனி, யான் உயிரல்லேன் ஐங்கந்த பிண்டமே என்பாயாயின், தெங்கேறி இளநீரிடுவுழித் தெங்குடையான் 'தெங்கேறினார் யாவர்?,' என்ன யானொரு மட்டையென்னும் மடவோன்போல நீயும் உயிரென்னும் பெயரை யொழித்து 'ஐங்கந்த பிண்டம்' என வேறொரு பெயரிட்டு வழங்கினாயாகுதி. ஆகவே, பெடர் முதலியன உண்மையால் உயிர்ப் பொருளினதுண்மை மறுக்கப்படாதென்றவாறு. (௧0௭)

## புத்தன் வெகுண்டுரைத்தல்

௩௭௧. அறியும் மெய்ம்மை யும்மைங்கந்
 தம்மாட் சிய்யு மல்லவையுஞ்
சிறிதும் மென்முன் னிலையின்மை
 காட்டிச் சிதைத்தே னலினிப்
பிறிதோன் றுண்டே லுரைய்யென
 வுரைத்தாள் புத்தன் றான்பெரிதும்
மேறிபட் டேன்னே றியினாலே
 யடக்கு வன்னி னையுமேன்றான்.

(இ - ள்.) அறியும் மெய்ம்மையும் - புத்தனே! யானிது காறும் நீ அறிந்துரைத்த நான்கு வாய்மைகளையும்; ஐங்கந்த மாட்சியும் - ஐந்து கந்தங்களின் சிறப்பையும்; அல்லவையும் - ஏனைய கணபங்க முதலியவற்றையும்; என்முன் சிறிதும் நிலையின்மை காட்டி - என்முனனே ஒரு சிறிதும் தத்துவமாக நிற்றலின்மையை உனக்கு விளக்கி; சிதைத்தேன் - அழித்தொழித்தேன்; இனி பிறிது உண்டேல் உரை என - இப்பொழுது வேறேதேனும் நின் மேற்கோள் உளதாயின் கூறிக்காண்! என்று அறை கூவாநிற்ப; புத்தன் பெரிதும் எறிபட்டு - அதுகேட்ட அப் புத்தன் அச் சொல்லாற் பெரிதும் எறுண்டு; என் நெறியினாலே நின்னையும் அடக்குவன் என்றான் - ஏடி! நீலகேசி யான் என் சமய நெறி முறைமையாலே பிற சமயக் கணக்கர்களை நாவடக்கினாற் போலவே நின்னையும் அடக்குவேன் காண்டி! என்றான்; என்க.

(வி - ம்.) மெய்ம்மை-நால்வகை வாய்மைகள். அல்லவை, கணிக பங்கம் முதலியன வென்க. அறிய்யும் என்பன, உரைய்யென என்பன செய்யுள் விகாரங்கள்.

நீலகேசி 'புத்த! யான் உனது வாய்மைமுதலியவற்றை அழித்தேன் இன்னும் கூற யாதேனும் உளதாயிற் கூறுதி என்ன' அது கேட்ட புத்தன் 'யான் என் சமயநெறி காட்டி நின்னைவை யடக்குவேன்' என்றான் என்றவாறு.

நின்னையும் என்ற வும்மையால் பிறரை அடக்கினாற்போல என்பது பெற்றாம். (௧0அ)

## நீலகேசி அவன் சமயநெறியினை இகழ்தல்

### வேறு

ருஎஉ. ஆதி யலாத வகன்றடு மாற்றமுஞ்
சாதி யறுக்குந் தகையு மிவையென
வோதி வினைப்பயத் தோப்புரைப் பார்க்கன்றி
நீதி யிலாநெறி நேரல னென்றாள்.

(இ - ள்.) *ஆதியலாத அகன் தடுமாற்றமும் - புத்தனே! யான் அநாதியாகத் தொடர்ந்து வருகின்ற பரந்த பிறப்புத் தடுமாற்றங்களையும், சாதி அறுக்குந் தகையும் - அப்பிறப்பினை அறுத தொழிக்கும் நல்லொழுக்கங்களையும்; ஓதி-நன்கு விளக்கிக் கூறி; வினைப்பயத்து ஒப்பு உரைப்பார்க்கன்றி-வினைகட்கும் பயன் களுக்கும் தொடர்பு கூறும் ஆருகத சமய நல்லாசிரியர் கூற்றை மேற்கொள்ளுதலன்றி; நீதியிலா நெறி - முறைமையில்லாத நின் புல்லிய சமயநெறியினை; நேரலன் என்றாள்-ஏற்றுக் கொள்கிலேன் காண் ஆயினும் அந்நெறியினைக் கூறுதி என்றாள் எனக.*

(வி - ம்.) *நீலகேசி 'யான் நன்னெறி கூறும் ஆருகத நல்லாசிரியர் மொழியை ஏற்றுக் கோடலன்றி நின் புன்னெறியை ஏற்கிலேன், ஆயினும் அதனைக் கூறுதி' என்றாள் என்றவாறு.*

*ஆயினும் அதனைக் கூறுதி என்பது குறிப்பெச்சம். ஆதியலாதது- அநாதியானது. பிறவித்தடுமாற்றம் என்க. சாதி-பிறப்பு. நீதியிலா நின்னெறி யென்க.* (௧0௧)

### புத்தன் கூற்று

ருஎ௩. வித்தின் வழிவழித் தோன்றும் முளைகிளை
சத்தியி னுயசந் தானத்தை மாற்றென்பன்
வெத்தவ வித்தினின் வேறன்று வீடிது
தத்துவ மாக்கோ டளிரிய லாயே.

(இ - ள்.) *தளிர் இயலாய் - மாந்தளிர்போன்ற நிறமுடைய மேனியை யுடையோய்!; வித்தின் வழி முளைதோன்றும் வழி கிளை- விதையினின்றும் முளைதோன்றுகிற்கும் அம்முளையினின்றும் கிளை தோன்றும்; சத்தியின் ஆய சந்தானத்தை - இங்ஙனம் தோன்றுதற்கியன்ற ஆற்றலால்; தொடராநின்ற தொடர்ச்சியையே மாற்று என்பன்-பிறப்புமுற்சியாகிய மாறுபாடு என்று யான் கூறு வேன்; வீடு வெந்த வித்தினின் வேறன்று-இனி யான் வீடுபேறு என்பது முளைக்கும் ஆற்றல் கெட்டுப்போன வெந்த விதையை ஒக்கும் அதற்குவமை வேறொன்றுமன்று காண்; இது தத்துவமா கொள் - இதனையே எனது மெய்க்காட்சியாகக் கொள்க! என்றான் என்க.*

(வி - ம்.) பிறப்புமுதலியாவது வித்தினின்று முளையும் அதனி னின்று இலையும் தோன்றுதல்போலத் தொடர்ந்து மாறிமாறி உழப்ப தாம். இனி வீடென்பது வறுத்த வித்துப்போல முளைவிடு மாற்றலிழந் தமைவதாம். என் மெய்க் காட்சி இவை என்றான் என்றவாறு.

"தொடர்ச்சி வித்து முளைதான் என்றிந்
நிகழ்ச்சியில் அவற்றை நெல்லென வழங்குதல்"

எனவரும் மணிமேகலையுங் (௩௦: ௨௦௦ - ௧.) காண்க. (௧௧௦)

இதுவுமது

௩௭௪. வினையு முளது பயனு முளது
தினையனைத் தாயினுஞ் செய்ஞ்ஞனு மில்லை
யெனையவுங் கந்த மிருகண நில்லா
நினையின்மற் றென்று னெறிபயந் தானே.

(இ - ள்.) நினையின் - ஆராயுங்கால்; வினையும் உளது - வினையுண்டு; பயனும் உளது - அவ்வினையின் பயனும் உண்டு: தினையனைத்தாயினும் செய்ஞ்ஞனும் இல்லை - ஒரு தினைத்துணை யேனும் அவ்வினையைச் செய்பவன் இல்லையாம்; எனையவும் கந்தம் - எல்லாக் கந்தங்களும்; இருகணம் நில்லா - ஒரு கணத்தே தோன்றி யழிவனவேயல்லால் இரண்டு கணந்தானும் நிலையுதலுடையன வல்ல; என்றான் - என்று கூறினான்; நெறி பயந்தான் - அச்சமய நெறியைக் கண்டுரைத்த புத்தன்; என்க.

"காரகோணகிரியா அவிஜ்ஜயி" என்பதனால் உயிரில்லை யென் பதும், "க்ஷணத்வர்த்வம் நதிஷ்டந்தி" என்பதனால் கணத்திலழிவு மறிக. (௧௧௧)

நீலகேசி கூற்று

௩௭௫. குணம்பொரு ளென்றி கொடைபொரு ளென்றி
யுணர்ந்துசெய் துண்பா னொருவனி லென்றி
கணந்தனி லேநிலை கந்தமு மாயக்காற்
பிணங்குவ தோக்குநின் பேரமக் கென்றாள்.

(இ - ள்.) குணம் பொருள் என்றி - புத்தனே! நீ நோன்பும் ஒழுக்கமும் முதலிய குணங்களை மேற்கோடல் நன்றென்றும் கூறு இன்றனை; கொடை பொருள் என்றி - வழங்குதலும் மேற்கோடற் குரிய நற்செயல் என்றும் கூறுகின்றனை; உணர்ந்து செய்து உண்பான் ஒருவன் இல் என்றி - அவற்றை யறிந்து செய்து அவற்றின் பயன்களை நுகர்வானொரு தலைவன் மட்டும் இலன் என்றும் கூறுகின்றனை; கந்தமும் நிலை கணந்தனிலே ஆமக்கால்- மேலும் செயற்கருவியாகிய ஐங்கந்தங்களும் நிலைத்தல் ஒரு கணப்

பொழுதே யாயபொழுது; நின் பேர் பிணங்குவது ஒக்கும் எமக்கு என்றாள் - இங்ஙனம் கூறுகின்ற நின்னுடைய புத்தன் என்னும் பெயர் அதன் பொருளோடு மாறுபடுவது போல எமக்குத் தோன்றுகின்றது என்றாள் என்க.

(வி - ம்.) குணம் - நோன்பு ஒழுக்கம் முதலியன. கொடை - வள்ளன்மை.

பிணங்குதலாவது-புத்தன் என்னும்சொல்லிற்குரிய அறிவுடையன் என்னும் பொருளுக்கு அவன் மாறுபட்டிருத்தல். இவ்வாறு பொருந் தாதன கூறும் நீ அறிவிலியாகவும் நின்னை அறிஞன் என்றல் பிணங்கு கின்றது என்றவாறு.

இனி, பொருந்தாமை என்னையோவெனின்; வித்தும் முளையும் முதலாயினபோல அறிவின் வழி அறிவு பிறந்துதொடர்கின்ற அறிவுத் தொடர்ச்சியினைப் பிறப்புழற்சியென்றும் வெந்த வித்துப்போல மேலே அறிவு பிறவாது பொன்றக் கெடுதல் வீடென்றும் சொல்லினை யன்றே, அங்ஙனமாயின் இந்தப் பிறப்பும் வீடும் யாதனுடையன ? அறிவினுடைய வெனின், அழகிதன்று !; அறிவுகள் முற்கணத்தே உள்ளனவன்றி ஒரு கணத்துட்டோன்றியழிந்து மேலே பிறவாதனவு மாம். அவற்றிற்குப் பிறப்பிற் கட்டுண்டுழலும் உழற்சி நிகழாதாம். என்னை ?

"அவாச்சார்ந்து பற்றுகும் பற்றினால் வினைமுதிர்வாம்
தவாதவிவ் வினைமுதிர்வாற் பிறப்பாகும் பிறப்பினாற்
குவாவிய பிணிமூப்புச் சாக்காடின் கூட்டமா
யுபாயவித் தடுமாற்ற மொழிவின்றி யுருளுமே"

என இவ்வாறாகிய பிறப்புழற்சியைச் செய்து பிறப்புற்றுப் பின் உயிரில்லை என்னும் மேற்கோள் முதலாயின மேற்கொண்டு பௌத்தர் அறவழி நின்று வீடெய்தும் ஆற்றலுடையன வாதல் அவ்வறிவுகட்குக் கூடாமை அறிந்து கொள்க.

இனி, மெய்யறிவுடைய உயிர்த்தொடர்ச்சிக்குக் கட்டும் வீடும் சொல்லினும் நீ உயிர்த் தொடர்ச்சி என்று கூறுவது வீடுபெறுந் துணையும் நின்ற அறிவுத் தொடர்ச்சியினையன்றோ "சூழுவாகித் தடுமாறி யிறுவிடா வுடையா னிவனன்றே வெனவுரைத்தான்" என்பது நின்னோத் தாகலின் உயிர்த் தொடர்ச்சி யென்பதூஉம் அவ்வறிவுகளையேயாம்.

இனி, யாங்கள் உயிர்த்தொடர்ச்சி யென்பது அறிவுத் தொடர்ச் சியினையன்று, அவ்வறிவினின்றும் தோன்றும் பிறிதொன்றின் தொடர்ச்சியினை, என்னை ?

"கண்டனு முயிர்யாவ தென்றாளாக் கந்தங்கள்
கொண்டனவு மிறந்தனவுந் தோன்றுவவு மியல்பாகப்
பண்டைத்தன் குற்றத்தாற் றடுமாறி வீட்டின்க
ணுண்டாக விடுவானெம் முயிரெனப் படுவான்"

என்பது எம்மோத்தாகலின் எனின், அறிவுகளில் வேறுப்வனாய் அநாதி யாக அவாமுதலிய பிறப்புக்காரணங்களை நிகழ்த்திப் பிறப்புத்

துன்பங்களை நுகர்ந்து வீடுபெறுவன் எனின் அவன் வாய்மையான உள்பொருள் அல்லனே? அங்ஙனம் உள்பொருளேயெனின், "கற்பித்துக் கணமென்றெங் காலங்வே றில்லென்றான்," 'மேலையும் முயிர்தானும் வேண்டியவா றீதுவென்றான்'' என்று படைத்துக் கோட்டலவனுக்குச் சொல்லியதூஉம், "உணர்வதியா தெனவுரைத்தாள் உணர்வென எதிர்மொழிந்தான்.' எனவும், "ஆசையா லுடம்பளவிற் றுயிரென்பா யானமயின் கேசத்தாற் கயிறிடுநீ கெடுகநின் னுரையென்றான்' எனவும், "கருத்தினுற் சீவனைச் சுருக்காக வுணர்தியேற் சுவர்க்கத்துத் தன்னின்ரோ?'' எனவும் இவ்வாறு உயிரின்மை சொன்னதூஉம் பொருந்தாதாம்.

இனி, உயிர் என்பது வாய்மையாக உள்பொருளன்று; உலக வழக்குப் பற்றிப் படைத்துக்கொள்ளப்பட்டது எனின், மலடி ஒரு மகனைப் படைத்துக்கொண்டு அவனுக்குச் சொல்வன்மை முதலிய பண்புகளை ஏற்றிக் கூறலும் அமையும். அவ்வாறே ஓர் உயிரைப் படைத்துக் கொள்ளினும் அது தானும் கணத்திற் றோன்றியழிவதாகலின், அதற்கும் பிறப்புக் காரணம் நிகழ்த்துதலும் அதன்கண் அழுந்தலும் வீடுபெறுதலும் நிகழாவாம். ஆதலால் நின் பெயர் தன் பொருளொடு பிணங்குவதொக்கும் என்றாள் என்றவாறு. (௧௧௨)

## புத்தன் கூற்று

௩௭௬. தீதுள்ள மேலது தீயுழப் பேசெய்யும்
யாதுள்ள மாண்புள மேலின்ப மாமென்னை
மாதுளம் பீசமுண் மாணரக் கின்னிறம்
போதுள்ளங் காண்பது போலமற் றென்றான்.

(இ - ள்.) யாது உள்ளம் தீது உள்ளமேல் அது தீ உழப்பே செய்யும் - அதுகேட்ட புத்தன் நீலகேசியே கேள்! யாதானுமோருள்ளம் தீதுடையதாயவழி அவ்வுள்ளம் துன்பத்தையே யுண்டாக்கும்; யாது உள்ளம் மாண்பு உளமேல் - யாதானுமோருள்ளம் மாண்புடைய நல்லுள்ளமாயவழி; இன்பம் ஆம் - அவ்வுள்ளம் இன்பத்தையே யுண்டாக்கும்; என்னை? - எங்ஙனமெனின்; மாதுளம் பீசம் உண் மாண் அரக்கின் நிறம் - மாதுளம் வித்தின்கண் ஊட்டப்பட்ட மாண்புடைய அரக்குகளின் நிறங்களை; போதுள் அம் காண்பதுபோல - அவ்விதையின் தொடர்புடைய மலரின்கண் காண்பதுபோலே; என்றான் - என்று கூறினான்; என்க.

(வி - ம்.) தீயுழப்பு - துன்பம். யாதுள்ளம் என்பதனை முன்னுங் கூட்டுக. மாதுளம் பீசம் - மாதுளம் வித்து. போதுள்ளம் - அம் : சாரியை.

இதனால், வினைக்கும் பயனுக்குமுள்ள தொடர்பு கூறுகின்றான்.

தீயவுள்ளம் தன் தொடர்ச்சியின்கண் துன்பஞ்செய்யும். நல்லுள்ளம் நன்மை செய்யும்; எங்ஙனமெனின், ஒரு மாதுளை வித்தில்

காரரக்கும், ஒரு மாதுளைவித்தில் செவ்வரக்கும் பூசி நிலத்துள்ளிட அவ்வவற்றின் தொடர்புடைய மலர்களில் நிரலே கருமை நிறமும் செம்மை நிறமும் தோன்றியவாறு போல என்றான் என்றவாறு.

காரரக்கிட்ட விதையினது மலரிற் கருநிறமும் செவ்வரக்கிட்ட விதையினது மலரிற் செந்நிறமும் தோன்றும் என்று கொள்க. (௧௧௯)

வருகின்ற செய்யுள் மூன்றும் நீலகேசி புத்தன் கூற்றினை விரித்தோதிய படியாம் (இம் மூன்றும் குளகம்)

௫௭௭. எட்டி னியன்ற விரண்டினு ளாங்கவை
யட்ட வரத்தமு மல்லது மாய்ப்பய
மட்டார் மலர்க்கண்ணுஞ் செம்மையு மற்றுமா
விட்டமுங் காட்டுவ னீங்கிது போல.

(இ - ள்.) எட்டின் இயன்ற இரண்டினுள் - ஐய! நீ கூறிய உவமையாவது, அட்டக பிண்டமாகிய மாதுளை வித்திரண்டனுள்; ஆங்கு அவை அட்ட அரத்தமும் அல்லதும் ஆய் - அவ்விரண்டு விதையினும் தோய்த்தன செவ்வரக்கும் அஃதல்லாத காரரக்குமாக; பயம் - அவ்விருவேறு அரக்கின் பயனாக; மட்டும் ஆர் மலர்க் கண்ணும் - அவற்றின் வழித்தோன்றிய தேன்நிரம்பிய மலர்களினிடத்தே; செம்மையும் மற்றும் ஆம் - நிரலே செந்நிறமும் கருநிறமும் உண்டாகும் என்பதே; இட்டமும் - நின் விருப்பமுமாமன்றோ; ஈங்கு இதுபோலக் காட்டுவன் - இவ்வாறே இவ்வுவமையின் பொருளையும் எடுத்து விரிப்பேன் கேள்; என்றாள் என்க.

(வி - ம்.) நீலகேசி புத்தன் கூறிய உவமையையும் பொருளையும் விரித்துக்கூறத் தொடங்கி இதன்கண் உவமையை விரித்தோதினள் என்க.

எட்டின் இயன்ற இரண்டு - அட்டக பிண்டமாகிய இரண்டு மாதுளம் விதைகள். அரத்தம் - செவ்வரக்கு. அல்லது என்றது - காரரக்கினை; பயம் - பயன். மற்றும் - மற்றதும்; அஃதாவது - கருமை. இட்டம் - விருப்பம். இதுபோலப் பொருளையும் விரித்துக் கூறுவேன் என்றவாறு. (௧௧௪)

௫௭௮. ஐந்தி னியன்றவர் பிண்டத்த ராகிய
மைந்த ரிருவர் குசலா குசலத்தர்
சிந்தையி னல்லவன் றன்வழித் தேவனும்
வெந்தொழி லான்வழி வீழி னரகனும்.

(இ - ள்.) ஐந்தின் இயன்றவர் பிண்டத்தர் ஆகிய - நீ கூறுகிறபடி ஐந்து கந்தங்களாலியன்ற பிண்டமாகிய; மைந்தர்

இருவர் - மனிதர் இருவராக அவருள்; குசல அகுசலத்தர் - ஒருவன நன்மனமுடையான் மற்றொருவன் தீயமனமுடையானுக; சிந்தையின் நல்லனன் வழித்தேவனும் - மனத்தானன்மை யுடையோன் வழியிலே தேவனும், வெம் தொழிலான் வழி - மனந்தீமையாலே வெய்ய தீத்தொழிலையுடையான் வழி; வீறு இல் நரகனும் - சிறப்பற்ற நரகனும் தோன்றுவர் என்பதே யன்றோ அவ்வுவமைக்குப் பொருள் என்றாள் என்க.

(வி - ம்.) செவ்வரக்குப் பூசிய மாதுளை வித்திற்கு நன்மையுடைய உள்ளமுடையவனும் காரரக்குப் பூசிய வித்திற்குத் தீய மனமுடையவனும் பொருளாகுவர். இனி, செவ்வரக்குப் பூசிய வித்தின் வழித் தோன்றும் மலரின் செந்நிறத்திற்கு நன்மனமுடையான் வழித் தோன்றும் தேவனும், காரரக்குப் பூசிய வித்தின் வழித்தோன்றும் மலரினது கருநிறத்திற்குத் தீயமனமுடையான் வழித்தோன்றும் நரகனும் பொருள்கள்.

இனி, இவற்றாற் போந்த பொருள் நன்மனமுடையான் செய்த நல்வினையின் பயனுகிய இன்பத்தை அவன் வழித்தோன்றிய தேவன் நுகர்வன் என்பதும், தீயமனமுடையான் செய்த தீவினையின் பயனுகிய துன்பத்தை அவன் வழித்தோன்றிய நரகன் நுகர்வன் என்பதுமாம். இது நீலகேசி எதிரியின் மேற்கோளை மறுத்தற் பொருட்டு அதனை விளக்கமாக விரித்துக் கூறிக் கொண்டபடியாம்.

தோன்றுவர் என்பது சொல்லெச்சம். (௧௧௫)

இதுவுமது

௫௭௬. பீச மெனப்பட்ட தெட்டே பிறிதங் கொன்
றுசொன்று மில்லைய வைந்திற்கு மன்னது
நீ சொன்ன வாறிது நேருந் திறமென்னை
யேசுவன் கேள்யா னெடுத்தினி யென்றாள்.

(இ - ள்.) பீசம் எனப்பட்டது எட்டே அங்கு பிறிது ஒன்று ஆசு இல்லை - ஐய! நின்னால் மாதுளை வித்தென்று கூறப்பட்டது அட்டக பிண்டமல்லது பிறிதொன்றுஞ் சிறிதுமில்லையன்றோ; அ ஐந்திற்கும் அன்னது - இவ்வுவமைக்குப் பொருளாகிய அம் மக்கட் பிண்டமும் ஐங்கந்த பிண்ட மல்லது பிறிதொன்றுமில்லையன்றோ; இது நீ சொன்ன ஆறு - இது நீ கூறிய முறையேயாய்?, இது நேரும் திறம் என்னை - இவ்வுவமையும் பொருளும் தம்முட் பொருந்துமாறு என்னையோ?; யான் இனி எடுத்து ஏசுவன் கேள் என்றாள் - யான் இனி இவ்வுவமையையும் பொருளையும் எடுத்துக் குற்றங் கூறுவேன் கேட்பாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) அட்டக பிண்டமாவது—நான்கு பூதங்களும் நிறம் சுவை நாற்றம் ஊறு என்னும் நான்குமாகிய எட்டினியன்ற பிழம்பு. இவை உருவக்கந்தத்தினியல்பு.

ஐங்கந்தமாவது - உருவு நுகர்ச்சி குறியே பாவனை (உள்ள) அறிவை. இவற்றினாலியன்ற பிழம்பே மக்களுடம்பு முதலிய உடம்புகளெல்லாம் என்பது கருத்து.

இது நேருந்திறம் - இஃது உவமையாகவும் பொருளாகவும் பொருந்துந் தன்மை. என்னை? என்னும் வினா பொருந்தாமையை வற்புறுத்து நின்றது. ஏசுதல் - குற்றங் கூறல். (கககூ)

நீலகேசி குற்றங் கூறுதல்

௩௭௦. அயலரக் கட்டக பீசமுண் டாங்கு
வியலகத் தைந்திற்கும் வேறுன்று காட்டாய்
குயலமு மல்லது மாயினன் றாகும்
மயல்படைத் தாயொழி மாதுளங் காட்டல்.

(இ - ள்.) அட்டக பீசம் அயல் அரக்கு உண்டாங்கு - புத்தரே! நீயிர் கூறிய உவமையாகிய அட்டக பிண்டமாகிய மாதுளை வித்துத் தனக்கு வேறாகிய அரக்கு ஊட்டப் பட்டவாறுபோல; ஐந்திற்கும்-பொருளாகிய ஐங்கந்தங்களாலியன்ற மக்கட் பிண்டத்திறகும் வேறாக ஒருபொருளுங் கூறினீரில்லை; குயலமும் அல்லதும் ஆயின் நன்றாகும் - வித்திற் கயலாகிய அரக்குப் பின்னர்ச் செந்நிறமும் கருநிறமும் காட்டும் என்ற வுவமைக்கும் பொருள் கூறி அப்பொருள் இன்பமும் துன்பமும் பயந்தன என்னினன்றோ உவமை பொருந்துவதாம்; மயல் படைத்தாய் - மயக்கமுடையீர்! நீயிர் அங்ஙனம் கூறாமையினாலே பொதுத் தன்மை பொருந்திற்றில்லை; ஆதலால், மாதுளங்காட்டல் ஒழி - இவ்வாறு மாதுளை வித்தினை உவமை கூறுதலை விட்டொழிமின்! என்றாள் என்க.

(வி - ம்.) மக்கட் பிண்டத்திற்குவமை கூறி வினைகட்கும் பயனுக்கும் கூறிய உவமைக்குப் பொருள் பொருந்தக் கூறிற்றிலிர் ஆதலால் இது பொருந்தாதென்றவாறு. என்னை? அட்டக பிண்டமாகிய வித்துக்கள் தம்மில் அயலாகிய அரக்குக் குழம்போடு தொடர்பு படுதலின் அவற்றின் வழியுண்டாகிய மலர்களில் செம்மை கருமை தோன்றுவது பொருந்தும்; மக்கட் பிண்டமாகிய ஐங்கந்த பிண்டங்களில் அரக்குப்போலத் தொடர்பு பட்டது பிறிதொன்றுங் கூறாமையின் அவற்றின் வழித்தோன்றிய தேவநரகராகிய ஐங்கந்த பிண்டங்களிலே இன்பமும் துன்பமும் தோன்றுதல் கூடாதாம்; காரணமின்றிக் காரியம் பிறவாமையின்; என்பதாம்.

இனி, மக்கட் பிண்டத்தே குசலா குசலவெண்ணங்கள் உளவன்றோ என்பாயாயின், அவை ஐங்கந்தங்களுள் அடங்குதலின் அரக்கூட்டப் படாது தனிமைபெற்ற வித்தின் வழித்தோன்றும் மலர்களிலே செம்மை கருமை பெறப்படாதவாறுபோலத் தனிமைபெற்ற ஐங்கந்த பிண்டத் தொடர்ச்சியின்கண் இன்ப துன்பங்கள் நிகழாவாம். ஆதலின் உவமையும் பொருளும் பொருந்தாமையின் இவ்வுவமையை ஒழி என்றவாறு.

இனி, எடுத்துக்கொண்ட காரிய முடிவிற்கு வேண்டுமளவல்லது உவமைக்கு வந்தனவெல்லாம் பொருளுக்கும் வருக என்னும் விதியுளதோ? எனின், மாதுளை வித்தாகிய அட்டக பிண்டத் தொடர்ச்சியிற் றோன்றிய மலராகிய அட்டக பிண்டத்தின் நிறவேறுபாடு அவ்வித்தாகிய அட்டக பிண்டத்துள் ஒன்றுதலன்றிப் பிறிதாகிய அரக்குக் குழம்பாலே வந்தது. இனி மக்கட் பெயர் பெற்ற ஐங்கந்த பிண்டத்து வழித் தோன்றிய தேவநரகராகிய ஐங்கந்த பிண்டத்தின் கண் இன்ப துன்பங்கட்குப் பிறிதொரு காரணமின்மையின், காரிய முடிவிற்கு இன்றியமையாததும் இல்லையாகலின் உவமையும் பொருளும் பொருத்தமில்லையாம் என்பதாம். (கக௭)

இதுவுமது

ருஅக. பூவின்கட் காட்டல் பொருந்தா ததன்வழி
மாவின்க ணாக மகன்செய் வினைப்பயன்
தேவன்கட் போலத் திருந்திய மாதுளஞ்
சாவின்கட் செய்கையுஞ் சாங்களைந் தாயோ.

(இ - ள்.) மகன் செய்வினைப் பயன் தேவன்கண்போல - மக்கட் பிண்டத்துள்ளாளொருவன் செய்த நல்வினையின் பயனைத் தேவபிண்டத்துள்ளாளொருவன் நுகருமாறுபோலே; அதன்வழிப் பூவின்கண் காட்டல் - நீ மாதுளைவித்திற் பூசிய அரக்கின் நிறம் அட்டக பிண்டமாகிய அதன் வழித்தோன்றிய மலர்நிறத்தின் கட் காட்டுதல்; பொருந்தாது - பொருந்தமாட்டாது; மாவின் கண் ஆக - பொருந்துவதாயின் மாதுள வித்திலிட்ட அரக்கின் நிறம் மாமலரின்கண் காணப்படுவதாக; திருந்திய மாதுளஞ் சாவின்கண் - அரக்குப் பூசித்திருந்திய மாதுளைவித்து மரமாகி மலருமுன் சாகுமாயின்; செய்கையும் சாம் - அதன் காரியமும் தோன்றுதழியும்; களைந்தாயோ - இனி மக்கட் பிண்டத் தொடர்ச்சி; செத்தாலல்லது - தேவனாய் நுகர்தல் உண்டாகாதாகலின் நீ மக்கட் பிண்டத்தின் சாவினைத் தவிர்த்து விட்டனையோ காண் என்றாள் என்க.

(வி - ம்.) மகன்செய் வினைப்பயன் தேவன்கட் போல அதன் வழிப் பூவின்கட் காட்டல் பொருந்தாது; மாவின்கண் ஆக என மாறிக் கூட்டுக. அதன் எனச் செய்யுளாகலின் சுட்டுமுன் வந்தது. மா - மலருக்கு ஆகுபெயர். களைந்தாயோ என்றது இகழ்ச்சி. மக்கள் சாதலை நின் பெருமையாற் களைந்தாயோ என்றவாறு. 'சாவிகளைத்தாயே' என்றும் பாடம்.

மக்கட் பிண்டத்துத் தொடர்ச்சியிலொரு பிண்டத்துளதாகிய வினைப்பயன் தேவபிண்டத் தொடர்ச்சியிலொரு பிண்டத்துத் தோன்றுமாயின், மாதுளை வித்தாகிய அட்டக பிண்டத் தொடர்ச்சியாகிய மலரிற் றோன்றாது மாமலரின்கட் றோன்றல் வேண்டும். அங்ஙனமின்றி அதன் மலரிலேயே தோன்றுதலால் இவ்வுவமை பொருந்தாது.

இன்னும் மாதுளவித்திலிட்ட அரக்கினிறம் அது மலருமுன் சாவு
மாகின் நிறம் தோன்றுதலும் இன்று. மக்கள் செய்த வினைப்பயன்
அவரிறந்தபின் தேவராகிய வழியும் தோன்றுதலானும் இவ்வுவமை
(ககஅ)
பொருந்தாது என்றவாறுமாம்.

## இதுவுமது

ருஅஉ. வித்தோடு பூவின்கண் வேற்றுமை காட்டினும்
துத்தல் குழவி கிழவன்கட் சோல்லேன்பன்
பித்துடை யார்போற் பிதற்றி வினைப்பய
மெத்திறத் தின்னு மியைத் துரைக் கில்லாய்.

(இ - ள்.) வித்தொடு பூவின்கண் வேற்றுமை காட்டினும் - இனி நீ வித்திற்கும் மலரிற்கும் வேற்றுமையுளதாகலின் மக்கட் பிண்டத்து வினைப்பயன் தேவபிண்டத்து வரும் என்று கூறின்; குழவி கிழவன்கண் துத்தல் சொல் என்பன் - மக்கட் பிண்டத்துக் குழவிப் பருவத்தே செய்த வினைப்பயன் கிழப்பருவத்தே நுகரப் படும் என்று கூறுதியாயின் ஒருவாறு உவமை பொருந்தும் என்பேன்; பித்துடையார் போல் பிதற்றி - நீயோ பித்தர்போலப் பொருந்ாதனவற்றைப் பிதற்றி; எத்திறத்தினும் வினைப்பயன் இயைத்து உரைக்கில்லாய் - எவ்வாற்றானும் வினைக்கும் பயனுக்கு முள்ள தொடர்பினைக் கூறுகின்றிலை, என்றான் என்க.

(வி - ம்.) துத்தல் - நுகர்தல்.

வித்திலிடப்பட்ட அரக்குக் குழம்பின் காரியம் மலரிற் றோன்றிய வாறு போல மக்கட் டொடர்ச்சியின் வினைப்பயன் தேவத் தொடர்ச்சியில் நுகரப்படுதலாலே உவமையாம்; வித்திற்கும் மலருக்கும் வேற்றுமை யுண்மையி னெனின், மக்கட்டொடர்ச்சியில் குழவிப் பருவத்துச் செய்தது கிழவனாகிய பருவத்து நுகரப்படு மென்பாயாயின் ஒருவாறு பொருந்தும் அஃதொரே தொடர்ச்சி யாகலின். நீயோ எவ்வாற்றானும் பொருந்தாதபடி பிதற்றுகின்றாய். ஆகவே உனக்கு வினைக்கும் பயனுக்குமுள்ள தொடர்பு கூறுதலரிது என்றான்; என்றவாறு. (ககக)

## இதுவுமது

ருஅக. அங்குரந் தன்கண்ணுஞ் சேல்லா தரக்கோடு
மங்கின பீசத் துருவ மலரின்கட்
டங்கின வேன்னுஞ்சோற் றத்துவ மாக்கோண்ட
வங்குலி மாரனை யாதன்மற் றேன்னுய்.

(இ - ள்.) அரக்கொடு மங்கின பீசத்து உருவம் - தன் மேல் ஊட்டப்பட்ட அரக்கினோடு கெட்டுப்போன மாதுளைவித்தின் நிறமானது; அங்குரம் தன் கண்ணுஞ் செல்லாது - முளை

கணபங்கக் கொள்கையின்படி அதன் முளையினிடத்துஞ் செல்ல மாட்டாதாகவும்; மலரின்கண் தங்கின என்னுஞ் சொல் - அது அம் மாதுள மலர்காறுஞ் சென்று தங்கின என்று நீ கூறிய இம் மொழியை; தத்துவமாக் கொண்ட அங்குலிமாரனை - வாய்மை யென்று ஏற்றுக்கொண்ட அங்குலிமாரன் என்னும் நின் மாணவனை; ஆதன் என்னும் - நீயே மடவோன் என்று கூறக் கடவாய்; என்றாள் என்க.

(வி - ம்.) அங்குலிமாரன் மடவோன் ஆயினவாறு என்னையோ? எனின், நீ வினைக்கும் பயனுக்குமுள்ள தொடர்புணர்த்த வேண்டி இந்த உவமையைக் கூறியபொழுது அங்குலிமாரன், கையறக் கெட்ட அரக்குக் குழம்பும் நல்வினை தீவினைகளும் சிலநாட் கிடந்து காரியஞ் செய்யின் கையறக்கெட்ட காமவெகுளி மயக்கங்களும் கையறக் கெட்ட புத்தனும் பின்பு தோன்றல் வேண்டுமன்றோ? என்று நின்னைக் கேளாது நீ சொல்லியவெல்லாம் வாய்மையென்றே கோடலின் என்பதாம்.

இனி, கேடுதானும் இருவகைத்துப் பயன் செய்தற்குரித்தாகக் கெடுவதூஉம், பயன் செய்யாது பொன்றக் கெடுதலுமெனவும் சொல்லுதலின், பயன் செய்தற்குரித்தாய்க் கெட்டதெனின், நன்று சொல்லினை! முன்னொரு நாள் இறந்துபோயினாளொரு மகடூஉ வின்னொரு மகப்பெற்றா ளென்றானைப் பேதாயிது கூடுமோ வென் றார்க்கு, இன்னொரு மகப்பெறுதற்குரியளாகி அன்றிறந்தாள் என்றொரு மடவோன் கூறியதே போலும், பயனுக்குரித்தாய்க் கெட்டதென்று நீ சொல்லியதென்பதாம்;

"பண்டே யிறந்தாளோர் பைந்தொடி யின்னொரு
மிண்டனைப் பெற்றா ளெனலொக்கும்—பண்டுசெய்
நல்வினையுந் தீவினையுங் கெட்டன வின்றுதம்
பல்பயன் செய்யு மெனல்."

அன்றியும் காரியந்தோன்றக் கெடுகின்ற பொருள்கள் பொன்றக் கெட்ட பொருள்போலக் கெட்டதோ இல்லையோ? கெட்டதெனின், பொன்றக் கெட்ட புத்தனைப்போல மேற் காரியஞ் செய்யாதாம்; அவ்வாறு கெட்டதில்லை எனினோ, பொருள் கெடுதலும் கெடாமையு மாய் நிலையாததும் நிலையுதலும் உடைத்தென்னும் முடிவினதாம்.

இனி, அங்குலிமாரன் என்பானொருவன் ஒரு வித்தை செய்து முடிக்கும் பொருட்டு அதற்கு ஆயிரம் விரல்தேட வேண்டி அதற்கு இரண்டு குறைய ஆயிரம் விரல்தேடி இதற்குத் தன் தாயின் விர லிரண்டைக் குறைக்கப்புக, அவண் புத்தனார் சென்று அவனை அறவோனாக்கித் தவம்படுத்தார் என்பது வரலாறு. (௧௬0)

இதுவுமது

௫அ௪. அப்படி யாலரக் காமது போன்மேனிற்
றப்படை யானுழப் பெய்வழித் தங்குத
றுப்புடை யான்சுர ஞகிய வன்றுய்க்க
லிப்படி யாயினீ யென்றுரை யாயோ.

(இ - ள்.) அப்படியால் அரக்கு ஆம் அதுபோன்ம் எனின் - அவ்வாறு மாதுளை வித்தின்கண் ஊட்டப்பட்ட அரக்கின் நிறம் மலரின்கண் ஆதல் போலவே வினைகளும் அவற்றின் பயன்களும் என்பாயாயின்; தப்பு அடையான் - தவறில்லாத துறவி யொருவன்; உழப்பு எவ்வழி-மறுபிறப்பிலே அத்தவத்தின் பயனை நுகருங்காலத்தும்; தங்குதல் - அத்தவத்திலேயே நிலைபெறுதல் வேண்டும்; துப்பு உடையான் அவன் சுரன் ஆகித் துய்க்கல் - பயனுசர்தலையுடைய அத்துறவி அங்ஙனமன்றித் தேவனாய்ப் பிறந்து மகளிர் இன்பம் நுகர்தல் கூடாதாம்; இப்படி ஆயின் - இவ்வாறு பயனுகர்வு ஆயின் நின் உவமை பொருந்தாது; நீ என் உரையாய் - நீ இதற்கு என் சொல்லுதி? சொல்லுவாய்; என்றாள் என்க.

(வி - ம்.) வித்திலூட்டப்பட்ட அரக்கின் நிறமே பூவிலும் வந்ததே போலும் வினைகளும் பயன்களும் எனின் தவறின்றித் தவம் பண்ணினோன் மறுமைக்கண்ணும் அத்தவமே பண்ணுதல் வேண்டும். அஃதன்றி அவன் வானவருலகம் சென்று ஐம்புலவின்பம் நுகரின் இஃதுவமையாகாது: என்னை? காரணத்தினியல்பிற்குக் காரியத் தியல்பு மாறுபடுதலான். இதற்கென் சொல்லுதி! சொல்லாய்! என்றவாறு.

வித்திலூட்டிய நிறமே மலரின் கண்ணும் நிறமாகித் தோன்றுதல் போலத் தவவினை மீண்டும் வினையாகவே தோன்றவேண்டும், இன்பமாதல் கூடாதென்பது கருத்து.

தப்படையான் என்றது துறவியை. இதற்கு என்சொல்லுதி எனச் சிலசொல் வருவித்துக் கொள்க. (௩௨௧)

இதுவுமது

௫௮௫. எம்மை யுவப்ப வினைவழித் துப்பெனின்
செம்மை வழியது தீஞ்சுவை யென்றில்லை
யெம்மை வினைவினை யாக்குநின் பூவுரை
யிம்மையோ டும்மை யிவையில்லை யாலோ.

(இ - ள்.) எம்மை உவப்ப - புத்தனே! நீ எம்மை மகிழ்வித்தற்கு; வினைவழித் துப்பு எனின் - வினையின்பின் அதன் பயன் தோன்றுமென்பாயாயின்; செம்மை வழியது தீஞ்சுவை என்றில்லை - வித்திலிடப்பட்ட செந்நிறத்தின் பயனும் மலரின்கண் இனிய சுவை தோன்றும் என்றேனும் கூறினையில்லை; நின் பூவுரை-நின்னுடைய மாதுளைவித்தும் அதன் பூவுமாகிய உவமைச் சொற்கள்; எம்மை வினை வினை ஆக்கும் - எப்பிறப்பினும் வினையின் பயன் வினையே என்று கூறுகின்றனவல்லவோ?; இம்மையோடு உம்மை இவை இலை - ஆதலால் உனக்கு இம்மை

யினும் மறுமையினும் நிரலே வினையும் பயனுமாய் வருகின்ற இவை இல்லைபோலும் என்றாள் என்க.

(வி - ம்.) இது முற்செய்யுள் இம்மையிற் றவம் செய்தான் மறுமையினும் தவமே செய்தல் வேண்டும் என்றதற்கு விளக்கம் கூறியபடியாம்.

உவப்ப - உவப்பிப்ப. துப்பு - நுகர்பயன். அரக்கின் நிறம் மலரிற் றீஞ்சுவையாகும் என்றேனும் கூறின் ஒரோவழியியையும், அவ்வாறும் கூறினாயில்லையே என்றிரங்குவாள் 'செம்மை வழியது தீஞ்சுவை யென்றில்லை' என்றாள். என்றில்லை - என்றாயில்லை.

எம்மை உவப்பிப்ப, நீ - வினையின் வழியது பயன் என்கின்ற நீ அதற்கியைய வித்திலூட்டப்பட்ட செம்மையின் பயனாக மலரில் தீஞ்சுவை தோன்றும் என்றாயும் அல்லை. செம்மைவழிச் செம்மையே தோன்றும் என்று உவமை கூறினாய். அங்ஙனமாயின் வினையின் பயனாக வினையே தோன்றல் வேண்டும். ஆகவே நின் உவமை பொருத்தமில்லை. இங்ஙனமாதலின் உனக்கு வினைபயன் என்னும் இவைபற்றிய மெய்யறிவில்லை என்றவாறு. (கஉஉ)

இதுவுமது

ருஅசு. உண்டது போலு முறுபயன் பன்மலர்
கண்டது காரண மாகக் கருதினு
மண்டையா மான்றசை மீன்றடி தோன்றிய
வண்டுண வாகலு மாமத னாலே.

(இ - ள்.) உண்டது காரணம் ஆக - வித்து அரக்குண்டது காரணமாகப் போலும் அதனாலே உறுபயன் பன்மலர் கண்டது கருதினும் - அரக்கினது நிறம் போலும் அதனாலே உண்டாகின்ற பயனாகிய நிறத்தினை அம்மாதுளையினது எண்ணிறந்த பலவாகிய மலர்களிடத்தும் கண்டதனை ஏதுவாக வைத்துக் கருதுங் காலத்தே ; மண்டை மான்தசை தோன்றிய மீன்தடி ஆண்டு உணவு ஆகலும் ஆம் - ஈண்டு ஒரு மண்டையால் இரந்துண்டு ஒரு மான் தசை தின்று தன் கண்ணிற்றோன்றிய ஒரு மீன்றசை தின்று தவம் பண்ணிய சாக்கியன் அவற்றின் பயனாக எண்ணிறந்த மண்டைகளாலே இரந்துண்ணலும் எண்ணிறந்த மான்றசை தின்றலும் எண்ணிறந்த மீன்றசை தின்றலும் அவனுக்கு மறுமைக்கண் பயனும் என்பது பெறப்படும் அன்றோ? என்றாள் என்க.

(வி - ம்.) உண்டது - வித்துண்டவரக்கின் நிறம். உண்டது காரணமாக அதனாலே உறுபயன் என்க. மண்டையாம் என்புழி ஆம் இசைநிறை. ஆண்டு - அண்டென விகாரவகையாற் குறுகி நின்றது.

வித்திலூட்டப்பட்ட அரக்கினது நிறம் பல் பூக்களுள் பலகாலும்
வந்தவாறு போலச் சில செய்கையால் பல பயன் ஆமென்று சொல்
லினும் ஒரு சாக்கியன் தவம் பண்ணுகின்ற காலத்தே ஒரு மண்டையா
விரந் துண்டானாயினும் மறுமைக்கண் எண்ணிறந்த மண்டையாயிரந்
துண்டலும் ஒரு மான்றசை தின்றான் எண்ணிறந்த மான்றசை
தின்றலும் ஒரு மீன்றடி தின்றான் எண்ணிறந்த மீன்றடி தின்றலும்
திங்களுக்கொருகாற்றலை சிரைத்தான் ஒரு திங்களிற் பன்முறை தலை
சிரைத்தலும் வேண்டும். ஆதலாலே செம்மைவழித் தீஞ்சுவை
யல்லது செம்மைவழிச் செம்மை பயன் காட்டுதல் உவமையாகா
தெனக் கூறி அசதியாடியபடியாம். (௧௨௩)

இதுவுமது

௫௮௭. தீயுழப் பேசெயுந் தீவினை யென்பது
வாயுழப் பாம்வழி யேபுகுந் தாயினி
நோயுழப் பாகிய நஞ்செய்கை யாவையும்
நீயுழப் பாய்பிறர்க் கேயுழந் தாயால்.

**(இ - ள்.)** பிறர்க்கே உழந்தாய்-பிறர்பொருட்டுப் பல்வேறு பிறப்புக்களிலே பிறந்து துன்பமுற்றேன் என்னும் பேதாய்!; தீவினை தீ உழப்பே செயும் என்பது வாய்-தீவினை துன்பத்தையே தரும் என்று சொல்வதே வாய்மையாகும்; இனி நோய் உழப் பாகிய நுஞ்செய்கை யாவையும் - இனி அது வாய்மையாதலி னன்றே தீச்செயலாகிய நின் தீவினைகளின் பயனையெல்லாம்; உழப்பாம் வழியே புகுந்தாய் - நுகர்தற்குரிய பிறப்புக்களிலே பிறந்து; நீ உழப்பாய் - நீ நுகர்வாயாயினை; என்றான் என்க.

**(வி - ம்.)** பிறர்க்கே யுழந்த பேதாய்! நீ தீவினை துன்பத்தையே தரும் என்று சொல்லுதியாயின் அது வாய்மையேயாகும்; அது வாய்மையாதலினன்றே நீயொரு பிறப்பின்கண் தலையரிந்து கொடுத்த தீவினையாலே பிறிதொரு பிறப்பிலே உடம்பு பிளப்புண்டனை; உடம்பு பிளந்த தீவினைப் பயனாலே பிறிதொரு பிறப்பிலே உயிருடனே சிறிது சிறிதாகத் துணிக்கப்பட்டனை; அத் தீவினைப் பயனால் பிறிதொரு பிறப்பிலே குருதி பருகக் கொடுத்தனை; அதன் பயனால் காடையாய்ப் பிறந்து வெந்திறந்தனை; இவ்வாறு நீ ஒரு பிறப்பின்கண் கொடையென்று நினைத்துச் செய்த தீவினையால் பிறிதொரு பிறப்பிற் றுன்பமுழந்தனை! என்றவாறு.

இது, தலையரிதன் முதலாயின தீவினையாதலினன்றே நீ பிறிதொரு பிறப்பின்கண் துன்பமுழப்பாயாயினை என அவனை அதற்குச்சான்றாக்கிய படியாம். இனி, தலையரிதன் முதலாயின தானே விரும்பிச் செய்த லாலே தீவினையின்பாற் படுவன அல்லவெனின், தாமே விரும்பித் தலையரிந்து கொண்டு சாவோரும், நான்று சாவோரும், நஞ்சு தின்று சாவோரும், தீப்பாய்ந்து சாவோரும் முதலாயினோருடைய வினைகளும் தீவினைப்பாற் படாவாம் என்பது. அறங்காரணமாகச் செய்தலின் தீவினையன்றெனின், இவரும் அறம் பொருள் இன்பம் என்னும் இவற்றுள் ஒன்றுபற்றியல்லது சாவாரென்றவாறு. (௧௨௪)

இதுவுமது

௫அஅ. உள்ளம் வினையென வோதினை யேற்செய்கை
யெள்ளின் றுணையுமஃ தின்மை யினேந்தேனக்
கொள்ளுந் திறமென்னை கூறுய் குணந்தினிக்
கள்ளமல் லாலென்றுங் கட்டுரை யாயால்.

(இ - ள்.) உள்ளம் வினை என ஓதினையேல் - இனி அறிவே செயலாம் என்று கூறினையாயின்; செய்கை அஃது எள்ளின் றுணையும் இன்மையின் - செய்கை என்னும் அவ்வினை எட்டுணையும் தோன்றுமையாலே; குணந்து ஐந்து எனக் கொள்ளுந் திறம் என்னை கூறுய் - அதனையும் அறிவுக் கந்தத்தடக்கிக் கந்தம் நான்கெனவே அமையும்; அங்ஙனமின்றி வாளாபெருக்கிக் கந்தம் ஐந்தென மிகையாகக் கூறுதலெற்றிற்குக் கூறுவாய்; கள்ளம் அல்லால் என்றும் கட்டுரையாயால் - நீ இங்ஙனம் கள்ளமாகக் கூறுதலன்றி எப்பொழுதும் வாய்மையே கூறும் போலும் என்றாள்; என்க.

(வி - ம்.) நல்வினையுந் தீவினையும் அறிவேயன்றி அதனின் வேறுய் இருப்பனவல்ல என்னின், ஐங்கந்தம் என்பது பயனில் கூற்றும். இவ்வாருகவும் கந்தம் நான்கென்பதன்றி ஐங்கந்தம் என்பது கள்ளமாம் என்றவாறு. குணந்து - பெருக்கி. (கஉ௯)

இதுவுமது

௫அ௯. நின்னுடை யுள்ளமுஞ் செய்கையு மொன்றெனிற்
றன்னிடை யெய்துந் தரும தருமிமற்
றென்னிடைக் கொண்டிலே யெங்குப்பெற் ருயிது
முன்னுடம் பாட்டின் முரணுள தாமால்.

(இ - ள்.) நின்னுடைய உள்ளமும் செய்கையும் ஒன்று எனின் - புத்தனே! உன்னுடைய அறிவுக்கந்தமும் செய்கைக் கந்தமும் பிரித்துப் பெறப் படாமையினுல் ஒன்றே என்பாயாயின்; தரும தருமி தன் இடை எய்தும் - அங்ஙனம் கூறுதற்கண் பண்பும் பண்பியுமாகிய இரண்டும் உளவாகும்; இடைக் கொண்டு இலே என் - நின் மேற்கோளிடை அவற்றைக் கொண்டாயுமல்லே ஆகலின் அங்ஙனம் கூறுதல் என்னும்; இது எங்குப் பெற்ருய் - இது நினக்குடம்பாடின்றுகலின் யாண்டுப் பெற்றனை; முன் உடம் பாட்டின் முரணுளது ஆம் - இக்கூற்று நின் மேற்கோட்கே முரணும் என்றாள் என்க.

(வி - ம்.) உள்ளம் - அறிவுக் கந்தம். செய்கை - செயற்கந்தம். தருமம் - பண்பு. தருமி - பண்பி.

அறிவும் செய்கையும் உளவாய் வைத்தும் அவ்விரண்டும் பிரித்துப் பெறப்படாமையின் ஒன்றென்பாயெனின் அறிவும் உயிரும் பிரித்துப் பெறப்படாமையின் ஒன்றாயினமையில் பண்பும் பண்பியும் உளவாம். இஃதுனக்கு மேற்கோளன்மையின் யாங்குப் பெற்றனை? நீ முன்பு அறிவேயல்லது அறிவானில்லை யென்று சொல்லியதனோடு மாறு கொள்ளுமன்றோ? என்றவாறு.

நன்மை என்பதொரு பண்பாகவும், அறிவாவது அதனை யுடைய தொரு பண்பியாகவும் சொல்லினை; அவ்வாறே அறிவையும் உயிரையும் கொள்ளென்பதாம். (௧௨௬)

இதுவுமது

௫௬௦. சித்தமுஞ் செய்கையும் வேறென்றி யேயெனி
லொத்த வினையுடன் பாடின்றி யாமினித்
துத்த லையாதின் வழித்தெனச் சொல்லுதி
யொத்திய வல்ல துரையலை யாயால்.

(இ - ள்.) சித்தமும் செய்கையும் வேறு என்றி - அறிவுஞ் செயலும் ஒன்றல்ல வேறு வேறு என்கின்றனை; எனில்-அங்ஙனமாயின்; ஒத்த வினை உடம்பாடு இன்றி ஆம் - அறிவோடு ஒத்த வினை அறிவின்றித் தாமே யுண்டாவனவாம்; இனி, துத்தலை யாதின் வழித்து எனச் சொல்லுதி - ஆகவே நுகர்ச்சியை எதன் வழி வந்தது என்று கூறுவாய்; ஒத்திய அல்லது உரையலை - நீ இங்ஙனமே அறிவிற்கயலானவற்றை யல்லது கூறுவாயல்லை போலும் என்றுள் என்க.

(வி - ம்.) அறிவும் வினையும் வேறு வேறு எனின் அறிவின்றி வினை தாமேயுளவாம், உளவாகவே வினைப்பயனுகர்ச்சி அறிவுக்கெய்துமாறில்லை. இல்லையாகவே அறிவு நுகர்ச்சி எய்தியதற்குக் காரணம் யாது? என்றவாறு. ஒத்திய - விலகியன; அறிவிற் கயலானவை என்றவாறு: பெயர்ச்சொல். (௧௨௭)

இதுவுமது

௫௬௧. கண்டுணர்ந் தார்வத்தி னாற்செய்கை யாதலை
யுண்டேனி னாற்குண மொன்றினுக் கொட்டினை
பிண்டிநீ ழலவன் பேறறஞ் சார்தலிற்
கோண்டநின் கோளின்கட் குற்றமுண் டாமோ.

(இ - ள்.) கண்டு உணர்ந்து ஆர்வத்தினால் செய்கை ஆதலை உண்டு எனின் - ஐய! ஒரு சாக்கியன் நின்னைக் கண்டு புத்த பெருமான் என்றுணர்ந்து நின்பால் அன்புகொண்டு நினக்கு வழிபாடு செய்தலை நீ அங்ஙனம் நிகழ்தல் உண்டெனஒப்புவையாயின்; ஒன்றினுக்கு நால் குணம ஒட்டினை - ஒருபொருளுக்கு

அந்த நான்கு பண்புகளும் உள என்றும் உடம்பட்டனையாகுதி யல்லையோ?; பிண்டி நீழலவன் பேரறம் சார்தலின் - அங்ஙனம் கோடல் நின் மேற்கோட்கு முரணுமெனினும் நீ அவ்வாறே உடம்படவேண்டுதலால்; அங்ஙனமே கொள்ளும்வு மேற்கோளுடைய அசோகு நீழலமர்ந்த அருகன் அறத்தினை நீயும் மேற்கோடலில்; கொண்ட நின் கோளின்கண் குற்றம் உண்டாமோ - ஒருபொருட்கு நான்கு குணம் உண்டெனக் கொண்ட அக்கொள்கைக்கு ஆக்கமாவதன்றிக் குற்றம் உளதாகுமோ? ஆகாதெனவே நீ அவ்வறத்தையே மேற்கொள்ளுதி! என்றாள் என்க.

(வி - ம்.) புத்த! நின்னைக் கண்டு நின்னைப் புத்தன் என்றுணர்ந்து நின்பால் அன்பு பூண்டு நினக்கு வழிபாடு முதலாயின செய்ய வேண்டுதலின் காட்சி முதலாகிய குணம் நான்குமவற்றையுடையானுமாக நீ கூறும் அறிவின்கண் அந் நான்குமுளவாக நீயும் இயைதலின்றியமையாமையின் இவ்வியைபு நின் மேற்கோட்கு முரணுதலின் அதனைக் கைவிட்டுக் குணகுணிகள் உண்மையை மேற்கோளாகவுடைய எம்மாருகத சமயத்தை நீயும் மேற்கொள்ளக் கடவை என்றவாறு. (௩௨௮)

## இதுவுமது

௫௩௨. விளைவத னால்வினை யாக்குமேன் பார்சொ
லுளைவதிங் கேன்செய வோவுணர் வில்லாய்
தளைபெய்து வைத்தென்னைத் தம்பொறி யெல்லா
மளைவது நன்றிது தானற மாமேல்.

(இ - ள்.) உணர்வில்லாய் - மெய்யுணரும் ஆற்றலிலாத மடவோனே!; விளைவதனால் வினை ஆக்கும் என்பார் சொல் - நுகர்ச்சியால் வினைகள் உண்டாக்கப்படும் என்று மெய்யுணர்ந்து கூறும் ஆருகதர் மொழியை; உளைவது - நீ வெறுப்பதுதான்; இங்கு என் செயவோ - இவ்வுலகத்தின்கண் எந்த நன்மையைச் செய்தற்பொருட்டோ? யாமறிகிலேம்; தம் பொறி எல்லாம் தளை பெய்து வைத்து என்னை - நுகர்ச்சியாலே வினையுண்டாகாதெனின், ஒருவன் தன் பொறிகளையெல்லாம் புலன்களிலே செல்லாமற் கட்டி வைப்பதனாலே யுண்டாகும் நன்மைதான் என்னையோ? இதுதான் அறம் ஆமேல் - நின் மேற்கோளே அறமாய்விடின்; அளைவது நன்று - பொறிகளைப் புலன்களின்பாற் செலுத்தி அவைதரும் இன்பத்தை நுகர்வதே மிகவும் நன்றாகும் அன்றோ? என்றாள் என்க.

(வி - ம்.) பயனால் வினையாமென்று சொல்லும் ஆருகதர் மெய்ம்மொழிகேட்டு நீ வெறுப்பதெற்றிற்கு? பயனால் வினையாகாதாகின் காம நுகர்ச்சி முதலியன பயனாகலின் அவற்றையுஞ் செய்யென்றவாறு. (௩௨௯)

இதுவுமது

ருசுரு. ஆர்வத்தி னல்வினை யாக்கு மெனச்சொல்லி
னார்வத்தைச் சித்தமென் றுரைப் பாரினிச்
சேர்வித்த துப்பினிற் செய்கையு மாதலை
நேர்வித்த வாறது நீயறி யாயால்.

(இ - ள்.) ஆர்வத்தினல் வினை ஆக்கும் எனச் சொல்லின் - புலனுகர்ச்சியின்கண் அவ்வின்பத்திலே பற்றுடைமையாலே வினைகள் தோன்றும் என்று சொல்லின்; ஆர் ஆர்வத்தைச் சித்தம் என்று உரைப்பார் - யாரே தாம் பற்றுடைமையை அறிவு என்று கூறுவர் ?; சேர்வித்த துப்பினில் செய்கையும் ஆதலை - பழவினை கூட்டிய புலனுகர்ச்சி காரணமாக மீண்டும் வினைகள் உண்டாதலை; நேர்வித்தவாறு - நிகழ்வித்தபடிமாம்; அது நீ அறியாய் - அந்நுணுக்கத்தை நீ அறியமாட்டாய் காண்! என்றவாறு.

(வி - ம்.) ஆர்வம் - பற்று. ஆக்கும் - ஆக்கப்படும். பற்றுவேறு அறிவு வேருகலான், பற்றையே அறிவென யாருங் கூறுர்.

புலனுகர்ச்சியின்கண் பற்றுடைமையாலே வினைகள் தோன்றும் எனின், புலன்களின்பாற் பற்றுடைமை நன்றுந் தீதுமுடைய அறிவன்றியே அவற்றிற்குக் காரணமாகுமெனின் புலன்களின்பாற் பற்றுடைமை பயனுகர்வின்கண் வினைகளையாக்குவதாம். ஆகவே பயனுல் வினையாம் என்றவாருயிற்று. (கஉ0)

இதுவுமது

ருகூச. உணர்வினை ஆர்வ மெனவுரைப் பாயேற்
புணரும் பிறர்கடம் பொற்றொடி யார்மே
லுணர்வன்ற தார்வ முழப்பெனச் சொல்லி
னிணர்பிரி யாத்துப்பி னல்வினை யென்றாய்.

(இ - ள்.) உணர்வினை ஆர்வம் என உரைப்பாயேல் - அறிவினையே பற்று என்று கூறுவாயாயின்; உணர்வு பிறர்கள் தம் பொற்றொடியார் மேல் புணரும் - அறிவானது பிறருடைய மனைவிமார்பால் எப்பொழுதும் யாவர்க்கும் செல்லுமியல்பிற்று ஆதலால் இவள் பிறன் மனைவி என்றறிந்த துணையானே தீவினையுமாம் ஆதலால் அது பொருந்தாது; ஆர்வம் அது அன்று உழப்பு எனச் சொல்லின் - இதற்கஞ்சிப் பற்று அறிவன்று நுகர்ச்சியே என்பாயாயின்; இணர் பிரியாத் துப்பினல் வினை என்றாய் - அவ்வழி கூட்டத்தினின்றும் பிரிதலில்லாத நுகர்ச்சியினலேயே வினையுண்டாம் என்று நீயும் உடம்பாட்டாயாகுதி ! என்றாள் என்க.

(வி - ம்.) ஆர்வமாவது உணர்வெனின், பிறன் மனைவியை யுணர்ந்த துணையானே தீவினையாதல் வேண்டும். இனி ஆர்வமாவது நுகர்ச்சியே எனின், நுகர்ச்சியால் வினையுண்டாம் என எம் மேற்கோளை உடம்பட்டனை ஆகுதி என்றாள் என்றவாறு. (௧௧௧)

இதுவுமது

௫௬௫. சித்தமுடைச் செய்கை செய்வினை யாதலின்
சித்த முடைத்துப்புஞ் செய்வினை யாம்பிற
சித்தம் வினையெனச் செப்புத லாலெங்குச்
சித்தமுண் டவ்வழிச் செய்கையு முண்டே.

(இ - ள்.) சித்தம் உடைச் செய்கை செய்வினை ஆதலின் - மனத்தினோடு கூடிய செயல்களே செய்கின்ற வினைகளுமாதலாலே; சித்தம் உடைத்துப்பும் - அம்மனத்தோடு கூடிய நுகர்ச்சிகளும் செயல்களேயாதலின்; செய்வினை ஆம் - செய்கின்ற வினைகளே யாகும்; சித்தம் வினை எனச் செப்புதலால் - மனத்தின் வழியது வினை என்று சான்றோர் கூறுதலாலே ; எங்குச் சித்தம் உண்டு அவ்வழிச் செய்கையும் உண்டு - எவ்விடத்தே மனத்தோடு கூடிய செயல்கள் நிகழ்கின்றனவோ அவ்விடங்களிலெல்லாம் வினைகள் தோன்றுதலுண்டெனக் கொள் என்றாள் என்க.

(வி - ம்.) மனத்தோடு கூடிய செயல் வினையாகின், அதனோடு கூடிய நுகர்ச்சியும் செயல்களேயாதலின் அவையும் வினைகளே யாகும் எனவே மனத்தோடு கூடிய செயல்கள் எல்லாம் வினைகளேயா மென்று கொள் என்றவாறு. (௧௧௨)

இதுவுமது

௫௬௬. செய்கையி னுற்றுப்பு மாக்கியத் துப்பினிற்
செய்கையு மாம்வகை செப்புவித் தேனினிப்
பொய்கைசெய் தேசொன்ன பூவோடு வித்துரை
வைகவேன் றுண்மல ருண்கண் மடவாள்.

(இ - ள்.) மலர் உண்கண் மடவாள் - கருங்குவளைப்பூப் போன்று மையுண்டு கறுத்த கண்ணையுடைய நீலகேசி பின்னரும் புத்தனை நோக்கி ஐய!; செய்கையினுல் துப்பும் ஆக்கி - ஒருழவன் ஒருகாற் செய்த உழவு முதலிய செயல்களினாலே பயனாகிய நெல் முதலியவற்றை உண்டாக்க; அத்துப்பினில் செய்கையும் ஆம் வகை - மீண்டும் அந்நெல் முதலிய பயன்களாலேயே உழவு முதலிய செயல்களும் உண்டாதல் போல; செப்புவித்தேன் - வினையாற் பயனும் பயனால் வினையும் தோன்றும் என நின்னைக் கூறும்படி செய்தேன்; பொய் கைசெய்து சொன்ன - ஆதலால்

நீ பொய்வகையாற் புனைந்து கூறிய; பூவொடு வித்து உரை - பயனுக்கும் வினைக்கும் வித்தினையும் மலரையும் கூறுகின்ற உவமை மொழிகளை; வைக - இனி விடுக.

(வி - ம்.) ஆக்கி - ஆக்க. வைக்க - என்பது வைக என நின்றது விகாரம். கழிக எனப் பொருள் கூறினுமமையும்.

பொய்யை கை செய்தல் - அழகு செய்தல் ; புனைந்து கூறுதல். மெய்போலப் பேசுவது.

பூ - மாதுளம் பூ. வித்து - மாதுளம் விதை.

'ஒருகாற் செய்த உழவு முதலிய செயல்களாலே நென் மூதலியன தோன்ற மீண்டும் அந்நென் முதலியனவே உழவு முதலிய செயல்கட்குக் காரணமாமாறுபோலே வினையாற் பயனும் அப்பயனான் மீண்டும் வினையும் தோன்றும் என்பேன். இவ்வுவமையே வினைக்கும் பயனுக்கும் ஏற்றவுவமையாம். நீ அரக்கூட்டிய மாதுளை வித்தினையும் மலரையும் உவமை கூறுதல் சிறிதும் பொருந்தாது. அதனைக் கைவிடுவாயாக!' என்றாள் என்பதாம். (கஙக)

இதுவுமது

ருகூஎ. இருவகைப் பீசத் தியல்வு மழித்துத்
திருவகைத் தேவொடு பூவுஞ் சிதைத்தே
மருவுகை யாய்நின் மதுரஞ்செய் மாவும்
தருவனை யாயிற் றகரு மதுபோல்.

(இ - ள்.) இருவகைப் பீசத்து இயல்வும் அழித்து-புத்தனே! நீ வினைகட்கு உவமையாகக்கூறிய செவ்வரக்கும் காரரக்கும் ஊட்டப்பட்ட இருவகை மாதுளை வித்துக்களின் தன்மைகளும் பொருந்தாமை காட்டி அழித்து; திருவகைத் தேவொடு - செல்வ முடைய தேவப் பிறப்பினோடு; பூவுஞ் சிதைத்தேன் - நுகர்வினுக் குவமைகூறிய மாதுளமலர்களும் பொருந்தாமை காட்டியழித் தொழித்தேன்; மருவுகையாய் - நீ இன்னும் சொற்போரின்கண் பொருந்துதலுடையையாய்; நின் மதுரஞ்செய் மாவும் தருவனை ஆயின் - நின் மேற்கோட்கு இனிய மாமரத்தினை உவமை கூறுதி யேனும்; அதுபோல் தகரும் - அம் மாதுளை வித்துவமைபோல அதுவும் அழிந்தொழியும் காண் என்றாள் என்க.

(வி - ம்.) (இஅக) பூவின்கட் காட்டல் பொருந்தாது. அதன்வழி மாவின்கண் ஆக என்று கூறினளாகலின், அந்த மாவினையே நீ உவமை யாகக் கொடுவந்து கூறின் அதுவும் தகரும் என்பாள் நின் மதுரஞ் செய் மாவுந் தருவனையாயில் அதுபோற் றகரும் என்றாள்.

மருவுகையாய் - மருவுதலுடையையாய். தருவனையாயின்-தருவா யாயினும்.

இதுகாறும் யான் கூறியவாற்றால் நீ வினைகட்கும் பயன்கட்கும் கூறிய உவமைகள் பொருந்தாதொழிந்தன காண் என்றவாறு. (கஙஎ)

இதுவுமது

௫௬அ. வலிசெய்து பீசத்தின் மாண்பு மழித்திட்
டலிசெய்து விட்டே னமையு மதன்மேற்
பலிசையி னீசொல்லும் பாடங்க ளெல்லாம்
நலிவனென் றேன்று நடுவுணர்ந் தென்றாள்.

(இ - ள்.) *வலிசெய்து பீசத்தின் மாண்பும் அழித்திட்டு - யான் வாய்மையின் ஆற்றல் காட்டி நீ கூறிய வித்துவமைமயின் சிறப்புக்களையும் அழித்து; அலி செய்து விட்டேன் - அதனைப் பயனற்றதாகச் செய்துவிட்டேன்; அமையும் - அதற்குக்காட்டிய குற்றங்களே போதியனவாம்; அதனமேல் - இனி அதற்குப் பின்னரும்; நீ பலிசையின் சொல்லும் பாடங்கள் எல்லாம் - நீ பலவாக நின் மாணவர்க்குக் கூறும் பாடங்களாகிய நின் தத்துவங்கள் அனைத்தையும்; ஒன்று ஒன்றாக நடுவுணர்ந்து நலிவன் என்றாள் - நீ ஒவ்வொன்றாகக் கூறுந்தோறும் அவற்றையும் அங்ஙனமே அழிப்பேன் கூறிக்காண்! என்றாள் என்க.*

(வி - ம்.) *அலிசெய்து விடுதல் - பயனற்றதாக்கி விடுதல். அலி போலச் செய்துவிடுதல் என்பது கருத்து. பலிசை - பலவாய்ப் பல்குதல். பாடம் : ஆகுபெயர்.* (௧௧௮)

இதுவுமது

௫௬௯. பிறந்தவப் பிண்டம் வினையினோ டாங்கே
யிறந்தன வெத்திறத் தின்னுமற் றென்றாற்
சிறந்தவத் தேவெய்திச் சேர்தலுஞ் சீரா
தறஞ்செய் தருனு மவம்பிற வன்றே.

(இ - ள்.) *பிறந்த அப்பிண்டம் வினையினோடு ஆங்கே - புத்த! நின் கணபங்க மேற்கோட்கிணங்க ஒருகணப் பொழுதிலே தோன்றிய ஐங்கந்த பிண்டம் தாம்செய்யும் வினைகளோடே ஒருசேர அக்கணத்திலேயே; எத்திறத்தினும் இறந்தன என்றால் - எவ்வாற்றானும் பொன்றக் கெட்டன என்றால்; சிறந்த அத்தேவு எய்திச் சேர்தலும் சீராது - அப் பிண்டமாகிய ஒருவன் நல்வினை செய்து பின்னர்ச் சிறப்புடைய அந்தத் தேவப் பிறப்பினையடைந்து அந்நல்வினைப்பயனை நுகர்தலும் சிறப்புறப் பொருந்தாதாம்; அறஞ் செய்தல் தானும் அவம் அன்றே - ஆதலால் ஒருவன் அறஞ் செய்தலும் வீணேயாகுமன்றோ? என்றாள் என்க.*

(வி - ம்.) *பிறந்த பிண்டம் இடையறாது அழிகின்றனவாயின் அறஞ் செய்தானும் அக்கணத்திலேயே கையறக் கெடுவன் அல்லனோ? அவன் தேவனாய் அதன்பயனை நுகர்தல் எங்ஙனம்? எனவே அறஞ்*

செய்தல் அவமாம் என்றவாறு. பிற : அசை. சேர்த்தல் என்பதன் எதிர்மறை சேராது என்பது. எனவே சிறப்புறப் பொருந்தாதென் றுயித்து. (கக௬)

புத்தன் கூற்று

சூ௦௦. உரந்தனை யாது மொடுக்ககி லளாகிச்
சுரந்தபல் குற்றஞ் சொலக்கேட் டிருந்தான்
பரந்தினி நீசொன்ன பல்வழி யெல்லாங்
கரந்தன போதலைக் காட்டுவன் கேணீ.

(இ - ள்.) உரந்தனை யாதும் ஒடுக்ககிலள் ஆகி - இவ்வாறு நீலகேசி தன் அறிவாற்றலைச் சிறிதும் அடக்காதவளாகி; சுரந்த பல் குற்றம் சொல - அவன் மேற்கோளினின்றும் தோன்றிய பலவாகிய குற்றங்களையும் கூற; கேட்டிருந்தான் - அவற்றைக் கேட்டிருந்த புத்தன்; இனி நீ பரந்து சொன்ன பல்வழி எல்லாம்- நீலகேசியை நோக்கி ஏடி ! இனி யான் நீ பாரித்துக்கூறிய பலவாகிய குற்ற வழிகள் எல்லாம்; கரந்தன போதலை - மறைந்து போவதனை; காட்டுவன் - யான் கூறிக்காட்டுவேன்; நீ கேள் - நீ அவற்றைக் கேட்பாயாக! என்றான் என்க.

(வி - ம்.) உரம் - ஆற்றல் ; அறிவுமாம். கரந்தனை போதலைக் காட்டுவன் என்ற பாடத்திற்கு நீ யாருமறியாமலோடிப் போகும்படி செய்குவன் எனப் பொருள்கூறி அதற்கேற்பச் சில சொல் வருவித்துக் கொள்க.

நீலகேசி தன் அறிவாற்றலாலே இவ்வாறு குற்றங் கூறக் கேட்டிருந்த புத்தன் இனி யான் அவற்றிற்கெல்லாம் விடை கூறிக் குற்றமின்மை காட்டுவேன் என்றான் என்றவாறு. (கக௭)

இதுவுமது

சூ௦க. அரக்கொடு பீச மறக்கெட்ட வாற்றல்
கரப்பது போலிடைக் காண்பரி தாகி
மரத்திடை சென்று மலரின்கட் டோன்றிப்
பரக்குமேன் றேன்பயம் பைந்தொடி யென்றான்.

(இ - ள்.) பைந்தொடி - பசிய வளையலையுடைய மாதராய் !; அரக்கொடு பீசம் அறக்கெட்டு - தன்மேற் பூசப்பட்ட அரக்கோடு மாதுளவித்துக் கையறக் கெடவும்; அ ஆற்றல் கரப்பதுபோல இடை காண்பு அரிது ஆகி - அந்த அரக்கினது நிறத்தின் ஆற்றலானது மறைந்ததுபோல விதைக்கும் மலருக்கும் இடையிலே சிறிதும் காண்டற்கரிதாகி; மரத்து இடை சென்று-மரத்தினூடே சென்று; மலரின்கண் தோன்றிப் பயம் பரக்கும் என்றேன்-மலரின்

கண்ணே யாவரும் காணும்படி வெளிப்பட்டு அவ்வரக்கின் பயனாகிய நிறம் விரியும் என்று கூறினேன் அல்லேனோ? என்றான் என்க.

(வி - ம்.) ஏடி! யான் வித்தினூட்டப்பட்ட அரக்கும் வித்தும் கையறக் கெட்டபின்னரும் அரக்கின் பயனாகிய நிறம் இடையே மறைந்து மரத்தினூடே சென்று மலரிடைத் தோன்றும் என்றுவமை கூறினேன் எனப் புத்தன் தனதுவமையை விரித்து விளக்குகின்றான். (௬௯௮).

இதுவுமது

௬0௨. அன்னணஞ் செய்தா னறங்கெட் டவன்வழித்
துன்னுஞ் சந்தானத் தொடர்ச்சி நிகழ்ச்சியிற்
பின்னை யதுபெறு மாதலின் யான்கண்ட
நன்னெறி நின்னா லறிவரி தென்றான்.

(இ - ள்.) அன்னணம் - அதுபோலவே; அறம் செய்தான் கெட்டவன் - அறஞ் செய்தானொருவன் அக்கணத்தே அதனோடு கைமறக் கெட்டவனாயினும்; வழித்துன்னுஞ் சந்தானத் தொடர்ச்சி நிகழ்ச்சியில் - அவன் வழிவழியாக வருகின்ற வழித்தொடர்ச்சியினது நிகழ்ச்சியின் கண்ணே; பின்னை அது பெறும்-பின்னொரு காலத்தே வருமொருவன் அவ்வறப்பயனை நுகரப்பெறுவன் காண்!; ஆதலின் - இங்ஙனம் இத்தத்துவம் பெரிதும் நுணுக்கமாயிருத்தலாலே ; யான் கண்ட நன்னெறி - யான் என் மெய்யுணர்வினாலே கண்ட இந்த நல்ல தத்துவமுறை; நின்னால் அறிவு அரிது என்றான் - நின்னால் அறியப்படுதல் மிகவும் அருமையே! என்று கூறினன் என்க.

(வி - ம்.) அன்னணம் - அதுபோலவே. அறஞ்செய்தான் கெட்டு எனக் கண்ணழித்துக், கெட்டு - கெட எனக் கோடலுமாம்.

அரக்குப் பூசப்பட்ட வித்து, அந்த அரக்குடனே ஒழிவறக் கெடவும் அதனது ஆற்றல் கரப்பதுபோலப் போந்து மலரின்கட் டோன்றியவாறு போல வினைசெய்தான் அதனோடு கையறக் கெட்டானேயெனினும் அவன் வழித் தொடர்ச்சியின்கண் பிறன் பெறுவனாதலின் நின்னால் ஒரு குற்றமுஞ் சொல்லப்படாதென்று சொன்னானென்றவாறு, (௬௯௯).

நீலகேசி கூற்று

௬0௩. கந்தங்க ளெல்லாங் கடையறக் கெட்டக்க
ணந்தமி லாக்குற்ற மாமெனச் சொல்லுஞ்
சந்தங்க டம்முட் சவலைச் சந்தானமும்
வந்தஃ தேவன் செய்யும் வாமமாற் றென்றாள்.

(இ - ள்.) வாம - புத்த!; கந்தங்கள் எல்லாம் கடையறக் கெட்டக்கண் - ஐங்கந்தபிண்டங்கள் எல்லாம் ஒழிவறக் கெட்ட

விடத்தே; அந்தமிலாக் குற்றம் ஆம் என-நின்மேற்கோள் முடிவற்ற குற்றமுடைத்தென யாம் கூறுகிற்ப; நீ சொல்லும் கந்தங்கள் தம்முள்-நீ கூறுகின்ற நூலுள் வருகின்ற; சவலைச் சந்தானமும் வந்தது - அதற்குத் தீர்வாக மெலிந்த தொடர்ச்சி யென்பதும் வந்துளது, அஃதியாமறிந்ததே; எவன் செய்யும்-அத்தொடர்ச்சி என்பது யாம் கூறிய குற்றத்தை என்செயற்பாலது கூறாய் என்றான் என்க.

(வி - ம்.) ஐங்கந்த பிண்டங்களெல்லாம் தோன்றிய கணத்திலேயே ஒழிவறக் கெடுகின்றவாகில், வினைசெய்தான் பயன்துய்த்தல் கூடாதென்பது முதலாகப் பல குற்றஞ் சொல்ல, தொடர்ச்சியிலே எய்தும் என்று நீ சொல்லுதியன்றே; அந்தத் தொடர்ச்சி கொண்டது எற்றிற்கு? அது நின் நூலுட் சொல்லப்பட்டதாயினும், வினை செய்தார்க்கன்றிப் பயன் பிறர்க்கு ஆமாயின் என்று சொன்னாள் என்றவாறு. (௧௪௦)

இதுவுமது

௬௦௪. ஆற்ற மகன்கெட்ட போழ்தே யமரிற்
றோற்றமு மென்னை துடித விமானத்து
ளேற்ற தவத்தவன் றேவென லென்கொல்
சாற்றுஞ்சந் தானத்தைச் சந்தித்துக் காட்டாய்.

(இ - ள்.) ஆற்று அ மகன் கெட்டபோழ்தே - அறமாதல் தவமாதல் செய்தானொருவன் அக்கணமே கையறக் கெட்டவழி; அமரில் துடித விமானத்துத் தோற்றமும் என்னை - அவன் தேவருலகத்துத் துடித விமானத்திலே தோற்றுமாறென்னை?; ஏற்ற தவத்தவன் - மேற்கொண்ட தவவொழுக்கமுடைய அத் துறவி; தேவு எனல் என்கொல் - தேவனாய்ப் பிறந்தான் என்று சொல்லுமாறென்னையோ?; சாற்றுஞ் சந்தானத்தைச் சந்தித்துக் காட்டாய் - இவ் வினாக்களோடு நீ கூறுகின்ற தொடர்ச்சியினைப் பொருத்திக் காட்டுவாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) தவஞ்செய்த துறவியின் வழித் தொடர்ச்சியில் வருபவனும் துறவியே யாதல் வேண்டுமன்றோ? மேலும் நிலவுலகத்தே துறவியின் வழித்தொடர்ச்சியும் நிலவுலகத்திலேயே நிகழ்தல் வேண்டுமன்றோ? அவ்வாறன்றி நிலவுலகத்து மகனுடைய தொடர்ச்சி வானுலகத்தே தேவனாய் நிகழுமாறு என்? இவற்றிற்கு விடை தருக! என்றவாறு. சந்தித்தல் - பொருத்துதல். (௧௪௧)

இதுவுமது

௬௦௫. மக்க ளுடம்பொடு தேவ ருடம்பிடை
மிக்க விடம்பெரு வெள்ளிடை யாலிது
புக்க தொடர்வில்லை யாதலி னீகொண்ட
பக்க முடன்கெடு மாலென்னை பாவம்.

(இ - ள்.) மக்கள் உடம்பொடு தேவர் உடம்பு இடை - மக்களாய்ப் பிறந்தோர் உடல் நிலவும் இந்த நிலவுலகிற்கும் தேவராய்ப் பிறப்போர் உடல் நிலவும விண்ணுலகிற்கும் இடையேயுளது; மிக்க இடம பெரும் வெள்ளிடையால் - மிகவும் அகன்று கிடக்கும் வெட்டவெளியேயாம்; புக்க தொடர்பு இல்லை - இவ்வுலகினின்றும் அவ்வுலகுக்காறும் சென்றதொரு தொடர்ச்சியுமில்லை; ஆதலின் - இங்ஙனமாகவே; நீ கொண்ட பாவ பக்கம் உடன் கெடும் - நீ கருத்துக் கொண்ட கற்பனையேயாகிய மேற்கோள் உடனே கெடுதற்கு நீயென் சொல்லுதி! என்றனள் என்க.

(வி - ம்.) ஈதல் முதலிய நல்லறங்களோடு கூடி இறந்த மக்கள் உடம்புடன் அவற்றின் பயனை நுகருதற்குரிய தேவர் உடம்புகாறும் மாதுளை வித்திற்கும் மலருக்குமிடையே நின்ற கிளைத் தொடர்ச்சி போல நின்றதொரு தொடர்பு இன்மையின் மக்களுடம்பினின்ற தொன்று தேவருடம்பிற் புகுத வழியில்லை. எனவே நின்னுடைய வழித்தொடர்ச்சி என்னும் மேற்கோள் இவ்வுண்மையுணர்ந்த பொழுதே கெட்டொழிந்தது. இதற்கென் சொல்லுதி ! என்றவாறு. (கசஉ)

இதுவுமது

ருoரு: புளிபொறி யாடிநிழ றண்மதி யின்ன
தெளிவுள தாஞ்செல வின்முடி வென்னில்
விளிபவ னுளபொழு தேவினை துய்க்கு
மொளிகிளர் தேவ னுளனென்னு மாறே.

(இ - ள்.) செலவின்முடிவு - அறம் செய்த மகன் தேவனுதற்குச் செல்லுகின்ற செலவினது முடிவு; புளி பொறி ஆடி நிழல் தண்மதி நிழல் இன்ன - நாவின்கண் புளிச்சுவையும் கண்ணாடியின்கண் முகத்தின் நிழலும் நீர்ப்பாண்டத்தின்கண் திங்கள் மண்டிலத்தின் நிழலும் இன்னோரன்ன பிறவும் ஆகிய உவமைகளாலே; தெளிவு உளது ஆம் - தெளியப்படும்; என்னின் - என்பாயாயின்; (இவ்வுவமைகளாலே) விளிபவன் உளபொழுதே - அறஞ்செய்து கையறக் கெடும் மகன் அங்ஙனம் கெடாமல் இருக்கும் பொழுதே; வினை துய்க்கும் ஒளிகிளர் தேவன் உளன் என்னும் ஆறு - அவ்வறப் பயனை நுகரும் ஒளிமிக்க தேவனும் உளனுவான் என்பதே பெறப்படும், ஆதலால் இவ்வுவமைகள் பொருந்தமாட்டா என்றுள் என்க.

(வி - ம்.) இன்ன என்றதனுல் வேம்பு, மந்திரம் முதலியன கொள்க.

மகனுடம்பினின்றும் தேவனுடம்பிற் சென்றதொன்றில்லை எனினும் 'செல்லாச் செலவு' என்பதொன்றுளதாகலின் சென்றதாகக் கோடல் வேண்டும் ; அஃதென்போலவோ ? வெனின், புளியும்

வேம்பும் முதலாயின ஒரு வழியிருக்க அவற்றின் சுவை வாயுள்
வருதலும் ஒரு வழியிருந்து இயந்திர முறுக்க அது சேறலும்
கண்ணாடியுள் முகஞ்சேறலும் நீர்ப் பாண்டத்துள் திங்கள் மண்டிலஞ்
சேறலும் ஒரு வழியிருந்து ஓதிய மந்திரஞ் சேறலும் போலவெனின்,
புளி முதலாயின உண்டான காலத்தே செலவுண்டானவாறு போல
அறஞ்செய்த மகனுளனாகவே தேவருலகத்தே இவன் வழியொரு
தேவன் பிறக்கவேண்டுமாதலின் மகனிறந்தபின் தேவன் பிறத்தற்கு
இவை உவமையாகா என்றவாறு. (௧௪௩)

இதுவுமது

௬௦௭. சென்றில தேலிடை யற்றுழித் தோன்றுக
வென்றலு மிங்குள தோவது தானெனி
ஞென்றல பல்பொரு டாமொளி யாதிய
நின்றல வோவுல கெங்கும் நிறைந்தே.

(இ - ள்.) சென்றிலதேல் இடையற்றுழித் தோன்றுக -
புத்தனே! நீ திங்கள் மண்டில முதலியவற்றினின்றும் நீர்ப்
பாண்ட முதலியவற்றில் யாதொன்றும் சென்றதில்லை என்பாயா
யின் இடையிலே கூரை முதலியவற்றால் மறைக்கப்பட்ட வழியும்
அவை தோன்றல் வேண்டும்; என்றலும் - என்று நீலகேசி கூற,
அது தான் இங்குளதோ - அங்ஙனம் திங்கள் மண்டில முதலியவற்
றினின்றுஞ் செல்லும் பொருளும் இவ்வுலகத்தில் உளதேயோ?
என்று புத்தன் வினவ; எனின் - அது கேட்ட நீலகேசி நீ அங்ங
னம் வினவுதியாயின் கூறுவன்கேள்!; ஒன்றல - அங்ஙனம் செல்
லும் பொருள் ஒன்றல்ல; பல் பொருள்-பல்வேறு பொருள்களாம்;
ஒளி யாதிய உலகு எங்கும் நிறைந்து நின்று அலவோ - அவை
தாம் யாவை யெனின் ஒளி முதலியனவாய் இவ்வுலகெங்கும்
நிறைந்துள்ளன காண்! என்றாள் என்க.

(வி - ம்.) உளதோ? என்று புத்தன் வினவ, அங்ஙனம்
வினவுவா யெனின், என வேண்டுவன வருவித்தோதுக. நின்ற
வலவோ எனற்பாலது நின்றலவோ என விகாரமுற்று நின்றது.

திங்கண் மண்டிலத்தினின்றும் நீரிலே வந்ததொன்று மில்லை
யாயின் இடைவெளியில் கூரை முதலியவற்றால் மறை பட்டவழியும்
நீரின்கண் திங்கண் மண்டிலம் தோன்ற வேண்டும்; என நீலகேசி
கூற அதுகேட்ட புத்தன் திங்கள் மண்டிலம் நீரினுள் வந்ததாயின்
நீரிற் கையிட்டுத் துழாவினாலும் காணவேண்டுமென, அதுகேட்ட
நீலகேசி பேதாய்! ஒளி முதலிய புற்கலப் பொருள்கள் பற்பல வுள;
அவற்றுள் சாயைப் புற்கலம் என்பதொன்று. திங்கள் மண்டிலந்
தொட்டு நீரளவும் வந்த தன்றோ? அஃதெவ் வழியதென்னின்
உலகின்கண் யாண்டும் நிறைந்து நின்றது என்றாள் என்றவாறு.
இதன்கண் ஒளி முதலியன விண்ணிலே இயங்கும் இயல்புடையன
என்று நீலகேசி கூறுதல் வியத்தகு கூற்றாதலுணர்க. இஃது அக்
காலத்தார் பூதநூலறிவைக் காட்டும். (௧௪௪)

இதுவுமது

கூ௦அ. தண்மதி கெட்டதன் சாயை யுடன்பெற
உண்மை யுண்டாயினி ஞெத்துரை யொட்டுவன்
கண்மதி யாததெக் காரிய மேயின்ன
வெண்மதி யாயை விலக்குநர் யாரோ.

(இ - ள்.) *தண்மதி கெட்டு அதன் சாயை உடன் பெறல் உண்மை உண்டாயின் - குளிர்ந்த திங்கள் மண்டிலம் மறைய அதன் சாயை பின்னரும் நீரினூடே தோன்றுதல் உண்டாயின்; நின் ஒத்துரை ஒட்டுவன் - யான் நின்னுடைய உவமை மொழியை ஏற்பேன்; கள் மதியாதது எக்காரியம் - இனி அது நிற்க, நீ கட் குடித்து அவ்வுண்மையை உணராமற் போனது எத்தகைய செயலோ? அறிகின்றிலேன்; இன்ன வெண்மதியாயை - இத் தகைய அறியாமையுடைய நின்னை; விலக்குநர் யாரோ - அவ்வறி யாமையினின்றும் விலக்க வல்லார் யாவரோ தாம் என்றுள் என்க.*

(வி - ம்.) மகனிறக்க அவன்வழித் தேவன் தோன்றுவதற்கு உவமமாவது திங்கள் மண்டிலம் மறைந்த பின்னரும் நீரினுட் டோன்றினன்றே அவ்வாறு யானுமிசைகுவன். திங்கள் மண்டிலமும் முகமும் உள்ள பொழுதல்லது நீரினும் கண்ணாடியினும் சாயைகள் பெறமாட்டாமையில் உவமை யாகாதாயினும் நின் அறியாமையாலிது கூறினை யென்றவாறு.

கள் மதியாதது எக்காரியமே என்றது நீ யிதுபொழுது கட் குடித்து இவற்றையெல்லாம் மதியாதொழிந்தது எத்தகைய காரியமோ? என்றிகழ்ந்தபடியாம்.

இனி, கள் மதியாதது எக்காரியம் என்றது, நீ கள் குடித்தலை நினது பத்துவகைத் தீவினைகளுடனே கூட்டிக் கூறாதது என்ன காரியமோ என்றவாறு மாயிற்று. புத்தன் கூறிய தீவினை பத்தினுள் கள்ளுண்ணல் கூறப்படாமை முற்கூறிய விளக்கங்களிற் காண்க. எனவே நீ கட்குடித்து மயங்கினைபோலும் என்பது குறிப்பு.

இனி, "கொலை களவு கட்காமம் பொய்யெனக் கூறினன்" என்பதனால் கள்ளும் விலக்கினா னன்றோ எனின், உலகங் கடிதலின் உலகத்துக்காகக் கடிந்தானென்பதல்லது மனமொழி மெய்களாற் றோன்றும் பத்துவகைத் தீவினைகளுள் எண்ணிற்றிலன் அன்றே? அன்றியும் "மையலுற்ற மகன் அன்ன தெய்தலன்" என்றலால், கட் குடித்து மயங்கினன் செய்த எல்லாத் தீவினையும் உள்ளம் இன்மையின் எய்தாவெனல் பெறப்படுதலு முணர்க. அன்றியும் உயிரின்மையில் ஊனும் மண்ணோடொக்குமென்று தின்கின்ற நினக்கு, உயிரின்மையின் கள்ளும் நீரோடொக்குமென்று குடித்தலிற் குற்றமென்னை? "நாவினுள் வைத்த தசைபயனல்லதி யாவினையூட்டிய"தென்ன நீ ஊனுண்டல் நல்வினைப்பயன் என்று சொல்லுதலால், கள்ளுண்டு களித்து மயங்குவதூஉம் நல்வினை ஆமன்றோ? அன்றியும், மகாயான மந்திரயானங்களுள் கட்குடித்தல் அறமாகக் கூறினையன்றோ; என்னை?

"கள்ள தாத லதுகுடிப் பேனென்னு
மூள்ள வுண்மை யதுவுண்டே லென்றிவை
யெள்ள லின்றி யியைந்த வியைவரோ
கள்ளை யுண்ட களிநீர்மை யாவதே"

என்பதனுல் நீ கள் விலக்கினவாறுதானு மிதுவன்றே ? ஆதலால், நீ கட்குடித்தல் வஞ்சனை போலுமாதலின் நின்னைக் கட்குடித்தல் விலக்கல் வல்லார் யாவருமில்லை யென்றவாறுமாம். (கசஇ)

## இதுவுமது

சுஅகூ. மதியேன்று மில்லெனி னில்லொளி தானும்
புதியதும் பாழது போன்றிய போழ்தே
கதியினை நாட்டிய காட்டி யெமக்கிங்
கதுவென்னை சொல்லிய வாறுரை யாத்தா.

(இ - ள்.) ஆத்தா - சமயக்கணக்கர் தலைவனே!; மதி இல் எனின் என்றும் ஒளிதானும் இல் - திங்கள் மண்டிலம் மறைந்துழிப் பின்னர் அதன் ஒளி என்றும் இல்லையாமன்றே? அது போல; புதியதும் - மக்கட் பிண்டத் தொடர்ச்சியிற் புதியதாகத் தோன்றிய தேவப்பிறப்பும்; அது பொன்றிய போழ்தே - அம் மக்கட்பிண்டம் கெட்டபொழுதே; பாழ் - இல்லையாம்; கதியினை நாட்டிய காட்டி - நீ தேவப் பிறப்பினை நாட்டும்பொருட்டு உவமையாகக் காட்டி; எமக்கு இங்கு அது சொல்லியவாறு என்னை உரை - எமக்கு அத்திங்கண் மண்டிலத்தைக் கூறியவாறென்னையோ? கூறுதி என்றாள் என்க.

(வி - ம்.) இது திங்கண் மண்டிலம் உவமையன்மை கூறுகின்றது. அது என்றது மக்கட் பிண்டத்தை. புதியது என்றது - தேவப்பிறப்பினை. பொன்றிய போழ்தே பாழ் என்றது, மக்கட்பிண்டம் அழிந்த பொழுதே (தேவபிண்டமும்) கெடும் என்றவாறு. அஃதாவது மக்கட் பிண்டம் கெட்டகணத்தே தோன்றிய தேவபிண்டமும் அக்கணத்தே கெடும் என்பதாம். (கசக)

## இதுவுமது

சுகூ௦. அடியோடு பூவி னிடையற வின்றி
நெடியதோர் கோம்பினை நீமறந் தாயோ
மடியிலார் செய்த மானுயர் தெய்வப்
படியிது வென்றிடை பாழ்செய்திட் டாயால்.

(இ - ள்.) அடியொடு பூவின் இடை அறவு இன்றி - அடிப்பகுதியோடு அதன் மாதுளைவித்தினின்றும் தோன்றிய மலர்காறும் இடையறவின்றி நின்ற; நெடியது ஓர் கொம்பினை

நீ மறந்தாயோ - கெடியதாகிய வொரு இளையினை நீ மறந்தொழிந் தனையோ?; மடியிலார் செய்த மானுயர் படியிது - அங்ஙன மின்றி, சோம்பியிராமல் அறஞ்செய்த மகன் வாழும் உலகம் இந்நிலவுலகம் என்றும்; தேவப்படியிது வென்றும் - அவ்வறப் பயனை நுகரும் தேவன் வாழும் உலகம் இவ்வானுலகம் என்றுக் கூறி; இடை பாழ் செய்திட் டாயால் - இவற்றினிடையே தொடர் பொன்று மில்லையாக்கி விட்டனை யன்றோ? ஆதலின் அவ்வுவமை பொருந்தாது என்றான் என்க.

(வி - ம்.) மானுயர் - மக்கள். மானுயர் படியிது என்று மூன்றுங் கூட்டுக. ஆதலின் அவ்வுவமை பொருந்தாது என்பது குறிப்பெச்சம்.

வித்திலிடப்பட்ட அரக்கின் நிறம் பூவிற் றோன்றியது, அடி தொடங்கிப் பூவளவும் இளை நிற்றலாலன்றோ? அது மறந்தாயோ? அவ்வாறு தொடர்பியாதுமின்றி மகனுக்கும் தேவனுக்கும் இடையறவு செய்து வெளியாக்கிறாய் என்றவாறு. (கசள)

இதுவுமது

சுசச. தோற்ற மிடையற வில்லாத் தொடர்ச்சியைச்
சாற்றுதும் யாமுஞ்சந் தான மெனவென்னிற்
காற்றுஞ் சுடருங் கரகத்துட் டாரையு
மேற்றன வல்ல விரண்டுண்மை யாலே.

(இ - ள்.) இடை அறவு இல்லாத் தோற்றத் தொடர்ச் சியை-புத்தனே நீ, ஐங்கந்தபிண்டங்கள் இடையறாது தோன்றுத லுடையதொரு தொடர்ச்சியையே; யாமும் சந்தானம் எனச் சாற்றுதும் என்னின் - யாமும் தொடர்ச்சி என்று கூறுவே மென்பாயாயின்; காற்றும் சுடரும் கரகத்துள் தாரையும் ஏற்றன வல்ல - அதற்கு நீ கூறுகின்ற காற்றுத் தொடர்ச்சியும் விளக்குத் தொடர்ச்சியும் குடத்தினின்றொழுகும் நீரொழுக்குத் தொடர்ச்சியும் பொருந்தும் உவமைகள் அல்லவாம்; இரண்டு உண்மையால் - எற்றாலெனின் அவற்றுள் தொடர்வன ஒன்ற னுள் ஒன்று தோன்றித் தொடர்வனவல்லாப் பல்வேறு பொருள்கள் ஆதலாலே என்றான் என்க.

(வி - ம்.) இரண்டு - இருவேறு பொருள்.

ஐங்கந்தபிண்டங்கள் இடையறவின்றித் தோன்றுந் தொடர்ச்சி யையே தொடர்ச்சி யென்றேன் ; என்போலவெனின், காற்றுத் தொடர்ச்சியே விளக்குத் தொடர்ச்சியே நீர்வீழ் தொடர்ச்சியே யாத் தொழுக்குத் தொடர்ச்சியே எறும்புத் தொடர்ச்சியே என இவை போல வெனின் இவ்வுவமைகள் பொருந்தமாட்டா. என்னை ? அவை பல பொருளாய் ஒன்றோடொன்றியைந்து தொடர்தலாலே என்ற வாறு.

பிண்டம், ஒன்று கெட ஒன்று தோன்றலால் இதற்கு அவை உவமையாகா என்பது குறிப்பு. ஈண்டுத் தொடர்ச்சி யென்பதுமில்லை என்க. (கசஅ)

இதுவுமது

சுகஉ. பித்தோடு கனவிடைப் பேயின் மயங்குநர்க்
கோத்த வுணர்வுண்மை யோட்டல தேன்செய
தத்துவ மாயசந் தான முளதேனிற்
புத்தநின் சொற்கள் பொருளில வேயால்.

(இ - ள்.) புத்த பித்தொடு கனவு இடை பேயின் மயங்கு நர்க்கு - புத்தனே! பித்தேறியவர்பாலும் கனவினும் பேயேறி மயங்கினனரிடத்தும்; ஒத்த உணர்வு உண்மை ஒட்டலது என் செய - இடையறுது தொடர்கின்ற அறிவுத் தொடர்ச்சி யுண்மையை நீ இயையாதது எற்றிற்கு?; தத்துவம் ஆய சந் தானம் உளது எனின் - அவ்விடங்களினும் என் தத்துவமாகிய அறிவுத் தொடர்ச்சி ஆழ்ந்தேனும் உளதாம் என்பாயாயின்; நின் சொற்கள் பொருள இலவே - அவ்வழி அத்தொடர்புண் மைக்குக் காரணங் காணமாட்டாமையாலே நின்மொழிகள் பொரு ளற்ற வறுமொழிகளே யாங்காண் என்றுள் என்க.

(வி - ம்.) அநாதியாக வருகின்ற பிறப்பின்கண் வீடுபெறுமளவும் தொடர்பொன்று இடையறுது நின்றுளதாயின் பித்தமுதலாயின வற்றால் மயங்கினுருமையும் அந்த அறிவுத் தொடர்ச்சி யுளதாகல் வேண்டும்; உளதாகவே நுகர்ச்சியறிவாகிய பொருளுணர்ச்சி முதலாயின விழிப்பு நிலையிற் போல மயக்க நிலையினும் பெற வேண்டும்; அது பெறப்படாமையின், மயக்க நிலையினுணர்வுண்மை இசையா தொழிவ தெற்றிற்கு? இசைவாயெனின், உலகஞ் சான்ருக மயங்கினுளுமை அறிவு நிகழ்ச்சியின்மையின் நின் மொழிகள் பொரு ளிலவாம்; என்னை? மயங்கிய வழித் தொடர்ச்சி இடையறுதலின், மேன் மயக்கநீங்கி அறிவு பிறத்தற்குக் காரணம் இன்மையின் என்பதாம்.

இனி, மயக்க நிலையில் அறிவுத்தொடர்ச்சி ஆழ்ந்து கிடந்தது என்பாயாயின், தொடர்ச்சி யென்பது ஓரறிவு கெட ஓரறிவு தோன்றி வருவதன்ரே? அறிவு நிகழ்ச்சியில்லாத வழித் தொடர்ச்சியுமின்மையின் அது கூடாதென்பதாம். (கசகூ)

இதுவுமது

சுகங. மூத்தல் வகையு முதலத னைம்மையு
மாத்த கணந்தோ றலர்ந்த நிகழ்ச்சியுஞ்
சாத்திரத் தாலத் தவிரன்கட் டாழ்ச்சியும்
போத்தந்து காட்டுந் திறமென்னை புத்தா.

(இ - ள்.) புத்தா முதல் மூத்த வகையும் - புத்தனே! ஐங்கந்த பிண்டமாகிய குழவி முறையாக மூத்து முதியோன்

ஆகுமாறும்; அதன் ஐம்மையும் - அக்குழவியினது ஐங்கந்தங்களும்; ஆத்த கணந்தோறு அலர்ந்த கிழ்ச்சியும் - தொடர்புடைய கணந்தோறும் முறையாக வளருமாறும்; அத்தவிரன்கண் தாழ்ச்சியும் - பின்னர் அம்முதியோன் நாளடைவிலே ஆற்றலழியுமாறும்; சாத்திரத்தால் - பொன்றக்கேடு கூறுகின்ற நினது நூலாலே; போதந்து காட்டும் திறம் என்னே - வருவித்துக் காட்டும் வழி யாது? கூறுதி! என்றாள் என்க.

(வி - ம்.) பொன்றக்கேடு கூறுகின்ற நின் னூலின்கண் குழவி மூத்து முதுமையுறுதற்கும் யாக்கை வளர்தற்கும் ஆற்றல் அழிதற்கும் காரணங் காண்டலரிது. உளதாயிற் காட்டுக! என்றவாறு. (கஉ0)

## இதுவுமது

கூகச. கப்பம் பலபல கண்ணிமை யானுக்குத்
துப்பு முரைத்தென்னை தோன்றிய வக்கணத்
தொக்க விளைவுரைப் பாய்பின் வழிவழிச்
செப்புதி யேற்செய்கை சென்றுசென் றுண்டே.

(இ - ள்.) கண் இமையானுக்கு — அறஞ்செய்திறந்த மகன் வழித் தோன்றிய தேவன் தோன்றிய கணத்திலேயே கெடுவன் என்றுங் கூறிப் பின் அவனுக்கு; பல பல கப்பம் துப்பும் உரைத்து என்னை - பற்பல கற்பகாலம் இன்ப நுகர்ச்சியும் கூறுதல் என்னையோ?; அக்கணத்து வழி வழி விளைவு தொக்க உரைப்பாய் - மேலும் அத்தேவன் அழிந்த அக்கணத்தே அவன் வழி வழியாக நெடுங்காலம் பயன்களும் பலப்பல தோன்றும் என்றும் கூறுவாய்; செப்புதியேல் செய்கை - இங்ஙனம் கூறுவாயாயின் அப்பயன்களுக்குக் காரணமான வினையும் ; சென்று சென்று உண்டே - வழி வழியாகச் சென்று சென்று உளதாகல் வேண்டும் என்றாள் என்க.

(வி - ம்.) ஈதல் முதலியனவும் தவமும் பண்ணி இறந்தான் வழித் தேவருலகத்தே தோன்றிய தேவன் அந்தக் கணத்திலேயே பொன்றக் கெடுவான் என்று சொல்லுவாய் ; அவனே பலப்பல ஊழிக் காலமின்ப நுகர்வன் என்றுஞ் சொல்லிய தென்னை ? என, முதலிற் றோன்றிய தேவன் அக்கணத்தே அழிந்தானாயினும் அவன் வழிவழிப் பற்பல அறிவுகள் தோன்றி நெடுங்காலம் இன்ப நுகர்வான் என்பாயாயின் வழிவழித் தோன்றுகின்ற அறிவுகள் யாதனுடைய காரியம் ? தேவருலகத்தே முதலிற்றோன்றிய அறிவின் காரியம் எனின் பயனின் வழிப் பயனைச் செய்கைவழிப் பயன் அன்றாய் ஒரு நாளும் அவன் அவ்வுலகத்தினின்றும் வழுவுதல் கூடாதாம். நல்வினை செய்திறக்கின்றானது இறுதியறிவின் காரியம் அத்தேவனறிவுகள் எனவுமாகாது. என்னை ? ஓரறிவு பலப்பல காரியம் செய்தல் கூடாதாதலால் ; கூடினும் வழுவுதல் கூடாதாம்,

இனி, தேவருலகத்துச் சென்றின்புறுகின்ற அறிவுகளெல்லாம் செய்கைவழித் தோன்றினவாயின் அறிவு தொறு மோரோரு செய்கை யறிவுளதாகல் வேண்டும், அஃதின்மையின் நின் மொழி பொருளில வென்றவாறு.

இதனால் சில அறிவுகள் வினைசெய்ய வேறு சில அறிவுகள் பயன் றுய்க்கு மென்றற்கட் குற்றங் கூறப்பட்டதாம் என்பது. (கஙச)

இதுவுமது

சுகரு. காரண மென்னினுஞ் சென்றின்மை யாலில்லை
ஏரண தேவ விழுதைமை சொல்லுதி
யூருணி நீர்நிறை வுண்டே யுறுபுனல்
வாரண வாய்க்கால் வரவில்லை யாக்கால்.

(இ-ள்.) ஏரணதேவகாரணம் என்னினும் - இளந்துறவியே! நல்வினை செய்தானது உள்ளம் தேவவுள்ளங்களுக்குக் காரணம் என்பாமாயினும், சென்று இன்மையால் இல்லை - மகனுள்ளம் தேவனுளங்காறும் தொடர்ச்சியின்மையாலே சென்றதில்லா மையின்; இழுதைமை சொல்லுதி-பொருந்தாமையே புகல்கின்றனை யாகுதி; வாரண வுறுபுனல் - என்னை? வானினின்றும் வீழ்ந்த மிக்க மழைநீர்; வரவு வாய்க்கால் இல்லையாக்கால் - வருதற்குரிய வாய்க்காலில்லையான காலத்தே; ஊருணி நீர் நிறைவு உண்டோ - குளம் நீரால் நிறைதலும் உண்டாகுமோ? என்றுள் என்க.

(வி - ம்.) காரணம் என்பதற்கு, மகனுள்ளம் தேவனுள்ளத் திற்குக் காரணம் என விரித்தோதுக. ஏரணதேவன் - இளந்துறவித் தலைவன். வாரணம் - வானம். வாரணவுறு நீர் என்றும் வரவு வாய்க்கால் இல்லையாக்கால் என்றும் மாறுக. இல்லையாங்கால், இல்லையாக்கால் என விகாரவகையானின்றது.

நல்வினை செய்திறந்த மகனதுள்ளம் பயனுகருந் தேவனுளத் திற்குக் காரணம் எனினும் அது நெடுங்காலம் முன்னுடைத்தாக அழிதலின் காரியமாகிய உள்ளங்கள் உளவாகா; வாய்க்காலான் வானீர் புகுதாதவழிக் குளநிறைதலுளதோ? நின் கூற்றுப் பொருந் தாது என்றவாறு. (கஙரு)

இதுவுமது

சுகசு. நில்லா தறக்கெடுந் தோன்றிற்றுந் தோற்றமு
மெல்லா வகையினு மில்லதற் கேலில்லை
சொல்லாய் தொடர்ச்சி தொடர்ச்சியென் றேநின்று
பல்லார் கனையும் படுத்துண்ணும் பண்பா.

(இ - ள்.) தோன்றிற்றும் நில்லாது அறக்கெடும்-புத்த! நின் கணிகமேற்கோளின்படி தோன்றியதோரறிவு அக்கணத்திலேயே

நிலையுதலின்றிக் கெடுவதாம்; எல்லாவகையினும் இல்லதற்குத் தோற்றமும் இல்லை - கெடவே எவ்வாற்றானும் இல்லாததாகிய அவ்வறிவிற்குப் பின் தோன்றும் வழி அறிவுக்குத் தோற்றமும் இல்லையாகல் வேண்டும்; தொடர்ச்சி தொடர்ச்சி என்றே நின்று - இம்மனமாகவும், தொடர்ச்சி தொடர்ச்சி என்று பலகாலுங்கூறி நின்று; பல்லார்களையும் படுத்து உண்ணும் பண்பா - மடவோர் பலரையும் நின் வஞ்சகத்துள் வீழ்த்தி வயிரோம்பாநின்ற தீவினையாளனே!; சொல்லாய் - அத் தொடர்ச்சி உளதாயின் என்முற் சொல்லிக் காட்டுக! என்றான் என்க.

(வி - ம்.) தோன்றிய அறிவு அக்கணத்திலேயே எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்வகையானும் இன்றிக் கையறக் கெட்டதாயின் கணிகமாம். கெட்டதுங் கெடாதது மாயின், அது நினக்கு மேற்கோ ளன்றாம். இனி மேற்றோன்றுவதாஉம் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்வகையானும் இல்லாததாயின் அதற்குந் தோற்றமில்லையாம். ஓரிடத் தொருகாலத் தோரியல்பாலுள்ளது பிறிதோரிடத்துப் பிறிதொரு காலத்துப் பிறிதொரு தன்மையால் தோற்றுதல் தோற்றமென்பா யெனின், பொருள் முழுக்கேடிலதாம்; கெடுதலும் கெடாமையு முடைத்தாம் என்றாயாகுதி; அஃதுன் மேற்கோ ளன்றாம். ஆதலால் ஓரறிவு முழுதும் கெடலும் பிறிதொன்று என்று மில தாகிய அறிவு தோன்றுதலும் நிகழாமையின் தொடர்ச்சி யென்ப தொன்றில்லை; உளதாயிற் சொல்லாய்! தொடர்ச்சி தொடர்ச்சி என்றொன்றனைச் சொல்லிப் பிறரை வஞ்சித்துண்ணும் கயவனே என்ற வாறு. (கஉகூ)

நூலாசிரியர் கூற்று

சுகள. கடருடைத் தோற்றத் தொடர்ச்சியைச் சொல்லி
யிடருடைத் தாக விவையிவை காட்டி
யடர்படுத் திட்டாட் கதற்கோன்று நாடிச்
சடருடை வாசனை சாதிக்க லுற்றான்.

(இ - ள்.) சுடருடைத் தோற்றத் தொடர்ச்சியைச் சொல்லி- அது கேட்ட புத்தன் தனது போக்கறவினால் தொடர்ச்சி யுண்மை காட்டுதற்குவிளக்கின்கட் சுடரினது தோற்றமாகிய தொடர்ச்சியை உவமையாகச் சொல்ல; இடர் உடைத்து ஆக - அவன் நெஞ்சம் இடரெய்தும்படி; இவை இவை என்று காட்டி - அதற்குள்ள குற்றம் இன்னின்ன என்று கூறிக்காட்டி; அடர் படுத்திட்டாட்கு- வென்ற நீலகேசிக்கு; அதற்கு ஒன்று நாடி - அவன் அதற்கு வேறாக ஒன்றனை ஆராய்ந்து; சடர் உடை வாசனை சாதிக்கல் உற்றான் - மடவோராகிய பண்டைக் காலத்துப் பௌத்தர் சொல்லும் ஆற்றல் என்பதனைச் சொல்லி நாட்டத் தொடங்கினான்; என்க.

(வி - ம்.) வாசனையெனினும் ஆற்றல் எனினும் சத்தி எனினும் ஒக்கும். சடர் - மடவோர். அவர் பண்டைக்காலப் பௌத்தரென்க.

புத்தன் தொடர்ச்சியுண்மை காட்டுதற்கு விளக்குச் சுடர் கணந்தோறும் கெடுமாறும் தோற்றுமாறும் இடைவெளியின்மையால் அஃது ஒன்றாய்த் தோன்றுமாறும் சொல்லிக் காட்ட, நீலகேசி அதற்கும் அவனிடர்ப்படுமாறு இவை இவையென்று பல குற்றங்காட்டி அடர்த்தாளாக; அதற்குப் பிறிதொன்றனை ஆராய்ந்து மடவோராகிய பழைய பௌத்தாசிரியர் கூறிய ஆற்றல் என்பதனைக் கூறி மீண்டுஞ் சொற்போர் தொடங்கினான் என்றவாறு.

இடருடைத்தாகப் பல குற்றங் காட்டுதலாவது:-நின் அறிவு கணந்தொறுங் கையறக் கெடப் பிறிதொன்று தோன்றுமாறுபோல விளக்குச்சுடர் முழுதுங்கெடப் பிறிதொரு சுடர் விளக்கு நுனியிற் றோன்றுகின்றமையில்லை. உளதெனின், விளக்கிற்கு அவிதலென்பதொன்றுளதாகாதன்றே? அறிவுத் தொடர்ச்சி போல ஒழுக்கறுது நெடுகச் செல்லவேண்டும் என்றாட்கு, அறிவுகளுள் ஒன்று பொன்றக் கெட்டால் மேல் அறிவு பிறவாதவாறு போல விளக்குச் சுடருள் ஒன்று பொன்றக் கெட்டால் மேல் சுடர் பிறவாது;

"பொன்றக்கே டின்மையாற் பொருள்வழிப் பேருடேன்றும்" என்பது என்னுடைத்தாகலின் எனின், நன்று சொல்லினை! முற்சுடர் பொன்றக் கெட்டதில்லையெனவே கெட்டதூஉம் கெடாததூஉமாய்ப் பொருள் நிலையுதலும் நிலையாமையும் உடைத்தென்னும் மேற்கோளிற்கிசைதலான் அது நினக்கு உவமையாகாதென்பது முதலாயின. (௩௫௪)

### பொருளாற்றல் (வாசனை)

### நீலகேசி கூற்று

௩௧௮. கெட்டபி னாற்றல்க ளெல்லாம் வழியதற்
கோட்டு நறுமலர் வாசமோ டோட்டின்கட்
சுட்டுவ தொப்ப வெனச்சொல்லு நீகண்ட
விட்ட மிவற்றோ டியையல தென்றாள்.

(இ - ள்.) நறுமலர் வாசமோடு ஓட்டின்கண் சுட்டுவது ஒப்ப - புத்த! நறிய பாதிரிப்பூக் கெட்டபின்னரும் அதன் மணத்தை ஓட்டின்கண் காட்டல் கண்டாமன்றே அதுபோல; கெட்டபின் ஆற்றல்கள் எல்லாம் வழியதற்கு ஒட்டும் எனச் சொல்லும் இவற்றொடு - ஓரறிவு கெட்டபின் அதன் ஆற்றல்கள் அனைத்தும் அதன் வழித்தாகிய அறிவின்கண் வந்து பொருந்தும் என்று கூறுகின்ற கூற்றுக்களோடு; நீ கண்ட இட்டம் இயையலது என்றாள் - நீ யுணர்ந்துள்ள நின் மேற்கோள் பொருந்தாது என்று கூறினாள் என்க.

(வி - ம்.) வாசமோடு : உருபுமயக்கம். சுட்டுவது - காட்டுவது. சொல்லும் இவற்றொடு என மாறுக. இட்டம் - மேற்கோள் : ஆகுபெயர்.

ஓரறிவுகெட அதன்கண் ணுண்டாகிய ஆற்றலெல்லாம் மேற் பிறந்த அறிவின்கண் வரும். என்போலவெனின், பாதிரிப்பூக்கெட அதன் மணம் ஓட்டில் வந்தவாறு போல என்று நீ கூறும் மொழிகளோடு நின் மேற்கோள் பொருந்தாது என்றவாறு. (௩௫௯)

இதுவுமது

௬௧௯ முன்னைய துள்ள பொழுதத்து மற்றதன்
பின்னைய தில்லை யதுபெற்ற போழ்து
தன்னையு மில்லை யெனச்சொல்லின் வாசனை
யென்னை யியையுந் திறமிவை தானே.

(இ - ள்.) முன்னையது உள்ள பொழுதத்து - முன் அறிவு உளதாய காலத்திலே; அதன் பின்னையது இல்லை - அதன் பின் தோன்றும் அறிவு இல்லையென்றும்; அது பெற்றபொழுது - அப்பின்னறிவு தோன்றப்பெற்ற காலத்தே; தன்னையும் இல்லை - அதன் முதலறிவும் இல்லையாம்; எனச் சொல்லின் - என்று நீ கூறுகின்றனை அல்லையோ? அங்ஙனம் கூறின்; வாசனை இவை இயையும் திறம் என்னை - இவ்வாற்றல்கள் பின்னறிவின்கண் வருமாறியாதோ? கூறுதி! என்றாள் என்க.

(வி - ம்.) முன்னையது - முற்கணத்தாகிய அறிவு. பின்னையது - பிற்கணத்தே பிறந்த அறிவு. தன்னை - தன் அன்னை. அஃதாவது தனக்கு முதலாகிய அறிவு என்க. வாசனை - ஆற்றல்.

முன்னறிவுளதாய பொழுது பின்னறிவு தோன்றவில்லை. பின்னறிவு தோன்றியபொழுது முன்னறிவு சிறிதுமில்லை. இங்ஙனம் தம்முள் தொடர்பில்லாதவழி முன்னறிவின் ஆற்றல் பின்னறிவின்கண் வருமாறு எங்ஙனம் என்றவாறு. (௩௬௦)

இதுவுமது

௬௨௦. ஓடு மலரு மொருங்குள வாதலிற்
கூடும் வாசமுங் குற்றமொன் றில்லெனிற்
கேடும் பிறப்பு முடனில்லை யாதலிற்
கூடல் வென்பது கூறின மன்றே.

(இ - ள்.) ஓடும் மலரும் ஒருங்குள ஆதலின் - நீ கூறும் உவமையாகிய ஓடும் பாதிரிப் பூவும் ஒருகாலத்தே யுளவாதலாலே; அ வாசமும் கூடும் எனின் குற்றம் ஒன்று இல் - அப்பூவின் மணம் ஓட்டின்கண் வரும் என்றற்கண் குற்றம் ஒன்றும் இல்லை எனின்; கேடும் பிறப்பும் உடனில்லை ஆதலின்-மற்றுப் பொருளாகிய அறிவுகளிரண்டும் ஒருகாலத்தே ஒருங்கில்லை ஆதலாலே; கூடல என்பது கூறினம் - முன்னறிவின் ஆற்றல்கள் பின்னறிவின்கண் சேரமாட்டா வென்று முன்பும் கூறினேம் என்றாள் என்க.

(வி - ம்.) புத்தோடும் பூவும் ஒருகாலத்துண்மையின் பூமணம் ஓட்டின்கண் வருதல் கூடும்; முன்பின் அறிவுகள் ஒருகாலத் தின்மையின் முன்னறிவின் ஆற்றல்கள் பின்னறிவின்கண் வருதல் கூடாது என்றவாறு. (கஙஎ)

இதுவுமது

௬௨௧. கெடுவத னுண்ணின்று தோன்றுவ தன்கண்
வடுவறச் செய்வது வாசனை யென்னப்
படுவதோன் றன்றுநின் பக்கத்தை யெல்லாஞ்
சுடுவதோர் கொள்ளி சுவடித்த வாறே.

(இ - ள்.) கெடுவதன் உள் நின்று வாசனை தோன்றுவதன் கண் வடு அறச் செல்வது - ஒழிவறக் கெடுவதாகிய முன்னறிவிலிருந்து ஆற்றல் என்னும் தத்துவம் பின்னர்த் தோன்றும் அறிவின்கண் குற்றமறச் செல்வதாகும்; என்னப்படுவது வாசனை ஒன்று அன்று - என்று நின்னாற் கூறப்படும் அவ்வாற்றல் ஒரு தத்துவமன்றுகாண்; நின் பக்கத்தை யெல்லாம் - அது நின்னுடைய மேற்கோள்களாகிய கோதுகளை யெல்லாம்; சுடுவது ஓர் கொள்ளி சுவடித்த ஆறு - சுட்டழிக்கும் ஒரு கொள்ளியினை நீயே தோற்றுவித்தவாறும்; என்ருள் என்க.

(வி - ம்.) கெடுவது, தோன்றுவது என்பன வினையாலணையும் பெயர்கள். பக்கம் : மேற்கோள். சுவடித்தல் - தோற்றுவித்தல்.

முன்னறிவின்கண் ணுள்ளதொன்று பின்னறிவின்கண் வரும் எனவே முன்னறிவு கையறக் கெட்டதில்லை; ஆதலின் நீ ஆற்றல் என்று கூறுவது கெடுதலும் கெடாமையுமாகி ஆருகதர் மேற்கோளையே விளக்கி நினது கணிக மேற்கோளைச் சுடுவதொரு தீக்கொள்ளியினை நீயே தோற்றுவித்தவாறாயிற்று என்றவாறு. (கஙஅ)

இதுவுமது

௬௨௨. போதின்க ணின்றும்புத் தோட்டிற் பொருந்திய
தாதின நாற்றந்தண் ணீருக்குச் சொல்லுதி
யோதின கந்த முடன்கெடின் வாசனை
யாதின தாகு மறிந்துரை யேழாய்.

(இ - ள்.) ஏழாய் - அறிவிலியே! நீ; போதின்கணின்றும் புத்தோட்டில் பொருந்திய தாதின் நாற்றம் - பாதிரிப் பூவினின்றும் புதிய ஓட்டின்கட் பொருந்தியுள்ள பூந்தாதினுடைய மணம்; தண்ணீருக்குச் சொல்லுதி - ஓட்டின் கண்ணுள்ள நீருக்கு வரும் என்று கூறுகின்றாயல்லையோ?; ஓதின கந்தம் - நின்னாற் கூறப்பட்ட இந்த மணந்தானும்; உடன்கெடின் - நின்மேற்

கோளின்படி பாதிரிப்பூவோடே ஒழிவுறக் கெடுமாதாயின்; வாசனை யாதினது ஆகும் - தண்ணீரிற் கமழுகின்ற அந்த நறுமணம் எதனுடையதாகும்?; அதிந்து உரை - ஆராய்ந்து இதற்கு விடை சொல்லுதி! என்றாள் என்க.

(வி - ம்.) நின் மேற்கோள் வாய்மையாயின் பாதிரிப் பூவின் மணம் புத்தோட்டின்கண்ணுள்ள நீரின்கண் கமழ்தலுங் கூடாது. கமழக் காண்டலின் நின் மேற்கோள் பொய்யென்பது பெற்றாம் என்றவாறு. (கஙக)

இதுவுமது

கஉரு. வாசனை வாசனை யென்று வழிவழி
நீசொன்ன நீசொன்ன நேர்வதிங் கென்செய்ய
பாசன மாகிய பாதிரிப் பூவினைப்
பூசின தெப்பொருள் போத்தந்து காட்டாய்.

(இ - ள்.) நீ வாசனை வழி வாசனை வழி என்று - புத்த நீ! ஆற்றலின் தொடர்ச்சி ஆற்றலின் தொடர்ச்சி என்று பலகாலும்; இங்கு நீ சொன்ன சொன்ன - இவ்விடத்தே சொல்வனவற்றை ; நேர்வது என் செய்ய - யான் இசைவது என்செய்தற்கோ? கூறும்; பாதிரிப் பூவினை - பாதிரி மலரின்கண் நறுமணத்தை ; பாசனம் ஆகிய - கமழும்படி; பூசினது எப்பொருள் - நட்டியது எது?; போத்தந்து காட்டாய் - அதனையும் வருவித்துக் கூறுதி ! என்றாள் என்க.

(வி - ம்.) அடுக்குகள் பலகாலும் பயிறல் பற்றிவந்தன. அதனை யான் நேர்வதனால் பயனொன்றுமில்லை என்பாள் என்செய்ய என்று வினவினள். பாசனம் - பரவுதல்.

ஆற்றல் என்று ஒன்று கூறல் வேண்டா. பூவின் மணம் தன்னியல் பால் வந்தவாறுபோல அறிவின்கண் நல்வினை தீவினை வேறுபாடு இயல்பாகவே உண்டாகும் என்று சொல்லலுமாமே என்றவாறு. (கஙo)

இதுவுமது

கஉச. பூவின்கட் கேடும்புத் தோட்டின்கட் டோன்றியு
மேவிய வாசனை யெங்குமுண் டாமெனின்
சோபன மாகச் சுவாகதம் போந்ததென்
றேவன் றிருந்தடி சிந்திமற் றென்றாள்.

(இ - ள்.) பூவின்கண் கேடும் புத்தோட்டின்கண் தோன்றி யும் மேவிய வாசனை - புத்த! பாதிரிப் பூவின்கண் கேடெய்தியும் புதிய ஓட்டின்கண் தோன்றியும் வந்த மணம்போல; எங்கும் உண்டாம் எனின் - ஆற்றல் என்பதொன்று முன்னறிவிற் கெட்டும்

பின்னறிவிற் றோன்றியும் மேலும் பிறக்கும் அறிவுதொறும்
இங்ஙனமே உளதாம் என்பாயாயின்; சோபனமாகச் சுவாகதம்
போந்தது - எம்மிடமிருந்து உனக்கு மங்கலமான வரவேற்பு
வந்ததென்றே கொள்வாய், என்றலெனின் நீ பொருள் நிலை
யாமையும் நிலையுதலும் உடைத்தென்னும் எம்மனோர் கொள்கையை
மேற்கொண்டனையாதலின்; என் தேவன் திருந்தடி சிந்தி
என்றான் - நீ எங்கள் அருகனுடைய திருத்தமுடைய திருவடிகளையே
நினைந்துய்யக் கடவை! என்றான் என்க.

(வி - ம்.) வாசனை போல ஆற்றல் எங்குமுண்டாமென்பது
அதிகாரத்தாற் போந்தது. சோபனம் - மங்கலம். சுவாகதம் -
வரவேற்பு.

மணம் பூவின்கட் கெடெய்தியும் ஓடு நீர் முதலியவற்றுள்
தோன்றியும் வருமாறுபோல ஆற்றல் ஓர் அறிவிற் கெட்டும் ஓர்
அறிவிற் பிறந்தும் எப்பொழுது முண்டாம் என்பாயாயின் அஃதெங்
கொள்கையாம். ஆகவே யாங்கள் உன்னை மங்கலமாக வரவேற்போம்.
நீ அருகனடி போற்றி உய்தி என்றவாறு.

இஃது அவன் கூற்று மேற்கோள்மலைவாம் என்றிகழ்ந்தபடியாம்.
என் தேவன் என்றது, அருகனை. (௧௧௪)

இதுவுமது

௬௨௫. அதற்கு மறக்கே டுளதேனில் வாச
மதற்குமுண் டாயினி யெல்லையின் றோடு
மிதற்கெண்ணு மில்லெனி னில்லை யதற்கு
முதற்சொன்ன குற்றம் முடிந்தன வாமே.

(இ - ள்.) அதற்கும் அறக்கேடு உளதெனின் - மேற்கூறிய
குற்றமஞ்சி, அறிவு கெடுங்கால் அதனாற்றலுக்கும் ஒழிவறக்
கெடுதல் உண்டாம், உண்டாகவும் அதன்கண் ஓராற்றல் பிறக்கும்
என்பாயாயின்; வாசமதற்கும் உண்டாய் - அவ்வாற்றற்கும் ஒழி
வறக் கெடுதலுண்டாகி; எல்லையின்றோடும் - இவ்வாறே வரம்
பின்றிச் செல்வதாம்; இதற்கு எண்ணும் இல்லெனின் - இவ்வாற்
றலுக்கு ஓராற்றல் உண்டென்னும் எண்ணம் இல்லை என்பாயா
யின்; அதற்கும் இல்லை - முன்னறிவின் ஆற்றற்கும் ஓராற்றல்
இல்லையாம்; முன்சொன்ன குற்றம் முடிந்தனவாம் - ஆகவே
மேலே கூறிய மேற்கோண்மலைவு முதலிய குற்றங்கள் உறுதி
பெறும் என்றான் என்க.

(வி - ம்.) முன் சொன்ன குற்றம் தீர்தற்காக அறிவு கெடுகின்ற
பொழுதே அதனாற்றலும் கெடும்; கெடவும் அவ்வாற்றலின்கண்
உள்ள தோராற்றல் மேன்மேற் செல்லுமெனினும் அதற்குமிக் குற்ற
மொத்தலின் பிறிதோர் ஆற்றல் உண்டெனல் வேண்டும்; இவ்வாறு
வேண்டின் வரம்பின்மை என்னும் குற்றமாம். இனி, அவ்வாற்றலுக்கு

ஓராற்றல் பிறக்குமென்றேம் எனின், அவ்வாற்றல் கெடாதே நின்று முற்கூறியபடி மேற்கோள் மலைவாம் என்றவாறு. (௬௬௨)

இதுவுமது

௬௨௬. சென்றதேன் முலதன் கேடின்மை யாஞ்செல
வின்றதேன் முலதன் றூற்றமு மில்லற்க
நன்றிதேன் றேசொல்ல நல்லது நாமறிந்
தன்றிதேன் றேம்முனே யாருரைக் கிற்பார்.

(இ - ள்.) சென்றது என்றால்-அறிவுகெட அதன் ஆற்றல் கெடாதே மேற்சென்றது என்றால்; கேடின்மை ஆம் - பொருள் நிலையுதலுடைத் தென்னும் எம் மேற்கோளே உறுதியுடைத்தாம்; அது செலவின்று என்றால் - அவ்வாற்றல் மேற்செல்லாமற் கெடும் என்னின், நாற்றமும் இல்லற்க - ஆற்றல் என்பதொன் றில்லையாகுக; நல்லது நாம் அறிந்து இது நன்று என்று சொல்ல- இவ்வாறு யாம் ஆராய்ந்தறிந்து வாய்மையாவது இஃதென்று கூறியவிடத்து; எம் முனே - எமக்கு முன்னின்று; இது அன்று என்று யார் உரைக்கிற்பார் - இது நன்றன்று என்று யாரே கூறத்துணிவார்; என்றான் என்க.

(வி - ம்.) ஓரறிவின்கண் ணுளதாகிய ஆற்றல்மேன்மேற் பிறக்கும் அறிவுதொறும் செல்லுமெனின், அது பொருள் நிலையுதலுடையது என்னும் மேற்கோளின்பாற்படும். செல்லாதெனின், ஆற்றல் என்பதொன்றில்லையாய் நினக்கு மேற்கோள் மலைவாம் என்றவாறு. (௬௬௩)

இதுவுமது

௬௨௭. கேடது தான்முழு தாதலி னீசொல்லும்
வீடது வாகலும் வேண்டும் விழுத்தவம்
கூடு பவர்க்குங் குணமில் லவர்க்கு
நீடல தேயுள தாநிரு வாணம்.

(இ - ள்.) கேடதுதான் முழுது ஆதலின் - கணந்தோறும் பிறந்து கெடுகின்ற அறிவுகளின் கேடுதானும் ஒழிவறக் கெடுங் கேடேயாதலின்; அது நீ சொல்லும் வீடு ஆகலும் வேண்டும் - அக்கேடே அவற்றிற்கு நின் சமயத்து நீ கூறுகின்ற வீடுபேறு ஆதலும் வேண்டும்; நிருவாணம் - வேண்டவே நினது வீடுபேறு; விழுத்தவம் கூடுபவர்க்கும் - சிறந்த தவவொழுக்கத்தை மேற் கொள்ளும் சான்றோருக்கும்; குணம் இல்லவர்க்கும் - நற்குணமில் லாத கயவருக்கும் ஒருபடித்தாக; நீடலது உளது - கால நீளுத லின்றிக் கணந்தொறும் உளதாதல் வேண்டும்; வேண்டவே தவம் முதலியன பயனில் செயலாம்; என்றான் என்க.

(வி - ம்.) கணந்தோறும் கெடுகின்ற அறிவுகள் சிறிது நிற்கச் சிறிது கெடுகின்றனவோ ?, முழுதுங் கெடுகின்றனவோ ? சிறிது நிற்கக் கெடின், பொருள் நிலையுதலும் நிலையாமையும் உடைத்தென்னும் எம் மேற்கோளுக்கு ஆக்கமாம். முழுதுங் கெடுமெனின், கெடுகின்றதுதான் மேற் பிறக்குமோ ? பிறவாதோ ? பிறக்குமெனின் முழுதுங் கெட்டதில்லையாம். மேற்பிறவாதெனின், அவ்வறிவு வீடுபெற்றதாம். இவ்வாறே பிறப்பினூடேயும் கணந்தோறும் அறிவுகள் வீடுபெறுகின்றனவாதலான், தவம்பண்ணுவோருடைய எல்லா அறிவுகளும் ஐவகைத் தீவினைகளையும் அஞ்சாது செய்யுமவருடைய எல்லா அறிவுகளும் கணந்தொறும் வீடுபெறுகின்றனவாதலின் வீடுபேறென்பது மிகவும் எளிய தொன்றும் ; ஆகவே அது கருதிச் செய்யும் அறங்களும் பயனிலவாய்ப் பிறப்புத்துயரென்பது ஒன்றில்லையாம் என்றவாறு. (௧௬௪)

இதுவுமது

௬௨௫. தோற்றம் வழியென்று சொல்லுத லாற்றடு
மாற்ற மதுவிதன் மார்க்கத்து மாண்பெனச்
சாற்றுதி யேலுந் தவறது வாதலைத்
தேற்றுவன் கேணீ தெருண்டிருந் தென்றாள்.

(இ - ள்.) தோற்றம் வழி யென்று சொல்லுதலால் - பிறப்பே ஓரறிவின்வழி ஓரறிவு பிறத்தலேயாம் என்று நீ சொல்லுதலாலே; தடுமாற்றம் அது இதன் மார்க்கத்து மாண்பு எனச் சாற்றுதியேல் - அப்பிறப்பால் வருந் தடுமாற்றமும் இதன் வழியே வரும் பண்பேயாம் என்று கூறுவாயேனும்; அது தவறு ஆதலைத் தோற்றுவன் - அதுவுங் குற்றமாவதனை இனி யான் எடுத்துக் கூறி நின்னைத் தெளிவிப்பேன்; நீ தெருண்டிருந்து கேள் - நீ தெளிவோடிருந்து கேட்பாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) ஓரறிவின்வழி ஓரறிவு பிறத்தலே பிறப்பெனப்படுவது. பிறவித் தடுமாற்றமென்பதும் இதனாலுண்டாவதேயாம் என்பாயாயின் அதன்கண் வருங் குற்றத்தையும் இனிக் கூறுவன் கேள் ! என்றவாறு. (௧௬௫)

இதுவுமது

௬௨௬. தன்வழித் தோற்றிக் கெடுமோ வதுகெடப்
பின்வழித் தோற்றம் பெறுமோ விரண்டனு
ளென்வழித் தோற்றமஃ தாமா றிகுளற
நின்வழித் தோற்றத்தை நீயுரை யென்றாள்.

(இ - ள்.) தன்வழித் தோற்றிக் கெடுமோ - பேதாய் ! ஓரறிவு கெடுமிடத்தே தன்னிடத்திருந்து பிறிதோரறிவைப் பிறப்பித்துக் கெடுமோ; அதுகெட பின் வழி தோற்றம் பெறுமோ - அல்லது அந்த அறிவு கையறக் கெட்ட பின்னர்ப் பின்னறிவு

பிறக்குமோ?; இரண்டனுள் - இந்த இருவகையினுள் வைத்து ; வழித்தோற்றமஃது என் ஆம் - அத்தொடரறிவு எவ்வகையிற் பிறக்கும்?; நின் வழிதோற்றத்தை - நினது தொடர்ச்சி யறிவின் பிறப்பினை; நீ இருள் அற உரை என்றாள் - நீ மயக்கமின்றிக் கூறுவாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) ஓரறிவின் வழிப் பிறிதோரறிவு தோன்றுகின்றவழி முன்னறிவு பின்னறிவினைப் பிறப்பித்துப் பின்னர்க் கெடுமோ? அல்லது, முன்னறிவு கெட்டபின்னர்ப் பின்னறிவு பிறக்குமோ? அறிவு பிறக்குமாறு? எவ்வாறு அதனைக் கூறுக! என்றவாறு. (௧௬௯)

## இதுவுமது

௧௭௦. வழியோன்று தோற்றிக் கெடுமேன் மகப்பெற்
றழிகின் றவள்போ லணைவுள தாகு
மொழிகின்ற தேயது காணல தேன்னிற்
கழிகின்ற கன்னிக்கோர் காதலற் காட்டாய்.

(இ - ள்.) வழியொன்று தோற்றிக் கெடுமேல் - பின்னறிவினைப் பிறப்பித்த பின்னரே முன்னறிவு கெடுவதாம் என்னின்; மகப்பெற்று அழிஇன்றவள் போல் - மகவினைப் பெற்றவுடன் இறப்பாள் போல; அணைவு உளது ஆகும் - அவ்விரண்டறிவிற்கும் ஒருகணத்தினிறுதியிலே தொடர்புள தாகும்; மொழிஇன்றது - கூறப்படுகின்ற முன்னறிவு; ஏயது காணலது என்னின் - பின்வந்நிலையும் வழியறிவினைத் தோற்றுவியாதே கெடும் என்பாயாயின்; கழிகின்ற கன்னிக்கு - இறக்கின்ற கன்னிப் பெண்ணிற்கு; ஓர் காதலன் காட்டாய் - ஒரு மகனுளனாதலைக் காட்டுவாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) மகப்பெற்று அழிகின்றவள் - குழவியை ஈன்ற அப்பொழுதே இறப்பவள். கன்னிக்கோர் காதலன் - கன்னியீன்ற மகன்.

இனி, வழியறிவினைத் தோற்றுவித்து முதலறிவு கெடின் அவ்விரண்டறிவிற்கும் தொடர்புளதாய் ஒரு கணத்திறுதியினின்றவாம். முதலறிவு கெட்டதாயின் மேற் பிறப்பிக்கமாட்டாதாம். பிறப்பிக்கின் இறந்தாளொரு கன்னிகை ஒரு மகனைப் பிறப்பிக்க வேண்டும். இவ்வாறாகவும் ஓர் அறிவு கெட்டவுடனே பிறத்தலாலே அதுவே பிறப்பித்ததெனின், புத்தனது இறுதியறிவு கெட்டவுடனே மற்றோரறிவு நரகத்துப் பிறக்கின் அவ்விறுதியறிவு பிறிதோரறிவினைப் பிறப்பித்ததாகி மீண்டும் பிறப்பிலுழலுமறிவாம். இனி, நரகத்திற் பிறந்த அறிவு பிறிதொரு தொடர்ச்சியறிவன்றோ வெனினும், ஓரறிவு கெட மற்றோர் அறிவு தோன்றுதன் மாத்திரையே பிறப்பென்றலாலும் ஒன்றோடொன்று தொடர்பின்மைக்கு இரண்டு மொத்தலின் தானென்றும் பிறிதென்றும் பெறப்படாமையானும் புத்தன் பிறப்புடையனேயாம் என்றவாறு. (௧௭௦)

இதுவுமது

௬௩௧. பிறப்பித்துக் கேடும்பின் றோற்றக் கேடலும்
இறப்பவுங் கூடா திருதிறத் தானுந்
துறப்பித்த வாறிது தூவெனக் கேட்டை
மறப்பித் துரைத்ததுண் டோசொல்லு வாம.

(இ - ள்.) வாம - புத்ததேவனே!; பிறப்பித்துக் கேடும் - நீ முன்னறிவு பின்னறிவினைப் பிறப்பித்துக் கெடும் என்ற கேடும்; தோற்றக் கெடலுந்தான் - அப்பின்னறிவு தோன்றுதற்குக் காரணமாக முற்படக் கெடுமென்ற கேடும்; இருதிறத்தானும் இறப்பவுங் கூடாது - இருவகையானும் நின்மொழி பெரிதும் பொருந்தாது என்று காட்டியவாற்றால்; இது துறப்பித்தவாறு - இக்கேட்டினை இல்லை என்றவாறுயிற்றன்றோ?, தூஎனக் கேட்டை - நீ தானும் தூய்தாகக் கேட்டனையல்லையோ?; மறப்பித்து உரைத்தது உண்டோ சொல்லு - உனக்கு விளங்காமல் யான் மறைத்துச் சொன்னது துண்டோ? சொல்வாய் என்றாள் என்க.

(வி - ம்.) வாமனே! நீ கூறிய பிறப்பித்துக் கெடும் கேடும் பிறக்குமுன் கெடுங்கேடும் ஆகிய இருதிறத்துக் கேடும் பொருந்தா வென்று விளக்கமாகக் கூறினேம். ஆகவே அறிவுக்கு அழிவில்லை என்று கூறினேமாயினேம் என்றவாறு. (௧௬௮)

இதுவுமது

௬௩௨. சுலாப்பல சொல்லிச் சுழன்று விடாதே
துலாத்தலைத் தூக்கமு மோக்கமுங் காட்டி
னிலாத்தலை யல்லா விரண்டு ளொன்றுண்டா
யிலாத்தலை யில்லே லமைவது மன்றே.

(இ - ள்.) சுலாப் பல சொல்லிச் சுழன்று விடாதே - புத்த! நீ மயக்குரை பற்பல கூறிப் பார்த்து மமையாமையால் அலமந்து பின்பும் அம்முயற்சியைக் கைவிடாமல்; துலாத்தலைத் தூக்கமும் ஒக்கமுங் காட்டின் - முதலறிவு வழியறிவுகளின் கேட்டிற்கும் தோற்றத்திற்கும் துலாக்கோலினது இருதலைகளும் ஒரு காலத்தே தாழ்தலையும் எழுதலையும் உவமை காட்டுவையாயின்; நிலாத்தலை அல்லா(த்தலை) யிரண்டுள் - நில்லாது தாழுந்தலையும் அஃதல்லாத தலையுமாகிய இரண்டனுள்; ஒன்று உண்டாய் - எழுகின்ற தலை ஒன்று உளதாக, இலாத்தலை - நிற்றலிலாது தாழ்கின்ற தலையானது; இல்லேல் - இல்லையாகுமெனின்; அமைவது மன் - நீ கூறுமிவ்வுவமை ஒருவாறு/பொருந்தும்; அங்ஙனமாகாமையின் இதுவும் பொருந்தாது காண்! என்றாள் என்க.

(வி - ம்.) புத்த நீ பற்பல கூறிச் சுழன்று பின்பும் விடாமல் துலாக்கோலின் தலையிரண்டிலும் ஒன்று தாழ்வாவது ஒழிந்த தலையினது எழுச்சியன்றே? இவையிரண்டு மொருகாலத்து நிகழ்ந்த வாறுபோல முன்பின் அறிவுகளின் அழிவும் தோற்றமு மொரு காலத்து நிகழுமெனின், இரண்டு தலையும் ஒரு காலத்தே யுளவாதலின் ஒன்றின் தாழ்வு ஒன்றின் ஏற்றமாதல் காரண காரிய முறைமையால் கூடும்; ஓரறிவுள காலத்து ஒழிந்த அறிவு இல்லையாதலின் இத்துலாக் கோற்றலைகள் உவமையாகா என்றவாறு.

இனிச், சுலாவுரை பல சொல்லலாவது:—

"இறந்தது காரணமே யில்லதனுற் பிறப்பில்லை
இறந்தின்று காரணமே யிலைந்துள தென்றுளா
விறந்ததற்கும் பிறந்ததற்குங் காலமொன் றுதலைச்
சிறந்துணர்வு முறக்கத்தின் நீர்வுமே யுரையாதோ"

என்று சொல்லுதல். இனி, துயினீக்கமும் உணர்வு தோன்றலும் ஒரு காலத்தே நிகழ்ந்தவாறு போல முன்பின்னறிவுகளுடைய அழிவுந் தோற்றமும் ஒரு காலத்தே நிகழுமெனின், அறிவுகளுக்கு அழிவுந் தோற்றமும் ஒரு காலத்து நிகழினும் தோன்றிய கணத்திலே அழியினும் ஒரு கணப் பொழுதிலே முன்பின்னறிவுகள் உளவாம். அன்றியும் காரண காரியமாகிய முன்பின்னறிவுகளுக்குக் காரண காரியமல்லாத துயிலும் உணர்வும் உவமைகள் ஆகா. காரணத்தின் அழிவும் காரியத் தோற்றமும் ஒரு காலத்து நிகழ்ந்தனவுளவாயிற் காட்டு; உணர்வு உணர்வின் காரியமல்லது உறக்கத்தின் காரிய மாமோ? குடத்தின் அழிவையும் ஓட்டின் தோற்றத்தையும் காட்டின், குடத்தின் மண் ஓட்டினும் வருதலின் அஃது ஒழிவறக் கெடாமை யினுல் உவமையாகாதென்பது.

இனி, உறக்கமும் உணர்வும் போல முன் பின்னறிவுகள் முரணுடையன அல்லாமையால் உவமையாகாவெனச் சுலாவுரை விட்டுத் துலாக் கோலைச் சொன்னனென்பதாம். (௩௬௧)

இதுவுமது

௩௬௨. இல்லதற் கேயில்லை கேடென்னை காக்கையின்
பல்லதற் கோதார் பருமையு நுண்மையுஞ்
சொல்லிதற் காவதுண் டேலெனச் சொல்லினு
ணல்லதற் கல்லது நாப்பெய ராதாள்.

(இ - ள்.) நல்லதற்கு அல்லது நாப் பெயராதாள் - நல்லது சொல்வதற்கல்லது நாவினை அசைத்திடாத நீலகேசி புத்தனை நோக்கி; இல்லதற்கு கேடு இல்லை - ஐய! இல்பொருளுக்குத் தோற்றமும் கேடும் இல்லையாம், என்னை? அஃதென்போல வெனின்; காக்கையின் பல்லதற்குப் பருமையும் நுண்மையும் ஓதார் - இல்பொருளாகிய காக்கையினது பல்லிற்குப் பரிய

தன்மையும் நுண்மைத் தன்மையும் யாரும் கூறுதல் இலராகுற் போல; இதற்கு ஆவது உண்டேல்-இதற்கு மறுமொழியுளதாயிற் கூறுதி; எனச் சொல்லினள் - என்று கூறினள் என்க.

(வி - ம்.) இல்பொருளாகிய காக்கைப் பல் பெரிதென்றுதல் நுண்ணிய தென்றுதல் யாருங் கூறுவதிலர். அங்ஙனமே நீ இல் பொருள் என்று கருதுகின்றவற்றிற்குத் தோற்றமும் அழிவும் கூறுதல் பேதைமை என்றவாறு. (௧௭௦)

இதுவுமது

௫௯௪. துலாமில்லை யட்டக மேயது தானு
மிலாமிரு பாற்றலை யேதலை தாமு
நிலாவகை யில்லுயர் வோடிழி வெங்கும்
கலாமவை யாய்க்கடை கண்டது பாழே.

(இ - ள்.) துலாம் இல்லை - புத்த! நீ கூறுகின்றபடி ஆராயுங்கால் துலை என்பொருன்றில்லை; அட்டகமே - அஃது அட்டக பிண்டமேயாதலின்; அது தானும் இல் ஆம் - இனி அந்த அட்டக பிண்டந்தானும் இல்லையாம்; இருபால் தலையே - அது தானும் இரு பக்கத்துத் தலைகளேயாதலின்; தலை தாமும் நிலா வகையில்-அந்தத் தலைகள் தாமும் உளவாய் நில்லாதவொரு வகையினாலே; உயர்வோடு இழிவு - அவற்றின் எழுச்சியும் தாழ்ச்சியும் உள்ளன; எங்கும் அவை கலாம் ஆய் - இவ்வாறு எவ்விடத்தும் அவை ஒன்றற்கொன்று முரணுகி; கடை கண்டது பாழே - இறுதியிற் கண்டது வெறும் பாழேயாம்; இங்ஙன மிருந்தது நின்மேற் கோள்; எனருள் எனக.

(வி - ம்.) அட்டக மல்லது துலா மில்லை. இரண்டு தலையு மொழிய அட்டக பிண்டமாகிய துலாமில்லை; பணிவெழுச்சிகள் ஒழியத் தலையிரண்டு மில்லை; இவ்வாறு நின் மேற்கோளாயின் முடிவிற் கண்டது வெறும் பாழே என்றவாறு. (௧௭௧)

இதுவுமது

௫௯௫. ஓலை குளவி குருட்டெண் ணெய் வாணிச்சி
கோலஞ் சிதையுமேன் றெண்ணெயட் டாளென்னும்
பாலகர் பாட்டுரை போன்றது மற்றுநின்
நூலுரை யெல்லா நுழைந்துணர் வார்க்கே.

(இ - ள்.) நின் நூல் உரை எல்லாம் நுழைந்து உணர் வார்க்கு - பேதாய்! உன்னுடைய பிடக நூலின் கண்ணுள்ள தத்துவவுரைகள் எல்லாவற்றையும் நுண்ணறிவாலே நுணுகி ஆராய்ந்துணரும் அறிஞர்க்கு அவை "ஓலைகுளவி குருட்டு எண்ணெய்

வாணிச்சி கோலஞ் சிதையுமென்று எண்ணெய் அட்டாள்'' என்னும் பாலகர் பாட்டு உரை போன்றது "ஓல...அட்டாள்'' என்று பாடுகின்ற சிருஅர்களின் பாட்டில் வருகின்ற மொழிகள் பொருளற்றனவாய் வெறுஞ் சொல்லாரவாரமேயாதல் போன்றது காண்! என்றவாறு.

(வி - ம்.) "ஓலகுவளி குருட்டெண்ணெய் வாணிச்சி
கோலஞ் சிதையுமென் றெண்ணெய் அட்டாள்''

என்னுமிது இளஞ்சிருஅர் ஆடுங்கால் பாடுமொரு பாட்டு. இப்பாட்டு ஒரு பொருள் பொதிந்த செய்யுள் போலத் தோன்றி ஆராயுங்கால் பொருளற்ற வறுஞ்சொற் றொடராய் முடிதலுணர்க. இவ்வாறு இற்றை நாளினும் சிருஅர்கள் தெருவிற் பாடியாடுதல் காணலாம்;

இதனாற் போந்த பொருள் - புத்த நின் நூல் மெய்ந்நூலன்று நீ தத்துவமும் உணராய் காண்! என்பதாம். (கஎஉ)

இதுவுமது

சுகூசு. கோற்றிர ளொன்று யதன்றலைக் கேயுட
ளூற்றியு மோக்கமு நாட்டினை யஃதொப்பத்
தோற்றமுங் கேடுந் தொகுபிண்ட மொன்றிற்குச்
சாற்றுதி யாய்விடிற் றக்கதென் னேனே.

(இ - ள்.) திரள் கோள் ஒன்றுய் - புத்த! நீ தானும் திரண்ட துலாக்கோல் ஒன்றுளதாக; அதன் தலைக்கு - அதனிரண்டு தலைகளுக்கும்; நாற்றியும் ஒக்கமும் நாட்டினை - நிரலே தாழ்ச்சியும் எழுச்சியும் கூறினையல்லையோ?; அஃதொப்ப - அது போலவே; தொகு பிண்டம் ஒன்றிற்கு - திரண்ட பிண்டம் ஒன்றுளதாக அதற்கு; தோற்றமும் கேடும் சாற்றுதியாய் விடின் - தோற்றமும் கேடுங் கூறுவாயாயின்; தக்கது என்னேனோ - இம்மொழி பெரிதும் தகுதியுடையது என்று கூறிப் பாராட்டு வேனல்லனோ? என்றான் என்க.

(வி - ம்.) துலாக்கோல் ஒன்றுள் பொருளாக அதன் தலைகளுக்கு உயர்வும் தாழ்வும் கூறினுற் போல ஒரு பொருள் உளதாக அதற்கே தோற்றமும் கேடுங் கூறின் நீயும் மெய்யுணர்வுடையை யென்று யான் பாராட்டுவேன் அங்ஙனம் கூறுமையின் உனக்கு மெய் யுணருந்திறமில்லை, என்றவாறு. (கஎங)

இதுவுமது

சுகூஎ. தலையன தாழ்ச்சியு மெழுச்சியு மன்றி
நிலையிலை கோலிடை நீக்கலு நீங்கு
மிலையென வெட்டி னிடுகுறி யன்றேனிற்
பலவினி யிங்குப் பகுவன கேணீ.

(இ - ள்.) தலையன தாழ்ச்சியும் எழுச்சியும் அன்றி — இருவேறு தலைகளின் தாழ்ச்சியும் எழுச்சியும் அன்றி; கோல் நிலை இலை(என) இடை நீக்கலும் - துலாக்கோல் என்ப தொன்று நிலை பெறுவது இல்லை என்று இடையிலே விலக்குதலும்; இலை என நீந்தும் - (அத்தாழ்ச்சி எழுச்சிகளின் வேறாகவும் கோல் பெறப் படுதலின் நின்மொழி) வாய்மை இல்லை யென்றொழிவதாம்; எட்டின் இடுகுறி யன்று அல்லது கோல் எனின்-இனி அட்டகம் என்னும் பெயர் பெறுகின்ற பிண்டப் பொருள் இல்லை என்றால்; இங்குப் படுவன பல இனிக் கேள் - இவ்விடத்தே தோன்றும் குற்றங்கள் பலப்பலவாம். அவற்றையும் கூற நீ கேட்பாய்! என்றாள் என்க.

(வி - ம்.) கோலின் தலைகளின் பணிவெழுச்சி யொழியக் கோலில்லை எனின் காண்டல் முரணும். என்னை? பணி வெழுச்சிகளி னீக்கிக் கோல் பெறப்படலான். இனி, அட்டகமல்லது கோலில்லை எனின் பல குற்றம் வரும். அவற்றையும் கூறக்கேள் என்றவாறு. இடுகுறியன்றெனின் என்புழி அன்றி என்னும் வினை யெஞ்சிகரம் உகர மாய்த் திரிந்தது. அன்றிக் கோலின்றெனின் எனக் கூட்டுக. (௧௭௪)

இதுவுமது

௩௬௮. கோலுந் தலையு முடனில்லை யாமேனின்
மேலு முரைத்தன மேயதன் மேற்பழி
வாலுந் தலையு நடுவு மவையின்றிப்
பாலும் படுவதோ ராவுள தென்னாய்.

(இ - ள்.) கோலுந்தலையும் உடன் இல்லையாம் எனின் — இனிக் கோலும் இரண்டு தலைகளுமே இல்லையாம் என்பாயாயின்; மேய தன் மேல் பழி மேலும் உரைத்தனம் - அங்ஙனம் கூறுதற் கண் வருங் குற்றங்கள் முன்பே கூறினோம்; வாலும் தலையும் நடுவும் அவையின்றி - அங்ஙனம் கூறுகின்ற நீ வாலும் தலையும் இடையு மாகிய இவ்வுறுப்புக்களின்றியும்; பாலும் படுவது ஓர் ஆவுளது என்னாய் - பால் கறக்கும் ஓர் ஆவும் உளது என்று கூறவும் துணிவாயல்லையோ? என்றாள் என்க.

(வி - ம்.) கோலும் தலையும் இல்லை. அட்டக பிண்டமும் அதன் தாழ்ச்சி யெழுச்சிகளுமே உள வென்பது வாலும் தலையும் நடுவும் இன்றி ஒரு பசு பால் தருகின்றது என்பதை யொக்கும் என்றவாறு. (௧௭௫)

இதுவுமது

௩௬௯. புணரிய தாமவை பொய்யெனச் சொன்னேற்
குணர்வதங் குண்மையு மோட்டுவை யாயிற்
குணகுணி யாயு மவயவி யாயும்
பிணபிணக் கெய்துமப் பேரிடர் செய்தாய்.

(இ - ள்.) புணரிய தாம் அவை பொய் எனச் சொன்னேற்கு - நீ அட்டக பிண்டமல்லது கோல் முதலியன இல்லை என்றாற் போலவே யானும், அவ்வட்டக பிண்டமல்லது நீ புணர்த்துக் கூறுகின்ற கோயில் குடம் ஆடை முதலிய எப்பொருளும் பொய்யேயாகும் என்பேன் அங்ஙனம் கூறுமெனக்கு; அங்கு உணர்வது உண்மையும் ஒட்டுவையாயின் - அட்டகபிண்டமொழிய அங்ஙனம் உணரப்படும் பொருள் உண்மையையும் நீ உடன்படு வாயாயின்; குணகுணி ஆயும் அவயவியாயும் - பொருள்கள் குணமும் குணியுமாகி மேலும் உறுப்பும் உறுப்பியுமாகி; பிணபிணக்கு எய்தும் பேர் இடர் செய்தாய் - நின்னூல்கள் பெரும் பிணக்குடையவாகும் பெரிய துன்பத்தை நீயே செய்து கொண்டாயாகுதி! என்றாள் என்க.

(வி - ம்.) புத்த! நீ அட்டகமல்லது துலாக்கோலில்லை என்றாற் போலவே; யானும், அட்டகமொழிய நீ புணர்த்துச் சொல்லும் கோயில் குடம் ஆடை முதலிய எல்லாப் பொருளும் இல்லை என்பேன்; அவ்வழி நீ அட்டகமொழிய அவையும் உள வென்றுடன் படுவாயாயின்; நீ குணகுணிகளையும் உறுப்பு உறுப்பிகளையும் உடன்பட்டாயாகுவை. அங்ஙனமாய வழி நின்னூல் நின்னோடு முரணும், என்றவாறு. (௩௭௬)

புத்தன் கூற்று

௩௭௦. இருபிண்ட முப்பிண்ட மெண்ணில்பல் பிண்டம்
வருபிண்ட மேற்பல மற்றவை நீங்க
வொருபிண்டங் கொண்டாங் குயிர்க்குறுதி யிட்டுத்
திருவுண்ட செய்கையிற் செய்தவ னாக.

(இ - ள்.) இரு பிண்டம் முப்பிண்டம் எண்ணில் பல் பிண்டம் - நங்காய்! கேள், ஐங்கந்தமுங் கூடிய மக்கட் பிண்டம் கணந்தோறும் ஒழிவறக் கெட்டு, இரண்டாம் பிண்டமும் மூன்றாம் பிண்டமும் இங்ஙனமே எண்ணிறந்த பிண்டங்களாய்; மேல் வரு பிண்டம் பல-மேலே மேலே பிறந்து வருவன பற்பல வாதலாலே; மற்றவை நீங்க ஒரு பிண்டம் கொண்டு - அவையிற்றுள் ஏனைய பிண்டமெல்லாம் ஒழிய ஒரோவொரு பிண்டத்தை மட்டுங் கருதி எடுத்து; உயிர்க் குறுதியிட்டு - உயிர்க் குறுதியாகிய அறவினையையும் ஆங்கொழிந்த தீவினையையும் செய்து; திருவுடைச் செய்கையின் செய்தவன் ஆக - சிறப்புடைய வினைகளைச் செய்தவனைக் கற்பித்துக் கொண்டேன் என்றார் என்க.

(வி - ம்.) ஐங்கந்தக் கூட்டமாகிய மக்கட் பிண்டம் கணந்தோறுங் கையறக் கெட்டுப் புதிதாக மேன்மேற் பிறந்து வருதலின் இரண்டு முதற் பல வகைப்படும்; அவற்றுள் ஒரு பிண்டத்தை நல்வினை தீவினை செய்யும் வினை முதல்வனைக் கற்பித்துக் கொண்டேன் என்பது எச்சத்தாற் கொள்க. (௩௭௭)

## வேறு

### நீலகேசி வினவும் புத்தன் விடையும்

௬௪௧. வினைசெய்தா னுய்க்குமோ வேறொருவ னேயோ
வனைவரு மோவில்லை யோசொல்லா யோவென்னக்
கனைகடலி னுண்மணலிற் கண்ணினையு மீந்தா
னினைவகைய கேளென் றெடுத்துரைக்க லுற்றான்.

(இ - ள்.) கனைகடலின் நுண்மணலின் - முழங்குகின்ற கடலினது நுண்ணிய மணலினுங் காட்டில் பலவாகிப் பிறப்புற்று; கண்ணினையும் ஈந்தான் - கண் முதலிய உறுப்புக்களையும் பிற வற்றையும் வழங்கிய புத்தன்; வினை செய்தான் துய்க்குமோ வேறு ஒருவனேயோ - வினை செய்தவனே அதன் பயனை நுகர்வானோ? அல்லது வேறொருவன் நுகர்வானோ?; அனைவருமோ - அல்லது பிறரும் அவனுமாகிய எல்லோரும் நுகர்வரோ; இல்லையோ - அல்லது வினைசெய்தவனுக்கு நுகர்ச்சி இல்லையோ?; சொல்லாயோ - அல்லது அது பற்றி யாதும் சொல்லப்படாதென்பாயோ?; என்ன - என்று நீலகேசி வினவா நிற்ப; இனைவகைய கேள் என்று எடுத்து உரைக்கலுற்றான் - இந்த முறைமைகளைக் கூறுவேன் கேள் என்று அவற்றைக் கூறத் தொடங்கினான்; என்க.

(வி - ம்.) நீலகேசி, வினைசெய்தவனே அதன் பயனை நுகர்வனோ? அல்லது பிறனுகருவனோ? அல்லது அவனும் பிறரும் நுகருவரோ, அல்லது அது பற்றி யாதொன்றுஞ் சொல்லப்படாதென்பாயோ? என்று வினவ அது கேட்ட புத்தன் அந்த வகைகளைக் கூறுவேன் கேள் என்று கூறத் தொடங்கினான் என்றவாறு.

கனைகடலின் நுண் மணலினும் பலவாகிய பிறப்புற்றுக் கண் முதலியவற்றை வழங்கிய புத்தன் என்க.

செய்தவனே பயன் பெறின் கணபங்கத்திற்கு முரணும். பிறனெனின் செய்தாற்குப் பயனில்லையாம்; அவனும் பிறனுமெனின் ஒருவன் வினை செய்ய உலகத்தார் பயன் பெற வேண்டும். பயனில்லை யெனின் அறவுரை கூறல் பயனின்றாம் என இத்துணையுஞ் சொல்லிக் கொள்க. (௧௭௮)

### புத்தன் கூற்று

௬௪௨. அவனேயு மென்னேன் பிறனேயு மென்னே
னவனும் பிறனு மவரேயு மென்னே
னவனேயு மெய்தா னெனலேயு மாகா
தேவனோ விதுதுய்ப்பா னின்னணங்கே ளென்றான்.

(இ - ள்.) அவனேயும் என்னேன் - வினை செய்தவனே பயனுகர்வன் என்றுங் கூறுகிலேன்; பிறனேயும் என்னேன் -

பிறன் ஒருவன் நுகர்வன் என்றுங் கூறுகிலேன்; அவனும் பிறனும் அவரேயும் என்னேன் - அவனும் பிறனுமாகிய இருவரும் நுகர்வர் என்றுங் கூறுகிலேன்; அவ்னேயும் எய்தான் எனலேயும் ஆகா-வினை செய்தவன் பயனுகரான் என்று கூறலும் கூடாது; எவன் இது துய்ப்பான் - இனி யார்தான் இப் பயனை நுகர்பவன் எனின்; இன்னணம் கேள் என்றான் - அதற்கு விடை இவ்வாறு கூறுவேன் அதனைக் கேட்பாயாக! என்றான் என்க.

(வி - ம்.) வினை செய்தவனே பயன் பெறுவானென்றும் பிறனே பெறுவான் என்றும் அவனும் பிறனும் பெறுவனென்றும் செய்தவனுக்குப் பயனில்லையென்றும் கூறுகிலேன். யான் இவ்வாறு கூறுவேன் அதனைக் கேள் என்றான் என்றவாறு. (௧எ௧)

இதுவுமது

௬௭௩. அதுவேயு மென்னேன் பிறிதேயு மென்னேன்
அதுவும் பிறிது மவையேயு மென்னேன்
அதுபோன்ற வல்ல ததன்வழியின் மற்றேன்
றிதுபோல வென்பே னெடுத்துரையுங் கேணீ.

(இ - ள்.) அதுவேயும் என்னேன் - வினை செய்ததுவே பயனுகரும் என்றுங் கூறுகிலேன்; பிறிதேயும் என்னேன் - பிறிதொன்று நுகரும் என்றுங் கூறுகிலேன்; அதுவும் பிறிது மவையேயும் என்னேன் - செய்ததும் பிறிதுமாகிய அவையே நுகரும் என்றுங் கூறுகிலேன்; அது பொன்ற - வினை செய்தது இறந்தொழிய; அதன் வழியின் மற்றொன்று - அதன் தொடர்ச்சியிற் றோன்றிய பிறிதொன்று பயனுகர்வதாம்; இது போல என்பேன் - இதுபோல என்று உவமையும் கூறுவேன் காண்; எடுத்துரையும் நீ கேள் - இனி அந்த உவமையையும் கூறுவேன் நீ கேட்பாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) வினை செய்தவனை அஃறிணை வாய்பாட்டாற் கூறி வினை செய்தான் அன்றாக்கி; வினை முதலின் வழித்தோன்றிய பிறிதொன்று பயன் பெறும் என்று கூறி அதற்குவமையுங் கூறுவேன் கேள் என்றான் என்றவாறு. (௧எ௦)

இதுவுமது

௬௭௪. இடுபீச மன்று லிறுங்காதி யன்றால்
வடுவாய வவ்விரண்டும் வந்தனவு மன்றால்
நெடிதாய தீங்கரும்பு நெல்லுமே போல
நடுவாக நோக்காய் நறுநுதலா யென்ன.

(இ - ள்.) நறு நுதலாய் - நறிய நுதலையுடைய நங்காய்!; இடுபீசம் அன்றால் - நிலத்திலிட்ட வித்தும் அன்றாகி; இறுங்கு

ஆதி அன்றால் - அவ்வித்தின் வேறாகிய சோளமுதலாயினவு மன்றி; வடுவு ஆய அவ்விரண்டும் வந்தனவும் அன்றால்-வித்துஞ் சோளமுமாகிய அவ்விரண்டுமாய் வந்தனவும் அன்றி; நெடிது ஆய தீங்கரும்பும் நெல்லும்போல-நெடிய இனிய கரும்பின் வழித் தோன்றிய கருப்பையும் நெல்லின்வழித் தோன்றிய நெல்லையும் வேறுவேறாகநோக்காமலும்ஒன்றாகநோக்காமலும், கரும்பென்றும் நெல்லென்றும் பொதுவாக நோக்குமாறுபோல்; நடுவாக நோக்காய் என்ன - நீயும் வினைமுதல்வழித் தோன்றிய நுகர்வதனைப் பொதுவாக் நோக்கிக்கண்டு கொள்ளக்கடவை என்று கூறு கிற்பன் என்க.

(வி - ம்.) இட்டவித்து மன்றாகி, அதனின் வேறாகிய சோள முதலியனவுமன்றி அவ் விரண்டுமாய் வந்தனவுமன்றி, நெல்லின் வழித் தோன்றிய நெல்லும், கரும்பின்வழித்தோன்றிய கரும்பும்போல வினை முதலிய வழித்தோன்றிப் பயனுகர்வதனை இடையினதாக நோக்கி யுணர்வாயாக என்று சொன்னான் என்றவாறு. (௧௮௪)

## நீலகேசி கூற்று

௧௮௫. ஆத்தாவ தன்றேற் பிறிதா மரும்பெற
ஞாத்தான் வருத்த நீ நாட்டியதியாங் காணேம்
போத்தாகா தேற்குதிரை பெட்டையது போலென்
சாத்தாகு மாகாமை சாதிக்க வல்லையோ.

(இ - ள்.) ஆத்தா! - பேராசிரியனே!; அது அன்றேல் - வினைசெய்த மகன்பிண்டம் பயனுகராதாயின்; பிறிது ஆம் - பய னுகர்வது பிறிதொரு பிண்டம் ஆதல் தேற்றம், என்போல வெனின்; குதிரை போத்தாகாதேல் - காணப்படுவதொரு குதிரை ஆண் குதிரை யன்றாயவழி; பெட்டையதுபோல்- பெண் குதிரை யாதல் தேற்றமாதல் போல; அரும்பெறல் நாத்தான் வருத்த - இங்ஙனம் தேற்றமாகவும் நீ நினது அரும் பேறாகிய நாக்கு வருந்தும்படி; நாட்டியது-பலபடப் பாரித்துக் கூறியதனால் முடிந்த பொருளிது வென்று; யாம் காணேம் - யாம் காண்கின்றிலேமே; என் சாத்து ஆகாமை சாதிக்க வல்லையோ - நீ சொல்லுமது என் சாத்து என்னும் மேற்கோளன்று என நீ காட்டவல்லையோ? வல்லையாயிற் காட்டிக்காண் என்றாள் என்க.

(வி - ம்.) "நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை" (குறள். ௱௯௩)

என்னும் மொழிக்கு நீயே இலக்காகுதி! என்பாள், அரும் பெறல் நாவருத்த நாட்டியது யாங் காணேம் என்றாள். ஆத்தா: விளி. போத்து- ஆண்.

பயனுகரும் பிண்டம் வினைசெய்த பிண்டம் அன்றெனின், பிறிதொன்றாம்; முன்பு நின்றதொரு குதிரை போத்தன்றாயின் பெட்டையாவதுபோல, இங்ஙனம் எண்மையதாயிருப்பதனை நீ பற்பலவகையாற் பாரித்துரைத்தும் அவை பொருளுணர்த்தாவாயின. இனி இது நிற்க, நடுவாக நோக்கலாவது:—முழுவதும் வினைமுதலுமன்றிப் பிறிதுமன்றியிருப்பதொன்றெனின் அது சைனர் சொல்லும் சாத்துவாதமாம். என்னை; வினைமுதலாகிய உயிரே பயனுகர்வது மாதலின், ஒருவகையாற்றானாகியும், செயனிலை முதலியவற்றை விட்டு நுகர்தன் முதலிய நிலைகளையடைந்து காமமுதலியவற்றால் வேறுபட்டு நிற்றலால் ஒருவகையால் பிறிதாகியும் வினைபயன் இரண்டின் தொடர்பும் வருதலின் என்பது; இவ்வாறாகாமை நீ வினைக்கும் பயனுக்கும் தொடர்பு காட்டவல்லையோ? என்றவாறு.

சாத்வாதம் - ஸ்யாத்வாதம். அஃதாவது - ஆருகதர் மேற்கோள்; பொருள் பன்முடிவுடையதாகலின் அஃது ஒரு முடிவுடையதாகக் கூறப்படாது என்னுங் கொள்கை. விதை முளையாகிச் செடியாகி வளர்தலும், அவ்வாறு வளரும்போது தற்பண்பு நீங்காது நிற்றலும் அதன் பண்பாகலின், அதனை நிலையுதலுடைத்தென்றாதல் நிலையாமையுடைத் தென்றாதல் ஒருமுடிவுடைத்தாகக் கூறலாகாது. ஒருவகையால் நிலையுதலுடைத்தென்றும் ஒருவகையால் நிலையாமை யுடைத்தென்றும் கூறல் வேண்டும் எனப் பொருட் பண்பு பலமுடிவாகக் கோடல் என்க. பொருள், பொருட்பண்பால் நிலையுதலுடையது; பரியாயவகையால் நிலையாமையுடையது, எனவரும். (கஅ௨)

வேறு

இதுவுமது

கூசக. அவன்யோற லானு மவனன்மை யானு
மவன்றன் வழியா னவனாத லானு
மவன்றான் பிறனே யவனேன்ற லானு
மவன்றான் பிறனே யெனவழிவ துண்டோ.

(இ - ள்.) அவன் போறலானும் - வினை செய்தவனுக்குப் பயனுகர்வான் ஒப்பாவன் என்றலானும், அவன் அன்மையானும் - வினை செய்தவனே நுகர்பவன் அல்லாமையானும்; அவன்றன் வழியால் அவன் ஆதலானும் - செய்பவன் வழித்தொடர்ச்சி காரணமாக அவனே ஆவன் என்றலாலும்; அவன்றான் பிறனே அவன் என்றலானும் - அவன் அவனே என்றலானும் அவனே தான் பிறனே என்றலானும் இவ்வாறு பலவாறு நின்னாற் பாரித்துக் கூறப்படுவன எல்லாவற்றாலும்; அவன் பிறன் என அழிவது உண்டோ - அந்தப் பயனுகர்பவன் செய்தவனின் வேறாவன் என்றற்கண் குற்றமுண்டோ? என்றாள் என்க.

(வி - ம்.) நீ எத்தனை வகையாற் கூறினும் வினை செய்பவன் ஒருவன், அதன் பயனுகர்பவன் மற்றொருவன் என்பதே முடிந்ததன்றோ? இம்முடிவன்றாயிற் கூறுக! என்றவாறு. எனவே நின் மேற்கோளின்படி வினை செய்தவன் ஒருவனாகப் பயனுகர்பவன் மற்றொருவன் ஆதலின் நல்வினை செய்தல் வீண் என்பது கருத்து. (கஅ௩)

வேறு

இதுவுமது

௬௪௭. கண்போலக் கயலெனினுங்
காடன்றித் தூறெனினும்
பெண்பாலாற் பல்கியும்
எல்லாம் பிறவேயாம்.

(இ - ள்.) கண்போலக் கயல் எனினும் - புத்த! கண்போன்றது கயல்மீன் என்று கூறினும்; காடு அன்றித் தூறு எனினும்-காடென்றது தூறு என்று கூறினும்; பெண்பாலால் பல்கினும் - வினை செய்தான் என ஆண்பாற்படுத்தோதாது செய்தாள் எனப் பெண்பாற் படுத்துப் பெருக்கி ஓதினும்; எல்லாம் பிறவே-எல்லா வகையானும் வினைசெய்ததன் கண்ணின்றும் துய்ப்பது வேறாகவே முடியும் நின் மேற்கோள் அதுவேயாகலின் என்றாள் என்க.

(வி - ம்.) இது புத்தன் சுருங்கக்கூறாமல் விரித்தோதியதனை வேறு வாய்பாட்டாற் கூறி அசதியாடி எங்ஙனம் கூறினும் நின்கருத்து வினை செய்தவன் நிற்ப வேறொருவன் துய்ப்பன் என்பதேயன்றோ? என்றவாறு. (௧௮௪)

இதுவுமது

௬௪௮. அயலானே துய்க்கு மவன்றுவ்வா னென்பாய்
முயலானு மில்லான் முகஞ்சிறிதே யொப்பான்
வயலாமை போல்வதோர் மக்குளி யிலானென்
றியலா தனவே யெடுத்துரைத்தி யென்றாள்.

(இ - ள்.) அயலானே துய்க்கும் அவன் துவ்வான் என்பாய்-பேதாய்! நீ எவ்வாறு கூறினும் வினை செய்யாத பிறனே வினையின் பயனை நுகர்வான்; செய்தவன் நுகர்வதிலன் என்றே கூறுகின்றாய்; (இதனைக் கூறுதற்கு நீ) முயல் ஆனும் இல்லான் - முயலே அல்லன் என்றும்; முகம் சிறிதே ஒப்பான் ஆயினும் - முகத்தாற் சிறிது முயலை ஒப்பான் என்றும்; வயல் ஆமைபோல்வது ஓர் மக்குளி இல்லான் என்று - வயலின் கண்ணுள்ள ஆமைபோல ஒரு கூன் முதுகுடையானுமல்லன் என்றும்; இயலாதனவே உரைத்தி - பொருந்தாதனவற்றையே விரித்துக் கூறுகின்றனை; இவற்றாலெல்லாம் உண்டாய பயன் யாதுகாண் என்றாள் - என்று அசதியாடினள் என்க.

(வி - ம்.) நீ கூறியவற்றாலெல்லாம் முடிந்த பொருள் வினை செய்தவன் பயன் நுகரான் பிறனே நுகர்வன் என்பதுதானே. இதுமுடித்தற்கு நீ இத்துணையும் கூறல் வேண்டுமோ? என்று அசதியாடியபடியாம். மக்குளி - கூன். (௧௮௫)

இதுவுமது

௬௪௯. அயற்பிறனு மல்ல னவன்றானு மல்லன்
புயற்றிறலைங் கூந்த லிதன்போலப் பிறனுக்கேல்
முயற்பிறவி மேயினீர் முன்செய்தா னங்கோர்
பயப்பெறுவ தில்லையேற் பாழ்பயனி தென்னே.

(இ - ள்.) புயல்திறல் ஐங்கூந்தல் - முகில்போலும் ஐம்பாலாகிய கூந்தலையுடைய நீலகேசி; முயல் பிறவி மேயினீர் - முயற் பிறப்பினை எய்தியுமன்ற பெருமையுடையீர் நீயிர்; அயல் பிறனும் அல்லன் - வினைசெய்தவன் பயனுகர்வானுக்கு வேறாகி மாறுபட்டவனும் அல்லன; அவன்தானும் அல்லன் - வினை செய்தவனே பயனுகர்வானுமல்லன் பிறனே என்புழி; தன் போலப் பிறனுக்கேல - ஒருவன் செய்த வினையின் பயன் பிறனுக்கே என்பதாயிற்று; முன் செய்தான் பயம் பெறுவதில்லையேல் - முன்பு வினை செய்தவன் அதன் பயனைப் பெறுவதில்லை என்றுரைக்காலத்தே; பயன் பாழ் - வினைக்குப் பயனில்லையாயிற்று; இஃதென் - இங்ஙனம் ஓதுவது அறிவுடைமையாமோ? என்றாள் என்க.

(வி - ம்.) எவ்வாற்றானும் வினைசெய்தவன் அதன் பயனை நுகர்வதிலன் என்றால் வினைக்குப் பயனில்லை என்றாயிற்று. இஃது அறிவுரையாமோ? என்றவாறு.

முயற்பிறவி மேயினீர் என்றதன் கருத்து - முயலாய்ப் பிறந்த காலத்து மேற்கொண்ட அறத்தின் பயனை அதற்கு வேறாகிய புத்தப் பிறப்பினை எய்தி நுகர்ந்திர் என்பது. (௬௪௯)

இதுவுமது

௬௫௦. தற்பிறிதே யாகிப் பிறபிறிது தானல்லா
நெற்பிறிது போன்மெனவு நீயுரைத்தா யஃதொழிந்து
சொற்பிறிது சொன்னாய் சுவர்க்கத் தவர்க்குரைப்
பிற்பிறனே யாகிப் பெறப்பிறனே யாகானே.

(இ - ள்.) தன் பிறிதேயாகிப் பிற பிறிது தான் அல்லா நெல் பிறிது போன்ம் எனவும் - ஐய நீ, நெல்லின் வழித் தோன்றிய நெல், விதையாகிய தன்னினத்து நெல்லின் வேறாகி, பிறவினத்துத் தோன்றிய பிறிதன்றாகவும் இருக்குமன்றே அந்த நெல் தன் முதலாகிய நெல்லிற் பிறி தானாற்போல வினைசெய்தான் வழித் தோன்றிய பிறனொருவனே அதன் பயனை நுகர்வன், செய்யாதானொருவன் வழித்தோன்றிய பிறனொருவன் நுகர்வதிலன் எனவும் உவமை கூறினை; அஃது ஒழிந்து சொல் பிறிது சொன்னாய் - இந்த உவமையாலே நீ கூறவந்த பொருள் ஒழிய நின் சொல்லிற்கே

முரண் கூறினை யாகுதி! என்னை?; சுவர்க்கத் தவர்க் குரைப்பின் - இந்த உவமையாலே, மக்கட்பிண்டத்துள்ளான் ஒருவன் அறஞ் செய்திறப்பானாக அதன் பயனைத் துறக்கத்தே வாழும் தேவன் ஒருவன் நுகரப்பெறான்; பிறனேயாகிப் பெறப்பிறனே ஆகானோ - அத் தேவன் பிறவினத்து வழிவந்த பிறனொருவன் ஆதலாலே; என்றாள் என்க.

(வி - ம்.) தன்னினத்துப் பிறிதாகி, வேற்றினத்துப் பிறிதன்றாகிய நெல்லைப் பயனுகர்வானுக் குவமை கூறினாய்; அதுவானால் மக்கட் பிண்டத் துள்ளான் அறஞ் செய்ய வேற்றினமாகிய தேவ பிண்டத்தின் வழிவந்த பிறனாகிய தேவனுகரப் பெறான் அல்லனோ? பெறின், அவன் வேற்றினத்து வேறுபயன் நுகர்ந்தானும். ஆதலால், நின் கூற்று முரணும். (கஅஎ)

இதுவுமது

௬௯௧. நெல்லின் வழிக்கரும்பு நீள்கரும்பி னானெல்லுஞ்
சொல்லுநீ சொல்லாயேற் சொல்லியநின் சொல்லெய்தா
வல்லனாய்ச் செய்த மகன்வழியி னான்மகன்றா
னல்லனாய்ச் சொல்லின் னுலங்கரு வாமே.

(இ - ள்.) நீ நெல்லின் வழிக் கரும்பும், நீள் கரும்பினால் நெல்லும் சொல்லு - புத்த! நீ மக்கட்பிண்டத்துள்ளான் ஒருவன் செய்த அறத்தின் பயனைத் தேவபிண்டத்துள்ளான் ஒருவன் நுகர்வானாதற்கு உவமை சொல்லின் நெல்லின் வழியிற் றோன்றும் கரும்பினையும் அல்லதுநெடியகரும்பின்வழித்தோன்றும்நெல்லினை யும் போல என்று சொல்லவேண்டும்; சொல்லாயேல் சொல்லிய நின் சொல் எய்தா - இவ்வாறு கூறுதற்கு நாணிக் கூறாயெனின் நீ முன்பு கூறியவுவமை பொருந்தாமையுமுணர்தி; வல்லனாய்ச் செய்த மகன் வழியினால் மகன் தான் அல்லனாய்ச் சொல்லின் - முன்பு நீ கூறிய வுவமைக்கு, வல்லவனும் அறஞ்செய்த மகன் வழித் தோன்றிய மகனுகர்வன் என்று கூறாது, தேவன் நுகர்வன் என்று கூறின்; உலங்கருவாம் - பொருள் மாறுபடும், என்றாள் என்க.

(வி - ம்.) பொருளாகிய மகனுக்குந் தேவனுக்கும் உவமை நெல்லின் வழிக் கரும்பும் கரும்பின்வழி நெல்லும் (வருமாயின்) சொல்லுவாயாக; நீ கூறிய நெல்லின் வழி நெல்லும் கரும்பின்வழிக் கரும்பும் உவமையாகா என்றவாறு. உலங்கருதல் - மாறுபடுதல். (கஅஅ)

புத்தன் மனங்குழம்புதல்

௬௯௨. செய்தானுஞ் செய்தானே துப்பானுந் துப்பானே
யிஃதாலென் மெய்ம்மை கிடந்தவா றென்றானுக்
கெய்தார் பிறவோ விருசார் வினைப்பயனுஞ்
செய்தார்க டாமெனவுஞ் சிந்தித் திருந்தானால்.

(இ - ள்.) செய்தானுஞ் செய்தானே - வினை செய்தவன் செய்தவக்கணத்தே கையறக் கெடலின் செய்ததனுந்துணையே; துய்ப்பானுந் துய்ப்பானே - அதன் பயனை நுகர்பவனும் அவன் வழி வந்த பிறனே துய்ப்பான்; என் மெய்ம்மை கிடந்த ஆறு இஃது என்றானுக்கு - யான் கண்ட தத்துவ மிருந்தபடி இதுவேகாண்! என்று கூறிய புத்தனை நோக்கி; செய்தார்கள் தாம் இருசார் வினைப்பயனும் எய்தார் எனலும் - நீலகேசி ஆயின் செய்தவர்கள் இருள்சேர் இருவினைப் பயன்களையும் எய்தார் அவற்றைப் பிறரே எய்துவாரல்லரோ? என்று கூறலும்; சிந்தித்து இருந்தான்-புத்தன் மேலே விடை கூறமாட்டானாகி என்செய்வேம்? என எண்ணமிட்டுக் கொண்டிருந்தான் என்க.

(வி - ம்.) புத்தன் தன் போக்கறுதியினாற் பலவகையாகக் கூறிய வற்றாலெல்லாம் வினைசெய்தவன் பயனுகரான்; பிறனே நுகர்வான் என்பதே போதரக்கண்டு இஃதே என் மேற்கோள் என்று கூற, நீலகேசி அதனை வழிமொழிந்து 'நின்மேற்கோள் செய்தான் நுகரான் பிறனே நுகர்வான் என்பதுதானே' என அதனை வலியுறுத்திக் கூற அதுகேட்ட புத்தன் வழிகாணாது பலப்பல நினைந்து வாளாவிருந்தான் என்றவாறு. (கஅக)

## நீலகேசி புத்தனை இகழ்தல்

கூ௫௨. கண்ணுந் தலையும் பிறவுங் கருந்தடியும்
பெண்ணுங் கொடுத்துப் பிறர்க்கே யுழந்தாய்முன்
னெண்ணுங்கா லின்னுநீ யெவ்வினையுஞ் செய்தாரை
யுண்ணுந் திறமொன்று மோதா தொழிந்தாயோ.

(இ - ள்.) முன்கண்ணும் தலையும்பிறவும்கருந்தடியும்-சிறந்த சமயத் தலைவனே! நீ முன்பு நல்வினையென்று கருதியன்றோ கண் களையும் தலையையும் இன்னோரன்ன பிறவுறுப்புக்களையும் வலிய உடற்றசையினையும்; பெண்ணும் கொடுத்து - நின்மனைவியையும் இரவலர்க்கு வழங்கி; பிறர்க்கே உழந்தாய் - நின்பொருட்டன்றிப் பிறர் பொருட்டே துன்பம் பலவு முழப்பாயாயினை; எண்ணுங்கால்- இவற்றாலெல்லாம் நினக்குப் பயனுண்டென நீ நினைத்தன்றோ செய்தனை; நீ எவ்வினையும் செய்தார் உண்ணும் திறம் ஒன்றும் ஓதாது ஒழிந்தாயோ - அத்தகைய நீ எந்த வினையேயாயினும் அவற்றைச் செய்தவர்களே நுகரும் வழியைச் சிறிதும் கூறினை யில்லையல்லையோ? என்றாள் என்க.

(வி - ம்.) செய்தாரை என்புழி ஐகாரம், சாரியை.

நீ நல்வினையாற் பயனுண்டென்றன்றோ? கண் முதலாயின வழங்கிப் பிறர்க்கே உழந்தாய். நின்னெறி பற்றுவார்க்கு வினைப்பய னுகருமாற்றைக் கூறாது விடுத்தது எற்றிற்கோ? என்றவாறு. (கஅ௦)

இதுவுமது

௬௫௪. எனைத்துணையு நீவருந்தி யெத்துணையோர் கால
நினைத்திருப்பி னல்லது நின்காட்சி தன்னால்
வினைப்பயத்தின் கூட்டம் விரித்துரைப்ப னென்னிற்
றினைத்துணையு மாகாமை தேரிதுநீ யென்றாள்.

(இ - ள்.) நீ எனைத்துணையும் வருந்தி எத்துணையோர்காலம் நினைத்திருப்பின் அல்லது-புத்த! நீ எவ்வளவும் வருந்தி எத்துணைக் காலம் ஆராய்ந்திருந்தாலும் ஆராய்ந்து வருந்துவதேயன்றி; நின் காட்சி தன்னால் - கணபங்கம் என்னும் நினது மருட்காட்சிவாயி லாய்; வினை பயத்தின் கூட்டம் விரித்துரைப்பன் என்னின் -வினைக் கும் அதன் பயனுக்குமுள்ள தொடர்பினைக் கண்டு விரித்துக் கூறு வேன் என்று முயல்வாயாயின்; நீ தினைத் துணையும் ஆகாமை இது தேர் என்றாள் - நீ அம்முயற்சி ஒரு தினையளவும் நினக்குக் கைகூடாமையாகிய இவ்வுண்மையை அறிந்து கொள்ளக்கடவை என்றாள் என்க.

(வி - ம்.) புத்த நீ நினது கணிகசித்தாந்தத்தை மேற்கொள்ளு மளவும் அதன் வாயிலாய் வினைக்கும் பயனுக்கும் தொடர்பு காட்ட லியலாதென்பது ஒருதலை. இதனை நீ உணர்ந்துய்தி! என்றவாறு. (௧௧௫)

காட்சி என்றது ஈண்டு கணிகசித்தாந்தத்தை.

நீலகேசி புத்தனை நோக்கி நின்சமயத்தைக் கைவிடுதி என்னல்

௬௫௫. முழுக்கேடு வேண்டாயேன் முன்னின்ற துண்டாம்
வழுக்குமே லவ்வுரைக்கு மாறுகோ ளிஃது
மிழுக்காமை புத்தீ ரெனைப்பலருங் கூடிக்
குழுக்களாய் வந்துநுங் கோளிறுமி னென்றாள்.

(இ - ள்.) முழுக்கேடு வேண்டாயேல் முன் நின்றது உண் டாம் - புத்த நீ! நின் மேற்கோளாகிய 'ஒழிவறக் கெடுதல்' என்ப தனைக் கைவிடுவாயாயின் அப்பொழுது பொருள் 'கெடுதலும் கெடா மையும்' என்னும் எம் மேற்கோளே நிலை நிற்பதாம். முனநின்றது உண்டாம் - நிற்பவே நம் முன்னிற்கும் வினைக்கும் பயனுக் கும் தொடர்பும் காணப்பட்டு நிலைநிற்பதாம்; வழுக்குமேல் - எம் மேற்கோளும் நினக்குப் பொருந்தாது போயின்; அவ்வுரைக்கு - கணபங்கம் என்னும் அந்த நின்மொழிக்கு; மாறுகோள் இஃது ஆம் - மாறுபாடு, செய்தவனுக்குப் பயனில்லை என்னும் இம் முடிவே வருவதாகும்; புத்தீர் எனைப் பலரும் குழுக்களாய்க் கூடி - இறந்த காலத்து எண்ணில் புத்தரும் நீயிரும் ஆகிய புத்தர் எல் லோரும் நுந்தம் இருத்தியாலே ஒரு காலத்தே ஒரு கூட்டமாகக்

கூடியிருந்து ஆராய்ந்தேனும்; நுங்கோள் இறுமின் - நுங்கள் மேற்கோள் வாயிலாகவே எமக்கு விடைகூறிக் காணுமின்; என்று என்று கூறினள் என்க.

(வி - ம்.) பொருளுக்கு முழுக்கேடு வேண்டாயாயின் கெடுதலும் கெடாமையுமாகிய எம்மேற்கோளை உடன்பட்டாயாகுதி, உடன் படாது மறுப்பாயாயின் எத்தனை புத்தர்கூடி ஆராயினும் எமக்கு விடைதரல் கூடாது என்றவாறு.

இறந்தகாலத்து எண்ணில் புத்தரும் நீயிரும் கூடி என்றது அசதி யாடல். (கசுஉ)

இதுவுமது

சுருசு. நின்றே நிலையுமெனி னித்தியமே யாமொழியு
மன்றேயஃ தாயி லநித்தியமா மவ்விரண்டு
மென்றே யுரைக்கி லிருவழிக் குற்றமுமா
மென்றே யுரைக்கின்ற யேகாந்த னாகுதியோ.

(இ - ள்.) நின்றே நிலையும் எனின் நித்தியமே ஆய் ஒழியும் - பொருள் எப்பொழுதும் நிலையுதலுடைத்தெனின் அந்நிலையுதல் மாத்திரையேயாவதன்றிச் செயன்முதலியன விலதாம்; அஃதன்றே ஆயின் - அஃதன்றி நிலையாமையுடைத்தெனின்; அநித்தியமாம் - நிலையாமை மாத்திரையாய் நிகழ்வுகளும் வினைக்கும் பயனுக்குந் தொடர்புடைமையும் நிகழாவாம்; அவ்விரண்டும் என்றே உரைக் கில் இருவழிக் குற்றமுமாம் - பொருள் நிலையுதலும் நிலையாமை யும் உடைத்தென்பா யாயின் அஃது ஆருகதர் மேற்கோளாகி நினக்கு இருவழியினும் குற்றமுமாம்; ஏகாந்தன் ஆகுதியோ - அவ் வழி நீ ஒரு முடிவு மேற்கோளுடையையாமா றெங்ஙனம் என்றாள் என்க.

(வி - ம்.) பொருள் முழுவதும் நிலையுதலுடைத்தெனின் நிகழ் வுகள் நிகழமாட்டா. ஒழிவறக் கெடுவதெனின் நிகழ்வுகளுமில்லை; வினை பயன் இவற்றின் தொடர்புகளும் உளவாகா. நிலையுதலும் நிலையாமையும் உடைத்தெனின் அது நினக்கு மேற்கோள் மலைவாய் இருவகைக் குற்றமும் வரும். அவ்வழி நீ ஒரு முடிவு மேற்கோ ளுடையையாகாய்காண் என்றவாறு.

இருவழிக் குற்றம் - சைனனும் பௌத்தனும் ஆகாமை. (கசுங)

புத்தன் தன் தோல்வியை ஏற்றுக்கோடல்

சுருஎ. உச்சேதந் தானு மொருவகையா லவ்வகையே
யச்சேத மின்மையு மவ்விரண்டு மாய்நிகழ்ந்து
போய்ச்சேத மல்லாப் பொருண் முடிபோன் றுண்டாக
மெச்சாயே நீயெனயான் மெச்சுவனே யென்றான்.

(இ - ள்.) உச்சேதந் தானும் ஒருவகையால் - புத்தனே !
இனி நீ நின் கணபங்க மேற்கோளில் எல்லா வழியினும்
தோல்வியே கண்டலால் பொருள்களுக்கு நிலையாமை தானும்
எல்லா வகையானு மன்றி ஒருவகையாலாம் என்றும்; அச்சேதம்
இன்மையும் அவ்வகையே - அந்த நிலையுதல்தானும் அவ்வாறே
ஒரு வகையாலாம் என்றும். அவ்விரண்டுமாய் நிகழ்ந்து - எனவே
பொருள் நிலையாமையும் நிலையுதலும் உடைத்தாய் நிகழ்ந்து;
பொய்ச்சேதம் அல்லாப் பொருள் முடிவு ஒன்று-வெறும் பாழாய்க்
கெடுதல் அல்லாததுமாம் என்னும் பொருளுடைய முடிவு ஒன்று;
உண்டு ஆக நீ மெச்சாயோ என - உண்டென்று யான் கூற நீ
அம் முடிவினைப் பாராட்டி மேற்கொள்ளாயோ? என்று நீலகேசி
வினவ; யான் மெச்சுவன் என்றான் - நங்காய்! யானும் அம்முடி
வினைப் பாராட்டி மேற்கொள்வேன் காண்! என்றான் என்க.

(வி - ம்.) பொருள்களுக்கு அழிவாவதூஉம் எல்லாவகையானு
மன்றி ஒருவகையாலாம் - இதனாற் போந்த பொருள் பொருள் எல்லா
வகையானும் அழியின்; அவ்வாறழியுமென்பவனும் தோன்றிய அக்
கணத்திலேயே அழிவனாகலின், அவனுக்குப் பொருள்களினது முழுக்
கேட்டினை அறிந்து சொல்லுதல் கூடாதென்பது.

இனிப் பொருள்களுக்கு நிலையுதற்றன்மையுமவ்வாறும். பொருள்
எல்லாவகையானும் நிலையுதலுடைத்தெனின் அதனை அறிந்துரைத்தல்
அங்ஙனம் நிலையுதலுடைத் தென்பானுக்குங் கூடாதாம். ஆதலால்
கூடுதலும் பிரிதலுமாகிய பண்புடைமை காரணமாக நிலையுதலும்
நிலையாமையுமாகிய அவ்விரண்டுதன்மையு முடைத்தாகி இளைஞன்
ஆனவனே முதியனானான் என்புழி உணரப்படுவதொரு பொருளுளதாக
நீ இன்னும் அறிகின்றிலையோ ? என்று நீலகேசியார் சொல்லக்
கேட்டுப் புத்தனும் நுண்ணிதினுணர்ந்து, இனி யெல்லாம் அவ்வாறே
யறிந்துய்குவேன் என்று சொன்னானென்றவாறு.

உச்சேதம் - அழிவு. பொய்ச்சேதம் - பொய்யாய்ப்போதல்;
வெறும் பாழாகக் கெடுதல். (ககூச)

நீலகேசி புத்தனுக்குத் தத்துவஞ் செவியறிவுறுத்துப் போதல்

கூ௩அ. இறைவன்ற னூலுணரி னெவ்வுருவி னொரு
முறையினா லெய்துவர்தா முன்னிய வீடென்றான்
மறையினா லாயினு மற்றொருவா றேனு
நிறையினாற் செல்லென்று நேரிழையுஞ் சென்றாள்.

(இ - ள்.) இறைவன்றன் நூல் உணரின்-புத்த கேள்! எங்
கடவுள் திருவாய் மலர்ந்தருளிய மெய்ந் நூல்களைப் பயின்று பொரு
ளுணர்ந்து தெளிந்தவிடத்து; எவ்வுருவினொரும்-வேறெந்தச் சமயத்
தைச் சார்ந்த எத்தகைய புறவேடமுடையோராயினும்; முன்னிய
வீடு முறையினால் எய்துவர் - தாந்தாங் குறிக்கொண்ட வீடுபேற்

றினை ஒருதலையாக எய்துவர்; என்றாள் - என்று கூறி; மறையி னுல் ஆயினும் மற்று ஒருவாறு ஏனும்-பிறர் அறியாத வகையினு லாதல் அல்லது வேறெந்த வகையினுலாதல்; நிறையினுல் செல் என்று - இத்தத்துவத்தை நெஞ்சு நிறைவினோடு மறவாதே கொண்டு செலுத்துவாயாக வென்றருளிச் செய்து; நேரிழையும் சென்றாள் - பின்னர் அந்த நீலகேசி அவ்விடத்தினின்றும் போயி னள் என்க.

(வி - ம்.) புத்தன் தோல்வியுற்று நீலகேசியின் தத்துவங்களை ஒப் புக் கொண்ட பின்னர் அருகக் கடவுள் அருளிச் செய்த மெய்ந்நூலின் மாண்புகளை அவனுக்குக் கூறி நீ இத்தத்துவங்களை மறைவாக வேனும் வெளிப்படையாக வேனும் உளமார மேற்கொண்டு ஒழுகி வீடுபே றெய்தி யுய்வாயாக! வென்று அருளிச் செய்து அந்நகரத்தினின்றும் போயினள் என்றவாறு.

புத்தன் ஞொரேலென ஆருகத சமயத்தைத் தழுவியொழுகின் பௌத்தர் பலர் அவனுக்குத் தீங்கிழைத்தல் கூடுமென்பது கருதி "மறையினுலாயினும் மற்றொரு வாறேனும் நிறையினுற் செல்" லென்று அறிவுறுத்தல் வேண்டிற்று. (கககக)

புத்தவாதச் சருக்கம் முற்றும்

---

ஆருவது

# ஆசீவக வாதச் சருக்கம்

## நூலாசிரியர்கூற்று

சாருசா. கண்ணார் சிறப்பிற் கபில புரங்கடந்து
விண்ணூறு செல்வாள் வியன்மலைபோற் றோற்றத்தாள்
உண்ணால் வினையு மொருவி யொளிர்மேனி
யெண்ணா துணர்ந்தானை யேத்தத் தொடங்கினாள்.

(இ - ள்.) வியன்மலைபோல் தோற்றத்தாள - அகன்றுயர்ந்த மலைபோலும் தோற்றத்தையுடைய நீலகேசியானவள்; கண் ஆர் சிறப்பின் கபிலபுரம் கடந்து - கண்ணிறைந்த அழகுச் சிறப்பினை யுடைய கபிலபுரத்தினின்றும் புறப்பட்டு; விண் ஆறு செல்வாள் - வான்வழியே செல்பவள்; உள நால்வினையும் ஒருவி - அகத்தின் கண்ணவாகிய ஞானாவரணீயம் முதலிய நான்கு வினைகளினின்றும் இயல்பாகவே நீங்கி; ஒளிர் மேனி - விளங்குகின்ற திருமேனியை யுடையவனும்; எண்ணாது உணர்ந்தானை - ஆராயாது இயல் பாகவே மெய்யுணருபவனுமாகிய அருகக் கடவுளை; ஏத்தத் தொடங்கினாள் - வாழ்த்தி வணங்கத் தொடங்கினாள்; என்க.

(வி - ம்.) வியல் - அகன்ற. "வியலென் கிளவி யகலப் பொருட்டே" என்பது தொல்காப்பியம்; (உரி-கசு.) கண்ணார் சிறப்பு - அழகுச் சிறப்பென்க. ஆறு - வழி. அளக்கலாகா அளவும் பொருளும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் உடைய நல்லாசிரியை என்பார் வியன்மலை போல் தோற்றத்தாள் என்றார்.

பவணந்தியும் இவற்றைப் பொதுத் தன்மையாகக் கொண்டு நல்லாசிரியர்க்கு மலையை உவமையாக வெடுத்தமை யுணர்க; (நன்னூல்-உசு ஆம் உஅ ஆம் நூற்பாக்களை நோக்குக.)

நால்வினையாவன - ஞானாவரணீயம், தரிசனாவரணீயம், மோகநீயம், அந்தராயம் என்பன. எண்ணாதுணர்ந்தான் - இயல்பாகவே உணர்ந்தவன். (க)

### நீலகேசி அருகனை வாழ்த்துதல்

(இச் செய்யுள் தொடங்கி சு செய்யுள்கள் ஒரு தொடர்)

சுசுO. அங்கம் பயந்தா னறைந்த சுதக்கடலுள்
பங்கங்கள் சாராப் பரசமையர் சொல்லுளவோ
பங்கங்கள் சாராப் பரசமையர் சொல்லேபோற்
புங்கவன்றன் சேவடியைச் சேராத பூவுளவோ.

(இ - ள்.) அங்கம் பயந்தான் அறைந்த சுதக்கடலுள் - அங்காகமத்தைத் திருவாய் மலர்ந்தருளிய அருகக் கடவுள் கூறிய கடல்போன்று விரிந்த நூலின்கண் கூறப்பட்ட; பங்கங்கள் சாராப் பரசமையர் சொல் உளவோ - ஏழ்பங்கங்களையும் தழுவாத பிற சமயக்கணக்கர் நூல்களும் உலகின்கண் உளவாமோ?; பங்கங்கள் சாராப் பரசமையர் சொல்லேபோல் - ஏழ் பங்கங்களையும் தழுவாத பிற சமயக்கணக்கர் நூல் இல்லையாறுற் போலவே; புங்கவன் தன் சேவடியைச் சேராத பூஉளவோ - அருகக் கடவுளுடைய திருவடிகளைச் சேராத மலர்களும் உளவாமோ? இல்லை என்றாள் என்க.

(வி - ம்.) அங்கம் - அங்காகமம்; சுதம் - சுருதம்; நூல். பங்கம் - ஏழ் பங்கம் ; பங்கம் - பங்கு ; கூறு. இவற்றைச் சப்தபங்கம் என்றோதுப. சப்தபங்கிநயம் எனவும் வழங்கப்படும். இவற்றை,

"உண்மை நல்லின்மை யுண்மையின்மையும் உரைக் கொணுமை உண்மை நல்லின்மையுண்மை யின்மையோடுரைக் கொணுமை நண்ணிய மூன்றுமாக நயபங்கமேழு" என்பதனால் உணர்க. இவற்றை, வடநூலோர்,

"ஸ்யாத் அஸ்தி; ஸ்யாத்நாஸ்தி, ஸ்யாதஸ்திநாஸ்தி, ஸ்யாத வக்தவ்யம், ஸ்யாதஸ்தியவக்தவ்யம், ஸ்யாத்நாஸ்தியவக்தவ்யம், ஸ்யா தஸ்தி நாஸ்தியவக்தவ்யம்" என ஓதுப.

எச்சமயக் கணக்கராயினும் இவற்றைத் தெரிந்தோ தெரியாமலோ மேற்கொண்டன்றிப் பொருளியல்புணரவாராமையின் இவற்றைத் தழுவாத பிற சமயர் சொல்உளவோ ? என்றாள்.

இனி, அவ்வாறே இறைவனுவான் ஒருவனேயாதலின் யாவர் யாண்டு எந்தக் கடவுளை வழிபடினும் அவரிடு மலரெல்லாம் அருகனடியிற் சேர்வனவே என்பாள், 'பரசமையர் சொல்லேபோல் புங்கவன்றன் சேவடியைச் சேராத பூவுளவோ?' என்றாள். புங்கவன் - உயர்வற உயர்ந்தவன் ; அருகன். (உ)

௬௬௧. பூர்ப்பம் பயந்தான் புகன்ற சுதக்கடலுள்
சார்த்திப் பிறவாத் தவநெறிக டாமுளவோ
சார்த்திப் பிறவாத் தவநெறிக டம்மேபோற்
றீர்த்தன் றிருநாமங் கோள்ளாத தேவுளவோ.

(இ - ள்.) பூர்ப்பம் பயந்தான் புகன்ற சுதக்கடலுள் - பூருவாகமத்தைத் திருவாய் மலர்ந்தருளிய அருகக் கடவுள் கூறிய கடல் போன்று விரிந்த ஆகமங்களிலே கூறப்பட்ட நல்லொழுக்கங்களை; சார்த்திப் பிறவாத் தவநெறிகள் தாம் உளவோ - தழுவித் தோன்றாத பிற சமயத்தார் தவ வொழுக்கங்களும் உளவாமோ; சார்த்திப் பிறவாத் தவநெறிகள் தம்மேபோல் - தழுவிப் பிறவாத தவநெறிகளைப் போலவே; தீர்த்தன் திருநாமம் கொள்ளாத தேவு

உளவோ - எம்மருகனுடைய அழகிய பெயரைத் தம்முடையனவாக மேற்கொள்ளாத பிறசமயக் கடவுளரும் உளரோ? இலர்; என்றுள் என்க.

(வி - ம்.) பூர்ப்பம் - பூருவாகமம். சுதக்கடலாகிய நூலிற் கூறப்பட்ட விதிகளைச் சார்த்திப் பிறவாத தவமென்க. அருகன் பயந்த நூலிற் கூறப்பட்ட ஒழுக்கங்களை மேற்கொள்ளாதவழி தவம் பிறத்தற் கிடனில்லை என்பது கருத்து. பரசமயர் தவநெறி என அதிகாரத்தால் வருவித்தோதுக. தீர்த்தன் - அருகன்; தூயோன் என்னும் பொருட்டு.

அருகனுடைய திருப்பெயரை ஏனைய சமயக் கடவுளரும் மேற்கொண்டு திகழ்வாராயினர், அத்துணைச் சிறப்புடையன அப்பெயர்கள் என்றவாறு. இனி அருகக் கடவுளின் திருப்பெயர்களை ஓதியே ஏனைய தெய்வங்களுஞ் சிறப்பனவாயின எனினுமாம். அத்திருப்பெயர்கள் வருமாறு :—

"அறிவன் அறவோன் அறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
தரும முதல்வன் தலைவன் தருமன்
பொருளன் புனிதன் புராணன் புலவன்
சினவரன் தேவன் சிவகதி நாயகன்
பரமன் குணவதன் பரத்தி லொளியோன்
தத்துவன் சாதுவன் சாரணன் காரணன்
சித்தன் பெரியவன் செம்மல் திகழொளி
இறைவன் குரவன் இயல்குண னெங்கோன்
குறைவில் புகழோன் குணப்பெருங் கோமான்
சங்கரன் ஈசன் சயம்பு சதுமுகன்
அங்கம் பயந்தோன் அருகன் அருண்முனி
பண்ணவன் எண்குணன் பாத்தில் பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன் விளங்கொளி"
(சிலப் - ௧0 : ௧௭௬ - ௮௧)

என்பன முதலியன; இவை பெரும்பாலன எல்லாத் தேவுகட்கும் பொருந்துதலறிக. (௧)

௧௩௨. புலவ னுரைத்த புறக்கேள்வி சாரா
துலக நவின்றுரைக்கு மோத்தெங் குளதோ
வுலக நவின்றுரைக்கு மோத்தேயு மன்றிப்
பலவும் பகர்வாப் பயந்தனவே யன்றே.

(இ - ள்.) புலவன் உரைத்த புறக்கேள்வி சாராது-அருகக் கடவுள் திருவாய் மலர்ந்தருளிய பகிராகமத்தைத் தழுவாமல்; உலகம் நவின்று உரைக்கும் ஒத்து எங்கு உளதோ - சான்றோர் பயின்று கூறும் மெய்ந்நூல்தான் எவ்விடத்தேனும் உளதேயோ?;

உலகம் நவின்று உரைக்கும் ஓத்தேயுமன்றி - சான்றோர் பயின்றே தும் நூலேயல்லாமலும்; பகர்வு ஆ பயந்தனவே அன்றோ - பிற நூல்களும் அதன் கூறுகச் செய்யப்பட்டனவேயன்றோ? என்றாள் என்க.

(வி - ம்.) புறக்கேள்வி என்றது பகிராகமத்தை, புலவன் : அருகன்.

புலவன் அருளிய புறக்கேள்வியைத் தழுவியே உலகத்துச் சான்றோர் பற்பல நூல்கள் செய்வாராயினர்; பிற நூல்களும் அந் நூலினின்றும் தோன்றியனவே என்றவாறு. (ச)

சசரு. அலரோடு சாந்த மணிந்தெம் மிறைவர்
மலரடியை யல்லதியா மற்றறிவ தில்லை
மற்றறிவ தில்லாத வெம்மை மலரடிகண்
முற்றவே செய்து முடிவிக்கு மன்றே.

(இ - ள்.) யாம் எம் இறைவர் மலர் அடியை அலரோடு சாந்தம் அணிந்து அல்லது - யாம் எப்பொழுதும் எங்களருகக் கடவுளின் செந்தாமரை மலர் போன்ற திருவடிக்கு மலரும் சந்தனமும் அணிந்து, அவ்வடிகளை வழிபாடு செய்வதல்லது; மற்று அறிவது இல்லை - பிறிதொரு தேவரடிகளை வழிபாடு செய்வதிலேம்; மற்று அறிவது இல்லாத எம்மை - இங்ஙனம் வேறொரு தெய்வத்தையும் அறிவதில்லாத எளியேமை; மலர் அடிகள - அருகனுடைய அம்மலரடிகள்; முற்றவே செய்து முடிவிக்கும் - எம் விருப்பங்கள் நிறைவேறச் செய்து முடிவித்தல் ஒருதலை என்றாள் என்க.

(வி - ம்.) அலர் - மலர். சாந்தம் - சந்தனம். இறைவர் - அருகக் கடவுள்; தான் மேற்கொண்டு செல்லும் காரியம் வெற்றியுடன் முடியும் என்பது கருத்து. (ரு)

சசச. புனையுலகிற் காதிய புங்கவ ஞர்த
மிணையடியை யல்லதியா மின்புறுவ தில்லை
இன்புறுவ தில்லாத வெம்மை யிணையடிக
டுன்புறவி லக்கதியுட் டோற்றுவிக்கு மன்றே.

(இ - ள்.) யாம் புங்கவனார் தம் - யாம் எம்மருகக் கடவுளுடைய; புனை உலகிற்கு ஆதிய இணை அடியை அல்லது - அணி செய்யப்பட்ட உலகங்கட்கெல்லாம் முதன்மையுடைய இரண்டாகிய திருவடிகளை நினைந்து இன்புறுதலேயன்றி; இன்புறுவதில்லை - வேறெவ்வாற்றானும் இன்புறுவதிலேம்; இன்புறுவது இல்லாத எம்மை - இங்ஙனம் வேறெவ்வாற்றானும் இன்புறுதலில்லாத எளியேமை; இணையடிகள் - அத்திருவடிகள்; துன்பு உறவு இல்

அக்கதியுள் தோற்றுவிக்கும் - ஒருபொழுதும் துன்பமுறுதலில்லாத சிறப்பினையுடைய சிவகதியின்கண் சேர்ப்பித்தல் ஒருதலை; என்றாள் என்க.

(வி - ம்.) புங்கவனார் அடி, புனை அடி, ஆதிய அடி, இணையடி எனத் தனித்தனி கூட்டுக. அடியை நினைந்தின்புறுவதல்லது மற்றொரு தெய்வத்தை நினைந்தின்புறுவதில்லை எனினுமாம். துன்புறவு - துன்பமுறுதல். கதி - சிவகதி. அஃதாவது வீடு பேறு. (௬)

௬௬௫. இரவிடைநன் மணிபோலு மெண்ணா துணர்ந்தான்
திருவடியே யல்லதென் சிந்தனையி லில்லைச்
சிந்தனையோன் றில்லாத வெம்மைத் திருவடிக
ளந்திணையில் பேராற்ற லாக்குவிக்கு மன்றே.

(இ - ள்.) இரவு இடை நல்மணி போலும் - இரவின்கண் தன்னியல்பாலே சுடர்வீசித் திகழாநின்ற மணியைப் போன்று; எண்ணாது உணர்ந்தான் - ஆராயாது தன்னியல்பாகவே உணருகின்ற அருகக் கடவுளின்; திருவடியே அல்லது என் சிந்தனையில் இல்லை - திருவடிகளைச் சிந்தித்திருப்பதல்லது என் நெஞ்சத்தே பிறிதொரு சிந்தனை இல்லை; சிந்தனை ஒன்று இல்லாத எம்மை - இங்ஙனம் பிறிதொரு சிந்தனையுமில்லாத எளியேமை; திருவடிகள் அந்து இணையில் பேர் ஆற்றல் ஆக்குவிக்கும் - அந்நெஞ்சத்தில் ஒப்பற்ற பேராற்றலை அத்திருவடிகள் உண்டாக்குதல் ஒருதலை என்றாள் என்க.

(வி - ம்.) மேலே வேறு சமயக்கணக்கரோடு சொற்போர் புரியக் கருதிச் செல்கின்றமையால் அதற்கின்றியமையாப் பேராற்றலை அவ்வடிகள் ஆக்குவிக்கும் என்றாள். அஃது அந்து எனத் திரிந்தது. மேல் வந்த ௫, ௬, ௭ ஆம் செய்யுட் கருத்தோடு,

"காவுந் திகைதன் கைதலை மேற்கொண்டு
ஒருமூன் றவித்தோ னோதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா
காமனை வென்றோ னாயிரத் தெட்டு
நாம மல்லது நவிலா தென்னா
ஐவரை வென்றோ னடியிணை யல்லதென்
கைவரைக் காணினும் காணா வென்கண்
அருளறம் பூண்டோன் திருமெய்க் கல்லதென்
பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தாது
அருக ரறவ னறிவோற் கல்லதென்
இருகையுங் கூடி யொருவழிக் குவியா
மலர்மிசை நடந்தோன் மலரடி யல்லதென்
தலைமிசை யுச்சி தானணிப் பொறாஅ

திறுதியி லின்பத் திறைமொழிக் கல்லது
மறுதர வோதியென் மனம்புடை பெயராது
என்றவ னிசைமொழி யேத்த'' (சிலப் : கo-கசுடு - உoஅ.)

என வரும் கவுந்தியடிகள் கூற்றையும் ஒப்பு நோக்குக. (எ)

நீலகேசி உறையூரினின்றும் சமதண்டம் என்னும் ஊரையடைதல்

வேறு

சுசுஅ. தொக்குட னுயவென் றொல்வினை தீர்கென
முக்குடை யானடி மூன்றினும் வந்தித்துக்
குக்குட மாநகர் நின்று கொடிமினிற்
றக்கதிற் றான்போய்ச் சமதண்டம் புக்காள்.

(இ - ள்) தொக்கு உடன் ஆய என் தொல் வினை தீர்க என - இவ்வாறு இறைவனை வாழ்த்தி நீலகேசி ஒருங்கு கூடி என்னுடனிருக்கின்ற எனது பழவினை கெடுவதாகவென்று வேண்டி; மூன்றினும் - மனமொழி மெய்களாலே; முக்குடையான் அடி வந்தித்து - முக்குடை நீழலிலெழுந்தருளிய அருகக் கடவுளின் திருவடிகளை வணங்கி; குக்குடமாநகர் நின்று - உறையூரினின்றும்; தக்கதின் - தான் செல்லத்தகுந்த வான் வழியே; கொடி மினின் - கொடி மின்னல் போன்று; தான் போய்ச் சமதண்டம் புக்காள் - தான் சென்று 'சமதண்டம்' என்னும் ஊரையடைந்தாள் என்க.

(வி - ம்.) தொக்கு - கூடி. தொல்வினை - பழவினை. மூன்றினும் - மனம் மொழி மெய் என்னும் மூன்றனும். வந்தித்து - வணங்கி. குக்குட மாநகர் - உறையூர். இதனால் நீலகேசி கபிலபுரத்தினின்றும் வான் வழியாக உறையூர் எய்தி ஆண்டுக் கோயில் கொண்டிருந்த அருகக்கடவுளை வணங்கிப் பின்னரும் வானின் வழிச் சமதண்டம் என்னும் ஊர் எய்தினள் என்பது பெற்றாம். (அ)

நீலகேசி சமதண்டத்தில் உள்ள துறவோரைக் கண்டு வினுதல்

சுசுஎ. ஈண்டி யிருந்த விலிங்கியர் தங்கட்கு
மாண்ட துகிலல்குல் மாதரிது சொல்லும்
காண்டற் கினிதே கடிமலர்ப் பூம்பள்ளி
யீண்டுறை வாரிவர் யாவர்கொ லென்றாள்.

(இ - ள்.) மாண்ட துகில் அல்குல் மாதர் - மாட்சிமையுடைய ஆடையணிந்த அல்குலினையுடைய நீலகேசி; ஈண்டியிருந்த இலிங்கியர் தங்கட்கு - ஆங்கொரு பள்ளி முன்றிலிலே கூடியிருந்த துறவோரை நோக்கி; இது சொல்லும் - இம்மொழிகளைக் கூறு

வான்; கடிமலர்ப் பூம்பள்ளி காண்டற்கு இனிது - துறவோரே மணங்கமழும் மலர்க்கொடிகள் படர்ந்த இத்தவப்பள்ளி காண்டற்குப் பெரிதும் இன்பம் தருவ தொன்றாயிருந்தது; ஈண்டு உறைவார் இவர் யாவர் கொல் என்றாள் - இப்பள்ளியிலே உறைவோர் யாவரோ? எமக்கு அறிவியுங்கோள் என்று வினவினள்; என்க.

(வி - ம்.) இலிங்கியர் - துறவோர். மாதர் : நீலகேசி. கடி - மணம். உறைவாரிவர் : ஒருசொல். (௯)

துறவோர் விடை

௩௩௮. காரணம் வேண்டாக் கடவுட் குழாந்தன்னிற்
பேருணர் வெய்திப் பெரிதும் பெரியவன்
பூரண னென்பான் பொருவறக் கற்றவ
ளாரணங் கன்னாட் கறிய வுரைக்கும்.

(இ - ள்.) காரணம் வேண்டாக் கடவுள் குழாந்தன்னில் - காரணத்தாலே காரியம் நிகழும் என்று கொள்வதில்லாத அந்த ஆசீவக சமயத்துறவோருள் வைத்து; பேர் உணர்வு எய்திப் பெரிதும் பெரியவன் - மிக்க சமய உணர்வு கைவந்தமையாலே ஏனையோர்க் கெல்லாந் தலைவனாகியவனும்; பூரணன் என்பான் - அக் காரணத்தாலேயே 'பூரணன்' என்னும் பெயர் பெற்றவனும்; பொருவு அறக் கற்றவன் - தன்னை நிகர்ப்போரிலாதபடி ஆசீவக நூல்களைக் கற்றுணர்ந்தவனும் ஆகிய ஒரு துறவோன்; ஆரணங்கு அன்னாட்கு - தெய்வப்பெண்ணாகிய அந் நீலகேசிக்கு- அறிய உரைக்கும் - நன்குணரும்படி கூறுவான்; என்க.

(வி - ம்.) காரணம் வேண்டாக் கடவுட் குழாம் என்ற அடைமொழியானும் ஆசீவகசமயத்திற்கு ஒரு குற்றம் கூறியபடியாம். கடவுள் - துறவி. உணர்வு - ஈண்டு ஆசீவகசமயவுணர்ச்சி. பொருவு - ஒப்பு. ஆரணங்காகிய அவட்கு என்க. அன்னாள் - அந் நீலகேசி. (௧0)

இதுவுமது

௩௩௯. புயலிருங் கூந்தற் பொலங்கொடி யன்னா
யயலியர் தாமல்ல வாசீ வகர்கள்
வியலிடத் தியாரும் வியக்குந் தகையார்
மயலறு காட்சியிம் மாதவ ரென்றான்.

(இ - ள்.) புயல் இருங்கூந்தல் பொலம் கொடி அன்னாய்- முகில்போலுங் கரிய கூந்தலையுடைய பொன்கொடி போன்ற நங்காய்! கேள்; அயலியர் தாம் அல்ல - இப்பள்ளியிலுறைவோர் வேறு சமயத்தோரல்லர்; மயல் அறு காட்சி இம்மாதவர் - மயக்

கந்தீர்ந்த மெய்க்காட்சியினையுடைய பெரிய தவத்தினையுடைய இவ ரெல்லாம்; ஆசிவகர்கள்-ஆசிவக சமயத்துத் துறவோரேகாண் !; வியலிடத்து யாரும் வியக்கும் தகையர் - அகன்ற உலகின்கண் உள்ள எத்தகையோரும் வியந்து பாராட்டுதற்குரிய தகுதியுடை யோருமாவர்காண்!; என்றான் - என்றுணர்த்தினன்; என்க.

(வி - ம்.) பொலம் - பொன். அயலியர் -பிறர். ஆசிவகரும் சமண சமயத்தினரேயாதலால், நீலகேசியைச் சமண சமயஞ் சார்ந்தவள் என்றுணர்ந்து இவர் அயலியர் அல்ல என்றான் என்பது கருத்து. ஆசிவகர் திகம்பரத்துவத்தால் ஒத்து அநேகாந்தவாதத்தில் ஒவ்வாத இருவகைச் சமண சமயத்தோர். (கக)

நீலகேசி வினவுதல்

௬௭0. ஆத்தனு நூலும் பொருளு நிகழ்ச்சியும்
பாத்தன சொல்லப் பயம்பெரி தாகலி
னோத்துரை யேயிங் குரையென் றுரைத்தனள்
சாத்திரம் யாவையுந் தன்னிக ரில்லாள்.

(இ - ள்.) சாத்திரம் யாவையும் தன்னிகர் இல்லாள் - எம் மெய்ந்நூலுணர்ச்சியின்கண்ணும் தனக்கு ஒப்பாரையிலாத நீலகேசி மீண்டும் அப்பூரணனை நோக்கி, ஆத்தனும் நூலும் பொருளும் நிகழ்ச்சியும் - அங்ஙனமாயின் நன்று! ஐய நின் னுடைய ஆசீவகசமயத் தலைவனையும் அச்சமயத்துப் பொருளையும் நிகழ்ச்சிகளையும் ; பாத்தன சொலப் பயம் பெரிது ஆகலின் - பகுத்துக் கூறின் அதனாலுண்டாகும் பயன் பெரிதாகலான்; ஓத்து உரையே இங்கு உரை என்று உரைத்தனள் - நின் நூல் கூறு மாறே நீ இவ்விடத்தே எனக்குச் சொல்லுவாயாக! என்றனள் ; என்க.

(வி - ம்.) ஆத்தன் - தலைவன். நிகழ்ச்சி - பொருணிகழ்ச்சிகள். நின்னுடைய சமயம் பற்றி ஈண்டியாம் ஆராய்தற்கு நீ அச்சமயத்தைத் தோற்றுவித்த தலைவனையும் அவன் கூறிய தத்துவங்களையும் அவற்றால் நிகழும் நிகழ்ச்சிகளையும் கேட்டல் பெரிதும் பயன்தருமாகலின் அவற்றை ஓதுக! என்று கூறினள் என்றவாறு. (கஉ)

பூரணன் கூற்று

௬௭க. என்றலு மற்கலி தானே யிறையினி
யொன்பது வாங்கதிர் நூல்யா முடையன
மன்பெறு நுண்பொரு ளைந்தியல் பாயவை
யென்ப நிகழ்ச்சியுங் காழ்ப்பா டெனச்சொல.

(இ - ள்.) என்றலும் - நீலகேசி அங்ஙனங் கூறக்கேட்ட பூரணன்: இறை மற்கலி - எமது சமயமுதல்வன் மற்கலி என்னும்

பெயருடையன்காண்!; யாமுடையன நூல் ஒன்பது கதிர் - அவன் ஓதிய எமது சமயநூல் நவகதிர் எனப்படும்!; மன்பெறு நுண்பொருள் ஐந்து - நிலைபேறுடைய நிலவணு நீரணு தீயணு காற்றணு உயிரணு என்னும் நுண்ணிய அணுக்கள் ஐந்துமே எந்தலைவன் கண்டுணர்த்திய பொருள்களாம்; அவை இயல்பு - அப்பொருள்கள் என்றுமியல்பாயுள்ளனகாண்; நிகழ்ச்சியும் காழ் பாடு என்ப - இனி நிகழ்ச்சிகள் தாமும் காழ்கொண்டு ஆழ்தலும் இசைய்மையுற்று மிதத்தலும் என்று ஓதுப; எனச் சொல-என்று அவையிற்றை வகுத்தோதாநிற்ப; என்க.

(வி - ம்) மற்கலி என்பவன் எம்மிறைவன்; ஒன்பது கதிர் எமக்கு நூல்; பெரிதும் நுணுகிய நிலவணு முதலிய ஐந்தணுக்களும் எமக்குப் பொருளாம்; உள்ளது கெடாது இல்லது தோன்றாதாகலான் இவை என்றும் இயல்பாகவேயுள்ளனவாம்; ஆழ்தலும் மிதத்தலும் இவற்றின் நிகழ்ச்சிகள் காண்! என்றான் என்றவாறு.

"மற்கலி நூலின் வகையிது" என மணிமேகலையினும் (உள: கசுரு) வருதல் காண்க. இன்னும்,

"ஆசீ வக நூ லறிந்த பூரணனைப்
பேசுநின் னிறையார் நூற் பொருள் யாதென
எல்லையில் பொருள்களில் எங்குமெப் பொழுதும்
புல்லிக் கிடந்து புலப்படுகின்ற
வரம்பில் அறிவன் இறை நூற் பொருள்கள் ஐந்து"
(மணி - உள: கO௮-கஉ)

எனவும்,

"ஆதியில்லாப் பரமாணுக்கள்" (மணி - உள: கஉசு)

எனவும்,

"வற்ப மாகி யுறுநிலந் தாழ்ந்து
சொற்படு சீதத் தொடுசுவை யுடைத்தாய்
இழினென நிலஞ்சேர்ந்து ஆழ்வது" (மணி - உள: கஉO-உ)

எனவும்,

"நீர்தீ, தெறுதலு மேற்சேர் இயல்பு முடைத்தாம்"
(உள-கஉஉ-௩.)
(கக)

எனவும், வருதலுங்காண்க.

இதுவுமது

வேறு

சுஎஉ. அழிந்தா னிறைவ னவனு குதலாற்
செழிந்தான் பெரிதுஞ் செழியா துரைப்பி
னெழிந்தா னனைய வியல்பா குதலான்
மழிந்தான் றடுமோற் றகத்தே மயங்கி.

(இ - ள்.) இறைவன் அவன் அறிந்தான் ஆகுதலால் - எம்மிறைவனுகிய அம்மற்கலி முழுது முணர்ந்தவன் ஆதலாலே; செறிந்தான் - வாய்வாளாதடங்கியிருப்பவன் ஆயினன்; செறியாது உரைப்பின் - அவன் அவ்வாறு வாயடங்காது பேசின்; எறிந்தான் அனையன் இயல்பு ஆகுதலான் - உயிரினங்களை வாளாலெறிந்து கொன்றுஒரு தீவினையாளன் போலத் தீவினை வந்தெய்துமாதலின்; மயங்கித் தடுமாற்று அகத்தே மறிந்தான் - மயங்கித் தடுமாற்றந்தரும் பிறப்பின்கண் மீண்டான் ஆகுவன் அல்லனே? என்றான் என்க.

(வி - ம்.) இறைவன் முழுதுமுணர்ந்தானுகுதலான் மிகவும் செறிவுடையனுகிப் போக்குவரவில்லானு யிருத்தலின் பேசான்; பேசின் அவன் பேச்சாலறையுண்டு உயிர்கள் சாம். அத்தீவினையாலவன் மீண்டும் பிறப்பெய்துவ னல்லனே என்றான் என்றவாறு.

பேசாமைக்குக் காரணம் கூறுவான் உரைப்பின் எறிந்தான் அனையன் என்றான். (கச)

இதுவுமது

சுஎரு. உரையா னிறைவ னுணலு மிலனாய்த்
திரையா னரையான் றெரிவில் லுருவம்
வரையா வகைவா னிடுவில் லனையன்
புரையா வறிவிற் புகழ்பூ ரணனே.

(இ - ள்.) உரையான் இறைவன் உணலும் இலன் ஆய் - மேற்கூறியாங்குப் பேச்சிலாதானுகிய எம்மிறைவன் நுகர்தலும் இலனாகி, திரையான் நரையான் - உடல் திரைதலும மயிர் நரைத்தலும் இலனாவான்; உருவம் வரையாவகை வான் இடுவில் அனையன் - அவனது திருவுருவமோ எழுதொணு எழிலுடைய தாய் வானத்தே தோன்றும் விற்போல வரவறியாத் தன்மையனுமாவான்; புரையா அறிவில் புகழ் பூரணன் - குற்றமில்லாத மெய்யறிவினாலே சான்றோர் புகழும் நிறைவுடையவனுமாவான் என்றான் என்க.

(வி - ம்.) எம்மிறைவன் பேச்சிலானுதலோடு நுகர்ச்சியுமிலன்; நரைதிரையுடையானுமல்லன். அழகிய திருமேனி யுடையான்; அவன் தோற்றம் வானவில்லின் தோற்றம்போல யாரானும் அறியொணுதது. மெய்யறிவானிறைந்தவன் என்றான் என்றவாறு. பூரணன் என்னும் பெயரையுடையான் என்பர் உரையாசிரியர். உணல் - நுகர்ச்சி. அஃதாவது பொறிகளாலே புலன்களை நுகர்தல். உணல் - புத்தி என்பர் உரையாசிரியர். உருவம் வானிடு வில்அனையன் - என்றது எம்மிறைவன் தனதுருவத்தாலே வானவில்லை ஒப்பாகுவன். வானவில் ஒருவராலும் தோற்றுவிக்கப்படாது தானே தோற்றுதலானும் உவமையாயிற்று. (கரு)

நூலும் பொருளும்

௩௭௪. அடங்கல் குறிக்கோண் முதலா யினவாய்க்
கிடந்த கதிருட் கிளந்த பொருளுந்
தொடங்கி யுரையாந் தொகையா குவதே
யுடங்கே யணுவைந் துருவா யுளவே.

(இ - ள்.) *அடங்கல் குறிக்கோள் முதலாயினவாய்க் கிடந்த-அடக்கமும் குறிக்கோளும் பிறவுமாய்க் கிடந்தனவாகிய; கதிருள் இளந்த பொருள் - எம ஒன்பது கதிர் நூல்களிலே கூறப்பட்ட பொருள்களை; நாம் தொகையாகுவதே தொடங்கி உரையாம் - இனி யாம் தொகை வகையாற் கூறவேண்டாமையின் கூறேம் விரிவகையாற் கூறுவேங்காண்!; அணு ஐந்தும் உடங்கு உருவாய் உள - ஒருங்கே நிலவணு, நீரணு, தீயணு, காற்றணு, உயிரணு என்னும் அவ்வைந்து பொருளும் உருவப் பொருளாயுள்ளன காண்! என்றான் என்க.*

(வி-ம்.) *அடக்கம் குறிக்கோள் முதலியவற்றைக் கூறுகின்ற ஒன்பது கதிர் நூலுள்ளே கூறப்பட்ட பொருள் முன்பு தொகை வகையாற் கூறினும். இனி, விரிவகையாற் கூறுவேங்கேள், அவ்வைந்தும் நில முதலிய உருவப் பொருளாகவுள்ளன காண் என்றவாறு.* (௧௬)

நில முதலியவற்றின் இயல்பும் பாலும்

௩௭௫. நிலநீ ரெரிகாற் றுயிரி னியல்பும்
பலநீ ரவற்றின் படுபா லவைதாம்
புலமா கொலியொன் றொழிய முதற்காஞ்
சலமா யதுதண் மையையே முதலாம்.

(இ - ள்.) *நிலம் நீர் எரி காற்று உயிரின் இயல்பும் - நிலம் நீர் தீ காற்று உயிர் என்னும் இப்பொருள்களின் இயல்பும்; படுபால் அவைதாம் பல-தோனறும் பாலும் பலவாகும்; அவற்றின் - அப்பால்களுள்; முதற்கு - முற்கூறப்பட்ட நிலத்திற்கு; புலம் ஆகு ஒலி ஒன்று ஒழிய ஆம் - செவிப் புலமாகின்ற ஓசையொழிய ஏனைய ஊறு உருவம் சுவை நாற்றம் என்னும் நான்கு பாலுமுரியவாம்; சலம் ஆயது - இனி நீரின் பால்; தண்மை முதல் ஆம் - குளிர்ச்சி முதலியனவாம்; என்றான் எனக.*

(வி - ம்.) *இயல்பும் படுபாலவை பல என இயைக்க. அவற்றின் முதற்கு...ஆம் எனவும் கூட்டுக. சலம் - நீர்.*

*நிலமுதலாகச் சொல்லப்பட்ட பொருள்களின் இயல்பும் பாலும் பல. அவற்றுள் நிலப்பாலாவன :- ஊறு உருவம் சுவை நாற்றம் என்னும் நான்குமாம். நீர்ப்பால்:-தண்மை முதலியன என்றவாறு.*
(௧௭)

இதுவுமது

௬௭௬. எறித்தன் முதலா யினதீ யினவாம்
செறித்த லிரையோ டிவைகாற் றினவா
மறித்தல் லறிதல் லவைதா முயிராம்
குறித்த பொருளின் குணமா லிவையே.

(இ - ள்.) *தீயின - தீயின் பால்கள்; எறித்தல் முதல் ஆயின ஆம் - சுடுதல் முதலியனவாம்; காற்றின - காற்றின் பாலகள் ; செறித்தல் இரையோடு இவை ஆம் - அறைதலும் இரைதலும் என்னும் இவையாகும்; உயிர் - உயிரின் பால்கள்; அறிதல் அறித்தல் அவைதாம் ஆம் - அறிதலும் அறிவித்தலும் என்னுமிவை களாம்; இவை குறித்த பொருளின் குணம் - இவை யெல்லாம் மூன்பு கூறப்பட்ட பொருளின் இயல்புகளாம் என்றான் என்க.*

(வி - ம்.) *எறித்தல் - சுடுதல். செறித்தல் - அறைதல்; தாக்குதல். இரை - இரைதல் ; ஒலித்தல். அறித்தல் - அறிவித்தல். குணம் - இயல்பு.*

*சுடுதல் முதலாயின தீப்பால்; அறைதலும் ஒலித்தலும் காற்றின் பால்; அறிதலும் அறிவித்தலும் உயிரின்பால். இவையெல்லாம் எம் பொருளின் குணங்கள் என்றான் என்றவாறு.* (கஅ)

இதுவுமது

௬௭௭. அணுமே யினவைந் தவைதா மனைத்துங்
குணமே யிலவாங் குழுவும் பிரியு
முணன்மே யினுமுள் புகுதல் லுரையேங்
கணமே யெனினும் மொருகா லமிலை

(இ - ள்.) *அணு மேயின ஐந்து அவைதாம் அனைத்தும் - அணுக் கூட்டமாகிய நிலமுதலிய ஐந்து பொருள்களும்; குணம் இல - குணம் உடையன எனினும் குணமும் குணியுமாகக் கொள்கிலேமாகலின் எமக்குக் குணமும் குணியும் ஒன்றேயாம் குணங்களை வேறாக அவையுடையன அல்ல வென்பேம்; குழுவும் பிரியும் - இவ்வணுக்கள் தம்முட் கூடும்; பிரிவதுஞ் செய்யும்; உணல் மேயினும் - ஒன்றனுள் ஒன்று அடங்கினும்; உள்புகுதல் உரையேம் - ஒன்றனுள் ஒன்று புக்கடங்குவதாகக் கூறேங்காண் !; கணம் எனினும் - கணம் முதலியனவற்றை யாங்கள் கூறினும் ; ஒரு காலம் இலை - காலமென்பதொரு பொருளுண்டென்று கொள் கிலேம்; என்றான்; என்க.*

(வி - ம்.) *அணு - நிலவணு முதலியன. குணம் என்னினும் அவற் றைப் பொருளின் வேறாகக் கொள்கிலேம். பொருளினியல்பென்று*

கொள்வேம். உணல் - ஒன்றை ஒன்றடக்குதல். கணம் சிறுபொழுது பெரும் பொழுது திங்கள் முதலிய கால வேறுபாடுகள் கூறினும் கால மென்றொரு பொருள் உளதாகக் கொள்ளேம் என்பது கருத்து. (௧௧)

இதுவுமது

௬௭௮. இவையே பொருள்கள் இவற்றி னியல்பும்
சவையே அறியச் சிலசாற் றுவன்கேள்
சுவையே யுடையம் மெனநீ யிகழல்
லவையே பிறரா லழிதற் கரிய.

(இ - ள்.) இவையே பொருள்கள் இவற்றின் இயல்பும் - நங்காய்! ஈண்டு யாங் கூறிய இவையே பொருள்களின் இயல்புக ளாகும்; சவை அறியச் சில சாற்றுவன் கேள் - இவ்வவையோ ரெல்லாம் அறியும்படி இன்னும் சில கூறுவேன் கேட்பாயாக!; சுவையே உடையம் என நீ இகழல் - இங்ஙனம் யாங்கள் இனிமை யுடையேமாய்ப் பேசுதல் காரணமாக எம்மை நீ எளியர் என இக ழாதே கொள்!; அவை - யாங்கூறிய அவ்வணுக்கள் ஐந்தும்; அழிதற்கு அரிய - அழிவில்லாதனவாகும் என்றுணர்க என்றான் என்க.

(வி - ம்.) அரும் பொருளாகிய இவற்றை யெல்லாம் யாம் நினக்கு எண் பொருளாகக் கூறுதல் காரணமாக எம்மை நீ எளியர் என்று நினை யற்க! என்பான், சுவையே யுடையம் என நீ இகழல் என்றான். அவை என்றது அணுக்களை. அருமை ஈண்டு இன்மை மேனின்றது.

இனி இப்பூரணன் கூறியாங்கே,

"அவ்வணு வுற்றுங் கண்டு முணர்ந்திடப்
பெய்வகை கூடிப் பிரிவதுஞ் செய்யும்
நிலநீர் தீக்காற் றெனநால் வகையின
மலைமர முடம்பெனத் திரள்வதுஞ் செய்யும்
வெவ்வே றாகி விரிவதுஞ் செய்யும்
அவ்வகை யறிவ துயிரெனப் படுமே
வற்ப மாகி யுறுநிலந் தாழ்ந்து
சொற்படு சீதத் தொடுசுவை யுடைத்தாய்
இழினென நிலஞ்சேர்ந் தாழ்வது நீர்தீத்
தெறுதலு மேற்சே றியல்பு முடைத்தாம்
காற்று விலங்கி யசைத்தல் கடனிவை
வேற்றியல் பெய்தும் விபரீ தத்தால்
ஆதி யில்லாப் பரமா ணுக்கள்
தீதுற் றியாவதுஞ் சிதைவது செய்யா
.................................."

உலாவுந் தாழு முயர்வதுஞ் செய்யும்
குலாமலை பிறவாக் கூடும் பலவும்
பின்னையும் பிரிந்துதந் தன்மைய வாகும்
மன்னிய வயிரமாய்ச் செறிந்துவற் பழுமாம்
வேயாய்த் துளைபடும் பொருளா முளைக்கும்
தேயா மதிபோற் செழுநில வரைப்பாம்
நிறைந்தவிவ் வணுக்கள் பூதமாய் நிகழிற்
குறைந்து மொத்துங் கூடா வரிசையின்
ஒன்று முக்கா லரைகா லாயுறும்
துன்றுமிக் கதனுற் பெயர்சொலப் படுமே
இக்குணத் தடைந்தா லல்லது நிலனுய்ச்
சிக்கென் பதுவும் நீரா யிழிவதும்
தீயாய்ச் சுடுவதுங் காற்றாய் வீசலும்
ஆய தொழிலை யடைந்திட மாட்டா" (மணி-உஎ:ககச-சஇ.)

என மணிமேகலையினும் கூறப்படுதலுணர்க. (உ0)

நீலகேசி பூரணன் கூற்றை வழிமொழிந்து கோடல்

வேறு

சுஎக. அண்ணலு நூலும் பொருளு
நிகழ்வு மிவையெனலு
மெண்ணினு மேனை யெழுத்தினு
மிக்காங் கிருந்தவர்முன்
கண்ணினு மன்றிக் கருத்தினும்
வேறெனக் காட்டலுற்றுப்
பண்ணலங் கொண்டசொல் லாளவை
பேர்த்தும் பகர்ந்தனளாய்.

(இ - ள்.) பண்நலம் கொண்ட சொல்லாள் - பண்ணினது இனிமையைத் தம்பாற் கொண்ட மொழிகளையுடைய நீலகேசியானவள்; அண்ணலும் நூலும் பொருளும் நிகழ்வும் இவை எனலும் - அந்த ஆசீவகத் துறவோன் இவ்வாறு அச்சமயத்தலைவனையும் நூலையும் பொருட்பாகுபாடுகளையும் அவற்றின்நிகழ்ச்சிகளையும் விரித்துக் கூறிய வளவிலே; ஆங்கு எண்ணினும் எழுத்தினும் மிக்கு இருந்தவர் முன் - அவ்விடத்தே எண்ணறிவானும் எழுத்தறிவானும் நிரம்பி யிருந்த சான்றோர் முன்னிலையிலே; கண்ணினும் அன்றி கருத்தினும் - காண்டலளவையானும் கருதலளவையானும் அப்பூரணன் மொழிகள் பொருந்தாமல்; வேறு எனக் காட்டல் உற்று - மாறுபாடுடையன வாதலைக் காட்டத்

தொடங்கி; அவை பேர்த்தும் பகர்ந்தனளாய் அவற்றைத் தானு
மொருமுறை வழிமொழிந்து கொண்டவளாய்; என்க.

(வி - ம்.) எண் - கணிதம்; எழுத்தென்றது - அவற்றுலாய நூல்
களை.

பூரணன், இவ்வாறு தலைவன் நூல் பொருள் நிகழ்வு என்பன
வற்றை விரித்து ஓதக்கேட்ட நீலகேசி, அவை அளவைகளோடு
பொருந்தாமை காட்டக் கருதி அவற்றை வழிமொழிந்து கொண்டன
ளாய் என்றவாறு. (உக)

## இதுவுமது

௬௮0. முற்ற வறிந்துரை யாதவன் மோனுந் திருந்தனனேற்
செற்றம் பேரிது முடையனச் சீவன்க டம்மொடெல்லா
மற்ற முடையவர் சொல்லின வாகம மன்மையினுற்
பெற்ற வகையென்னை பேதா யதனைப் பெயர்த்தேனவே.

(இ - ள்.) அவன் - நின்னாற் கூறப்பட்ட மற்கலி யென்னு
மத் தலைவன்; முற்ற அறிந்து உரையாது மோனுந்து இருந்தன
னேல் - முழுது முணர்ந்து வைத்தும் பிறர்க்கவற்றைக் கூருமல்
வாய் வாளாதிருப்பானுயின்; அச் சீவன்கள் தம்மொடு எல்லாம் -
அவனுலுணரப்பட்ட அந்த உயிர்களெல்லாவற்றின்பாலும் ;
பெரிதும் செற்றம் உடையன் - மிகவும் வெறுப்புடையனுதல்
வேண்டும்; அற்றம் உடையவர் சொல்லின ஆகமம் அன்மையினுல்-
இனி, காமவெகுளி மயக்க மென்னுங் குற்றமுடையோர் பிறர்
கூறியவை மெய்ந்நூல்கள் ஆகமாட்டாவாம்; ஆகவே; பேதாய்
அதனைப் பெற்ற வகை பெயர்த்து என்னை என - அந்நூலை நீ
பெற்றவாறு பிறிது யாதோ? கூறுதி என்று; கூறி என்க.

(வி - ம்.) மோனுந்திருத்தல் - வாய் பேசாதிருத்தல்.

எல்லாப் பொருள்களையும் அறிந்து வைத்தும் அசைவிலனுய் நின்
தலைவன் பேசாதிருப்பின் அவன் உயிர்களிடத்துச் செற்றமுடையனுதல்
வேண்டும், என்னை? தான் அறிந்த பொருளை அறியாத பிறர் வினவிய
விடத்தும் உரையாததும்; பிறர் வினவாதவிடத்தும் அவர்பாற் சென்று
உரைப்பதும் நிரலே பகைமை அருள் என்னுமிவற்றின் செயல்களே
யாதலின், இனி அவனுரையானுகின், வேறுசில மயக்கமுடையோர்
கூறுவனவும் நூல்களாகமாட்டா? ஆகவே நீ நூல்பெற்ற வழி யாது?
என்றவாறு. (உஉ)

## இதுவுமது

௬௮௧. ஒக்கலி யோகலி யென்றிரு தெய்வ முரைத்தனவேன்
மற்கலி யார்போ லறிந்தன வாயிற் செறிந்தனவாம்
தக்கில வேயறி யாதன சொல்லுத றத்துவத்தை
யிக்கலி யாள ருரைத்தவு மேதமே ஞய்பிறவோ.

(இ - ள்.) ஒக்கலி ஒகலி என்று இரு தெய்வம் உரைத்தன வேல் - இனி 'ஒக்கலி' 'ஒகலி' என்னும் இரண்டு தெய்வங்களும் எஞ்சமய நூல்களைச் செய்தருளின என்பாயாயின்; மற்கலியார் போல் அறிந்தனவாயின் - அத்தெய்வங்களிரண்டும் மற்கலியாரைப் போல முற்ற அறிந்தனவாயின்; செறிந்தனவாம் - அவையும் மற்கலியார் போலவே பேசாமலடங்குவனவாகும்; தக்கிலவே - அங்ஙனம் அறியுந் தகுதியிலவெனின்; அறியாதன சொல்லுதல் தத்துவத்தை - அறியாத அத்தெய்வங்கள் கூறியன தத்துவமாகக் கொண்ட நீ; இக்கலியாளர் உரைத்தவும் ஏதம் எனுய் - அங்ஙனமே அறியாதவராகிய இக்கலியூழிக்கண்ணவர் கூறியனவும் குற்றம் உடையன என்று கூறுதுகொள்! என்றாள் என்க.

(வி - ம்.) ஒக்கலி ஒகலி யென்னுமிரு தெய்வங்கள் கூறின என்று பூரணன் கூறினன் என்பது வழிமொழியுமாற்றாற் பெற்றாம்.

ஒக்கலி ஒகலி யென்னுமிரண்டு தெய்வங்களும் மற்கலியார் போல் முற்றறிவுடையனவாயின் ஊமைகளாயமையும். அறிவற்றன என்பாயாயின் அவற்றின் கூற்றைத் தத்துவமாகக் கொண்ட நீ இக்காலத்தறிவிலார் கூற்றையும் தத்துவமாகக் கொள்! என்றவாறு.

தத்துவத்தை - தத்துவமுடையை. (௨௧)

இதுவுமது

௬௮௨. அறிந்தா னறிந்தன தான்சொல்லி
னார்வச் சினத்தனனா
யெறிந்தா னனையதோ ரேதத்தை
யெய்துமவ் வேதத்தினன்
மறிந்தா னகன்றடு மாற்றத்
தகத்தேனின் மாண்புணர்ந்தாய்
செறிந்தாங் கிருக்கிற்பி னீயுஞ்சிற்
றுத்தனை யாகிற்றியே.

(இ - ள்.) அறிந்தான் அறிந்தன தான் சொல்லின் - முழுதுமுணர்ந்தவனாகிய தலைவன் தானறிந்தவற்றைத் தானே பிறர்க்குச் சொல்லுமிடத்தே; ஆர்வச் சினத்தனாய் - அன்பும் வெகுளியுமுடையனாகி; எறிந்தான் அனையதோர் ஏதத்தை எய்தும் - உயிர்களைக் கொன்றவன் போல்வதொரு தீவினையை எய்துவன்; அவ் ஏதத்தினன் - அந்தத் தீவினை காரணமாக; அகன் தடுமாற்றத்து அகத்து மறிந்தான் எனின் - விரிந்த பிறவியின்கண் மீண்டவன் ஆவன் என்கின்றனை; அங்ஙனங் கூறின்; மாண்பு உணர்ந்தாய் -

அவ்வடக்கத்தின் சிறப்பினை யுணர்ந்தாயல்லையோ?; நீயும் செறிந்து ஆங்கு இருப்பின் - நீதானும் அவன் போல் ஆன்றவிந்தடங்கிப் பேசாதிருப்பாயாயின்; சிறு ஆத்தன் ஆகிற்றி - ஒரு சிறிய சமயாசிரியன் ஆகிவிடுவையல்லையோ? என்றாள் என்க.

(வி - ம்.) நின் தலைவன் அறிந்து அடங்குந்துணையானே ஒரு சமயாசிரியனுஞ் சிறப்புடையன் ஆயின் நீயும் அங்ஙனமே அடங்கியிருந்து ஒரு சிறு சமயாசிரியனுகலாமே! என்று அசதியாடியபடியாம். (௨௪)

இதுவுமது

௬௮௬. ஆத்த னறிந்தன யாவையுஞ்
சொல்லல னுய்விடினிச்
சாத்தனும் யானு மவன்றன்னிற்
சால விசையுடைய
நாத்தனை யாட்டியோர் நன்மைகண்
டாலு நினக்குரைத்து
மீத்தன முண்டு மிருமைக்கு
மேத மிலம்பிறவோ.

(இ - ள்.) ஆத்தன் அறிந்தன யாவையும் சொல்லலன் ஆய்விடின் - பேதாய்! நின் தலைவன் தான் அறிந்தவற்றுள் எவற்றையும் பிறர்க்குச் சொல்லாதானுய்விடின்; அவன் தன்னின் சாத்தனும் யானும் சால இசையுடையம் - அந்த மற்கலியினுங் காட்டில் இதோவிருக்கின்ற இந்தச் சாத்தனும் யானும் மிகவும் புகழுடையேம் காண்! எற்றாலெனின்; ஓர் நன்மை கண்டாலும் - யாங்கள் எம்மாராய்ச்சியாலே ஒரு நல்லறத்தைக் கண்டாலும்; நாத்தனை யாட்டி நினக்கு உரைத்தும் - எங்கள் நாவினையசைத்து அந்த நல்லறத்தை உனக்கும் கூறுகின்றேம்; ஈத்தனம் உண்டும் - இன்னும் யாங்கள் ஒல்லும் வகையாலே பிறர்க்கு உணவு முதலியன வழங்கியே பின்னர் உண்கின்றேம்; இருமைக்கும் ஏதம் இலம் - இவ்வாற்றால் யாங்கள் இம்மை மறுமைகளுக்கு ஆக்கமுடையேம் அல்லமோ? ஆதலால் என்றாள் என்க.

(வி - ம்.) சாத்தன் - என்றது எதிர் இருந்தான் ஒருவனைச் சுட்டியவாறு; இந்தச் சாத்தனும் யானும் வாளாவிராது நாவால் பிறர்க்கு அறமுரைத்தலால் இசையுடையம் என்றவாறு.

அறிந்தவற்றைப் பிறர்க்குரையாது வாளா இருப்பவன் இம்மை மறுமையிரண்டனையும் இழந்தவனேயாவன். அவனைவிட எம்மனோர் சிறந்தோரே, எற்றாலெனின் இவர் தம் மொழி முதலியவற்றால் அறஞ்செய்து வாழ்தலின் என்றவாறு.

உண்டும் - உண்பேம். பிற, ஓ : அசைகள். (௨௫)

இதுவுமது

சுஅச. வானிடு வில்லின் வரவறி யாத வகையனென்பாய்
தானுடம் போடு பொறியின ளுதலிற் சாதகனு
மீனடைந் தோடும் விடுசுட ரான்கதிர் வீழ்புயன்மேற்
றனடைந் தாற்றனு வாமிது வாமதன் றத்துவமே.

(இ - ள்.) வான் இடு வில்லின் வரவு அறியாத வகையன் என்பாய் - பூரண! நீ நின் தலைவன் வானின்கண் தோன்றுகின்ற விற்போல பிறர் இவன் இவ்வாறு தோன்றினன் என்று அறிய வொண்ணுத தோற்றமுடையான் என்று கூறுகின்றனை; தான் உடம்போடு பொறியினன் ஆதலின் - அவன்றானும் ஏனைய மாந்தர் போல உடம்பும் மனமுதலிய கருவிகளும் உடையனுதலின் தாய் தந்தையர் வாயிலாய்; சாதகன் ஆம் - பிறப்பெய்தியவனே ஆதல் தேற்றம்; மீன் அடைந்து ஓடும் சுடரான் விடுகதிர் - இனி நீ கூறிய உவமைதானும் வரவறியப்படாததாஉமன்றே; என்னை? நாண்மீன்களோடு சேர்ந்தியங்கும் ஞாயிறு வீசாநின்ற ஒளிக்கதிர்கள்; விழ்புயல் மேல் அடைந்தால் - துளிவீழ்த்துகின்ற முகிலின் மேற்பட்டால்; தனுஆம் - வானவில் தோன்றுவதாகும்; அதன் தத்துவம் இதுஆம் - இதுவே வானவிற் றோற்றத்திற்குரிய காரணமாம் என்றுள என்க.

(வி - ம்.) எம்மிறைவன் வானவில் போலத் தான் றேன்றுமாறு அறியப்படாமற் றேன்றுவன் என்கின்றனை. அவன் உறுப்புக்களால் மக்களே போறலின் மக்களைப்போன்று தாய் தந்தையர் வழியாகப் பிறந்தவனே என்பது தேற்றம். மற்று நீ கூறும் வானவிற்றானும் ஞாயிற்றெளிமுகின் மேற்படுதலால் தோன்றுவதாம் அதன்வரவு அறியப் படாமை யாண்டையது? என்றவாறு.

நின் உவமையே நின்றலைவன் காரணத்தாற் பிறந்தவன் என் பதனை உணர்த்துகின்றது என்றவாறு. (உசு)

இதுவுமது

சுஅரு. முற்ற வறிந்தனன் யானென்று
மோனங்கொண் டேயிருந்தா
னற்ற மகலவேன் றனீ
யறிந்தமை யாதினினும்
பெற்ற வகையெனப் பேச்சின்மை
யாலெனிற் பிள்ளைகளும்
மற்றிம் மரமு மலையுமம்
மாண்பின வாம்பிறவோ.

(இ - ள்.) முற்ற அறிந்தனன் யான் என்று அற்றம் அகல
மோனம் கொண்டே இருந்தான் என்றால் - துறவியே! நின்
தலைவன் முழுதும் யான் அறிந்தேன் என்று தனக்குப் பிறப்
பென்னும் பிழை வாராமைப் பொருட்டுப் பேசாதடங்கியிருந்தான்
என்று கூறின்; அறிந்தமை நீ பெற்ற வகையாதினின் ஆம் என-
அவன் அங்ஙனம் முழுதும் அறிந்தமையை நீ எவ்வாற்றா
லுணர்ந்தனை? என யாங் கேட்ப; பேச்சு இன்மையால் எனின் -
அதற்கு நீ அவன் பேசுதல் இன்மையாலே உணர்ந்தேன்
என்பாயாயின்; இம்மரமும் மலையும் பிள்ளைகளும் அம்மாண்பின
ஆம் - பேசாதிருக்கின்ற இந்த மரங்களும் மலைகளும் பச்சிளங்
குழவிகளும் முழுதுமறியும் மாட்சிமையுடைய தலைவர்களேயாய்
விடும் அல்லவோ? என்றாள் என்க.

(வி - ம்.) நின் தலைவன் முழுதுமுணர்ந்து வாய் பேசாதடங்கி
யிருந்தான் என்றனை, அவன் பேசானாகவே முழுதுமுணர்ந்தான் என்று
நீ எவ்வாறறிந்தனை ? அவன் பேசாமையாலே யானறிந்தேன் என்பா
யாயின் பேசாத மரம் மலை குழவி இன்ன பிறவும் தலைவராய்விடும் ;
என்றவாறு. (௨௭)

இதுவுமது

௬௮௬. முடக்கு மேனினு நிமிர்க்கு
மேனினுந்தன் மூக்குயிர்த்து
நடக்கு மேனினு மிருக்கு
மேனினுந்த னல்லுறுப்பி
னடக்கு மியல்பல்ல னன்னவற்
றார்வத்த னாகுமன்றி
யுடக்கு மிவையில்லை யேலுயிர்
தானுண்மை யோட்டுவனே.

(இ - ள்.) முடக்கும் எனினும் நிமிர்க்கும் எனினும் - ஐய!
நின் தலைவன் தன் கைகால் முதலிய உறுப்புக்களை முடக்குவா
னாயினும் அன்றி நிமிர்த்துவானாயினும்; தன் மூக்கு உயிர்த்து
நடக்கும் எனினும் - அல்லது தன்மூக்கால் உயிர்த்து நடப்பா
னாயினும்; தன் நல்லுறுப்பின் அடக்கும் இயல்பு அல்லன்-அவன்
தன் நல்ல உறுப்புக்களின்றிறத்திலே அவற்றை அடக்குகின்ற
ஆற்றலுடையன் அல்லன் என்பதும்; அன்னவற்று ஆர்வத்தன்
ஆகும் - அச்செயல்களைச் செய்வதன்கண் அவாவுடையன் என்
பதும் தேற்றமாகுமன்றோ?; அன்றி உடக்கு இவை இல்லையேல் -
அங்ஙனமன்றி இச்செயலெல்லாம் ஒருங்கே அவன்பால் இல்லை
என்பாயாயின்; உயிர் உண்மைதான் ஒட்டுவனே - அவ்வழி

அவனுக்கு உயிருண்டென்பதனை யான் உடம்படேன் காண்; என்றாள் என்க.

(வி - ம்.) நின்றவிலவன் பேசின் அற்றம் வருமென்று வாளா விருப்பின் முடக்குதல் முதலிய இச்செயல்களையும் அவன் விரும்பியே செய்ய வேண்டுதலின் இவை செய்யவும் அற்றம் வரும். யாதொன்றும் செய்கிலன் என்பாயாயின், அவ்வழி அவன் உயிருடையன் என்பது பேதைமையே யாமென்றவாறு. (உஅ)

(இது நீலகேசியின் உட்கோள்)

வேறு

சுஅஎ. நிலப்பாலு நீர்ப்பாலுந் தீப்பாலும் காற்றின்
புலப்பாலு நெட்டுயிரின் போக்கில்லாப் பாலும்
சொலற்பால வல்லாத சொல்லுதலால் யானு
மலப்பா தொழியேனிவ் வாசீ வகனை
யருகிருந்தார் தாமறிய வாசீ வகனே.

(இ - ள்.) நிலப்பாலும் நீர்ப்பாலும் தீப்பாலும் - இவன் நிலத்தின் பால் என்றும் நீரின்பாலென்றும் தீயின்பாலென்றும்; காற்றின் புலப் பாலும் - காற்றிற் புலப்படும்பாலென்றும்; நெட்டுயிரின் போக்கு இல்லாப் பாலும் - நெடிய உயிரின் போக்குவரவு அற்ற பாலென்றும்; சொலற்பால அல்லாத சொல்லுதலால் - சான்றோர் பலரும் கூறும் பகுதியனவல்லாத சிலவற்றைப் படைத்துக் கொண்டு சொல்லுதலாலே; அருகு இருந்தார் தாம் அறிய ஆ சீவகனை - தன் பக்கலிலிருந்தார் பலரும் அறியும்படி தீய தொழில் பல செய்து உயிர்வாழ்பவனாகிய; இ ஆசீவகனை - இந்த ஆசீவக சமயத் துறவோனை; யானும் அலப்பாது ஒழியேன் - யானும் சொற்போரிட்டுத் துன்புறுத்தாமல் செல்வேனல்லேன் என்று தன்னுட் கருதினள் என்க.

(வி - ம்.) ஆசீவகர் - பொருள்களும் அவற்றின் பண்பும் என்னாமல், பொருள்களும் அவற்றின் பால்களும் என்பர். பால் - பகுதி. குணகுணிகளைப் பகுதியும் பொருளும் என்பர் என்க.

நிலப்பால் முதலியன ஏனைச் சமயத்தார் யாரும் சொல்லாதன வாகலின், சொலற்பால அல்ல சொல்லுதலால் என்றாள். எனவே இவ்வாறு கூறுதல் உலகமலைவாம் என்றாளாயிற்று. அலப்புதல் - அலைத்தல்; துன்புறுத்தல். அறிய ஆசீவகனை என்புழிப் பலருமறியத் தொழில் செய்து பிழைக்கின்றவனை என்பது பொருள் என்க. தொழிலாவது - மகளிரைக் கருவுடையராக்குதல் முதலியன.

இதனால், இவ்வாசீவக சமயத்துறவோர் மெய்யுணர்வின்மையால் துறவோர் வேடத்திருந்து தீவினை பலவுஞ் செய்பவர் என்று கருதினாளென்பது பெற்றாம். (உகூ)

நீலகேசி பூரணனை நோக்கிக் கூறல்

சுஅஅ. வண்ணாதி யெல்லாம் வகுப்பின் னிலப்பாலாம்
நண்ணாத மூன்றிற்கு நன்பால் பிறவாகிக்
கண்ணாதி யாலவற்றைக் காணப்பா டில்லையா
யெண்ணாதே யிந்தியக்கோ ளெய்தாமை வேண்டும்
எனைத்தும் பெறப்பாடு மில்லாத வேண்டும்.

(இ - ள்.) வகுப்பின் வண்ண ஆதி எல்லாம் நிலப்பால் ஆம் - பூரண! நீ வகுத்த முறையினாலே, நிறம் நாற்றம் சுவை ஊறு என்னும் இந்த நான்கும் நிலத்தின் பால்களாயின; நண்ணாத மூன்றிற்கும் நல் பால் பிற ஆகி - நிலத்தோடு கூட்டிக் கூறப் படாதொழிந்த நீர் தீ காற்று என்னும் இம்மூன்றிற்கும் நல்ல பால்கள் நிறமுதலிய அந்த நான்கிற்கும் வேறாயுளவாகி; கண் ஆதியால் அவற்றைக் காணப்பாடு இல்லையாய் - நீர் முதலிய அவை கண் முதலிய பொறிகளாலே காணப்படுவனவும் இல்லை யாகி; எண்ணாதே இந்தியக் கோள் எய்தாமை வேண்டும் - ஆகவே, ஆராயாமலே அவை கண்முதலியவற்றிற்குப் புலப்படாதொழிய வேண்டும்; எனைத்தும் பெறப்பாடும் இல்லாத வேண்டும் - வேண்டவே இவை எத்துணையும் பெறப்படுதல் இல்லாதனவும் ஆதல் வேண்டும். எனவே அவை இல்பொருள் போலும் என்றாள் என்க.

(வி - ம்.) நிறமுதலியவற்றை நிலத்துக்கே பாலாக வோதின மையின் அவை உயிரொழிந்த நீர் முதலிய பூதங்களுக்குப் பாலாகா வாதலின் அவை கண்முதலிய பொறிகளுக்குப் புலனாகா தொழிய வேண்டும். ஒழியவே அவற்றின் உண்மையும் பெறப்பாடிலதாக வேண்டும் என்றவாறு. (௯0)

இதுவுமது

சுஅசு. நீர்ப்பாலுந் தீப்பாலு நில்லா வளிப்பாலும்
பேர்ப்பாலே பற்றிப் பிறப்பிறவா நீபெருக்கி
யோர்ப்பி யாதுஞ்செய்யா துரைத்தா யுரைத்தமையிற்
கூர்ப்பியாது மின்றிநின் கோளழியு மன்றே
கொணர்ந்துநீ யைந்தென்ற கோளழியு மன்றே.

(இ - ள்.) நீ நீர்ப்பாலும் தீப்பாலும் நில்லா வளிப்பாலும் - ஐய நீ, நிற முதலியவற்றை நிலப்பால்களாக ஓதிவைத்து, நீர்ப் பாலும் தீப்பாலும் நில்லாதியங்குங் காற்றுப்பாலும்; பேர்ப்பால் பிறபிறவா - இவற்றிற்கு வேறாம் வழியாலே வேறு வேறாக ; பெருக்கிப்பற்றி ஓர்ப்பு யாதும் செய்யாது உரைத்தாய் - நிற

முதலியன நீர் முதலியவற்றினும் உளவாதல்பற்றி ஒரு சிறிதும் ஆராயாது கூறினை; உரைத்தமையின் - நீ அங்ஙனம் கூறின மையாலே; நின்கோள் கூர்ப்பு யாதும் இன்றி அழியும் - நின் மேற்கோள் உண்மை சிறிதுமின்றி அழிவதாம்; நீ கொணர்ந்து ஐந்து என்ற கோள் அழியும் - எங்ஙனமெனின் நீர் முதலிய வற்றிற்கும் நிறமுதலிய பாலுண்மையால் நிலமும் உயிரும் எனப் பொருளிரண்டேயாக நீ பொருள் ஐந்து என்று கூட்டிக் கொணர்ந்து கூறிய மேற்கோள் அழிவதாதலறிக; என்றாள் என்க.

(வி - ம்.) ஐய ! நிறமுதலிய நான்குபாலும் உள்ளது நிலமென்று நீ கூறினையல்லையோ ? நீர் முதலிய பூதங்களினும் இந்நிற முதலியன உளதாதலை ஆராயாது கூறினை போலும் ! அங்ஙனம் கூறினமையால் நிற முதலியன உள்ள நீர் முதலியவும் நிலமா யடங்கி நினக்கு நிலமும் உயிரும் எனப் பொருளிரண்டேயாகின்றன ; ஐந்தென்ற நின்மேற் கோள் குற்றமாயிற்று என்றவாறு. அன்றே இரண்டும் அசைகள்.
(கூக)

இதுவுமது

சுகூO. பொருடாமி வைந்தொழியப் போத்தந் துரைப்பா
யிருடாமி வைந்தனு ளேக்கூற்ற தாமோ
விருடாமி வைந்தனுளு மெக்கூற்று மில்லே
லருடாழ்ந்து நீயிருப்ப தியாதின்பா லாமோ
அணுமயமாங் கந்தங்க டாமனந்த மன்றே.

(இ - ள்.) பொருள்தாம் இவ்வைந்து ஒழிய - நீ பொருள் என்று கூறிய நிலமுதலிய இந்த ஐந்தனையும் ஒழிய; இருள் தான் - இருள் என்பதுமொரு பொருள் காண்டுமன்றே; ஐந்தனுள் எக் கூற்றதாம் - அவ்விருள் இவ்வைந்தனுள் எதன்பாற்படுமோ ?; போத்தந்து உரைப்பாய் - இதற்கு விடைகண்டு கொணர்ந்து கூறிக்காண்!; இருள் தாம் - அவ்விருள்; இ ஐந்தினுள் எக் கூற்றும் இல்லேல்-இந்த ஐந்து பொருள்களுள் வைத்து யாதின் பாலும் படாதென்பாயேல்; அருள் தாழ்ந்து நீ யிருப்பது யாதின் பால் ஆமோ - அருட்பண்பு குறைந்து நீ இப்பொழுதிருப்பது அவ்விருளிடத்தல்லது எதன் பாலிருக்கின்றாயோ ? கூறுதி ; அணுமயமாம் கந்தங்கள் தாம் அனந்தம் அன்றே? - அணுக் கூட்டங்களாகிய பிழம்புகள் எண்ணிறந்தனவல்லவோ? அங்ஙன மாகவும் ஐந்தென்றதென்னையோ? என்றாள் என்க.

(வி - ம்.) நின்னாற் சொல்லப்பட்ட பொருளைந்து மன்றி யிருளென்பதுமொரு பொருளுண்மையின் அது யாதின் பாற்படும் ? இவ்விருள் ஒன்றின் பாலும் படாதென்பாயாயின் நீ பேதையே யாகுதி. புற்கலக் கூட்டத்தானியன்ற பொருள்கள் எண்ணிறந்தன வாகவும் இங்ஙனம் நீ வரையறை செய்தற்குக் காரணமென்னை ? என்றவாறு.

நீ இப்பொழுது இருப்பது அறியாமையாகிய இருளினன்றோ? என்றசதியாடுவாள், நீயிருப்பது யாதின்பாலோ? என்று வினவினள். (௬௨)

இதுவுமது

௬௬௩. பலவாக நீசொன்ன பாலெல்லாந் தம்முட்
கலவாவா யப்பொருளே யாதலையுங் கண்டா
லுலவாதோ வொற்றுமையும் வேற்றுமையு மென்றாற்
சலவாதி யொன்றுஞ் சமழலையே கண்டாய்
சமத்திடை யொன்றுஞ் சமழலையே கண்டாய்.

(இ - ள்.) பலவாக நீ சொன்ன பால் எல்லாம் - ஒன்றற்கு நிற முதலிய பால் பலவாக நீ கூறியவெல்லாம்; கலவாவாய் - தம்முட் கலப்பில்லனவாய்; அப்பொருளே யாதலையுங் கண்டால் - அவ்வொருபொருளே யாகின்ற தன்மையினைக் காணுங்கால்; ஒற்றுமையும் வேற்றுமையும் உலவாதோ என்றால் - அவை பொருளால் ஒற்றுமையுடையனவாய்ப் பாலால் வேற்றுமையுடையனவுமாய் நிகழாவோ? என்று யாங்கூறுமிடத்தே; சலவாதி - குற்றமுடைய வழக்குடைய நீ; ஒன்றும் சமழலை - சிறிதும் நாணுகின்றிலை; சமத்திடை ஒன்றும் சமழலை - அடக்கமுடைமையாலே சிறிதும் நாணுவாயல்லை போலும் என்றாள் என்க.

(வி - ம்.) ஒன்றற்குப் பலபால் கூறினை; ஆகவே அப்பால் பலவாயும் அப்பொருள் ஒன்றாயுமிருத்தலின் ஒன்றும் பலவுமாய்க் குணமும் குணியும் பெறப்படும்; படவும் நீ குணமில்லையென்று சொல்லுதற்கு நாணுகின்றிலை. இந்நாணாமையும் நின் அடக்கமுடைமையால் நினக்குண்டாகும் போலும் என்றவாறு.

சலவாதி - குற்றமுடைய வழக்கை மேற் கொள்பவன்.

சமம் - அடக்கம். இனி, சமம் என்பதற்குப் 'போர்' எனப் பொருள் கொண்டு நீ சொற்போரின்கண் தோல்விக்கு நாணாய் போலும் என்றலெனினுமாம். சமழ்த்தல் - நாணுதல். (௬௩)

இதுவுமது

௬௬௪. பாலும் பலவாகிப் பாலாகு மப்பொருளே
வேறுது மில்லை யெனவே விளம்புவாய்
நீறாக நின்ற நிலப்பால் பெறவேலா
நாறு வகையெனக்கு நன்குரைக்கல் வேண்டும்
நலிந்தாற் பிறபொருட்கு நாட்டலே வேண்டும்.

(இ - ள்.) பால்தாம் பலவாகி பால் அப்பொருளே ஆகும் - பால்கள் பலவாகக் கூறப்பட்டனவே யெனினும் அப்பாலெல்லாம்

அந்தப் பொருளே யாகுமல்லது; வேறு ஆதும் இல்லை எனவே விளம்புவாய்-அப்பொருளன்றிப் பிறிது யாதுமில்லை என்று கூறு இன்றாய்; நீறு ஆக நின்ற நிலப்பால் பெற ஏலா - அணுக்கூட்டமாகநின்ற நிலமென்றும் பால் என்றும் வேறு வேறாகப் பெறப் படாவாதல் வேண்டும்; நாறுவகை எனக்கு நன்கு உரைக்கல் வேண்டும் - வேண்டவே நீ அப்பால்கள் தோன்றுதபடி நில மென்றே எனக்குக் கூறுதல் வேண்டும்; நலிந்தால் - அங்ஙனம் கூறுதற்கு நீ வருந்தினால்; பொருட்கு பிற நாட்டல் வேண்டும் - பொருளுக்கு அவை வேறாக வுளவென்றே கூறுதல் வேண்டும்; என்றாள் என்க.

(வி - ம்.) பால் பலவுளவாகக் கூறினும் பால் வேறு பொருள் வேறன்று என்பாயாயின், பொருளே கூறல் வேண்டும்; பால்உள என்று தோன்றுதபடி நீகூறுதல் வேண்டும். பாலுளவாகவே அங்ஙனம் கூறுதல் உனக்கு வருத்தந்தருமெனின் அப்பாலைப் பொருட் குண மாக்கிக் குணமும் குணியும் என்று கூறவேண்டும் என்றவாறு.

நாறுதல் - தோன்றுதல். நலிதல் - குற்றத்திற்கு வருந்துதல். (கூச)

## இதுவுமது

கூகூகூ. இன்றேய தாயி னிவைபா லிவைபொருள்க
ளேன்றே பலவா வெடுத்துரைப்ப தேன்செய்யக்
குன்றே மலையோ குவடோ வடுக்கலோ
வன்றேவ தன்றாலஃ தியாப்பாதல் வேண்டுமே
அவையவையே சொன்னாலஃ தியாப்பாதல் வேண்டுமே.

(இ - ள்.) இன்று அது ஆயின் - பாலென்பது வேறின்றிப் பாலாவதும் அப்பொருள் தானேயாயின்; இவை பால் இவை பொருள்கள் என்று - நிறமுதலிய இவை பால்கள் என்றும், நில முதலிய இவை பொருள்கள் என்றும்; பலவா எடுத்து உரைப்பது என் செய்ய-உடையதும் உடைப் பொருளுமாகப் பலபட வகுத்துக் கூறுதல் என்ன பயனைச் செய்தல் கருதியோ?; குன்று மலை குவடோடு அடுக்கல் அன்று - குன்றும் மலையும் குவடும் அடுக்கலும் என்பன ஒன்றற்கொன்று பொருளும் பாலும் அன்றாதல்போல ; அதன்றால் அஃது யாப்பாதல் வேண்டும் - அங்ஙனமன்றேல், அப்பாலென்பது ஈண்டும் பொருந்துதல் வேண்டும்; அவை அவையே சொன்னால் அஃது யாப்பாதல் வேண்டும் - நீ ஈண்டும் அவற்றை மலை முதலியவற்றைப் பொருளும் பாலும் எனச்சொன்னால் அக்கூற்றும் பொருந்துதல் வேண்டும் என்றவாறு.

(வி - ம்.) பாலென்பது வேறின்றிப் பாலாவதும் பொருடானே யாகில் இவை பால் இவை பொருளென வுடையது முடைப் பொருளு

மாகக் கூறவேண்டுவதில்லை; மலை குவடு அடுக்கல் என்பனவற்றைக் குன்றிற்குப் பாலாகச் சொல்லப்படாதவாறு போல; இனி நிலமும் பாலும் ஒன்றாயினும் உடையதும் உடைப்பொருளுமாக நிகழின் மலை முதலாயினவும் குன்றும் உடையதும் உடைப் பொருளுமாகி நிகழ வேண்டும் என்றவாறு. (கூ௫)

இதுவுமது

௬௬௪. நோயில்லை வாழி கடவு ளெனவுரைத்தா
னாயினோ யின்மையினேர்ந் தாய வழியோருநாட்
டீயினும் வெய்யநோய் சேர்தலையுங் காண்டுநீ
சாயினும் தத்துவத்தைச் சாராதா யன்றோ
தடுமாற்றக் காழ்ப்பாடுந் தாமுளவே யன்றோ.

(இ - ள்.) கடவுள் நோயில்லை என வுரைத்தான் ஆயின் - துறவி யொருவன் ஒரு காலத்தே எனக்கு நோயில்லை எனக் கூறினனாக; நோயின்மையின் நேர்ந்தாய் - அது கேட்டு நீ அவனுக்கு நோயின்மையால் அதனை உடம்பட்டாய்; அ வழி ஒருநாள் தீயினும் வெய்யநோய் சேர்தலையும் காண்டும் - அவ்வழி அவனுக்கே பின்னொரு நாள் நெருப்பினும் வெய்யதாகிய நோய் வருதலையும் காண்கின்றோமல்லமோ?; நீ சாயினுந் தத்துவத்தைச் சாராதாய் அன்றோ - அவ்வழி அவன் மெலியினும் போக்குவரவின்றி நிலையுதல் என்னும் தத்துவத்தை எய்த மாட்டாயல்லையோ?; தடுமாற்றக் காழ்ப்பாடும் தாமுளவே யன்றோ - அஃதன்றியும் பிறப்புறுதலும் ஆழ்தலும் மிதத்தலுமாகிய நின தத்துவங்களும் நினது இயக்கமில் நிலையைக் கெடுத்தற்கு இருக்கின்றன வல்லவோ? என்றாள் என்க.

(வி - ம்.) நினது (அவிசலிதநித்யத்துவம்) இயக்கமில்லா நிலைப் பென்னும் தத்துவம் நோயில்லாதான் பிறிதொரு காலத்தே நோயுற்று மெலியினும் கெடுவதாம். அஃதன்றி நினது பிறப்பு ஆழ்தல் மிதத்தல் என்னும் தத்துவங்களும் அத்தத்துவத்தை அழித்துவிடும் அல்லவோ? என்றவாறு.

அவிசலித நித்தியம் - பொருள் மாறுபடாமல் நிலைத்திருத்தல்.

தத்துவத்தைச் சாராதா யென்றது நினக்கு மெய்யறிவில்லை என்னும் ஒரு பொருள் தோற்றி நின்றது.

இனி, இதற்கு உரையாசிரியர் கூறுமுரை வருமாறு.

"ஒருகாலத்து நோயில்லாதான் பிறிதொரு காலத்து நோயுடையனாயின், அவிசலித நித்யத்துவம் கெடும் ஆகலின், உனக்குத் தத்துவஞானமில்லையாம்; அன்றியும் முத்தனுழை சம்சாரம் கெடாது நிற்க வேண்டுமென்றவாறு'' எனவரும். இவ்வுரை செய்யுளொடு பொருந்தாமையை ஆராய்ந்துணர்க. (கூ௪)

இதுவும் அடுத்துவருஞ் செய்யுளும் ஒரு தொடர்

சுகூரு. கடுங்கதிரோன் மீதூரக் காணுக்கோ ளெல்லாம்
படும்பொழுது மெழுச்சியினுந் தம்பயனே செய்யு
நெடுங்காலம் பல்பிறவி நின்றன வெல்லா
மோடுங்காதே யேய்ந்துண் டுழிதாலே வேண்டும்
உதவாத வார்தலேயு மோட்டலே வேண்டும்.

(இ - ள்.) (சுகூசு - எப்பாலும் தான் கெடா இல்லனவும் தோன்று - எல்லா வகையாலும் உள்ளன கெடா இல்லாதனவும் தோன்ற மாட்டா என்று கூறுகின்றனே) அங்ஙனமாயின், கடுங் கதிரோன் மீதூர - ஞாயிற்றின் ஒளி மிகுதலாலே; காணுக்கோள் எல்லாம் - மறைப்புண்டு காணப்படாதனவாக நின்ற கோள்மீன் களும் நாண்மீன்களுமெல்லாம்; படும்பொழுதும் - அஞ்ஞாயிறு மறையும் பொழுதும்; எழுச்சியினும் - மீண்டுந் தோன்றும் பொழு தும்; தம் பயனே செய்யும் - எல்லோரானும் காணப்பட்டுத் தமது பயனுகிய ஒளியினைத் தருவனவாதல் காண்டுமன்றோ?; நெடுங் காலம் பல்பிறவி நின்றன வெல்லாம் - அனுதியாக வருவனவாய் ஒருவன் பால் நின்ற பல்வேறு பிறவிகளும் அவன் மகனுய்ப் பிறந்த பொழுதே ஒடுங்காதே; ஏய்ந்து உண்டு உழிதரல் வேண்டும்- மறையாதனவாய் அவன்பாற் பொருந்தி உண்ணல் முதலியனவுஞ் செய்து சுழல்வனவாதல் வேண்டும; உதவாத ஆர்தலேயும் ஒட் டல் வேண்டும் - அவன முன்பு பிறந்த விலங்குப் பிறப்பிலே நுகர்ந்தனவும் இவனுக்குப் பொருந்தாதனவுமாகிய உணவு களையும் அவன் உண்ணுதலும் வேண்டுமன்றோ? என்றுள் என்க.

(வி - ம்.) காணுக்கோள் என்றது, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது ஆகிய எட்டுக் கோள்களையும் அசுபதி முதலிய நாண்மீன்களையும் உணர்த்தும். இவை சூரியனொளி மேற்பட்டபோது தோன்றுமல் மறைந்தபோது தோன்றும். உள்ளது கெடாது இல்லது தோன்றுது எனின், ஞாயிற்றினுடன் கூடுதலால் ஒளியிழந்த கோள் முதலியன அஞ்ஞாயிற்றின் மறைவுப் பொழுதினும் தோற்றப் பொழுதினும் காணப்பட்டு ஒளிதருதல் காண்கின்றன மாதலான், அனுதி வரலாற்றதாகிய பிறவி மறைந்து நின்றதாயின் ஒரு காலம் மகனுய் பொழுது முன்புளவாகிய பிறவிச்செயலெல்லாம் காணப்படல்வேண்டும்; வேண்டவே, முன்னொருகால் பன்றியாகியும் பிறந்தான் அன்றோ? அப்பிறப்பின் காரியமாகிய மலமுண்டல் முதலி யனவும் இவனுக்குளவாதல் வேண்டும் என்றவாறு.

கோள் கூறியதனுல் இனங் கொள்ளுமாற்றுல் நாண்மீனுங் கூறிக் கொள்க. ஞாயிறு மறையும் பொழுதும் தோன்றும் பொழுதும் கோண் முதலியன காணப்படுதலுணர்க. உழிதரல் - சுழலுதல், உதவாத ஆர்தல் என்றது இடக்கரடக்கு. ஆதலால் உள்ளது கெடாது என்றல் பொருந்தாது என்பது குறிப்பெச்சம். (கூஎ

௬௬௬. எப்பாலுந் தான்கேடா வில்லனவுந் தோன்றாவென்
றொப்பியாது மில்ல துரைத்தளியின் றானுண்ணும்
துப்பாயதூச் சோற்றுத் தூய்தல்லா தாழ்ந்துளதென்
றிப்பாவி செய்யு மிழிதகவி தென்னோ
விழுதைதான் செய்யு மிழிதகவி தென்னோ.

(இ - ள்.) எப்பாலுந் தான் கெடா இல்லனவும் தோன்றா என்று - எல்லா வகையாலும் உள்ளன கெடா இல்லனவும் தோன்றா என்று; இப்பாவி ஒப்பு யாதும் இல்லது அளியின் உரைத்து - இத்தீவினையாளன் பிறர் ஒப்புதற்குச் சிறிதும் பொருளற்ற விம்மொழியைத் தன் அருளுடைமை காரணமாகப் பிறர்க்குக் கூறுமாற்றாலே; தான் உண்ணும் துப்பு ஆய தூ சோற்றுத் தூய்து அல்லாது - தான் தின்னும் உணவாகிய தூய சோற்றின்கண்ணே தூயதல்லாத தன் மலமும்; ஆழ்ந்து உளது என்று - அழுந்தியிருக்கின்றது என்று கூறியவனாக; செய்யும் இழிதகவு இது என்னோ - செய்கின்ற கீழ்மைச் செயல்தான் இஃதென்னையோ? கூறுமின்; இழுதைதான் செய்யும் இழிதகவு இது என்னோ - இந்த அறிவிலி செய்கின்ற இக்கீழ்மைச் செயல் எத்தகையதோ? கூறுமின் என்றாள் என்க.

(வி - ம்.) எல்லா வகையாலும் உள்ளது கெடாது இல்லது தோன்றாதென்றிவன் கூறுவனாயின் தானுண்ணுஞ் சோற்றிலே பின்னர்த் தோன்றக் கடவதாகிய மலமும் மறைந்து கிடந்ததென்று கோடல் வேண்டும்; இத்தீவினையாளன் இங்ஙனம் அருவருக்கத்தக்க மொழிகளைப் பேசுதலால் இவன் இழிதகவே பேசும் அறிவிலி என்பது தேற்றம் என்றவாறு. (௬௮)

இதுவுமது

௬௬௭. நின்றீக கொண்டீக வுண்டீக தின்றீக
வென்றிவைகள் கூறி யிடுவார்க் கறம்வேண்டான்
கொன்றீகை தீதென்றுங் கொல்பாவ மில்லென்றுந்
தன்றீகை யுண்ணாதான் றான்கண்ட தென்னோ
தவத்தினு மில்வாழ்க்கை தான்கண்ட தென்னோ.

(இ - ள்.) தன் தீகை உண்ணாதான் - தனது தவவொழுக்கத்தைப் போற்றாத; நின்று ஈக கொண்டு ஈக உண்டு ஈக தின்று ஈக என்று - இவன் பிறர்க்கெல்லாம் அறமுரைப்புழி, நீயிர் அறநெறியிலே நின்று வறியோர்க்கு வழங்குமின் என்றும, அறநெறியினின்று பொருளீட்டிக் கொண்டு அவற்றை வழங்குமின் என்றும், வழங்குதற்குப் பின்னும் பிழைத்தற்கு நீயிரும் உண்டு பின்னரும் வழங்குமின் என்றும் நீயிரும் நுகர்ந்து பின்னரும் வழங்குமின்

என்றும்; இவைகள் கூறி - இன்னோன்னவற்றை அறிவுறுத்தி; இடுவார்க்கு அறம் வேண்டான் - இங்ஙனம் பலவழியானும் வழங்குபவர்க்கெல்லாம் அறம் உண்டென்று கூறுகின்றிலன்; கொன்றீகை தீது என்றும்- பிறவுயிரைக் கொன்று அவற்றின் ஊனை வழங்குதல் தீமையேயாம் என்று கூறி வைத்தும்; கொல் பாவம் இல் என்றும்-அங்ஙனம் உயிர்களைக் கொல்வதனால் தீவினை யில்லையாம் என்றும்; தான் கண்டது என்னோ-தானே கண்டுணர்ந்த வழி என்னையோ?; தவத்தினும் இல் வாழ்க்கை தான் கண்டது என்னோ - இவன் தான் பண்ணும் இத்தவத்தினூடும் தான் முன்பு செலுத்திய இல்வாழ்க்கையும் உளதாகக் கண்ட வழிதான் யாதோ? என்றாள் என்க.

(வி - ம்.) இவன் நின்றீக வென்பது முதலாயின கூறி வழங்குக என்று பிறர்க்கெல்லாம் கூறி வழங்கினோர்க்கு அறமில்லை யென்றும்; கொலை ஆகாதென்று கூறிக் கொலைக்குத் தீமையில்லை என்றும் இவன் கண்டதெவ்வாறோ? தான் துறந்து தவஞ் செய்கின்றானாயின் தன்னுழை இல்வாழ்க்கை நின்றதாகக் கண்டது எவ்வாறோ? என்றவாறு.

இதன் கருத்து: இல்லது தோன்றாதாயின் வழங்கினோர்க்கு அவர்பால் முன்பில்லதாகிய அறந் தோன்றாதாதல் வேண்டும். அங்ஙனமே கொன்றார்க்கும் முன்பில்லதாகிய தீவினை தோன்றாதாதல் வேண்டும். இனி உள்ளது கெடாதாயின் இவன்பால் முன்பிருந்த இல்வாழ்க்கை தவம் பண்ணுமிப் பொழுதும் இவன் பாலுளதாகல் வேண்டும் என்க.

அன்றியும் இவன் அசைவின்றி நிலையுதல் கூறுதலானும் இவை கூடாவாம் என்பதாம். இவை அவையோரை நோக்கிக் கூறிய படியாம். (கூக)

இது நீலகேசி பூரணனை முன்னிலைப்படுத்தோதியது

ருகூஅ. இல்லாத தோன்ற கேடாவுள் ளனவென்பாய்
சொல்லாயே நெய்சுடராய்ச் சுட்டிடுமா றென்றேனுக்
கல்லாந் தயிர்த்தோடி யாழ்மிதப்புச் சொல்லுதியா
லெல்லாமோன் றென்றிற் கிடங்கோடா வன்றே
யிழிவுயர்ச்சிக் காரணமு மில்லாதா யன்றே.

(இ - ள்.) இல்லாத தோன்ற உள்ளன கெடா என்பாய்- இல்லாத பொருள் தோன்றமாட்டா என்றும் உள்ள பொருள்கள் கெடமாட்டா என்றும் தத்துவம் கூறுகின்றனை; நெய் சுடர் ஆய் சுட்டிடும் ஆறு சொல்லாய் - அங்ஙனமாயின் நெய்யின்கண் முன்பில்லாத தீத்தோன்றிச் சுடுமாறு என்னையோ கூறுதி என்ற எனக்கு விடை கூறமாட்டாது; அல்லாந்து அயிர்த்து ஓடி-மனஞ் சுழன்று ஐயுற்று அப்பொருட்கு அயலே சென்று; ஆழ் மிதப்புச் சொல்லுதியால் - அதற்கு விடைபோலப் பொருளின் ஆழ்ச்சியை

யும் மிதப்பினையும் கூறுகின்றனை; எல்லாம் ஒன்று ஒன்றிற்கு இடங்கொடா அன்றோ - நின் மேற்கோளின்படி பொருளெல்லாம் ஒன்றனுள் ஒன்று உள்புகுதற்கு இடங்கொடா அல்லவோ?; கூடர் நெய்யுட் புக்கிருந்தவாறென்னையோ? இழிவு உயர்ச்சி காரணம் இல்லாதாய் அன்றோ - இன்னும் அவ்வாறு கூறின் அவ்விழிவுயர்ச்சிகளும் முன்பில்லது தோன்றற்கும் உள்ளது கெடுதற்கும் காரணம் பெறுய் காண் என்றாள் என்க.

(வி - ம்.) பேதாய்! இல்லாது தோன்றாது; உள்ளது கெடாதென்று சொல்லுதலால், நெய்யின்மேற் றோன்றுவதாகிய தீ நெய்க்குள்ளே மறைந்து கிடந்ததாகல் வேண்டும்; மறைந்து கிடந்ததாமாயின் நெய் ஈர்கியிருக்குமாறென்னோ? இழுதாயிருக்கின்ற காலத்தில்லாத நெருப்புப் பின்பு தோன்றிச் சுடுமாறென்னோ? அந்நெருப்புத்தானே நெய்யாற வைத்தகாலத்துக் கெட்டவாறென்னோ? இனி, ஆழ்ச்சியும் மிதப்புங் கூறினையாயினும் ஒன்றினுக் கொன்றிடங் கொடுத்தல் கூடுமோ? கூடில் கன்னிகை வயிற்றுள்ளும் மகவுளதாதல் கூடும். ஒரு காலத்துளதாகிய ஆழ்ச்சி ஒரு காலத்துக் கெடுதற்கும் ஒரு காலத்துளதாகிய மிதப்பு ஒரு காலத்துக்கெடுதற்கும் நீ காரணம் கூறல் வேண்டுமன்றோ, எனவே நீ காரணத்தால் காரியம் நிகழ்தல் வேண்டாயாகுதியல்லையோ? என்றவாறு. (௬௦)

இதுவுமது

௬௬௬. ஓட்டுங் குதிரையு மோன்றே யெனிற்குதிரை
யூட்டும் பொழுதோடுதான் புல்லுண்ணும் போழ்தின்கா
ஞட்டிய வீதி யதிசயத்தை நீயெமக்குக்
காட்டி யுரைப்பினின் காட்சியைக் கோடும்
கடவுட் குழாத்தார்தம் காழ்ப்பெலாங் கோடும்.

(இ - ள்.) நீ - பூரண நீ!; ஓட்டும் குதிரையும் ஒன்றே எனின் - ஓட்டமும் அச் செயலையுடைய குதிரையும் சிறிது வேறுபடுவதன்றி எல்லாவகையானும் ஒன்றே யென்பாயெனின்; ஊட்டும் பொழுதும் தான் புல் உண்ணும் போழ்தின் - அதனைப் பாகர் உணவூட்டும் பொழுதிலும் அது பந்தியுண்ணின்று புல் தின்னும் பொழுதும்; கால் நாட்டிய வீதி அதிசயத்தை - அது தன் கால்களாலே தோற்றுவிக்கின்ற நேரோட்டமாகிய வியத்தகு செயலை; எமக்குக் காட்டி உரைப்பின் - எமக்குக் கண் கூடாகக் காட்டிக் கூறுவாயாயின்; நின் காட்சியைக் கோடும் - நின் மேற்கோளினை யாமுங் கைக்கொள்ளுவேங்காண்!; கடவுள் குழாத்தார் தம் காழ்ப்பு எலாம் கோடும் - மேலும் நின் சமயத்துத் துறவோர் கொள்கின்ற ஆழ்தல் முதலியவற்றையும் யாமும் ஏற்றுக் கொள்ளுவேம் என்றாள் என்க.

(வி - ம்.) ஓட்டமும் ஓடுகின்ற குதிரையும் சிறிது வேறுதலன்றி எல்லா வகையானும் ஒன்றே யெனிற் குதிரையோடும் பொழுதன்றி

அதனை ஊட்டும் பொழுதினுதல் அது பந்தியினின்று புல்லுண்ணும் பொழுதினுதல் அதனது வியத்தகு செயலாகிய நேரோட்டத்தை அதன்பாற் காட்டுவையாயின் நின் கருத்தினை யானுங் கைக்கொள்வேன் நின் கூட்டத்தார் கூறும் ஆழ்ச்சி மிதப்பு முதலியவற்றையுங்கூட ஏற்றுக் கொள்வேன் என்றவாறு.

ஓட்டு - ஓட்டம். வீதி - குதிரையின் செலவுவகையிலொன்று; அஃதாவது காற்றெனக் கடிதின் நேராயோடுதல். இது காண்போரை வியப்பித்தலின் வீதி யதிசயம் என்றாள். அதிசயிக்கப்படுவதனை அதிசயம் என்றாள். அதிசயம் - வியப்பு. கடவுட் குழாம் - துறவோர் கூட்டம். (சுக)

இதுவுமது

ஏ௦௦. வண்ண முதலா வுடைய குணமெல்லாம்
எண்ணுங்கா லப்பொருளே லீந்தி னிளங்காய்க்கட்
கண்ணினுற் கண்ட பசுமை கனிக்கண்ணுந்
திண்ணிதாக் காட்டிற் றெருண்டாயே யென்றும்
திரிந்தொழிந்த காட்டினுற் றேவனே யென்றும்.

(இ - ள்.) வண்ணம் முதலா உடைய குணம் எல்லாம் - நிற முதலிய பண்புகள் எல்லாம்; எண்ணுங்கால் அப்பொருளேல் - ஆராயுங் காலத்தே அப்பொருள் தானே என்பாயாயின்; ஈந்தின் இளங்காய்க்கண் கண்ணினுல் கண்ட பசுமை - ஈந்தினது இளமையுடைய காயின்மேல் யாம் கண்கூடாகக் கண்ட பச்சை நிறத்தினை; கனிக் கண்ணும் - அது முதிர்ந்து கனியாய காலத்திலேயும்; திண்ணிது ஆக் காட்டின் - திட்பமுறக் காட்டுவாயாயின்; தெருண்டாயே என்றும் - நின்னை யாமும் தெளிந்த அறிவுடையோன் என்று புகழ்வேம்; திரிந்தொழிந்த காட்டினுல் - இன்னும் பொருள்களிடத்தே ஒருபொழுது காணப்பட்டு மற்றொரு பொழுது மாறிப் போன குணங்களை யெல்லாம் அவ்வப்பொருளிடத்தே காட்டுவாயாயின்; தேவனே என்றும் - நின்னை யொருதெய்வம் என்றே கூறுவேங் காண்! என்றாள் என்க.

(வி - ம்.) நிறமுதலிய பண்புகள் எல்லாம் பொருளேயன்றி வேறில்லை என்னின்; இன்னும் நீ பொருள் இயக்கமில்லாத நிலையுதலுடைத்தென்பதனுனும்; அவை மாறுபாடின்றி ஒருபடியே எப்பொழுதுங் காண்டல் வேண்டும். அஃதாயின் ஈந்தினிளங்காய்கட் காணப்பட்ட பசுமை நிறம் கனியிடத்தும் காணப்படுதல் வேண்டும்; இன்னும் காய் காயாகவே எப்பொழுதுங் காணப்படவேண்டும்; காயின்கண் நிறத்தைக் கனியிடத்தும் காட்டுவாயாயின் நீ மெய்யறிவாளனே; ஐயமில்லை. இங்ஙனம் பொருள்களிடத்தே மாறுகின்ற பண்பை யெல்லாம் மாறுபாடில்லாதன வாக்கிக் காட்டுவாயாயின் நீ ஒரு தெய்வமே ஆதல் வேண்டும் என்றவாறு.

என்றும்: தன்மைப் பன்மை வினைமுற்று; என்று கூறுவேம் என்னும் பொருட்டு. (சுஉ)

இதுவுமது

எ0௧. வட்ட முதலா வுடைய பொருளெல்லா
மொட்டிநீ யப்பொருளே யொன்றும்வே றில்லென்பாய்
தட்ட மழித்தோடஞ் செய்தா லதன்கண்ணும்
விட்ட வடிவு விரித்துநீ காட்டாய்
விகார மனைத்தும் விரித்துநீ காட்டாய்.

(இ - ள்.) *நீ வட்டம் முதலா உடைய பொருள் எல்லாம் - நீ வட்டம் முதலிய வடிவங்களையுடைய பொருள்களை யெல்லாம் உண்டென; ஒட்டி - உடம்பட்டுப் பின்னர்; இப்பொருளே வேறு ஒன்றும் இல் என்பாய் - அந்த வடிவங்கள் எல்லாம் அவ்வப் பொருளே யல்லது பிறிதொன்றும் இல்லையென்றும் கூறுவாய்; தட்டம் அழித்து ஓடம் செய்தால் - தகட்டு வடிவிற்றாகிய ஓர் உலோகத்தை அழித்துத் தோணி வடிவிற் செய்துழி; அதன் கண்ணும் - அத்தோணி வடிவமுடைய வப்பொருளிடத்தே; விட்ட வடிவு விரித்து நீ காட்டாய் - அப்பொருளை விட்டகன்ற பழைய தகட்டு வடிவினை நீ காட்டிக் காண்!; விகாரம் அனைத்தும் விரித்து நீ காட்டாய் - இங்ஙனமே வடிவ வேறுபாடுகள் அனைத்தையும் அதன்கண் விளக்கமாக விரித்துக் காட்டுக! என்றாள் என்க.*

(வி - ம்.) *ஒட்டி - உடம்பட்டு. தட்டம் - தகட்டு வடிவு. ஓடம் - தோணி போன்ற வடிவு. விகாரம் - வேறுபாடு.*

*வட்டமுதலாகிய வடிவங்களை யுடையவாகப் பொருள்களை யிசைந்து அப்பொருளேயன்றி வடிவம் என்பது வேறில்லை என்று சொல்லுவாய், தட்டமாகிய வட்டவடிவினின்ற பொருள் ஒழிவறக் கெடாதே யோடமானவாறுபோல வட்டவடிவமும் காண்டல் வேண்டும். அதனைக் காட்டாய்; மற்றும் வேறுபட்ட பொருள்களின் பழைய வடிவங்களை யெல்லாம் காட்டுக ! என்றவாறு.* (சு௧)

இதுவுமது

எ0௨. மிதப்பனவு மாழ்வனவும் வேண்டுவன்யா னென்னிற்
பதப்பொரு டானுன்கின் பன்மைமுடித் தாயா
மிதப்பனவே யாழ்வனதாம் வேறியாது மில்லே
லுதப்பேனு நின்சொ லுதவலவே கண்டா
லுடனேநின் பக்க முடைத்திட்டாய் கண்டாய்.

(இ - ள்.) *யான் மிதப்பனவும் ஆழ்வனவும் வேண்டுவன் என்னின் - யான் பொருளின்கண் வடிவங்கள் சில ஆழ்ந்து நிற்பனவாகவும் சிலவடிவங்கள் மிதந்து நிற்பனவாகவும் கொள்வல் என்பாயாயின்; பதப்பொருள் - ஒரு சொல்லிற்குரிய ஒரு பொருளை*

நான்கின் - பொருள் இடம் காலம் பாவம் என்னும் நான்கானும்; பன்மை முடித்தாய் ஆம் - பல பொருளாகளாக்கினையாகுதி!; மிதப்பனவே ஆழ்வன் வேறியாதும் இல்லேல் - இனி மிதப்பனவும் ஆழ்வனவும ஒன்றே பலவன்று எனபாமாயின், நின்சொல் உதப்பேனும் உதவல கண்டாய் - உன்சொல் கடியனவேயாயினும் நின் மேற்கோளை நாட்டச் சிறிதும் உதவமாட்டா; நின பக்கம் உடனே உடைததிட்டாய் - இம்மொழி கூறிய துணையானே நின் மேற்கோளை நீயே அழித்து விட்டனை காண்! என்றாள் என்க.

(வி - ம்.) நான்கின் - பொருள் இடம் காலம் பண்பு என்னும் நான்கு வகைகளானும் என்க.

தட்டமாய் நின்ற பொருளும் ஒடமாய் நின்ற பொருளும் வெவ்வேருதலும், தட்டமாய் நின்ற இடமும் ஒடமாய் நின்ற இடமும் வெவ்வேருதலும், இருவகைக் காலமும் வேறு வேருதலும் பயனும் வடிவமும் முதலிய இருவகைப் பண்புகளும் வேறு வேறு ஆகலும் ஆம்; இவ்வாருகக் கணிக மேற்கோளே நிலைநின்று நின் மேற்கோள் நிலையில்லாதாம்.

இனி, மிதப்பதூஉம் ஆழ்வதும் ஒரு தலையாக ஒன்றேயெனின் பொருள் இடம் காலம் பண்பு என்னும் நான்கானும் ஒன்றேயாம். ஆகவே அங்ஙனம் கூறுதல் காட்சி முரணும். என்னை? தட்டமாய் நின்ற பொன் முதலிய உலோகமே ஓடமாகியும் நின்ற தென்பதல்லது ஒழிந்த இட முதலியன வேறுபட்டிருக்கவே காண்டலால்; அன்றியும் முன்பு தட்டமாய் மிதந்து நின்றது இப்பொழுது ஆழ்ந்து நின்றதாயின், இப்பொழுது மிதந்து நின்ற வோடம் யாங்கு நின்றும் வந்ததாம் என்றார்க்குத் தட்டமாய் நின்ற பொன் முதலிய உலோகமே ஓடமாய் நின்றது, அதற்கொரு வேறுபாடில்லை; அதன் கண்ணே தட்டமாய வழியுளவாகிய இடவேறுபாடு முதலியன ஆழ்ந்து, ஓடமாய வழியுளவாகிய இடவேறுபாடு முதலியன மிதந்து நின்றன என்பாயாயின், பொருளின்கண் உளவாகிய கூடுதல் பிரிதல் என்னும் பண்புகளாகிய பொருள் வேறுபட்டு வடிவங்களாலே பொருள் நிலையுதலும் நிலையாமையும் உடைத்தென்னும் சைனர் கொள்கையே நிலைநின்று, பொருள், 'என்றும் ஒரேபடித்தாம்' என்னும் கொள்கை நிலையில்லாதாம். ஆதலால், நீ கடியனவாகச் சொல்லினுயேனும், நின் சொற்கள் நின் கொள்கைக்கு உதவாவாகலின் நீயே நின் மேற்கோளைச் சிதைத் தொழிந்தாய் காண்! என்றவாறு.

நின்சொல் உதப்பேனும் என மாறுக. உதப்புதல் - கடிந்து கூறுதல். (௪௪)

இதுவுமது

௩௭௧. தொழிற்சோற் குணச்சொல் வடிவுச்சொன் மூன்றும்
பிழைப்பில் பதமாப் பிரிவிடத்துக் காண்டு
மிழுக்கில் பொருளோ டியைத்தக்காற் சந்தி
யெழுத்தியலிற் கூட்டமு மேப்பொழுதுங் காண்டு
மிலக்கண நின்சோ லியையலவே கண்டாய்.

(இ - ள்.) தொழில்சொல் குணச்சொல் வடிவுச்சொல் - தொழிலைக் குறிக்கின்ற சொற்களும் குணத்தைக் குறிக்கின்ற சொற்களும் வடிவத்தைக் குறிக்கின்ற சொற்களும் ஆகிய; மூன்றும் - இந்த மூன்று வகைச் சொற்களும்; பிரிவுபடுத்துப் பிழைப்பு இல் பதமா காண்டும் - சொற்றொடரைக் கண்ணழித்து விடத்தே குற்றமற்ற சொற்களாகவே காண்கின்றோமல்லமோ?, இழுக்கு இல் பொருளோடு சந்தி இயைத்தக்கால் - இவற்றைக் குற்றமற்ற பொருள்களோடே பொருந்தக் கூட்டினால்; எழுத்தியலில் கூட்டமும் - எழுத்ததிகாரத்துச் சொல்லுகின்ற இலக்கணப்படி கூடுகின்ற கூட்டத்தையும், எப்பொழுதும் காண்டும் - யாம் எக்காலத்துங் காண்கின்றோமல்லமோ?; நின சொல் இயையல - நீ இவற்றையெல்லாம் இல்லை என்று சொல்லுதலாலே நின்சொற்கள் பொருந்துவனவல்ல காண்! என்றாள் என்க.

(வி - ம்.) தொழிற்சொன் முதலான சொற்கள் பிரித்த வழியும் காணப்பட்டு எழுத்ததிகாரத்துச் சொல்லுகின்ற இலக்கணப்படி கூட்டக் கூடுவதும் எப்பொழுதுங் காண்டலின் நீ யவற்றை யில்லையென்றலின் நின் சொற்கள் பொருந்தா என்றவாறு.

'உண்டான்' என்பது, தொழிற் சொல்; 'கரியான்' என்பது குணச்சொல். 'கூனன்' என்பது வடிவுச் சொல். அவை உணவு, கருமை, கூன் எனப் பிரிந்தவழிப் பெறப்பட்டுக் கூட்டின வழி உண்டான், கரியான், கூனன் எனப்பட்டன. (சகூ)

பொருள்களின் நால்வகை ஆக்கமுறைகள்

வேறு

எ0ச. அதுவா வதுவு மதுவாம் வகையு
மதுவாந் துணையு மதுவாம் பொழுதுஞ்
சதுவா நியதத் தனவா வுரைத்தல்
சேதுவா குதலுஞ் சிலசோல் லுவன்யான்.

(இ - ள்.) ஆவது அதுவும் - பொருள்களை நியிர் ஆக்கமெய்துதற்குரிய பொருளும்; அது ஆம் வகையும - அப்பொருள் ஆக்க மெய்தும் முறையும்; அது ஆந் துணையும் - அப்பொருள் ஆக்கமெய்தும் அளவும்; அது ஆம் பொழுதும் - அப்பொருள் ஆக்க மெய்துதற்கியன்ற காலமும்; சதுவாம் நியதத்தனவா உரைத்த - என நான்கு வகை ஆக்க முறைகளை யுடையனவாக வகுத்துக் கூறுதலும்; செது ஆகுதலும் சில சொல்லுவன் - குற்றமாவதனையும் ஈண்டு ஒரு சில கூறிக் காட்டுவன் கேண்மின் என்றாள் என்க.

(வி - ம்.) நீயிர் பொருள்கள், ஆவது ஆகும், ஆகு முறைப்படி ஆகும், ஆகுமளவுமாகும், ஆகுங்காலத்து ஆகும், எனக் கூறுகின்ற ஆக்கமுறை நான்கும் குற்றமாதலை இனிக் கூறுவேன் கேண்மின்! என்றவாறு.

சது - நான்கு. நியதம் - முறைமை. ஈண்டு ஆக்க முறைமை. நியதத்தன - முறைகளை யுடையன. நியதத்தனவா : ஈறு கெட்டது. செது - குற்றம். (சக)

நீலகேசி அந்நான்கு முறைகட்கும் நிரலே
ஒவ்வொன்று எடுத்துக் காட்டல்

எ௦ரு. அரிவை யவளாங் குழவி யவளை
யுரிய வகையா லுவந்தாங் கெடுத்த
லரிய முழமூன் றளவாம் பொழுதும்
வரிசை யுரைத்த வருட மதன்பின்.

(இ - ள்.) அரிவையவள் ஆம் குழவி - அரிவைப் பருவத்தை எய்திய பெண் குழவியும்; அவளை உரிய வகையால் உவந்து ஆங்கு எடுத்தல் - அப பெண்குழவியை வளர்க்கு முறைபாலே மகிழ்ந்து வளர்த்தெடுத்தலும், அரிய முழம் மூன்று அளவு - பெறற் கரிய மூன்று முழம் வளர்தல் என்னும் அளவும், அதனபின் வரிசையுரைத்த பொழுதும் வருடம் - அவ்வளவின் பின்னே நிரல் படக் கூறிய பொழுது. யாண்டாகிய காலமும் ஆம்; என்னும் இவை அம்முறைகளுக்கு எடுத்துக் காட்டுக்களாமல்லவோ? என்றாள் என்க.

(வி - ம்) இது, நீலகேசி அம்முறை நான்கற்கும் தானே ஒவ்வொன்று கூறிக்கொண்டபடியாம் என்க.

அரிவைப் பருவத்தையுடைய பெண் குழவி, இது ஆவதாம் என்னும் முறைமை. என்னை? பிறிதொன்று அரிவைப் பருவ முடைய தாதலால் அஃதவ்வாறுவது. இனி, அதனை வளர்த்தற் குரியவாறு வளர்த்தல், இது ஆமாங்காம் என்னு முறைமை. மும்முழம் உயரம் எய்தல், இது, ஆந்துணையாம் என்னுமுறைமை; பன்னீராண்டில் அரிவையாம் என்பது ஆங்காலத்தாம் என்னும் முறைமை. இவை அந்த நான்கு முறைகட்கும் எடுத்துக் காட்டுக்கள் என்றவாறு. (சஎ)

இது மறுப்பு

எ௦சு. குழவித் திறமுந் துறவா ளவளும்
முழுவித் ததுவும் முளையா துளதா
மிழவெத் துணையு மியல்பேன் முடியா
தழிவித் திடுவே னயனீ விரையல்.

(இ - ள்.) எத்துணையும் இழவு முடியாது இயல்பேல் - உள்ளது எவ்வளவும் கெடுதல் இல்லை எப்பொழுதும் உளதாவதே

இயல்பு என்பது நின் கோளாதலின் ; அம - மடவோய் !; அவளும் குழவித் திறமும் துறவாள் - அப்பெண் தானும் தனது குழவிப் பருவத்தை இழந்திடாள் ; முழுவித்து அதுவும் - நிலத்திலிட்ட முழுமையான விதைதானும் ; முளையாது உளது ஆம் - முளைத்த லின்றி எப்பொழுதும் விதையாகவே உளதாமன்றோ ?; நீ விரைமல்-நீ விரையாதே கேள், இவற்றால் நின் ஆவதாம் என்னும் ஆக்கமுறைமையை அழித்தேன் ; அழிவித்திடுவேன் - எஞ்சிய வற்றையும் அழியும்படி செய்வேன்காண் என்றாள் என்க.

(வி - ம்.) எத்துணையும் இழவு முடியாது இயல்பு என மாறுக.

உள்ளது கெடாதென்பது நின் மேற்கோளாதலின், அப்பெண் குழவி தன் குழவித் தன்மையை நீங்காளாதல் வேண்டும் ; வித்து முளைத்தலும் பரமாதலும் நிகழா, ஆதலால் 'ஆவதாம்' என்னும் முறைமைய அழித்தேன், இனி எஞ்சியவற்றையும் அழிப்பேன் ! விரை யாதே கேள் ! என்றவாறு.

ஆவதாம் என்னும் முறைமை கூடுவது ஒரு பொருளினது ஒருநிலை கெடவும் அப்பொருள் கெடாதும் நிற்பினும் ; அங்ஙனமாயின் பொருள் நிலையுதலும் நிலையாமையும் உடைத்தாம் என்னும் எம் மேற் கோளே நிலையுறும். உள்ளது கெடாதென்று மாறின்றி நிலையுதல் என்னும் மேற்கோளுடைய நினக்கு அவ்வாக்க முறைமை கூடா தென்பது. (௬௮)

இதுவுமது

௭௦௭. முலையும் மகவும் முறுவல் லவையும்
தலையுண் மயிரும் முகிரும் முடனே
நிலையில் லமையு மிலவா மெனினே
யலையுந் நினகோ ளுடனே யெனலும்.

(இ - ள்.) முலையும் மகவும் முறுவல் அவையும் - ஏடா ! (நீ இல்லது தோன்றாது என்பாயல்லையோ ? அங்ஙனமாயின்) அப் பெண்குழவிக்கு அப்பருவத்திலே முலையும் அவள் வயிற்றில் மேற் பிறக்கும் மகவும் அவளுக்குப் பின்றோனறும் பற்களும் ; தலையுள் மயிரும் - பின்னடர்ந்து வளரும் தலையின்கண் மயிரும் ; உகிரும் - நகங்களும் இன்னோரன்ன பிறவுமாய் ; உடனே நிலையில் லமையும் இலவாம் - அப்பருவத்தோடே நிலைத்திருப்பனவல்லாத உறுப்புக்கள் பலவும் பின்னொருபோதும் தோன்றமாட்டாவாம் ; எனினே உடனே - என்று கூறுமளவிலே ; நினகோள் அலையும் - உன்னுடைய ஆவதாம் என்னும் முறைமையும் நிலையின்றிக் கெடும் ; எனலும் - என்று யான் கூறவும், என்க.

(வி - ம்.) முற்செய்யுளில் உள்ளது கெடாது என்னும் நின் மேற் கோளே ஆவதாம் என்னும் முறையை அழித்தது என்றுகூறி இச் செய்யுளில் இல்லது தோன்றாதென்பதானும் அம்முறைமை கெடும் என்றுணர்த்தியபடியாம்.

பேதாய்! நீ இல்லது தோன்றாதென்றற்கண் மூலமுதலாகச் சொல்லப்பட்டன, கைமுதலாயினபோல முன்பே யுளவாயினல்லது பின்பு தோன்றப் பெறுவாதலின் ஆவதாம் என்னும் அம்முறைமை கெடுமென்பதுணர்க! என்னை? அவை தோன்றியுளவாயினன்றே அரிவைப் பருவம் எய்தலாவது என்பதாம்.

(எ0எ) எனவும் (எ0அ) உளவே எனின் என மேலே தொடரும். (சக)

இதுவுமது

எ0அ. உளவே யெனின்முன் னுரைத்தந் நியதங்
களவே யெனலாங் கடையா மெனநீ
கிளவா தொழியாய் கிளந்த குழவிக்
களவே முழமா வவைதாம் பலவால்.

(இ - ள்.) உளவே எனின் - இனி நீ மூலமுதலியன வெல்லாம் குழவிப் பருவத்தும் (ஆழ்ந்து) உள்ளனவே என்பாயாயினும்; முன் உரைத்த நியதம் கெடும் - முன் கூறப்பட்ட ஆவதாம் என்னும் முறை கெடுவதேயாம்; களவே எனலாம் - ஆகவே நீ கூறும் இந்த ஆக்கமுறையெல்லாம் வஞ்சகவுரையே ஆகும் என்று கூறலாமன்றோ?; கிளந்த குழவிக்கு - முன் எடுத்துக்காட்டாகக் கூறப்பட்ட பெண் குழவிக்கு; அளவு முழம் ஆ - உயர்ச்சியளவு ஒரு முழமேயாகி; அவை தாம் பலவால் - மேலே தோன்றும் அரிவைப் பருவத்திற் குயரம் பலவாகும்; கடையாம் என நீ கிளவாது ஒழியாய் - இவ்வாறு கூறுதல் மிகவும் கீழ்மையுடைத்தென்று இனி நீ இவ்வாக்க முறைகளைக் கூறாதொழிவாயாக என்றாள் என்க.

(வி - ம்.) மூலமுதலாகச் சொல்லப்பட்டன குழவிப் பருவத்தும் (ஆழ்ந்து) உள்ளனவே எனின், ஆவதாம் என்னும் முறைமை அதனானுங் கெடும்; என்னை? குழவிப்பருவத்தே யவையெல்லா முளவாயின் மேல் ஆதல் என்பது இன்மையின்; அவ்வாறாகவும், நீ இவ்வாக்கமுறைமை கூறுவது பிறரை மயக்குமாறு வஞ்சமேபோலும், அன்றியும் குழவிப் பருவத்து அவையெல்லாம் உளவென்பதும் காட்சி முரணும்; என்னை? ஒருமுழக் குழவியின் மும்முழ உயர்ச்சி முதலாயின உண்மை கூறுதலின் - என்றவாறு. (௫0)

இதுவுமது

எ0௯. உடையள் ளிவடன் னுதரத் தொருபெண்
ணடையு மவளுக் கவளவ் வகையாற்
கடையில் குழவி யவைதன் னியல்பா
நடையு மதுவே னகையாம் பிறவோ.

(இ - ள்.) இவள் தன் உதரத்து ஒரு பெண் அடையும் - பேதாய் ! இல்லது தோன்றுது என்னும் நின் மேற்கோள் வாய்மையாயவிடத்து, இப்பெண் குழவியின் வயிற்றுள் மேற் பிறக்கக்கடவதாகிய ஒரு பெண் மகவுளதாதல் வேண்டும்; அவளுக்கு அவள் அவ்வகையால் - அப் பெண் மகவின் வயிற்றினும் மேற் பிறக்கக்கடவ மகவுளதாய் அவளுக்கும் இவ்வாறேயாய் கடையில் குழவியவை; தன்னியல்பாய் - எல்லையற்ற குழவிகள் உளவாதல் இயல்பாகவே, நடையும் - நடைபெறுதலும் வேண்டுமே; அது நகையாம் - இங்ஙனம நடைபெறும் என்னும் அது கேட்டார்க்கு நகைப்பாவதொன்றன்றோ ? என்றாள் என்க.

(வி - ம்.) உதரம் - வயிறு. தன் : அசை. நடையும் என்புழி உம்மை : இசைநிறை.

பேதாய் ! நீ இல்லது தோன்றுது; உள்ளதே தோன்றும் என்றற்கண், குழவிப் பெண் வயிற்றுள்ளும், அவள் வயிற்றுள்ளும் மேல் வருவதாகிய குழவிப் பெண் இப்பொழுதுள்ளதாய், அவள் வயிற்றுள்ளும் அவ்வாறு யிவ்வாறே எண்ணிறந்த குழவிப் பெண்கள் மேற்காட்டிய குழவிப் பெண்வயிற்றுள் ஆதல் இயல்பாய் நடைபெற வேண்டுதலின் இது கேட்டார்க்கு நகையாமென்றவாறு.

இனி, நகையாமாறு என்னை ? விறகுள் நெருப்பு முன்னேயுளதாதலினன்றே கடைந்த பொழுது தோன்றியது; அதுபோல மேற்றோன்றுவனவெல்லாம் ஒரு பொருட்கண் முன்பே யுளவாகல் வேண்டுப் அன்றே; இல்லையெனின். அவை யாங்கு நின்றும் அவ்வழி வந்தன ? என்பாயெனின், காரணம் பெற்றால் நெருப்புத் தோன்றுதற்கு விறகில் ஆற்றல் உளதென்பதல்லது விறகுள் நெருப்பு இருந்தது எனப்படாது. இருக்கில் விறகு தானே வேவவேண்டுமன்றே; அதுபோல மேற்றோன்றுவன தோற்றுதற்கு ஆற்றல் ஒரு பொருட்கண் உளதென்பதல்லது, மேற் றோன்றக்கடவ பொருளெல்லாம் ஒரு பொருளின்கண் எப்பொழுதும் உளவென்பது நகையேயாமென்பது. ஆதலால் உள்ளது கெடாது எனினும் இல்லாதது தோன்றுதாயினும் ஆவதாம் என்னும் நின் ஆக்கமுறை கெடும் என்றவாறு. (௬௯)

## ஆமாங்காம் முதலியவற்றிற்கு மறுப்பு

௭௧௦. இனியாம் வகையு மிசைத்தி யெனினுந்
நனிகா ரணமாய் நடுக்கு நின்கோட்
டனிகா ரியமும் முளதேற் றவரு
முனிலா மொருவன் பொழுதும் முடிவாம்

(இ - ள்.) இனி ஆம் வகையும் இசைத்தி எனினும் - இனி பொருள் ஆக்கமுறும் வகைக்கும் மறுப்புக் கூறுதி என்று நீ கேட்பின் கூறுவேன் கேள்; நனி காரணம் ஆய் நின்கோள் நடுக்கும் - ஈண்டு முறை என்பது மேல் ஆக்கம் எய்துதற்கு மிக்க

தொரு காரணம் எனப்பட்டு ; காரணம் என்பதொன்றில்லை என்னும் நின் மேற்கோளை அழிக்கும் ; தனி காரியமும் உளதேதல் தவறு ஆம் - இனி ஆந்துணையும் ஆதம் என்றறற்கண் முன் பில்லாத காரியம் பின்பு தோன்றுமென்பதும் முன்பிருந்த காரணமாகிய குழவிப்பருவம் கெடும் எனபதும் பெறப்பட்டு இருவழியும் தவறுதம் ; முன் இலா ஒரு வன்பொழுதும் முடிவு ஆம் - இனி ஆங்காலத்து ஆம என்றற்கண், முன்பு நினக்கு மேற்கோளிலாத ஒரு வன்மையுடைய காலம் உனக்கு உடம்பாடாகிக் குற்றமாம் எனருள என்க.

(வி - ம்) ஆமாங்கு ஆம் என்றற்கண் காரணத்தால் காரியமாய் நீ காரணம என்பதொன்றில்லை என்பதனோடு மூரணுவதாம். ஆந்துணையும் ஆம் என்றற்கண் இல்லது தோன்றுது, உள்ளது கெடாது என்பனவற்றோடு மூரணும் ; ஆங்காலத்து ஆம் என்றற் கண், காலமில்லை என்பது முரணும்; ஆதலால், காரணம் உண்மையும் முன்பில்லாத காரியத் தோற்றமும் காலம் உண்மையும் நிலைபெறும் என்றவாறு. (௫௨)

இதுவுமது

௪௧௧. நியதந் நிகழ்ச்சிந் நியதா வுரைப்ப
தயதி யெனினீ யமையுஞ் சலமேல்
வியதி யெனினும் வெகுளல் இழுதை
பயதி யெனினு நினக்கோர் பயனே.

(இ - ள்.) இழுதை நியதா நிகழ்ச்சி நியதம் உரைப்பது - பேதாய் ! பொருள் எப்பொழுதும் மாறுபாடின்றி நிலையுதலுடைத் தென்னும் மேற்கோளுடையயாகிய நீ அம் மேற்கோட் குப் பல்லாற்றானும் கேடு தருகின்ற இந்த நியதம் என்னும் ஆக்கமுறைகளைக் கூறுவது ; அயதி எனின் அமையும் - நினக் கொரு விளையாட்டு என்பாயாயின பொருந்தும் ; சலமேல் - அவ் வாறன்றி அவற்றை வாய்மையென்றே கருதி எம்மேல் செற்றங் கொண்டு சொனனையாயின் ; வியதி - அது நினக்குக் கேடேயாம்; எனினும வெகுளல் - ஆயினும் எம்மைச் சினவாதே கொள் ! சினபபாயாயின ; பயதி எனினும் - நின்னைப் பிறர் இவனுக்கு இது பிறவிக்குணம் எனறிகழ்தலும்; நினக்கு ஓர் பயன் - நினக்கு எய்துமொரு பயனேயாங் காண ! என்றுள் என்க.

(வி - ம்) நிகழ்ச்சி நியதம் என மாறுக. நியதா - பொருள் நிலையுதலுடைய தென்னும் மேற்கோள் உடையவன். அசதி என்பது அயதி எனத் திரிந்து நின்றது. அசதி - விளையாட்டு. விகதி வியதி என நின்றது. வியதி - கேடு. பிரகிருதி என்பது பயதி என நின்றது. பிரகிருதி - இயல்பு. அஃதாவது இவனுக்கு இங்ஙனம் பொருந்தாமை கூறலே பிறவிக்குணம் என்றவாறு.

இகழ்ச்சியன்றிப் பிறிதொரு பயனும் இல்லை என்பது கருத்து எனினும் ஆம் என ஆக்கச் சொல் வருவித்துக் கொள்க.

பேதையே! நிலையுதற் கொள்கையுடைய நீ ஆவதாம் என்பது முதலாகிய ஆக்கமுறை கூறுதலமையாது; பொருள் நிலையுதலும் நிலையாமையும் உடைத்தென்னும் சைனர்களுக்கே இஃதமையும்; நீ விளையாடற் பொருட்டுச் சொல்லுதியாயின் அமையும். அன்றி வாய்மையாகவே கருதி எம்மேற் செற்றங்கொண்டு சொல்லுதியாயின் நினக்குக் கேடாமாயினும் வெகுளாதொழி!; வெகுளில் நின்னை இவனுக் கிவ்வாறு பொருந்தாதன கூறுதல் பிறவிக்குணம் என்று பிறர் சொல்லுவதன்றிப் பிறிதொரு பயனும் உண்டாகாது என்றவாறு. (௯௨)

உயிரியல்பும் மறுப்பும்

வேறு

எ௪௨. பாலைப் பழத்தி னிறத்தன வாய்ப்பல மாட்டோடுகண்
ணுலைத் துணையு மகன்றைந்து நூறும் புகையுயர்ந்து
ஞாலத் தியன்றன நல்லுயி ரேன்பது நாட்டுகின்றாய்
மாலித் துணையுள வோநீ பெரிதும் மயங்கினையோ.

(இ - ள்.) நல்உயிர்-ஆசீவகத்துறவியே! நீ நல்ல உயிர்கள் தாமும்; பாலைப் பழத்தின் நிறத்தனவாய் - பாலைப்பழம் போன்ற நிறத்தையுடையனவாய்; பல மாட்டொடு கண்ணும் எத்துணையும் அகன்று - இடம் வலம் முதலாகிய பல பக்கங்களாலும் பல இடங்களாலும் எவ்வளவும் அகன்று; ஐந்து நூறும் புகை உயர்ந்து - ஐந்நூறு காவதம் உயர்ந்து; ஞாலத்து இயன்றன என்பது காட்டுகின்றாய் - இவ்வுலகத்தே உளவாயின என்று கூறுகின்றாய்; இத்துணை மால் உளவோ - இவ்வாறு கூறுதற்கு நினக்கு இவ்வளவு பித்தும் உளவேயோ?; நீ பெரிதும் மயங்கினையோ - அல்லது நீ மயக்கு மருந்துண்டு மிகவும் மயங்கியிருக்கின்றனையோ? என்றாள் என்க.

(வி - ம்.) ஆசீவகர், உயிர்கள் பாலைப்பழம் போன்ற நிறமுடையனவாய்ப் பல பக்கங்களாலும் இடத்தாலும் விரிந்து ஐந்நூறு காவதம் உயர்ந்திருக்கும் என்னுங் கொள்கையுடையார் என்பது வழிமொழியுமாற்றாற் பெற்றாம். எத்துணையும் அகன்றென்பது இருநூற்றைம்பது காவதம் விரிந்து என்றவாறு.

பேதாய்! நீ உயிர்கள் பாலைப்பழம்போன்ற நிறத்தையுடையவாய்ப் பக்கங்களிலும் இடத்திலும் இருநூற்றைம்பது காவதம் அகன்றும் ஐந்நூறு காவதம் உயர்ந்தும் இவ்வுலகத்தே நிலவுகின்றன என்கின்றனை. இங்ஙனம் கூறுதற்கு நீ பித்தேறினையோ? அல்லது மயக்கு மருந்துண்டு மயங்கினையோ? என்றிகழ்ந்தபடியாம்.

இனி என்னை மயக்கமெனின் அது மேலே கூறுவர். (௯௩)

இதுவுமது

எ௩௩. ஒன்றினு ளொன்று புகலில
வென்ற வுயிர்களேல்லா
நின்றன தந்த மகலமு
நீளமும் பெற்றனவாய்
நன்றுநீ சொல்லுதி நாந்தொக்
கிருந்துழி நல்லுயிர்க
டுன்றின வென்பது சொல்லா
தினியென்ன சொல்லுதியோ.

(இ - ள்.) நீ ஒன்றினுள் ஒன்று புகல் இல என்ற உயிர்கள் எல்லாம் - ஐய! நீ ஒரு பொருளினுள் ஒரு பொருள் புகுந்தடங்காது என்று சொல்லுமாற்றால் ஒருயிருள் ஒருயிர் புகாதென்பது பெறப்பட்ட அவ்வுயிர்கள் எல்லாம்; தம்தம் அகலமும் நீளமும் பெற்றன நின்றனவாய்ச் சொல்லுதி - நீ கூறியாங்குத் தத்தமக்குரிய அகல நீளங்களைப் பெற்று நின்றனவாகக் கூறுகின்றனையன்றே; நன்று - அஃதாயின் நல்லது!; நாம் தொக்கு இருந்துழி - நாம் பலர் ஓரிடத்தே ஒருசேரக் கூடியிருந்துழி; நல் உயிர்கள் - நம் நல்ல உயிர்கள்; துன்றின என்பது சொல்லாது - பலவும் ஒன்றனுள் ஒன்று புகுந்து அடங்கியிருந்தன என்று கூறாமல்; இனி என் சொல்லுதியோ - வேறு என்னதான் கூறுவாயோ? என்றான் என்க.

(வி - ம்.) பெற்றன நின்றன என்று மாறிப் பெற்று நின்றன என்க. துன்னுதல் - செறிதல்: ஈண்டு ஒன்றனுள் ஒன்று புக்குத் துன்னுதல் என்க.

நீ ஒரு பொருளில் ஒருபொருள் ஊடுபுகுதலின்றெனும் மேற்கோளுடையை அல்லையோ? அங்ஙனம் ஒன்றனுள் ஒன்று புகாத உயிர்கள் நீ மேலே சொல்லிய அகல நீளங்களுடையவாயக்கால் நாம் ஒருங்கு குழுமியிருந்தவழி என்னும்? அவ்வழி உருவுடையவாகிய இவை கட்புலனாதலும் வேண்டும்; இதற்கென் சொல்லுதி; என்றவாறு. (௩௩)

இதுவுமது

எ௩௪. தானுள தாய வழியதன் றன்பா லியல்பெனலா
மூனுள தாய வுயிர்ப்பிர தேச முணர்வதுபோல்
வானுளம் போயுழி மன்னு மறிவிலே யேலதனை
நானுள தென்றுரை யேனதற் கியாரினி நாட்டுகிற்பார்.

(இ - ள்.) தான் உளது ஆயவழி - யாதானு மொருபொருள் ஓரிடத்து உளதாய பொழுது; அதன் றன்பால் இயல்பு எனல்

ஆம் - அப் பொருளினது பாலாகிய தன்மையுமுளதாதலே இயற்கை என்று கொள்ளலாமன்றோ?; ஊன் உளது ஆய உயிர்ப் பிரதேசம் உணர்வு அதுபோல் - எனின்? உடம்பின்கண் உளதாய உயிர் அவ்வுடம்பிடத் தெங்கணும் காணப்படும் உணர்ச்சியைப் போல; வான் உளம் போயுழி மன்னும் அறிவு இலையேல் - ஒருடம்பின்கண் ணின்றவுயிர் அவ்வுடம்பு நிற்க எஞ்சிய தனதகல நீளங்காறும் வானததிலே சென்று நிற்றல் வேண்டும், அங்ஙனம் நின்ற அவ்வானத்தே நிலை பெற்ற அறிவு இல்லையாயின்; நான் அதனை உளதென்று உரையேன் - நான் அவ்வானிடத்தே அவ்வுயிர் உளதென்று கூறேன்; அதற்கு - அதற்கு விடையாக; இனி நாட்டுவார் யார் - உண்டென்று கூறி நிலை நாட்டுவார் யாரேயுளர்? என்றாள் என்க.

(வி - ம்.) ஆசீவகப் பெரியோய் யாதானு மொரு பொருள் உளதாயவழி அதன்பாலாகிய தன்மையும் உடனிருத்தல் வேண்டு மன்றே? உயிர் நீ முன் கூறிய அகல நீளமுடைத்தெனின் அஃதோ ருடம்பில் உளதாயவழி அதன் எஞ்சிய அகல நீளங்கள் அவ்வுடம்பைச் சூழ்ந்துள்ள வானின்கண் சென்று நிற்றல் வேண்டும்; வேண்டவே அந்த வானத் தெவ்விடத்தும் உயிர்ப்பாலாகிய அறிவும் உடனுளதாகல் வேண்டும், மற்று அறிவோ உடம்பளவிலேயே உளதாதல் காணப்படுகின்றது. உடம்பைச் சூழ்ந்துள்ள வானிடத்திலே காணப் பட்டிலது. ஆகலால் அவ் வானத்திலே உயிரும் இல்லை என்பேன். வல்லையேல் ஏதுக்கூறி உண்டென்று நிலைநாட்டுக! என்றவாறு.

இனி, உடம்பிடத்தே காணப்பட்ட உயிரைக் காணப்படா தொழிந்த வானிடத்து முளதென்னின், ஓரிடத்துக் காணப்பட்ட தீ முதலியவற்றையும் காணப்படாத எல்லா வழியும் உளவென்று சொல்லுதலுமாமே; அவ்வாறாகில் இடத்திலுளதாகிய தொரு பொருளு மில்லையாகிக் காட்சி முரணுமாம், இஃது அறியும் பொருள், இஃதறிவில் பொருள் இது நீர் இது தீ என்பது முதலாயின பெறப் படாவாகி எல்லாப் பொருளும் கலப்புடையனவும் முரண்பாடுடையனவுமாயொழியும் என்பதாம். (௬௬)

இதுவுமது

௭௧௫. ஒன்றெனை நின்ற உயிர்தா
னுருவின தாதலினுற்
பொன்றுந் துணையும்பல் போழெய்தும்
பூசணிக் காயினைப்போ
லின்றெனி னாகம மாறது
வாமினி யவ்விரண்டு
மின்றெனிற் சால வெளிதாம்
பிறவத னின்மையுமே.

(இ - ள்.) ஒன்று என நின்ற உயிர்தான் - ஏனைய பூதங்களாகத் தான் ஒன்றுமே உயிர்ப் பொருள் என்று சிறப்புற்று நின்ற அந்த வுயிர்தானும ; உருவினது ஆதலினல் - உருவுடையது என்று கூறப்படுதலாலே ; பூசணிக்காயினைப் போல் - உருவுடைய பூசணிக்காயினைப போனறு ; பொனறுந்துணையும் பல்போழ் எய்தும - சாகுமளவும் ஒரு கருவியாற் றுணிக்கப் பல்வேறு துண்டுயிர்களாகும் ; இன்று எனின - உயிர் உருவுடையதனறு என்பாயாயின் ; அது ஆகம மாறு ஆம் - அது நின்னூலுக்கே முரண்படும் ; இனி அவ்விரண்டும அனறு எனின் - இனி உயிர் உருவமுடையதுமன்று உருவமில்லதுமன்று என்பாயாயின் ; அதன் இன்மை சால எளிது ஆம - அத்தகையதொரு பொருட்கு இன்மை கூறுதல் எனக்கு மிகவும் எளிதாகுங் காண் ! என்றுள் என்க.

(வி - ம்.) ஒன்றென்று சொல்லப்பட்ட உயிர் உருவமுடையதென்று சொல்லுதலால், ஒன்றென்று சொல்லப்பட்ட உருவமுடைய பூசணிக் காயைத் துணிக்குந் தோறும் துண்டுகளாகிப் பலவாயின போல உயிருமொரு வாளாலே துணிக்க ஒன்றென்று சொல்லப்பட்ட அவ்வுயிரும் பலவாமன்றே. இனி இதற்கஞ்சி உயிர் அருவம் என்னின் நின் னூலொடு மாறுபடும்; இனி, உயிர் உருவமுமன்று; அருவமுமன்று எனில் அங்ஙனம் ஒருபொருளுமில்லை. இல்லையாகவே கழுதைக் கொம்பு போல உயிரும் இல் பொருளாம் என்றல் எனக்கு, எளிதேயாம்; என்றவாறு. (கஎ)

இதுவுமது

எகஞ. எண்டனை யாக்கி யிடவகை யுட்பொரு ளீறுசொல்லி
மண்டல மாக்கி மறுத்துங் கோணரு மனத்தினையேற்
கண்டிலை நீமெய்ம்மை காழ்ப்பட்டு நின்ற கனவுயிர்க்கெண்
ணுண்டெனி னில்லை யகன்றடு மாற்ற முலப்பின்மைபோல்.

(இ - ள்.) காழ்ப்பட்டு நின்ற கன உயிர்க்கு - யாண்டும் செறிவுற்று அளவுபடாது எல்லாவுலகத்தும் கிடக்கின்ற உயிர்களுக்கு ; எண்தனை ஆக்கி - இத்துணை என்னும் தொகையும் கூறி ; இடவகையுள் பொருள் ஈறு சொல்லி - அவையிருக்கும் இடவகையானும் அவற்றை வரையறை செய்து ; மண்டலம் ஆக்கி - இங்ஙனம் தொகையானும் இடத்தானும வரையறையுட்பட்ட அவ்வுயிர்கள் வீடுபேறு காரணமாக உடன்தொழியாமைப் பொருட்டு வீடு பெறற வுயிர்களை மண்டல முறைமையாலே ; மறுத்தும் கொணரும் மனத்தினையேல் - மீண்டும் பிறப்பிற்குள் கொண்டுவருகின்ற கருத்தினையுடையையாயின் ; எண் உண்டு எனின - அளவுமுண்டோ என்றால் ; அதன் தடுமாற்றம் உலபபு இன்மைபோல் இல்லை - அவ்வுயிரினது பிறப்பிற்கு அளவு இல்லையாறற் போல அவற்றிற்கும ஓரளவு இல்லை என்றே கொள் என்றுள் என்க.

(வி - ம்.) எல்லாவுலகினும் யாண்டும் எண்ணிறந்தனவாகிச் செறிந்துகிடக்கின்ற உயிர்களையெல்லாம் ஒரு தொகையுட் படுத்தித் தொகையிட்ட அவ்வுயிர்கள் ஓரோ வொன்றாக வீடெய்துமாற்றால் அவற்றை மாள்வனவுமாக்கி, அவை மாளாமைப் பொருட்டு வீடுற்ற உயிர்களையும் மீட்டும் பிறப்பித்து மண்டல வீடுபேறு செய்கின்றாய்.

என்னை ? "அநந்தோஸ மாப்யோ நவஸா நஸ்ச"

என்பதனால், ஈண்டு அநந்தம் என்றதன் பொருள் மாளாதென்ற வாறன்றே? உயிர்க்குப் பிறவி தொகைப்படாமையின் மாளாதவாறு போல உயிர்களும் தொகைப்படாவாய்ப் பலபல உயிர்கள் வீடு பெற்றுழியும் அவை மாளாவென்பதாம்; என்னை? பேரளவினவாகிய கடல் நிலங்களின், ஆழமும் மேடும் யாண்டுதோறும் பல்வேறு யாறு களாலும் நிலத்தில் மண் கரைத்துக் கடலில் புகுத்தப்பட்டும் மாளாத வாறு போல வென்பது. பயிர்வகை முதலியவற்றாலே நிலத்திற்கு வளர்ச்சி சொல்லினும் அவை நிலத்திற் றோன்றி நிலத்திலேயே மறைதலில் நிலத்திற்கு வளர்ச்சியில்லையாதலின் தொகைப்படாதது மாளாதென்பதாம்.

என்னை தொகைப்படாதவாறு? அருகக் கடவுளினது மெய்யறி வாலே அளக்கப்பட்டதன்றே! எனின், நாழியாலளக்கப்பட்ட பொருள் நாழியானவாறுபோல, எல்லையில்லாத மெய்யறிவினாலே யளக்கப்படு தலின் பொருள் எல்லையற்றதென்றலின் தொகையுடைத்தன்றென்பது. இவ்வளவின என்று தொகைப்படுத்தறியானாகில் இவன் பொருட் டொகை அறிந்திலனல்லனோ வெனின்; தொகைப்படு பொருளைத் தொகைப்படுத்தி அறிந்திலனாயினன்றே இவன் அறிவிற்குக் குற்ற மாவது! தொகைப்படாப் பொருளை அவ்வாறேயறிதல் குற்றமன் றென்பது.

அன்றியும் ஞாயிற்றொளியால் பொருள்கள் விளக்கப் படுகின்ற வழித் தொகையுடையன தொகையுளவாகவும், தொகைப்படுத வில்லாத பூந்துணர் முதலாயின தொகையிலவாகவும் விளக்கப்படுதல் காண்கின்றோமல்லமோ? என்பது. (௯௮)

நிலப்பால் முதலியனவும், மறுப்பும்

வேறு

௭௬௭. மேற்சீர தீயோ டுயிர்காற்று விலங்கு சீராம்
பாற்சீர நீரு நிலந்தானும் பணிந்த சீரா
மேற்சீர மேற்போம் விலங்கோடு விலங்கு சீர்கீ
ழாற்சீர வீழும் மவையென்னினு மாவ தென்னோ.

(இ - ள்.) தீயோடு உயிர்மேல் சீர - பூரண! நீ தீயும் உயிரும் மேற் சீர் உடையன என்றும்; காற்று விலங்கு சீர் ஆம் - காற்று விலங்கு சீர் உடைத்தாம் என்றும்; நீரும் நிலம்தானும் பணிந்த சீர் ஆம் - நீரும நிலமும் கீழ்ச்சீர் உடையனவாம் என்றும், இவற்றுள்; மேல் சீர மேல் போம் - மேற் சீருடையன மேல் நோக்கி எழும் என்றும், விலங்கு விலங்கு ஓடும் பால்சீர் - விலங்குச் சீருடையது நெடுவிலங்கும் குறுவிலங்குமாய்ப் பக்கஞ்

களிலே ஓடும் இருவகைச் சீர்களுமாம்; கீழால்சீர வீழும் அவை-கீழாகச் சீர்களையுடைய கீழ்நோக்கி விழுபவைகளாம்; என்னினும் ஆவது என் - என்று பாரித்துக் கூறினையேனும் அவற்றாலாம் பயன் என்னையோ? என்றாள் என்க.

(வி - ம்.) சீர் எனினும் பால் எனினும் ஒன்று. விலங்கு-குறுக்கு.

ஐய! நீ தீயும் உயிரும் மேல் சீருடைய வென்றும், காற்று விலங்கு சீர் உடைய வென்றும் நீரும் நிலமும் கீழ்ச் சீருடையன வென்றும், இவற்றுள் மேற்சீருடையன, மேனோக்கியெழும் என்றும், விலங்குசீர் உடையது குறுவிலங்கும் நெடுவிலங்குமா யோடும் என்றும், கீழ்ச் சீருடையன கீழ்நோக்கி விழும் என்றும் இவ்வாறு பாரித்துச் சொல்லினும் இவையெல்லாம் பயனில் கூற்றேயாம் என்றவாறு. (சுக)

இதுவுமது

எகஅ. தீயு முயிருந் தமக்காய திசையி னாலே
போயு மொழியா திவணிற்றல் பொருந்த மன்றால்
வீயும் வகையும் வினையாக்கும் திறமு மெல்லாம்
நீயு மவற்றை நினைவாயுள வாக வன்றே.

(இ - ள்.) தீயும் உயிரும் - ஐய! நெருப்பும் உயிரும் மேனோக்கி எழுமெனின்; தமக்கு ஆய திசையினால் போயும் ஒழி யாது - தமக்கியன்ற அத்திசைவழியாக முழுதும் எழுந்து போகாமல்; இவண் நிற்றல் பொருந்தம் அன்று - இவ்வுலகத் திருத்தல் பொருத்தமில்லை; வீயும் வகையும் வினை ஆக்கும் திறமும் - இனி, உயிர்கட்கு இறத்தலும் வினை வழிச் சென்று பிறத்தலும் இன்ன பிறவும் ஆகிய; எல்லாம் உளவாகவன்றோ அவற்றை நினைவாய் - எல்லாம் உள்ளனவாகவல்லவோ கருது வாய்; ஆயின் அவை விலங்கு சீராயும் போய்ப் பிறக்கவேண்டு மன்றோ? என்றாள் என்க.

(வி - ம்.) உயிர் வீயும் வகையும் என அதிகாரத்தானும் குறிப் பானும் வருவித்தோதுக. ஆயின் அவை விலங்கு சீராயும் போய்ப் பிறக்க வேண்டுமன்றோ? என்பது குறிப்பெச்சம். விலங்கு சீராகப் போய்ப் பிறத்தலாவது - தாமிறந்த வுலகத்திலே பிறத்தல்.

தீயும் உயிரும் மேற்சீர் எனின், எப்பொழுதும் மேனோக்கிப் போவதல்லது இவ்விடத்து நிற்கப்பெறா உயிர் மேனோக்கியேறுமாயின் யாம் இந்நெடுநாள் திங்கள் மண்டிலத்துச் செல்லாதவாறு எங்ஙனே? அது நிலத்தொடு கூடுதலின் கீழ்நோக்கியும் விழுகின்றதன்றோ? உயிர் மேனோக்கிப் போமெனின் இதற்கு வினைவழி வருகின்ற இறத்தலும் பிறத்தலும் உளவாயவழி விலங்கு சீராகவும் போய்ப் பிறத்தலும் இறத்தலும் நினக்கும் உடம்பாடாமன்றோ? இங்ஙனமாதலின் இவை யெல்லாம் பயனில் கூற்றாம் என்றவாறு. (சுo)

## இதுவுமது

௭௧௯. தென்றை யுளையத் திசைதானுறப் போய காற்றேற்
பின்றை யொருநாட் பெயராததோர் பெற்றி யஃதான்
முன்றை தழுவி முனிவாக்கும் வடந்தை யஃதா
வின்றைப் பகலே யிதன்மெய்ம்மை யிசைக்கிற்றியோ.

(இ - ள்.) தென்றை உளையத் திசைதான் உறப் போய காற்று - ஐய! காற்று விலங்கு சீருடையதாயின், தென்றிசைக் கண்ணதாய் ஒலிபுண்டாம்படி வடதிசைக்கண் மிக்குச் சென்ற தென்றற் காற்று; பின்றை ஒரு நாள் பெயராதது ஓர் பெற்றியஃதால் - பின்னொரு காலத்தே அவ்வடதிசையினின்று மீண்டு வாடையாய் வாராத தன்மையுடைத்தாதல் வேண்டும்; தைமுன் தழுவி முனிவு ஆக்கும் வடந்தை அஃதா - இனி, தைத்திங்களின் முன் திங்களைத் தழுவித் தோன்றி நம்மை வருத்தும் வாடைக் காற்றும் அங்ஙனமே மீண்டும் தெறகி னின்றும் வடக்குநோக்கிச் செல்லாததாதல் வேண்டும்; இன்றைப் பகலே இதன் மெய்ம்மை இசைக்கிற்றி - எனவே இந்த இப்பகலி லேயே தென்றல் வாடையாதலும் வாடை தென்றல் ஆதலும் எங்ஙனம்? இதன் உண்மையை ஆராய்ந்து சொல்லுக! என்றுள் என்க.

(வி - ம்.) முன்றை-முன்+தை, தைமுன் என மாறுக. வடந்தை-வாடைக் காற்று. அஃதாக என்றபாலது ஈறுகெட்டு நின்றது.

காற்று விலங்கு சீரதாயின் தென்றல் வடக்குப் போனல் மீளா தொழிதல் வேண்டும்; மீளின் வட்டச் சீரது ஆதல் வேண்டும். மீளின் நின்னுடைய மேற்கோட்கு முரணாய்ப் பொருள் நிலையாமையுடைத் தென்னும் கொள்கை நிலையுறுவதாம்; தைத்திங்களுக்கு முன்னுண் டாகிய வாடை தெற்குப் போகின்ற பொழுது, முன் வடக்குப் போனது மீண்டதோ? அது பிறிதொரு காறறேு? துருத்தி யூதப் பிறந்த காற்று மேனோக்கி எழுவதூஉம், மூச்சுக்காற்று முதலியன கீழ்நோக்கி விழுவதூஉம் காண்கின்றிலையோ? இதன் மெய்ம்மையை இன்றே அறிந்து கூறுதி என்றவாறு. (௬௧)

## இதுவுமது

௭௨0. முன்சென்று வீழு நிலநீரை முகிலு ணின்று
பின்சென்று பெய்யுந் துளிதானும் பெருந்த வத்தா
யென்சென்ற தெய்துந் திறந்தன் னையெனக் குணரா
நின்சென்ற வாற்று லுரைத்தானெறி யாற்ற நன்றே.

(இ - ள்.) பெருந் தவத்தாய் - பெரிய தவத்தினையுடைய துறவியே!; நில நீர் முன்சென்று முகிலுள் நின்று - நிலத்தின்

கண்ணதாகிய நீர் முன்னர் ஆவியாக மாறி முகிலின்கண் நிலை பெற்று நின்று; பின் சென்று பெய்யும் - பின்னர் அம்முகில் திசைகளிலே சென்று மழை பொழியும் அல்லவோ?; வீழுந் துளிதானும் என் - முகிலினின்றும் நிலத்திலே வீழ்கின்ற மழைத் துளிதானும் முன் ஆவியாகச் சென்ற நீரேயன்றிப் பிறி தொன்றனையோ?; அது சென்று எய்தும் திறந்தன்னை - நீர் கீழ் நோக்கி வீழுமியல்பிற்றாயின் அந்த நீர் முன் நிலத்தினின்று மேனோக்கி எழுந்து முகிலாமாறு எங்ஙனையோ? அதனை; சென்ற ஆறால் - நீ செல்கின்ற ஆசீவக நெறியாலே; உணர எனக்கு உரைத்தால் - யான உணரும்படி நீ எனக்குக் கூறுவாயாயின்; நின்நெறி ஆற்ற நன்று - நினது சமய நெறியும் மிகவும நன்றென் பேன் காண்! என்றாள் என்க.

(வி - ம்) வீழுந்துளி தானும் எனவும், நின்னெறி எனவும் இயைத்துக் கொள்க. ஆற்ற - மிகவும். நீரை, ஐ : சாரியை.

நிலமும் நீரும் கீழ் நோக்கி வீழ்கின்றனவாயின் நிலத்தில் கண்ண தாகிய நீர் மேனோக்கி எழுந்து சென்று முகிலாய தெங்ஙனம்? இதற்கென் சொல்லுதி! என்றவாறு. (௯௨)

## காலம் இல்லை என்பதன் மறுப்பு

௭௨௧. பாலெங்கு மோதப் படுகின்ற பதப்பொ ருட்குக்
காலங்கள் சொல்லா யதுதானுன் கணக்கு மென்றாற்
சீலங்கள் காத்துக் குணனின்மையைச் செப்பு கின்றாய்
மாலிங் குடையை யதுதீர்க்கு மருந்து முண்டோ.

(இ - ள்.) எங்கும் பால் ஓதப்படுகின்ற பதப்பொருட்கு - இன்னால் எவ்விடத்துக் பால் கூறப்படுகின்ற சொல்லுக்குப் பொருளாகிய நில முதலிய ஐந்து பொருள்களுக்கும்; காலங்கள் சொலலாய் - இறடபு நிகழவு எதிர்வு ஆகிய காலங்கள் உண்டென்று கூறுகின்றிலை; அதுதான் உன் கணக்கும் என்றால் - காலம் என்பதொன்றில்லை என்பதுவே நின் மேற்கோளாயின்; ஆம் பொழுதாம் என்புழிக் காலமுளதாகவுங் கூறுகின்றனை; சீலங்கள் காத்து - நீ நல்லொழுக்கங்களைப் பேணி வைத்தும்; குணன் இன்மையைச் செப்புகின்றாய்-அவற்றிற்குப் பயனிலாமையையும் கூறுகின்றனை; இங்கு மால் உடையை - இவ்வாறு முரண்படப் பேசுமளவு நீ பித்தேறப் பெற்றனை; அது தீர்க்கும் மருந்தும் உண்டோ - அப்பித்த நோய் தீர்க்கின்ற மருந்தும் உலகின்கண் உளதேயோ? இல்லை என்றான் என்க.

(வி - ம்.) பாலெங்கும் ஓதப்படுகின்ற பதப்பொருட்குக் காலங்கள் சொல்லாய் அதுதான் உன் கணக்கும் என்றால், என்புழி ஆண்பால் முதலிய ஐவகைப்பால் யாண்டும் கூறப்படுகின்ற வினைச்

சொற் பொருள்களுக்கு நீ காலங்கள் கூறுதொழி. காலம் இல்லை என்பதே உன்கணக்காயக்கால், எனவும் ஒரு பொருள் கொள்க.

பாலும் சீரும் ஓதப்படுகின்ற ஐவகையணுக்களுக்கும் ஒரு காலமுளதாகச் சொல்லாய்; ஆம் பொழுதாம் என்று ஆக்கமுறைமையுஞ் சொல்லுதி. நல்லொழுக்கங்களைப் பேணல் வேண்டுமென்று சொல்லி அவற்றிற்குப் பயனின்மையுஞ் சொல்லுதி. இவ்வாறு பித்தேறிச் சொல்லுகின்ற நின் பித்தந் தீர்த்தற்கு மருந்தில்லை என்றவாறு. (௬௧)

நீலகேசி பூரணனுக்கு அறங்கூறுதல்

௭௨௨. நோயுற்ற நுன்போற் குணமொன்றில ளைய யானும்
பேய்மற் றிவடா னெனக்கண்டோர் பெரிய வன்று
னீமற்றி துண்ணேன் றறநல்க விளங்கப் பெற்றேன்
வாமத்து ணீயும் மதுபோலு மருந்தில் லையே.

(இ - ள்.) நோய் உற்ற நுன்போல் குணம் ஒன்று இலன் ஆய யானும் - ஐய! இது கேள்! மயக்கமாகிய நோய் கொண்ட உன்னைப் போலவே நற்பண்பு சிறிதும் இலேனாகிய யானும்; கண்டோர் இவள் தான் பேய் என் - என்னைக் கண்டோரெல்லாம் இவள் பேய் என்றிகழ்ந்து அஞ்சாநிற்பத் திரிதரும் பொழுதில்; பெரியவன் தான் - தவத்தாற் பெரியவனாகிய முனிச்சந்திர பட்டாரகன் என்பான் அடிச்செபாலருள் கூர்ந்து; நீ இது உண் என்று - நீ நின் பிறவிப்பிணி தீரும்படி இந்தமருந்தினை உண்பாயாக! என்று திருவாய் மலர்ந்தருளி, அறம் நல்க - ஆருகதர் அறமாகிய அமிழ்தத்தை வழங்கியதாலே; விளங்கப் பெற்றேன் - யான் மெய்யுணர்வு பெற்று எல்லாப் பொருள்களும் ஐயந்திரிபற என்னுள் விளங்கப் பெற்றேன் காண்; நீயும் வாமத்து உண் - நீயும் நின்மயக்க நோயும், அதனாலுறும் பிறவி நோயும் தீர வேண்டின் அருகன்பால் அன்பாகிய இம் மருந்தினை உண்பாயாக! ; அது போலும் மருந்து இல்லை - அதற்கிணையாகிய மருந்து பிறிதொன்று மில்லை என்றாள் என்க.

(வி - ம்.) வாமத்து-வாமன்பாற் செலுத்தும் அன்பாகிய மருந்து. ஐய! யானும் பண்டு நின்னைப் போலவே குணமிலனாகிக் கண்டார்க்குப் பேயாய்த் திரியப் பெருந்தவன் நீ இம் மருந் துண்ணென்று அறவமிழ்தருளப் பெற்றேன். அந்த அற மருந்திற்கு முதன் மருந்தாகிய அருகன்பா லன்பு கோடல்போலும் பிறிதொரு மருந்தில்லை என்றவாறு. (௬௨)

இதுவுமது

௭௨௩. நோயைத் துணிந்தே யுறுநோய்முத லுடியங்நோய்க்
காய மருந்தே யறிந்தூட்டுமஃ துண்டு காட்டிற்
பாய மறக்கும் படியாமது பல்லு யிர்க்கும்
கூயத்தி னென்னை குரவருப தேச மென்றாள்.

(இ - ள்.) பல் உயிர்க்கும் - பலவாகிய உயிர்களுக்கும்; நோயைத் துணிந்து - மருத்துவன் முதற்கண் நோய் இன்னது என ஆராய்ந்தறிந்து; உறும் நோய் முதல் நாடி - உற்ற அந் நோயின காரணத்தையும் ஆராய்ந்தறிந்து; அந்நோய்க்கு ஆய மருந்து ஊட்டும் அஃது உண்டு காட்டினன் - அந்நோய் தீர்த்தற் கியன்ற மருந்தினை உண்பிப்பானாக நோயாளன் அம் மருத்துவன் அறிவித்தாங்கு அம் மருந்தினைத் தவறின்றி உட்கொண்டு காட்டிய விடத்து; பாய மறுக்கும்படி ஆம் - அம் மருந்து அவன் நோயைத் தீர்ப்பதனை ஒப்பதாம்; குரவர் கூய் உபதேசம் - உயிர்களை நல்லாசிரியர் அழைத்துச் செய்யும் செவியறிவுறூஉ; அதனின் என்னை என்றாள் - அச்செவியறிவுறூஉவினும் சிறந்தது வேறென்னையோ? என்றாள் என்க.

(வி - ம்.) பாயம் - பாசம்; பற்று; பிணி.

"நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்" (குறள் - ௯௪௮)

என்னும் திருக்குறளை ஈண்டு நினைக.

நோயையும் நோய்க் காரணத்தினையும் நோய் மருந்தினையும் அறிந்து மருந்துண்டால் நோய் தீருமாறு போலப் பிறப்பினையும் அதன் காரணத்தையும் அதன் பகையாகிய பிறவி தீர்க்கும் மருந்தாகிய குரவர் செவியறிவுறூஉவாகிய அறவமிழ்தத்தையும் அறிந்து பயன் படுத்தின் பிறவிப் பிணிதீரும். பிறவிப் பிணிக்கு அதனினும் சிறந்த மருந்து பிறிதொன்றுமில்லை என்றவாறு. (௯௬)

இதுவுமது

௭௨௪. சாதி முதலாப் பிணிதாமிவை யப்பி ணியிற்
காதி யறியில் லவைதீவினை யூண தனுற்
றீதின் றிதனில் லழுந்தல்திரி தோடத் தினால்
வேத னையது தீர்ப்பது மெய்யுணர் வாமே.

(இ - ள்.) பிணிதாம் சாதிமுதலா இவை - பூரண! நோய்கள் என்று சொல்லப்படுவன பிறப்புப் பிணி மூப்புச் சாக்காடாகிய இவையேயாம்; அப் பிணியிற்கு ஆதி அறியில் - அந் நோய் களுக்குக் காரணத்தை ஆராய்ந்தறியுங்கால்; அவை தீவினை ஊண் - அக்காரணங்கள் தீய வினைகளைச் செய்து கோடலேயாம்; இதனில் அழுந்தல் - இருள்சேர் இருவகை வினைகளினும் உயிர்கள் அழுந்துதல்; திரி தோடத்தினால் - பொய்யறிவு பொய்க்காட்சி பொய் யொழுக்கம் என்னும் இந்த மூவகைக் குற்றமுண்மையாலாம்; தீது இன்றி வேதனையது தீர்ப்பது - தீங்கேதுமில்லாமல் அந் நோய்த் துன்பங்களைத் துவரத் தீர்ப்பது; மெய்யுணர்வு ஆம் - மெய்யுணர்வே யாகுங்காண்! என்றாள் என்க.

(வி-ம்.) சாதி-பிறப்பு. சாதி முதலாகிய பிணி என்க. ஆதி - காரணம். தீவினையூண் - தீவினை யுண்ணல். அஃதாவது - தீவினை யெய்துதல் என்க. தீவினை என்றது நல்வினை தீவினை என்னு மிரண்டையும் என்க. தீதின்றி - தீதின்று எனத் திரிந்தது.

நோயாவன பிறப்பு முதலியன. அவற்றிற்குக் காரணம் வினைகள், அவற்றிற்குக் காரணம் பொய்யறிவு முதலியன. அந்த நோய்க்கு மருந்து மெய்யுணர்வேயாம் என்றவாறு. இதனோடு,

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானா மாணாப் பிறப்பு" (குறள் - ௩௫௧)

எனவும்,

"இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு" (குறள் - ௩௫௨)

எனவும் வரும் திருக்குறள்களையும் நோக்குக. (௬௬)

நீலகேசியின் அறவுரைகேட்டுப் பூரணன் கூறுதல்

௭௨௭. மானின்ற நோக்கின் மறவேனெடுங் கண்ணி னல்லாய்
மேனின்ற வெல்லா மிகநல்லவிம் மெய்யுணர்ச்சி
தானின்ற தன்மை தவிராதுரைக் கிற்றி யேனின்
னூனின்ற வாறே பொருணோக்குவன் யானு மென்றான்.

(இ - ள்.) மான்நின்ற நோக்கின் மறவேல் நெடுங் கண்ணின் நல்லாய் - மான்போன்ற பார்வையினையும் மறமிக்க வேல் போன்ற நெடிய கண்ணினையுமுடைய நல்லாய்!; மேல் நின்ற எல்லாம் மிக நல்ல - மேல் நீ கூறியவை எல்லாம் பெரிதும் நன்மையுடையனவே யாம்; இம் மெய்யுணர்ச்சிதான் நின்ற தன்மை - இந்த மெய் யுணர்ச்சியினைப் பெறுகின்ற திறத்தினை; தவிராது உரைக்கிற்றி யேல் - நீங்காதவாறு நீ கூறுவாயாயின்; நின் நூல் நின்றவாறே - நின்னுடைய ஆருகத நூல் கூறியவழியே; யானும் பொருள் நோக்குவன் என்றான் - யானும் அப் பொருள்களை நன்குணர்ந் துய்குவேன் காண்! என்று இரந்து நின்றான் என்க.

(வி - ம்.) நல்லாய்! நீ இதுகாறும் கூறியவை யெல்லாம் மிகவும் நன்மை பயப்பனவே. இனி, மெய்யுணருந் திறஞ் சொல்லுதியாயின் யானும் நின் நூலின் வழி நின்று மெய்யுணர்ந்துய்வேன்? கூறி யருளுதி? என்றிரந்தானென்றவாறு. (௬௭)

நீலகேசி அவனுக்கு மெய்யுணர்த்துதல்

௭௨௮. நின்ற விரலு நிலையாழ்ந்து முடங்க லாயிற்
சென்றவ் விரலும் மேனத்தானின் கூற்ற தாயிற்
றென்றவ் விரலே யுறவுண்மையு மின்மை யும்மா
மென்றவ் விரலே யிதுவென்றனள் வேற்க ணல்லாள்.

(இ - ள்.) வேல்கண் நல்லாள் நின்ற விரலும் நிலை ஆழ்ந்து முடங்கல் ஆயின் - அதுகேட்ட வேல்போலும் கண்ணையுடைய நீலகேசி தன்கைவிரலுள் ஒருவிரல் நின்றவாறு காட்டிப் பூரணகேள்; நின்ற இந்த விரலும் முடக்கியவழி - அதன் நின்ற தன்மை ஆழாநிற்ப முடக்கிய தன்மை மிதப்பதாக ஆயின போழ்து; சென்று அவ்விரலும் எனத்தான் நின் கூற்றது ஆயிற்று - அவ் வாழ்தல் மிதத்தலோடு சென்று அந்த வொருவிரலே மாறுபாடுற்றுத் தானுமாகி நின்று பொருளும் அனை ஆழ்தலும் மிதத்தலும் என்னும் நின் மேற்கோட் கிசைவதாயிற் றன்றோ?; ஒன்று அவ் விரலே உறல் - மீண்டும் அந்த விரல்தானே எய்துதல்; உண்மையும் இன்மையும் ஆம்என்று - ஒரு நிலைக்கண் உள்ளதுமாய் மற்றொரு நிலைக்கண் இலதுமாம் என்று ஆகுமன்றோ?; அவ் விரலே இது என்றனள்-அந்தநிலை வேறுபாடுகளை எய்தியது இந்த விரல் அன்றோ? இவ்வாற்றால் பொருள் ஒருவழி நிலையுதலுடைத்து ஒருவழி நிலையாமை யுடைத்தென்னும் மெய்ம்மையை யுணர்ந்து கொள்வாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) நீலகேசி தன் கைவிரலுள் ஒருவிரல் நின்றவாறு காட்டி அவ்விரலை முடக்கி அதன் நின்றதன்மை ஆழ, முடங்கிய தன்மை மிதப்ப அவ் விரல் முடக்கத்தை யடைந்தவாறு காட்டி, அவ்விரு கூறுமாய் நிலைமாறிய தொருவிரலேயென்று சொல்லி, இவ்வாறே சில்நிலை ஆழவும், சிலநிலைமிதப்பவும் பொருள் நிலைபேறுடையதாகலின் பொருள் நிலையுதலும் நிலையாமையும் உடைத்தென்னும் வாய்மையை விளக்கிக் காட்டி அவ் விரல்தானே ஒருவழியுளதாயும் ஒருவழியிலதாயும் இருந்தவாறுணர்த்தி அவனைத் தெளிவித்தாள் என்றவாறு.

விரல் ஒருவழியுளதாதல்-முடக்கிய நிலையிலிருப்பதாதல்; ஒருவழி இலதாதல் - நின்றநிலையில் இல்லையாதல் என்க. (௬௮)

பூரணன் பாராட்டுரை

௭௨௯. ஆழ்ச்சி யொருபா லதுவல்லன தம்மோ டாழா
தேழ்ச்சி யொருபா லதுதன்னொடு மின்ன தென்னச்
சூழ்ச்சி யமைந்த துணைத்தோளியர் சொற்க ளென்று
தாழ்ச்சி மனத்தா லிதுதத்துவ மென்ற னன்ஞ.

(இ - ள்.) துணைத்தோளியர் - இரண்டாகிய தோள்களையுடைய இந்த நீலகேசியார்; தமது ஒரு விரலை நின்ற நிலையிற் காட்டிப் பின்னர் முடக்கியவாராம்; ஆழ்ச்சி ஒருபாலது - இந்த விரல் ஒரு பக்கத்தே ஆழ்ச்சியையுடைத் தென்றும்; ஒருபால் அது அல்லன தம்மோடு ஆழாது - அந்த விரலே மற்றொரு நிலையிலே எஞ்சிய விரல்களோடே ஆழாமல்; எழ்ச்சி தன்னொடு-எழுச்சியையுடையதாகக் காட்டி; இன்னது என்ன - இவ்வடி

யாளங்களின் கருத்தின்னது என்றும் கூறிய சொற்கள்; சூழ்ச்சி அமைந்த சொற்கள் - பெரிதும் ஆராய்ச்சித்திறம் வாய்ந்த சொற்களேயாகும்; என்று - என்று மிகவும் பாராட்டி; தாழ்ச்சி மனத்தால் - அமைதியுற்ற நெஞ்சத்தோடே; இது தத்துவம் என்றனன் ஆ - இது வாய்மையுடைய தத்துவம் என்று மகிழ்ந்தானுக! என்க.

(வி - ம்.) அதுகேட்ட பூரணன் ''நீலகேசியார் தமது விரலொன்றனை நிமிர்த்தியும் மடக்கியும் காட்டிப் பொருளின்கண் ஒருநிலை ஆழ்ந்ததாகவும் ஒருநிலை மிதந்ததாகவும் பொருள் என்றொன்றும் நிலையுதலுடைத்தாதலும் அவ் விரலின்கண்ணே கூட்டிக் காட்டி இங்ஙனமே பொருள் ஒருவாற்றால் நிலையுதலும் ஒருவாற்றால் நிலையாமையும் உடைத்தென்னும் மெய்ம்மையை எனக்கு விளக்கிக் கூறிய சொற்கள் பெரிதும் வித்தகமுடையன'' என்று பாராட்டி உள்ளம் அமைதியுற்றவனாய் இதுவே தத்துவம் என்றுணர்ந்தான் என்றவாறு. (௬௬)

நீலகேசி பூரணனுக்குக் கூறுதல்

௭௨௮. போய்ந்நின்ற வெல்லாம் புரைத்தாயினிப் பூர ணன்னே
மெய்ந்நின்ற பெற்றி யறிந்தாயிதன் மேலு நன்றாக்
கைந்நின்று முண்டுங் கடைப்பள்ளி வழியு மாக்கிச்
செய்ந்நின்று நீசெய் தவந்தானெனச் செப்பி னளே.

(இ - ள்.) பூரணனே - பூரண கேள்; இனி நின்ற பொய் எல்லாம் புரைத்தாய் - நீ இப்பொழுது நின்பால் நிலைபெற்றிருந்த பொய்ம்மை எல்லாவற்றையும் குற்றமுடைத்தாகவும்; மெய்நின்ற பெற்றி அறிந்தாய் - மெய்ம்மை நிலை பெற்றிருந்ததன் தன்மையையும் நன்கனம் அறிந்துகொண்டனையல்லையோ; மேலும் நன்றா கைந்நின்றும் - இனி எதிர்காலத்தேயும் நன்றாகத் தியான நிலைக்கண் நின்றும்; உண்டும்-அதனால் எய்துகின்ற பேரின்பத்தை நுகர்ந்து கொண்டும்; பள்ளிக்கடைவழியும் ஆக்கி - இத்தவப் பள்ளியின் கண்ணே நந்தம் ஆருகதசமய நெறியின்கண் நின்னைப் பின்பற்றி நிற்கும் நன்மாணக்கர் பலரையும் பயிற்றுவித்து; நீ செய்தவந்தான் செய்து என்று செய்எனச் செப்பினள் - நீ செய்தற்குரிய தவவொழுக்கத்தின்கண் நின்று தவஞ்செய்துய்வாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) எல்லாம், எஞ்சாமைப் பொருட்டு. புரைத்து - குற்றமுடையது. கைநிற்றல் - தியானத்திருத்தல். செய்தவம்; வினைத்தொகை.

நீலகேசி பூரணன் மனநிலையை யுணர்ந்து 'பூரண! நீ இப்பொழுது அறியாமை நீங்கி மெய்யுணர்ந்தனை, ஆதலால், இனி, இப் பள்ளியிலிருந்து தவஞ்செய் தின்புறுக; ஆருகத நெறியையும் நின் மாணவர் வாயிலாய் உலகினர்க்கு அறிவுறுத்துவாயாக!' என்று பணித்தாள்; என்றவாறு.

கடைப்பள்ளி வழியுமாக்கி யென்பது, இப் பள்ளியிடத்து நின் வழிச் சிலரை ஆருகதராக்குக என்றவாறு. பள்ளிக் கடை என்றது முன்பின் மாறி நின்றது. (௭௦)

இதுவுமது

௭௨௬. கல்லா தறிந்த கடவுள்ளிறை யாகு மெய்ந்நூல்
சொல்லானு மல்ல னவன்சொல்லின தாகு மும்மூன்
றெல்லாப் பொருளுந் தம்பான்மை யியல்பு மென்று
பொல்லாத போக்கி யினிப்பூரண சென்மி னென்றாள்.

(இ - ள்.) பூரண - பூரணனே!; கல்லாது அறிந்த கடவுள்- ஏனையோர் கற்றறிதல் போன்று கற்றறிதலின்றி இயல்பாகவே தனது மெய்யுணர்வாலே உணர்ந்துள்ள அருகக்கடவுளே; இறை ஆகும் - வாய்மையான கடவுள் ஆவன்; அவன் மெய்நூல் சொல் லானும் அல்லன்-அவ்வருகக்கடவுள் நின் மற்கலிதேவனைப் போல மெய்ந்நூல்களைத் திருவாய்மலர்ந்தருளாது வாளாவிருப்பவனு மல்லன்காண்!; சொல்லினது மும்மூன்று ஆகும் - அவ்வருகன் திருவாய்மலர்ந்தருளிய ஆகமம் ஒன்பது திறத்தானியன்றதாகும்; இனி எல்லாப் பொருளும் தம்பான்மை இயல்பும் என்று-இனி நீ அவ்வாகமங்களிற் கூறப்பட்ட எல்லாப் பொருள்களையும் அவற் றின் இயல்புகளையும் நன்குணர்ந்து; பொல்லாத போக்கி - நினது அறியாமைகளை யெல்லாம் அகற்றி; சென்மின் என்றாள் - அந் நெறிக்கண்ணின்று ஒழுகுக என்றாள் என்க.

(வி - ம்.) பூரண! கற்றலின்றி முகிற்குழாம் நீங்க ஞாயிற்றொளி பரவினாற்போல அறியாமை நீங்கப் பரவி விளங்குவதாகிய கேவல ஞானத்தாலே எல்லாப் பொருள்களையும் உணர்ந்து மேம்பாடெய்து தலாலே முற்றறிவுடையவனே கடவுளாவான்; அவன்றான் நூல் கூறானு மல்லன்; அவனருளிச்செய்யப்பட்ட ஆகமந்தானும் ஒன்பது திறத்தா னியன்றது. நீ அவற்றை உணர்ந்து கடைப்பிடித் தொழுகி அறியாமை நீங்கப் பெற்றுய்வாயாக! என்று செவியறிவுறுத்தனள் என்றவாறு.

ஆகமம் ஒன்பதாவது - அங்காகமம், பூருவாகமம், பிரகீர்ணகமம் என்றும் மூன்றனையும் உரை, பெயர், கருத்து என்னும் மூன்றானும் உறழ ஒன்பதாம் என்க. (௭௧)

ஆசீவக வாதச் சருக்கம் முற்றும்.

---

ஏழாவது

# சாங்கிய வாதச் சருக்கம்

நீலகேசி சமதண்டத்தினின்றும் புறப்பட்டுச் சென்று அத்தினபுரம் என்னும் நகரத்தை எய்துதல்

எகூo. ஆங்கவன் சோல்லவவ் வத்தின புரத்து
ளோங்க வோருகோடி நட்டுரைக் கிற்பவ
ஞங்க ணெவர்க்கு மறையேன் றிருந்தவச்
சாங்கியன் றன்னைத் தலைப்பெயச் சென்றாள்.

(இ - ள்.) ஆங்கு அவன் சொல்ல - இனி நீலகேசி அச் சமதண்டத்தின்கண்ணிருந்த அந்தப் பூரணன் என்பான் தனக்குக் கூறவுணர்ந்து; அ அத்தினபுரத்துள் - அப்பூரணன் கூறிய அத்தினபுரம் என்னும் நகரத்தின்கண்; ஒரு கொடி ஓங்க நட்டு - தன் வெற்றிக் கறிகுறியாக ஒரு கொடியினை உயர்ந்து தோன்றும் படி நட்டு வைத்து; உரைக்கிற்பவன் - தன் சமய நெறியினை யாவர்க்கும் செவியறிவுறுத்துபவனும்; ஆங்கண் எவர்க்கும் - அந் நகரத்தில் வாழ்கின்ற எச்சமயத்தார்க்கும்; அறைஎன்று இருந்த - அறையோ! என்று கூவித் தன்னோடு சொற்போருக்கு வலிந் தழைப்பவனும் ஆகிய; அச் சாங்கியன் தன்னை - அந்தச் சாங்கிய சமயக்கணக்கனை; தலைப்பெயச் சென்றாள் - கண்டு அவனோடுசொற்போர் புரியக் கருதிச் சென்றாள் என்க.

(வி - ம்.) அவன் - பூரணன். கொடி - வெற்றிக்கொடி, அறை கூவலுக்கு அறிகுறியாகிய கொடியுமாம். எவர்க்கும் - எச்சமயத்தினர்க்கும். அறை - வலிந்து போருக்கழைத்தற் கறிகுறியாயதொரு சொல். இதனை,

‘ பிறையெயிற் றெரிக்கட் பேழ்வாய்ப் பெருமயிர்ப் பைம்பொற் பன்றி, அறையெனத் திரியும் ஆய்பொற் பூமியி னிறைந்து மன்னர் உறுகணை யொன்றும் வில்லு முடன்பிடித் துருவ நேமிப் பொறிதிரி வதனை நோக்கிப் பூமுடி துளக்கி னின்றார்'' எனவருஞ் சிந்தாமணியினுங் (மண் - எகூ.) காண்க.

நீலகேசி அத்தின புரத்தின் கண் சாங்கிய சமயக் கணக்கன் ஒருவன் ஏனைச் சமயத்தாரை அறைகூவிச் சொற்போர்க் கழைத்து அதற்கு அறிகுறியாகக் கொடியுயர்த் திருப்பதனைப் பூரணன் கூறக் கேட்டு அச் சாங்கியனோடு சொற்போர் நிகழ்த்தக் கருதி அந் நகர்க்குச் சென்றாள் என்றவாறு. (க)

நீலகேசி அந்தச் சாங்கியனைக் காண்டல்

எ௬க. சென்று ளவன்றன் சிரத்தையைக் கண்டோத
நின்று ளவன்று னெறிபகர் கின்றனன்
பின்றான் பிரளையத் தாக்கமும் பேர்ச்சியு
மொன்று வகையா லுரைகளை யோட்டா.

(இ - ள்.) சென்றாள் - அங்ஙனம் சென்ற நீலகேசி; அவன் சிரத்தையைக் கண்டு - அச் சாங்கியன் தன் சமயத்தின்பாற் கொண்டுள்ள நம்பிக்கையை அவன் செயல் வாயிலாயுணர்ந்து கொண்டு; பின் ஓத நின்றாள் - பின்னர் அவன்றான் தன் மாண வர்க்குத் தன் சமய நூலை ஓதுவிப்ப அம்மாணவர் ஓதுவதனைக் கண்டு நின்றனள்; அவன்தான் நெறி பகர்கின்றனன் - அச் சாங்கியன்றானும் தனது சமய நெறியை அம் மாணவர்க்குக் கூறுகின்றவன்; ஆக்கமும் பிரளையத்துப் பேர்ச்சியும் - உலகம் தோன்றுமாறும் நிற்குமாறும் அழிந்தொழியுமாறும்; ஒன்று வகையால் உரைகளை ஒட்டா - பொருந்தாத வகையினாலே தன் சமய மொழிகளாலே கூறினான்; என்க.

(வி - ம்.) சிரத்தை-நம்பிக்கை. அவன் ஓதுவிப்ப மாணவர் ஓதக் கண்டு நின்றாள் என்க. பிரளையம் - அழிவு. பிரளையத்துப் பேர்ச்சி எனமாறுக. ஓட்டுதல் - கூறுதல்.

அத்தினபுரத்துச் சென்ற நீலகேசி அச் சாங்கியன் இருக்கையிற் சென்று அவன் மாணவர்க்கு ஓதுவிப்ப அவர் ஓதக் கண்டு நின்றாளாக, அப்பொழுது அச்சாங்கியன் தன் மாணவர்க்கு உலகம் தோன்று மாற்றையும் நிற்குமாற்றையும் அழியுமாற்றையும் பொருந்தாதவொரு வகையினாலே அறிவுறுத்திக் கொண்டிருந்தான் என்றவாறு. (௨)

சாங்கியன் தத்துவமுரைத்தல்

எ௬உ. பாலோத்து நின்ற பரமாத் துமனோடு
மூலப் பகுதியு மல்லாப் பகுதியு
மேலோத் தியன்ற விதிவிகற் போடு
நூலிற் கிடந்தவ நுண்பொரு ளன்றே.

(இ - ள்.) பால் ஒத்து நின்ற பரம ஆத்துமனொடு- அங்ஙனம் தத்துவம் கூறுகின்ற சாங்கியாசிரியன் அம்மாணவர்க்கு எல்லாப் பக்கங்களினும் ஏற்றிழிவின்றி ஒத்துநிற்கின்ற பேருயிர்த் தத்துவத்தையும்; மூலப் பகுதியும் - பிரகிருதி தத்துவத்தையும், மேல் ஒத்து இயன்ற அல்லாப் பகுதியும் - மேலே இவற்றோடு தத்துவங்களாக ஒருப்பட்டு நின்ற மான் முதலிய ஏனைய தத்து வங்களையும், விதி விகற்போடு - அவை தோன்றும் முறையோடும் அவற்றிடைக் கிடக்கும் வேற்றுமைகளோடும் கூறி; நூலில் கிடந்த

அ நுண் பொருள் என்று - இவையெல்லாம் நம் சாங்கிய நூலிற் சொல்லப்பட்ட அந்த நுண்ணிய தத்துவங்களாம் கண்டீர்! என்றும் (கூறினன்) என்க.

(வி - ம்.) பால்-பக்கம். ஆத்தும தத்துவம் யாண்டும் நிறைந்திருத்தலின் பாலொத்து நின்ற பரமாத்துமன் எனப்பட்டது. மூலப்பகுதி - பிரகிருதி. விதி - அவை தோன்றுமுறை. விகற்பு-வேற்றுமை.

அச் சாங்கியன் மாணவர்க்கு ஆத்துமனும் மூலப்பகுதியும் பிறவுமாகிய தத்துவங்களை அறிவுறுத்து இவையெல்லாம் நம் மெய்ந் நூலிற் கூறப்பட்ட நுண்பொருள்களாம் என்றுணர்த்தினன் என்றவாறு.

நுண் பொருள் என்றே...பருங்கினன் என, வருகின்ற செய்யுளில் முடிவுறும். (௯)

நீலகேசி அச்சாங்கியனை வினவுதல்

௭௯௩. ஒருங்கிருந் தார்கட் குடனவை யெல்லாம்
பருங்கினன் மெய்யும் பராசரன் றன்னை
விரும்பினள் போல வினவின ளன்றே
யருங்கல மாய வறிவினுள் மிக்காள்.

(இ - ள்.) அவை ஒருங்கு இருந்தார்கட்கு எல்லாம் மெய்யும் உடன் பருங்கினன் - அவ் வவையின்கண் குழுமியிருந்த மாணவர்க்கெல்லாம் இவ்வாறு தன்சமய தத்துவங்களை எல்லாம் ஒரு சேர உணர்த்தியவனாகிய; பராசரன் தன்னை - பராசரன் என்னும் அந்தச் சாங்கியசமயக் கணக்கனை; அருங்கலம் ஆய அறிவினுள் மிக்காள் - மாந்தர்க்குப் பெறற்கரிய அணிகலனாகத் திகழுகின்ற அறிவுடைமைக்கண் யாவரினும் சிறந்தவளாகிய நீலகேசி; விரும்பினள் போல வினவினள் - அவன் கூறிய தத்துவங்களைப் பெரிதும் விரும்புவாளொருத்தி போல வினவுவாளாயினள்; என்க.

(வி - ம்.) பருக்கினன், பருங்கினன்என எதுகைநோக்கி,மெலிந்து நின்றது. மெய் - தத்துவம். மெய்யும் - என்புழி உம்மையை இசை நிறையாகக் கொள்ளினுமாம். பராசரன் என்பது அவ்வாசிரியன் பெயர் என்பது வழிமொழியுமாற்றாற் பெற்றாம்.

பராசரன் என்னும் அச் சமயாசிரியன் தன் மாணவர்கட்குத் தத்துவமறிவுறுத்திய பொழுது நீலகேசி அவன் கூற்றை விரும்புவாள்போலக் காட்டி அவனை வினவினள் என்றவாறு.

''கற்றார்க்குக் கல்வி நலனே கலனல்லால் மற்றோர் அணிகலம் வேண்டா'' என்பதுபற்றி 'அருங்கலம் ஆய அறிவு' என்றார். அருங்கலம் - பெறற்கரிய பேரணிகலம். (௪)

இதுவுமது

எ௬௪. என்னைப் பயந்தீரிஃ தென்னெனக் கேட்டன
ளன்னுத லாயிது வென்னெறி யென்றன
னன்னனஃ தாயி னறிவி யெனச்சொல
வின்னன கேளென் றெடுத்தனன் சொல்லும்.

(இ - ள்.) என்னைப் பயந்தீர்! - என்னை ஈன்ற தந்தை போல்வீர்!; இஃது என் என - நீயிர் இவர்க்கோதும் இஃதென்னையோ? என்று; கேட்டனள் - அவற்றைக் கேளாதாள் போன்று நீலகேசி வினவினளாக; அன்னன் - அப் பராசரன்; நல் நுதலாய் இது என் நெறி என்றனன் - நல்ல நுதலையுடைய நங்காய்! யான் இவர்க்கோதுமிது எனது சாங்கிய சமயத் தத்துவங்காண்! என்றான்; அஃது ஆயின் அறிவி எனச் சொல - அது கேட்ட நீலகேசி நீயிர் கூறுவது சமயத் தத்துவமாயின் அவற்றை அடிச்சிக்கும் அறிவுறுத்தருளல் வேண்டும் என்று வேண்ட; இன்னன கேள் என்று - அங்ஙனமாயின் நன்று! நங்காய்! இவையிற்றைக் கேட்பாயாக! என்று பணித்து; எடுத்தனன் சொல்லும் - அவற்றை அவள் பொருட்டு மீண்டும் கூறுவானாயினன் என்க.

(வி - ம்.) அப்பரே! என்சொல்லுகின்றீர்? என்று நீலகேசி கேட்ப; அவன் யான் என்சாங்கிய சமயத் தத்துவங்களை இவர்க்குணர்த்துகின்றேன் என்றானாக: அது கேட்ட நீலகேசி அவையிற்றை எனக்கும் அறிவிப்பீராக! என அவன் அவற்றை அவளுக்குக் கூறினான் என்றவாறு. (௪)

பராசரன் கூற்று

எ௬௫. மன்னுயிர் தெற்றென வில்லது மான்செருக்
கென்னவு மிந்திய மைந்தைந் தொருமன
மன்னதன் மாத்திரை யைந்தைந்து பூதமும்
பன்னிய வையைம் பதப்பொரு ளென்றான்.

(இ - ள்.) மன் உயிர் தெற்றெனவில்லது மான் செருக்கு என்னவும் - நங்காய்! எம் தத்துவங்களாவன:— நிலைபெற்ற உயிரும் தெளிவற்ற பிரகிருதியும் மானும் செருக்கும் எனப் படுவனவும்; இந்தியம் ஐந்து ஐந்து - அறிவுக் கருவிகள் ஐந்தும் தொழிற் கருவிகள் ஐந்தும்; ஒரு மனம் - ஒரு மனமும், அன்ன தன்மாத்திரை ஐந்து - அந்தத் தன்மாத்திரை ஐந்தும், பூதம் ஐந்தும் - பூதங்கள் ஐந்தும்; பன்னிய அன்ன ஐ ஐம்பதப் பொருள் என்றான் - என என்றால் முற் கூறப்பட்ட அந்த இருபத்தைந்து சொற்களுக்கும் பொருளாயவையேயாம் என்றுணர்த்தினான்; என்க.

(வி - ம்.) நங்காய்! எம் தத்துவங்கள் - உயிரும், பிரகிருதியும், மானும், செருக்கும், அறிகருவி ஐந்தும், செயற்கருவி ஐந்தும், மனமும், தன்மாத்திரைகள் ஐந்தும், பூதங்கள் ஐந்தும், ஆகிய இந்த இருபத்தைந்துமாம் என்ருன் என்றவாறு.

தெற்றெனவு - தெளிவு, தெற்றெனவில்லது எனவே, பிரகிருதி என்றவாருயிற்று- என்னை? முக்குணங்களும் விளங்கித் தோன்ருநிலையே பிரகிருதி தத்துவம் ஆதலின் என்க. இனி இதனை இங்ஙனமே,

"இதுசாங் கியமத மென்றெடுத் துரைப்போன்
தனையறி வரிதாய்த் தான்முக் குணமாய்
மனநிகழ் வின்றி மாண்பமை பொதுவாய்
எல்லாப் பொருளுந் தோன்றுதற் கிடமெனச்
சொல்லுதல் மூலப்பகுதி'' (மணிமே. உஎ-உ0௨-சு)

என மணிமேகலையினும் கூறப்படுதலுணர்க. மூலப்பகுதி எனினும் பிரகிருதி எனினும் ஒக்கும். செருக்கு - அகங்காரம்.

இனி, அறிகருவி-மெய், வாய், கண், மூக்கு. செவி என்னும் ஐந்துமாம். தொழிற்கருவி - மொழி, கால், கை, கருவாய், எருவாய் என்னும் ஐந்துமாம். இவற்றின் செயல்கள் - பேசுதல் நடத்தல் கொள்ளுதல் இன்புறல் கழித்தல் என்னும் இவ்வைந்துமாம். தன்மாத்திரை - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்துமாம். (சு)

இதுவுமது

எஙசு. எத்திறத் தின்னுஞ்செய் யான்குண மொன்றிலன்
றத்துவ னின்பன பேதன லேபக
னித்திய னெங்கு முளனெடுங் காட்சியன்
றுத்த லுடையனேன் றேன்றலு மென்றான்.

(இ - ள்.) என் தோன்றல் - என்னுற் கூறப்படுகின்ற ஆத்துமன்ருனும்; எத்திறத்தினும் - எல்லாவகையானும்; செய்யான் - செயலில்லாதவனும்; குணம் ஒன்று இலன் - யாதொரு குணமும் இல்லாதவனும்; தத்துவன் - மெய்ப்பொருளாயுள்ளவனும்; இன்பன் - இன்பவடிவினனும்; அபேதன் - வேறுபடுதலில்லாதவனும்; அலேபகன் - பற்றில்லா தவனும்; நித்தியன் - என்றும் நிலைத்திருப்பவனும்; எங்கும் உளன்-யாண்டும் நிறைந்திருப்பவனும்; நெடுங் காட்சியன் - முற்றறிவுடையவனும்; துத்தல் உடையன் - நுகர்ச்சியுடையவனும்; என்ருன் - ஆகுவன் என்று கூறினன்; என்க.

(வி - ம்.) எத்திறத்தின்னும் : விரித்தல் விகாரம். தத்துவம் - உண்மை. அலேபகன் - பற்றில்லாதவன், நெடுங்காட்சி - முற்றறிவு. துத்தல் - நுகர்தல்.

பராசரன் பொருணிகழ்ச்சி கூறுபவன் என்றும் பரமாத்துமன் என்று கூறப்பட்டவன் செய்கையில்லாமை முதலியவற்றையுடையன் என்றான் என்றவாறு. (எ)

ஏனைப் பொருணிகழ்வு

எகூஎ. நின்று பரந்தரு வாய்ப்பொறி யேதுமிக்
கொன்று கிரிகையின் றப்பியத் தம்மது
சென்று செய் மானிற் செருக்கத்தி னீரெட்டு
மன்றியு மைவகைப் பூதமு மன்றே.

(இ - ள்.) அப்பியத்தம் - இனி அவ்வியத்தம் என்று கூறப்படும் பிரகிருதிதானும்; அருவாய்ப் பரந்து நின்று - அருவமாய் யாண்டும் பரவிப் புடைபெயர்தலின்றி நிலையுதலுடைத்தாய்; பொறி ஏதும் மிக்கு - பொறிகளாலறியப்படாது கடந்து அப்பாலாய்; ஒன்றுகிரிகை இன்று - ஒன்றாய்ச் செயல் யாதும் இலதாகும்; அது சென்று செய் மானில் - அதன்கண் பிறந்துபோய் ஏனைய தத்துவங்களைத் தோற்றுவிக்கின்ற மான் என்னும் தத்துவத்தினின்றும்; செருக்கு - அகங்கார தத்துவம் பிறக்கும்; அத்தின் - அவ்வகங்கார தத்துவத்தினின்றும்; ஈர் எட்டும் - மனமும் தன்மாத்திரை ஐந்தும் அறிகருவி ஐந்தும் தொழிற்கருவி ஐந்தும் ஆகப் பதினாறு தத்துவங்களும் பிறக்கும்; அன்றியும் ஐவகைப் பூதமும் - இவையன்றியும் இவற்றுள் ஐந்து தன்மாத்திரைகளினின்றும் ஐம்பெரும் பூதங்களும் பிறக்கும் என்றான்; என்க.

(வி - ம்.) அப்பியத்தம் - அவ்வியத்தம்; மறைந்திருப்பது; அஃதாவது: பிரகிருதி தத்துவம் என்க. மான் பிரகிருதித்துவத்தினின்றும் பிறந்து ஏனைய தத்துவங்களைத் தோற்றுவித்தலின் சென்று செய் மான் என்றார். ஈரெட்டும் என்றது, மனமொன்றும் அறிகருவி ஐந்தும் தொழிற்கருவி ஐந்தும் தன்மாத்திரையைந்தும் ஆகப்பதினாறும் என்றவாறு. ஐவகைப் பூதமாவன-நிலம் நீர் தீ வளி வெளி என்பன.

பிரகிருதிதத்துவம் அருவமாய் யாண்டும் நிறைந்து புடைபெயர்தலின்றி நிலையுதலுடைத்தாய்ப் பொறியறிவிற் கப்பாலதாய் ஒன்றாகிச் செய்விலதாகும். அதனில் மானும் மானில் அகங்காரமும் அதனில் மன முதலிய பதினாறும் அவற்றுள் ஐந்து தன்மாத்திரைகளினின்றும் ஐம்பெரும் பூதமும் தோன்றும் என்றவாறு.

இனி,

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு" (குறள்-உஎ)

எனவரும் திருக்குறளின் விரிவுரையின்கண் ஆசிரியர் பரிமேலழகர்:—

"அவற்றின் (தன்மாத்திரைகளின்) கூறுபாடாவன பூதங்கட்கு முதலாகிய அவைதாமைந்தும், அவற்றின்கட்டோன்றிய அப் பூதங்

களைந்தும் அவற்றின் கூறுகிய ஞானேந்திரியங்களைந்தும் கன்மேந்திரியங்களைந்துமாக இருபதுமாம். 'வகைதெரிவான் கட்'டென உடம்பொடு புணர்த்ததனால் தெரிகின்ற புருடனும் அவன் தெரிதற் கருவியாகிய மான் அகங்கார மனங்களும், அவற்றிற்கு முதலாகிய மூலப் பகுதியும் பெற்றாம். தத்துவம் இருபத்தைந்தனையும் தெரிதலாவது மூலப்பகுதி ஒன்றிற் றோன்றிய தன்மையிற் பகுதியே யாவதல்லது விகுதியாகாதெனவும், அதன்கட் டோன்றிய அகங்காரமும், அதன்கட் டோன்றிய தன்மாத்திரைகளுமாகிய ஏழும், தத்தமக்கு முதலாய தனை நோக்க விகுதியாதலும், தங்கட்டோன்றுவனவற்றை நோக்கப் பகுதியாதலும் உடையவெனவும் மனமும் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும் பூதங்களுமாகிய பதினாறும் தங்கட்டோன்றுவன வின்மையின் விகுதியே யாவதல்லது பகுதியாகாவெனவும், புருடன் தானொன்றிற் றோன்றாமையானும் தன்கட்டோன்றுவன வின்மையானும் இரண்டு மல்லன் எனவும் சாங்கிய நூலுள் ஓதியவாற்றான் ஆராய்தல்'' என விளக்கிப் போந்தமையும், இப் பரிமேலழகருரையும் கீழே காட்டப்படும் மணிமேகலையிற் கூறப்படும் முறையும் சிறிது சிறிது வேறுபட்டிருத்தலையும் ஆராய்ந்துணர்க. இனி மணிமேகலையின் கண் (௨௭-௨0௬-௨௪0) கூறப்படும் இச் சாங்கிய தத்துவம் வருமாறு :-

''............மூலப் பகுதிசித் தத்து
மானென் றுரைத்த புத்தி வெளிப்பட்
டதன்கண் ஆகாயம் வெளிப்பட் டதன்கண்
வாயு வெளிப்பட் டதன்கண் அங்கி
யானது வெளிப்பட் டதில்மண் வெளிப்பட்
டவற்றின் கூட்டத் தின்மனம் வெளிப்பட்
டார்ப்புறு மனத்தாங் கார விகாரமும்
ஆகா யத்திற் செவியொலி விகாரமும்
வாயுவிற் றுக்கு மூறெனும் விகாரமும்
அங்கியிற் கண்ணும் ஒளியுமாம் விகாரமும்
தங்கிய அப்பில்வாய் சுவை யெனும் விகாரமும்
நிலக்கண் மூக்கும் நாற்ற விகாரமும்
சொலப்பட் டிவற்றிற் றுக்கு விகாரமாய்
வாக்குப் பாணிபாத பாயுரு பத்தமென
ஆக்கிய விவைவெளிப் பட்டிங் கறைந்த
பூத விகாரத் தான்மலை மரமுதல்
ஓதிய வெளிப்பட் டுலகாய் நிகழ்ந்து
வந்த வழியே யிவைசென் றடங்கி
அந்தமில் பிரளய மாயிறு மளவும்
ஒன்றா யெங்கும் பரந்து நித்தியமாம்
அறிதற் கெளிதாய் முக்குண மன்றிப்
பொறியுணர் விக்கும் பொதுவு மன்றி
எப்பொரு ளுந்தோன் றுதற்கிட மன்றி

அப்பொரு ளெல்லா மறிந்திடற் குணர்வாய்
ஒன்றுயெங்கும் பரந்துநித் தியமாய்
நின்றுள வுணர்வாய் நிகழ்தரும் புருடன்
புலமார் பொருள்க ளிருபத்தைந் துள
நிலநீர் தீவளி யாகா யம்மே
மெய்வாய் கண்மூக் குச்செவி தாமே
உறுசுவை யொளியூ றோசைநாற் றம்மே
வாக்குப் பாணி பாதபாயு ருபத்தம்
ஆக்கு மனோபுத்தி யாங்கார சித்தம்
உயிரெனு மான்மா வொன்றொடு மாமெனச்
செயிரறச் செப்பிய திறமுங் கேட்டு''

எனவரும். மணிமேகலையிற் கூறப்பட்ட இத் தத்துவ முறை இந் நீல கேசியிற் கூறப்படுகின்ற முறைக்கு மாறுபட்டிருத்தலையும் ஆராய்ந் துணர்க.

இனி, மாதவச் சிவஞானயோகிகள் இச் சாங்கியமதம் பற்றிக் கூறுவன வருமாறு:—

''இனிச் சாங்கியமாவது:—மூலப்பகுதி நித்தமாய் வியாபகமாய்ச் சடமாய் எல்லாப் பொருட்கும் காரணமாய் முக்குணங்களும் ஒப்ப நின்ற அவதாரமாய் அருவாய் உள்ளது. இஃது இருபத்துநாலாந் தத்துவம்; இதன்கட் டோன்றுங் காரியம் புத்தி முதல் நிலமீறாக இருபத்து மூன்று தத்துவம் உள. இந்தத் தத்துவம் இருபத்து நான்கிற்கும் வேறாய் நித்தமாய் வியாபகமாய் அருவாய்ப் பலவாய் அறிவதும் செய்வது மன்றி அறிவுமாத்திரமாய் ஒன்றற்குக் காரணமாதலும் காரியமாதலு மின்றி நிற்கும் ஆன்மா இருபத்தைந்தாந் தத்துவமெனப்படும். இவ் விருபத்தைந்தாம் தத்துவமாகிய புருடன் முத்தியினும் பெத்தத்தினும் ஒரு தன்மையனேயாம். புருடனுக்கு மலின மென்பதில்லை. தாமரை யிலை நீர்போல் ஒட்டற்று நிற்பன். அநாதியே புத்தியைச் சார்ந்த அவிச்சை வயத்தால் பெத்தனெனப்பட்டு இன்பவுணர்வு தோன்றா நின்றது. புத்தியாவது மூலப்பகுதியின் பரிணாமம். அதுவே மான் என்றும் அந்தக்கரணம் என்றுங் கூறப்படும்; அது பொறிவழியான் ஞானமாய்ப் பரிணமித்து விடயத்திற் செல்லும்; புருடன் செய்வான் என்பதும் புத்தி அறியும் என்பதும் வேற்றுமையுணராமையான் என்பது. மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணரவே அவிச்சை நீங்கும். அதுவே முத்தியெனப்படும். ஆன்மாக்களுக்கு வேறாய் இறைவன் ஒருவன் உண்டென்பது பொய்யென்பதாம். இந்நூல் செய்தவன் ''கபிலமுனிவன்'' எனவரும். (அ)

நீலகேசி பராசரன் கூற்றை மறுத்துரைத்தல்

எ௬அ. ஐயைம் பொருளு மிவையிவை யல்லது
தையன் மடவா றத்துவ மில்லெனு
மைய லுடையவர்க் காமற்றை யார்க்கிவை
பொய்யென் றுரைத்தனள் போதரிக் கண்ணாள்.

(இ - ள்.) மடவரல் தையல் - மடப்பம் வருதலுடைய தையால்!; ஐயைம் பொருளும் இவை - எம்நூல் கூறும் இருபத்தைந்து தத்துவங்களும் இவையேயாம்; இவையல்லது தத்துவம் இல் - இவையல்லது உலகின்கண் பிறிதொரு தத்துவம் இல்லையாம்; என - என்று அந்தச் சாங்கியன் கூறுதற்ப; அரிபோது கண்ணாள் - அதுகேட்ட செவ்வரிபடர்ந்த செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய நீலகேசி அவனை நோக்கி அப்பனே!; இவை மையல் உடையவர்க்கு ஆம் - நீர் கூறிய இத் தத்துவங்கள் எல்லாம் நும்போல மயக்கமுடையவர்க்குத் தத்துவமாதல் கூடும்; மற்றையார்க்குப் பொய் என்று உரைத்தனள்-ஏனைய மெய்க்காட்சியாளர்க்கெல்லாம் பொருந்தாப் பொய்களேயாம் என்று கூறினள்; என்க.

(வி - ம்.) தையல் - அழகுமாம். போது - மலர். அரி-செவ்வரி.

தையால் எம்முடைய தத்துவங்கள் இவ்விருபத்தைந்துமேயாம். இவற்றின் வேறாகத் தத்துவமும் இல்லை என்றானாக; அதுகேட்ட நீலகேசி இவையெல்லாம் அறிவொடு பொருந்ாதனவேயாம் என்றாள் என்றவாறு. (௬)

பராசரன் சினந்து நீலகேசியை நோக்கிக்கூறல்

௪௩௬. கதக்களி யானைமுன் கல்லெறிந் தாற்போற்
பதப்பொரு டம்மைப் பழுதேன் றுரைப்ப
மதத்தினின் மிக்கவன் மாதரை நோக்கி
யுதப்பேன்னுங் குற்ற முரையெனக் கேன்ன.

(இ - ள்.) கதம் களி யானைமுன் கல் எறிந்தால் போல் - சினங் கொண்ட மதக்களிப்புடைய களிற்றியானையின் முகத்திலே கல்லை எறிந்தாற் போல; பதப் பொருள் - அவன் கூறிய தத்துவங்களெல்லாம்; பழுது என்று உரைப்ப - நீலகேசி பொய்யென்று கூறுதலாலே; மதத்தினின் மிக்கவன் - இயல்பாகவே செருக்கு மிக்கவனாகிய அப்பராசரன்; மாதரை நோக்கி - நீலகேசியை வெகுண்டு நோக்கி; உதப்பி - உரப்பி; என்னும் குற்றம் எனக்கு உரை என்ன - இத்தத்துவங்களுக்குச் சிறிதேனும் நீ குற்றம் எனக்குக் கூறிக்காண் என்று கூற என்க.

(வி - ம்.) கதம்-சினம். களி - மதவெறி. உவமையால் பராசரன் வெகுண்டமை பெற்றும். உதப்பி என்னும் வினையெச்சத் தீறு கெட்டது, செய்யுள் விகாரம். என்னும் - சிறிதேனும்.

கதக்களியானை முகத்திற் கல்லெறிந்தாற் போன்று நீலகேசி செருக்குமிக்க அவன் கூறிய தத்துவங்கள் பழுதுடையன என்று கூற, அவன் வெகுண்டு ஆயின் அவற்றிற்குக் குற்றஞ் சிறிதேனும் என்முன் கூறிக்காண்! என்று உரப்பினன் என்றவாறு.

இயல்பாகவே செருக்குமிக்கவன் என்ப மற்றதினின் மிக்கவன் என்றார். (௧0)

நீலகேசி அத் தத்துவங்களுக்குக் குற்றங் கூறுதல்

௭௪0. செய்யா துயிரெனச் செப்புகின் றாய்நின்னை
வையா யுயிருள தன்றெனின் வாக்கிவை
மெய்யாம் பிறசெய்கை யாதலி னாலிவை
மையா மினிநின்றன் மார்க்கமு மன்றே.

(இ - ள்.) உயிர் செய்யாது எனச் செப்புகின்றாய் - ஐய! நீ உயிர் யாதொன்றும் செய்யமாட்டாது என்று கூறுகின்றனை; உயிருள் நின்னை வையாய் - இங்ஙனம் கூறுமாற்றால் நீ நின்னையே உயிர்ப் பொருளுள் சேர்த்து வைத்திலையாகின்றனை; அது அன்று எனின் - அங்ஙனமன்று யான் உயிர்ப் பொருளே என்பாயாயின்; வாக்கு இவை மெய் ஆம் இவை செய்கை ஆதலினால் - நின்பாற் காணப்படுகின்ற மொழிகளாகிய இவையும் உடம்பாற் செய்யப் படுவனவுமாகிய இவையெல்லாம் செயல்களே ஆதலினால்; இனி நின்றன் மார்க்கமும் மை ஆம் - நின் சமய நெறியும் குற்ற முடைத்தாம்! என்றாள் என்க.

(வி - ம்.) ஐய! நீ உயிர் செய்கையிலது என்று சொல்லுதலால் நீயே நின்னை உயிரில் பொருளாக்கி விட்டனை. அன்றென்பாயாயின் நின்பாற் காணப்படுகின்ற மொழியும் உடம்பாலாகின்ற செயல்களும் செய்கைகளேயாதலினால் நின் மேற்கோள் குற்றமுடைத்தாமன்றோ. மேலும் நீ உயிருடையை அல்லை என்பாயாயின் அது காண்டல் முரணும் என்றவாறு. மை - குற்றம். (௧௧)

இதுவுமது

௭௪௧. எத்திறத் தின்னுஞ்செய் யானவ னென்றலிற்
றத்துவஞ் சொல்லுந் தலைமக னாகிய
சித்தியு மில்லாந் திருட்ட விரோதமும்
பொய்த்தலுள் ளிட்டவும் புல்லுமற் றென்ன.

(இ - ள்.) அவன் எத்திறத்தினும் செய்யான் என்றலின் - ஐய! நீ ஆத்துமன் எல்லாவகையானும் செயலற்றவனே என்று கூறுதலாலே; தத்துவம் சொல்லும் தலைமகன் ஆகிய சித்தியும் இல்லாம் - நீ நின் சாங்கிய தத்துவத்தைக் கூறுமோர் ஆசிரியன் ஆகின்ற பேறும் நினக்கு இல்லையாகும்; திருட்ட விரோதமும் - அதுவேயுமன்றி நின் கூற்றுக்குக் காண்டல் முரணும்; பொய்த்தல் உள்ளிட்டவும் புல்லும் - பொய்யாதல் முதலிய பிற குற்றமும் பொருந்துவனவாங் காண்; என்ன - என்று நீலகேசி கூற என்க.

(வி - ம்.) தத்துவங் கூறுதலும் செயலாதலின் உயிர் செயலற்றது என்புழி நீ ஒரு சமயக் கணக்கனுதலும் கைகூடாது. உயிர்கள் செயல் உடையனவாகக் காணப்படுதலால் அக் கூற்றுக் காண்டல் முரணும் பொய்யுமாம், மேலும் இன்னோரன்ன பல குற்றமுமுடைத்தாம் என்றவாறு.

பொய்த்தல் எங்ஙனமெனின்:— "நான் அறிகின்றேன் பார்க்கின்றேன் செய்கின்றேன்," எனத் தனக்கும், "அவன் அறிகின்றான் பார்க்கின்றான் செய்கின்றான்," எனப் பிறனுக்கும் செயலுண்மை தேற்றமாதலின் இவ்வாறு தெளியப்படும் செயலை யில்லை என்றல் பொய்யாம் என்பதாம். (கஉ)

பராசரன் கூற்று

எசஉ. பெருமை யுயிர்க்குரை யேன்செய்கை பின்னும்
இருமை யுயிரேன தாமிடை யொன்றுங்
கரும வுயிரு மிவற்றினி னன்றே
யருமை யுடைச்செய்கை யாக்கமு மென்றான்.

(இ - ள்.) செய்கை பெருமை உயிர்க்கு உரையேன் - அது கேட்ட பராசரன் நீலகேசியை நோக்கி நங்காய்! யான் செயல் பேருயிருக்கு உளதாகக் கூறுகின்றிலேன்; பின்னும் இடை ஒன்றும் கரும உயிரும் இருமை உயிர்எனது ஆம் - இப்பேருயிரே யன்றிப் பின்னரும் இடை உயிர் என்றும் வினையுயிர் என்றும் இரண்டு உயிர்களும் என்னுடையனவாகும்! இவற்றினின் அன்றே- இந்த உயிர்களினாலல்லவோ; அருமை உடைச் செய்கை ஆக்கமும் என்றான் - செய்தற்கு அருமையான செய்கைகள் தோன்றுவனவாதலும் என்று கூறினன்; என்க.

(வி - ம்.) நங்காய்! உயிர்தானும் பேருயிர் இடையுயிர் வினையுயிர் என மூவகைப்படும். இவற்றுள் பேருயிர்க்குச் செய்கையில்லை என்பேன். ஏனைய என்னுடைய இருவகை யுயிர்களாலே செயல்கள் நிகழ்கின்றன காண் என்றான் என்றவாறு.

பெருமையுயிர்-பேருயிர். அஃதாவது பரமாத்மன். இடையுயிர்-அந்தராத்துமன். வினையுயிர் எனினும் கருமாத்துமன் எனினும் ஒக்கும். (கங)

நீலகேசி கூற்று

எசங. செய்யு முயிர்களுஞ் செய்யா வுயிரும்
மெய்யி னுளவேனின் மேற்கோ ளழிதலும்
பொய்யும் போதியறை மையுமற் றல்லவு
மெய்து மிதற்கினி யென்செய்தி யென்றாள்.

(இ - ள்.) மெய்யின் செய்யும் உயிர்களும் செய்யா உயிரும் உள எனின் - ஐய! நீ முன்பு உயிர் செயலற்றது என்று சொல்லி

வைத்துப் பின்பு உடம்பின்கண் செயல் செய்கின்ற உயிர்கள் இரண்டுள எனறும் செய்கையிலாத உயிரொன்று உளதென்றும் கூறின்; மேறகோள் அழிதலும் - நினனுடைய மேற்கோட்கு அழிவும், பொய்யும் - நின்கூற்றுப் பொய்யாதலும்; பொதியறை மையும் - பொதியறைப்படுதல் என்னும் குற்றமும்; அல்லவும்- பிற குற்றமும்; எய்தும் - எய்துவனவாம்; இதற்கு இனி என் செய்தி என்றாள் - இதற்கு இனி என்ன செய்குவை கூறுதி எனறாள் என்க.

(வி - ம்.) உயிர் செயலற்றதென முன் சொல்லி வைத்துப் பின்பு செயலற்றவுயிர் ஒன்று என்றும் செயலுடைய உயிர் இரண்டு என்றும் உடம்பின்கண் மூன்றுயிர்கள் உளவெனின் நின் மேற்கோளழிதன் முதலிய பல குற்றங்களும் வரும்; இதற்கென் செய்வாய்! என்றவாறு.

மேற்கோளழிதலாவது - இருபத்தைந்து தத்துவங்களுள் உயிர் ஒன்றென்று கூறிப் பின்பு மூன்றென்று கூறுதல். பொய்யாவது, செயலுடையதாக நுகர்கின்ற உயிரைச் செயலல தென்று கூறுவது. இனி, பொதியறையாவது - இல்லையென்று சொல்லப்பட்ட செயலையே உள்ளது போல வலிந்து சொல்வது பொதியறை - கட்டறுத்தல். அஃதாவது முன்பு அமைத்த விதியைக் குலைத்தல் என்க இனி அல்லவும் என்றது, தத்துவம் இருபத்தேழாதலும் ஒருடம்பின்கண் மூன்றுயிருள வென்றலும் முதலாயின. (கச)

நீலகேசி பராசரனை அசதியாடல்

எசச. சோம்பன் குணமிலன் றேன்று வொளிப்பின
ளோம்பற் கருமையி னுண்ணுமாற் றுமையி
ளைபின்னைச் செய்ததே னன்கவ னின்றியும்
போம்பொழு தேலவ னூற்பொரு ளென்னே.

(இ - ள்.) சோம்பன் குணம் இலன் தோன்று ஒளிப்பினன் - ஐய! நின்னுடைய பரமாத்துமன செயலற்ற மடியுடையான் பண்பு சிறிதுமில்லான் எவ்வாற்றானும் காணபபடாமல் மறைந் திருப்பவன; ஓம்பற்கு அருமையின - எதனையும் பேணுதலும் அவனுக்கு இயலாமையின்; உண்ணும் ஆற்றாமையின் - அவன் நுகர்தலுஞ் செய்யானமயால், பின்னை நாம் செய்தது நனகு என் - பினனர் அத்தகையதொரு பரமாத்துமனை யாம் கறபித்துக் கொண்டதனாற் செய்ததாகிய நன்மைதான என்னையோ? அவன் இன்றியும பொழுது போமேல் - அபபரமாத்துமன இல்லாமலும் நமது காலம் இனிது கழியுமாயின்; அவனால் பொருள் என் - அப்பரமாத்துமனால் நமக்கெய்தும் பயன்தான் என்னையோ! இயம்புதி எனறாள்; என்க.

(வி - ம்.) செயலற்றவனும் குணமற்றவனும் கரவுடையவனும் யாதொன்றையும் பேணல் இல்லாதவனும் நுகர்விலனும் ஆகிய ஒரு

பரமாத்துமனை யாம் கற்பித்துக் கொண்டதின்கண் நன்மை யாது? அவனின்றியும் நம்பொழுதுகழியுமெனின் அவனால்நமக்காகவேண்டிய காரியம் என் என அசதியாடியபடியாம்.

உண்ணும்-உண்ணலும். ஒம்பற்கருமையின்என்றது நுகராமைக்கு ஏதுவாயிற்று. யாதொன்றும் பேணாமை பேதை தொழில் ஆகலின் என்பதுந் தோன்றதலுணர்க.

இதனைப் போந்தது, பரமாத்துவ தத்துவங் கொண்டமை பயனில் செயல் என்பதாம். (௬௫)

## இதுவுமது

௭௬௫. ஆண்டரு வாய்த்தொழில் யாதுமில் லாயின்
வேண்டினமெய் யாதி விகிர்தி விகற்போடு
தீண்டலு மொட்டலுந் தேரினி லாதவன்
காண்டற்குந் துத்தற்குங் காரண மென்னோ.

(இ - ள்.) அருவாய்த் தொழில் யாதும் இல்லாயின் - ஐய! நின்னுடைய பரமாத்துமன அருவமாகிச் செயலொன்றும் செய்வதிலனாயின்; ஆண்டு - அவ்வழி; தேரின - ஆராயுமிடத்தே; மெய்ஆதி விகிர்தி விகற்பொடு - உடம்பு முதலிய விகுதி வேறுபாட்டுத தத்துவங்களை; வேண்டின தீண்டலும் ஒட்டலும் இலாதவன் - அவன் விரும்பினும் தொடுதலும் கலத்தலும் இலாதவன் என்பது தேற்றமாம்; காண்டற்கும் துத்தற்கும் காரணம் என் - அவன் எல்லாவற்றையும் அறிதற்கும் நுகர்தற்கும் உற்ற காரணம் யாதோ? கூறுதி என்றாள் என்க.

(வி - ம்.) நின் பரமாத்துமன் அருவமாய்ச் செயலுமிலன் ஆயின், உடம்பு முதலியவற்றோடு தீண்டுக் கலப்பொட்டுமில்லாதவன் ஆதல் ஒருதலை. அத்தகையன் அறிதற்கும் துத்தற்கும் காரணம் யாது? என்றவாறு. காண்டல் - அறிதல். துத்தல்-நுகர்தல்.

இஃது என் தோன்றல் நெடுங்காட்சியன் துத்தலுடையன்(௭௩௬) என்றவதறை மறுத்தபடியாம். (௬௬)

## இதுவுமது

௭௬௬ முத்தாத் துமனை முனிந்தோ வதுவன்றிப்
புத்தாத்து மாக்கட் புரிந்தோ விரிந்தெங்குஞ்
சித்தாத் துமனாய்த் திரிவின்றி நின்ற
சுத்தாத் துமனைச் சுழற்றுவ தென்றாள்.

(இ - ள்.) முத்த ஆத்துமனை முனிந்தோ - ஐய! நீ இயல்பாகவே விளங்கி நின்ற நினது பரமாத்துமனை வெகுண்டமை

யாலோ?; அது அன்றி புது ஆத்துமாக்கண் புரிந்தோ - அக் கருத்தனறி நீ புதியவாகப் புணர்த்துக் கூறிய ஏனைய இரண்டு ஆத்துமாக்களையும் பெரிதும் விரும்பியமையாலோ?, எங்கும் விரிந்து சித்து ஆத்துமனாய்த் திரிவு இன்றி நின்ற - அங்கின் கனைதப் எங்கும் பரவி அறிவுப் பிழம்பாய்ப் புடைபெயராது நிலைத்து நின்ற; சுத்த ஆத்துமனை - தூய அந்தப் பரமாத்துமனை; சுழற்றுவது என்றாள் - இப்பிறவிக் கடலிற் கொணர்ந்து சுழல் விப்பது கூறுதி! என்றாள் எனக.

(வி - ம்.) முத்தாத்துமன் - இயல்பாகவே வீடு பெற்றுள்ள பர மாத்துமன் முற்படக் கூறாமல் பின்னர்க் கூறினமையின் இடையுயிர் வினையுயிர் என்பவற்றைப் புத்தாத்துமா என்றாள். சுத்தாத்துமன் - பற்றின்றித் தூயனாய் நின்ற பரமாத்துமன். சுழற்றுவது எதனால்? என்றவாறு. சுழற்றுவது என்றதனால் பிறவிக்கடலுள் என்பது பெற்றாம்.

நிலையுதலுடையவனும் எங்கும் நிறைந்தவனுமாகிய பரமாத்துமனுக் குப் பிரகிருதிமுதலாயினவற்றோடு கூட்டபும் இடம்விட்டிடப் சேறலும் இல்லாமையால் அவன் இவ்வுலகத்தினின்றும் வேறுலகுகட்குச் சேற லும் வேறுலகங்களினின்றிவ்வுலகிற்கு வருதலும் இன்மையின் பிறப் புக் கூடாதென்பது பொருத்தது. (கள)

இதுவுமது

௪௯௭. பரமாத் துமனைப் பளிங்கடை போல
வருமாத்து மாக்களின் மன்னும் விகாரம்
தருமாத் திரையன்றித் தக்கதோன் றாக
வொருமாத் துமனை யுரைத்திடு கென்றாள்.

(இ - ள்.) பரமாத்துமனை - ஐ! நீ அந்தப் பரமாத்துமனைக் கூறுமிடத்து; பளிங்கு அடைபோல - பளிங்கைச் செம்பஞ்சி அடைந்து அதன் நிறத்தை வேறுபடுத்துமாறு போலே; வரும் ஆத்துமாக்களின் - வேறுபடுத்துவருகின்ற இடையுயிர் வினை யுயிர்களாலே; விகாரம் தரும் மாத்திரையன்றி - அப்பரமாத்து மனுக்குச் செய்பவன் முதலிய வேறுபாடுகளைக் கூறுதல் மாத்திர மல்லது; தக்கது ஒன்று ஆக - பிரகிருதி முதலியவற்றோடு கூடுதற்கும் செய்பவன் முதலிய வேறுபாடடைதற்கும் தகுதி யுடைய ஒருவனாகும்படி; ஒரும் ஆத்துமனை உரைத்திடுக என்றாள் - திரிபுடையவனாகவே அவ்வாத்துமனைக் கூறுவாயாக! எனஅறிவுறுத்தினாள் எனக.

(வி - ம்.) ஒரும் - ஒருவும். ஒருவுதல் - மாறுபடுதல்.

ஐய! நீ பரமாத்துமனியல்பு கூறுங்கால் பளிங்கைச் செம்பஞ்சி யடைந்து மாறுபடுத்துமாறுபோல அந்தர கருமாத்துமாக்களால் செய்

பவன்முதலியவேறுபாடுகளைப் பரமாத்துமனுக்குக் கூறுந் துணையல்லது பிரகிருதியோடு கூடுதற்கும் வினைமுதலாதன் முதலியவற்றிற்கும் தகுதியுடையவனாகவே சொல்லுக. அங்ஙனமன்றிப் புடைபெயர்வின்றி நிலைபேறுடையனும் யாண்டும் நிறைபவனுமாகப் பயன்படாதவனாகக் கூறுதொழிக! என்றுணர்த்தியபடியாம். (௧௮)

## இதுவுமது

௭௫௮. செல்லு மெனினுஞ் சிதையுஞ் செல்லானென்று
சொல்லு மெனினுமுன் சொல்லிய தாமெய்தும்
பல்லுநின் னாவும் பதையா துரையன்றி
யெல்லுந் துணையு மிருவினை யென்றே.

(இ - ள்.) செல்லும் எனினும் - ஐய! பரமாத்துமன் புடைபெயர்ந்து செல்லுமியல்பினன் என்று கூறினாய; சிதையும் - அவனுடைய நிறைவிற்கும் அழிவின்மைக்கும் அழிவுண்டாம்; செல்லானென்று சொல்லும் எனினும் - இதற்கஞ்சிப பரமாத்துமன் புடைபெயர்வின்றி நிலைபேறுடையன் என்று சொல்லுதும் எனினும், முன் சொல்லிய தாம் எய்தும் - முன் கூறிய குற்றங்களே இதற்கும் வந்து எய்தும்; நின் பல்லும் நாவும் பதையாது - ஆதலின் இவ்வாறு பொருந்தாமை கூறுதலாலே நின் பற்களும் நாவும் வருந்தாதபடி; எல்லுந்துணையும் - இரவுவருங்காறும் உரையின்றி - நீ யாதும் கூறுதலின்றி, இருவினை - நீ வாளாவிருப்பாயாக!; என்று - என்று கூறினள் எனக.

(வி - ம்.) புடைபெயர்ச்சியுடையதற்கல்லது பிரகிருதி முதலியவற்றோடு கூடுதலும் வினைமுதலாதல் முதலிய வேறுபாடும் கூடாவாகலின்; பரமாத்துமன் புடைபெயர்வதோ? என்றற்கண் புடைபெயர்வதெனின் அவனது அழியாத்தன்மைக்கும் யாண்டும் நிறைதற்கும் குற்றமாம். புடைபெயரானெனின் பிரகிருதி முதலியவற்றோடு கூடுதலும் வினைமுதலாந்தன்மையும் கூடாவாம். ஆதலால் வாளாவரு! என்றவாறு.

இனி நீ பரமாத்மனுடைய அழியாத்தன்மையை நிலைநிறுத்தற்பொருட்டு இங்ஙனம் பொருந்தாதன கூறி நின் பல் நா முதலியவற்றை வருத்தாமல் பொழுது போமளவும் வாளாவிரு எனபாள் 'பல்லுநின்னாவும் பதையாது உரையன்றி எல்லுந்துணையும் இருவினை'' என்றாள். இருவினை - இருத்தியாக. வாளா என ஒருசொல் வருவித்தோதுக. கூறினள் என்பது சொல்லெச்சம். (௧௯)

## இதுவுமது

௭௫௯. யானென தென்னுஞ் செருக்கினை யின்பது
மானெனப் பட்டது மன்னுமோர் சேதனை
தானினை யாக்குத றக்கின்ற சேதனை
மேனினைத் தானுரைத் தானல்ல னென்றாள்.

(இ - ள்.) யான் எனது என்னும் செருக்கினை ஈன்பது மான் எனப்பட்டது - ஐய! நினது சாங்கிய நூலின்கண் யான் எனது என்னும் இருவகைச் செருக்கினையும் தோற்றுவிப்பது மான் என்னும் தத்துவம் என்று கூறப்பட்டுளதன்றோ?; மன்னும் ஓர் சேதனை தானினை - நிலைபெற்ற ஓர் அறிவுப் பொருளாகிய, அந்த, 'மான்' என்னுந் தத்துவத்தை; அசேதனை ஆக்குதல் தக்கின்று - உயிரில் பொருளாகிய பிரகிருதி பிறப்பித்தல் பொருந்தாது; மேலினைத்தான் உரைத்தான் அல்லன்- முன்னர் அந்நூல் கூறிய கபிலன் இப்பொருந்தாமையைக் கருதிச் சொல்லிற்றிலன், ஆராயாது கூறினனாதல் வேண்டும்; என்றாள்- என்று கூறினள் என்க.

(வி - ம்.) யான் எனது என்னும் செருக்கினைப் பிறப்பிப்பது மான் எனக் கூறப்பட்டது. அந்த, மான என்னும் தத்துவம் அறிவுப் பொருளாகலின், பிரகிருதேர் மஹான் என்பதோத்தாகலின் அறிவில் பொருளாகிய பிரகிருதி அதனைப் பிறப்பிப்பது பொருந்ாது என்னை? அறிவுப் பொருளும் அறிவில் பொருளும் தம்முள் முரண்பட்டன வாதலின். நெருப்பில் நீரும் வானத்தில் உடம்பும் பிறவாமை போலப் பிரகிருதியில் மான் பிறத்தல் கூடாது. கூடாமையின் அதிற் பிறப்பனவாகிய பதினாறு தத்துவங்களும், அவற்றிற் பிறக்கும் ஐம்பெரும் பூதங்களும் பிறத்தல் கூடாமையால், முன்பு இத்தத்துவம் சொன்னவன் ஆராயாது கூறினான் என்பது தேற்றம் என்றவாறு எனவே,

"பிரகிருதேர் மஹாந்ததோ ஹங்கார ஸ்தஸ்மாத் கணஸ்ச
ஷோடசக: தஸ்மாதபி ஷோடசகாத் பஞ்சப்ய: பஞ்சபூதாநி.

எனவரும் நின்னூல் பொருந்தாது, என்பதாம்.

(—சாங்கிய காரிகை ௨௨)

இனி, பரமாத்மனோடு கூடியும் பிரகிருதியி லிவை பிறக்குமென்னின், அழிவற்றதும் யாண்டும் நிறைந்திருப்பதுமாகிய ஆத்துமாவிற்குப் பிரகிருதியோடு கூடுதல் முதலாயின கூடாது; கூடின் ஆத்துமா நிலையுதலும் நிலையாமையும் உடையதென ஆருகதர் கொள்கையே நிலைபெற்று நின் கொள்கை கெடும் என்பதாஉயாம். (௨௦)

இதுவுமது

௭௩௦. மான்றான் பகுதி வழித்தோ வழித்தன்றித்
தான்றான் பிறிதோர் பொருளோ விரண்டோடு
மூன்றுவ தோன்றினி யின்று விருந்தவிச்
சான்று ரறியவுஞ் சாற்றினி யென்றாள்.

(இ - ள்) மான்தான் பகுதி வழித்தோ - ஐய! நீ கூறிய மான் என்னும் தத்துவம் பிரகிருதியைபபற்றிப் பிறந்ததோ?; வழித்து அன்றி - பிரகிருதியைப்பற்றிப் பிறத்தலன்றி; தான்தான் பிறிது ஓர் பொருளோ - தானே தோன்றிய வேறொரு தனிப்

பொருளோ?; இனி இரண்டொடு மூன்றாவது ஒன்று இன்று— இனி இந்த இரண்டு வழிகளையுமன்றி மூன்றாவதாகப் பிறிதொரு வழியிலையாகலின்; இனி இருந்த இச் சான்றார் அறியவும் சாற்று என்றாள் - இனி நீ இவ்வவைக்கண் இருக்கின்ற இச் சான்றோரெல்லாம் அறியும்படி இதற்கு விடை கூறுதி என்றாள் என்க.

(வி - ம்.) பிரகிருதியினின்றும் மான் பிறத்தல் கூடாதென்று காட்டினும், கூடாதாகவே மான் ஒரு தான்றோன்றித் தத்துவம் என்று நீ கூறல் வேண்டும். அங்ஙனம் கூறாயாயின்; பிறிதொரு வழியுண்டாயின் இவ்வவையோர் முன் அதனைக் கூறுதி என்றவாறு.

சான்றார் - சான்றவார் எனினுமாம். (௩க)

இதுவுமது

௪௩௪. முதற்பொரு ளேயாங் குணமது வாகின்
அதற்பிறி தென்னி னதுமனனு முண்டா
லிதற்கினி நீசொலற் பாலதென் னென்றாள்
சுதப்பொருண் மேனன்றுஞ் சொல்லுதல் வல்லாள்.

(இ - ள்.) சுதப்பொருள் மேல் நன்றுஞ் சொல்லுதல் வல்லாள் - நூலினது பொருளுணர்ந்து கூறுதன் மாத்திரையே யன்றி அப்பொருள் விளக்கமுறும் பொருட்டு நன்மைபய பலவற்றையும் கூறி விளக்கும் நாவன்மையுடைய நீலகேசி பின்னரும் பராசரனை நோக்கி; முதற்பொருளே ஆம் குணம் அது ஆகின்— ஐய நீ பிரகிருதியினின்றும் பிறக்கும் என்னும மானும் அந்தப் பிரகிருதி போல அறிவில் பொருளே ஆதல் ஒருதலை அங்ஙனமாயவிடத்து; அதன பிறிது என்னினும் - அந்த மானினின்றும் பிறிது தத்துவம் பிறக்குமெனனினும்; அது மனனும் உண்டாம்- அந்தக் குற்றம் மிகவும் உண்டாவதாம்; இதற்கு இனி நீ சொலற்பாலது என் என்றாள் - இக்குற்றத்திற்குத் தீர்வாக இனி நீ கூறுதற்கியன்ற விடை யாது? அதனைக் கூறிக் காண்! என்றாள் என்க.

(வி - ம்.) 'மான் பிரகிருதி வழித்தோன்றிய தென்னின்; மண்வழித் தோன்றிய பண்டோல அறிவில் பொருளாகிய பிரகிருதி வழித் தோன்றிய மானும் அறிவில்பொருளாய், அவ்வாறே அதனிற் பிறந்தனவுமெல்லாம் அறிவில் பொருளாய்; அறிவுப் பொருளென்ப தொன்றிலையாம். இனி, பரமாத்துமனோடு கூடிய பிரகிருதியிற் பிறப்பினும் அறிவுப்பொருளும் அறிவில் பொருளுமாய்ப் பிறப்ப தல்லது, அறிவுப் பொருளாகவே பிறப்பது கூடாதாம். அறிவுப் பொருளும் அறிவில் பொருளும் கூடியவழி அறிவுப் பொருளே பிறக்குமெனின், அறிவில் பொருளே பிறக்கவுமமையும். இனிப் பிரகிருதி வழித்தோன்றியதன்றி, மான் பிறிதோன்றெனின்; அறிவில் லனவும் எங்கும் நிறைந்தனவுமாகியகாரிய காரணங்கள் அல்லாத

வற்றில் வந்தது அன்றாகி, அறிவு முதலியன பிறக்கற்கு இடமைப் புடைபெயர்வதாய் இயற்கைப் பொருளாய், பிரகிருதியினின்றும் மான் பிறக்கும் என்னும் நின்மேற்கோள் கெடுவதாம். இதற்கென்ன விடை கூறுதி என்றாள் என்பதாம். (௨௨)

இதுவுமது

௭௯௨. அருவாய காரண மாயவ் வியத்த
முருவா மறுதலை யொப்பிக்கு மென்பாய்
மருவாத சொல்லினை மாதிரந் தானே
பருவாய்ப் பதக படைத்திடு மென்னாய்.

(இ - ள்) பதக - தீவினையாளனே! நீ; அருவாய் அகாரணமாய் அவ்வியத்தம் - உருவமற்றதும் காரணமில்லதுமாகிய பிரகிருதியானது; உருவு ஆம் மறுதலை ஒப்பிக்கும் எனபாய் - உருவமுடையதும் காரணமுடையதுமாகிய மானைப் பிறப்பிக்கு மென்று காரணத்து கூறுகின்றனையல்லையோ?; மருவாத சொல்லினை - இவ்வாறு பொருந்தாதவற்றைக் கூறுகின்ற நீ; மாதிரந்தானே பருவாய்ப் படைத்திடும எனாய் - அவ்வாறாகிய வானமே பருப்பொருளாய் மானைப பிறப்பிததிடும் என்று கூறலாமே. அங்ஙனம் கூறாமைக்குக் காரணம் என்னை? என்றாள் என்க.

(வி - ம்.) உருவமில்லதும் காரணமில்லதுமாகிய பிரகிருதி உருவமும் காரண முடையதுமாகிய மானைப் படைப்பதாயின் அவ்வாறாகிய வானமே அதனைப் படைத்தல் கூடுமே! அங்ஙனம் கூறாமை என்னையோ? என்றவாறு.

பரு - பருப்பொருள். பொய்கூறலின் பதக! என்று விளித்தாள். (௨௩)

இதுவுமது

௭௯௩. பகைக்குண மாகிய பகுதி விகுதி
மிகைக்குணந் தோன்றுநின் மேற்கோ ளழித்துத்
தொகைக்கணம் யாவையுஞ் சூனிய மாமா
னகைக்குண மல்லது நம்பலை யென்றாள்.

(இ - ள்.) பகுதி விகுதி பகைக்குணமாகிய - ஐய! நீ கூறுகின்ற பகுதித் தத்துவமும் விகுதித் தத்துவமும ஒன்றற்கொன்று முரண்பட்டவை ஆகலின் அம்முரண்பாடே; மிகைக்குணம் தோன்றும் நின் மேற்கோள் அழித்து - மிகைபடக் கூறல் என்னும் தன்மை தோன்றுகின்ற நின்னுடைய மேற்கோளை அழித்தலாலே; தொகைக்கணம் யாவும் சூனியம் ஆம் ஆல் - ஏனைய பதினாறு தத்துவங்களும் பிறவும் தோன்றுவாய் எல்லாம் பாழாய் முடியும்;

நகைக்குணம் அல்லது நம்பலை என்றாள் - முடிமவே நின் கூற்று நகைபிறப்பித்தற் பண்புடையதாதலின்றிப் பயன்றரும் என்று நம்பாதே கொள ! என்று கூறினள் என்க

(வி - ம்.) பகுதி - பிரகிருதி. விகுதி - அதன் விகாரங்கள்.

பகுதியும் விகுதியும் தம்முள் முரண்பட்டனவயாதலின் அம்முரண் பாடே நின் மேற்கோளை யழிக்கின்றது. அழியவே நின் ஏனைய தத்துவங்களும் தோன்றாது பாழாம் ; நின் கூற்று நகைக்கிடனாத லன்றிப் பயன்படாது என்றவாறு. (உ௩)

இதுவுமது

௭௫௪. புத்தேந் திரியமுங் கம்மேந் திரியமும்
பத்தேந் திரியத்தோ டொன்றாய்ப் படைத்தனை
பித்தேந் திரியமும் பேயேந் திரியமும்
குத்தேந் திரியமுங் கொண்டிலை யன்றே.

(இ - ள்.) புத்தேந்திரியமும் கம்மேந்திரியமும் பத்தேந் திரியத்தோடு-ஐய! நீ அறிவுக் கருவிகளும் தொழிற்கருவிகளுமாகிய பத்துக் கருவிகளோடு ; ஒன்றாய் படைத்தனை - மனம் ஒன்றாகப் பதினொரு தத்துவங்கள் சொன்னாயல்லையோ ?; பித்தேந்திரியமும் பேயேந்திரியமும் - பித்தக் கருவியையும், ஐயக்கருவியையும் ; குத்தேந்திரியமும் - வளிக்கருவியையும் ; கொண்டிலை - தத்துவங்களாகக் கொள்ளாமைக்குக் காரணமென்னை ? என்றாள் என்க.

(வி - ம்.) புத்தேந்திரியம் - புத்தியிந்திரியம். அவை, மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன. கம்மேந்திரியம் - கன்மேந்திரியம். அவை வாக்குப் பாதம் பாணி பாயுரு உபத்தம் என்பன. பித்தேந்திரியம் - பித்தத்தைச் சுரப்பிக்கும் கருவி ; பேயம் - பருகுவன. அவற்றால் உண்டாகும் கோழையை யுண்டாக்கும் கருவியை இருமடியாகு பெயரால் பேயேந்திரியம் என்றார். குத்தேந்திரியம் என்றது, வளியை (வாதத்தை).

வளி முதலிய மூன்றும் சமனிலை நிற்புழி உடம்பிற்கு இன்பத்தையும் ஏற்றிழிவாய பொழுது துன்பத்தையும் தருதலின், இவையும் இன்ப துன்பங்கட்குக் காரணமான அறிவுக் கருவி தொழிற்கருவி மனம் முதலியவற்றை ஒத்தலின் அவற்றோடு இவற்றையும் தத்துவங்களாகக் கொள்ளாததென்னோ ? என்றவாறு. (உ௪)

இதுவுமது

௭௫௫. தந்திர மாவன தாமிடைத் தோன்றுவ
வந்தர வாத்தும னேக்தென வேண்டினை
சிந்தனை யுள்ளிட்டுச் சீவன் குணமேனி
னிந்திரன் றானு மிணைநனக் காமோ.

(இ - ள்.) இடைத் தோன்றுவ ஐந்து - ஐய! நீ இருபத்தைந்து தத்துவங்களிடையே தோன்றுவனவாகிய அறிவுக் கருவிகள் ஐந்தனையும்; அந்தர ஆத்துமன என - இடையுயிர்கள் என்றும்; தாம் தந்திரம் ஆவன (என) வேண்டினை - அவை தாம் பேருயிராகிய வேந்தனுக்குப படைத்துணைவர் போல்வனவாம் என்றுங் கூறினை; சிந்தனை உளளிட்டுச் சீவன் குணம் எனின்-நீ இவ்வாறு கூருமல் மனத்தால் நிகழும் நினைப்பினோடே இந்த ஆறுவகையறிவுகளையும் உயிரின குணம் எனறு கூறுவாயாயின; நுனக்கு இந்திரன தானும் இணை ஆமோ - உனக்கு அகல் விசும்புளார் கோமானுகிய இந்திரனும் நிகராகமாட்டான் என்ருள் எனக.

(வி - ம்.) தந்திரம் - படை. சிந்தனை - சிந்திக்கும் அறிவு.

பராசர நீ பேருயிராகிய அரசனுக்குப் படைத்துணைவர் போன்றன ஆகி இருபத்தைந்து தத்துவங்களிடையே தோன்றும் அறிவுக் கருவிகள் ஐந்தும் என்று கூறினை. இவ்வாறு கூருமல் மனத்தானுணரும் அறிவோடே அவ்வைந்து கருவிகளாலறியும் அறிவுகளையும் கூட்டி இந்த ஆறும் உயிரின் குணம் என்று கூறுவாயாயின் மெய்க்காட்சியின் இந்திரனும் உனக்கு நிகராகான் என்றவாறு.

இதனாற் போந்த பொருள் உயிரையும் குணங்களையும் குணகுணிகளாகக் கொள்ளாமல் ஆறுவகையான உயிர் உண்டென்பது பெரும் பேதைமையேயாம் என்பதாம். ஐந்திரம் என்னும் இலக்கண நூல் செய்தமையால் இந்திரனை உவமை யாக்கியபடியாம். இஃதிகழ்ச்சி. (உக)

இதுவுமது

எகூ. கைகளுங் காலு மிருசா ரிடக்கரு
மெய்திய வாக்குமற் றிந்திய மாமெனிற்
செய்யும் புலனு மறியு மறிவுமற்
றெய்த வுணர்ந்திங் கெடுத்துரை யென்ருள்.

(இ - ள்.) கைகளும் காலும் இருசார் இடக்கரும் எய்திய வாக்கும் - ஐய! நீ கைகளும் கால்களும எருவாயும் கருவாயுமாகிய இருவகை இடக்கருடையனவும் வாயும்; இந்தியம் ஆம் எனின் - தொழிற்கருவிகள் ஆகும் எனருல்; செய்யும் புலனும - இக்கருவிகளாற் செய்யபபடும பொருளும ; அறியும் அறிவும் - அவற்ருல் அறியப்படும அறிவுகளையும ; உணர்ந்து எய்த இங்கு எடுத்து உரை என்ருள் - நீ நனகுணர்ந்து இவ்வவையின்கண் அவற்றை எடுத்துச் சொல்லுவாயாக! என்ருள் என்க.

(வி - ம்.) ஐய நீ கை கால் எருவாய் கருவாய் வாய் என்னும் ஐந்தனையும் கருவிகள் என்பாயல்லையோ? அவற்ருலாம் பொருளும் அறிவும் இன்னின்ன என்று இங்குக் கூறுக! என்றவாறு.

கூறின் அவை குற்றமாதலை யான் கூறுவன் என்பது குறிப்பு. இடக்கர் - அவையிடத்தே கூறத்தகாதவை. அவை எருவாயும் கருவாயும் என்க. (உள)

## இதுவுமது

எகூஎ. காட்டிய வாறுங் கருமத்தி னாமெனி
னூட்டு முலையு முதடும் புருவமு
மாட்டுங் கவுளு மறமெல்லும் பற்களும்
கூட்டி மிடறுங் கோளக்குற்ற மென்னோ.

(இ - ள்.) காட்டியவாறு உம் கருமத்தின் ஆம் எனின் - ஐய! நீ எங்கள் நூல்காட்டியபடி இவை செய்யும் தொழில்களாலே பற்றுதல் முதலியன பயனுகும் எனபாயாயின; ஊட்டும் முலையும் - மகவிறகுப் பாலூட்டும முலையும்; உதடும் புருவமும் - உதடுகளும் புருவங்களும்; ஆட்டும் கவுளும - உணவை இயக்கும் கவுள்களும்; அறமெல்லும் - அவ்வுணவு நையும்படி மெல்லுகின்ற பற்களும்; மிடறும் - விழுங்கும் மிடறும் ஆகிய இவையிறறையும்; கூட்டிக் கொளக் குற்றம் என - நுந் தத்துவங்களோடு கூட்டிக் கொள்ளற் கண் வரும குற்றம் யாதோ? கூறுதி என்றுள் என்க.

(வி - ம்.) காட்டியவாறும் என்புழி உம்மை இசைநிறை. இனிக் கருவாயின் தொழில் இன்புறுதலும் மகப்பேறும் என இரண்டாக்கிக் காட்டிய ஆறும் என முற்றும்மையாக்கினு மாம்.

கைகளால் கவர்தலும் கால்களால் நடத்தலும் இடக்கர் இரண்டானும் கழித்தலும் இன்புறலும் (மகப்பெறுதலும்) வாயினுற் பேசுதலும இவையிற்றின் பொருள்களாமென்னின் இவ்வாறு தொழிற்படுமுறுப்புக்களை யெல்லாம் கருவிகள் என்னுமிடத்து, மகவிற்குப் பாலூட்டும் உறுப்பாகிய முலையும் மூடுதற்கும் திறத்தற்கும் பிறவற்றிற்கும் உறுப்பாகிய உதடும், ஏற்றுதற்கும் இழித்தற்கும் உறுப்பாகிய புருவமும், உணவினை இயக்கும் உறுப்பாகிய கதுப்பும், மெல்லுதற் குறுப்பாகிய பல்லும், விழுங்குதற்குறுப்பாகிய மிடறும் கருவியாகக் கொள்ளுதற்கண் குற்றமென்னோ? என்றவாறு.

அன்றியும் கண்ணுகிய கருவி முதலாயினவும் சில தொழில் செய்தற்கு உறுப்பாகலான் அவற்றையும் தொழிற் கருவிகள் என்று சொல்லாத தென்னோ? இன்னும் கைக்குக் கவர்தலொன்றே யன்றி எழுதுதல் குற்றுதல முதலாயினவும் செரறிதல் முதலாயினவும் விடுதல் முதலாயினவும் பிறவும் தொழில்களாகவும் அவற்றுள் ஒன்றே கொள்ளுமாறென்னோ? காலுக்கு நடத்தலேயன்றி நிற்றலும் குதித்தலும் பாய்தலும் நிமிர்த்தலும் முடக்கலும் தொழிலாகவும் அவற்றுள் ஒன்றே கொள்ளுமா றென்னோ? எனவும் ஒழிந்தவற்றிற்கும் இவ்வாறு கூறி அவற்றை விலக்கிய தென்னே எனவும் வினவி விடுக்க. இதனுற் போந்தது, தொழிற்கருவிகள் என்று கை முதலிய சிலவற்றையே வரைந்து கூறினை. அவ்வாறு கூறியது குன்றக் கூறலாம்; என்னை? தொழிற்கருவிகள் பிறவுமுண்மையால் என்பது. (உஅ)

தன்மாத்திரைகட்கு மறுப்பு

௭௱௮. ஐந்துதன் மாத்திரை தாமணுவாற் றொடர்
கந்தங்க ணாதியிற் காம்புல னேயவை
வந்துபெருகி வரிசையி னான்மிகும்
புந்தியி னால்வகைப் பூதமு மென்றாள்.

(இ - ள்.) ஐந்து தன்மாத்திரை தாம் - இனி தன்மாத்திரைகள் ஐந்தும்; அணுவால் தொடர் கந்தம் - நுண் அணுக்களின் கூட்டத்தாலியன்றவையேயாம; அவை கண் ஆதிக்குப் புலன் ஆம் வந்து பெருகி வரிசையினால் மிகும் - அவ்வணுக்களே மேன்மேலும் வந்து பெருகித் திரண்டு ஒழுங்காக மிகுவனவாம், அங்ஙனம் மிக்குப் பெருகிய அணுக் கூட்டங்கள் தாமே; புந்தியில் நால்வகைப் பூதமும் ஆம் - நம் மறிவிற்குப் புலப்படுகின்ற நான்கு பூதங்களும் ஆகும என்று கூறினள் எனக.

(வி - ம்.) ஐய! தன்மாத்திரைகள் ஐந்தும் ஆவன: ஒலி ஊறு உருவம் சுவை நாற்றம் என்னும் இவைதாமன்றோ? இவை நுண் துகள்களின் கூட்டங்களாலே உண்டாகி ஐம்பொறிகளுக்கும் புலன் ஆவனவே; எங்ஙனம் எனின் அவற்றுள் ஒலியாவது உயிரினது முயற்சி முதலிய காரணங்களாலே தோன்றுவதாகி உருப்பெற்ற அணுத் திரள்களேயாம். என்னை? கடிப்பால் முரசத்தில் ஒலியெழு மாறு போல வெண்கல முதலிய உலோகங்களில் ஒலியெழுமாறும், மலைப் பக்கங்கள் சுவர் முதலிய இடங்களில் எதிரொலி பிறத்தலும் காணப்படுதலின் என்பது. இனி, ஒழிந்த ஊறு முதலியனவும் அணுத்திரள்களாலியன்ற பொருட் பண்புகளேயாம். என்னை? பாழினின்றும் அவை பெறப்படாமையின் என்பது.

இனி, இந்தத் தன்மாத்திரைகள் ஐந்தும் அறிவுப் பொருளாகிய செருக்கிற் பிறக்குமாறென்னை? அறிவுப் பொருளினின்றும் அறிவில் பொருள் பிறத்தல் கூடாமையின், கூடின் நீரும் நெருப்பும் பிறத்தலும் கூடும். ஆதலால் தன்மாத்திரைகள் ஐந்தும் புற்கலங்களாலியன்றனவேயாம்.

இனி, நுண்டுகள்கள் மிகப் பலவாய்க் கூடியவழி நிலம் நீர் நெருப்புக் காற்று என்னும் நாற்பெரும் பூதங்களாவதல்லது, ஊறு முதலியன பொருட் பண்பாகலின் பிறத்தல் கூடாதாம் என்பது. (௨௧)

ஒலி வானத்திற் பிறவாதென்றல்

௭௱௯. ஒன்றாய்ப் பரந்திவ் வுலகு மலோகமுஞ்
சென்றாய்க் கிடந்த தசேதனை தானென்று
மன்றா யருவா யதுவவ்வா காயமு
மென்றா ளெழினெடுங் கண்ணிணை நல்லாள்.

(இ - ள்.) எழில் இணை நெடுங்கண் நல்லாள் - அழகிய இரண்டு நெடிய கண்களையுடைய நீலகேசி பின்னரும் ஐய!;

ஆகாயமும்-இனி அவ்வெளியென்னும் பொருள் தானும்; ஒன்று ஆய் - தான ஒன்றேயாகி ; இ உலகும் அலோகமும் சென்று பரந்து ஆய் கிடந்தது - இந்த வுலகத்தினும் உலகமில்லா விடத்தினும விரிந்து பரவியதாய்க் கிடப்பதொன்றும் ; அசேதனை தான் என்றும் - மேலும் அஃது அறிவில் பொருளாம் என்றும், அன்று ஆய் அருவு ஆயது - உருவம் அன்றாய் அருவமே ஆயதுமாம ; என்றாள் - என்றும் எனவே அததகைய வெளி ஒலியிற் பிறத்தல் கூடாது என்றும் கூறினாள் என்க.

(வி - ம்.) எனவே, அத்தகைய வெளி ஒலியிற் பிறத்தல் கூடாது என்பது குறிப்பெச்சம்.

வெளியென்னும் பொருள் தானொன்றாகி இவ்வுலகினும் எப்பக்கங்களினும் சென்று பரந்து அறிவில் பொருளாய் அருவாய்க் கிடப்பதொன்றும் ஆகவே அது பலவாய் எப்பொழுதாவது எவ்விடத்திலாவது பிறப்பதாய் உருவமுடையதாகிய ஒலியிற் பிறக்கும் என்பது பேதைமையாம் என்றவாறு. (௯0)

இதுவுமது

எகூ0. தானரு வாய பொருளது வாமோலி
மேன்மரு வாதுரு வாதலி னுன்மெய்ம்மை
நூன்மரு வாதுசோன் னாயிது வென்றனள்
மான்மரு வாவந்த நோக்கு மரியாள்.

(இ - ள்.) மான் மருவா அந்த நோக்கும் அரியாள்-மான்கள் தன்பாலடைந்து தன்னுடையபார்வையினைப் பெறுதற்கருமையாய அத்தகைய பார்வையினையுடைய நீலகேசி பராசரனை நோக்கி ஐய!; தான் அருவு ஆய பொருளதுவாம்-வெளிதான் உருவமற்றதொரு பொருளாகும்; ஒலி உருவாதலின் மேல் மருவாது - ஒலி உருவப் பொருளாதலின் அவ்வெளி அதன்பாற் பிறவாது காண்; இது மெய்மமைநூல் மருவாது சொன்னாய் என்றாள் - பிறவாதாகவே நீ ஒலியில் வெளி பிறக்கும் எனனுமிதனை மெய்யாய நூற்பயிற்சியில்லாமையாலே கூறினை என்றாள என்க.

(வி - ம்.) தான் - வெளி. ஒலிமேல் மருவாது - ஒலியிற் பிறவாது.

வெளி அருவமாகலின் உருவமாகிய ஒலியின்கண் பிறவாது. அவ்வாறு பிறக்கும் என்று நீ மெய்ந்நூற் பயிற்சியின்மையாற் கூறினன்னை என்றவாறு.

இந்நூலிற் கூறப்படும் தத்துவப் பிறப்பு முறை மணிமேகலையிற் கூறப்படும் முறைமைக்கு மாறுபட்டிருத்தலுணர்க. முன்னரும் காட்டினும்.

மூலப்பகுதியினின்றும் மான் தோன்றுமென்றும் மானிலிருந்து வெளியும் அதிலிருந்து ஒன்றன் பின் ஒன்றாக ஏனைப் பூதங்களுந்

தோன்றும் என்பது மணிமேகலையிற் கண்டது. இனி இங்குத் தன் மாத்திரைகளினின்றும் ஐம்பெரும்பூதங்களும் தோன்றும் எனறு கூறப் படுகின்றது. இச்சாங்கிய நூ லாராய்ச்சியாளர் பலர் இந்நீலகேசி கூறுமாறே கூறுகின்றனர். (௯௧)

நீலகேசி ஏனைத் தத்துவங்களும் பொருந்தா வெனல்

எ௯௧. பகுதியின் மானில்லை யிஃதினு மஃதில்லை
தொகுதிசெய் பல்குணந் தோற்றமு மில்லா
மிகுதிசெய் பூதத்து மெய்ம்மை பெறுமற்
றகுதியின் றத்தநின் றத்தவ மென்ன.

(இ - ள்.) பகுதியில் மான் இல்லை - ஐய! யாம் இதுகாறும் கூறியவாற்றால் பிரகிருதியில் மான் பிறவாதென்பதும்; இஃதினும் அஃது இல்லை - இந்த மானினின்றும் செருக்கும் தோனறுதற் கிடனில்லை யென்பதும்; தொகுதி செய் பல் குணம் தோற்றமும் இல் ஆம் - இடனிலலையாகவே அந்தச் செருக்கினின்றும் மன முதலாகத் தொகுத்துக் கூறப்பட்ட பதினாறு தத்துவங்களின் பிறப்பும் இல்லையாம் என்பதும் பெறபபட்டன; மிகுதி செய் பூதத்து மெய்மமை பெறுமல் - மேலும் மிக்களவாகிய ஐம்பெரும் பூதங்களின் பிறப்புண்மையும் பெற மாட்டாமையால்; நின் தத்துவம் தகுதியின்று என்ன - நீ கூறும் தத்துவம் தக்க தன்று, என்று கூறி நீலகேசி மறுத்தாள் என்க.

(வி - ம்.) பிரகிருதியில் மானும் மானிலிருந்து செருக்கும் அதனி னின்றும் மன முதலிய பதினாறு தத்துவங்களும் அவற்றிற் பூதங்களும் பிறத்தல் கூடாமை காட்டினும். ஆதலின் நீ கூறும் தத்துவம் தகுதி யுடைத்தன்று என்றவாறு. (௯௨)

இதுவுமது

எ௯௨. குருடனும் பங்குவுங் கூட்டத்திற் கூட்டிப்
பொருடம தாக்கமும் போத்தந் துரைப்பிற்
றெருட லிலையவர் செய்கையிற் செய்கை
யிருடன்னை யின்றி யிவையெய்து மென்றாள்.

(இ - ள்.) குருடனும் பங்குவும கூட்டத்திற் கூட்டி-ஐய! நீ ஒரு குருடனும் ஒரு முடவனும் கூடிச் செயயுந் தொழிலை நுவமித்து; பொருள தமது ஆக்கமும போத்தந்து உரைபபின்- பரமாத்துமனையும பிரகிருதியையும் கூடச் செய்து அவ்வாற்றாற் றத்துவத் தோற்றங்களை வருவித்துக் கூறுவாயேனும்; அவர் செய்கை - அவ்விருவரும் செயகை - செயலாற்றலுடைய அவ்விரு வரும் செய்தல்; எய்தும் - பொருந்தும்; இவை - பரமாத்துமனும்

பிரகிருதியுமாகிய இவையோ; இருள் தன்னையின்றி - தாம் வறிய இருட்பிழம்புகளை ஆதலின்றி; செய்கை இல் - செயலாற்றல் இல்லாதனவே ஆதல்; தெருடல் இலை - நீ தெளிந்தாயிலலை.

(வி - ம்.) ஒரு குருடனும் ஒரு முடவனும் தம்முட் கூடி ஒரு நகரம் புகவேண்டிக் குருடன் முடவனைச் சுமப்ப முடவன் வழி காட்டப்போய் அந்நகரம் புக்கவாறுபோல பிரகிருதியும் பரமாத்துமனுங் கூடலாலே மான் முதலிய தத்துவங்கள் பிறப்பனவாம் எனினும், குருடனுக்கில்லாத வழி காண்டல் முடவனுக் குண்மையாலும் முடவனுக்கில்லாத நடத்தல் குருடனுக் குண்மையானும் அவ்விருவருங் கூட அத்தொழில் நிகழ்தல் கூடும்; இனி, பிரகிருதியும் பரமாத்துமனும் செயலற்றனவும் புடைபெயராத நிலைபேறுடையனவும் ஆதலின் அவை கூடுதலும் பிறப்பித்தலும் கூடா வென்றவாறு.

இனி, இவை இருள் தன்னையின்றிச் செய்கையில் தெருடல் இலை என்றும் அவர் செய்கை எய்தும் என்றும் மாறிக் கூட்டுக. பிரகிருதி பரமாத்துமாவும் கூடுதலும் பிறப்பித்தலும் கூடாவென்பது குறிப்பெச்சம். (௧௧)

இதுவுமது

௭௬௩. எவ்வகை யின்னும் விகார மிலாப்பொருட்
கிவ்வகை தம்மை யெடுத்துரை யென்செய்யும்
மெய்வகை யாலோப்பின் மேற்கோண் முதலிய
வவ்வகை யெல்லா மழிவுள தாமே.

(இ - ள்.) எவ்வகையினும் - எல்லாவகையானும்; விகாரம் இலாப் பொருட்கு - மாறுபாடிலாத பிரகிருதிக்கும் பரமாத்துமனுக்கும்; இவ்வகை தம்மை - பல்வேறு தொழிலும் செய்பவலானான குருடர் முடவர் இவர்தம்மை; எடுத்து உரை என் செய்யும் - உவமையாக எடுத்துக் கூறுதல் என்ன பயனைச் செய்யக்கூடும்; மெய்வகையால் மேற்கோள் ஒப்புஇல் முதலிய - வாய்மையாகவே இவ்வுவமை நினது மேற்கோட்கு பொருந்தாமை முதலிய; அவ்வகை அழிவு எல்லாம் - அந்தவகையான குற்றங்களை யெல்லாம்; உளது ஆம் - உடைத்தாகும் என்றுள் என்க.

(வி - ம்.) எல்லாவகையானும் செய்கையில்லனவாகிய பிரகிருதிக்கும் பரமாத்துமனுக்கும் பல்வேறு செயல்களையும் செய்பவராகிய குருடன் முடவன் உவமை உன் மேற்கோட்கு ஒவ்வாமை முதலிய பல்வேறு குற்றங்களையும் உண்டாக்கும் என்றவாறு. (௧௨)

இதுவுமது

௭௬௪. கூடியு மாகாக் குணத்தின நீயவட்
பாடி யுரைத்த வுயிரும் பகுதியும்
பேடிகள் சாரினும் பிள்ளை பெறுமையை
நாடியுங் காணென்று நன்னுத னக்காள்.

(இ - ள்.) நன்னுதல் - நல்ல நெற்றியினையுடைய நீலகேசி; நீ அவண்பாடி உரைத்த உயிரும் பகுதியும் ஐய நீ அவ்விடத்தே நின்னூலினின் றெடுத்துப்பாடிச் சொன்ன உயிரும் மூலப்பகுதியும்; கூடியும் ஆகாக் குணத்தின - தம்முட் கூடப் பெறினும் மான் முதலிய தத்துவங்கள் தோன்றுதற்கொண்ணாத பண்புடையனவே காண்; பேடிகள் சாரினும் - என்னை? பேடிகளிருவர் தம்முட் கூடினும்; பிள்ளை பெருமையை - மகப்பெறமாட்டாமையை; நாடியும் காண் - ஆராய்ந்தேனும் அறியக்கடவாய்!; என்று நக்காள் - என்று சொல்லிச் சிரித்தாள் என்க.

(வி - ம்.) ஐய! நீ கூறிய உயிரும் மூலப்பகுதியும் தம்முட் கூடுதலரிது; கூடினும், அவற்றின் கூட்டத்தால் மான் முதலிய தத்துவங்கள் தோன்றமாட்டா; என்னை? பேடிகள் இருவர் கூடினும் மகப்பெறல் நிகழாமை போலும் என்றுணர் என்றவாறு. (௬௨)

இதுவுமது

௭௬௩. இல்லுளி யின்றிமற் றெங்கு மிவைமுன்னும்
புல்லின வேயாற் புணர்ச்சி புதிதெனச்
சொல்லின தென்செயத் தோற்றப் படுபொருள்
பல்லன தாமவை பண்டு முளவே.

(இ - ள்.) இவை இல் உளி இன்றி எங்கும் முன்னும் புல்லினவே - ஐய! நீ கூறுகின்ற உயிரும் பகுதியும் தாம் இல்லாத இடம் இல்லையாக யாண்டும் நிறைந்து அநாதியாகவே தம்முட் கலந்திருப்பனவாகவும்; புணர்ச்சி புதிது எனச் சொல்லினது என்செய - அவையிற்றின் கலப்பினைப் புதியதுபோல நீ கூறியது எற்றிற்காக?; தோற்றப்படு பொருள் - இனி உலகின்கண் புதியனவாகத் தோன்றுகின்ற பொருள்களும்; பல்லன - பலவுள்ளனவே என்னின்; பண்டும் அவை உளவே - அங்ஙனம் காணப்படினும் அப்பொருள்கள் தாம் அநாதியாக உள்ளனவேகாண்; என்றாள் என்க.

(வி - ம்.) உளி - இடம்.

உயிரும் பகுதியும் யாண்டும் நிறைந்து அநாதியாகவே கலப்புற்றிருக்கவும் அவை புதிதாகப் புணர்வன போலக் கூறியதென்னை? புதிதாகத்தோன்றும் பொருள் உளவாயினும் அவையும் ஆராயின் அநாதியாக உள்ள பொருள்களே யாதல் காணக்கூடும். இனி இவை எப்பொழுதும் கூடி நிற்றலாலே பிறப்பும் இறப்பும் நிகழமாட்டாவாம் என்றவாறு. இதனாற்போந்தது, உன் தத்துவங்கள் என்றும் உள்ளனவாகவும் அவை ஒன்றனுள் ஒன்று பிறந்ததாகக் கூறுவானேன். அவ்வாறு கூறுதற்குக் காரணம் யாது? என்பதாம். (௬௩)

சாங்கியன் கூற்று

எசுசு. ஆட லழித்தல் படைத்த லடங்குதல்
வீடுபெற் றாங்கண் விளங்கு நிலைமையுங்
கூடிய வைந்து குணத்தின னாதலி
னாடிய குற்றங்க ணண்ணல வென்ன.

(இ - ள்.) ஆடல் அழித்தல் படைத்தல் அடங்குதல்-அது கேட்ட பராசரன் நங்காய்! யாங்கள் கூறும் ஆத்துமன் ஆளுதலும் அழித்தலும படைத்தலும் பொறியடங்கித் தவம் பண்ணுதலும்; ஆங்கு வீடு பெற்று விளங்கு நிலைமையும் - அவ்வழி வீடுபே றெய்தித் திகழுமியல்பும்; கூடிய ஐந்து குணத்தினன் ஆதலின்- பொருந்திய இந்த ஐந்து பண்புகளையும் உடைய ஒரே ஆத்துமன் ஆதலாலே; நாடிய குற்றங்கள் நண்ணல என்ன - நீ ஆராய்ந்து கூறிய குற்றங்கள் எம்மையடைய மாட்டா என்று கூற என்க.

(வி - ம்.) ஆடல் - ஆளுதல். அடங்குதல் - பொறியடங்குதல்.

அதுகேட்ட பராசரன் நங்காய், யாங்கள் கூறும் ஆத்துமன் ஆளுதல் முதலிய ஐந்து பண்புகளையுமுடைய ஒரேயாத்துமன் ஆகலின் நீ கூறும் குற்றங்கள் எமக்காகா. ஆத்துமா பலவென்னும் சாங்கியனுக்கே அக்குற்றங்கள் ஆகும் என்று சொன்னான் என்றவாறு. (சுஎ)

நீலகேசி நினது ஏகாத்துமவாதம் பொருந்தாதெனல்

எசுஎ. ஓதிய வெல்லா மொருவனி னங்கொரு
நீதி வகையா னெறிமைப் படுதலும்
வாதுசெய் வார்கள் பிறராய் வருவது
மூதிய மில்லை யொழியென் றுரைத்தாள்.

(இ - ள்.) அங்கு ஓதிய எல்லாம் ஒருவனின் ஒரு நீதிவகையால் - அதுகேட்ட நீலகேசி ஐய! நீ ஆத்துமன் ஒருவனே என்னுமிடத்து; நீ அவ்வாத்துமனுக்குக் கூறிய பண்புகள் எல்லாம் ஒருவனாலே கூறப்பட்டுச் சாங்கிய சமயம் என்னும ஒரு முறைமையாலே; நெறிமைப் படுதலும் - ஒருவழிப் படுதலும்; வாது செய்வார் பிறராய் வருவதும் - அதற்கெதிராக ஆத்துமா ஒன்றன்று பலவாகும் என்று அவனோடு சொற்போர் செய்வார் பிறராக நிகழ்தலும் கூடாவாகலின; ஊதியம் இல்லை - நின்னுடை ஏகாத்தும வாதத்தாலே உனக்கொரு பயனும் உண்டாகாது; ஒழி என்று உரைத்தாள் - ஆதலால் அதனைக் கைவிடுவாயாக என்று சொன்னாள் என்க.

(வி - ம்.) அதுகேட்ட நீலகேசி ஐய நீ ஆத்துமன் ஒருவன் என்பாயாயின் நின் தத்துவங்களை ஒருவன் கூறுதலும் அதுகேட்டு அவற்றை

மறுத்துப் பலர் கூறுதலும் நிகழ்தல் கூடாதன்றே. அங்ஙனம் நிகழக் காண்டலின் ஆத்துமா பல என்பதே வலியுறுகின்றது. ஆதலின், உனது ஏகாத்தும வாதத்தைக் கைவிடுக! என்றாள் என்றவாறு. (௩௮)

இதுவுமது

௭௬௯. யானை குதிரை முதலாப் படைகுடி
யேனைய தாங்களு மெல்லா மவனேனிற்
றானென்று மாள்வது தன்னை யெனினங்கள்
கோனிவ னாமெனக் கூறினர் யாரோ.

(இ - ள்.) யானை குதிரை முதலா படை குடி ஏனைய தாங்களும் எல்லாம் - ஐய! நீ ஆத்துமன் ஒருவனேயுளன் என்னுமிடத்து யானை குதிரை முதலிய அஃறிணையுயிர்களும், காலாட் படையும் குடிமக்களும் அமைச்சரும் நண்பரும் பிறரும் ஆகிய உயர்திணையுயிர்களும் எல்லாம்; அவன் - அவ்வொருவனே ஆதல் வேண்டும்; எனின் - அங்ஙனம் கூறின்; தான் என்றும் ஆள்வது தன்னை - அந்த ஆத்துமன் எப்பொழுதும் ஆள்வது தன்னையே யாம் என்பது தேற்றம்; எனின் - அங்ஙனமே எனின்; நங்கள் கோன் இவன் ஆம் எனக் கூறினர் யாரோ - சிலர் ஒருவனைச் சுட்டி இவன் எம்மனோர்க்கெல்லாம் தலைவன் என்புழி; அவ்வாறு கூறுபவர் ஆத்துமாக்கள் அல்லர் ஆயின் அவர் வேறு யாவரோ? கூறுதி என்றாள் என்க.

(வி - ம்) யானை குதிரை முதலாயினவையும் படை குடி அமைச்சு நட்பு முதலாயினவும் ஆகிய எல்லாவுயிர்களும் அவற்றை ஆளும் அரசனும் ஒருவனே எனின் அவ்வரசன் தன்னைத்தானே ஆள்பவன் ஆகானோ? சிலர் ஒருவனைக் காட்டி இவன் எம்மரசன் என்புழி அங்ஙனம் கூறியவர் யாவரோ? கூறுதி என்றவாறு.

இதனால் ஆளப்படுவதும் ஆள்வதும் என உயிர் இரண்டுளவாயின் உயிர் பலவாதல் தேற்றமாம். இல்லையாயின் ஆட்சி கூடாதென்பது போந்தது.

இனி, மாயையால் ஆளப்படுவதும் ஆள்வதுமாகத் தோன்றுகின்றதெனின் மாயை யாருடையது? ஒருவனாகிய அந்த ஆத்துமனுடையதெனின் அந்த ஆத்துமனே மாயையால் மருட்காட்சியுடையன் என்பது போதருதலின் ஆத்துமன் ஒருவனே என்னும் மேற்கோள் பொருத்தமற்றதாம்.

இனி, மாயை மயக்கத்தின் கண்ணதெனின் மருட்காட்சியும் மயக்கத்தினுடையதேயாம். அவ்வாறாயின் மயக்கங்கள் எல்லாம் அறிவுடையனவாம். என்னை? அறிவுப் பொருளின் கண்ணன்றி உணர்வு பிறவாமையின். எனவே, மயக்கங்கள் எல்லாம் தனித்தனி அறிவுடையனவாயின் உயிர் பலவென்பதே வலியுறும்.

இனி, மயக்கம் தன்னியல்பாலே அறிவுப் பொருளாயினன்றே அஃதாவது ; ஒன்றேயாகிய உயிரறிவின் கலப்பால் அறிவுடைத் தாயிற்றெனின், அந்த ஒருயிர்தானும் எல்லாப் பொருளினும் கலந்து நிற்பதொன்றாகலின் நிலமுதலிய அறிவில் பொருளனைத்தும் அறிவுடையனவாதல் வேண்டும் ஆதலினும், அறிவில் பொருளாகிய மயக்கத்தின் கலப்பினால் அறிவுடைய உயிர்க்கு அறியாத்தன்மை வருதலினும், அறிவுப் பொருள் அறிவில் பொருள் என்னும் வரையறை கெடும்.

இன்னும் எல்லாவுயிர்களிடத்தும் அந்த ஒருயிரின் கலப்புள தாயின், ஒருவர்க்குளதாகிய அறிவு முதலாயின எல்லாவுயிரிடத்தும் உளவாதல் வேண்டும் ; வேண்டவே, உயிர் ஒன்றேயுளதென்னும் அறிவு உனக்குண்டானவாறு போல யாவர்க்கும் உண்டாதல் வேண்டும்.

இனி, மயக்கத்தோடு கூடிய உயிரின்கண்ணே மாயை எனின் நீயும் மயக்கத்தோடு கூடியவனேயாதலின், அந்த மாயையும் மருட் காட்சியும் உனக்கும் உண்மையில் நீ உயிர் ஒன்றேயுளது என்று சொல்லியது நின்னுடைய மருட்காட்சியாலேயாம். ஆதலால், உயிர் ஒன்றேயுளதென்னும் மேற்கோள் பொருத்தமற்றதாம் என்பது. (கக)

இதுவுமது

௭௬௬. என்னை யொழித்தினி யெல்லா மவனெனச்
சொன்ன முறைமைய னாகு மவனெனிற்
றன்னை யொழித்துத் தபுத்துடன் றின்றிடிற்
பின்னை யவனையோர் பித்தனென் னுமோ.

(இ - ள்.) என்னை ஒழித்து எல்லாம் அவன் என - ஐய! நீ சண்டுச்சொற்போர் புரிகின்றஎன்னை ஒழித்து ஒழிந்த உயிர் எல்லாம் அந்த ஒரே யாத்துமனே; என்று சொன்ன முறைமையன் ஆகும் எனின் - யான் முன்பு சொன்ன வியல்புடையனே ஆவன் என்று கூறுவாயாயின்; அவ்வழியும் அவனும் நீயுமாய் உயிர்பலவென்பதே போதரும்; இனி தன்னை ஒழித்துத் தபுத்து உடன் தின்றிடின் - இனி என்னை ஒழித்தொழிந்த எல்லாவுயிரும் அவ் வோருயிரே என்று நின்னாற் கூறப்பட்ட உயிர்களுள் வைத்து ஒருயிர் தன்னை யொழிய ஏனைய வுயிர்களைக் கொன்று தின்றால்; பின்னை அவனை ஓர் பித்தன் என்னுமோ - அதன் பின்னர் அவனை ஒரு பித்தன் என்று யாம் கூறமாட்டோமோ? கூறுதி என்றான் என்க.

(வி - ம்.) ஐய நீ என்னை யொழித் தொழிந்தன வெல்லாம் அவன் எனிலும் உயிர்கள் பலவுண்மை தேற்றமாம். இனி ஒருவன் ஆடு முதலிய விலங்குகளைக் கொன்று தின்றவழி அவன் தன்னைத்தானே கொன்று தின்றவனாதலின் ஒரே ஆத்துமன் என்று நின்னாற் சொல்லப் படுகின்றவன் பித்தன் ஆகானோ? ஒருவன் தன்னைத்தானே கொன்று தின்றல் கூடுமாறென்னோ? என்றவாறு. இதனால் ஏகாத்தும வாதத்திற்கு ஒன்றனை ஒன்று தின்னல் செய்வது கூடாதாம் என்பது போந்தது. (௭௦)

இதுவுமது

எஎ௦. தன்கையிற் றன்கண்ணைத் தானே போதக்குத்தி
யென்செயக் குத்தினை யென்பார் பிறரில்லை
தன்கையிற் றன்கண்ணைத் தான்போதக் குத்துவ
தென்செய வோவிதன் காரணஞ் சொல்லாய்.

(இ - ள்.) *தன்கையின் தன் கண்ணைத் தானே போதக் குத்தி - ஐய! நின் தனி ஆத்துமன் தனது கண்ணைத் தானே பொத்தலாம்படி குத்தினாலும்; என் செயக் குத்தினை என்பார் பிறர் இல்லை - நீ எதன் பொருட்டு இவ்வாறு குத்திக் கொண்டாய் என்று வினவுதற்கும் பிறிதோராத்துமனில்லையே; தன் கையிற்றன் கண்ணைத் தான் பொதக் குத்துவது என் செயவோ - அங்ஙன மாகவும் நின்னுடைய ஓரே ஆத்துமன் தன்கண் பொத்துப்போம் படி தானே குத்திக் கொள்வதுதான் யாது கருதியோ?; இதன் காரணம் சொல்லாய் - இதற்குரிய காரணம் இன்னதென்று கூறுக! என்றாள் என்க.*

(வி - ம்.) *இது நீலகேசி ஏகாத்துமா வாதங் கூறும் பராசரனை அசதியாடிய படியாம். பொத - பொத்தலாம்படி.*

*தானே அனைத்துயிருமாயின் ஒருயிர் மற்றோர் உயிரைக் கொன்று தின்பதற்குக் காரணம் என்னையோ? என்பது இதனாற் போந்த பொருளாம். (சுக)*

இதுவுமது

எஎக. தன்னைப் படைப்பின்முன் றானின்மை யாலில்லை
பின்னைப் படைக்கிற் படைக்கப் படுவதின்
முன்னைப் படைப்பேன் முடிவில்லை மூடனே
நுன்னைப் படைத்தவர் யாரினி நோக்காய்.

(இ - ள்.) *மூடனே-அறிவிலியே! நின் ஆத்துமன்; தன்னை படைப்பின் - தன்னைத்தானே படைத்துக் கொள்வான் என்பாயா யின்; தான் முன் இன்மையால் இல்லை - அவன் தன்னைப் படைத்துக்கொள்ளுமுன்னர் இல்லையாவன்; பின்னைப் படைக்கின்- அல்லது அவனை முன்னொருவன் உளனாயிருந்து படைப்பன் எனின்; படைக்கப்படுவதின் முன்னை - நின் ஆத்துமனைப் படைக்கப்படுவதன் முன்புள்ளவனைப் படைப்பது யாது?; முடிவு இல்லை - இவ்வாறே இஃது வரம்பின்றி ஓடுவதாம்; நுன்னைப் படைத்தவர் யார் இனி நோக்காய் - இத்தகைய பொருந்தாமை கூறுகின்ற உன்னைத்தான் படைத்தவர் எத்தகையரோ? இனி யேனும் ஆராய்ந்து பார்க்கக்கடவை காண்! என்றாள் என்க,*

(வி - ம்) நின் ஆத்துமன் தான் படைக்கப்படும் பொருள் எனின், தான் படையாதபோதுளனாகானாதலின் படைப்பென்பது ஒன்றில்லையாம். இனித் தான் உளனாய்ப் படைப்பன் எனின், தான் உளனாகி நின்று பின் படைக்க உளன் ஆயினானோ? தான் படைக்க உளன் ஆயினானோ? படையாதுளன் ஆயினானோ? பிறன் படைக்க உளனாயினானெனின், பிறனும் படைக்கப்படுபொருளாயின் முன் சொன்ன குற்றம் வரும். இனித் தன்னைத்தானே படைத்துக் கொள்ளும் எனின், முன்பில்லாத தான் தன்னைப் படைத்தலுங் கூடாதாம்; கூடின் ஒழிந்தாரும் தம்மைத் தாமே படைக்கவும் அமையும். தான் படையாதுளனாயின், பிறரும் படையாதுளராக அமையும். ஆதலின், படைப்பென்பதொன்றில்லை. இவ்வாறு அறிவிற் கொவ்வாதவற்றைக் கூறு முன்னை ஈன்றவர் பெரிதும் இரங்கத் தக்கவர் என்றவாறு. (௬உ)

இதுவுமது

௭௭உ. கோன்றுகோன் றிட்டுத் தவஞ்செய்யி னத்தவம்
பொன்றுமற் றாதலி னஃதும் பொருத்தமி
றின்றுதின் றிட்டுப் படைப்பிற் றெருட்சிமற்
றென்று மிலன்பெரி தேழையு மாமே.

(இ - ள்.) கொன்று கொன்றிட்டுத் தவம் செய்யின் - ஐய! உலகின்கண் நிகழும் எல்லாச் செயல்களும் நீ கூறுகின்ற ஒரே ஆத்துமன் செயல்களே என்று நீ கூறுதலாலே; கொலை செய்தலும் தவஞ்செய்தலும் அவன் செயல் ஆதல் தேற்றம்; எனவே நின் ஆத்துமன் ஒருசார் உயிர்களைக் கொன்று கொன்று போகட்டு மற்றொருசார் தவமும் செய்வானாயின்; அத்தவம் பொன்றும் - அந்தத் தவம் அழிந்துபடுமன்றோ?; ஆதலின் அஃதும் பொருத்தம் இல் - ஆதலால் எல்லாச் செயலும அவன் செயலே என்னு மதுவும் பொருந்தாக் கூற்றும்; தின்று தின்று இட்டுப் படைப்பின்-இனி ஒருசார் உலகின் கண்ணுள்ள உயிர்களைக் கொன்று தின்று தின்று போகட்டு; படைப்பின் - அவ்வுயிர்களை ஒருசார் படைத்துப் படைத்து விடுதலும் உடையன் ஆயின்; அவன் ஒன்றும் தெருட்சியிலன் - அவ்வாத்துமன் சிறிதும் அறிவிலனே ஆதல் தேற்றம்; பெரிதும் ஏழையும் ஆமே - மிகவும் கீழ்மையுடையோனும் ஆவன் காண்; என்றாள் என்க.

(வி - ம்.) இஃது எல்லாச் செயலும் அந்த ஒரே ஆத்துமன் செயலேயாம் என்பது பொருந்தாமை காட்டியபடியாம்.

உலகின்கண் நிகழும் செயலெல்லாம் அந்த ஆத்துமன் செயலே என்னின் கொல்வானும் தவஞ்செய்வானும் அவனே ஆதல் வேண்டும். கொலையாளன்பால் தவம் நில்லாமையால் இங்ஙனம் கூறுதல் பொருந்தாது; இனிப் படைப்பானும் அழிப்பவனும் அவன் என்றலும் பொருந்தாது; நின் ஆத்துமன் எல்லாச் செயலுமுடையன் ஆயின் அவன் அறிவிலியும் தீவினையாளனுமாதல் தேற்றமாம் என்றவாறு. ()

இதுவுமது

௭௭௩. ஓர்ப்பவன் சொல்லவ னூனவன் றீனவன்
நீர்ப்பவ னோயவன் சீறு மவனுயிர்
நீப்பவன் சாபவ னீப்பவ னேற்பவன்
பேர்ப்பவ னும் பெறுகின்ற தென்னே.

(இ - ள்.) ஓர்ப்பவன் - பேதாய்! நீ எவ்வுயிரும் அந்த ஒருயிரே என்பதன்கண், முன்பு நின் சாங்கிய நெறியுணரா திருந்து பின்பு கேட்டுணர்ந்து ஆராய்பவனும்; சொல் அவன் - அந் நெறியை அறிவுறுத்துபவனும்; ஊன் அவன் - ஊன்றரும் விலங்கு களாயவனும்; தீன் அவன் - அவற்றின் ஊனைத் தின்பவனும்; நோய் அவன் - பிணியாளனும்; தீர்ப்பவன் - அப்பிணி தீர்க்கும் மருத்துவனும்; சீறுமவன் - சீறுகின்றவனும் சீறப்படுபவனும்; உயிர் நீப்பவன் - பிறவுயிரைப் போக்குபவனும்; சாபவன் - உயிர் போக்கப்படுபவனும்; ஈப்பவன் - வழங்குபவனும்; ஏற்பவன்; இரப்பவனும்; பேர்ப்பவன் - ஈயாது இரவலரைப் போக்குபவனும்; போக்கப்படுபவனும்; ஆகிய எல்லாரும் அந்த ஒரே ஆத்துமனே; ஆயும் - ஆகிய விடத்தும்; பெறுகின்றது என்னை - நீ பெறுகின்ற ஊதியம் என்னையோ? என்றவாறு.

(வி - ம்.) எனவே, இங்ஙனம் கூறுதலும் பொருந்தாது என்பது குறிப்பு. சீறுபவன் என்பதற்கு இயையச் சீறப்படுபவனும் என்றும் பேர்ப்பவன் என்பதற்கியையப் பேர்க்கப்படுபவனும் என்றும் வருவித்தோதுக.

முன்பு பரமாத்துமன் உளனென்னும் நினது சாங்கிய தத்துவம் அறியாது பின்பு கேட்டோர்ந்துணர்கின்றானும், அது செவ்வயறி வுறுத்துகின்றானும் அவன்; தின்னப்படும் விலங்கினமாய்ப் பிறந்து ஊன் ஆகின்றானும், ஊனைத் தின்கின்றானும் அவன்; நோய் தீர்க்கும் மருத்துவனும், நோயாளனும் அவன்; சீறுகின்றவனும், சீறப்படு கின்றவனும் அவன்; கொல்கின்றானும் கொலைப்படுகின்றானும் அவன்; ஒன்றைப் போக்குகின்றானும் அவன், போக்கப்படுகின்றானும் அவன் என இவ்வாறு அறிவொடு பொருந்தாதன கூறுவதனால் நீ பெற்ற தென்னையோ? என்றவாறு. (௭௩)

இதுவுமது

௭௭௪. நாயாய்க் கடிக்கு நரியாய்ப் பலகோல்லும்
பேயாய்ப் புடைத்துண்ணும் பெற்றமு மாய்க்குத்து
மீயாய் நலியு மெறும்பாய்த் தெறுமெங்கும்
தீயா னொருவனின் றேவனு மென்றாள்.

(இ - ள்.) ஒருவன் நின் தேவனும் - பராசர நீ கூறுகின்ற ஒருவனாகிய நின் பரமாத்துமன்; எங்கும் நாயாய் கடிக்கும் - எல்லா

விடங்களினும் நாயாகப் பிறந்து கடிப்பான் ; நரியாய்ப் பல கொல்லும் - நரிகளாய்த் தோன்றிப் பல்வேறுயிரினங்களையும் கொல்லுவான் ; பேய் ஆய் புடைத்து உண்ணும் - பேய்களாய்த் தோன்றி உயிர்களை அறைந்துண்பன் ; பெற்றமும் ஆய் குத்தும் - எருதுகளாய்த் தோன்றி மருப்பினால் குத்துவான் ; ஈ ஆய் - ஈக்களாய்த் தோன்றி ; நலியும் - ஏனையவுயிர்களைத் துன்புறுத்து வன் ; எறும்பு ஆய் தெறும் - எறும்புகளாகிக் கடித்து வருத்து வான் ஆதலின் ; தீயான் - பெரிதும் தீவினையாளன் ஆதல் தேற்றம் என்றாள் என்க.

(வி - ம்.) இது சாங்கியன் எல்லாம் பரமாத்துமன் செயலே என்றற்கண் நீலகேசி அசதியாடியபடியாம்.

பேதாய்! நின் பரமாத்துமன் நாய் முதலியனவாகத் தோன்றி உலகெங்கும் பிறவற்றை வருத்துதலின் பெரிதும் தீவினையாளன் காண் என்றவாறு. (௬௫)

இதுவுமது

௭௭௫. வீடு தலைபெற வெந்துநெஞ் சாண்டிடத்
தாடி தவஞ்செயத் தன்கா லழித்திடப்
பாடிய கையிற் படைக்கு மிவனெனின்
மூடர்கட் டேற்ற முடிவுமுண் டாமோ.

(இ - ள்.) இவன் வீடு தலைபெற-ஐய ! நின் பரமாத்துமன் ஒரே காலத்தின்கண் வீடு பெறும் பொருட்டு ; தாடி தவம் செய - தனது தாடியானது தவத்தைச் செய்யவும் ; வெந்து நெஞ்சு ஆண்டிட - தன் மனம் வருந்தி உலகத்தை ஆட்சி செய்யவும் ; தன்கால் அழித்திட - தான் படைத்தவற்றைத் தன் கால்கள் அழித்திடவும் ; கையில் படைக்கும் எனின் - தன் கைகளாலே உலகத்தைப் படைத்துக் கொண்டும் இருப்பன் என்றால் ; பாடிய மூடர் கண் தேற்றமுடிவு உண்டாமோ - இங்ஙனம் அவனைப்பற்றிக் கூறிய மடவோர்பால் தெளிந்ததொரு முடிவு தோன்றுதல் கூடுமோ? என்றாள் என்க.

(வி - ம்.) இது பராசரன் "பரமாத்துமன் ஒரே காலத்தில் வீடு பெறுவானும் செங்கோலோச்சுவானும் தவம் பண்ணுவானும் உலகைப் படைப்பவனும் அழிப்பவனும் ஆவன்" என்றற்கண் நீலகேசி அசதியாடியபடியாம். (௬௬)

நீலகேசி, புடைபெயர்வில்லா நிலைபேறு பொருந்தாதெனல்

௭௬௬. நித்திய மாய பொருணின வாதலின்
வித்தினு ளுண்டேன வேண்டுதி நீள்பனை
யெத்துணை யோவது வென்னினு நுன்கைக்கு
ளித்துணை யுண்டேன்ப தென்னைகோ லேழாய்.

(இ - ள்.) ஏழாய் - அறிவிலியே!; நின பொருள் நித்தியம் ஆய ஆதலின் - நின் மேற்கோளின்படி நின்னாற் கூறப்பட்ட பொருள்கள் புடைபெயராது நிலையுதலுடையன ஆதலாலே; நீள்பனை வித்தினுள் உண்டு என வேண்டுதி - நீண்டதொரு பனையானது பனைவிதையின்கண் யாண்டும் உண்டு என்று கொள்வாயாகின்றனை; அது எத்துணையோ என்னின் - ஆயின் அந்தப் பனைவிதைதான் எவ்வளவுடையது என்று நின்னை வினவின்; நுன் கைக்குள் இத்துணை உண்டு என்பது என்னை - நீ உன் கையகத்துள்ளே அதன் அளவினைக் காட்டி இவ்வளவுடைத்தென்று கூறுதல் என்னையோ? என்றாள் என்க.

(வி - ம்.) நித்தியம் - அழிவின்றி என்றென்றும் நிலைபெறுந்தன்மை; ஈண்டுப் புடைபெயரா நிலைபேறு. புடைபெயரா நிலைபேறு எனினும் அவிசலித நித்தியம் எனினும், மாறில்நிலைப்பு எனினும் ஒன்று.

பராசர! பொருள் புடைபெயர்வின்றி நிலையுதலுடைத்தென்பது நின் மேற்கோளாதலின் பனைவிதையின்கண் நீண்ட பனையும் எப்பொழுதும் உளதாகல் வேண்டுமே? வேண்டவும் பனைவிதை எத்துணையளவுடைத்தென்னின் நீ அதன் அளவு இத்துணையே என நின் கைக்குள்ளேயே காட்டிவிடுகின்றனை, அங்ஙனம் காட்டுதல் என்கொலோ? என்றவாறு.

இன்னும், புடைபெயர்வின்றி நிலைத்திருத்தலே பொருளியல்பு என்றற்கண், உண்டவன் உறங்குதலும், உறங்கினான் விழித்தலும் முதலாயினவும், ஒன்று கற்றவன் பிறிதொன்று கற்றன் முதலாயினவும் குழவிப் பருவத்தான் தானே வளர்ந்து முதியோனாதலும், ஒன்றை மறத்தலும், மீண்டும் அதனை நினைத்தலும் மீட்டுணர்வு முதலாயினவும், வினைசெய்தான் அதன் பயனை நுகர்தலும், பிறப்புடையோன் தானேயுணர்ந்து நன்னெறியறிந்து வீடெய்துதலும் பிறவும், பொருள் நிலையுதலும் நிலையாமையும் உடையதாய்ப் பரிணமிக்குமென்பார்க்கல்லது கூடாவென்பது. அஃதேல் முன்பு நிலையாமைக்குக் குற்றங் கூறினாய், இது பொழுது நிலையுதலுக்குக் குற்றங் கூறுகின்றாய்; ஆதலால் அவ்விரண்டையும் விடுவதல்லது அவ்விரண்டையுங்கூட்டி நிலையுதலும்நிலையாமையும் உடைத்தென்று சொல்லுதல் அமையாதெனின், நன்று சொல்லினை! புடைபெயர்வின்றி நிலையுதலாகிய முதன்மையுடைய நிலைப்பினையும்தோன்றிய கணத்திலேயே கையறக்கெடுவதாகியநிலையாமையினையுங் கூட்டி நிலையுதலும் நிலையாமையும் என்கின்றேமல்லேம், நரனையும் சிங்கத்தினையும் கூட்டியன்றி ஒருருப்பினால் நரத்தன்மையும் பிறிதோருருப்பினால் சிங்கத்தன்மையும் உடையதொரு வேறுபாட்டுருவத்தை நரசிங்கவுருவமென்று சொன்னவாறுபோல வேறுபாட்டுத் தன்மையால் வருவதாகிய நிகழ்ச்சியை நிலையுதலும் நிலையாமையுமாய்க் கொள்வேம். முகத்தோற்றத்தால் சிங்கமும் ஏகமொழிந்த உடம்பு மாத்திரையால் நரத்தன்மையும் தோன்றுமாறுபோல நிறமும் தன் வயப்படுத்தலும் வற்றெனவு முதலாகிய கூட்டுத் தன்மையினால் நிலையுதற்றன்மையும்; முடிக்கலனான தன்மை முதலாகிய பிரிகற்றன்மையினால் நிலையாமையும், இந்த இருவேறு தன்மைகளாலும் இருவேறு தன்மைகளும் பொன் முதலியவற்றிற் றோன்றுகின்றவன்றோ? என்பது.

இங்ஙனமே மானிட விலங்கு, மகண்மா, கோழிப் பாம்பு முதலாயினவுஞ் சொல்லிக் கொள்க.

(மானிட விலங்கு - புருஷ மிருகம்; மகண்மா - மகளிர் முகம் போன்ற முகமுடைய ஒரு விலங்கு. கோழிப்பாம்பு - குக்குடசர்ப்பம்)

இனி, யான் குழவிப் பருவமுடையான் முதியனைப் பரிணமித்தலையே புடைபெயர்வின்றி நிலையுதல் என்று கொண்டேனெனின், அதனை, மாறுபாடின்றி அழிதலாகிய நிலையாமையாக வேண்டாதவா றென்னோ என்றார்க்கு மாறுபாடின்றி அழிதற்கண் குழவி முதியவன் ஆதல் கூடாதெனின், புடைபெயர்வின்றி நிலையுதற் கண்ணும் குழவியானவன் அப்பருவத்தைவிட்டு முதுமையை எய்துதல் கூடாமையின் அதனையும் ஒழி யென்பது.

ஆதலால், பொருள் புடைபெயர்வின்றி நிலையுதலுடையதாயின் பனை முட்டை (விதை)யின்கண் நெடிதாகிய பனை எப்பொழுதுமுள தாகல் வேண்டும்; இப்பொழுதின்றி மேற்றோன்றில் புடைபெயர் வில்லா நிலைப்பும் கெடுதலின் என்பது. (௬௭)

இதுவுமது

௭௭௭. இப்போழு தில்லை யெதிரதற் குண்டேனி
னப்போழ துண்மையு மின்மையு மாக்கி
னெப்பொரு டாங்களு மின்னன வேயெனச்
செப்பினள் தத்துவஞ் சேயரிக் கண்ணாள்.

(இ - ள்.) சே அரி கண்ணாள் - செவ்வரி பரந்த கண்களையுடைய நீலகேசி; இப்பொழுது இல்லை - பனைவிதையின்கண் பனை இப்பொழுது இல்லை; எதிரதற்கு உண்டு எனின் - இனி எதிர்காலத்தே உள தாம் என்பாயாயின்; அப்பொழுது உண்மையும் இன்மையும் ஆக்கின் - அங்ஙனம் கூறியவழி பனைக்கு ஒரு காலத் துண்மையும் ஒருகாலத்து இன்மையும் பெறவைத்தனையல்லையோ?; எப்பொருளும் இன்னனவே என - நீ இனி எப்பொருளும் இங்ஙனமே உண்டுமாம் இல்லையுமாம் என்று கொள் என்று; தத்துவம் செப்பினள் - பாராசரனுக்குப் பொருளியல்பு அறிவுறுத் தினள் என்க.

(வி - ம்.) நீலகேசி, ஐய! நீ பனைவிதையின்கண் பனை இப்பொழுது இல்லை; பின்பு உளதாம் என்பாயாயின் பனையாய்ப் பரிணமித்தற்குரிய ஆற்றலுடைய அவ்விதை அதற்கேற்ற காரணங் களைப் பெற்றுப் பரிணமிப்பதாம். அன்றியும் பனை ஒரு காலத்துள தாகவும், ஒரு காலத்திலதாகவும் சொல்லுதலாற் பொருள் உண்டுமாம் இல்லையுமாம் என்பதும் பெறப்பட்டதன்றோ?; இவ்வாறே எல்லாப் பொருளும் உண்டுமாய் இல்லையுமாய்; நிலையுதலும் நிலையாமையும் உடையனவாயிருக்குமென் றுணர்வாயாக வென்று பராசரனுக்குப் பொருளியல்பு அறிவுறுத்தினாள் என்றவாறு. (௬௮)

## தத்துவம் இருபத்தைந்தெனல் பிழை எனல்

௭௭௮. உருவோ டருவமா காயமு மூன்று
மிருபதின் மேலுமைந் தாக விசைத்தனை
யருவோ டலோக மசேதன மூன்றிற்
செருவோ டுரிமையிற் சேர்பவு மன்றே.

(இ - ள்.) உருவோடு அருவம் ஆகாயமும் மூன்று-உருவப் பொருளும் உருவில் பொருளும் வெளியும் என்று மூன்றாக அமைவதனையே; இருபதின் மேலும் ஐந்து ஆக இசைத்தனை-நீ இருபத்தைந்து தத்துவங்களாக வறிதே விரித்தோதினைகாண்!; செருவோடு-இனி அவற்றையே சிறிது மாறுபாட்டோடு கூறின்; அருவோடு அலோகம் அசேதனம் என மூன்றில் உரிமையிற் சேர்பவும் அன்றே - உருவில் பொருளும் அலோகமும் அறிவுப் பொருளும் என்னும் இம்மூன்றினும் அவையெல்லாம் உரிமையோடு பொருந்துவனவன்றோ? என்றாள் என்க.

(வி - ம்.) பொருள்கள் அருவம் உருவம் ஆகாயம் என்னும் இம் மூன்று வகையி லடங்குவனவாகவும் நீ வாளா அவற்றை இருபத்தைந் தாகக் கொண்டனை. இனி முற்கூறியதிற் சிறிது மாறுபடுத்தி அருவம் அலோகம் அசேதனம் என்னினுமாம் என்றவாறு.

செரு - மாறுபாடு. (௪௧)

## இதுவுமது

௭௭௯. ஒன்றொன்றி னொன்றி யுலகுள் வழியெங்குஞ்
சென்றவ னுண்மை பகுதி யிதுமன்னு
மென்றனை யெண்முறை யன்றிமற் றீண்டுபு
நின்றன வீரு நிலமுத னான்கே.

(இ - ள்.) ஒன்று ஒன்றின் ஒன்றி-ஐய! நீ அணுக்கள் தம்முள் ஒன்றனோடு ஒன்றாகக்கூடி; உலகு உள்வழி எங்கும் சென்று-உலகத்து எவ்விடத்தும் பரவி; அவன் உண்மை - உயிரோடு வினைவடிவில் கலந்திருப்பதனை; பகுதி இது என்றனை - பிரகிருதி என்று கூறுவாயாயினை; எண் முறை அன்றி ஈண்டுபு நின்றன - அணுக்கள் அளவின்றித் திரண்டு நிற்பனவற்றையே; நிலம் ஈரும் முதல் நான்கு என்றனை - நிலம் இறுதியாகக் கூறப் படுகின்ற பூதங்கள் நான்கும் என்று கூறுவாயாயினை; என்றாள் என்க.

(வி - ம்.) என்றனை என்பதனைப் பின்னரும் கூட்டுக. நிலம் ஈரும் முதல் நான்கு என மாறுக. முதல் - பூதம்.

அணுக்கள் பல கூடி வினைக்குத் தகச் சென்று உலகத்தெங்கும் உளவாய் ஞானாவரணீயவுருவத்தால் உயிரோடு அநாதிவரலாற்றால் கலந்து சிற்றறிவு முதலிய விகுதிகளைப் பயப்பதாகிய அதனைப் பிரகிருதி என்றும், அணுக்கள் மிகப் பலவுங் கூடி நிற்பவற்றையே நில முதலிய நான்கு பூதமும் ஆமென்றுஞ் சொன்னாயாகக் கொள்ளென்ற வாறு. (௯௦)

இதுவுமது

எ௮௦. பத்தனை யாய்நின் பரமாத் துமனையுஞ்
சித்தனை யாகக் கருதியல் சீவன்கட்
கத்தன்மை ஞானமு மென்னு யவனுக்குத்
துத்தலுங் காண்டலுஞ் சோல்லினை யன்றோ.

(இ - ள்.) நின் பரமாத்துமனையும் - ஐய! இனி நீ நின்னுடைய பரமாத்துமனையும்; பத்தன் (ஐ) ஆய் சித்தன் (ஐ) ஆகக் கருது - அன்புடையையாகி யாங்கள் சொல்லும் சித்த பரமேட்டியாகக் கருதி வழிபாடு செய்யக்கடவாய்; சீவன்கட்கு அத்தன்மை ஞானமும் இயல் என்னாய் - உயிர்களுக்கு நீ பரமாத்துமனுக்குக் கூறியவாறே அறிவும் இயற்கைப் பண்பென்று கூறுவாயாக!; துத்தலும் காண்டலும் சொல்லினை அன்றோ - என்னை? நீ உயிருக்கு நுகர்ச்சியும் காட்சியும் உளவாகக் கூறினையல்லையோ? ஆகலின் என்றாள் என்க.

(வி - ம்.) பத்தனையாய் என்புழியும் சித்தனையாக வென்புழியும் ஐகாரங்கள் சாரியை. துத்தல் - நுகர்ச்சி. அத்தன்மை, என்றது பரமாத்துமனுக்குக் கூறியவாறே என்றவாறு.

ஐய ! நீ பரமாத்தும னென்று சொல்லுகின்றவனைச் சித்த பரமேட்டியாகக் கருதுக. இனிப் பிறவியிற் சுழலுகின்ற உயிர்களுக்கு அறிவு இயல்பாக வுளதென்று கொள். என்னை நீ உயிர்க்கும் நுகர்வும் காட்சியும் இயற்கைப் பண்புகள் என்கின்றனையல்லையோ ? என்ற வாறு. (௯௧)

பராசரன் ஆருகதரறங்கோடலும் நீலகேசி அவனை மெய்யுணர்வித்தலும்

எ௮௧. வண்டார் குழற்பெயர் மாணிழை யிற்றேனக்
கோண்டே னெனவவன் கூறினன் கூறலும்
பண்டே லறியெனப் பராசர நீயினிக்
கண்டா யெனச் சோல்லிக் காட்சி கோடுத்தாள்.

(இ - ள்.) அவன் வண்டு ஆர் குழல் பெயர் மாண் இழை - பராசரன் வண்டுகள் ஆரவாரித்தற்குக் காரணமான கூந்தலின் பெயரையும் மாட்சிமையுடைய அணிகலன்களையுடையவளுமாகிய

நீலகேசியே!; இற்று எனக் கொண்டனன் என - நின்னருளாலே யான் பொருளியல்பு இத்தன்மைத்தெனக் கண்டுணர்ந்தேன் என்று; கூறினன் - பாராட்டுக் கூறினனாக; கூறலும் - அங்ஙனம் கூறியவுடன்; பராசர நீ இனி பண்டு கண்டாய் அறி எனச் சொல்லி - நீலகேசி அவனை நோக்கிப் பராசரனே அங்ஙனமாயின் நீ முற்பிறப்பிலேயே இவற்றை யுணர்ந்தவனாயினை என்று அறிந்து கொள்! என்று கூறி அவனைப் பாராட்டியவளாய்; காட்சி கொடுத்தாள் - அவனுக்கு நற்காட்சியாகிய அமிழ்தத்தை வழங்கினள்; என்க.

(வி - ம்.) நீலகேசி பராசரனுக்கு மெய்த் தத்துவம் இருந்தவாறு சொல்ல அவனும் அதற்குடன்பட்டு நின்னருளால் யான் தத்துவமுணர்ந்தேன் என்று கூற, ஆயின் நீ பண்டும் தவமுடையை காண் என்று நீலகேசியும் அவனைப் பாராட்டி மெய்யுணர்வு நல்கினள் என்றவாறு. (௬௭)

நீலகேசி பராசரனை வாழ்த்துதல்

எ௮௨. ஐந்து மிருபது மாகிய சொற்பொரு
டந்திவை யல்லது தத்துவ மில்லென்ற
சிந்தை யொழித்துச் சினவரன் சேவடி
வந்தனை யேசெய்து வாழிநீ யென்றாள்.

(இ - ள்.) நீ ஐந்தும் இருபதும் ஆகிய சொற்பொருள் தந்து - நீலகேசி பின்னரும் பராசரனை நோக்கி ஐய! நீ இனியும் இருபத்தைந்து தத்துவங்கள் உளவென்று கூறி; இவை அல்லது தத்துவம் இல் என்ற - இவையிற்றையன்றிப் பிறிதொரு தத்துவமும் இல்லை என்கின்ற; சிந்தை ஒழித்து-கருத்தினைத் துவர விட்டொழித்து; சினவரன் சே அடி-இறைவனாகிய அருகனுடைய சிவந்த திருவடிகளை; வந்தனை செய்து - வழிபாடு செய்து கொண்டு; வாழி என்றாள் - நீடூழி வாழ்வாயாக என்று வாழ்த்தியருளினாள் என்க.

(வி - ம்.) ஐந்தும் இருபதும் ஆகிய சொற்பொருள்-இருபத்தைந்து தத்துவங்கள் உளவென்னும் சொல்.

நீலகேசி மீண்டும் பராசரனை நோக்கி ஐய! நீ இன்னும் அந்தச் சாங்கிய சமய தத்துவங்களையே கூறி வாழ்நாளை வறிதே போக்காமல் அருகபரமன் அருளிய தத்துவங் கொண்டு அவனடி வணங்கி நீடூழி யிருந்து வீடுபெற்றுய்வாயாக! என்று வாழ்த்தினள் என்றவாறு. (௬௮)

சாங்கிய வாதச் சருக்கம் முற்றும்.

---

எட்டாவது

# வைசேடிக வாதச் சருக்கம்

## நீலகேசி உலோகசித்து என்னும் வைசேடிகத் துறவியின் பள்ளி எய்துதல்

எசுக. ஆட்டினு ளவனையு மாக்கிச் செல்பவள்
வீட்டினார் நெறியென விரித்த மேலையோர்
காட்டினார் பலருளுங் கணாத னேயெனு
மீட்டின னுலோகன திடத்தை யெய்தினாள்.

(இ - ள்.) அவனையும் ஆட்டினுள் ஆக்கிச் செல்பவள் - அத்தினபுரத்தின்கண் ஏனைய சமயக் கணக்கரைச் சொற்போர்க்கு அறை கூவியிருந்த சாங்கியனாகிய அந்தப் பராசரனையும் பல்வேறு வினாக்களாலே அலைத்துச் சொற்போரில் தோற்பித்துப் பின்னர் அவனுடைய அறியாமையைப் போக்கி மெய்யுணர்ச்சி பெற்றவனாக்கி அந்நகரினின்றும் சென்ற நீலகேசி; வீட்டின் ஆர் நெறியென விரித்த காட்டினார் மேலையோர் பலருளும் - மாந்தர் வீட்டுலகின்கண் பொருந்தும் நன்னெறிகள் இவை என்று விரிவாகக் கூறிய சமயங்களை விளக்கிக் காட்டிய சமயக்கணக்கர் ஆகிய முன்னைச் சான்றோர் பலருள்ளும் வைத்து; கணாதனே என்னும் ஈட்டினன் - கணாதன் இவனே என்று உலகம் புகழும் பெருமையுடையவனாகிய; உலோகனது இடத்தை எய்தினாள் - உலோகசித்து என்னும் துறவியிருந்த பள்ளியிடத்தை அடைந்தாள்; என்க.

(வி - ம்.) ஆட்டினாள்: முற்றெச்சம். அவன் : பராசரன். ஆக்கி - மெய்யுணர்வுடையோனாக்கி. வீட்டின் ஆர் நெறி - சமயங்கள். விரித்த: பெயர். கணாதன் - வைசேடிக சமய முதல்வன்.

ஆடை முதலியவற்றை மாசு நீங்குமளவும் நீருள்ளிட்டு அலைக்குமாறு போலப் பல கேள்விகளாலே அலைத்துச் சாங்கியனாகிய பராசரனது அறியாமையை நீக்கி அவனை மெய்யுணர்ந்தானாக்கி அங்கு நின்றும் சென்ற நீலகேசி வீட்டுநெறி பலவற்றுள்ளும் வைசேடிக சமய நூலைச் செய்த கணாதனை ஒத்த பெருமையையுடைய உலோகசித்து என்னும் துறவியினது தவப்பள்ளியை எய்தினாள் என்றவாறு. (க)

## உலோகசித்து நீலகேசியைக் கண்டு தத்துவங் கூறல்

எஅஉ. வனப்புடை மாதரைக் கண்டு மாதவன்
சினப்புடைக் கருத்தின னென்னச் சிந்தித்தே
நினக்கினி நெறிவயி னின்ற மெய்ம்மையை
மனக்கொளக் கிளக்குவேன் மன்னுங் கேளென.

(இ - ள்.) மாதவன் - உலோகசித்து என்னும் பெரிய தவத்தினையுடைய அவ் வைசேடிகன்றானும் ; வனப்பு உடை மாதரைக் கண்டு - தன் தவப் பள்ளிபுக்க அழகுடைய நங்கையாகிய அந் நீலகேசியினைக் கண்டு ; சினப்பு உடைக் கருத்தினள் என்னச் சிந்தித்து - இவள் நம்மோடு சினந்து சொற்போர் நிகழ்த்தும் கருத்துடையள் என்று குறிப்பாலுணர்ந்து ; இனி நினக்கு நெறிவயின் நின்ற மெய்ம்மையை - நங்காய் ! யான் இப்பொழுது நினக்கு என் சமயத்தின்கண் ணமைந்த தத்துவங்களை ; மனக்கொள - நீ நன்குணரும்படி எண்மையாக ; கிளக்குவேன் - கூறுவேன்; கேள் என - கேட்பாயாக! என்று கூறிச் சொல்லத் தொடங்கினன் என்க.

(வி - ம்.) வனப்பு - அழகு. மாதர் : நீலகேசி. உலோகசித்து, குறிப்பறிதலினும் மிக்க திறனுடையான் என்பதனை "சினப்புடைக் கருத்தினள் என்னச் சிந்தித்தே" என்பதனாற் பெறவைத்தார். என்னை?

"பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்" (குறள் - ௭0௯)

என்பதுமுணர்க.

உலோகசித்து நீலகேசியைக் காண்டலும் இவள் சொற் போர் புரியுங் கருத்தோடிங்கு வந்தாளாதல் வேண்டுமென் றுணர்ந்து நங்காய் ! நீ கூறுமலே நின் கருத்தறிந்தேன் என் சமய நூல் கூறும் தத்துவம் கூறுவேன் கேள் என்று கூறத் தொடங்கினன் என்றவாறு. (௨)

உலோகசித்து தத்துவங் கூறல்

௭௮௫. நெறியெனப் படுவது நின்ற மெய்ம்மையங்
கறிதலுக் கரியன வாறு சொற்பொருள்
செறியயான் சொலிற் றிரப்பியங் குணந்தொழில்
பொறியினாய் பொதுசிறப் புடன் புணர்ப்பதே.

(இ - ள்.) பொறியினாய் நெறியெனப்படுவது - ஆகூழுடைய நங்காய் ! என்னுடைய வைசேடிக சமயம் என்னும் வீட்டு நெறிதான் - அங்கு அறிதலுக்கு அரியன நின்ற ஆறு சொற்பொருள் மெய்ம்மை - கூறுமிடத்தே யாவரானும் உணர்தற்கரியனவாய் நின்ற ஆறு தத்துவங்களையுடையதாம் ; யான் செறியச் சொலின் - யான் அவற்றை ஒரு சேரக் கூறுங்கால் அவைதாம் ; திரப்பியம் குணம் தொழில் பொது சிறப்பு உடன்புணர்ப்பு அது - பொருளும் குணமும் தொழிலும் பொதுவும் சிறப்பும் கூட்டமும் என்னும் இவ் வாறு தத்துவங்களுமேயாம் என்றான் என்க.

(வி - ம்.) பொது எனினும் சாமான்யம் எனினும் ஒக்கும். சிறப்பு எனினும் விசேடம் எனினும் ஒக்கும். உடன்புணர்ப்பு எனினும் சமவாயம் எனினும் கூட்டம் எனினும் ஒக்கும்.

வைசேடிக சமய தத்துவம் கூறத் தொடங்கிய உலோகசித்து, நங்காய்! என் நெறியாகிய வைசேடிகம் அறிதற்கரிய வாய்மையை யுடைய ஆறுவகையான தத்துவங்களை யுடைத்தாம். அவையாவன - பொருள், குணம், தொழில், பொது, சிறப்பு, கூட்டம் என்பனவாம் என்றான் என்றவாறு.

என் சமய தத்துவங் கேட்டுய்தற்குரிய ஆகூழுடையை என்று பாராட்டுவான் பொறியினாய் என்று விளித்தான். பொறி - ஊழ். (௬)

அப் பொருள்களின் இயல்பு

எ௱௬. பூதமைந் தொடுதிசை மனம்பொ ழுதுயி
ரோதினப் பொருள்கடா மோன்ப தாமவை
நீதியிற் குணமவற் றியல்பு செய்கையும்
போதரும் பொருட்புடை பெயர்ச்சி யாகுமே.

(இ - ள்.) அப் பொருள்கள் தாம் ஒதின் அவை - நங்காய்! அவற்றுள் முற்படக் கூறிய பொருள்களாவன இவையென்று கூறுமிடத்தே அவை; ஐந்து பூதமொடு திசை மனம் பொழுது உயிர் - ஐந்து பூதங்களும திசையும் மனமும் காலமும் உயிரும் என்னுமிவ் வொன்பதுமாகும்; நீதியில் குணம் அவற்று இயல்பு- இனி முறையே குணம் என்பது அப்பொருள்களின் பண்பாகும்; செய்கையும் - இனி செய்கை என்பதுதானும்; பொருள் போதரும் புடை பெயர்ச்சியாகும் - அப்பொருள்கள் இயங்குகின்ற புடை பெயர்ச்சியே ஆகுங்காண் என்றான் என்க.

(வி - ம்.) பொருள்கள் நிலம் நீர் தீ வளி வெளி என்னும் பூதங்கள் ஐந்தும், திசையும் மனமும் காலமும் உயிரும் என்னும் இவ்வொன்பது மாம். குணமென்பது அப்பொருள்களின் பண்புகளேயேயாம். செய்கை என்பது அவற்றின் புடைபெயர்ச்சியை என்றான் என்ற வாறு. (௭)

இதுவுமது

எ௱௭. பெரியதும் பின்னது மாய தப்போது
உரிதினிற் பொருள்களைச் செலுத்து மொற்றுமை
தெரிவுற வருவது சிறப்ப தாங்குணக்
கிரியைக ளிதற்கெனக் கிளத்தல் கூட்டமே.

(இ - ள்.) பெரியதும் பின்னதும் ஆய அப்பொது - இனி ஆங்குக் கூறிய முதன்மையுடையதும் அஃதில்லதும் என இரு வகைப்பட்ட பொது என்னும் தத்துவந்தானும்; பொருள்களை உரிதினில் செலுத்தும் ஒற்றுமை - முற் கூறப்பட்ட பொருள் களுக்குள் ஒன்றற் கொன்று உரிமையுடைத்தாதலைச் செய்கின்ற ஒற்றுமைத் தன்மையைச் செய்யுமொரு தத்துவமாம்; சிறப்பது

தெரிவு உற வருவது ஆம் - இனிச் சிறப்பெனப்படுவது அப் பொருள்களின் தனித்தன்மையை யுணர நிற்குமொரு தத்துவ மாகும்; கூட்டம் - இனி இறுதியினின்ற கூட்டம் என்பது; குணம் கிரியைகள் இதற்கு எனக் கிளத்தல் - குணந் தொழில்களுள் வைத்து இக்குணம் இப்பொருளினது இத்தொழில் இப் பொருளினது எனக் கூறுதற்குக் காரணமாயிருப்பதொரு தத்துவ மாகும் என்றான் என்க.

(வி - ம்.) பெரியதும் என்புழி ஈண்டுப் பெருமை முதன்மைப் பண்பின் மேனின்றது. எனவே, பொது வென்பது முதன்மையுடைய பொது வென்றும் அஃதில்லாத பொது என்றும் இருவகைப்படும் என்றாராயிற்று. பெரியதும் சிறியதும் என்றது பின்னதும் என்றமையால் பெரியது என்பது முன்னதனை (முதன்மையுடையது) என்பது பெற்றாம்.

இவற்றை, மகா சாமானியமும் அவாந்தர சாமானியமும் என்றும், பரசாமானியம் அபரசாமானியம் என்றும், வாளாது மூதற் பொது வென்றும் பொது வென்றும் ஓதுப.

முதன்மையுடையதும் அஃதில்லதும் என இருவகைப்பட்ட அந்தப் பொது என்னுந் தத்துவங்களுள் வைத்து முதற் பொது என்பது பொருள்களின் உண்மைத் தன்மை முதலியவற்றை உணர் தற்குக் காரணயாவதாம். முதன்மையில்லாப் பொது வென்பது பொருட்டன்மை குணத்தன்மை முதலியவற்றை உணர்தற்குக் காரணமாவதாம். இவ்விரு வகைப்பட்ட பொது வென்னுந் தத்துவம் நிலைப்பும் பரப்பும் உடையதாய்ப் பொருள்களுக்கு ஓர் ஒற்றுமையைச் செய்வதாம். இனி, சிறப்பென்பது பொருள்களுள் வைத்து ஒன்றற் கொன்று வேறுபாட்டைச் செய்வதொன்றாம். இனி, கூட்டம் என்பது பொருள்களுக்கும் குணஞ் செயல்களுக்கும் உள்ள இயைபினை உணர்த்துமொரு தத்துவமாகும். இதுவும் நிலைப்பும் பரப்புமுடையது என்றவாறு. (௬)

இதுவுமது

௭௮௮. ஆறின் முதன்மூன் றத்தி மற்றவற்
றீறின் மும்மையு மின்மையை யெய்தின
கூறின பொருள்களுங் குணனுஞ் செய்கையும்
வேறென விரித்தனன் விசேட வாதியே.

(இ - ள்.) ஆறின் முதல் மூன்று அத்தி-நங்காய்! முற்கூறப் பட்ட ஆறு தத்துவங்களுள் முற் கூறப்பட்ட பொருள் குணம் தொழில் என்னும் மூன்று தத்துவங்களிலே மட்டும் உண்மைத் தன்மை யென்னும் பொதுத் தத்துவம் கிடப்பதாம்; அவற்று ஈறின் மும்மையும் - அப் பொருள் முதலிய மூன்றின் பிற கூறப் பட்ட பொது சிறப்பு கூட்டம் என்னும் மூன்றும்; இன்மையை எய்தின - தம்பால் அந்த உண்மைத்தன்மை யென்னும் பொதுத் தத்துவம் இல்லாதன ஆயின; கூறின பொருள்களும்-பொதுமை

யுடையன என்று கூறப்பட்ட பொருள் குணம் தொழில் என்னும் மூன்றும்; வேறு என விரித்தனன் விசேடவாதி-ஒவ்வொன்றும் வெவ்வேறாகிய தனித் தனிப் பொருள்களாம் என்று அந்த உலோகசித்து நீலகேசிக்கு விரித்துக் கூறினன்; என்க.

(வி - ம்.) முன் கூறப்பட்ட தத்துவம் ஆறனுள் வைத்து முதற்கட்கிடந்த பொருள் குணம் தொழில் என்னும் மூன்றினும் உண்மை என்னும் பொதுத் தத்துவம் கிடப்பதாம். இனி, இறுதிக்கட் கிடந்த பொது சிறப்பு கூட்டம் என்பனவற்றுள் உண்மைத்தன்மை என்னும் பொதுத் தத்துவம் கிடவாதாதலின் அவை உண்மைத்தன்மை யுடையன வல்லவாம். என்னை? பொது முதலியவற்றில் உண்மைத் தன்மை கிடக்கில் அவ்வுண்மைத் தன்மை பொதுவினும் உண்மைத் தன்மையுளதாய் அதனினும் பிறிதோர் உண்மைத் தன்மையுளதாய் வரம்பிகந்தோடுமாதலின். இனி, பொருளும் குணமும் தொழிலும் தனித்தனித் தத்துவங்களாம் என்றான் வைசேடிக வாதியாகிய உலோகசித்து என்றவாறு.

இனி, இவ் வைசேடிக சமயம் பற்றி மணிமேகலையின்கண்,

"வைசே டிகனின் வழக்குரை யென்னப்
பொய்தீர் பொருளுங் குணமுங் கருமமும்
சாமா னியமும் விசேடமுங் கூட்டமும்
ஆமாறு கூறும் அதற்பொருள் என்பது
குணமுந் தொழிலு முடைத்தா யெத்தொகைப்
பொருளுக்கு மேதுவா மப்பொருள் ஒன்பான்
ஞாலம்நீர் தீவளி யாகா யந்திசை
காலம் ஆன்மா மனம்இவற் றுள்நிலம்
ஒலியூறு நிறஞ்சுவை நாற்றமொ டைந்தும்
பயில்குண முடைத்து நின்ற நான்கும்
சுவைமுதலொரோகுண மவைகுறை வுடைய
ஓசை யூறு நிறநாற் றஞ்சுவை
மாசில் பெருமை சிறுமை வன்மை
மென்மை சீர்மை நொய்ம்மை வடிவம்
என்னு நீர்மை பக்கமுத லனேகம்
கண்ணிய பொருளின் குணங்க ளாகும்
பொருளுங் குணமுங் கரும மியற்றற்
குரிய உண்மை தருமுதற் பொதுத்தான்
போதலு நிற்றலும் பொதுக்குண மாதலிற்
சாதலு நிகழ்தலு மப்பொருட் டன்மை
ஒன்றணி கூட்டம் குணமுங் குணியும் என்று
ஒன்றிய வாதியும் உரைத்தனன்" (௨௭-௨௪௧-௬௨)

எனவரும் பகுதியாலும் உணர்க. இனி, மாதவச் சிவஞான யோகியார், "இனி, வைசேடிக நூலிற் கூறும் பொருளாவன—திரவியம் குணம் தொழில் சாதி விசேடம் சமவாயம் இன்மை எனப் பதார்த்தம் எழு

வகைப்படுத்'' என்றோதுதலான் பிற்காலத்து வைசேடிகர் இன்மை கூறும் அபாவத்தையும் ஒரு தத்துவமாகக் கூட்டிப் பொருள் ஏழென்பா ராயினர் என்றுணரலாம்.

இன்னும் இவர்கள் சமவாயம் என்னுங் கூட்டத்தை அகக் கூட்டம் என்றும் புறக்கூட்டம் என்றும் இருவகைப்படுத் தோதுவா ராயினர். இவற்றின் விரிவைப் **பதார்த்த தரும சங்கிரகம், சத்தபதார்த்தி** முதலிய வடநூல்களுட் காணலாம். (சு)

## உலோகசித்து நீலகேசியை வினுதலும் அவள் விடையும்

எஅஎ. தத்துவ மிவையெனத் தலையுந் தூக்கினட்
கோத்ததன் றேவென வுரைநல் லாயினி
யித்தவ மிப்பொரு டேறி யான்செயிற்
பொய்த்தவ மாதலிற் போவ னென்னவே.

( இ - ள் ) இவை தத்துவம் என - இவ்வாறு வைசேடிக தத்துவங்களைக் கூறிவந்த உலோகசித்து நீலகேசியை நோக்கி இவையே எம் தத்துவங்கள் என்று கூறிமுடிப்ப அதுகேட்டு; தலையும் தூக்கினட்கு — அவை தனக்குடம்பாடன்மையாலே தலை சாய்த்திருந்த நீலகேசியை மீளவும் அந்த வைசேடிகன் நோக்கி; நல்லாய் ஒத்தது அன்றோ உரை என - நங்காய்! யான் கூறியவை அறிவிற்குப் பொருந்தின வல்லவோ? நின் கருத்தினைக் கூறுதி! என்று கூற; யான் இப்பொருள் தேறி இத்தவம் செயின் - அது கேட்ட நீலகேசி ஐய! யான் நீ கூறிய இத்தத்துவங்களை மெய்ம்மையாயவை என்று தெளிந்து நீ மேற் கொண்டுள்ள இந்த வைசேடிக நெறி நின்று தவம் பண்ணுவேனாயின்; பொய்த் தவம் ஆதலின்-அத்தவம் பொய்யாய தவமாதலாலே; போவன் - கெடுவது திண்ணங்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) உலோகசித்து தன் தத்துவங்களைக் கூறி இவை நினக்குப் பொருந்துகின்றனவல்லவோ? என்று வினவ, நீலகேசி அவற்றை உடம்படாது தலைசாய்த்து ஐய! நீ கூறுவன அறிவிற் கொவ்வாதன ; இவற்றைத் தெளிந்து யான் வைசேடிக சமயவழி நின்று தவம் பண்ணின் கெட்டுப் போவேன் என்றாள் என்றவாறு.

இனி, வைசேடிகநெறி நின்று செய்யுந் தவம் பொய்யாமா றென்னையோ? எனின், தொழிலும் உயிரும் வேறு வேறாய்த் தனிப் பொருள்களாதலால் தவம் உயிரோடு தொடர்புடையதன்றாகலின் பொய்யாம் என்பது.

இனி, கூட்டம் என்னும் தத்துவம் தவத்தையும் உயிரையும் கூட்டுவிக்குமென்னினும் அஃதொன்றினைக் கொடு போய் மற்றொன்ற னோடு கூட்டாதாகலின் அத்தவம் மெய்யாகாதென்பதாம்.

போவன் என்றது, கெட்டுப் போவேன் என்றவாறு. (எ)

### உலோகசித்து இத்தத்துவங்கட்குப் பொருந்தாமை காட்டென நீலகேசி அவற்றிற்குக் குற்றங் கூறத் தொடங்குதல்

எ௬௦. மெய்ந்நெறி யிதுவென விரிப்பக் கேட்டிருந்
திந்நெறி யமைதியின் றென்னுஞ் சொல்லினாய்
பொய்ந்நெறி யாதலைத் தேற்றிப் போகெனக்
கைந்நிறுத் தாளது காட்டக் கேளென.

(இ - ள்.) மெய்ந்நெறி இது என விரிப்ப - அது கேட்ட உலோகசித்து நங்காய்! யான் மிகவும் மெய்ம்மையான நெறி எனது வைசேடிகநெறியென்று யான் விரித்துக் கூறவும்; கேட்டிருந்து - அவற்றை யெல்லாங் கேட்டிருந்து பின்னர்; இந்நெறி அமைதி இன்று என்னும் சொல்லினாய் - இந்த வைசேடிக நெறி பொருத்தமுடைத்தன்று என்று இகழும் சொல்லினையுடையை மாயினை; பொய்ந்நெறி ஆதலைத் தேற்றிப் போகு என - அங்ஙனம் இந்நெறி பொய்ந்நெறி ஆதற்கியன்ற காரணத்தை எனக்குச் சொல்லிப் போகக் கடவை என்று உலோகசித்துக் கூற; அது காட்டக்கேள் என-அக்காரணத்தை இனி யான் கூறுவேன் கேட்பாயாகவென் றுடன்பட்டு; கைந் நிறுத்தாள் - நீலகேசி தன்னுடம்பாட்டுக் கறிகுறியாகத் தன் கையை அமைத்தனள் என்க.

(வி - ம்.) அமைதி - பொருத்தம். போகு - போ. கைந்நிறுத்த லாவது அங்ஙனமே செய்வேனென்பதற்கு அறிகுறியாகக் கையை அமைத்துக் காட்டுதல்.

உலோக சித்து யான் கூறியது பொருத்த மின்றென்பாயாயின் அதற்குக் காரணங் கூறென அது கேட்ட நீலகேசி காரணம் கூறு வேன் கேள் என்றுடம்பட்டாள் என்றவாறு. (அ)

### நீலகேசி அவன் தத்துவங்களுக்குக் குற்றங்கூறல்

எ௬௧. நிலமுதற் பூதமாய் நின்ற நான்மையுங்
குலமுதன் மூர்த்தியாய்க் கூறி னொன்றவை
யலமுதற் பொருள்களாய்ப் பன்னி னுயவை
வலமுறை யிடமுறை வருதல் காட்டுகோ.

(இ - ள்.) நிலமுதல் பூதமாய் நின்ற நான்மையும் - ஐய! நின்னால் நிலம் நீர் தீ வளி என நால்வேறு பொருள்களாய்க் கூறப்பட்டு நின்ற அந்த நான்கு பொருள்களும்; குலமுதல் மூர்த்தியாய்க் கூறின் - ஒரே குலத்தினின்றும் தோன்றிய உருவப் பொருளாகக் கூறின்; அவை ஒன்று - அந்த நான்கும் உருவப் பொருள் என்னும் ஒரு கூற்றிலே அடங்குவனவாகும். அல -

அவை நான்கு பொருள்களல்ல; முதற்பொருள்களாய்ப் பண்ணினாய் - நான்கு தனிப் பொருள்களாகக் கூறினையல்லையோ?; அவை - அந்நான்கு பொருளும்; வலமுறை இடமுறை வருதல் - ஒன்றொன்றாகத் திரிந்து வருமாற்றினை; காட்டுகு-யான் நினக்கிப்பொழுது கூறிக் காட்டுவேன் கேள்! என்றாள் என்க.

(வி - ம்.) வலமுறையிடமுறை வருதல் என்றது திரிதல் என்றவாறு.

ஐய! நீ நிலமுதலாகக் கூறிய நான்கு பூதமும் உருவப் பொருள் என ஒன்றும். அவற்றை நான்காகக் கூறினை. அவை ஒன்றாகத் திரியுமாறு காட்டுவேன் காண் என்றவாறு. (கூ)

நான்கு பூதமும் திரிந்தொன்றாதல்

எகூஉ. உரியதோர் நீரணைந் துப்ப தாகுநெய்
யெரியெழு முளர்ச்சியா லிரைக்குங் காற்றதாம்
பெரியதோ ருருமுநீர்ப் பிண்டம் வந்துநீர்
வரிசையிற் படலமாய் வந்த வல்லவோ.

(இ - ள்.) நீர் அணைந்து உரியது ஓர் உப்பு - ஐய! நீராகிய பூதம் பொருந்தி மண்ணுக்குரியதாகிய உப்பாகப் பரிணமிக்கும்; அது ஆகும் நெய் எரி - இன்னும் அந்த நீரிற் பரிணமிக்கின்ற நெய்தானும் தீயாய்ப் பரிணமிக்கும்; அது எழும் உளர்ச்சியால் இரைக்கும் காற்று ஆகும் - அத்தீத்தானும் தான் மிக்கெரிகின்ற இயக்கத்தாலே ஒலிக்கின்ற காற்றாகப் பரிணமிக்கும். நீர்ப்பிண்டம் பெரியதோர் உருவமும் வந்தும்- இன்னும் நீர்ப்பிண்டமாகிய முகிலினின்றும் பெரிய தீயாகிய இடி யேறு பரிணமித்தும்; நீர் வரிசையின் படலமாய் வந்த அல்லவோ - நீரினின்றும் திரண்டு முறைமையாலே நீராகிய முகிற் பிழம்பு பரிணமித்தும் வந்தன அல்லவோ? என்றாள் என்க.

(வி - ம்.) நீர்ப்பொருள் மண்ணாகிய உப்பாய்ப் பரிணமித்தது; நீரிற்படுவதாகிய நெய் தீயாய்ப் பரிணமித்தது; தீ, கிளர்ந்தெரிவுழிக் காற்றுப்பிறக்குமாதலின் அது காற்றாய்ப் பரிணமித்தது; நீராகிய மேகபடலம் இடியாகித் தீயாய்ப் பரிணமித்தது. இன்னும், நீரிடம் நீர் திரண்டு முத்தாயிற்று. இவ்வாறே, சிப்பியுட்புக்கு நீர் முத்தாய்ப் பரிணமித்தது. மண்ணாகிய சந்திரகாந்தக் கல்லும் உப்பும் நீராய்ப் பரிணமித்தன; சூரிய காந்தக் கல்லும் விறகும் தீயாய்ப் பரிணமித்தன. இவ்வாறு பரிணமித்து வருதலின் அவை ஒன்றன்றே நான்காகச் சொன்னவாறு என்னை? என்றவாறு.

இனி, அவை ஒன்றேயானும் வேறுவேறியல்புடையன வாதலானும் உலகத்தார் அங்ஙனம் கூறுதலானும் நான்கென்று கொண்டேனெனின், மண்ணும், உவர்மண் களிமண் மணல் செம்மண் கருமண் என்பன முதலாகப் பலவகைப்படும். நீரும், கடனீர் முகினீர் கூவனீர்

என்பன முதலாகப் பலவகைப்படும். தீயும், வடவைத் தீ ஊழித் தீ
வயிற்றுத் தீ முதலாகப் பலவகைப்படும். காற்றும், தென்றல் வாடை
மூச்சு முதலாகப் பலவகைப்படும், ஆதலால் அவையும் வெவ்வேறியல்
புடையனவும் உலக வழக்கும் ஆதலின், தத்துவங்கள் சாலப்பலவாம்.
நான்கென்றதென்னை? என்றவாறு.

இனி, அவை அவ்வாறு சாலப்பலவாயினும் நிலமுதலிய நான்கு
னுள்ளும் அடங்குதலின் நான்கென்று கொள்ளப்படும் என்னின்,
அந்த நான்கும் உருவப்பொருள் என்னும் ஒன்றன்கண் ணடங்குதலின்
ஒன்றேயாகக் கொள்ளவே அமையும்; நான்கெனல் அமையாதென்ற
வாறு.

இனி, நிலத்தின் வேறுபாடுகள் நிலத்திலடங்கும்; விறகு முதலி
யனவும் பால் முதலியனவும் நில முதலியவற்றில் அடங்குமாறு
என்னை? என்புழி; திண்மையுடையவற்றை யெல்லாம் நிலத்தி
னுள்ளும் நெகிழ்ச்சியுடையவற்றை யெல்லாம் நீரினுள்ளும், இயக்க
முடையவற்றையெல்லாம் காற்றினுள்ளும், வெப்பமுடையவற்றை
யெல்லாம் தீயினுள்ளும் அடக்கி நான்காகக் கூறினேனெனின், நில
முதலியவற்றைப்போல விறகு முதலியனவும் நுண்ணணுக்களின்
திரட்சியால் முடிந்தனவேயாதலின் அவற்றையும் வேறு வேறு பொரு
ளாகக் கொள்வதன்றி, திண்மை முதலிய பண்புபற்றி நான்காகக்
கொண்டனையாயின், நிறப் பண்பு முதலிய பற்றி யாவற்றையும்
உருவப் பொருள் என்றே கொள்ளவமையு மாதலின் ஒன்றே நான்
கெனக் கோடல் குற்றமாம் என்பதாம். (௪௦)

## வெளியினியல்பு

௭௯௫. ஒலியதன் குணமென வுரைத்தி யாதலால்
வலியுடை நிலையில மற்றைப் பூதமும்
ஒலியோடு முதறம்முட் புல்ல லின்மையாற்
கலிசெய லொழிகநின் காய மென்றனள்.

(இ - ள்.) ஒலி அதன் குணம் என உரைத்தி - ஐய! நீ
ஒலியானது வெள்ளியினது குணம் என்று கூறுகின்றனை;
ஆதலால் மற்று எப்பூதமும் வலியுடை நிலையில - அவ்வொலி
யையே ஒத்த ஏனைய நான்கு பூதங்களும் அங்ஙனமே வெளியினது
குணமாகவே அமையும் ஆதலால் அவற்றைப் பூதங்கள் எனல்
வலியுடைத்தாகாது காண்; முதல் ஒலியொடு தம்முள் புல்லல்
இன்மையால் - மேலும் குணியாகிய வெளியும் அந்த வொலியும்
பொலிவுறத் தம்முள் பொருந்துதல் இன்மையாலும்; நின் காயம்
கலி செயல் ஒழிக என்றனள் - நின்னுடைய வெளி ஓசையை
யுண்டாக்கும் என்பதனை நீ இனி ஒழிவாயாக.

(வி - ம்.) கலிசெயல் ஒழிக நின் காயம் என்றனள் என்பதற்கு -
"நீ ஆகாசங் கொண்டு கர்வித்தலொழி!" என்பது பழையவுரை.

ஐய! நீ வெளியின் குணம் ஒலி என்பாயாயின் வெளியொழிந்த
ஏனைய பூதங்களும் ஒலிபோன்று வெளியின் குணமாம் எனவே

யமையும். அவை தனித்தனி முதல்கள் ஆக மாட்டாவாயொழியும். என்னையெனின், நுண்ணணுத்திரளாகி ஒவ்வோரிடத்தே தோன்றுவன வாகிய ஒலிகள் வெளியின் குணமாவதாகின், அவ்வாறாகிய நில முதலியனவும் வெளியின் குணமாகவே அமையும்; இனி ஒலி அணுக் களின் திரள் அன்றெனின், எதிரொலி எழுதலும் ஒலி தோன்றற்கண் வெண்கல முதலிய உலோகங்கள் ஒலித்தலும் செவிப் புலனாதலும் கூடாவாம்.

இனி, ஒலியாகிய குணமும் வெளியாகிய குணியும் தம்முட் பொருந்தாமையானும் நீ ஒலி வெளியின் குணமென்றது ஒழிக என்ற வாறு.

என்னை பொருந்தாமை எனின்? வெளிதானும் நிலையுதலுடையதும் அருவமும் யாண்டும் நிறைவதும் ஆக, ஒலி நிலையுதலில்லாததும் உருவமும் ஓரிடத்ததும் ஆகலின் பொருந்தா தென்பது. இனி, வெளியையுறும் குற்றம் என்னை எனின்? குணமுளவழியே குணியு முளதாதல் வேண்டுமாகலின் வெளியும் யாண்டும் நிறைவதன்றி ஓரிடத்ததாகும். என்னை? நெருப்பின் குணமாகிய செம்மையும் வெம்மையும் உளவழி நெருப்புளதாவதன்றி நெருப்பின்கண் ஒரு பகுதியில் அவையுளவாகின்றனவோ? நீரின் குணமாகிய நீர்மையும் குளிர்ச்சியுமுளவழி நீருளதாவதன்றி நீரின் ஓர் இடத்தே மட்டும் அவை உளவாகின்றனவோ? பாலின் குணமாகிய நிறமுஞ் சுவையுமுள வழிப் பாலுளதாவதன்றிப் பாலின்கண் ஓரிடத்தே மட்டும் நிற முதலியனவுளவாகுமோ? ஆதலால் குணமுளவழியே குணியும் ஆதலின் வெளி ஓரிடத்ததாகும்.

இனி, வெளியும் நிலையாமை யுடைத்தாம்; என்னை? நிற முதலிய குணங்கள் கெட்டவழி பால் முதலிய பொருள்களும் கெடுமாறுபோல ஒலியாகிய குணங் கெட்ட வழி வெளியுங் கெடவேண்டுதலின், இனி வெளி பொறிகளுக்குப் புலனாதலும் வேண்டும்; நிற முதலிய குணங் களும் பால் முதலிய பொருள்களும் பொறிகட்குப் புலனாதல் போல, ஒலி பொறிக்குப் புலனாயின், வெளியும் பொறிக்குப் புலனாதல் வேண்டுதலின்; இனி, பால் முதலிய பொருள்கள் உளவாகிய இடங் காலத்துள் எல்லாம் அவற்றின் குணமாகிய நிற முதலியன பெறப் படுமாறு போல வெளியுள்ள இடங்காலத்துளெல்லாம் மக்களின் முயற்சியில்லாமலே ஒலியும் உளதாகல் வேண்டும்; அவ்வாறாயின், 'அ' எனவோரொலி யெழுந்தால் அஃது எவ்விடத்துள்ளாராலும் எக் காலத்துள்ளாராலும் கேட்கப்பட வேண்டுதலின், ஆகார முதலிய ஏனை ஒலிகள் பிறக்கவும் பெறுவாகிக் காட்சி மலைவாம்.

இனி, (ஸ்போடாதியால்) பூருவ மீமாஞ்சகர் முதலியோர் ஆராய்ச்சியால் ஒலிக்கு இடமுதலிய வரையறை கூறுதலாலே ஒலி நிலையுதலுடைத்தெனின், நடத்தல் முதலிய தொழில்களும் எக் காலத்தும் எவ்விடத்துமுள்ளதான ஒன்றினால் ஒருகாலத்து ஓரிடத்து ஒலி போல வெளிப்படுதலின் நிலையுதலுடையன எனவும் அமையும். இனி, மக்கள் முயற்சி முதலிய காரணத்துக்குத் தக்கவாறு நடத்தல் முதலிய தொழில்கள் தோன்றியழிதல் கண்கூடாகலின், அவை நிலையாமையுடையனவே யெனின், அவ்வாறாகிய ஒலியும் நிலையாமை யுடைத்தாதலின், ஒலியின் அழிவின்கண் வெளிக்கு அழிவுளதா மென்பது. ஆதலால், வெளியின் குணம் ஒலியென்னற்க! என்ற வாறு. (கக)

திசை

௭௬௪. சுட்டின திசைத்திறஞ் சொல்லிற் சூரியன்
பட்டது மெழுந்ததும் பற்றி நான்குமாய்
யெட்டெனப் பலவென வின்ன தன்மையாற்
கட்டினர் வழங்கினுங் காய மெய்துமே.

(இ - ள்.) சுட்டின திசைத் திறம் சொல்லின் - ஐய! இனி நீ பொருளாகக் கருதிக் கூறிய திசையினது தன்மையை ஆராய்ந்து கூறுமிடத்தே; சூரியன் பட்டதும் எழுந்ததும் பற்றி - ஞாயிற்று மண்டிலம் தோன்றுதலும் மறைதலுமாகிய நிகழ்ச்சிகள் காரணமாக; நான்கும் ஆய் எட்டு என பல என - அத்திசையென்பது நான்கு வகையாகிப் பின்னரும் எட்டு எனவும் பலவெனவும்; இன்ன தன்மையால் கட்டினர் வழங்கினும் - இவ்வாறு மாந்தர் படைத்து வழங்குவாராயினும்; காயம் எய்துமே- அத்திசை யென்பது வெளி என்னும் பூதத்தினின்றும் வேறுபட்டதொரு பொருளன்று காண்; வெளி சார்வாகப் படைத்துக் கொண்டு வழங்கும் வழக்கு மாத்திரையேயாம் என்றுள் என்க.

(வி - ம்.) ஐய நின்னால் தனிப் பொருளாகக் கூறப்பட்ட திசை யென்பது ஞாயிற்றின் எழுச்சி வீழ்ச்சி காரணமாக மாந்தர் படைத்து மொழிகின்ற வழக்கு மொழிகளேயாம்; அவற்றுற் சுட்டப்படும் பொருள் வெளியென்னும் பூதத்தின் பகுதிகளேயன்றித் திசை என்று அவ் வெளியின் வேறாகப் பிறிதொரு பொருளுமில்லை என்றவாறு. (௬௨)

காயம் - ஆகாயம்.

இதுவுமது

௭௬௫. மண்டிலம் பலரையு நிறுவி மத்திமங்
கொண்டுநின் றுன்றிசை கூறு மின்னென
வெண்டிசை யவன்வயிற் பிறக்கு மென்பவேற்
கண்டில நின்பொருள் காட்ட வல்லையோ.

(இ - ள்.) மண்டிலம் பலரையும் நிறுவி - ஐய! ஒருவன் தன்னைச் சூழப் பலரை நிறுத்தி; மத்திமங் கொண்டு நின்றுன் - அவர் நடுவே நின்றவன்; திசை கூறுமின் என- தன்னைச் சூழ்ந்து நின்றாரைத் தனித்தனியே நோக்கி யான் நிற்கும் திசையைக் கூறுமின் என்று கூறியவழி; அவன் வயின் எண் திசை பிறக்கும்- அந்நடு நின்றானிடத்திலேயே எட்டுத் திசைகளும் உளவாகக் கூறப்படுமல்லவோ?; நின் பொருள் கண்டிலம் - அவனிடத்தே அத்திசை யென்னும் நீ கூறிய பொருள்களை யாம் காண்கின்றிலேம் அல்லமோ? காட்டவல்லையோ - அவ்விடத்தே அப்பொருளை நீ தானும் எமக்குக் காட்டக் கூடுமோ? என்றுள் என்க.

(வி - ம்.) பலரை மண்டிலமாக நிறுவி என்க. மண்டிலம் - வட்டம்.

பலரைத் தன்னைச் சூழ நிறுத்தி நடுவே நின்றான் ஒருவன் அவர்களைத் தனித்தனியே நோக்கி யான் நினக்கு எத்திசையே நின்றேன்? எனவினவிய விடத்து அவன் எல்லாத் திசையினும் நின்றானாக அவராற் கூறப்படுவன் ஆகலின், அவன் யாண்டும் நிறைந்து நின்றான் ஆயினனோ? அல்லனெனின் இங்ஙனம் கூறுதல் உலகியல் காரணமாக வந்ததாம். அஃதன்றித் திசை யென்பது தனிப் பொருள் என்று நீ ஆண்டுக் காட்டவல்லையோ? என்றவாறு. (கூ)

இதுவுமது

எகூகூ. அத்திசை யவனுமா யல்ல னும்மென
வெத்திசை யவர்களு மிசைப்பி னேகநீ
பத்திசெய் தினியென்னைப் பரமன் பாதமே
சித்தியு முடிவெனச் சேர்ந்து வாழ்தியே.

(இ - ள்.) எத்திசை அவர்களும் - நான்கு பக்கங்களினும் சூழ்ந்து நின்றவர்கள் தாமும்; அத்திசையவனும் - நடு நின்றானைத் தாந்தாங் கூறுகின்ற திசையிலுள்ளவனாகவும்; அல்லனும் என - பிற திசைகளிலே இல்லாதவனாகவும்; இசைப்பின் - கூறுவதே இயல்பாகலின்; சித்தியின் முடிவு என - அவ்வழி யாங்கூறும் அநேகாந்தவாதமே முடிந்த முடிவாம் என்றுணர்ந்து; நீ பரமன் பாதம் சேர்ந்து - நீ அருக பரமனுடைய திருவடிகளை அடைந்து; பத்தி செய்து வாழ்தி - அன்பு செலுத்தி வாழ்வாயாக! ஏகம் இனி என்னை - நின்னுடைய ஏகாந்தவாதத்தால் நினக்குண்டாம் பயன் என்னை? என்றாள் என்க.

(வி - ம்.) சூழ்ந்து நின்றார் ஒவ்வொருவரும் நடுநின்றானை ஒவ்வொரு திசையின் உளனாகவும் ஏனைத் திசைகளில் இலனாகவும் கூறுதலின் எமது உண்டுமாம் இல்லையுமாம் என்னும் அநேகாந்தம் நிலைபெறுவதாயிற்று. நின் ஏகாந்தவாதம் செல்லாதாயிற்று. ஆகவே நீ அநேகாந்தம் கூறிய எங்கள் அருகனை வணங்கி உய்வாயாக! என்றவாறு. (கசா)

மனமும் காலமும்

எகூஎ. மன்னுமம் மனமெனப் படுவ தாவதே
யின்னுயி ருருவினோ டியைந்த வோற்றுமை
யின்னுமக் காலமு மிருமைத் தாகலி
னின்னுடைப் பொழுதவ ணிற்ற லில்லையே.

(இ - ள்) அம் மனம் எனப் படுவதாவது-ஐய! நீ பொருள்களுள் ஒன்றாகக் கூறிய அந்த மனம் என்பதுதானும்; உருவினோடு இன்னுயிர் இயைந்த ஒற்றுமை - உடம்போடு இனிய உயிரானது

கலத்தலாலே பெறப்படுவதொன்றுகலான், அதுவும் தனிப் பொருளன்று காண்; இன்னும் அக்காலமும் இருமைத்து - மேலும் நீ தனிப்பொருளாகக் கூறுகின்ற அந்தக் காலம் என்பது தானும்; அறிவுப் பொருளும் அறிவில்பொருளும் ஆகிய இரு வகைப் பொருள்களின் புடை பெயர்தல் காரணமாகப் பெறப்படு மொரு வழக்கேயாதலின்; நின்னுடைப் பொழுது அவண் நிற்றல் இல்லை - நீ கூறுகின்ற அந்தக் காலமும், ஆராயுமிடத்தே பொருளாக நிற்ப தொன்றில்லை; என்றாள் என்க.

(வி - ம்.) மன்னும் - அசை.

மனம் என்பது உடலும் உயிரும் கூடுதலாலே பெறப்படுவதாதலின் தனிப் பொருளன்று. இதனை ஒரு பொருளாகக் கொள்ளின் இவ்வாறாகிய பொறிகளையும் ஐந்து தனிப்பொருள்களாக்கிப் பொருள் ஒன்பதென்னுது பதினைாகக் கோடல் வேண்டும். இனி, காலம் என்பதுதானும் அறிவுப் பொருளும் அறிவில் பொருளும் புடை பெயர்தல் காரணமாகப் பெறப் படுவதொரு வழக்கு மாத்திரையேயன்றி, தனித்ததொரு பொருளன்று; அது தனிப்பொருளாயின் அறிவுப் பொருளும் அறிவில் பொருளும் போலப் பெற வேண்டும் என்றவாறு. (௪௭)

குண குணிகள்

௭௬௮. குணங்களுந் தொழில்களுங் கூறி வேறெனிற்
பிணந்தனைச் சீவனாய்ப் பெற்ற தென்னையோ
வுணர்ந்தில னுரையுமோன் றிலனெனி னுறுதிநாம்
புணர்ந்தில மவன்வயிற் போந்த தில்லையே.

(இ - ள்.) குணங்களும் தொழில்களும் கூறி - ஐய! நீ பொருளின் பண்புகளையும் அவற்றின் செயல்களையும் தனித்தனித் தத்துவமாகச் சொல்லி; வேறு எனின் - இவை பொருள்களினின்றும் முழுதும் வேறாயவை என்றும் கூறின்; பிணந்தனை சீவனா பெற்றது என்னையோ - இவ்வாறு நீ பிணத்தை உயிர் ஆகச் சொல்லுமாறென்னை?; உணர்ந்திலன் உரையும் ஒன்றிலன் எனின் - உயிர்தான் உணர்தலும் பேசுதலும் முதலிய குணஞ் செயல்கள் பொருந்தாதவழி; உறுதி - அது பிணம் என்பது திண்ணமன்றோ?; நாம் புணர்ந்திலம் - அவ்வுயிரினது உண்மையையும் யாம் காணுமாறில்லையே; அவன்வயின் போந்தது இல்லை - அங்ஙனம் உயிர் உண்மை பெற்ற வழியும் அதனால் வரும் பயனும் யாதொன்றுமில்லை என்றாள் என்க.

(வி - ம்.) பிணம் என்பதுறுதி எனப் பின்னரும் கூட்டுக.

ஐய! நீ குணத்தையும் தொழில்களையும் பிரித்துக் கூறி இவை வேறு வேறு தனிப்பொருள்கள் என்பாயாயின், உணர்தல் முதலிய

குணங்களிலும் பேசுதல் முதலிய தொழில்களிலும் முழுதும் வேறுபட்டது உயிர் என்பது தேற்றம். அவ்வழி இவற்றில் வேறுபட்ட பிணத்தையே நீ உயிர் என்றனை என்பது திண்ணம். இவற்றினின்றும் வேருக உயிர் என்பதொன்று பெறப்படினன்றோ நீ கூறிய கூட்டம் என்றது அவ்வுயிரோடு குணமுதலியவற்றைக் கூட்டுவிப்பதுமாம். அன்றியும், இந்த வுயிரினல் யாம் பெற்றதென்னை? ஒன்றையுணர்தலும் சொல்லுதலும் இல்லையாயின் அதனல் ஒரு பயனுமில்லையாம். அன்றியும் உயிர் அறிதலும் சொல்லுதலும் இலதாயின் அதனது உண்மையும் பெறப்படுதல் இல்லை என்றவாறு.

அன்றியும் உணர்தன் முதலிய குணங்களிலும் சொல்லுதன் முதலிய செயல்களினும் வேறுபட்ட உயிரும், செம்மை வெம்மை முதலிய குணங்களிலும் சுடுதன் முதலிய செயல்களினும் வேறுபட்ட நெருப்பும் எத்தன்மை? என்று வினயவர்க்கு இத்தன்மைய எனின் அத்தன்மையும் அவற்றின் குணமேயாதலின் அதற்கும் அவை வேறும். ஆகவே அவ்விடத்தும் இக்குற்றம் வரும். ஆதலால் குணத்தினும் செயலினும் வேறுவேருகிய உயிர் முதலியன இல்பொருள்களேயாம் என்பது போந்தது. (௧௬)

இதுவுமது

௭௧௯. எப்பொரு ளேக்குணத் தானு மில்லையே
லப்பொரு ளக்குணத் தயல தாதலாற்
செப்பிலக் குளிரினற் றீய துண்மைபோற்
றுப்பெனப் பொருள்களுந் தோற்ற மில்லையே.

(இ - ள்.) எப்பொருள் எக்குணத்தானும் இல்லையேல் - ஐய! யாதானும் ஒரு பொருள் இயல்பாகவே யாதானுமொரு பண்போடு கூடியிருத்தல் இல்லை எனின்; அப்பொருள் அக்குணத்து அயலது ஆதலால் - அந்தப் பொருள் அந்தப் பண்பிற்கு வேறுபட்டது என்பது தேற்றம் ஆதலால்; செப்பில் - கூறுங்கால்; அக்குளிரினல் தீயது உண்மை போல் - நீரின் குணமாகிய அந்தக் குளிர்ச்சியோடே நெருப்பு உளதாதல் இல்லையாறற் போல; பொருள்களும் துப்பு எனத் தோற்றம் இல்லை - எல்லாப் பொருள்களும் தமக்கு வலிமையென்னும்படி பண்புகளோடே தோன்றுமாறில்லை; ஆகவே எல்லாம் பாழாய் முடியும் என்றுள் என்க.

(வி - ம்.) எல்லாப் பொருள்களும் தத்தமக்குரிய குணங்களோடே இயல்பாகவே கூடிநிற்றல் இகழாதாயின்; அந்த அந்தப் பொருள்கள் அந்த அந்தக் குணங்கட்கு மாறுபட்டன என்பது தேற்றமாம். ஆகவே நெருப்பு குளிர்ச்சியோடு தோன்றுமை போலச் செம்மை வெம்மைகளுடனும் நெருப்புத் தோன்றுதாம். ஆதலால் எல்லாப் பொருளும் தத்தம் குணங்களோடு தோன்றுமையின் எல்லாம் பாழாய் முடியும் என்றவாறு. (௧௭)

இதுவுமது

௪௦௦. குணத்தோடு குணிகளைக் கூறி வேறெனப்
புணர்ப்பதோர் பொருளினை வேண்டிற் பொய்யெனிற்
குணத்தோடு குணிகளுங் கூட்ட மின்மையா
லுணர்த்துதற் கரிதவை யுளவு மல்லவே.

(இ - ள்.) குணத்தொடு குணிகளைக் கூறி - ஐய நீ குணங்களையும் குணிப்பொருளையும் பிரித்துக் கூறி; வேறு என - அவை தனித்தனிப் பொருளாய் வேறு வேறு என்று கூறுதலாலே; புணர்ப்பது ஓர் பொருளினை வேண்டின் - அவற்றைக் கூட்டுவிப்பதற்குக் கூட்டம் என்னும் ஒரு தத்துவத்தினைக் கொள்ளுமிடத்தே; பொய் எனின் - யான் அங்ஙனம் ஒரு தத்துவம் உண்மைக்குக் காரணம் இன்மையின் அத்தத்துவம் பொய்ப் பொருளென்பேன், அவ்வழி; குணத்தொடு குணிகளும் கூட்டம் இன்மையால்-குணங்களுக்கும் குணிகளுக்குங் கூட்டம் இல்லாமையாலே; உணர்த்துதற்கு அரிது - இப்பொருள் இக்குண முடைத்தென்றுகூறி அவற்றைப் பிறர்க்குணர்த்தலும் அரிதாகும்; அவை உளவும் அல்லவே - உணர்த்தமாட்டாமையின் அக்குணங்களும் குணிகளும் உள்பொருள்களும் ஆகமாட்டா என்றாள் என்க.

(வி - ம்.) குணத்தையும் குணியையும் வேறு வேறாகச் சொல்லிப் பின்னர் அவற்றைக் கூட்டுதற்குக் கூட்டம் என்றொரு தத்துவம் வேண்டுகின்றனையாயின் அக்கூட்டம் என்பதுதானும் பொது முதலிய மூன்று தத்துவங்களுக்கும் உண்மைத் தன்மையில்லாமையால் பொய்ப் பொருளாமாதலின், அதனாற் குணகுணிகளுக்குக் கூட்டமின்மையின், இதன் குணம் இஃதென்றும், இந்தக் குணமுடைத்து இப்பொருளென்றும் உணர்த்துதற்கும் அரிது; அவையுளவாதலும் அரிது என்றவாறு.

இனி, உணர்வு முதலிய குணங்களும் பேசுதல் முதலிய செயல்களும் உயிர் முதலிய பொருள்களினின்றும் முழுதும் வேறு எனின், குணமும்செயலும் எவ்வழி நிற்பனவாம்? அவை உயிரில் பொருளின் நிற்பின் காட்சி முரணும். உயிரில் பொருளின்கண் உணர்வு முதலிய குணங்களும் பேசுதல் முதலிய செயல்களும் கூட்டம் கூட்ட அவ்வழி நின்றனவோ? தாமாகவே நின்றனவோ? கூட்ட நின்றனவெனின், நெருப்பிற்குரிய வெம்மையை நீரிற் கூட்டலும், நீரிற்குரிய தண்மையை நெருப்பிற் கூட்டலுமாம். தாமாகவே நிற்பில் உயிரின்கண்ணும் உணர்வு முதலியன தாமே நிற்க வமையும். உயிர்ப்பொருள் உயிரில் பொருள்களின்றிப் பிறிதொருவழிக் குணஞ்செயல்கள் நிற்குமெனினும் நிலைக்களனன்றி நிற்றல் கூடாதாம். கூடின், என்றும் பிறிதொருவழிக் குணஞ் செயல்கள் தனித்து நிற்கவும் அமையும்; உயிர் முதலிய பொருள்களோடு உணர்வு முதலிய குணங்கள் தொன்று தொட்டே கூடிநிற்குமெனின், கூட்டம் கூட்டிற்றன்றாம். என்னை ? எப்பொழுதும் கூடி நிற்பதற்குப் பின் கூட்டம் வேண்டாமையான். இனி, குணத்திற்கு-

வேறான குணி கழுதைக் கொம்பு போலப் பெறப்படாதாம் ; குணியில் வேறான குணமும் நிலைக்களனின்மையாற் பெறப்படாதாம். ஆதலால், இரண்டும் பாழாய் முடியும் என்பது. (கஅ)

இதுவுமது

அ0க. ஒன்பதுந் தத்தம துண்மை யாற்பல
வேன்பது மேனைத்தென வெண்ணப் பட்டதும்
வன்பிதன் குணமிது வேன்னப் பெற்றது
மன்பதற் குடைமையி னறியப் பட்டதே.

(இ - ள்.) ஒன்பதும் தம் தமது உண்மையால் பல என்பதும்- ஆதலால் ஐய! நீ நின் தத்துவம் ஒன்பதும் தாமாகவே பல வாகும் என்று கூறுவதும்; எனைத்து என எண்ணப்பட்டதும் - அவை பற்பலவாக நின்றால் எண்ணப்பட்டதும்; இதன் குணம் வன்பு இது என்னப் பெற்றதும் - இவையிற்றில் நில முதலிய வற்றிற்கு வன்மை முதலிய இவ்விக் குணம் உரியதாம் என்று கூறியதும் ஆகிய இக்குற்றங்களுக்கெல்லாங் காரணம்; அதற்கு அன்பு உடைமையின - நின் வைசேடிக சமயத்தின்கண் நினக்குப பற்றுடைமையா னிகழ்ந்த என்பது; அறியப்பட்டது - எம் மால் நன்கு தெளியப்பட்டது என்றாள் என்க.

(வி - ம்.) ஐய! யான் இதுகாறுங் கூறியவற்றால் நீ பொருள் ஒன்பதென்பதும், அவை பற்பலவாகும் என்பதும், அவை பலவாக எண்ணப்பட்டதும் நில முதலியவற்றிற்கு வன்மை முதலியன குணம் என்பதும் பிறவும் குற்றம் எனக் காட்டப்பட்டன. இக்குற்றம் நீ நின் சமயத்தின்பாற் கொண்டுள்ள பற்றினால் நிகழ்ந்தது என்றும் அறிகின்றேம் என்றவாறு. (கக)

இதுவுமது

அ0உ. அதனது குணமதற் கயல தாதலா
லிதனது குணமேன விழுக்கிற் றென்னையோ
உதனமு முணர்விலை யொன்ற தென்றக்கால்
விதனமும் படாயது மெய்யு மாகுமே.

(இ - ள்.) அதனது குணம் அதற்கு அயலது ஆதலால் - ஐய நின் கொள்கையின்படி ஒரு பொருளுக்குரியதாக எம்மனோர் கூறுங்குணம் அப்பொருட்குரியதன்று என்பது பெறப்படுதலாலே; இதனது குணம் என - யாதானுமொரு பொருட்கு யாதானு மொரு குணத்தைக் கூறி இக் குணம் இதனுடையது என்று கூறின்; இழுக்கிற்று என்னை - வரும் குற்றந்தான் என்னையோ?; அது ஒன்று என்றக்கால் - குணமுங்குணியும் ஒன்றைனில்

டொன்று நீங்காத் தொடர்பாலே ஒரு பொருளே என்று கூறு வாயாயின்; அது மெய்யும் ஆகும் - அதுவே வாய்மையும் ஆகும்; விதனமும் படாய் - நீ துன்புறவுமாட்டாய்; உதனமும் உணர்வு இலை - அங்ஙனம் கூறுமையாலே நீ சிறிதும் உணர் வுடைமையல்லை; என்றாள் என்க.

(வி - ம்.) உதனமும் - சிறிதும். விதனம் - துன்பம்.

ஐய! குணமும் குணியும் வேறு வேறு பொருள்கள் ஆயின் நெருப்பின் குணம் வெம்மை, நீரின்குணம் தண்மை என்ன வேண்டுவ தில்லை; நெருப்பின்குணம் தண்மை, நீரின் குணம் வெம்மை எனவும் அமையும். இனி அவை முழுதும் வேறு வேறாவையல்ல ஒன்றை ஒன்று நீங்காத் தொடர்புடைமையாலே ஒன்றே என்றக்கால் யாதொரு குற்றமுமில்லை. என்னை? அதுவே வாய்மையுமாகலின். நீ அவ்வாறு கொள்ளாமையின் சிறிது மெய்யுணர்வுடையையல்லை என்றவாறு. (௨௦)

இதுவுமது

௬௦௩. கெடக்கெடும் பொருளெனிற் கேடு முண்டெனப்
படப்பெறு மதற்குநீ பரிவ தென்னையோ
வடக்குந்தன் றோற்றமு மொட்டி மும்மையு
மடக்கிலு மதுபெரி தழகி தாகுமே.

(இ - ள்.) கெட பொருள் கெடும் எனின்-குணமும் குணியும் ஒன்றிய வழிக் குணங் கெடுமிடத்தே பொருளும் கெடுமே என் பாயாயின் அஃதுண்மையே காண்; கேடும் உண்டு எனப்படப் பெறும் - பொருளுக்கு ஒருவகையால் கேடுமுண்டாகும் என எம்மாற் கூறப்படுதலும் அது கருதியேயாம்; நீ அதற்குப் பரிவது என்னையோ - அது வாய்மையாகவும் நீ அது கருதி வருந்துவதேதற்றிற்கோ?; அடக்கும் தோற்றமும் தன் ஒட்டி - கெடுகின்ற குணம்பற்றிக் கேடும் தோன்றுகின்ற குணம்பற்றித் தோற்றமும் இவற்றோடு தன்னுண்மையும் ஆகிய; மும்மையும் அடக்கிலும் - இந்த மூன்றியல்புகளையும் பொருட்டன்மையாக அடக்கிக் கூறினும்; அது பெரிதும் அழகிது ஆகும் - அவ் விலக்கணம் மிகவும் அழகுடையதாகுங் காண் என்றாள் என்க.

(வி - ம்.) குணமும் குணியும் முழுதும் வேறு வேறு பொருள்கள் அன்றிச் சிறிது ஒற்றுமையுமுடையன எனின். குணம் அழியின் பொரு ளுக்கும் அழிவுண்டாகும். வேறு வேறுதலினன்றே கருமை கெடச் செம்மை தோன்ற ஓந்தி கெடாததூஉம், இளமைகெட முதுமை தோன்ற மனிதன் கெடாததூஉம், சுருட்சி கெட நிமிர்ச்சி தோன்றப் பாம்பு கெடாததூஉம் காணப்பட்டன என்பாயாயின், கருமையோடு நின்றது செம்மையை அடைதலும், இளமையோடுநின்றது முதுமையை யடைதலும், சுருட்சியோடு நின்றது நிமிர்ச்சியை யடைதலும் வினது புடை பெயர்வின்றி நிலையுதற்கண் நிகழுமாறுண்டோ? இவை நிகழ்த

லாலே பொருட்கு ஒருவகையான் நிலையாமையும் வரப்பெறுமாதலின் நீ இதற்குப் பரிவதென்னோ? கெடுகின்ற குணம் பற்றிக் கேடும் தோன்றுகின்ற குணம் பற்றித் தோற்றமும் ஒருநிலையை விடுத்து மற்றொரு நிலையை எய்துகின்ற பொருட்டன்மைக்கு நிலைபேறுமாகக் கொள்வாயெனின் மிகவும் அழகிது என்றவாறு.

அன்றியும் பொருளெனப்படுவது புடைபெயருமியல்புடையதூஉமாமன்றே? அது குணஞ் செயல்களில் வேறுபட்டவிடத்து அது கழுதைக் கொம்புபோலப் புடைபெயராமையின் அத்தவ்வியல்புடையதாகுமோ? என்றாற்கு, குணஞ் செயல்களோடு கூடியபொருள் அவ்வியல் புடைத்தாம் எனின், பொருளாவதூஉம் அதுவேயாமாகலின், பொருளின்கண் ஒருநிலை கெடுதலும் ஒருநிலை கெடாமையும் கொள்ளென்பது. அன்றியும், குணஞ்செயல்கள் பொருளில் வேறாயின், குடம் ஆடை முதலியனபோல அவை தனித்தனி பெறப்படாதவாறு என்னை? என்றாற்கு, அவற்றைக் கூட்டம் கூட்டமெனின், கூட்டம் கூட்டினவழி அவற்றின் வேற்றுமை முழுதுங் கெட்டதோ? ஒன்றும் கெட்டதில்லையோ?; முழுதுங் கெட்டதெனின், அணு முதலாயினபோல ஒன்றாகச் சொல்லுவதன்றிப் பொருள் என்றும் குணமென்றும் சொல்லுதல் பொருந்தாதாம். ஒன்றுங் கெடாதெனின் குடமும் ஆடையும் முதலியனபோல வேறு பெறப்படவேண்டும். கெட்டதூஉம் கெடாததூஉம் எனின் பொருளும் அவ்வாறுதல் பொருந்து மென்பது. (௨௧)

இதுவுமது

௨௦௪. குணங்டாங் குணியேனுங் கூற்று முண்மையிற்
பிணங்கலாய்ப் பொருள்வயிற் பேறு முள்ளதே
யிணங்கலா யிருமைய தின்மை யுண்மையும்
வணங்கலாம் வகையதோர் மாட்சி மிக்கதே.

(இ - ள்.) குணங்கள் தாம் குணி எனும் கூற்றும் உண்மையின் பிணங்கல் ஆய் - குணங்கள் என்றும் குணத்தையுடையது என்றும் இரண்டு கூற்றும் வழக்கிலிருத்தலாலே, அவை முழுதும் ஒன்றே எனப்படாவாய்; பொருள் வயின் பேறும் உள்ளதே - அவையொன்றைவிட்டு ஒன்று நீங்காவாதலின் இரண்டும் ஒன்றேயாய்ப் பொருளும் அதனியல்பும் எனப் பொருளிலக்கணப்பேறும் உள்ளதாம்; இருமையது இன்மையும் உண்மையும் இணங்கல் ஆய் - அவ்விரண்டினது இல்லாமையும் இருத்தலும் பொருந்துதலாகி; வணங்கல் ஆம் வகையது ஓர் மாட்சி மிக்கது - கேட்போர் வணங்கத் தகுந்த பெரியதொரு சிறப்புண்டாயிற்று என்றான் என்க.

(வி - ம்.) குணம் என்றும் குணி என்றும் அவற்றைத் தனித்தனியே குறிக்கும் வழக்குண்மையால் அவை இரண்டும் ஒன்றே எனப் படாவுமாகி, பொருள் குணத்தில் முழுதும் வேறாயதொன்றாயின் அதனைக் குணி என்று வழங்குதலும், குணம் பொருளின் முழுதும்வேறாயதொன்றாயின் அதனைக் குணம் என்று வழங்குதலும் நிகழாமையின் ஒன்றைவிட்டு

ஒன்றை நீங்காவாதலின் குடமும் ஆடையும் முதலியனபோல வேறு வேறு எனப்படாவுமாகி அவ்விரண்டும் ஒற்றுமை வேற்றுமை வடிவத்தால் பொருளாகலின், அப்பொருளிற் கிடக்கும் அதனியல்பும் பெறப்பட்டுக் குணத்திற்குக் குணியுடன் உண்மையும் பிறவழி இன்மையுமாய் இணங்கியிருத்தலால் பெரியதொரு சிறப்புண்டாயிற்று என்றவாறு. (௨௨)

## இதுவுமது

அ௦௩. பண்பினாற் பொருள்களுக் காய பல்பயஞ்
சேண்பினா னறிவினான் செறிவி னானென
மண்பொனாற் குணநிலைக் காய மாட்சியா
நண்பினா னல்லது நடத்த லில்லையே.

(இ - ள்.) பண்பினால் பொருள்களுக்கு ஆய பல் பயம் - குணத்தினாலே பொருள்களுக்குண்டாகும் பல்வேறு பயன்கள் பலவாம்; செண்பினான் அறிவினான் செறிவினான் என - இவன் வித்தகன் அறிஞன் அடக்கமுடையோன் எனக் கூறப்படும்; பல் பயம் - பல்வேறு பயன்களும்; பண்பினால் பொருள்களுக்கு ஆய - குணங்களாலே பொருள்களுக்குண்டாவனவேயாம்; மண் குணநிலைக்கு - மண்ணாலியன்ற வளையல் முதலியவற்றிற் காணப்படும் பொன்மை முதலிய குணச் சிறப்புக்கள் தாமும்; பொனால் ஆய மாட்சியாம் - பொன்னென்னும் பொருட்குணம் அவற்றில் கூடியதனால் உண்டாகிய சிறப்பேயாம்; நண்பினால் அல்லது நடத்தல் இல்லையே — இவ்வாறு ஒன்றற்கொன்று இயைந்து சிறிது வேறுபட்டிருத்தலாலன்றி இச்சிறப்பு உண்டாதலில்லை என்றாள் என்க.

(வி - ம்.) குணங்களால் குணிக்கு வித்தகன் என்றும் அறிவுடையன் என்றும் செறிவுடையன் என்றும் பல பயன்களும் உளவாயின ; இனி மண்ணாலியன்ற வளையல் முதலியவற்றிற் பொன்மை முதலிய குணச் சிறப்புக்கள் உளவே எனின், அவை தாமும் பொன் முதலிய பொருள்களால் அவற்றின்கணுண்டாகிய சிறப்புக்களேயாம். இவ்வாறு ஒன்றிற்கொன்று பயன்படுவனவாதலின் அவை தம்முள் சிறிது வேற்றுமையுடையன வாயினல்லது நடவாது என்றவாறு.

செண்பு - வித்தகம், சதுரப்பாடு. மண் : ஆகுபெயர். (௨௩)

## இதுவுமது

அ௦௪. விலைபெறு நன்மையால் வெறுப்ப தீமையால்
கொலைபெறுங் களவினாற் குணத்தி னக்குண
நிலைபெறும் பொருளினா னின்ற வொற்றுமை
யலைபெறும் வேறெனி னவ் தில்லையே.

(இ - ள்.) குணத்தின்-குணங்களுள் வைத்து; நன்மையால் விலைபெறும் - குணி நன்மை என்னும் குணங்காரணமாக மதிக்கப்

பட்டு மிகவும் விலைபெறுவதாம் ; தீமையால் - தீமையென்னும் குணங்காரணமாக; வெறுப்ப - வெறுக்கப்பட்டுக் கழிக்கப்படும் ; களவினால் - இனிக் களவென்னும் செயல் காரணமாக ; கொலை பெறும் - பொருள் கொலைசெய்யப்படும் ; பொருளினால் அக்குணம் விலைபெறும் - இனி இங்ஙனமே குணி காரணமாக அவற்றின் குணங்களும சிறந்த விலையையாதல் இழிந்த விலையையாதல் எய்தும் ; நின்றவொற்றுமை - இவற்றால் குணகுணிகட்குண்டான ஒற்றுமையை யுணரலாம் ; வேறு எனின்-அவை முழுதும் வேறு வேறு எனின் ; அலைபெறும் - அக்கூற்றுக் கெடுவதாம் ; ஆவ தில்லை - வேறாயின் இவ்வாறாகா என்றாள் என்க.

(வி - ம்.) நன்மையென்னும் குணத்தால் குணி விலைபெறும்; தீமை யென்னுங் குணத்தால் குணி கழிக்கப்படும்; களவு முதலிய தீத் தொழில்களால் பொருட்குக் கொலையாவதாம். கற்றல் முதலிய நற்றொழில்களால் பொருள் போற்றப்படும். வெண்மை கொக்கு முதலிய பிறவற்றிலும் உளவே எனினும் பாதரதத்தின்கண் வெண்மை அப்பொருள் காரணமாகப் பெருமை பெற்றது ; அறிஞர் மொழி பொருள் காரணமாக அளவையாம் சிறப்பெய்தியது. ஆதலால் குணஞ் செயல்களும் பொருளும் வேறு வேறு என்பது கெடும். வேறாயின் இவை இவ்வாறாகா என்றவாறு. (உ௪)

இதுவுமது

௮௦௭. நல்வினைப் படுதலுந் தீவினைப் படுதலும்
பல்வினைப் பாகினாற் பயங்க ளெய்தலு
மில்வினைக் குணங்கடா மென்றும் வேறெனிற்
சொல்லில சுழற்சியும் வீடுந் தோற்றமே.

(இ - ள்.) வினை குணங்கள் தாம் வேறு எனின் - ஐய! நின் மேற்கோளிற்கிணங்கச் செயலும் குணங்களும் பொருளின் வேறாகும் என்பாயாயின் ; நல்வினைப் படுதலும்-உயிர் நல்லறஞ் செய்தலும், தீவினைப்படுதலும் - தீவினை செய்தலும் ; பல்வினைப் பாகினால் - பல்வேறு வகைப்பட்ட இந்த வினைப்பகுதி காரணமாக ; பயங்கள் எய்தலும் - அவற்றின் பயனை நுகர்தலும் ; சுழற்சியும் - வினை காரணமாக அவை பிறப்பெய்திச் சுழலுதலும் ; வீடும் - வினை தீர்ந்து வீடுபெறுதலும் ; தோற்றம் சொல் இல - உண்டாம் என்னும் சொல்லும் இல்லையாம் என்றாள் என்க.

(வி - ம்.) செயலும் குணமும் பொருட்குவேறாம் என்னுங்கால் உயிர் நல்லவை செய்தலும் தீயவை செய்தலும் அவற்றின் பயனை நுகர் தலும் பிறப்புறுதலும் வீடெய்துதலும் உண்டாகாவாம் என்றவாறு. நல்லவை - நல்லறங்கள் ; தீயவை - பொய், களவு, கொலை, கட் குடித்தல், சூதாடல் ஆகிய பாவச் செய்கள். (உ௫)

### இதுவுமது

௮௦௮. ஆட்டுடை யாடன வாட ருங்களு
மோட்டுடைக் குதிரையு மோட்டு மென்றின்ன
கூட்டிய வப்போருட் கோடைய வாதலான்
மீட்டவை யொன்றெண வேண்டல் வேண்டுமே.

(இ - ள்.) ஆட்டு உடையாள் தன ஆடல் தாங்களும்-ஐய! இன்னும் விறலியின் கூத்துக்களும் ; ஓட்டு உடைக் குதிரையும் ஓட்டும் - ஓட்டத்தையுடைய குதிரையும் அதனுடைய கடிய ஓட்டமும் ; என்று இன்ன - என்னும் இவைகளும் ; கூட்டிய அப் பொருள் கொடைய ஆகலான் - இத்தொழில்களோடு சேர்த்துக் கூறப்பட்ட அந்தப் பொருள்கள் பரிசு பெறுதற்குக் காரணங்களாதலின் ; அவை - பிரித்துக்கூறப்பட்ட அத்தொழில்களை; என்று என வேண்டல் வேண்டும் - அப்பொருள்கள் தாமாகவே ஒன்று என்று கொள்ளல் வேண்டும் என்றான் என்க.

(வி - ம்.) வேறாகக் கொள்ளின் அப்பரிசுகள் பொருட்கு ஆக மாட்டாவாகலின் ஒன்றெனல் வேண்டும் என்பது கருத்து.

விறலியின் கூத்தும் குதிரையின் ஓட்டமும் ஆகிய தொழில்கள் அவற்றிற்குப், பரிசுக் காரணமாதலால் பொருள் வேறு தொழில் வேறு என்றல் பொருந்தாது ஒன்றெனலே பொருந்தும் என்றவாறு. (௨௧)

### இதுவுமது

௮௦௯. கூத்த ராடலுங் குதிரை யோடலு
மோத்துரை யுள்பட வொழிந்த யாவையு
நீத்தன வேயல்ல நிலையு முண்மையிற்
போத்தரல் வேண்டினப் பொழுதி னாகுமே.

(இ - ள்.) கூத்தர் ஆடலும் குதிரை ஓடலும் - கூத்தரது ஆட்டமும் குதிரையினது ஓட்டமும்; ஓத்து உரை உள்பட-கற்று வல்லமொழிகளும் முதலியவாக; ஒழிந்த யாவையும் - ஈண்டுக் கூறுதொழிந்த பிறவும்; நீத்தன அல்ல - அவ்வப் பொருள்களினின்றும் கையறக் கெட்டொழிவன அல்லவாம் ; நிலையும் உண்மையால் - அவ்வவர்பால் ஆற்றலாக நிலைத்திருப்பனவேயாதலாலே ; போத்தரல் வேண்டின் - அவர் அவற்றைப் புலப்படுத்திக்காட்ட விரும்பின் ; அப்பொழுதின் ஆகும்-அப்பொழுது அவை புலப்பட்டுத் தோன்றுவனவாகும்.

(வி - ம்.) கூத்தர் ஆடல் முதலிய தொழில்களெல்லாம் கையறக் கெடுவனவல்ல; கெட்டனவாயின் பின்பு அந்தத் தொழிலாளரிடத்தே பெறப்படாவாகல் வேண்டும். வேண்டவே முன்பு படித்ததனைப் பின்பு

படியாதொழியல்வேண்டுமாதலின் அவைவெளிப்படையாக மறைந்தன வெனினும் ஆற்றலாகப் பொருட்கண்ணே நின்று வேண்டியபொழுது புலப்படும். பொருளுடன் ஒருவகையால் வேற்றுமையுண்மையின் குணஞ்செயல்களுக்குக் கெடாமையும் ஆற்றல் வடிவினால் உளதாமா தலின் என்றவாறு. (உள)

இதுவுமது

அ௬௦. பிணங்கல வாய்த்தம்முட் பிறக ளாகிய
குணங்களுந் தொழில்களுங் குழுமிக் கெட்டன
புணர்ந்துடன் பொருள்வயிற் போந்த வாறுநீ
யுணர்ந்திலே யதுவுநின் னுடைய தேபிற.

(இ - ள்.) தம்முள் பிணங்கலவாய் பிறகள் ஆகிய-தம்முட் சேராவாய் முழுவதும் வேறு வேறாகிய; குணங்களும் தொழில் களும் - குணங்களும் தொழில்களும்; பொருள் வயின் குழுமிக் கெட்டன-பொருளின் கண்ணே கூடியழிந்தவை; உடன்புணர்ந்து போந்தவாறும் நீ உணர்ந்திலே-மீண்டும் அப்பொருளோடே கூடிப் புலப்படுமாற்றையும் நீ தெளிந்தாயல்லை; அதுவும் நின்னுடையதே-தெளிவில் நீ வேறுபட்டவன் என்னலின் தெளியாமையே நின் னியல்பாயிற்றுப் போலும் என்றாள் என்க.

(வி - ம்.) உயிரும் உணர்வும் வேறு வேறு என்பது வாய்மையன்று யினும் அது நின்பால் வாய்மையாயிற்று; என்னை? நீ யாதொன்றனையும் உணர்கின்றிலையாதலால், என அசதியாடுவாள் - நீ உணர்வு இலை; அதுவும் நின்னுடையதே என்றாள். பிணங்குதல் - பின்னுதல்; ஈண்டுச் சேர்தல்.

ஐய! தம்முட் சேராவாய் வேறு வேறாகிய குணஞ்செயல்களும் பொருளும் கூட்டம் என்னுந் தத்துவத்தாலே கூட்டப்பட்டுக் கூடு மெனின், அக் கூட்டம் (சமவாயம்) கூட்டுகின்ற கூட்டத்திற்கு முன்னே யுளவாகிய உணர்வு முதலியவற்றை உயிருடன் கூட்டுமோ? முன்பு இல்லாதவற்றைக் கூட்டுமோ? இல்லாதவற்றைக் கூட்டுமெனின் வானப் பூவையும் உயிரோடு கூட்டவமையும். முன்பேயுள்ளவற்றைக் கூட்டுமெனின், பிறிதின்கண்ணே நின்ற உணர்வு முதலியவற்றை உயிருடன் கூட்டுமோ? உயிரின்கண்ணே நின்ற உணர்வு முதலிய வற்றை அவ்வுயிரொடு கூட்டுமோ? பிறிதின்கண் உளவாய் நிற்கின்ற உணர்வு முதலியவற்றை உயிருடன் கூட்டுமோ? பிறிதின்கண் உள வாய் நின்ற உணர்வு முதலியவற்றை உயிருடன் கூட்டுமெனின், உணர்வு முதலியன பிறிதின்கண் உளவாகக் கூட்டம் கூட்ட நிற்குமோ? தாமே நிற்குமோ? கூட்டங் கூட்ட நிற்குமெனின், கூட்டுகின்ற போதே உணர்வு முதலியவற்றை உயிரிலே கூட்டவமையும்; அன்றியும், பிறிதொன்றினிலே முந்திக் கூட்டியவற்றை அதனினின்றும் வாங்கி உயிரிற் கூட்டில், உயிரிலே உயிரில் பொருள் முதலியவற்றைக் கூட் டலுமாய் நிலமுதலிய பொருள் வேற்றுமையும் தோன்றமாட்டாதாம்.

இனி, ஒன்றிலே முந்துறக் கூடியதனை அதனினின்றும் வாங்கிப் பிறிதொன்றிற் கூட்டுதல் கூட்டத்திற்குக் கூடுவதுமன்று. கூடில் எப்பொழுதும் அவ்வாறு மாறிக் கூட்டவேண்டும். அன்றியும் பிறிதொன்றில் உணர்வு முதலியவற்றைக் கூட்டுகின்ற கூட்டத்திற்கு முன்பேயுள்ளவற்றைக் கூட்டுமோ? இல்லாதவற்றைக் கூட்டுமோ? என்பது முதலாகிய குற்றம் வரும். பிறிதில் உணர்வு முதலிய குணங்கள் தாமே கூடின் உயிரினும் தாமே கூடவமையும்.

இனி, உயிரின்கண்ணேயுள்ள உணர்வு முதலியவற்றையே உயிரோடு கூட்டுமெனின் அதற்குக் கூட்டம் என்பது ஒன்று வேண்டா. தாமேயாம். கூட்டினும் கூட்டத்திற்கு முன்பேயுள்ளவற்றைக் கூட்டுமோ? இல்லாதவற்றைக் கூட்டுமோ? என்பன முதலிய குற்றம் வந்து 'மண்டலித்தல்' என்னும் குற்றம் வரும். அன்றியும் குணஞ்செயல்களோடுண்டாகிய வேற்றுமை பொருளின்கண் உண்டோ? இல்லையோ? இல்லையெனின் அவை ஒன்றும். உண்டெனின், அவ்வேற்றுமை பொருளோடு இயல்பாகவே கூடின் குணங்களும் இயல்பாகவே கூடவமையும்; இனிக் கூட்டங் கூட்டக் கூடுமெனின் பொருளின்கண்ணுள்ள வேற்றுமையைப் பொருளோடு கூட்டிற்றோ? பிறவழியுள்ள வேற்றுமையைப் பொருளோடு கூட்டிற்றோ? என்பது முதலாகிய குற்றங்கள் வரும். குணஞ் செயல்களோடு பொருளுக்குண்டாகிய வேற்றுமை கூட்டங் கூட்டுவதன் முன்பு பொருளின்கண்ணில்லையாகின் குணஞ்செயல்கள் பொருளோடொன்றும்; ஆதலிற் கூட்டம் வேண்டாதாம்.

இனி, கூட்டுவதன் முன்னே பொருளிற் குணஞ்செயல்களோடே வேற்றுமையுளதாகின், அதுபோலக் குணஞ்செயல்களும் பொருளிற்றுமேயுளவாம்; ஆதலின் கூட்டம் கூட்டவேண்டுவதில்லை. இன்மையின் குணஞ்செயல்கள் தாமே பொருளிற் குழுமிநின்றன. இனி, உள்பொருளாகிய குணஞ்செயல்கள் கெடின் உள்பொருளாகிய பொருளும் ஒழிவறக் கெடவமையும். இல்பொருளாகிய குணஞ்செயல்கள் தோன்றின் இல்பொருளாகிய கழுதைக் கொம்பு முதலியனவும் தோன்றவமையும். அவை தோன்றாமையின், இல்பொருளுக்குத் தோற்றங் கூடாதாம். ஆதலின் உள்பொருளுக்கு ஒழிவறக் கெடுதலும் கூடாதாம். ஆதலின் உள்ளது ஒழிவறக் கெட்டு இல்லாததுந் தோன்றுதாயின் உலகம் பாழாம். ஆதலால், கடலலை கடலிற்றோன்றி யவிந்தவாறு போல வெளிப்படத் தோன்றுந் தோற்றமாத்திரையே கெட்ட குணஞ்செயல்கள் ஆற்றலாக அவ்வப் பொருளின்கண்ணின்று காரணம் பெற்றுப் பின்னும் வெளிப்படத் தோன்றிப் புலப்பட்டனவாதலின், வெளிப்பட்டுத்தோன்றிக்கெட்டவை ஆற்றலாக அந்தப் பொருளோடு கூடிப்போந்தவாறு ? அறிந்திலையோ? என்றவாறு. (உ௮)

## 'பொது' என்னும் தத்துவம் (சாமான்யதத்துவம்)

அ௯௯. பொதுவெலாப் பொருளொடும் பொருந்தி நின்றதே
லதுவெலாப் பொருள்களை யாக்கு மொற்றுமை
யிதுவலா லவைதம்மு ளியைத லில்லையேல்
சேதுவலாம் பிறவது சென்ற தென்றலே.

(இ - ள்.) பொது எலாப் பொருளொடும் பொருந்தி நின்றதேல் - ஐய! நீ கூறுகின்ற 'பொது' என்னும் தத்துவம் எல்லாப் பொருளினும் பொருந்தி நிற்குமாயின்; அது எலாப் பொருளையும் ஒற்றுமை ஆக்கும் - அந்தத் தத்துவம் எல்லாப் பொருள்களையும் ஒன்றுபடுத்தும் எனலாம்; இது அலால் - இத்தத்துவம் பொருடோறும் நிற்கவேயும்; அவை தம்முள் இயைதல் இல்லையேல் - அப்பொருள்கள் தம்முள் அவ்வாறு ஒற்றுமை கொள்ளாது வேறுபட்டுமிருக்கின்றன ஆதலால்; அது சென்றது என்றல் செதுவல் ஆம் - அங்ஙனமொரு தத்துவம் பொருள்தொறுஞ் சென்று பொருந்தியுளது என்று கூறுதல் குற்றமாம் என்றாள் என்க.

(வி - ம்.) பிற : அசை. செதுவல் - குற்றம்.

பொது என்பதொன்று எல்லாப் பொருட்கண்ணும் நின்றதுண்டாயின், அது எல்லாப் பொருள்களையும் ஒன்றாகச் செய்யும் என்பது கொள்ளலாம். இது நின்றமையுமின்றிப் பொருள்களும் தம்முள் ஒன்றற்கொன்றுவேற்றுமையுமுடையன. ஆயின் நின் மேற்கோள் பொய்யாம் என்றவாறு.

இனி, என்னை? பொது பொருள்கடோறும் நில்லாதவாறு எனின்? ஒப்புமையுணர்தற்கு நிமித்தமாகிய தன்னியல்பை யொழியப் பொதுவென்பதொன்று காட்சி முதலிய அளவைகளால் பொருண் முதலிய மூன்றும்போல அறியப்படாமையின் என்றாட்கு இவை ஒரேவகையான பொருள்கள் என்னும் அறிவு அப் பொதுத்தன்மையால் வருவதாகலின் அதனால் பொதுவென்பதொன்றுண்டென்றுணரப்படும் எனின், அந்த மூன்றும் போல ஒவ்வொன்றன்கண்ணும் பொதுத்தன்மை யுணர்தலாவது - இஃதுளது, இஃதுளது எனவும், இஃது ஆன், இஃது ஆன் எனவும் பிறக்கும் அறிவன்றே அஃதாயின் உண்மைபற்றி இஃதுளதென்றும், ஆவான தன்மை பற்றி இஃது ஆனென்றும் அதனதனியல்பு பற்றிப் பிறந்ததல்லது நீ சொல்லும் பொதுவாற் பிறந்ததன்று. பிறக்கின் உளதாந்தன்மையில்லாத முயற்கோடு முதலாயினவற்றில் இஃதுளதென்றும், ஆத்தன்மையில்லாத குதிரை முதலியவற்றிலும் இஃது ஆன் என்றும் பிறத்தல் வேண்டும்.

இனி, தன்னியல்பும் பொதுவாற் பிறந்தது என்னின் உண்மைத் தன்மை முதலியனவும் பொதுவாற் பிறந்தவாம்; பிறக்க, பொது இன்மையிலே உண்மை முதலியவற்றைப் பண்ணிற்றாம்; இனி உண்மை முதலிய இயல்புகளைப் பொதுவென்பது பண்ணுமாயின் ஒழிந்த வெண்மை முதலியவற்றையும் வேறே சில பண்ணுதல்வேண்டும்; இனி வெண்மை முதலியன தாமே தோன்றுமெனின், உண்மை முதலியனவும் தாமே தோன்றவமையும். ஆதலால் பொதுவென்பது அளவைகளாலறியப்படாமையின் படைத்துக் கொண்டதொன்றும் என்பது. அன்றியும் பொதுமுதலிய மூன்றினும் உண்மைத் தன்மை இல்லாமையாலும் பொதுவென்பது படைத்து மொழியப்பட்டதேயாம்.

இனி, பொது முதலிய மூன்றினும் எல்லாவற்றிற்கும் உரித்தான உண்மைத்தன்மை இல்லையெனினும், தனித்தனிப் பொருளின் உண்மைத்

தன்மையுளதெனின், வானப்பூ முதலிய பொருளினும் எல்லாப் பொருளுக்குமுரிய உண்மைத்தன்மையில்லை எனினும் தனித்தனிப் பொருட்குரிய உண்மைத்தன்மையுளதாய் இல்பொருளென்பதொன் றில்லையாம்; ஆதலால் பொதுவிற்கு உண்மைத் தன்மையுணரப்படா மையின் அது பொருள் தோறும் நின்றமையுமில்லை என்பது. இனி அஃது உளதெனினும், தன்னியல்பால் வரும் ஒற்றுமையொழியப் பொதுவால் வருவதொன்றில்லாமையின் பொருள்களுக்கு இதனால் வருவதோர் ஒற்றுமையில்லை என்பது; ஆதலால் நின்கூற்றுப் பொருந்தாது என்பதாம். (௨௧)

## இதுவுமது

௮௪௨. அன்றியும் பொதுவது வந்தமில் பொருட்
சென்றதே யென்றலாற் சிதர்ந்து பன்மையாய்க்
குன்றியுங் கூடியு நின்றுங் கோள்பய
மின்றியும் போதலா லென்னை யாயதோ.

(இ - ள்.) அன்றியும் பொதுவது அந்தம்இல் பொருள் சென்றதே என்றலால் - அல்லாமலும் நீ கூறுகின்ற பொது வென்னும் தத்துவம் எல்லாப் பொருள்களிடத்தும் சென்று பொருந்திற்று என்று கூறுதலாலே; சிதர்ந்து பன்மையாய்-அது சிதைந்து போய்ப் பலவாகி; குன்றியும் கூடியும் நின்றும்-குறைந்தும் பெருகியும் நின்றும்; கொள்பயம் இன்றியும் போதலால் - அதனால் யாம் எய்தும் பயன் சிறிதுமில்லாமலும் ஒழிதலாலே; ஆயது என்னை - அங்ஙனம் ஒரு தத்துவங்கோடலால் பயன் யாது? என்றாள் என்க.

(வி - ம்.) அந்தம் இல் பொருள்-எல்லையற்ற பொருள்கள்.

மேலே கூறிய குற்றமல்லாமலும் பொதுவென்பது எல்லாப் பொருள்களினும் பொருந்திக் கிடந்தது என்பாயாயின், அஃது அந்தப் பொருள்களினின்றும் வேறாயதொன்றோ? வேறாகாததோ? வேறாய தென்னின், அவற்றில் வேறாகிய வெளிபோல அது பொருள்களுக்கு ஒற்றுமையுண்டாக்குமாறில்லை. இனி, கூட்டம் கூட்டக் கூடுமன்றோ வெனினும், பொருள்தோறுங் கூடிநின்றும் அவற்றின் வேறாகிய வெளி அவற்றின்கண் ஒற்றுமையை உண்டாக்காதவாறு போலப் பொதுவும் பொருள்களுக்கு ஒற்றுமையைப் பண்ணுதாம்.

இனி, பொருள்களோடு வேறுபடாதது எனின், மண்ணிற்கிடந்த மண்தன்மை, மண்ணுவியன்ற குடம் ஓடு முதலிய பல பொருட் டன்மையை அடைந்தவழி பலவாயும், உப்பு முதலியவாய்த் திரிந்த வழித் திரிந்தும், நீர் முதலியவற்றாற் கெட்டவழிக் கெட்டும், இவ்வாறு பல்வேறு வகைப்படும். இனி நீர்த்தன்மையோடு கூடிய உண்மைத் தன்மையும் வெப்பத்தோடு கூடிய உண்மைத்தன்மையும் என இவ்வா றாகியும் சிதறிப் பொதுவும் பலவகைத் தன்மையையடையும். இனி உலகத்தின்கண் குடமுதலியன குறைந்தவழிக் குட முதலியவற்றின்

பொது குறைந்தும், அவை கெட்டவழிக் கெட்டும், குடமுதலியன புதிதாகத் தோன்றியவழி வந்து தோன்றிக் கூடியும் பொருள்கள் நின்றவழி நின்றும், அவை சென்றவழிச் சென்றும், நிலையுதலும் யாண்டு முளதும் உண்மைத் தன்மையும் இலதாமாதலின் பொருண்மையும் இயக்கமுமுடைய பொருளன்றாகியும் நீ கூறும் பொதுவென்பது பொருள்களில் வேறாகி அவற்றிற்கு ஒற்றுமையைப் பண்ணுமென்று சொல்லின் அப்பொதுத் தத்துவத்தைப் படைத்துக் கொண்டமையாலே கொள்வதொரு பயனுமின்றாகியும் கெடுதலால் இது பொருளாகிய தெவ்வாறு ? என்றவாறு. (௬௦)

இதுவுமது

அ௩௧. பொதுவெனப் படுவதோர் போலி யாதலாற்
பொதுவெனப் படுவன போன்ற தாங்களே
யதுவென மீட்டிருந் தாறென் றெண்ணுவா
யிதுவென வென்னையிங் கிதனோ டேழெனாய்.

(இ - ள்.) பொது எனப்படுவது ஓர் போலி ஆதலால்-ஐய! நின்னால் பொதுவென்று கூறப்படும் தத்துவம் வாய்மையன்று ஒரு போலியேயாம், ஆதலால்; பொது எனப்படுவன போன்ற தாங்களை - பொது என்று கூறப்படுவனவற்றை ஒத்த பிறவியல்பையும்; அது என - அந்தப் பொது என்னும் தத்துவமாகவே கொண்டு; மீட்டு இருந்து ஆறு என்று எண்ணுவாய் - மீளவும் அறிந்திருந்து தத்துவம் ஆறென்றே கொள்கின்றனை; இது என - அப் பொதுவை யொத்த தன்னியல்பினையும் ஒரு தத்துவமாகக் கொண்டு; இங்கு இதனோடு ஏழு எனாய் - இங்கே இத்தத்துவத்தோடு தத்துவம் ஏழாம் என்று எண்ணுகின்றிலை; என்னை - அதற்குக் காரணம் என்னையோ? என்றாள் என்க.

(வி - ம்.) பொதுவென்பது பொருளின்கண்ணதாகிய தன்னியல்பேயாம் பிறிதில்லை எனின் ; தன்னியல்பே பொதுவு மாவதாயின், அது பொருளின்கண் எவ்வாற்றானும் வேறுபடாது அப்பொருளே தானாய் வெண்மைத்தன்மை போல ஆடைத்தன்மையும் அறியப்படுதலின் உண்மைத் தன்மையையும் உடைத்துமாகி அப்பொருளழியுமிடத்து அதனோடழிவதுமாகிப் பொருளிற் பிரித்துப் பெறப்படாத தொன்றாம்; என்னை? அப்பொருளே தானாயிருத்தலால்; இதுவும் குணமே; குணத்திற்கு வேறாயதொன்றன்று என்றற்கு, ஒரு பொருளிற் கிடக்கின்ற இனிப்பு முதலிய குணங்கள் தம்மேன்மையின்கண் உயர்வு தாழ்வுடையன. பொதுவென்பது அவ்வாறு உயர்வு தாழ்வுடைத்தன்று, எனின் ; குதிரைத் தன்மை முதலிய பொதுத்தன்மையின்கண் உயர்வு தாழ்வு காணப்படுகின்றனவன்றோ என்றற்கு, ஆண்டுக் குதிரைத் தன்மை ஒக்குமெனினும் பிறிதொரு காரணத்தால் உயர்வு தாழ்வு வந்தவெனின், இனிப்புத்தன்மை ஒக்குமெனினும் பிறிதொன்றால் உயர்வு தாழ்வு வந்தவாம்.

இனி, குதிரையின் சிறப்புத்தன்மை எனினும், இனிப்பின் சிறப்புத் தன்மை எனலுமாம். இனிப்பின் மேன்மையால் இனிப்புடைய பொருள்

மேன்மையடையுமெனின், குதிரைத் தன்மையின் மேன்மையால் அதனை யுடைய உயிரும் மேன்மையுடைத்தாம்; ஆகலின் பொதுவென்பதும் குணமேயாம்; அன்றியும் இங்ஙனமாகிய சிறப்பால் பொருளாகக் கொள்ளின், நிறம் முதலியன போலாது மணம் புறப்படுங் கமழுமா தலின் அதுவும் பொருளாகக் கொள்ளவேண்டுதலின் தத்துவம் ஏழெனக் கோடலுமாம். பொதுவே பொருளினது தன்னியல்பைப் பண்ணுமெனின், பொருளின்கண் குணத்தைப் பண்ணுவதாகக் 'குணஞ் செய்வது' என ஒன்றைப் படைத்துக்கொண்டு அதற்குப் பொதுவுண்மை யில்லையெனினும் சிறப்புண்மையுளதாக்கித் தத்துவம் ஏழெனக் கோடலுமாம்; அஃதன்றிப் பலவாகக் கோடலுமாம். அவ்வாறு கொள்ளாய் என்றவாறு. (கஉ)

## சிறப்பு

அகசஈ. சிறப்பெனப் படுவது தெரியி னப்பொரு
ளறப்பெற நின்றவக் குணம தாதலின்
இறப்பவு மிதுதன தின்மை யேயிஞய்
புறப்படுத் திடுவனுன் பொருளு ளெண்ணலே.

(இ - ள்) சிறப்பெனப்படுவது - ஐய! நின்றைல் சிறப்பு என்று கூறப்படுகின்ற தத்துவந்தானும்; தெரியின் - ஆராயுங் கால்; அப்பொருள் அறம் பெறநின்ற அக்குணமது ஆகலின் - ஈதானுமொரு பொருளின்கண்ணின்ற சிறப்புப் பண்பினை யறிதற்கேதுவாய் நின்ற அந்தக் குணமேயாதலின்; இறப்பவும் இது தனது இன்மை ஏயிஞய் - மிகவும் நீ கூறும் இச்சிறப் பென்னுந் தத்துவத்தின் இல்லாமையையே பெற்றுய்காண்; உன் பொருளுள் எண்ணல் புறப்படுத்திடுவன் - ஆதலால் உன் தத்துவங்களுள் ஒன்ருக அதனை நீ எண்ணுவதனை அகற்றினேன் என்ருள் என்க.

(வி - ம்.) புறப்படுத்துதல் - அகற்றுதல். அறம் - இயல்பு. அறம் பெற எனல் வேண்டியது எதுகை நோக்கி வலிந்து நின்றது. இது-இச் சிறப்பு. ஏயிஞய் - எய்திஞய்.

ஐய! நின்ருற் சிறப்பென்று கூறப்படுவதுதான் உயிர் முதலிய வற்றின் சிறப்பியல்பினது வெளிப்பாடோ? பிறிதொன்ருே? பிறி தொன்றெனின் அச்சிறப்பு என் செய்வதாம்? உயிர் முதலியவற்றின் வெளிப்பாட்டைப் பண்ணுமோ? பண்ணுதோ? பண்ணுதெனின் உயிர் முதலியவற்றின் வெளிப்பாட்டைப் பண்ணுவது பிறிதொன்றனைப் படைத்துக் கோடலும் வேண்டி அச்சிறப்பின் படைப்பிற்குப் பய னில்லையாம். இனி வெளிப்பாட்டைப் பண்ணுமெனின், பொருள்களுள் உயிர்வெளிப்பாடாவன - புத்தி முதலியனவாம். உயிரில் பொருள் வெளிப்பாடாவன - நிற முதலியனவாம். அவ்வழி இல்பொருளாகிய சிறப்பு உள்பொருளாகிய புத்தி முதலியவற்றைப் பண்ணுதல் பொருந் தாதாம்; பண்ணில் வானப்பூவும் ஒருள்பொருளைப் பண்ணவமையும்.

இனி, உயிர் முதலியவற்றை அறிவிப்பதாகிய வெளிப்பாடே சிறப்பு எனப்படுமெனின், இடைநின்ற பொதுவென்ப தொன்றில்லையாம். என்னை ? உயிர்த்தன்மை யென்னும் பொதுவாவது அதனை அறிவிப்பதாகிய வெளிப்பாட்டை யொழியக் கூடாதாமாதலின், அன்றியும், சிறப்பென்பது முழுதும் பொருளினுக்குப் புறப்பாடு செய்யும் தன்னியல்பேயாகலின் அது குணமேயாம்; ஆதலின் நின்னாற் படைத்துக் கொள்ளப்பட்ட சிறப்பென்பது ஒன்றில்லையாம். ஆதலின் அதனைப் பொருள்களோடெண்ணுதலை ஒழித்தேன், ஒழி என்றவாறு.

புறப்படுத்திடுவனெனத் தன்மையாலோதிற்று - ஒற்றுமைத் தன்மையாகிய பொதுவகையால் எல்லாப் பொருள்களுக்கு மொற்றுமையும் வேற்றுமைத் தன்மையாகிய சிறப்புவகையால் பொருள்களுக்கு வேற்றுமையும் கொள்கை, சைன சித்தாந்தத்து நின்ற வெல்லாக் கல்லது ஏகாந்தவாதியாகிய நினக்குக் கூடாமையிற் புறப்படுத்திடுவேனென்று சொன்னவாறும். (௩௨)

## இதுவுமது

அகவி. கூட்டினு லல்லது கூட்ட மில்லையேற்
கூட்டுவான் செல்வதுங் கூட்ட மில்லையே
பாட்டினாற் பலவுமாம் பயமி லாதன
மூட்டினு லுரைத்தியோ முனிவு போக்கிதோ.

(இ - ள்.) கூட்டினால் அல்லது கூட்டம் இல்லையேல்-ஐய! நீ கூறுமாறு குணங்களையும் செயல்களையும் கூட்டம் பொருளோடு கூட்டி வைத்தாலல்லது அவை தம்முட் கூடுதல் இல்லையானால்; கூட்டுவான் செல்வதும் - அக்கூட்டந்தானும் குண முதலியவற்றைப் பொருள் முதலியவற்றோடு கூட்டுதற்குக் காரணமான குணமும் செயலும் தன்னோடு கூடுதற்கு ஒரு காரணம் இல்லாமையால் அதனோடு அவை கூடுதலும் இல்லையாம்; பாட்டினால் பயம் இலாதன பலவும் ஆம் - மேலும் அக்கூட்டமென்பதன் முயற்சியினாலே பயன் பெறாதன பிறவும் பற்பல உளவாம்; மூட்டினால் உரைத்தியோ - இங்ஙனமாகவும் நீ நினது அறியாமை காரணமாக இவ்வாறு கூறுதியோ?; அல்லது - முனிவு போக்கு இதோ - நின்னுடைய சினத்தைத் தீர்த்துக் கொள்ளும் ஒருவழியாக இதனைக் கூறுகின்றாயோ? என்றாள் என்க.

(வி - ம்.) ஐய! பொருளோடு குணஞ் செயலுக்குக் கூட்டம் கூட்டினலல்லது கூட்டமில்லையாயின், அந்தக் கூட்டத்தினது கூட்டுதல் ஆகிய செயலை அதனோடு கூட்டுதற்கும் மற்றொரு கூட்டம் வேண்டுமாகலின் அக்கூட்டம் கூட்டுமென்பது அறியாமையாம் என்றவாறு.

இன்னும் கூட்டுவான் செல்வதும் என்புழி வரும் உம்மையால் அறிவு முதலியவற்றை உயிரோடு கூட்டுதலும் சிலமுதலியவற்றோடு அவ்வறிவு முதலியவற்றைக் கூட்டாமையும் தீயோடு வெம்மையைக் கூட்டலும், குளிர்ச்சியைக் கூட்டாமையும் நீரிற்குக் குளிர்ச்சியைக்

கூட்டலும் வெம்மையைக் கூட்டாமையும் முதலாயினவாக எல்லை யில்லாதன காரணங் காண மாட்டாதனவாம் எனவும் கூறிக்கொள்க.

இனி, உயிர்க்குணமாகிய புத்திக்குக் குணமாகிய அறிதற்றன்மை அறியாத்தன்மை கூர்மை மழுங்கல் முதலியனவும், பாதரதம் பால் முதலாகிய பொருள்களினுடைய வெண்மையின் சிறப்புத்தன்மையும், இவ்வாறே ஒழிந்த நிறங்களின் சிறப்புத்தன்மைகளும், பால் அக்காரம் முதலிய பொருள்களின் இனிப்புச் சுவையின் சிறப்புத் தன்மைகளும், புளிப்பு முதலிய சுவைகளின் குணங்களான கடுமை மென்மைகளும், ஒழிந்த சுவை நாற்றம் ஊறு முதலியவற்றின் சிறப்புத் தன்மைகளும், அறிவின் குணத்தினுடைய மயக்கக் குணங்களாகிய மருள் திரிவு ஐயம் முதலிய குணத்தின் குணங்களும், ஈதல் முதலிய செயல்களினுடைய நன்மைக் குணங்களும் இன்னுசெய்தல் முதலிய செயல்களின் தீமைக் குணமும், அன்னப்புள் ஆனேறு அவைபோலும் மகளிர் ஆடவர் நடத் தற்செயலின் நன்மைக் குணமும், ஒட்டக முதலியன அவற்றை ஒத்த மாந்தர் நடத்தற் செயலின் தீமைக் குணமும், யானை குதிரை முதலிய வற்றின் ஓட்டங்களின் சிறப்புக் குணமும், முதலாகிய செயற் குணங் களும் பிறிதொன்று கூட்டினல்லது தத்தம் முதலோடு கூடாவாம்.

இனி அவற்றைப் பிறிதோன்று கூட்டில் அதனையும் பிறிதொன்று கூட்டவேண்டி வரம்பின்மை என்னும் குற்றமாம், யாவற்றையும் அக் கூட்டமே கூட்டுமெனின், அக்கூட்டம் தன்னைப் பொருள்களோடும்தன் குணங்களைத் தன்னோடும் தானே கூட்டிற்றும். ஆகவே, அக்கூட்டங் கூட்டுமாப்போலே ஒழிந்தனவும் தங்குணங்களைத் தாமே கூட்டிக் கொள்ளவமையும் ; ஆகலின் 'கூட்டம்' என்பதொன்று வேண்டாவாம். ஆகவும் நீ பயனின்றியும் இவ்வாறு பல சொல்லுகின்றது அறியாமை யாலோ ? சினத்தாலோ ? கூறுதி ? என்றவாறு.

முனிவு - சினம் ; சோம்பலுமாம். (௧௧)

இதுவுமது

அ௧௩. கோக்கோடக் கருமையைக் கூட்டு வித்தலுஞ்
சுக்கோடத் துவர்ப்பினைத் துன்னு வித்தலுஞ்
சிக்கென வேற்றுமை தீர்ப்பி நீயென
நக்கன ளளியனோ நயவ னென்னவே

(இ - ள்.) கொக்கொடு கருமையைக் கூட்டுவித்தலும்-ஐய! பொருளும் குணமும் தம்முள் வேறு வேறுயவழி நீ கூறுகின்ற கூட்டம் குணங்களைப் பொருள்களோடு கூட்டுமிடத்துக் கொக் கோடு கருமையைக் கூட்டுவித்தலும் ; சுக்கொடு துவர்ப்பினைத் துன்னுவித்தலும்-சுக்கோடு துவர்ப்புக் குணத்தினைக் கூட்டலும் ஆகுமே ; வேற்றுமை நீ சிக்கெனத் தீர்ப்பி என - அங்ஙனம் கூட்டாமைக்கு ஏதுவான வேற்றுமையை நீ எனக்கு விரைந்து கூறிமுடிப்பாயாக! என்று சொல்லி ; நயவன் அளியன் என்ன நக்கனள் - இவ் வைசேடிகன் பெரிதும் நயமுணர்வோனே ! அளியனோ அளியன்! என்று கூறி நகைத்தாள் ; என்க.

(வி - ம்.) கூட்டுவித்தலுமாம் அங்ஙனம் கூட்டாமைக்கு அக்குணங்களுக்கும் பொருளுக்கும் உண்டான வேற்றுமை யாது? அதனைச் சொல்லிக்காண்! என்பது கருத்து. நயவன் - நயமுணர்வோன்: இகழ்ச்சி. அளியன் - இரங்கத் தகுந்தவன்.

குணங்களும் பொருள்களும் முழுதும் வேறுயவழி, கொக்கோடு வெண்மையையன்றிப் பிற நிறங்களையும் சுக்கோடு உறைப்பையன்றிப் பிற சுவைகளையும் கூட்டலும் கூடுமே? அவ்வாறு கூட்டாமைக்கு அவற்றிடை வேற்றுமை யாது என்றவாறு.

இனி, கூட்டம் குணங்களுக்கும் செயலுக்கும் தகுதியுடைய பொருள்களைத் தேர்ந்து கூட்டுமெனினும், வேறுபட்ட இவற்றிற்குத் தகுதியுண்டாதல் கூட்டத்தாலோ? இயல்பாகவோ? கூட்டத்தாலெனின், அதற்கும் முன் சொல்லிய குற்றம் வரும்.

இனி அத்தகுதியைப் பிறிதொன்று பண்ணுமெனின், கொக்குடன் கருமைக்குத் தகுதியைப் பண்ணவுமமையும் என்பது முதலாகிய குற்றம் வரும். இனி இயல்பாகவே தகுதியுளதெனின், கூட்டமும் இயல்பாகவே ஆக அமையும். இனி, கூட்டத்திற்கு இவ்வாறுசெய்வது இயல்பெனின், அந்த இயல்பும் கூட்டமும் வேறு வேறோ? ஒன்றோ? ஒன்றெனின், குணஞ் செயல்களும் ஒன்றாகவமையும்; வேறு எனின், அவற்றைப் பிறிதொன்று கூட்டுமோ? இயல்பாகவே கூடியுளவோ? இயல்பாகவே கூடியுளவெனின், குணகுணிகளும் அவ்வாறாம். இனிப் பிறிதொன்று கூட்டுமெனின் வரம்பின்மை என்னும் குற்றம் வரும். அன்றியும், கூட்டவியல்பைப் பிறிதொன்று கூட்டாது, கூட்டம் தன்னுடன் கூடுதல் இயல்பாயின், குண குணிகள் தம்முள் வெவ்வேறுதலின் கூட்டத்திற்குச் சொல்லிய குற்றம் வரும். ஆதலால் பெரிதும் நயவன் என்று சொல்லிச் சிரித்தாள் என்றவாறு.

இன்னும், 'வேற்றுமை தீர்ப்பி' எனவே, குணஞ் செயல்களோடு பொருளோடுண்டாகிய வேற்றுமையுங் குணமாதலின் அவற்றின் வேறாகிய அதனை அவற்றோடு கூட்டங் கூட்டிற்றன்றே? இல்லையாயின், குணஞ்செயல்களும் பொருளும் ஒன்றாகுமன்றே? வேற்றுமைக் கூட்டம் கூட்டுதலினன்றே, குணஞ் செயல்களும் பொருள்களும் வேறாயின. இனி, அவற்றைக் கூட்டுமென்றனையாயின் முன் கூட்டத்தாற் கூட்டப்பட்ட வேற்றுமையைப் பிறிதொன்றால் நீக்குவிப்பாயாக! என்றுங் கொள்க.

'இன்னும் 'வேற்றுமை தீர்ப்பி' யென்றதனல் கூட்டத்தாற் பொருளுடன் கூட்டப்பட்ட குணஞ்செயல்கள், பொருளுடன் வேறுபட்டுப் பிரிதல் முடிவு செய்தற்கரியதென்றவாறு.

முடிவு செய்தற் கருமை என்னை? எனின், கூட்டம் குணஞ்செயல்களைப் பொருளுடன் கூட்டுவதல்லது பிரிப்பதன்று. எனவே பிரித்தற்கும் ஒருதத்துவம் படைத்து மொழிந்தாயல்லை; தாமே பிரியுமெனின், கூடும் பொழுதுந் தாமே கூடவமையும் ஆதலின். இனிக் குணஞ் செயல்கள் பொருளிற் பிரிகின்றன அல்ல; அழிகின்றனவெனின், பொருளுடன் குணஞ்செயல்கள் கூடுகின்றனவல்ல; அவை பொருளின்கண் தோன்றுகின்றன என்னவுமமையும்; ஆதலால், இந்த வைசேடிகன் பொருந்தாதன கூறுகின்றான் என்று சிரித்தாள் என்றவாறு.

வேற்றுமை பிரிதற்பொருண்மேல் வருமாதலினும், தீர்தல் என்பது முடிவுசெய்தற்பொருண்மேல் வருமாதலினும் இவ்வாறு பொருளுரைக்கப்பட்டது. (௩௪)

இதுவுமது

௮௧௭. என்றுமப் பொருள்களு மியல்புந் தங்களோ
டொன்றெேன வருதலா லேரன்று மாகுமே
யென்றலி லிருமையுந் தெரியி னின்மையா
லின்றினிக் கூட்டுவ தில்லை யில்லதே.

(இ - ள்.) என்றும் அப்பொருள்களும் இயல்பும் தங்களோடு - எஞ்ஞான்றும் உலகத்துப் பொருள்களெல்லாமும் அவ்வவற்றிற் குரிய பண்புகளும் தம்மிற்றாமே யாகுமொரு தொடர்பாலே; ஒன்று என வருதலால் - ஒன்றென்று கூறும்படி வருதலாலே; ஒன்றும் ஆகும் - குண குணி என்னும் நோக்கால் இரண்டாய்க் காணப்படினும் ஒன்றே ஆகும்; என்றலின் - என்று இறைவோர் கூறுதலாலே; தெரியின் - வேறுவேறாய்க் கொண்டு ஆராயுமிடத்தே; இருமையும் இன்மையால் - இரண்டும் இல்பொருளாகவே முடிதலின்; கூட்டுவது இல்லை - கூட்டுவதாகிய கூட்டமென்பதும் இல்லையாம்; இல்லதே - ஆகவே அஃதுமில்லாப் பொருளேயாம் என்றாள் என்க.

(வி - ம்.) அநாதியாகக் குணகுணிகள் பிரிக்கப்படா; தொன்று தொட்டு வருதலின் அதுவதுவாதற் றொடர்பினாலே ஒன்றெனவுமாம். (உம்மையால்) குணமும் குணியும் என வேறு எனவும் பெறப்படுதலின் வேறெனவுமாகும். அவ்வாறன்றி அவை முழுதும் வேறு வேறு எனின், குணியில் வேறான குணம் நிலைக்களனின்மையாற் பெறப்படாதாம்; வேறான குணியும் கழுதைக் கொம்புபோலப் பெறப்படாதாம். ஆதலால், இரண்டும் பாழாதலின் அவ்விரண்டையும் கூட்டுவதாகிய கூட்டம் என்பதும் இல்பொருளாய் இல்லையாம் என்றவாறு. (௩௫)

இதுவுமது

௮௧௮. ஒன்றுநற் பொருள்கடாங் குணங்க டாம்பல
வென்றுநீ யேகம் வேறென்ப தென்னெனப்
பொன்றுமக் குணமெனிற் பொருட்கு மாமென
நன்றினிக் குணமுண்மை நாட்ட மாமென.

(இதுவும் அடுத்துவருஞ் செய்யுளும் குளகம்)

(இ - ள்.) நல் பொருள்கள் தாம் ஒன்று - ஐய! நீதானும் நன்மையுடைய பொருள்கள் தாம் தனித்தனி ஒன்றொன்றேயாம் என்றும்; குணங்கள் தாம் பல என்றும் - ஒவ்வொரு பொருட்கும் குணங்கள் பற்பலவாகும் என்றும்; அக்குணம் பொன்றும்

எனின் பொருட்கும் ஆம் என - அந்தக் குணம் அழியும் என்னு மிடத்தே அவ்வழிவு பொருட்கும் ஆகும் என்றும்; இனி நன்று குணம் உண்மை நாட்டம் ஆம் என்றும் - குணத்திற்கும் அழி வின்மை நிலைபெறும்; என்றும் கருதி; ஏகம் வேறு என்பது என் என - இக்குற்றங்கள் வாராமைப் பொருட்டுப் பொருளும் குணமும் ஒருதலையாக வேறு வேறு என்று கூறுதல் என்னையோ? அவை அவ்வாறுயினும் குற்றம் வருவதில்லை என்று கூறி என்க.

(வி - ம்.) அவை அவ்வாறுயினும் குற்றம் வருவதில்லை என்பது குறிப்பெச்சம்.

நீ, குணியாகிய பொருளொன்று, அதன் குணங்கள் பல ஆதலால் அவ்விரண்டும் ஒன்றுயின் குணிக்குப் பன்மைத்தன்மையும் குணத்திற்கு ஒருமைத் தன்மையும் வருமென்றும், குணம் நிலையாமையுடைத்தாகலின் அதனோடு ஒன்றுகிய குணிக்கு நிலையாமையும், குணி நிலையுதலுடைத் தாகலின், அதனோடு ஒன்றுகிய குணத்திற்கு நிலையுதற்றன்மையும் வரும் என்று கருதி இக்குற்றங்கள் வாராமைப் பொருட்டுக் குணகுணிகள் முழுவதும் வேறு வேறு என்று கூறுகின்றனை. அவை அவ்வாறுயினும் நீ கருதுமாறு குற்றம் வருவதில்லைகாண் என்றவாறு.

என்னை? குற்றமில்லாதவாறெனின், குணிகள் தாம் ஒன்றுகி நின்று, கூறுபடுக்கலாகாது ஒன்றுயினவோ? கூறுபடுக்கலாய் ஒன்றுயினவோ? கூறுபடுக்கலாகாது ஒன்றுயினவெனின், ஒரு பொருளை வெளியது, நறியது, இனியது, சிறியது எனவும், உணர்வது, காண்பது, செய்வது, துய்ப்பது, எனவும் இவ்வாறு சொல்லுதலும், அவை அவ்வாறுதலுங் கூடாவாம். இனி, கூறுபடுக்கலால் ஒன்று யிருக்கும் பொருள் எனின், குணங்களுடனுண்டாகிய ஒற்றுமையால் குணிக்குக் கூறுபாடுபற்றிச் சிறிது பன்மைத் தன்மை வருவதாம்.

இனி, குணங்கள் தாம் பலவாகின்று குடம் ஆடை முதலியன போலத் தத்தமக்குரிய உருவங்களாலே முழுதும் வேறுகிப் பலவா கின்றனவோ? அங்ஙனம் வேறுபிரித்துப் பெறப்படாவாகிப் பொருட்குப் பண்பாய்ப் பொருட்கண்ணே பெறப்படுவனவாகி இலக் கணவகையால் நோக்க வேறுகிப் பலவாகின்றனவோ? முற்கூறப் பட்டவாற்றுலெனின், குணங்களுக்குப் பொருட்கண்ணே பெறப்பாடு மின்றி ஒன்றற்குரிய குணங்களெனப்படாவாம். இனி, பிற்கூறிய வாற்றுலெனின், பிரித்து வேறு பெறப்படாமை முதலிய வகையால் குணியோடொற்றுமை பற்றிக் குணங்களுக்கு ஒருவகையால் ஒற்றுமைத் தன்மை வருவதாம்.

இனி, குணி நிலையுதலுடைத்தாயின் அது புடைபெயராது நிலைத் திருப்பதோ? ஒன்றென்றுய்த் திரியாநின்று நிலைப்பதோ? புடைபெயர் வின்றி நிலைத்திருப்பதெனின், மாறுபடாததாய்ச் செயலும் பயனுமற்ற தாய்ப் பொருண்மையுமின்றிப் பாழாம்; அன்றியும் குணத்தோடு கூடு தலும் பிரிதலும் கூடாதுமாம்; இனி, திரிபுடைய நிலைப்புடையதெனின், அதற்கு நிலைத்தலேயன்றி நிலையாமையுமுளதாம். அந்நிலையாமை அதனையுடைய குணத்துடன் குணிக்குண்டான ஒற்றுமையால் வந்த தாம். இனி, குணம் நிலையாமையுடையதாயின், அது ஒழிவறக் கெட்டு நிலையாதாகின்றதோ? ஆற்றற்றன்மையாலன்றி வெளிப்பாட்டுருவத்

தாற் கெட்டு நிலையாதாகின்றதோ? ஒழிவறக்கெட்டு நிலையாதாகின்ற தெனின், மயக்க முதலிய நிலைகளில் உயிரின்கண் அறிவு முதலியன கெட்டவழி, ஆற்றலும் வெளிப்பாடும் ஒருசேர ஒழிவறக் கெட்டன வாயின் பின்பு அந்த வுயிரின்கண் அறிவு முதலியன பிறக்கப்பெறுவாம், குடம் ஆடை முதலியவற்றிற் பிறவாதவாறுபோல. இனி, பிற்கூறிய வாற்றாலெனின் பொருள் ஒழிவறக் கெடாது நிலையுதலும் நிலையாமையு முடைத்தாய் அநேகாந்தவாதம் நிலைபெறுவதாம்.

இனி, வெளிப்பாட்டுருவத்தாற் கெடுதலாவது - வித்தின்கட் டோன்றி நின்ற முளை வெட்டப்படுதன் முதலிய காரணத்தாற் கெடுதல்; ஆற்றலாற் கெடுதலாவது - வித்தின்கண் பின்னொருகாலும் முளை தோன்றாதவாறு வறுத்தன் முதலியவற்றாற் கெடுதல். இன்னும், ஒருகாலத்து ஓதிய நூலறிவு பின்னுந் தோன்றுந் தகுதியுடைத்தாகக் கெடுதல், வெளிப்பாட்டுருவிற் கெடுதலாம், பின்னொரு காலத்துந் தோன்றாதபடி கெடுதல் ஆற்றலாற் கெடுதலாம். உயிரினது மயக்க நிலைக்கண் அறிவு இந்த இருவகையானும் கெட்டதாயின் பின்பு பிறக்கப் பெறாதாம்; பிறக்கில் ஒழிவறக்கேடு அறிவு முதலிய குணங் கட்கில்லையாம். அது குணியுடன் குணத்திற்குண்டான ஒற்றுமை யால் வந்ததாம். அன்றியும் குணகுணிகளைக் கூட்டங் கூட்டியவழி அவற்றின் வேற்றுமை சிறிது கெட்டதாயின், ஒன்றுக்கு வந்த வேறு பாடு ஒழிந்ததற்கும் சிறிது வருவது பொருந்துவதாம். வேற்றுமை சிறிதும் கெட்டதில்லையாயின் அவற்றுக்குக் கூட்டமில்லையாம். ஆதலால் ஏகாந்தவாதிகட்கே நீ சொன்னது குற்றமாவது. அநேகாந்தவாதிகட்கு ஒரு குற்றமும் வாராதாம். ''**ஒன்றுநற் பொருள்கள் தாம்பல**'' என்பதனால் வரும் குற்றத்திற்குத் தீர்வு கூறுமாற்றால் ஒரு காலத்தேயே அநேகாந்தஞ் சொன்னவாறு, ''பொன்றுமக் குண மெனிற் பொருட்குமாம்'' என்பதனால் வருங் குற்றத்திற்குத் தீர்வு கூறுமாற்றால் முறை அநேகாந்தம் சொன்னவாறுமறிந்து கொள்க. முறை அநேகாந்தம் சொன்னவாறென்னையெனின், முறைமையால் அநேகாந்தம் ஆகுந்தன்மை பொருட்கு இல்லையெனின், உயிர், தேவர் மனிதன் என்று ஆதலும் குழவி இளைஞன் என்று ஆதலும், பொன் முடிமுதலியன வாதலும் கூடாவாம். (கூசு)

அநசு. குணிக்கணு ளேக்கினுற் குணங்க ளில்குணத்
தணிக்கணு ளேக்கினு லதுவு மன்னதே
பிணிக்கலாம் பிரிக்கலாம் பெற்ற நான்மையிற்
றுணிக்கலாந் துருநெறி துன்னு நன்மையே.

**(இ - ள்.)** குணிக்கணால் நோக்கினால் - பொருள் என்னும் நோக்கத்தாலே நோக்கியவழி; குணங்கள் இல் - குணங்களுள் அப்பொருள் நோக்கில் அடங்கி இல்லையாம்; குணத்து அணிக் கணால் நோக்கினால் - குணத்திற்கு அணித்தாகும் நோக்கினால் நோக்கியவழி; அதுவும் அன்னதே - அப்பொருள்தானும் அந் நோக்கிலடங்கி இல்லையாம்; பிணிக்கல் ஆம் பிரிக்கல் ஆம் பெற்ற நான்மையின் - இவ்வாறு உயிர்ப்பொருளையும் அவற்றின் குணங் களையும் உயிரில் பொருளையும் அவற்றின் குணங்களையும் ஒன்றாக் கவும் கூட்டவும் ஆகும் நான்கு வழிகளாலும், துணிக்கலாம் •

அவற்றை வேறுபடுத்தக் கூடும்; துரு நெறி நன்மை துன்னும் - பிழையுடைய நெறியாகிய ஏகாந்தவாதமும் இவ்வுண்மையுணரின் நன்மை எய்தும் என்றுள் என்க.

(வி - ம்.) உயிர்ப்பொருள் எனவும் உயிரில் பொருள் எனவும் கூறப்படும் இருகூற்றுப் பொருளையும் நிரலே மனிதன் தேவன் நரகன் எனவும்; நிலம், நீர், பால், சோறு, நெய் எனவும்; இவ்வாறு பொருளுணக்கத்தால் நோக்கக் குணங்களும் பொருள்வடிவமாகிய பொருளுள் அடங்குவனவாம். வெண்மை நீர்மை இனிமை தண்மை எனக் குணநோக்கத்தால் நோக்கக் குணியும் குணத்துள் அடங்கும். இவ்வாறு பெறப்பட்ட நான்கு வழிகளாலும் குணகுணிகள் ஒன்றாக் கலும் வேறாக்கலுமாவனவாதலின் ஏகாந்தவாதிகள், இவ்வாற்றான் ஒன்றென்றும் வேறென்றும் சொல்லும் வழி வருவதொரு நன்மை யுளதாக வுணர்ந்திருப்பராயின் அது வேறாக்கப்படும்.

பெறப்பட்ட நான்காவன - ஒன்றினொன் றடங்குந் தன்மை, வேறு வேறான இடமின்மை, ஒன்றினால் ஒன்று அறியப்படுந்தன்மை அது வதுவாந்தன்மை, என்பன இவற்றால் குணகுணிகள் ஒன்றாக்கவும் வேறாக்கவும் படும்.

இனி இந்நான்கும் ஒன்றாக்குவனவாக்கி, ஒன்றினொன் றடங்காமை வேறுவேறான இடமுண்மை, ஒன்றினொன்றை யறியப்படாமை, வேறு வேறாந்தன்மை என, இந்நான்கும் வேறு வேறாக்குவனவாகக் கோடலுமாம்.

இச் செய்யுளால் ஒன்றினொன் றடங்குந் தன்மை சொன்னார். அதனால் இனம்பற்றி ஒழிந்தனவும் பெறப்படுதலின் பெற்ற நான்மை யென்றார். (௩௭)

## இதுவுமது

அ௨௦. இல்லையக் குணங்குணிக் குண்மை தானெனச்
சொல்லினக் குணிகுணத் தொன்று மாதலா
லல்லதக் குணங்களு மவைக ளாமென
நல்லதித் துணிவென நயத்தி லெய்தினான்.

(இ - ள்.) அக்குணம் குணிக்கு உண்மைதான் இல்லை எனச் சொல்லின் - ஐய! யான் குணத்தை நோக்குழிக் குணியில்லை குணியை நோக்குழிக் குணம் இல்லை என்பதனால் அந்தக் குணமும் இல்லையாய்க் குணியுமில்லையாய் இரண்டும் இல் பொருளாம் என்று கூறுவாயாயின்; குணிகுணத்து ஒன்றும் அல்லது -யான் குணியின்கண் குணம் அடங்கும் என்பதல்லது ; இல்லையாம் என்றிலேன்; அக்குணங்களும் அவைகள் ஆம் - குணியை நோக்குழி குணிகளாய் அடங்கும் என்பேன், ஆதலால் என - இங்ஙனமாதலால் அவை யுள்பொருள்களே என்பதற்கிழுக் கில்லை என்று நீலகேசி கூற; இத்துணிவு நல்லது என - அது

கேட்ட உலகசித்து இந்த முடிவு மிகவும் நன்மையுடைத்தென்று தெளிந்து; நயத்தில் எய்தினன் - அவன்பால் அன்புடையன் ஆயினன் என்க.

(வி - ம்) குணிமுகத்தானுக்கக் குணமில்லை; குணமுகத்தானுக்கக் குணியில்லை என்று சொல்லுதலால், அவ்விரண்டும் இல்லை என்பதே சாலும் என்பாயாயின், ஒன்றில் ஒன்று அடங்குமென்பதல்லது, அவற்றை இலவென்று சொல்லுவதில்லை. அடங்குமாறென்னையெனின், குணத்துக்கண்ணே குணியும் குணிக்கண்ணே குணமும் ஒன்றிநிற்குமாதலின் அக்குணங்களே குணியாம் குணிகள் தாமே குணங்களுமாம். இது குணகுணிகளது இயல்பென்று நீலகேசி விளக்கிக் கூற அதுகேட்ட உலகசித்து என்பானும் தனது அறியாமை நீங்கி, இவ்வாறு தெளிதல் சால நல்லது போலுமென்று அன்புடையனாயினன் என்றவாறு. (௬அ)

நீலகேசி உலோகசித்திற்குச் செவியறிவுறுத்துதல்

அ௨௧. பொருளோடக் குணந்தொழிற் குண்மை யொன்றெனத்
தெருள்வது மும்மையிற் றெரிய வைப்பது
மருளுடை யறநெறி யண்ணல் சேவடி
யிருள்கெட நினைத்தலு மினையை யாகென.

(இதுவும் அடுத்துவரும் இரண்டு செய்யுளும் ஒருதொடர்)

(இ - ள்.) பொருளொடு அக்குணம் தொழிற்கு உண்மை ஒன்று எனத் தெருள்வதும் - இவ்வாறு அன்பனாகிய உலகசித்தினை நீலகேசி மீளவும் நோக்கி அன்புடையோய்; பொருள் குணம் செயல் என்னும் இம் மூன்றற்கும் உண்மைத் தன்மை வேறு வேறன்றி ஒன்றாகவே அமையும் என்று தெளிதலும்; மும்மையின் தெரிய வைப்பதும் - நின் மாணவர்க்கு எல்லாப் பொருள்களும் தோற்றம் நிலைப்பு அழிவு என்னும் மூன்று தன்மையுடையனவாக அறிவுறுத்தலும்; அருள் உடை அறநெறி அண்ணல் சேவடி - அருளையே தலைமையாகக் கொண்ட சமண சமய அறநெறியைத் திருவாய் மலர்ந்தருளிய இறைவனாகிய அருகனுடைய சிவந்த திருவடிகளை; இருள்கெட நினைத்தலும் - நினது அறியாமையாகிய இருளகலும்படி இடையறாது தேனித்தலும்; இனையை ஆகு என - ஆகிய இத்தன்மைகளையுடையையாவாயாக வென்று அறிவுறுத்தி என்க.

(வி - ம்.) நீலகேசி உலகசித்தை நோக்கி ஐய! நீ பொருளுக்கும் குணஞ் செயல்களுக்கும் வேறுவேறின்றி உண்மைத் தன்மையும் ஒன்றாகவே அமையும் என்று தெளிதலும் எல்லாப்பொருள்களும் தோற்றம் நிலை அழிவு என்னும் மூன்று தன்மையையும் உடையன என்று தெளிதலும் அருளுருவனாகிய நற்காட்சி நன்ஞானம் நல்லொழுக்கம் என்னும் மூன்றனையு முடைய மெய்யறநெறியினை உலகிற்குத் திருவாய் மலர்ந்தருளிய இறைவனாகிய அருகபரமனது திருவடியின்கண் அமைந்த

திருக்கங்களின் கதிர்க்கூட்டத்தை நினது நெஞ்சின் கண்ணதாகிய அறியாமையிருள் துவரக்கெடுமாறு எப்பொழுதும் நினைத்தலும் ஆகிய இத்தன்மையுடையையாவாயாக! என்று கூறி என்றவாறு. (கூகூ)

அ௨௨. ஓம்படுத் துலோகனை யொழியச் சொல்லியான்
காம்புடைக் கடநெறி கடப்ப னென்னவே
பேம்படுப் பவரோடும் பிரிவின் ஞுமையைத்
தேம்படு கிளவிநீ சிந்தி யென்னவே.

(இ - ள்.) உலோகனை ஒழியச் சொல்லி பின்னரும் நீலகேசி அந்த உலோகசித்துத் தனது பழைய சமயமாகிய வைசேடிக நெறியினின்றும் தானே விலகும்படி ஆருகத சமயவறங்களை அறிவுறுத்து; ஓம்படுத்து - அவனை அருகன்றிருவடிகளிலே ஓம்படை செய்து பின்னர்; யான் காம்பு உடை கடநெறி கடப்பன் என்ன - ஐய! இனி யான் மூங்கிலையுடைய இந்தக் காட்டுவழியைப் போவேன் என்று கூற; தேம்படு இளவி-அதுகேட்ட உலகசித்து இனிய மொழியையுடைய நல்லாசிரியையே! பேம் படுப்பவரொடும் பிரிவு இன்ஞுமையை - நின்னை யான் மறக்குமாறென்னை? அச்சுறுத்தும் பேயோடும் கேண்மை கொண்டபின் பிரிதல் இன்ஞுமையுடைத்தென்னும் உலகுரையை; நீ சிந்தி என்ன - நீ நினைத்துக்காண் என்று வருந்திக் கூறு நிற்ப என்க.

(வி - ம்.) நீலகேசி மீண்டும் நல்லறம் பல கூறி இனி யான் போவேன் என்று கூற அதுகேட்ட உலகசித்து இனியாய்! பேயோடும் பிரிவின்ஞுது என்னும் பழமொழியை நினைத்துக்காண் என்று கூறி வருந்திஞன் என்றவாறு. (சo)

இதுவுமது

அ௨௩. ஒக்குமவ் வுரையென வுள்ள தேயென
நக்கன ளாகிய நாதன் சேதியஞ்
சிக்கென வேத்துதல் சிறந்த தென்னவே
தக்கதேன் றவன் சொலத் தானு நீங்கிஞள்.

(இ - ள்.) அவ்வுரை உள்ளதே - அதுகேட்ட நீலகேசி ஐய! அப்பழமொழி வாய்மையே காண்; ஒக்கும் என-அப் பிரிவின்ஞுமை எனக்கும் ஒப்பதேயாம் என்று கூறி; நக்கனள் ஆகி - நகைத்தவளாய்; நீ நாதன் சேதியம் சிக்கென ஏத்துதல் சிறந்தது என்ன-அங்ஙனமாயினும் எனக்கு அவ்வருகபரமனுடைய கோயில் தோறும் சென்று சென்று உறுதியோடு தொழுதல் சிறந்த அறமாதலின் நின்னைப் பிரிந்து போகின்றேன் காண் என்று கூற; அவன் தக்கது என்று சொல - உலகசித்து அடிகட்கு அவ்வறம் மிகவும் தகுதியுடையதே என்றுடம்பட்டுக் கூறுதலாலே; தானும்

நீங்கினாள் - அந்நீலகேசியும் தான் கருதியவாறே செல்வாளாயினாள் என்க.

(வி - ம்.) 'பேயோடும் பிரிவின்றது' என்று நீ சொல்லியது யான் பெரிதுமறிவன்; அஃதவ்வாறே யொக்கும் என்று சிரித்து நின்னுடன் அன்பின்றி விட்டுப் போகின்றேனல்லேன். அருகன் திருப்பதிதோறுஞ் சென்று அவன்றிருவடிகளை வணங்கும் ஆர்வத்தாலே போகின்றேன் என, அவனும் அஃதொக்குமென்றுடன்பட, அங்கு நின்றும் போயினாளென்றவாறு.

உலகசித்து 'பேயோடும் பிரிவின்றது' எனவே, நீலகேசி தான் பேயாதல் அவனறியானாகவும் அப்பழமொழி தன்றிறத்திலே பெரிதும் பொருந்துதலுணர்ந்துழி அவட்கு நகை தோன்றலின் ஒக்கும் அவ்வுரை உள்ளதே என்று நக்கனள் என்பது கருத்து. (௬க)

வைசேடிக வாதச் சருக்கம் முற்றும்.

ஒன்பதாவது

# வேத வாதச் சருக்கம்

அ௨௪. காதம் பலவும் கடந்தபின்
காகந்திக் கடிநகருள்
வேதமு மங்கமும் விச்சைக
ணிலைமையும் வேண்டுநர்கட்
கோதவுங் கேட்பவு முரைத்தலி
னுலகினு ளறியப்பட்டான்
பூதிக னெனப்படு மந்தண
ேனாத்திடம் புக்கனளே.

(இ - ள்.) காதம் பலவும் கடந்தபின் - உலகசித்துவின் பள்ளியினின்றும் காட்டினூடே சென்ற நீலகேசி பல காவதம் கடந்த பின்னர்; காகந்திக் கடிநகருள் - 'காகந்தி' என்னும் காவலமைந்த நகரத்தினூடே உறைபவனும்; வேதமும் அங்கமும் விச்சைகள் நிலைமையும் - வேதங்களையும், வேதவுறுப்புக்களையும் பிற வித்தைகளின் இயல்புகளையும்; வேண்டுநர்க்கு - விரும்பிவருகின்ற மாணவர்களுக்கு; கேட்பவும் ஓதவும் - கேட்குமாறும் அவர் பிறர்க்கு ஓதவும்; உரைத்தலின் - கற்பித்தலாலே; உலகினுள் அறியப்பட்டான் - உலகத்துள்ளாரால் அறியப்பட்டவனும்; பூதிகன் எனப்படும் அந்தணன் - பூதிகன் என்னும் பெயரையுடையவனுமாகிய பார்ப்பனனுடைய; ஓத்திடம் - பள்ளியின்கண்; புக்கனள் - சென்றாள் என்க.

(வி - ம்.) நீலகேசி உலோகசித்தின் பள்ளியினின்றும் போய்ப் பல காவதங் கடந்து காகந்தி என்னும் ஒரு கடிநகரத்திருக்கின்றவனும் வேத முதலிய வித்தைகளைப் பயிற்றுபவனும் புகழ்மிக்கவனும் ஆகிய பூதிகன் என்னும் பார்ப்பனனுடைய பள்ளியுட்புகுந்தனள் என்றவாறு.

அங்கம் - வேதவுறுப்புக்கள்; அவையாவன: மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னும் ஆறுமாம்.

"கற்பங் கைசந் தங்கா லெண்கண்
தெற்றெ னிருத்தம் செவிசிக் கைமூக்
குற்ற வியாகரணம் முகம் பெற்று" (மணி-உ௭ : ௪00-௯.)

என்பவாகலின் இவை உறுப்பெனப்பட்டன. இனி நச்சினார்க்கினியர் ஆறங்கமாவன-உலகியற் சொல்லையொழித்து வைதிகச் சொல்லையா

ராயும், விருத்தமும் அவ்விரண்டையு முடனாராய்ந்த ஐந்திரத் தொடக்கத்து வியாகரணமும், போதாயனீயம் பாரத்துவாசம் ஆபத்தம்பம் ஆத்திரேயம் முதலிய கற்பங்களும் நாராயணீயம் வராகம் முதலிய கணிதங்களும் எழுத்தாராய்ச்சியாகிய பிரமமும் செய்யுளிலக்கணமாகிய சந்தமுமாம் எனச் சிறிது வேறுபடக் கூறுவர். விச்சை என்றது இதிகாச முதலியவற்றை. ஓத்திடம் - வேதமோதும் பள்ளி. இதனை அத்தியயன சாலை என்ப. (௯)

நீலகேசி பூதிகனை வினவுதலும் அவன் விடையும்

௪௨௫. என்னை யிங்குநும் பொருளென
வினவலு மிவ்விருந்த
வன்னை தன் வரவிதே லாதியி
லருமறை யதுமுதலாப்
பின்னைவந் தனகளு மிவையெனப்
பையவே பெயர்த்துரைத்தான்
முன்னமங் கிருந்தவோர் முதுமக
னவைதன் முறைமையினே.

(இ - ள்.) இங்கு நும்பொருள் என்னை என வினவலும் - பள்ளியிற் புக்க நீலகேசி அங்குறைவாரைப் பொதுவினோக்கி இவ்விடத்தே ஓதுகின்ற நுங்களுடைய முடிபொருள் யாது? என்று வினவ; அன்னை தன் வரவு இதேல் - அன்னை போல்வாளாகிய இவள் இங்கு வருதற்குக் காரணம் இதுவே போலும் என்று கருதி; அங்கு முன்னம் இருந்த ஓர் முதுமகன் - அப்பள்ளியின்கண் முற்பட்டிருந்த ஒப்பற்ற வேதவுணர்ச்சியையுடைய முதியோனாகிய பூதிகன் என்னும் ஆசிரியன்; ஆதி இல் அருமறையது முதலா - அநாதியாகிய உணர்தற்கரிய வேதமும், அதுகாரணமாக; பின்னை வந்தனகளும் - பின்னர்த் தோன்றிய நூல்களும்; இவை என - இன்னின்னவை என்று; அவை தன் முறைமையின் - அவற்றிற்குரிய முறைமையாலே; பையவே பெயர்த்து உரைத்தான் - அமைதியாக எடுத்துக் கூறினன்; என்க.

(வி - ம்.) இவ்விடத்து நும் சித்தாந்தம் யாதென்று நீலகேசி கேட்டலும், இவள் நமது சித்தாந்தத்தை ஆராய்தற்குப் போலும் ஈண்டு வந்ததென நினைந்து, அநாதியாக உள்பொருளாகிய வேதமே எமக்கு நூல்; அது முதலாகப் பிறந்தன உலகத்து இருபத்தைந்து தத்துவங்களை யுணர்த்தும் சாங்கிய நூலும், ஆறு தத்துவங்களை யுணர்த்தும் வைசேடிக நூலும், உலகத் தோற்றங் கூறும் நூலும், வைணவமும், மாகேசுவரமும், பாசுபதமும், பாஞ்சராத்ரமும், பரிவிராசிகமும், அவற்றின்கண் அகவேறுபாட்டு நூலும் பிறவுமாகிய வற்றையெல்லாம் முறையே கூறினன் பூதிகன் என்றவாறு.

"வேதக்கு, ஆதியந்த மில்லை"
என்பது மணிமேகலை (உஎ:௧0௬-௭).
"வேதம் அநாதி நித்தியம்"
என்பது பரிமேலழகர் உரை (குறள்-இ௪௩.) (உ)

பூதிகன் சினந்துரைத்தல்

அஉசு. நாத்திக மல்லது சொல்லலை
யாயின்மு ஞன்பயந்த
சாத்திர மாவது வேதமன்
ேறுவது தான்சயம்பு
சூத்திரி நீயது வல்லைய
லாமையிற் சொல்லுகிலாய்
போத்தந்தி யோவதன் றீமையேன்
றுன்பொங்கிப் பூதிகனே.

(இ - ள்.) பூதிகன் பொங்கி சூத்திரி நீ நாத்திகம் அல்லது சொல்லலை - அதுகேட்ட நீலகேசி நின் வேதத்தினின்றும் பிறந்த நூல்கள் ஒன்றனோடொன்று முரண்படுதலால் அவற்ருற் பயனில்லை என்ருளாக, அதுகேட்ட அந்தப் பூதிகன் பெரிதும் சினந்து ஏடி ! நீ கீழ்மகளாதலின் நாத்திகம் பேசுதலல்லது பிறிதொன்றும் பேச அறியாய் காண் ; ஆயின் - அங்ஙனமாயின் ; முன் நான் பயந்த சாத்திரமாவது வேதம் அன்ரே - நின்முன்னே யான் கூறிய நூலானது யாவரானும் போற்றப்படுகின்ற வேத மல்லவோ ?; அது தான் சயம்பு - அவ்வேதந்தானும் தான்ருேன்றி யாகும் ; நீ அது வல்லை அலாமையின் - கீழ்மகளாகிய நினக்கு அதனை ஓதும் உரிமையின்மை காரணமாக அதனைக் கற்று வல்லுநையல்லையாகலின் ; அதன் தீமை போத்தந்தியோ சொல்லுகிலாய் - அவ்வேதத்தின்கண் குற்றத்தைப் புகவிடுத்தாய் போலும் ; நீ குற்றஞ் சொல்லும் தகுதியுடையாயில்லை ; என்ருன் - என்று கூறினன் ; என்க.

(வி - ம்.) நீ வேதம் ஓதுமுரிமையுடையையல்லையாதலின் நாத்திகம் பேசுதல் நின்னியல்பேயாம். வேதம் தானே தோன்றியது. அதன்கண் குற்றமில்லாதிருக்கவும் நீ வலிந்து குற்றத்தை ஏறட்டுரைக்கின்றனை. நீ அதன்கண் குற்றங் காண்டல் அரிது என்று பூதிகன் வெகுண்டு கூறினன் என்றவாறு.

நாத்திகம் அல்லது சொல்லலை என்றதனுல் வழிமொழிந்து கொள்ளுமாற்ருல் நீலகேசி வேதம் மெய்ந்நூலன்று என்று மறுத்துரைத்தாள் என்பது பெற்ரும். வேதத்தை மறுப்போரெல்லாம் நாத்திகர் என்னும் தன் கொள்கைபற்றி மறுத்துரைத்தலையே நாத்திகம் பேசுதல் என்ருன் என்க.

இனி, நாத்திகம் சொல்லுதலாவது—முன்பு வேதத்தைப் பற்றிப் பிறந்த காட்சிகள் பலவுளவென்று சொல்லுதற்கண் அவை நின் கருத்தாற் பொருந்துவனவோ? பொருந்தாவோ? பொருந்துமெனின், மீமாம்சையை விட்டு அவற்றைக் கோடல் வேண்டும். மீமாஞ்சையே பொருந்துவதாம். அவை பொருந்தாவெனின், உடம்பினின்றும் சிறு நீரே மலமே கழிகாற்றே வியர்வே கோழையே என்றிவை முதலாயின பிறந்தனவெனினும், உடம்பிற்கு உண்டாகுஞ் சிறப்பு இல்லை என்று சொல்லுமாறுபோல அவற்றால் வருவதொரு சிறப்பு இல்லையென்று சொல்லுக. கீழ்மகளாகிய நினக்கு அறியப்போகாது வேதம் என்று சொல்லியதென்னை? கீழ்ச்சாதியாகிய நீங்கள் அறிகின்றது யானறிதற் கெட்டாததென்னை? என்றாட்கு, நுங்கள் மரபில் முதன்மையுடைய வனாகிய 'வதிட்டனே,' 'அகத்தியனே' 'சத்தியே', 'பராசரனே,' 'வியாதனே' 'சுகனே' என்றிவருள், வதிட்டனும் அகத்தியனும் பிரமன் திலோத்தமை என்னும் வேதகணிகையைக் கண்ட காலத்துக் கலயத்துப் பிறந்தனர். வதிட்டனுக்குப் புலைச்சி வயிற்றில் பிறந்தான் சத்தி என்பான்; சத்திக்கு அட்டிலோள்பாற் பிறந்தான் பராசரன்; பராசரனுக்கு மீன் வயிற்றுப்பிறந்த மீனுறிபாற் பிறந்தான் வியாதன்; வியாதனுக்குத் திலோத்தமைபாற் பிறந்தான் சுகன்; என்னை? இங்ஙனமே நுங்கள் வேதவழிப்பட்ட நூல்களே கூறக்காண்டுமன்றே. அங்ஙனமாகவும் கீழ்மகளாகிய எனக்கு அறிய வொண்ணா தென்பதேனோ?

அன்றியும் பார்ப்பனராகிய நுமக்கும் பயிற்சியாலன்றி வாராதெனின், எமக்கும் பயிற்சியால் வரும் என்றவாறு.

இனி, ஈண்டு வதிட்டன் முதலியோர் பிறப்புப்பற்றிக் கூறப் படுவனவற்றோடு,

"ஆன்மகன் அசலன் மான்மகன் சிருங்கி
புலிமகன் விரிஞ்சி புரையோர் போற்றும்
நரிமக னல்லனோ கேச கம்பளன்
ஈங்கிவர் நுங்குலத் திருடி கணங்களென்
றோங்குயர் பெருஞ்சிறப் புரைத்தலு முண்டால்
ஆவொடு வந்த அழிகுலம் உண்டோ
நான்மறை மாக்காள் நன்னூ லகத்தென"
(மணி - ௧௩ : ௬௩-௬௯)

எனவரும் ஆபுத்திரன் கூற்றினையும் ஒப்புநோக்குக.

இனி, மீமாஞ்சையாவது - வேதத்திற் கருமகாண்ட வாராய்ச்சி செய்தற் கெழுந்த நூலாதலின், வேதம் சுயம்புவாய்த் தூய்மையானது என்பது நின் கருத்தாயின் அதனை ஆராயாது கோடல் வேண்டும்; ஆராய்தலின் அது குற்றமுமுடைத்தென்பது போதரும் என்பான் மீமாஞ்சையை விட்டு அவற்றைக் கோடல் வேண்டும் என்றான் என்பது கருத்து. (௩)

நீலகேசி கூற்றும் பூதிகன் கூற்றும்

௮௨௭. பூதிகன் றனது சொல்லலும் யானது வல்லனேல்லாம்
சாதிகண் டாயெனத் தான்றள ராது சாற்றுகேன்றாட்
காதியேன் றனுமோ ரந்தமென் றனுமுண் டேலதற்கு
நீதியி னுவரை நீயினி யானது நோ்வ னென்றான்.

(இ - ள்.) பூதிகன் தான் அது சொல்லலும் - பூதிகன் என்பான் வெகுண்டு அங்ஙனம் கூறலும்; யான அது வல்லன் - அதுகேட்ட நீலகேசி வேதிய! யான் குற்றங் கூறுவேன்காண்; சாதி கண்டாய் எனத் தான் தளராது சாற்றுக என்றாட்கு - நீ அக் குற்றத்திற்குத் தீர்வு காட்டி நன்றென்று நிலை நாட்டுக, என்று தான் சிறிதும் நெஞ்சந் தளராது நின்று நீ இனி நின் வாதத்தைக் கூறுதி என்றவளை நோக்கி; நீ அதற்கு ஆதி என்றானும் அந்தம் என்றானும் உண்டேல் - ஏடி! நீதான் எம்முடைய வேதத்திற்குத் தோற்றம் உண்டு என்றுதல் அழிவுண்டு என்றுதல்; நீதியினால் உரை - முறைமையாற் கூறுவ யாக; யான் அது நேர்வன் என்றான் - கூறின் யான் அவ்வேதம் குற்றமுடைத்தென்று உடம்படுவேன் காண்! என்று அந்தப் பூதிகன் கூறினான்; என்க.

(வி - ம்.) பூதிகன் நீலகேசியை நோக்கி நீ வேதத்திற்குக் குற்றஞ் சொல்ல வல்லையோ? என்று சொல்லுதலும். யான் அதற்குக் குற்றங் கூறுகின்றேன்: அதனை மறுத்து நன்றென்று நிலைநாட்டுவாயாக! எனலும், வேதத்திற்கு ஆதியந்தம் உளதாகிற் சொல்லு; அதற்குக் குற்ற முளதாக யானு முடன்படுவேன் என்றான் என்றவாறு. (௫)

நீலகேசி வேதத்திற்குக் குற்றங் கூறுதல்

௮௨௮. செய்கையும் புதுமையு முடைமையிற்
றிருட்டத்தின் மறுதலையிற்
பொய்யொடும் பொருளொடுங் குவகொடுஞ்
சாலவும் பொருந்துதலின்
மையுறு மயக்கமு மாற்றொடு
கொலைமன்னு மருவுதலின்
ஐயமி றீக்கதிச் செலுத்துவ
ததுவென்னை யாவதென்றாள்.

(இ - ள்.) செய்கையும் புதுமையு முடைமையின் - ஐய! நின் வேதம் மனிதனாற் செய்யப் பட்டிருத்தலாலும் புதுமைத் தன்மையுடைத்தாதலானும்; திருட்டத்தின் மறுதலையின் — காண்டல் முரண் உடைமையானும்; பொய்யொடும் பொருளொடும் குவகொடும் சாலவும் பொருந்துதலின் - பொய்யுடைத்தாதலானும் தன்னைப் பயில்வோர் பொருள் வேட்கையோடு கூடாவொழுக்கத்தினும் மிகவும் பொருந்துதற் கேதுவாகலானும், மையுறு மயக்கமும் மாற்றொடு கொலை மன்னும் மருவுதலின் - அவர் இருளையொத்த மயக்கத்தினும் தடுமாற்றத்தினும் கொலை முதலிய தீவினையிடத்தும் பொருந்துதற்கு ஏதுவாகலானும்; ஐயம் இல் தீக்கதி

செலுத்துவது - உயிர்களை ஐயனு சிறிதுமின்றி நிரையத்துச் செலுத்துவதாகவும் ; அது என்னை ஆவது - அத்தகைய மருணூலாகிய நின் வேதம் எப்படித் தொடக்கமும் ஈறும் இல்லாததாவது ? ஆகவே வேதம் தொடக்கமும் இறுதியுமுடையதென்பது தேற்றம் ; என்றாள் - என்று நீலகேசி கூறினள்; என்க.

(வி - ம்.). ஐய ! நின் வேதம் மனிதராற் செய்யப்பட்டதேயாம்; அநாதியாய் வருவதென்றற்குச் சான்றில்லை, புதுவதாகச் செய்யப்பட்டதென்றற்கே சான்றுளது : நின் கூற்றுக் காட்சியளவைக்கு முரணும். மேலும் பொய் கூறுகின்றது. பயில்வாரைப் பொருள் தேடும்படி செய்வது. தீயொழுக்கங்களைச் செய்யுமாறு ஊக்குவது. மருளுடையது. தடுமாறு பொருண்மையுடையது; கொலை முதலியன செய்விப்பது ஆதலால் அந்நூல் உயிர்களை நிரையத்திலே செலுத்துவது. எனவே இத்தகைய இழிதகைமையுடையதொன்று ஆதியந்தமில்லது என்னல் குற்றமேயாம் என்றவாறு.

இனி, செய்கையுடைமையாவது: செயற்கையாகிய உலகவழக்குச் சொற்களே வேதத்தினும் காணப்படுவனவன்றிச் சிறப்பொன்றும் காணப்படாமையினால் புதுக்கிணறும் பழங்கிணறும் செயற்கையானாற் போல வேதம் செய்யப்பட்டதே என்பது.

இனி, பழமைபற்றி வேதம் தான்றோன்றியே (சுயம்பு) என்பது பெறப்படுமெனில், இவ்வாறே முப்பிடகம் முதலியவற்றிற்கும் தான்றோன்றித் தன்மை சொல்லலாமாதலின் மக்களாற் செய்யப்படாததென்பது உலகத்துப் பெறப்படாதாம். அன்றியும்,

இனி, வேதமொழிகளாலும் வேதம் செய்கையுடைத்து என்பது பெறும், இன்னும் வேதத்துக்கு 'தைத்திரி' என்னும் பெயருள்ளதாதலினும் செய்கையுடைத்தாம். என்னை? "தைத்திரி என்பதற்குச் செய்யப் பட்டது" என்று பொருள் கூறுதலின்.

இனி, கேள்விவழியால் வருகின்றதன்றி உரிமையால் ஒருவன் சொல்லாமையின்வேதம் செய்கையுடைத்தன்றெனின், முப்பிடகங்கள் முதலியனவும் கேள்விவழி வருகின்றனவென்று சொல்லலாமாதலின் அவையும் செய்கையுடையன வல்லவாம்.

இனி, முப்பிடகமும் புத்தனாற் செய்யப்பட்டனவென்பதே பௌத்த சமயக் கொள்கையெனின், வேதமும் மகாபூதாதியாற் செய்யப்பட்டது என்பது வேதத்தின் கொள்கை என்க.

இனி, வேதம் இன்னான் செய்தானென்று உலகத்தின்கண் கூறப்படாமையின் வேதம் செய்கையுடைத்தன்றெனின், எட்டுத்தொகை முதலியவற்றில் காணப்படுகின்ற செய்யுளிற் பல செய்யுள்கள் இன்னானாற் செய்யப்பட்டனவென்று உலகத்தில் கூறப்படாமையின், அவையும் செய்கையுடையவன்றாய் வேதம்போல மேற்கோடற்பாலவாம்.

இனி, அச்செய்யுள்களின் ஆசிரியர் பெயர் காணப்படாவாயினும் அவை அகப்புறப்பொருள்களின்பால் விருப்பமும் தமிழர்பா லன்பும் உடையாராற் சொல்லப்பட்டன என்பது அந்த மொழிகளாலேயே

விளங்குமன்றோ? வெனின், வேதமும் இன்னாமைசெய்தலின்கண் விருப்பமும் கள் விருப்பமும் பார்ப்பனர்பாலன்பும் முதலாயினவுடையார் சிலராற் செய்யப்பட்டன என்பது அவ் வேத மொழிகளாலேயே விளங்கும். என்னை ?

தைத்திரீய சங்கிதையில் வருகின்ற மொழிகளாலும், ஐதரேய பிராமணம் முதலாயினவற்றில் வருகின்ற மொழிகளாலும் இன்னா ௪
செய்தலில் விருப்பம் முதலாயின விளங்குமாதலின் என்பது. ஆதலால் பலராற் சொல்லப்பட்டுக் காலம் இடம்பற்றி இன்னார் சொன்னவென்றறியப்படாத நன்மொழிகளை ஒருவன் ஒரு கோவைபடத் தொகுத்தாற்போல, வேதமும் வியாதனாற்றொகுக்கப்பட்டதென்பது.

இனி, வேதம் செய்கையும் புதுமையுடைமையும் முதலாயின வருகின்ற செய்யுள்களாலும் தெளிக.

இனி, காண்டல் முரணாவது: உலகிற் காணப்படுவனவற்றிற்கு மறுதலைப்படச் சொல்லுதல்; அஃதாவது : புற்றிலும், பாண்டத்திலும், நிலத்திலும், மீனிலும், விலங்கு முதலாயினவற்றிலும் மக்கள் பிறந்தார் என்றலும், புலைச்சிவயிற்றிற் பிறந்தவன் பார்ப்பனன் ஆவன் என்றலும், அருணன் என்னும் ஆடவனுடன் இந்திரனும், கதிரவனும் ஆகிய ஆடவர் கலவி செய்ய, அவன் வாலியும் சுக்கிரீவனும் என்னும் குரங்குகளை ஈன்றனன் என்றலும், இந்திரனுக்கு ஆண்குறி இல்லாமையின், ஓர் ஆட்டினது குறியை அரிந்து கூட்டக் கூடிற்றென்றலும், உயிர் அழிவற்றது என்றும் யாண்டும் நிறைந்தது என்றும் சொல்லிவைத்துப் பின்னர் அதற்குப் போக்கும் வரவும் முதலாயின கூறுதலும் கவச குண்டல முதலியவற்றோடு குந்திதேவிபாற் கன்னன் பிறந்தானென்றலும், மகப்பேறு கருதித், தமையன் மனைவியோடு கூடுதல் அறமே என்றலும், முதலாயின. இன்னோரன்ன பிறவும் எல்லாம் ஆராய்ந்துணர்ந்து கொள்க.

இனி, பொய்யொடு பொருந்தலாவது குருடன் மணி கண்டெடுத்தலும், விரலிலாதான் மணி கோத்தலும், எருது மல்லாந்து பொதி சுமத்தலும் முதலாயின கூறுதல்; இவை நிகழாமையின் பொய்யொடு பொருந்திற்றும். அன்றியும், சைமினி என்னும் முனிவர் ஓரிடத்திலே வேதம் வேள்வி முதலிய செயல்களின் முறையிலே ஓர் அளவையாம் ; ஒழிந்தவழி பொருள் வாதமாவதல்லது அளவை யாகாதென்று சொன்னமை பெறப்படுதலினும் பொய்யொடு பொருந்திற்றும். அன்றியும் சாந்தோக்கிய வுபநிடதத்தின்கண்ணும், காடகோப நிடதத்தின்கண்ணும், ஞானகாண்டத்து உலகத்திற்குப் பொய்த்தன்மை சொல்லிக் கருமகாண்டத்து மைத்திராயணீய சங்கிதையில், உலகிற்கு உண்மைத் தன்மை சொல்லுதன் முதலாகிய முற்பிற்பாடு முரண்களாலும் பொய்யொடு பொருந்திற்றும். முன்னுக்குப் பின் முரண்படப் பேசுவோர் பொய்யர் என்பது உலகறிந்ததே ; பிறவும் முன்னுக்குப் பின் முரண்படுவன பற்பலவாம். அவற்றை யாராய்ந்து கொள்க.

இனி, பொருள் வேட்கை செய்தலாவது; இல்லம், நிலம், பொன், எள், ஆடை, ஆன், எருமை, யானை, குதிரை முதலியவற்றைத் தானம் பண்ணுக என்றும், தானம் ஏற்றல் அறமாகும் என்றுஞ் சொல்லுதல். இவ்வாறு சொல்லவே ஏற்போருக்கு அவற்றின்மேல் வேட்கை செல்லும் என்பது. என்னை ?

முன்னொரு தேவதத்தன் இருவர் மக்களையுடையான், ஒரு மகன் இறந்துழி அவனுக்குரிய நிலத்தையும் ஆன் எருமை முதலியவற்றையும் வேதம் வல்லுநனாகிய பார்ப்பான் ஒருவனுக்குத் தானம் பண்ணினானாக; அவனும் உழவு முதலிய தொழில் செய்து செல்வான், மற்றொரு பார்ப்பனனுக்குத் தான் பெற்ற தானச்செய்தியைக் கூறுபவன், ஒரு மகனிறப்ப அவனுடைய பொருளைத் தானம் பண்ணினனாதலின் ஒழிந்த மகனுமிறந்தால் அவன் பொருளையும் அத்தேவதத்தன் தானம் பண்ணுவனாகலின், பின்பு யான் குறைவற்ற வாழ்க்கை பெறுவேன் என்று சொல்லினனாதலின், இவ்வாறு பொருள் வேட்கை செய்யும் என்பது. இனி, சைநாகமமே உண்டி பயமின்மை மருந்து நூல் முதலியவற்றைத் தானம் பண்ணுக என்று கூறுதலின், பொருள் வேட்கை செய்யாதது என்பது.

குவகு என்பது கள்ளும் காமமும் ஊனுமாம்; இவற்றுள், கள்ளொடு கூடுதலாவது - சௌத்திராமணி யென்னும் வேள்வி கள்ளாற் செய்யப்படுதலின், கள்ளுண்டு, குடுமி குலைந்து, கைகோத்து நின்று, ஆடுவராகலினும், 'பாகவதத்தின்கண்' கூறப்படுகின்ற பார்ப்பனன், தேவேந்திரனும் தேவர்களும் உண்ண வைத்த கள்ளை யுண்டலின், இவனை இந்திரன் வச்சிரப்படையாற் கொன்றனன். கொல்லவே இந்திரனைப்பிரமகத்தி என்னுந் தீவினை பற்றிக்கொண்டதாக; இந்திரன் மகளிரையும் மரங்களையும் நிலத்தையும் நீரையும் வழிபாடு செய்து அவற்றின்மேல் அத் தீவினையை விட்டனன். அதுதானும் மகளிர்பால் பூப்பு நீராகவும், மரத்தின் பால் பிசினாகவும், நிலத்தில் களராகவும், நீரில் நுரையாகவும் நின்றது என்பது முதலாகிய வேத மொழிகளாற் கண்டு கொள்க.

இனி, அசுரரமைச்சன் என்னும் பார்ப்பனனாகிய வெள்ளியின் பால் செத்தாரை எழுப்புவதொரு மந்திர முண்மை கண்டு அது பெற வேண்டி வியாழன் மகனாகிய புதன் வெள்ளியின் மகளாகிய தேவயானை என்பாளோடு கூடிச் செல்வுழி, அசுரர் அவனைக் கொல்லுந்தோறும் தேவயானையின் வேண்டுகோளால் அவனை வெள்ளி எழுப்பிக் கொடுப்ப இங்ஙனமே பன்முறையும் நிகழ்ந்து வருகின்ற நாளில், அசுரர் பொறாது வெள்ளி கள்ளுண்ணும் பாண்டங்களுள் ஒரு பாண்டத்துப் புதனைக் கொன்று கள்ளொடு கரைத்துக் கொடுப்ப, அவன் கள் வெறியாலே அஃதறியாது கள்ளோடு குடித்தனன். இதுவும் வேதத்தினும் மகாபாரதத்தினும் கண்டு கொள்க, ஆதலால் அன்றே வேதத்திற் கள்ளுண் அறிவிக்கப்படுகின்றது. ஆதலின் வேதம் கள்ளோடு கூடிற்றாம். கள்ளுண்பற்றி வருவன வேதத்துப் பிறவும் உள. அவற்றையும் ஆராய்ந்து கொள்க.

இனி, காமத்தொடு கூடுதலாவது -

தமையன் மனைவி முதலாகிய மகளிரையும் ஆ முதலிய பிறவற்றையும் கூடுதலாம். அதுவும் ஆராய்ந்து கொள்க.

இனி, ஊனோடு கூடுதலாவது -

வேள்வியினும் இறந்தோர் வயிற்செய்யும் கடமையினும் ஊனுண்டலான் ஊனோடு கூடிற்றாம்.

இனி, மயக்கத்தைப் பண்ணுதலாவது - ஒருகால் திருமாலே இறைவன்; அவனை ஒழிந்தாரெல்லாம் வழிபட்டனரென்றும், ஒருகால்

சனே இறைவன் ; அவனைத் திருமால் முதலியோர் வழிபட்டன ரென்றும் இவ்வாறு இதுபோல்வன பலவுஞ் சொல்லுதலின் மயக் கத்தைப் பண்ணுமென்பது.

இனி, தடுமாறு பொருண்மைத்தாதலாவது -

தீயின்கண் அவிசொரிவான் துறக்கம் வேண்டினவனென்றும் நாயூன்தின்பான் துறக்கம் வேண்டினவனென்றும் இவ்வாறு பொருள் படுதல். 'அக்கினிஹு' என்பது நாய் 'உத்ரம்' என்பது ஊன். 'ஜுஹுயாத்' உண்பான் என்றவாறு, இவ்வாறு தடுமாறு பொருண்மைத்தாதல் பிற சமய நூல்கட்கும் ஒக்குமே எனின், அவை மக்களாற் கூறப்பட்டன வாதலின் மக்கள் ஓதுவிக்குங் காலத்தே இதற்கிது பொருளென உறுதி செய்யுமாற்றால் தடுமாறுவென்பது.

இனி, வேதப்பொருளும் ஆசிரியர் அறிவுறுத்தும் பொழுது பொருள் நிலையிட்டு அறிவுறுத்தல் கூடாதோவெனின், கூடாது ; என்னை ? வேதத்திற்குப் பொருள் கூறும் ஆசிரியன் பொருளுணர்ந்து கூறுவனோ ? அதன்கட் கண்டவாறே கூறுவனோ ? உணர்ந்து சொல்லு வன் எனின், எல்லாப் பொருளையும் தன்பாலடக்கியுள்ள வேதத்தின் பொருளை உணர்ந்து சொல்பவன் முற்றறிவுடையோனாதல் வேண்டும். முற்றறிவுடையோன் மக்களுள் இல்லாமையால், அது கூடாதாம். கூடின் அவன் கூற்றே வேதத்திற்கு அளவையாக, வேதம் தானே அளவையாதல் கூடாதாம்.

அன்றியும் முற்றறிவுடையோன் மக்களுள் உளனாயவழி அவனா லேயே அற முதலிய உறுதிப் பொருள்கள் நிலையுறுமாகலின் அவன் வேதமோதிப் பொருளுணர்தலும் அதனால் அற முதலியன நிலைபெறு தலும் வேண்டுவதில்லை யென்பதாம்.

இனி, தாம் தாம் அறிந்தவாறே பொருளறிவுறுத்தின் எல்லோரும் தத்தமக்குத் தோன்றியவாறே அறிவராதலானும் தடுமாறு பொருண் மைத்தாம்.

தத்தமக்குத் தோன்றியவாறே அறிதலாவது - முன்னொரு நாள் தேவர்களும் பார்ப்பனரும் கூடியிருந்து அசம் என்னும் சொற்பொரு ளாவது 'ஆடு' என்றனர் ; பார்ப்பனர் அசம் என்னும் சொற்பொரு ளாவது 'ஒருவகைக் கூலம்' என்றனர். இவ்வாறு பொருள் கண்டு 'உபரிசரவசு' என்னும் கோமகனை இருதிறத்தாருங் கேட்ப, தேவர்பா லன்புற்று அவனும் அசம் என்பதன் பொருள் ஆடு என்றனன் ; அது கேட்ட பார்ப்பனர் வெகுண்டு,

"நீ ஓரம் பேசினை யாதலின் நிலம் பிளக்க வீழ்ந்து ரசாதலம் புகுவாயாக" என்று சபித்தலும் அவனும் அவ்வாறு சென்றனன். அவனைத் தேவர்கள் கண்டு,

நீ வேதத்திற்கு முரணானவை சொல்லிப் பிழை செய்தனை ; அதன் பயனாக வன்றோ நிரயத் துன்பம் நுகர்கின்றனை என்று ஒறுத்தனர். இதனை, மகாபாரதத்து மோக்கதருமத்து 'வசுசாப கதநம்' என்னும் அத்தியாயத்திற் கண்டு கொள்க. இவ்வாறாதலின் வேதம் தடுமாறு பொருண்மைத்தாம். இன்னோரன்ன பிறவும் அறிந்து கொள்க. கொலை முதலானவற்றில் உயிர்களைச் செலுத்துமாறும் அறிந்து கொள்க.

இனி, வேள்வியின்கண் உயிர்க்கொலை செய்தல் தெய்வ வழி பாட்டின் பொருட்டாகலின் அறமன்றோ? எனின், கொன்று பொருள் கவரும் ஆறலைகள்வர் முதலாயினோரும், அந்தப் பொருளால் தாம் வழி பட்டுப்போதும் தெய்வவழிபாடு செய்வராதலின் அறமும் ஒழுக்கமும் ஆதல் வேண்டும். அது தீவினையாய் நிரையம் புகுதற் கேதுவாயின், நின் வேள்வியும் தீவினையாய் நிரையம் புகுதற்கேதுவாவதல்லது, நினக் குறுதி பயக்குமாறெங்ஙனம்? என்றவாறு போந்தது. (௫)

இதுவுமது

௮௨௬. யாரது செய்தவ ரறியிலிங்
குரையெனி லங்கொருவ
னூரது நடுவணோ ருறையுளில்
மலம்பெய்திட் டொளித்தொழியிற்
பேரினு முருவினும் பெறலில
னுதலின் றுக்குறித்துத்
தேரினு மினியது செய்தவ
ரில்லெனச் செப்புவவே.

(இ - ள்.) அது செய்தவர் யார் அறியில் இங்கு உரை எனின் - ஐய! வேதம் செயற்கையே என்புழி, அங்ஙனமாயின் அதனைச் செய்தவர்தாம் யாவர்? நீ அறிவாயாயின் இங்குக் கூறுதி என்பாயாயின்; ஒருவன் ஊரது நடுவண் அங்கு ஓர் உறையுளில் - ஒருவன் ஓர் ஊரினது நடுவிடத்தேயுள்ள ஒரு வீட்டின் முன்றிலிலே இரவில்; மலம் பெய்திட்டு ஒளித்து ஒழியின் - மலங்கழித்துவிட்டு யாருமறியாதபடி மறைந்து போனவழி; தேரினும் பேரினும் உருவினும் பெறல் இலனுதல் இன்று குறித்து - ஆராய்ந்து பார்க்கினும் அது செய்தவன் பெயராலும் உருவத்தாலும் இன்னான் என்பது பெறப்படுதல் இல்லையாதல் பற்றி; அது செய்தவர் இனி இல் எனச் செப்புவவே - அந்த மலங்கழித்தவர் யாருமிலர், அது சுயம்பு என்று சொல்லுவாருளரோ? நின் வேதமும் அதனையே யொக்கும் என்றாள் என்க.

(வி - ம்.) இதுவும் வேதம் செய்கை என்பது கூறும். வேதம் செயற்கையென்று சொல்லுவாய். வேதம் செய்தார் யார்? நீ அறியிற் கூறுக என்கின்றனை. செய்தாரை அறியாமையினால் எதுவும் இயற்கையாய் விடாதுகாண்! ஒருவன் ஓர் ஊர் நடுவே நள்ளிரவில் மலங்கழித்து யாருமறியாமற் போயினனாக மறுநாள் அதனைக் கண்டோர் அது செய்தானை அறியமாட்டாமையின் இம்மலம் சுயம்பு என்பரோ? என்னாரன்றோ? நின்வேதமும் செய்தாரை யறியாமையால் சுயம்பு ஆய்விடாது, யாரோ சிலர் செய்தார் என்பது தேற்றம் என்றவாறு.

வேதமும் அதுபோன்றதே என்பது குறிப்பெச்சம். (௬)

இதுவுமது

அகூ0. தோற்றமு நாற்றமுஞ் சுவையுட
ஞூறிவற் றுற்றொடங்கி
யாற்றவு மாயிரு வேதம்வல்
லார்களஃ தறிந்துரைப்ப
மேற்குலத் தாரோ டிழிந்தவ
ரேன்பது மெய்ம்மைபெறு
நூற்றிறஞ் செய்தவ ரறிகுவர்
நுழைந்தறி வுடையவரே.

(இ - ள்.) ஆற்றவும் ஆயிரு வேதம் வல்லார்கள் - பெரிதும் மருத்துவ நூல் கற்றுவல்ல அறிஞர்; அஃது தோற்றமும் நாற்றமும் சுவையுடன் ஊறு இவற்றால் தொடங்கி - அந்த மலத்தினது நிறமும் நாற்றமும் சுவையும் ஊறும் என்னுமித்தன்மைகளாலே ஆராயத் தொடங்கி; அறிந்து உரைப்ப - அந்த மலம் பிணியுடையானது, அல்லது பிணியில்லானது என்று அறிந்து கூறுவர்; மேற்குலத்தாரோடு இழிந்தவர் என்பது மெய்ம்மை பெறு - ஆயினும் அம்மலம் மேற்குலத்தான் மலம் அல்லது கீழ்க் குலத்தான் மலம் என்பது மட்டும் அறியப்படாதாம்; நுழைந் தறிவு உடையவர் - அங்ஙனமே நுண்ணறிவுடைய சான்றோர்; நூல் செய்தவர் திறம் அறிகுவர் - நுமது வேதத்தைச் செய்தவர் அறிவுடையோர் அல்லது அறிவில்லாதார் என்னும் இயல்புகளை அந்நூலை ஆராயுமாற்றால் அறிவர்; ஆயினும் அதனைச் செய்தவன் மேற்குலத்தான் அல்லது கீழ்க்குலத்தான் என்பது மட்டுமே அறியவொண்ணாதாம் என்றாள் என்க.

(வி - ம்.) முற்கூறப்பட்ட மலம் பிணியுடையோனது என்றுதல் பிணியில்லாதானது என்றுதல் மருத்துவ நூல் வல்லோர் அதன் தோற்ற முதலியன கொண்டு அறிந்துரைப்பர். மேலோனது கீழோனது என்று அறிதல் கூடாதாம். அதுபோலவே வேதமும் அறிஞரால் ஆராயப்பட்ட வழி இது அறிஞர் செய்தது, அறிவிலார் செய்தது என்று அறிந்து கூறப்படும். மேற்குலத்தான் செய்ததென்றுதல் கீழ்க்குலத்தான் செய்த தென்றுதல் அறியப்படாது அத்துணையே. அது செய்கையுடைத்தென் றறிதல் ஒருதலை என்றவாறு. (எ)

இதுவுமது

அகூக. முயற்சியி னிசைத்தலி னெழுத்தினிற்
பதத்தினின் முடிவதனுல்
சேயற்பட லுடையத னியற்கையிற்
செய்தவர் பெயர்பெறலா

லியற்கைய தன்றுநின் வேதமேன்
ரேதுவி னெடுத்துரைத்தாள்
புயற்றிற லிகலிய கூந்தலின்
பெயருடைப் புலமையினாள்.

(இ - ள்.) நின் வேதம் - ஐய! நின்னுடைய வேதந்தானும்; முயற்சியின் இசைத்தலின் - மக்கள் தம் முயற்சியாலே ஒலித்தலாலும்; எழுத்தினில் பதத்தினில் முடிவதனால் - எழுத்துக்களாலும் எழுத்தானியன்ற சொற்களாலும் முடிவதனாலும்; செயற்படல் உடையதன் இயற்கையின் - மக்களாற் செய்யப்பட்ட நூலையே ஒத்திருக்கின்ற இயல்புடைத்தாதலானும்; செய்தவர் பெயர் பெறலால் - அதனைச் செய்தவர் பெயர் அவ்வேதத்திலேயே கூறப்படுதலானும்; இயற்கையது அன்று - தான்றோன்றியன்று, மக்களாற் செய்யப்பட்டதே காண்; என்று ஏதுவின் எடுத்து உரைத்தாள் - என்று ஏதுக்களோடே எடுத்துக் கூறினள்; புயல் திறல் இகலிய கூந்தலின் பெயர் உடைப் புலமையினள் - முகிலின் தன்மையோடு மாறுபட்ட கூந்தலினது பெயரையுடைய நீலகேசி என்னும் புலமைமிக்கவள்; என்க.

(வி - ம்.) வேதமொழிகளும் மக்கள் தம் முயற்சியாலே உந்தியின் கண்ணுள்ள வளியை எழுப்பி இசைக்கப் படுவனவே யாதலினாலும், எழுத்துச் சொல் முதலியவற்றாலும் நீ செயற்கை நூல்கள் என்கின்ற யாமள ஷட்கம் முதலியவற்றையேவேதம் ஒத்திருத்தலானும் செய்தவர் பெயர் அவ் வேதத்திலேயே கூறப்பட்டிருத்தலாலும் அதுவும் செயற்கையேகாண்! என்று நீலகேசி கூறினள் என்றவாறு.

இனி, செய்தவன் பெயர் பெறுதலாவது - சொல்லுதலிற் பெறப்பட்டது. 'பிரஹ்மம்' என்பது வேதம். 'ஸ்வயம்பு' என்பது தன்னறிவு வன்மையால் வந்ததென்றவாறு. (அ)

வேதம் புதுமையுடைத் தென்றல்

அ௫௨. கதியவர் தம்பெய ரின்னவை
சுட்டின காட்டலினு
முதியவர் நாள்களோ டொப்பில
விப்பொழு தோத்தலினும்
விதியது வாதலின் வேதத்தை
யாஞ்சொல்லுங் கீதத்தைப்போற்
புதியது வேயெனச் சொல்லுது
நாமது பொருந்து மென்றாள்.

(இ - ள்.) கதியவர் தம் பெயர் இன்னவை சுட்டின காட்டலினும் - ஐய! நும் வேதங்கள் உலகின்கட் பிறந்தவர் பலர் தம்

பெயர்களை இன்னின்னவையென்று சுட்டிக் கூறுதலானும்; முதியவர் நாள்களொடு ஒப்பு இல - முன்னோர் காலத்தின்கண் உள்ளது போலாவாய்; இப்பொழுது ஒத்தலினும் - இப்பொழு துள்ள நூலாசிரியர் செய்த நூல்களையே ஒத்திருத்தலானும்; வேதத்தை - நும் வேதத்தை; யாம் சொல்லும் கீதத்தைப் போல் - நம் போல்வாராற் செய்யப்படுகின்ற குமார சம்பவம் முதலியவற்றைப் போலவே; நாம் புதியதுவே எனச்சொல்லுதும் - நாம் புதிதாகச் செய்யப்பட்ட நூலென்றே சொல்லுவோம்; அது விதி ஆதலின் - அங்ஙனம் கூறுதலே முறையுமாதலின்; பொருந்தும் என்றாள் - அது புதுமையுடைத் தென்பது நன்கு பொருந்துவதேயாம் என்றாள் என்க.

(வி - ம்.) கதி - பிறப்பு. முதியவர் நாள்கள் - பழையகாலம். கீதம் - நூல்.

ஐய! வேதம் பிறப்புடைய மாந்தர் பெயர் சிலவற்றைச் சுட்டிக் கூறுதலானும், பழையகாலத்துள்ளது என்பதற்குச் சான்றின்மை யானும், இக்காலத்துள்ளது போல்கின்றமையானும் நம்போல்வாராற் செய்யப்பட்ட குமாரசம்பவம் முதலியவற்றைப் போலப் புதியநாக மாந்தராற் செய்யப்பட்ட நூலென்று கோடல் பொருந்தும். அங்ஙனம் கோடலே முறையுமாம் என்றவாறு.

இக்காலத்துள்ளது போறலாவது - பண்டைக் காலத்தில் மாந் தர்க்கு ஆயிரம் யாண்டு, பதினாயிரம் யாண்டு வாணாள் உளவாகக் கேள்விப்படுகின்றோமாகவும், ஆயுளாக நூறாண்டினையே வேத மந்திரங்கள் வேண்டுதலும், பழைய காலத்துள்ள சான்றோர்க்குப் பொருந்தா வொழுக்கமாகிய தமையன் மனைவியைச் சேர்தலும், அட்டி லோன் முதலாகிய குற்றேவன் மகளிரைக் கூடுதலுமாகிய கூடா வொழுக்கங்களை விதித்தலும் முதலாயினவாம். (௯)

இதுவுமது

௮௧௩. கோல்வது தீதெனப் பொருள்வழி
வேள்வியிற் கோலப்படுவ
வெல்லையோன் றிலதென்ப வினைவிழைச்
சொழிகென்ப வம்முகத்தாற்
செல்கதி யுளதென்ப தீர்த்திக
நெறியென்றுந் தீயவென்று
பல்லவர் துணிவுமெம் வேதத்தி
னுளவெனப் பயின்றுரைப்ப.

(இ - ள்.) கொல்வது தீது என - வேதவாதிகள் உயிர்க் கொலை தீவினை என்று கூறிவைத்துப் பின்னர்; பொருள் வழி வேள்வியில் கொலப்படுவ எல்லை ஒன்று இலது என்ப - பொருந்

பேறு காரணமாகச் செய்யப்படுகின்ற வேள்விகளிலே கொல்லப் படுகின்ற உயிரினங்களுக்கு ஒரு வரைமுறை இல்லை யென்றும் கூறுவர் ; இணைவிழைச்சு ஒழிக என்ப - காமத்தை விட்டொழிக என்று கூறுவர் ; அம் முகத்தால் செல்கதி உளது என்ப - அந்தக் காமத்தை மேற் கொள்வதனுலே வீடுபேறும் உண்டாகும் என்றும் கூறுவர் ; தீர்த்திக நெறி - புறச்சமயக் கணக்கர் கூறு இன்ற நெறிகளெல்லாம் ; தீய என்று - தீமையுடையன என்று கூறிவைத்துப் பின்னர் ; பல்லவர் துணிவும் எம் வேதத்தின் உளவெனப் பயின்று உரைப்ப - உலகின் கண்ணுள்ள பலவேறு சமயக் கணக்கருடைய சித்தாந்தங்களும் எங்களுடைய வேதத்தி லுள்ளனவே என்று ஓதியும் காட்டுவர் ; இவ்வாறு நுங்கள் வேதம் பல்வேறு முரண்களையும் உடையன காண் ! என்ருள் என்க.

(வி - ம்.) இது வேதத்தின் கண்ணுள்ள முரண்பலவற்றைக் கூறி அது மெய்ந் நூலாகாதென மறுக்கின்றது.

வேதவாதிகள் கொலை தீதென்று சொல்லுவர். பின்னர், பொருட் பேறு கருதிச் செய்வதாகிய வேள்வியிற் கொலை அறமே என்றுங் கூறுவர். இணைவிழைச்சு ஆகாதென்று கூறுவர் ; பின்னும், புலைச்சி யோடாயினும் மகப்பேறு கருதிப் புணர்ச்சி பண்ணுவது அறமாதலின் அதனுல் துறக்கம் புகுதலாம் என்றுங் கூறுவர்.

இனி, வேத மொழிந்த நூல்களாற் சொல்லப்பட்ட நெறிகள் தீய நெறிகளாமென்று சொல்லுவர் ; பின்னும், வேதங்களுக்கு எல்லையில வாதலின், அவற்றின்கண் அடங்காப் பொருளில்லை. ஆகவே எல்லா நெறிகளும் வேதத்திற் குடம்பாடேயாம் என்றுஞ் சொல்லுவர். (௯0)

இதுவுமது

அ௬௪. சாதிக்கட் பயவா தவப்பயந்
தருமெனத் தந்துரைப்ப
வாதிக்க ணுன்வழி நால்வர
தமைதியை யமர்ந்துரைப்ப
சூதித்த தோற்றமும் பிழைப்பெனச்
சூத்திரப் பிறவிகொள்ளார்
வாதித்த வாறென்று தெருண்டவர்க்
கிவையிவை மயாமயக்கே

(இ - ள்.) சாதிக்கண் பயவா - ஒருவன் ஒரு பிறப்பிற் செய்த வினைகள் மறுபிறப்பிற் பயன் தரமாட்டா என்று கூறுப ; தவ பயந்தரும் எனத் தந்து உரைப்ப - அவை பெரிதும் பயன்தரு வனவாம் என்றும் எடுத்துக் கூறுவர் ; சூதித்த தோற்றமும் பிழைப்பு என - உலகில் இப்பொழுது பிறக்கின்றபடி பிறத்தல்

த்வறு என்று கருதுவார் போன்று ; ஆதிக்கண் - பிரமதேவ னுடைய ; வழி - உறுப்புக்களினின்றும் ; நால்வரது அமைதியை அமர்ந்துரைப்ப - நான்கு வகுப்பினரும் பிறந்தமையைப் பெரிதும் விரும்பிக் கூறு நிற்பர் ; சூத்திரம் பிறவி கொள்ளார் - பிரமனுடைய உறுப்பினின்றும் பிறந்த சூத்திரப் பிறப்புடையோரை வேள்வி முதலியன இயற்றுதற்குத் தகுதியுடையோராகக் கொள்ளார் ; தெருண்டவர்க்கு - தெளிவுடையோர்க்கு ; இவை இவை - இவை யெல்லாம் ; வாதித்தவாறு - ஒன்றோடொன்று முரண்பட்ட படியே ; மயாமயக்கு-பெரிதும் மயக்கஞ் செய்வனவேயாம் என்றுள் என்க.

(வி - ம்.) சாதி - பிறப்பு. ஆதி - பிரமன். நால்வர் - அரசர் அந் தணர் வணிகர் சூத்திரர் என்போர். சூதித்தல் - பிறத்தல். சூத்திரப் பிறவியரை வேள்வி செய்தல் முதலியவற்றிற்குரியவராகக் கொள்ளார் என்றவாறு. வாதித்த - முரண்பட்ட. மயாமயக்கு-மிகவும் மயக்கம்.

ஒரு பிறப்பின்கண் புண்ணியஞ் செய்தாற் பிறிதொரு பிறப்பின் கண் பலிக்குமென்று வேள்வி முதலியவற்றையும் தவத்தையும் விதிப்ப; அவை பயவாது கெடுமென்றும் சொல்லுப. எல்லாரு மிப்போது பிறக்குமாறு போலப் பிறப்பது பிழையென்று, பிரம்மனுடைய முகம் முதலிய உறுப்புக்களிற் பார்ப்பனர் முதலாகிய நான்கு வகுப்பினரும் பிறந்தனர் என்று சொல்லுவர். அவ்வாறு சொல்லியும், பிரம்மனது உறுப்பிற் பிறந்த சூத்திரர் தானமுந் தவமும் வேள்வியும் செய்தற்குத் தகுதியுடையோரென்று கொள்ளாது இழிந்தோர் என்றே கொள்ப ; இவை யெல்லாம் முன்னுக்குப்பின் முரண் என்று தெளிந்தார்க்குப் பெரிதும் மயக்கமாம் என்றவாறு.

இனி, வேள்வி முதலிய அறத்தின் பயன் கெடும் என்று சொல்லுத லாவது, ஒருவன் தவத்தாலும் தானத்தாலும் வேள்வி முதலியவற் றாலும், அறவோனாய் இந்திரப் பதம் முதலாயின பெற்றால், அது நுகர் வதற்கு முன்பே பிறனொருவன் அவ்வாறு செய்தபொழுது அவ்வறப் பயன் கெடும் என்னுங் கருத்தினால், இந்திரன் முதலியோர் வேள்வி முதலியன செய்வாரை இடையூறு செய்வாரென்று வேதத்தாலறிந்த தொன்று.

சூதித்த தோற்றமும் பிழைப்பென ஆதிக்கணுன் வழி என்று கூட்டுக. சூத்திரப் பிறவி வேள்வி முதலியன செய்தற்குத் தகுதியின்று என்றல் குற்றமன்று எனின், குற்றமேயாம் ; என்னை ? பிரமனுடைய உறுப்பிற் பிறந்த சூத்திரரை வேள்வி செய்தற்குரியரல்லர் எனின், இவ்வாறு பிறந்த பார்ப்பனரும் உரியரல்லர் என்பது பெறப்படும். இனி, பார்ப்பனர் முதலாயினோர், உயர்ந்த உறுப்பிற் பிறத்தலின் உரியர், சூத்திரர் தாழ்ந்தவுறுப்பிற் பிறத்தலின் உரியரல்லராயினர் எனின், திருமாலினது காலிற் பிறந்த கங்கை நீர் தீர்த்த மாகின்றது ; அவனது தலையிற் பிறந்தும் வியர்வை நீர் அவ்வாறாகின்றதில்லை. அவனது உந்தியிற் பிறந்தும் பிரமன் கடவுளாயினன். அவனது செவி யிற் பிறந்தும் மதுகைடவர் அவ்வாறாகின்றிலர். ஆதலால் உறுப்புக் களின் உயர்வு தாழ்வினால் உறுப்புக்களிற் பிறந்தார்க்கு உயர்வு தாழ்வு கோடலரிதென்பதாம்.

ஆதலால் இந்த நால் வேறு வகுப்பினரும் பிரம்மனது உறுப்புக்களிற் பிறந்தாரென்றல் பொய்யேயாம். பிறக்கில் நான்கு வகுப்பும் ஒத்தல் பெறவேண்டுமாதலின் பிரமனுடைய உறுப்பிற் பிறந்தாராகக் கூறி வைத்துப் பின்னர் உயர்வு தாழ்வு சொல்லுதல் மலைவாம் என்பது. (௧௧)

வேதங்களால் உண்டாகும் பயன்

௮௩௫. மறுதலை தத்தமு ளாக்கி
மயக்கமுஞ் செய்தமையாற்
பெறுதலை யென்னைகொ றத்துவந்
தனையன்று பேறமுண்டே
யுறுதியுஞ் சால்பு முடையன
யாவையு முண்மையினற்
செறுதலை யேவில்ல சீர்த்தன்
செய்விக்குஞ் சிட்டிதுவே.

(இ - ள்.) மறுதலை தத்தம் உள் ஆக்கி மயக்கமும் செய்தமையால் - ஐய! இவ்வாறு வேதங்கள் தாங் கூறுவனவற்றுள்ளேயே மிகவும் முரண்பாடும் மயக்கமும் செய்வனவாதலாலே; தத்துவந்தனை பெறுதல் ஐ என்னை? - அவற்றின் வாயிலாய் மெய்ப்பொருளையுணருமாறெங்ஙனம்?; அன்று - அவை மெய்ந்நூலுமாகா; பேறும் உண்டு - ஆயினும் வேதத்தால் நும்மனோர் பெறுகின்ற ஊதியங்களும் உண்டு; உறுதியும் சால்பும் உடையன யாவையும் - நும்மனோர்க்கு இம்மையின்கண் உறுதி பயப்பனவும் நிறைவு தருவனவும் ஆகிய அவ்வூதியங்கள் எல்லாம்; உண்மையின் செறுதலை இல்ல இருத்தலாலே நும்மாற் கடியப் படுவனவுமல்ல; இது சீர்த்தன செய்விக்கும் சிட்டி - இது நுமக்கு உலகினர் சிறந்தனவற்றையெல்லாம் செய்வித்தற்குக் காரணமானதொரு படைப்புப் பொருளை காண்! என்றாள் என்க.

(வி - ம்.) பெறுதலை - என்புழி, ஐகாரம் அசை. தத்துவம் - மெய்ப் பொருள். பேறும் உண்டென்புழி உம்மை இழிவு சிறப்பு. சிட்டி - சிருட்டி. அஃது ஈற்றுயிர் கெட்டது.

ஐய! நின் வேதம் இவ்வாறு முரணும் மயக்கந்தருவது மாகலின் இதனால், நீயிர் மெய்யுணர்வுபெறுமாறு எங்ஙனம்? நீயிர் மெய்யுணர்வு பெறுதலில்லை எனினும் இவ்வேதத்தால் நீயிர்பெறும்பேறுகளும்பற்பல உள. அவைதாம் யாவை யெனின், பொன் தானம், நிலத் தானம், ஆன்றானம், எருமைத் தானம், குதிரைத் தானம், யானைத் தானம், மனை வித் தானம், கன்னித் தானம் என்றிவை முதலாகிய தானங்கள் நீயிர் பெறுதற்குக் காரணம் இந்த வேதமேயன்றோ? இத்தானத்தால் நீயிர் பெறும் பொருள் நுமக்குறுதியுஞ் சால்புந் தருவன வல்லவோ? இத்தகைய நலம் பலவுண்மையால் நும்மால் அந்நூல் கடியப் படுவது

யில்லை. இது நம் முன்னோரால் நுமக்கு உலகத்தோரால் சிறப்புச் செய்வித்தற் பொருட்டுப் படைத்துக் கொண்ட நூலே; தான்றோன்றி யன்று என்றவாறு. (௧௨)

வேதங்களால் வேதியர்க்கு வருவன தீவினைகளே எனல்

௮௧௬. வசுக்களோ டுருத்திரர் பிதிரரோ
டிவர்முத லாப்பலர்க்கும்
பசுக்களோ டெருமைகள் குதிரைகள்
புலியோடு நாய்முதலா
விசுக்கழிந் தனபல கோலைகளு
மிரங்கலிர் கோன்றவரை
யசிப்பவர் போன்றனி ராயினு
மருவினை யாநுமக்கே.

(இ - ள்.) இரங்கலிர் - ஐய ! நீவிர் உயிரினங்களின் பால் அருள் சிறிதும் இல்லாதவராய் ; பசுக்களோடு எருமைகள் குதிரைகள் புலியொடு நாய் முதலா பல - ஆக்களும் குதிரைகளும் புலியும் நாயும் என்னும் இன்னோரன்ன பல வுயிரினங்களையும் ; இசு கழிந்தன கொலை கொன்று - நடு நிலைமையில்லாதனவாகிய கொலைத் தொழில்களாலே கொன்று ; வசுக்கள் உருத்திரர் பிதிரரொடு இவர் முதலாப் பலர்க்கும் - வசுக்களும் உருத்திரரும் பிதிரரும் ஆகிய இத் தேவர் முதலிய பல தேவருக்கும் என்று கூறிக்கொண்டு ; அவரை அசிப்பவர் போன்றனிர் - நீயிரே தின்பீராகவும் அந்தத் தேவர்களை ஊட்டுவீர் போலவும் நடிக்கின்றீர் ; ஆயினும் நுமக்கே அருவினை ஆம் - அத்தொழில் நுமக்கே தீர்வரிய தீவினையாம், அத் தேவர்க்காகா என்றாள் என்க.

(வி - ம்.) ஐய வேதியரே ! வசு முதலிய தேவர்கட்கு உண்டி படைக்கின்றேம் என்று சொல்லிக் கொண்டு ஆ முதலிய வுயிரினங்களை யெல்லாம் இரக்கஞ் சிறிதுமின்றிக் கொன்று அத் தேவரை ஊட்டுவீர் போல உண்கின்றீர்; அத் தீவினை நுமக்கேயாம் அத் தேவர்க்காகா என்றவாறு.

ருசு - இசு என நின்றது. நடுவுநிலைமை என்னும் பொருட்டு. தன்னூன் பெருக்கற்குத் தான் பிறிதின் ஊன் தின்றல் நடுவற்ற செயல் என்பதாம். அசிப்பிப்பவர் எனல் வேண்டிய பிறவினை அசிப்பவர் எனத் தன்வினைபோனின்றது.

இனி, வேடர் முதலியோர் படைக்கலன்களால் கொல்லுமாறு போலக் கொல்லாமல் வாயும் மூக்கும் புதைத்துக் கழுத்துத் திருகிப் பெரிதும் துன்புறுத்திக் கொல்லுதலின் கொலையினும் நீயிர் செய்யும் கொலை பெரிது என்பாள் இசுக் கழிந்தன கொலை என்றாள் எனினுமாம். (௧௩)

இதுவுமது

அ௬எ. தேவரும் பிதிரும் நுதலிய கொலைகளிற் றீவினை தா
மேவர வல்லன வேண்டுவல் யானென வேண்டுதியேல்
யாவரையு நுதலியு மவரவர் செய்தன வவரவர்க்கே
யாவரி னடையுமவ் வருவினை நமக்கறி வரியதென்றாள்.

(இ - ள்.) தேவரும் பிதிரும் நுதலிய கொலைகளில் - ஐய! நீ யாங்கள் தேவர்களையும் பிதிராகளையும் மகிழ்விக்கக் கருதி வேள்வியின்கட் செய்யும் கொலைத்தொழிலால் எமக்கு அறமே வருவதன்றி; தீவினை தாம் மேவர அல்லன - தீவினைகள் வருவன வல்ல என்று; யான் வேண்டுவல் என வேண்டுதியேல் - நான் விரும்புவேன் என்று நீ கூறுவாயாயின்; யாவரையும் நுதலியும் - எத்தகையோரையும் குறித்தும்; வரின் அவரவர் செய்தன அவரவர்க்கேயாய் அடையும் - கொலை செய்தார்க்குத் தீவினை வருவதாயின் அவரவர் செய்த கொலைத் தீவினை அவரவரையே சார்வனவாம்; அருவினை நமக்கு அறிவு அரியது என்றாள் - தீர் வரிய அவ்வினையினியல்பு, கொலைவினைஞராகிய நும்மனோர் அறிதற்கரியதேயாம் என்றாள் என்க.

(வி - ம்.) தேவர்களையும் பிதிரர்களையும் குறித்துக் கொன்ற கொலை தீவினை யில்லையென்று கொள்வேமெனின், கொன்றார்க்குத் தீவினை வருவதாயின், யாவரைக் குறித்துக் கொல்லினும் தீவினையே யாம்; அது கொலைவினையராகிய நுமக்குத் தெரியாது. குறிக்கப் பட்டார்க்குத் தீவினையாவது அவர்க் குடம்பாடுளதாயினன்றே; அஃதில் வழிக் கொன்றார்க்கே தீவினையாமென்பது போந்தது.

"கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து" (குறள். ௩௨௯)

என்பது பற்றி, 'அது கொலைவினையராகிய நுமக்குத் தெரியாது' என்றாள். (௧௪)

இதுவுமது

அ௬அ. ஊட்டுதும் யாமென் றமர்களை
நுதலியோர் சாலைவைத் தால்
வீட்டினங் கிடலின்றி வினைநிலை
நமக்கறி வரியதுபோல்
கூட்டிமற் றவர்களை நுதலிய
கொலைவினை தங்களையுங்
காட்டுகில் லாரவர் தாமவை
யறிவதோர் கணக்கிலரே.

(இ - ள்.) நுமர்களை யாம ஊட்டுதும் என்று நுதலி - ஐய! பார்ப்பனராகிய நுங்களை உணவூட்டுவேம என்று ஒருவன் கருதி; ஓர் சாலை வைத்தால் - ஓர் அறக்கோட்டம் வைத்து ஊட்டியவழி; அங்கு - அந்த அறக்கோட்டத்தின்கண்; வீட்டின் இடல் இன்றி - நீயிர் வழங்கும் உணவினை நும் வயிற்றின்கண் இடுதலன்றி; நுமக்கு வினைநிலை அறிவு அரியது போல் - அவ்வறக் கோட்டம் வைத்தவன் நல்வினை எய்தும் நிலையினை உண்ட நீயிர் அறிதற்கும் அரிதாயவாறுபோல; அவர்களை நுதலிய கொலை வினைதங்களையும் - நும்மனோர் அத்தேவர்களைக் குறித்துச் செய்யும் கொலையாகிய தீவினைகளையும்; கூட்டிக் காட்டுகிலார் - அத் தேவரை யழைத்துக் காட்டுவது மிலர்; அவைதாம் அவர் அறிவது ஓர் கணக்கிலர் - ஆதலால் அத்தேவர் அத் தீவினைகளை அறியுமொரு பெற்றிதானும் இலர், எனவே அத் தீவினை முழுதும் நுமக்கே மாம்; அத் தேவர்க்காகா என்றுள் என்க.

(வி - ம்.) எனவே அத் திவினை முழுதும் நுமக்கேயாம். அத் தேவர்க்காகா என்பது குறிப்பெச்சம்.

ஐய! பார்ப்பனராகிய உங்களைக் குறித்து ஒருவன் அறக்கோட்டம் வைத்துழி நீயிருண்ணுமதன்றி அவன் அறம் பெறுமாறு நும்மனோர் அறிதற்குமரிதாயவாறு போல நீயிர் தேவர்களை நுதலிக் கொன்றனிராயின், அக் கொலைவினை நுமக்கேயாம், அத்தேவர்க்காகா.

இனி, நீயிர் அறக்கோட்டத் துண்ணலால் அறக்கோட்டம் வைத்தமையேனுமறிவீர். தேவர் நீயிர் கொன்றிட்ட ஊன் உண்ணுமை கிடக்க அவர் தம்மை நுதலிக் கொன்றமை அறியும் பெற்றியும் இலர். ஆதலால் அத் தீவினை முழுதும் நுமக்கேயாம் என்றவாறுமாம்.

வீட்டிவிடல் என்றது - அகத்திடல்; அஃதாவது வயிற்றினிடல்.

(௧௭)

இதுவுமது

௮௩௬. சிறந்தவர் தங்களுக் கெய்துக
சென்றென்னுஞ் சிந்தையரா
யறம்பல செய்தவர்க் கல்லதங்
கவர்களுக் காகுமென்றற்
றுறந்தவர் வீடுபெற் றார்களை
நுதலிய தொடர்வினையும்
பிறங்கியிப் பிறவியிற் போக்குமற்
றிவையென்ன பேதைமையே.

(இ - ள்.) சிறந்தவர் தங்களுக்கு சென்று எய்துக என்னும் சிந்தையராய் - ஐய! உலகத்தின்கண் அறவோர் தேவர்கள்பாற்

சென்று பொருந்துக என்னும் கருத்துடையவராய்; அறம் பல செய் தவர்க்கு அன்றி - அறங்கள் பலவும் செய்தவழிச் செய்யும் அவ் வறவோர்க்கே அவ்வறப் பயன் வருவதல்லது; அங்கு அவர் களுக்கு ஆகும் என்றால் - அவ்வானுலகத்தே வாழுகின்ற அத்தத் தேவர்கள்பாற் சென்று சேரும் என்பாயாயின்; துறந்தவர் வீடு பெற்றோர்களை நுதலிய தொடர்வினையும் - உலகத்தார் பற்றறத் துறந்து விட்டொழிய சான்றோரைக் குறித்துச் செய்கின்ற அறத் தொடர்புடைய வினைகள் தாமும்; பிறங்கி - வீடு பெற்றவர்பாற் சென்று எய்தி விளக்கமுற்று; பிறவியிற் போக்கும் - அவரை மீண்டும் பிறப்பிலே செலுத்துவனவாகும்; இவை என்ன பேதைமை - இவ்வாறு கூறுவன வெல்லாம் எத்தகைய பேதைமையோ? யாமறியேம் என்றாள் என்க.

(வி - ம்.) சிறப்புடைய தேவரைக் குறித்துச் செய்யும் அறப்பயன் தேவர்க்காமெனின், வீடு பெற்றோரைக் குறித்துச் செய்யும் அறப்பயன் அவருக்காகி அவரை மீண்டும் பிறவியிற் செலுத்துதல் வேண்டு மன்றோ? இங்ஙனம் கருதுவதெல்லாம் அறியாமையே என்றவாறு. (கக)

இதுவுமது

அசுO. நண்பரை நுதலியும் பகைவரை
நுதலியு மமிர்தோடுநஞ்
சுண்பவர்க் கல்லதற் கவர்களுக்
காமென வுரைக்குநர்யார்
பண்பிலி தேவரை நுதலிய
கொலையினிற் பல்வினைதா
னுண்பல வகையினி னடைந்தவை
வினையுங்க ணுமக்குமென்றாள்.

(இ - ள்.) பண்பு இலி-நற்குணம் சிறிதுமில்லாத வேதவாதியே கேள்!; நண்பரை நுதலியும் பகைவரை நுதலியும் அமிர்தொடு நஞ்சு உண்பார்க்கு அல்லது - ஐய! சிலர் தம் நண்பர் நீடு வாழ்தல் கருதியும் வேறுசிலர் தம் பகைவர் இறந்தொழிதல் கருதியும் திரவே அமிழ்தத்தையும் நஞ்சினையும் உண்டனராக அவற்றின் பயனாகிய வாழ்வும் சாவும் திரவே அவரவர்க்கே வருவதல்லது; அங்கு அவர்களுக்கு ஆம் என உரைக்குநர் யார் - அவ்விடத்தே அந் நண்பருக்கும் பகைவருக்கும் எய்தும் என்று கூறுவார் யாரேயுளர்; தேவரை நுதலிய பல் கொலையினில் வினைதான் - நீவிர் தேவரைக் குறித்துச் செய்யும் பல்வேறு கொலையினாலும் உண்டாகும் தீவினைகள் எல்லாம்; பல வகைகளின் அடைந்தவை - பல்வேறு வகைகளானும் சேர்ந்தவை; நுமக்கு உண் வினையுங்கள் - நுமக்கே நுகர்ச்சியாக வந்துசேரும்; என்றாள் என்க.

(வி-ம்.) குணமிலியாகிய வேதியனே கேள்! ஒருவன் தன் நண்பன் இனிது வாழ்தல் வேண்டி அமிழ்துண்டான்; ஒருவன் தன் பகைவன் சாதல்வேண்டி நஞ்சுண்டான்; அவ்வழி அவராற் குறிக்கப்பட்ட நண்பனுக்கும் பகைவனுக்கும் அன்றி அமிழ்தும் நஞ்சும் உண்டவர்க்கே தத்தம் பயனைச் செய்தவாறுபோல; தேவர்கள் இன்புறவேண்டி அவரைக் குறித்து நீயிர் கொன்று ஊன் தின்றீரே யெனினும் கொலைத் தீவினைப் பயன் நுமக்கேயாம் என்றவாறு. (கஎ)

இதுவுமது

அசஅ. கொன்றவர்க் கல்லது நுதலப்பட்

டார்களைக் கூடலவேற்

றின்றவர்க் கியாவையுந் தீவினை

சேரல தேவர்க்குப்போ

லென்றுரைப் பாய்க்கெய்து மேழைமை

யுண்குவ வேலிமையார்க்

கொன்றுவி யேனல னேவினை

யூன்றின்பவர்க் கொப்பவென்றாள்.

(இ - ள்.) கொன்றவர்க்கு அல்லது-உயிரினங்களைக் கொன்றவர்க்குத் தீவினை சேர்வதல்லது ; நுதலப்பட்டார்களைக் கூடல வேல் - குறிக்கப்பட்ட தேவர்களை அத் தீவினை சேராதாயின் ; தீவினை யாவையும் தின்றவர்க்குச் சேரல - தின்பாரைக் குறித்துக் கொன்றவர்க்குத் தீவினை சேர்வதல்லது அத் தீவினைகளெல்லாம் விலைக்குக் கொண்டு தின்பார்க்குச் சேரமாட்டா ; தேவர்க்குப் போல என்றுரைப்பாய்க்கு - அத் தேவர்களைத் தீவினை சேராமை போல என்று கூறுகின்ற நினக்கு ; ஏழைமை எய்தும் - அறியாமையே வந்தெய்துவதாம் ; உண்குவவேல் - என்னை ? அத் தேவர் தாமும் தம்மைக் குறித்துக் கொன்றிட்ட ஊனை உண்பாராயின் ; ஊன் றின்பவர்க்கு ஒப்ப - ஊனை றின்பவர்க்குக் கூறியவாறே ; ஒன்றுவியேன் அலன் - தீவினை உளதாம் என்று கூட்டுவிப்பதல்லது கூட்டுவியாதேன் ஆகேன் காண் ; என்றாள் - என்று கூறினள் என்க.

(வி - ம்.) ஒன்றுவியேன் அலன் - கூட்டேன் அலன்; கூட்டுவேன் என்றவாறு. ஏழைமை - அறிவின்மை.

தேவர்களைக் குறித்துக் கொன்றார்க்கல்லது தேவர்களுக்குத் தீவினையில்லை எனின், தின்பாரைக் குறித்துக் கொன்றார்க்குத் தீவினையாவதல்லது தின்பார்க்குத் தீவினையில்லை எனக் கோடல் வேண்டுமெனின், அது நின்பேதைமையாற் சொல்லினை. தின்பாரைப் போலத் தேவர்கள் நீர் கொன்றிட்ட ஊனைத்தின்றாரெனின் கொலைத் தீவினை அவர்க்குமுளதாமென்றே சொல்லுவேன்; அவர் தின்னாமையின் தீவினையும் அவர்க்கில்லை என்றேன் என்றாள் என்றவாறு. (கஅ)

கொல்லாமை மேற்கொண்டும் வேள்வி செய்தல் கூடும் எனல்

௮௪௨. ஈகளு நாய்களுங் கொன்றவ
ரீவகண் டின்புறலிற்
றீயவை யேசெய்யுந் தேவரத்
தீவினை தீர்க்கிற்பவோ
நோய்களும் பேய்களு மொழிக்குவ
மெனினவை நுங்களுக்கு
மாய்விடி னுணரினஃ தாம்வினை
யகற்றுதற் கரியதென்றாள்.

(இ - ள்.) அவர் ஈகளும் நாய்களும் கொன்று ஈவ கண்டு இன்பு உறலின் - ஐய ! நும்மாற் போற்றப்படுகின்ற அத்தேவர் தாமும் நீவிர் ஈக்களையும் நாய்களையும் இன்னோரன்ன பிறவுயிரினங் களையும் கொன்று அவற்றின் ஊனைத் தமக்கு வழங்குதல் கண்டு பெரிதும் இன்புறுவர் ஆயின் ; தீயவையே செய்யுந் தேவர் - அவருந் தீவினையாளரேயாவர் என்பது தேற்றமாம், ஆகவே தீவினைகளையே செய்கின்ற அந்தத் தேவர்தாம் ; தீவினை தீர்க்கிற் பவோ - அவர் பொருட்டு நீயிர் செய்த கொலையையுள்ளிட்ட நும் தீவினைகளையெல்லாம் தீர்க்க வல்லுநராவரோ ? ஆகார் காண் ; நோய்களும் பேய்களும் ஒழிக்குவம் எனின் - இனி அவர் தீவினை தீராராயினும் அவரை வழிபட்டு எம்மைப் பற்றிய பிணி களையும் பேய்களையும் அகற்றிக் கொள்வேமெனின் ; நுங்களுக்கும் ஆய்விடின் - வேதம் ஓதிச் சிறந்தோராகிய நுமக்கும் அப் பிணி முதலியன வருமெனின்; அஃது ஆம் வினை - அஃது ஊழ்வினைப் பயனும் ; அகற்றுதற்கு அரியது என்றாள் - அவ்வூழ்வினை தானும் எவ்வாற்றானும் போக்குதல் அரிது என்று கூறினாள் ; என்க.

(வி - ம்.) ஈயும் நாயும் முதலாகிய உயிரினங்களைக் கொன்று நீங்கள் கொடுப்ப அது கொண்டின்புற்றும் அல்லாக்கால் இன்புறு மையும் உடைய அந்தத்தேவர்கள் நுங்கட்குக் கொலை முதலியவற்றால் வந்த தீவினையை எங்ஙனம் போக்க வல்லுநராவர்? இனி அவரை வழிபட்டு எம்முடைய நோயையும் பற்றியுள்ள பேயையும் தீர்த்துக் கொள்வேமெனினும், வேள்வி முதலியன செய்யும் நுங்கட்கும் அவை யுளவாயின் அவை பழைய வினைப்பயன்களேயாதல் வேண்டும். அவற்றைத் தீர்த்தல் யாவர்க்கும் அரிதேயாம் என்றவாறு.

இனி, யாங்கள் வேள்வி செய்து அவி சொரிந்துழி அத்தேவர்களுக்கு இன்பமும் அல்லாதவழித் துன்பமும் ஆகின்றதன்று; அத்தேவர் தம்மை நோக்கி வேள்வி செய்தார்க்கு அருள் செய்வர் எனின், மலரே சருவே சாந்தே யென்றிவற்றால் தம்மை வழிபடினும் மகிழ்ந்தருள் புரிவர். உயிர் களைக் கோறல் வேண்டாவாம். அஃதன்றி உயிர் கொன்று ஊன் கொடுப் பினல்லது மகிழாரெனின், நாம் அவ்வாறு கொடுத்தபோது மகிழ்ச்சியும்

கொடாதபோது மகிழாமையு முடையராவராதலின் நம்மாலே தங்குறை தீர்வார் நங்குறை தீர்க்கவல்லுநர் ஆகாரென்பது. (சகூ)

இதுவுமது

அசகூ. நம்முறு துன்பங்க ளொழிக்
கல்லலம் பிறருறுப
வெம்முறை யாயினும் போக்குதற்
கரியவிங் கிவர்களைப்போற்
றம்முறு துன்பமுந் தாமொழிக்
கில்லலர் பிறர்களையே
லெம்முறை நோய்களுஞ் செய்குப
வவரென விகழ்ந்தனளே.

(இ - ள்.) நம் உறு துன்பங்கள் ஒழிக்கல் அலம் நாம் - நமக்கு வருகின்ற துன்பங்களை நாமே தீர்த்துக் கொள்ள வல்லேமல்லேம் மாந்தராகிய நாம்; பிறர் உறுப எம்முறையாயினும் போக்குதற்கு அரிய - எனவே நாம் நம்மிற் பிற மாந்தர் எய்துந் துன்பங்களும் நாம் தீர்த்தல் அரியவேயாம்; இங்கு இவர்களைப்போல் - இவ் வுலகத்துள்ள நம்மனோராகிய இந்த மாந்தரைப்போலவே; தம்உறு துன்பமும் தாம் ஒழிக்கில்லலர் - அத்தேவரும் தமக்கு வருந் துன்பங்களைத் தாமே தீர்த்துக் கொள்ளவல்லரல்லர்; அவர் பிறர்களை நோய்களும் எம்முறை செய்குப என இகழ்ந்தனள் - அத்தகைய தேவர் பிறராகிய நம்மனோர் எய்தும் நோய்களை எவ்வாற்றாற் றீர்த்தல் செய்வர் காண்! என்று கூறி இகழ்ந்தனள் நீலகேசி என்க.

(வி - ம்.) நமக்கு வந்த துயரம் பிறரை வழிபட்டுத் தீர்க்கின்ற நாம் பிறர்க்கு வந்த துயரம் தீர்க்கமாட்டாதவாறுபோல; நம்மால் தங்குறை தீர்த்துக் கொள்கின்ற தேவர்கள் நமக்குக் குறை தீர்க்கின்ற வாறு எங்ஙனம்? என இகழ்ந்தாள் என்றவாறு. (உ0)

ஊன் உவக்கும் தேவர் பெருமையுடையோராகார் எனல்

அசச. நாங்கொன்று கொடுக்குமவ் விலங்கினை
நலிவதோர் பசியினரேற்
றாங்கொன்று தின்குவ ராய்விடி
னவர்களைத் தவிர்க்குநர்யார்
தீங்கொன்று முரையன்மின் தேவர்தம்
முணினைச் சேணின்றுதாம்
வாங்குத லல்லது முடையொடு
சோறுண்ணும் வயிற்றினரே.

(இ - ள்.) தேவர் - ஐய ! அத் தேவர்கள் தாம் ; கலிவது பசியினரேல் - தம்மை வருத்துவதொரு பசிப்பிணியுடையராயின் ; நாம் கொன்று கொடுக்கும் அவ் விலங்கினை - அவர் பொருட்டு நாம் கொன்று ஊன் கொடுக்கின்ற அந்த விலங்குகளை ; தாங் கொன்று தின்குவராய்விடின் - தாமே கொன்று தின்பாராய விடத்து ; அவர்களைத் தவிர்க்குநர் யார் - அவர்களை அவ்வாறு செய்யாமல் தடுக்கவல்லார் யாரேயுளர் ; தம் ஊணினை - அத் தேவர் தாம் தமக்கு வேண்டிய ஊணை ; சேண் நின்று தாம் வாங்குத லல்லது - தூரத்தே நின்று ஏற்றுண்ணும் எளிமையுடையர் என்பதன்றியும் ; முடையொடு சோறு உண்ணும் வயிற்றினரே - இழிந்த ஊனோடு சோறுண்ணுகின்ற வயிற்றையும் உடைய கடவரேயோ ?; ஒன்றுந் தீங்கு உரையன்மின் - சான்றோராகிய அத்தேவர்களை இவ்வாறு யாதொரு தீங்கும் கூறாதே கொண் மின் ! என்றாள் என்க.

(வி - ம்.) தேவர்கள், நாங் கொன்றிட்ட ஊனை உண்பதொரு பசியுடையராயிற்றாமே ஆடு முதலிய விலங்குகள் உள்வழிச் சென்று தாமே கொன்று தின்புழித் தவிர்ப்பாருளரோ? இஃதென் சொல்லினை? நீ கொடுக்கின்ற ஊணினையும் சேய்மையினின்றே கைக்கொள்கின்ற எளிமையுடையரோ? அன்றியும் அவர் நின்னையிரந்து இறைச்சியுஞ் சோறும் தின்னும் வயிற்றினரோ? அல்லர்காண்! என்றவாறு.

இனி, நாங்கள் கொடுக்கின்ற ஊனைப் பசியாற் றின்கின்றாரல்லர்; அவரைக் குறித்து யாங்கள் உயிர்ப்பலியிட்டு வேள்வி செய்துழி எமக்கு நன்மைகள் உளவாமென்று சொல்லின், பகை பசி பிணி அச்சம் ஆர்வம் செற்றங்களுடைய இவர்களைக் குறித்துச் செய்ய நுமக்கு நன்மையுளதா மாயின், இவ்வாறாகிய நாய் முதலாயினவற்றை நோக்கி அவையுவக்கும் மலம் முதலாயின இட்டாலும் நுமக்கு நன்மையுளதாகல் வேண்டும்.

இனி, ஆட்டுவாணிகரும் தாம் ஆடறுக்கும்போது தம் தெய்வத்தை நினைப்பராதலின், அவர்க்கும் நன்மையுளதாகல் வேண்டும். அன்றியும் நாம் கொடுத்த ஊன் அவருண்ணாராகவும் நன்மை நமக்கு பயக்குமா யின் பூவே சாந்தே என்றிவை முதலியவற்றால் வேள்வி செய்தவழியும் நமக்கு நன்மை பயக்கும்; இழிந்த பொருளாகிய ஊனால் வேள்வி செய் துழி நன்மை பயக்கின், தூயனவாகிய மலர் முதலியவற்றால் வேட்புழி நன்மை பயக்குமென்பது தேற்றமாதலின் மலர் முதலியனவே வேள்விக் குரிய பொருள்களாம். இஃதன்றி ஊன் வேள்விப் பொருளாவதாயின், அவர் ஊன் உண்பவராவர். ஆகவே, ஆடு முதலாயின வுளவழித் தாமே கொன்று தின்னவமையும் ; அது காணாமையின், அவர் ஊனுண்ணும் வயிறுடையரல்லர் என்பது.

இனி, அத் தேவர்தாமும் அசுரர் முதலாயினாருடன் பகையுடை மையும், அவியுணவுடையோரென்றும் அவியுண வேற்போர் என்றும் அமிழ்தம் கடைந்தனரென்றும் சொல்லுதலின் பசியுடைமையும், அசுவினிதேவர் என்னும் மருத்துவரையுடைமையின் பிணியுடை மையும், பிறர் பண்ணுந் தவத்தை யழித்தலின் அச்சமுடைமையும்

மகளிரொடு வாழ்தலின் ஆர்வமுடைமையும், போர் செய்தலின் செற்ற முடைமையும் முன்பொருவன் பாம்பு வேள்வி பண்ணும் வழி, தக்கிக னென... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... வழிபாடு செய்து உலகமுதலாகிய ஐவகை அத்திகாயங்களின் முதற் சொற்பொருளாகிய உயிரியல்பினையும், அறமறங்களால் இன்ப துன்பம் வருமாறும், உயிர் கட்கு அருளுடையராதல் வேண்டுமாறுஞ் சொல்லி, ஒழிந்த புற்கல வத்திகாயங்களையும் பிறவற்றையும் தொகை வகையாற் சொல்லி, வேத வாதத்து இன்றிவ்வாறு தீவினை செய்தாரும் அதனை விட்டு நன்னெறியி லொழுகின் வீடு பெறுவரென்பதும் சொன்னாள் என்றவாறு. (௨௧)

குறிப்பு:—இச் செய்யுளின் பழைய வுரையில் ஈண்டுப் புள்ளியிட்டுக் காட்டிய பகுதியும், ௨௧ ஆஞ் செய்யுளிலிருந்து ௨௮ ஆஞ் செய்யுள் முடியவுள்ள எட்டுச் செய்யுளும் அவற்றின் உரைகளும் சுவடியில் இல்லை.

பூதிகன் மாணக்கர் அவனை வினவுதலும் அவன் விடையும்

௮௩௨. பொய்த்துரை யாநன்மை போதுவ
தேலில்லை பூதிகனே
சத்திய மேயுரை நீயெனத்
தானுமஃ தேயுரைத்தா
னெத்திசை யார்களு மேத்துதற்
கேற்றன னிவனுமென்றார்
தத்துவ ரேநின்று தத்துவ
ரெனப்படுந் தன்மையினார்.

(இ - ள்.) பூதிகனே பொய்த்து உரையாம் - நீலகேசியின் மொழிகளைக் கேட்ட பின்னர் பூதிகனுடைய மாணவர் அவனை நோக்கிப் பூதிகனென்னும் புகழ்மிக்க ஆசிரியப் பெருந்தகையீர் ; நாம் மேற்கொண்டுள்ள வேத மொழிகளெல்லாம் பொய்யுரைகளே என்பது எம் கருத்து ; நன்மை போதுவதேல் இல்லை - இந்த வேதத்தால் நமக்கு நன்மையுண்டாகுமோ எனின் இல்லை என்பதே எமது முடிவாம் ; நீ சத்தியமே உரை என - இனி நீயிர் நுங் கருத்தை வாய்மையாகவே எமக்குக் கூறவேண்டுதும் என்று கூற ; தானும் அஃதே உரைத்தான் - அதுகேட்ட பூதிகனும் அவர் கருத்தையே வாய்மையென்று கூறி உடன்பட்டனன் ; எத்திசையார்களும் - அவ்வவையின்கண் நான்கு திசையினும் கூடி யிருந்தவர்களும், தத்துவரே நின்று தத்துவர் எனப்படும் தன்மை யினார்-சிறந்த மெய்க் காட்சியாளர்களே எதிர்நின்று இவர் சிறந்த மெய்க்காட்சியாளர் என்று புகழத் தகுந்தவருமாகிய சான்றோரனை வரும் ; இவனும் ஏத்துதற்கு ஏற்றனன் என்றார் - தன் தோல்

வினை இவ்வவையிலேயே ஒப்புக்கொண்ட இத்தப் பூதிகன்றானும் நம்மனோரால் பாராட்டப்படுதற்குரியவனாயினன் என்று மகிழ்ந்தார் என்க.

(வி - ம்.) நீலகேசியின் மொழிகளைக் கேட்ட பின்னர் வேதவாதியாகிய பூதிகனுடைய மாணவர் பூதிகனை நோக்கி ஐய பொய் மொழிந்த நமது வேதப் பயிற்சியாலே நமக்கு வருவதொரு நன்மையுமில்லை இதனை விடுவதே தகுமாயின் நின் கருத்தைக் கூறுக! என அவனும் அவர் கருத்திற்குடன் பட்டனன். அதுகண்ட சான்றோர் பூதிகனை இவன் பண்பு மிக்கோன் என்று பாராட்டினர் என்றவாறு. (௧௦)

நீலகேசி அந்நகரினின்றும் செல்லுதல்

அ௬௩. நன்பொரு ளாவன விவையென
வவளொடு நகரத்துளளா
ரின்புறும் வகையினி னெடுத்தன
ளுரைத்தபின் விடுக்கலுற்றுட்
கன்புபட் டவர்களு மறநெறி
யறிவித்த வார்வத்தினாற்
பின்புசென் றொழிதுமென் றதுசெய்து
வலங்கொண்டு பெயர்ந்தனரே.

(இ - ள்.) அவளொடு நகரத்துள்ளார் இன்புறும் வகையினில்- பின்னர், நீலகேசி அந்தப் பூதிகனும் அந் நகரத்துள்ள மற்றையோரும் கேட்டுப் பெரிதும் மகிழும்படி ; நன்பொருளாவன இவை என - உறுதிப்பொருளைத் தரும் நன்றாகிய தத்துவங்கள் இன்னின்னவை யென்று ஆருகதர் தத்துவங்களை யெல்லாம் ; எடுத்தனள் உரைத்தபின் - எண் பொருளவாக எடுத்துக் கூறியபின்பு; விடுக்கலுற்றுட்கு- அந்நகரத்தினின்றும் செல்லத் தொடங்கிய அந் நீலகேசியின்பால்; அறநெறி அறிவித்த ஆர்வத்தினால் - அவள் தமக்குச் சிறந்த அறநெறியை யுணர்த்தியதனாலுண்டான ஆர்வங் காரணமாக ; அன்பு பட்டவர்களும் - பெரிதும் அன்புடையாராகிய அந்த அவையோர்தாமும்; பின்பு சென்று ஒழிதும் என்று அது செய்து - இப் பெரியாள் பின்சென்று வழிவிட்டு வருவேம் என்று கருதி அங்ஙனமே வந்து ; வலங்கொண்டு பெயர்ந்தனர் - எல்லோரும் நீலகேசியை வலம் வந்து தொழுது மீண்டனர் என்க.

(வி - ம்.) பின்னர் நீலகேசி அந்நகரத்தினின்றும் போவாளாக; அவையோர் அவளைப் பெரிதும் விரும்பி நெடுந்தொலை பின் தொடர்ந்து வந்து வழிவிட்டு வலஞ்செய்து தொழுது மீண்டனர் என்றவாறு. (௧௧)

வேதவாதச் சருக்கம் முற்றும்

— — —

பத்தாவது

# பூத வாதச் சருக்கம்

இது முதல் மூன்று செய்யுட்கள் குளகமாய் ஒரு தொடர்

௮௫௪. வேத வாதம் வெளிறுசெய் தாளங்கோர்
பூத வாதியும் பொங்கினன் மேற்செல
வாத வாதி யிவனை யடக்கினு
லேத வூதிய மில்லென வெண்ணித்தான்.

(இ - ள்.) வேதவாதம் வெளிறுசெய்தாள்-வேதவாதியோடு வாதிட்டு அஃது அறியாமையுடைத்தென்று காட்டிய நீலகேசி; அங்கு ஓர் பூதவாதியும் - தான் செல்லுமிடத்தே பூதவாதியொருவன்; பொங்கினன் மேல் செல - சினமுடையனாய்ப் பிறசமயக்கணக்கர்பால் போர்க்குச் செல்லுதல் கண்டு; ஆதவாதியிவனை அடக்கினல்-அறிவிலியாகிய இந்தப் பூதவாதியைச் சொற்போரின்கண் வென்று செருக்கடக்கினல்; ஊதியம் ஏதம் இல் என எண்ணி - ஆக்கமாம் குற்றம் வருவதொன்றுமில்லை என்று நினைத்து என்க.

(வி - ம்.) வேதவாதத்தை வென்று போகின்ற நீலகேசி வழியில் செருக்குடையவனாய்ச் செல்லுமொரு பூதவாதியைக் கண்டு அறிவிலாகிய இவன் செருக்கடக்கினல் ஆத்திகருக்கு நன்மையே யுண்டாகும் என்று கருதியவளாய் என்றவாறு.

பூதவாதி-பூதமே முதற்பொருள் என்னும் கொள்கையுடையோன். ஆதவாதி - ஆதனாகியவாதி. ஆதன் - அறிவிலி. (௧)

நீலகேசி பூதவாதியை வினவுதல்

௮௫௫. நில்லப் பாவினி நீகண்ட தத்துவஞ்
சோல்லற் பாலையிங் கென்னலுஞ் சோல்லுவான்
மல்லற் ருனை மதனசித் தன்னெனுங்
கல்லோத் தோங்கிய தோட்களி யானையான்.

(இ - ள்.) நில் அப்பா நீ கண்ட தத்துவம் - அப்பூதவாதியை நோக்கி நில்லென்று நிறுத்தி அப்பனே ! நீ கண்டுள்ள தத்துவப் பொருள் யாவை?; அங்கு இனி சொல்லற்பாலை என்னலும் - இவ்விடத்தே நீ அவையிறைறை எனக்குச் சொல்லக் கடவை என்று கூறுதலும்; சொல்லுவான் - சொல்லுபவனாகிய அந்தப் பூதவாதியாகிய பிசாசகன் (௨) என்பவன்றானும்; மல்லல் தானை மதனசித்தன் எனும் - வளமிக்க படைகளையுடைய மதனசித்தன்

என்னும்; கல் ஒத்து ஓங்கிய தோள் களி யானையான் - மலையைப் போன்றுயர்ந்த தோளையுடையவனும் களிப்புடைய பட்டத்து யானையையுடையவனும் ஆகிய நம்மரசனுடைய என்க.

(வி - ம்.) அரசனுடைய அரசவை (௬) என அடுத்த செய்யுளிற் சென்றியையும்.

நீலகேசி அந்தப் பூதவாதியை நில்லென்று நிறுத்தி அப்பனே நின் தத்துவங்களை எனக்குச் சொல்லுக! என அவனும் மதனசித்தன் என்னும் அரசனுடைய அவைக்கு அவளை அழைத்தேகி என்க. (௫)

## பிசாசகன் கூற்று

௬௬௬. அணிகோ ளாரத் தரசவை கேட்கெனப்
பிணிகொள் மூஞ்சிப் பிசாசகன் சொல்லுவான்
குணிகு ணம்மெனுங் கூற்றில னுலதென்
றுணிவைம் பூதங்க ளேதொழில் சொல்லுவேன்.

(இ - ள்.) ஆரத்து அணி கொள் அரசு அவை கேட்க என - சாந்தம் திமிர்ந்த அழகினையுடைய நம்மரசனுடைய அவையின்கண்ணிருந்த சான்றோரெல்லாம் கேட்கக்கடவீர்! என் றுணர்த்திப் பின்னர்; பிணி கொள் மூஞ்சிப் பிசாசகன் - அறியாமையின் மெய்ப்பாட்டினையுடைய முகத்தையுடைய அந்தப் பிசாசகன் என்பான் நீலகேசியை நோக்கிக் கூறுவான்; குணி குணம் எனும் கூற்று இலன் அது என் துணிவு - குணிப் பொருளென்றும் குணம் என்றும் யான் சொல்லேன் அங்ஙனம் கொள்ளாமையே என் சித்தாந்தமாதலின்; ஐம்பூதங்களே - நிலம் நீர் தீ வளி வெளி என்னும் ஐந்து பூதங்களே மெய்ப் பொருள் என்பது என்றுணிவாம்; தொழில் சொல்லுவேன் - அவற்றின் தொழில்களையும் தத்துவமாகக் கொள்வேன் காண் என்றான் என்க.

(வி - ம்.) பிசாசகன் என்னும் அந்தப் பூதவாதி அரசவையோர் எல்லீரும் கேட்கக் கடவீர் என்று கூறிப் பின்னர் நீலகேசியை நோக்கி நங்காய்! குண குணி என்பன கொள்ளேன், ஐம்பெரும் பூதங்களே பொருள் என்பது என்றுணிவு, அவற்றின் தொழிலும் சொல்லுவேன் என்றான் என்றவாறு. (௬)

## பொறிபுலன்களின் தோற்றம்

௬௬௭. திண்ணென் றீநில நீர்வளி காயத்தாற்
கண்ணு மூக்கொடு நாமெய் செவிகளாய்
வண்ண நாற்றஞ் சுவையினோ டூறொலி
யெண்ணுங் காலை யியைந்துழி யெய்துமே.

(இ - ள்.) திண் என் தீ நிலம் நீர் வளி காயத்தால் - திட்பமாக நிலைபெறுதலையுடைய தீயும் நிலமும் நீரும் காற்றும் வானமும் ஆகிய இந்த ஐம்பெரும் பூதங்களினின்றும் ; கண்ணும் மூக்கொடு நா மெய் செவிகளாய் - நிரலே கண்ணும் மூக்கும் நாவும் மெய்யும் செவியும் ஆகிய இந்தப் பொறிகளைந்தும் ; வண்ணம் நாற்றம் சுவையினொடு ஊறு ஒலி - ஒளியும் நாற்றமும் சுவையும் ஊறும் ஒலியும் ஆகிய இந்தப் புலன்கள் ஐந்தும் ஆய்த்தோன்றி ; எண்ணுங் காலை இயைந்துழி எய்தும் - ஆராயுமிடத்து, இப்பொறிகளும் புலன்களும் பொருந்திய வழிப் பொருந்துவனவாம் என்றான் என்க.

(வி - ம்.) திண்என் தீ.........காயம் என்றது இவை திண்ணியவாய் எப்பொழுதும் நிலையுதலுடையன என்றுணர்த்தற் பொருட்டு.

தீயினின்றும் ஒளியும் கண்ணும், நிலத்தினின்றும் நாற்றமும், மூக்கும், நீரினின்றும் சுவையும் நாவும், காற்றினின்றும் ஊறும் மெய்யும், வெளியினின்றும் ஒலியும் செவியும் உண்டாகும் என்றவாறு. (௪)

அறிவு இன்பம் முதலியவற்றின் தோற்றமும் மறைவும்

௮௫௮. ஐந்துங் கூடிய றிவின்ப மாதியாய்
வந்து தோன்றி மதுமயக் காற்றலி
னந்தி நாளுங் குடஞ்சுடர் நாட்டம்போற்
சிந்தி னலவை சென்றினஞ் சேருமே.

(இ - ள்.) ஐந்தும் கூடி - ஐம்பெரும் பூதங்களும் தம்முட் கூடியவழி ;, மது மயக்கு ஆற்றலின் அறிவு இன்பம் ஆதியாய் வந்து தோன்றி - மாமுதலிய ஐந்து பொருள்களையும் கூட்டிச் சமைத்த கள்ளின்கண் மயக்கும் ஆற்றல்தானே தோன்றியவாறு போல அறிவும் இன்பமு முதலியன தாமே தோன்றி ; நாளும் நந்தி - அவை வளரத் தாமும் நாடொறும் வளர்ந்து ; சிந்தினல் - அந்தப் பூதங்கள் பிரிந்தால் ; குடம் சுடர் நாட்டம் போல் - குடமும் விளக்கும் அழிந்தொழிதல்போல; அவை சென்று இனம் சேரும் - முன்பு கூறிய பொறி முதலியன அழிந்து தத்தம் இனமாகிய பூதங்களிற் சேரும் என்றான் என்க.

(வி-ம்.) மா முதலாகிய ஐந்து பொருள்களையும் கூட்டிச் சமைத்த கள்ளின்கட் களிப்புத் தோன்றுமாறு போலே, நில முதலிய ஐம்பெரும் பூதங்களின் கூட்டத்தின்கண் அறிவு இன்ப முதலியன தோன்றி அவை வளரத் தாமும் வளர்ந்து, அந்தப் பூதங்கள் பிரிந்தால் முன்பு சொன்ன அப்பொறிபுலன்கள் தம் மினமாகிய பூகங்களிற் சேரும். சேரவே அறிவு இன்ப முதலியன குடமும் விளக்கும் இன்ன வழிப் புக்கன வென்றறியாமல் அழிந்தவாறு போல அழியும் என்றவாறு.

நட்டம், நாட்டம் என முதனீண்டது. செய்யுள் விகாரம். நட்டம் போல் நட்டமாம் என்று ஒரு சொல் வருவித்து முடிக்க. நட்டம் - அழிவு. (௯)

## உயிர் என்பது பொய்யெனல்

அ௬௯. உலகெ லாமவை யேயுயி ருண்டெனச்
சொலவ லாரன சொற்றெளிந் தேநின்று
பலக லாங்களுஞ் செய்வ பயனிலார்
புலவ ராவதன் றேவங்குப் போந்ததே.

(இ - ள்.) உலகு எலாம் அவையே - உலகம் என்பது அந்த ஐம்பெரும்பூதங்களின் கூட்டமேயாம்; சொல வலார் உயிர் உண்டு என - சொல்வன்மையுடையோர் சிலர் உயிர் முதலிய பொருள்களும் உண்டு என்று தங்கள் நலங்கருதிக் கூறக்கேட்டு; அன சொல் தெளிந்து நின்று - அந்த மொழிகளை மெய்யென்று துணிந்து அறிவில்லாதார் பலரும்; பல கலாங்களும் செய்வ - பல்வேறு கலகங்களையும் செய்யாநிற்பர்; பயன் இலார் - அவற்றால் பயன் ஒன்று இல்லாதவராவர்; அங்குப் போந்தது - அவ்விடத்தே அவர்க்கு வருகின்றதொரு பயன் உளதாயின் அது; புலவர் ஆவது - புலவர் என்று பலராலும் புகழப்படுவதொன்றே யாம்; பிறிதில்லை என்றான் என்க.

(வி - ம்.) உலகத்துப் பொருளாவன அந்தப் பூதங்கள் ஐந்துமே சொல்வன்மையுடையோர் சிலர் உயிர் முதலியன உண்டு என்பது கேட்டு அறிவில்லாதார் பலரும் பல கலகங்களையும் விளைப்பர். இவற்றால் பயன் பெறுவது மிலர். ஆயினும் புலவர் என்று சிலர் புகழு மாத்திரையே பயனாவது என்றவாறு. (௬)

## இதுவுமது

அ௭0. சென்ற காலத்துஞ் செல்கின்ற காலத்து
நின்ற காலத்தி லும்மிந் நிகழ்ச்சியே
யென்று மிவ்வுல கித்தன்மைத் தேயிது
வன்ற தென்றுரைப் பாரயர்ப் பார்களே.

(இ - ள்.) சென்ற காலத்தும் செல்கின்ற காலத்தும் நின்ற காலத்திலும் - நங்காய்! இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலத்திலும்; என்றும் இந்நிகழ்ச்சியே - எப்பொழுதும் இந்த நிகழ்ச்சிகளே நிகழ்ந்து வரும்; இவ்வுலகு இத்தன்மைத்தே- இந்தவுலகு இவ்வைம் பெரும் பூதங்களின் கூட்டமாகிய இவ் வியல்பினதேயாம்; இது அன்று என்று உரைப்பார் அயர்ப் பார்களே - இதனை இங்ஙனமன்று என்று கூறுபவர் யாவரேனும் அறிவில்லாதாரே என்றான் என்க.

(வி-ம்.) எக்காலத்தும் இவ்வைந்துமே பொருள், இந்நிகழ்ச்சியே நிகழ்ச்சியாம்; இங்ஙனமன்று என்போர் அறிவிலலாதாரே என்றான் என்றவாறு.

இனி, பூதவாதமும் உலகாயதவாதமும் தம்முட் பெரும்பான்மை ஒத்துச் சிறுபான்மை வேறுபடும். இவ்வுலகாயதவாதம்பற்றி மாதவச் சிவஞான யோகியார் கூறுவதும் ஈண்டறியற்பாலதாம். அது வருமாறு:-

"உலகாயதமாவது—காண்டலளவை ஒன்றே அளவையாம். நிலம் நீர் தீ வளி என நான்கே தத்துவங்கள், இவை நித்தப் பொருள்கள். இவற்றின் கூட்டமேயுடம்பு. பாகலடையும் சுண்ணும்பும் கூடிய வழிச் செவ்வண்ணம் பிறக்குமாறு போல இவற்றின் கூட்டரவின் ஒருணர்வுண்டாம். அவ்வுணர்வு உடம்பு வளர வளரும் தேயத்தேயுமாகலின், உடம்பிற்கு வேறே உயிர் என்பதும் பொய். உடம்பிற்கு இன்ப துன்பங்கள் இயல்பாயுள்ளன. இவற்றிற்குக் காரணம்வினை யென்பதும் பொய்; மயிலைச் சித்திரித்தாரையும், குயிலைக் கூவுவித்தாரையுங் காணுமையின் கடவுள் உண்டென்பதும் பொய்.

இம்மையின் மங்கைப் பருவத்து மகளிரொடு மணந்து உண்டுடுத்து வாழ்வதே துறக்கவின்பம். அது பெருது பகைவரால் நோயால் வறுமையால் நூல்களால் வருந்துவதே நிரயத்துன்பம். வேறே துறக்க நிரயம் உள என்பதும் பொய். நாலுபூதக் கூட்டரவிற் பிராணவாயு ஒன்று நீங்கில் உணர்விழந்து உடம்பு நாசமாம். அதுவே வீடுபேறு. வேறே வீடு பேறுண்டென்பதும் பொய்.

இவ்வுண்மை யுணராத மடவோர் மறுமையுண்டெனக் கொண்டு தவங்கள் பட்டினி முதலியவற்றான் வருந்துவர். கந்பு முதலிய சங்கேத நூல்கள் மதுகையின்றி பதியுடையோராற் செய்யப்பட்டன. பொன் நிலம் உணவு முதலிய தானங்களை உயர்த்துக் கூறும் நூல்கள் பசியால் வருந்தி நல்கூர்ந்தோராற் செய்யப்பட்டன. தேவகுலம் தண்ணீர்ப் பந்தர் கூவல் பொய்கை சோலை முதலியன செய்தலை உயர்த்துக் கூறும் நூல்கள் வழிச்செல்வோராற் கூறப்பட்டன. ஆகலான் இவற்றைக் கைவிட்டு, உழவு, பசுக்காவல், வாணிகம், செங்கோன் முறைமை முதலியனவாக ஆன்றோர் காட்டிய நெறியினின்றும் இம்மையின்பங்களை நுகர்ந்து வாழ்தல் உறுதிப்பயன் என்பதாம்.

இவ்வுலகாயதர் நூல் செய்தோன் 'பிருகற்பதி' யென்றுணர்க. இவ்வுலகாயதர் தேகான்மவாதிகளும் இந்திரியான்ம வாதிகளும் பிராணுன்மவாதிகளும், அந்தக்கரணுன்மவாதிகளும் எனப் பலதிறப் படுவர்" எனவரும்.

இனி, இக்நீலகேசியிற் கூறப்படும் பூதவாதிக்கும் இவர் கூறும் உலகாயதவாதிக்கும் பொருள் ஐந்தென்றலும் நான்கென்றலும் பிறவுமாகிய வேறுபாடுகளும் அறிந்து கொள்க.

இனி, மணிமேகலையின்கண்,

"பூத வாதியைப் புகனீ யென்னத்
தாதகிப் பூவும் கட்டியு மிட்டு
மற்றுங் கூட்ட மதுக்களி பிறந்தாங்

குற்றிடு பூதத் துணர்வு தோன்றிடும்
அவ்வுணர் வவ்வப் பூதத் தழிவுகளின்
வெவ்வேறு பிரியும் பறையோசையிற் கெடும்
உயிரொடுங் கூட்டிய வுணர்வுடைப் பூதமும்
உயிரில்லாத வுணர்வில் பூதமும்
அவ்வப் பூத வழியவை பிறக்கும்
மெய்வகை யிதுவே வேறுரை விகற்பமும்
உண்மைப் பொருளு முலோகாயத னுணர்வே
கண்கூ டல்லது கருத்தள வழியும்
இம்மையு மிம்மைப் பயனுமிப் பிறப்பே
பொய்ம்மை மறுமையுண் டாய்வினை துய்த்தல்
என்றலும்''

என வருதல் உணர்க.

இதன்கண், பூதவாதிக்கும் உலகாயதவாதிக்கும் வேறுபாடு உலகாயதவாதியாவான்-பூதங்களில் உணர்வுடையனவும், இல்லனவும் இரு கூறுளவென்றும் உணர்வுடைய வுயிரும் அஃதில்லாதவுடம்பும் அவ்வப் பூதங்களின் கூட்டத்தால் உண்டாமென்றும் பூதவாதி அங்ஙனம் கொள்ளாமையுமேயாம். பிறகொள்கைகள் இரு திறத்தார்க்கும் ஒக்கும் என விளக்கியிருத்தலுணர்க. (எ)

## நீலகேசி பூதவாதி கூற்றை அவையோர் முன் வழிமொழிந்து கோடல்

அகூக. இட்ட மாவ திதுவெனக் கேட்டவள்
சிட்ட ரன்றியுஞ் சென்றிருந் தார்க்கெலா
மொட்டி மீட்டு முரைத்துளந் தான்கொளீஇக்
கட்டு ரைய்யெடுத் தாள்கயற் கண்ணினள்.

(இ - ள்.) இது இட்டம் ஆவது என - இதுவே யாங்கள் தத்துவமாகக் கண்டு விரும்புவது காண்! என்று பிசாசகன் கூற; கேட்டவள் - அதனைக் கேட்ட ; கயல் கண்ணினள் - கயல் மீன் போன்ற கண்களையுடைய நீலகேசி ; சிட்டர் அன்றியும் சென்றிருந்தார்க்கு எலாம் - சான்றோரேயன்றியும் சாலாதாராயினும் அவ்வவைக்கண் சென்றிருந்தோர் அனைவரும் கேட்கும்படி ; ஒட்டி மீட்டு உரைத்து - அவன் கூறிய தத்துவங்களைத் தழுவி மீண்டும் வழிமொழிந்து கூறுமாற்றால் ; உளந்தான் கொளீஇ - உள்ளத்திற் புகும்படி செய்து ; கட்டுரை எடுத்தாள் - பின்னர், அவற்றிற்குக் குற்றங்கூறத் தொடங்கினள் என்க.

(வி - ம்.) நீலகேசி அவன் சொல்லியது கேட்டு, அவன், சொன்னவாறு எல்லாருமறிய வழிமொழிந்து பின்னர் அவற்றிற்குக் குற்றங் கூறத் தொடங்கினள் என்றவாறு.

நீலகேசி பூதவாதியை நோக்கி நீ நல்லாசிரியனல்லை எனல்

அ௬௨. வினையி னீங்கி விளங்கிய ஞானத்தோர்
முனைவ னின்மையி னுன்முத னூலில்லை
யனைய மாண்பின தாகம மாதலாற்
புனைவ னின்னுரை பொய்யெனச் சொல்லியே.

(இ - ள்.) வினையின் நீங்கி விளங்கிய ஞானத்து ஓர் முனைவன் இன்மையின் - ஐய! நின்னுடைய பூதவாதமானது இருள்சேர் இருவினையினின்றும் நீங்கி மெய்ப்பொருள் விளங்குதற்குக் காரணமான மெய்யறிவினையுடையான் ஒரு முனிவனை முதல்வனாகவுடைய தன்மையால்; முதல் நூல் இல்லை - நின்பூதவாதத்திற்கு முதனூல் யாதொன்றுமில்லை என்பது தேற்றம்; ஆகமம் அனைய மாண்பினது ஆதலால் - என்னை? சமயவாகமமாகிய நூல் என்பது அத்தகைய நல்லாசிரியனுற் செய்யப்படும் மாண்பினையுடைத்தாகலான்; புனைவன் நின் உரை பொய் எனச் சொல்லி - உண்மையுணர்ந்து கூறுமாற்றாலன்றி புனைந்துரைக்குமாற்றாற் கூறுகின்ற நின் மொழிகள் வாய்மையாக மாட்டா என்று சொல்லி என்க.

(வி - ம்.) "வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்" (தொல்-மரபு ௯௪)

என்பவாகலின் நின்னுடைய பூதவாதத்தைக் கண்டு கூறினுன் ஒரு முனைவன் அன்மையாலும் நீ கூறுவன தத்துவம் ஆகா? என்பது கருத்து.

இனி, ஐந்து பூதங்களுங் கூடி உடம்பானவாறும், அறிவு முதலியன தோன்றியவாறும், நீ காட்சியளவையாற் கண்டு சொல்லுகின்றாயோ? கருத்தளவையாற் சொல்லுகின்றனையோ? உரையளவையாற் சொல்லுகின்றனையோ? காட்சியளவையாற் கண்டாயெனின் எல்லாம் காட்சியளவையாற் காண்டலில். தாயின் வயிற்றில் ஐம்பூதங்களின் கூட்டமுங் காண்டல் வேண்டும். ஐம்பூதக் கூட்டத்தை ஒன்றால் கருதியறிந்தனையாயின், உயிரையும் அவ்வாறே கருதியுணர்ந்து கொள். உடம்பிற் காணப்பட்ட வற்றெனவு முதலியவற்றால் பூதக் கூட்டரவு கருதியுணர்ந்தேனெனின், அறிவில் பொருளாகிய பூதத்தின்கட் பிறவாத அறிவு முதலியவற்றால் அறிவுடையுயிரைக் கருதியுணரவுமமையும். இனி, நூலாலறியின், நூலாவது: வினையினீங்கி விளங்கிய அறிவினையுடைய மெய்க்காட்சியாளனுற் செய்யப்படுவதேயாம்; நினக்கு அத்தகைய மெய்க்காட்சியாளனின்மையின், நினக்கு நூலுமில்லையாம், நூலின்றி வாய்தந்தன கூறும் நீ கூறுவது தத்துவமாகாது. ஆதலின் நின் கூற்றுப் பொய்யேயாம் என்றவாறு.

நீ வினையினீங்கிய மெய்யுணர்வுடையோன் அன்மையின் நின் மொழி கொள்ளப்படாதென்றுமாம். (௯)

இதுவுமது

அசுரு. கவைத்த கோலோடு கட்டில் கடிஞைகாத்
தவத்திற் கொத்தன தாங்கினித் தாபதம்
அவத்த மேபிற வாருயி ரில்லையேற்
சுதத்தி னுய்த்தல் சூதது வாகுமே.

(இ - ள்.) ஆருயிர் இல்லையேல் - ஐய ! காண்டற்கரிய உயிர் என்னும் பொருள் இல்லையாய்விடின் ; சுதத்தினால் - ஆகமங்கள் கூறியபடி; கவைத்த கோலொடு கட்டில் கடிஞை கா - கவை யுடைய முக்கோலும் மணையும் பலிக்கலனும் காவும் முதலிய ; தவத்திற்கு ஒத்தன தாங்கின் இத்தாபதம்-தவம் பண்ணுதற்குப் பொருந்திய பொருள்களைச் சுமந்து செய்கின்ற இத் தவம் ; அவத் தமே - வீண் முயற்சியேயாகும் ; அது உய்த்தல் சூது ஆகும்-அத் தவம் உயிரை மேனிலையுலகிற் செலுத்தும் என்பதும் பொய்யே யாகும் ; ஆகவே மனம்போனவாறொழுகுதலே நன்றாம் என்றாள் என்க.

(வி-ம்.) இது பூதவாதத்தால் வருங்கேட்டை அவன் கருத்தாலே அவையோர்க் குணர்த்திக் காட்டியவாறாம். கா - காவடி.

உயிரில்லை என்புழி, துறக்க நரகங்களும் இல்லை. இம்மைக்கண் தவ முதலியன செய்தல் வீண், மனம் போனவாறொழுகுதலே நன்று என்றாள் என்றவாறு. (௧0)

இல்லாதனவற்றை இல்லையென்று கூறல்
பயனில் செயல் எனல்

அசுச. பூத மல்லது பொய்பிற நூலென்று
வாதஞ் செய்து வருந்தி முடிப்பதென்
நாத னன்னெறி நல்வினை நற்பயன்
யாது மில்லை யெனினஃ தவத்தமே.

(இ - ள்.) பூதம் அல்லது பிற நூல் பொய் என்று - ஐம் பெரும் பூதங்களே உள்பொருள் ஆவன வன்றி, பிற சமய நூல்கள் கூறுவன வெல்லாம் பொய்யே என்று ; வருந்தி வாதஞ் செய்து முடிப்பது என் - பெரிதும் வருத்தமுற்று நீ எம்மனோரோடு சொற் போர் செய்து அதனால் மாந்தர்க்கு முடித்துக் காட்டுகின்ற நலம் தான் யாதோ ?; நாதன் நன்னெறி நல்வினை நற்பயன் யாதும் இல்லை எனின் - இறைவன் நல்லொழுக்கம் அறம் நற்பயன் என்னுமின்னோரன்னவற்றுள் யாதும் எல்லை என்று நீ கூறின் ; அஃது அவத்தமே - அக் கூற்றே பயனில் கூற்றும் முடியும் என்றான் என்க.

(வி - ம்.) ஐம்பெரும் பூதமே யல்லது இறைவனும் நூலும் நன்னெறியும் நல்வினை தீவினைகளும் அவற்றின் பயனாக எய்தும் துறக்க நரகங்களும் இல்லை என்று நீ கொள்ளுமிடத்தும் அவையில்லை என்று நீ வாதஞ் செய்வதனால் மாந்தர்க்கு வரும் நன்மையும் இல்லையேயா மன்றோ? ஆகவே நின் முயற்சி மாந்தர்க்குச் சிறிதும் பயன் விளைக்காத முயற்சியாம் என்றவாறு.

என்னை? துறக்க முதலியன இல்லை என்னும் மேற்கோட்கு, இல்லாதவற்றை உண்டென்று நினைத்திருப்பார்க்கும் வருவதொரு குற்றம் இல்லாமையின் அவ்வாறு நினைத்திருக்கவு மமையும். நீ இல்லை என்று வாதிப்பதனால் அவர்க்கு வரும் ஊதியமும் இல்லாமையால் நின் செயல் பயனில் செயலாம் என்றவாறு. (கக)

இதுவுமது

அறுசீ.
யாது மில்லை யுயிரிவை யாஞ்சொல்லும்
பூத மேயெனப் போந்திருந் தென்னொடு
வாதஞ் செய்கின்ற பூதமவ் வாதமோ
யாதைம் பூதங்க டம்முள்ளு மஃதினி.

(இ - ள்.) என்னொடு போந்திருந்து - ஐய! இந்த அரசவையின்கண் என்னோடு வந்து என் எதிரே இருந்து; உயிர் யாதும் இல்லை - உயிர் என்று யாதொரு பொருளுமில்லை என்றும்; யாம் சொல்லும் பூதமே இவை - உள் பொருளாவன யாம் கூறு கின்ற ஐம் பூதங்களாகிய இவைகளேயாம் என்றும்; இனி வாதம் செய்கின்ற பூதம் - இப்பொழுது நீ சொற்போர் நிகழ்த்து கின்ற பூதம்; அவ்வாதமோ - அந்த வாதம் என்னும் பூதமோ; ஐய பூதங்கள் தம்முள்ளும் அஃது யாது - அந்தப் பூதம் எந்தப் பூதமோ? கூறுதி என்றாள் என்க.

(வி - ம்.) பூதங்களுள் காற்றிற்கு வாதம் என்னும் பெயருண்மையால் என்னொடு வாதஞ் செய்கின்ற பூதம் அவ்வாதமோ? பிறிதோ என்று அசதியாடியவாறும்.

உயிரொன்றுமில்லை பூதங்கள் ஐந்துமே பொருள் என்று என்னுடன் வாதஞ் செய்வது அந்தப் பூதம் ஐந்துமோ? அல்லது வாதமென்னும் பிறிதொன்றோ? கூறுதி! என்றவாறு.

இனி, ஐம்பூதங்களின் கூட்டத்தே தோன்றுவதெனினும் அவற்றிற்குக் கூட்டம் நிகழ்தலரிது; என்னை? வெளி உருவமில்லாததாகலின் உருவமுடைய ஏனை நான்கு பூதங்களொடும் கூடாதாம்.

இனி, நீரும் நெருப்பும் நிலமும் காற்றும் ஆகிய பூதநான்கும் ஒன்றற்கொன்று தம்முள் முரணுடையனவாகலின் தம்மிற் கூடாவாம். ஆதலின் இவை ஐந்துங் கூடி ஒன்றாதலரிதென்பதாம். (கஉ)

இதுவுமது

அகசு. அளித்த வைந்திற் கறிவின்ப மாக்குவான்
களித்தற் காற்ற லுடையன காட்டினாய்
களித்தற் காரண காரிய மூர்த்தியா
லொளித்து நின்ற வுணர்வுரு வென்றியோ.

(இ - ள்.) அளித்த ஐந்திற்கு அறிவு இன்பம் ஆக்குவான்— நின்னால் தத்துவம் என்று வழங்கப்பட்ட ஐம்பூதக் கூட்டத்தின் கண் அறிவும் இன்பமும் முதலாயின தோன்றுதற்குவமையாக ; களித்தற்கு ஆற்றல் உடையன காட்டினாய் - தம்மைக் கூட்டி யுண்டவர் மயங்கும் ஆற்றலுடைய மாமுதலிய பொருள்களை எடுத்துக்காட்டினை ; களித்தல் காரணம் காரியம் மூர்த்தியால் - மயங்குதற்குரிய காரணம் காரியம் இரண்டுமே உருவுடையனவாம், ஆதலால் ; ஒளித்து நின்ற உணர்வு உருவு என்றியோ - உடம்பின் கண் மறைந்திருந்த அறிவுமுதலியனவும் உருவப் பொருள்கள் என்று கூறுகின்றனையோ ? என்றாள் என்க.

(வி - ம்.) ஐந்து பூதங்களும் சோறடுகின்றவழிக் கூடினவாறு காணப்பட்டவன்றே? அவ்வாறு கூடியவழியுண்டாகிய உடம்பின்கண், இன்பதுன்பமாய்த் தோன்றாநின்ற அறிவாற்றலுண்டாம், என்னை? மாமுதலாயினவற்றின் கூட்டத்திலுண்டாகிய கள்ளின்கண் களிப் பிக்கும் ஆற்றல் தோன்றியவாறுபோலவென்று உவமை காட்டினும், அடுகின்ற வழி வந்த ஐந்தும் கூடினவாயின், அங்கு அறிவாற்ற லுடையதோர் உடம்பு தோன்றுதவாறென்னே ? மாமுதலாயின வற்றின் கூட்டமுள் வழியெல்லாம் களிப்பிப்பதாகிய கள் தோன்றுவ தில்லையோ ? மாமுதலாயினவற்றின் கூட்டத்தாலாகிய கள் தான் களித்தலன்றித் தன்னோடு கூடிய பிறனைக் களிப்பிக்குமாறுபோல ஐம்பூதங்களாலாகிய வுடம்பும் தான் இன்பதுன்பமுடைத்தன்றாகித் தன்னோடு கூடினானுக்கு இன்பதுன்பங்களைப் பண்ணுமென்று கொள்கின்றாயோ? இனி, ஐம்பூதகாரியம் அறிவென்னினும், அறிவிற்கு ஐம்பூதம் துணைக்காரணமோ ? முதற் காரணமோ? துணைக்காரண மெனின், முதற்காரணம் பிறிதொன்று வேண்டும் ; பிறிதொன் றின்மையின் பூதந்தானே முதற்காரணமெனின், துணைக்காரணமின்றி முதற்காரணத்தால் தோன்றவதொரு காரியமில்லை ; அன்றியும் உருவமும் முதற்காரணமுமாகிய மண் முதலாயினவற்றால் பிறந்தகுடம் முதலாயினவும். களித்தற் காரணமாகிய மாமுதலியவற்றாற்றோன்றிய கள்ளும் உருவப் பொருளாகத் தோன்றுகின்றனவாம். நீ அறிவையும் உருவப்பொருளென்றே வேண்டுதியோ? என்றவாறு. (கக)

இதுவுமது

அகஎ. உருவின் காரிய மேலுரு வென்றனை
ருருவின் காரிய மேலவா காயக்கா
மொருவன் காரிய மன்றுணர் வென்கின்றாய்
மருவுங் காரண காரிய மற்றெனே.

(இ - ள்.) உருவின் காரியமேல் - ஐய ! அறிவு உருவப் பொருளாகிய நில முதலிய பூதங்களின் காரியமாயின் ; உரு என்று உணர்-உருவப் பொருள் என்றே அறிவாயாக; அருவின் காரியமேல் - அன்றி அருவம் பொருளின் காரியம் என்பாயாயின்; அ ஆகாயக்கு ஆம்-அறிவு அருவமாகிய அந்த வெளியின் காரியம் ஆதல் வேண்டும் ; உணர்வு ஒருவன் காரியம் அன்று என்கின்றாய் - அறிவு தானும் உயிரின் காரியமன்று என்கின்றனை ; மருவும் காரணம் காரியம் மற்று என் - ஆயின் அறிவு தோன்றுகின்ற காரண காரியங்கள் தாம் எவ்வாறு சொல்லாய் என்றாள் என்க.

(வி - ம்.) ஐய அறிவு பூதங்களுள் வைத்து உருவப் பொருளாகிய நில முதலியவற்றின் காரியம் என்னின் உருவமுடைத்தாதல் வேண்டும். உருவமின்மையான் அருவப் பொருளின் காரியம் என்பாயாயின் அருவமாகிய வெளியின் காரியம் ஆதல் வேண்டும்; வெளி அறிவில் பொருளாதலின் அதன்கண் அறிவு பிறத்தல் கூடாதாம். இனி, அறிவுப் பொருளாகிய உயிருண்மையும் நீ கொள்கின்றிலை; பின்னர் அறிவிற்குக் காரண காரியம் எவ்வாறு கூறுவாய்! வல்லையேல் கூறிக்காண்! என்றவாறு.

உடம்பு வளருந்தோறும் அறிவு வளரவும் அது கெடுந்தோறும் கெடவும் காண்டலானும், உடம்பிற் பிரித்து அறிவு பெறப்படாமையாலும், அறிவு உடம்பின் காரியமெனின்; நிலத்தின் கூறாகிய விறகு பெருகுந்தோறும் பெருகி அது சுருங்குந்தோறும் சுருங்கி அதனில் வேறுபடாதாகி விறகில்லாத வழி இல்லையாகின்ற வழி நெருப்பு விறகின் காரியமாகி விறகோடு ஒன்றாகாதவாறுபோல அறிவு உடம்பின் காரியமாய் உடம்போடொன்றாகாதென்பது.

அன்றியும் பருத்தவுடம்புடையானினும் காட்டில் மெலிந்த உடம்புடையோன் எல்லாக் கலைகளினும் வல்ல அறிஞனாதலும் காண்டலின், உடம்பின் பெருக்கத்தால் அறிவிற்குப் பெருக்கமில்லை யென்பது.

அன்றியும் கட்புலனாகின்ற உருவமும், நாவிற்குப் புலனாகின்ற சுவையும், தம்மில் வேறுமாகிக் காரண காரியமும் ஆகாதவாறு போலப் பொறிகளாலும் மனத்தாலும் காணப்படுகின்ற உடம்பும் அறிவும் வேறுமாகிக் காரண காரியமுமாகா வென்பது. ஆகவே காரண காரியம் எவ்வாறு கூறுவை என்றவாறு. (௧௭)

இதுவுமது

அ௬அ. வையு மண்ணு மயிரு மலமுமோர்
பையுள் வைக்கப் பளிங்கும் பயக்குமோ
பொய்யைம் பூதம் புணர்ந்துணர் வோடின்பம்
செய்யு மேன்பது சிந்திக்கற் பாலதோ.

(இ - ள்.) ஓர் பையுள் வையும் மண்ணும் மயிரும் மலமும் வைக்கப் பளிங்கும் பயக்குமோ - ஐய ! ஒரு தோற்பையினுள்

வைக்கோலையும் மண்ணையும் மயிரையும் மலத்தையும் நிரப்பி வைத்த வழி அவற்றின் கூட்டத்தே ஒரு பளிக்குப் பாவை தோன்றுமோ? கூறாய்; ஐம்பூதம் புணர்ந்து அங்ஙனமே நில முதலிய ஐம்பூதங்களும் கூடி; உணர்வோடு இன்பம் செய்யும் என்பது பொய் - அறிவையும் இன்ப முதலியவற்றையுந் தோற்று விக்கும் என்பதும் பொருந்தாப் பொய்யேகாண்; சிந்திக்கற் பாலதோ - இதனை ஆராய்ந் தறியவும் வேண்டுமோ; என்றான் என்க.

(வி - ம்.) வைக்கோலும் மண்ணும் மயிரும் மலமும் ஒரு தோற் பையுள் வைத்துழி ஒரு பளிக்குப் பாவை தோன்றுமோ! தோன்றா தன்றே! தோன்றாதாயின் ஐந்து பூதக் கூட்டத்தினின்றும் அறிவு முதலியன தோன்றும் என்பதும் பொய்யே. எப்பொருள் வைப்பினும் அப்பொருளே தோன்றும் இது ஆராய்ந்தறியற் பாலதொன்றன்று எவர்க்கும் தெரிந்த உண்மையாம் என்றவாறு. (கஓ)

இதுவுமது

அகூகூ. கள்ளப் பூதமுங் காமிக்கும் பூதமும்
வள்ளற் பூதமும் மல்லவு மல்லவா
லுள்ளப் பூதமோன் றாக்குவ துண்மையைக்
கோள்ளப் பூதக் குணமவை யல்லவே.

(இ - ள்.) கள்ளப் பூதமும் காமிக்கும் பூதமும் - ஐய! நின் பூதங்கள் களவு செய்யும் பூதமும் காமுறும பூதமும்; வள்ளற் பூதமும் அல்லவும் அல்லவாம்-வள்ளன்மையுடைய பூதமும் ஏனைய குணங்களையுடையனவும் அல்ல என்பது தேற்றமாம்; ஆக்குவது உள் அம்பூதம் ஒன்று உண்மையைக் கொள் - உடம்பின்கண் இக்குணவேறுபாடுகள் இருத்தலாலே உடம்பினுள் அவற்றை உண்டாக்குவதாகிய உள்ளமுடைய அப்பூதம் ஒன்று இவ்வைந்து பூதத்திலும் வேறாக உளதாதலை உணர்ந்து கொள்வாயாக; அவை அப்பூதக் குணம் அல்ல - என்னை? கள்ள முதலிய அக்குணங்கள நீ கூறிய அந்த ஐந்து பூதங்களின் குணமல்லாமை யால்; என்றான் என்க.

(வி - ம்.) ஐம்பூதக் கூட்டரவாற் றோன்றிய மாந்தருள் ஒருவன் கள்வனாகும்; பிறனொருவன் காமுகனாகும்; மற்றொருவன் வள்ளலாகும் இவ்வாறு குணம் வேறுபடுதற்குக் காரணம்; நீர் முதலாகிய பூதங்களும் அவையிற்றின் குணங்களுமன்றே, அவையிற்றின் குணமேயாகின் உடம்பின்கண் அவை காண்டல் வேண்டும்; காணப்படாவாயினும் உளவெனின் அங்ஙனமே காணப்படாதாயினும் உயிரும் உளதாம் என்று கொள்க!; அஃதின்மையின் உள்ளமுடைத்தாகிக் களவு காண்டல் முதலாகிய குணங்களையாக்குவதொரு பூதமும் ஐம்பூதத்தின் வேறாய் உண்டென்று கொள்வாயாக!; என்னை? ஐம்பூதங்கட்கும் அக் குணங்களின்மையான் என்றவாறு. (கஅ

இதுவுமது

அளo. பொறியைந் தாலைந்து பூதத்தி ஞகிய
வறிவைந் தாலைந்து மவ்வைந்திற் காகுமோ
பிறிதோன் ருேபொருட் பெற்றிமற் றிற்றெனக்
குறிகோண் டாயொன்று கூறெனக் கென்னவே.

(இ - ள்.) ஐந்து பூதத்தின் ஆகிய பொறி ஐந்தால் அறிவு ஐந்தால்-ஐந்து பூதங்களால் ஆகிய ஐந்து பொறிகளாலும் உருவம் முதலிய ஐந்து அறிவும் பிறந்தன என்று சொல்லுதலால்; ஐந்தும் அவ்வைந்திற்கு ஆகுமோ - அந்த ஐந்தறிவும் அவ் வைம்பொறிகளுள் வைத்து ஒரோ ஒன்றில் ஒன்ருகத் தனித்தனியே பிறந்ததுவோ? அல்லது ஒவ்வொரு பொறியினும் ஐந்து ஐந்தாகக் கூடிப்பிறந்தனவோ? பிறிது ஒன்ரோ-அல்லது அப்பொறிகளின் வேருகிய பிறிதொன்ருல் ஐந்தறிவும் பிறந்தனவோ? குறியுடையாய் - பூதமே முதல் எனனும் மேற்கோளுடையோய்! எனக்கு ஒன்று கூறு என்ன - எனக்கு இவற்றுள் ஒன்றைத் துணிந்து சொல்வாயாக! என்ருள் என்க.

(வி - ம்.) ஐந்து பூதங்களாலாகிய ஐந்து பொறிகளாலும் உருவம் முதலிய ஐந்தறிவும் பிறந்தன வென்று சொல்லுதலால்; ஐந்தறிவு தனித்தனி ஓரோஒரோ பொறியால் ஒரோஒரோ அறிவாகப் பிறந்ததோ? ஓரறிவு ஐம்பொறிகளாலும் பிறந்ததோ? அன்றி ஒரு பொறியால் ஐந்தறிவும் பிறந்தனவோ? அன்றிப் பொறிகட்கு வேருய பிறிதொன்ருல் பிறந்தனவோ? ஒன்றைத் துணிந்து எனக்குச் சொல்லுவாயாகவென்று நீலகேசி கேட்டாள் என்றவாறு. (கஎ)

இதுவுமது

அஎக. ஒன்றன் காரிய மொன்றெனை வொட்டினுஞ்
சென்றெ லாமவை சேதனை யாகுமே
யன்றெ லாமவை யாக்குமொன் றேயினி
யென்ற லானுமஃ தின்னுயி ரெய்துமே.

(இ - ள்.) ஒன்றன் காரியம் ஒன்று என ஒட்டினும் - ஐய! நீ ஒவ்வொரு பொறியின் காரியமாம் ஒவ்வோரறிவும் என்பாயேனும்; எலாம் சென்று அவை சேதனை ஆகும் - ஐந்து பூதங்களும் ஒருசேர அறிவுடைப் பொருளாதல் வேண்டும்; அன்று-அங்ஙனமன்று; அவை எலாம் ஒன்றே ஆக்கும் என்றலானும்-ஐந்து பொறிகளும் கூடி ஓர் அறிவையுண்டாக்கும் என்பதனாலும்; அஃது - முன் சொன்ன குற்றமேயாம்; இன் உயிர் எய்தும் - அந்தியும் இனிய உயிரினதுண்மையும் பெறப்படும் என்ருள் என்க.

(வி - ம்.) ஓரோவொரோ பொறியால் ஓரோவொரோ அறிவு பிறக்குமென்று முன் கூறியது பொருந்தாதாம். என்னை? ஒரு பூதம் ஒரு பொறியாய் நின்று ஓர் அறிவைப் பிறப்பித்தலின்; அன்றியும் ஐம்பூதங்களும் தனித்தனிப் பொறியாய் நின்று ஐந்தறிவுகளையும் பிறப்பிப்பின் ஐந்துபூதங்களும் அறிவுடையனவாதல் வேண்டும்; என்னை? அறிவுப் பொருளினல்லது அறிவில் பொருளில் அறிவு பிறவாதாதலால். பிறக்கில் குடம் ஆடை முதலியவற்றினும் அறிவு பிறத்தல் வேண்டும். இனி, ஐம்பொறிகளும் ஓர் அறிவினைப் பிறப்பிக்குமெனினும், உருவவுணர்வு கண்ணைப்பற்றிப் பிறந்த தென்றல் பொருந்தாது. அன்றியும் பொறிகள் குறைந்த எறும்பு முதலாயினவற்றிற்கும் பிறவிக் குருடன் முதலாயினார்க்கு அறிவொன்றும் பிறத்தல் கூடாதாம். ஒரு பொறியால் ஐந்தறிவும் பிறக்கின் ஐம்பூதக் கூட்டத்து அறிவு பிறக்கும் என்பது பொருந்தாது. என்னை? ஒரு பூதமே ஐந்தறிவையும் பிறப்பிக்குமாதலான். இனி, பூதங்களின் வேருகிய பிறிதொன்ருல் ஐந்தறிவும் பிறக்கின் அதுவே உயிராதலின் உயிருண்மை பெறப்படும். என்னை? அறிவில் பொருளில் அறிவு பிறத்தல் கூடாமையினென்றவாறு. (கஅ)

இதுவுமது

அஎஉ. அனைத்துப் பூதமு மேயறி வாக்கினுன்
மனத்துக் கின்னுமோர் பூதத்தை மன்னுநீ
நினைத்துக் காணன்றி நேடியுங் காணையா
வெனக்கு நீசெய்வ தித்துணை யேயினி.

(இ - ள்.) ஐயா! அனைத்துப் பூதமும் அறிவு ஆக்கினுல்- ஐய! ஐந்து பூதங்களும் ஐந்து பொறிகளாகி ஐந்து அறிவுகளையும் பிறப்பிக்குமாயின்; மனத்துக்கு இன்னும் ஓர் பூதத்தை - ஆருவது அறிகருவியாகிய மனத்தைப் பிறப்பிக்கும் பூதம் ஒன்று இல்லாமையால்; நீ நினைத்துக் காண் அன்றி நேடியும் காண் - நினைத்தாயினும் அல்லது தேடியாயினும் கண்டு கூறுவாயாக!; இனி எனக்கு நீ செய்வது இத்துணையே - இனி எனக்கு நீ செய்ய வேண்டிய உதவி இவ்வளவே காண், அதனைச் செய்வாயாக! என்ருள் என்க.

(வி - ம்.) ஐந்து பூதங்களும் ஐந்து பொறிகளுமாகி ஐந்தறிவையும் பண்ணுமாகின் மனத்தைப் பண்ணுவதொரு பூதமின்மையால் மனத்தின் கண் பிறக்கும் ஆருவதறிவு பிறக்குமாறு யாது கூறுதி என்றவாறு.

நினக்கு முதனூலும் ஆசிரியனும் இல்லை ஆகலின் நீயே நினைத்துக் காண்! அல்லது தேடியாவது காண்! என்று அசதியாடியபடியாம். அனைத்துப் பூதமும் என்றது நிலம் நீர் முதலிய ஐந்து பூதங்களையும். அறிவு ஆக்கினுல்-மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற பொறிகளாகக் கொண்டு சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்து அறிவுகளாக்கி னுலும் என விளக்கம் கொள்க. (கக)

இதுவுமது

அஎரு. பிண்ட மாகிப் பிறந்தன யாவையும்
உண்டுங் கண்டு முணர்ந்தவுஞ் செய்தவுங்
கொண்டு மீட்டவை கூறுதல் கூறுங்கால்
கண்ட பூதத்துக் காரிய மென்றியோ.

(இ - ள்.) *பிண்டம் ஆகிப் பிறந்தன யாவையும்* - ஐய! ஐம்பூதக்கூட்டமாகிய உடம்பொடு பிறந்த உயிரினங்களெல்லாம்; *உண்டும் கண்டும் உணர்ந்தவும் செய்தவும் கொண்டு* - தாம் தாம் தின்றும் பார்த்தும் அறிந்தும் செய்தனவும் ஏதுவாகக் கொண்டு; *அவை மீட்டுக் கூறுதல் கூறுங்கால்* - அந்த நுகர்வுகளை மீண்டும் உணர்ந்து கூறுதற்குக் காரணம் கூறுமிடத்து; *கண்டபூதத்துக் காரியம் என்றியோ* - நீ தத்துவமாகக் கண்ட ஐம்பூதங்களின் காரியமே அவையும் என்று கூறுவாயோ? என்றாள் என்க.

(வி - ம்.) ஐந்து பூதக் கூட்டரவால் ஆகிய உடம்பு கொண்டு பிறந்த மாந்தர் தாம் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிந்தவற்றை மீண்டு நினைவு கூர்ந்து சொல்லுதலும் அந்தப் பூதங்களின் காரியம் என்றே கொள்வாயோ? என்றவாறு.

பொறியுணர்வல்லாத மீட்டுணர்வு முதலியன. பூதகாரியமன்மையின் அவற்றிற்கு என் சொல்லுதி? என்பது இதனாற் போந்தது (உ௦)

இதுவுமது

அஎசு. பிறந்த நாள்களுட் பிள்ளையு மல்லவு
மறிந்து தாய்முலை யோடல்ல வுண்டிக
ளறிந்த வாறென்கொ லோவைந்து பூதமுஞ்
செறிந்த நாள்களுட் செய்வன வல்லவால்.

(இ - ள்.) *பிள்ளையும் அல்லவும் பிறந்த நாள்களுள்* - மாந்தர் தம் குழந்தைகளும் விலங்கு முதலியவற்றின் குட்டி முதலியனவும்; *அறிந்து தாய் முலையோடு அல்ல உண்டிகள்* - பசியுணர்ச்சியினை யுணர்ந்து தத்தமக்குரியனவாகிய தத்தம் தாயின் முலைப்பாலையும் ஏனைய உணவுகளையும்; *அறிந்த ஆறு என் கொலோ* - அறிந்துண்டு நின்றதன்மை எதனாலாயிற்று; *ஐந்து பூதமும் செறிந்த நாள்களுள்* - ஐந்துபூதங் கூடித் துஞ்சின நாள்களிலே, இச்செயல்கள் செய்யப்படுவன அல்லவே என்றான் என்க.

(வி - ம்.) மக்கள் முதலிய எல்லா உயிரினங்களும் பிறந்தவுடனேயே உணவு வேட்கை தோற்றித் தத்தமக்குத் தகுந்த உணவினை

நாடிக் கைக்கொண்டு அமைதியுறுகின்றனவல்லவோ? அறிவில் பொருளாகிய ஐந்து பூதங்களும் கூடித் துஞ்சினபொழுது இவற்றிற்கு உணவு வேட்கை முதலாயின உண்டாகுமோ? இஃதெற்றுலாயிற்று, முற்பிறப்பின் பழக்கமுடையதோர் உயிர்ப் பொருள் உண்டென்று கொள்ளாயாயின்? என்றவாறு.

முலையுண்ணுவுயிரினங்களும் உண்மையின் தாய் முலையோடு அல் (உக) லவும் என்றாள்.

இதுவுமது

அஎ௫. புத்தி யானின்றிப் பூதத்தி னுயவேற்
பத்து மல்லவும் பன்றிக்கு நாய்கட்கு
மொத்த தன்மைய பன்மைய குட்டிகள்
வித்தி னுய வினைவிகற் பாம்பிற.

(இ - ள்.) புத்தியான் இன்றிப் பூதத்தின் ஆயவேல் - ஐய! உலகின்கண் உடலொடு தோன்றி வாழ்கின்ற உயிரினங்கள், உயிரின்றியேஐம்பூதத்துக்கூட்டரவுமாத்திரையானே தோன்றியுள வாயின் ; பன்றிக்கும் நாய்கட்கும் - பன்றிகளுக்கும் நாய்களுக்கும் ; பத்தும் அல்லவும் பன்மைய குட்டிகள் - பத்துக் குட்டிகளும நான்கு மைந்துமாய்ப் பன்மையுடையனவாகியும் ; ஒத்தது அன்மைய - ஒத்திராமையுடையனவாதற்குக் காரணம் பிறிது பெறப்படாமை யான் ; விகற்பு வித்தின் ஆய வினையாம் - அவற்றின் பிறப்பிற்கு வித்தாகவமைந்த பழவினையின்கண் உண்டாகிய வேறுபாடேயாம் என்பது தேற்றம் என்றாள் என்க.

(வி - ம்.) உயிரின்றியும், ஐம்பூதக் கூட்டரவு மாத்திரையானே உயிரினங்கள் பிறக்கின்றன வென்பாயாயின், பன்றி நாய் முதலிய பூதக் கூட்டரவின்கண் பத்தும்நான்கும் ஐந்துமாய்ப் பலவாகவும் அவற்றுள்ளும் வேறுபட்டும் குட்டிகள் தோன்றுதற்குப் பிறிதொரு காரணமில்லையாயின் அங்ஙனம் வேறுபடுமாறில்லை. ஆதலின், அவ் வேறுபாட்டிற்குக் காரணம் வினைமுதலும் பயனுகர்வதுமாகிய உயிரினது பழவினை வேறுபாடே யாதல் வேண்டும் என்பதாம்.

இன்னும், யானை முதலாயினவற்றுளதாகிய பூதக் கூட்டத்து ஒரு கன்று பிறத்தற்கும் பன்றி முதலாய பூதக் கூட்டத்துப் பல குட்டிகள் பிறத்தற்கும் காரணமில்லை எனவும் கூறிக்கொள்க.

புத்தியான் என்றது, உயிரினை. வெண்ணீரும், செந்நீருமாகிய கருநீர்களின் கூட்டத்தே உயிர்வந்து பிறக்கும் என்னும் மேற்கோளின் கண்ணும், ஒன்றன் வயிற்றில் ஒருயிர் வந்து பிறத்தலும், ஒன்றன் வயிற்றில் பல வுயிர் வந்து பிறத்தலும், ஆமாறென்னை? என்றுலும் விளுவரும் என்னின், வராது. என்னை? பிறக்கின்ற உயிரினதூஉம் வினை வேறுபாட்டால் அது கூடு பிறத்தற்கிடனுகிய உயிரினதூஉம் வினை வேறுபாட்டால் அது கூடு மாதலினென்பது ;

இனிச் சில, பல குட்டியிடுதலும், சில ஒரு குட்டியிடுதலும் இயல்பே யெனின், ஒருகால் ஒரு குட்டியிட்டது, பின்பொருகால் பல குட்டியிடுதலும், ஒருகாற் பல குட்டியிட்டது, ஒருகால் ஒரு குட்டியிடுதலும் காண்டலின் அஃதியல்பாதல் கூடாது, என்னை? இயல்பாவது ஒரு படித்தாயிருத்தல் வேண்டுதலின் என்பது. (உஉ)

இரண்டறி வுயிர்கள் முதலியன

அஎசு. குறைந்து பூதங்கள் கூட்டமுண் டாமவ
ணுறைந்த பூதத் துணர்வல்ல தின்மையா
லறைந்த பூதங்க ளைந்துமங் கில்லெனின்
மறைந்த பூதத்தி லுண்மைவந் தெய்துமால்.

(இ - ள்.) பூதங்கள் குறைந்து கூட்டம் உண்டாகும் - ஐய! நின் மேற்கோளுக்கு ஐந்து பூதங்களும் கூடுதலேயன்றி அவற்றுட் சில குறைந்துங் கூடுதல் பெறப்படுதல் வேண்டும்; உறைந்த பூதத்து உணர்வு அல்லது இன்மையால் - இரண்டறிவுயிர் முதலாகிய சிற்றினங்களுக்கு அவ்வவற்றின் உடம்பினுறைகின்ற பூதங்களுக்குரிய அறிவு பிறத்தலல்லது ஏனைய அறிவுகள் பிறத்தலில்லாமையால், அவ்வாறுங் கூடும்; அறைந்த பூதங்கள் ஐந்தும் அங்கு இல் எனின் - எம்மாற் கூறப்பட்ட ஐந்து பூதங்களும் இரண்டறிவுயிருடம்பின்கண் இல்லை என்பாயாயின; மறைந்த பூதத்தின் உண்மை வந்து எய்தும் - அறிவு மறைதற்குக் காரணமான பூதங்களும் அவற்றுடம்பின்கண் உண்மையும் ஆராயுங் காலத்தே பெறப் படுங்காண், அது காட்டுதும் என்றாள் என்க.

(வி - ம்.) அது வருகின்ற செய்யுளில் விளங்கும்.

இரண்டறிவுயிர் முதலிய குறைந்த பொறிகளையுடைய உயிரினங்களுக்கும் உடம்புண்மையால், ஐந்து பூதமுங் கூடுதலன்றி ஒன்றும் இரண்டும் பூதங்கள் குறைந்துங் கூடுமோ? என்று நீலகேசி கேட்ப, பூதவாதி சொல்லுவான், "அவ்வாறுங் கூடும். காணப்பட்ட பொறிகளைப் பண்ணும் பூதமல்லது அவற்றுடம்பின்கண் ஐந்து பூதமும் இல்லை," என்ன, அது கேட்ட நீலகேசி அவற்றுடம்பினும் ஐம்பூதங்களும் இருத்தலை யாம் காட்டுவேம் காண் என்றாள் என்றவாறு. (உங)

நீலகேசி இரண்டறிவுயி ருடம்பினும் ஐம்பூத முண்மை காட்டுதல்

அஎஎ. நீருங் காற்றுமல் லானில மில்லையோ
வூருஞ் சங்கினோ டேர்மச்சி மூக்கில
தேரி யுண்டலிற் றீயுமுண் டில்லைகண்
காசி யஞ்செவி காணலங் காயக்கேன்.

(இ - ள்.) ஊருஞ் சங்கினோடு ஊர்மச்சி - ஊர்ந்துசெல்கின்ற சங்கும் ஊர் மச்சியும் முதலாகிய இரண்டறிவுயிர்களுக்குரிய உடம் பின்கண் ; நீரும் காற்றும் அல்லால் நிலம் இல்லையோ - நீரும் காற்றும் அன்றி நிலம் இல்லையாமோ ?; மூக்கு இல - நிலமிருக்க வேயும் அதனுலாம் மூக்கு அவை உடையனவல்ல ; தேரி உண்டலின் - அவை இரை தேர்ந்துண்ணுதலாலே ; தீயும் உண்டு- அவையிற்றின் உடம்பில் தீயிருத்தலுந் தேற்றமாம் ; கண் இல்லை- ஆகவும் அவற்றிற்குக் கட்பொறியில்லை ; காயக்கு - அவற்றின் உடம்பின்கண் வெளியுண்மை கூறவேண்டா ; காரியம் செவி காணலம் - வெளியிருக்கவேயும் அதன் காரியமாகிய செவிப் பொறியை அவற்றின்பால் யாம் காண்கின்றிலேம் ; என் - இதற் கென் சொல்லுதி ? என்றாள் என்க.

(வி - ம்.) காயக்கு என்? என்பதற்கு-அவற்றுடம்பின்கண் வெளி யுண்டென்றற்கு ஐயம் என்னை? எனினுமாம்.

சங்கும் ஊர்மச்சியும் முதலாகிய இரண்டறிவுடைய உயிரினங் களினது உடம்பின்கண் உடம்பைப் பண்ணும் காற்றும், நாவைப் பண்ணும் நீருமன்றி நிலத்தின் கூறாகிய என்பு முதலாயின வுண்மை யினும் மண்ணைத் தின்றலினும் நிலமில்லையோ? நிலமுண்டாகவும் அவை மூக்கில - உணவு வேட்கையால் உயிர் வாழ்தலின் வயிற்றுத் தீ முதலாயினவுண்மையின் நெருப்புமுண்டு; உண்டெனினும் அவற்றிற்கு நெருப்பாலாவதாகிய கட்பொறியில்லை ; வயிற்றுள் வெளி முதலிய வெளியுண்மை யானும், வெளியாண்டு நிரம்பியிருப்பதாதலானும் அவற்றுடம்பின்கண் வெளியுண்மை தேற்றமாம். ஆகவும் அதனுலாஞ் செவிப் பொறியும் அவற்றிற்கில்லை என்றாள் என்றவாறு. (உ௪)

இதுவுமது

எஎஅ. ஒன்றொன் றாக வுணர்ச்சி முறைமையாற்
சென்று பூதங்கள் சேர்வதற் கேதுவென்
குன்றித் தத்தமுள் யாவையுங் கூடுமே
னின்ற மெய்ம்மை நினதென நேர்வல்யான்.

(இ - ள்.) பூதங்கள் உணர்ச்சி முறைமையால் ஒன்று ஒன்று ஆகச் சென்று சேர்வதற்கு - ஐய! நின் மேற்கோளின்படி ஐந்து பூதங்களும் அறிவு முறைமையாலே ஒன்று முதலாக ஐந்தொருகச் சென்று கூடுவதற்கு , ஏது என் - காரணந்தான் என்னையோ? கூறுதி ; தத்தமுள் குன்றி யாவையும் கூடுமேல் - இங்ஙனம் முறைமை குன்றி எந்தப்பூதத்தோடும் வேறு எந்தப் பூதமாயினும் கூடுவதுண்டாயின் ; நினது நின்ற மெய்ம்மை என - நின்னுடைய மேற்கோள் நிலை பெற்று நின்றதொரு மேற்கோள் என்று ; யான் நேர்வல் - யான் ஏற்பேன் ; அங்ஙனம் கூடாமையின் நின் மேற் கோள் பொய்யேகாண் ; என்றாள் என்க.

(வி-ம்.) ஒன்றறிவுயிரை ஒரு பூதமும் இரண்டறிவுயிரை யிரண்டு பூதமும் ஆக்கி இவ்வாறே உடம்பறிவு (மெய்ப் பொறியுணர்வு.) செய்யுங் காற்றோடு நாவறிவு செய்யும் நீரும் மூக்கறிவு செய்யும் நிலனும், கண்ணறிவு செய்யும் தீயும், செவியறிவு செய்யும் வெளியும் முறையாற் கூடுவதென்னை ? கண்ணறிவு செய்யும் தீயும் செவியறிவு செய்யும் வெளியுமாய் இவ்வாறு முறையின்றிக் கூடாதவாறென்னை ? இனி, நில முதலியன பிறிதொன்று கூட்டக் கூடுவதல்லது தாமே கூடக் கண்டறிவதில்லை. இப் பூதங்கள் தாமே கூடியவாறென்னை ? இயங்குந் தொழிலுடையதாகிய காற்று முதலாயின பிறவற்றோடு கூடி நிற்குமாறென்னை? முகில் முதலாயின தாமே கூடக் கண்டன மன்றோ வெனின் ; நீராய்ப் பரிணமித்த நுண்ணணுக்கள் உயிரினங் களின் ஆகூழ் காரணமாக|ஒரு வழிக் காற்றினால் திரண்டு மழையாய்ப் பொழிந்ததல்லது பூதங்கள் தாமே கூடினவல்ல. அவ்வாறே நுண்ணணுத் திரள்கள் உயிர்களினது ஆகூழ்பற்றி நுண்வடிவத்தால் உடலும் பொறிகளும் புலன்களு முதலாகிய பொருள்களாக ஆக்க மெய்தும் என்று சொல்லுதியாயின் நீ மெய்க்காட்சியாளன் என்பது யான் இசைகுவன் என்றவாறு. (உ௯).

## இதுவுமது

அளகூ. ஐந்து பூத மவற்றவற் றாலைந்து
மிந்தி யங்க ளியையு மிவையெனுஞ்
சிந்த னையொழி நீயெனச் செப்பினா
ளுய்ந்து வாழு முயிருண்மை யோட்டினாள்.

(இ - ள்.) ஐந்து பூதம் அவற்று ஐந்து இந்தியங்கள் - நில முதலிய ஐந்து பூதங்களாலும் மூக்கு முதலிய ஐந்து பொறிகளும் உண்டாகும் ; அவற்றால் - அந்த ஐந்து பொறிகளால் ; இவை ஐந்து இயையும் எனும் சிந்தனை நீ ஒழி - நாற்றம் முதலிய இந்த ஐந்து புலன்களும் பிறக்கும் என்று எண்ணுகின்ற எண்ணத்தை நீ இனி விட்டொழிக்கக் கடவை ; என-என்று ; உய்ந்து வாழும் உயிர் உண்மை ஒட்டினாள் - பிறவிக்கடலினின்றும் கரையேறிச் சென்று வீட்டுலகின்கண் வாழுமியல்புடைய உயிர் என்னும் பொருள் உண்டு எண்ணும்மேற்கோளுடைய நீலகேசி; செப்பினாள் - அந்தப் பிசாசகனுக்குக கூறினள் எனக.

(வி - ம்.) நீலகேசி பூதவாதியை நோக்கி, ஐய இனி நீ ஐந்து பூதங்களாலும் ஐந்து பொறிகளுந் தோன்றும், அப்பொறிகளாலே ஐந்து புலன்களுந் தோன்றும் என்று எண்ணும் எண்ணத்தை ஒழிக்கக் கடவை யென்று கூறினள் என்றவாறு. (உ௧).

## இதுவுமது

அஅ0. உணர்வு மின்பமு மோரறி வாதிக்கட்
புணரு மேயெனிற் பொய்தோகைக் கண்ணென
வுணர்வு மின்பமு முள்வழி யேயுயிர்
புணரு மென்றனள் போதன கண்ணினாள்.

(இ - ள்.) போது அன கண்ணினாள் - நீலப்பூப் போன்ற கண்ணையுடைய நீலகேசி ; ஓர் அறிவு ஆதிக்கண் - ஒன்றறி வுயிர் முதலியவற்றின் கண்ணும் ; உணர்வும் இன்பமும் புணரும் எனின் - அறிவும் இன்பதுன்ப முதலாயினவும் உளவாம் என்பது வாய்மையாமிடத்து ; தொகைக்கண் எனல் பொய் - நீ ஐம்பூதக் கூட்டரவிலே அந்த அறிவின்ப முதலியன தோன்றும் எனபது பொய்யாதல் தேற்றமாம் ; உணர்வும் இன்பமும் உள்வழி உயிர் புணரும் என்றனள் - இன்னும் ஐம்பூதங்களும் தனித் தனி தத்தமக்குரிய அறிவையும் இன்பதுன்பங்களையும் உடையன வென்னின் அப்பூதங்களும் அறிவுடைய உயிர்ப் பொருள்களே என்றாகிவிடும் என்று கூறினள்.

(வி - ம்.) இது, நீலகேசி பூதவாதியை நோக்கி ஐய ! நீ உயிரை இல்லை என்பான் புகுந்து உயிரில் பொருள்களாகிய நிலம் நீர் முதலிய ஐந்து பூதங்களையும் உயிர்ப்பொருளாக்கி விட்டனை ; இது நினக்கே மேற்கோள் மலைவாம் என்றது.

ஐய! அறிவும் இன்ப துன்ப முதலாயினவும் ஒன்றறிவுயிர் முதலிய வற்றிற்கும் உளவாகின், ஐந்து பூதங்கள் கூடின வழியே அறிவு முதலாயின தோன்றும் என்பது பொய்யாம். கூட்டத்துக்கண்ணன்றி ஐம்பூதங்களும் தனித்தனியே ஒவ்வோர் அறிவையும் இன்பதுன்பங் களையும் ஆக்குமாயின், ஐம்பூதங்களும் அறிவு முதலியனவுடையவாம். ஆதலின் அவை உயிருடையவு மாம் ; என்னை? அறிவுடையனவெல்லாம் உயிருடையனவாதலின் என்று சொன்னாள் நீலகேசி, என்தவாறு. ()

இதுவுமது

அஅக. காற்றி னுடம் பாமெனிற் காற்றினே
தோற்றி னுயிர் தான்றேகை யென்செயு
மாற்றிவ் வைந்தினு மாருயி ராமெனு
மாற்ற மாயின் மனங்கொளற் பாலதே.

(இ - ள்.) காற்றினால் உடம்பு ஆம் எனின் - ஐய ! நீ காற் றின்றினாலே உடம்பு தோன்றும் எனின் ; உயிர் காற்றின் தோற்றினால் - உயிரும் காற்றினாலே பெறப்பட்டதாதல் வேண்டும். அங்ஙனமாயின் ; தொகை என் செய்யும் - ஐமபூதக் கூட்டத்து உடம்புமுயிருந் தோன்றுமென்ப தென்னும்? மாற்று - எனவே நின் மேற்கோளை மாற்றிக்கொள் ; இவ்வைந்தினும் - இவ் வைந்து பூதங்களானும் ; ஆர் உயிர் ஆம் எனும் மாற்றம் ஆயின் - மாற்றிய பின்னர்க் காண்டற்கரியவுயிர் முன்பேயுளதாய் ஆக்கம் எய்தும் என்னும் சொல் நின்பால் தோன்றுமாயின் ; மனங் கொளல் பாலது - அதுவே வாய்மையாகலின் அது யாவரானும் ஏற்றுக் கொள்ளற் பாலதாம் என்றாள் என்க.

(வி-ம்.) காற்றொன்றினாலே உடம்பு ஆகுமாயின் உயிரையொழிய உடம்பு ஆகாதாகலின், உயிரும் காற்றினாலே பெறப்பட்டதாம். பெறப்படின், ஐம்பூதக் கூட்டரவின்கண் உடம்பு முயிருந் தோன்று மென்று நீ கூறியது பிழையாம். ஆதலான் முன்பேயுளதாகிய உயிர் ஐம்பூதங்களால் ஆக்கமுறும் என்பாயாயின், அதுவே வாய்மையாம் என்றவாறு. (உஅ)

இதுவுமது

அஅஉ. வேறு வேறைந்து பூதமு மெய்ம்மையா
லீறுந் தோற்றமு மில்லுயி ராயின
பாறி யாவையும் பாழ்த்தொழி யும்மெனக்
கூறி னையது குற்ற முடைத்தரோ.

(இ-ள்.) ஐந்து பூதமும் வேறு வேறு ஈறும் தோற்றமும் இல் உயிர் ஆயின மெய்ம்மையால் - ஐய! நீ ஐந்து பூதங்களும் தனித்தனி அறிவை ஆக்கும் என்றமையாலே அப்பூதமைந்தும் தோற்றமும் அழிவும் இல்லாத உயிர்ப்பொருள்கள் என்பது பெறப்படுதலாலே; யாவையும் பாறி பாழ்த்து ஒழியும் எனக் கூறினாய் - அப்பூதக் கூட்டரவிற் றோன்றிய அறிவு முதலியன வெல்லாம் அவை பிரிந்துழிச் சிதறிப் பாழாயொழியும் என்று முன்பு கூறினையல்லையோ!; அது குற்றம் உடைத்து - அக் கூற்றுக் குற்றமுடையதாம் என்றாள் என்க.

(வி-ம்.) ஐய! ஐந்து பூதங்களும் ஐந்து அறிவினை ஆக்கும் என்றலின் அவை தனித்தனி அறிவுடையனவாதலின், என்றும் நிலையுதலுடைய உயிர்ப் பொருள்கள் ஆயின. திரணி முதலாகிய கோலால் கடையினும் வாழைத்தண்டில் தீப்பிறவாதவாறு போலப் பூதங்கள் தனித்தனி யுணர்வுடையவல்ல. ஆகவே, அந்தப் பூதங்களின் கூட்டத்தும் உணர்வு தோன்றாதாம். ஆதலின், மயங்கிக் கிடந்தானது உணர்வு சந்தன முதலியவற்றின் கூட்டரவாலே தோன்றினவாறு போல, பூதத்தின் உணர்வும் பூதக் கூட்டரவால் புலப்படுமாயின் பூதங்கள் உணர்வும் உயிரும் உடையவாயின. ஆதலால் நீ முன்னர்ப் பூதக்கூட்டரவிற் றோன்றிய அறிவு முதலியன அவை, பிரிந்துழிக் கெடுமென்று சொல்லியது பொருந்தாதாம் என்றவாறு.

இனி, இவ்வாறன்றி ஐப்பூதங்களும் உள்பொருளாய் அநாதி சித்தியப் பொருளுமாகலின் அவற்றாலாகிய மலைமுதலியன போல, அறிவும் அநாதி நித்தியங்களாமாதலின் அறிவுடைய பொருள் அழியு மென்றுஞ் சொல்லின் அது பொருந்ாதென்பதுங் கொள்க.

இனி, பூதத்தாலியன்றதெனினும், அறிவுடையதும் குடம் முதலியன போல நிலையாமையுடையதே எனின், பூதங்களாற் றாமே தோன்றிய அறிவுடைய பொருள்களுக்குக் குயவன் முதலியோரின் முயற்சியால் தோன்றிய குடம் முதலியன எடுத்துக்காட்டாகா வென்பது.

அன்றியும், பூதங்களானியன்றவற்றான் நித்தியப் பொருள்களும் உளவாகலின் உயிர் நிலையாமையுடைத்தாதலும் வேண்டுவதில்லை. உயிர் நித்தியப் பொருளென்பது அடுத்த செய்யுளினும் கூறப்படும். (௰௧)

உயிர் நித்தியப் பொருளெனல்

௮௮௩. குழவிக் காலத்துக் கூறின யாவையுங்
கிழவுக் காலத்துக் கண்ணவை கேட்டலா
லிழவெக் காலு மிலானினி யார்களைத்
தொழுவிப் பானங்கோர் தோன்றலுந் தோன்றுமே.

(இ - ள்.) குழவிக் காலத்துக் கூறின அவை யாவையும் ஒருவன் தனது குழவிப் பருவத்திற் கூறிய மொழிகள் பல வற்றையும்; கிழவுக் காலத்துக்கண் - அவனது முதுமைப்பருவத் தினும்; கேட்டலால் - அவனே கூறக் கேட்பதனால்; எக்காலும் இழவு இலான் - எந்தக் காலத்தும் அழிதல் இல்லாதவனாய்; இனியார்களை தொழுவிப்பான் அங்கு ஓர் தோன்றலுந் தோன்றும்- தனது ஒழுக்க முதலியவற்றால் தன்னை அன்பராயினார் தொழும்படி செய்கின்ற சிறப்புடைய உயிர் உண்மை பெறப்படும் என்றான் என்க.

(வி - ம்.) ஒருவன் குழவியான காலத்தே கூறியனவும் செய்தனவும் முதியோனான காலத்தும் அறிந்து சொல்லக் காண்ட லால் முக்காலத்தும் அழிவின்றி வினை நீங்கிய காலத்து மெய்யுணர்வு முதலிய குணம்பற்றி நல்லாரால் தொழப்படுவானாகிய உயிருண்மை பெறப்படும் என்றவாறு.

இனி, கருவுருவாகுங் காலந் தொடங்கி இறக்குங் காலம் ஈறாக வமைந்த காலத்தன்றி உயிர் எக்காலத்தும் உளதாதல் கூடாது; கருவாங் காலந் தொடங்கி இறந்தொழியும் காலமீறாகிய காலத்தல்லது அறிவுக்காட்சியின்மையின் எனின் கருவாங் காலந் தொடங்கி இறப் பீறாங் காலத்தல்லது யாவராலுங் காணப்படாத பூதங்களும் எக் காலத்தும் உளதாதல் கூடாது. கூடில் அறிவும் எக்காலத்தும் உளதாம் என்பது.

இனி, அறிவுப்பொருள் ஒருசார் அழிவதும் பூதங்கள் நிற்பதும் காண்கின்றமையின் பூதங்கள் நிலையுதலுடையன வெனின், நெருப்பு முதலிய ஒருசார் பூதங்கள் அழிதலும் அறிவுப் பொருள்கள் அழியாது நிற்பதும் காண்கின்றமையும் பெறப்படுதலின் அறிவுப் பொருளும் நிலையுதலுடையதேயாம் என்பது. (௰0)

துன்பமுதலியவற்றின் வேறுபாட்டிற்குக் காரணம் யாதெனல்

௮௮௪. துன்பந் தூய்மையுந் துட்கென வுட்கலும்
அன்பு மானமு மாயமு மாண்மையு
மின்பு மென்றிவை யாக்கிய தீதென
முன்பு நின்று முறுக்கவும் வல்லையோ.

(இ - ள்.) துனபம் தூய்மையும் துட்கு என உட்கலும்-ஐய! நீ, உயிரினங்கட்குத் துன்புறுதலும் மனந்தூயனவாதலும் துட்கென்று அஞ்சுதலும்; அனபும் மானமும் மாயமும் ஆண்மையும் இனபும் என்றிவை - அன்பு செலுத்துதலும் மானமுடையனவாதலும் பொய்யுடையனவாதலும் ஆண்மைத் தன்மையுடையனவாதலும் இன்பமெய்துதலும என்று கூறப்படும் இப் பண்புகளை; ஆக்கியது இது என - உண்டாக்கிய பூதம் இன்ன பூதம் என்று; முன்பு நின்றும் - என் முன்னிலையிலே நின்று; உறுக்கவும் வல்லையோ - எனக்கு அறிவுறுத்தவும் வல்லையாவையோ? ஆயின் கூறிக்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) துட்கென: விரைவுக் குறிப்பு. உட்கல் - அஞ்சுதல். தூய்மை-மனமொழி மெய்களாற் றூய்மை பெறுதல். மாயம் - பொய்; வஞ்சமும் களவும் பிறவுமாம். இன்பு-இன்பம். நின்றும் என்புழி உம்மை இசைநிறை. உறுத்தல் - அறிவுறுத்தல்.

ஐய! துன்ப முதலாகச் சொல்லப்பட்டன இன்ன பூதத்தால் வந்தன வென்று காட்டவும் வல்லையோ? அவை ஒருவர்க்குளவாய், ஒருவர்க்கிலவாதலும், ஒருவர்க்கு மென்மையாகவும் ஒருவர்க்கு வன்மையாகவும் உளவாதலும், ஒரு காலத்துளவாய் ஒரு காலத்திலவாதலும் உண்மையின் இவ்வேறுபாடுகள் எற்றினையிற்றுச் சொல்லாய்! என்றவாறு.

அன்றியும், துன்பமுதலாயின, பூதங்கள் கூடியவழி, பூதங்கள் தமக்கோ? பிறர்க்கோ? இன்னதற்கு அத்துன்ப முதலாயின, ஆயின வென்று சொல்லவல்லாயோ? என்றுமாம். (௩௧)

இதுவுமது

அஅ௫. கனவு மந்திரம் சிந்தனை வாழுநாள்
வினவு சோதிடங் கேட்டுரை புட்குரல்
அனகள் யாவையு மென்னைநின் பூதங்க
ளனகோ னீயிங் கறிந்தனை சோல்லென.

(இ - ள்.) கனவு மந்திரம் சிந்தனை-ஐய! கனவு காண்டலும் சூழ்ச்சிசெய்தலும் ஆராய்தலும்; வாழுநாள் வினவு சோதிடம் கேட்டு உரை - தாம் வாழவிருக்கின்ற நாள்களை வினவுதற்குக் காரணமான சோதிடம் கேட்டலும் அவற்றையறிந்து கூறுதலும்; புட்குரல்-பறவையின் ஒலி முதலியன கேட்டு நிமித்தங் கோடலும்; அனகள் யாவையும் - அவை போல்வன பிறவும்; என்னை - எவற்றின் செயல்கள்?; நின் பூதங்களனகொல் நினனுடைய பூதங்களின் செயல்கள் தாமோ?; அறிந்தனை இங்கு சொல் - இவற்றை அறிந்துளையாயின் இவ் வவையின்கட் கூறிக்காண்!; என-என்று நீலகேசி கூற என்க.

(வி - ம்.) ஐய கனவு முதலியனவாக ஈண்டுச் சொல்லியவெல்லாம் பூதச்செயலகள் தாமோ? கூறுதி என்றவாறு.

மந்திரம் - சூழ்ச்சி. மந்திரித்தலுமாம். கேட்டுரை என்றது - கேட்டுழிக் கூறும் உரை என்றவாறு. புட்குரல்-காரி, ஆந்தை முதலியவற்றின் குரல் கேட்டு நிமித்தம் கோடல். அனகள்-அவை போல்வன. பூதங்களன என்புழி அகரம் ஆறுவதன் பன்மையுருபு. (கஉ)

## இதுவுமது

அஅசு. வைத்த வத்து மறுபிறப் பிற்றமர்க்
குய்த்துக் காட்டுத லேலுல கோட்டுமா
லெத்தி றத்தினு மில்லுயி ரென்றிநீ
செத்து வம்மெய்திற் சில்லைமை செய்பவால்.

(இ - ள்.) வைத்த வத்து மறு பிறப்பில் தமர்க்கு உய்த்துக் காட்டுதல் உலகு ஒட்டும-ஐய! ஒருவன் ஒரு பிறப்பின்கண் தான் புதைதத பொருளை மறு பிறபபின்கண் தன சுற்றத்தாரை அப்பொருளிருக்குமிடத்தே செலுதத அவறறைக் காட்டுகின்ற நிகழ்ச்சியுண்மையை உலகத்தார் பலரும் அறிகுவர்; நீ எத்திறத்தினும உயிா இல என்றி - நீயோ எவ்வாற்றானும் உயிர் என்று ஒரு பொருளில்லை என்கின்றாய; செத்துவம எயதின - இதனால் நீ பேயத்தனமை எய்துவாயாயின்; சிலலைமை செய்ப - நின்னை உலகத்தோர் இழித்துரைப்பர் என்றாள் என்க.

(வி-ம்.) வத்து-பொருள். செத்துவம்-பேய்த்தன்மை. சில்லைமை- இழிவு.

> "உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
> தலகையா வைக்கப் படும்" (குறள் - அ௫0)

என்பதுபற்றி, நீ உலகத்தார் உண்டு என்னும் உயிரை இல்லை என்றலால் பேயே ஆகுதி! அவ்வழி நின்னை உலகத்தார் இகழ்வது ஒருதலை என்பாள்,

"எத்திறத்தினும் இல்லுயிரென்றிநீ செத்துவம் எய்தின் சில்லைமை செய்ப" என்றாள். (கக)

## இதுவுமது

அஅஎ. பேயு மில்லை பிறப்பது மில்லென்பாய்
வாயுங் கிள்ளிப் புடைப்ப வருவதேன்
மாயத் தாலன்றி மந்திரத் தாற்றெய்வங்
கூயக் காலறங் கோடலை யோட்டேன.

(இ - ள்.) பேயும் இல்லை பிறப்பதும் இல் என்பாய் - ஏடா! நீ உலகத்தாருண்டென்னும் பேய் முதலியன இல்லை என்றும் மறுபிறப்பு முதலியனவும இல்லை என்றுங் கூறுகின்றனை; வாயுங் கிள்ளிப் புடைப்ப வருவது என் - இங்ஙனம் கூறுகின்ற நின்னுடைய நாக்கினை யறுத்து நினனைப் புடைப்பேன் மன்! அவ்வாறு செய்வதனல் வருகின்ற பயன் ஒன்றுமில்லை யாதலின் அது நிற்க; மாயத்தால் அன்றி மந்திரத்தால் தெய்வம் கூயக்கால் - பொய்வகையாலன்றி மந்திரங் கணிக்கும முறையாலே யான் பேயை வரவழைத்துக் கண்கூடாகக் காட்டினல்; அறம் கோடலை ஒட்டு என - ஆருகதசமய அறங்களை மேற்கொள்ள இசைவாயாக என்று நீலகேசி கூற என்க.

(வி - ம்.) பேயுமில்லை, பிறவியுமில்லை என்று சொல்லுவாய்; பேயுண்மையை நீ கண்கூடாகக் காணும்படி செய்தால் எம் மறத்தினை மேற்கோடல் வேண்டும் என்று நீலகேசி சொல்ல என்றவாறு.

வாயுங்கிள்ளி என்றது அசதியாடிய படியாம். நின் வாயை அடக்குவேன் என்பது கருத்து. (௧௪)

பூதவாதி நீலகேசி கூறியதனை ஏற்றுக்கோடல்

௮௮௮. ஒட்டி னேனென் றுரைப்ப வுணர்விலா
முட்டை காண்கென முன்கை முறுக்கியே
சுட்டி னுளங்குத் தோற்றமு நோக்கென
விட்டுத் தான்றன் விகுர்வணை காட்டுவாள்.

(இ - ள்.) ஒட்டினேன் எனறு உரைப்ப உணர்வு இலா முட்டை காண்க என - அது கேட்ட பிசாசிகன் அவ்வாறியைந்தேன் என்று உடம்படாநிறப, நீலகேசி உணாச்சியறற பிண்டமே! காண்பாயாக! என்று; முனகை முறுக்கிச் சுட்டினுள் - தன் விரலைச் சுற்றி நிறுத்தி ஒரு திசையைச் சுட்டிக்காட்டியவளாய்; அங்குத் தோற்றமும நோக்கு என - ஏடா! அத்திசையிலே பேயினது தோற்றத்தைப் பார் என்று பணிதது; விட்டுத்தான் தன் விகுர்வணை காட்டுவாள் - தான் தன்னுடைய உருவத்தை மாற்றி வேற்றுருவம் கொள்ளுபவள்; எனக.

(வி - ம்.) முட்டை என்றது - முண்டம் என்பது போல்வதொரு இகழ்ச்சி, அறிவ்லி என்பது கருத்து.

அவ்வாறியைந்தேன் என்று பூதவாதி உடம்பட்டுழி அறிவிலியே காண்பாயாக! என்று தன் விரலைச் சுழற்றி ஒருதிசையைச் சுட்டி நிறுத்தி அதோ அந்தப் பேயைப் பார் என்றுகூறி வேற்றுருவம் கொள்பவள் என்றவாறு.

காட்டுவாள் (௮௮௧) தோற்றலும் என்றியையும். (௧௫)

நீலகேசியின் அருளுடைமை

அஅகூ. கழுதுங் காணல ராகிக் கலங்கியே
யழுதுஞ் சாப வகலிடத் தாரிவன்
முழுதுங் காணின் முடியு மெனமுன்னி
வழுவில் வாயும் வளைபல்லுந் தோற்றலும்.

(இ - ள்.) அகல் இடத்தார் - விரிந்த இந்த நிலவுலகத்தே வாழும் மாந்தர்; கழுதும் காணலராகி - பேய்களைக் கண்ணுற் காணாமல் பிறர் கூறக்கேட்ட துணையானே; கலங்கி அழுதுஞ் சாப - நெஞ்சு கலங்கி அழுதே இறந்தொழியும் இயல்புடையோ ராவர்; முழுதும் இவன் காணின முடியும் என முன்னி - அத் தகையோருள் ஒருவனாகிய இந்தப் பிசாசிகன் பேயுருவ முழு வதையும் கண்கூடாகக் காண்பானாயின் இறந்து படுவன் என்று கருதி இரங்கி; வழுவில் வாயும் வளை பல்லும் தோற்றலும் - பேய்த் தகுவியாகிய தன்னுடைய குற்றமற்ற வாயையும் அதனிரு மருங்கினும் அமைந்த வளைந்த பற்களையும் மட்டுமே அவனுக்குத் தோன்றும்படி செய்த பொழுது என்க

(வி - ம்.) உலகத்தார் பேய்களைக் கண்டிலராயினும் அவற்றைப் பற்றிப் பிறர் கூறக் கேட்டபொழுதே கலங்கி அழுது சாவர்; ஆதலின் இவன் பேயுருவத்தை முழுதுங் காணின் இறந்துபடும் என்று கருதி அருள்கூர்ந்து வாயையும் வளை பற்களையும்மட்டுமே காட்டஎன்றவாறு. (கூக)

பேயின் வாய்கண்ட பூதவாதியின் நிலைமை

அகூ0. கண் புதைத்துக் கவிழ்ந்தனன் வீழவே
திண் பதத்திற் றெருட்டி யெடுத்திரீஇப்
பண்பு தக்கன சொல்லிப் பரியனின்
நண்ப தென்று நடுக்கமுந் தீர்த்தபின்.

(இ - ள்.) கண் புதைத்துக் கவிழ்ந்தனன் வீழ - பேயின் வாயும் பல்லும் கண்டவளவிலே அச்சத்தாற கண்களைக் கையாற் பொத்திக் கொண்டு முகம் கவிழ்ந்து நிலத்திலே வீழ்ந்த பிசாசிகனை; திண் பதத்தில் தெருட்டி எடுத்து இரீஇ - திண்ணிய உறுதிமொழி பல சொல்லித் தேற்றி நிலத்தினின்று மெடுத்து இருத்தி; பண்பு தக்கன சொல்லி - அவன் அச்சமொழிக்கும் பண்புமிக்க பல மொழிகள் பின்னரும் கூறி; பரியல்-நீ கண்ட பேய்க்கு அஞ்சாதே கொள!; அது நின் நண்பு-அப் பேய்தானும் நின்னொடு நட்புரிமை யுடையதே காண்!; என்று நடுக்கமுந் தீர்த்த பின்-என்று கூறி அவன் அச்சத்தைப் போக்கிய பின்னர் என்க.

(வி - ம்.) பிசாசிகன் நீலகேசி காட்டிய பேயின் வாயையும் பற்களையும் கண்டதுணையானே கண்ணைப் புதைத்துக்கொண்டு நிலத்

தில் வீழ்ந்தான். அது கண்ட நீலகேசி அவன்பாலருள்கூர்ந்து உறுதி மொழிகள் கூறிநிலத்தினின்றுமெடுத்து இருத்திப் பின்னரும் பலப்பல கூறி ஐய! அஞ்சாதே கொள்! பேய் நின்னோடு உறவுடையதோர் உயிரேகாண் என்று கூறி அச்சம்போக்கிய பின்னர்என்றவாறு. (௯எ)

நீலகேசி பூதவாதியை வினவலும் அவன் விடையும் பிறவும்

அ௬௯௧. பேய்கண் டாயதன் பெற்றி யுரையென
வாய்கண் டேனென்னை வாழ்க்கை வலியன்மின்
நோய்கொண் டேனென வஞ்ச னுனக்கவ
டாய்கண் டாயேன்றுஞ் சாதலில் லையென.

(இ - ள்.) பேய் கண்டாய் அதன் பெற்றி உரை என - நீலகேசி அப் பூதவாதியை நோக்கி ஐய! நீ இப்பொழுது பேய் கண்டனையாயின் அதன் இயல்பினைக் கூறுவாயாக! என்று பணிப்ப; வாய் கண்டேன் - அது கேட்ட பூதவாதி அன்னாய்! யான் அந்தப் பேயின் வாயை மட்டுமே கண்டேன்; நோய் கொண்டேன் - அக் காட்சியாலே யான் சாவு வளவிற்ற அஞ்சி நோயுடையே னுயினேன்; என்னை வாழ்க்கை வலியன்மின் - யான் இனி உயிர் வாழ்வேன் என்று கருதாதே கொண்மின; என - என்று கூற அது கேட்ட நீலகேசி; அஞ்சல் - அன்பனே! நீ அதற்கு அஞ்சற்க!; அவள் உனக்குத் தாய் என்றும் - அப் பேய்மகள் உனக்குத் தாயேயாவள் என்றும் கூறி; சாதலில்லை - இனி உனக்குச் சாவும் இல்லை; என - என்றும் கூறி என்க.

(வி - ம்.) நீலகேசி பூதவாதியை நோக்கி நீ கண்ட பேயின் இயல்பினை இவ்வவையோர் அறியும்படி கூறுக! என, அவனும் அன்னாய்! யான் அப் பேயின் வாயையே கண்டேன்; அத்துணைக்கே இனி யான் இறந்துபடுவேன், பிழைப்பேன் என்று நினையற்க! என அது கேட்ட நீலகேசி ஐய! நீ அப் பேய்மகட்கு அஞ்சவேண்டா! உனக்கு அவள் தாயே ஆவள்; நீ இறவாய் காண் என்று தேற்றினள் என்றவாறு. (௯அ)

பூதவாதிக்கு அந்தப் பேய் தாய் என்றதற்குக் காரணங்கூறல்

அ௬௯௨. பெற்ற பேரும் பிசாசிக னேன்பதே
யற்ற மின்றி யவட்கு மகனைநீ
சுற்ற மில்லறங் கோளளின்மற் றெம்மோடு
சுற்ற மாதலிற் சோல்லெனச் சோல்லுவான்.

(இ - ள்) நீ பெற்ற பேரும் பிசாசிகன் என்பதே - ஐய! நீ நினக்கு இருமுது குரவர் முதலியோரால் பெற்றுள்ள பெயர் தானும் பிசாசிகன என்பதேயன்றோ?; அற்றமின்றி நீ அவட்கு

மகனே - ஐயமின்றி நீ அப்பேய்மகற்கு மகனே ஆகுதி, அது மகனே - ஐயமின்றி நீ அப்பேய்மகற்கு மகனே ஆகுதி, அதுகிற்க; குற்றம் இல் அறங்கொள்ளின் - மேலும் நீ குற்றஞ் சிறிது மில்லாத எங்கள் அறத்தைக் கைக்கொள்வாயாயின்; எம்மொடு சுற்றம் - எமக்கு நெருங்கிய சுற்றத்தானும் ஆகுவை; ஆதலின் சொல் எனச் சொல்லுவான் - ஆதலால் நின கருத்தை எனக்கிப்பொழுது கூறுவாயாகவென்று நீலகேசி கூற, அது கேட்ட பிசாசிகனும் சொல்லுவான் என்க.

(வி - ம்.) ஐய! பிசாசிகன் என்னும் நின் பெயர்க்கும் பேய்க்குந் தொடர்பிருத்தலான், நீ அவனுக்கு மகனேயாகுவை! என்று கூறிப் பின்னரும் நீ எம்மறங் கொள்வையாயின் எமக்குச் சுற்றமும் ஆகுவை! நின் கருத்தியாது? கூறுக! என, அவன் தன் கருத்தைச் சொல்லலாஅன் என்றவாறு. (௯௯)

## பிசாசிகன் கூற்று

௮௧௬. பிறப்பும் பேயு முதலாப் பிறகளுந்
திறத்தி னீசொன்ன யாவையுந் தேறிநின்
றறத்தை யானு மமைவரக் கொண்டனென்
மறக்க லேனினி மன்னுமை யானென.

(இ - ள்.) பிறப்பும் பேயும் முதலாப் பிறகளும் யாவையும் - அன்னாய்! யான் பிறப்பும் அதனகட்பட் டுழலாநின்ற பேய் முதலிய உயிர்களும் அவற்றின் நல்வினை தீவினை முதலிய பிறவும் ஆகிய எல்லாவற்றையும்; நீ சொன்ன திறத்தின்தேறி - நீ எனக்குச் செவியறிவுறுத்த முறைமையாலே ஐயந்திரிபறத் தெளிந்து; நின்று யானும் அறத்தை அமைவரக் கொண்டனென் - நின்வழி நின்று யானும் நின்னால் செவியறிவுறுக்கப்பட்ட அறங்களையே மனத்தின்கண் அமைதி வந்தெய்துமபடி மேற்கொண்டேன் காண்!; இனி உமை யான் மறக்கலேனென என - இனி நல்லாசிரியராகிய அடிகளாரை அடியேன் ஒருபொழுதும்மறவேன் என்று கூற என்க.

(வி - ம்.) பிறப்பும் பிறப்பின்கண் உளவாகிய பேய் முதலாகிய எல்லா உயிர்களையும் அவையிற்றின் நல்வினை தீவினைகளையும் அவற்றாலாம் இன்பதுன்பங்களையும் அறவொழுக்கத்தால் வருவதாகிய வினைநீக்கத்தின்கண் எய்தும் வீடுபேற்றினையும், அந்த வீடுபேற்றின் கண் உளவாவனவாகிய கடையிலா அறிவு முதலிய உயிர்ப் பண்பும் எல்லாம் முன்பு நின்னாற் செவியறிவுறுத்தப்பட்ட உத்திநெறியாற் றெளிந்தேன்; தெளிந்தும் செருக்குடைமையால் நல்லறத்தினைப்பேணு தொழிந்தேன். இதுபொழுது இறைவன் நூல் பொருள் இவற்றின் பாலுண்டான தெளிவாகிய மெய்யுணர்வு வடிவத்ததாகிய மெய்யறத் தைக் கொண்டேன் என்று பிசாசிகன் கூற, அது கேட்ட நீலகேசி மகிழ்ந்து, பின்னரும் விளக்கிக் கூற அது கேட்ட பிசாசிகனும் எம்பெருஞ் சுற்றமாகிய நின்னால் அறிவுறுத்தப்பட்ட அறத்தினையும் நின்னையும் ஒருபொழுதும் மறவேன் என்று நாத்தழும்ப நவிலாநிற்ப என்றவாறு.

'தெளிந்தும் செருக்குடைமையால் பேணு தொழிந்தேன்' என்னும் கழிவிரக்கப் பொருள் தோற்றி நிற்றலின் மன் ஒழியிசை. (சO)

நீலகேசியை அவையோர் பாராட்டுதல்

அகூச. பேந்தரு தோற்றப் பிசாசிக னிற்றென
வேந்துமவ் வேத்தவை யாரும் வியப்பெய்தி
யாய்ந்த கேள்வியி னுளை யையா யென
மாந்தர் யாரு மதித்தன ரென்பவே.

(இ - ள்.) பேம் தரு தோற்றப் பிசாசிகன் இற்று என - கண்டார்க்கு அச்சந் தருந் தோற்றத்தையுடைய பிசாசிகன் என்னும் அந்தப் பூதவாதி தன கருதது இத்தன்மைத்தென்று கூறு நிற்ப; வேந்தும் அ வேந்து அவையாரும் - அம் மொழிகளைக் கேட்ட வேந்தனும் அந்த வேந்தன் அவையகத்திருந்த சான்றோரும்; வியபபு எய்தி - நீலகேசியின அறிவுச் சிறப்பினை யுணர்ந்து பெரிதும் வியப்பெய்தி; ஆய்ந்த கேள்வியினுளை - ஆராய்ந்துணர்ந்த அறக்கேள்வியுடைய அந்த நீலகேசியை; ஐ ஆய்! என - மெய்யாய சமயத்தலைவி என்றும் எல்லாவுயிர்க்கும் தாயாவாள் என்றும் பாராட்டா நிற்ப; மாந்தர் யாரும் மதித்தனர் என்ப - இந்நிகழ்ச்சியறிந்த உலகத்தார் எல்லாரும் நீலகேசியையும் அவள் கூறும் அறத்தினையும் நனகு மதித்துப் பேணி வாழ்வா ராயினர் எனறு சான்றோர் கூறுப; என்க.

(வி - ம்) பேம் - அச்சம். கேள்வியினுள்: நீலகேசி. ஐ-தலைவி. ஆய்-தாய். ஐயாவென என்னும் பாடத்திற்கு ஐ என்றும் ஆ வென்றும் கூறி மதித்தனர் என்று பொருள் கூறுக. அப்பொருட்கு, ஐ, ஆ, என்பன வியப்பைக் குறிக்கின்ற குறிப்பு மொழிகள் என்க.

பிசாசிகன் இவ்வாறு நல்லறந் தலைசிற்றலும் அரசனும் அவை யோரும் வியப்பெய்தி நீலகேசியைப் பெரிதும் புகழ்ந்து பாராட்டி அவள் கூறிய அறநெறியே நின்றொழுகினர். நீலகேசி இவ்வாறு பிறசமயக் கணக்கர்களைச் சொற்போரில் வென்று வாகை சூடிய செய்தியை அறிந்த உலகமாந்தரும் அவள் கூறிய அறத்தை நன்குமதித் தொழுகினர். இவ்வாறு நீலகேசியார் அறம் வளர்த்தனர். (சக)

பூதவாதச் சருக்கம் முற்றும்.

நீலகேசிக்குப் பெருமழைப்புலவர் பொ. வே. சோமசுந்தரனுர்
வகுத்த சொற்பொருளுரையும் பழையவுரையைத் தழுவி
யெழுதிய விளக்கவுரையும் முற்றும்.

---

(நீலகேசியின் பழைய வுரைபற்றி வரும் செய்யுள்கள்)

## நீலகேசி சமய திவாகர விருத்தி உரைச் சிறப்பு

(க) மெய்ந்நூ னெறியை விளக்கி விளங்காப் பிடகமுதற்
பொய்ந்நூ லிருள்களைப் போகத் துறந்தது பூதலத்தி
லெந் நூலும் வல்லவ ரேத்தச் சமயத் திறைவன்கண்ட
செந்நீல கேசி விருத்திச் சமய திவாகரமே.

(உ) அருகன் றிருவறத் தன்பு செய்வாரு மழிவழக்காற்
பெருகுந் துருநெறிப் பீடழிப் பாருமிப் பேருலகிற்
பொருளின்றி நின்ற தமிழ்நீல கேசிப் பொருளையெல்லாம்
திரிவின்றிக் காட்டுஞ் சமய திவாகரஞ் சேவிக்கவே.

நீலகேசி விருத்தி சமய திவாகரம் முடிந்தது.

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண்: செய்யுளெண்]

# அருஞ்சொல் அகரவரிசை

[எண் : செய்யுளெண்]

# அருஞ்சொல் அகரவரிசை

